# சரஸ்வதீ பூஜை

சரோஜா ராமமூர்த்தி

"சரஸ்வதி பூஜை—செப்டம்பர் மாதம் இருபத்தாறும் தேதி செவ்வாய்க்கிழமை!" என்று ஹாலில் உட்கார்ந்திருந்த தாத்தா, பஞ்சாங்கத்திலிருந்து இரைந்து படித்தார்.

மாடியிலிருந்து அந்தச் சமயத்தில் கீழே இறங்கி வந்து கொண்டிருந்த சரஸ்வதி யின் காதில் அது நன்ருக விழுந்தது.

"தாத்தா! சரஸ்வதி பூஜை செவ்வாய்க் கிழமை யில்லையாம்; ஞாயிற்றுக்கிழமை தானும். அதனுல் சர்க்கார் ஆபீஸ்களுக்கு லீவு கிடையாதாம். நேற்று அப்பா சொல்லிக் கொண்டிருந்தாரே, நீ கேட்க வில்லையா?" என்று கேட்டாள் அவள் கீழே இறங்கி வந்து.

தாத்தா மூக்குக் கண்ணுடியைக் கழற்றி உறையில் வைத்துவிட்டு, "ஞாயிற்றுக் கிழமையாவது! எந்தப் பஞ்சாங்கத்திலும் அந்த மாதிரி இல்லையே? ஒரு நாள் முன்னே பின்னே இருக்குமே ஒழிய ஒரே யடியா காலேந்து நாளா வித்தியாசப்படும்? அதெல்லாம் இருக்காது!" என்ருர் தம் பேத்தியைப் பார்த்து.

"அதென்னமோ, கவர்ன்மெண்டுக்கு மட்டும் சரஸ்வதி பூஜை இந்த வருஷம் ஞாயிற்றுக்கிழமைதானும். மத்திய சர்க் காருக்கு இந்த விஷயங்களில் ஆலோசனை சொல்லுவதற்காக மாதம் மூவாயிரத்து ஐந்நூறு ரூபாய் சம்பளத்தில் சீமையி லிருந்து வந்திருக்கும் சாஸ்திரிகள் அப்படித்தான் சொல்லி விட்டாராம், தெரிகிறதா?" என்று கேட்டுவிட்டு, சரஸ்வதி சமையலறைப் பக்கம் போய் விட்டாள்.

"சாஸ்திரிகளாவது, சீமையிலிருந்து வருகிறதாவது! எனக்கு ஒண்ணும் தெரியாதுன்னு நினைச்சிண்டிருக்குகள், போக்கிரிப் பசங்கள்!" என்று முணு முணுத்துக் கொண்டார் தாத்தா.

சரஸ்வதி சமையல் அறைக்குள் நுழைந்த போது, அங்கு இன்னும் காப்பிக் கடை தான் நடந்து கொண்டிருந்தது. அவள் சகோதரர்கள் அப்பொழுதுதான் எழுந்து பல் தேய்த்துவிட்டு வந்து உரத்த சத்தத் துடன் பேசிக்கொண்டே காப்பி சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள்.

"என்ன இரைச்சல், கொத்தவால் சாவடி மாதிரி!" என்று கேட்டுக் கொண்டே வந்த சரஸ்வதி, தன் தாயாரைப் பார்த்து, "அம்மா! சரஸ்வதி பூஜை செவ்வாய்க்கிழமை என்று சொல்லிக் கொண்டிருந்தாயே, தாத்தாவைப் போய்க் கேளு, ஞாயிற்றுக்கிழமைதானும், சொல்லி விட்டார்!" என்ருள்.

"என்னடி இது!" என்று கேட்டுவிட்டு ஹாலை நோக்கி விடுவிடென்று நடந்தாள் அவள் தயார். சரஸ்வதி உடனே வாயைக் கையினுல் பொத்திக் கொண்டு சிரிப்பை அடக்க முயன்றதும், அவள் சகோதரர் களும் சிரித்துக் கொண்டே எழுந்திருந்து, ஹாலில் நடக்கும் வேடிக்கையைப் பார்ப்ப தற்காகத் தங்கள் தாயாரைப் பின் தொடர்ந்தார்கள்.

★

இந்த சரஸ்வதிக்கு வயது பதினெட்டோ அல்லது பதினுரோ இருக்கும் என்று நினைக்க வேண்டாம். வருகிற ஐப்பசி மாதத் துக்கு அவளுக்கு இருபத்துமூன்று வயது நிறையப் போகிறது! ஆனுல் பார்ப்பதற்குப் பதினெட்டு வயசு மாதிரிதான் இருப்பாள். ரொம்ப ரொம்ப அழகு என்று சொல்ல முடியாது; அழகில்லை என்றும் சொல்வதற் கில்லை. குறும்புத்தனமான சிரிப்பு ஒன்று எப்பொழுதும் அவள் முகத்தில் குடி கொண்டிருக்கும். அவள் பேச்சிலும்கூட சதா குறும்பும் பரிகாசமும்தான்.

அவள் கல்யாண விஷயந்தான் அவள் பெற்றோருக்கும் தாத்தாவுக்கும் கூட, பெரிய கவலையை உண்டு பண்ணுவதா யிருந்தது. சென்னை ராஜதானியில் மட்டும் இல்லாமல் பம்பாய், கல்கத்தா டில்லி முதலிய இடங்களுக்கெல்லாம் உத்தி யோகத்துக்காகப் போயிருக்கும் பிரும்மச் சாரிகளை வரனுக்காகச் சல்லடை போட்டு அரித்துக் கொண்டிருந்தார்கள் அவர்கள். தகுந்த வரன்தான் இன்னும் கிடைத்த பாடில்லை.

"ஏ, பெண்ணே! இங்கே வா!" என்று கூப்பிடுவார் தாத்தா. சரஸ்வதி சிரித்துக் கொண்டே எதிரில் வந்து நிற்பாள்.

"இந்த வருஷமாவது கல்யாணம் பண்ணிக் கொள்கிறதாய் உனக்கு உத்தேசம் உண்டா, இல்லையா?"

"எந்த விநாடியும் தயாராக இருக்கிறேன்!" என்பாள் சரஸ்வதி குறும்புச் சிரிப்புடன்.

"நீ தயார்தான்! வேளைதானே வரவில்லை!" என்று முணுமுணுப்பார் தாத்தா.

பாவம், சரஸ்வதிக்கும் மனஸிலே குறைதான், தனக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லையே என்று. அவளுடைய குறும்புத் தனமான பேச்சும் சிரிப்பும் இந்தக் குறை வெளியே தோன்றாதபடி செய்து வந்தன.

ஒரு நாள் மாலை ஏழு மணி இருக்கும். வீட்டில் விளக்கேற்றின பின் சரஸ்வதி பாடங்களைப் படிப்பதற்காக மாடியில் இருந்த தன் அறைக்குச் சென்று புஸ்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தாள். அப்பொழுது, "சரஸு!" என்று கூப்பிட்டுக் கொண்டே வந்தார் அவள் தாத்தா.

சரஸ்வதி திரும்பிப் பார்த்தபொழுது அவர் வாசற்படியருகிலேயே நின்று, "சரஸு! மதுரையில் ஒரு வரன் இருக்கிறது என்று சொன்னேனே, அந்தப் பையனைப் பற்றி விசாரித்து எழுதும்படி கல்யாணராமனுக்கு எழுதியிருந்தேன். அவனிடமிருந்து பதில் வந்திருக்கிறது. பார்!" என்று கூறி, ஒரு கடிதத்தை அவளிடம் கொடுத்து விட்டு வெளியே சென்றார்.




கடிதத்தைக் கையில் வாங்கிய பொழுது சரஸ்வதியின் முகம் வெட்கத்திலும் கோபத்திலும் சிவந்தது. கல்யாணராமன் என்பவன் அவர்கள் வீட்டுக்கு எதிர் வீட்டில் வெகு காலமாக வசித்த ஸப் ரிஜிஸ்ட்ராரின் பிள்ளை. மூன்று வருஷங்களுக்கு முன்பு அவன் லா காலேஜில் படித்துக் கொண்டிருந்தான். சரஸ்வதியின் குடும்பத்துக்கும் அவன் குடும்பத்துக்கும் மிக நெருங்கிய பரிச்சயம் உண்டு. சரஸ்வதியைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள வேண்டும் என்ற ஆசை அவன் மனஸில் இருந்தது. சரஸ்வதிக்கும் இந்த விருப்பம் இல்லாமற் போகவில்லை. கல்யாணப் பேச்சுகளும் நடந்தன. சரஸ்வதி அப்பொழுது தான் இண்டர்மீடியட் பரீக்ஷையில் தேறி இருந்தாள். மேலே பி.ஏ. படிக்க அவள் உத்தேசித்திருந்தபடி

யால் இரண்டு வருஷங்கள் கழித்துக் கல்யாணம் பண்ணிக்கொள்ளப் போவ தாக அவன் கூறிவிட்டான். கல்யாணராமன் தனக்காக இரண்டு வருஷம் காத்திருக்க மாட்டானு என்றுதான் எதிர்பார்த்தாள் அவள். அது கல்யாணராமன் மட்டும் சம்பந் தப்பட்ட விஷயமாக இருந்தால், இரண்டு வருஷம் மட்டும் அல்ல, ஐந்து வருஷமானு லும் காத்துக்கொண்டிருக்க அவன் தயார்தான். ஆனால் அவன் பெற்றோர்கள் அதற்குத் தயாராக இருந்ததாகத் தெரிய வில்லை. வேறு இடத்தில் பெண் பார்க்க அவர்கள் முனைந்து விட்டார்கள். அந்தச் சமயம் கல்யாணராமன் பரீக்ஷையில் தேறின படியால் வக்கீல் தொழில் நடத்துவதற்காக அவர்கள் குடும்பத்துடன் மதுரைக்குப் போக வேண்டியதாயிற்று.

இன்று மறுபடி அந்தக் கல்யாணராம னிடமிருந்து தாத்தாவுக்குக் கடிதம் வந்திருக்கிறது என்று தெரிந்ததும், சரஸ் வதிக்கு உண்டான கோபத்துக்கு அள வில்லை. "இரண்டு வருஷம் ஒரு பெண் ணுக்காகக் காத்திருக்க முடியாத ஆண் பிள்ளை ஒரு மனுஷனு!" என்று நினைத்துக் கொண்டு, அந்தக் கடிதத்தைப் பிரித்துப் பாராமலே கிழித்துத் தன் மேஜை அடி யில் இருந்த குப்பைக் கூடைக்குள் போட்டுவிட்டாள்!

★

சரஸ்வதி பூஜை வந்து விட்டது.

ஆமாம்; தாத்தா பஞ்சாங்கத்தைப் பார்த்து ஜோஸியம் சொன்னபடியே, அது செப்டம்பர் மாதம் இருபத்தாறும் தேதி செவ்வாய்க் கிழமையன்று தவருமல் வந்து விட்டது.

சரஸ்வதியின் வீட்டைப் பொறுத்தவரை யில் சரஸ்வதி பூஜை தனியாக வரவில்லை. மதுரையில் இருந்த கல்யாணராமனையும் அது தன்னுடனே அழைத்துக் கொண்டு 'ஜாம் ஜாம்' என்று வந்தது.

பொழுது விடிந்ததும், சரஸ்வதி படுக் கையை விட்டு எழுந்து மாடியிலிருந்து இறங்கி வரத் தொடங்கினுள். அப் பொழுது ஹாலின் நடுவில் இருந்த பெட்டி யும் படுக்கையும் அவள் கண்ணில் பட்ட தும் அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அடுத்த நிமிஷம் கல்யாணராமனே அவள் எதிரில் நின்ருன்! மரியாதைக்காக அவ னிடம், "எப்போது வந்தீர்கள்?" என்று கேட்டுவிட்டு விழுந்தடித்துக் கொண்டு கொல்லைப் பக்கம் சென்ருள் சரஸ்வதி.

தனக்காக இரண்டு வருஷம் காத்திரு முடியாதவனுடன் அதற்கு மேல் என்ன பேச்சு வேண்டியிருக்கிறது என்று அவள் நினைத்துக் கொண்டாள்.

என்ன காரணத்தினுலோ அன்று ஒரே ஆனந்தத்தில் மூழ்கியிருந்தார் தாத்தா. தம் பேத்தியின் போக்கு அவருக்கு அர்த்த மாகவில்லை. "அதிகம் படித்து விட் டாலே இந்தப் பெண்கள் அசடுகளாகி விடுகிறதுகள்! காலையில் இரண்டு வார்த் தைகள் பேசிவிட்டு மாடிக்குப் போனவள், அப்புறம் கீழே வந்து 'என்ன?' என்றுகூட கேட்கவில்லையே, வந்தவனை?" என்று நினைத்துக் கொண்டார் அவர்.

மத்தியானம் மூன்று மணி இருக்கும். கல்யாணராமனும் சரஸ்வதியும் மாடியில் சந்தித்தார்கள்.

"என் பேரில் உனக்கு என்னவோ கோபம் போலிருக்கிறது. இல்லாவிட்டால் இப்படி நாலு வார்த்தைகள்கூடப் பேசாமல் இருப்பாயா நீ?" என்ருன் கல்யாணராமன்.

"கோபமாவது, ஒண்ணுவது! உங்களு டன் எனக்கு என்ன பேச்சு வைத்திருக் கிறது என்றுதான் சும்மா இருக்கிறேன்!"

"நான் எழுதிய கடிதத்தைப் பார்த் தாயா? தாத்தா உனக்கு அதைக் காண் பித்ததாகச் சொன்னுரே!"

"கண்ட கடுதாசியைப் படித்துப் பொழுது போக்க நான் என்ன வேலையில் லாமல் ஒழிந்து இருக்கிறேனு? மதுரையில் இருக்கும் வரன் எதையோ பற்றி எழுதி யிருப்பீர்கள்! அது இருக்கட்டும். உங்கள் மனைவி சௌக்கியந்தானே? குழந்தைகள் ஏதாவது ..." என்று இழுத்தாள் சரஸ்வதி.

கல்யாணராமன் பெரிதாகச் சிரித்தான்.

"உன்னைப் போல அசடை நான் பார்த்த தில்லை! மனைவியாவது குழந்தைகளாவது? எனக்கு இன்னும் கல்யாணமே ஆக வில்லையே! உனக்காக இரண்டு வருஷம் காத்திருந்து உன்னைக் கல்யாணம் செய்து கொள்ளத்தானே இவ்வளவு தூரம் வந் திருக்கிறேன்? அந்தக் கடிதத்திலும் இதை யெல்லாம் எழுதியிருந்தேனே!" என்ருன் கல்யாணராமன்.

சரஸ்வதி பதில் ஒன்றும் பேசவில்லை. கீழே குனிந்து, மேஜை அடியில் கிடந்த குப்பைக் கூடையில் தான் கிழித்துப் போட்ட கடிதத் துண்டுகளை எடுத்து ஒன்று சேர்த்துப் படிப்பதில் முனைந்தாள்!

# குமுதகம் மலர்ந்தது

சரோஜா ராமமூர்த்தி

ஜானகி அம்மாளுக்கு உடம்பு சரியில்லை என்கிற விஷயம் அந்த வட்டாரத்தையே ஒரு கலக்கு கலக்கி விட்டது. நல்ல உயரமும், அதற்கேற்ற பருமனும், பறங்கிப் பழம்போல் தளதள வென்ற உடலும் கொண்ட கம்பீரம் வாய்ந்த அந்த அம்மாளிடம் அங்குள்ளவர்களுக்கு ஒரு தனி மதிப்பு இருந்து வந்தது. பால்யத்தில் கணவனை இழந்த ஜானகி அம்மாள் பள்ளி ஆசிரியையாகப் பணியாற்றி ஓய்வு பெற்று விட்டாள். தன் வயிற்றுக்குக் கூடச் சரியாகச் சாப்பிடாமல் பணத்தை மிச்சப்படுத்தி, அதை வட்டிக்குக் கொடுப்பதில் அந்த அம்மாளுக்குத் தனி விருப்பம். பத்து ரூபாய்ப் பணத்தைக் கொடுத்து விட்டுத் திருப்பி வாங்கும் போது பதினொன்றே கால் ரூபாயாகப் பார்க்கையில் அவளுக்குச் சந்தோஷமாகவும் திருப்தியாகவும் இருக்கும். வட்டிக்கு விடும் சுபாவம் அவளிடம் அளவுக்கு மீறியே வளர்ந்து விட்டது.

வீடுநிறையப் பாத்திரங்கள், நகைகள், மரச்சாமான்கள் என்று சேர்த்துவிட்டாள். பெரிய வீடு ஒன்று வாங்கியாகி விட்டது. அவ்வளவு பெரிய வீட்டில் உலவி வர, குழந்தை குட்டிகள் யாரும் இல்லை. தூசு படியாமல் ஒவ்வொரு பொருளையும் துடைத்து வைத்துப் பார்த்துப் பூரித்துப் போனாள் அவள். ஒரு சமயம் பொழுதுக்கு யாராவது வந்து எந்தப் பொருளைக் கேட்டாலும் இல்லையென்று கூசாமல் சொல்லி அனுப்பிவிடுவாள். ஒரு பொருளை யாருக்காவது கொடுப்பதில் தனக்கு ஏதாவது ஆதாயம் உண்டா என்று சிந்திப்பதிலேயே அவளுடைய வாழ்க்கை கழிந்து வந்தது.

அவளிடம் வட்டிக்கடன் வாங்குவதற்கென்றே தியாகராஜன் என்கிற ஏழை பிறந்திருக்க வேண்டும். சட்டும் சவலையுமாக வீடு நிறையக் குழந்தைகளைக் கொடுத்த கடவுள் பொருள் விஷயத்தில் தன்னுடைய கருணையை அவருக்கு வழங்கவில்லை.

அந்த மனிதருக்கு மாதச்சம்பளம் என்று எண்பது ரூபாய்களை ஏதோ ஒரு கம்பெனி படி அளந்து வந்தது. இனிப்பை மொய்க்கும் ஈக்களைப் போல ஸ்டோர் என்ற பெயரில் கட்டப்பட்டிருந்த ஒரு வீட்டை அவரைப் போன்றவர்கள் நிரந்தரமாக மொய்த்துக் கொண்டிருந்ததில் வியப்பில்லை. பதினைந்து ரூபாய் வாடகை என்று அந்தப் புலிக் கூண்டுக்குக் கொடுத்தது போக, எஞ்சியிருந்த பணம் எதற்குக் காணும்? வறுமை என்கிற மீள முடியாத நரகத்தில் அழுந்திக் கிடந்த தியாகராஜனுக்கு ஜானகி அம்மாள் பரதேவதை போன்று காட்சி அளித்தாள். சம்பளம் வாங்கிய அடுத்த நாளே பணப் பையைத் தலைகீழாக உதறினாலும், ஒரு நயா பைசா கூட அதில் மீதி இருக்காது. அப்பொழுது 'அஞ்சேல்' என்று அபயம் தந்து, வட்டிக்குக் கடன் கொடுத்து அவரை ஆதரித்து வந்தாள் ஜானகி அம்மாள். கம்பெனியில் வருஷா வருஷம் கொடுக்கும் 'போனஸ்' வட்டியுடன் ஜானகி அம்மாளிடம் போய்ச் சேர்ந்து விடும். போனஸைப் பற்றி அவர் எந்த விதமான கிளர்ச்சிகளிலும் பங்கு பெறுவதில்லை. காரணம் எத்தனை அதிகமாக வந்தாலும் வட்டியும் அசலுமாக அதை அடையப் போகிறவள் ஜானகி அம்மாள் தானே என்று தீர்மானித்து, அவர் கம்பெனி சிப்பந்திகளுடன் அந்த விவகாரங்களில் சேராமலேயே இருந்து விட்டார். அதனால் நல்ல பெயரும் அவருக்குக் கிடைத்தது.

காலத்துக்குப் பிறப்பைப் பற்றியும், இறப்பைப் பற்றியும், தேய்வைப் பற்றியும், வளர்ச்சியைப் பற்றியும் கவலை கிடையாது. தியாகராஜனின் மூத்த பெண் குமுதா மதமதவென்று வளர்ந்து திருமணத்துக்குத் தயாராக நின்றாள். கந்தல் பாவாடையும், நைந்துபோன தாவணியும் அவள் வளர்ச்சியை அதிகமாகவே காட்டின. பெண்ணுக்கு வயசாகிக் கொண்டு வருவதை அவர் கவனியாமல் இல்லை. ஆனால் அவர் கவனிக்கவில்லை என்று அவர் மனைவி சாவித்திரி அநாவசியமாக அவர் மீது குற்றம் சாட்டினாள்; "உங்களுக்கு எதில் தான் பொறுப்பு இருக்கிறது? நானும் தான் இருபத்தைந்து வருஷமாகப் பார்க்கிறேனே! வாயைத் திறக்காமல் கல்லுளி மங்கனைப் போல அந்தக் கடங்காரனுக்கு உழைத்து வருகிறீர்கள். அங்கங்கே சம்பள உயர்வு கேட்டு எல்லோரும் பெறவில்லையா என்ன?" என்று அவள் சரம் தொடுக்க ஆரம்பித்த பிறகு அவருக்குத் தன் மகள் கல்யாண விஷயமாகத் முதலாளியைக் கண்டு பண உதவி கேட்கும் அளவுக்குத் தைரியம் ஏற்பட்டது.

முதலாளி, தெய்வாதீனமாகத் தியாகராஜனின் பெண் குமுதாவின் கல்யாணத்துக்குத் தாராளமாகப் பணஉதவி செய்தார். ஆயிரம் ரூபாய்களை முழுசாகக் கண்ட தியாகராஜன் வரன் தேடி முடித்து, வீட்டில் கிடந்த பொட்டுப் பொடி தங்கத்தைச் சேர்த்து நகைகள் என்று செய்து ஒரு வழியாகக் கல்யாணத்தை முடித்துப் பெருமூச்சு விட்டார்.

அடுத்த மாதம் தியாகராஜன் சம்பளம் வாங்கும்போது முதாலாளி அறுபது ரூபாயை அவரிடம் கொடுத்து விட்டு, மாதா மாதம் இருபது ரூபாயாக ஏற்கெனவே கொடுக்கப்பட்ட ஆயிரம் ரூபாய் ஈடு செய்யப்படும் என்பதைத் தெரிவித்த போது தியாகராஜனின் கண்கள் இருண்டன.

கல்யாணத்துக்கு அடுத்தாற் போல் பண்டிகை பருவங்கள் நெருங்கி வந்து கொண்டிருந்தன. ஒவ்வொன்றையும் சமாளிக்க ஜானகி அம்மாளின் உதவியை நாடினார் அவர். கடன் வாங்கி அதைத் திருப்பிக் கொடுப்பதற்கும் சில நற்குணங்கள் அமைய வேண்டும். சொன்ன வார்த்தையைத் தட்டாமல் அதன்படி நடந்து வந்த தியாகராஜனிடம் ஜானகி அம்மாளுக்கு ஒரு தனி மதிப்பு இருந்து வந்தது.

லேவாதேவி நடத்திக் கொண்டு வீட்டில் நிம்மதியாக வளைய வந்த ஜானகி அம்மாள் திடீரென்று வியாதியாகப் படுத்து விட்டாள். இரண்டுதரம் மயக்கம் வந்து விட்டது. மயக்கம் தெளிந்த பிறகும் அவளுக்கு நினைவு சரியாக இல்லை. நெருங்கிய உறவினர்கள் யாரும் இல்லாமையால் தியாகராஜன் தம் மகள் குமுதாவை ஜானகி அம்மாளுக்கு உதவியாக அனுப்பி இருந்தார்.

லேவாதேவிக்காரர்கள், நண்பர்கள் என்று பொழுது விடிந்து அஸ்தமிப்பதற்குள் பலர் ஜானகி அம்மாளின் வீட்டுக்கு வந்த வண்ணமாக இருந்தனர். குமுதாவும், அவளுக்கு முகம் கோணாமல் பணிவிடை செய்துகொண்டுதான் இருந்தாள். பெரியவர்களுக்குத் தொண்டு செய்தால், இன்ப வாழ்க்கையும், சீரும், சிறப்பும் கிட்டும் என்று பெரியவர்கள் சொன்னதை மனத்தில் வைத்துக்கொண்டு குமுதா பக்தியுடன் நடந்து வந்தாள்.

அவளுக்குக் கல்யாணமான—அதாவது ஒரு வருஷ காலத்துக்குப் பிறகு ஒரு தடவைகூட அவள் கணவன் மாமியார் வீட்டுக்கு வரவில்லை. கல்யாணத்தின்போதே சம்பந்தி வீட்டாருக்கு ஏகப்பட்ட குறைகள். காப்பியிலிருந்து கல்கண்டு வரையிலும் அவர்கள் குற்றம் வளர்ந்து கொண்டே போயிற்று. குமுத மலர் போல் மலர்ந்த முகத்துடன் தந்தையின் வறுமையிலும், துன்பங்களிலும் பங்கு கொண்ட குமுதா தன் கணவன் வீட்டாரின் குணத்தைக் கண்டு வாடி வதங்கினாள். அடைய வேண்டியவனுடைய அன்பை அடைந்தால் போதும் என்று நினைத்து, தன் கணவனிடமிருந்து ஏதாவது கடிதம் வராதா என எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். பண்டிகைகளும், பருவங்களும் மக்களின் வாழ்க்கையை மலர வைத்துக்கொண்டு சென்றன. ஜோடி ஜோடியாய் மணமான தம்பதிகள் படக்காட்சிக்கும், விழாக்களுக்கும் போவதைப் பார்த்துப் பொருமினாள் குமுதா.

தியாகராஜன் தானகவே மாப்பிள்ளைக்குக் கடிதம் எழுதினார். தன் சக்திக் கேற்ப சீர் சிறப்புடன் மகளை அழைத்து வருவதாகக் குறப்பிட்டிருந்தார். அதற்கு வந்த பதில் அவரைச் சமுதாயத்தின் முன்னேற்றத்தைப் பற்றிச் சிந்திக்க வைத்தது. வடக்கே இருநூறு ரூபாய் சம்பாதிக்கும் தன் உண்மையான அந்தஸ்தை அவர் உணரவில்லை என்றும், அவர் பெண்ணின் அழகைப் பார்த்து மணந்துகொண்ட தன்னையே நொந்து கொள்வதாகவும் அவன் எழுதி இருந்தான். குறைந்தது ஐந்நூறு ரூபாய்களுக்குக் குறையாமல் சீர் வரிசைகளுடன் கல்கத்தாவுக்கு வர விருப்பமானல் வரலாம் என்றும் குறிப்பிட்டிருந்தான்.

கோபமும் வருத்தமும் கொப்பளிக்க அவர் கடிதம் வந்த அன்று சாப்பிடாமலேயே வேலைக்குப் போய்விட்டார். மாலை வீடு திரும்பியதும் ஜானகி அம்மாள்—அவருடைய ஆபத்பாந்தவி—மயக்கமாக இருப்பதாகத் தகவல் கிடைத்தது. குமுதாவும் அந்த அம்மாளைக் கவனித்துக் கொள்ள அங்கே அனுப்பப்பட்டாள்.

## 2

பணத்தை ஒன்றுக்குப் பத்தாகப் பெருக்குவதில்,... அதைத் தர்மமாக விருத்தி செய்து, தர்மமாகச் செலவு செய்வதில் கிடைக்கும் திருப்தி வேறு வழிகளில் கிடைப்பதில்லை. ஏழை தியாகராஜன் ஜானகி அம்மாளிடம் வாங்கும் ஒவ்வொரு ரூபாயும், இரண்டணா குட்டி போட்டுக் கொண்டு அவளிடம் திரும்பிய பொழுது களிப்பில் ஆழ்ந்த அந்த அம்மாள் அம்மாதிரி வட்டிக்குக் கொடுத்து வாங்குவதில் ஒரு ஆனந்தத்தைக் கண்டாள். சேர்ந்த பணத்தை வைத்து ஏராளமான நகைகள், வெள்ளிப் பாத்திரங்கள், ரொக்கம், மனை என்று மேலும் சேர்ப்பதில் கருத்தாக இருந்தாள். அவள் கனவிலும் நனவிலும் பணம் ஒன்றுதான் குறிக்கோளா இருந்து வந்தது; பிறருக்கு வட்டி இல்லாமல் கொடுப்பது என்கிற விஷயமே ஜான

அம்மாளுக்குத் தெரியாது. இந்த வாழ்க்கையும் பொன்னும் பொருளும் சதம் என்று இறுமாந்திருந்த ஜானகி அம்மாளின் உடலில் நாளடைவில் வாட்டம் ஏற்பட்டது. திடீர் திடீர் என்று தலை சுற்றலும், மயக்கமும் ஏற்பட்டன. அவள் எதிரே கண்ணாடி பீரோவில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த வெள்ளிச் சாமான்களும், புடைவைகளும் அவள் இதுவரையில் வாழ்ந்து வந்த வாழ்க்கைக்குச் சான்றாக விளங்கின. அவைகளின் பளபளப்பும், பகட்டும் இம்மியளவும் மாறவில்லை. ஆனால், ஜானகி அம்மாள் மாறிவிட்டாள்; தோல் சுருங்கி, நரை கண்டு, வற்றி உலர்ந்துபோய், கண்களின் கருமணிகள் சற்றே ஒளியிழந்து வயோதிகத்தை அடைந்துவிட்டாள். அவளும் ஒரு காலத்தில் அவைகளைப் போலப் பளபளவென்று இருந்தவள் தான். அவளுடைய காலம் ஓடி இறுதிக் கட்டத்துக்கு வந்துவிட்டது. அவைகளுக்கு இன்னும் தேய்வு ஏற்படவில்லை.

தன்னுடைய தேய்வைப் பற்றிச் சிந்தித்த ஜானகி அம்மாள் தன் எதிரில் வளர்ச்சியின் உருவமாக உட்கார்ந்திருக்கும் குமுதாவைப் பார்த்தாள். குமுதா, படுத்திருந்த ஜானகி அம்மாளின் முகத்துக்கு நேராகக் குனிந்தாள்.

"மாமி! உங்களுக்கு என்ன வேண்டும்?"

ஜானகி அம்மாள் தன்னைச் சுற்றிலும் ஒரு முறை பார்த்துக்கொண்டாள். அருகில் ஒரு சிறு மேஜையின் மீது மருந்துப் புட்டிகள், ஆரஞ்சுப் பழங்கள் முதலியன வைக்கப்பட்டிருந்தன. திடீரென்று தனக்கு என்ன வந்துவிட்டதென்பதே அவளுக்குப் புரியவில்லை.

குமுதா திரும்பவும் மெதுவான குரலில், "மாமி! ஏன் அப்படிப் பார்க்கிறீர்கள்? உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டாள்.

"என் உடம்புக்கு என்ன அம்மா? எத்தனை நாட்களாக நான் இப்படிப் படுத்திருக்கிறேன்?" என்று கேட்டாள் ஜானகி அம்மாள்.

குமுதாவுக்கு அந்த அம்மாளைப் பார்க்கவே பரிதாபமாக இருந்தது. ஒவ்வொருவரையும் தோரணையுடன் அதட்டி உருட்டி வேலை வாங்கியும், கொடுக்கல் வாங்கலில் சற்றும் விட்டுக் கொடுக்காமல், கறாராகவும் இருந்தவள் இரண்டே நாட்களில் எப்படி ஒடுங்கிக் கிடக்கிறாள் என்பதை நினைத்து வியந்தவாறு உட்கார்ந்திருந்தாள் குமுதா.

கட்டிலில் படுத்திருந்த ஜானகி அம்மாளின் கண்களிலிருந்து ஊற்றுப் போல் கண்ணீர் பெருகிக் கொண்டிருந்தது. மயங்கிக் கிடந்த அந்த இரண்டு நாளும் அவள் உள்ளுணர்வு விழித்துக் கொண்டுதான் இருந்தது. தன்னைச் சுற்றி என்ன நடக்கிறது என்பதை அறியாமல் கிடந்த அவள், தன் உள்ளுணர்வு கேட்கும் கேள்விக்குப் பதில் கூற முடியாமல் திணறிக்கொண்டிருந்தாள். 'யாருக்காக வாழ்ந்தாய்? எதற்காக வாழ்ந்தாய்?' என்று மனம் பெருங்குரலெடுத்து அவளை ஏசும்போது அவள் இதயம் வெடித்துவிடும்போல் இருந்தது. மூச்சு துரத்தித் துரத்தி வாங்கியது. யாரோ



அவளை ஊசியால் குத்துவதும் தெரிந்தது. மனத்தோடு போராடிவிட்டு அன்றுதான் அவள் கண் விழித்துக் குமுதாவைப் பார்த்தாள்.

"குமுதா! உன் அப்பா ஏன் இந்த வீட்டுப் பக்கமே வரவில்லை?" என்று நீளமான குரலில் கேட்டாள் அவள்.

"காலையில்கூட வந்திருந்தார் மாமி. நீங்கள் மயங்கிக் கிடந்தீர்கள்! திரும்பவும் சாயங்காலம் வருகிறேன் என்று சொல்லித்தான் போனார்."

"வரவில்லையே. அவரைப் பார்க்க வேண்டும் என்று ஆசையாக இருக்கிறது குமுதா."

"விளக்கேற்றிவிட்டதே, மாமி. அப்பா நாளைதான் வருவார். கிராமத்தில் என் சித்தப்பா ரொம்பவும் படுத்த படுக்கையாக இருக்கிறாராம். சென்னைக்கு அழைத்து வந்து வைத்தியம் செய்தால் உடம்பு தேறும் என்று சொல்கிறார்களாம். அழைத்து வரப் போயிருக்கிறார்..."

குமுதாவின் குரல் சித்தப்பாவைப் பற்றிய கவலையினால் கரகரத்துவிட்டது. ஜானகி அம்மாள் புரண்டு படுத்தாள். அன்றலர்ந்த செந்தாமரையை நினைவூட்டும் அந்த அழகிய யுவதியைச் சற்று நேரம் இமைக்காமல் பார்த்தவாறு யோசனையில் ஆழ்ந்திருந்தாள் அவள். குமுதாவின் அந்த நீண்ட கண்கள் யாருடைய வரவையோ எதிர்பார்த்து ஆவலைத் தேக்கி வைத்திருப்பதைப் பார்த்தாள். பவளத் துண்டங்கள்போல் வெற்றிலையால் சிவந்திருந்த அதரங்கள் ஆயிரம் பேச்சுக்களை மொழிய ஆவலுடன் காத்திருப்பதைக் கண்டாள். முத்துப் பற்கள் மோகன நகை புரியத் தயாராக இருந்தன. ஆனால், வர வேண்டியவன் அந்தத் தீபாவளி அன்று வர, ஏதேதோ ஆட்சேபங்களைத் தெரிவித்திருந்ததை மட்டும் அவள் அறியவில்லை.

"பாவம்! உன் அப்பாவுக்கு இருக்கிற கவலைகள் போதாதென்று இந்தப் புதுக் கவலை வேறு? தீபாவளி வரப்போகிறதே, உன் புருஷன் வருவான் இல்லையா?"

"வரும்படிதான் அப்பா கடிதம் போட்டார். ஆனவரைப் பொறுத்தவரையில் பிறருக்கு ஏதாவது செய்துகொண்டு இருக்க வேண்டும் என்கிற எண்ணம்தான். இங்கே நாங்கள் படுகிற பாட்டில், சித்தப்பாவுக்கு வைத்தியம் செய்யக் கொட்டியா கிடக்கிறது? அவரைக் கேட்டுப் பாருங்கள்: அதற்கு ஏதாவது காரணம் சொல்லுவார்..."

குமுதா ஆத்திரம் தொனிக்கப் பேசி ஓயும் வரை ஜானகி அம்மாள் ஏதும் பேசவில்லை.

'அவரைப் பொறுத்தவரையில் பிறருக்கு ஏதாவது செய்துகொண்டிருக்க வேண்டும் என்கிற எண்ணம்தான்' என்கிற வார்த்தைகளை அவள் ஆராய்ந்து பார்த்தாள். பொன்னையும், பொருளையும் சேர்த்துக் குவித்திருக்கும் தனக்குக் கிட்டாத அமைதியையும், நிறைவையும் ஏழைத் தியாகராஜன் எங்கிருந்து பெற்றார்? பிறருக்கு உதவுவதில் இருக்கும் மகிழ்ச்சியிலிருந்துதான் அவர் மன நிறைவை அடைந்திருக்க வேண்டும்.

ஜன்னலுக்கு வெளியே வானம் நிர்மலமாகத் தெரிந்தது. எண்ணற்ற தாரகைகள் பளிச்சிட்டன. தேய்ந்து கொண்டே வந்து ஒரு தினம் மறைந்து போனாலும் அடுத்த நாளே மக்களுக்கு ஒளியைத் தந்துவிட வேண்டும் என்கிற மகத்தான ஆசையுடன் கீற்றுப்போல் வான வீதியில் வந்துவிடும் மதியின் விந்தையை நினைத்து அதையே பார்த்துக்கொண்டு இருந்தாள் அவள். குமுதா அங்கு நிலவியிருந்த மௌனத்தைக் கலைத்தாள்.

"என்னைக் கல்கத்தாவுக்கு அனுப்ப, சித்தப்பாவுக்கு வைத்தியம் செய்ய எல்லாமாக அப்பா உங்களிடம் ஆயிரம் ரூபாயாவது கடனாகக் கேட்க வேண்டும் என்று சொல்லிக்கொண்டிருந்தார். நீங்கள்தான் சமயத்தில் தட்டாமல் கொடுப்பவர்கள். எங்களுக்கு வேறு யார் இருக்கிறார்கள் மாமி?" நீர் தேங்கியிருந்த தன் கண்களைக் குமுதாவின் பக்கம் திருப்பிப் பார்த்த ஜானகி அம்மாள், தள்ளாமையைப் பொருட்படுத்தாமல் விருட்டென்று எழுந்து இரும்புப் பீரோவின் அருகில் சென்று அதைத் திறந்தாள்.

ஒரு கட்டு ரூபாய் நோட்டுகளை எடுத்து வந்து குமுதாவின் அருகில் உட்கார்ந்தாள்.

"குமுதா! இவ்வளவு காலமாக இருண்டு கிடந்த என் உள்ளம் இன்று ஒளி பெற்றுவிட்டது. இந்த ஆயிரம் ரூபாய் உன் வாழ்க்கையை மலர வைத்து, நோயாளி ஒருவரைக் காப்பாற்றி அவர் குடும்பத்துக்கு உதவினால் அதைவிட எனக்கு வேறு எதிலும் ஆனந்தம் கிடைக்காது. இந்தா அம்மா! இதை வாங்கிக்கொள்; அப்பா வந்ததும் உன் கணவனைத் தீபாவளிக்கு வரச்சொல்லி எழுதச் சொல்."

குமுதா சிலையாக நின்றாள்.

"கடனாகக் கொடுத்துக் கடன் பளுவை மேலும் உன் அப்பாவின் தலையில் சுமத்தமாட்டேன். உனக்காக நான் தரும் பரிசு இது. நீ குழந்தை குட்டிகளோடு கணவனுடன் வாழும் சமயத்தில் என்னை நினைப்பாய் அல்லவா?"

ஜானகி அம்மாளின் முகத்தில் பழைய களையும் தேகத்தில் புதுத் தெம்பும் ஊறிவிட்டாற்போல இருந்தது.

சந்திரனைக் கண்டு மலரும் குமுதரைப்போல் குமுதா மலர்ந்த முகத்துடன் அவள் எதிரில் நின்றிருந்தாள்.



# விருந்தாளிகள்!

மாலைப் பொழுது நீண்டுகொண்டே வந்தது. சுவர்க் கடிகாரம் ராகம் போட்டுப் பாடி நான்கு அடித்து ஓய்ந்தது. சமையற்கார ராமன் ஒவல் கரைத்துக் கொண்டு வைத்தவன், ''இரவுச் சாப்பாட்டுக்கு....'' என்று தலையைச் சொறிந்தவாறு கேட்டான்.

''ஒன்றும் வேண்டாம் போ. அண்ணாவோ ஊரில் இல்லை. சூடாக ஒரு டம்ளர் பால் கொடு, போதும். உனக்குத் தேவையானால் சமைத்துக் கொள்'' என்றேன்.

இதே சமயம் போன் மணி அடித்தது. யாராக இருக்கும்? கௌசல்யாவாக இருக்குமோ? இரண்டு மூன்று நாட்களாக அவள் என்னிடம் பேசவேயில்லையே! ரிசீவரை எடுத்துக் குரல் கொடுத்தேன்.

''ஹலோ...''

''ஹலோ! நான்தான் பாஸ்கர் பேசுகிறேன். நானும் கௌசல்யாவும் உங்களுடன் முக்கியமான விஷயம் பற்றிப் பேச இரவு ஏழரை மணிக்கு வருகிறோம்...''

''அவளுக்குப் பேச ஒழிவில்லையாக்கும்?''

''அதெல்லாம் இல்லை. அதுதான் நேரவே வருகிறோமே!''

'டொக்'கென்ற சத்தத்துடன் இணைப்பு துண்டிக்கப்பட்டது.

இரவு ஏழரை மணிக்கு வந்தால் கௌசல்யா சாப்பிட்டு விட்டுத்தான் போவாள். எந்த நேரத்தில் வந்தாலும் அவளுக்கு அடுப்பங்கரை ஆராய்ச்சிதான். ஆவக்காய் ஊறுகாய்ச் சாதமும், வடகமும் பொரித்துப் போட்டாக வேண்டும். பெரிய சாப்பாட்டுராமி அவள்!

வாசல் தாழ்வாரத்தில் ராமனின் தலை தெரிந்தது.

''ராமா!'' என்று அழைத்தேன்.

பவ்யமான தோற்றத்துடன் இடுப்பில் வரிந்து கட்டிய துண்டோடு ராமன் எதிரில் வந்து நின்றான்.

''ராமா! கௌசல்யாவும், பாஸ்கரும் வருகிறார்கள். உனக்கு வடித்துக் கொள்வதோடு கூடக் கொஞ்சம் சாதம் வடித்துவிடு, போதும்!''

''அதற்கென்னம்மா, சமையல் செய்வதற்கே நேரம் இருக்கிறது. ஒரு சாம்பார் வைத்து, உருளைக் கிழங்கு பொடிமாஸ் செய்தால் ஆயிற்று...'' இப்படிச் சொல்லிக் கொண்டே ராமன் உள்ளே போனான். அவன் போன சிறிது நேரத்துக்கெல்லாம் சமையலறையிலிருந்து வெங்காய மணம் வீசியது. ராமனுக்கு விருந்தினர் வருகிறார்கள் என்றால் ஒரே உற்சாகம்.

சரியாக ஏழரை மணிக்கு வாசலில் கார் வந்து நின்றது. பாஸ்கரின் பக்கத்தில் உட்கார்ந்திருந்த கௌசல்யா முன்புறம் சரிந்து விழுந்த பின்னலைப் பின்னால் தள்ளியபடி வெளியே வந்தாள். காரின் பின்புறத்திலிருந்து குழந்தைகள் இறங்கினார்கள்.

இறங்கியவர்கள் தங்கள் பெற்றோரைப் பின்தங்க வைத்துவிட்டுப் புல்தரையில் குதித்தோடி வந்து '' ஆன்ட்டி'' என்று கூவியவாறு என் அருகில் வந்து நின்றார்கள்.

கௌசல்யாவுக்கு மூத்தவன் மகன். குமார் என்று பெயர். என் கழுத்தைச் சுற்றி வளைத்தவாறு என்னை நெருக்கினான். பெண்ணின் பெயர் பத்மா. அவள் என் மடிமீது ஏறி உட்கார்ந்து கொண்டாள்.

''ஹலோ, சுமித்திரா! உன்னுடைய தனிமையை, சிந்தனைகளை யெல்லாம் கலைக்க நாங்கள் வந்துவிட்டோம். அடடா! இந்த வால்கள் என்ன இப்படித் தலைமேல் ஒன்றும் மடிமேல் ஒன்றுமாக ஏறிக் கொண்டிருக்கின்றன! ஹ்ம்...'' பாஸ்கர் புன்முறுவ

னுடன் என்னை வணங்கியபடி எதிரில் இருந்த நாற்காலியில் உட்கார்ந்தான். ராமன்தான் எல்லோருக்கும் தக்காளி ஜூஸ் கொண்டு வந்து வைத்தான்.

குமாரும் பத்மாவும் தக்காளி ஜூஸைக் குடித்துவிட்டுத் தோட்டத்துக்கு விளையாடப் போய் விட்டார்கள்.

குழந்தைகள் வெளியே போய்விட்டார்கள் என்று தெரிந்த தம்பதியர் அர்த்தத்துடன் என் முகத்தைக் கூர்ந்து பார்த்தனர். கௌசல்யாவின் அழகு முகத்தில் துயரத்தின் சாயை படர்ந்திருந்தது. பாஸ்கரனின் நெற்றியில் கவலைக் கோடுகள்.

எனக்கொன்றும் புரியவில்லை. கணவன் மனைவிக்குள் ஏதாவது தகராறு இருக்குமோ? அவர்கள் என் எதிரிலேயே சில்லறைச் சண்டைகள் போட்டுக் கொள்வார்கள். பழம், காய், என்று 'டூ' கூட விடுவதுண்டு. இந்த ஊடலெல்லாம் கணத்தில் மறைந்து களிப்பில் மூழ்கியதையும் பார்த்திருக்கிறேன்.

நான் ஆவலுடன் அவர்களை நோக்கினேன்.

கௌசல்யாதான் முதலில் பேச்சை ஆரம்பித்தாள்.

''சுமித்திரா! உன்னிடம் முக்கியமான ஒரு பொறுப்பை ஒப்படைக்க நினைக்கிறோம். இவருக்கு விவசாயத் துறையில் மேலும் ஆராய்ச்சி செய்யப் பண்ணை அமைப்புகளை நேரில் பார்வையிட்டுக் கற்றுக்கொள்ள, இவர் பணி புரியும் ஸ்தாபனம் இவரை அமெரிக்காவுக்கு அனுப்ப ஏற்பாடு செய்திருக்கிறது. நானும் அப்படியே இவருடன் சென்று கல்வித் துறையில் மேலும் பட்டம் பெற்று வரலாமே என்று எண்ணுகிறேன். குழந்தைகள் இருவரையும் உன் பொறுப்பில் விடலாமென்கிற எண்ணம்...''

''ஓ! விடலாமே! உன் குழந்தைகளைக் கண்ணும் கருத்துமாகப் பார்த்துக்கிறேன்.''

''அதென்ன, உன் குழந்தை என்றுவிட்டாய்? இருவரின் மனமும் இவ்வாறு ஒட்டிக் கொண்டபோது, உனது எனது என்ற பேத நிலையிலா பேசுவார்கள்? நம் குழந்தைகள் என்று சொல்'' என்றாள் கௌசல்யா உணர்ச்சிப் பெருக்கோடு.

பாஸ்கர் சிரித்தார். பிறகு கௌசல்யா கவலையுடன், ''பத்மாவை விடக் குமாரை நீ எப்படிச் சமாளிக்கப் போகிறாயோ? அவன் ரொம்பவும் விஷமக்காரன். எங்கள் காரையும் இங்கேயே விட்டு விட்டுப் போகிறோம். வேண்டுமானால் வேலைக்காரியை இங்கே வந்துவிடச் சொல்லட்டுமா?'' என்றாள்.

இதற்கு நான் பதில் கூறவில்லை. சாப்பாடு தயார் என்று அறிவிக்க வந்த ராமனே பதில் கூறினான்: ''எதற்கம்மா வேலைக்காரி? நான் பார்த்துக் கொள்ள மாட்டேனா?'' என்று!

ஏறக் குறைய ஒரு விருந்தே தயார் செய்திருந்தான் ராமன். சாப்பாட்டுக்கு அப்புறம் நேரம் கழித்தே அவர்கள் கிளம்பினார்கள்.

பத்மாவும் குமாரும் 'ஆன்ட்டி'யுடன் இரவைக் கழிப்பதாகக் குதித்தார்கள்.

''இருக்கட்டுமே, பழக வேண்டுமில்லையா?'' என்றார் பாஸ்கர்.

குழந்தைகள் இருவரும் பெற்றோருக்குக் கையசைத்து விடை கொடுத்துவிட்டு உள்ளே வந்து என்னைக் கதை சொல்லும்படி கேட்டார்கள். கதை கேட்டவர்கள், சொன்னவள் எப்போது தூங்கினோமோ தெரியாது.

**கா**லை மலர்ந்து விட்டிருந்தது. ஜன்னலின் திரைச் சீலையை ஒதுக்கிவிட்டு வெளியே பார்த்தபோது எதிரே கருவேல மரத்தில் காக்கைக் கூடு ஒன்று தெரிந்தது. கன்னங்கரிய குஞ்சுகள் நான்கு வானத்தை அண்ணாந்து பார்த்தவாறு உட்கார்ந்திருந்தன.. மேலே கரும் புள்ளியாக ஏதோ தெரிந்தது. அது சிறிது சிறிதாக உருவம் பெற்றபோது தாய்ப் பறவை என்று புரிந்தது. அது தன் அலகில் எதையோ கொண்டு வந்தது. கூட்டை நோக்கிப் பறந்து வந்து கனிவுடன் குஞ்சுகளின் வாயில் உணவூட்டியது.

உள்புறம் என் பார்வை திரும்பியபோது குழந்தைகள் இருவரும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார்கள். தாயின் அரவணைப்பில் தூங்குவதாக அவர்கள் எண்ணம். அவர்களுக்குச் செவிலித் தாயாக இருக்க வேண்டிய பொறுப்பு என்னைச் சார்ந்திருக்கிறது



இப்போது. மகத்தான பொறுப்பல்லவா அது? உள்ளங்களின் உறவாடல் மட்டும் அல்ல. சதையின் சதையாக, ரத்தத்தின் ரத்தமாக... அது எப்படி முடியும்?

ராமன் கதவைத் திறந்துகொண்டு வெந்நீர்ச் செம்புடன் உள்ளே வந்தான். குழந்தைகளை உற்றுப் பார்த்துவிட்டு வெளியே போய் விட்டான். அதிகாலையில் வெந்நீரால் தொண்டையைச் சுத்தம் செய்தால்தான் வலி குறைவாக இருக்கிறது. கழுத்தில் சுற்றியிருந்த மப்ளரைக் கழற்றி வைத்து விட்டுப் பல் துலக்கி வாய் கொப்பளித்தேன். குழந்தைகளும் எழுந்தார்கள். அன்று ஞாயிற்றுக் கிழமை. பள்ளிக்கு விடுமுறை. ஆகவே, அவர்கள் வீடு செல்வது பற்றியோ, வேறு எதைப் பற்றியுமோ நினையாமல் விளையாட்டில் மூழ்கியிருந்தார்கள்.

கௌசல்யா போன் செய்தாள்.

''ஹலோ, சுமித்திரா! குழந்தைகள் உன்னைப் பாடாய்ப்படுத்திப் பம்பரமாய்ச் சுழல வைத்திருப்பார்களே... மச் டிரபிள்சம்... இல்லையா?''

''சே... சே...அதெல்லாம் இல்லை.... அவர்கள் 'டிரேட்' ஆட்டம் விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். உன் பிள்ளை இருக்கிறானே பெரிய பிஸினஸ் புள்ளியாக வருவாண்டி....''

கௌசல்யா கலீரென்று சிரித்தாள். ''சரி, நாங்கள் இன்று அங்கே வரவில்லை. 'ஷாப்பிங்' போகிறோம். கம்பளி உடை வேறு தைக்க வேண்டும். அடுத்த வாரம் கிளம்ப வேண்டுமே!'' என்றாள்.

கௌசல்யாவும் பாஸ்கரும் அமெரிக்காவுக்குச் சென்றுவிட்டார்கள். 'ஆன்டி'யிடம் சமர்த்தாக இருப்பதாகச் சொல்லிக் குழந்தைகள் பதவிசாக நடந்து கொண்டது எனக்கு வியப்பாக இருந்தது. விண்ணில் விமானம் பறந்து செல்லச் செல்ல மண்ணில் நின்றிருந்த நான் இதயச் சுமையால் அழுந்தி நின்றேன்.

என் அருகே என்னுடன் துளியும் சம்பந்தப் படாத — உறவற்ற இரண்டு குழந்தைகளின் நலனை ஏற்றிருப்பது முற்றிலும் சரியா தவறா என்பதுதான் அந்தச் சுமைக்குக் காரணம்.

பால் வடியும் முகத்தினளான பத்மாவும் ஆண்மைக்குரிய கம்பீரம் இன்னும் அரும்ப வயதாகாவிட்டாலும், அதற்குரிய முரட்டுத் தனம் நிரம்பிய குமாரும் என் கைகளைப் பற்றி வீட்டுக்கு வரும்படி அழைக்கும்வரை நான் கற்பனையில் மூழ்கியிருந்தேன்.

அவர்களுக்கு எல்லாமே ஓரளவு புரிந்திருந்தது. தங்கள் பெற்றோர் ஏதோ காரணமாக வெளிநாட்டுக்குப் போயிருக்கிறார்கள் என்பதை உணர்ந்திருந்தனர்.

எங்காவது ஒரு சிணுங்கல், ஓர் அழுகை, முணு முணுப்பு எதுவுமே இல்லை. குழந்தைகள் குழந்தைகளாக இல்லாமல் ஏதோ பெரியவர்களைப் போல் விட்டேற்றியாக நடந்து கொண்டார்கள்.

சமையற்கார ராமனைக் கூப்பிட்டுக் கேட்டேன். ''ராமா! உன்னிடம் அவர்கள் ஏதாவது படுத்தல் கிடுத்தல் செய்கிறார்களா?''

ராமன் வழக்கம் போல் தலையைச் சொறிந்தான். ''அதெல்லாம் ஒண்ணும் இல்லையம்மா. போட்டதைச் சாப்பிடறதுகள். நாமதான் என்ன, குறைச்சலாகக் கவனிக்கிறோமா இதுகளை? காலம்பற ஜாம், வெண்ணெய் தடவிய ரொட்டி, பால். மத்தியானம் இரண்டு தினுசு காய்கறியோட சாப்பாடு..... மாலையில் பிஸ்கட், பழம், டீ.... ராத்திரி சப்பாத்தி கூட்டு, பால்..... கௌசல்யா அம்மா இருந்தால்கூட இவ்வளவு அக்கறையா கவனிக்க மாட்டார்கள். குறைப் பட்டுக் கொள்ள என்ன இருக்கு?''

ராமனோடு பேசுவதில் அர்த்தமிருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. சாப்பாடு, தூக்கம் இவை மட்டும்தானா குழந்தைகளின் உலகம்? அவை தம் பெற்றோரிடம் நடந்து கொள்ளும் விதம் எப்படி எப்படியோ இருக்குமே!

கௌசல்யா குழந்தைகளின் நலனை விசாரித்துக் கடிதம் போட்டிருந்தாள். குழந்தைகளுக்கே கடிதம் எழுதியிருந்தாள். குழந்தைகள் ஏதாவது தங்கள் குறைகளைப் பற்றி அவளுக்கு எழுதட்டும் என்று நான் அவர்களிடம் தபால் கவரைக் கொடுத்து அவர்களே கடிதம் எழுதிப் போட்டு ஒட்டி ராமனிடம் கொடுத்து 'போஸ்ட்' செய்யும் படி கூறினேன்.

பத்மாவும், குமாரும் கடிதம் எழுதி முடித்ததும் என் அறைக்குள் ஓடி வந்தார்கள்.

''ஆன்ட்டி! கடிதாசு படிக்கட்டுமா? கேட்கிறீங்களா?'' என்று கேட்டாள் பத்மா.

''நான் படிப்பேன்....'' என்றான் குமார்.

''நான் படிப்பேன்....'' என்றவாறு பத்மா கடிதத்தைப் படிக்க ஆரம்பித்தாள்.

''அன்புள்ள அம்மா,

இங்கே ஆன்டியும், நானும், தம்பியும் சுகம்.....'' என்று ஆரம்பித்தது கடிதம். அப்புறம் 'ஆன்ட்டி' அவர்களிடம் அன்பாக இருப்பது. ராமன் அவர்களைக் கவனித்துக் கொள்வது. இவைதாம் கடிதம் முழுதும்.

இவை யெல்லாம் உண்மையா? இதற்கும் மேலாக, மன அந்தரங்கத்தில் என்னைப் பற்றி ஏதாவது குறை இருக்காதா? குழந்தைகளுக்குக்கூட ரகசியங்களை வைத்துப் பூட்டி வைக்கத் தெரியுமோ?

'குறை சொல்லும்படியாக நாம் நடந்து கொள்ளாததால் இப்படி இருக்கிறதுகள் போல இருக்கு' என்று நினைத்துச் சற்றுக் கடுமையாகவே அவர்களிடம் நடந்துகொள்ள ஆரம்பித்தேன்.

''பத்மா! குமார்!'' என்று அதட்டும் குரலில் கூப்பிட்டுப் பள்ளிப் பாடங்களைப் பற்றி விசாரித்தேன். கணக்கிலும், ஆங்கிலத்திலும் அவர்கள் தவறு செய்திருப்பதைச் சுட்டிக்காட்டிக் கோபித்துக் கொண்டேன்.

குழந்தைகள் தலை குனிந்து என் கோபத்தை வரவேற்றார்கள். 'எக்ஸ்கியூஸ் மீ ஆன்ட்டி' என்று பத்மா குழைவுடன் மன்னிப்புக் கேட்டுக் கொண்டாள். குமார் வெட்கத்தோடு பென்சிலைக் கடித்தபடி நின்றிருந்தான். அவர்களைப் படிக்கப் போகும்படி சொல்லிவிட்டு, இரவு சாப்பாட்டின் போது அவர்கள் கோபத்துடன் இருக்கிறார்களா என்று கவனித்தேன்.

வழக்கம்போல் ராமனுடன் பேசியவாறு சாப்பிட்டார்கள். படுக்கப் போகுமுன் என்னைக் கதை சொல்லச் சொல்லிக் கேட்டனர்.

இந்தக் குழந்தைகளின் மனத்தைப் பற்றி அறிய நான் என்ன முயன்றும் முடியவில்லையே! கொஞ்சமும் அவர்களின் உள் சுபாவம் வெளிப்படவில்லை. 'சமர்த்துக் குழந்தைகள்' என்று ராமனும், என் அண்ணாவும் வாயாரப் புகழ்ந்தார்கள்.

**கா**லம் விரைந்து ஓடிக் கொண்டிருந்தது. கௌசல்யாவும், பாஸ்கரும் ஊர் திரும்பினார்கள். அவர்கள் ஊர் திரும்பும் தகவலைத் தாங்கி வந்த கடிதத்தைக் குழந்தைகளுக்குப் படித்துக் காட்டினேன். வெகு சாதாரணமாக அதை அவர்கள் கேட்டுக் கொண்டு விளையாடப் போய் விட்டார்கள்!

கௌசல்யாவும் பாஸ்கரும் எனக்குத் தங்கள் நன்றியை வண்டி வண்டியாகச் சமர்ப்பித்துவிட்டுக் குழந்தைகளைத் தங்கள் வீட்டுக்கு அழைத்துப் போனார்கள்.

அங்கே அன்றிரவு எனக்கு விருந்து வேறு. இரண்டு வருஷங்களாக என்னுடன் ஒன்றிவிட்ட குழந்தைகள் இல்லாமல் அந்த வீடே என்னவோ போல் இருந்தது. ராமனுக்கும் வேலை ஓடவில்லை. சீக்கிரமே அவர்கள் வீட்டுக்குச் சென்றேன். அயல் நாடுகளிலிருந்து வாங்கி வந்த கலைப் பொருள்கள், மற்றும் சமையலறைக்கு வேண்டிய பொருள்கள் யாவற்றையும் காட்டினாள் கௌசல்யா. பிறகு என்னை ஓய்வெடுத்துக் கொள்ளச் சொல்லிவிட்டு, விருந்து தயாரிப்பைப் பார்வையிடச் சென்று விட்டாள். எனக்கு நேரம் போகவில்லை. தோட்டத்தைச் சுற்றி வரக் கிளம்பினேன். கௌசல்யாவின் வீட்டுத் தோட்டம் மிகவும் அழகானது. வகை வகையாக அங்கே செடிகள், கொடிகள் உண்டு. அவற்றைப் பராமரிக்கப் பல ஆட்களும் இருந்தார்கள்.



''உங்கள் நிழலில் தங்க அனுமதி கொடுத்ததற்கு என் நன்றி சார்!''

திராட்சைப் பந்தலின் கீழ் பத்மாவும், குமாரும் உட்கார்ந்து சுவாரசியமாக ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். நான் மறைந்திருந்து அவர்கள் பேச்சைக் கேட்டேன்.

''ஏண்டா, குமார்! அப்பா உன்னைக் கோபிச்சுண்டு அடிச்சாளேன்னு வருத்தமா இருக்கியா?'' என்றாள் பத்மா.

''சேச்சே! அதெல்லாம் ஒண்ணுமில்லை. பின்னே அடிக்க மாட்டாளா? அமெரிக்காவிலேயிருந்து வாங்கிண்டு வந்த ரயில் பொம்மையைச் சாவி கொடுக்கத் தெரியாம உடைச்சால் நன்னாத்தான் அடிப்பா..... உன்னைக்கூடத்தான் அம்மா கன்னத்தைப் பிடிச்சு நிமிண்டினாளே.....!''

''ஆமா.... 'ஆன்ட்டி' நம்மை அடிச்சதே இல்லைடா. அவா வீட்டுப் புத்தர் பொம்மையை உடைச்சப்போக்கூடப் போனாப் போறதுன்னுட்டா, இல்லையா? தப்பு செஞ்சா அம்மா அப்பாதான் கண்டிப்பா. நமக்கும் பயம் இருக்கும்......''

''உனக்கு இங்கே பிடிச்சிருக்கா.... 'ஆன்ட்டி' வீடு பிடிச்சிருக்கா, பத்மா?''

''சந்தேகமென்ன? இங்கேதான். அங்கே விருந்தாளி மாதிரிதானே நாம இருந்தோம்?''

''அம்மாகூட அப்படித்தான் சொல்றாள். அந்தத் தேசத்துலே எல்லாம் எத்தனை சௌகரியம் இருந்தாலும், இங்கே வந்தப்புறம்தான் மனசு நிம்மதியா யிருக்காம்.''

நான் இதுவரை புரிந்து கொள்ளாமல் இருந்த வினாவுக்கு விடை கிடைத்ததும் என் மனம் நிறைந்தது. குழந்தைகள் குழந்தைகளாகவே இருக்கத் தாயின் அதட்டலும், தந்தையின் கண்டிப்பும் தேவைதான்.

அவர்கள் விருந்தாளிகளாகவே என்னிடம் இருந்தார்கள்.




ஆழ்ந்து துயின்று கொண்டிருக்கும் அவள் உண்மையிலேயே உறங்குகிறாளா அல்லது தன்னிலை நழுவி யேங்கிக் கிடக்கிறாளா என்பது அவனுக்குப் புரியவில்லை. அவளை ஏக்கத்துடன் உற்றுப் பார்த்துப் பெருமூச்செறிந்தான்.

பனியில் நனைந்து வெளுத்திருக்கும் மலரில் சிதறிக் கிடக்கும் பனித்துளிகள் போல் அவள் முகமெங்கும் வியர்வைத் துளிகள் அரும்பி இருந்தன. துவண்ட மேனியளாக ஒரு கையைத் தலைக்கு மேலாக மடித்துக் கொண்டு, மற்றொரு கையை மார்பின் மீது துவளவிட்டு அவளும் பஞ்சணையில் துவண்டு கிடந்தாள்.

'அவள் அழகிதானா? அவள் கறுப்பில்லையா?'

கண்ணன் தன்னையே கேட்டுக் கொண்டு அவளை உற்றுக் கவனித்தான். காலம் கடந்த வினா என்பதையும் அவன் உள்ளுணர்வு உணரத்தான் செய்தது.

அவள் அழகிதான். சந்தேகமில்லை. கறுப்பு அழகில்லை என்றால் கரிய திருமேனியனாகிய அந்தத் திருமாலுக்கு அத்தனை மகத்துவம் வருவானேன்? அவன் தங்கை பார்வதி? மாதா பராசக்தி அல்லவா? வையமெல்லாம் வாழ வைப்பவளும் கறுப்புத்தான்.

இதோ கட்டிலில் கண் கவரும் இந்த பாமா தன்னிலே நிறைவு பெற்றுப் பார்ப்பவர்களையும் நிறைவு பெறச் செய்யும் அடக்கமான அழகி.

ஆனால், ஆறேழு வருஷங்களுக்கு முன் கண்ணனுக்கு இதொன்றும் விளங்கவில்லை.

அவள் கரிய நிறம்தான். அது மட்டுமில்லை. ஒற்றைநாடியான தேக அமைப்பு. தலை நிறைய சாட்டைபோல் நெளியும் கூந்தல் அழகு அந்தக் கறுப்பின் முன் எடுபடவேயில்லையே!

பாமா அவன் அறையில் முதன் முதலாகக் காலடி எடுத்து வைத்தவுடன் ஏதோ ஒரு மிருகத்தைப் பார்ப்பதுபோல் அவன் அவளை ஏறிட்டுப் பார்த்தான்.

கோயிலில் இருக்கும் விளக்குப் பெண் ஒன்று அசைந்தாடி நிற்பதுபோல் தோற்றமளித்தாள் அவள். வெட்கம் வேறு அவளைச் சூழ்ந்துகொள்ளவே குனிந்த தலையை அவள் நிமிர்த்தவே யில்லை.

"என்ன இது? எங்கே வந்தாய்?" கண்ணனின் அதட்டும் குரலில் அவள் துணுக்குற்று நிமிர்ந்தவுடன் அழகின் பூரணத்துடன் நெடிதுயர்ந்து நிற்கும் கணவனை நன்றாகப் பார்த்தாள். பார்த்தவள் பார்த்துக்கொண்டே யிருந்தாள்.

'இவர்? இவர்? இவ்வளவு அழகா? அம்மாடி!—' மனம் பொங்கிப் பூரிக்க விழிகளைத் தாழ்த்திக் கொண்டாள் பாமா.

கண்ணன் சுட்டெரிப்பதைப் போல அவளைப் பார்த்தான்.

"அதோ பார்! இது என்னுடைய அறை. இங்கே உனக்கு ஒன்றும் வேலை கிடையாது. நீ போகலாம்."

வாசற்படியைச் சுட்டிக் காட்டிய விரலின் அசைவில் கூட வெறுப்பு நிழலாடியது. அவள் வெளியே வரவில்லை. அறையின் மூலையில் முடங்கிக் கொண்டாள்.

இதோ இன்று பஞ்சணையில் அமைதியாத உறங்குகிறாளே அதே பாமாதான். இந்த பாமா வேறு. வேதனைத் தீயில் தன்னை அர்ப்பணம் செய்து மீளா இதய நோய்க்கு ஆளாகி இன்று கணவனின் அன்பை அடைந்தும் அநுபவிக்க முடியாமல் ஏங்கிக் கிடக்கிறாள்.

விடிய இன்னும் இரண்டு ஜாமங்கள் இருந்தன. வெளியே புல்தரையில், இலைகளில், தென்னங் கீற்றுகளில் பனிநீர் முத்து முத்தாகப் பளபளத்தன. அவள் முகத்தில் அரும்பி யிருந்த வியர்வையைத் துண்டினால் ஒற்றிவிட்டான் கண்ணன்..

கணவனின் கரம்பட்டவுடன் அவள் இமைகள் லேசாகத் திறந்து மூடின. வெள்ளை வெளேர் என்று வெளுத்திருந்த அந்த விழிகளில் சோகம் பொழியும் இரு கருமையான வட்டங்கள் ஒளி மங்கிப் புரண்டு கொடுத்தன.

"பாமா! பாமா! ஏதாவது சாப்பிடுகிறாயா? பழரசம் தரட்டுமா?"

பாமா மூடிய விழிகளைத் திறக்காமல் அவன் கொடுத்ததைச் சுவைத்து, உதடுகளை நாக்கினால் தடவிக்கொண்டே அயர்வுடன் படுக்கையில் கிடந்தாள்.

கண்ணன் சாய்வு நாற்காலியில் நன்றாக நிமிர்ந்து உட்கார்ந்தான். பாழும் பொழுது நகர்வதாகக் காணோம்.

நோயாளியும், இராப் பொழுதும் ஒன்றுடன் ஒன்று உறவாடி இணைந்து மெதுவாக நகர்வதுபோல் இருந்தது அவனுக்கு.

இவளை அவன் அழகில்லை என்று அன்று ஒதுக்கிய காரணம்? பெண்ணைப் பார்ப்பதற்கு அவனும்தான் போயிருந்தான். யாரும் அவன் கண்களைக் கட்டி விடவில்லை.

வீட்டுக்கு வந்ததும் அம்மா, "என்னடா சொல்கிறாய்" என்று கேட்டாள்.

"நீ என்ன சொல்கிறாய்?"

"நிறம்தான்—" என்று இழுத்தாள் அம்மா.

"அப்போ விட்டுத் தள்ளு. வேறு பார்க்கிறது..."

"தள்ளுகிறதா? அவர்கள் செய்கிற மாதிரி யாரும் செய்ய மாட்டார்கள். பெண்களின் கறுப்பு நாளடைவில் உதிர்ந்து போகும். அதுதான் ஏதேதோ விற்கிறதே இந்த நாளில் பூசிக்கொண்டால் சிவப்பாகிவிடுகிறாள்—"

"சரி—உன் இஷ்டம்."

மாப்பிள்ளை அழைப்பைச் சாதாரணமாகவா நடத்தினார்கள்? இரட்டை நாயனம் பாண்டு உள்பட அமர்க்களமான ஊர்வலம் தன்னுடைய பிள்ளை வைரமோதிரம் பளபளக்க, சூட்டும், கோட்டுமாக ஊர்வலம் வருவதைப் பெற்ற மனம் கண்டு பூரித்துப் போயிற்று. சும்மாவா பின்னே? ஒரு மாவட்டத்துக்கே அவன் அதிகாரி. கலெக்டர்!

நிச்சய தாம்பூலத்தின்போது உள்ளே யிருந்து பெண்ணின் வரவை எல்லாரும் எதிர் பார்த்து அந்த அறையின் வாசற்படியையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

பாமா வந்தாள்.

சம்பந்தி வீட்டில் கசமசவென்று பேச்சு ஆரம்பமாயிற்று.

'கறுப்பு... 'கறுப்பு...' எல்லாருமா அப்படிச் சொல்ல வேண்டும்?

"ஏண்டா கண்ணா! இந்தக் கரிக்கட்டையைக் காலில் கட்டிக்கொண்டாயே அப்பா.

உனக்கு வேறு பெண்ணே கிடைக்க வில்லையா ?'' அவன் மாமி வந்து பொரிந்து தள்ளியவுடன் கண்ணன் நிலை கொள்ளா மல் தவித்தான்.

தீர்ந்துபோன விஷயத்தை ஒழுங்கு படுத்தி உருவப்படுத்திப் பேசித் தீர்ப்பதற் கென்றே பலர் வந்திருந்தார்கள். பந் தல் நிறைய பளபளத்த பாத்திரங்களின் பெருமையிலேயே லயித்திருந்த அவன் தாய்க்கு தன் மருமகளை ஏறிட்டுப் பார்க்க அன்று மாலைதான் முடிந்தது.

அந்த ஆணழகனின் பக்கத்தில் பாலில் விழுந்த தூசுபோல் அவள் அமர்ந்திருப் பதைத் தாய் கவனித்தாள்.

'நம் கண்ணனின் அழகு எங்கே? எல் லாரும் சொல்வதுபோல நாம் பணத் துக்கு அடிமையாகிவிட்டோமா?'

கண்ணன் அவள் பக்கம் திரும்பிப் பார்க்கவில்லை. 'மாப்பிள்ளைக்கு என்ன குறை? கலகலப்பாக இல்லையே'—பெண் வீட்டார் முன்பு இந்தக் கேள்வி பெரிய உருவில் நின்று அச்சுறுத்திக் கொண்டே யிருந்தது.

இதோ அவள் எதிரே கண்மூடி மௌனி யாகிப் படுத்திருக்கும் அவளைக் கவனித்தான் கண்ணன்.

"மிஸ்டர் கண்ணன் உங்கள் மனைவி யின் உலகவாழ்க்கை இனி நாட்கள் அள வில்தான் இருக்க வேணடும். மறுபடியும் அந்த மார்வலி வந்தால் அவள் பிழைக்க மாட்டாள்."

ஒரு வாரத்திற்கு முன்பே வைத்தியர் முடிவாகக் கூறிவிட்டார். வியாதியின் முடி வாக, வைத்தியரின் முடிவாக மட்டும் இருந்திருந்தால் அவன் வேதனைப்பட மாட்டான். மாலையிட்டுத் தன்னை மனை ளாக ஏற்றுக்கொண்ட மறு விநாடியிலிருந்து அவள் இதயச் சுவர்களைத் தகர்த்து அவ ளுக்கு இவ்வித முடிவை ஏற்படுத்தியவன் அவன்தானே?

மறுபடியும் அவன் அவளை உற்று நன்ரு கக் கவனித்தான். அவளுடைய நிறமே மாறிவிட்டதே. நல்ல சிவப்பாக இராவிட் டாலும், மாந்தளிர் மேனியளாக இப் பொழுது அவள் காணப்பட்டாள். கழுத் தில் பசுமையாகத் துலங்கும் மஞ்சள் சரடும் நெற்றியிலும் வகிட்டிலும் இட்ட குங்குமத் துடன் ஒரு 'தெய்வ மங்கை'யாகத்தான் இருந்தாள். அழகு என்பது வெறும் வெளித் தோற்றத்தை மட்டும் பொறுத்த தில்லை. அழகின் இருப்பிடமே இதயம் தான் என்பதை அவன் புரிந்துகொள்ள இவ்வளவு காலம் பிடித்துவிட்டதே! வெளியே அமைதி மட்டும் இல்லை. ஒரே பனி. மார்கழி மாதத்தின் கூதல் உடலைத் துளைத்துவிடும் போல் இருந்தது. மெல் லிய துகிலால் உலகையே போர்த்திவிட் டாற்போல் உலகம் மறைந்து கிடந்தது.

இந்தப் பனியிலும் சாரலிலும் அவள் மேனி யெங்கும் வியர்த்துக் கொட்டிக் கொண்டே யிருந்தது. வேதனைத் தீயைத் தணிக்க இயற்கை அவளுக்கு இந்த அற் புதமான வசதியைச் செய்து வருகிறது போலும்.

முதன் முதலாக அவளைச் சொல்லால் சுட்டவுடன் அவள் சகித்துக்கொண்டு தான் அதை விழுங்கிக் கொண்டாள். காலத்தின் தேய்வில் மனத்துக்கு மாறுதல் உண்டு என்று நம்பினுள். அவனே? தன் அந்தஸ்தின் போதையில், அழகன் செருக்கில் அவளைத் துச்சமாக மதித்தான்.

ஒருநாள், ஒரு பொழுது அவன் குரலெ டுத்துத் தன்னை அழைப்பான் என்கிற நம் பிக்கையில் ஒரு வருடம் ஓடிவிட்டது.

பாமாவின் அப்பா வந்தார் பெண்ணைப் பார்த்துப் போக.

"என்ன அம்மா இப்படி இளைத்துவிட் டாய்?" — உபசாரத்துக்காகக் கேட்ட வார்த்தை அல்ல.

"இல்லையே அப்பா, எப்பொழுதும் போலத்தான் இருக்கிறேன்."

"நீ சொன்னுல் எனக்குக் கண் இல்லையா அம்மா?"

தந்தையை ஏறிட்டுப் பார்த்தவள் தலை யைக் குனிந்து, கண்ணீர் உகுத்தாள். அப் புறம் அவள் பிறந்த வீட்டுக்கு வந்து விட்டாள்.

"உன்னிடம் மாப்பிள்ளை பேசுவதே கிடையாதா? ஏனென்று கேட்பதில்லையா? நீ பேசாமல் இருக்க உனக்கு எவ்வளவு நெஞ்சழுத்தமடி அம்மா!"

தாயின் கேள்விச் சரங்கள் மகளின் இதயத்தைச் சல்லடைக் கண்களாகத் துளைத்து வேதனைப்படுத்தின.

"என்னை ஒன்றும் கேட்காதே அம்மா. அவருக்கு என்னைப் பிடிக்கவில்லை. என் னைப் பிடிக்கவில்லை—"

"பிடிக்கவில்லையாமா?" என்று இரைந் தார் தகப்பனுர்.

தகப்பனுர் இரைவதற்கு மேலும் ஒருபடி போகத் தயாராக இருந்தாள். ஆனுல் பாமாவின் கரங்கள் அவர் முன் நீண்டு இடைமறித்தன.

தொலை தூரத்திலிருந்த ரயில் நிலையத்தி லிருந்து 'கூ' வென்ற ஓசையுடன் ரயில் கிளம்பும் சத்தம் கேட்டது கண்ணனுக்கு. தன்னுள்ளே வெவ்வேறு மனத்தையுடைய வர்களை ஏற்றிக்கொண்டு தான் சேருமி

டத்தையே லட்சியமாக எண்ணி விரையும் அந்த ஓசையை உற்றுக் கவனித்தான்.

எப்படியோ அவனால் ஒதுக்கப்பட்ட பாமா மறுபடியும் அவன் இருப்பிடத்தை லட்சியமாகக் கொண்டு வந்துவிட்டாள்.

'எப்படி ? எப்படி ?' என்று மருகினான் அவன்.

இரண்டு மாதங்களுக்கு முன்பு வெளியே போய்விட்டுத் திரும்பிக் கொண்டிருந்த அவன் கார் மரத்தில் மோதி அவனுக்குக் கால் எலும்பு முறிந்துவிட்டது. முதலில் ஆஸ்பத்திரியில் கொஞ்ச நாட்கள் இருந்து விட்டுப் பிறகு வீட்டுக்கே வந்துவிட்டான். வீட்டில் யார் இருக்கிறார்கள் ? அம்மாதான் போய் ஆறு மாதங்கள் ஆகின்றனவே ! அதற்கும்தான் பாமா வந்திருந்தாள். அவன் ஒரு கோடியிலும், அவள் ஒரு கோடியிலுமாக இருந்து எப்படியோ தாயின் ஈமக்கடன்களை முடித்துவிட்டனர்.

கடைசியாக ஊருக்குப் போகும் தினத்தன்று அவள் கூடத்தில் அவன் முன் வந்து நின்றதும் அவன் சேவகனைத் திரும்பிப் பார்த்ததும், சேவகன் காரோட்டியை விளித்ததும் திரைக் காட்சிகள் போல் தெரிந்தன.

அவ்வளவு பெரிய வீட்டில் இதே கட்டிலில் படுத்து ஜன்னல் வழியாக அடிவானத்தையும், மரங்களையும், மனிதர்களையும் பார்த்துப் பார்த்து அலுத்துப் போயிற்று. அவன் மனமறிந்து குளிர்ந்த வார்த்தை பேசி நடந்துகொள்ள யாரிருக்கிறார்கள் ?

திடீரென்று மனத்திலே ஏக்கம் பிறந்ததும் 'அவள் ?' என்று நினைத்தான் அவன். ஆங்...அவளைப்பற்றிய நினைப்பு அவன் மனத்தின் மூலையில் ஒட்டிக்கொண்டுதான் இருந்தது.

அவள் கறுப்போ, சிவப்போ, அழகோ, குரூபியோ வாழ்க்கைப் பிரயாணத்தில் அவனுடன் அவளால்தான் வரமுடியும். மற்றவர்கள் எல்லாரும் விருந்தினர் போலத்தான்.

அவன் மனம் இவ்விதம் முதன் முதலாக அவளைப்பற்றி எண்ணத் தொடங்கிய போது, எங்கோ ஓர் ஊரில் ஒரு வீட்டின் தாழ்வாரத்தில் தினசரித்தாளில் தன் வேதனையை மறக்க முயன்று கொண்டிருந்த பாமாவுக்குக் கலெக்டர் கண்ணனின் உடல்நிலை கொஞ்சம் சீரடைந்து வருவதாகச் செய்தி வந்திருப்பதைக் காண முடிந்தது. பதைபதைத்தாள் அவள்.

பூஜை அறையிலிருந்து வெளியே வந்த தந்தையை 'அப்பா' என்று அழைத்தாள் பாமா.

"அப்பா ! அவருக்கு உடம்பு சரியில்லையாம். நான் போகிறேன் அப்பா அங்கே !"

"யாருக்கு ? அவனுக்கா ?" வெறுப்பாக உமிழ்ந்தார் அவர்.

"ஆமாம் அப்பா. நான் போகத்தான் போகிறேன்."

"போ...போ..."

கட்டிலில் துயில் கொள்ளும் பாமா அசைந்து படுத்தாள். முத்தென வியர்வை முகமெங்கும் அரும்பி வழிந்தன. பனியிலே நனைந்து கசங்கியமலர் காற்றில் அசைவது போல் தோற்றமளித்தாள். 'இந்த மலரை நான் எப்படித்தான் கசக்கி விட்டேன் ?' துக்கம் தொண்டையை அடைக்க முனு முணுத்தான் கண்ணன்.

அன்று காலொடிந்து கிடந்தவன் எதிரில் அந்தக் காலை நேரத்தில் தெய்வ மாது போல் வந்து நின்றாள் பாமா.

"நீயா ?" என்றான் கண்ணன்.

'ஏன் வந்தாய் ?' என்று கேட்டு வாசலைச் சுட்டிக் காட்டி விடுவானோ என்று அச்சத்துடன் நுழைந்தவளுக்கு சாயுஜ்ய பதவி கிடைத்தாற்போல் இருந்தது.

"உங்களுக்கு உடம்பு சரியில்லையாமே."

இருவரும் ஒன்றும் பேசவில்லை.

'பாமா அழகிதான். அவள் கறுப்பாக இருந்தால் என்ன ? பளிங்கான அவள் இதயத்தை அறிந்து கொள்ளாத பாழாகி விட்டேனே ?

அவளை அவன் நன்றாகக் கவனித்துப் பேசவே அவன் மனச்சாட்சி இடங் கொடுக்கவில்லை. அன்பெனும் தெய்வத் தின்முன், குரூரமுள்ள ஒரு கல்நெஞ்சன் குற்றவாளியாக நின்றிருந்தான்.

கண்ணன் உடல்நிலை தேறியதும், மார் வலி என்று அவள் துடித்ததும், படுக்கையில் விழுந்ததும் அவன் மனச்சாட்சிக்கு ஒரு மறுப்பாக அமைந்தன.

'மூடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப் படுவதா ?'

பாமா பேசி நான்கு நாட்கள் ஆகி விட்டன. எப்பொழுதாவது கண்திறந்தால் ஆவலுடன் அவனைப் பார்த்துவிட்டு, விழிக்கடையில் முத்தென நீர் தேக்கி விழிகளை மூடிக் கொண்டு விடுவாள்.

'பாமா எப்படியும் பிழைத்து விட வேண்டும். இந்தப் பெரிய வீட்டுக்கும், என் இதய சாம்ராஜ்யத்துக்கும் அவள் ராணி ஆகிவிட வேண்டும். ஆண்டவனே ! அவளைப் பிழைக்க வைத்துவிடு' என்று வேண்டுவான் அவன்.

அவன் உள்ளக்குரல் ஓங்கி ஒலித்து ஆண்டவனை அடையும் முன்பே பாமா நீர் துயிலில் பனிபடர்ந்த அந்தக் காலை நேரத்தில் துவண்ட மலராக ஓய்ந்து விட்டாள்.

அவன் வாயடைத்து, மெய் விதிர்க்க சக்தி இழந்த சிவனைப் போல நின்றான். திருமகள் நீங்கிய வைகுந்தமாக அந்த வீடு மௌன சோகத்தில் ஆழ்ந்திருந்தது.

அவன் அவளைப் பார்த்த பார்வை, ''என்னைக் காட்டிக் கொடுத்து விடாதே. நான் ஏழை. என்னை நம்பி வீட்டில் பத்துப் பேர் சாப்பிடுகிறார்கள்'' என்று பேசியது போல இருந்தது.

அவள் ஒரு நிமிடம் யோசனை செய்தாள்.

அந்த வயதான அதிகாரி, ''ஏனம்மா! விசாரணையைத் தொடங்கலாமா?'' என்று கேட்டார்.

''உங்களிடம் நான் தனியாய் ஒரு வார்த்தை பேச வேண்டும்'' என்றாள் மாலினி.

''நீ சற்று வெளியே போய் இரு'' என்றார் அதிகாரி குமாஸ்தாவிடம்.

''ஸார்! உங்களை என் தகப்பனார்போல் நினைத்துச் சொல்கிறேன். ஒரு மாதம் முன்பு இது நடந்தது. அப்போது இவர் மாயவரம் சந்திப்பில் இருந்திருக்கிறார். கௌண்டரில் அவசரம் அவசரமாய் டிக்கெட் வாங்கியதும் இவர் முகத்தைப் பார்க்கவில்லை. சென்ற பத்து நாட்களாய் எங்கள் இருவருக்கும் திருமணம் செய்ய ஏற்பாடுகள் நடக்கின்றன.

''மாயவரத்தில் டிக்கெட் கொடுத்தவர் இவர் என்பது இன்றுதான் தெரிகிறது இன்று வரை மனுக் கொடுத்தது நான் என்று அவருக்குத் தெரியாது. மறு விசாரணை விழுப்புரத்தில் நடக்கும் என்றபோது சொப்பனத்தில் கூட அவர் என் வருங்காலக் கணவராய் இருக்கும் என்று நான் நினைக்கவில்லை. பெரியவர்களுக்குத் தெரிந்தால் மிகவும் கோபிப்பார்கள். எங்கள் விவாகப் பேச்சும் முறிந்து விடும். ஆதலால் ஒருவரும் அறியாமல் இப்போதே மனுவை வாபஸ் வாங்கிக் கொள்கிறேன்''

''அப்படியா? ரொம்ப சந்தோஷம்'' என்றார் அவர். அவளும் விடை பெற்றுக் கொண்டாள்.

மறு நிமிடம் அந்தக் குமாஸ்தாவைக் கூப்பிட்டார். அவன் உள்ளே வந்தான்.

''ஏம்பா, ரங்கன்! நீகூட என்னிடம்சொல்லவில்லையே. உன் வருங்கால மனைவியாமே? வழக்கை வாபஸ் வாங்கிக் கொண்டு விட்டாளாம். கங்கிராசுலேஷன்ஸ். உங்க கலியாணத்துக்கு எனக்கு அழைப்பு அனுப்ப மறந்து விடாதீங்க'' என்றார் அதிகாரி. அடுத்த நிமிடம் அவர் டிராலியில் ஏறிச் சென்று விட்டார்.

மாலினி பிளாட்பாரத்தில் நிற்பதைக் கண்டு ரங்கனும் போனான்.

''நீங்க என்னைக் காப்பாற்றுவீர்கள் என்று நான் நினைக்கவில்லை. அதிலும் நான் முன்பு உங்கள் பேரில் மனுக் கொடுத்தவள். அதிகாரிகள் உங்களை எச்சரிக்கை செய்து விட்டார்கள் இல்லையா?''

''எச்சரிக்கையா? ஒரு வருடத்துக்குச் சம்பள உயர்வை நிறுத்தி விட்டார்கள்!''

''அப்படியா? நான் ஏதோ விளையாட்டுப் போலச் செய்யப்போய் இப்படி ஆகிவிட்டதே. நீங்கள் சொன்ன பொய்யை உடனே நிஜ



''உங்க இருமலை நேற்று கேட்டதற்கு இன்றைக்குக் கேட்பது ரொம்ப 'பெட்டரா' இருக்கு''

''இல்லாமல் இருக்குமா? நேற்றிரவு பூராவும் அசுர சாதகம் செய்திருக்கிறேனே!''

மாக்கி விட வேண்டியது தான் என் முதல் வேலை'' என்றான் ரங்கன் தீர்மானமாக.

''எந்தப் பொய்யை நிஜமாக்கப் போகிறீர்கள்?''

''மனுவை வாபஸ் வாங்கும் போது உங்களுக்கும் எனக்கும் கலியாணம் நடக்க இருப்பதாய்ப் பொய் சொன்னீர்கள் இல்லையா?''

''உங்களை அந்த நிலையில் தப்புவிக்க அந்தப் பொய் சொன்னேன். ஆபத்துக்குத் தோஷம் இல்லை என்று நினைத்தேன். அதனால்தான் சொன்னேன்.''

''என்னை விடுவிக்க ஏன் முயன்றீர்கள்?''

''சின்ன வயதில் என் ஹெட்மிஸ்ட்ரஸ் 'இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண நன்னயம் செய்து விடல்' என்று சொல்லியிருக்கிறார். அதனால்தான் செய்தேன்.''

''உங்கள் அப்பா விலாசம்?'' என்று அவன் கேட்டான்.

''உங்களுக்கு ஏன் அது?''

''இன்றே ஒரு மாத லீவு போட்டு விட்டு உன் அப்பா காலிலாவது விழுந்து உன்னை என்னுடையவள் ஆக்கிக் கொள்ளத்தான்.''

''தாங்கள் காலம் கடந்து வருகிறீர்கள்.''

''என்ன சொல்கிறாய் மாலினி?''

அவள் அவன் கேள்விக்குப் பதில் பேசவில்லை. கைப் பையிலிருந்து ஒரு பத்திரிகையை எடுத்து நீட்டினாள்.

அதில் ''என் குமாரத்தி சௌ மாலினிக்கும் கிருஷ்ணபுரம் ராமநாதய்யர் குமாரன் வெங்கடேசனுக்கும் வருகிற ஆதிவாரம் திருமணம் செய்வதாய்ப் பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டு...'' என்று மட்டுமே படித்தான் ரங்கன்.

அடுத்த நிமிடம் அவன் முகம் தொங்கிப் போய் விட்டது.

''எனக்குக் கொடுத்து வைக்கவில்லை'' என்றான் அவன்.

அவன் முகம் பார்க்க மிகவும் பரிதாபமாய் இருந்தது.

அடுத்த நிமிடம் மாலினி, ''பரவாயில்லை, உங்களை ரொம்பவும் சோதிக்கக் கூடாது. இது என் பெரியம்மா பெண் மாலினியின் கலியாணப் பத்திரிகை. அவள் பெயரும் மாலினி தான். உங்களை அழவிட்டு வேடிக்கை பார்த்தேன்'' என்று சொல்லி விட்டு, ''இந்தாருங்கள் என் அப்பா விலாசம்'' என்று கொடுத்தாள்.

''இந்த நிமிடம் முதல் பொய்யை மெய்யாக்கும் வேலைதான்'' என்று குதித்தான் அவன் மகிழ்ச்சியோடு.

பொய் மெய்யாகி அவர்களுக்குத் திருமணம் ஆகி விட்டது.

அவர்கள் கல்யாணத்துக்கு வந்தவர்களுக்குப் பிரயாண டிக்கெட், பிளாட்பாரம் டிக்கெட்டாய் மாறவும் இல்லை. வந்த வாழ்த்துச் செய்திகளில் வேறு எந்தச் செய்தியும் கலந்திருக்கவும் இல்லை.



# வாழ்க்கை என்பது...

சரோஜா ராமமூர்த்தி

கோதையம்மாள் படைபடைக்கும் வெயிலைக்கூடப் பாராமல் கையில் அப்பளம் வைத்திருக்கும் கூடையைச் சுமந்தவாறு எங்கோ விரைந்து கொண்டிருந்தாள். தெருவெங்கும் குடை கவிழ்ந்தாற்போல் கொன்றை மரங்களின் நிழல் கவிந்திருந்தது. அவள் செருப்பு அணிந்துகொள்ளும் வழக்கம் கிடையாது. அப்பளம் இங்கு விற்பதில் கணிசமான லாபம் இல்லாவிட்டாலும், குடும்பத்தின் பற்றுக்குறையை ஈடு செய்ய முடிந்தது.

'வெயிலில் இப்படிக் கால் கொப்பளிக்க நடக்கிறாயே அம்மா. செருப்பு வாங்கிப் போட்டுக் கொள்' என்றாள் மகள் வத்சலா. அவள் மட்டும் என்ன? நைலானும், ஹவாய் செருப்பும் போட்டுக் கொண்டு குலுங்குகிறாளா? இடையில் சாயம் போன வாயில் புடவை. சில இடங்களில் தையல் பிரிந்து மேலும் தைக்கமுடியாத நிலையில் ரவிக்கை. அவளும் பொரியும் வெயிலில் பாதங்கள் சிவக்க தையல் வகுப்புக்குப் போகிறவள்தான். தன்னால் எல்லாவற்றையும் தாங்கிக் கொள்ளமுடியும் என்கிற எண்ணம்.

ஹைரோட் திருப்பம் வந்ததும் கார் என்று வெயில் மண்டையைப் பிளக்க ஆரம்பித்தது. ஒரு மரம்மட்டை எதுவும் இல்லை. தாகம் நாவை வறட்டியது. எதிரே 'ஐஸ்ஸ்' என்று கூவியபடி ஆனந்தமாக வெயிலில் நடைபோடும் சிறுவன் வருவதைக் கண்டாள் கோதை. 'இளம் ரத்தம்' என்று தனக்குள் சொல்லிக்கொண்டே நடந்தாள்.

இன்னும் கொஞ்சதூரம் நடந்தால் வக்கீல் சாம்பசிவத்தின் வீடு வந்துவிடும். அந்த வீட்டில் பத்து ரூபாய்க்குக் குறையாமல் வியாபாரம் நடக்கும். அத்துடன், வத்சலாவுக்கென்று அவர்கள் வீட்டில் பழைய ரவிக்கைகள், புடவைகள் ஏதாவது கொடுப்பார்கள். சில்லென்று இந்த வெயிலுக்கு இதமாக 'பிரிஜிடேரில்' வைத்த மோர் கொடுப்பாள் வக்கீலின் மனைவி.

கோதை வேகமாக நடந்தாள் வக்கீல் வீட்டை நோக்கி. வழக்கம்போல பத்து ரூபாய் வியாபாரமும், குளிர்ந்த மோரும் கிடைத்தன. வீடு திரும்புகையில் வத்சலாவுக்கென்று இரண்டு ரிப்பன்கள், பிளாஸ்டிக் வளையல்கள் வாங்கிக் கொண்டு வந்தாள் கோதை. வெயிலில் நடந்துவந்த களைப்பு வேறு.

வாசல்திண்ணையில் அலுப்புடன் உட்கார்ந்து கொண்டாள்.

அந்த வீட்டில் ஏகப்பட்ட குடித்தனங்கள். புற்றீசல்கள் போல காலை நேரத்தில் அவ்வீட்டிலிருந்து குழந்தைகளும், பெரியவர்களுமாக வெளியே வந்துகொண்டிருப்பார்கள். எதது யார் யார் வீட்டுக் குழந்தைகள் கண்டுபிடிப்பதே கஷ்டமாக இருக்கும். காலம் மாறிவிட்டது என்று கருதுகிறவர்களும், மக்களின் நடை உடை பாவனைகள் யாவும் பண்பட்டுவிட்டன என்று நினைக்கிறவர்களும் கோதையம்மாள் குடியிருந்த திருமகள் ஸ்டோர்ஸ் ஒண்டுக் குடித்தனங்களை எட்டிப் பார்த்தார்களானல் மனிதன் இன்னும் மிருகப் பிராயத்தைத் தாண்டவில்லை என்பது புலனகும்.

தெருத்திண்ணைக்கு அடுத்தாற்போல் இருந்த அறையிலிருந்து ஒருத்தி எட்டிப் பார்த்தாள் வெளியே.

'கோதை! வந்துட்டியா நீ?' என்று மூக்கின் மேல் விரலை வைத்து அதிசயித்தாள்.

'கொஞ்சம் முன்னடி வந்திருக்கக் கூடாதோ? உன் பெண் வத்சலாவைத் தேடிக்கொண்டு ஒரு பையன் வந்திருந்தான்.'

'பையனு?' என்று அதிர்ந்து போனுள் கோதை.

இதற்குள் மற்றக் குடித்தனக்காரர்கள் அங்கே கூடிவிட்டார்கள். 'பையனு! பையனு!!' அவர்கள் முகத்தில் வினைக்குறியைவிட வியப்புக் குறிதான் மிஞ்சி நின்றது.

'யாராம்? வத்சலா தையல் வகுப்புக்குப் போகவில்லை?' என்று கேட்டவாறு கோதை உள்ளே செல்ல பரபரத்தாள். ஜானகி மற்றவர்களைப் பார்த்துத் தலையை ஆட்டவும், அவர்கள் நமுட்டுச் சிரிப்பு சிரிக்கவும் அதைப் பார்க்கக் கோதை அங்கு இல்லையே என்று ஏங்கியபடி அவரவர் தத்தம் அறைகளுக்குப் போய்விட்டார்கள்.

உள்ளே வத்சலா காப்பி போட்டுக் கொண்டிருந்தாள். துடைத்துவிட்ட சிலையாக, கண்களும், மூக்கும் அளவோடு அமைந்து வறுமையிலும் இளமை பொங்க அவள் அடுப்பில் நீர் கொதிப்பதைக் குனிந்து பார்த்து ரசித்துக் கொண்டிருந்தாள். பக்கவாட்டில் தெரிந்த அவள் முகம் கள்ளமற்ற குழந்தையைப்போல் இருந்தது.

'வத்சு!' என்று அதட்டிக் கூப்பிட்டாள் அன்னை. திடுக்கிட்டு நிமிர்ந்த அவள் முன்பு உழைத்து, ஓடாகிப் போன கோதை பூதாகாரமாக வடிவெடுத்து நிற்பதுபோல் நின்றுள்.

'ஏண்டி! உன் அப்பா சோற்றுக்கு வந்தாரா இல்லை சீட்டாட்டத்திலேயே அமுந்திப்போய் இருக்கிறுரா? ஆமாம்... இங்கே யாரோ வந்தார்களாமே? யாரடி அது?'

வத்சலாவுக்குத் தாயின் கோபத்தைப் பற்றி நொடியில் புரிந்துவிட்டது. அம்மா வெயிலில் களைத்துப் போய்வந்திருக்கிறுள். வந்ததும் வராததுமாக அவளிடம் யாரோ இல்லாததும், பொல்லாததும் ஓதி இருக்கிறுர்கள். பதுமை ஒன்று அசைவதுபோல் தாயின் முன்பாக ஒரு டம்ளரில் காப்பியை எடுத்து வைத்தாள்.

'சாப்பிடம்மா—' அன்னையின் முகத்தை நேருக்கு நேர் பார்த்தாள். இமைகளை அழுத்தும் கண்ணீரை மிகுந்த பிரயாசையுடன் அடக்கிக் கொள்ள முயன்றுள். படபடத்த கோதை இரண்டே விழுங்கில் காப்பியைக் குடித்துவிட்டு, 'இதற்குள் காப்பிக்கு என்னடி அவசரம்? யார் வந்திருந்தது?' என்று கேட்டுவிட்டு நிமிர்ந்ததும் பூஜை மாடத்தில் வாழை இலையில் சுருட்டி வைக்கப்பட்டிருந்த கதம்பமும், ஒரு சீப்பு மலைவாழைப் பழமும் தெரிந்தன.

'நீ அடிக்கடி சொல்லுவாயே. என்னுடைய அத்தை ஜபல்பூரில் இருக்கிறுள் என்று. அவளுடைய பிள்ளையாம். வேலையாகப் பட்டணத்துக்கு வந்திருக்கிறுராம். அப்பாவையும், உன்னையும் பார்க்கவேண்டுமென்று வந்தாராம். போகிறேன் என்றுதான் சொன்னுர். நான்தான் காப்பி சாப்பிட்டுவிட்டுப் போகலாம் என்று கொடுத்தனுப்பினேன்.'

'வாசுவா வந்திருந்தான்? கல்யாணிக்கு மூத்தவன்தான் பிள்ளை. அப்புறம் இரண்டோ மூன்ருே பிறந்ததாகச் சொன்னர்கள். முதல் பிரசவத்துக்குத்தான் பிறந்த வீட்டுக்கு வந்தி

ருந்தாள். அப்போ உன் தாத்தா, பாட்டி எல்லோரும் இருந்தார்கள். அப்புறம் இடையிலே தாத்தா, பாட்டி இறந்ததற்கு வந்துவிட்டுப் போனவள். பிறகுதான் போக்குவரத்தே இல்லையே.'

வத்சலாவுக்கு எங்கோ வசிக்கும் தன் அத்தையை உடனே பார்க்கவேண்டும் என்று ஆவல் எழுந்தது.

'வாசு எப்படியிருக்கிறான் வத்சலா? அவன் திரும்பவும் வருவதாகச் சொன்னானா?'

வாசு எப்படியிருக்கிறான் என்று வத்சலாவினால் வர்ணிக்க முடியவில்லை. நெஞ்சில் நிறைந்துபோன உருவமாக அவனை மனத்தால் நினைத்து மகிழ்ந்த வண்ணம், 'போ அம்மா! அவரை நான் சரியாகப் பார்க்கவில்லை.' என்று விட்டாள்.

சீட்டாடுவதற்காக முதல் நாள் போன மனிதர் மெதுவாக அன்றுமாலை திரும்பிவந்தார். மனைவியின் அலைச்சலோ, தனக்குக் கல்யாண வயதில் ஒரு மகள் இருப்பதோ எதுவுமே உறைக்காத அந்த ஜடம் ராமஸ்வாமி ஒரு கம்பனியில் குமாஸ்தாவாக இருந்தார். புகையிலை, சீட்டாட்டம் இதைத் தவிர உலகத்தில் அவருக்கு ஒன்றும் தெரியாது. தெரிந்தாலும் அவைகளில் அக்கறையும் கிடையாது. ராமஸ்வாமி சாப்பிட்டு முடித்ததும் இரண்டு மலைப் பழங்களைக் கொண்டுவந்து கொடுத்தாள் கோதை. அதை உரித்து விழுங்கி வைத்தார். மறுபடியும் அவர் துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு சீட்டாடக் கிளம்புகிறதற்குள் கோதை 'பழம் ஏதென்று கேட்கவில்லையே' என்று பேச்சை ஆரம்பித்தாள்.

'ஆமாம்...பிரமாதம். ஏதோ ஆஸ்திரேலியா ஆப்பிள் வாங்கிவிட்ட நினைப்பு உனக்கு...ஏதென்று கேட்டாக வேண்டும்...'

கணவரின் இந்தக் குத்தல் மொழிகள் அவளுக்கு சகஜமானவை. 'உங்கள் தங்கை பிள்ளை வாசு வந்திருந்தானும்...' ராமஸ்வாமி தம் வழுக்கைத் தலையைத் தடவிக் கொண்டார். எதையோ நினைவுக்குக் கொண்டு வருபவர்போல் சிந்தனையில் ஆழ்ந்தார்.



"இவர் என் நண்பர் 'ராம் சிங்' பஞ்சாபில் இருந்து வந்திருக்கிறார்!"
"எதற்கு?"
"மோர்சிங் பழகவேண்டுமாம்!"

இருபது வருஷங்கள் என்ன ஒரு மனிதனின் வாழ்க்கையில் சாமானியமானதா? எத்தனை மாற்றங்கள்? ஏற்ற இறக்கங்கள்? தாமும், தம் குடும்பமும் கல்யாணியின் குடும்பத்தைவிட எத்தனையோ படிகள் கீழே இறங்கி இருப்பதை நினைத்துப் பார்த்தார். அவள் புருஷனுக்குக் கைநிறைய சம்பளம். மணிமணியாகக் குழந்தைகள். ஆணும், பெண்ணும் ஒத்து நடத்தும் இல்லறவாழ்க்கை. காலணா கறிவேப்பிலையிலிருந்து அந்தக் குடும்பத்தில் கணக்காக, ஒழுங்காகச் செலவு செய்வார்களாம். இதெல்லாம் காற்று வாக்கில் கேள்விப்பட்டவை. இவர் மட்டும் எப்படியோ சூதாட்டத்துக்கு அடிமையாகிவிட்டார். மாதச் சம்பளத்தில் பாதிக்கு மேல் ஆட்டத்தில் தொலைத்துவிட்டு, கோதை வேகிற வெயிலில் அப்பளம் இட்டு விற்றுக் குடும்பத்தின் மானத்தைக் காப்பாற்றுவதையும் உணர்ந்திருந்துதான் இருந்தார்.

'பையன் பெரியவனாக வளர்ந்திருப்பானே, நீ பார்த்தியோ?' 'நான் வீட்டில் இல்லை. வத்சலாதான் காப்பி போட்டுக் கொடுத்தாளாம். உங்களையும், என்னையும் பார்க்கவேண்டுமென்றானாம்.'

'திரும்பியும் வருகிறேன் என்றானாமா?'

'நாளைக்கு வருவதாகச் சொல்லிவிட்டுப் போய் இருக்கிறான். நீங்கள்பாட்டுக்கு உங்கள் ரம்மியோ பொம்மியோ அந்த ஆட்டத்தில் போய் உட்கார்ந்து விடாதீர்கள்.'

ராமஸ்வாமி அன்று ஏனோ சீட்டாடப் போகவில்லை. சட்டைப் பையைத் துழாவினார். பத்து ரூபாய் இருந்தது. 'கோதை! வீட்டில் சாமான்கள் இல்லையென்றால் வாங்கிக் கொள். நல்ல சமையலாகச் சமைத்து வை...நான் அவனைப் பார்த்தபோது இத்தனூண்டு இருந்தான். இப்பொழுது எப்படியிருக்கிறானோ? யாரைப்போல இருக்கிறானாம்? கல்யாணி நல்ல சிவப்பு...'

'நான்தான் பார்க்கவில்லை என்கிறேனே' என்ற கோதை வத்சலாவை அழைத்துக் கேட்டாள்.

'நல்ல சிவப்பாக அப்பா மாதிரிதான் இருக்கிறார் அம்மா' என்றாள் அந்தப் பெண்.



'என்னைப் போலவா இருக்கிறன்?' என்று முணுமுணுத்தார் ராமஸ்வாமி. கண்களில் தளும்பிய நீரை மறைக்க ஜன்னல் வழியாக வெளியே பார்த்தார்.

## 2

அடுத்த நாள் வெள்ளிக்கிழமை. கிழக்கு வெளுக்குமுன்பே வத்சலா எழுந்துவிட்டாள். சின்னஞ்சிறிய அந்த வீட்டை ஒழுங்குபடுத்தி வைத்துவிட்டு சமையல் வேலைக்கு ஆயத்தமாகிவிட்டாள் அவள்.

கோதை பாபரத்த மனசுடன் வாசலுக்கும், உள்ளுக்கும் பல தடவைகள் அலைந்துவிட்டாள். எட்டு மணி சுமாருக்கு டாக்சியில் வாசு வந்து சேர்ந்தான். கூடைநிறைய பழங்களும், புஷ்பம், வெற்றிலை முதலிய மங்கலப் பொருள்களும் வாங்கி வந்திருந்தான்.

ராமஸ்வாமியை, 'மாமா' என்று கட்டிப் பிடித்துக்கொண்டு கரைந்துவிட்டான்.

'கல்யாணி எப்படியப்பா இருக்கிறள்?' என்று முகம் மலர விசாரித்தாள் கோதை. இத்தனையூண்டு பையனில் பார்த்தவள் நிமிர்ந்த தோளும், நேர்கொண்ட பார்வையுமாக அவன் எதிரில் நிற்கும் அழகுத் தோற்றத்தை விட்டு அவள் கண்கள் வேறு பக்கம் நகர மறுத்தன.

அலைஅலையாகப் புரளும் கூந்தலை ரிப்பனால் முடிந்துகொண்டு எளிமையும்,



அழுகும கூடிய வத்சலா காப்பீ கொண்டுவந்து வைத்தாள்.

'அசப்பில் பார்த்தால் அம்மா மாதிரியே இருக்கிறாள் மாமி. நேற்றுதான் எப்படி நடுங்கிவிட்டாள் என்கிறீர்கள்?'

'ஏன்?'

'நான் இந்த வீட்டுக்குள் நுழைந்தேனோ இல்லையோ ஏதோ 'மாஜிக்' மாதிரி ஒவ்வொரு அறையிலிருந்தும் ஒவ்வொரு தலை வெளியே எட்டிப் பார்த்துவிட்டு உள்ளே பதுங்கிக் கொண்டுவிட்டது.'

வத்சலா கன்னங்குழிய கலுக்கென்று சிரித்தாள்.

'அம்மா எப்படியடா இருக்கிறாள்?' இந்தத் தடவை ராமஸ்வாமி கேட்டார்.

மலர்ச்சியும், குறும்பும் நிறைந்த வாசுவின் முகம் வாடியது.

'அம்மா...அவள் எனக்கு—என் எங்களுக்கு அம்மா என்கிற உறவு எங்களுக்கு மட்டும்தான் புரியும். அவளுக்கு நாங்கள் குழந்தைகள் என்பது தெரியாது மாமா...'

அங்கிருந்த எல்லோரும் அதிர்ந்து போனார்கள்.

'அவளுக்குப் புத்தி சுவாதீனமில்லை மாமா...' சிறிது நேரம் ராமஸ்வாமி பிரமை பிடித்தவர்போல் இருந்தார். அவர் தோளில் தூக்கி வளர்த்தவள் பைத்தியமாக இருக்கிறாள். பைத்தியம்!

திடீரென்று வெறிபிடித்தவர்போல் கத்தினார் அவர். 'டேய்! அவள் பைத்தியமாக இருக்கிறாள் என்று யாராவது ஒரு வரி எழுதியிருப்பார்களா? காற்றுவாக்கிலே யாரிடமாவது சொல்லியிருப்பார்களா? இப்பொழுது என்னடா புது உறவு முளைத்துவிட்டது? வெளியே போடா! அவளிலிருந்து, அவளுக்கப்புறம்தானே உன்னுடைய உறவெல்லாம்...போ....போ...'

'மாமா!' என்று ஏதோ ஆரம்பித்தான் வாசு. அங்கே அவன் முன் நின்றிருந்தவரின் பயங்கரமான வெறியைப் பார்த்தவன் தலையைத் தாழ்த்திக் கொண்டு வெளியே கிளம்பிவிட்டான்.

'வாசு! வாசு!' என்று அழைத்த கோதையின் செவிகளில் அவன் அரைகுறையாக முணுமுணுத்த சொற்கள் விழுந்தன. அவன் வத்சலாவைப் பெண் கேட்க வந்திருந்தானாம். நொடித்துப் போன அந்தக் குடும்பத்தை ஒழுங்குபடுத்தி வத்சலா நிம்மதியைத் தேடித் தருவாள் என்கிற நம்பிக்கையில் வந்தவனின் முன்னர் வருங்காலம் ஒரே இருளாகக் காட்சி அளித்தது.

ராமஸ்வாமி பழைய நிலையை அடைந்து அமைதியுற்றவுடன் வழக்கம் போல துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு சீட்டாடக் கிளம்பிவிட்டார்.

கோதைக்கு அவள் பிழைப்பு காத்துக்கிடந்தது. அப்பளக் கூடையுடன் பொரியும் வெயிலோ, கொட்டும் மழையோ கால்கள் தேய நடந்தாக வேண்டும். கூடையுடன் புறப்பட்டுவிட்டாள்.

வத்சலா கண்களிலிருந்து வழிந்த நீரைச்சுண்டி எறிந்தாள். உணர்ச்சியற்றவளாகச் சமையலை முடித்தாள். தையல் வகுப்புக்காக அவள் தெருவில் இறங்கி நடந்தபோது, அவள் உள்ளத்தில் மோதிய எண்ணங்கள் இவை. ஓர் ஏழைப் பெண்ணுக்கு வாழ்க்கை என்பது விடியாத இருளா? அல்லது வாழ்க்கை என்பது அயராத உழைப்பா? அல்லது வாழ்க்கை என்பது வெறுமையா? சற்றுமுன் பரபரத்த இந்தக் குடும்பம் தன் பாதையிலிருந்து விலகி, சுபிட்சத்துக்குத் திரும்பிவிடுமோ என்று அங்கலாய்த்தவர்கள் தத்தம் அறைகளிலிருந்து வெளியே எட்டிப் பார்த்து நிம்மதியாக மூச்சுவிட்டனர்.

★

அட்டைப் படக் கதை

# அழகுக்காக...

ஸரோஜா ராமமூர்த்தி....

சில மாதங்களாகத் தன் கணவனிடம் ஏற்பட்டு வரும் மாறு தல்களை ருக்மிணி கவனித்து வந்தாள். வாசனைத் தைலம், பவுடர், ஸ்னோ என்று எதிலும் பிடித்தமில்லாதிருந்த சங்கர் அடிக்கடி அவைகளை வாங்கி வருவதும், நிலைக் கண்ணாடி முன்பு உட்கார்ந்து தன்னைச் சிங்காரித்துக் கொள்வதுமாக இருந்தான். அந்த அலங் காரம் அவனுக்கு மிகப் பொருத்தமாக இருந்த போதிலும் ருக் மிணிக்கு அது பிடிக்கவில்லை. அவளும், இளமையானவள்தான். முப்பத்தைந்து வயசு என்ன அப்படி ஒரு வயசா? அவளிடம் அதிக மான அழகில்லாவிட்டாலும் பழைய பாணியில் உடையணிந்து பதவிசாக இருந்தாள்.

சற்றுக் குட்டையாக, தடித்த உடம்பு, கறுப்புதான். கோயில் தூண்களில் சில சமயம் குள்ளமான பெண் உருவங்களைப் பார்க்க நேரிட்டால் சட்டென்று ருக்குவின் நினைவு வரும்.

இதற்கு நேர்மாறான தோற்றம் உடையவன் சங்கர். நல்ல உயரம், சுருள் கிராப்பு, கூரிய நாசி; நீர்க்கமான கண்கள். இந்த அழகன் ருக்குவைப் பார்த்துப் பிடித்துத்தான் திருமணம் செய்துகொண்டான்.

ஐந்து குழந்தைகளுக்கு அன்னையாகிவிட்ட அவளிடம் இப்போதே அழகு கூடியிருந்தது. பெண் பார்த்து விட்டு வந்த அன்று அம்மா வும், அப்பாவும் அவனிடம் ஒரே குரலில்,

''ஏண்டா! உனக்குப் பெண் பிடிச்சிருக்கா? அவர்கள் கேட்டால் என்ன சொல்றது?'' என்று கேட்டார்கள்.

''பிடிச்சிருக்கு. பண்ணிக்கிறேன்.''

''ஏதோ என்னைப் பார்த்துச் சொல்'' என்று அம்மா அவன் முகத்துக்கு எதிரே நின்றபடி கேட்டாள்.

அவன் தன் முத்துப் பற்கள் தெரியும்படி நகைத்தான். இம் மாதிரி சிரிப்பு அந்தத் தாயின் மனத்தைக் கொள்ளை கொண்டு விடும். நல்ல அழகான பிள்ளைக்கு இப்படி ஒரு பெண்ணைத் தேர்ந் தெடுத்ததைப் பற்றி அம்மா மனம் குமைந்தாள்.

''அண்ணாவுக்குப் பிடிச்சிருக்கா?'' என்று கேட்டுக் கொண்டே அபிதா, அவனுடைய தங்கை, உள்ளேயிருந்து வந் தாள். வந்தவள், 'ஹி... ஹி...' என்று சிரித்தபடி, ''அப்போ நேக்கும் ஆம்படை யான் வந்துடுவான்'' என்று ஆர்ப்பரித் தாள். தாயும், மக னும் அந்தப் பெண் ணைத் திரும்பிப் பார்த் தார்கள். பெண்



உருவத்தில் ஓர் அசடைப் பெற்றுவிட்டு அதற்கு மணம் செய்யும் வயதும் வந்து விட்டால் பெற்றவர்களின் மனத்தில் அதை விடச் சுமை வேறு என்ன இருக்க முடியும்? இந்த அபீதா என்கிற அசட்டின் கழுத்தில் மூன்று முடிச்சுக்கள் போடப் போகிறவன் தான் சங்கரின் வரப் போகிற மனைவியின் தமையன். அவன் அசடு அல்ல. கால்களை இழந்தவன். இதிலே ஒரு பேரம் நடந்திருந்தது. அபீதாவை அவன் மணந்து கொண்டால், சங்கர் அவன் தங்கை ருக்குவை மணந்து கொள்ள வேண்டும் என்கிற நிபந்தனைக்குக் கட்டுப்பட்டே ஆகவேண்டியிருந்தது.

''ச்சீ... உள்ளே போடி, வாயை மூடிண்டு.... கர்மம்... கர்மம்....'' என்று தலையில் இரண்டு போட்டுக் கொண்டார் பெண்ணைப் பெற்றவர்.

''எனக்கு ஆம்படையான் வர்றது பிடிக்கல்லே அப்பாவுக்கு'' என்று அழ ஆரம்பித்தாள் அபீதா. அழுகை யென்றால் சாதாரணமான அழுகையா என்ன? மணிக்கணக்கில் தொடர்ந்து நாட்கணக்கில் நீண்டுகொண்டே போகும் அழுகை.

எங்கே அந்த அழுகையைத் தொடர்ந்து விடுவாளோ என்று பயந்து சங்கர் அவளைச் செல்லமாக, ''அபீ ! இங்கே வாம்மா !'' என்று அழைத்தான். அவள் அருகில் வந்து நின்றதும் அவள் தலையை ஆதரவாக வருடிக் கொண்டே, ''எனக்கு அவா பொண்ணைப் பிடிச்சிருக்கு. உனக்கு அவா பிள்ளையைப் பிடிச்சிருக்கோ ?'' என்று கேட்டான்.

''ஓ! பிடிச்சிருக்கே அண்ணா! அவருக்குக் கால் இல்லைன்னா என்ன? எனக்கும்தான் சமர்த்து இல்லே — அப்போ இரண்டுக்கும் சரியாய்ப் போச்சு இல்லே?'' என்றவாறு அவள் நாணிக் கொண்டே உள்ளே வேகமாக ஓடி விட்டாள்.

அசடோ எதுவோ ? அவள் அவன் உடன் பிறப்பு. அவள் முகத்தில் மலர்ச்சியைக் கண்டதும் அவன் உள்ளம் ருக்குவை அழகியாகவே ஏற்றுக் கொண்டது.

உற்றாரும், உறவினரும் சங்கரை ஒரு தியாகியாகவே மதித்தனர். 'தங்கைக்காக இந்தக் காலத்தில் — இந்தச் சினிமா யுகத்தில்— எவன் இப்படித் தியாகம் புரிவான் என்றெல்லாம் பேசினர்.

பன்னிரண்டு வருஷங்களுக்கப்புறம், அவனுடைய மூத்த மகள் பாவாடை கட்டிக் கொண்டிருந்தவள் தாவணி அணிய ஆரம்பித்த பிறகு சங்கரிடம் இலேசாகச் சில மாறுதல்கள் தோன்றியவுடன் ருக்குவை அவை வியப்பில் ஆழ்த்தின.

ஒரு நாள் அவன் அலுவலகத்திலிருந்து வரும் போது பை நிறைய அழகுச் சாதனங்களை வாங்கி வந்தான். கஸ்தூரி மஞ்சளும், பயற்றம் மாவும் பூசிக் கொண்டு ஆரோக்கியமாகத் திகழ்ந்து வந்த குடும்பத்தில் இப்படி நோட்டு நோட்டாகப் பவுடர் ஸ்னோவுக்குப் பணம் போகிறதென்றால் ருக்குவால் பேசாமல் இருக்க முடியவில்லை.

மறு நாள் காலையில் அவன் படுக்கையில் படுத்தபடியே காப்பிக்காகக் காத்திருந்தான். நக்கென்று ஆவி மணக்கும் காப்பியைக் கொண்டு வந்து மேஜையின் மீது வைத்து விட்டு நகர்ந்து நின்றாள் ருக்மிணி. காப்பி முன்னைப்போல் பொன்நிறத்தில் நுரை ததும்ப இல்லை. கொஞ்சம் தண்ணிக் காப்பிதான்.

''என்ன இது? காப்பியா ?''

''ஆமாம்....இப்படிச் செலவு பண்ணினால் தண்டத்துக்கு. வயிற்றுப்பாட்டைக் குறைச்சுத்தான் ஆகணும்.''

''என்ன ஆமாம்? டம்ளரிலிருந்து வாய்க்கு இறங்காது முன்னேயெல்லாம். திக்காக நாக்கை ஒரு சுழற்று சுழற்றும். நம் வீட்டுக் காப்பி ஸ்பெஷல்னு என் சிநேகிதாள்ளாம் சொல்லுவா.''

''சொல்லுவா... சொல்லுவா... இப்போ ஒண்ணாந்தரக் காப்பிக் கொட்டை வெளிநாட்டுக்குப் போறது. ஒண்ணாந்தர டீயும் அங்கே தான் போறது. அப்புறமா ஒண்ணாந்தர மிளகு, ஏலம், முந்திரி எல்லாமே டாலர் சம்பாதிக்க வெளிநாட்டுக்கு ஓடறதுகள். நமக்கு எல்லாமே இரண்டாந்தரம்தான்—''

சங்கர் அவளை சுவாரசியமாகத் திரும்பிப் பார்த்தான். மூத்த மகள் தம்பூரில் சுருதி சேர்த்துக் கொண்டிருந்தாள். மற்றதுகள் படித்துக் கொண்டிருந்தன. பூஜையறையிலிருந்து ஊதுவத்தி மணத்தது. பிச்சிப் பூச்சரம் ராம பிரானின் படத்தில் தவழ்ந்து கொண்டிருந்தது. அதிலிருந்து ஒரு கிள்ளு எடுத்துக் கோடரி முடிச்சின் கீழ் ருக்கு மடித்து வைத்திருந்தாள். சங்கர் சிரித்தபடி மனைவியைப் பார்த்து, ''இங்கே வாயேன் சொல்கிறேன். இப்படி முடிச்சுப் போட்டுக்காமல் உயரத் தூக்கிக் கொண்டை போட்டுக்கணும். மல்லிகைச் சரத்தை ஒரு சுற்று வளைத்துச் சுத்திக்கணும். கொஞ்சம் லேசா 'லாக்டோ காலமின்' பூசிண்டு, பவுடர் போட்டு, மை தீட்டி, பொட்டும் இட்டுண்டா இன்னும் எப்படி அழகா இருப்பே தெரியுமா ?''

அவள் விக்கித்து நின்றாள். ஒரு தாம்பத்திய வாழ்க்கையில் பன்னிரண்டு வருஷங்கள் — ஒரு மகாமகக் காலம் — குறைந்ததல்ல. மகப்பேறு, பற்றுக் குறை, களிப்பு என்று எத்தனையோ தினசரித் தொல்லைகளைச் சமாளித்து எதிர்த்து வாழ்ந்துவிட்ட இறந்த காலம் அந்தப் பன்னிரண்டு வருஷங்கள். இத்தனை நாட்களாக ருக்குவை அவன், 'நீ இப்படி அழகு பண்ணிக்கோ — இப்படி சிரி, எனக்குப் பிடிச்ச மாதிரி புடவை வாங்கிக்கோ' என்று சொன்னதில்லை. ஏன்? இருவரும் அதிகமாகப் புற அழகைப் பற்றிச் சிந்திக்கவே இல்லை.

''என்ன பேசமாட்டேன்கிறே ?''

''அப்போ நான் அழகாயில்லையா ?'' என்று கேட்ட ருக்கு சட்டென்று உள்ளே தம்பூர்ச் சுருதியுடன் பாடும் தங்கள் மகள் எங்கே கவனித்துவிடப் போகிறாளோ என்று பயந்தாள். அந்தக் காலத்துப் பன்னிரண்டு வயசுப் பெண்ணின் மனத்துக்கும் இந்தக் காலத்துப் பன்னிரண்டு வயசுக்கும் ரொம்ப வித்தியாசமுண்டே ! பிஞ்சு காயாகாமல் வெம்பிப் பழுத்துவிடும் மனோ நிலைதானே இந்தக் காலம்?

''யார் அப்படிச் சொன்னது ? இன்னும் அழகா இருப்பேன்னேன் —'' ருக்குவுக்கு மேலும் அந்தப் பேச்சை வளர்க்க விருப்பமில்லை. பிறகு அவள் கணவனை உன்னிப்பாகக்

கவனிக்க ஆரம்பித்தாள். மணிக் கணக்கில் கண்ணாடி முன்பு நின்று தலையை இழைய இழைய வாருவது. பவுடர், வாசனைத் தைலத்தை அள்ளிப் பூசிக் கொள்வது—இதெல்லாம் அவளுக்கு வியப்பாகவும், விந்தையாகவும் இருந்தன.

சில நாட்களுக்குப் பிறகு மகள் அவளிடம் ஒரு புதுச் செய்தியைக் கூறினாள். 'அப்பா ஸ்கூட்டரின் பின்னாடி ஒரு மாமியோடு பீச்சுப் பக்கம் போயிண்டிருந்தார். நாங்க இன்னிக்கு உல்லாசப் பிரயாணம் போயிட்டு அந்தப் பக்கமாகத்தான் திரும்பி வந்தோம்—'

ருக்குவுக்கு மார்பை அடைப்பது போல் இருந்தது. ''இன்னும் அழகா இருப்பே—''

அப்படியென்றால் அவள் அழகாக இல்லை.

''ஏம்மா ! பேசமாட்டேங்கிறே ?'' என்று மகள் உசுப்பியதும், ''ஒண்ணுமில்லேடி. பாட்டு வாத்தியார் வந்துடுவார். நீ போய் டிபன் காப்பி, சாப்பிடு போ'' என்று ஒரு வாறு சமாளித்து அவளை அனுப்பிவிட்டு நிலைக் கண்ணாடியின் முன்பு போய் நின்று பார்க்க ஆரம்பித்தாள்.

மிகவும் சாதாரணமான தோற்றம். நெற்றியெங்கும் தவழும் சுருள் கற்றைகளோ, விற்களைப் போல் வளைந்த புருவங்களோ, பார்ப்பவர்களைச் சுண்டி இழுக்கும் பார்வையோ ஏதுமின்றி அடக்கமாக, அலையெறியாத் தடாகம் போல், பகட்டில்லா நிலவொளி போல் தன்னுள்ளேதான் லயித்துப் புறத்தைப் பார்க்காத ஒரு தன்மை அவளிடம் காணப்படுவதை அவளால் உணர முடிந்தது.

ஒரு குடும்பப் பெண்ணுக்கு, ஏன் ஒரு கடமை தவறாத மனைவிக்கு, கருத்துள்ள தாய்க்கு இதைவிட அழகு எதற்கு என்று ஒரு கேள்வியைத் தன்னை நோக்கியே வீசிக் கொண்டாள் அவள்.

உள்ளேயிருந்து டிபனை முடித்துக் கொண்டு வந்த மகள், 'அம்மா ! அந்த மாமி ரொம்ப அழகா இருந்தா அம்மா. நம்ப... நம்ப ஜெயலலிதா மாதிரி மழு மழுன்னு மூஞ்சி... பளபளன்னு மின்னித்து. ரொம்பச் சின்ன மாமிதான். நீதான் நைலான் கட்டிக்கிறதே யில்லை. அவள் கட்டிண்டிருந்தாள். ரொம்ப நன்னாயிருந்தது'' என்று வர்ணிக்கவும், ''சரி, போடி ! ஊர்க் கதை யெல்லாம் பேசிண்டு. எத்தனை நாளா 'வாதாபி கணபதி' சொல்லிப்பே. போய்ச் சாதகம் பண்ணு போ'' என்று எரிந்து விழுந்தபடி யோசனையில் ஆழ்ந்தாள் அவள்.

தான் அழகாக இருக்க வேண்டும் என்று அவள் ஆசைப்படவில்லை. அவன் ஆசைப்படுகிறான். அவனுக்காக அவள் மாற வேண்டும். சட்டென்று அவள் ஒரு முடிவுக்கு வந்தவளாக, உள்ளே திரும்பி மகளிடம், ''நான் கடைத் தெருவுக்குப் போயிட்டு வரேன். அப்பா வந்தால் டிபன் காப்பி கொடு....'' என்று கூறிப் பையில் நோட்டுக் கற்றையைத் திணித்தபடி தெருவில் இறங்கி நடக்க ஆரம்பித்தாள்.

அன்றுதான் அவள் கடைகளை மிகக் கவனமாக ஆராய்ந்தாள். பெண்களிடம் இயற்கையாகவே இருக்கும் அழகை மேலும் கவர்ச்சியுடன் எடுத்துக் காட்ட, இல்லாததை இருக்கும்படி செய்ய, பிறரைச் சுண்டி இழுக்க, திரும்பிப் பார்த்துச் சிரிக்க, ரசிக்க எல்லாவற்றுக்கும் அழகு ஒரு கடைச் சரக்காக மலிந்து விட்டதை உணர்ந்தாள்.

அவள் நுழைந்த கடை வாசலில் வைக்கப்பட்டிருந்த பெண்களும் பொம்மைகள்தாம்! ஓர் ஆண் பொம்மையை நிறுத்திச் சூட்டும், கோட்டும் போட்டு வைத்தால் என்ன ? ஆண்களிடம் அழகு இல்லையா ? கவர்ச்சி இல்லையா ? சில விநாடிகள் சங்கரின் உருவம் அவள் மனக் கண் முன்பு தோன்றியது. எப்படிப்பட்ட அழகன் அவன் ? சின்னப் பெண் ஒருத்தியை மயக்கித் தன் பின்னால் ஸ்கூட்டர் சவாரி செய்ய வைத்திருக்கும் அழகனாயிற்றே !

அழகுச் சாதனங்களிலிருந்து அயல்நாட்டு நைலக்ஸ் வரை வாங்கிப் பையில் நிரப்பிக் கொண்டு வீட்டுக்கு வந்தாள் அவள். சங்கர் அலுவலகத்திலிருந்து வரவில்லை. சிறிய குழந்தைகள் உணவருந்தித் தூங்கிவிட்டார்கள். மகளும் படுத்து விட்டாள். ருக்கு நிதானமாகத் தலை சீவிக் கொண்டை போட்டு, மல்லிகைச் சரத்தைச் சுற்றி, பவுடர் பூசி, செஞ்சாந்துத் திலகமிட்டு, நெற்றியில் இரண்டொரு குழலைச் சுருட்டி வைத்து, நைலக்ஸ் புடவை கட்டி முடிக்கவும் வாசலில் ஸ்கூட்டர் சத்தம் கேட்டது.

அவன் வாசல் கதவைத் திறந்த மனைவியை ஏறிட்டுப் பார்க்கவில்லை. அடிபட்டுத் தப்பியோடிய புலியின் சீற்றம் அவன் பெருமூச்சில் தெரிந்தது.

ருக்குவும் அவன் எதிரில் அதிகம் நடமாடாமல் சாப்பிடும் தட்டில் உணவு வகைகளைப் போட்டு எடுத்து வந்து படுக்கையறை மேஜையின் மீது வைத்தாள். அந்த வீட்டில் அவன் நேரம் கழித்து வரும் இரவுகளில் அப்படியொரு வழக்கம் உண்டு. அவனுக்கு நல்ல பசி. தலை நிமிராமல், பேசாமல் சாப்பிட்டான். பரிமாறும் வளைக் கரத்தில் தவழும் புதிய போலிக் கங்கணத்தைக்கூட அவன் கவனிக்கவில்லை. அதிலிருந்து பலவகை நிறம் கொண்ட கற்கள் இலேசான நீல நிற வெளிச்சத்தில் பளிச்சிட்டன.

சாப்பிட்டு முடித்தவுடன் பீடா உருவத்தில் வெற்றிலைச் சுருளை அவனிடம் தந்தாள் மனைவி. அந்த வீட்டில் அப்படியொரு பழக்கம் கிடையாது. பாக்கு, வெற்றிலை, சுண்ணாம்பு வெவ்வேறாக வைக்கப்பட்டிருக்கும். சில சமயம் ருக்கு மடித்துத் தருவாள். அதது அவளுடைய வேலை காலத்தைப் பொறுத்தது. அவன் நிமிர்ந்து பார்த்தான். ருக்குவும் பார்த்தாள். முகமெங்கும் வியர்வைத் துளிகள் அரும்பியிருந்தன.

''ருக்கு! என்ன இதெல்லாம்?'' என்றபடி அவன் அவளைச் சீற்றத்துடன் பார்த்தான்.

''எதெல்லாம் ?''

''இந்தக் கன்றாவி யெல்லாம் — ''

''எந்தக் கன்றாவி ?''

''ஏய் ! என்னடி விளையாட்டு ? என்னமோ வேஷம் போட்டுண்டு.... சகிக்கலை. தூ.....''

'' என்ன தூ ?'' என்று அவள் நிதானமாக அவனைப் போலவே பேசினாள்.

''நீயும் உன் மூஞ்சியும் !''

''இப்படி இருந்தாத்தானே உங்களுக்குப் பிடிக்கும்? இந்தக் கன்ருவியிலேதானே அழகு ஒளிஞ்சிண்டு இருக்கு ? உதட்டுச் சாயத்துக் குள்ளேயிருந்து சிரிச்சால்தானே சிரிப்பு? மை தீட்டிய (அப்பிய?) கண்ணுலே பார்த் தாத்தானே உங்க மனசுக்குப் பிடிக்கும்?''

''ஏய்! ஏய்! நிறுத்தடி ? நான் அவள் பின்னுலே சுத்தினது தப்புத்தாண்டி....''

''எவள் பின்னுலே ?'' என்று அதிசயப் படுபவள் போலக் கேட்டாள் ருக்கு.

''அது எவளோ ஒண்ணு...... அவளுக் கும் என்னைக் கெடுக்கணும்னு எண்ணமில்லே. எனக்கும் கெட்ட வழியிலே போகணும்னு ஆசையில்லே. ஏதோ மன விகாரம்....''

ருக்கு பலபல வென்று கண்ணீர் உகுத் தாள்.

''அழறுயா என்ன? போடி, பைத்தியம் ! ஒரு நிமிஷத்திலே என்னை மாத்திட்டே. அந்தப் பொண்ணும் அப்படிக் கெட்டவள் இல்லே. 'என்ன சார்! உங்களை என் அண்ணு மாதிரி மனசுலே நெனைச்சுண்டுன்னு பழகி னேன்'னுள். அண்ணுமாதிரி மனசுலே நினைச்சு வெளியிலே சகஜமாப் பழகினு நாலு பேர் நாலு விதமாப் பேசமாட்டாளா ? பேச ஆரம்பிச்சுட்டாளேன்னேன். 'வாட்! ஸில்லி! இந்த நாட்டிலே ஓர் ஆணும், பெண்ணும் நண்பர்களாக இருக்க முடியாது. பார்த் தீங்களா ? அதுக்கு இன்னும் எத்தனையோ நூற்ருண்டுகள் போகணும். டை டி டை. என்னை மன்னிச்சுடுங்கோ'ன்னு சொல்லிட் டுப் போய் விட்டாள். அதுக்குள்ளே உனக்கு யார் அதை வத்தி வைச்சுட்டா?'' என்று மனைவியை நெருங்கிக் கேட்டான் சங்கர்.

''உங்க பெண்தான் !'' என்று ருக்கு கூறியவுடன் சங்கர் ஹாலில் படுத்துறங் கும் தன்னுடைய அழகிய குடும்பத்தை ஒரு பார்வை பார்த்தான்.

# டீக்கடை மோகினி

ஸரோஜா ராமமூர்த்தி




குட்டைக்கரையில் இருந்த டீக்கடையிலிருந்து தேநீரின் மணம் 'கம்' மென்று எழுந்தது. காஸ் விளக்கின் ஒளியில் 'ஸ்பெஷல் டீ' யில் பாலைஊற்றி, சர்க்கரை போட்டு ஆற்றிக் கொண்டிருந்தாள் நப்பின்னை. அந்த அதிகாலையில் பூக்கடைக் கதம்பம் சூடி, பிறை போன்ற நெற்றியில் குங்குமப் பொட்டுடன் அவள் டீயை ஆற்றும் அழகைப் பார்த்துக் கொண்டே அவள் எதிரில் உட்கார்ந்திருந்தான் துரைவேலு. பதமான சூட்டுடன் கண்ணாடி டம்ளரில் தேநீரை ஊற்றித் தன் கணவனிடம் கொடுத்தாள் நப்பின்னை.

'' நீ சாப்பிடவில்லையா ?'' என்று விசாரித்தான் துரைவேலு.

'' நீங்க முதல்லே சாப்பிடுங்க. அப்படித் தானே தினமும் இங்கே நடக்குது. இன்றைக்கு மட்டும் எனக்கு முதல்லே சாப்பிட மனம் வருமா ?'' நப்பின்னை அவனைக் கடைக் கண்ணால் பார்த்தவாறு கூறினாள்.

துரைவேலு அவள் கொடுத்த தேநீரை வாங்கி உறிஞ்சிக் குடித்தான். அதன் இனிமையிலே அவனுக்குப் பழைய நினைவுகள் கிளைத்துக் கொண்டு எழுந்தன. அப்படியே அந்த இன்ப நினைவில் ஆழ்ந்து போனான் துரைவேலு.

முதல் மின்சார வண்டி ''குய்ங்'' என்ற சந்தத்துடன் பரங்கிமலை ரயில் நிலையத்தை விட்டுக் கிளம்பியது. விடியற்காலம் மணி சுமார் நாலரை இருக்கும். பனிப்படலம் ரயில் நிலையத்தையும், அண்மையில் இருந்த வேப்ப மரங்களையும் இலேசாகத் திரை போட்டாற் போல் மறைத்துக் கொண்டிருந்தது. 'லெவல் கிராஸிங் கேட்' அருகில் இருந்த குட்டைத் தண்ணீர் சலனமற்றுத் தேங்கிக் கிடந்தது. அதைச் சுற்றிக் கோரைப் புற்கள் புதர்போல் வளர்ந்திருந்தன. அடுத்து நெருப்பு மேடைக்கருகில் ஊராரின் எருமை மாடுகளில் பல கட்டப்பட்டிருந்தன. குட்டைக் கரையைச் சுற்றித் தெற்கு பார்த்தாற் போல் ஒரு வெற்றிலைக் கடை, உலைக் கூடம், தையற் கடைகள் இரண்டு, மெத்தை தைக்கும் சாயபுவின் கடை ஆகியவை இருந்தன. இப்படி ஒரு சிறு கடைத் தெரு அங்கு பத்து வருஷங்களாக எழும்பி இருந்தது. காலை நேரத்தில், அந்தக்

கடைக்காராகளின் பசியைத் தணிப்பதற்கு ஒரு பலகாரக் கடையை யாரும் போடாமல் இருந்தது. அந்தக் குட்டைக்கரைக் கடைத் தெரு வியாபாரிகளுக்குப் பெருத்த ஏமாற்ற மாக இருந்தது.

அப்பொழுதுதான் முனியம்மாளின் மகள் நப்பின்னைக்குத் தானே சம்பாதிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. முனியம்மாள் அரிசிக்கடை ஒன்றில் அரிசி அளந்து போட்டுத் தினம் எட்டணுவும் இரண்டு படி அரிசியும் சம்பாதித்து வந்தாள். மூட்டைக் கணக்கில், குனிந்த இடுப்பை நிமிர்த்தாமல் அரிசி அளந்து போட்டு அவளுக்கு இடுப்பே வளைந்து விட்டது. தாயும், மகளும் அந்த வருமானத்தில் வயிருரச் சாப்பிட்டு, சீட்டுக் கட்டி, ஒரு எருமை மாட்டையும் வாங்கிப் பால் வியாபாரம் செய்து வந்தார்கள். நப்பின்னை மாட்டைத் தேய்த்துக் கழுவி (குட்டையில்தான்!) ஆலந்தூர் ஹோட்டல் ஒன்றில் பாலைக் கறந்து விட்டு, துட்டு வாங்கித் தவிடும் பிண்ணுக்கும் வாங்கி வருவாள். அரிசிக்கடையில வேலை செய்து களைத்து வரும் தாய்க்கு மீதிப் பாலில் காப்பி போட்டு வைத்து விட்டு, சமைத்தும் வைத்து விடுவாள். உழைப்பாளியின் மகளாக இராமல், சுத்தமாகத் தோய்த்து உடுத்திய சிற்றுடையும், தலை சீவிப் பின்னிப் பூச்சூட்டியும் 'பளிச்' சென்று இருப்பாள் நப்பின்னை. பூ என்றல் அவளுக்கு உயிர். தவிடு, பிண்ணுக்கு வாங்கும்போது தினமும் ஒரு அணுவுக்குப் பூ வாங்கத் தவற மாட்டாள். அந்த வட்டாரத்தில் இருந்த வாலிபர்களுக்கு அவள் மீது ஒரு கண்.

சுறுசுறுப்பாக முதல் வண்டி போகும் போது எழுந்து மாட்டுக்குத் தீனி வைத்து, கிழக்கு வெளுப்பதற்கு முன் ரயில் தண்டவாளத்தைத் தாண்டி ஆலந்தூருக்குப் போகும் அவள் மீது எல்லோருக்கும் ஒருவித அன்பு ஏற்பட்டிருந்தது. பெரியவர்கள் அவள் திறமையை மெச்சிக் கொண்டார்கள். பெண்கள் அவளைப் போலத் தங்களால் இருக்க முடியவில்லையே என்று அசூயைப் பட்டார்கள். வாலிபர்களின் மனத்தில் பல கனவுகள் எழுந்தன.

ஒரு நாள் முனியம்மாள் பொழுது விடிந்த பிறகும் படுக்கையை விட்டு எழுந்திருக்கவில்லை. நப்பின்னை கடைத்தெருவிலிருந்து திரும்பி வந்த பிறகுதான் தாய்க்கு உடம்பு சரியில்லை என்பதைத் தெரிந்து கொண்டாள். அடுத்த சில நாட்களுக்கு எப்படி ஜீவனம் நடத்துவது என்று யோசியாமல் இருந்து விட்டாள் அவள். பதினைந்து தினங்களுக்கு அப்புறம் தான் வீட்டில் உப்பிலிருந்து அரிசி வரையில் தட்டிப் போயிருப்பது தெரிந்தது. முனியம்மாளுக்குப் பாரிச வாயு நோய் வந்து படுக்கையில் கிடந்தாள். மகளை அரிசிக்கடை வேலைக்கு அனுப்ப அவள் இசையவில்லை. பால் வியாபாரத்தில் ஒரு நாளைக்கு எட்டணு லாபத்துக்கு மேல் வரவில்லை.

நப்பின்னை யோசித்தாள். கடைசியில் இட்டிலிக்கடை போடுவது என்று தீர்மானம்



ஆயிற்று. அண்டை அயலாரிடம் சொல்லாமல் கொள்ளாமல், முதல் நாளே மாவரைத்துப் பண்டங்கள் சேர்த்து, அடுத்த நாள் கருக்கலில் குடிசை வாசலில் பலகாரக்கடை போட்டாள் நப்பின்னை. விடிவதற்கு முந்தியே பலகாரக்கடையின் பிரதாபம் ஊர் முழுவதும் பரவி விட்டது. பஞ்சு போன்ற தோசைகளும் பூப்போன்ற இட்டிலிகளும், 'கமகம' வென்று மணக்கும் வடைகளும், அவைகளுக்கு வேண்டிய உபகரணங்களுடன் வியாபாரத்துக்குத் தயாராகத் தட்டுகளில் அடுக்கி வைத்தாள் நப்பின்னை. வியாதிக்காரியான தாய்க்குத் தன் கையால் செய்த இட்டிலியைக் காலை ஆகாரமாகக் கொடுத்த போது முனியம்மாளே மகளின் கை வண்ணத்தைக் கண்டு அதிசயப்பட்டாள். 'கமகம' வென்று அத்தனை மணம் அந்த இட்டிலிகளுக்கு எங்கிருந்துதான் வந்ததோ ?

கடை வாசலில் கூட்டம் சேர்ந்தது. காலை ஒன்பது மணிக்குள் பலகாரத் தட்டுகள் காலி ஆகி விட்டன. போட்ட முதலுக்கு லாபம் அதிகமாகத்தான் இருந்தது.

''குழந்தை ! கொஞ்சம் சூடாகக் காப்பித் தண்ணியும் காய்ச்சி வைச்சுடு. பறந்து போகும்'' என்றார் மெத்தைக்கடை சாயபு. அங்கிருந்த வியாபாரிகளுக்கு மிகவும் சந்தோஷம். நடந்து சென்று பலகாரம் சாப்பிட்டு வராமல், சுடச்சுட நப்பின்னை சுட்டுக் கொடுக்கும் பலகாரம் அவர்களுக்கு அமுதமாக இருந்தது.

வியாபாரம் செழித்து நப்பின்னை லாபம் சம்பாதித்து நகையும் நட்டுமாக விளங்கும் சமயம், இடைத் தெருவில் புதிதாக வெளியூரிலிருந்து ஒரு ஆசாமி கையில் ரொக்கத்துடன் வந்து சேர்ந்தான். துரைவேலு ஒரு தினுசான பேர்வழி. மல் ஜிப்பாவும் மைனர் செயினும் கைக் கடிகாரமும், விரல்களில் பளிச்சிடும் மோதிரங்களும்தான் மனித வாழ்க்கைக்கு இன்றியமையாதவை என்று கருதுபவன். அது மாத்திரமல்ல; தன்னைச் சுற்றி நாலு சகாக்கள் வளைய வர வேண்டும் என்பதும் அவன் விருப்பம். வெல்லத்தை ஈ மொய்ப்பது போல நாலு நண்பர் குழாம் அவனைச் சுற்றி வந்தது.

ஒரு நாள் அதிகாலையில் அவன் வீட்டை விட்டுக் கிளம்பிக் குட்டைக்கரைப் பக்கமாக வந்து கொண்டிருந்தான்.

நப்பின்னை தெருவில் கோலம் போட்டு விட்டு, பலகாரக்கடையின் பொருள்களை எடுத்து வந்து ஒவ்வொன்றாக வாசலில் வைக்க ஆரம்பித்தாள். அப்பொழுது புதிதாக மார்க்கெட்டில் விற்பனையான வாயில் புடவையை உடுத்தி, கைத்தறி ரவிக்கை போட்டிருந்தாள் அவள். தலையில் ரோஜாக் கதம்பம் மணத்தது. நெற்றியில் தற்கால நாகரிகப்படி திலகம் இட்டிருந்தாள். காலையில் குளத்தில் மலர்ந்த செந்தாமரையைப் போல இருந்தது அவள் தோற்றம்.

அந்த அதிகாலைப் பொழுதில் அவளுடைய தோற்றம் துரைவேலுவைக் கவர்ந்தது. பரபரவென்று பலகாரங்களைச் சுட்டு வைக்கும் அவள் திறமையை வியந்தவாறு கடை அருகில் வந்து அங்கிருந்த குத்துக்கல் ஒன்றின் மீது உட்கார்ந்து கொண்டான் அவன். தன் வேலையில் கருத்தைச் செலுத்திய நப்பின்னை தலை நிமிராமல் ''என்ன ஐயா வேணும் உங்களுக்கு ?'' என்று கேட்டாள்.

''சூடாக இரண்டு தோசை கொடு...''

புதுக் குரலாக இருக்கவே தலையை நிமிர்த்தி அவனைப் பார்த்தாள் அவள். கிழக்கு வெளுக்காத நேரத்தில், தெருவில் சந்தடி இல்லாத போது ஒரு வாலிபன் தனக்கு வெகு சமீபத்தில் உட்கார்ந்து பலகாரம் சாப்பிடுவதை அவள் விரும்பவில்லை. மந்தாரை இலையில் இட்டிலிகளை வைத்துக் கட்டி, ''இந்தாங்க, இட்டிலிதான் இருக்கு. இதை எடுத்துக்கிட்டு எந்திரிச்சுப் போய் எதிர்வீட்டுத் திண்ணையிலே உட்கார்ந்து சாப்பிடுங்க'' என்றாள்.

கண்டிப்பும், கருரும் நிறைந்த அவள் அதிகாரத்துக்குப் பயந்து துரைவேலு எதிர் வீட்டுத் திண்ணையில் போய் உட்கார்ந்தான்.



கிழவி முனியம்மாள் உடம்பாகப் படுத்த பிறகு மகளைப் பற்றிய கவலையில் மூழ்கிப் போனாள். அவள் இட்டிலிக் கடை போட்டு வியாபாரம் செய்வது, கடைத் தெருவுக்குப் போய்ப் பால் ஊற்றுவது எதுவுமே அவளுக்குப் பிடிக்கவில்லை. தகுந்த இடமாக வந்தால் அவளைக் கட்டிக் கொடுத்து விட்டு அவளுடன் தானும் போய் நிம்மதியாக இருக்க விரும்பினாள் அந்தக் கிழவி. அப்படிப்பட்ட இடமாக வாய்க்க வேண்டும் என்பது தான் அவள் கவலை. அவளுக்குத் தூரத்து உறவினர் நான்கு மாதங்களுக்கு முன் ஆரணியிலிருந்து நப்பின்னையைப் பெண் கேட்க வந்தார்கள். கல்யாணப் பிள்ளை அவர்களுடன் வரவில்லை. பெண்ணை அவர்களுக்குப் பிடித்துப் போயிற்று. பரிசம் போடத் தயாராக இருந்தார்கள். கிழவி தன் விருப்



அம்பி: அப்பா! கை விரல் பட்ட அடையாளங்களை வைத்துக் கொண்டு பல திருட்டுகளைக் கண்டு பிடித்து விடுகிறார்களே, அது மாதிரி என் புஸ்தகங்களை வைத்துக் கொண்டு என்னைக் கண்டு பிடித்து விட முடியுமோ?
அப்பா: அதான் முடியாது!
அம்பி: ஏன் அப்பா?
அப்பா: உன் புஸ்தகத்தை நீ தான் விரலால் தொட்டதே கிடையாதே!

பத்தை அவர்களிடம் தெரிவித்தாள். மகளுக்குக் கல்யாணம் ஆன பிறகு அவளுடன் தான் வந்து இருக்கப் போவதாக அறிவித்தாள். நப்பின்னைக்கும் வயது சென்ற தன் தாயைத் தனியாக விட்டுப் போக விருப்பமில்லை. பிள்ளை விட்டார் தயங்கினார்கள். நப்பின்னையின் அழகு அவர்களைக் கவர்ந்து விடவே, சீர்சிறப்பில் சற்றுக் குறைவாக இருந்தாலும் பரவாயில்லை என்று கல்யாணத்துக்கு அவர்கள் இசைந்தார்கள். ஆனால் வயது சென்ற கிழவி ஒருத்தியைத் தங்கள் குடும்பத்துக்குப் பாரமாகச் சேர்த்துக் கொள்ள அவர்கள் விரும்பவில்லை. சீரும் சிறப்புடனும் மருமகள் வருவது ஒன்றைத் தான் அவர்கள் எதிர்பார்த்தார்கள்.

பிள்ளை வீட்டார் தட்டிக் கழித்துவிட்டுப் போனதும் கிழவி மகளை அழைத்தாள். ''குழந்தை! நான் எப்படியோ இங்கே இருந்து சமாளித்துக் கொள்கிறேன். நல்ல பசையுள்ள குடும்பம். உன்னைக் கட்டிக் கொடுத்து விட்டால் போதும்'' என்று கூறினாள்.

நப்பின்னையின் கண்களில் நீர் சுரந்தது. பெற்ற தாயை, அவளைத் தவிர வேறு நாதி இல்லாதவளை, வயது சென்றவளைத் தனியாக விட்டு விட்டு அப்படிக் கல்யாணம் செய்து கொண்டு பிரிந்து போக வேண்டியதில்லை; முடிந்த வரையில் பார்த்துக் கொள்ளலாம் என்கிற எண்ணம் தான் மேலோங்கி இருந்தது அவளிடம்.

''கிடக்கிறது போ அம்மா. என் கல்யாணத்துக்கு என்ன அவசரம் இப்போ?'' என்று கூறி விட்டுப் போய் விட்டாள். நாளடைவில் பலகாரக்கடையில் வியாபாரம் வலுக்கவே தேநீர்க் கடை ஒன்று வைத்தால் வருமானம் அதிகமாகும் என்கிற நம்பிக்கை அவளுக்கு உண்டாயிற்று. அதற்காக அவள் தெரிந்த ஒரு இடத்தில் மாதச் சீட்டு கட்டி வந்தாள்.

ஆரணியில் கல்யாணப் பிள்ளை இந்தப் பெண்ணைப் பற்றிக் கேள்விப்பட்டான். அவள் செட்டும், கட்டுமாகக் குடும்பம் நடத்துவதைப் பற்றியும், பலகாரக் கடை வைத்துச் சம்பாதிப்பதைப் பற்றியும் அவன் உறவினர் அவனிடம் அளந்தார்கள். ''அந்தக் கிழவி இல்லாவிட்டால் ராசாத்தி மாதிரி இருக்கிற அந்தப் பெண்ணை நாங்கள் விடுவோமா?'' என்று வேறு கூறி அங்கலாய்த்தார்கள். வீட்டாருக்குத் தெரியாமல் அவன் அவளைக் காண வந்து விட்டான்.

★

தினம் அதிகாலையில் நப்பின்னையின் கடைக்கு வந்து துரைவேலு பலகாரம் வாங்கிச் சாப்பிடுவான். பகல் வேளைக்கும் வாங்கிக் கட்டிக்கொண்டு போவான். அவன் மூலமாக எப்படியும் அவள் கடைக்குத் தினம் ஒரு ரூபாய்க்குக் குறையாமல் வியாபாரம் நடந்து கொண்டு வந்தது.

நல்ல வியாபாரம் நடக்கவே கடையை விஸ்தரிக்க ஆசைப்பட்டாள் நப்பின்னை. எதிரில் இருக்கும் காலி மனையை வாடகைக்கு எடுத்துக் கொண்டு, அதில் கீற்றுக் கொட்டகை போட்டு நடத்தும் படி எல்லோரும் சொன்னார்கள். தாயின் ஆயுட் காலம் வரையில் அவள் ஓர் ஆண்பிள்ளையைப் போலப் பாடுபடவே ஆசைப்பட்டாள். சீட்டுக் கட்டி வந்த இடத்தில் அந்த மாதம் சீட்டெடுத்துக் கடை போடுவதென்று ஏற்பாடாயிற்று.

''மாட்டை விற்று விடேன்'' என்றாள் முனியம்மாள் அவளிடம்.

''என்னம்மா இது? நல்ல கறவை மாடு. கள்ளிச்சொட்டு போல் இருக்குது பால். படிக்குப் படி தண்ணி ஊற்றினால் கூடக் கட்டி வரும். அதோடு, அதைக் குழந்தையிலிருந்து நான் வளர்த்தேன்.........'' என்று மறுத்து விட்டாள் நப்பின்னை.

'' ஏலம் அதிகமாய்ப் போனால் வந்துவிடு. அடுத்த மாசம் பார்த்துக் கொள்ளலாம்!'' முனியம்மாள் இவ்விதம் கூறி நப்பின்னையைச் சீட்டுக்காரர் வீட்டுக்கு அனுப்பி வைத்தாள்.

பலகாரம் தின்று கொண்டே பேச்சை ஜாடையாகக் கவனித்த துரைவேலு சீட்டுக்காரர் வீட்டில் அவளுக்கு முன்பாகப் போய் உட்கார்ந்திருந்தான். நப்பின்னை அங்கு போய்ச் சேர்ந்ததும் சீட்டுக்காரர் தொண்டையைக் கனைத்துக் கொண்டார்.

''என்ன ஆரணிக்காரரே! ஏலம் ஆரம்பிக்கலாமா?'' என்று கேட்டார்.

'' ஆரம்பியுங்க அண்ணே!'' என்றான் துரைவேலு, நப்பின்னையைக் குறிப்பாகப் பார்த்துக் கொண்டு.

சீட்டுக்காரர் கைகளைக் குவித்துக் கடவுளைக் கும்பிட்டுவிட்டு, '' ஏலம் ஒரு ரூபாய், ஒரு ரூபாய், ஒரு ரூபாய்'' என்று மூன்று தடவைகள் கூறினார்.

படிப்படியாக, அங்கு கூடியிருந்த பத்துப் பேர்களும் இருபது ரூபாய் வரையில் மாறி ஏலம் கேட்டார்கள். இருபதுக்கு மேல் துரைவேலு, ''இருபத்தொன்று'' என்று ஆரம்பித்தான். நப்பின்னை '' இருபத்திரண்டு'' என்றாள். அடுத்ததாக யாரோ இருபத்தைந்து வரையில் ஏற்றி விட்டார்கள். மறுபடியும் துரைவேலு ''இருபத்தியாறு'' என்றான். நப்பின்னை

முகத்தை ஒரு திருப்புத் திருப்பி 'இருபத்தேழு' என்ருள். தொடர்ந்து நாற்பத்தைந்து வரையில் இருவரும் போட்டி போட்டார்கள்.

''சீட்டுக்கார ஐயா! இவர் என்ன ஏழைகள் வாயிலே மண்ணைப்போடவா சீட்டிலே சேர்ந் தாரு? நூற்றி ஐம்பது ரூபாய் சீட்டுக்கு ஐம்பது ரூபாய் தள்ளி எடுப்பதா? அநியா யங்க......'' என்ருள் நப்பின்னை துரைவேலு வைக் கோபத்துடன் விழித்துப் பார்த்து.

''ஏலச்சீட்டு என்ருல் அப்படித்தான் இருக் கும்னு சொல்லுங்க, அண்ணே!'' என்ருன் துரைவேலு.

கடைசியாக முனியம்மாளுக்குப் பயந்து சீட்டைத் துரைவேலுவுக்கு விட்டுக்கொடுத்து விட்டுக் கோபத்துடனும் துயரத்துடனும் நப்பின்னை வீடு திரும்பினுள்.

தாயிடம் அங்கு நடந்தவைகளைக் கூறி, ''அந்த மனுசன் ஏதோ முடைக்கு வந்து அப்படிக் கேட்கவில்லை, அம்மா! வேண்டு மென்றே போட்டியில் ஏலத்தை எடுத்திட் டாரு'' என்ருள்.

''கிடக்குது விடு. அடுத்த மாசம் பார்த்துக் கலாம்'' என்ருள் கிழவி.

''விடவாவது? பெண்பிள்ளை கடை வைத் துச் சம்பாதிப்பதா என்று அந்த மனுசனுக்கு ஆத்திரம். அதுக்கு நான் பணிய மாட்டேன். மாட்டை நாளைக்குப் பல்லாவரம் சந்தை யிலே விற்றுவிடப் போகிறேன்......''

படுக்கையில் கிடக்கும் கிழவியால் மகளை அதட்ட முடியவில்லை. அதட்டினுலும் அவள் பணிந்து போகமாட்டாள் என்பதும் தெரியும்.

அன்று விளக்கு வைத்த பிறகு, நப்பின்னை மாட்டுக்குத் தவிடும், பிண்ணுக்கும் பிசிறி வைத்தாள். கையிருப்பில் இருந்த நாலு வைக்கோல் பிரிகளில் இரண்டை இரவுக்காக வைத்துக்கொண்டு அண்டையில் மாடு வைத் திருக்கும் ஒருவரிடம் மீதி இரண்டு பிரிகளை யும் கொடுத்து விட்டாள் நப்பின்னை.

''என்ன இது?'' என்று அதிசயித்தாள் அந்த வீட்டுக்காரி.

''அப்படித்தான் அண்ணி! விடியற்காலம் சந்தையிலே மாட்டை விற்றுவிடப் போகி றேன்......'' என்ருள் நப்பின்னை.

''தே......சும்மா கதை விடாதே......''

''இல்லை, அண்ணி! நிசமாத்தான் விற்கப் போகிறேன். அந்த ஆரணிக்காரரு என்ன இந்தப் பரங்கிமலைக்கே ராசாவா!''

அடுத்த வீட்டுக்காரிக்கு விஷயம் புரிந்து விட்டது. நப்பின்னை சென்ற பிறகு அவள் தன் கணவன் கலத்தில் குழம்பை ஊற்றிக் கொண்டே இந்தச் செய்தியை அவன் காதில் போட்டு வைத்தாள். அந்தச் செய்தி காற்றி னும் கடிய வேகத்தில் துரைவேலுவுக்கு ஒலி பரப்பப்பட்டது.

★

**ப**ல்லாவரம் சந்தையில் ஒரு புளிய மரத் தடியில் எருமையைப் பிடித்துக் கொண்டு நின்றிருந்தாள் நப்பின்னை. அவள் கண்கள் கலங்கி யிருந்தன. நொடிக்கொரு தரம் அதன் முகத்தையும், கழுத்தையும் பரிவுடன் தட விக் கொடுத்தாள் அவள். அதன் கண்களி லிருந்தும் கண்ணீர் பெருகிக் கொண்டே யிருந்தது.

சந்தை ஆரம்பித்து இரண்டு மணி நேரம் வரையில் யார் யாரோ வந்து விலை கேட்டார் கள். சிலர் நியாயமாகக் கேட்டார்கள். சிலர் அநியாயமாகப் பேரம் பேசினுர்கள். நப் பின்னை, அத்தனை சடுதியில் பிரிய மன மில்லாமல் பொழுதைக் கடத்திக் கொண்டே வந்தாள்.

கதிரவன் உச்சி வானத்துக்கு வந்து கொண் டிருந்தான். மைதானத்தில் அனல் காற்று வீசத் தொடங்கியது. இனிமேல் பொழுதை ஓட்டக் கூடாதென்று நப்பின்னை சுற்று முற்றும் பார்த்தாள்.

''என்ன தங்கச்சி? மாட்டை விற்க வந் துட்டாயாமே?'' என்று கேட்டுக் கொண்டே பரங்கிமலைக் கதிரேசன் அவள் எதிரில் நின் ருன். அந்த ஊரில் யாரும் அவனுக்குத் தெரி யாமல் மாடு பிடிக்கவோ, விற்கவோ மாட் டார்கள். வாரம் தவருமல் சந்தைக்கு வரு வான் கதிரேசன்.

''ஆமாம், அண்ணுத்தை! விற்கத்தான்.''

''நல்ல கறவை மாடாச்சே! எதற்கு அம்மா அதை விற்கணும் இப்போ?''

''அப்படித்தான், அண்ணுத்தை! அதை விற்றுத்தான் ஆவணும்!''

''சரி! இந்தா பிடி நூற்றைம்பது ரூபாய், மாட்டை நான் வாங்கிக்கிறேன்......''

"நீயா வாங்கிக்கறே? உன் வீட்டிலே யாரு இதைக் கவனிப்பாங்க?"

கதிரேசன் ஒண்டி ஆள், 'சத்திரத்திலே சாப்பாடும் மடத்திலே தூக்கமும்' என்று கூறுவது போல் கிளப்பில் சாப்பாடும் ரயில் நிலையத்தில் வாசமும் வைத்துக் கொண்டிருந்தான்.

"ஏன் தங்கச்சி! நான் மாடு வாங்கக் கூடாதா?" என்று கேட்டான் அவன்.

"அப்படிச் சொல்லலையே நான்? உனக்கு மாடும் கன்றும் என்னத்துக்கு அண்ணுத்தை? உனக்கு ஒரு வேளை கல்யாணம் ஆவப் போவுதோன்னு சந்தேகம் எனக்கு......"

கதிரேசன் சிரித்துக் கொண்டே பணத்தை எண்ணி அவள் கையில் கொடுத்து விட்டு, மாட்டை வாங்கிக் கொண்டான்.

தூரத்திலே மாடும் கதிரேசனும் போவதைப் பார்த்துக் கொண்டே ஒரு பெருமூச்சு விட்டாள் நப்பின்னை.

அன்று, அவள் வீட்டை அடைந்தபிறகு வேறு வேலை ஒன்றும் செய்யத் தோன்றவில்லை. அவசரத்தில், ரோசப் பட்டுக் கொண்டு, பல வருஷங்களாக ஊட்டி வளர்த்த மாட்டை விற்றது அவளுக்குச் சரியாகத் தோன்றவில்லை. பிரமை பிடித்தவள் போல் அடுப்படியில் உட்கார்ந்திருந்தாள்.

"இட்டிலிக்கு மாவு அரைக்கலியா?" என்று முனியம்மாள் மகளைக் கேட்டாள்.

"த்சு......" என்று சூள் கொட்டினுள் நப்பின்னை. கொல்லைப்புறம் திரும்பிப் பார்த்த பொழுது மாட்டுக் கொட்டில் 'வெறிச்' சென்று கிடந்தது. நப்பின்னையைக் கண்டால் தன் தலையை ஆட்டி வரவேற்கும் அந்த மாடு இல்லாமல் வாழ்க்கையே வெறிச்சோடிப் போன மாதிரி இருந்தது அவளுக்கு. எருமையாக இருந்தாலும் அதற்கு அறிவு அதிகம். நப்பின்னை தன் தோழி ஒருத்தியுடன் பேசுவது போல, அதன் கழுத்தைக் கட்டிக் கொண்டு பல செய்திகளைப் பேசியிருக்கிறாள்.

அடுப்பிலே இருந்த சுக்குத் தண்ணீரை இறுத்து வெல்லம் போட்டுத் தாய்க்குக் கொடுத்துத் தானும் சாப்பிட்டாள் அவள். தன்னால் அன்று மாவு அரைக்க முடியவில்லை என்கிற பொய்யைச் சொல்லி விட்டு விளக்கு ஏற்றியதும் படுத்து விட்டாள் அவள்.

கீழ்வானம் வெளுத்துக்கொண்டு வந்தது. அன்று கருக்கலில் எழுந்து செய்ய எந்த வேலையும் அவளுக்கு இல்லை. மாட்டுக்குத் தீனி வைக்க வேண்டாம். பலகாரக் கடையும் வைக்க மாவு அரைக்கவில்லை. கனத்த இதயத்துடன் மெதுவாக எழுந்து நப்பின்னை கொல்லைப் பக்கம் சென்றாள்.

அங்கே அவள் மாடு கொட்டிலில் கட்டப்பட்டிருந்தது. துரைவேலு அதற்கு வைக்கோலை உதறிப் போட்டுக் கொண்டிருந்தான். அவள் அதிசயத்தால் கண்களை மலர்த்தி அவனைப் பார்த்தாள்.

"என்ன பார்க்கிறாய்?" என்று குறும்புத்தனமாகக் கேட்டான் துரைவேலு.



மணி: டேய்! வெளியில் போய் விளையாடலாம், வர்றயா?
குஞ்சு: வரத்துக்கு இல்லேடா! எனக்கு ரொம்ப வேலை இருக்கு. இதெல்லாத்தையும் உடைச்சாகணும். வருகிறதுக்கு இல்லேடா!

---

"இந்த மாடு இங்கே......"

"இது என் மாடு. நான்தான் கதிரேசனை உன்னிடம் விலை பேசி வாங்கச் சொன்னேன்."

"சொன்னீங்க! மாடு வாங்க மூன்றாவது ஆள் தேவையா உங்களுக்கு! நீங்களே வருகிறதுக்கு என்ன?"

"வந்தால் நீ கல்லை விட்டு அடிப்பியே...... ஆமாம்.........இன்னிக்குச் சூடா ஒண்ணும் இல்லையா?..."

"இருக்கு... இருக்கு..." — நப்பின்னை ஆத்திரத்துடன் பற்களைக் கடித்தாள்.

உள்ளேயிருந்து கிழவி குரல் கொடுத்தாள்.

"ஏ பொண்ணே! விடிஞ்சதும் யாருகிட்டே சண்டை?"

"நீ சும்மா இரு அம்மா! இவரு விவகாரத்தைத் தீர்த்துப்பிடணும்......"

"நானும் அதுக்காகத்தான் ஆரணியிலிருந்து வந்து நாலுமாசமா கிளப்பிலே சாப்பிட்டுக்கிட்டு இருக்கேன். விஷயம் இன்னிக்குத் தீர்ந்து போகணும்......"

துரைவேலு சிரித்தான்.

கிழவி மறுபடியும் பேசினாள்.

"யாரு தம்பி! இப்படி வாயேன்...ஆரணி பெரியசாமி வீட்டுப் பிள்ளையா நீ?..."

"ஆமாம், அத்தை! பரிசம் போடவந்தால் உங்கள் மகள் கல்லை விட்டு எறியுது..."

"அது ஒரு பைத்தியம்! நீ உள்ளே வா தம்பி!" வியாதிக்காரியான முனியம்மாள் மகிழ்ச்சியே வடிவாக உரக்கக் கூப்பிட்டாள்.

"அத்தை கூப்பிடறாங்க, நீ வா உள்ளே..." என்றவாறு துரைவேலு உள்ளே நுழைந்தான்.

நப்பின்னையின் முகம் காலைக் கதிரவனின் ஒளியில் செழிக்கும் செந்தாமரை போல் சிவந்து காணப்பட்டது.

# ஏழைக் கோயில்



ஸரோஜா ராமமூர்த்தி

எத்தனை ஆண்டுகளுக்கப்புறம் எங்கள் ஊருக்குள் நான் நுழைந்திருக்கிறேன்? பதினைந்து வருஷங்கள்! முன்னேறி வரும் ஒரு நாட்டில்—பல்லாயிரக் கணக்கில் குக்கிராமங்களைக் கொண்ட ஒரு நாட்டில்—இந்தச் சிறிய கிராமம் பெருமளவில் முன்னேறியிருக்கும் என்றுதான் எதிர்பார்க்கவில்லை. கொடுக்காப்புளி தோப்பு அப்படியே இருந்தது. ஏரிக்கரை, வயல்கள், பனந்தோப்பு, மயானம் எல்லாம் அப்படி அப்படியே இருந்தன. ஊரில் வீடுகள் சில நிலை மாறி இருந்தன. சில தளம் போடப் பட்டு உயர்ந்து நின்றன.

ஊரின் மையத்தில் இருந்த சிவன் கோயில் மட்டும் மாறியிருந்தது. ஆம், பெருமளவில் மாறியிருந்தது. கோபுரங்கள் புதுப்பிக்கப்பட்டு, சுவர்கள் கட்டப்பெற்று, ஒன்றிரண்டு புதுச் சன்னதிகள் தோற்றுவிக்கப் பட்டு அந்தச் சின்னஞ் சிறிய கோயில் அழகாக, கம்பீரமாக நின்றது.

இந்தக் கோயிலை மையமாக வைத்து எத்தனையோ பூசல்கள், பெரிய சண்டைகள், வாக்குவாதங்கள் எங்கள் ஊரில் நடந்திருக்கின்றன. தர்மகர்த்தாக்களின் மனோபாவத்துக்கிணங்க இறைவன் பலமுறைகள் அடங்கி ஒடுங்கிப் போய்க் கருவறைக்குள் விளக்கு இல்லாமல் இருந்திருக்கிறான். விஷயம் ஒன்றும் பிரமாதமில்லை. விளக்கு போட கடலை எண்ணெய் தம்பிரான் கொடுத்தால் நாயக்கர் அதற்கு மறுப்பு சொல்லுவார். "அந்தப் பய கொடுத்துத்தான் விளக்கு ஏத்தணுமா ஐயரே! அப்படிப்பட்ட விளக்கு எரிய வேண்டாம்—" என்று பேசுக் கென்று விளக்கை வாயால் ஊதிப் போட்டு விடுவார் நாயக்கர். தம்பிரான் கறுப்பு மார்க்கட்டில் பணம் சம்பாதிக்கிறார். அந்தக் காசில் கடலெண்ணெய் தர்மம் செய்யக் கூடாதாம்!

ஊரின் கொடுக்காப்புளி தோப்பின் ஆரம்பத்தில் ஒரு குடிசை இருக்கிறது. அதிலே ரொம்பக் காலமாக கிழவி ஒருத்தி குடியிருந்துவருகிறாள். அவள் கிழவியாகவே பிறந்திருக்க மாட்டாள். வயசுக்காரியாக இருந்திருப்பாள். அவளே ஒருவனை மயக்கி இருக்கலாம். இல்லை எவனோ ஒருத்தன் அவளை மயக்கி இழுத்து வந்திருக்கலாம்.

குமரப்பனும், மங்காத்தாளும் காதலர்களாக அந்தக் கிராமத்தில் நுழைந்தார்களாம். நான் அப்போது சின்னப் பையன். இந்தக் காலம் மாதிரி காதலர்களை வரவேற்க கடற்கரை, ஏரிக்கரை எல்லாம் ஜாம் ஜாம்னு காத்திருக்கும் காலமல்ல அது. கழுத்திலே தாலி இல்லாத பெண்ணென்றால் ஊர் என்ன ஏது என்று ஆயிரம் கேள்விகள் கேட்கும். பஞ்சாயத்து வைக்கும். தீர்ப்பு கூறும். ஊர்ப் பெரியவர்கள் முன்னிலையில், சிவன் கோவிலில் அவன் அவள் கழுத்தில் மூன்று முடிச்சுகள் போட்டேயாகவேண்டும்.

குமரப்பன் தென்னங்கீற்றுகள் முடைவதில் கெட்டிக்காரன். காலணா வாங்கிக் கொண்டு எங்கள் வீட்டுத் தென்னை மரத்தில் ஏறி மட்டைகளைக் கழித்துப் போட்டு, மட்டைக்கு கீற்று முடைய காலணா என்று கூறி வாங்கிக் கொள்வான்.

ஒரு நாளைக்கு அவன் வருமானம் ஏறக்குறைய ஒரு ரூபாய். குடும்பச் செலவுக்குப் போக மீதியைக் கள்ளுக் கடையில் கொண்டு போய்த் தொலைத்து விட்டு வருவான். மங்காத்தா மாக்கு மாக்கென்று சண்டை பிடிப்பாள்.

"கள்ளுத் தண்ணிதான் ஊத்திக் கினியே. சோறு கெடையாது போ—" என்று சத்தம் போடுவாள் அவள்.

இருவருக்கும் வாய்ச்சண்டை முற்றி கைகலப்பு ஏற்படும். நான் பள்ளிக்கூடம் போகும் போது இந்தச் சண்டையை வெகு வாக நின்று ரசிப்பேன்.

"தே! பாப்பாரப் பையன் பாக்குறான். சும்மாகிட. கண்டதைப் பேசாதே" என்று கத்துவாள் மங்காத்தா. இப்படியே அவர்கள் காலம் போய்க் கொண்டிருந்தது. தினம் தவறாமல் சிவன் கோயிலுக்கு வந்து காலணா சூடம் கொளுத்தி விட்டுத் தரையில் விழுந்து வணங்குவாள் மங்காத்தா.

"சாமியப்பா! இந்தக் கள்ளுக் கடையை மூடணும்..." என்று அவள் பிரார்த்திக்கும் போது நாடெங்கிலும் கள்ளுக்கடை மறியல் நடந்து கொண்டிருந்தது.

நான் நினைப்பேன்: "சாமியப்பன்" தான் காந்தி மகானின் எண்ணத்தின்று செயல் புரிகிறானோ என்று.

அந்த மங்காத்தா இப்போது கிழவியாகி கலக்கல் வியாபாரம் செய்து பணத்தில் கொழிக்கிறாளாம். டீக்கடை பாச்சா என்னிடம் பேச்சு வாக்கில் சொன்ன செய்தி இது.

"அது குடுத்த பணம்தாங்க கோயில் கட்டி கும்பாபிஷேகம் பண்ணக் கண்டது. இல்லாட்டி இந்த ஊர் தம்பிரானும், நாயக்கரும் கிழிச்சுப்புட்டாங்களா கிழிச்சி?"

"யாரவது கிழிக்க வரேன்னாலும் குறுக்கே விழுந்து மறிப்பாங்களே. அவங்களே வாழணும். அவங்க பேர்தான் பேப்பர்லே கொட்டை எழுத்துலே வரணும்ங்கறவங்களாச்சே" என்று நான் சொல்லவில்லை. அந்த ஊர் உருப்படாது என்கிற எண்ணத்தில் ஊரை விட்டுப் போய்ப் பதினைந்து வருஷங்கள் கழித்து வந்திருப்பவனுக்கு இந்தப் பொல்லாப்பில் தலையிட வேண்டிய அவசியமில்லைதான்.

"தம்பிரானும், நாயக்கரும் சும்மா இருந்தாங்களா?"

"சும்மா இல்லாம?"

"உம்... சும்மாச் சொல்லு பாச்சா. கோயிலுக்குள்ளாற இருக்கிறவன எத்தனை நாளைக்குத்தான் இருட்டிலே கிடப்பான்? ஊருக்கு 'லைட்

வந்திருக்கு. அவன் கோயில் மட்டும் இருட்டாவே இருக்குமா?"

பாச்சா டீயைச் சுழற்றி வேகமாக ஆற்றிக் கொண்டேயிருந்தான். "என்னத்துக்கப்பா எனக்குப் பொல்லாப்பு? நீ மங்காத்தாகிட்டயே போய்க் கேட்டுக்க. உன்னை அவளுக்கு நல்லாத் தெரியுமே" என்று விட்டு காலி கண்ணாடி டம்ளர்களைப் பக்கெட்டில் போட்டுக் கல கலவென்று சத்தத்துடன் கழுவ ஆரம்பித்தான். அந்த ஊர்க்காரர்களிடம் அவனுக்கு இன்னமும் உதறல் இருந்தது. தம்பிரானுக்கு நாலு எண்ணெய் மில்கள் இருந்தன. நாயக்கருக்கு ரைஸ் மில் இருந்தது. இரண்டு பேருக்குமே வயசாகி விட்டது. பிள்ளைகள் கொழித்துக் கொண்டிருந்தார்கள். ஊரில் எந்தச் சண்டை நடந்தாலும் அவர்கள் தலையிடுவார்கள். ஆள் வைத்து அடிப்பார்கள். அடிப்பட்டவர் பேரில் போலிசில் புகார் கொடுப்பார்கள்.

தகப்பனார்கள் செய்து வந்ததை மகன்கள் சற்று மாறுதல்களுடன் செய்தார்கள். ஒவ்வொருத்தரும் ஒரு கட்சியின் பெயரில் புகுந்து கொண்டு பெரிய மனிதர்களாகத் திரிந்தார்கள்.

பாச்சா எனக்கென்று ஸ்பெஷலாகப் போட்டுத் தந்த டீயை அருந்தி விட்டு நான் மங்காத்தாவைப் பார்க்கக் கிளம்பினேன்.

சுங்கிடிச் சேலைத் தலைப்பை வரிந்து கட்டியவாறு பூவரசமரத்தடியில் உட்கார்ந்து வெற்றிலைபாக்கு இடித்துக் கொண்டிருந்தாள் அவள். தலை பொல்லென்று நரைத்து விட்டது. முகமெல்லாம் சுருக்கங்கள். நெற்றி நிறைய திருநீறு பூசியிருந்தாள்.

"யாரு சாமி?" என்றபடி கண்களை இடுக்கியவாறு என்னைக் கவனித்தாள். "நான் தான் மங்காத்தா" என்று பெயரைச் சொன்னேன். "அட... நம்ப பாப்பராப்புள்ளே, கிழமாப்பூட்டியே சாமி..."

"நீயும் தான் ரொம்பக் கிழமாயிட்டே...

"நான் ஆவறதுக்கும், நீ அவறதுக்கும் வித்தியாசமில்லையா சாமி? நான் பார்க்கப்போ நீ இம்மாத்தம் பையன்—" அவளுடைய தனிமை என்னை மிகவும் வருத்தியது. தன்னந்தனியே அந்தக் குடிசையில் அவள் குமரப்பனின் நினைவாக வாழ்வது போல் எனக்குத் தோன்றியது.

"உம் புருஷன். அதான் குமரப்பன் நல்லாத்தானே இருந்தான்? எப்படி திடீர்னு..."

"நல்லாத்தான் இருந்தாரு... அது குடிக்கும்னு ஒனக்குத்தான் தெரியுமே சாமி ...திடீர்னு காந்தி கட்சிக்காரங்க கள்ளுக் கடைய மூடிட்டாங்களா? அது பைத்தியம் புடிச்சாப்பாலே கிடந்துச்சி... ஆளு இப்படித்தான் இருக்கும். ஒரு மாசத்திலே அந்த க்யாபகம் பூடும்னு நெனைச்சேன்... ஆனுக்க... அது திடீர்னு வேறே என்னென்னமோ குடிக்க ஆரம்பிச்சுது"

"திருட்டுச் சாராயமா?"

"ஆமாம் சாமி.. சப்பட்டா (ஸ்பிரிட்) ஆரஞ்சுப் பழத்தோலுங்க, நாட்டுச் சக்கரை, மா எண்ணெய்னு எதை எதையே வாங்கிட்டு வந்து என்னைக் கலக்கச் சொல்லும்—"

"நீ கலக்கிக் குடுத்தே—"

"ஆமாம் சாமி... இல்லேன்னு நீ பார்த்திருக்கியே. என்னை எப்படிப் போட்டுக் கொன்னுப்புடும்னு— அப்புறமா இந்த ஊட்டிலே அதை வியாபாரமாவே ஆக்கிட்டு... பணம் பணமா நோட்டு நோட்டா வந்து குமிஞ்சுது போயேன்."

"போலீசுக்குப் பிடிபடாம இருந்தீங்க...அப்படித்தானே?"

"ஆமாம். அப்படித்தான்னு வச்சுக்க—"

"இந்த ஆளுக்கு நாளாவட்டத்திலே 'கலக்கல்' ஒத்துக்கிலே... அது என்னமோ 'கிக்'காமே அது இல்லேன்னு தவிக்கும்...அப்படித்தான் நம்ம தம்பிரான ஒரு விசயம் புதுச்சா இதுங்கிட்டே சொன்னாராம். மெட்ராஸ் பக்கத்துலே மாத்திரை சாப்பிடறாங்க... போய்ப்பாரேன்னு... ஊட்லே வந்து சண்டை பிடிச்சி என்னை நல்லா ஒதச்சுட்டு ரூபாயை அள்ளிக்கிட்டுப் போச்சு சாமி. திரும்பி அந்த ஆளு நல்லபடியா இந்த ஊட்டுக்கு வரலே. பேச்சு மூச்சு இல்லாம கொண்டாந்து போட்டாங்க—நாலுநாள் அப்படியே கெடந்துச்சி. சாவற அன்னிக்கிக் காலமே நெனவு வந்துச்சி. "மங்காத்தா, ஒம் பேச்சை நான் தட்டி நடந்தேன். நீ தெனம் தெனம் கோயிலுக்குப் போய்ச் சூடம் ஏத்தி கும்பிடச்சே சாமியைக் கேப்பியே; கள்ளுக் கடையை மூடணும்னு. மூடி என்ன செகம்டி மங்காத்தா. மனுஷன் ஒருதரம் குடிச்சப்பவே அறிவை இழந்துடறான். நான் குடியிலேயே மூழ்கிப் போனவன். ஒண்ணுலே மூழ்க்க முழுகிட்டா அப்புறம் அதுலே சுவாரஸ்யம் இல்லேடி. மேலே மேலே எனக்கு வேறே ஏதோ வேண்டியிருந்திச்சி. தம்பிரான் இரண்டு மாத்திரை துண்ணச் சொன்னாரு. நாலு பத்தோ இருபதோ முழுங்கிட்டேண்டி...

நீ இனிமே நல்லபடியா பொழச்சுக்கோ ... அந்த வியாபாரத்தை உட்டுடு சேத்த பணத்தை அவன் கோயிலுக்கே குடுத்துடு .. ஒஞ்சாப்பாட்டுக்கு காணி நிலம் போதும்டி மங்காத்தா" "என்றபடி பிராணனை வுட்டுது சாமி—"

பிறகு மங்காத்தா அந்த வியாபாரத்தை நிறுத்தினாள். சேர்த்து வைத்திருந்த சில ஆயிரங்களை எடுத்துப் போய் தம்பிரானிடமும், நாயக்கரிடமும் காட்டினாள்.

"ஐயா! கோயில் இடிஞ்சு போயிடும் போல இருக்கு புதுசா கட்டி அபிசேகம் பண்ணுங்க—"ன்னு கேட்டிருக்கிறா அவர்கள் முகத்தைச் சுளித்திருக்கிறார்கள். சாராயம் வித்த கா. என்று ஏசியிருக்கிறார்கள்.

மங்காத்தா படித்தவள் இல்லை ஆனால், உலகம் தெரிந்தவள். பா புண்ணியத்தைப் பகுத்து அறிய திறன் படைத்தவள். அவ கேட்டிருக்கிறாள்.

"ஐயா! கடலெண்ணெயிலே மட்ட சரக்கைக் கலக்கலாம். விக்கலாம். வர்ற பணத்துலே சாமிக்கு அபிஷேகம் பண்ணலாம். குத்தற நெல்லுலே கல்லே, மண்ணைக் கலக்கலாம். மூட்டை, மூட்டையா கள்ளச்சந்தைக்கு அனுப்பலாம். திருப்பணிக் கமிட்டியிலே பேரை முன்னாடி போட்டுக்கலாம். கள்ளச் சாராயத் துட்டு மாத்திரம் தீட்டுப் பட்டுப் போச்சா சாமி?"

இறைவன் மனது வைத்தால் நடவாதது ஏதுமில்லை எங்கள் ஊர் ஆண்டவன் இருட்டிலே, மூன்புதான் நடுவிலே இருக்க திரு உளம் கொண்டிருந்தான் பல ஆண்டுகள். கள்ளச் சாராயம் விற்ற காசாக இருந்தாலும், அதை நேர்மையாக ஒத்துக் கொண்டு தனக்குக் காணிக்கை என்று உளமார்ந்த அன்புடன் செலுத்த வந்திருக்கும் மங்காத்தாவின் வேண்டுகோளுக்கு செவி சாய்த்துவிட்டான்.

கோபுர கலசங்களின் பொன் வர்ணத்தில் காலை வெயில்பட்டு மின்னியது. அவற்றிற்குப் பொன் வேயவில்லை. அது ஓர் ஏழைக் கோயில்.

மற்றொரு உளமார்ந்த பக்தரின் வருகைக்காக, அவன் வேயப்போகும் பொன்னுக்காக இறைவன் காத்து இருக்கலாம்.

அவன் மனித குலத்தின் நன்மை, தீமைகளைக் கடந்தவன். ஆனால், அன்புள்ளத்தின் காவலனாகவும் இருக்கிறான். ★

ஆபரேஷன் அறைக்கு வெளியே காத்திருந்தேன் நான். வார்டு பையன்கள் "ஸ்டெச்சர்" வண்டிகளில் யாரையாவது வைத்துத் தள்ளிக்கொண்டு வரும்போது எட்டிப் பார்ப்பேன். கரடுமுரடாக மீசை முளைத்த ஒரு கிராமத்தினன், உடல் வற்றி மெலிந்துபோன கிழவி ஒருத்தி, இளைஞன் ஒருவன் இப்படி ஒருவர் மாற்றி ஒருவராக ஏதோ ஒன்றுக்கு அறுவைசிகிச்சை பெற்று வெளியே வந்து கொண்டிருந்தனர். என் மகன் ரகுவுக்கு மூக்கிலே ஏதோ ஆப்பரேஷன். வைத்தியர்கள் கூறும் அந்தப் பெயர்கள் நமக்கு நினைவிருப்பது மில்லை. நினைவிருக்கவும் வேண்டாம். எங்கு திரும்பினாலும் நோய், கவலை. எல்லோர் முகத்திலும் ஏக்கம். அத்துடன் சுடர்விடும் நம்பிக்கை. அவர்களின் சுடர் போல் விரையும் டாக்டர்கள், நர்ஸ்கள்.

"அம்மாவுக்கு என்ன கேஸ்?" என்று ஈர்க்குச்சியாய் உடல் மெலிந்து நின்ற ஒருவர் என்னை அணுகி விசாரித்தார்.

"எனக்கொன்றுமில்லை. என் மகனுக்கு ஆபரேஷன் நடக்கிறது. டாக்டர் ஆர். ஆரின் பேஷண்ட் அவன். அவர் இந்தத் தியேட்டரில் தான் ஆப்பரேஷன் செய்கிறாராம். வெளியே விசாரித்தபோது சொன்னார்கள். இங்கே யாரை எப்படி விசாரிப்பது என்றும் தெரியவில்லை..." என்றேன் நான்.

"இருக்காதே" என்றார் வற்றல் ஆசாமி.

"டாக்டர் ஆர். ஆரின் ஆபரேஷன் தியேட்டர் கீழே இருக்கிறது. மூக்கு, தொண்டைப் பிரிவு அங்கேதாம்மா... இங்கே மேஜர் ஆபரேஷன் பண்ணுவாங்க..."

மேலே அங்கே நான் ஏன் நிற்கப் போகிறேன். கணவர் வெளியூர் "காம்ப்" போயிருந்தார். நானே வந்து ஆஸ்பத்திரியில் நிற்க வேண்டி வந்துவிட்டது. என்னுடைய பரபரப்பைப் புரிந்து கொண்டு அருகில் இருந்த "லிப்ட்" பையன் கதவைத் திறந்து "ஏறிக் கொள்ளுங்கள்" என்றான். அடுத்த இரண்டு நிமிஷங்களில் நான் கீழே இருந்தேன்.

மறுபடியும் வார்டு பையன்கள் யார் யாரையோ வண்டியில் படுக்க வைத்துத் தள்ளிக்கொண்டு வந்தார்கள்; மூன்று வயதுக் குழந்தை, பத்து வயதுப் பையன், நாலு வயசுப் பெண் ஒன்று. கடைசியாக ரகுவை வைத்துத் தள்ளிக் கொண்டு வந்த வார்டு பையன் "லிப்ட்" அருகில் போய் "டாப் ப்ளோர்" என்றான்.

"ஸ்பெஷல் வார்டு நம்பர் மூப்பத்திநாலு..." என்று நர்ஸ் ஒருத்தி கூற, ரகுவைப் பதினைந்தாம் நம்பர் படுக்கையில் படுக்க வைத்தனர்.

சிறிது நேரத்துக்குள் இரண்டு டாக்டர்கள், நாலு நர்ஸ்கள் வந்து கையைப் பிடித்துப் பார்த்துவிட்டுப் போனார்கள்.

"தண்ணி கிண்ணி கொடுத்து வச்சுடாதேம்மா...தாகமா இருக்கும்...தண்ணி குடுக்காதே..." என்று தலைமை நர்ஸ் என்னிடம் கூறிவிட்டு நகர்ந்தாள். எதிரே படுக்கையில் ஒரு நடுத்தர வயதினர் நெற்றி நிறைய திருநீறும், குங்குமமுமாய் உட்கார்ந்திருந்தார். பக்கத்தில் ஒரு பையன் ஜேம்ஸ் பாண்ட் நாவலில் தன்னை மறந்திருந்தான். அதற்கும் அப்பால் உள்ள படுக்கையில் தன் சுயமுயற்சியால் உடலை எந்தப் பக்கமும் அசைக்க முடியாதபடி ஒருவர் படுத்திருந்தார். அவர் முகத்தில் அரும்பிய வியர்வையைப் பரிவுடன் ஒற்றி எடுத்த மற்றொருவர், மூக்குக் கண்ணாடியை மாட்டிவிட்டு, பக்கத்து ஷெல்பிலிருந்த புத்தகம் ஒன்றை எடுத்து அவரின் இரண்டு கைகளையும் பிரித்து விரல்களைப் புத்தகத்தில் இறுகப் பற்றிக் கொள்ள வைத்தார்.

"தம்புடு! நேற்று ஞானயோகப் பாதி படுச்சிட்டிருந்தேன்... அந்தப் பக்கம்தானே இது?" என்று அவர் மெல்லக் கேட்க தம்புடு என்கிற அவர் சகோதரர் தலையை ஆட்டிவிட்டு கோப்பைகளைக் கழுவ வெளியே போனார்.

ரகுவுக்கு மயக்கம் கொடுக்காமல், லோகல் "அனிஸ்தீஷியா" கொடுத்தே அறுவை சிகிச்சை நடந்திருந்தது. அவன் தனக்குத் தாகமாக இருப்பதாக ஜாடை காட்டினான். தம்புடு கழுவிய கோப்பைகளுடன் உள்ளே வந்தார். ரகுவின் படுக்கையருகில் வந்து நின்று, "தண்ணி கொடுத்திடாதீங்கோ தல்லி. வயித்தைப் புரட்டும். சாயங்காலமா கொடுக்கலாம்..."

"ஆமாங்க..." என்று எதிர்ப் படுக்கைக்காரர் ஆமோதித்தார். அவர் படுக்கையில் படுத்திருந்த பொழுதைவிட ந ட மா டி ய பொழுதுதான் அதிகமாக இருந்தது.

"உங்களுக்கு என்ன உடம்பு?" என்று கேட்டு வைத்தேன்.



# ஆஸ்பத்திரி ஒரு தனி உலகம்

லஸ்ரீராஜாராமமூர்த்தி

"ப்ளட் பிரஷர் இருக்கு, ஹி ர ண் யா, ஹைட்ரோஸிலில் இருக்கு. பிரஷர் குறைஞ்சால் ஆப்ரேஷன் பண்றேங்கறுள். ஆஸ்பத்திரிக்கு வந்தப்புறம் பிரஷர் ஜாஸ்தியாயிடுத்து..."

"ஏன்?"

"கவலைதான் போங்கோ. மூன்டி மனுஷனுக்குப் ப்ரஷர் எவ்வளவு இருக்கணும்னு அநேகமா ஒருத்தருக்கும் தெரியறதில்லே. இங்கே விவரம் தெரிஞ்சப்புறம் ஒரே கவலை..."

"அதான் ப்ரஷர் ஏறியிருக்கு. இப்ப எவ்வளவு இருக்கு?"

"ஒன் நைண்டி. உப்பில்லாப் பத்தியம் தான்..."

அவர் சொல்லி முடிப்பதற்குள் அவர் மனைவி வீட்டிலிருந்து சாப்பாடு கொண்டு வந்தாள்.

களை எடுத்துக் கண்ணில் ஒற்றிக் கொண்டார் "ஜவுளி" சங்கர ராமன்.

நான் சொன்னேன்:

"ராமு, ஒரு வாரத்திற்கு முன்னே என்னை நீ "ஓட்டல் ஆபத்சகா"யத்தில் சந்தித்தாய் அல்லவா? அப்போது நாம் சென்னை, மேகனூர் நகர மன்றங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம், இல்லையா? நீ என்ன சொன்னாய்?" எல்லாம் வீட்டிற்கு வீடு வாசற்படிதான். இங்குதான் என்ன வாழ்கிறது? நகர மன்றத்தின் சங்கு—ஸைரன்—பழுதாகி ஒரு மாதத்திற்கு மேலாகிறது. உடனடியாக "ரிப்பேர்" பார்க்க வேண்டும் என்று தீர்மானமும் போட்டாகிவிட்டது. ஆனால், காரியம்தான் இன்னும் நடந்தபாடில்லை," என்று சொன்னாய் இல்லையா? உன்னுடைய "சங்குப் பேச்சு" என்னுடைய மூளையில் பளிச்சென்று அடித்த மாதிரி இருந்தது. கொலை நடந்ததாகச் சொல்லப்படுகின்ற அன்று இரவு எட்டு மணிச் சங்கு ஊதியதைக் கேட்டதாக சமையல் சாம்புவும், வேலைக்காரி மங்களமும் சாட்சியம் தந்திருப்பதாக என் நினைவு சொன்னது. கேஸ் கட்டை உற்று நோக்கினேன்...மறுநாள் காலையிலும் நகர மன்றம் சென்று ரிக்கார்டுகளை ஒத்து நோக்கினேன். கொலை நடந்ததாகச் சொல்லப்படுகின்ற அன்று முனிசிபல் சங்கு ரிப்பேர் என்று நகர மன்ற ரிக்கார்டுகளிலும் இருந்தது. பிறகுதான் விடுதலை கிடைத்துவிடும் என்ற நம்பிக்கையுடன் மின்சார இஞ்சினியரைக் கூப்பிட்டு விசாரித்தேன். அந்தச் சங்கு ஊதாத சங்காக இருந்தாலும், சங்கரராமனைப் பொறுத்த வரையில் "விடுதலைச் சங்கு"தான்! ...இந்த சங்கு "பாயின்டை"ப் பிடிக்க எனக்கு ஒரு "ஐடியா"வை—தற்செயலாகத்தான்—கொடுத்த ராமுவே. உன்னை ரொம்பவும் பாராட்டுகிறேன்!"

**சங்கரராமன்:**

அதற்குப் பிறகு போலீசாரின் மிகுந்த பிரயாசையின் பேரில் உண்மை கொலைகாரன் கண்டு பிடிக்கப்பட்டான்; அதாவது சமையற்கார சாம்புதான் கொலைகாரன்! வேலைக்காரி மங்களத்துக்கும் அவனுக்கும் தொடர்பு உண்டென்றும் மார்த்தாண்டம் அதைக் கண்டித்ததோடு நில்லாமல், மங்களத்திடம் தவறாக நடந்துகொள்ள முயன்ற நேரத்தில் ஆத்திரப்பட்டு சாம்பு குத்திக் கொன்றான் என்றும் நிஜம் வெளிப்பட்டது.

சாம்பு அவமானத்தால் குன்றி, குற்றத்தை ஒத்துக்கொண்டு தற்கொலை செய்து கொண்டு இறந்தான். வேலைக்காரி மங்களத்துக்குப் பொய் சாட்சி சொன்னதற்காகச் சிறைத் தண்டனை கிடைத்தது. இப்பொழுது சொல்லுங்கள், சட்டம் ஒரு இருட்டறை என்றால், நிரபராதிகளின் வக்கீல் வராகசாமியின் வாதம், ஒரு மெர்க்குரி விளக்குதானே!

நடிகை அனுசூயா தேவி, தன் நீண்ட குழலை அள்ளி முடித்தவாறு தோட்டத்தைச் சுற்றிவந்தாள்.

அழகூட்டும் காலை நேரம். ரோஜாக்கள் பனியில் குளித்து மலர்ந்து நகைத்தன. குரோட்டன்ஸ் வகைகள் அடுக்கடுக்காகக் கத்தரித்து விடப்பட்டு, நிற பேதங்களுடைய இலைகளுடன் விளங்கின. ஒருபுறம்



# வாழ்க்கை ஒரு பிரச்னை

சரோஜா ராமமூர்த்தி

'ஜினிவா' செடிகள், மறுபுறம் 'போகன் வில்லா' வளைவுகள்.

தோட்டத்தின்வனப்பைவிடப் பன்மடங்கு எழில் வாய்ந்தது அவள் இல்லம். பங்களா என்று அதை அழைப்பதைவிட, மாளிகை என்பது தான் அதற்குப் பொருந்தும். சுவரெங்கும் நிகு நிகுப்பு. ஒவ்வோர் அறையிலும் ஒவ்வொரு நாட்டின் கலைப்பொருள்கள் வைக்கப் பட்டிருந்தன.



ஜப்பான் தேசத்துப் பொம்மைகளிலிருந்து, ராமேச்வரத்துச் சோழிகள் வரை அவளிடம் இல்லாத கலைப் பொருள்களே கிடையாது.

படுக்கையறையில் மேஜை மீது வெண்கல புத்தர் சிலை ஒன்றே போதும். தாய்லாந்தில் யாரோ அவளுக்கெனப் பிரத்யேகமாகச் செய்து பரிசளித்ததாம் அந்தச் சிலை.

அன்று அனுசூயா தேவி மெல்லிய ஷிபான்புடவையை உடுத்தியிருந்தாள். காதுகளில் இங்கிலாந்தின் காதணி ஒன்று — திராட்சை கொத்துக்கள் — கரு கரு வென்று அவள் மழ மழப்பான

கன்னங்களுடன் உறவாடிக் கொஞ்சின. கைகள் வாழைத் தண்டுகள் போல் நீண்டிருந்தன. மணிக் கட்டுகளில் மட்டும் கறுப்பு எனமல் பூசிய தங்க 'பிரேஸ்லெட்டு'கள் பளீரென்று மின்னின. பால் வண்ணக் கழுத்தில் கறுப்பு வெல்வெட் நாடாவில் நடுவில் பதித்த வைரப் பதக்கம் சுடர் விட்டது.

தலைப்பைத் தோளில் வழியவிட்டு, அதை இடது கையின் மேல் மடித்துப் போட்டபடி கவலையற்று உலவிக் கொண்டேயிருந்தவள், ஏதோ நினைத்தபடி உள்ளே விரைந்தாள்.

முன் கூடத்தில் கருங்காலி வட்ட மேஜை மீது ஜப்பான் நாட்டு பீங்கான் ஜாடி ஒன்று ரோஜா மலர்களுடன் வைக்கப்பட்டிருந்தது. நேற்று அங்கிருந்த காஷ்மீரப் பூங்கொத்துக் கிண்ணத்தை அப்புறப் படுத்திவிட்டு, இதை வைக்கச் சொன்னது அவள் தான். ஆனால், இன்று இந்தப் பீங்கான் ஜாடி அவளுக்கு அழகாகக் காட்சி தரவில்லை. வெளியே வேலையாக இருந்த பணியாட்களைக் கூப்பிட்டு அதை அப்புறப் படுத்தச் சொல்லிவிட்டு, வழுவழு வென்றிருந்த மேஜை மீது தன் புகைப் படத்தை வைத்துப் பார்த்தாள்.

அனுசூயா தேவி கொள்ளை அழகு. படமும் அழகாக இருக்கக் கேட்கவா வேண்டும்? கன்னத்தில் கைகளை ஊன்றி, படத்தையே சிறிது நேரம் பார்த்தவாறு உட்கார்ந்திருந்தாள். அன்றைய தபாலில் அவளுக்கென ஏராளமான கடிதங்களும் வந்திருந்தன. பிரபல சினிமா பத்திரிகை ஒன்று அனுசூயா தேவியின் கலைஆர்வத்தைப் பற்றியும், அவள் தன் வீட்டை வித விதமாகக் கவினுற அலங்கரித்துப் பார்த்து மகிழ்வதைப் பற்றியும் எழுதி இருந்தது. இருந்தாலும், அவளுக்கு ஏனோ இதிலெல்லாம் ஒருநிறைவு ஏற்படவில்லை.

தன்னைப் போலவே எல்லோருக்கும் இவ்வித ஆர்வம், பிரச்னை இருக்குமா என்று சிந்தித்துப் பார்த்தாள் அவள். செல்வத்திலே திளைத்து செழிப்புடன் இருக்கும் அவள், தன்னொத்தவர்களுடனேயே நட்புப் பூண்டிருந்தாள். அவர்கள் எல்லோருமே ஒவ்வொரு விதத்தில் கலைப் பொருள்களைச் சேகரிப்பதும், வீட்டில் பொருத்தமான இடங்களில் அவற்றை வைத்து அழகு பார்ப்பதும், தோழிகளை அழைத்துக் காட்டி மகிழ்வதையுமே பொழுது போக்காக உடையவர்கள்.

அனுசூயா மேலும் சிந்தித்தாள்; பால்யத்தில் தன்னுடன் படித்த யாராவது ஒரு பெண் எங்காவது இருக்க மாட்டாளா என்று தீவிரமாக யோசிக்க யோசிக்க, எளிமையும், அடக்கமும் நிறைந்த கீதா அவள் நினைவில் பளிச்சென்று தோன்றினாள்.

''ஆமாம்...கீதாவும் இந்த ஊரில் தான் இருப்பதாக அத்தையம்மாள் ஒரு தரம் சொன்னார்களே. எங்கேயிருக்கிறாளோ? அத்தையம்மாளையே கேட்டு விட்டால் போகிறது...''

தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்தவளைக் காணாது போகவே அத்தையம்மாள் அனுசூயாவைத் தேடிக் கொண்டு முன்கூடத்துக்கு வந்தாள். நேற்று ஜப்பான் தேசத்து ஜாடி இருந்த இடத்தில், இன்று அவள் புகைப்படம் இருப்பதைப் பார்த்து விட்டு, ''ஏம்மா கண்ணு! இதையேன் இங்கே வச்சுட்டே? யாராச்சும் பார்த்தா திருஷ்டி போடுவாங்க—'' என்று கேட்டவாறு, புகைப் படத்தைத் தன் புடவைத் தலைப்பால் துடைத்து அக்கறையுடன் மறுபடி அதனிடத்தில் வைத்தாள்.

மாதுளை மொட்டு மலர்வது போல் அனுசூயா தன் இதழ்களைப் பிரித்தவாறு பளிச்சென்று சிரித்தாள்.

''நீங்க ஒண்ணு அத்தை. எம் படத்தைப் பார்த்து திருஷ்டி போடறதுன்னு, அதோ பாருங்க, சுவத்துலே எத்தனை பெரிசா படம் போட்டு ஒட்டியிருக்காங்கன்னு — அதெல்லாம் ஒண்ணும் வராது...எனக்கு இப்ப ஒண்ணு தெரிஞ்சாகணும். எங்கூடப் படிச்ச கீதா இந்த ஊரிலே இருக்கிறதா சொன்னீங்களே, கோவில்லே பாத்ததாகச் சொன்னீங்க, எங்கே இருக்கிறு தெரியுமா அத்தை?''

''தெரியாம என்ன? அனுமார் கோவில் தெருவிலே இருக்கிறாளாம். அந்தப் பெண் பாவம், அன்று எப்படி இருந்ததோ அப்படியே தான் இருக்குது..''

''அவளை நான் பார்க்கப்போவணும் அத்தை—''

அத்தையம்மாளுக்குத் தெரியும் அனுசூயாவைப் பற்றி; ஒன்றைச் செய்ய வேண்டுமென்று நினைத்து விட்டால், அவளை யாராலும் மாற்ற முடியாது என்று.

அனுசூயா எளிமையாகத் தான் உடை உடுத்திக்கொண்டாள். ஆனால், அதிலும் கவர்ச்சியும், கலை ஆர்வமும் தெரிந்தது. கூடை நிறையப் பழங்களும் தின்பண்டங்களும் வாங்கி எடுத்துக் காரில் வைத்துவிட்டு, கீதா வின் வீட்டைத் தேடிப் புறப்பட்டாள்.

தன் வீட்டு வாயிற் படியில் தலை வைத்து கீதா சினிமா பத்திரிகை ஒன்றைப் புரட்டியவாறு படுத்திருந்தாள். பிரபல சினிமா நட்சத்திரம் அனுசூயா தேவியின் கலை ஆர்வத்தை பற்றிய செய்தி வந்த அதே பத்திரிகை தான் அது.

' ''கீதா! கீதா!'' என்று நொடிக்கொரு தரம் கூப்பிட்டு கண்ணுமூச்சியாடிய அவளா இவள்? இன்று இவள் பெரிய நடிகை. செல்வத்தில் ஊறிக் கிடப்பவள். என்னை எங்கே இவள் தெரிந்து கொள்ளப் போகிறாள்? என்னைப் பற்றி அவளுக்கு நினைவிருக்கிறதோ என்னவோ?' இவ்வாறு அனுசூயாவின் படத்தைப் பார்த்தபடி எண்ணமிட்டாள் கீதா.

இரண்டே அறைகள் கொண்ட அவள் வீட்டில் படிக்கும் அறை, படுக்கை அறை, விருந்தினர் தங்கும் அறை எல்லாம் இதொன்றுதான். மற்றது சமையலறை, அதிகக் காற்றோட்டமில்லாத அந்த இடத்தில், நல்ல காற்று சிறிதாவது பெற வேண்டுமானால் வாயிற்படியில் தான் படுத்தாகவேண்டும். குழந்தைகள் இரண்டு பேர்களும் பள்ளிக்கூடம் போயிருந்தார்கள்.

ஆயிற்று. ஒரு மணிக்கு இடைவேளைச் சாப்பாட்டுக்கு வந்து விடுவார்கள். உப்பிட்டு மோர் ஊற்றிப் பிசைந்த பழையதும், எலுமிச்சை ஊறுகாயும் தான் அவர்களுடைய மதிய உணவு. காலையில் ஒரு பொரியல், குழம்புடன் சாப்பிடுவதே மாதத்தில் இருபது நாட்களுக்குத் தான்.

கீதாவின் கணவன் கொண்டு வரும் நூற்றைம்பது ரூபாயில் அதற்கு மேல் எதிர்பார்க்கவும் முடியாது.

கீதா கடிகாரத்தை நிமிர்ந்து பார்த்தாள். மணி பன்னிரண்டரை ஆகி விட்டது. இன்னும் அரை மணி தான் அவளுக்கு 'ரெஸ்ட்' கிடைக்கும்.

கடிகாரப் பெட்டி மீது லேசாக ஒட்டடை படிந்திருந்தது. அதைத் துடைக்க வேண்டுமென்று பத்திரிகையை வைத்து விட்டு எழுந்தாள். கந்தல் துணியினால் அதைப் பளிச்செனத் துடைத்து வைத்து விட்டு அவள் சமையலறைக்குப் போகக் கிளம்பியபோது, தெருவில் கார் வந்து நின்றது நிழலாடியது.

கீதா முதலில் அதைக் கவனிக்காமல் உள்ளே போகத் திரும்பினாள். ஆனால் அனுசூயாவே ஒருக்களித்திருந்த வாயிற் கதவைத் திறந்து கொண்டு உள்ளே வரவும், டிரைவர் பழக்கூடையைக் கொண்டு வந்து வைத்துவிட்டு வெளியே செல்லவும், அனுசூயா கதவை அழுத்திச் சாத்தவும் சரியாக இருந்தது.

''கீதா!'' என்று ஆவலுடன் அழைத்து, ''என்னை நினைவிருக்கிறதா உனக்கு? பார்த்து ஆறு வருஷங்கள் இருக்குமே'' என்று கேட்டாள் அனுசூயா ஆவலுடன்.

கீதா பிரமித்து நின்று விட்டாள். வீடு தேடி வந்தவளை வாவென்று அழைக்கக் கூடத் தோன்றவில்லை.

''கீதா!'' என்று மறுபடியும் அழைத்தாள் அனுசூயா. இதற்குள் கீதாவுக்குத் துணிவு வந்து விட்டது.

''வா...வா... அனு...'' என்றவள் அங்கு மூலையில் சுருட்டி வைக்கப் பட்டிருந்த பாயை எடுத்து விரித்தாள். ஏதேதோ கேட்க வேண்டும் என்று நினைத்தவள், ''இப்பொழுது தான் உன் படத்தை அந்தப் பத்திரிகையில் பார்த்தேன் அனு. உன்னை இவ்வளவு சடுதியில் பார்க்க முடியும்என்று நான் நினைக்கவில்லை. ஒரோரு சமயம் நாம் நினைக்காதது எவ்வளவு வேகமாக நடந்துவிடுகிறது பார்த்தாயா?'' என்று கேட்டாள்.

அனுசூயா அழகாகச் சிரித்தபடி காதோரம் சுருண்டு கொஞ்சும் குழலைக் கோதிக் கொண்டே கீதாவைப் பார்த்தாள்.

அவள் அப்படிப் பார்ப்பது கீதாவுக்கு வெட்கமாகி விட்டது.

''என்ன அனு? ஏன் என்னை அப்படிப் பார்க்கிறாய்?'' என்று கேட்டு விட்டாள்.

''உட்காரேன் கீதா, உன்னோடு நான் நிறையப் பேச வேண்டும் என்று வந்திருக்கிறேன். எல்லோரும் நினைப்பது போல எனக்கு நிறையப் பணம் இருப்பதால் மற்றவர்களுடன் சுமுகமாகப் பழகுவேனோ என்று சந்தேகப்

படுகிறாயா நீ? நானும் இன்ப, துன் பங்களுக்கு உட்பட்ட மனிதப் பிறவி தான். இப்போது சொல். நீ தோற் றத்தில் ரொம்பவும் மாறி விட்டாய் கீதா. பழைய குறும்புத்தனங்கள், சிரிப்பு எல்லாமே உன்னிடம் அடக்க மாகவும், அன்பாகவும்மாறிப்புதைந்து விட்டன என்று எனக்குத் தோன்று கிறது. பெரிய மனுஷி மாதிரி தலைப்பை மடித்துக் கட்டிக் கொண்டு, பளிச் சென்று மஞ்சள் பூசிய முகமும், குங்குமப் 'பொட்டுமாக களையோடு இருக்கிறாய். இது ஒரு விதமான தேஜஸ். என் பணங்காசையெல்லாம் கொட்டிக் கொட்டிச் செலவழித்தா லும் விலை மதிக்க முடியாத இந்த எழிலை என்னால்பெற முடியாது. நான் எப்படி இருக்கிறேன் என்று சொல்?''

கீதாவுக்கு அனுசூயாவைப் பார்க்கும்போதே கண் கூசி யது. மழு மழுவென்று முக மும், வளைந்த செயற்கைப் புருவங்களும், சாயம் தீட்டிய இதழ்களும், திரை நட்சத் திரங்களுக்கே உரித்தான உடற் கட்டும் அவளை வியப் புடன் நோக்க வைத்தன. கீதா நாணிக்கொண்டே தலை யைக் குனிந்து விரல்களால் தரையில் கோல மிட்டாள்.

''என்னை வந்து கேட்கிறாயே, நாடெங்கும் புகழ் மணம் வீசும் உன் அழகிற்கு நான் தானா உரைகல்? அந்தக் காலத்திலேயே கிழிசல் பாவாடையுடன் பள்ளிக்கூடம் வந் தாயானால் கூட அழகு அள்ளிக்





கொண்டு போகும்'' என்று கூறியவள் பிரபல நடிகையைக் 'கிழிசல் பாவாடையில்' என்று சொல்லி விட்டோமே என அயர்ந்து போய்ப் பேச்சை நிறுத்திவிட்டு ''அனு! காப்பி சாப்பிடுவாயா?'' என்றவாறு கும்மட்டியைப் பற்ற வைக்க எழுந்து விட்டாள்.

இதற்குள் கீதாவின் குழந்தைகள் இருவரும் பள்ளியிலிருந்து வந்து விட்டார்கள். ஆங்காங்கு சாயம்போன சீட்டிக் கவுன் போட்டிருந்தாள் பெண் குழந்தை. பித்தான் பிய்க்கப்பட்டிருந்த சட்டைக்குப் பின்னைக் குத்தி விட்டிருந்தான் அந்தச் சிறுவன். அவன்

நீல நிஜாரில் திட்டுத் திட்டாக வெளுத்திருந்தது.

குழந்தைகளுக்கு நின்ற இடத்தை விட்டு நகரத் தோன்றவில்லை. சுவரொட்டி விளம்பரங்களில் பார்த்திருந்த மாமி தங்கள் வீடு தேடி வந்திருப்பது அவர்களுக்கு ஏனென்றே விளங்கவில்லை.

இருவரும் விழித்தபடி பழையது கிண்ணத்தை எடுக்கப் போனார்கள். அனுசூயா ஆசையுடன் பையனைத் தூக்கி முத்தமிட்டவாறு, அவனிடம் கை கொள்ளாத அளவு ஆப்பிளையும் பிஸ்கோத்துப் பொட்டலத்தையும் நீட்டினாள்.

குழந்தைகள் வாய் திறவாமல் மறுபடியும் பள்ளிக்குப் போய் விட்டார்கள். அனுசூயா சமையலறையில் கிடந்த மணையில் உட்கார்ந்தவாறு அறையைக் கண்ணோட்டம் விட்டாள். பழைய ஹார்லிக்ஸ் புட்டிகளில் மசாலா சாமான்கள், கற்சட்டிகளில் புளி, ஊறுகாய்கள். மேலே உத்திரத்தில் இழுத்துக் கட்டப் பட்டிருந்த மரப் பலகையில் சமையல் பாத்திரங்கள் கவிழ்த்து வைக்கப்பட்டிருந்தன. துரு ஏறிய டப்பாக்களில் அரிசி, பருப்பு இருந்தன. முன் அறையில் சுவரில் இரண்டொரு காலண்டர்கள். மூங்கில் கொடியில் கிழிந்து தைக்கப் பட்டிருந்த புடவைகள் இரண்டு உலர்த்தி யிருந்தன.

படப் பிடிப்புப் போக அனுசூயா தன் நேரத்தைச் செலவழித்து வளர்த்து வரும் கலை ஆர்வம் எங்கே? இந்தச் சின்னஞ் சிறு வீட்டில் கலை எங்கே போய் ஒளிந்து கொண்டது?

நல்ல காப்பியாகப் போட்டு எடுத்து வந்து எதிரே வைத்தாள் கீதா. பல உயர் ரக குளிர் பானங்களை நாசூக்காக உதட்டோரம் வைத்து மேஜை மீது நகர்த்தி வைத்து விட்டு எழுந்து விடுகிற அனுசூயா, இன்று அந்தக் காப்பியைச் சுவைத்துச் சாப்பிட்டாள். உதடுகளைக் கைக் குட்டையால் ஒற்றிக் கொண்டு, "கீதா! உனக்கு என்று நீ எந்த 'ஹாபி'யும் வைத்துக் கொள்வதில்லையா?" என்று கேட்டாள்

"ஹாபியா?" கீதா சிரித்துக்கொண்டாள்.

"எனக்கு அதற்கெல்லாம் பொழுதும், பண வசதியும் எங்கே யிருக்கிறது அனு?"

"உன் கணவர் வேலையில் தானே இருக்கிறார்?"

"ஓ! வேலையில் தான் இருக்கிறார். மாதம் நூற்றைம்பது ரூபாய் சம்பளம் வருகிறது. அதில் வாடகை, பால், படிப்புச் செலவு, வைத்தியச் செலவு, சாப்பாட்டுச் செலவு எல்லாவற்றையும் சரிக்கட்ட வேண்டும். 'ஒவ்வொரு மாதத்தையும் எப்படி ஓட்டப் போகிறோம்' என்பதல்லவா என்னுடைய பிரச்னையாக இருக்கிறது. எப்படியோ இது வரையில் சமாளித்து விட்டேன் அனு. இனியும் சமாளித்து விடுவேன். ஒரு குடும்பப் பெண்ணின் திறமை பூராவும் அவள் குடும்ப நிர்வாகத்தில் அடங்கி விடுகிறது. அதையும் மீறி அவளுடைய திறமை வெளிப்பட, பண வசதியும், பொழுதும் பெற்றிருந்தால் தான் முடியும்."

அனுசூயா தன் தோழியிடம் விடை பெற்று எழுந்து விட்டாள். மூன்று மணிக்கு ஒரு படப் பிடிப்புக்குப் போக வேண்டுமாம். தட்டில் வெற்றிலை, பாக்கு, மஞ்சளுடன் கீதா தோழியை விடை கொடுத்து அனுப்பும் போது, "அனு! நான் சொல்கிறேன் என்று கோபித்துக் கொள்ளாதே. சீக்கிரம் உனக்குக் கல்யாணம் ஆக வேண்டும். நீ குடியும், குடித்தனமுமாக இருக்க வேண்டும். அப்படி உன்னைப் பார்க்க வேண்டும் என்று ஆசையாக இருக்கிறது" என்றவாறு தோழியின் நெற்றியில் குங்குமமிட்டாள் கீதா.

அனுசூயா கீதாவின் அன்புக் கரங்களை இறுகப் பற்றிக் கொண்டாள்.

"கீதா! நீ என் வீட்டுக்கு ஒரு நாள் வரவேண்டும். கட்டாயமாக எதிர்பார்க்கிறேன். என்று வரமுடியும் என்று சொல். கார் அனுப்பி அழைத்து வரச் செய்கிறேன்—"

கீதா அடுத்த நாளே வருவதாக அவளிடம் ஒப்புக் கொண்டு விட்டாள். கார் தெருக் கோடியில் செல்லும்வரை பார்த்திருந்த கீதா உள்ளே திரும்பியதும், அந்தத் தெருவில் இருந்தவர்கள் அனுசூயாவைப் பற்றி இவளிடம் துளைத் தெடுத்து விட்டார்கள்.

மறுநாள் பகல் சரியாக ஒரு மணிக்குக் கார் வந்து விட்டது. கீதா கூடுமான வரையில் தன்னை நன்றாக அலங்கரித்துக் கொண்டாள். இருக்கிற ஒரே ஒரு பட்டுப் புடவையை உடுத்திக் கொண்டு, கொஞ்சம் பழங்கள்'

புஷ்பத்துடன் கிளம்பி விட்டாள் அவள்.

அனுசூயாவின் பங்களாவில் கார் நுழைந்தபோது, வாசற்படியில் நின்று அவளைக் கை கொடுத்து வரவேற்ருள் அனு.

''எங்கே வராமல் இருந்து விடுவாயோ? உன் கணவர் உன்னை அனுப்புகிருரோ இல்லையோ என்றெல்லாம் கவலைப்பட்டேனடி. உண்மையாகவே கீதா, நீ தானே வந்திருப்பது?''

''நன்ருக இருக்கிறதே நீ பேசுகிறது? இவ்வளவு பிரபலமானவள் என் வீட்டைத் தேடி வந்தாய். நான் வராமல் என்ன கேடு?''

''பார்த்தாயா! நான் வந்த பிறகு தானே உனக்கும் வரத்தோன்றியது?'' அனு சிறு குழந்தை போல முகம் சுண்டக் கேட்டு, ''ஏனடி! குழந்தைகளை அழைத்து வரவில்லை?'' என்று பொரிந்து தள்ளினுள்.

''ஆகட்டுமே! இன்னெரு நாள் குடும்பத்தோடு வந்து விடுகிறேம். இனிமேல் என்ன? பிரபல நட்சத்திரம் அனுசூயாவின் அருமைத் தோழி நான் என்று பத்திரிகைகளெல்லாம் என்னைப் பற்றி எழுத ஆரம்பித்து விடும்.''

இருவரும் சேர்ந்து கல கலவென்று சிரித்தனர். கீதாவின் கைகளைப்பற்றி இழுத்துக்கொண்டே அனு, ஒவ்வொரு அறையாகக் காண்பித்து வந்தாள்.

பீரோவைத் திறந்தாள். ''இது தான் மார்வார் தேசத்து உடை. இது அவர்கள் அணியும் கங்கணம். இது அவர்கள் காதணி. இது பாரசீகத்துப் பட்டு. கை வைத்துப் பாரேன், வழுக்கிக் கொண்டு போகும்!'' கீதா பிரமித்துப் போனுள். எங்கு பார்த்தாலும் கலைப் பொருள்கள். எதைத் தொட்டாலும் எழிலும், சொகுசுமே கொஞ்சின.

மேஜை மீது வைத்திருக்கும் பொம்மைகளிலிருந்து, குடி நீர் பருகும் தம்ளர்கள்வரை கலை ஆர்வம் நிரம்பி வழிந்தன. சிற்றுண்டிக்குப் பிறகு அனுசூயாவும், கீதாவும் தோட்டத்தில் போய் அமர்ந்தனர்.

எங்கு பார்த்தாலும் மலர்கள் காற்றில் அசைந்தவாறு இருந்தன.

''கீதா! என்னைப் பற்றி நீ என்ன நினைக்கிருய் சொல். என் வீட்டைப் பார்த்த பிறகு என்னைப் பற்றி ஒரு முடிவுக்கு வந்திருப்பாயே'' என்றவாறு, அருகிலிருந்த ரோஜாச் செடியிலிருந்து மலர் ஒன்றைப் பறித்துத் தோழியின் குழலில் செருகினுள்.

''நினைப்பதற்கு என்ன இருக்கிறது அனு? நீ கலைக்காகவும், அதை வாழ வைப்பதற்காகவும் பிறந்தவள். அந்த வழியிலே உன் மனமும், செயலும் ஒன்று பட்டு இணைந்து வாழ்கின்றன.''

''இல்லை கீதா. நீ அப்படி நினைத்திருந்தால் அது தவறு. அன்று சொன்னுயே, உன் வீட்டில், ஒவ்வொருமாதத்தையும் எப்படி ஓட்டப் போகிறேம் என்பதே உன் பிரச்னை என்று. அப்படி எனக்கொரு பிரச்னையும் உண்டு. இந்த வீட்டை இன்னும் அழகாக, சிறப்பாக எப்படி வைத்துக் கொள்வது, 'மற்றவர்களை விட அனுசூயா தேவியின் கலை ஆர்வம் அதிகம்' என்று பிறர் சொல்லக்காட்டிக் கொள்வதுதான் என்னுடைய பிரச்னை. நீ அதைக் கலை ஆர்வம் என்றே, கலா ரசனை என்றே எப்படி வேண்டுமானுலும் அழைத்துக்கொள்....''

தோழியிடம் உள்ளம் திறந்து பேசி விட்ட மகிழ்ச்சியில் அனுசூயா திளைத்



" அப்படி இப்படி தலை கீழே நின்னு ரேடியோவிலே ஒரு சான்ஸ் அடித்துவிட்டீர்களாமே...ஒரு மணி கச்சேரியா?"

" மண்ணுங்கட்டி ! ஒரு ரேடியோ நாடகத்திலே பாட்டு வாத்தியார் வேஷம் !"

திருந்த சமயம், தெருவோரமாகப் பிச்சைக்காரப் பெண் ஒருத்தி வேலைக்காரி மூலமாக காசோ, அரிசியோ பெற்றுக் கொண்டு நகர்வதைக் கண்டாள்.

தன் எதிரே பிரமாண்டமான மாளிகை, அதன் எழில் எதுவுமே தெரியாதவளாக பிச்சைக்காக ஏந்திய குவளையில் விழுந்த பொருள் மீது தன் சிந்தையைத் தேக்கி, அதைக் குனிந்து பார்த்து, கைவிட்டு அளைந்து, நிறையக் கிடைத்து விட்ட நிறைவில் பிச்சைக்காரி நடந்தாள்.

''கீதா!'' என்று அயர்வுடன் அழைத்தாள் அனுசூயா. ''உனக்கு அவசரமாக இன்று வீட்டுக்குப் போக வேண்டுமா? இல்லை, மாலையில் போனால் போதுமா?''

''அவசரம் ஒன்றுமில்லை. அவர் குழந்தைகளைப் பார்த்துக் கொள்ள இன்று வீட்டில் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறார் அனு. ஏன்?''

''மாலை இருட்டியதும் இந்தப் பிச்சைக்காரியின் வீட்டுக்கு நாம் போவோமா? இதே தெருவில் எதிர்ச்சாரியில் சாக்கடை மதகின் ஓரம் தான் அவள் வீடு...''

''உனக்கு என்ன பைத்தியமா அனு? தெருவில் கூட்டம் சேர்ந்து விடுமே—''

''சேராது. நான் ஒப்பனை இல்லாமல் வெளியில் கிளம்பினால் பலருக்குத் தெரியாது. அதுவும் இருட்டிலே யாரும் என்னை எளிதில் தெரிந்து கொள்ள மாட்டார்கள்—''

சென்னை நகரத்து நல்ல நெடுஞ்சாலைக்குத் திருஷ்டிப் பரிகாரமாக அந்தச் சாக்கடையும், அதன்மீது கட்டப் பட்டிருந்த மதகின் கீழ் நாலு செங்கல்களின் மீது கரி ஏறிய பானையில் உலை நீரும் வைக்கப்பட்டிருந்தது. யாருடைய நிலத்துக்கோ எல்லைக் கோடாக இருந்த 'சர்வே'கல் மழையினால் பெயர்ந்து தரை மீது கிடந்தது. அதன் மீது 'மௌகா, புளி, உப்பு வைத்து வெஞ்சனமாகத் துவையல் தயாராகிக் கொண்டிருந்தது. சொறிபிடித்த குழந்தை, இளம்பிள்ளை வாதத்தால் கால்களை இழந்த பையன், ஒரு பெண் பனம் பழத்தைப் பல்லால் கடித்துப் பசியாற்றிக் கொண்டிருந்தாள்.

பிச்சைக்காரி யாருடைய வரவுக்காகவோ சாலையை அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தாள். கண்டிப்பாக அவள் அனுசூயாவையோ, கீதாவையோ எதிர் பார்க்கவில்லை. மதகின் மீது இருந்த விளக்கு வெளிச்சம் கீழே துளிக்கூட விழவில்லை. இருட்டிலே குடித்தனம் நடத்திப் பழகிப் போன அவள், தொலைவில் பிச்சைக்காரன் ஒருவன் வருவதைப் பார்த்து அக மகிழ்ந்து போனாள்.

''அதோ பாரு! நாயினு வராங்க..'' என்று குழந்தைகளிடம் சுட்டிக் காட்டியவுடன், பெண் ''நாயினு'' என்றவாறு ஓடியது. அது ஓடிய வேகத்தில் பனஞ்சாற்றுக் கையை அனுசூயாவின் புடவையில் அப்பி விட்டது.

மதகின் சரிவில் மெதுவாக இறங்கிக் குடிசையின் எதிரில் போய் நின்றார்கள் அனுவும், கீதாவும்.

பிச்சைக்காரி அண்ணாந்து பார்த்தாள்.

''யாரும்மா? வழி தெரியாம வந்துட்டீங்களா? அதோ அந்தால ஏறிப் போனா பாதை போவுது. பஸ் ஸ்டாண்டு இருக்குது—'' வழி காட்டினாள் அவள். இதற்குள் பிச்சைக்காரன் வந்து விட்டான்.

''இந்தா! இன்னிக்கு அம்பது நயா பைசா. ஒரு படி அரிசி, ஒரு வூட்டுலே நாலு இட்லி கொடுத்தாங்க'' என்றான், இவர்களைக் கவனிக்காமல்.

''எனக்கு இட்லி, எனக்கு இட்லி!'' என்று மூன்று குழந்தைகளும் போட்டியிட்டுக் கத்தின.

''நான் துண்ணுட்டேன். எம்மாம் 'சம்பாரிச்சு' கொண்டாந்தாலும் நீங்க துண்ணத்தான் சரியாக்கீது. ஆமா! இவங்க யாரு புள்ளே?'' பிச்சைக்காரன் கண்களை இடுக்கிக் கூர்ந்து பார்த்தான்.

''ஆ! நம்ம ராணியம்மா...'' என்றான் அதிசயித்தவாறு.



அனுசூயா பல படங்களில் நடித்திருந்தாலும் தென்னட்டின் சரித்திரப் படம் ஒன்றில் அவள் ராணியாக வந்ததை அந்தப் பிச்சைக்காரன் மறக்கவில்லை.

"ஆங்...." என்று புடவையை உதறிக் கொண்டு பய பக்தியுடன் எழுந்தாள் பிச்சைக்காரி.

என்னென்னவோ கேட்க வேண்டும் என்று வந்த அனுசூயா, "இதுதான் உன் வீடா?" என்று மட்டும் கேட்டு வைத்தாள்.

"ஆமாங்கம்மா. வெயில் காலத்துலே கயிஸ்டம் ஒண்ணும் இல்லீங்க. நல்ல மர நிழலு...வெளியே படுத்துட்டா காத்து வாரிக்கிட்டுப்போகும். மழை பேஞ்சாத்தான் படா அவதி! இருந்தாலும் கஸ்டம் ஒண்ணும் இல்லீங்க. சர்க்காரு எங்களை 'ஸ்கோல்லே' கொண்டு இரண்டு மூணு நாளைக்கு வச்சு, கஞ்சியும் ஊத்திப்பிடுவாங்க. மழை விட்டதும் 'போங்கடா'ன்னு மறுபடியும் வந்து சேர வேண்டியது தான்—"

"உனக்கு நல்ல வரும்படி கிடைக்குதா?" என்று கேட்டாள் கீதா.

"ஏதோ கிடைக்குதுங்க. காலையிலே எழுந்திருச்சு கடவுளேன்னு நான் ஒரு பக்கம், அது ஒரு பக்கம் போனு, இருட்டறப்போ அன்னி சாப்பாட்டுக்குத் தேறுங்க—"

"நாளைக்கு?" என்று அசட்டுத்தனமாகக் கேட்டு வைத்தாள் அனுசூயா.

"நாளைக்கா? அதைப் பத்தி யாரம்மா கவலைப்படுவாங்க?" சுருக்கமாக ஒரு ஞானி போல், விடையிறுத்தான் அவன்.

அன்றாட வாழ்க்கையே ஒரு பிரச்னையாகி விட்ட அந்த எளிய மக்களின் விடையைக் கேட்டபடி இருவரும் மதகின் மீது ஏறி சாலையிலே நடந்து வீட்டினுள் வரும் வரை ஒன்றும் பேசவில்லை.

பின்னர் ஒரு மாதம் கழித்து வந்த சினிமாப் பத்திரிகையில் வந்த செய்தி ஒன்று 'பிரபல நட்சத்திரம் அனுசூயா தேவி திடீரென்று தம் மாளிகை போன்ற வீட்டையும், கலைப் பொருள்களையும் மதியாமல் பெரிய தோப்பினுள் சிறு வீட்டில் அமைதியாக வாழ்கிறார்' என்று அறிவித்தது.

அதன் காரணத்தை முழுமையாக உணர்ந்தவள் கீதா ஒருத்தி தான்.

**மாலை மணி ஐந்து**

**பத்திரிகைக் கதை**

**விடை**

1. மாலை மணி.
2. கண்ணன்.
3. உமா.
4. காவேரி.
5. அமிர்தம்.
6. காதல்.
7. முல்லை.
8. கதம்பம் (கொழும்பு).
9. முத்தாரம்.
10. அன்பு வாணன்.
11. மன்றம்.
12. திராவிடஸ்தான்.
13. இமயம்.
14. செங்கோல்.
15. திராவிட நாடு.
16. தனியரசு.
17. இனமுழக்கம்.
18. முரசொலி.
19. நாரதர்.
20. அம்மா.
21. ஆனந்த விகடன்.
22. கல்கி.
23. குமுதம்.
24. பேசும் படம்.
25. குண்டூசி.
26. தமிழ் சினிமா.
27. இன்பம்.
28. கலைமகள்.
29. தையற்கலை.
30. அமுதசுரபி.
31. கல்கண்டு.
32. தென்றல்.
33. தாமரை.




ஆற்றங்கரை மணல் சூரிய வெப்பத்தால் வெந்தழல் மாதிரி சுட்டது. ஆற்றங்கரையில் இருந்த மரங்கள் சூரியனின் கடுமை தாங்க முடியாமல் சலனமற்று நின்றன. காக்கை, குருவிகள் கூட அயர்ந்து வானைப் பார்த்து ஓங்கின. சில்லென்று ஒரு சொட்டு ஜலம் தங்கள் வாயில் விழாதா என்று குருவிகள் வாயைப் பரிதாபமாக மூடித் திறந்தன. ஆனால், ஆகாயம் நிர்மலமாக இருந்தது. கண்ணுக்கு எட்டிய தூரம் வரை ஒரே நீல மயம். ஒரு சிறு வெண் மேகம் கூடக் காணோம். அப்படி இருக்கும்போது மழை எங்கிருந்து பெய்துவிடப் போகிறது.

ஆற்றின் நடுவில் ஜீவநதி மணலை அரித்துக் கொண்டு ஓடியது. தண்ணீருக்குக் கீழே கிடந்த மணல் சூரிய ஒளியில் வைரங்களைப் போல் மின்னியது. ஆற்றிலே ஜலம் திரட்டிப் போவதற்காகக் கரையில் இருந்த கிராமத்திலிருந்து இரண்டு பெண்கள் இடுப்பில் குடத்துடன் வந்து கொண்டிருந்தார்கள். அதில் ஒருத்திக்கு நடுத்தர வயசாக இருக்கலாம். மற்றொருத்தி இளம் பெண். முந்தியவள் நிதானமாகவும், பணிவாகவும் நடந்து வந்தாள். இளம் பெண் துரு துருவென்று நடந்து குதி போட்டு ஓட்டமும் நடையுமாக வந்தாள். வியர்க்க விறுவிறுக்க இருவரும் 'உஸ் உஸ்' என்று சொல்லிக் கொண்டே நிழல் இருக்கும் இடங்களில் பாதங்களை மாறி மாறி வைத்துக் கொண்டே நடந்தார்கள். கால்கள் வெயிலின் கடுமை தாங்காமல் செக்கச் செவேலென்று சிவந்து இருந்தன.

"போயும், போயும் இந்த வேளையைப் பார்த்து ஜலத்துக்குக் கிளம்பினேமே மாமி?" என்று இளம் பெண் சிறிது மனத் தாங்கலுடன் பெரியவளைப் பார்த்துக் கேட்டாள்.

"என்ன செய்கிறது ஜகது? காலையில் கொண்டுவந்த ஜலமெல்லாம் ஆகிவிட்டது. பள்ளிக் குழந்தைகள் போக வர ஜலம் சாப்பிட என் வீட்டிற்குத் தான் வருகிறார்கள். இந்த மாதிரி வெயில் நெருப்பாய் எரிக்கிறதே! குடிக்க ஜலம் இல்லை என்று சொல்ல

முடியுமா?'' என்றாள் நாகலக்ஷ்மி என்கிற அந்தப் பெண்.

''ஹாம்'' என்று ஆயாசத்துடன் இருவரும் ஓடும் நதியில் இறங்கினர் ஜலம் திரட்டுவதற்காக. மறுபடியும் நாகலக்ஷ்மியே பேசினாள்:

''வருஷம் நான்காகிறது நல்ல மழை பெய்து. பூமியே வரண்டு கிடக்கிறது பார்; பாளம் பாளமாக வெடித்து ஈரப்பசை இல்லாமல், பூமியின் வறட்சி அடங்குவதற்கே எவ்வளவு மழை பெய்தாலும் போதாது. பூமாதேவி பச்சைப் பசேல் என்று பசுமை போர்த்திப் பூவும், காயும், தானியமும், மலருமாய் இருப்பதைப் பார்த்து எவ்வளவோ காலமாச்சு ஜகது. நான் சிறியவளாக இருக்கும் போது பூமியில் எங்கே பார்த்தாலும் பச்சைப் பசேல் என்று புல் முளைத்திருக்கும். வயல்களில் கண்ணுக் கெட்டிய தூரம் வரைக்கும் பயிர்கள் மரகத வண்ணத்தில் காட்சி அளிக்கும். வாய்க்காலில் சதா சல சல வென்கிற சத்தத்துடன் ஜலம் அரித்துக் கொண்டு நொப்பும், நுரையுமாக ஓடும். வயல்களைப் பாரேன் தாயில்லாத குழந்தைகள் மாதிரி, கள்ளி முளைத்துக் கரம்பாகிக் கிடப்பதை! அதனால் தான் ஜனங்களும் கிராமங்களை விட்டு நகரங்களுக்குப் போய் விட்டார்கள். மழை இல்லாமல் அவர்கள் வயல்களில் என்ன வேலை செய்ய முடியும்?''

''வர வர கொல்லைக் கிணற்றில் ஜலம் பாதாளத்தில் போய்விட்டது மாமி'' என்றாள் ஜகதா வருத்தத்துடன்.

''இந்தச் சமயத்தில் நல்ல மழை பெய்தால்தான் உண்டு. இல்லாவிட்டால் ஜனங்கள் குடி தண்ணீருக்குக் கூட அவதிப்பட வேண்டியது தான்'' என்றாள் நாகலக்ஷ்மி.

இப்படிப் பேசிக் கொண்டே இருவரும் ஆற்றங்கரையை அடைந்தார்கள். ஆற்று மணல் பொடிப் பொடியாகக் கால்களில் ஒட்டிக் கொண்டது. இருவரும் ஆற்றில் இறங்கி நான்கு கை குளிர்ந்த ஜலத்தை அள்ளிக் குடித்தார்கள். அந்தக் கடுங் கோடையில் கூட நதியின் ஜலம் குளிர்ச்சியாகத்தான் இருந்தது, துன்பத்துக்கும், அதர்மத்துக்கும் இடையில் எழும் கடவுளின் கருணையைப் போல. பிறகு, ஜலத்தைக் குடங்களில் நிரப்பிக் கொண்டே வந்த வழியே வீடு திரும்ப ஆரம்பித்தார்கள். இருவரும் சிறிது தூரம் மௌனமாக நடந்து சென்ற ஜகதா ஏதோ நினைத்துக் கொண்டவள் போல், ''ஏன் மாமி? மழை பெய்வதற்கு ஏதாவது விழா நடத்தக் கூடாதா?'' என்று கேட்டாள்.

''இந்திரனுக்கு மழையை வேண்டி அந்த நாளில் விழா நடத்துவார்கள். பாரதக் கதையில் விராட பர்வம் வாசித்தால் மழை கொட்டு கொட்டென்று கொட்டித் தீர்த்து விடும்.''

''அதெல்லாம் பெரியவர்கள் முயற்சி செய்து செய்ய வேண்டிய விஷயங்கள், நாம் ஏதாவது செய்ய முடியுமா மாமி?'' என்று விசாரித்தாள் ஜகதா. படை பதைக்கும் வெயிலில் நடக்கும் போதுதான் நிழலின் அருமையும், மழை வேண்டும் என்கிற ஆர்வமும் அதிகம் ஏற்பட்டது.

''ஓ! பேஷாகச் செய்யலாமே. பெண் குழந்தைகளுக்கும் பள்ளிக் கூடம் லீவு விட்டு விடுகிறார்கள். அவர்களுக்கும் பொழுது போன மாதிரி இருக்கும். எங்கள் ஊரில் சிறுமிகள் கண்ணனுக்கு உற்சவம் ஒன்று நடத்துவார்கள். வீடு வீடாகச் சென்று அவன் புகழ் பாடிக் கும்மியும், கோலாட்டமும் போடுவார்கள். ஒரு ஊர் இல்லாமல், அருகில் இருக்கும் கிராமங்களுக்கும் சென்று கோலாட்டம் போட்டு வசூல் ஆகும் பணத்தைக் கொண்டு கண்ணனுக்கு விழாக் கொண்டாடுவார்கள். நான்கூடக் கோலாட்டம் போட்டு ஜரிகைக் கரை பாவாடை பரிசாக அடைந்திருக்கிறேன், ஜகது!''

''பரிசு கிடக்கட்டும் மாமி! மழை பெய்ததா?'' என்று சந்தேகத்துடன் கேட்டாள் ஜகதா.

"அப்பொழுது என்னவோ உற்சவம் முடிந்த தினம் மழை நன்றாகப் பெய்தது நினைவிருக்கிறது. எதிலும் நம்பிக்கை வேண்டும்மா" என்று சிறிது நிஷ்டூரமாகப் பதிலளித்தாள் நாகலக்ஷ்மி.

இருவரும் அத்துடன் தத்தம் வீடுகளுக்குச் சென்று விட்டனர்.

## 2

கோடை விடுமுறைக்காகப் பள்ளிக்கூடங்களை மூடி விட்டார்கள். குழந்தைகள் பொழுது போகாமல் வீட்டில் கொட்டமடித்தனர். சில தினங்களுக்கு முன்பு ஆற்றங்கரையில் உருவான யோசனை நாகலக்ஷ்மியின் மனதில் நிலை பெற்று விட்டது. அதை ஒரு தினம் தன் கணவனிடம் மெதுவாக வெளியிட்டாள்.

"ஊரிலே வம்பளப்பு பிரமாதமாகக் கிளம்பி விடுமே" என்றார் கிருஷ்ணமூர்த்தி.

"ஜனங்கள் எதைப் பற்றித்தான் குறை கூறாமல் இருக்கிறார்கள்?" என்று நாகலக்ஷ்மி கேட்டாள்.

"உனக்கு எதற்கெடுத்தாலும் ரோஸம் பொத்துக் கொண்டு வருமே?" என்றார் அவர்.

"நல்ல விஷயம் என்று ஏதாவது செய்தால் நம்ம ஜனங்கள் அதிலிருக்கும் குறைகளை ஆராய்ந்து கண்டு பிடிப்பதிலேயே கருத்தாக இருப்பார்கள். நீ ஆரம்பிக்கப் போவது என்னவோ நல்ல காரியம் தான். இருந்தாலும் ஜனங்கள் இதைப் பற்றி வம்பளக்காமல் இருக்கவேண்டுமே?" என்று மேலும் கிருஷ்ணமூர்த்தி எச்சரிக்கை செய்தார் நாகலக்ஷ்மிக்கு. அவர் பேச்சில், மனைவியின் கோழை மனதைப் பரிகாசம் செய்யும் அர்த்தம் நிரம்பி இருந்தது.

"யார் என்ன வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளட்டும். நான் கண்ணனுக்கு உற்சவம் ஆரம்பிக்கத்தான் போகிறேன்" என்று அழுகை கலந்த சிரிப்புடன் கூறி விட்டு, நாகலக்ஷ்மி அன்றே அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய ஆரம்பித்தாள். அவளுக்குக்கூட மாட உதவிக்காக ஜகதாவையும் சேர்த்துக் கொண்டாள். விஷயம் ஒரு நொடியில் எல்லா வீடுகளுக்கும் பரவி விட்டது. பெண் குழந்தைகள் கோலாட்டக் கழிகளுடன் நாகலக்ஷ்மியின் வீட்டில் குழுமி விட்டனர்.

வீட்டில் இருந்த சிறு மேஜை ஒன்றின் நடுவில் சிறிய பலகையைப் பொருத்தி அதன் நடுவில் மாடு மேய்க்கும் கண்ணன் உருவத்தைப் பிரதிஷ்டை செய்தார்கள். மேஜையின் நாற்புறமும் வாழைக் கன்றுகள் கட்டி, மாவிலைத் தோரணங்களும் கட்டினார்கள். ஒவ்வொருவர் வீட்டிலிருந்தும் பூமாலைகள் வந்து சேர்ந்து விட்டன.

ஆயிற்று, அடுத்த தினத்திலிருந்து பெண்கள் வீடு விடாகச் சென்று கோலாட்டமும், கும்மியும் போட்டுச் சம்மானம் பெறவேண்டும். இந்த ஆட்டத்தில் பங்கெடுத்துக் கொள்ளும் ஒவ்வொரு பெண்ணுக்கும் கடைசி நாளன்று ஏதாவது பரிசு அளிப்பது வழக்கம். பெண் குழந்தைகள் உற்சாகமாகக் கலந்து கொண்டார்களே தவிர, அவர்கள் வீட்டார் ஏதாவது சொல்லாமல் இருப்பார்களா?

"ஆமாம். இந்த வேகிற வெயிலில் வீடு வீடாக அலைந்து படுத்துக் கொண்டால் என்ன செய்கிறது?" என்று ஒருவர் ஆட்சேபணையைக் கிளப்பினார்.

"இதிலெல்லாம் தான் மழை பெய்துவிடப் போகிறது! நம்ம தேசத்தில் இந்த பழைய வழக்கத்தில் இருக்கும் நம்பிக்கை போக வேண்டும். மேல் நாடுகளைப்போல் நாமும் விஞ்ஞான முறையில் இதற்கெல்லாம் ஆராய்ச்சி செய்ய வேண்டும்" என்று கடவுளையே மறந்து விட்டுக் கூறினார் ஓர் ஆராய்ச்சியாளர்.

"நாகலக்ஷ்மியா? நாலு குழந்தைகள் இருந்து, வீட்டில் வேலை இருந்தால் ஆட்டமும் பாட்டமும் இருக்காது. ஒரே குழந்தை. அந்தப் பெண்ணுக்கும் பத்து வயசுக்கு

மேலே ஆகிறது. வீட்டிலே வேலை இல்லை; கிடந்து திண்டாடுகிறாள்'' என்று கிராமத்து ஸ்திரீகள் ஆற்றங் கரையில் சுடுகிற வெயிலையும் லக்ஷ்யம் செய்யாமல் வம்பளந்தார்கள். சிலர் வம்பும் அளந்து விட்டு நாகலக்ஷ்மியிடம் போய் மற்றவர்கள் கூறுவதைக் கயிறு திரித்தும் கூறினார்கள்!

பெரியவர்களின் மனம் தான் ஏற்றத் தாழ்வுகளையும், குற்றங் குறைகளையும் ஆராய்ந்ததே தவிர விழாவில் கலந்து கொள்ளும் குழந்தைகளின் மனம் நிர்மலமாக இருந்தது. பகலெல்லாம் பாட்டுப் பாடிக் களித்தனர். இரவில் மோகன கிருஷ்ணனுடன் கற்பனை உலகில் புன்முறுவல் தவழ விளையாடினர். தூங்கும் அவர்கள் முகத்தில் தவழும் சாந்தியும், புன்முறுவலுமே அதற்குச் சாட்சியாக அமைந்திருந்தன.

"இத்தனை கஷ்டப்படுகிறோமே; கடவுள் கிருபை செய்யப் போகிறாரோ? இல்லை முகத்தில் சேற்றைப் பூசப் போகிறாரோ? நாளைக்குக் கடைசி நாள். கிருஷ்ணனுக்குப் பூஜை செய்து முடித்ததும், குழந்தைகளுக்குச் சம்மானம் தர வேண்டும். யார் எது சொன்னாலும் அவர்கள் தான் இந்த விழாவில் முகத்தைக் கோணாமல் கலந்து கொண்டவர்கள்!'' என்று மனதில் கவலையுடன் தன் கணவனிடம் கூறிக் கொண்டிருந்தாள் நாகலக்ஷ்மி.

"பாரேன்! தினத்தை விட இன்று வெயில் அதிகம். டவுனில் 107 டிகிரிக்கு மேலாகப் பேப்பரில் போட்டிருந்தான். குடிக்கத் தண்ணீர் இல்லாமல் ஜனங்கள் கஷ்டப்படுகிறார்கள். ஆற்றில் ஜீவநதி கூட வற்றி விட்டது. அணுகுண்டு எதுவுமில்லாமல் சூரிய பகவானே உலகத்தை எரிக்கப் புறப்பட்டிருக்கிறானோ என்னவோ என்று கூட எனக்குத் தோன்றியது'' என்றார் அவள் கணவர். இருவரும் நிர்மலமான ஆகாயத்தை அண்ணாந்து பார்த்தனர். வான வீதியில் தாரகைகள் வைரங்களைப் போல் சுடர் விட்டன. நீல நிற ஆகாயத்தில் பதித்த வெண் கற்கள் போல் அவை ஜ்வலித்தன. எங்கேயும் தப்பித் தவறிக்கூட ஒரு வெண் மேகமோ ஒரு சிறு சலனமோ இல்லை.

"எனக்கு அப்பவே தெரியும் நாகு! இந்தக் காலத்திலாவது, விழா செய்தால் மழை பெய்கிறதாவது! நீதான் பைத்தியம் மாதிரி கிடந்து அலைந்தாய். பாரேன்; நாளைக்கு என் சிநேகிதர்களெல்லாம் என்னைக் கேலி செய்யப் போகிறார்கள்'' என்றார் அவள் கணவர். மனமுடைந்து நாகலக்ஷ்மி நிராசை அடைந்தாள். "கடவுளை நம்பினால் இப்படியா அவன் கைவிடுவது?'' என்று கடவுளை நிந்தித்தது அவள் மனம்.

## 3

அன்று தான் விழாவின் கடைசி நாள். அதிகாலையில் எழுந்து நாகலக்ஷ்மி ஆற்றில் ஸ்நானம் செய்யப் புறப்பட்டாள். வெள்ளி மட்



டும் கீழ்த் திசையில் முளைத்திருந்தது. இருள் இன்னும் நீங்கவில்லை. கூடத்திலே சிறு பந்தலின் கீழே கண்ணன் வேய்ங்குழல் இசைத்துக் கொண்டு நின்றான். நந்தாவிளக்கின் ஒளியில் நீலமேகவண்ணனை ஒருமுறை நீர் தேங்கும் கண்களால் பார்த்தாள்.



''கோவர்த்தன கிரியைக் குடையாய்ப் பிடித்தவண்டி'' என்று குழந்தைகள் கோலாட்டம் போட்ட பாட்டு அவள் நினைவுக்கு வந்தது. மலையையே குடையாகப் பிடிக்கும் அளவுக்கு அவன் அருளால் அந்த யுகத்தில் மழை பொழிந்தது. இன்று அவன் அருளும் வற்றிவிட்டதோ?

''நாகு! நாகு!'' என்று அவள் கணவன் இரண்டு முறை கூப்பிட்டான். ''ஏன், இதோ இருக்கிறேன்'' என்றாள் நாகலக்ஷ்மி. ''தனியாக ஆற்றுக்குப் போகாதே. நான் வேண்டுமானால் துணைக்கு வருகிறேன்'' என்றார் அவர். அவர் குரலில் பச்சாதாபமும், இங்கிதமும் கலந்து ஒலித்தன.

ஆனால், அன்று அவள் மனம் தனிமையைத் தான் நாடியது. ஏகாந்தமாக அந்தப் பரம்பொருளிடம் முறையிட்டு வேண்ட அவள் தனிமையைத் தான் நாடினாள்.

விழாவின் விருந்துச் சாப்பாட்டைத் தயாரிப்பதற்காகச் சமையற்காரன் கூட வந்து விட்டான். ''அம்மா! அண்டாக்களில் ஜலம் நிரப்ப வேண்டுமே. கிணற்றிலே சேறும் சகதியும் தான் இருக்கிறது. பண்ணையார் வீட்டு ஊரணியில் தான் ஜலம் கொஞ்சம் தெளிவாக இருக்கிறது. யாராவது கொஞ்சம் என்னுடன் வந்து சிபாரிசு செய்தால் போதும். கொண்டு வந்து நிரப்பி விடுகிறேன்'' என்றான் அவன்.

''இதோ பாருங்கள்! கொஞ்சம் போய்ச் சொல்லிவிட்டுவாருங்களேன்'' என்றாள் நாகலக்ஷ்மி.

''அவரிடமா? வெறும் வாயை மெல்லுகின்றவருக்கு ஒரு பிடி அவல் கிடைத்தமாதிரின்னா இருக்கும் இப்போது? அவர் உன்னைப் பற்றியும் என்னைப் பற்றியும் கொஞ்சமாகவா பேசுகிறார்?'' என்றார் அவர். தம்பதியின் சச்சரவைக் கவனித்தார் சமையற்காரர் பேசாமல், வருகிறது வரட்டும். என்று நினைத்து, குடத்துடன் பண்ணையார் வீட்டை நோக்கிப் புறப்பட்டு விட்டார், யாரும் சிபாரிசு செய்யாமலேயே. அங்கே கிணற்றங்கரையில் பண்ணையார் உரத்த குரலில் தம் அண்டை வீட்டுக்காரிடம் பேசிக் கொண்டிருந்தார்: ''இவர்கள் மழைக்கு விழாக் கொண்டாடப் போக என் வீட்டுக் கிணற்றில் சேறுதான் மிஞ்சப் போகிறது!'' என்று.

ஆற்றில் ஸ்நானத்தை முடித்துக் கொண்டு வரும் வழியில் ஜகதாவைச் சந்தித்தாள் நாகலக்ஷ்மி.

''நீயும் வராமல் இருந்து விடாதடி ஜகது! என்னவோ பைத்தியம் மாதிரி ஆரம்பித்து விட்டேன். முடித்துத்தானே ஆக வேண்டும்?'' என்று சலிப்புடன் பேசினாள் நாகலக்ஷ்மி அவளிடம்.

''என்னவோ பார்க்கலாம் மாமி'' என்று விட்டு அசிரத்தையுடன் போய் விட்டாள் ஜகதா.

அன்று விழாக்கொண்டாட்டம் அமர்க்களப்பட்டது. கொளுத்துகிற வெயிலையும் லக்ஷியம் பண்ணாமல் எல்லோரும் சாப்பாட்டுக்கு வந்திருந்தார்கள்.

"இந்த வெயிலிலே பானையில் பானகத்தைக் கரைத்து வைத்தால் குளிர்ச்சியாக இருக்கும்"

"அடி அப்படியே மணலிலே ஒட்டிக்கொண்டு விட்டது! ஆற்றங்கரையிலே நெருப்புக் கட்டி வீசறது" என்று சொல்லிக் கொண்டே ஒருவர் விசிறியைக் குளிர்ந்த ஜலத்தில் நனைத்து விசிறிக் கொண்டார்.

அன்று வந்திருந்த ஒவ்வொருவரும் வெயிலைப் பற்றிப் பேசும்போதெல்லாம் தன்னை கேலி செய்வதாகவே நினைத்துக் கொண்டாள் நாகலக்ஷ்மி.

"மழையாவது பெய்கிறதாவது! என்னவோ லீவிலே குழந்தைகளுக்கு ஒரு பொழுது போக்காக ஆச்சு" என்று சொல்லிக் கொண்டே தொன்னையுடன் பாயசத்தை உறிஞ்சினார் ஒருவர். எல்லோரும் வயிரூற உண்டனர். மறைமுகமாகக் கேலி செய்தார்கள். "உஸ்! வெயில், வெயில்!" என்று சமயம் நேர்ந்த போதெல்லாம் பேசினார்கள்.

விழாவின் அமர்க்களம் குறைந்த பிறகு நாகலக்ஷ்மி பகவானின் பிரசாதமாக ஒரு டம்ளர் பாயசம் மட்டும் சாப்பிட்டாள். வெற்றியையும் தோல்வியையும் ஒன்றாகக் கொள்ள வேண்டும் என்பது கண்ணனின் வாக்கல்லவா? கடமையைச் செய்துவிட்ட பெருமை அவள் முகத்தில் நிரம்பி இருந்தது. ஆனால் எங்கேயோ ஒரு சிறு குறை தோன்றி அவள் மனதை அரித்துக் கொண்டே இருந்தது. ★

யாரைக் கண்டு காதல் கொண்டு, சிவபிரானின் உதவியால், சுந்தர மூர்த்தி சுவாமிகள் மணம் புரிந் தாராம்.

இன்னும் திருஞான சம்மந்த மூர்த்தி சுவாமிகள் திருவொற்றி யூர் வந்துள்ளதை கேள்விப் பட்டு, மயிலாப்பூரில் வாழ்ந்த சிவநேசர் என்பார் சம்மந்த மூர்த்தி சுவாமிகளை வழிநெடுகப் பந்தலிட்டு மயிலாப்பூருக்கு அழைத்து வந்தாராம். எனவே திருவொற்றியூரிலிருந்து மயி லாப்பூர் வரையில் தமிழ்ப் பற் றுள்ள தமிழர்கள் வாழ்ந்திருந் தார்கள் என்பதற்கு இது நல்ல தோர் சான்றாகும்! என்று பேசிக்கொண்டே சென்ற தால், காரோட்டியும் காரை மிக வும் நிதானமாகவே ஓட்டினன். காரும் கோவிலின் எதிரில் போய் நின்றது. காரை விட்டு இறங் கியதும் எல்லோரும் கோவிலை நோக்கிச் சென்றோம். கோவி லுக்குள் கல்வெட்டுகளும் சிற்ப வேலைப் பாடுகளும் நிறைந்து இருக்கின்றன கோவிலைச் சுற்றி லும் நல்ல இடவசதிகள் இருக் கின்றன. சரித்திரச் சம்மந்தமான ஒரு பெரிய பாறையும் இருக்



கோயிலில் செதுக்கப்பட்டுள்ள ஒரு சிலை.

கிறது. அர்ச்சகர் ஒவ்வொன்றுக் கும் ஒரு விளக்கம் கொடுத்தார். கோவிலுக்கு வெளியில் சுமார் ஆயிரமாண்டுகளுக்கு முன் செய் யப்பட்ட சிற்பம் ஒன்று ஊன மடைந் திருப்பதையும் கண்டோம்.

இவ்வளவு சிறப்புடைய இக் கோவில் சென்னைக்கு அருகில் பஸ் வசதிகளுடன் இருந்தும், இன்னும் பலகோடி மக்கள் இத் தேவாலயத்தைக் காணுமல் இருக்கிறார்கள் அன்றோ? ஃ

# கல்யாணச் சீட்டு

— ஸரோஜா ராமமூர்த்தி —

**த**ணிகாசல முதலியாரும், மரியநாதனும் வழக்கம்போல் திண்ணையில் வந்து உட்கார்ந்தார்கள். அப்பனே ஆறுமுகம்! என்றவாறு ஒரு சிமிட்டா பொடியை எடுத்து உறிஞ்சினார் தணிகாசல முதலியார்.

"என்னங்க முதலியார் சாப்பாடு எல்லாம் ஆச்சா? என்று கேட்டு விட்டு. "ஏவ்" என்று ஒரு ஏப்பம் விட்டார் மரியநாதன்.

"என்ன சாப்பாடு போங்க! படி அரிசி ஒண்ணேகால் ரூபாய் கொடுத்து வாங்கி அதைச் சாப்பிடும்போது ஒரு திருப்தி ஏற்படுதா? ஒரு படிக்கா ஒண்ணேகால் ரூபா கொடுக்கிறோம்னு வயிறு கிடந்து 'பகிர்' என்கிறது போங்க. அப்புறம் சாப்பாடு எங்கே ஒடம்புலே ஒட்றது?

மரியநாதன் ஒரு மாதிரியாகச் சிரித்தார். "அதாங்க நான் இந்த அரிசிச் சோற்றையே விட்டுத் தொலைச்சேன். நாலு சப்பாத்தி சாப்பிட்டுட்டு, தண்ணி குடிச்சா போதுங்க...பழக்கமாயிடுச்சி..."

"நீங்க வடக்கே நாலு ஊரு சுத்தி இருக்கீங்க. நான் எங்கே போனேன்? சிறுமணியும் சின்னச்சம்பாவும் சாப்பிட்டு வழக்கமாப் போச்சுங்க. ஹூம் ... பழசை நினைச்சு என்னங்க சொகம்...?"

தணிகாசல முதலியார் வெற்றிலையைக் கிழித்துக் கிழித்துவாயில் அடக்கிக்கொண்டு குதப்பினார்.

மரியநாதன் கண்ணை மூடிக் கொண்டு சிந்தனையில் ஆழ்ந்தார். மாலை மங்கி நன்றாக இருட்டி விட்டது. இரண்டு நண்பர்களும் தம் இராச்சாப்பாட்டை முடித்த பிறகு விச்ராந்தியாக திண்ணையில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். தினசரி அவர்கள் அவ்விதம் பொழுது போக்குவது வழக்கம்.

உள்ளேயிருந்து மரியநாதனின் மனைவி ஜானம்மா ஒரு குவளை மோர் கொண்டுவந்து கணவரின் எதிரில் வைத்தாள். பிறகு பணிவுடன் "ஏங்க' அவர் மக சாந்தி ஆபீஸிலிருந்து வந்திடிச்சான்னு கேளுங்க" என்று தன் கணவரைப் பார்த்தவாறுகேட்டாள். தணிகாசல முதலியார் வாயில் குதப்பிக்கொண்டிருந்த வெற்றிலைச் சக்கையைக் கீழே துப்பி விட்டு, "ஏங்க! உங்க மகளும் இன்னும் வரலையா? இரண்டுமாச் சேர்ந்துகிட்டு எங்கே போச்சுங்களோ? ஹூம் அதான் நான் இந்தக் குழந்தைகளை வேலைக்கு அனுப்பக்கூடாதுன்னு சொன்னேன். நம்பவீட்டிலே இருக்குது பாருங்க. அதாங்க என் சம்சாரம்! அதுக்குத்தான்மகளை வேலைக்கு அனுப்பணும்கிறது என்று அலுப்புடன் ஜானம்மாவுக்கு மறைமுகமாகப் பதில் அளித்தார்.

"ஏங்க" என்று உள்ளே யிருந்து குரல் கொடுத்தாள்' முதலியாரின் மனைவி வள்ளியம்மை.

"ஏன்? வெளியேதான் வாயேன். மகளை மாத்திரம் நாகரீகமா ஆபீசுக்கு அனுப்பிறியே. நீ உள்ளே புகுந்துகிட்டு பழமை மாறும்!......" தணிகாசல முதலியார் சற்றுக் கடுமையாகவே வள்ளியம்மையை அழைத்தார். அந்த அம்மாள் திண்ணைக்கு அடுத்தாற்போல் இருந்த நிலைக்கதவோரத்தில் நின்று "ஏம்மா! உங்க மக பரிமளம் உங்ககிட்டே சொல்லலியா? இன்னிக்கி ஆபீசிலே வேலை அதிகமாம் ஞாயிற்றுக்கிழமையானாலும் வந்து வேலையைமுடிச்சுட்டுப்போங்கன்னு ஆபீசர் உத்தரவு போட்டாராம். பாவம் இரண்டும் காலமபோனது. இப்ப வந்திடுவாங்க......என்றாள் அடக்க வொடுக்கமாக.

"என்ன வராங்களோ? இந்தப் பொண்ணுக்காகத்தான் சார் நான்

இந்த உப்புத் தண்ணி ஊர்லே இருந்து சாகிறேன் தள்ளாத வய சிலே ஏன் கிடந்து திண்டாடறீங்க? வந்துடுங்கன்னு ஊர்லேந்து காயி தம் போட்டு கிட்டே இருக்கான். முத்துப்போல நல்ல தண்ணியாவது குடிக்கலாம்......" தணிகாசல முத லியார் வெறுப்பும், அலுப்புமாகச் சலித்துக் கொண்டே திண்ணையில் சாய்ந்து படுத்தார்.

"கர்த்தர் நம்மையெல்லாம் இப் படி ஆட்டி வைக்கிருர் சார். நான் மட்டும் என்ன? பரிமளத்தைப் படிப்பு முடிஞ்சதும் கட்டிக் கொடுத் திடலாம்னேன். நல்ல படியா குடும் பம் நடத்த, அறிவு வளர பெண் பிள்ளைகளுக்குப் படிப்பு தேவைப் படுது. படிச்சாச்சு. கல்யாணம் பண்ணிக் கொடுத்துட்டா பெத்த வங்க பொறுப்பு உட்டுது பாருங்க"

இரண்டு வீட்டுப் பெண்களும் ஒரே பக்கம்சென்று இவர்கள் பேசு வதைக் கேட்டுக் கொண்டே நின் ருர்கள்.

''அதான்! அதான் நான் சொல் றது. மடியிலே நெருப்பைக் கட்டிக் காக்கறதும் கன்னிகையைக் காக் கறதும் ஒண்ணும்பாங்க பெரிய வங்க. ஹூம்... ஆறுமுகம்!" என்று அரைத்தூக்கத்தில் லயித்தார் தணி காசலமுதலியார். வெளியே செருப் பொலி கேட்டது. 'நைலான்' காற் றில் பறக்க சாந்தியும், பரிமளாவும் படியேறி வந்தார்கள்.

''ஏம்மா! இவ்வளவு நேரமா ஆபீசிலே இருந்தீங்க! அவ்வளவு பெரிய கட்டிடத்திலே தனியா எப் படீம்மா இருக்க முடிஞ்சுது?" என்று இரு தாய்மார்களும் தத்தம் மகளை வரவேற்று உள்ளே அழைத் துப்போய் உணவு பறிமாறுர்கள்.

★

**சா**ந்தியின் படிப்பு முடிந்ததும் வரன் தேடுவதில் முனைந்திருந்தார் தணிகாசல முதலியார். எந்தப் பிள் ளையைப் பற்றி விசாரித்தாலும் 'பிள்ளை மார்க்கட்டின்' விலை ஏறி யே இருந்தது. படிப்பு, அந்தஸ் துக்குத் தகுந்தபடி சீர் வரிசைகள் ஏறுமுகமாக இருந்தன. சாந்தியின் கல்யாணம் முடிய வேண்டுமானல் ரொக்கமாக ஐயாயிரம் ரூபாய் தேவையாக இருந்தது. இருந்த பணத்தைக் கொண்டு மகனையும், மகளையும் படிக்க வைத்துவிட்டார், தணிகாசலம். மகன் வேலையில் அமர்ந்து அவன் வயிற்றுப்பாட்



டைப் பார்த்துக் கொள்கிருன். மகள்? படிப்புச் செலவுடன், கல்யாணச் செலவும் சேர்ந்து செய்ய வேண்டிய நிலையில் இருந்தாள்.

இந்தச் சமயத்தில் அடுத்த வீட்டு மரியநாதன் தம் மகளை வேலைக்கு அனுப்புகிற விஷயம் தணிகாசலத்தின் காதில் விழுந்தது.

"என்னங்க இது? நான்கேள்விப் படறது? பரிமளம் மூணு மாசமா வேலைக்குப் போவுதாமில்லே! ஏங்க! அப்படி? பூவைப் போல அலுங்காம இருக்க வேண்டிய பெண்களை ஏங்க வெயிலிலும், மழையிலும் வாடவைக்கணும்? லட்சணமா கல்யாணம் பண்ணிக் கொடுத்திடுங்க" என்ருர் தணிகாசலம், மாதா கோவிலில் பிரார்த்தனையை முடித்துக்கொண்டு திரும்பும் மரியநாதனைப் பார்த்து.

மரியநாதன் தம் ஹிட்லர் மீசையைத் தடவி விட்டுக் கொண்டு, வெண்பற்கள் தெரியச் சிரித்தார்.

"ஏங்க! மருமகன் வருகிருன்னு எனக்கும் பெருமை தாங்களே? முன்னெல்லாம் கல்யாணம்னு சுலபமா எங்க சமூகத்திலே முடிஞ்சிடும். இப்ப பாருங்க ஒருத்தரைப் பார்த்து ஒருத்தர் கத்துக்கிட்டாங்க. சீரார், வரிசையாம், ஆயிரக்கணக் கணக்கால்ல பிள்ளையைப் பெத்தவங்க கேக்கருங்க? 'பர்னிச்சர்' கடையிலேந்து பாத்திரக்கடை வரைக்கும் கொண்டாங்கருங்க. அது சுயமா சம்பாதிச்சு நாலு காசு சேக்கட்டுங்க, தன்னாலே மருமகன் வந்துட்டுப் போருன்" தணிகாசல முதலியார் விண்ணை அண்ணாந்து பார்த்து. "அப்பனே! ஆறுமுகம்!" என்று சொல்லிக் கொண்டு வீட்டுக்கு நடையைக் கட்டிஞர்.

வீட்டிலே மனைவி அவரை எதிர் கொண்டு அழைத்தாள். சாந்தி நிலைக்கண்ணாடியின் முன் நின்று கூந்தலைக் குதிரைவால் கொண்டையாக முடிந்து, ரோஸ் 'சிப்பான்' புடவை உடுத்திக் கொண்டு எங்கோ வெளியில் கிளம்பத் தயாராக நின்றிருந்தாள்.

தணிகாசலம் மகளை ஏற இறங்கப் பார்த்தார்.

"என்னம்மா இது வேஷம்! சோளக்கொல்லை பொம்மை மாதிரி இந்தப் புடவை யார் எடுத்துக் கொடுத்தாங்க?"

புடவையைப் பத்தியும், நகையைப் பத்தியும் ஆண் பிள்ளைகளுக்கு என்னங்க தெரியும்? இந்தக் காலத்து மாதிரி எத்தனையோ இருக்குது ஒண்ணு எடுத்துக் கிட்டுது...என்ருள் வள்ளியம்மை.

"சரிதான்! நீ தான் எடுத்துக் குடுத்தியா? ஜோடியா நீயும் ஒண்ணு வாங்கிக்கிறது தானே?"

"அது பரிமளத்து ஆபீசுலே வேலைக்குப் போகப் போவுது மாசம் நூத்தி ஐம்பது ரூபா சம்பளம். ஒரு கல்யாணச் சீட்டு கீட்டுப் போட்டு. நகை நட்டு செஞ்சாக்க, தன்னாலே மாப்பிள்ளை தேடிக்கிட்டு வரான்... வள்ளியம்மை சுற்றி வளைக்காமல் நேரடியாகத் தன் கணவனுக்குப் பதில் கூறினாள். "வேலைக்கா? போகப் போவுதா? வேலைக்கு மனுப் போட்டிருக்கிற விஷயமே எனக்குத் தெரியாதே!"

"நீங்க தான் பத்தாம் பசலியிலே இருக்கிங்களே, உங்க கிட்டே சொன்னு சரீம்பீங்களா? தெரியாம போடச் சொன்னேன். வேலையும் கெடச்சுது......"

சாந்தி தன் ஆள் காட்டி விரலின் நுனியை வாயில் வைத்துச்சுவைத்த வண்ணம் நின்று பெற்ருேர் சொற்போர் தொடுப்பதை ரசித்து மகிழ்ந்தாள்.

"சாந்தி! ஏ சாந்த்! ரெடியா!" என்று கேட்டவாறு பரிமளம் வெங்காயத்தோலை உடம்பில் போர்த்திக் கொண்டு, செருப்புகள் ஒலிக்க உள்ளே வந்தாள். அவளுக்கு அவள் காரியாலயத்தில் பல பெயர்கள் உண்டு. 'நைலான்' சுந்தரி. 'வெங்காயச்சருகு' 'பாம்புச்சட்டை' என்று இப்படி அவளுக்குப் பின்னுல் பேசிச் சிரிப்பார்கள்.

தணிகாசலமுதலியார் தம் இடுங்கிய கண்களை இறுகமூடிக்கொண்டு நாற்காலியில் உட்கார்ந்தார். சாந்தியும், பரிமளாவும் வெளியே சென்ற பிறகு வழக்கம்போல் பூசை அறைக்

குச் சென்று தேவாரம் படிப்பதில் ஈடுபட்டார்.

★

சாந்தி வேலையில் சேர்ந்து அன்று இரண்டாவது சம்பளம் வாங்கினாள். சுளை சுளையாக நூத்தி ஐம்பது ரூபாய்களை எடுத்துத் தன் அழகுப் பையில் வைத்துக்கொண்டு பரிமளத்தைப் பெருமை பொங்கப் பார்த்தாள். இருவரும் சிற்றுண்டி அருந்த வெளியே கிளம்பினார்கள்.

"சம்பளம் வந்துவிட்டது! கொண்டு போய்ப் பெட்டியில் வைத்துப் பூட்டி வைக்கப் போகிறாய்? என்ன? அப்படித்தானே?" என்று கேட்டுக் கொண்டே ஐஸ் கிரீமை விழுங்கினாள் பரிமளம்.

"அம்மாவிடம் கொடுத்து விடுவேன். அவங்க என்னமோ கல்யாணச் சீட்டு கட்டணும்னுங்க" என்று கூறிவிட்டுச் சாந்தி, "பரிமளம்! இன்னும் ஏதாச்சும் சாப்பிடேன்" என்று தோழியை வற்புறுத்தினாள்

"சீட்டா கட்டப் போறாங்க! அதைவிட சுலபமா சம்பாதிக்கிற வழி ஒண்ணு இருக்கே, உனக்குத் தெரியாதா சாந்தி?"

"ஊஹூம்... ...எனக்கு இதெல்லாம் என்னம்மா தெரியும்?" சாந்தி என்றும் அறியாத நற்பாவையைப் போல முகத்தைச் சோகமாக வைத்துக்கொண்டாள்.

"ஆல்ரைட், வெரிகுட், நான் சொல்லித் தருகிறேன் வா! இன்று சனிக்கிழமை இல்லையா? நாளைக்கு நாம் இரண்டு பேருமா கிண்டிக்குப் போறது!"

"போய்?"

"போய் என்ன? கையை கட்டிக்கிட்டு நின்னா பணம் வருமா? பத்து கட்டினால் மூணு பங்கு நாலு பங்கு திரும்பி வந்துட்டுப் போகுது"

"வராமப் போனா?"

"அட சந்தேகப் பிராணியே! ஆரம்பத்திலேயே சந்தேகபடுறியே. ஒரு முப்பது எடுத்து தனியா வச்சுக்க. நாளைக்கு ஆபீசுலே வேலையிருக்குன்னு சொல்லிட்டுக் கிளம்பறது..."

வள்ளியம்மைமகள்சொன்னதை அப்படியே நம்பினாள். ஆபீசிலே நாலு பேராகச்சேர்ந்து சீட்டு கட்டுவதாகவும். மாதம் முப்பது ரூபாய் என்றும் அவள் தெரிவித்தாள். தணிகாசலம் வரவைப்பற்றியோ சிலவைப் பற்றியோகவலைப்படவே இல்லை. மகள் சம்பாதித்து தான் சாப்பிட வேண்டும் என்று என்றுமே அவர்கள் ஆசைப்படவில்லை.

ஐம்பத்தி ஒன்றும் நம்பர் பஸ் ஆடி வழிந்து கொண்டே சைதாப்பேட்டை மேம்பாலத்தைக் கடந்து கிண்டியை நோக்கி விரைந்து கொண்டிருந்தது. பஸ்ஸிலே கூட்டம் நெரித்தது. அன்று இரண்டாம்தேதி ஞாயிற்றுக்கிழமை. ஒரு மாதம் அரும்பாடு பட்டுச் சம்பாதித்த பணத்தை மொத்தமாகவோ, பாதியாகவோ எடுத்துக்கொண்டு கூட்டமாக தத்தம் அதிர்ஷ்டத்தை எடைபோட பந்தய மைதானத்தை நோக்கி விரைந்து கொண்டிருந்தார்கள். பரிமளம் நைலான் புடவையும், சிவப்பு கிரேப் ரவிக்கையும் அணிந்து, கண்களில் பச்சைக்கண்ணாடி அணிந்திருந்தாள். அவள் அருகில் சாந்தி மாமியார் வீட்டினுள் புதிதாக நுழையும் மருமகளைப் போல் பயத்துடன் உட்கார்ந்திருந்தாள். அன்றைய 'ரேஸ் டிப்ஸ்' புத்தகத்தில் 'நீலவேணியும்' 'பட்டு ரோஜாவும்' பிரமாதமாக வர்ணிக்கப்பட்ட குதிரைகளுக்கு நேராக 'மார்க்' செய்து கொண்டாள். பிறகு மெதுவான குரலில், "இதோ பார்த்தியா சாந்தி! பட்டு ரோஜா இருக்கு பாரு, அது பாய்ஞ்சு வரச்சே நீ பாத்தியான்னா அசந்து போவே. கம்பீரமா அது தலையை நிமிர்த்தி ரேஸ் மைதானத்துக்குள் நுழைந்தாலே போதும்!" என்றாள் பெருமையுடன்.

"பெயரெல்லாம் குதிரைகளுக்கு அழகாக வச்சிருக்காங்க நல்ல கலை உள்ளம் படைச்சவங்க போலிருக்கு!"

"நீ அதை கலைங்கிறே நான் அதை கவர்ச்சிங்கிறேன்!" என்று கூறிவிட்டு, முகத்தில் அரும்பிய

வியர்வையைக் கைக்குட்டையால் ஒற்றிக்கொண்டாள். அவர்களுக்கு முன்னால் உட்கார்ந்திருந்த வழுக்கைத் தலை ஆசாமி அவர்கள் இருவரையும், திரும்பிப் பார்த்துப் புன்னகை புரிந்தார்.

கிண்டி ரயில் நிலையத்தில் திடுதிடுவென்று கூட்டம் இறங்கியது. பஸ் தன் சுமையை இறக்கிவிட்ட களைப்பில் பெருமூச்சுடன் சிறிக்கொண்டு கிளம்பியது.

பரிமளாவின் கையைக் கெட்டியாகப்பற்றிக்கொண்டு சாந்தி மேம்பாலத்தைக் கடந்தாள். வழுக்கைத் தலை ஆசாமி அவர்கள் பின்னாலே நடந்து வந்தார். ஏறக்குறைய சாந்தியின் கால்களை மிதிக்கும் அளவுக்கு உராய்ந்து கொண்டு அந்த மனிதர் முன்னேறுவதைக் கண்டதும் சாந்தியின் முகம் ஜிவு ஜிவு என்று சிவந்தது.

"சே, காட்டு மிராண்டிகள்! பெண்களை மதிக்கத் தெரியாதவர்கள்" சாந்தி பொருமினாள்.

"மிதிக்கத் தெரிந்தவர்கள்! இதையெல்லாம் நீ 'மைண்ட்' பண்ணக் கூடாது சாந்தி. உள்ளே போனால் இதைவிடக் கூட்டம் அதிகமாக இருக்கும்."

பெரியவர் மன்னிப்புக் கேட்கும் தோரணையில் பரிதாபமாக அவர்களைப் பார்த்தார்.

"அம்மா! அந்தப் பட்டுரோஜா நல்ல குதிரை தான். ஆனால், அதைச் செலுத்துகிறவன் இருக்கிறானே ஜாக்கி மில்லன் அவனை நம்பக்கூடாது. ஜனங்களுக்குப் 'பேவரட்' குதிரை அதுன்னு தெரிஞ்சா ஒரு வேளை 'புல்' பண்ணலும் பண்ணிவிடுவான்......"

அந்தப் பெரியவரைச் சுற்றி ஒரு கூட்டம் சூழ்ந்துகொண்டது. இந்த விஷயத்தில் மிகவும் அனுபவஸ்தராக விளங்கும் அவரை விடக் கூடாது என்று தீர்மானித்து பரிமளம் அவர் பின்னாலேயே சென்றாள்.

பெரியவர் நீலவேணியும், பட்டு ரோஜாவும் பிரயோசனமில்லை என்று கையை விரித்து விட்டார். 'ராஜசிம்மன்' தான் 'பெஸ்ட்' என்று ஆலோசனை கூறினார்.

"ஏங்க! நீங்க எங்கே இருக்கிறது?" என்று கேட்டாள் சாந்தி.

'தண்டையார் பேட்டையில், கொல்லவாரு அக்ரகாரத்தில் அம்மா. என் மக 'போர்ட்டிரஸ்டில்' வேலையாக இருக்கு, நேத்தி சம்பளம் வந்திச்சு. இப்படி நான் கேக்கறப்போ இருபது முப்பது கொடுக்கும்...'

வயிற்றில் பிறந்த பெண் உத்தியோகம் செய்து கொடுக்கும் பணத்தை ரேஸில் பறக்கவிட அந்தப் பெரியவர் தயாராக இருந்தார். அதைப் பெருமையாகவும் கருதினார்.

பரிமளம் சாந்தியின் கையைப் பிடித்து மெதுவாகக் கிள்ளினாள். பிறகு "பாத்தியா? சும்மா பயந்து செத்தியே! எவ்வளவு பெரியவங்கள்ளாம் வராங்க பாரு" என்றாள்.

அன்று நீலவேணியும், பட்டு ரோஜாவும் சொல்லி வைத்தாற் போல் கடைசியில் வரிசையாக வந்தன.

கிண்டி ரயில் நிலையத்தில் முகம் கன்றிச் சிவக்க, கூந்தல் காற்றில் பறக்க, நாக்கு உலர சோக சித்திரங்களாக பரிமளமும், சாந்தியும் நின்றிருந்தார்கள்.

வீட்டிலே வள்ளியம்மை தம் மகளைப் பற்றி ஞானம்மாவுடன் பேசிக் கொண்டிருந்தாள்.

"சீட்டு போடச் சொன்னேன். விழுந்தா கழுத்துக்கு ஒரு செயின் வாங்கலாம் பாருங்க. அப்புறம் அடுத்த சீட்டுலே கைக்கு வளையலும் செஞ்சு போடலாம்..."

"ஆமாங்க. பரிமளமும் நாலு மாசமா சீட்டு கட்டுது. இன்னும் இரண்டு மாதத்திலே சீட்டு கலைஞ்சுப்போவுதாம். மொத்தமா வந்தா ஒரு முத்துக் கம்மல் எடுத்துக்கும்"

"ஆமா... எடுத்துக்கும், எடுத்துக்கும். கிண்டி மைதானத்திலே போய் காத்துலே பறக்க விடும்" என்

கூறியபடி தணிகாசல முதலியார் உள்ளே வந்தார்.

"என்னங்க!" என்றாள் வள்ளியம்மை.

"உம் மகளும், அவங்க மகளும் பந்தயமல்ல ஆடறாங்க! கல்யாணம் பண்ண வழியில்லாம மேல்படிப்புப் படிக்க வைச்சு ஏதோ குடும்பத்துக்கு உதவியா இருக்கட்டும்னு வேலைக்கு அனுப்பினா, கிண்டி ரேஸுக்கல்ல போறாங்க பொம்பளைங்க? ஹூம்... அப்பனே ஆறுமுகம்! இந்த அநியாயத்தைக் கேட்டியா அப்பா!"

"யார் சொன்னது உங்களுக்கு?"

"நம்ப தண்டையார் பேட்டை தாண்டவராயன் சொல்லிச் சிரிச்சுட்டுப் போறான். ஏம்பா! அந்த செவத்தபொண்ணு உம் மகதானே ஒரு தரம் அஞ்சாறு வருஷத்துக்கு முந்தி நம்ப வீட்டுக்கு அழைச்சு வந்தியே. அது என்னை மறந்துடிச்சி, நான் மறக்கலேங்கறான். அப்படியே நாக்கைப் பிடிங்கிக்கிட்டு சாவத் தோணிச்சு எனக்கு!"

ஜானம்மா வந்த சுவடு தெரியாமல் வீட்டிற்குப் போய் விட்டாள். அங்கே மரியநாதன் கர்த்தரின் முன்பு மண்டியிட்டு வணங்கி "பரலோகத்தில் இருக்கும் எங்கள் பிதாவே, எங்கள் பாவங்களை மன்னியுங்கள். பாலர்களாகிய நாங்கள் அறிந்தோ அறியாமலோ செய்யும் பிழைகளை மன்னித்தருளும் ஏசுவே!" என்று விழிகளில் கண்ணீர் வழிய பிரார்த்தித்துக் கொண்டிருந்தார். கூடத்தில் ஓர் ஓரமாக பெட்டி படுக்கை ஒன்று தயாராகக் கட்டி வைக்கப்பட்டிருந்தது.

"என்னங்க இது?" என்றாள் ஜானம்மா.

"இப்படிப்பட்ட குழந்தைகளை இனிமே பெறக் கூடாதுன்னு கர்த்தரிடம் பாவ மன்னிப்பு கேக்குறேன் ஜானி. இதோ பாரு! இன்னிக்கி வண்டியிலே விழுப்புரம் போய் அந்தப் பய ஜேஸுவைப் பாத்து, எப்படா கல்யாணம் வைச்சுக்கறதுன்னு கேக்கப் போறேன். கடனோ உடனோ பட்டு நம்ம பொறுப்பை நிறை வேத்திடணும். அது சம்பாதிச்சு நடக்கிறது ஒண்ணும் இல்லே"

தணிகாசலம் தம் நெற்றி நிறைய பால் வெண்ணீறை எடுத்து அணிந்து கொண்டார்.

"இதோ பாரு வள்ளியம்மா? நம்ப மரியநாதன் விழுப்புறம் போறாரு. நான் அவரு கூடப் போயி அப்படியே மாயூரம் போறேன். செல்வராஜுவைப்பார்த்து நிச்சயம் பண்ணிட்டு வந்துடறேன்"

"பணம்?"

"சீ, சும்மாக்கிட! பிச்சை வாங்கறேன். என் கடமையைச் செய்யறேன். அது வந்தா நாளைக்கே கால் கடுதாசியை அனுப்பிச்சிட்டு உள்ளே இருக்கச் சொல்லு..."

இரண்டு கிழவர்களும் தத்தம் கடமையை உணர்ந்தவர்களாக எழும்பூருக்குச் சென்று ரயில் பிடிக்க வாயிற்படி இறங்கி தெருவில் நடந்தார்கள். ✱




"ஏண்டா, முட்டாளுக்குகூடப் புரியற இந்த சின்ன வியாஸத்தை உனக்குச் எழுத சரியா வரலியே!"

"உங்களுக்கு வியாசத்திலே எந்த இடம் ஸார் புரியலே"

# யார் அசடு?

ஸரோஜா ராமமூர்த்தி

அடுப்பில் காய்ந்து கொண்டிருந்த பால் 'சுருசுரு' என்று பொங்க ஆரம்பித்தது. சங்கரி கைக்குழந்தை ஹேமுவுக்குப் பல் தேய்த்துவிடக் குளிக்கும் அறைக்குப் போயிருந்தாள்.

''அம்மா! அம்மா! பால் பொங்கறது!'' என்று சமையலறையில் பாலைப் பார்த்தபடியே ராஜி இரைந்து கத்தினாள். சங்கரி திடு திடு என்று ஓடி வந்தாள், அடுப்பில் இருந்த பாலை இறக்குவதற்கு. அதற்குள் பால் பொங்கிக் கொஞ்சம் கீழே வழிந்து விட்டது.

'' பாலை அடுப்பில் வைத்து விட்டுப் போவாயோ?'' என்று சற்றுக் கடுமையாகவே கேட்டாள் சங்கரியின் மாமியார் மங்களம்.

'' பல் தேச்சுவிட நான்தான் வரணுமாம் சனியனுக்கு!'' என்று கோபமாகக் கூறிவிட்டு, '' நீங்கள் இங்கேயா இருந்தீர்கள்? கொஞ்சம் பாலை இறக்கி வைக்கப் படாதோ?'' என்று தைரியமாகவே கேட்டாள் சங்கரி.

'' அடுப்பில் பாலை வைத்து விட்டுப் போயிருக்கிறாய் என்று எனக்கு ஜோஸ்யம் தெரியுமா, என்ன? வாயைத் திறந்து சொன்னால் தானே தெரியும்!''

'' அம்மா! சங்கரன் என் பலப்பத்தைப் பிடுங்கிக் கொண்டு விட்டான்!''

'' அம்மா! இந்த ஹேமுவைப் பாரு. புஸ்தகத்தைக் கிழிக்கிறாள்'' என்று ராஜி தொண்டை கிழியக் கத்தினாள்.

'' அம்மா! கோல மாவு தீர்ந்து போச்சு'' என்று வேலைக்காரி ராசம்மா வேறு வீட்டு எஜமானியாகிய சங்கரியிடம் புகார் செய்தாள்.

'' ஏண்டா! அப்பா தூங்கறார். ஏன் இப்படி இரையறேள்?'' என்று தன் பேரன் பேத்திகளைக் கடிந்து கொண்டே மங்களம், பிள்ளையின் தூக்கம் கலையாமல் இருக்க வேண்டுமென்று நடராஜன் படுத்திருக்கும் அறைக் கதவை மெதுவாகச் சாத்தி விட்டு வந்தாள்.

வீட்டில் என்ன நடந்தாலும் தன் பிள்ளையின் சுகத்துக்குப் பங்கம் வரக் கூடாதென்கிற கொள்கையை உடையவள் அவள். அவன் பல் தேய்த்து விட்டு வந்ததும் காப்பியை ஆபீஸ் அறைக்கே கொண்டுபோய்க்கொடுத்து விடுவாள். இதற்காக நாட்டுப்பெண்ணுக்கும், மாமியாருக்கும் பல தகராறுகள் ஏற்பட்டிருக்கின்றன.

''அவன் பல் தேச்சுட்டான்'' என்று மறைமுகமாக நாட்டுப்பெண்ணிடம் பிள்ளைக்குக் காப்பி தயாராக வேண்டுமென்று தெரிவிப்பாள். சங்கரி பேசாமல் வேறு எதையாவது கவனித்துக் கொண்டிருப்பாள். மாமியார் கொஞ்ச நேரம் பொறுத்துக் கொண்டிருப்பாள். நாட்டுப்பெண்ணின் பிடிவாதத்தைப் பார்த்ததும் அவளுக்குக் கோபம் பிரமாதமாக வரும்.

'' எது நல்ல டிகாக்ஷன் என்று சொல்லேன். நான் வேண்டுமானாலும் கலந்து கொண்டு போய்க் கொடுக்கிறேன்'' என்பாள் கடுமையாக.

'' நான் ஸ்நானம் பண்ணிவிட்டு அடுப்பில் உலை நீர் வைத்திருக்கிறேனே! நான் தானே காப்பி சுடப் பண்ண அதை இறக்க வேண்டும்? நீங்கள் இன்னும் குளிக்கவே இல்லையே!'' என்று ஆரம்பிப்பாள் சங்கரி. அவள் கோபமெல்லாம் மாமியார் பேரில் அல்ல; கணவன் பேரில் தான். அம்மா பிள்ளையாக நடராஜன் இருப்பது அவளுக்குத் துளிக்கூடப் பிடிக்க வில்லை.

'' நீதான் அதைச் சுடப் பண்ணிக் கொடேன்.''

தர்க்கம் ஒருவிதமாக முடிந்து காப்பி ஆபீஸ் அறைக்கே போய்ச் சேர்ந்து விடும்.

'' ஏண்டா! பால் போறுமா? இன்னும் கொஞ்சம் கொண்டு வந்து விடவா? கறுப்பாக இருக்கு போல் இருக்கே?''

சங்கரி ஆபீஸ் அறை வாசலில் கோபம் பொறி பறக்க நின்று கொண்டிருப்பாள். அவள் நிற்பதைக் கவனித்துத்தானோ என்னவோ நடராஜன், "பால்தானே அம்மா? இன்னும் கொஞ்சம் கொண்டா" என்று அம்மாவின் தீர்மானத்தை ஆமோதிப்பான். அவள் விடு விடு என்று உள்ளே போய் டம்ளரில் பால் எடுத்துக் கொண்டு வந்து பிள்ளையிடம் கொடுப்பாள்.

'கணவனுக்கு வயிற்றுக்குத் தாராளமாகக் கூடப் போடத் தனக்கு மனம் வரவில்லை என்பது மாமியாரின் அபிப்பிராயமா? அல்லது பிள்ளையின் மேல் ஏற்பட்டிருக்கும் அளவு கடந்த பாசத்தின் அறிகுறியா' என்பது சங்கரிக்கு விளங்காத புதிராகவே இருந்தது.

* * *

"மணி ஏழடிக்கப் போறது. அப்பாவை எழுந்திருக்கச் சொல்லுடி!" என்று சற்று உரக்கவே சொன்னாள் சங்கரி.

"இந்தாடி! ராத்திரி ஆபீஸ் வேலையெல்லாம் முடிந்து அவன் படுத்துக் கொள்ளும்போது பத்து மணிக்கு மேலாச்சு. அவனைப் போய் ஒன்றும் எழுப்பாதே!" என்று பாட்டி பேத்திக்கு உத்தரவு போட்டாள்.

சங்கரி தான் காலையிலிருந்து இரவு பதினோரு மணி வரையில் மாடு போல் உழைப்பது மாமியாரின் கண்களுக்குப் படவில்லையே என்று உள்ளம் குமுறினாள். மாமியார், தன்னுடைய நாத்தனாரின் பிரசவத்துக்காக ஊருக்குப் போகும் போது கணவனை எப்படியாவது திருத்தி விடுவது என்கிற தீர்மானத்துக்கு வந்தாள் சங்கரி.

நடராஜனுக்கு வழக்கம் போல் காப்பி கொண்டு போய்க் கொடுத்தாள் மங்களம்.

"ஏன் அம்மா, கமலாவின் பிரசவத்துக்கு ஊருக்குப் போக வேண்டும் என்று சொன்னாயே? என்றைக்குக் கிளம்பப் போகிறாய்?" என்று கேட்டான் நடராஜன்.

"போக வேண்டும், அப்பா. இருபது ரூபாய் செலவாகுமே என்று பார்க்கிறேன்."

"செலவைப் பார்த்தால் முடியுமா? போகிற காரியத்துக்குப் போய்த்தான் ஆகணும்" என்றாள் சங்கரி.

நாட்டுப்பெண்ணும் தனக்குச் சாதகமாகப் பேசுவதைக் கண்ட மாமியாரின் மனம் சந்தோஷமடைந்தது.

"பிள்ளைத் தாய்ச்சிப் பெண்ணை வெறும் கையுடன் போய்ப் பார்க்க முடியுமா?"

"கொஞ்சம் பக்ஷணம் செய்து தருகிறேன்; வெறுங்கையுடனா போவார்கள்?" என்றாள் சங்கரி.

மாமியார் அந்தண்டை நகர்ந்தால் தானே கணவனை அவளால் திருத்த முடியும்?

ஒருவிதமாக மங்களம் ஊருக்குக் கிளம்பினாள். அவள் ஊருக்குப் போனதும் சங்கரிக்குத் தான் சுதந்திரமாக இருக்கிறோம் என்கிற எண்ணம் ஏற்பட்டது. எதற்கெடுத்தாலும் மாமியாரைக் கேட்டுத்தான் ஆக வேண்டும் என்பது இன்னும் மூன்று மாதங்களுக்கு இல்லை அல்லவா?

அம்மாவை ரயிலேற்றி விட்டு வந்த நடராஜன் சாவகாசமாக நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான். கொஞ்ச நாழிகைவரையில் தன் அறையைத் தேடிக் காப்பிவரும் என்று எதிர்பார்த்தான். காலையில் ரயில் ஏற்றப்போன அவசரத்தில் அவன் காப்பி கூடச் சாப்பிடவில்லை.

"அடியே ராஜி! உன் அப்பாவுக்குக் காப்பி வேண்டுமா கேள்" என்று சமையலறையிலிருந்து கேட்டாள் சங்கரி. ஆவி பறக்கும் காப்பியை டம்ளரில் ஊற்றி எடுத்துக் கொண்டு வாசற்படி தாண்டி வந்தவள், தன் சங்கல்பத்தை நினைவு படுத்திக் கொண்டு மறுபடியும் உள்ளே கொண்டு போய் வைத்து விட்டாள்.

நடராஜன் ஒன்றும் கூறவில்லை. "அம்மா ஊருக்குப் போகட்டும் நீங்கள் எப்படி மாறி விடுகிறீர்கள் பாருங்கள்" என்று சங்கரி அடிக்கடி கூறியதை நினைவு படுத்திக் கொண்டு, என்ன தான் நடக்கிறது பார்க்கலாம் என்று நாற்காலியில் சாய்ந்து படுத்

தவாறு தினசரியைப் படித்துக் துக் கொண்டிருந்தான்.

"ஆறி அவலாகப் போகிறதே! அப்பாவைக் கூப்பிடேன்" என்று கோபமாகக் கூறினுள் சங்கரி.

"கொண்டா, அம்மா. அப்பாவிடம் நான் கொடுத்து விடுகிறேன்" என்று கேட்டாள் ராஜி.

"ஆமாம், பாட்டிக்குப் பதில் பேத்தி வக்காலத்து வாங்கி யிருக் காயோ? நானே கொடுத்து விட்டு வரேன். நீ கொட்டி வார வேண்டாம்" என்று சொல்லிக் கொண்டே காப் பியைக் கொண்டு போய் 'நக்' என்று மேஜைமேல் வைத்தாள் சங்கரி.

"த்ஸொ த்ஸொ! டம்ளர் நசுங்கி விடப் போகிறது! வெள்ளி விலை தோலா இரண்டு ரூபாய் விற்கிறது" என்று சொல்லிக் கொண்டே, "என்ன இருந்தாலும் நீ போடும் காப்பிக்குத் தனி ருசி, மணம் இருக்கிறது" என்று சொல்லியபடி காப்பியைச் சாப்பிட ஆரம்பித்தான் அவள் கணவன். சங்கரி க்கு ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்தது.

"அதிருக்கட்டும். நாளையி லிருந்து காப்பி சாப்பிட சமையலறைக்கு வந்து விடுங்கள். உங்க அம்மா மாதிரி என் ஞல் 'ஸர்வர்' உத்தியோகம் பண்ண முடியாது" என்ருள் அழுத்தம் திருத்த மாக.

"இவ்வளவுதானே, பிரமாதம்! வந்து விட்டால் போச்சு" என்ருன் நடராஜன்.

ஆனல் மறு தினமும் சங்கரி தான் காப்பியுடன் அவனைத் தேடி வந்தாள்.



"ஏன்ணு! நேற்று நான் என்ன சொன்னேன்?"

"என்ன சொன்ணுய்?"

"காப்பி சாப்பிடச் சமையல் அறைக்கு வரவேண்டும் என்று சொன்னேன், இல்லையா?"

"சொல்லி இருப்பாய்!"

சாக்ஷாத் காளியைப் போல் சங்கரி கோபத்துடன் அவனைப் பார்த்தாள்.

"நீ அதை அங்கேயே வைத்திருப்பதுதானே? நான் வந்து சாப்பிட்டுக் கொள்கிறேன்" என்ருன் நடராஜன் சாந்தமாக.

"நீங்கள் எப்பொழுது வருகிறது? மணி எட்டரை ஆகப் போறதே! எப்பொழுது காப்பி சாப்பிடறது? எப்பொழுது சாப்பிட்டு விட்டு ஆபீஸுக்குப் புறப்படுகிறது?"

"உனக்கு உன் சங்கல்பம்தானே முக்கியம்? இதையெல்லாம் பற்றி நீ ஏன் கவலைப்படுகிருய்?"

"நன்ருக இருக்கிறதே, நீங்கள் சொல்கிறது! மனசு கேட்காததனுல் தானே காப்பியைத் தூக்கிக் கொண்டு ஓடி வருகிறேன்?"

சங்கரி கண்களில் நீர் ததும்ப சமையலறைக்குப் போய் விட்டாள்.

*        *        *        *

**ஊ**ருக்குப் போயிருந்த மங்களம் திரும்பி வந்தாள். வந்ததிலிருந்து தன் மாப்பிள்ளையின் குணுதிசயங்களைப் பற்றி ஓயாமல் வர்ணித்துக் கொண்டிருந்தாள் அவள்.

"அதை ஏன் கேட்கிறே, போ! அவன் பாட்டுக்கு நாற்காலியில் சாய்ந்து கொண்டு கிடக்கிருன். இந்த உடம்பிலே கமலாதான் ஓடி ஓடி எல்லாம் செய்தாகணும்" என்று குறைப் பட்டுக் கொண்டாள், தன் நாட்டுப் பெண்ணிடம்.

"'காம்ப்' போகிருனும். அவனுடைய பெட்டியிலே கைக்குட்டையிலிருந்து பல்பொடி வரையில் சரி பார்த்து வைக்கிறது கமலாதான்!"

நடராஜன் புன்சிரிப்புடன் சங்கரியைப் பார்த்தான். அவள் தன் முகத்தை விசுக்கென்று திருப்பிக் கொண்டு வேறு எங்கேயோ பார்க்க ஆரம்பித்தாள்.

"கடைக்குப்போகிறது, துணிமணி வாங்குகிறது, குழந்தைகளைக் கவனிக்கிறது, சகலமும் கமலாதான்."

"அப்படியானுல் கமலா சர்வாதிகாரியாக இருக்கிருள் என்று சொல், அம்மா" என்ருன் நடராஜன்.

"நீ சொல்லு வேடா, நாலு குழந்தைகளை வைத்துக் கொண்டு அவள் படுகிற கஷ்டம் எனக்குப் பார்க்கச் சகிக்கல்லே."

"இங்கே மாத்திரம் எனக்கு ஆயிரம்



அம்மா :— "இந்த மைசூர்ப் பாக் டப்பாவை எங்கே வைச்சாலும் எறும்பு வந்து தொலேச்சுடறதே! என்ன பண்றதுன்னே புரியல்லேயே!"

பையன் :— "எங்களுக்கு ஆளுக்கு ஒண்ணு கொடுத்து விடேன், அம்மா! டப்பா காலியாயிடும்!"

...பார் செய்யக் காத்திருக்கிறார்கள்!'' என்று சொல்ல வாயெடுத்தாள் சங்கரி. ஆனால் வார்த்தைகள் தொண்டையில் நின்று விட்டன. மாமியாரின் எதிரில் பேசி வழக்கமில்லை அவளுக்கு.

"நானும் பேசாமல் இருக்கலே. ஊருக்குக் கிளம்பறத்துக்கு முன்னே ஒரு நாள் பேச்சு வாக்கில் மாப்பிள்ளையிடம் சொல்லிவிட்டேன்.''

"பார்த்தாயா, சங்கரி! அம்மா மாப்பிள்ளையைத் திருத்தி விட்டு வந்திருக்கிறாள்!'' என்றான் நடராஜன்.

"திருத்தவாவது! இந்த மாதிரி ஜன்மங்களெல்லாம் திருந்தாது. 'குழந்தையை வைத்துக் கொண்டு கமலா கஷ்டப் படுகிறாள். கொஞ்சம் உங்கள் காரியத்தை நீங்கள் பார்த்துக் கொள்ளுங்கள்' என்றேன். அசட்டுச் சிரிப்பு ஒன்று சிரித்து விட்டு, 'என்னைச் சோம்பேறியாக மாற்றினதெல்லாம் உங்க கமலா தான். அவளையே கேளுங்கோ. அவள் இங்கே வந்த புதுசில் கடைத் தெருப் பக்கமே அவளை அனுப்பவில்லை நான். அவளாகவே ஒரு தினம் வந்து என்னிடம் குறைப்பட்டுக் கொண்டாள். அவள் சிநேகிதிகள் எல்லாம் அவளைப் படு கர்நாடகம் என்று தீர்மானித்துக் கொண்டிருக்கிறார்களாம். கணவன் ஆபீஸுக்குப் போனதும் கையில் 'பிளாஸ்டிக்' பை சகிதம் ரிக்ஷாவில் ஏறிக் கொண்டு 'ஷாப்பிங்' போவது தான் நாகரிகம் என்று அவளுக்குத் தோன்றியது. கொஞ்சங் கொஞ்சமாக நான் கடைக்குப் போவதை நிறுத்திக் கொண்டு அவளையே அனுப்பி வைத்தேன். இப்பொழுது பூராவும் அவள்தான் பார்த்துக் கொள்ளும்படி இருக்கிறது. எனக்கு எல்லாம் மறந்தே போய்விட்டதே' என்கிறான் மாப்பிள்ளை'' என்றாள் மங்களம்.

சங்கரி கொல்லையில் செடி கொடிகளை மேய வந்த மாட்டை விரட்டப் போனாள்.

"சங்கரி, உன்னைத்தான்! கமலாவின் கணவனைக் கெடுத்தது யார் சொல், பார்க்கலாம்'' என்று சிரித்துக் கொண்டே கேட்டான் நடராஜன் சாவகாசமாக.

"இதைப் போய் என்னைக் கேட்க வேண்டுமா? கமலாதான் அசடு.''

"இதிலே ஒருத்தரும் அசடு இல்லை. கமலாவுக்கு தானே வீட்டு எஜமானியாக இருக்க வேண்டும் என்கிற ஆவல். இங்கே மாமியார் நாட்டுப் பெண் இரண்டு பேருக்கும் அதே ஆவல். கடைசியாக எல்லா ஸ்திரீகளின் மனப் போக்கும் ஒரே விதமாகத்தான் இருக்கிறது.''

"நானும் தான் உங்களைத் திருத்திவிடுவது என்று பார்த்தேன்'' என்றாள் சங்கரி.

"நீ மாத்திரம் என்ன? காப்பியை ஆறிப் போன பின் நான் சாப்பிட மனம் வரவில்லை உனக்கு. குளிக்கிற வெந்நீரை உன் கையால் பதம் பார்த்து வைக்காமல் போனால் உனக்கு மனசு கேட்கவில்லை. அதனால் தான் உன் பிடிவாதம் தோற்றுவிட்டது.''

"நன்றாகப் பேச மாத்திரம் உங்கள் அம்மா உங்களுக்குக் கற்றுக் கொடுத்திருக்கிறார், வேறு ஒன்றும் தெரியாவிட்டாலும்!'' என்று சங்கரி அன்புடன் கணவனைக் கோபித்துக் கொண்டாள்.



"நம் வீட்டு வாசல் காவலுக்கு ஒரு நாய் இருந்தது!......அது இப்போ கெட்டுப் போச்சு!.........நீதான் அதுக்குப் பதிலா இனிமேல் காவல் இருக்கணும்!''
"எனக்குக் குரைக்கத் தெரியாதுங்களே! என்னுங்க பண்ணறது?......''



# அன்பின் பரிசு

ஸரோஜா ராமமூர்த்தி

**வா**சல் வராந்தாவில் பேச்சுக் குரல் கேட்டது. நிதானமாக வார்த்தைகளை எண்ணி யாரோ பேசினார்கள். குரல் கிணற்றிலிருந்து வருவதுபோல அவ்வளவு தீனமாகக் கேட்டது. "ஆகட்டும், ஐயா! பார்க்கிறேன் என்று சொல்கிறேனே. கொஞ்சம் பொறுமையாகத் தான் இருமேன்!" என்று என் தகப்பனார் இரைந்து சொன்னார். அப்பாவைத் தேடிக்கொண்டு எவ்வளவோ பேர்கள் வருகிறார்கள். அவர்களை யார் என்று கூட நான் கவனித்துப் பார்ப்பது கிடையாது. "நல்ல கறவை மாடாக வாங்கித் தரவேண்டும்" என்று ஒருத்தர் வருவார். "கோர்ட்டிலே வியாஜ்யம். அதற்கு பிரபல வக்கீலைக் கண்டு பேச வேண்டும்" என்று இன்னொருத்தர் வருவார். இப்படி யாராவது எதையாவது சொல்லிக் கொண்டு வருவார்கள். கவனித்துக் கட்டுபடியாகாது என்று விட்டு விட்டேன். ஆனால், அன்று தெருவில் கேட்ட தீனமான குரலில் இருந்த பரிதாபம், என்னைத் தெருப்பக்கம் எட்டிப் பார்க்கச் செய்தது.

மேலே கிழிந்த துண்டு ஒன்றைப் போர்த்திக்கொண்டு, இடுப்பில் நாலு முழம் நாட்டு வேஷ்டியுடன் எழுபது வயது மதிக்கத்தக்க பெரியவர் ஒருவர் நின்றிருந்தார். எங்கேயோ பார்த்த முகமாக இருந்தது. எப்பொழுது, எந்த இடத்தில் என்றுதான் நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை. கிழவர் தம் இடுங்கிய கண்களால் என்னைக் கூர்ந்து கவனித்தார். நெற்றியைச் சுருக்கிக் கொண்டு உற்றுப் பார்த்தார்.

"உட்காருங்கள், நிற்கிறீர்களே" என்றார் என் தகப்பனார் மறுபடியும்.

அருகிலிருந்த திண்ணையில் பையை வைத்துவிட்டு உட்கார்ந்தார் அவர். முதல் நாள் இரவு பெய்த மழையின் குளிர்ச்சியைக்கூட அன்று காய்ந்த வெயில் தகித்துவிட்டது. 'இரவு மழை பெய்ததா?' என்று கேட்குமளவுக்கு வெயில் கட்டுப் போகக்கியது. மனித சுபாவமும் இப்படித்தான் போல இருக்கிறது. நேற்று உதவியவரை இன்று மறந்து விடுவோம்போல் இருக்கிறது. என் எதிரிலேயே கிழவர் உட்கார்ந்திருக்கிறார். பாங்கிப் பழம்போல் நல்ல சிவந்த சரீரம். வறுமையிலும் தளராத மன வலிமை படைத்தவர் என்று அவர் முகம் விளக்கிக் காட்டியது. நெற்றியில் கீற்றுச் சந்தனம். 'எங்கோ பார்த்திருக்கிறோம்' என்று மனம் சொல்லிற்றே தவிர எங்கு என்றுதான் புரியவில்லை.

"கொஞ்சம் ஜலம் கொடம்மா குழந்தை" என்றார் பெரியவர். மோர் தீர்த்தம் கொண்டுவந்து திண்ணையில் வைத்தேன்.

"இருங்கள். இரண்டு மணிக்கெல்லாம் காப்பி ஆகிவிடும். சாப்பிட்டுவிட்டுப் போகலாம். வெயிலிலே போக வேண்டாம்" என்றேன் அவரிடம். அப்பொழுதும் அவரை நான் கண்டுகொள்ளவில்லை. "பாவம்! வயசானவர்" என்கிற அனுதாப உணர்ச்சிதான் என்னை அவ்விதம் கூறும்படித் தூண்டியது.

அப்பா இன்னொரு திண்ணையில் தூக்கத்தில் ஆழ்ந்துவிட்டார். கிழவர் சிறிது நேரம் வெட்ட வெளியைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார். உள்ளே 'ஸ்டவ்'வின் சப்தம் கேட்டு வந்தவர், சமையலறை வாயிற்படியில் நின்று, "அம்மா, குழந்தை! என்னை உனக்கு நினைவில்லையா" என்று தீனமான குரலில் கேட்டார். 'ஸ்டவ்'வில் கொதிக்கும் ஜலத்தைப்போல் என் மனம் புரண்டுப் பார்த்தது. "ஊஹூம், இல்லையே!" என்றேன், காப்பிப்பொடியில் ஜலத்தை ஊற்றிக்கொண்டே.

கிழவர் வாசற்படிமேல் உட்கார்ந்து கொண்டார்.

"நினைவில்லையா அம்மா? பெரிய சம்சாரியாகிவிட்டாய். பெரிய பெரிய நகரங்களையெல்லாம் போய்ப் பார்த்து விட்டு வந்திருக்கிறாய். இந்த சின்ன மனுஷனை மறந்துவிட்டாய் குழந்தை. நான் உன்னை மறக்கவே இல்லை. அடிக்கடி விசாரிக்கிறேன். நீதான் என்னை மறந்து விட்டாயே" என்றார்.

காப்பிக் கஷாயத்தில் பாலைக் கலந்து, சர்க்கரை சேர்த்து சூட்டுடன் அவர் எதிரில் வைத்தேன். பிறகு நிதானமாக "மறந்துவிட்டது என்னவோ வாஸ்தவம் தான். இந்தக் காலத்தில் 'மறதி' நீ[illegible] வியாதி அல்லவா? அணுகுண்டு யுகத்தில் எதைப்பற்றி யார் சிந்திக்கிறார்கள் சொல்லுங்கள்? பழைய விஷயங்களை மறந்துபோய் விடுகிறோம்" என்றேன்.

"மிட்டாய்க் கடை பொன்னுசாமி[illegible]யைத் தெரியாதா குழந்தை உ[illegible] ஏழெட்டு வயதில் காலணாவைக் கொ[illegible] வந்து கொடுத்துவிட்டு ஓரணா பட்[illegible] வாங்கிப்போய் விடுவாயே!" எ[illegible] அவர்.

"மிட்டாய்க் கடை மாமாவா நீங்கள்! மன்னித்துக்கொள்ளுங்கள் மாமா. நான் காஞ்சீபுரம் வந்தே இருபது வருஷங்கள் ஆகின்றன. பத்து வயதில் ஒரு தடவை வந்தேன். அப்புறம் வரவே இல்லை. சௌக்யமாக இருக்கிறீர்களா? எங்கே இருக்கிறீர்கள்?"

"சௌக்யமா? எனக்கா?" என்[illegible] பொன்னுசாமி ஐயர். பிறகு, "முழங்கை[illegible]யில் அடிபட்டால் எவ்வளவு மனசுக்[illegible] சுகமோ அவ்வளவு சுகத்துடன் இருக்கிறேன் அம்மா; பூமிக்கு பாரமா[illegible]" என்று தன் முழங்கையைத் தடவிக் கொண்டே கூறினார்.

உழைப்பாளிகளைத்தா[illegible] கடவுள் எவ்வளவு வஞ்சிக்கிறான்[illegible] சோம்பல் என்பதை இன்னதென்றே அறியாத இந்தக் கிழவர் சுகத்தின் அர்த்தத்தையே அ[illegible]யாதவர். அதை இன்னமும் தேடிக்கொண்டிருக்கிறார் என்றால் கடவுளைத்தானே குற்றம் சொல்லத் தோன்றுகிறது?

கிழவர் வாசற்படியில் நன்றாக உட்கார்ந்துகொண்டார்.

"நினைவிருக்கிறதா உனக்கு? அ[illegible] யாணவை என்னுடைய கடைக்கு [illegible]த்துக்கொண்டு வருவாய். சீனிக் சீடை இரண்டணா பக்ஷணம் வாங்கித் தின்று விட்டுப் போய்விடுவாய். போகிறபோது கால் கைநிறைய பாகு சேர்த்த முந்திரிப் பருப்புகளை வாரிக்கொண்டு ஓடுவாய். மாமிகூட சொல்லுவாளே, நீங்கள் கொடுக்கிற இடத்தில்தான் அந்தப் பெண் இப்படி அடங்காப்பிடாரியாக இருக்கிறது என்று..."

பொன்னுசாமி ஐயர் கண்களில் கசிந்த நீரைத் துடைத்துக்கொண்டார். துக்கக் கண்ணீரல்ல. ஆனந்தக் கண்ணீர்! குழந்தைகளிடம் அவர் மனம் அவ்வளவு ஈடுபாடுடையது. என்னை மட்டும் அல்ல, எல்லாக் குழந்தைகளையும் அவர் இப்படித் தான் சீராட்டுவார். அள்ளி அள்ளிக் கொடுப்பார் தின்பண்டங்களாக. இம்மாதிரி தாராளம், வறுமையில் உழலும் ஒரு மனிதனுக்கு இருந்தால் அவன் வாழ்வு மலருமா? சுகத்தை அம்மனிதனால் அனுபவிக்கத்தான் முடியுமா?

'சிறு வயதில் மிட்டாயாகத் தின்றதை எப்படி மறந்துவிட்டேன்? தடங்கல் இல்லாமல் அள்ளித் தின்றதை எப்படி என்னால் மறக்க முடிந்தது?' என்று வருந்தினேன். புதிய சூழ்நிலையில், புதிய வாழ்க்கையில் நாம் ஒட்டிக்கொள்ளும்போது பழைய சம்பவங்களை மறந்து தான் போவோமா? மறதி மனிதனுக்கு இன்றியமையாத தேவைதான். அது இருப்பதால்தான் வாழ்வில் எப்படிப்பட்ட கஷ்டம் நேர்ந்தாலும், அதைச் சகித்து மேலும் வாழ உதவி புரிகிறது. இருந்தாலும், கள்ளமற்ற அந்தப் பெரியவரை மறந்தது பாவம் என்று திரும்பத் திரும்ப வருந்தினேன்.

"குழந்தை! நான் வருகிறேன் அம்மா. பெரிய சம்சாரியாக இருக்கிறாயே. கூடமாட ஒத்தாசை செய்ய யாராவது இருக்கிறார்களா? இல்லை, நீயேதான் கவனித்துக்கொள்கிறாயா? எப்படி முடிகிறது உன்னால்?" என்று விசாரித்தார்.

"நான்தான் பார்த்துக்கொள்கிறேன். வெளி வேலைகளுக்கு வேலைக்காரி இருக்கிறாள். சமையலறையில் உதவத்தான் ஆள் அகப்படவில்லை. யாராவது சிறு பெண்ணாக பன்னிரண்டு வயசில் இருந்தால் சொல்லுங்களேன். உதவியாக இருக்கும்."

"நான் வந்துவிடட்டுமா குழந்தை?" [illegible] கிழவர் சிரித்துக்கொண்டே [illegible]டார்.

[illegible] திடுக்கிட்டேன். எழுபது வயசுக் [illegible]. உட்கார்ந்து சாப்பிடவேண்டிய [illegible] எல்லாம் அடுப்படியில் உட்கார்ந்து [illegible]டலும், உள்ளமும் தூய [illegible]. திரும்பவும் அடுப்பங்கரைக்கு [illegible]ராம் சமைக்க!

"வேண்டாம் மாமா. உங்கள் வயசென்ன? இந்த வயசிலா நீங்கள் வேலை செய்வது?"

கிழவர் ஏதோ யோசித்துக்கொண்டே எழுந்தார். "வருகிறேன்" என்று கூறி விட்டுப் போய்விட்டார்.

## 2

கும்மட்டியில் காப்பியை மறுபடியும் சுடவைத்துத் தூங்கி விழித்துக்கொண்டிருந்த என் தகப்பனாரிடம் கொண்டு போய்க் கொடுத்தேன். காப்பியைக் கையில் வாங்கிக்கொண்டு, "அவரை யார் என்று புரிந்ததா உனக்கு?" என்று கேட்டார் என்னைப் பார்த்து.

"முதலில் நினைவில்லை. பிறகு அவராகவே சொன்னார். பாவம், வயசாகி விட்டது. இன்னமும் உழைக்கிறாராம். இங்கே சமைக்க வருவதாகக்கூட சொன்னார்."

"அப்படியா?" என்றார் என் தகப்பனார். "எப்பொழுதோ நம்மிடம் அடகு வைத்த அவர் விளக்கைப் பற்றிக் கேட்க வந்தார். இருபது வருஷங்களுக்குமேல் ஆயிற்று. ஊர் ஊராக மாற்றி வந்ததில் அது எங்கே கிடக்கிறதோ என்னவோ. பார்த்துத் தருகிறேன் என்றேன். தேடிக் கொண்டு வந்துவிட்டார்" என்றார் என்னிடம்.

அவர் பொருளை அவர் தேடிக்கொண்டு வருகிறார். அதற்குக் காலவரையறை என்று ஒன்று இருக்கிறதா என்ன? இருபது வருஷங்களுக்கு முன்னால் என்றால் எனக்குத் தெரிந்து இருக்கவேண்டுமே என்று யோசித்தேன். லேசாகப் பனிப்படலம் போல அச்சம்பவம் என் நினைவுக்கு வந்தது.

அப்பொழுது காஞ்சீபுரத்தில் ஸ்ரீ ஏகாம்பரநாதருக்கு பிரும்ம உத்ஸவம். ஊரிலே ஒரே அமர்க்களம். ஒவ்வொரு வீட்டிலும் உத்ஸவத்தைக் காண, இறைவனை வணங்க ஏகப்பட்ட கூட்டம். விருந்தினர்களின் இரைச்சல். இந்த விழா வைபவம் ஏழை பொன்னுசாமி ஐயரை மட்டும் விட்டுவிடுமா? மிட்டாய்க் கடையில் பாடுபடுவதைத்தான் வாரி வழங்கி விடும் வள்ளல் ஆயிற்றே அவர்? அதிகப்படியான லாபத்தை எங்கிருந்து எதிர்பார்க்க முடியும்? காஞ்சியில் வருஷம் பூராவும் கோயில்களில் விழாக்கள் நடந்துகொண்டே இருக்கும். யாராவது வந்துகொண்டே இருப்பார்கள். எப்படியோ உத்ஸவத்தில் ஒன்பது தினங்களும் அவர் மனைவி வீட்டில் இருந்த சாமான்களைக் கொண்டே விருந்தினர்களுக்கு இட்டு நிரப்பிவிட்டாள். அ[illegible] அம்பிகையின் திருக்கல்யாணம். அ[illegible]துடன் விருந்து நடக்கவேண்டும் [illegible] பொன்னுசாமி ஐயர் மனைவிக்கு உத்தரவு போட்டுவிட்டுக் கடைக்குப் போய்விட்டார். அரிசிப் பானையில் திட்டி எடுத்தால் பிடி அரிசி இருந்தது. வெல்லப் பானை காலி! உப்பைத் தவிர வீட்டில் நிறைந்த பண்டமாக வேறு ஒன்றும் இல்லை!

பொன்னுசாமி ஐயரின் மனைவி காமாக்ஷி கைகளைப் பிசைந்தாள். உறவினர்கள் எல்லோரும் ஸ்நானம் செய்ய குளத்துக்குப் போயிருந்தார்கள். அப்படியே ஸ்வாமி தரிசனம் செய்துவிட்டு வருவார்கள். வந்ததும் இலை போட்டு உணவு படைக்கவேண்டும். சாதாரணமாக ஒரு துவையலும், மிளகு ரசமும் வைத்துப் பரிமாறிவிட முடியுமா? பொன்னுசாமி ஐயருக்குக் கோபம் வந்தால் மனிதனே இல்லை. இந்தக் காலத்துப் பெண்களாக இருந்தால், கணவனிடம், "வீட்டில் சாமான்கள் இல்லாமல் எப்படிச் சமைப்பது? நான் என்ன அக்ஷயபாத்திரமா வைத்திருக்கிறேன்?" என்றாவது கேட்பார்கள். காமாக்ஷி பரமசாது. கழுத்துத் திருமாங்கல்யத்தைக்கூடக் கழற்றிக் கொடுத்துவிட்டு மஞ்சளைக் கோர்த்துக் கட்டிக்கொள்ளும் சுபாவம் படைத்தவள். கையைப் பிசைந்துகொண்டே தெருவில் நின்றிருந்தாள். தெருவில் பாண்டி ஆடிக்கொண்டிருந்த என்னைக் கூப்பிட்டு, "குழந்தை! கடைக்குப் போய் வீட்டில் சமைக்க ஒன்றுமில்லையாம் என்று மாமாவிடம் சொல்லுகிறாயா?" என்று கேட்டாள். நான் தலையை ஆட்டிவிட்டு ஓடினேன். சிறிது நேரத்துக்குள் திரும்பி வந்து, "எப்படியாவது சமாளித்துக்கொள்ளச் சொன்னார்" என்றும் தெரிவித்தே[illegible]ணவன் சொல்லி அனுப்பப்போவ[illegible] பதில் இன்னவிதமாகத்தான் இருக்[illegible] என்று தெரிந்துவைத்தாற்போ[illegible] காமாக்ஷி எங்கோ பெட்டியில் கிடந்த வெண்கல விளக்கைத் தேடி எடுத்தாள். அதைத் தினந்தோறும் அவர்கள் ஏற்றுவதில்லை. பசும்பொன் நிறம் வாய்ந்த அந்த விளக்கின் முகத்துக்குமேல் அழகிய மயில் போல செதுக்கி இருந்தது. நல்ல வார்ப்படம். நான்கு தலைமுறைகளுக்குத் தாங்கக்கூடியது. விளக்கைத் தலைப்பால் போர்த்தி எடுத்துக்கொண்டு எங்கள் வீட்டுக்குள் நுழைந்தாள் காமாக்ஷி. கூடத்தில் கறிகாய் நறுக்கிக்கொண்டிருந்த என் பாட்டியின் முன்பு அதை வைத்தாள்.

"என்னடி இது?" என்றாள் என் பாட்டி.

"ஐந்து ரூபாய் அவசரமாக வேண்டி இருக்கிறது. கொடுங்கள்."

"அதற்காக விளக்கைக் கொண்டு வருவார்களா?"

"பரவாயில்லை. எங்கே இருந்தால் என்ன? இதுவும் நம் வீடுதானே? பத்து நாட்களுக்குள் வாங்கிக்கொள்கிறேன்."

ஐந்து ரூபாயை வாங்கி இடுப்பில் செருகிக்கொண்டு போய்விட்டாள் காமாக்ஷி. அன்று வீட்டில் [illegible]

தோன். சம்பிரமமாக விருந்து ...ந்து. "நீ எப்படிச் சமாளித்தாய்?" என்று ஒரு வார்த்தை அந்த மனுஷன் கேட்டிருக்கவேண்டுமே!

அதன் பிறகு அச்சம்பவத்தை வார் ...னைவு வைத்திருந்தாலும் நான் மறந்து விட்டேன். பிறந்த ஊரையே மறந்து விட்டேனே. குடும்பமே வேறு ஊருக்குப் போன பிறகு எனக்கு விளக்கைப்பற்றி எங்கிருந்து நினைவு வரப்போகிறது? நாளடைவில் புதிய சூழ்நிலையில் பொன்னுசாமி ஐயரையே மறந்து போனவள் அல்லவா நான்?

திடீரென்று அப்பா என்னிடம் விளக்கைப்பற்றிப் பிரஸ்தாபித்தபோது எனக்குத் தூக்கிவாரிப்போட்டது.

சென்னையிலிருந்து பங்களூர் வந்த வீட்டுச் சாமான்களுடன் வெண்கலக் குத்து விளக்கு ஒன்று வந்திருந்தது. "இது யாருடையது? நம்முடைய விளக்கு மாதிரி இல்லையே. உன் அப்பா தவறுதலாகப் பாத்திரங்களுடன் அனுப்பி இருக்கிறார் போல் இருக்கிறது. வெறும் பாத்திரங்களுக்கே அறுபது ரூபாய்களுக்குமேல் ஆகி இருக்கிறதே கட்டணம் என்று பார்த்தேன். 'இதுவே ஏகப்பட்ட நிறை இருக்கும்போல் இருக்கிறதே" என்றார் என் கணவர்.

"தவறுதலாகத்தான் வந்திருக்கிறது. என் பிறந்தகத்திலும் இந்த மாதிரி விளக்கைப் பார்த்ததில்லை. இருக்கட்டும் பார்ப்போம்" என்று அதைப் பெட்டியில் போட்டுவிட்டேன். பிறகு வெளியிலேயே எடுக்கவில்லை. அப்பா, இரண்டு முறை பங்களூர் வந்தபோதும் அதைப் பற்றிக் கேட்க அடியோடு மறந்துவிட்டேன். காப்பி சாப்பிட்டுவிட்டு அப்பா வெளியே போய் விட்டார். பெட்டிகளைத் துழாவிப் பார்த்ததில் விளக்கை நான் பங்களூரில் ...ன் சிநேகிதி ஒருத்திக்குப் பரிசாகக் ...டுத்தது நினைவு வந்தது!

"ஏகப்பட்ட நிறை உள்ள இதைப் போய் ஊர் ஊராகத் தூக்கிக்கொண்டு அலையவேண்டாம். யாருக்காவது கொடுத்துவிடு" என்று என்னிடம் தர்க்கம் பண்ண ஆரம்பித்தார் என் கணவர்; மறுபடியும் மாற்றலாகிச் சென்னை வரும்போது.

"யாருடையதோ என்னவோ?" என்று தயங்கினேன்.

"இந்தக் காலத்தில் இந்த மாதிரிப் பொருளை யாருமே வாங்குவதில்லை. இதெல்லாம் ஐம்பது வருஷங்களுக்கு முந்தியவை. பொருட்காட்சியில் இடம் பெற வேண்டியவை. இதைப் போய் யாராவது தூக்கிக்கொண்டு அலைவார்களா? உனக்குத்தான் ஏகப்பட்ட சிநேகிதிகள் இருக்கிறார்களே. யாருக்காவது பரிசாகக் கொடுத்துவிடேன்!"

அதுவும் சரியென்று தோன்றவே என் தோழிக்கு அதைத் தாராளமாகக் கொடுத்துவிட்டு வந்திருக்கிறேன் நான்!

அப்பா, அதைப் போய் வீட்டில் தேடப் போகிறார்! நாளை வந்து என்னையும் கேட்டாலும் கேட்பார். இவ்வளவு வருஷங்கள் கழித்து தன் விளக்கைத் தேடிக்கொண்டு வருகிறார் இந்தக் கிழவர்! அவரை ஏமாற்றலாமா?



மூளையைக் குழப்பக்கூடிய இந்த விஷயம் சதா என் மனதில் சுழன்று வந்தது. 'என்ன தவறு செய்துவிட்டோம்? திரும்பவும் தோழியைக் கேட்டால் அவள்தான் என்ன நினைக்கமாட்டாள்?' என்றும் தோன்றியது. வருவது வரட்டும்; பொன்னுசாமி ஐயரிடமே உண்மையைச் சொல்லிவிடுவது என்று தைரியமாக இருந்துவிட்டேன்.

இரண்டு வாரங்களுக்கு அப்புறம் கிழவர் வந்தார்.

"குழந்தை! பங்களூரில் இருந்திருக்கிறாயே. யாராவது நல்ல மனுஷனாக இருந்தால் அவர்கள் விலாசம் கொடேன்" என்றார். அவர் யார் வீட்டுக் கல்யாணத்துக்கோ பங்களூர் போவதாக இருந்தார். விளக்கைப்பற்றி என்னிடம் ஒன்றுமே கேட்கவில்லை.

என்னமோ சட்டென்று ஒரு யோசனை தோன்றியது. நடந்தவைகளைச் சொல்லி, "அவளிடம் சொல்லுங்கள். விளக்கைக் கொடுத்தால் வாங்கிக்கொள்ளுங்கள்" என்று கூறி அவள் விலாசத்தைக் கொடுத்தேன். என் மனதிலே ஒரு நிம்மதி ஏற்பட்டது. உண்மையைக் கூறிவிட்டோம் என்கிற திருப்தியும் ஏற்பட்டது.

பொன்னுசாமி ஐயரிடம் என் தோழி விளக்கைக் கொடுத்தாளா என்று அறியக் கூட எனக்கு ஆவல் ஏற்படவில்லை. பல தினங்களுக்குப் பிறகு வந்த பொன்னுசாமி ஐயரின் கடிதம் என்னைத் தெய்வச் செயலின் ஆழ்ந்த உண்மையைச் சிந்திக்கத் தூண்டியது:

சௌபாக்யவதி குழந்தைக்கு,

ஆசீர்வாதம். உபயக்ஷேமம். நீ தீர்க்க சுமங்கலியாக இருக்க ஸ்ரீ சாமுண்டீச்வரி அனுக்ரஹம் செய்வாள். உன் தோழியிடம் கொடுத்துவந்த விளக்கு இந்த அம்பிகையின் சந்நிதியில் ஒளி வீசிப்பிரகாசிக்கிறது. தர்மம் செய்வதில் படாடோபம் கூடாது என்பார்கள். விளக்கின் அடியில் பொறித்திருக்கும் என் பெயரைக்கூடக் கவனியாமல் அப்பெண் 'ஒரு அன்பரின் கைங்கர்யம்' என்று தர்மம் செய்திருக்கிறாள். சுடர்விட்டுச் சந்நிதியில் எரியும் அந்த விளக்கின் தேஜஸைக் காண இன்று காமாக்ஷி மாமி இல்லைதான். யாருமில்லாத ஏழைப் பிராமணன் விளக்கை வைத்துக்கொண்டு என்ன அம்மா செய்யப்போகிறேன்? சரியான இடத்தைத்தான் அது அடைந்துவிட்டது. ஆசீர்வாதம்,

பொன்னுசாமி ஐயர்

என் கண்களிலிருந்து உணர்ச்சிப் பெருக்கால் முத்துப்போல் கண்ணீர் திரண்டு கடிதத்தின் மீது விழுந்! கோவிலில் சுடர்விட்டு எரியும் வி... 'ஒரு அன்பரின் கைங்கர்யமா?' அ... நான் என் தோழிக்கு அளித்த பரி... அதை எப்படிக் குறிப்பிடுவது என்... தான் புரியவில்லை.

# தாயில்லா குழந்தை

(ஸரோஜா ராமமூர்த்தி)

ஜானகி தெருத்திண்ணையில் உட்கார்ந்து குழந்தைக்கு வேண்டிய பனிக் குல்லாய் பின்னிக் கொண்டிருந்தாள். சிவப்பும், வெளுப்பும் கலந்த நூலில் குல்லாய் பாதி பின்னப்பட்டிருந்தது. பின்னிக்கொண்டிருந்தவள் குல்லாயை இப்படியும், அப்படியுமாகத் திருப்பிப்பார்த்துவிட்டு யோசனையில் ஆழ்ந்தாள். நிறைமாத கர்ப்பிணியாகிய அவளுக்கு அப்பொழுது எழுந்த யோசனை இனி அவளுக்குப் பிறக்கப்போகும் குழந்தையைப் பற்றியதைத் தவிர வேறொன்றும் இல்லை. அழகிய உருண்டை முகம். சுருள் சுருளாகப் புரளும் கூந்தல். கடைசல் பிடித்தமாதிரி கால்களும், கைகளும். அழகிய கரு விழிகள். எடுப்பான மூக்கு. சின்னஞ் சிறிய வாய். மாம்பழக் கதுப்பைப்போன்ற கன்னங்கள். இத்துடன் நல்ல சிவந்த நிறம். இவை போதாவா ஒரு மதலைக்கு? கட்டாயம் தன்னுடைய குழந்தை இவ்வளவு ரூப சௌந்தர்யத்துடன் இருக்கும் என்பதில் அவளுக்குச் சந்தேகமில்லை. அப்படித்தான் இருக்க வேண்டும் என்றும் அவள் மனம் தீர்மானம் செய்திருந்தது. ஒவ்வொரு நிமிஷமும் அவள் மனம் இதைத்தான் வேண்டிக்கொண்டிருந்தது. அழகிய குழந்தைகளைப் பார்க்குந்தோறும், குழந்தை கண்ணனின் படத்தைப் பார்க்கும்போதும் அவள் இதையே வேண்டினாள்.

ஜானகியின் யோசனை கலைந்தது. "இதை நாளைக்கு முடித்துவிடுவேன். பிறகு குழந்தைக்கு இதே நிறத்தில் சட்டை பின்னவேண்டும்" என்று வாய்விட்டுச் சற்று உரக்கச் சொல்லிக்கொண்டாள். அப்பொழுது தெரு 'கேட்'டை யாரோ திறப்பதுபோல் சத்தம் கேட்டது. அவள் எழுந்துவந்து பார்ப்பதற்குள் ஆறு வயதுப்பெண் ஒன்றும், நான்கு வயதுப் பையன் ஒருவனும் வாசற்படியில் நின்றுகொண்டிருந்தனர். அவள் சற்று முன் கற்பனை செய்த உருவத்தின் ஜாடையை அந்தக் குழந்தைகள் முகத்தில் கண்டாள்; ஆனால், அவள் கற்பனைக் குழந்தையின் முகத்தில் சலனம் எதுவுமின்றி அமைதி நிலவியது. இந்தக் குழந்தைகளின் முகத்திலோ துக்கத்தின் சாயை படர்ந்திருந்தது.

"யார் பாப்பா நீ?" என்று அந்தப் பெண்ணைப் பார்த்துக் கேட்டாள் ஜானகி.

"நாங்கள் கோடியாத்துப் பசங்கள்" என்றது பெரிய குழந்தை.

"உங்க அம்மா என்னபண்றா பாப்பா? உங்களைக் காணவிட்டால் தேட மாட்டாளா?" என்று கேட்டாள் ஜானகி.

"எங்களுக்கு அம்மா இல்லைமாமி" என்றாள் பெண். பையனும் பரிதாபமாக முகத்தை வைத்துக்கொண்டான்.

"ஐயோ பாவம்! தாயில்லாத குழந்தைகளா நீங்கள்?" என்றாள் ஜானகி.

"மாமி! அந்தக் குல்லாய் யாருக்குப் போடுகிறீர்கள்?" என்று கேட்டாள் அந்தப் பெண்.

"பாப்பாவுக்கு அம்மா. இது குளிர் காலமோன்னோ? அதுக்குக் குளிராதா? அதற்காகப் போடுகிறேன்" என்றுகூறி ஒருமாதிரியாகச் சிரித்துக்கொண்டாள் ஜானகி.

"பாப்பா எங்கேமாமி இருக்கிறது." என்று கேட்டாள் அந்தப் பெண்.

"பாப்பாவா? இன்னும் பிறக்கவில்லை" என்றாள் ஜானகி சற்று சங்கோஜத்துடன்?

அதற்குள் உள்ளேயிருந்து, ஜானு! ஜானு! யாரோடே அம்மா பேசிண்டு

இருக்கே ?" என்று கேட்டுக்கொண்டே ஜானகியின் தாயார் வெளியில் வந்தாள்.

"ஓஹோ! இதுகளா? என்னவோ பாவம்! இரண்டு வருஷமாச்சு அவ அம்மா போய். பாவம்! கிடந்து இது கள் திண்டாடுகிறதுகள். தாயார் இல்லா விட்டால் என்ன இருக்கு? பாழும் பிள்ளைப் பேறினால்தான் அவ அம்மா போனாள். அந்தக் குழந்தையும் போச்சு. பிள்ளைபெற்ற நான்காவது நாள் ஜன்னி கண்டு போய்விட்டாள்" என்று எங்கோ யோசனையாகப் படபடவென்று பேசிக் கொண்டுபோனாள் ஜானகியின் தாயார்.

ஜானகியின் முகம் வெளிறியது. "ஏன் அம்மா ஜன்னிகண்டது?" என்று கம்மிய குரலில் கேட்டாள்.

பெண்ணின் கலக்கத்தைக் கண்டு பிடித்துவிட்டாள் தாயார். இந்த விவர மெல்லாம் எதற்காகச்சொன்னோம் என்று தன்னையே நொந்துகொண்டாள்.

"அது கிடக்கிறது ஜானகி; ஒரே இடத்தில் கால் வலிக்க எத்தனை நாழி உட்கார்ந்திருப்பாய்? எழுந்துபோய் ஊஞ் சலில் சித்தே படுத்துக்கொள் போம்மா" என்று பெண்ணைக் கடிந்துகொண்டாள் தாயார்.

"போகிறேன் அம்மா! அதுகளுக்கு ஏதாவது கொடுத்தனுப்பேன். பாவம்! ஏசாக்கா எல்லாம் கந்தலாக இருக்கே. அவா அப்பா ஒன்றும் சம்பாதிக்கலையா? என் இப்படி வைத்திருக்கிறார்?"

"அதான் கேட்டதில்லையா 'தாயில்லா தகப்பன் தாயாதி' என்று? என்னவோ அதுகள் தலையெழுத்து!"

"நாளைக்கு வாடி அம்மா. என் ரவிக்கை ஏதாவது பழசாக இருந்தால் பார்த்துத்தரேன். கொஞ்சம் சின்னதாத் தச்சும் தரேன், ஏதோ குளிருக்குப் போட்டுக்கோ" என்று ஜானகி பரிவுடன் கூறினாள்.

குழந்தைகள் இருவரும் போய்விட்ட னர்.

ஆனால், ஜானகியின் மனதில் விவரிக்க முடியாத வேதனையும், கவலையும் பிடுங்கி யது. ஊஞ்சலில் படுத்துத்தூங்க முயன் றதும் பரிதாபமான அந்த இரண்டு முகங் கள் தோன்றி அவள் மனோவேதனையை அதிகப் படுத்தின.

"தாயார் ஒருத்தி இருந்தால் இந்தக் குழந்தைகள் எவ்வளவு சீரும் சிறப்பும் பெற்று விளங்கும்? இனிப் பிறக்கப் போகும் குழந்தைக்குப் பனிக்குல்லாய் பின்னும் தன்னைப்போலத்தான் அவளும் இருந்திருப்பாள்! குளிரில் நடுங்கும் குழந்தைகளை ஆதரவுடன் அணைத்துப் படுக்கவைத்தாலே போதுமே. அந்த அன் புக்கு இந்த உலகத்தையே பணயமாக வைக்கலாமே. சீ! என்ன துக்கிரி அதிர்ஷ்டம் இவர்களுக்கு?

ஒரு வேளை தன் குழந்தையும் இந்த மாதிரி ராசியில் பிறக்குமோ?

ஜானகிக்குத் தன் தாயார் கூறியது நினைவுக்கு வந்தது, 'பாழும் பிள்ளைப்பேறி னால்தான் அவ அம்மா போனாள்' என்று. ஜானகியால் அம்மாதிரி நிலைமையைக் கற் பனைகூடச் செய்ய முடியவில்லை.

அப்படியே அயர்ந்து ஊஞ்சலில் தூங்கி விட்டாள்.

## 2

ஜானகி தூங்கி விழித்தபோது மணி ஐந்தரைக்குமேல் ஆகியிருந்தது. வழக் கம்போல் இல்லாமல் அன்று அவளுக்கு உடம்பில் வேதனை ஏற்பட்டிருந்தது.

"என்னடி அம்மா! தலைகூடப் பின் னிக்கொள்ளாமல் தூக்கம்? எழுந்துவா. அஸ்தமம் ஆகப்போகிறது. தலை பின்னி விடறேன்" என்று ஜானகியை கூப்பிட் டாள் அவள் தாயார்.

"போ, அம்மா! எனக்கு உடம்பு சரியா யில்லை. என்னவோ வேதனை பண்ணு கிறது" என்று அலுத்துக் கொண்டாள் ஜானகி.

தாயாருக்கு விஷயம் விளங்கிப் போயிற்று.

"அசடே! ஆர அமர விஷயத்தைச் சொல்லுகிறாயே. நர்ஸுக்குச் சொல்லி அனுப்பவேண்டாமா? ராத்திரி வேளை

யில் திடீரென்று எப்படி அழைத்து வருவது?" என்றாள் தாயார்.

பிறகு, மாடிக்குச் சென்று ஜானகியின் தகப்பனாருக்கு விஷயத்தைக் கூறினாள். அங்கும், இங்கும் அலைந்து திரிந்துகொண்டிருந்தாள். மனசிலே பதட்டமும், கவலையும் நிறைந்திருந்தன அவளுக்கு. ஜானகி ஊஞ்சலிலேயே உட்கார்ந்திருந்தாள்.

மறுபடியும் கோடிவீட்டுக் குழந்தைகள் இருவரும் வந்தனர்.

"என்ன மாமி உடம்புக்கு? மூஞ்சி என்னவோ போல் இருக்கே?" என்று கேட்டாள் அம்புலு என்கிற அந்தப் பெண்.

"உடம்பு சரியாயில்லையடி அம்மா" என்றாள் ஜானகி. திரும்பவும் எதையோ நினைத்துக்கொண்டவள்போல் உள்ளே சென்று, தன் பெட்டியைத் திறந்து இரண்டு மூன்று பழய ரவிக்கைகளை எடுத்துக் கொண்டு வெளியே வந்தாள்.

அப்பொழுது ஜானகிக்குக் காப்பி எடுத்துக்கொண்டு வந்த அவள் தாய் அதைப் பார்த்துவிட்டு, "என்னடி இது வேலை? என்ன அவசரம் முழுகிப்போகிறது இப்போ? உடம்பு சரியாயில்லை" என்று கடிந்துகொண்டே பெண்ணையும், அந்தக் குழந்தைகளையும் மாறி மாறிப் பார்த்தாள்.

அம்புலுவும், அவள் தம்பியும் தயங்கி ஒரு அடி பின்னே நகர்ந்தனர்.

"இருக்கட்டும் அம்மா! மத்தியானமே கொடுக்கவேண்டும் என்று நினைத்திருந்தேன். பாவம்! தாயில்லாக் குழந்தை!" என்றாள் ஜானகி.

"சரி, நீ உள்ளேபோய்ப் படுத்துக்கோ. இந்தாடி அம்புலு! வெறுமனே வந்து வந்து மாமியைத் தொந்தரவு பண்ணாதே. மாமிக்குச் சின்னப்பாப்பா பிறக்கப்போகிறது. போ உங்கவீட்டுக்கு" என்று கூறினாள் அம்புலுவிடம் ஜானகியின் தாயார்.

ஜானகிக்கு அடுத்த நாள் காலையில் ஒரு பெண் குழந்தை பிறந்தது. அவள் எதிர்பார்த்தபடியே குறுகுறுவென்று மூக்கும், விழியுமாக நன்றாக இருந்தது. ஆனால் பிரசவம் ஆனதிலிருந்து குழந்தையைக் கண்டு சந்தோஷப்பட முடியாமல் ஜானகிக்கு மயக்கம் போட்டிருந்தது.

"நான் என்னடியம்மா பண்ணுவேன்? நேற்று மத்தியானம் அந்தக் கோடிவீட்டுக் குழந்தைகள் வந்திருந்தன. பேச்சுப் பராக்கில் அவ அம்மாவும் பிரசவம் ஆகித்தான் போய்விட்டாள் என்று இவளிடம் சொல்லிவிட்டேன். அதிலிருந்து 'பாவம் தாயில்லாக் குழந்தைகள்' என்று அங்கலாய்த்துக்கொண்டேயிருந்தாள். அதுதான் காரணமோ என்னவோ! ஸ்வாமி, பகவானே! ஆபத்து ஒன்றுமில்லாமல் காப்பாற்று!" என்று நர்ஸிடம் கூறிக் கவலைப்பட்டாள் ஜானகியின் தாயார்.

ஜானகிக்குக் குழந்தை பிறந்திருக்கிறது என்கிற செய்தி அம்புலுவின் காதில் விழுந்தது. பாப்பாவைப் பார்க்கவேண்டும் என்கிற ஆவல் மிகுதியால் ஓடிவந்தாள். தெருப்பக்கம் இருந்த அறையின் ஜன்னல் வழியாக உள்ளே எட்டிப் பார்த்தாள். ஜானகி அசையாமல் படுத்திருந்தாள். குழந்தை மட்டும் காலையும், கையையும் ஆட்டிக் கொண்டு படுத்திருந்தது. அந்தக் கள்ளங் கபடற்ற முகம் ஜானகியைப் போலவே இருந்தது. "பாவம்! மாமி ஏன் அப்படி அசையாமல் படுத்திருக்கிறாள்? அவள் அம்மா ஏன் கண்ணில் ஜலம் பெருக நின்று கொண்டிருக்கிறாள்? டாக்டரும், நர்ஸும் ஏன் கவலையுடன் உட்கார்ந்திருக்கின்றனர்?" இவ்வளவு கேள்விகளுக்கும் பதில் அறிய அம்புலுவுக்கு ஆசை. ஆனால், யாரைக் கேட்பது?

அம்புலு நின்றுகொண்டிருந்த ஜன்னலின் கதவு காற்று அடித்ததில் பட்டென்று மூடிக்கொண்டது.

"யார் அங்கே கதவை மூடுகிறது?" என்று ஜானகியின் தாயார் அதட்டிக் கொண்டே வெளியில் வந்தாள்.

"நான் சாத்தலை மாமி. காற்றில் மூடிக் கொண்டது" என்று பயத்துடன் கூறும் அம்புலுவைப் பொறி பறக்க விழித்துப் பார்த்தாள்.

"போங்களடி சனியன்களா! உங்களை யார் இங்கே வரச்சொன்னது?" என்று

கத்திவிட்டு உள்ளே நுழைந்தபோது ஜானகி மெதுவாகக் கண்களைத்திறந்து பார்த்து, " அம்மா ! " என்று கூப்பிட்டாள்.

" மாமி ஏன் கண்ணை மூடிக்கொண்டு படுத்திருந்தாள் ? ஒருவேளை நம்ப அம்மா மாதிரி மாமியும் போய் விட்டாளோ ? ஸ்வாமி ஏன் தான், நல்லவர்களை எல்லாம் அழைத்துக் கொள்கிறாரோ ? " என்று நினைத்து வருத்தப்பட்டாள் அம்புலு.

" கடைசியில் பாப்பாவைப் பார்க்காமல் வந்து விட்டோமே " என்றும் அவளுக்குக் குறையாக இருந்தது வீட்டுக்கு வந்த பிறகு.



## 3

ஜானகிக்கு உடம்பு குணமாகித் தலைக்கு ஜலம் விடப் பதினைந்து நாளைக்கு மேல் ஆகிவிட்டது. அந்த நாட்களில் ஒரு தினமாவது அம்புலு அவர்கள் வீட்டுப் பக்கம் போகவில்லை. ஜானகியும் இரண்டொரு தடவை, " ஏனம்மா ! அந்தக் குழந்தைகள் இந்தப் பக்கமே காணோம்?" என்று தன் தாயாரைக் கேட்டாள். " உடம்பை அலட்டிக்காதே அம்மா ! நீ கிடந்த லக்ஷணத்துக்கு உனக்கு ஏன் இந்த வீண் விசாரமெல்லாம் ? " என்று கோபித்துக் கொண்டாள் அவள் தாயார்.

புண்ணியாவசனத்தன்று, மாலை குழந்தையைத் தொட்டிலில் இட ஊர் அழைப்பதற்கு ஜானகியின் தங்கை புறப்பட்டாள்.

ஒவ்வொரு வீடாக அவள் ஏறி இறங்குவதைக் கவனித்த அம்புலுபயந்து கொண்டே, " ஏண்டி ! உங்களகத்தில் இன்றைக்கு என்ன ? " என்று கேட்டாள்.

" எங்க அக்கா குழந்தைக்குத் தொட்டில் போடுகிறார்கள். நீயும் தான் வாயேன் அம்புலு " என்று அவளையும் குங்குமம் கொடுத்து அழைத்தாள் அந்தப் பெண்.

அம்புலுவுக்கு மாமியையும், குழந்தையையும் பார்க்கவேண்டும் என்கிற ஆவல் மிகுதியினால் அன்று ஜானகியின் தாயார் கோபித்துக்கொண்டதையும் மறந்து ஜானகியின் வீட்டுக்குச் சென்றாள்.

கூடம் நிறைய எல்லோரும் உட்கார்ந்திருந்தார்கள். குழந்தைக்கு மையிட்டு, பொட்டிட்டு, நாமகரணம் செய்து தொட்டிலில் விட்டுத் தாலாட்டுப் பாட ஆரம்பித்தாள் ஜானகியின் தாயார். குழந்தை தன் சின்னஞ் சிறு கால்களையும், கைகளையும் உதைத்துக் கொண்டு விளையாடிக் கொண்டிருந்தது. " ஜானகி மாதிரியே இருக்கிறது மாமி !" என்று ஒருத்தி கூறினாள். " நன்றாயிருக்கு ! எங்க ஜானகிக்

குக் கண் பெரிசு. இவளுக்கு அப்படி இருக்காது போல் இருக்கே" என்று ஜானகியின் தாயார் மறுத்துக் கூறினாள்.

"எல்லாம் அவ அப்பா மாதிரிதான் இருக்காள்" என்று கூட்டத்தை விலக்கிக் கொண்டு வந்த ஜானகியின் பாட்டி குனிந்து தொட்டிலில் பார்த்துக் கொண்டே சொன்னாள்.

"எப்படியோ நல்ல வேளையாக அம்மாவைப் பிழைக்க வைச்சாளே அதுவே பெரிசு! எப்படியாவது இருந்து விட்டுப் போகட்டும்" என்றாள் ஒருத்தி,

"வாஸ்தவம்தாண்டி அம்மா! நான் எப்படி நடுங்கிப்போனேன் தெரியுமா, அவள் பேச்சு மூச்சு இல்லாமல் கிடந்த போது?" என்று பயம் தொனிக்கக்கூறிக் கொண்டே வெற்றிலைச் சீவல் கொடுக்க ஆரம்பித்தாள் ஜானகியின் தயார். "எல்லோரும் வாங்கிக் கொண்டீர்களா? குழந்தைகள் எல்லோரும் வாங்கிக் கொண்டார்களா?" என்றும் விசாரித்தாள்.

வாயிற்படி அருகில் சுவரோரமாக நிழலில் நின்று கொண்டிருந்த அம்புலுவை யாரும் கவனிக்கவில்லை. தொட்டிலைச் சுற்றி வளைத்து நின்று கொண்டிருந்த கூட்டத்தை விலக்கி உள்ளே சென்று ஒரு தரமாவது பாப்பாவைப் பார்க்கமாட்டோமா என்று அவள் குழந்தை மனம் துடித்தது. அதற்கு வேண்டிய தைரியம் அந்தக் குழந்தைக்கு ஏற்படுமா?

ஒவ்வொருவராய் எல்லோரும் போய் விட்டனர். ஜானகியின் தாயார் ஏதோ வேலையாக உள்ளே போனாள். அம்புலு மெதுவாகத் தொட்டில் அருகில் வந்தாள். பாப்பாவைக் குனிந்து பார்த்தாள். உள்ளன்புடன் அதன் கன்னங்களில் முத்தமிட்டுக் கொண்டாள். குழந்தையை எடுக்க வந்த ஜானகி அம்புலுவைப் பார்த்து, "ஏண்டி அம்மா! நீ பழம் வெற்றிலை வாங்கிக் கொண்டாயோ? ஏன் நீ வரவே இல்லை?" என்று பரிவுடன் கேட்டாள். "ஜானகி! நான் வந்து குழந்தையை எடுத்துத் தரமாட்டேன்? நீ ஏன் அலைகிறாய்?" என்று கூறிக் கொண்டே உள்ளே இருந்து வந்தாள் அவள் அம்மா. "அந்தக் குழந்தைக்குப் பழம் இருந்தாக் குடும்மா. பாவம்!" என்றாள் ஜானகி.

"எல்லாம் வாங்கிண்டு இருப்பாள். ஏண்டி இப்படிப் பரிந்து பேசறே?"

அம்புலு பரிதாபமாக ஜானகியைப்பார்த்தாள். பேசாமல் வாசற்படி இறங்கி ஒரு முறை அவளைத் திரும்பிப் பார்த்துவிட்டு கேட்டருகில் சென்றாள்.

ஜானகி எதையோ நினைத்துக் கொண்டு வெற்றிலைத் தட்டில் கிடந்த இரண்டு பழங்களை எடுத்துக் கொண்டு "பாப்பா! போகாதே. இந்தா" என்று கேட்டருகில் சென்று அம்புலுவின் கையில் பழங்களைக் கொடுத்தாள்.

உள்ளே, "நன்னாயிருக்கு அதிசயம்! நீ கிடந்த கிடைக்கு உடம்பை அலட்டிக்கிறது?" என்று பெரிதாக இரைந்தாள் அவள் அம்மா. "பாவம், அம்மா! தாயில்லாக் குழந்தை. நான் இந்தத் தடவை என் குழந்தைக்குத் தாயாகப் பிழைத்தேனே. அதன் மனசைப் புண் படுத்தலாமா? என் குழந்தைக்குத தாயாக நான் நன்றாக இருக்கவேண்டாமா?" என்று கேட்டுக் கொண்டே குழந்தையை எடுத்துக் கொண்டு உள்ளே சென்றாள் ஜானகி.

அவள் மனம் தான் ஏதோ பிரமாதமான காரியம் ஒன்றைச் செய்துவிட்டதாகத் திருப்தி அடைந்தது.




## ஸரோஜா ராமமூர்த்தி

வேதம் கோபுவை அழைத்துக் கொண்டு தெருவில் இறங்கியவுடன் அந்தத் தெருவே நின்று பார்த்து அதிசயித்தது. கடல் நுரைபோல் வெண்மையாகத் துவைத்த வேஷ்டியும், வெளிர் நீலத்தில் ஸ்லாக்கும் அணிந்து, நெற்றியில் பளிச் சென்று திருநீறு விளங்கக் கோபு புத்தகப் பையுடன் தாயைப் பின் தொடர்ந்தான்.

“இத்தனைக் கஷ்டங்களுக்கப்புறமும் குழந்தைத் தனம் மாறாத முகம். தெரிந்தா நான் தவறுகளைச் செய்தேன்” என்று கேட்கும் பாவம் முகமெங்கும் தேங்கிக் கிடந்தது.

மூலைக்கடைக்காரன் முகமெங்கும் வியப்புக் களைச் சொட்டத் தன் தலையை மட்டும் நீட்டி எட்டி வேதத்தைப் பார்த்தார். திரும்பித் திரும்பிக் கோபுவைப் பார்த்தார். அப்படி மாறி மாறிப் பார்க்க அங்கே எந்த அற்புதமும் நிகழ்ந்து விடவில்லை. காண்டா மிருகமோ, நீர்யானையோ எதுவுமே வனப் பிரதேசத்தை விட்டு அந்த ஊர்த் தெருக்களில் ஓடி வந்துவிடவில்லை. கடைக்காரர் நம்பியைப் போலவே, தெருவில் இறங்கிச் செல்லும் இந்த இருவரும் மனிதப் பிறவிகள் தாம். சமூகத்தில் வாழ வேண்டியவர்களும் கூட.

மூலைத் திருப்பத்தில் நாலு காலிகள் நின்று கொண்டிருந்தனர். ஒருவனுடைய உடை அவனுக்கே சொந்தமில்லை. எட்டணாவுக்கோ அல்லது அதிகமாக ஒரு ரூபாய் வாடகைக்கோ யார் வீட்டுத் துணியையோ அவன் வாடகைக்கு வாங்கி உடுத்திக் கொண்டு வந்திருந்தான். மட்டரகமான பவுடரின் மணத்துடன் ‘சார்மினார்’ சிகரெட்டின் வாசனையும் கலந்து விசியது.

காலிகள் மூவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கண்ணடித்துக் கொண்டனர். அதே நேரத்தில் சைக்கிள் கடை முதலாளி ஒருவர் மட்டரகமான சொற்களால் பிச்சைக்காரி ஒருத்தியை விளாசிக் கொண்டிருந்தார். அந்த விளாசலை நிறுத்திவிட்டு வேதத்தையும், கோபுவையும் உற்றுப் பார்த்துக் கொண்டே எதிரிலிருக்கும் டீக்கடை நாயரை அழைத்தார் படு அவசரமாக. டீக்கடை நாயர் எப்பொழுதுமே தான் உண்டு தன் வேலை உண்டு என்று இருக்கிறவர். மலையாளக் கரையை விட்டு வந்து பிழைக்கிற பிழைப்பிலே மண்ணைப் போட்டுக் கொள்ள விரும்பாதவர். அத்துடன் சைக்கிள் கடைக்காரரைப் பற்றி அவருக்கு நன்றாகத் தெரியும், பகலில் சைக்கிள் வியாபாரம். இரவில் ‘நாட்டுச் சரக்கு’ வியாபாரம் பண்ணிப் பணம் குவிக்கிறவர் என்று. ‘அந்த ஆளுடைய சகவாசம் வாணாம்’ என்று கொச்சைத் தமிழில் அவர் தனக்குத்தானே செய்துக் கொள்ளும் உபதேச வார்த்தைகள் தப்பித் தவறி உரக்கவும் வந்து விடும்.

“ஏன்யா நாயர்?”

“ஓ! எந்த சாமி?” ஒன்று தம் தலையைத் தூக்காமல் நாயர் டீயை ஆற்றுவதில் முனைந்திருந்தார். சைக்கிள்காரர் தன்னை வம்புக்கு இழுக்கிறார் என்பது அவருக்கா தெரியாது?

அவருடைய அலட்சியத்தைப் பொறுக்க முடியாமல் சைக்கிள் காரர் டீக்கடைக்கு விரைந்தார். மிகவும் தணிவான குரலில், “பார்த்தியா ஐயா அந்த அம்மாவும், அந்தப் பையனும் போறாங்க” என்று கேட்டார்.

நாயர் பொறுமைசாலிதான். ஆனால், அன்று அவருக் கென்னவோ கோபம். “ஆமாஞ்சாமி! நமக்கு அதான் தொழில்...” என்று எரிந்து விழவே, சைக்கிள் காரருக்குச் சுரத்துக் குறைந்து விட்டது. வேகமாகத் தன் கடைக்கு வந்து மறுபடியும் பிச்சைக்காரியை மட்டரகமாக விளாச ஆரம்பித்தார்.

வேதம் இதொன்றையும் கவனிக்கவில்லை. தாயும் மகனுமாக நடந்து போய்க் கொண்டிருந்தார்கள். மகன் படித்துத் தேற இன்னும் நாலைந்து வருஷங்கள் ஆகும். அவன் ஒரு சிறந்த மனிதனாக ஆகா விட்டாலும், மனிதப் பண்பிலிருந்து குறைவு பட்டவனாக இனி ஆகக் கூடாது. அந்த லட்சியப் பாதையில் மகனை அழைத்துக் கொண்டு அந்தத் தாய் முன்னேறப் பார்த்துக் கொண்டிருக்கிறாள்.

ரயிலடிக்கும் அவர்கள் வீட்டுக்கும் ஒரு பர்லாங்கு தூரம் இருக்கும். கிராமத்தின்

எல்லையில் ரயில் நிலையம் இருந்தது. தினம் பத்து நிமிஷங்களுக்கோ, அல்லது அதற்கும் குறைந்தோ மின்சார வண்டிகள் தடதட வென்று ஒலியை எழுப்பிய வண்ணம் தாம்பரத்துக்கும், 'பீச்சு'க்குமாக ஓடிக் கொண்டிருந்தன. இந்த ரயில் நிலையங்களில் பிரயாணிகளுக் கென்று உட்கார வரிசையாகப் பெஞ்சுகள் போட்டிருந்தார்கள். டிக்கட் வாங்கியிருப்பவர்கள் நின்றுகொண்டிருக்க பெரும்பாலும் டிக்கட் இல்லாத பிளாட்பாரம் பொறுக்கிகள் அதில் மெத்தனமாக உட்கார்ந்திருப்பது ஜனநாயக நாட்டில் வழங்கப்பட்டிருக்கும் மற்ற உரிமைகளைப் போல் ஒன்றாக இருக்கலாம்.

வேதம் கோபுவை அழைத்துக்கொண்டு ரயிலடிக்கு வருவதை அந்த 'மெத்தன' கோஷ்டிகளின் தலைவனாகிய பார்த்தசாரதி என்கிற 'பாத்சாதி' தொலைவிலேயே பார்த்துவிட்டான். உலகத்தில் அவனுடைய உள்ளம் எதையும் அதிசயம் என்று ஒப்புக்கொள்ளாத நிலையில் (ஏன், அமெரிக்கர்களும், ரஷ்யர்களும் விண்வெளிச் சாதனைகள் புரிந்த பிறகும் கூட அதை 'ஆங்' இதென்ன பிரமாதம்? நான் ஒவ்வொருத்தர் வாழ்க்கையிலும் புகுந்து விளையாடி சட்டத்தின் பிடியிலிருந்து தப்பி விண்ணில் பறந்து ரயிலடி பெஞ்சியில் வந்து அமருவதை விடவா இவர்கள் சாதித்து விட்டார்கள்?' என்று கேட்கிறவனாயிற்றே!) கோபு மறுபடியும் சமூகத்தில் உலவ ஆரம்பித்திருப்பதை ஒரு மாபெரும் அதிசயமாக நினைத்துத் துள்ளி எழுந்தது.

சட்டைக் காலரை நிமிர்த்தியவாறு தன் சகாவை நோக்கி, "ப்ரதர்! கவனிச்சியா யார் வர்ராங்கன்னு?..." என்று ஒரு கேள்வியை எடுத்து வீசினான் இன்னொருவனிடம். அந்தக் காட்சியை, அதில் சம்பந்தப்பட்டவர்களைப் பற்றி அசைபோட குறைந்தது இரண்டு 'சார்மினா'ராவது அவனுக்கு வேண்டுமே! விடு விடு என்று அவனும் அவன் 'மெத்தன'மான நண்பர்களும் ரயிலடி 'சிகிரெட் பங்க்'கை நோக்கி சிவாஜி நடை போட்டார்கள். அந்தக் கடையைப்பற்றி வர்ணிக்க புதிதாக ஒரு அகராதி போட வேண்டும். சர்வ (அ) லட்சணங்களும் பொருந்திய அந்தக் கடையில் ஊர் வம்புகளை அலசும் வியாபாரமே அதிகமாகக் கவனிக்கப்பட்டது.





'ஓ! காத்தாடி வாங்கலியோ காத்தாடி...!'
போட்டோ: பி.வி.எஸ்.

கடைக்காரரும், மற்றவர்களும் தங்கள் கண்கள் நிலைகுத்தி நிற்க ரயில்வே லைன்களுக்கப்பால் வந்து கொண்டிருக்கும் அந்த இருவரையுமே பார்த்துக் கொண்டிருந்தனர். அந்த வினாடியில் ஒரு நடிகர் திலகமோ, நடிகையர் திலகமோ அங்கு வந்திருந்தாலும் அவர்கள் திரும்பிப் பார்த்திருக்கமாட்டார்கள்!

வேதம் கோபுவுடன், ரயிலடிக்குள் நுழைந்தாள். கடைக்காரரிலிருந்து, 'மெத்தனக்காரர்கள்' படித்தவர்கள், வேலைக்குப் போகிறவர்கள், வருங்கால சமூகத்தை உருவாக்கும் பணியில் ஈடுபட்டிருக்கும் ஆசிரியர்கள் பலரும் அவளையும், அவனையும் மாறி மாறிப் பார்த்தார்கள்.

வேதத்தின் நெஞ்சில் இதொன்றும் உரைக்கவில்லை. தழும்பேறிப் போயிருக்கும் அந்த நெஞ்சில் இவர்களுடைய பார்வைகள், பேச்சுக்கள், சிரிப்புகள் எவ்விதமான எதிரொலியையும் எழுப்ப முடியாது.

ஒரு தாயின் மனத்தைப் பற்றி, அவள் துயரத்தைப்பற்றி, வளர்ந்து விட்டோம், நம்மிடையே ஒரு மகான், பிறந்து நம் சுதந்திரத்துக்காக வாழ்ந்து மறைந்தார் என்றும் முழக்க மிடும் சமூகத்துக்குத் தெரியாமல் போனது வியப்பில்லை. ஏனெனில், நம்மில் அநேகர் காந்தி மகானின் லட்சியங்களைக் காலில் மிதித்து வாழவே பழக்கிக் கொண்டு விட்டோம்.

ஆனால், பார்த்தசாரதியைப் பார்த்தவுடன் அந்தத் தாயின் வயிற்றில் நெருப்பு கனிந்தது. அழுத்தாலான சிரிப்புடன் அவள் கோபுவைப் பார்த்ததைவிடப் வேதத்தை அதிகம் பார்த்துக் கொண்டிருந்தாள்.

'பார்த்தாயா? உன் பிள்ளை ஒரு திருடன் என்பதை நான் எவ்வளவு தூரம் செயலாக்கி அமுலாக்க முடிந்தது? என்னைச் சட்டம் என்ன செய்து விட்டது? உன் பிள்ளை தானே ஓராண்டு செங்கல்பட்டு சீர்திருத்த பள்ளியில் குற்றவாளியாக இருந்து விடுதலை பெற்று வந்திருக்கிறான்?'

இந்த பாத்சாதி கோபுவுக்கு அறிமுகமானது பள்ளியில்தான். 'இன்னா ப்ரதர்' என்கிற ஒரே ஆங்கில வார்த்தை அவனையும் அவனையும் அந்தப் பள்ளியில் இணைத்து வைத்தது. பாத்சாதியின் மாய் மாலங்கள் புரட்டுகள், ஆட்டைத் தூக்கி மாட்டில் போடும் வித்தைகள் இவைகளைப் பற்றி கோபுவுக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை.

இரண்டு மூன்று நாட்கள் வரையில் பாத்சாதியின் நிஜார்ப் பைகள் அக்ஷயபாத்திரமாக இருந்தன. அள்ள அள்ளக் குறையாமல் சில்லறை குலுங்கும் அந்தப் பைகளில் கையை விட்டபடி அவன் கோபுவை புகாரி ஹோட்டலிலிருந்து, ஊசிப் போன 'புலவ்'விற்கும் கடைவரை அழைத்துப் போனான். யாரைப் பற்றிக் கேட்டாலும் 'ஓ! அவனா! அவன் நம்ப ஆளு ப்ரதர்! அவன் தோள் மேலே கை போட்டுப் பேசுவேன், ப்ரதர் நான். வர்றியா. மாட்னி போவலாம்...' என்றவாறு பள்ளி வகுப்புகளைக் கத்தரித்து விட்டு இருவரும் சினிமா பார்க்கப் போனார்கள். சினிமா கதாநாயகிகளை ஆதர்ச புருஷர்களாக, பெண்களாக மதித்துப் போற்றும் காலமாயிற்றே இது? வில்லன் செய்யும் ஜேப்படிகளையும், காலித்தனங்களையும் மெச்சிப் புகழ்ந்து இதெல்லாம் ஒருவிதமான 'விர'த்தனம் என்று வர்ணித்தான் கோபுவிடம் பாத்சாதி. சில நாட்களுக்கப்புறம் அவன் கடன் வாங்கிய காசு கரைந்ததும், கோபுவின் 'டர்ன்' செலவழிப்பதற்காக வந்தது.

பள்ளிக் கூடத்திலே நிதி கேட்டார்கள் என்று தந்தையிடம் ஐந்து ரூபாய் வாங்கிக் கொண்டு போனான் கோபு. நேருவின் நிதிக்காக என்று தாயிடம் ஐந்து ரூபாய் வாங்கினான். இதெல்லாம் பாத்சாதியின் அசுரப்பசிக்குப் போதவில்லை. திடும்மென்று நடு வகுப்பிலிருந்து மறைந்து விடுவான் பாத்சாதி. ஆசிரியர் கேட்டால் அவரைப் பார்த்து 'மெத்த'னமாகச் சிரிப்பான். அது ஒரு ஸ்டைல் சிரிப்பு! அந்தச் சிரிப்பிலே "டேய் வாத்தியார் பையா! வெளியே வாடா தைரியமாக! உன்னைப் பாத்துக்க

றேன்'' என்கிற பொருள் பொதிந்து கிடக்கும். ஆசிரியர் என்னத்தைக் கண்டார்? திருக்குறளுக்கும், நாலடியார்க்கும், கம்பருக்கும் தான் அவர் பொருள் கண்டவர்.

குழந்தை போல இருந்த கோபுவின் போக்கில் மாறுதல்கள் தோன்றின. படிப்பிலே அக்கறை இல்லை. கண்ட நேரங்களில் வீட்டுக்கு வருவதும் போவதும் அவள் தாய்க்குக் கவலையை அளித்தது.

தனக்குப் பின்னால் ஒரு பெரிய சதித் திட்டமே உருவாகிவருவதை வேதம் அறிந்து கொள்ளவில்லை.

கோபு, பாத்சாதி, அவன் சகாக்களில் சிலர் (வீரர்கள் என்று அவனால் மதிப்புப் பெற்றவர்கள் மட்டும்) புளியாந்தோப்பில் திட்டம் தீட்டுவதில் முனைந்திருந்தனர்.

'நாகரிக வாழ்க்கைக்கும், 'லைப்' ஜாலியாக இருப்பதற்கும் சில அத்யாவசியமான தேவைகள் உண்டு ப்ரதர்......சும்மா இப்படிப் புத்தகங்களைக் கட்டிக் கொண்டு அழுதால் லைப்பை அனுபவிக்க முடியாது... லைப் ஜாலியாக இருக்கிறதுக்குப் பணம் வேணும்......நாமெல்லாம் அவ்வளவு பணக்காரங்க இல்லை...நம்ம செட்டுலே கோபு ஒத்தன்தான் பணக்கார வீட்டுப் பிள்ளை. அவன் பாக்கெட்டோ காலி!...' என்று பேசி அவுட் சிரிப் பொன்றை சிந்தினான் பாத்சாதி கோபுவை விஷமமாகப் பார்த்தபடி. மற்றவர்களும் அவனுடன் சேர்ந்து சிரித்தார்கள். கோபுவுக்கு வெட்கமாகப் போய்விட்டது. இந்த வீரப்பரம்பரையுடன் சேர்ந்த பிறகு தான் மட்டும் கோழையாக இருப்பதா என்று அவன் ரத்தம் கொதித்தது. இளம் ரத்தமல்லவா?'

''ப்ரதர், இப்ப நீங்க, என்னை இன்னு செய்யச் சொல்றீங்க?'' என்று அவர்கள் மொழியில் கேட்டு வைத்தான்.

''ஆ! அப்படி வாடா வழிக்கு!'' என்றவாறு பாத்சாதியின் கண்ஜாடையைப் புரிந்து கொண்ட இன்னொரு 'வீரன்' கோபுவைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு வெளியே கிளம்பினான்.

அந்த ஊரில் பெரிய மனிதர்கள் வாழும் பகுதிகளின் வழியே இருவரும் நடந்து போய்க் கொண்டிருந்தார்கள். இடை இடையே தென்படும் கடைகளில் சோடா கலர் என்று கோபுவுக்கு ராஜோபசாரம் நடந்து வந்தது.

பகல் நேரமாதலால் தெருக்களில் சந்தடி இல்லை. பெரிய பங்களாவின் முகப்பில் இரண்டு புத்தம் புதிய சைக்கிள் நிறுத்தப் பட்டிருந்தன. அவைகளில் பளபளவென்று மின்னும் டைனமோ விளக்குள் பொருத்தப் பட்டிருந்தன.

கோபுவும், 'வீரனும்' மதிள் சுவர் ஓரமாக உள்ளே எட்டிப் பார்த்தனர். வீடு சந்தடியற்று இருந்தது. பகல் சாப்பாட்டுக்காக வீட்டுக்கு வந்தவர்கள் உணவு அருந்திக் கொண்டிருந்திருக்கலாம் அல்லது ஓய்வு எடுத்துக் கொண்டும் இருந்திருக்கலாம்.

'வீரன்' கோபுவின் தோளை மெதுவாகச் சீண்டினான். ''போ...மெதுவா அதைக் கழட்டிக் கிட்டு வந்துடு... என்ன?'' என்றான். சற்று அதிர்ந்து போனான் கோபு, ''சும்மா மிரளாதே ப்ரதர். நம்ம 'சொசைடிலே' இதெல்லாம் சகஜம்...நீயும்தான் எப்ப 'தொழில்' கத்துக்கிடறது? சும்மா போ மேன்...''

இரண்டு சைக்கிள்களிலிருந்தும் டைனமோ விளக்குகள் அகற்றப்பட்டன. அடுத்தபடியாக ரயில் ஏறி இருவரும் சைதாப்பேட்டைக்கு விரைந்தார்கள். இம்மாதிரி வியாபாரங்களுக்கு ஆதரவு காட்டுவதற்காகவே சில வட்டிக் கடைகள் உண்டல்லவா? இங்கேதான் மறுபடியும் கழுதை உதைக்கிற மாதிரி உதைத்தது.

''ப்ரதர்! எனக்குக் கையெழுத்துப் போட வராது. சும்மா நீயே ரசீதிலே கையெழுத்துப் போடு...'' கோபு மறுபடியும் தயங்கினான். ஆனால், உரலில் தலையிட்ட பிறகு உலக்கைக்குப் பயந்தால் முடியுமா? விறு விறு என்று ரசீதில் கையெழுத்துப் போட்டு விட்டு இரண்டு விளக்குகளுக்குமாக எழுபத்தைந்து ரூபாய் பெற்றுக் கொண்டு நண்பர்களுடன் 'ஜாலி லைப்' அனுபவிக்கக் கிளம்பினான் கோபு.

ஆனால், அன்று ஒருநாள்தான் அவன் 'ஜாலி' யாக இருக்க முடிந்தது.

இரவு பன்னிரண்டு மணிக்குமேல் அந்த வீட்டில் யாரும் வந்து அனாவசியத் தொல்லை கொடுத்ததில்லை.

கோபுவின் தந்தைக்கே வியப்பாக இருந்தது கதவைத் திறந்தபோது. இரண்டு போலீஸ்காரர்கள் கையில் மார்வாடிக்கடை ரசீதுடன் நின்றிருந்தார்கள். ரசீதில் கோபுவின் கையெழுத்து காணப்பட்டது.

இந்தச் சமயத்தில் அவனுடைய 'ஆருயிர்' நண்பன் பாத்சாதி எங்கே? அவன் குற்றம் புரிய அவர்கள் உடந்தையாக இருந்திருக்கலாம். குற்றம் புரிந்தவன் கோபுதானே?

அன்று அந்த நள்ளிரவில் வேதத்தின் வயிற்றில் யாரோ தீ வைத்தார்போல் குபீரென்று நெருப்புப் பற்றிக் கொண்டது.

பிறகு விசாரணைகள், கோர்ட், என்று கோபு அல்லல் பட்டான். குற்றம் பெரிதல்ல. அதுவும் வயதும், மனமும் முதிராத ஒரு பருவத்தில் சிலக் காலிகளின் சகவாசத்தால்

வந்தவினை என்பதை நீதிபதி உணர்ந்து தண்டனைக் காலத்தைக் குறைத்தே விதித்தார்.

பாத்சாதியும், அவன் தோழர்களும் எவ்விதம் தப்பினர்? அவர்கள் குற்றத்துக்கு உடந்தை என்று ருசு வானல்தானே நீதி வழங்கப்படும்? தெரியாமலா சொன்னார்கள் சட்டம் ஒரு கழுதை என்று? சட்டத்தின் உதை அவர்கள் பேரில் விழாமல், அப்பாவியான கோபுவின் மீது விழுந்தது.

வேதம் இந்தத் துயரை எப்படியோ தாங்கிக் கொண்டிருப்பாள். துயரைத் தரும் இறைவன் அதற்கான, மனோ வலிமையையும் கூடவே அருளி விடுகிருன். ஆனல், இந்த மூலைக்கடைக்காரரும், சைக்கிள் கடையும், ரயிலடி 'காலி'களும், கடைக்காரர்களும் மனத்தில், வயிற்றில் நீறுபூத்தாற் போல் கனிந்து கொண்டிருக்கும் நெருப்பை ஊதி எரிய விடும்போது—

ஆம், அதுதான் வேதத்தால் பொறுக்க முடியவில்லை.

மின்சார வண்டி சற்றுத் தாமதமாகவே வந்தது. கோபு திரும்பவும் படிக்கிருன் என்பதில் வியப்பு, சமூகத்தில் பழக ஆரம்பித்து விட்டான் என்பதில் திகைப்பு காண்பிக்கும் இந்த ஒரு சாரர் பாத்சாதியைப் பல்லை இளித்துக் கொண்டு வரவேற்றுப் பேசிக் கொண்டிருப்பவர்கள் ஒரு தாயின் வயிற்றில் கனிந்துகொண்டிருக்கும் நெருப்பின் தன்மையை உணர்ந்திருக்க மாட்டார்கள்.

அன்று தென்னிலங்கை பற்றி எரிய சீதையின் கற்பெனும் நெருப்பு அனுமனுக்கு உதவியதுபோல் இல்லாவிடினும், ஓர் குடும்பத்தை—தன் மகனுக்குத் துரோகமிழைத்தவனின் குடும்பத்தை அழிக்க வேதத்தின் வயிற்றில் கனியும் நெருப்பு போதாதா?

ரயிலில் தாயும், மகனும் ஏறிக் கொண்டார்கள். காலம் காட்டும் பாதையில் கணக்குப்படி விரைந்துகொண்டிருந்தது ரயில்.

வேதம் பெருமூச்சுடன் மிடறு விழுங்கியவாறு வெளியே தெரியும் தொலைவானத்தைப் பார்க்கலானள். ○

# கடைசியாக...

சரோஜா ராமமூர்த்தி

எனக்கு எதிர் வரிசையில உட்கார்ந்திருந்தார் அந்தப் பெரியவர். தூய்மையான வெள்ளை வேஷ்டியைக் கச்சம் வைத்துக் கட்டியிருந்தார். நெற்றியில் பிறைச் சந்திரன் வடிவில் சந்தனப் பொட்டு. உச்சி மண்டையில் நான்கு வெள்ளை ரோமங்கள் காற்றில் பறந்து கொண்டிருந்தன.

வெகு நேரம் வரையில்—ஏன் ரயில் கிளம்பி எண்ணூரைத் தாண்டும் வரையில்—பெட்டியில் இருந்த யாருமே பேசவில்லை. சென்னையிலிருந்து தலைநகர் நோக்கிச் செல்லும் ரயில் எண்ணூர் பாலத்தின் மீது ஓடியபோது தடதடவென்று எழுப்பிய ஒலியை அமுக்கியவாறு அவர் என்னைப் பார்த்து, "நீங்கள் எது வரையில்?" என்று கேட்டார்.

"நாகபுரி வரைக்கும் போகிறேன் என்றேன் நான். கிழவர் மறுமொழி ஏதும் கூறாமல் என்னை வெறித்தபடி பார்த்தார். பின்னர் மெதுவாகத் தலையசைத்தபடி யோசனை செய்தார். தமக்குள்ளாக முணுமுணுத்துக் கொண்டார். நான் அதைப் பற்றி அதிகம் அக்கறை காட்டவில்லை.

சிலர் மனத்தில் குமுறும் உணர்ச்சிகளை வார்த்தைகளாக்கித் தாங்களே முணுமுணுத்துக் கொள்வதுண்டு. எதிரில் ஆள் இருப்பதாகப் பாவித்துக் கொண்டு உரக்கவும் பேசுவார்கள்.

கிழவரின் கண்கள் ஏக்கத்துடன் ஜன்னலுக்கு வெளியே பார்த்தன. மீண்டும் நீர் படிந்த விழிகளால் என்னைப் பார்த்துவிட்டு தலையைத் திருப்பிக் கொண்டார்.

புண்பட்ட மனம் ஒன்று ஆறுதலுக்காகத் துடித்துக் கொண்டிருக்கிறது என்பது மட்டும் எனக்குப் புரிந்தது. இருந்தாலும் நான் எப்படி அவருடன் பேச முடியும்? ஜன்னல் வழியாக வெளியே பார்த்துக் கொண்டிருந்தேன். 'டிலக்ஸ்' வண்டி அன்று சென்ட்ரலை விட்டுக் கிளம்பும் போதே கொஞ்சம் தாமதமாகக் கிளம்பியது. எண்ணூரைத் தாண்டும் போது கதிரவன் மேற்கே சவுக்குத் தோப்புக் கப்பால் மறைந்து கொண்டிருந்தான்.

அது மார்கழி மாதம். பகல் பொழுது குறைந்து இருள் அதிகரித்திருந்தது. பெரியவருக்கு அடுத்தாற்போல் ஒரு குஜராத்தியரும், வங்காளியும் உட்கார்ந்திருந்தனர். தமிழர்கள் அதிகமில்லை. பின்புற சீட்டுகளில் தமிழ்க் குடும்பம் ஒன்று குழந்தை குட்டிகள், இட்டிலி, காப்பி, சித்ரான்னங்களுடன் குடியேறியிருந்தது.

தத்தித் தவழ்ந்து வரும் சின்னப் பாப்பாவிலிருந்து, இரட்டைப் பின்னல்கள் ஊசலாட அநேகமாக வடக்கத்திப் பாணி உடையுடன் செக்கச் செவேலென்று ஒரு பெண் சிரிக்கும் சதங்கை ஒலி வரை மிக ரம்யமாக இருந்து அந்தக் காட்சி.

கிழவர் பிரம்புக் கூடையைத் திறந்து சாத்துக்குடி பழம் ஒன்றை எடுத்து உரித்தார். சுளைகளாக உதிர்த்து வாயில் போட்டுக் குதப்ப ஆரம்பித்தார். வண்டி 'தடா' ஸ்டேஷனைத் தாண்டும் போது வங்காளச் சகோதரர் தட்டு நிறைய எதையோ வைத்துக் கொண்டு கொறிக்க ஆரம்பித்து விட்டார். ஒருகால் மீன் வறுவலாக இருக்கலாம்.

"நீங்கள் சாப்பிட வில்லையா?" என்று என்னிடம் ஆங்கிலத்தில் விசாரித்தார். 'கொஞ்சம் இதைச் சாப்பிட்டுப் பாருங்கள்' என்று தட்டிலிருந்ததைக் கொடுக்கவும் முன் வந்தார். நான் மறுத்ததும் அவர் சந்தேகம் வலுத்தது. மீன் அவர்கள் வழக்கப்படி மரக்கறிதானும். 'மீன் இல்லாமல் வங்காளியின் சாப்பாடே கிடையாது' என்றும் பழமொழி கூறினார்

குஜராத்தியர் வழக்கப்படி பூரியும், ஆலுவும் மணத்தது. கிழவர் என்னிடம் ஒரு

பழத்தை எடுத்துக் கொடுத்தார். ரயில் வேகமாகப் போய்க் கொண்டிருந்தது.

'சாப்பிடு, படு, தூங்கு' என்று யாரோ மாய மந்திரம் போட்டது போல் வங்காளியும், குஜராத்தியும் தத்தம் 'பர்த்'தில் ஏறிப் படுத்து விட்டார்கள். கிழவர் மட்டும் ஏதோ படித்துக் கொண்டிருந்தார்.

எனக்கு ரயிலில் ஏறி விட்டால் எவ்வளவு வசதிகள் இருந்தாலும் தூக்கம் வராது.

"நீங்கள் எது வரையில் போகிறீர்கள்? டில்லிக்கா?" என்று கேட்டேன். கிழவர் பேசவில்லை. ஒரு வேளை காது மந்தமோ என்று மறுபடியும் கேட்டேன்.

"உம்...என்ன கேட்டீர்கள்? நானும் நாகபுரிக்குத் தான் வருகிறேன்........." என்றார் அவர். எனக்கு அவருடன் பேசுவதில் சுவாரஸ்யம் ஏற்பட்டது.

"அப்படியா?" நாகபுரியில் எங்கேயிருக்கிறீர்கள்?" கிழவர் சட்டென்று பேச்சை மாற்றி விட்டார்.

"ஜபல்பூர் பார்த்திருக்கிறீர்களா? நர்மதை நதியும், சலவைக்கல் கற்களும் பார்க்க வேண்டியவை. நல்ல பௌர்ணமி நிலவில் ஆற்றில் படகில் போக வேண்டும். சந்திரனின் ஒளி சலவைக்கல்லில் விழுந்து அதன் பிரதி பிம்பங்கள் ஆற்றில் விழும். அற்புதமான காட்சிகள்.

"அவை ஒருவிதத்தில் அற்புதமானவை: நம் தென்னாட்டின் கோயில்களைப் பார்த்தவர்கள் அவற்றையும் பிரமாதம் என்று தான் சொல்கிறார்கள்...நீங்களும் தெற்கே க்ஷேத்ராடனம் போயிருப்பீர்கள்...இல்லையா? கிழவர் ஆழ்ந்த மௌனத்தில் இருந்தார். மனத்துக்குள்ளே பரவசப்பட்ட மாதிரி ஏதேதோ அற்புதங்களை மனக்கண் முன் தரிசிப்பவர்போல் புன்முறுவல் பூத்தார். பிறகு திடும்மென்று "அநேகமாக எல்லாக் கோயில்களும் பார்த்து விட்டேன். ராமேஸ்வரம் ஒன்று தான் பாக்கி. போக இருந்தேன், அது தான் புயலும், வெள்ளமுமாகி விட்டதே" ......என்றார்.




"அதனால் என்ன? இன்னொரு முறை பார்த்தால் போயிற்று..."

"இல்லை...இனிமேல் தென்னாட்டுக்குத் திரும்புவதாக உத்தேசம் இல்லை. என் யத்தனத்தில் இதுதான் கடைசிப் பயணம். இனிமேல் இந்தப் பக்கம் எங்கே வரப்போகிறேன்..."

இரவின் நிசப்தத்தில் அவர் கூறிய சொற்கள் மெதுவாக இருந்தாலும் அவை எனக்குள் ஒரு பரிதாபத்தையும், பயங்கரத்தையும் ஏற்படுத்தின.

வாழ்க்கையின் அஸ்தமனத்துக்குச் சில மணி நேரங்கள் முன்னே நிற்பவர். உலகில் நன்றாக வாழ்ந்து அனுபவித்திருக்க வேண்டும். அதிலே ஒரு நிறைவையும் கண்டிருக்க வேண்டும். ஏனிப்படி அலுப்புடன் பேசுகிறார்?

ரயில் கூடுரை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. உணவு விடுதியிலிருந்த சர்வர் வந்து யார் யாருக்குச் சாப்பாடு வேண்டுமென்று கேட்டார். வட இந்திய உணவா தென்னிந்திய உணவா என்றும் விசாரித்தார். நான் வட இந்தியச் சாப்பாடு தேவை



என்று சொன்னேன். பெரியவர் நம் பக்கத்துச் சாப்பாட்டுக்குச் சொன்ஞர்.

"உங்களுக்கு வடக்கே யிருந்து பழக்க மாச்சே? சப்பாத்தி பழக்கமில்லையா" என்று கேட்டேன்.

"பழக்க மில்லாமல் என்ன அம்மா? முழுக்க முழுக்க அதைத் தான் இனிமேல் சாப்பிடப் போகிறேன். கடைசியாக சாம்பார், ரசம் சாப்பிடுவோமே யென்று..."

எனக்கு அவர் அடிக்கடி கடைசி கடைசி யென்று சொல்வது பிடிக்கவில்லை. ஆரம்பமும், இறுதியும் தெரியாத ஓர் உலகில் நாம் வாழ்ந்து வருகிரும். அந்தந்த விஞடியில் நடப்பவை உண்மை. நடந்து போனவை கனவுகள். நடக்க இருப்பவைகளைப் பற்றி நமக்கென்ன தெரியப் போகிறது?

ரயில் பெட்டி தூங்கி விழித்தாற்போல் திடீரென்று கலகலப்பு ஏற்பட்டது. அடுத்த 'பர்த்'தில் தூங்கிக் கொண்டிருந்த பெண் விழித்துக் கொண்டாள். தூக்கம் செருகும் விழிகளை என்பால் திருப்பி, "என்ன ஸ்டேஷன் வரப்போகிறது". என்று கேட்டாள்.

"கூடூர்".

"ஓ! சாப்பாட்டுக்காரர் வந்து போய் விட்டாரா"? அச்சச்சோ."

"ஏன்? நீங்கள் தூங்கி விட்டீர்களா?"

"ஆமாம்...பரவாயில்லை நிறையச் சாப்பாடு இருக்கிறது. கொஞ்சம் சப்பாத்தி வாங்கிக் கொள்ளலாம் என்று பார்த்தேன்..."

"நான் சொல்லியிருக்கிறேன். சப்பாத்தி வரும். தருகிறேன்."

"ஓ! தாங்க்ஸ். நீங்கள் கொஞ்சம் புளியஞ்சாதம் எங்களிடம் வாங்கிக் கொள்ள வேண்டும்......"

"பின்னே சும்மாவா சப்பாத்தி தருவதாகச் சொன்னேன்?"

சிரிப்பின் அலைகள் பெட்டி முழுவதும் பரவின.

அவள் தூங்கிக் கொண்டிருந்த குழந்தையைச் சிண்டி எழுப்பி அதனுடன் விளையாடப் போய் விட்டாள். பரபரவென்று பறக்கும் வயது. எதையாவது செய்யாவிட்டால் பொழுது போகாது போலும்.

கூடூரில் சாப்பாடு வந்தது. ஒரே குடும்பம் போல நாங்கள் சாப்பாட்டைப் பகிர்ந்து

கொண்டோம். பெரியவர் தட்டில் ஒன்றும் வைக்காமல் காலி செய்து விட்டார். சுற்றுத்தள்ளி உட்கார்ந்திருந்த பஞ்சாபிக் குடும்பம் எல்லாவற்றையும் துவம்சம் செய்து விட்டு அடுத்த ஸ்டேஷனுடைய வருகைக்காகக் காத்திருந்தது.

"இவர்கள் வழி நெடுகிலும் சாப்பிட்டுக் கொண்டே வருவார்கள்..." — பெரியவர் ரகசியமாகத்தான் சொன்னார்.

"அது அவர்கள் பழக்கம். நல்ல சாப்பாடும், உடலுழைப்பும் உள்ளவர்கள்."

அவரவர் 'ரஜாயை' விரித்துப் படுக்க ஆரம்பித்து விட்டார்கள். நானும் படிப்பதற்காகப் புத்தகத்தை எடுத்தேன். பெரியவர் தம் காதுகளை மறைத்து மப்ளர் கட்டிக் கொண்டார். படுக்கையைத் தட்டிப் போட்டு விட்டுப், "படிக்கிறீர்களா?" என்று ஆரம்பித்தார்.

"இல்லே, இல்லே...ரயிலில் ஒன்றையும் ஆழ்ந்து படித்துவிட முடியாது. மேலெழுந்த வாரியாகப் புரட்டிப் பார்ப்பேன்."

"உங்களுடன் பேச வேண்டும்..."

"ஆமாம்...எனக்கும் நீங்கள் அடிக்கடி உபயோகிக்கும் அந்தக் 'கடைசி' என்கிற சொல்லுக்குப் பொருள் தெரிய வேண்டும்..."

* * *

இன்று என்னிடம் எதற்கெடுத்தாலும் 'கடைசி' என்று அலுத்துக் கொள்ளும் அர்த்தநாரீஸ்வரனுக்கு — பெரியவரின் பெயர் — ஆரம்பமும், அதன் அருமைகளும் ஒரு காலத்தில் இருந்தன. தென்னாட்டில் நல்ல உத்தியோகத்தில் இருந்த அவர் நாலு குழந்தைகளுக்குத் தந்தை, அவருடன் நிழல் போல் வாழ்க்கை நடத்திய மீனாட்சியின் ஆசைக் கணவன். பாலும், சுவையும் போல் அவர்களின் தாம்பத்தியம் அலுக்காத ஒன்றாக அமைந்திருந்தது.

"அர்த்தநாரியா? பெயரைப் போலவே அவனுக்குப் பெண்டாட்டியும் வாய்ச்சிருக்காளே. ஒரு நாளாவது அவனைத் தனியாகப் பார்க்க முடியலேயே?" என்பார்கள் ஊரார். கோவில், குளங்களுக்கும் கல்யாணங்களுக்கும் எதற்குமே இருவருமே ஒன்றாகப் போவார்கள். நாலு குழந்தைகளில் மூன்று பெண். ஒன்று பிள்ளை. அழகான குடும்பம் என்று ஊரே அதிசயப்பட்டது.

அந்த அழகுக்கும் ஒரு மாற்றம் வேண்டாமா? மீனாட்சி சட்டும், சவலையுமாகக் குழந்தைகளை விட்டு விட்டுப் போய் விட்டாள். போவதற்குக் காரணம் தேவையில்லை. சறுக்கல் ஏற்படுமானால் திடுமென்று மனிதனைப் பிடித்துத் தள்ளிவிட்டு வேடிக்கை பார்க்கும். சக்தியைப் பிரிந்த சிவனைப் போல இந்த மனிதரும் செயலற்றுப் போனார். குடும்பம் அழகாகவும், ஒற்றுமையாகவும் இருந்தபோது பொறாமைப்பட்டவர்கள், பார்த்து ரசித்தவர்கள் திடீரென்று அவருக்கு எதிராகக் கிளம்பினார்கள்.

குழந்தைகளின் தாய்வழியினர் குழந்தைகளை இவருடன் விட்டு வைக்காமல் அழைத்துப் போய் விட்டார்கள். இவர் அவைகளை என்றாவது போய்ப் பார்த்து விட்டு வருவார். பணம் கொடுப்பார். அத்துடன் கத்தரித்தது போல் இவருடைய உறவு நின்று விட்டது:

அர்த்தநாரியின் உள்ளம் அன்புக்காக ஏங்க ஆரம்பித்தது. அவர் நிழல் போல் அவருடன் ஒட்டி வாழ்ந்த மீனாட்சியைப் பற்றியே நினைத்து நினைத்து ஏங்கினார். அவள் இல்லாத உலகத்தில் எல்லாமே வெறுமையாகக் காட்சியளித்தது. அன்புடன் ஒரு சொல். ஆதரவுடன் ஒரு பார்வை. கனிவுடன் கவனிக்கும் உறவு இதற்காக அவர் உள்ளம் ஏங்க ஆரம்பித்தது.

இந்த நிலையில் வடக்கே மாற்றல் ஆகிவிட்டது. கொஞ்சம் கொஞ்சம் இருந்த பாசமும் குழந்தைகளை அடிக்கடி பாராததால் துண்டிக்கப்பட்டது.

முதன் முதல் நாகபுரியில் வந்திறங்கிய போது அவர் மீனாட்சியை நினைத்துக் கொண்டார்.

இம்மாதிரி வெளியூருக்கு மாற்றலாகி வந்தால் வந்த சில மணி நேரங்களில் குடும்பத்துக்குத் தேவையான அத்தனையையும் விசாரித்து விடுவாள் அவள்.

தனியாகப் பெட்டி, படுக்கையுடன் அவர் காரியாலய நண்பர் ஒருவர் ஏற்பாடு செய்திருந்த அறைக்குச் சென்றார். குளித்துச் சாப்பிட்டு முடித்தார். சிறிது தூங்கினார். ஆயிரம் மைல்களுக்கப்பால் தன்னந் தனியனாக ஒருவர் எந்த விதமான ஒட்டும், உறவுமின்றி இருப்பதென்றால் இந்தக் காலத்தில் சகஜமாக இருக்கலாம். உலகம் விஞ்ஞான முன்னேற்றத்தால் குறுகி யிருக்கும் இந்நாட்களுக்கு அது அதிசயமில்லே. அந்த நாட்களில் நூறு மைல்களே தொலைவு என்று கருதுகிற காலம்.

தூக்கம் கலைந்தவுடன் அவரைக் கவலை பிடித்துக் கொண்டது. தன் நிலையை விளக்கி ஊருக்கு எழுதிப் பெண்களில் பெரியவளாக இருப்பவளை அனுப்பச்

சொன்னார். அவளுக்குப் பத்து வயது இருக்கலாம்.

'பெண் குழந்தையைத் தனியாக இருக்க அனுப்ப முடியாதென்று' கடிதம் வந்து விட்டது. இப்படியே சில வருஷங்கள் ஓடின. யந்திரம் போல் வேலை செய்து வந்தார். உள்ளத்தில் இரும்பைச் சுமக்கிற மாதிரி ஒரு கனம். அந்தச் சுமையை யாராவது வந்து இறக்கி வைக்க மாட்டார்களா என்று ஒரு ஏக்கம்.

இந்தச் சமயத்தில்தான் சுமனாவின் நட்பு அவருக்கு ஏற்பட்டது. ஒரு பெண்ணின் துணை, நட்பு ஒரு மனிதனுக்கு எந்தக் காலத்திலும் தேவைப்படுகிற அவசியம் உண்டு. எப்படி ஏற்பட்டது என்றெல்லாம் அத்தனை பெரியவரிடம் சிறியவளாகிய நான் அவரின் வயதை உத்தேசித்துக் கேட்கவில்லை.

சுமனாவின் திலகமற்ற நெற்றியும், வெள்ளை மில் புடவையுமே அவளை விதவை என்று தெரியப்படுத்தின. படித்தவள், அவரைப் போலவே பதவியில் இருப்பவள். மராட்டியர்களுக்கே உரித்தான உயரம். வகுத்த நாசி, நீண்ட பெரிய கண்கள். அமைதியான புன் சிரிப்பு, எதைக் கண்டும் கலங்காத திண்மை. எல்லாவற்றுக்கும் மேலாக அவளுடைய அன்புக் குரல்.

அவளுடைய பேச்சு, செயல் யாவும் அமைதியாகவும், கௌரவமாகவும் இருந்தன. அன்பு, ஆறுதல் என்று ஏங்கியவர் சுமனாவின் உருவில் அதைக் கண்டு உள்ளம் நெகிழ்ந்தார்.

இருவரும் திடீரென்று கணவன், மனைவியாகி விடவில்லை. ஆற அமர யோசித்து தம்பதிகளாயினர்.

ஊரில் அவருடைய ஆதரவில் நாலு குழந்தைகள் இருக்கிறார்கள் என்று சுமனாவுக்குத் தெரியும். அவள் அவரின் சுதந்திரத்தில் தலையிட விரும்பவில்லை. அதற்குக் அவசியமுமில்லை.

குழந்தைகள் வளர்ந்தார்கள். பெண்களுக்குக் கல்யாணம் ஆகி விட்டது. பிள்ளை படித்துக் கொண்டிருந்தான். அவனுக்கும் கல்யாணமாயிற்று. நாகபுரியில் அவருக்குள் ஏதோ ரகசியம் புதைந்து இருக்கிறது என்பது மட்டும் அனைவருக்கும் தெரிந்தது. பிறகு, அவர் விதவா விவாகம் செய்து கொண்டிருக்கிறார் என்றும் தெரிந்தது.

பெண்களும், பிள்ளையும் தன் தாயின் இடத்தில் இன்னொருத்தியை அநேகமாக வரவேற்க மாட்டார்கள். சுமனாவை அவர்கள் 'தாய்' என்று ஏற்றுக்கொள்ள வில்லை. தந்தையை மன்னிக்கவும் இல்லை.

இவர் மட்டும் வயது ஆக ஆக குழந்தைகளை நினைத்துக் கொண்டு அடிக்கடி ஊருக்குப் போய் வந்தார். போகும்போது இருக்கும் உற்சாகம் திரும்பும்போது இருக்காது.

சுமனா மட்டும் அவரிடம் என்றும் ஒரே மாதிரியாக இருந்தாள். சமீபத்தில் தான் பிள்ளைக்குக் குழந்தை பிறந்ததாம். யாரோ சொல்லிக் கேள்விப்பட்டுப் பார்க்கக் கிளம்பிப் போனாராம்.

''என்னை யார் கவனித்தார்கள் அங்கே? குழந்தையைக் கூடச் சரியாகக் காட்டவில்லை...அப்படியே மீனாட்சியை உரித்துக் கொண்டு பிறந்திருக்கிறாள் என் பேத்தி. எப்படியோ அவள் பெயர் விளங்கட்டும்.'

## தாமதம் ஏன்?

விஞ்ஞான பரிசோதனைகளின் மூலம் கண்டுபிடிக்கப்படும் புதிய தயாரிப்புக்கள், தொழில் முறையில் அபிவிருத்தி பெற்று மக்கள் வாங்கும் பொருள்களாக வருவதற்குப் பல ஆண்டுகள் பிடிக்கின்றன.

நூற்றாண்டுக் கணக்கில் இருந்த இந்த இடைவெளி தற்போது குறுகி வருகிறது. இதோ சில உதாரணங்கள்:

1700-ல் கண்டு பிடிக்கப்பட்ட போட்டோ கிராஃபி 1839-ல் தான் தொழில் முறையில் பயன்பட ஆரம்பித்தது.

விஞ்ஞானத் துறையின் கண்டு பிடிப்புக்களான கீழ்வரும் பொருள்கள் அவை கண்டுபிடிக்கப்பட்ட பிறகு எத்தனை ஆண்டுகள் கழித்துத் தொழில் முறையில் மக்களுக்குப் பயன்பட ஆரம்பித்தன என்பதை இப்பட்டியல் குறிக்கும்.

| | | |
|---|---|---|
| டெலிஃபோன் | – 56 | ஆண்டுகள் |
| ரேடியோ | – 35 | ,, |
| ரேடார் | – 15 | ,, |
| டெலிவிஷன் | – 14 | ,, |
| டிரான்சிஸ்டர் | – 5 | ,, |

# பாசம்

ஸரோஜா ராமமூர்த்தி



கையிலிருந்த கடிதத்தை மீண்டும் ஒருமுறை படிப்பதில் மூழ்ந்திருந்தார் சிவராமன். இத்துடன் அவர் அக் கடிதத்தைப் படிப்பது நான்காவது தடவை. அப்படி அதில் என்னதான் எழுதியிருந்தது?

"அன்புள்ள அப்பாவுக்கு,

அநேக நமஸ்காரம். க்ஷேமம்; க்ஷேமத்துக்குக் கட்டாயம் எழுதுங்கள். வருஷக்கணக்காக உங்களைப் பார்க்கவேண்டும் என்கிற ஆசை எனக்கு. கடைசியாக ஆறு வருஷங்களுக்கு முன்பு என் கல்யாணத்தின்போது உங்களைப் பார்த்தது. அப்போதுகூட ஏதோ அன்னியனைப்போல் என்னிடத்தில் நடந்துகொண்டீர்கள். நாங்கள் அவ்விடத்தில் உற்சாகக் குறைவாக இருப்பதாக ஒருவர் மூலம் அறிந்தேன். முடியுமானால் இங்கே வந்து சில மாதங்கள் இருந்தால் மனக் கஷ்டம் குறையலாம்.

தங்களைக் காண ஆவலுடன் இருக்கும்,
சிவகாமி."

இதுதான் கடிதத்தின் வாசகம். நான்காவது தடவையாகக் கடிதத்தைப் படித்தவுடன் சிவராமன் கண்களிலிருந்து 'பொல பொல'வென்று கண்ணீர் உதிர்ந்தது.

அவர் முதல் மனைவி ராஜம் இறந்துபோய் இருபது வருடங்களுக்குப் பிறகு அன்றுதான் அவள் வைத்துவிட்டுப் போன அடையாளம் ஒருத்தி இருப்பது அவர் நினைவுக்கு வந்தது. இவ்வளவு நாட்களாகத் தான் பெற்ற மகள் ஒருத்தி இருப்பதை அவர் அறவே மறந்துவிடவில்லை. சாணைதீட்டிய வைரம் மாதிரி, மழுங்கிக் கிடந்த பாசத்தைச் சிவகாமியின் கடிதம் தூண்டிவிட்டது. சிவராமன் அவளைக் கவனியாமல் இருந்ததை நினைத்துச் சிந்தனையில் மூழ்கினார்.

*　　*　　*

ராஜம் இறந்தபோது சிவகாமி இரண்டு வயதுக் குழந்தை. திடீரென்று மாரடைப்பில் தாயார் இறந்துவிடவே, சிவகாமி ஏங்கிப் போனாள். சிவராமனுக்கும் அவ்வளவு சிறிய குழந்தையை வைத்துக்கொண்டு என்ன செய்வது, எப்படி வளர்ப்பது என்கிற விஷயம் புரியவில்லை. குழந்தையின் தாயைப்பெற்ற பாட்டியிடத்தில் அதை ஒப்புவித்தார். பிறகு

**பாச உணர்ச்சியைக் காலம் திரையிட்டு மறைத்து வைக்கவும், திரையின் பின்னே அந்த உணர்ச்சி வேற்றுருக்கொண்டு வ்ளர்கிறது. இந்த நிலைக்கு மாற்றுச் செய்யும் வகைக்கும் காலம்தான் உதவுகிறது; திரை மறைகிறது; மாற்றுருவில் மங்கிக் கிடந்த உணர்ச்சி புது ஒளியைப் பெற்றுத் தன் நிலையை அடைகிறது.**

அதைப்பற்றி அவர் சிந்திக்கவேயில்லை. சிவராமனுக்குத் தனிமை அலுத்தது. ஸரஸுவை இரண்டாந்தாரமாக மணந்துகொண்டார். அவளுடைய முகவிலாசத்திலும், இனிமை ததும்பும் பேச்சிலும் அவர் மனம் லயித்தது. அவள் சொல்வது, செய்வது எல்லாமே அவருக்கு இன்பமாக இருந்தது. ஸரஸு ஒரு காரியம் செய்தால் கட்டாயம் அவர் கருத்தில் அது சரியாகத்தான் இருக்கும் என்கிற நம்பிக்கை விழுந்துவிட்டது. மூத்தாளின் பெண் ஒருத்தி இருக்கிருள் என்பது ஸரஸுவுக்கும் நினைவு வரக் காரணமில்லாமல், சிவராமன் அவளிடம் நடந்துகொண்டார். ஸரஸு சிவராமன் இல்லாதபோது பேச்சுத் துணைக்காக அவள் தங்கை அலமுவை அழைத்து வந்திருந்தாள். அலமு வெகு சுடிகையான பெண். பார்ப்பதற்குக் 'குறுகுறு'வென்று அழகாக இருப்பாள். 'வெடுக் வெடுக்' கென்று பேசிக்கொண்டு சிவராமன் மனத்தைக் கவர்ந்துவிட்டாள் அவள்.

பொழுது விடிந்ததும் ஆபீஸ்போகும்வரையில் அலமுவுடன் பேச்சு; அவள் படிப்பதையும், பேசுவதையும் கேட்பதில் அவருக்கு ஒரு அலாதியான இன்பம் ஏற்பட்டது.

"பாருங்கள், நம் அலமு வகுப்பிலே முதல் மார்க்கு வாங்கியிருக்கிருள்! அவள் எம்பிராய்டரியில் பூப் போட்டிருக்கும் அழகைப் பார்த்தீர்களா?" என்று இப்படி ஸரஸு ஏதாவது நாள் தவருமல் சொல்லிக் கொண்டிருப்பாள்.

அலமு வீட்டுக்கு வந்த பிறகு சிவராமனுக்கு உத்தியோகத்தில் உயர்வு ஏற்பட்டது. அதையும் அலமுவின் அதிருஷ்டமாகவே நினைத்தார் அவர். இவ்வளவும் ஸரஸுவுக்குப் புத்திர பாக்கியம் ஏற்படாமல் இருந்ததனுல் ஏற்பட்ட எண்ணங்கள். முதலில் இருவரும் கொஞ்ச காலம் தங்களுக்குக் குழந்தை இல்லையே என்று நினைக்கவும், வருந்தவும் ஆரம்பித்தார்கள். ஆனுல், நாளடைவில் அலமு அந்தக் குறையை நிவர்த்தி செய்தாள். சிவராமனின் ஆசைக்கும், அன்புக்கும் பாத்திரமான குழந்தையாகவே வளர்ந்து வந்தாள் அவள். சிவராமன் தம்முடைய மகள் சிவகாமியை மறந்தே போய்விட்டார் என்று சொல்லும் படி நிலைமை மாறிப்போய்விட்டது.

குழந்தையைப் பிரிந்தது முதல் சிறிது நாட்கள் வரையிலும் சிவராமன் அவள்மீது பாசம் வைத்திருக்கத்தான் செய்தார். அவளின் பிரிவாற்ருமை அவருக்குச் சிரமத்தை அளித்தது. ஆனுலும் பலவகைப்பட்ட எண்ணத் தொடர்கள் அவர் மனத்திலே ஏற்பட்டு அந்தச் சிரமத்தைப் பரிகரித்துவிட்டன.

'குழந்தைக்கு இன்றியமையாத பிடிப்பு தாய் தானே? அந்தத் தாயாரே இப்போது இந்த உலகில் இல்லை. உலகியலில், மாற்றுந்தாயிடம்



'அவள் பூப் போட்டிருக்கும் அழகைப் பார்த்தீர்களா?'

வளர்ந்த குழந்தை சுகிர்த நிலையை அடைந்து வாழ்ந்தது என்று கண்ணுறக் காண்பது மிக ஆபூர்வம். அவள் பாட்டியிடமே வாழட்டும்....' இப்படிப்பட்ட எண்ணற்ற சிந்தனைகளால், சிவ காமி தன் பாட்டியிடமே இருந்து வாழ்வதை ஒப்புக்கொண்டு விட்டது அவர் மனம்.

ஆனால் ஊரில் இருப்பவர்கள் சும்மா இருப்பார் களா? ஜாடையாக, சிவகாமியை அவர்கள் உதாசீனம் செய்வதைப்பற்றி வம்பளந்தார் கள். ஸரஸு ஒரு தினம் கண்களில் ஜலம் தளும்ப, "ஊரிலே இருந்து உங்கள் அத்தைக் கிழவி வந்திருந்தாளே. அவள் நம்மைப் பற்றி என்ன என்னவோ சொல்லுகிறாள். பெற்ற பெண்ணை ஏன் என்றுகூட ஒரு பாவி கேட்கிறதில்லையே; 'ஊரார் பெண்ணை ஊட்டி வளர்த்தால் தன் பெண் ஆகிவிடுமா?' என்றெல் லாம் பேசிவிட்டுப் போனாளே. எனக்கு எதற்கு இந்த வம்பெல்லாம்? என் தங்கையை வேண்டுமானால் நான் என் பிறந்த வீட்டுக்கு அனுப்பிவிடுகிறேன். உங்கள் பெண்ணை அழைத்து வைத்துக் கொள்ளுங்கள். அப்பொழுது மாத்திரம் ஊர் வாய் அடைத்துக் கிடக்குமா? மூத்தாள் பெண்ணைப் படுத்துகிறாள் என்று தானே சொல்லப் போகிறார்கள்?" என்றாள்.

"கிடக்கிறது, விடு ஸரஸு! அலமு இல் லாமல் என்னால் ஒரு நிமிஷம் இருக்க முடி யாது. என் பெண்ணைப் பிரிந்து பத்து வரு ஷங்களுக்கு மேல் ஆகிவிட்டது. இப்பொழுது அவளை அழைத்துவந்து வைத்துக்கொண்டாலும் நம்மிடம் அவளுக்குப் பாசம் உண்டாகாது. ஊரா ருக்கென்ன ? ஏதாவது சொல்லிக்கொண்டு தான் இருப்பார்கள். அதையெல்லாம் நாம் பொருட்படுத்தக்கூடாது" என்பார் சிவராமன்.

அலமு விவாக வயதை அடைந்தாள். ஏராளமாகச் செலவுசெய்து, நல்ல படித்த மாப் பிள்ளையாகத் தேடிப் பிடித்துக் கலியாணமும் பண்ணிக் கொடுத்தார். அலமுவும், புக்ககத்திற் குச் சென்றாள். அவளைப் பிரிந்து முதன்முதல் தனிமையாக வீட்டிலிருந்தபோது சிவராமன் பெரிதும் கஷ்டப்பட்டார்.

இதற்கிடையில் சிவகாமியின் கலியாணத் தைப் பற்றி அவளுடைய தாத்தாவிடமிருந்து சிவராமனுக்குக் கடிதம் வந்தது. கட்டா யம் கலியாணத்துக்கு வந்திருந்து குழந்தை களை ஆசிர்வதிக்கவேண்டும் என்று அவர் எழுதியிருந்தார்.

"போய்த்தான் ஆகவேண்டுமா? ஆயிரம் ரூபாய் பணம் வேண்டுமானால் அனுப்பி விடட்டுமா?" என்று மனைவியை யோசனை கேட்டார் சிவராமன்.

ஸரஸுவுக்குத் தூக்கிவாரிப்போட்டது.

"நன்றாக இருக்கிறதே, நீங்கள் சொல்கிறது! பெற்ற பெண்ணுடைய கல்யாணத்துக்குப் போகா விட்டால் நாலுபேர் விழுந்து சிரிப்பார்கள். நாம் தானே முன்னின்று நடத்தக் கடமைப்பட்டவர் கள்?" என்று அவள் சொல்லியும் அவருக்கு ஒன்றும் அவ்விஷயம் பிரமாதமாகத் தோன்ற வில்லை.

மனைவியின் வற்புறுத்தலின்மேல் சிவரா மன் பெண்ணின் கலியாணத்துக்குப் போனார். அப்பாவும் பெண்ணும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டபோது முற்றிலும் அன்னி யர்களாகவே நடந்துகொண்டார்கள்.

"அப்பாவிடம் மனம்விட்டுப் பேசவோ, பழக வோ அவர் பெண் சிவகாமியால் முடிய வில்லை. மாங்கல்யதாரணம் முடிந்தவுடன் பெண் வந்து நமஸ்காரம் செய்தபோது இறந்து போன முதல் மனைவி ராஜத்தின் நினைவு அவ ருக்கு லேசாக வந்தது. தன்னுடன் மணப் பந்தலில் உட்கார்ந்திருந்தபோது ராஜம் சிவ காமியைப் போலத்தான் இருந்தாள் என்று நினைத்தார். ஆனால், அடிக்கடி, அந்த நினைவு அவர் மனத்தில்ஒருவிதமான கிளர்ச்சியை யும் ஏற்படுத்தவில்லை.

கலியாணமெல்லாம் முடிந்தது; ஊருக்குக் கிளம்பிவந்து விட்டார். அதற்குப் பிறகு சிவகாமியைப் பற்றியோ, புதிதாக வந்த மாப் பிள்ளையைப் பற்றியோ அவர் நினைக்கவில்லை. தலை தீபாவளி, ஆடி முதலிய பண்டிகைகள் எல்லாவற்றையும் சிவகாமியின் தாத்தாவே செய்தார். கலியாணமான புதிதில் சிவகாமி யும் தகப்பனார் தன்னைக் கவனியாததைப் பற்றிக் கவலைப்படவில்லை. குழந்தையிலிருந்து அவ ருடைய அன்பிலும் ஆதரவிலும் வளர்ந்திருந் தாலல்லவா அவளுக்கு அந்த ஆசை உண்டாகப் போகிறது?

சிவகாமியின் கலியாணத்திற்குப் போய் விட்டு வந்த பிறகு ஸரஸுவின் தேக நிலை சரி யாக இல்லை. உடம்பில் பலஹீனமும், அசதியும் ஏற்பட்டிருந்தன. அதிக நாள் பிழைத்திருக்

கப் போவதில்லை என்று உள் அந்தரங்கத்தில் ஏதோ ஒரு எண்ணம் தோன்றியிருந்தது.

வாழ்க்கை பூராவும் அன்பும், ஆசையும் வைத்திருந்த கணவனுக்கு ஒரு துணையும் வைக்காமல் பிரியநேர்ந்துவிடும் என்று அவள் வருந்தினாள். பலஹீனமடைந்திருந்த மனைவியைப் பார்க்கப் பார்க்கச் சிவராமனுக்கு அதைரியம் ஏற்பட்டது. மனைவியின் பிரிவுக்கப்புறம் மறுபடியும் தனிமையில்தான் தன் வாழ்நாளைக் கழிக்க நேரிடும் என்று நினைத்தபோது அவருக்கு விவரிக்க முடியாத துன்பவேதனை மனத்தில் குமுறியது.

ஒரு தினம் ஸரஸு தன் கணவனிடம், "அலமுவை ஊரிலிருந்து வரவழையுங்கள். எனக்கு உடம்பு இருக்கும் நிலையில் யாராவது கூட இருந்தால் தேவலை" என்றாள்.

இருவரும் உயிருக்குயிராய் நேசித்த அலமு வந்து சேர்ந்தாள். அவள் வாய்க்கு வேண்டியதை ருசியாகச் செய்துபோட்டாள். மனதிற்கு ஆறுதல் உண்டாகும் வார்த்தைகளைச் சொன்னாள். ஸரஸுவும் அதற்கெல்லாம் ஈடாகத் தன் உடம்பிலிருந்த நகைகள் ஒவ்வொன்றையும் அவளிடம் கழற்றிக் கொடுத்துவிட்டாள்.

"இதெல்லாம் எனக்கு எதற்காக அக்கா?" என்று ஸரஸுவைக் கேட்டாள் அலமு.

"மஞ்சள் குங்குமத்தோடே போகிற பாக்கியம் கிடைத்திருக்கிறதே, அதுவே போதும். நான் போனபிறகு உன் அத்திம்பேரின் மனம் எப்படி மாறுமோ? இப்பொழுதே என் கையாலேயே உனக்குக் கொடுத்துத் திருப்தி அடைந்து விடுகிறேன், அலமு" என்றாள் சகோதரி.

* * *

ஸரஸு சொன்னது சரியாகப் போயிற்று. ஸரஸுவின் மரணத்துக்குக்கப்புறம் சிவராமனின் மனம் மட்டும் மாறவில்லை; அலமுவின் மனமும் மாறியது. சிறு குழந்தை முதல் வளர்ந்து வந்த இடம் வேற்றிடமாகத் தோன்றியது. அந்த அத்திம்பேரே புது மனிதராக மாறினார். தற்செயலாக அவள் கணவனையும் சிவராமன் இருந்த ஊருக்கே மாற்றினார்கள். சிவராமன் வீட்டோடு அலமுவும், அவள் கணவனும் இருந்தார்கள்.

ஆனால், முன்பில்லாத வேற்றுமையுடன்தான் அலமு சிவராமனிடம் நடந்துவந்தாள். அவர் சகாரணமாகச் சொல்லும் வார்த்தைகள் அவளுக்குக் குற்றமாகத் தோன்றின.

"எதற்கெடுத்தாலும் கோபித்துக்கொள்கிறீர்களே, அத்திம்பேரே" என்பாள் அலமு.

"நான் என்னடியம்மா சொல்லிவிட்டேன் உன்னை? உன் அக்கா சொல்வதைத்தானே நானும் சொன்னேன்?" என்று கேட்பார் சிவராமன்.

ஒரு குடம் பாலில் ஒரு சொட்டு விஷம் கலந்தது போல, மனத்தில் வேற்றுமை புகுந்துவிட்டால் அந்த இடம் வேறு இடமாகத்தானே தோன்றும்?

"வளர்த்த பாசம் என்பார்களே, அது இந்த அலமுவிடம் எப்படி இல்லாமல் போயிற்று?" என்று சிந்தனையில் மூழ்கினார் சிவராமன்.

பாச உணர்ச்சிக்கு எத்தகைய சக்திதான் இருக்கிறது! விருப்பும் வெறுப்பும் ஏற்படுவதற்கேற்ப அந்த உணர்ச்சியும் வளர்ச்சியில் எத்தகைய பேதம் கொள்கிறது!

காலம் இட்ட கோலம் காரணமாகச் சிவராமன் தன் போக்கிற்கிணங்க நடந்துகொண்டு நியதியைச் சோதனை செய்துபார்த்தார். சொந்தப் பெண்ணின் மீது துவேஷமோ, வெறுப்போ, அருவருப்போ ஏற்பட்டு அவளை அவர் ஒதுக்கிவைக்கவில்லை; கசந்துபோன தன் வாழ்க்கையையும் அதன் சூழ்நிலையையும் அந்தக் குழந்தையும் அநுபவித்து மறுக வேண்டாமென்ற ஒரு காரணத்திற்காக அவளைப் பிரிந்து வாழச்செய்தார். மரத்துப்போன தன் உள்ளம் காரணமாக அவள் எட்டியிருந்து வாழ்வதை வெகு இயல்பாக நீடிக்கவைத்துத் தாமும் வாழ்ந்தார்.

ஆனால் பாசம் இப்போது தன் முழு உருவையும் கொண்டு அவர் முன் வியாபித்தது.

அவர் எதிரே அவர் மகள்—'தன் குழந்தை' என்று ஏகபோகமாக அழைக்கும் உரிமை பெற்ற மகள் சிவகாமியின் கடிதம் பிரித்தபடிக் கிடந்தது.

பெற்ற பாசம் பிடரியைப்பிடித்துத் தள்ளவே, சிவராமன் அன்றே சிவகாமியைக் காணப் புறப்பட்டார்.

# மனப்  பறவை

அந்தச் சிறிய வீட்டின் உத்திரத்து இடுக்கில் ஆணும், பெண்ணுமாக இரு குருவிகள் கூடு கட்டி வெகு காலமாக வசித்து வந்தன. மழைக்காலத்தில் கூட்டில் பதுங்கி வசித்துக் குளிர் காலத்தில் அவ்வீட்டுத் தென்னை மரத்தின் உச்சி இலைகளில் உட்கார்ந்து குளிர் காய்ந்தன. வசந்தத்தில் சிறகடித்துப் பறந்து இரை தேடிக் கூடி கட்டி இன விருத்தி செய்து மகிழ்ந்தன. காலதேவனின் தேர் சக்கரத்தில் சுழன்று சுழன்று அவை இரண்டும் பருவ மாறுதல்களுக்கேற்பத் தங்கள் வாழ்க்கையை



அமைத்துக் கொண்டது போல் செல்லம்மாளும், சிதம்பரநாதனும் அந்த வீட்டில் தங்கள் வாழ்க்கையை ஆரம்பித்துப் பல வருஷங்கள் ஆயின. செல்லம்மாளுக்கு வயது ஐம்பதைத் தாண்டியிருந்தாலும் அவளிடம் மாறுதல் அதிகம் ஏற்படவில்லை. நல்ல சிவந்த நிறம். படிப்படியான கூந்தல். கொசுவம் கலையாத புடவை. அவள் புடைவைத் தலைப்பை மடித்துக் கட்டி இழுத்திப் போர்த்திக் கொள்வதே நேர்த்தியாக இருந்தது. தலையை இழைய வாரி முடிந்து கொண்டால் சிதம்பரநாதன் சண்டைக்குப் போய் விடுவார் மனைவியிடம். இந்தக் கால 'பாஷன்'படி அவள் பிச்சோடா போட்டுக் கொள்ள வேண்டும். சிதம்பரநாதனுடைய உருவத்தில் பெருத்த மாறுதல் ஏற்பட்டிருந்தது. கட்டுக் குடுமியும், காதில் கடுக்கன்களுமாகச் சரிகை அங்கவஸ்திரத்துடன் மிடுக்காக அந்தக் கூடத்துச் சுவரில் தொங்கும் புகைப்படத்தில் அவர் காட்சியளிப்பது போலவா இன்று இருக்கிறார்? வற்றிய எலும்புக் கூடாக, மார்பு முன்தள்ளி, வயிறு பருத்து மிகவும் தளர்ந்து விட்டார் அவர். பாவம்! ஏதோ ஒரு பொல்லாத வியாதி வந்து அவரைப் பீடித்துக் கொண்டிருந்தது. வைத்தியர்கள் அதற்கு ஏதேதோ நாமகரணம் இட்டு அழைத்தனர். வியாதியைப் பற்றிய விஷயங்களை அவர்களுக்கே விட்டு விட்டு உத்திரத்துக் குருவிகளைப்போல் வாழும் இந்த 'மனித பட்சி'களைப் பார்ப்போம்.- குணதிசையில் உஷைக் கன்னி பொன்னால் மெழுகிக் கதிரவன் கிரணங்களால் கீற்றுக் கோலம் வரைய ஆரம்பித்து விட்டாள் என்பதற்கு அடையாளமாகச் செல்லம்மாள் கூந்தலில் நீர் சொட்டப் பிழிந்து முடிந்து கொண்டு 'ஸ்டவ்'வை 'உய்ய்ய்' யென்று பற்ற வைத்துக் காப்பிக்கு ஜலம் வைத்து விடுவாள். சிதம்பரநாதனுக்கு விடியும்போதே காப்பி தயாராக இருக்க வேண்டும். இரவெல்லாம் வயிற்றில் வலியுடன் போராடிய அந்த ஜீவனுக்கு இந்தக் காப்பி சுடச்சுட வயிற்றுக்குள் போனவுடன் தெம்பு வந்து விடும். இல்லாவிடில், அவர் மனிதனாக இருக்க மாட்டார். ஆனால், இன்று வரை அவரை மனிதன் அல்லாத வேறாகச் செல்லம்மாள் மாற்றியதே இல்லை. ஏன் மாற்ற வேண்டும்? குழந்தை குட்டி என்று வேறு பிடுங்கல்கள் இருந்தால் ஒரு வேளை செல்லம்மாளும் மாறி யிருப்பாள். அந்த மனிதனும் மாறியிருப்பார். பிக்கு பிடுங்கல் இல்லாமல் போகவே செல்லம்மாளுக்கு அவள் கணவரே குழந்தையாக மாறியிருந்தார். வயிற்றில் பிறந்த குழந்தையானால் அதட்டலாம், மிஞ்சிப் போனால் ஓர் அடி வைக்கலாம். இந்தக் குழந்தையின் பிடிவாதங்களுக்கு, கோபதாபங்களுக் கேற்ப அவள் வளைந்து போக வேண்டியிருந்தது. டாக்டர் எது ஆகாது என்கிறாரோ அதுதான் அந்த மனிதருக்குத் தேவையாக இருந்தது.

நாக்கை அடக்க முடியாமல், வியாதியுடன் பலமாக அந்த மனிதர் போரிட்டுக் கொண்டிருந்தார்.

கணவர் அவருக்குப் பிற்காலம் தனக்கு என்ன ஏற்பாடு செய்யப் போகிறார் என்பதைப் பற்றி அவள் சிறிதும் கவலைப் பட்டதேயில்லை. 'அவருக்குப் பிற்காலம் என்று ஒன்று வரவே வேண்டாமே!' என்றுதான் அவள் நினைத்தாள்.

''செல்லம்! நீ இப்படி அசடு மாதிரி இருக்கிற பணத்தை மருந்து மருந்து என்று கரைத்து வந்தாயானால் உனக்கென்று என்ன மிஞ்சப் போகிறது?'' என்று அவள் உறவினர்கள் அங்கலாய்த்தனர்.

அவன் அவளைப் பார்த்த பார்வை, ''என்னைக் காட்டிக் கொடுத்து விடாதே. நான் ஏழை. என்னை நம்பி வீட்டில் பத்துப் பேர் சாப்பிடுகிறார்கள்'' என்று பேசியது போல இருந்தது.

அவள் ஒரு நிமிடம் யோசனை செய்தாள்.

அந்த வயதான அதிகாரி, ''ஏனம்மா! விசாரணையைத் தொடங்கலாமா?'' என்று கேட்டார்.

''உங்களிடம் நான் தனியாய் ஒரு வார்த்தை பேச வேண்டும்'' என்றாள் மாலினி.

''நீ சற்று வெளியே போய் இரு'' என்றார் அதிகாரி குமாஸ்தாவிடம்.



''உங்க இருமலை நேற்று கேட்டதற்கு இன்றைக்குக் கேட்பது ரொம்ப 'பெட்டரா' இருக்கு''

''இல்லாமல் இருக்குமா? நேற்றிரவு பூராவும் அசுர சாதகம் செய்திருக்கிறேனே!'

''ஸார்! உங்களை என் தகப்பனார்போல் நினைத்துச் சொல்கிறேன். ஒரு மாதம் முன்பு இது நடந்தது. அப்போது இவர் மாயவரம் சந்திப்பில் இருந்திருக்கிறார். கௌண்டரில் அவசரம் அவசரமாய் டிக்கெட் வாங்கியதும் இவர் முகத்தைப் பார்க்கவில்லை. சென்ற பத்து நாட்களாய் எங்கள் இருவருக்கும் திருமணம் செய்ய ஏற்பாடுகள் நடக்கின்றன.

''மாயவரத்தில் டிக்கெட் கொடுத்தவர் இவர் என்பது இன்றுதான் தெரிகிறது இன்று வரை மனுக் கொடுத்தது நான் என்று அவருக்குத் தெரியாது. மறு விசாரணை விழுப்புரத்தில் நடக்கும் என்றபோது சொப்பனத்தில் கூட அவர் என் வருங்காலக் கணவராய் இருக்கும் என்று நான் நினைக்கவில்லை. பெரியவர்களுக்குத் தெரிந்தால் மிகவும் கோபிப்பார்கள். எங்கள் விவாகப் பேச்சும் முறிந்து விடும். ஆதலால் ஒருவரும் அறியாமல் இப்போதே மனுவை வாபஸ் வாங்கிக் கொள்கிறேன்''

''அப்படியா? ரொம்ப சந்தோஷம்'' என்றார் அவர். அவளும் விடை பெற்றுக் கொண்டாள்.

மறு நிமிடம் அந்தக் குமாஸ்தாவைக் கூப்பிட்டார். அவன் உள்ளே வந்தான்.

''ஏம்பா, ரங்கன்: நீகூட என்னிடம்சொல்லவில்லையே. உன் வருங்கால மனைவியாமே? வழக்கை வாபஸ் வாங்கிக் கொண்டு விட்டாளாம். கங்கிராகுலேஷன்ஸ். .உங்க கலியாணத்துக்கு எனக்கு அழைப்பு அனுப்ப மறந்து விடாதிங்க'' என்றார் அதிகாரி. அடுத்த நிமிடம் அவர் டிராலியில் ஏறிச் சென்று விட்டார்.

மாலினி பிளாட்பாரத்தில் நிற்பதைக் கண்டு ரங்கனும் போனான்.

''நீங்க என்னைக் காப்பாற்றுவீர்கள் என்று நான் நினைக்கவில்லை. அதிலும் நான் முன்பு உங்கள் பேரில் மனுக் கொடுத்தவன். அதிகாரிகள் உங்களை எச்சரிக்கை செய்து விட்டார்கள் இல்லையா?''

''எச்சரிக்கையா? ஒரு வருடத்துக்குச் சம்பள உயர்வை நிறுத்தி விட்டார்கள்!''

''அப்படியா? நான் ஏதோ விளையாட்டுப் போலச் செய்யப்போய் இப்படி ஆகிவிட்டதே. நீங்கள் சொன்ன பொய்யை உடனே நிஜமாக்கி விட வேண்டியது தான் என் முதல் வேலை!'' என்றான் ரங்கன் தீர்மானமாக.

''எந்தப் பொய்யை நிஜமாக்கப் போகிறீர்கள்?''

''மனுவை வாபஸ் வாங்கும் போது உங்களுக்கும் எனக்கும் கலியாணம் நடக்க இருப்பதாய்ப் பொய் சொன்னீர்கள் இல்லையா?''

''உங்களை அந்த நிலையில் தப்புவிக்க அந்தப் பொய் சொன்னேன். ஆபத்துக்குத் தோஷம் இல்லை என்று நினைத்தேன். அதனால்தான் சொன்னேன்.''

''என்னை விடுவிக்க ஏன் முயன்றீர்கள்?''

''சின்ன வயதில் என் ஹெட்மிஸ்ட்ரஸ் 'இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண நன்னயம் செய்து விடல்' என்று சொல்லியிருக்கிறார். அதனால்தான் செய்தேன்.''

''உங்கள் அப்பா விலாசம்?'' என்று அவன் கேட்டான்.

''உங்களுக்கு ஏன் அது?''

''இன்றே ஒரு மாத லீவு போட்டு விட்டு உன் அப்பா காலிலாவது விழுந்து உன்னை என்னுடையவள் ஆக்கிக் கொள்ளத்தான்.''

''தாங்கள் காலம் கடந்து வருகிறீர்கள்.''

''என்ன சொல்கிறாய் மாலினி?''

அவள் அவன் கேள்விக்குப் பதில் பேசவில்லை. கைப் பையிலிருந்து ஒரு பத்திரிகையை எடுத்து நீட்டினாள்.

அதில் ''என் குமாரத்தி சௌ மாலினிக்கும் கிருஷ்ணாபுரம் ராமநாதய்யர் குமாரன் வெங்கடேசனுக்கும் வருகிற ஆதிவாரம் திருமணம் செய்வதாய்ப் பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டு...'' என்று மட்டுமே படித்தான் ரங்கன்.

அடுத்த நிமிடம் அவன் முகம் தொங்கிப் போய் விட்டது.

''எனக்குக் கொடுத்து வைக்கவில்லை'' என்றான் அவன்.

அவன் முகம் பார்க்க மிகவும் பரிதாபமாய் இருந்தது.

அடுத்த நிமிடம் மாலினி, ''பரவாயில்லை, உங்களை ரொம்பவும் சோதிக்கக் கூடாது. இது என் பெரியம்மா பெண் மாலினியின் கலியாணப் பத்திரிகை. அவள் பெயரும் மாலினி தான். உங்களை அழவிட்டு வேடிக்கை பார்த்தேன்'' என்று சொல்லி விட்டு, ''இந்தாருங்கள் என் அப்பா விலாசம்'' என்று கொடுத்தாள்.

''இந்த நிமிடம் முதல் பொய்யை மெய்யாக்கும் வேலைதான்'' என்று குதித்தான் அவன் மகிழ்ச்சியோடு.

பொய் மெய்யாகி அவர்களுக்குத் திருமணம் ஆகி விட்டது.

அவர்கள் கல்யாணத்துக்கு வந்தவர்களுக்குப் பிரயாண டிக்கெட், பிளாட்பாரம் டிக்கெட்டாய் மாறவும் இல்லை. வந்த வாழ்த்துச் செய்திகளில் வேறு எந்தச் செய்தியும் கலந்திருக்கவும் இல்லை.

''பணம் பணம் என்று அந்த மனுஷனுக்குச் சரியாக வைத்தியம் பார்க்கவேயில்லே. மனுஷனே விடப் பணமா உயர்வு?'' என்று சிதம்பரநாதனைச் சேர்ந்தவர்கள் அவனைத் துளைத்தெடுத்தனர்.

செல்லம்மாளின் இதயம் சொல்லம்புகளால் துளைக்கப்பட்டுப் புண்பட்டுக் கிடந்தது. இடையில் இருந்தவர்கள் சிதம்பரநாதன் வைத்திருந்த கொஞ்ச நஞ்ச சொத்து யாரைச் சேரப் போகிறது என்பதைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தனர். உத்திரத்தில் கூடு




ஸரோஜா ராமமூர்த்தி

வராதா? இவர்கள் ஏன் இனமாக இருக்க வேண்டும்?'

உறவினரின் கசப்புக்கு ஆளான சிதம்பரநாதன் அந்தப் பழைய வீட்டைக் கூடுமான வரையில் சீராக்கினர். கொல்லேக் கிணற்றோரத்தில் வாழைகளும், தென்னைகளும் வளர்ந்து செழித்தன. கூரையெங்கும் ஒட்டடை படிந்து கிடந்தது போக, இப்போது பளிச்சென்று காணப்பட்டது. எங்கிருந்தோ இரண்டு குருவிகள் வந்து உத்திரத்தில் குடியேறின.

செல்லம்மாள் உயர அண்ணாந்து பார்த்துப் பெருமூச்செறிந்தாள். வாழ்க்கையில் ஐம்பது வயதை அடைந்து விட்ட அவளும், அறுபதை நெருங்கும் அவரும் அந்தக் குருவிகளைப் போல் யாருமற்றவர்கள். அன்பாக, இனிமையாக கட்டி வாழும் அந்த இரு பறவைகளிடமும் அதன் இனத்துக்கு இருந்த பாசம் பரிவு கூட இந்தப் பாழும் மனித இனத்துக்கு இல்லேயே என்று செல்லம்மாள் மேலே அண்ணாந்து பார்த்தவாறு பெருமூச்செறிவாள்.

அந்த வீட்டில் முதன் முதலாக வந்த போது சிதம்பர நாதன் ஆரோக்கியமாகத் தான் இருந்து வந்தார். வேலேயிலிருந்து ஓய்வு பெற்றவர் தமக்கென்று வீடு வாசல் ஒன்றையும் தேடிக் கொள்ள வில்லே. வெளியூரிலிருந்து அவர் சகோதரிக்குச் சொந்தமாக இருந்த அந்தக் கிராமத்து வீட்டை அவர் வந்தடைந்த போது உற்றமும், சுற்றமும் அவரைப் பலவாறு ஏசின. ''பணத்தாசை பிடித்தவர்கள். சகோதரியை மோசம் செய்யும் கருத்தோடுதான் அங்கே வந்திருக்கிறார்கள்'' என்றார்கள்.

'பிள்ளை குட்டி இல்லாதவர்களுக்கு வீடென்ன? வாசலென்ன? எங்கேயாவது பொழுதைக் கழித்தால் ஆயிற்று. அந்த வீட்டை வாடகைக்கு விட்டால் வாடகை அவர்களை வைத்து ஆதரிக்க உலகில் யாருமே இல்லே. சோர்ந்த மனைவியின் முகத்தைச் சிதம்பரநாதன் ஆதரவுடன் பார்த்தார்.

''செல்லம்! ஏன் இப்படி ஏங்கிச் சோர்ந்து சோர்ந்து உட்கார்ந்து விடுகிறாய்? வாழ்க்கையில் உனக்காக நானும், எனக்காக நீயும் என்று நிர்ணயிக்கப்பட்டவர்கள். மூன்றாவது ஜீவனுக்கு இடமில்லாமல் கடவுள் செய்து விட்டார்'' என்றார் சிதம்பரநாதன்.

''வஞ்சித்து விட்டார் என்று சொல்லுங்கள். ஒரு குழந்தை இருந்திருந்தால் இத்தனை பேர்கள் இவ்வளவு சொற்கள் சொல்வதற்கு இடம் இருக்குமா?''

முதன் முறையாக இத்தனை வருஷங்களுக்கு அப்புறம் மனைவி முத்து முத்தாகக் கண்ணீர் சிந்துவதைக் கண்டார் அவர். இத்தனை காலமாக அவள் மனத்தில் முளைக்காத ஆசை காலம் கடந்து தோன்றி வருத்துவதையும் அவரால் உணர முடிந்தது.

செல்லம்மாள் தன்னுடைய இளமையில் தனக்குக் குழந்தை இல்லேயே என்று சிந்தித்

துப் பார்த்ததில்லை. அந்த எண்ணமே அவளுள் எழவில்லை. சிதம்பரநாதனே ஒரு குழந்தையைப் போல இருந்தார். குழந்தைக்குத் தோன்ற வேண்டிய விசித்திரமான எண்ணங்கள் அவருக்குத் தோன்றின. தெருப் பிள்ளைகளுடன் பலீன் சடுகுடுவிலிருந்து பட்டம்வரை அவர் கலந்து கொள்ளாத விளையாட்டுக்கள் இல்லை. வேளாவேளைக்குச் சாப்பிட வராமல் அவர் மனைவியைப் படுத்தி வைத்த பாடு! அப்பொழுதெல்லாம் செல்லம்மாள் தன் கணவனை ஓர் அடம் பிடிக்கும் குழந்தையாகவே பாவித்தாள். பொறுமையுடனும், திறமையுடனும் அவருடன் சமாளித்து வாழ்ந்தாள்.

இந்த வீட்டுக்கு வந்த சில வருஷங்களில் கணவன் படுக்கையில் விழுந்த பிறகுதான் செல்லம்மாளுக்குத் தன் நிலைமை புரிய ஆரம்பித்தது. அதுவும் பதினைந்து நாட்களாக அவர் உடல் நிலையில் படிப்படியாக மாறுதல்கள் தோன்றி, அவர் பிழைக்க மாட்டார் என்கிற எண்ணம் அவளுக்கு ஏற்பட்டது.

உத்திரத்துக் குருவிகளில் ஒன்றாகிய ஆண் குருவி ஏனோ நான்கு நாட்களாக இரை தேடப் போகவில்லை. பெண் சிட்டு விர்ரென்று பறந்து சென்று என்னென்னவோ கொண்டு வந்தது. அதற்கு வாயில் ஊட்டிப் பாடுபட்டது. செல்லம்மாளும் தலைப்பை இழுத்துப் போர்த்திக் கொண்டு டாக்டர் வீட்டுக்கு நடை நடையாக நடந்தாள், கோபுர வாயிலில் நின்று தனக்கு மாங்கல்யப் பிச்சை தருமாறு தெய்வத்தை இறைஞ்சினாள்.

''செல்லம்! செல்லம்! எனக்காக நீ இப்படி அலைகிறாயே!'' சிதம்பரநாதன் மிகுந்த வேதனையுடன் குளறிக் குளறிப் பேசினார்.

''உங்களுக்காக அலைகிறேனா? இல்லை. எனக்காகவே நான் அலைந்து கொள்கிறேன். நீங்கள் வேறு, நான் வேறு என்கிற எண்ணமே எனக்கு ஏற்பட்டதில்லை. அந்த எண்ணம் நமக்கு ஒருவேளை குழந்தைகள் இருந்திருந்தால் ஏற்பட்டிருக்கலாம். நானும், நீங்களும் ஒன்றுதான்....''

மேலே இருந்த குருவிகளுக்கு மனித பாஷை புரிந்திருக்க வேண்டும். இரண்டும் கீழே தங்களைப் போல் தனிமையில் வாடும் இவர்களைப் பார்த்துப் பரிதாபமாகக் கத்தின. அந்தப் பெண் சிட்டின் ஓலத்தைக் காது கொண்டு கேட்க முடியவில்லை.

'இது வேறு தலைவேதனை....கண்ணாவி'' என்று அலுத்துக் கொண்டார் அவர். ''அப்பொழுதே சொன்னேன், இதுகளை அடித்து விரட்டு என்று.... ஒன்றுக்கு உடம்பு சரியில்லை போலிருக்கிறது.'' சிதம்பரநாதன் அண்ணாந்து பார்த்துச் சொல்லி விட்டுத் தம் கண்களைத் துடைத்துக் கொண்டார்.

செல்லம்மாளும் உயரப் பார்த்தாள். பெண் சிட்டின் புலம்பல் அவளுக்கு வரப் போகும் ஏதோ ஒன்றை உணர்த்தியது.

''செல்லம்! நீ தனியாக என்னை வைத்துக் கொண்டு கஷ்டப்படுகிறாயே. என் தம்பியை வரச் சொல்லி எழுதிப் போடேன்.'' கணவர் கூறி முடிப்பதற்குள் செல்லம்மாள் மைத்துனருக்குக் கடிதம் எழுதி விட்டாள்.

ஊரின் நியதிக்குக் கட்டுப்பட்டோ அல்லது பாசத்தினாலோ செல்லம்மாளின் மைத்துனர் வந்து சேர்ந்தார்.

தம்பியும், தமையனும் ஒருவரையொருவர் அணைத்துப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தனர். தன் தோளிலும் மார்பிலும் அணைத்து வளர்த்தவன் தன் இறுதிக் காலத்தில் தன்னைக் காக்க வந்து விட்டான் என்று தான் இறுமாந்தார் சிதம்பரநாதன்.

தம்பியின் பாசத்தையும் மீறிக் கொண்டு ஆசை என்கிற விஷம் அந்த வீட்டில் பரவிச் சூழ்ந்தது.

தமையனின் பாத்திரங்கள், பண்டங்கள், மன்னியின் உடம்பில் இருக்கும் நகைகளின் மதிப்பு இவற்றை எடை போட்டது.

'அண்ணா என்ன ஏற்பாடு செய்திருக்கிறார்? வந்ததிலிருந்து அதைப் பற்றி ஒரு வார்த்தை கூடப் பேசவில்லையே.....அவர்தான் நோயில் அவஸ்தைப்படுகிறார். மன்னி சொல்லக் கூடாதா? எல்லாவற்றையும் கணக்குப்போட்டுப் பார்த்தால் ஏழெட்டாயிரம் தேறும் போல் இருக்கிறதே! இவ்வளவும் யாருக்கு?'

தமக்குத் தானே விடை காண முயன்று அந்த முயற்சியில் தோற்றுப் போனார் தம்பி.

செல்லம்மாள் ஏற்கனவே யந்திரமாகி விட்டிருந்தாள். கணவருக்கு ஆகாரம் கொடுப்பது, படுக்கை மாற்றுவது, டாக்டர் வீட்டுக்கு ஓடுவது. எப்படியும் அவர் பிழைத்து விட வேண்டும் என்கிற நம்பிக்கையின் அஸ்திவாரத்தில் அவள் தன் மனத்துக்குத்தானே உறுதி கூறித் தன்னையே அவருக்குப் பதிலாக அர்ப்பணிக்கத் தயாராகி விட்டாள்.

மன்னி காப்பி கொடுக்கும்போது கேட்கலாம் என்று மைத்துனர் இருந்தார். பிறகு சாப்பிடும்போது கேட்டு விடுவது என்று தீர்மானித்திருந்தார். ஏனோ, சில விஷயங்கள்

அது எத்துணை முக்கியமாக இருந்தாலும் மனத்திலிருந்து வெளிவரத் தயங்குகிறது.

அண்ணாவுக்கு ஒரு குழந்தை இருந்தால் இத்தனை சொத்தும் யாருக்கு என்று தம்பி யோசித்திருப்பாரோ என்னவோ? நாற்பது வருஷங்களாக அவர் நிழல் போல் இருந்த மனைவியின் அன்பை, தியாகத்தை, கடமையை அவர் தூசுக்குச் சமானமாக்கி விட்டார். ''இத்தனை சொத்தும் அவளைச் சேரப் போகிறது. அவர் கண்ணை மூடிவிட்டால் அவள் இதை யெல்லாம் சுருட்டிக் கொண்டு தன் அண்ணன் வீட்டுக்குப் போய் விடுவாள்....''

அண்டை அயலில் இவ்விதம் பேசித் தனக்கு ஆதரவு தேடிக் கொள்ள முயன்றார் தம்பி.

அன்று விடிந்ததிலிருந்து செல்லம்மாளுக்கு வேலையே ஓடவில்லை.

குருவிக் கூட்டிலிருந்து ஆண் குருவி போய் விட்டது போலும். பெண் சிட்டின் கதறல் அவள் வயிற்றைக் கலக்கியது. பிரிவின் துன்பத்தின் சாயலை அதன் வேதனையில் கண்டாள் செல்லம்மாள்.

நேற்று வரை பேசி வந்த சிதம்பரநாதன் மௌனமாகி விட்டார். உலக விஷயங்களுக்கு அப்பால் அவர் உள்ளம் உறவு பூண்டிருந்தது.

''என்ன இப்படி என்னுடன் பேச மாட்டேன் என்கிறீர்களே....'' உள்ளுணர்வு சிறிது உலகத்தின் மீது திரும்பியது. சிதம்பரநாதன் மனைவியின் வேதனைக் குரலை உணர்ந்திருக்க வேண்டும். கீழே கிடந்த தம் கையைத் தூக்கிக் கோபுரம் இருந்த திசையின் பக்கம் சுட்டிக் காட்டினார்.

'கடவுள் உன்னைக் காப்பார்' என்று கூறுவதாகச் செல்லம்மாள் புரிந்து கொண்டாள்.

அவருக்காக அவளும், அவளுக்காக அவருமாக உலகத்துடன் ஒட்டி உறவு பூண்டு வாழ்ந்த மனிதப் பட்சிகளில் ஒன்றை ஆண்டவன் தன்னிடம் அழைத்துக் கொண்டபோது உத்திரத்துக் குருவியின் கதறல் செல்லம்மாள் வேதனையில் கரைந்து போயிற்று.

அப்புறம் மைத்துனரின் ஆயிரம் ஏச்சுப் பேச்சுக்கள், கேள்விகள் இவற்றைச் சமாளித்துச் செல்லம்மாள் கணவரின் கிரியைகளைச் செய்து முடித்தாள்.

அவள் தனி. அந்தப் பெண் சிட்டு அந்தக் கூட்டைக் காலி செய்து விட்டுக் கட்டுப்பாடற்ற வானவெளியில் ஜிவ்வென்று பறந்து செல்வதைக் கவனித்த செல்லம்மாள், வானத்தின் கீழ் குடியிருக்கும் இந்த உலகத்தை வெறித்துப் பார்த்தாள்.

ஆசைகள், விருப்புக்கள், வெறுப்புக்கள் முதலிய பல கட்டுப்பாடுகள் கொண்ட சமூகத்தில் அவள் தனியாக வாழ்ந்தாக வேண்டும். அப்படி வாழ, ஒவ்வொரு விநாடியையும் கழிக்க அவளுக்குப் பணம் தேவையாகத்தான் இருந்தது. குருவியைப் போல அல்ல அவள் வாழ்க்கை.

மைத்துனரின் கோபத்துக்கும், வெறுப்புக்கும் ஆளான செல்லம்மாள் தன் உடைமைகளை யெல்லாம் எடுத்துக் கொண்டு பிறந்த வீடு செல்ல வண்டியேறிய போது, அதை ஒரு பெரிய துரோகமாக அவள் மைத்துனர் கருதியிருந்தால், மனித இனத்தைவிடப் பறவை இனமே மேலென்று அந்தப் பேதை கருதலாம் அல்லவா ?

# ஒரு கல்யாண வீட்டில்...

சரோஜா ராமமூர்த்தி

திருமண அழைப்பிதழைப் பிரித்து மறுபடியும் விலாசத்தைக் கவனித்தான் வரதன். தியாகராயநகரில் ஒரு பிரபலமான தெருவில் இருக்கும் கல்யாண மண்டபம்தான் அது. மாப்பிள்ளை அழைப்பு ஆறு மணிக்கு என்று போட்டிருந்தார்கள். அடுத்த நாள் காலை ஆறிலிருந்து ஏழுக்குள்ளாக முகூர்த்தம் இருந்தது. வரதன் தொழிற்சாலையில் வேலை பார்ப்பவன். ஏழு மணிக்கு அங்கே இருந்தாக வேண்டும். நண்பனின் கல்யாணமென்றாலும் அந்த ஒன்றரை மணி நேரச் சடங்குக்காக ஒரு நாள் செய்ய வேண்டிய தொழிலை உதற அவனுக்கு மனம் வரவில்லை. ஆகவே, மாலை ஐந்து மணிக்கு மனைவியிடம் சொல்லிக் கொண்டு புறப்பட்டான்.

''கொஞ்சம் நல்ல சட்டையாகப் போட்டுண்டு போகப்படாதா?'' என்று மனைவி கேட்டாள்.

''சட்டையா? இதற்கென்ன தீபாவளிக்கு வாங்கினதுதானே? கதர்ச் சட்டை கொஞ்சம் நீர்க்காவி ஏறிப் போச்சு..''

''ஆமாம்... அவா அவா பாம்பே டையிங் அது இதுன்னு சட்டை தைச்சுக்கிறா. நீங்க கதர் கதர்னு ஒரு சந்நியாசிக் கலரிலே தைச்சுண்டு—''

அவன் அவளைப் பார்த்து ஒரு மாதிரியாகச் சிரித்தான். ஒரு கணம் தன்னையே பாம்பே டையிங் துணியில் தைத்த சட்டைக்குள் நுழைத்துக் கொண்டு, சிலும்பிய கிராப்பும் கிருதாவுமாகக் கற்பனை பண்ணிக் கொண்டான். ஓ! அவள் தான் இப்படி இருக்க வேண்டும் என்று விரும்புகிறாள் போலும்! அவள் அவனுடைய சாதுத் தனத்தைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்கும்போதே அவன் வீட்டிலிருந்து கிளம்பி விட்டான். மாம்பலம் ரயில் நிலையத்திலிருந்து கல்யாண மண்டபம் அரை மைலுக்குள்ளாக இருந்தது. அவனுக்குத் தெரிந்த சிலர் மனைவிகளோடு வந்திருந்தனர். அவரவர் தத்தம் கல்யாண சூட்டுகளையும், புடவைகளையும் உடுத்தியிருந்ததும் வரதனுக்கு வேடிக்கையாக இருந்தது.

''என்னப்பா வரதா! மிஸஸ் வரலையா?'' என்று ஒரு நண்பன் கேட்டான்.

அவள் ஏன் அவளுக்கு அறிமுகமில்லாத, தெரியாத ஒருவனுடைய கல்யாணத்துக்கு வரவேண்டும் என்பது வரதனுக்குப் புரியவில்லை. இவர்கள் மனைவிமார்களுக்கும் அந்தக் குடும்பத்தினரைத் தெரிய நியாயமில்லை, இருந்தாலும் வருகிறார்கள்.

''டாக்சியிலே இடம் இருக்கு. நீயும் வாயேன்—'' என்று இன்னொரு நண்பன் கூப்பிட்டான்.

நடந்து போக வேண்டிய தூரத்தில் இருக்கும் இடத்துக்கு இவர்கள் ஏன் டாக்சியைத் தேடுகிறார்கள் என்பது வரதனுக்குப் புரிந்தது. மதிப்பு என்று ஒன்று இந்தச் செய்கையினால் உயருகிறது என்பதை அவனும் தெரிந்து வைத்திருந்தான்.

''அட வாப்பா நீ ஒண்ணும் காசு தர வேண்டாம்!''

''இல்லையப்பா! நான் இப்படிக் காலாற நடந்து வர்றேன்—''

கிளம்பும் டாக்சியில் நண்பன் மனைவியிடம் சொன்னது வரதனின் காதுகளில் நன்றாக விழுந்தது.

''அவன் ஒரு பைத்தியம்... கொள்கை அது இதுன்னு...'' அந்தப் பெண் அழகாகச் சிரித்தாள். அவள் உதடுகள் வெற்றிலைச் சிவப்பால் சிவந்திராமல் சாயச் சிவப்பால் சிவந்திருந்தன. தன் மனைவி ஏன் 'லிப்ஸ்டிக்' உபயோகிப்பதில்லை என்று வரதன் யோசித்துக்கொண்டே நடந்தான். அது ஒன்றும் அப்படி விலை உயர்ந்தது அல்ல. தன்னால் வாங்கிக் கொடுக்க முடியாததும் இல்லை.

ஏனோ அவள் விரும்பவில்லை; இவனும் வாங்கவில்லை.

இவன் அந்தக் கல்யாண மண்டபத்துத் தெருவை அடையும்போது நண்பனின் டாக்சி இவனைத் தாண்டிச் சென்றது. டாக்சியில் கிளம்பியவர்கள் ஏன் இவ்வளவு நேரம் கழித்து வருகிறார்கள் என்பது நண்பனின் மனைவியின் தலையைப் பார்த்ததும் புரிந்தது. ரயிலடியில் பார்த்த சிகை அலங்காரமில்லாமல் இப்போது வேறு கொண்டையாக மாறியிருந்தது. அஜந்தாச் சித்திரம் போல் இருந்தாள். அடிக்கடி சிரித்தாள்.

''ஓ! ப்யூட்டி பார்லருக்குப் போய்விட்டு வருகிறாற்போல இருக்கு—''



**ஐந்து ஐம்பதானது!**



''நான் மெட்ராஸுக்கு வந்தபோது என்னிடம் ஐந்து ரூபாய்தான் இருந்தது. அதைக் கொண்டு நான் இரண்டே நாட்களில் ஐம்பது ரூபாய் சம்பாதித்தேன்.''

''எப்படி?''

''அந்தப் பணத்தில், 'உடனே ஐம்பது ரூபாய் அனுப்பவும்' என்று ஊருக்கு ஒரு தந்தி அடித்தேன்!''

-பாலி

---

திலே சொல்லியிருக்கு' என்று கேட்டுவிட்டுப் பைத்தியக்காரப் பட்டத்தை வாங்கிக் கட்டிக் கொண்டவன்.

மாப்பிள்ளை அழைப்பு தெரு திரும்பி வரும் ஓசை கேட்டது. அதை வேடிக்கை பார்க்கச் சென்ற கூட்டம் மறுபடியும் சிரிப்பும் கொம்மாளமுமாய்ச் சத்திரத்துக்குள் நுழைந்தது. மஞ்சுவின் புல்லாக்கைப் பார்த்து விட்டு ஒருத்தி, ''ஏண்டியம்மா! இதென்ன புதுசா அலங்காரம்?'' என்று கேட்டு வைத்தாள்.

''பாட்டிதான் போட்டுக்கச் சொன்னா—''

''மொதல்லே அதைக் கழற்றி வை.. 'ஃபாரின் ரிட்டர்ன்ட்' மாப்பிள்ளை. பார்த்துட்டு மூர்ச்சை போட்டு விழப் போறார்!''

தாத்தா வந்து பேத்தியின் அருகில் நின்றார். ''ரொம்ப நன்னா யிருக்கு மஞ்சு. உன் பாட்டி மாதிரியே இருக்கே—''

சுற்றியிருந்த பெண்கள் கலகலவென்று சிரித்தார்கள்.

''ஏம்மா குழந்தைகளா சிரிக்கிறீங்க? பாட்டி மாதிரி பேத்தி இருக்க மாட்டாளா?''

மறுபடியும் சிரிப்பு. ஓ! இந்தச் சிரிப்பு தேவையுள்ளதாகவும் தேவையற்றதாகவும், தேவைக்கு மீறியதாகவும் இப்போது எப்படித்தான் ஒரு தொத்து வியாதி மாதிரி எல்லோரையும் பிடிக்கிறதோ?

வரதனுக்குக் கோபம் வந்தது. 'ஏன் இப்படிக் காரணமில்லாமல் சிரிக்கணும்?' என்று இரைந்து கத்த வேண்டும் போலிருந்தது.

மாப்பிள்ளை அழைப்பு வாசலுக்கு வந்து விட்டது. அந்த ஒரு நாளுக்காக ஒரு தடவைக்காக பல நூறுகள் (மாமனார் கொடுத்த பணத்திலிருந்து) போட்டு வாங்கிய சூட், கோட்டுடன் மாப்பிள்ளை ஜம்மென்று காரிலிருந்து கீழே இறங்கினார்.

கூட்டத்தில் சில அந்நிய நாட்டவரும் இருந்தார்கள். அவர்களில் ஒருவன் வரதனை அணுகிக் கேட்டான்:

''உங்கள் நாட்டு மணமகனும் என் சூட் போட்டுக் கொண்டிருக்கிறார்? இது இந்திய உடை அல்லவே?''

வரதன் பதில் கூறத் தெரியாமல் விழித்தான். பிறகு நடந்த நிச்சயதார்த்தம் முதலியவும் ஏதோ சம்பிரதாயச் சடங்குகளாகவே வரதனுக்குத் தோன்றின. சாஸ்திரிகள் ஏதோ மந்திரங்களை ஓதிக் கொண்டிருந்தார். மணமகன் வருகிற நண்பர்களுடன் பேசிச் சிரித்துக் கொண்டிருந்தான். இடை யிடையே மந்திரம் சொல்வதாகப் பாவனை செய்தான்

வரதனுக்குப் பசிக்க ஆரம்பித்தது. நண்பன் இவனை அநேகமாக மறந்து விட்டவன் போல் இருந்தான். அவனிடம் பல விஷயங்களை — இவர்கள் நட்புபற்றி — ஞாபகப்படுத்த வேண்டியிருந்தது. அயல்நாடு போய்த் திரும்பியதால் நட்பும் அந்நியமாகி விட்டது போலும் என்று நினைத்துக் கொண்டே சாப்பாட்டு ஹாலுக்குள் நுழைந்தான்.

அங்கே பல விஷயங்கள் இவன் கண்களில் பட்டன. அரைகுறையாகச் சாப்பிட்டு வைப்பவர்கள், இன்னும் கொஞ்சம் போட மாட்டார்களா என்று ஏங்குகிறவர்கள், சாப்பாட்டைத் தொட்டே பார்க்காமல் இலையோடு ஒதுக்கிவிட்டு எழுந்து போகிறவர்கள்!

வரதனுக்கு நன்றாகப் பசித்தது. ஆனால் பந்தி விசாரிப்பவர்களின் கவனக் குறைவால் அரைவயிற்றுக்குத்தான்சாப்பாடுகிடைத்தது.

அன்றிரவு அவன் வீட்டை அடையும் போது குழந்தைகள் தூங்கி விட்டார்கள். மனைவி மட்டும் ஏதோ புத்தகம் படித்துக் கொண்டிருந்தாள்.

''சாப்பாடு பலமா? என்ன ஸ்வீட் போட்டார்கள்?''

''இந்தச் சர்க்கரைப்பஞ்ச காலத்தில் ஸ்வீட் போடுகிறார்கள்! வெறும் பாயசம் தான்—''

''ஐயே! பொய்யைப் பார்! சிநேகிதன் அப்படி இப்படின்னு சொல்லிண்டு போய் இவ்வளவுதானா?''

''சிநேகிதனா?'' என்று சிரித்த வரதன், ''நீ சாப்பிட்டியோ?'' என்று கேட்டான்.

''ஓ! உங்களுக்குத்தான் கல்யாண வீட்டில் சாப்பாடாச்சேன்னு நான் வெறும் மோருஞ் சாதமும் வடு மாங்காயும் போதும்னு இருந்துட்டேன்!''

வரதன் மனைவியிடம் மேலும் நெருங்கி நின்று, ''எனக்குக் கொஞ்சம் மோருஞ் சாதம், வடுமாங்காய் கொண்டு வா பார்க்கலாம்'' என்றான்.

அவள் சிரித்துக்கொண்டே உள்ளே போய்ச் சாதம் கொண்டு வந்தாள்.

''நாளைக்கு எத்தனை மணிக்கு முகூர்த்தம்?'' என்று கேட்டு வைத்தாள்.

''அதைப் பற்றி என்ன? நான் நாளைக்குப் போகப் போவதில்லை. அப்படிப் போகிறதானால் நானும் ஜம்முன்னு கோட்டு, சூட்டுன்னு ஆள் பாதி, ஆடை பாதின்னு போகணும்... தெரிஞ்சுதா?''

''அதான் நானும் சொல்லிண்டிருக்கேன். நல்லதா பாம்பே டையிங் அது இதுன்னு தைச்சுக்கோங்கோ — இப்படி...'' என்று அவள் ஏதோ சொல்ல ஆரம்பித்தாள்.

''உஷ்...மணி பதினொண்ணு... போய்ப் படுத்துக்கோ'' என்றபடி வரதன் விளக்கை அணைத்தான்.

கல்யாண வீட்டில் இரட்டை நாயனம் அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது. டாக்ஸிகார்களில் வந்து இறங்கியவர்களைச் சிரித்தும் கைகுலுக்கியும் வரவேற்றார்கள். வரதனும் உள்ளே போனான். வாசலில் நின்றிருந்த பெண் ஒருத்தி உதட்டைச் சுழித்து, புருவங்களை நெரித்துக் கொண்டாள். அவள் இவனைப் போல் வருபவர்களைப் பார்க்கும்போது அவ்விதம்தான் நடந்துகொண்டாள். நவநாகரிகமாக வருகிறவர்களைப் பார்க்கும்போது தோள்களைக் குலுக்கியும், மணிகள் கொட்டியது போல் சிரித்தும் வரவேற்பதைக் கவனித்தான்.

அவனுக்குத் தெரிந்தவர்களாக அங்கு யாரும் இல்லை. போட்டிருந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான். எதிரே மணமேடையில் வர்ண விளக்குகளால் அலங்கரிக்கப்பட்ட மண்டபம் கண்ணைப் பறித்தது. கூட்டம் கூட்டமாக ஆண்களும், பெண்களும் வந்து கொண்டிருந்தார்கள். தான் வகுத்துக் கொண்டிருக்கும் சில பல கொள்கைகளுக்கு முற்றிலும் மாறுபட்டவர்களாகவும், பாரதம் சுதந்திரம் அடைந்த இருபத்தியாறு வருஷங்களுக்கு அப்புறம் நாட்டில் வளர்ந்து போயிருக்கும் போலித்தனமான, தன்னம்பிக்கையற்ற ஒரு கூட்டமாகவும் அவர்கள் இருந்தார்கள். தோற்றத்தில் எப்படி இருந்தாலும், மனிதனை மனிதன் மதிக்க வேண்டும் என்கிற மனிதாபிமானத்திலிருந்து அவர்கள் விலகி வெகு தூரம் நிற்பதுபோல் வரதனுக்குத் தோன்றியது. பல பெண்கள் அடிக்கடி வாய் விட்டுக் காரண மில்லாமல் சிரித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் உடம்பிலே போட்டிருந்த நகைகளின் மதிப்பும் கட்டியிருந்த ஆடைகளின் தோற்றமும் இந்தியா ஒரு பின்தங்கிய நாடல்ல என்று ஒரு மாயத் தோற்றத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்தன. ஆனல் அவர்களின் மனத்தின் ஆழத்தில் புரையோடிக்கொண்டிருந்த நம்பிக்கையற்ற தன்மைகள், போலித்தனமான கவர்ச்சிகள் ஆகியவற்றின் எதிரொலி போல் அவர்களின் சிரிப்பு இருந்தது.

ஒரு வயதான அம்மாள் மட்டும் இதற்கு விதிவிலக்காக இருந்தாள். தலை 'பொல்' லென்று நரைத்திருந்தது. பழுக்க மஞ்சள் பூசிய முகம். பெரிய குங்குமப் பொட்டு. வாழை நாரால் தலை முடியைக் கட்டிக் கொண்டை மாதிரி சுற்றிக் கொண்டிருந்தாள். வாழை நார் வெளியே நீட்டிக்கொண்டிருந்தது. கழுத்தில் இரட்டை வடம் சங்கிலிகள், கைகளில் வளையல்கள். காதுகளில் தொளதொளவென்று ஆடும் கம்மல்கள். அந்த அம்மாள் சிரிக்கும்போது வெற்றிலையால் மட்டும் சிவப்பேருத, கத்தைக் காம்பு மென்ற சிவந்த பற்கள் பளீரென்று இருந்தன.

வரதன் அந்த அம்மாளைப் பார்த்துக் கொண்டேயிருந்தான். மணவறையில் ஏற்றி வைக்கப்பட்ட குத்து விளக்குகள் போல் அவள் குளிர்ச்சியாக ஒளி வீசிக் கொண்டிருந்தாள். இத்தனை நாகரிகங்களுக்கிடையே தனியாகவும், ஓர் அரசி போலவும் அவள் திகழ்வதைக் கவனித்தான் வரதன்.

தொலைவில் பாண்டு வாத்தியத்தின் ஒலியோடு நாதஸ்வரத்தின் சத்தமும் கேட்டது. பெண்கள் எல்லோரும் வேடிக்கை பார்க்க வாசலுக்குப் போய் விட்டார்கள். அந்த அம்மாள் மட்டும் பரக்கப் பரக்க ஆரத்தி கரைத்து எடுத்து வந்து வைத்து விட்டு உள்ளே திரும்பி, ''அடியே, மஞ்சு! மாப்பிள்ளை அழைப்பு வரது. நீ பார்க்க வேண்டாமோ... வாடி....'' என்று கல்யாணப் பெண்ணாகிய தன் பேத்தியை அழைத்தாள்.



கல்யாணப் பெண் பாட்டியின் அழைப்புக் கிணங்க வெளியே வந்தாள்.

நல்ல காலம்! கல்யாணப் பெண்ணுக்கு யாரும் 'ரவிக்' போட்டு விடுவதில்லே. அஜந்தாக் கொண்டை போடுவதில்லே. தாலி கட்டுகிற வரைக்குமாவது ஜரிகைக் கரை வைத்த ரவிக்கையும், பூத்தைத்த ஜடையும் தான் என்று வைத்திருக்கிறார்கள்.

அந்தப் பெண் அழகாகவே இருந்தாள். அடிக்கடி வெட்கப் பட்டுக் கொண்டாள். பாட்டி ஆசை தீரப் பேத்தியை விளக்கு வெளிச்சத்தின் நடுவில் நிறுத்திப் பார்த்தாள்.

''தலேச் சாமான்கள் கட்டினதுக்குப் புல் லாக்குப் போட்டுக்கணும்.... இரு...'' கிழவி வேகமாக உள்ளே போய்விட்டு வந்து பேத்தியிடம் புல்லாக்கைக் கொடுத்தாள்.

''ஒன்னுதுதான். போட்டுக்கோ...''

பேத்தி மறுபடியும் அலங்காரம் பண்ணிக் கொள்ள உள்ளே போய்விட்டாள். கிழவியின் கணவர் தள்ளாடிக் கொண்டே வந்து அவள் பக்கத்தில் நின்றார்.

''அதுக்கிட்டே என்ன கொடுத்தே?''

''ஒண்ணுமில்லே. என் புல்லாக்கு பெட்டியிலே கிடந்துது. அவள் அகலமுகத்துக்கு நன்னயிருக்கும்னு போட்டுக்கச் சொன்னேன்.''

''அவ உன்னைப் போலத்தான் இருக்கா... இப்ப அதைக் கல்யாணக் கோலத்துலே பார்க்கறச்சே உன் ஞாபகம் — அந்த நாள் — வந்துடுத்து...''

''நீங்க பலகாரம் சாப்பிட்டேளா? பொழுதோட ஒரு வாய் சாப்பிடுங்கோ. ராத்திரி சாப்பிட்டா உங்க உடம்புக்கு ஆகாது.'' கிழவி பேச்சை மாற்றினாள்.

கல்யாணச் சத்திரத்தில் அவசர வேகத்தில் பறந்து கொண்டிருந்த அத்தனை பேர்களுக்கும் நடுவே இந்தத் தம்பதியின் நிதானமான போக்கு அவனுக்குப் பிடித்திருந்தது.

'எதற்கெடுத்தாலும் இப்போதெல்லாம் ஒரே அவசரம்தான். முதல் நாள் பரக்கப் பரக்க வந்து சம்பந்தி ஜாகையில் இறங்கி, அவசரம் அவசரமா மாப்பிள்ளே அழைப்பு நடத்திண்டு, ஏனோ தானோன்னு மந்திரம் சொல்லித் தாலி கட்டிட்டு, ரிசப்ஷன் போது விச்ராந்தியா சளசளன்னு வருகிறவாளோடு பொழுதைக் கழிக்கிற காலமல்லவா இது?' என்று வரதன் நினைத்தான்.

அவன் திருமணத்தில் ரிசப்ஷனே நடத்த வில்லே. அதற்குப் பதில் சாயங்காலம் நிதான மாக ஔபாசனம்பண்ணிக்கொண்டிருந்தான்.

ஒன்றிரண்டு நண்பர்கள் கேட்டதற்கு, 'ரிசப்ஷன் வைக்கணும்னு எந்த சாஸ்திரத்



# அமைதி

ஸரோஜா ராமமூர்த்தி

அமைதி அரசோச்சும் அந்த வீட்டில் காளை மாடு புகுந்து புறப்பட்டாற்போல் ஒரே சத்தமாக இருந்தது. ஜன்னல் கதவுகளை அகலத் திறந்து கொக்கிகளைப் பொருத்தித் திரைச் சீலையையும் அகற்றி விட்டு நன்ருகப் பார்த்தேன் நான்.

வாசலில் செம்மன் பூச்சுடன் கோலம் தெரிந்தது. வாயிற் படியில் மாவிலைத் தோரணம் காற்றில் ஆடிக் கொண்டிருந்தது. இப்போது தான் எனக்கு நினைவுக்கு வருகிறது. ரங்கன்—எதிர் வீட்டுப் பையன் - கல்யாணம் பண்ணிக் கொண்டு தன் மனைவியோடு வந்திருக்கிருன் என்பதை ஏனோ மறந்து போனேன். சில விஷயங்கள் எத்துணை சிறியதாக இருந்தாலும் ஆணி அடித்தாற் போல் நெஞ்சில் இடம் பெறுகின்றன. சில பெரிய-வையாக இருப்பினும் காற்றுடன் சென்று மறைந்து போகின்றன. ஒரு வாரம் முன்பு எதிர் வீட்டுக் கிழவர் அனந்து ஒரு கடிதத்துடன் என்னைத்தேடி வந்தார். "வாசு! ஊரிலேயிருந்து பையன் கடுதாசி போட்டிருக்கான். வெள்ளெழுத்துக் கண்ணுடியை எங்கோ வைச்சுத் தொலைச்சுட்டேன். படிச்சுச் சொல்லேன்."

பையன் என்று அவரால் அழைக்கப்படும் ரங்கன் பையனுக இல்லை, வளர்ந்து தனக்குத் தானே ஒரு துணையைத் தேடிக் கொள்ளவும் ஆரம்பித்துவிட்டான், என்பதுதான் கடிதத்தின் வாசகம். கிழவர் அசைவற்று சிறிது நேரம் நின்ருர். பிறகு கம்மிய குரலில், "பொண் நல்ல இடம்தானே?" என்று மெதுவாகக் கேட்டு வைத்தார். "நல்லதாகத்தான் இருக்கும். பண விஷயத்திலே அவ்வளவு ஒசத்தி இல்லே. ரொம்ப சாதாரணமான குடும்பம். கோவில்லே கல்யாணம் பண்ணப் போருளாம்—"

"பண்ணிட்டுப் போரு! நாங்களா வேண்டாங்கரோம்" என்று தன் மனைவியின் அபிப்பிராயத்தையும் சேர்த்துக் கொண்டு கூறினர் அவர்.

"கல்யாணத்துக்குப் போயிட்டு வாங்கோ. ஊரைக் கூட்டி கடன் பட்டு ஜம்பமாக செய்தாத் தான் கல்யாணமில்லே. இந்த மாதிரிக்கல்யாணங்கள் நிறைய நடக்கணும்...." என்று நான் என் கொள்கைகளை எடுத்து வீசினேன்.

அனந்து என் மேஜை மீது இருந்த மண் கூஜாவிலிருந்து தண்ணீர் சரித்து மடக் மடக் கென்று விழுங்கி தாகசாந்தி செய்துக் கொண்டார். அத்துடன் அவர் பிள்ளைக்கு அப்படிக் கல்யாணம் பண்ணிப் பார்க்க வேண்டும். இப்படி சொத்துள்ள பெண்ணுக வரவேண்டும் என்று ஆசைப்பட்டதை யெல்லாம் சேர்த்து விழுங்கியிருக்கிருர் என்று நான் நினைத்தேன்.

அன்று நான் கடை திறக்கப் போகவில்லை. ஓ! என்னைப் பற்றி நான் ஒன்றும் சொல்லவில்லையல்லவா? வாசு எனப்பட்ட நான் ஒரு பிரும்மச்சாரி. வடசு நாற்பதுக்கு மேல் ஆகிறது. சொந்த பந்தங்கள் அதிகம் இல்லாதவன் வேலை வெட்டியென்று தேடியலையாமல் ஒரு சிறிய துணிக்கடை வைத்து வியாபாரம் செய்கிறவன். வருகிற வரும்படி, நான் உண்டு, உடுத்து, தர்மம் செய்யக் காணும்.

"ஏண்டா வாசு! உன் கடைக்கு ஏராளமா பெண்கள் கூட்டம் வரதாமே? நல்ல' ப்ளவுஸ் பீஸ் விக்கறியாம். ஒருத்தி கூடவா உம் மனசுக்குப் பிடிக்கலை?" என்று ரங்கனின் தாய் அனந்துவின் மனைவி அன்னலக்ஷ்மி என்னை அடிக்கடி கேட்டாள்.

"பிஸினஸ்ஸு, பிஸினஸ் மாமி. ஒவ்வொருவரும் மாசம் பொறந்ததும் இருபதுக்கும், முப்பதுக்கும் அரிசி பருப்பு வாங்கற மாதிரி ரவிக்கைத் துணி வாங்கறதுகள். ஒரே ஊதாரிகள். இந்த மாதிரி வந்து வாய்ச்சா கடையைக் கட்ட வேண்டியது தான்."

ரங்கன் என்னை விடச் சின்னவன். ரொம்பச் சின்னவன். மீசை அரும்பி ஒழுங்காக வளர்ந்து, அதைத் திருகிக் கொண்டே கனவுகாணு அளவுக்கு மனத்தை அடக்க முடியாத பருவம் அவனுக்கு. அவள் கேட்பாள், "இவர் பெரிய ரிஷ்யசிருங்கர்... பொண்களைக் கண்ணுலே பாக்க மாட்டார். அவா கைகளை மட்டும் பார்ப்பார்.

# புடவைக் குடை பிடித்தேன் !

சுரதா

கரும்பொடு நான் பிறந்தேன் — இளங்
காற்ருெடு நானசைந்தேன் !
அரும்பொடு நான் வளர்ந்தேன் — மலர்
ஆனபின் தேன் திறந்தேன் !

நதிமணல் மீதிருந்தேன் — அவர்
நட்டகல் மீதிருந்தார் !
புதுமழை பெய்கையிலே — நான்
புடவைக் குடைபிடித்தேன் !

என்பெயர் அன்னமென்றேன் — பசிக்
கில்லையோ அன்னமென்ருர் ?
பொன்மணி மண்டபத்தில் — புதுப்
புன்னகை அன்னமிட்டேன் !

காவிரி ஆழமென்றேன் — அவர்,
காதலே ஆழமென்ருர் !
சேவலேன் கூவுதென்றேன் — விழிச்
சேனைஏன் 'தாக்குதென்ருர் ?

வன்பால் குறிஞ்சிநிலம் — அது
வாழ்க்கைப் புணர்ச்சிநிலம் !
மென்பால் மருதநிலம் — அதை
வெல்வதுன் மேனிநலம் !

என்ருர் குளக்கரையில் — இதழ்
இட்டார் இதழ்க்கரையில் !
வென்றேன் பிணக்கினிலே — எனை
வென்ருர் அணைக்கையிலே !

ஏன்னு! துணியை வாங்கிண்டு பணமா தராளோல்லியோ—'

இந்த ரங்கன் திடுதிப்பென்று இப்படி ஏதாவது செய்துவைப்பான் என்று என் மனத்துக்குத் தோன்றிக் கொண்டேயிருந்தது. வடக்கே வேலையாகப் போகிறுன் என்றதுமே அவனுக்குத் துணையைச் சேர்த்து அனுப்பியிருக்க வேண்டும். துணை என்ன கடைத் தெருவிலே விற்கிற சரக்கா? அதுவும் அலைந்து ஜாதகம் பார்த்து, சகுனம் பார்த்து, பணப் பொருத்தம் பார்த்து முடிக்க குறைந்தது இரண்டு மூன்று வருஷங்களாவது ஆகுமே!

அனந்து வீட்டில் போய்க் கடிதத்தைப் பற்றி மனைவியிடம் சொன்னதும் அந்த அம்மாள் கையில் ஒரு கிண்ணத்தில் பாயசத்துடன் என்னைத் தேடி வந்துவிட்டாள்.

"வெள்ளிக் கிழமை யோயில்லையோ? கனக தாராஸ்தவம் படிச்சேன். பால் பாயசம் பண்ணி அம்பாளுக்கு நைவேத்தியம் பண்ணினதும் மாமா வந்து நல்ல சேதியா சொன்னுர். நாம் பார்த்தா என்ன அவனே பார்த்துண்டா என்ன? சரக்கு அவனது. அவன் மனசுக்குப் பிடிச்சா சரி...." அன்னலக்ஷ்மி மகாலஷ்மியைப் போல் பழுக்கப் பூசிய மஞ்சளும், அதனிடையே நெற்றியில் சுடர் விடும் குங்குமமும், அம்பாளின் பிரசாத மலரைச் சூடியும் என் எதிரே நின்றபோது— கையில் பாயசத்துடன்—நான் பணிந்தேன். பிறகு என் கண்கள் பனித்தன. என்னதான் நாகரிகம் உச்சாணிக் கொம்பில் ஏறி உட்கார்ந்திருந்தாலும், கால வெள்ளத்தின் போக்கிலே நாம் செல்வது தான் முறை யென்ருலும், பல நாட்டு கலாசாரங்கள் நம் கரையில் வந்து மோதினுலும் பெற்றவர்களின் முன்னிலையில் வந்து தாழ்ந்து பணிந்து கேட்காமல் ஒரு வரி கடிதம் தானு, இந்த ரங்கனுக்கு அகப்பட்டது? சை... அரட்டை என்று எனக்குள் சொல்லிக் கொண்டு பாயசத்தை வாங்கிப் பருகினேன்.

"நீயும் கல்யாணத்துக்கு வாயேண்டா—"

"இல்லை மாமி. நான் வியாபார விஷயமா பம்பாய் போறேன். உங்க பிள்ளையையும் நாட்டுப் பெண்ணையும் இங்கே வந்ததும் பார்க்கிறேன். தப்பா நெனக்காதீங்கோ—"

பிறகு நான் பம்பாயிலிருந்து வந்ததும் கல்யாணம் விசாரித்து விட்டு வந்தேன். அனந்து அவ்வளவு திருப்தி கரமாக இல்லை. அன்னலக்ஷ்மி ஒன்றும் பேசவில்லை. வரப்போகிற தம்பதியை வரவேற்கும் பணியில் ஈடு பட்டிருந்தாள்.

## 2

நான் ஒன்றும் ஜன்னல் வழியாக அந்த அமைதியான லட்சுமீகரம் பொருந்திய வீட்டைப் பார்க்க வேண்டு மென்பதில்லை. சுதந்திரமாக அங்கேயே போய்ப் பார்க்கலாம். இருந்தாலும் மறைந்து பார்ப்பதால் சிலருடைய குணங்களை நன்ருகப் புரிந்து கொள்ள முடியும்.

எதிர்வீட்டு வாசல் பக்கத்துக் காமரா அறை ஜன்னல் நன்ருகத் திறந்திருந்தது. ஜன்னல் ஓரத்தில் உட்கார்ந்து அந்தப் பெண் ரங்கனின் மனைவி பாமா தலையலங்காரம் செய்து கொண்டே உத்தரவுகள் பிறப்பித்துக் கொண்டிருந்தாள்.

"அம்மா! விருந்தொண்ணும் எனக்கு வேண்டாம். நல்ல தேங்கா அரைச்ச கூட்டும், மிள கூட்டலும் போறும்."

அன்னலக்ஷ்மி கதவோரம் வந்து நிற்பது நன்ருகத் தெரிகிறது எனக்கு. "ஏண்டியம்மா! முதல் முதலா வந்திருக்கே ஒரு பாயசம் வைச்சா என்ன?"

"ஓ! ஒரே 'போர்!'" என்ருள் அவள் அதட்டும் குரலில்.

அன்னலக்ஷ்மி திரு திரு வென்று விழித்தாள். அவள் பாரதப் போரைப் பற்றித்தான் படித்திருக்கிருள். இந்தக் காலத்துக் குழந்தைகள் வாய்க்கு வாய் உபயோகிக்கும் 'போர்' பற்றி அவள் அறிடாள்.

யாரோடு யார் போர் தொடுக்கப் போகிருர்கள் என்கிற சந்தேகம் தெரியாமல் அந்த அம்மாள் உள்ளே சென்ருள்.

பாமா உரத்தி குரலில் பாட ஆரம்பித்தாள். ஏதோ ஒரு சினிமா பாட்டு. எல்லாப் பாட்டுகளும் எனக்கு ஒரே மாதிரித்தான் தோன்றுகிற வழக்கம். சற்றைக் கெல்லாம் ரங்கனும் உள்ளே வந்தான். அவன் ஒரு அடி பாட, இவள் மற்ருெரு அடி பாட, நம் தமிழ் சினிமாவில் புளித்துப் போன காட்சி ஒன்றை அங்கு நான் கண்டேன்.

அனந்துக் கிழவர் முகம் சிவக்க துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு தெருக் கோடியை லட்சியமாகக் கொண்டு அம்பு வேகத்தில் வீட்டைவிட்டு வெளியேறக்கூடிய நாராசப்பாடல் அது. உஷாக்காலத்தில் அமுதப் பிரவாகமாக வரும் திருப்பாவை திருவெம்பாவைப் பாடல்களும், பின்னர் தேனின் சுவை போலும், அலைகளின் தாலாட்டு போலும் சௌந்தர்ய லஹரி சுலோகங்களும் ஒலிக்கும் அந்த வீட்டில், இப்படி....

அன்னலக்ஷ்மி அவசரமாக வாசலுக்கு வந்து கணவர் செல்லும் திக்கை உற்றுப் பார்த்து விட்டு உள்ளே போனுள்.

முதலில் 'களுக் களுக்'கென்று ஆரம்பித்த சிரிப்பின் ஓசை பிறகு ஹி...ஹி....என்றும்; 'ஹ்ஹா' என்றும் கேட்க ஆரம்பித்தது. புது மணத் தம்பதியர் ஏதோ ஹாஸ்யத்தைப் பார்த்துச் சிரிக்கிருர்கள்போலும் என்று நான் திரும்பவும் என் பார்வையை அந்த வீட்டினுள் செலுத்தினேன்.

ஒன்றுமில்லை. சுவரில் ஓடும் பல்லியைப் பிடிக்க பூனை ஒன்று அங்கும் இங்கும் தாவிக் கொண்டிருந்தது. சாதாரண சொற் பிரயோகங் களும், சேட்டைகளும் ஹாஸ்யமாகத் தலைமீது வைத்துக் கொண்டாடக்கூடிய காலத்தில் இருக் கிறோம் என்பது எனக்கு அடிக்கடி மறந்து விடுகிறது.

பாமா உதட்டுச்சாயம் பூசி, மேலும் கண் இரப்பைகளுக்கு மைதீட்டி முடித்து நிமிர்ந்த வுடன் நான் திடுக்கிட்டேன். அனந்துவுக்கும், அன்னலக்ஷ்மிக்கும் ஏற்ற மருமகள்தானா இவர் என்பதுதான் என் திகைப்புக்குக் காரணம். நாடக அரங்கின் 'க்ரீன் ரூமில்' வேஷம் பூசும் நடிகையின் தோற்றத்தில் இருந்தாள் அந்தப் பெண். ரங்கனும் பெரிதும் மாறியிருந்தான். காதுப் புறங்களில் சுருண்டு இறங்கும் கிருதா வும், மேலும் அழகு படுத்திய மீசையுமாக அவனும் முகத்துக்கு ஒப்பனை செய்துகொண் டிருந்தான். மீசை வைத்து, கிராப்பு வைத்து பெண் பிள்ளைக்கு ஆண் வேஷம் போட்டாற் போன்ற தோற்றம்.

இந்தக் காலத்து ஆண்கள் பெரும்பாலும் விரும்பும் தோற்றமும்கூட.

அனந்து வெகுநேரம் திரும்பவில்லை. மகனையும், மருமகளையும் சேர்த்து உட்கார வைத்து அன்னலக்ஷ்மி கூடத்தில் உணவு பரி மாறும் சாட்சியையும் கண்டேன்.

"இந்தக் கூட்டு எங்கம்மா சமையலைப் போல இருக்கு—இதுக்குக் கொஞ்சம் உறைப்பு கொஞ்சமாப் போட்டிருக்கணும் இல்லையா? நீங்க என்ன சொல்றேள்?" என்று பாமா என் செவி களில் அறைவது போல் இரைந்து பேசினாள்.

அன்னலக்ஷ்மியின் மிருதுவான குரல் வீணை யின் நாதம் போல் அந்த வீட்டில் வெள்ளிக் கிழமைகளில் சியாமளா தண்டகத்தைப் பாடிக் கேட்டவன் நான். எத்தனை நாட்களாகக் கேட்டு வருகிறேன்? பதினைந்து ஆண்டுகளாக. அலுக்குமா எனக்கு? இன்னமும் கேட்பேன். தெய்வீக உருவங்கள் நிறைந்த ஒரு சிற்பக் கூடத்தில் நட்ட நடுவில் பேயின் சிலையை வைத்தாற்போல் அந்த வீட்டுக்கு வந்திருக்கும் மருமகள் எனக்குத் தோன்றினாள்.

இடை இடையே நான் வெளியூருக்குச் சென்றுவிடுவேன். வாசலில் வெளியில் ரங்கனைப் பார்த்து எப்போதாவது பேசினால் அவன் ஏதோ விமானத்தில் வந்து இறங்கியதுபோல், "ஐ...ஸீ! தட் இஸ்குட்" என்று பேசி வந்தான். அந்தப் பெண்ணும் அடிக்கடி, "ஓ. ஸில்லி! நான் கேட்டை (Cat) டச் பண்ணிட்டேன். கை அலம்பணும்..." என்று தன் ஆங்கில அறிவை வெளிப்படுத்திக் கொண்டிருந்தாள்.

ரங்கனுக்கும், பாமாவுக்கும் அந்த ஊர் பிடிக்கவில்லை.

'சே! ஊரா இது? ஒரு நல்ல தியேட்டர் உண்டா? ஊரிலே எங்கே திரும்பினாலும் கோயில் சுவத்திலே போய் முட்டிக்க வேண்டியிருக்கு. பம்பாய் போயிடப்போறேன்—" என்றாள் அவள்.

"பம்பாயிலேயும் கோயில்கள் உண்டு ரங்கா—"

"பம்பாயிலே நைட்கிளப்பும் உண்டு—" என்று இரைந்து சிரித்தாள் பாமா.

அனந்து என்னிடம் யோசனை கேட்க அடிக் கடி வரமாட்டார். புது மருமகள் வந்த பத்து தினங்களுக்கப்புறம் அவர் "வாசு! ஒண்ணு அந்தப் பெண்ணும், அவனும் இங்கே இருக்கட் டும். நானும், இவளும் எங்கானும் போயிடறோம். இல்லை, இவன் பம்பாய்ப் போகணும். அமைதியா, ஆனந்தமா வாழ எனக்கு ஆசை. இப்படி கூச்சல் போட்டுக்கொண்டு, எப்போதும் தன்னைச் சுற்றி சத்தம் வந்து கொண்டிருக்கிறதே ஒரு நாகரீகம்னு நெனச்சுண்டு இருக்கிறவா ளோடே எங்களால் இருக்க முடியலை—"

ஊரிலே நாலா பக்கமும் அலறுகிற ஒலி பெருக்கு மாதிரி, வீடுகளிலும் சத்தமும், கூச் சலும் ஆரம்பமாகிவிட்ட காலம் இது.

"கொஞ்சம் பொறுமையா இருங்கோ சார்...காலம் படுவேகமாய் முன்னேறி இருக்கு. எதையும் சத்தம் போடாமச் செய்யற பழக்கமே நம்மை விட்டுப் போயிடித்து. இந்தக்காலத்துலே நீங்க ஒரு தனி ரகம்." அனந்து சிறிது நேரம் உட்கார்ந்திருந்துவிட்டு மேஜைமீது இருந்த தண்ணீர்க் கூஜாவிலிருந்து நீரெடுத்து மடக் மடக்கென்று குடித்தார். ஏதோ வேண்டாத எண்ணங்களை முழுங்கித் தொலைக்கிறார் என்பது மட்டும் எனக்குப் புரிந்தது.

அந்த நாள் எதிர்வீடு அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது. பம்பாய் ஜனதாவில் ரங்கனும், அவன் மனைவியும் பிரயாணமாகிறார்கள் போலும். மருமகள் உரத்தகுரலில், "அம்மா! பூரி, உருளைக்கிழங்கு, ராத்திரி சாப்பாட்டுக்கு. நாளைக்குத் தயிர்சாதம். நிறைய பாலைவிட்டுப் பிசையுங்கோ. புளிக்காது. புளிச்சாலும் ஜலம் விட்டுக்கலாம். நடுவிலே திங்க ஓமப்பொடி. வேர்க்கடலை உருண்டை...."என்று உத்தரவு போட்டுக்கொண்டிருந்தாள்.

வாசலில் வண்டி வந்து நின்றது.

"பம்பாய்க்கு வாங்கோ—அப்படியே பஞ்ச வடி, நாசிக் போயிட்டு வரலாம்—" பாமாவின் அன்பான அழைப்பு மாமனார் மாமியாருக்கு. பஞ்சவடியும், நாசிக்கும் இந்தச் சத்தத்தைத் தாங்குமோ?

பொல்லென்று அதற்கடுத்த நாள் உதய மாகிறது.

மழைத்தாரைபோல என் செவிகளில் திருப் பாவை வந்து பாய்கிறது.

அந்த வீட்டில் மறுபடியும் அமைதி அரசோச்சுகிறது.



# தேன் கூடு

சரோஜா ராமமூர்த்தி

பண்டைய பல்லவ சாம்ராஜ்யத்தின் தலைநகரமாகிய காஞ்சீபுரத்தில் ராஜ வீதி என்கிற கம்பீரமான பெயருடன் திகழும் வீதியில் மண் உதிர்ந்து, ஓடுகள் சரிந்து, சிதிலமாகிக் கிடந்த ஓர் ஓட்டு வீடு. அதனுள் கலகலத்துப் போய் வறுமையில் வாடும் ஒரு குடும்பம். அந்தக் குடும்பத்துக்கும் ஒரு தலைவர் இருந்தார்; தலைவி இருந்தாள். நிறையக் குழந்தைகள் இருந்தார்கள். ஒன்றரைப் படித் தவலையில் சோறு சமைத்தால், குடும்பத் தலைவிக்குக் கடைசியில் ஒரு பிடிகூட மீளுது என்றால் குடும்பத்தின் அளவை ஒருவாறு மதிப்பிட்டு விடலாம். அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான அரிசியிலிருந்து உப்பு வரையில் அவர்கள் வீட்டில் 'இல்லை' என்ற பாட்டுத்தான். நம் அரசியலார் கூறுவதுபோல் அவர்கள் சிக்கனத்தைக் கடைப்பிடிக்கிறவர்கள். வழக்கம் போல அன்று அவர்கள் வீட்டில் அடுப்பில் பூனை தூங்கிக் கொண்டிருந்தது. பழைய கற்சட்டியிலிருந்து நாலு பிடி சாதத்தை உப்பு போட்டுக் கரைத்து ஜலம் விட்டு விளாவிக் குழந்தைகளுக்குக் கொடுத்து அனுப்பி விட்டாள் தர்மாம்பாள். கடைக் குட்டிப் பையன் கண்ணனுக்கு மட்டும் எப்படியோ சமாளித்து ஒரு டம்ளர் காப்பி வைத்துக் கொடுத்தாள்.

பள்ளிக்கூடத்தில் மணி அடித்ததும் குழந்தைகள் ஓடி வந்து விடுவார்கள் என்பது தெரிந்தும், தர்மாம்பாள் தலைப்பை விரித்துப் போட்டுக் கொண்டு படுத்திருந்தாள். அதிகாலையில் எழுந்து போன ஏகாம்பரம்-அவள் கணவர்-வீடு திரும்பவில்லை. மாதம் இருநூறு, முந்நூறு சம்பாதிக்கிற குடும்பத்தின் பொருளாதார நிலைமையே சிரமமாக இருக்கும் இந்தக் காலத்தில், ஏகாம்பரம் ஒருவரின் வருமானத்தைக் கொண்டு அந்தக் குடும்பச் சக்கரம் ஓட வேண்டுமென்றால் அது முடிகிற விஷயமல்ல. அவருடைய மாத வருமானம் ஐம்பது ரூபாய். அதில் அந்த வீட்டுக்கென்று வாடகை எட்டு ரூபாய் கொடுத்தார்கள். மீதி இருப்பதில் எட்டுப் பேர்கள் சாப்பிட வேண்டும்.

ஏகாம்பரம் ராஜ வீதியில் மிட்டாய்க் கடை ஒன்றில் பலகாரங்கள் செய்யும் வேலையில் இருந்தார். காஞ்சீபுரம் எப்படிக் கோவில் குளங்களுக்குப் பிரசித்தமானதோ, அப்படியே வெயிலுக்கும் பிரசித்தமான ஊர். சித்திரை மாசத்துக் கடுங்கோடையில் 'திகு திகு' என்று எரியும் அடுப்பருகில் உட்கார்ந்து வியர்வை ஆறாகப் பெருகி வழிந்தாலும் அந்தக் கடை முதலாளி மேலே ஒரு ஐந்து ரூபாய் சம்பளம் அதிகம் தரமாட்டார். வைகாசி மாதம் ஸ்ரீ வரதராஜப் பெருமாளின் கருடோத்ஸவத்தின் போது கல்லாப் பெட்டி நிறையச் சில்லறை ததும்பி வழிந்தாலும் அவர் நெஞ்சம் கல் நெஞ்சமாகத்தான் இருந்தது. இதில் ஒரு விசேஷம், அவர் தம் கடைக்குப் பக்கத்தில் உற்சவத்தின் போது தண்ணீர்ப் பந்தல் வைத்து நடத்தி வந்தார்!

தினம் இரவு எட்டு மணிக்கு மேல் வீட்டுக்குக் கிளம்பும்போது, அவர் சக தொழிலாளி கச்சபேசுவரன் அவருக்கு முன்பாகவே கடையை விட்டுக் கிளம்பிக் குமரக் கோட்டத்தின் அருகில் வந்து நிற்பார். இவர் வந்ததும், அவரிடம் நாலு மிட்டாய்ப் பொட்டலங்களைக் கொடுத்து, "கொண்டுபோய்க் குழந்தைகளிடம் கொடும்" என்று கூறிக் கொடுப்பார்.

"என்னத்துக்கு அப்பா இதெல்லாம்? முதலாளிக்குத் தெரிந்தால் நமக்குத்தான் அவமானம்....." என்பார் ஏகாம்பரம்.

"சும்மா இரும், ஐயா! சம்பளம்தான் கூட இரண்டோ மூன்றோ கொடுக்க மாட்டார். கடையில் ஊசி போகிறது காணுது. குழந்தைகள்தான் சாப்பிடட்டும்" என்று கூறிவிட்டுக் கச்சபேஸ்வரன் போய் விடுவார். அவர் பிரும்மச்சாரி. இந்த ஐம்பது ரூபாய் சம்பளத்தை நம்பி அவர் சம்சார பந்தத்தில் சிக்கிக் கொள்ளவில்லை. அவரைப் புத்திசாலி என்று ஏகாம்பரம் வாயாரப் புகழ்வார். நாள் முழுவதும் அரை வயிற்றுச் சாப்பாடுடன் இருக்கும் குழந்தைகள் அந்தப் பொட்டலங்களைப் பிரித்து ஒரு நொடியில் தின்று விடுவார்கள். அப்பொழுதும் அவர்களுக்குத் திருப்தி ஏற்படாது. "அப்பாவுக்குத் துளிக்கூட வைக்கவில்லையே" என்று தர்மாம்பாள் அதட்டினால், "போகிறது, விடு. எனக்குப்

பலகாரம் ஒன்றுதான் குறைச்சலாக இருக்கிறதாக்கும். ஏதாவது இருந்தால் கொடு,..'' என்று கேட்பார்.

மத்தியானம் வடித்த சாதத்தில் நீர் ஊற்றி வைத்திருப்பதில் சிறிது போட்டுக் கரைத்து, மாங்காய் வடு ஊறுகாயுடன் கொடுத்தால் சாப்பிட்டு விட்டுத் திண்ணையில் படுத்து விடுவார் அவர். மனைவி அதுகூடச் சாப்பிட்டிருக்க மாட்டாள் என்பது அவருக்குத் தெரியும். ''சாப்பிட்டாயா?'' என்று கேட்டால், ''சாப்பிட்டேன்'' என்று பதில் வரும் என்பதும் அவருக்கு நன்றாகத் தெரியும். சொன்னால் அவள் கேட்க மாட்டாள் என்று அவர் அதைப் பற்றி விசாரிப்பதையே விட்டு விட்டார்.

இந்தக் குடும்பத்தில் மூத்தது பெண் குழந்தை. வயது பதினாறு. நாலு பெரிய மனிதர்கள் சிபார்சினால் மூன்றாவது பருவம் தேறி உபாத்தியாயினி வேலைக்குப் படித்து வந்தாள் அந்தப் பெண். இரண்டாவது பிள்ளை படித்துக் கொண்டிருந்தான். அப்படியே மற்றக் குழந்தைகளும் பள்ளிக்கூடம் போய் வந்தார்கள். கடைக்குட்டிப் பையன் மாத்திரம் வீட்டில் இருந்தான். மத்தியான வேளைகளில் தர்மாம்பாள் எத்தனையோ வேலைகள் செய்தாள். மாவரைத்துக் கொடுப்பாள். அப்பளம் இட்டுக் கொடுப்பாள். வீசை சர்க்கரை ஒன்றரை ரூபாய் விற்கும் இந்தக் காலத்தில் இவையெல்லாம் எந்த மூலைக்குக் காணும்? குடும்பம் இருக்கிற நிலையைப் பார்த்து அவளைவிட, ஏகாம்பரம் தான் அதிகமாகக் கலங்கியவர்.

'ஒரு நாளாவது இரண்டு வேளைகள் வயிறாரச் சாப்பாடு போட வேண்டும் குழந்தைகளுக்கு' என்று தம் மனத்துக்குள் அவர் பல தடவைகள் சொல்லிக் கொள்வார்.

அன்று அவர் வீட்டுக்கு வரும்போது பகல் ஒன்றரை மணி ஆகிவிட்டது. கையில் இருந்த ஒரு ரூபாயில் அரிசியும், இதரச் சாமான்களும் வாங்கிக்கொண்டு வந்திருந்தார். வீட்டினுள் நுழைந்தவுடன் வீட்டில் சந்தடி எதுவுமில்லாமல் நிசப்தமாக இருந்தது. கொல்லைத் தாழ்வாரத்தில் தர்மாம்பாள் கண்ணை அணைத்தவாறு படுத்திருந்தாள். அவர் வந்ததைக்கூட அறிந்து கொள்ளாமல் தூங்குகிறாளா, அல்லது பசியின் மயக்கமா என்பது அவருக்குப் புரியவில்லை. சமையல் அறைக்குள் சென்று அடுப்பை மூட்டி வெங்கலப் பானையில் உலைநீரை வார்த்து வைத்தார். மனைவி எழுந்திருப்பதற்குள் சமைத்து விட்டால் தம் கையினாலேயே அவளுக்குப் பரிமாறிவிட்டு, பிறகு வேலைக்குப் புறப்பட்டுப் போகலாம் என்கிற ஆவல் அவருக்கு.



கொல்லைக் கோடியிலிருந்து ஒரு குரல் இலேசாகக் கேட்டது.

''சாமி! சாமி!'' என்று ஒருவன் குரல் கொடுத்தான். தர்மாம்பாள் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தாள். ஏகாம்பரம் சமையலறையை விட்டு வெளியே வந்தார். கொய்யா மரத்தடியில் நிற்கும் குறவனைப் பார்த்தார் அவர்.

''என்னடா இது? பெரிய கூப்பாடு போடுகிறாய்?'' என்று கேட்டுக் கொண்டே ஏகாம்பரம் கிணற்றங்கரைக்குச் சென்று நின்றார்.

''சாமி.....'' என்றான் குறவன், தன் காவிப் பற்களைக் காட்டிச் சிரித்தபடியே.

தர்மாம்பாளுக்கு அவன் எதற்கு வந்திருக்கிறான் என்பது புரிந்து போயிற்று. பூவும் பிஞ்சுமாய்க் குலுங்கும் அந்தப் பெரிய கொய்யாமரத்தில் உச்சாணிக்

கிளையில் இரண்டு தேன் கூடுகள் கட்டி இருப்பதைக் கண்டாள் அவள்.

விடியற்காலம் சூரிய உதயத்துக்கு முன்பே தர்மாம்பாள் கொல்லைப் பக்கம் வரும்போது அந்த அழகிய காட்சியைப் பார்த்திருக்கிறாள். ''உய்ய்'' என்கிற ரீங்காரத்துடன் கூட்டமாகத் தேனீக்கள் அங்கும் இங்கும் பறந்து சென்று மலர்களிலிருந்து தேனைக் கொண்டு வந்து சேர்ப்பதைப் பார்த்து அப்படியே தன்னை மறந்து நிற்பாள் அவள். அந்த வீட்டிலே உணவுப் பஞ்சமே தவிர, மலர்களுக்குப் பஞ்சமில்லை. கொய்யா மரத்துக்கு அப்பால் மல்லிகைச் செடி புதர்போல் மண்டிக் கிடந்தது. கொத்துக் கொத்தாய் மலர்களைத் தாங்கி மருதோன்றி மரங்கள் வேலி போட்டாற் போல் வரிசையாக இருந்தன. துளசியும், சாமந்தியும் கிணற்றைச் சுற்றி வளர்ந்திருந்தன. ஒரு மூலையில் சரக்கொன்றை மரம் சரம் சரமாக மலர்களைச் சொரிந்து கொண்டு நின்றது. அவர்கள் வீட்டுப் பெண் குழந்தைகள் வயிற்றுக்கு இல்லாவிட்டாலும் தலை நிறையப் பூ வைத்துக் கொண்டு பள்ளிக்கூடம் போவார்கள். பூஜை அறையில் 'கம்' மென்று மலர்களின் மணம் வீசிக் கொண்டே இருக்கும். வறுமை என்னும் கொடிய நோயில் அவர்களைச் சிக்க வைத்து வேடிக்கை பார்க்கும் முருகவேளின் படத்துக்கு மல்லிமாலை போடாமல் இருக்க மாட்டாள் தர்மாம்பாள்.



அமாவாசைக்கு முன்பு தேன் கூடுகள் பருத்து, அதனுள் தேன் நிறைய இருப்பது தெரியும். மாலைக் கதிரவனின் ஒளி அக்கூடுகளைத் தங்க நிறமாக மாற்றித் தரும். அமாவாசை நெருங்கி வரும் போது அந்த ஈக்கள் தேனை உறிஞ்சி விட்டுத் தோட்டத்தைச் சுற்றிச் சுற்றி ரீங்காரமிட்டுக் கொண்டே திரிவதையும் தர்மாம்பாள் பார்த்திருக்கிறாள்.

சமீபத்தில் கச்சபேசுவரன் அவர்களுடைய வீட்டுக்கு வந்திருந்தார். கொல்லைப்புறம் சென்றவர் தேன் கூடுகளைப் பார்த்து அதிசயித்து நின்றார்.

''ஏகாம்பரம்! இதென்னப்பா இது? வீட்டிலே தேன் கூடு கட்டக் கூடாதே. யாரையாவது குறவனை அழைத்து வந்து கலைத்துப் போடச் சொல்லப்பா.... சுவாமிக்கும் அபிஷேகத்துக்குத் தேன் ஆச்சு. மருந்துப் பண்டம் வேறு. இந்த மாதிரி சுத்தமான தேன் கிடைக்காது. கைச் செலவுக்கும் ஏதாவது கிடைக்கும்...'' என்று கூறினார், மரத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டே.

தர்மாம்பாள் உள்ளேயிருந்து எட்டிப் பார்த்தாள். 'அன்றலர்ந்த மலர்களிலிருந்து தேனை எடுத்து வந்து சேகரித்து உண்ணும் அந்தத் தேனீக்கள் நம்மை என்ன செய்கின்றன? யாருடைய பொருளையாவது அபகரித்துக் கொண்டனவா? நாம் இருக்கும் வீட்டில் வந்து நமக்குத் தொல்லை தருகின்றனவா? இயற்கையில் பிறந்து இயற்கையாக வாழ்ந்து அப்படியே மடியப் போகும் அவைகளின் அமைதியான வாழ்க்கையை நாம் ஏன் கலைக்க வேண்டும்? தொல்லை தரவேண்டும்?' என்று தர்மாம்பாள் சிந்தித்தாள். அத்துடன் அவளுக்கு ஒரு பயம். அடுத்த வீட்டிலே சில மாதங்களுக்கு முன்பு குருவிக் கூட்டைக் கலைத்தார்கள். பறக்கத் தெரியாத சிறு குஞ்சுகள் இரண்டு; நாலைந்து முட்டைகள். அவைகளைப் பேணி வளர்க்கும் ஆணும், பெண்ணும் கலைந்த அந்தக் கூட்டைப் பார்த்துக் கத்திய கத்தல் சொல்லி முடியாது. 'குழந்தை குட்டிகளுடன் வாழும் ஆறறிவு படைத்த மனிதா! உன்னுடையதுதான் குடும்பமா? என்னுடையதும் குடும்பம்தான்! இதோ பார்! கருவிலே வளரும் உயிர்கள்' என்று சொல்லாமற் சொல்லி முட்டைகளின் அருகில் வந்து கத்தின.

'இதோ பார்! உன்னுடைய குழந்தைகளைப் போல் என்னுடைய குழந்தைகளும்!' என்று பறக்கத் தெரியாமல்

இருக்கும் தேஞ்சுகளின் அருகில் வந்து கதறின; துடித்துச் சாபமிட்டன. மனிதனுக்கு இலக்கியம் புரியும். கவிதைகள் புரியும். சங்கீதம் புரியும். மற்ற எல்லாக் கலைகளைப் பற்றிப் பேசவும், படிக்கவும் தெரியும். அந்தக் குருவிகளின் பாஷை மட்டும் புரியாது. புரிந்திருந்தால் கூட்டைக் கலைத்து ஒரு குடும்பத்தையே கலைப்பானா? அப்புறம் அந்தக் குடும்பத் தலைவரை ஆயிரம் மைல்களுக்கு அப்பால் வேலை காரணமாக மாற்றி விட்டார்கள். பெரிய குழந்தைகள் அவரவர்கள் வேலையாகி எங்கெங்கோ சென்றார்கள். அந்த அம்மாள் தன் இரண்டு குழந்தைகளுடன் அந்த வீட்டில் இருந்தாள். மூலைக்கு ஒன்றாகக் குடும்பம் கலைந்து போயிற்று. தர்மாம்பாள் அவளிடம் சொன்னாள் :

"மாமி! குருவிக் கூட்டைக் கலைப்பது பெரும் பாவம்..."

"ஆமாண்டி அம்மா! என்னைப் பார். நாலு பேருடன் இருந்துவிட்டு இப்போ ஒண்டியாகத் தவம் பண்ணுகிறேன்..."

இந்தப் பயம் தர்மாம்பாள் மனசில் நிலைத்து விட்டது. தேன் கூட்டைக் கலைக்கச் சொன்ன கச்சபேசுவரன்தான் குறவனை அனுப்பி இருக்க வேண்டும் என்று தீர்மானித்தாள்.

"என்ன சாமி! அமாவாசைக்கு இன்னும் அஞ்சு நாள் இருக்குங்க...." என்று சொன்னான் குறவன்.

"சொல்கிறதை நேராகச் சொல்லித் தொலையேண்டா. அமாவாசைக்கு நான் என்னடா பண்ணுவேன்...." என்றார் ஏகாம்பரம் எரிச்சலுடன். உள்ளே எரியும் அடுப்பில் ஏதோ பொங்கி வழியும் சத்தம் கேட்டது.

"இந்தா! உன்னைத்தானே! சாதம் பதம் பார்த்து வடித்து வை" என்று மனைவியிடம் அங்கிருந்தபடியே கூறினார்.

தர்மாம்பாள் கிணற்றடிக்கு வந்தாள்.

"அவன் என்ன கேட்கிறான்?"

"அவன் வந்து உன்னையும் என்னையும் என்ன கேட்பான்? ஆயிரம் ரூபாய்ச் சன்மானம் கேட்பானா? இல்லே, சோறு தான் கேட்பானா?"

"பின்னே அவனோடு என்ன பேச்சு? ஏதாவது ஒரணாக் காசு இருந்தால் அவனிடம் கொடுத்தனுப்புங்கோ. நீங்கள் பாட்டுக்கு உள்ளே வாங்கோ."

"சாமி! ரெண்டு கூட்டுக்கு ரெண்டு ரூபா தாரேன்!"

"இந்தாடா, அப்பா! நீ மகராஜனாய் இருப்பாய். பேசாமல் வெளியே போ. தேனை அழிக்க வேண்டாம், ஒண்ணும்

வேண்டாம்'' என்று தர்மாம்பாள் மிகுந்த பயத்துடன் கூறினாள்.

ஏகாம்பரத்தின் கண்களிலே இரண்டு ரூபாய் நிழலாடியது. வறுமையின் கொடுமையிலே உழன்ற அவருக்கு அந்த இரண்டு ரூபாய் என்ன என்னவோ ஆசைகளைக் காட்டியது.

''இந்தா, தர்மு! பையிலே சாமான் இருக்கு. ஒரு துகையல் அரையேன் சாப்பிடலாம்...''

மனைவிக்குப் பின்னால் நின்றபடியே ஏகாம்பரம் குறவனுக்கு ஏதோ ஜாடை காட்டினார்.

''துகையலா? அம்மிக் கல்லில் பொளியே இல்லையே. மூன்றாவது வீட்டுக்குப் போகணும் அரைக்க....''

''போயேன். சே, சே, வாய்க்கு வேண்டியதை என்றைக்குத்தான் செய்து போட்டாய் நீ?...'' ஏகாம்பரம் இரைய ஆரம்பித்தார்.

''போடா குறவா! மரத்திலே கையை வைத்தாயோ?... '' என்று சொல்லிக் கொண்டே அவனை விரட்டி விட்டுக் கொல்லை வேலியின் படலை இழுத்து மூடிக் கொண்டு உள்ளே சென்றாள் தர்மாம்பாள்.

துவையலுக்கு வறுத்து எடுத்துக் கொண்டு அவள் மூன்றாவது வீட்டுக்குக் கிளம்பியவுடன் படலைத் திறந்து கொண்டு குறவன் உள்ளே வந்தான். உடல் முழுவதும் கம்பளியால் போர்த்திக்கொண்டு, கையில் தீப்பந்தத்துடன் அவன் மரத்தில் தாவி ஏறினான். சில விநாடிகளுக்கு முன்பு கூட்டை மொய்த்துக் கொண்டு அந்தக் களிப்பிலே மூழ்கி இருந்த தேனீக்கள் தீயைக் கண்டு நாற்புறமும் சிதறி ஓடின. கோபத்துடன் கிளம்பிப் பறந்து அவன் மேல் பாய்ந்தன. கம்பளியின் மேல் வந்து விழுந்தன. குறவன் பந்தத்தைக் கீழே எறிந்தான். சட்டென்று இரண்டு கூடுகளையும் கத்தியால் நறுக்கி எடுத்துக் கொண்டு சரக்கொன்றை மரத்தடிக்கு விரைந்து படலைத் திறந்து கொண்டு வெளியே போய் விட்டான். ஏகாம்பரத்தின் கையில் இரண்டு ரூபாய்கள் இளித்துக் கொண்டிருந்தன. கொல்லை முழுதும் பரிதவிப்பான குரலுடன் ஈக்கள் சுற்றித் திரிந்தன. மனிதனின் அல்ப ஆசையைப் பார்த்துத்தான் அவை அப்படிப் பொருமி அழுதிருக்க வேண்டும்.

தர்மாம்பாள் துவையலுடன் வீட்டுக்குள் வந்தாள்.

''சாப்பிட வாருங்களேன். அங்கேயே நின்று கொண்டு என்ன செய்கிறீர்கள்?'' என்று கேட்டுக் கொண்டே கிணற்றடிக்கு விரைந்தாள் அவள். கணவரின் கையில் இருக்கும் ரூபாயைப் பார்த்து விட்டு மரத்தையும் ஒருமுறை அண்ணாந்து பார்த்தாள்.

''என்ன இது? தேன் கூட்டை அழித்தாச்சா?''

''போயேன். அழித்தால் என்னவாம்? திருப்பிக் கட்டுகின்றன!'' என்று ஏதோ ஒரு சமாதானம் கூறி அவளைச் சாந்தப் படுத்தப் பார்த்தார் அவர்.

''இந்த ரூபாய் வந்துதான் நம் குடும்பத்துக்கு விடியப் போகிறதா? அப்படி என்ன ஆயிரமா ஐந்நூறா? அவன் பார்த்துக் கொடுத்தால் விடியும்...'' என்று வானுற ஓங்கி நிற்கும் கச்சபேசுவரனின் கோயில் கோபுரத்தைச் சுட்டிக் காட்டினாள் தர்மாம்பாள்.

''சாமிக்குத்தான் தேன் அபிஷேகத்துக்குக் கொண்டு போவதாகச் சொன்னான்'' என்றார் ஏகாம்பரம் மிகவும் பயந்த குரலில்.

''சொன்னான் ஆயிரம்! இத்தனை ஜீவன்கள் இங்கே பசியால் துடிக்கும் போது அங்கே அந்த இறைவன் தேனை அபிஷேகம் பண்ணிக் கொள்ளத்தான் காத்துக் கிடக்கிறானாக்கும்!''

தர்மாம்பாள் கண்ணீர் வழிய உள்ளே போய் விட்டாள். அவள் அன்றும் சாப்பிட வில்லை. மனசிலே ஒரு பயம், தன் குடும்பம் கலைந்து போகிற மாதிரி.

✶

அப்படியேதான் ஆயிற்று. மூத்த பெண்ணுக்கு வாத்தியார் வேலையாகி வேறு ஊருக்கு மாற்றலாகிப் போனாள். மூன்று குழந்தைகளை அவள் தமையன் வந்து தம்முடன் இருக்கட்டும் என்று அழைத்துப் போனார். இரண்டு குழந்தைகள் வாலாஜாபாத் பாடசாலையில் போய்ச் சேர்ந்தனர். அக்குடும்பத்தினர் தேனீக்கள் சிதறி ஓடியதைப் போல் சிதறிப் போய்த் திசைக்கு ஒருவராகப் போயிருந்தார்கள். மறுபடியும் தேனீக்கள் அவர்களை நம்பிக் கூடுகட்டும் போது தான், குடும்பமும் ஒன்று சேரும் என்று நம்பினாள் தர்மாம்பாள். அந்த இரண்டு ரூபாயை அவள் குடும்பத்துக்காகப் பயன்படுத்தவில்லை. கோபுர வாசலில் கண் இழந்து, கால்கள் இழந்து வாடும் ஏழைகளுக்குக் கொடுத்து விட்டாள்.

தினமும் அதிகாலையிலே எழுந்தவுடன், அவள் தோட்டத்துக்குப் போவாள். தேனீக்கள் ரீங்காரமிடுகின்றனவா? மறுபடியும் அவை வருமா? தன் குழந்தைகளும் தன்னிடம் திரும்பி வருவார்களா?' என்று ஏங்கிய உள்ளத்துடன் தோட்டத்தையே கூர்ந்து பார்த்தவாறு அயர்ந்து விடுவாள்.

# வரன் குதிர்ந்தது!

ஸரோஜா ராமமூர்த்தி

அந்த அதிர்ச்சியி லிருந்து விடுபடுவதற்கு வெகு நேரம் பிடித்தது ராமனுக்கு. வழுக்கை விழுந்து போன தலையின் பின் உச்சியைத் தடவிக் கொண்டே அவர் எதிரில் நிற்கும் தமது மகளைப் பார்த்து, "நீ என்ன அம்மா சொல்கிறாய்?" என்று மூன்றாவது தடவையாகக் கேட்டார்.

தெற்குப் புறமாக அமைந்திருந்த விசாலமான ஜன்னல் மீது சாய்ந்து நின்று கொண்டிருந்த உஷா புன்சிரிப்புடன், "என்ன அப்பா, இப்படி அரண்டுபோய் விட்டீர்கள்? உங்களுக்குப் புரியும்படிதானே சொல்கிறேன்? இது கூடவா உங்களுக்குப் புரியவில்லை?" என்று கூறிவிட்டு உள்ளே போய் விட்டாள்.

ராமன், தாம் உட்கார்ந்த இடத்திலேயே சிந்தனையில் மூழ்கித் தமக்கு முன்பாகப் பரந்து விரிந்து கிடக்கும் அழகிய கூடத்தைப் பார்த்தார். சுண்ணும்புச் சன்னம் வைத்துப் பளபளவென்று மின்னும் சுவர்களைப் பார்த்தார். அவைகளில் மாட்டப்பட்டிருக்கும் கலை ஓவியங்களை ஆராய்ந்தார். இலைப் பச்சை வர்ணம் தீட்டப்பட்ட கதவுகள், அவற்றில் ஆடி அசையும் மெல்லிய திரைகள், வராந்தா, கூடத்துக்கு முன்னால் வாசல் கீழே காஷ்மீரக் கம்பளம், அதன் மேல் அழகிய சோபாக்கள், நடுவில் கருங்காலி மேஜை — இப்படிப் பல செளகரியங்கள் நிறைந்த வீடு அது. இவ்வளவும் அவர் தம் மகளுக்காகவும், வரப் போகும் மாப்பிள்ளைக்காகவும் செய்திருக்கும் செளகரியங்கள்.

டில்லியில் மத்திய சர்க்காரில் பெரிய பதவியி லிருந்து பணம் சேர்த்தவர் ராமன். அத்துடன் பம்பாயில் 'ஷேர் மார்க்கெட்'டில் அவர் பெரிய பங்குதாரர். பணம் ஏராளமாகச் சேர்ந்தது. ஆனால், ஒரு குழந்தைக்காக அவர் மனைவி லக்ஷ்மி தவம் கிடந்தாள்.

இவ்வளவு செல்வத்தில் புரளும் ராமன் நல்ல துணியாக உடுத்த மாட்டார். தம்மால் தூக்க முடிகிற சாமானைக் கூலி ஆள் வைத்துத் தூக்கிப் போக மாட்டார். கையில் ஒரு பையும், கக்கத்தில் சுருட்டிய படுக்கையுமாக அவர் டில்லியி லிருந்து பம்பாய், பம்பாயி லிருந்து சென்னை வரையில் பிரயாணம் செய்துவிடுவார்.

இந் நிலையில் குழந்தைக்காக ஏங்கியிருந்த லக்ஷ்மியின் ஆசை நிறைவேறியது. குழந்தை உஷா பிறந்ததும் லக்ஷ்மியின் தவம் பூர்த்தியடைந்து விட்டது.

உஷா பிறந்து பதினைந்து வயசு வரையில் டில்லியில்தான் வளர்ந்தாள். உஷா கள்ளங் கபடு அறியாமல், வெள்ளை மனத்துடன் வளர்வதைக் கண்டு லக்ஷ்மிதான் அதிகமாகக் கவலையை அடைந்தவள். "நம் குழந்தைக்கு ஒன்றுமே தெரியவில்லை. அவளைப் புதிதாக ஒரு இடத்தில் கல்யாணம் செய்து கொடுத்தால் எப்படித்தான் வாழ்க்கை நடத்தப் போகிறாளோ?" என்று லக்ஷ்மி தன் கணவனிடம் கூறி அடிக்கடி குறைப்பட்டுக் கொள்வாள்.

அப்பொழுதெல்லாம் மனைவிக்கு ஆறுதலாக ராமன், "புதிசான இடத்தில் நாம் ஏன் சம்பந்தம் செய்ய வேண்டும்? என் சிநேகிதன் கோபாலன் பிள்ளை இருக்கிறானே; தங்கமான பையனும். சென்னையில் அத்தை வீட்டில் இருந்து படித்து வருகிறானும். அந்தப் பையனுக்குக் கொடுத்து விட்டால் போயிற்று!" என்பார்.

பிள்ளையின் ஜாதகத்தை வாங்கிப் பொருத்தம் கூடப் பார்த்தார். பிள்ளையின் தகப்பனும் தம் மகனுக்குக் கல்யாணத்தைப் பற்றி எழுதிக் கொண்டே இருப்பதாகவும், படிப்பு முடிந்ததும் நடத்தி விடலாம் என்றும் சொல்லிக் கொண்டிருந்தார்.

இதிலும் லக்ஷ்மிக்குத் திருப்தி ஏற்படவில்லை.

"பெண்ணைப் பெற்றவர்கள் ஒரே இடத்தை நம்பிக் கொண்டு இருக்க

முடியுமா? நம் ஊர்ப் பக்கம் போய்த் தான் வேறு ஜாதகங்கள் வாங்கிப் பார்க்க வேண்டும். லீவு போட்டுவிட்டு ஊருக்குப் போகலாம்'' என்று கண வனை நச்சரித்து வந்தாள் அவள். ராம னுக்கு அவள் தொந்தரவு சகிக்க முடியாமல் போகவே, லீவு போட்டு விட்டுச் சொந்த ஊருக்குக் கிளம்பினார் டில்லியை விட்டு.

லக்ஷ்மி, பெண்ணுக்கு வரன் தேட வந்தவள், நிரந்தரமாகவே சொந்த ஊரில் தங்கி விட்டாள். ராமன் மட்டும் உத்தியோக அலுவலாக அவ்வப்பொழுது டில்லிக்கும், ஊருக்குமாக அலைந்து கொண்டிருந்தார். பிறகு இந்த அலைச்சல் பிடிக்காமல் போகவே இரண்டு வருஷங்கள் முன்பாகவே வேலையிலிருந்து ஓய்வு பெற்றுக் கொண்டு ஊருடன் வந்து சேர்ந்தார் ராமன். ஊரின் கோடியில் கரம்பாகக் கிடந்த நிலத்தில் நாலு 'கிரவுண்ட்' வாங்கி அதில் ஒரு பெரிய பங்களா கட்டி முடித்தார்.

வீடு நல்ல வசதியாக இருந்து விட்டால் மட்டும் போதாது அல்லவா? அதுவும் டில்லியைப் போல் ஒரு நகரத்தில் இருந்து விட்டு வந்திருப்பவர்களுக்குச் சாதாரண ஊர்களில் பல அசௌகர்யங்கள் தென்படுவது சகஜம் தானே? முக்கியமாக, அவருடைய பல வேலைகளைக் கவனிக்க அவருக்கு ஒரு குமாஸ்தாவின் உதவி தேவையாக இருந்தது. ஆகவே, அவர் பத்திரிகைகளில் "நூறு ரூபாய் சம்பளத்துக்கு ஒரு குமஸ்தா தேவை'' என்று விளம்பரம் செய்தார்.

விளம்பரத்தைப் படித்து விட்டுப் பட்டதாரியான ராமகிருஷ்ணன் அவரைத் தேடி வந்தான். அவன் வந்த போது லக்ஷ்மியும் ராமனும் வீட்டில் இல்லை. தோட்டத்தில் மாமரத்தடியில் மேடை மீது உட்கார்ந்து உஷா புஸ்தகம் படித்துக் கொண்டிருந்தாள்,

அவன் சிறிது தயங்கிக் கொண்டே, "ஸார்! ஸார்!'' என்று கூப்பிட்டான்.

உஷா புஸ்தகத்தில் பதிய விட்டிருந்த கண்களை நிமிர்த்தி அவனைப் பார்த்து, "யார் நீங்கள்? யாரைப் பார்க்க வேண்டும்?'' என்று கேட்டாள்.



உஷா இவ்விதம் கேட்டதும், "டில்லி ராமன் வீடு இது தானே? அவரைத் தான் பார்க்க வேண்டும். அவருக்கு ஒரு 'செகரடரி' தேவை என்று கேள்விப்பட்டு வந்திருக்கிறேன்'' என்றான்.

'குமாஸ்தா' என்று சொல்லிக் கொள்ளாமல் காரியதரிசி என்று அவன் கௌரவமாகச் சொல்லிக் கொள்வதைக் கேட்டு உஷா புன்சிரிப்புடன், "ஓஹோ! அப்படியா? முன் கூடத்தில் போய் உட்காருங்கள், அப்பா வந்து விடுவார்'' என்று பதில் அளித்தாள்.

“இவ்வளவு பணக்காரருடைய பெண்மீது நகைகளை அதிகமாகக் காணோமே! சாதாரண மில் புடவை உடுத்தி யிருக்கிறாளே! பணம் மிதமிஞ்சி இருந்தால் எதுவுமே பிடிக்காதோ?” என்று வியந்தவாறு கூடத்தில் போய் அமர்ந்தான் அவன்

வெளியே போயிருந்த ராமன் வந்தார். வந்தவர் கட்டாயமாக டில்லி ராமனாக இருக்க முடியாது என்றுதான் ராமகிருஷ்ணன் தீர்மானித்தான். யாரோ அவர்களைப் பார்க்க வருகிறவர்களாக இருக்க வேண்டும் என்று அலட்சியமாக சோபாவில் உட்கார்ந்திருந்தான். ராமன் நெற்றியைச் சுளித்துக் கொண்டார். மூக்குக் கண்ணாடியைச் சட்டைப் பையிலிருந்து எடுத்துப் போட்டுக் கொண்டு, “நீதானா அப்பா என்னிடம் வேலைக்கு வந்திருக்கிறது?” என்று கேட்டார்.

ராமகிருஷ்ணனின் உடலை சோபாவிலிருந்து யாரோ தூக்கி எறிந்தது போன்ற பிரமை அவனுக்கு ஏற்பட்டது. சமாளித்து எழுந்து நின்று, “நமஸ்காரம்! உம்...நான்தான், ஸார்!” என்றான் ராமகிருஷ்ணன் நாக்குழற.



“இட்ட வேலைகளைச் செய்வாயா? அல்லது, சோபாவில் உட்கார்ந்து காற்று வாங்குவாயா?”

ராமகிருஷ்ணன் மௌனமாகத் தலை குனிந்தான். தோட்டத்திலிருந்து உஷா வந்தாள்.

தன்னுடைய தீங்குரலில், “அவர் மீது பிசகு ஒன்றும் இல்லை, அப்பா. நீங்கள் வருவதற்கு நேரமாகுமோ என்று நான்தான் அவரை உட்காரச் சொன்னேன்” என்றாள்.

பெண்ணை ஒரு தினுசாகத் திரும்பிப் பார்த்தார் தகப்பனார். ‘நீ ஏனம்மா இதிலெல்லாம் தலையிட வேண்டும்?’ என்கிற பாவம் அவர் முகத்தில் பொதிந்திருந்தது.

வேலை கிடைத்த அன்றே ராமனுடைய குணம் பூராவையும் அவன் புரிந்து கொண்டான். அவனை அழைத்துக் கொண்டு வீடு பூராவையும் சுற்றிக் காண்பித்தார் ராமன்.

“இந்த வீடு இருக்கிறதே, இதை ஏன் இப்படிப் பிரமாதமாகக் கட்டி இருக்கிறேன், தெரியுமா? வருகிற மாப்பிள்ளை குறை ஒன்றும் சொல்லக் கூடாது. மாடியில் சகல சௌகரியங்களும் நிரம்பி இருக்கின்றன. வீடு உனக்குப் பிடிக்கிறதா?” என்றும் கேட்டு வைத்தார்.

‘எனக்குப் பிடித்து என்ன ஆக வேண்டும்? வருகிற மாப்பிள்ளைக்கு

அல்லவா பிடிக்க வேண்டும்?' என்று அவன் நினைத்துக் கொண்டான்.

சமையலறையிலிருந்து லக்ஷ்மி வெளியே வந்தாள். பிறகு, "ஆமாம், நீங்கள் பாட்டுக்கு வீட்டைச் சுற்றிச் சுற்றி வருகிறீர்களே. மத்தியானம் அவர்கள் பெண் பார்க்க வரப் போகிறார்களே! ஏதாவது ஏற்பாடு பண்ண வேண்டாமா?" என்று கணவனைப் பார்த்துக் கேட்டாள்.

"ஓஹோ! வரப் போகிறார்களா? இதோ ஒரு நொடியில் ஏற்பாடுகள் செய்து விட்டால் போச்சு!" என்றார் ராமன்.

அன்று ரயில் நிலையத்திலிருந்து அந்தப் பிள்ளை வீட்டாரை அழைத்து வர ராமகிருஷ்ணன் போயிருந்தான். கல்யாணப் பிள்ளையைப் பார்க்கும் போதெல்லாம் அவன் அதிர்ஷ்டத்தை ராமகிருஷ்ணன் மெச்சாமல் இல்லை. பிள்ளைக்குப் பெண்ணை மிகவும் பிடித்துப் போயிற்று. முகூர்த்தம் வைக்க வேண்டியதுதான் பாக்கி. ராமன் அவர்கள் எதிர்பாராத விதமாக ஒரு நிபந்தனை விதித்தார். 'கல்யாணம் முடிந்தவுடன் மாப்பிள்ளை தம் வீட்டிலேயே இருக்கவேண்டும்' என்பது தான் அந்த நிபந்தனை. உஷா அவருக்கு ஒரே பெண் அல்லவா?

"ரொம்ப அழகாகத்தான் இருக்கிறது, இவர் சொல்கிறது!" என்று பிள்ளை வீட்டில் ஸ்திரீகள் பேசிக் கொண்டார்கள். "அதற்காகப் பிள்ளையை இவர் வீட்டோடு விட முடியுமா, என்ன?" என்று வேறு நிஷ்டூரமாகச் சொல்லிக்கொண்டார்கள்.

"உங்கள் சௌகர்யத்தை அனுசரிக்கும் பிள்ளைக்கே உங்கள் மகளை விவாகம் செய்து கொடுங்கள்" என்று சுருக்கமாகவே தன் அபிப்பிராயத்தைக் கூறி விட்டுப் போய் விட்டான் அந்தப் பிள்ளை.

உஷாவுக்கு வருத்தமோ சந்தோஷமோ இரண்டும் ஏற்படவில்லை. ராமகிருஷ்ணனின் மனம் மட்டும் காரணம் தெரியாமல் சந்தோஷம் அடைந்தது. வெகு உற்சாகத்துடன் காரில் அவர்களைக் கொண்டு போய்த் திரும்பவும் ரயிலடியில் விட்டு வந்தான். அவன் திரும்பி வருவதற்கு நேரம் பிடிக்கவே அன்று அவன் அவர்கள் வீட்டிலேயே சாப்பிட நேர்ந்தது.

"நீங்கள் சாப்பிட வரவில்லையே என்று வீட்டில் யாராவது காத்துக் கொண்டிருப்பார்களோ?" என்று கேட்டாள் உஷா.

"வீட்டிலா? அங்கே நான் ஒருத்தன் தான்" என்றான் ராமகிருஷ்ணன்.

"அப்படியா? சமைப்பது யார்?"

"நான்தான்; எனக்குப் பெற்றோர் இங்கே இல்லை."

"தினம் இவ்வளவு வேலைகளையும் செய்து விட்டு வீட்டுக்குப் போய்ச் சமைப்பது கஷ்டமாக இருக்குமே?" என்றாள் உஷா.

"இதெல்லாம் என்ன கஷ்டம்? பழக்கமாகி விட்டது."–சுருக்கமாகவே பதிலளித்தான் அவன்.

அடுத்த முறை வேறொரு இடத்திலிருந்து பெண் பார்க்க வந்தார்கள். இந்தத் தடவை ராமகிருஷ்ணனே டிபன் கொண்டு வந்து வைத்தான். சமையற்காரனுக்கு அன்று உடம்பு சரியில்லை. சமையலறைக்குள் வந்த உஷா திடுக்கிட்டு, "இந்த வேலைகளையெல்லாம் நீங்கள் ஏன் செய்ய வேண்டும்?" என்று கேட்டாள் சற்றுக் கடுமையாகவே.

"செய்தால் என்ன? பரஸ்பரம் அன்பினால் தானே உதவி செய்கிறேன்?" என்றான் அவன்.

உஷா கண்டிப்பு நிறைந்த குரலில், "செய்யக் கூடாது! தட்டுகளை அடுப்பங்கரையில் வைத்துவிட்டு உங்கள் வேலைகளைக் கவனியுங்கள்" என்றாள்.

உள்ளே வந்த லக்ஷ்மி மகளைப் பார்த்து, "ஏனடி அம்மா! அவர்கள் உன்னைப் பார்க்க வந்திருக்கிறார்களே. நீ இப்படித் தலையும் வேஷமுமாக நிற்கிறாயே!" என்று சலிப்புடன் கேட்டாள். வருகிற வரன்கள் ஒன்றாவது நிச்சயப்பட வில்லையே என்று அவளுக்கு உள்ளூர வருத்தம்.

"நான் எப்படி இருந்தாலும் அவர்கள் சம்மதிப்பார்கள். ஆனால், அப்பாவின் நிபந்தனையைக் கேட்டதும் தான் ஓடிப் போய் விடுவார்கள், அம்மா! இதற்காக அலங்காரம் வேறு வேண்டுமா, என்ன?"

அவன் சொன்னபடியே அந்த வரனும் குதிரவில்லை. உஷாவின் கல்யாணம் நின்று போனதில் ராமகிருஷ்ணனின் மனம் உற்சாகம் அடைந்தாலும், அதே சமயத்தில் ராமனின் மனப் போக்கை நினைத்து வேதனையும் அடைந்தது.

"இவ்வளவு உத்தமமான குணம் உடைய பெண்ணின் மனத்தை இந்த மனுஷர் ஏன் இப்படிப் பதைக்க வைக்கிறார்? இவரும் இவர் டாம்பீகமும்" என்று ராமன் பேரில் வெறுப்பு ஏற்பட்டது அவனுக்கு.

பிள்ளை வீட்டார் போன பிறகு அவனைத் தேடி வந்தாள் உஷா.

"உங்களுக்கும் அலுத்து விட்டது இல்லையா?" என்று கேட்டாள் அவள் ராமகிருஷ்ணனைப் பார்த்து. அவன் காரைக் கொண்டு போய் 'ஷெட்'டில் விட்டுக் கதவைப் பூட்டிக் கொண்டு வந்து உட்கார்ந்தான்.

"என்ன அலுத்துப் போய்விட்டது என்று கேட்டீர்கள்?" என்று கேட்டான் ராமகிருஷ்ணன்.

"இப்படி வருகிறவர்களை அழைத்து வருவது, கொண்டு போய் விடுவது, என்கிற வேலை அலுப்புத் தட்டித் தானே போகும்?"

ராமகிருஷ்ணன் வருத்தம் தோய்ந்த அவள் கண்களை ஊடுருவிப் பார்த்தான். பிறகு துணிவுடன், "உண்மையிலேயே இந்த ஏற்பாடுகள் எல்லாம் உங்களுக்குப் பிடிக்க வில்லையா?" என்று கேட்டான்.

"யார் அவ்விதம் சொன்னார்கள்? கல்யாணம் வேண்டாம் என்கிற கக்ஷியைச் சேர்ந்தவள் நான் இல்லை. பணத்தால் பொருள்களைத்தான் விலைக்கு வாங்க முடியும். மனிதனின் மனத்தையும் விலைக்கு வாங்கப் பார்க்கிறார், அப்பா."

"அப்படியென்றால் நானும் இங்கே பணத்துக்காகத்தான் வேலை செய்வதாக உங்கள் எண்ணமா?"—ராமகிருஷ்ணன் சிரித்துக் கொண்டே கேட்டான்.

அவன் கேள்வியின் அர்த்தத்தைப் புரிந்து கொள்ள முடியாமல் உஷா சிறிது நேரம் மௌனமாக உட்கார்ந்தாள்.



சௌ. மைதிலி—சிர. எஸ். ரமணி

மணமகன், ராவ்ஸாகிப் வி. சின்னஸ்வாமி அய்யர் அவர்களின் புத்திரர். மணமகள், சென்னை நகரசபையைச் சேர்ந்த ஸ்ரீ சிவராமகிருஷ்ணனின் புத்திரி. இத்திருமணம் சென்னையில் சிறப்பாக நடைபெற்றது.

---

ஆவலுடன் அவள் முகத்தைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்த ராமகிருஷ்ணன், "என்ன? ஏதோ யோசித்துக் கொண்டு பேசாமல் இருக்கிறீர்களே?" என்று கேட்டான்.

உஷா அவனைச் சந்தேகத்துடன் பார்த்து, "'பணத்துக்காகத்தானா நான் வேலை செய்கிறேன்' என்று கேட்கிறீர்களே? அப்படியானால், நீங்கள் பணத்துக்காக இங்கே வேலை செய்யவில்லையா? உங்கள் கேள்வியின் அர்த்தம் எனக்குப் புரியவில்லை" என்றாள்.

"நான் பணத்துக்காக இங்கே வேலை செய்வது உண்மைதான். ஆனால், இன்னும் சில விஷயங்களையும் அறிந்து கொள்ளத்தான் நான் இங்கே வந்திருக்கிறேன்" என்றான் ராமகிருஷ்ணன்.

உஷா ஒன்றும் தெரியாமல் விழித்தாள். பிறகு கலக்கத்துடன், "இன்னமும் புதிர் போட்டுப் பேசுகிறீர்களே. புரியும்படி விவரமாகத்தான் சொல்லுங்களேன்" என்றாள்.

ராமகிருஷ்ணன் புன்சிரிப்புடன் அவளைப் பார்த்து, "டில்லியில் உங்கள் அப்பாவின் நண்பர் கோபாலனை உங்களுக்குத் தெரிந்திருக்குமே! அவர் பிள்ளைதான் நான். படிப்பு முடிந்து விட்டது. அகஸ்மாத்தாக உங்கள் அப்பாவின் விளம்பரத்தைப் பார்த்தேன், வந்தேன். பொழுது போக்குக்

காக வேலையும் கிடைத்தது. இப்பொழுது, புரிந்ததா உங்களுக்கு, என் கேள்வியைப் பற்றி?" என்று கேட்டான்.

உஷா திடுக்கிட்டாள்.

"கோபால மாமாவின் பிள்ளையா நீங்கள்? எங்களுக்குத் தெரியவே தெரியாதே! நீங்கள் ஏன் இங்கு வேலைக்கு வர வேண்டும்?"

"உங்கள் தகப்பனார் என் அப்பாவைத் தம் பிள்ளைக்கு அவர் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளச் சொல்லிக் கேட்டிருந்தாரே, அது ஞாபகம் இருக்கிறதா உங்களுக்கு?" என்று கேட்டான் ராமகிருஷ்ணன். உஷா வெட்கத்துடன், "இருக்கிறது" என்றாள்.

"நான் வெறுமனே வேலை பார்க்க இங்கு வரவில்லை. நான் மணந்து கொள்ளப் போகும் பெண் எப்படிப்பட்டவள், அவளைச் சேர்ந்தவர்கள் எப்படி இருக்கிறார்கள் என்று பார்க்கவே வந்தேன். இப்பொழுது புரிகிறதா புதிர்?"

"அப்படியானால், நீங்கள் இது வரையில் என் அப்பா எனக்காகப் பார்த்து வந்த வரன்களை அழைத்து வருவதும் கொண்டு விடுவதுமாக ஏன் வேடிக்கை பார்க்க வேண்டும்? அப்பாவிடம் முதலிலேயே சொல்லி இருக்கலாமே?" — உஷா கோபத்தால் தான் இவ்விதம் கேட்டாள்.

"வேடிக்கை பார்த்ததால்தான் உன் தகப்பனாரின் மனோபாவம் எனக்கு நன்றாகப் புரிந்தது. அவர் உனக்காகப் பணக்கார மாப்பிள்ளையாகத் தேடும் போது நூறு ரூபாய் சம்பாதிக்கிற குமாஸ்தா வந்து பெண் கேட்டால் ஒப்புக் கொள்வாரா?"

"மறுபடியும் புதிர் போடுகிறீர்களே? ஒரு புதிரை விடுவித்தவுடன் இன்னொரு புதிர் போட்டால் யாருக்குப் புரிகிறது? கோபாலன் பிள்ளை என்கிறீர்கள். அவர் பணக்காரர் தானே? அதே சமயத்தில் ஏழைக் குமாஸ்தா என்கிறீர்கள். முன்னுக்குப் பின் முரணாக இருக்கிறதே இவையெல்லாம்?" என்று சற்று உரக்கவே கேட்டாள் உஷா.

"இதில் புதிர் ஒன்றும் இல்லையே. தகப்பனார் பணக்காரர்தான். ஆனால் நான் ஒரு பி. ஏ. பட்டதாரி. மாதம் நூறு ரூபாய் சம்பாதிக்கும் திறமை உடையவன். தகப்பனாரின் பணத்தை அளவு கோலாக வைத்து மகனின் யோக்யதையை அளக்க முடியுமா? அவருக்கு இஷ்டமில்லாமல் போனால் நாளைக்கு அவர் எனக்கு ஒரு சல்லிக் காசுகூடத் தராமல் இருக்கலாம் அல்லவா?"

உஷா கலீரென்று சிரித்து, "ரொம்ப நன்றாக இருக்கிறது, உங்கள் வாதம்!" என்று சிரித்துக் கொண்டே உள்ளே போய் விட்டாள்.

அதன் பிறகுதான் அவளுக்கும் அவள் தந்தைக்கும் ஆரம்பத்தில் கூறிய சம்பாஷணை நடந்தது. தமது குமாஸ்தாவை அவள் விவாகம் செய்து கொள்வதாகத் தம்மிடம் கூறிய போது ராமன் திடுக்கிட்டதில் வியப்பில்லை அல்லவா?

ராமன் சிந்தனையிலிருந்து விடுபட்டு அவர் தம் பெண்ணைத் தொடர்ந்து உள்ளே சென்றார்.

அங்கே உஷாவும், அவள் தாயும் கசமுசவென்று ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது ராமகிருஷ்ணன் அங்கே வந்தான்.

உஷா தன் தகப்பனாரைப் பார்த்து ராமகிருஷ்ணனை அவருக்குப் புதிதாக அறிமுகம் செய்து வைக்கும் தோரணையில், "இவர் யார் தெரியுமா? டில்லியில் இருக்கும் கோபால மாமாவின் பிள்ளை இவர்தான்" என்றாள்.

ராமன் ஒன்றும் புரியாமல் அந்த மூவரையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்து விட்டு, ராமகிருஷ்ணனைப் பார்த்து, "நீ கோபாலனின் பிள்ளையா? உன்னை நான் பார்த்ததில்லை. உஷா சொல்வது உண்மையா?" என்று கேட்டார்.

விவரம் பூராவும் அவன் சொல்லக் கேட்டதும், "நீ ரொம்பவும் கெட்டிக்காரன் அப்பா! எனக்கு ஏற்ற மாப்பிள்ளைதான்!" என்று அவனைப் பாராட்டினார்.

உஷா வெட்கத்துடன் அவனைப் பார்த்துவிட்டுத் தலை குனிந்து கொண்டாள்.

# வேட்கை நோகலை

ஸரோஜா ராமமூர்த்தி



நானும், ராஜியும் மயிலேயில் கபாலீசுவரர் கற்பகாம்பாளைத் தரிசனம் செய்துவிட்டுத் திரும்பிக் கொண்டிருந்தோம். பன்னிரண்டு ஏ—நம்பர் பஸ்ஸில் குளத்தங்கரையில் ஏறினவர்கள் அபிராமபுரம் தாண்டும் வரை பேசவில்லை. தெருவில் நிகழும் சம்பவங்கள், ஓடும் வாகனங்கள், வரிசை வரிசையாக நிற்கும் பெரிய பங்களாக்கள் எதுவுமே என் கவனத்தை ஈர்க்கவில்லை. இவைகளுக்கெல்லாம் மேலாகக் கற்பகாம்பிகையின் தெய்விக அருள் நோக்கின் நெகிழ்ச்சியில் என் உள்ளத்தில் ஏதோ ஒன்று நிரம்பி வழிந்து கொண்டிருந்தது. 'ஆனந்தமா, திருப்தியா?' எது என்று என்னால் விண்டு சொல்ல முடியவில்லை.

ராஜி திடீரென்று பேச ஆரம்பித்தாள்.

''ரொம்ப நேரம் ஆகிவிட்டது. மாம்பலத்தில் பாலு வீட்டில் போய்ச் சாப்பிட்டு விடுவோம்... என்ன?'' என்று கேட்டாள் என்னிடம்.

நெற்றியெங்கும் கவிந்திருந்த நரைத்த கூந்தலின் நடுவே பளிச்சென்று குங்குமம் துலங்கியது. வகிட்டில்கூடத்தான். ராஜி என்னைவிட ஐந்தாறு வயது மூத்தவள். வாழ்க்கையின் ஆரம்பத்தில் நானும், அவளும் அரிச்சுவடி பயில ஒன்றாக நடை பயின்றவர்கள். காலேஜ் கிலேஜ் என்று எங்கள் இருவரையுமே எங்கள் பெற்றோர் எட்டிப் பார்க்க விடவில்லை. ஆனால் ராஜி சரளமாக ஆங்கிலம் பேசுவாள். பழக்கம்தான் காரணம். பத்தாவது வரை படித்தவர்கள் நன்றாக ஆங்கிலம் பேச முடியும், பிழையின்றி எழுத முடியும் எ... இருந்த காலத்தைப் பற்றிச் [illegible]



இருவருக்கும் திருமணம் நடந்தது. அவள் தெற்கேயும், நான் வடக்கேயும் குடித்தனம் நடத்தப் போய் விட்டோம். இருவரும் நான்கைந்து ஆண்டுகள் வரையில் சந்திக்கவே யில்லை. இருந்தாலும், எங்கள் நட்பு மனத்தளவில் வளர்ந்து கொண்டு தான் இருந்தது. நான் அடுத்தடுத்து மூன்று குழந்தைகளுக்குத் தாயான அப்புறம் ஒரு தடவை ராஜியிடமிருந்து கடிதம் ஒன்று வந்தது. மகப் பேற்றுக்காகத் தான் தவம் இருப்பதாகவும், அந்தப் பாக்கியம் தனக்குக் கிட்டவில்லை என்றும் எழுதி யிருந்தாள்.

என்னிடம் 'வெகு காலமாக வைத்திருந்த பஞ்சலோகத்தாலான சந்தான கோபாலனை (விக்கிரகம்) அவளுக்கு அனுப்பி வைத்தேன்.

பிறகு ராஜி ஐந்தாறு குழந்தைகளுக்குத் தாயாகி விட்டாள். முதல் பிள்ளை தான் மாம்பலத்தில் புதிதாகத் தனிக்குடித்தனம் செய்கிறான் மனைவியுடன்.

**தா**ய்மை அடைந்திருக்கிறோம் என்கிற பெருமையில் திளைத்திருந்தாள் ராஜி. முதல் குழந்தை பிறந்தது. ஆண் குழந்தை. குழந்தை நன்றாகத்தான் இருந்தான். அவள் பிரசவித்த அன்று என் அம்மா ஆஸ்பத்திரிக்குப் போய்ப் பார்த்து விட்டு வந்தாள்.

''ராஜியின்குழந்தை எப்படி யிருக்கிறது?'' என்று விசாரித்தேன் நான். அப்பொழுது பிரசவத்துக்காகத்தான் ஊருக்கு நானும் வந்திருந்தேன்.

''என்னமோ இருக்கிறது. மேலெழுந்த வாரியாகப் பார்த்தால் ஒன்றும் தெரியவில்லை. உற்றுக் கவனித்தால் மாங்காய்த்தலை மாதிரி இருக்கிறதடி. குழந்தையின் பார்வையும் ஒன்றரைக் கண் மாதிரி இருக்கு..''

''எல்லாக் குழந்தைகளும் மூணு மாசம்வரை அப்படித்தான் பார்க்கிறதுகள். இந்த உலகத்தின் வாசனை ஏற்பட்டு விட்டால் பார்வையில் என்ன, பேச்சிலே, நடையுடை பாவனைகளில் கபடுசூது வந்து விடும்......'' என்றேன் நான்.

குழந்தைக்குத் தொட்டில் போட்ட அன்று நானும் போயிருந்தேன். அம்மா சொன்னது சரிதான். தலை கொஞ்சம் சிறியது. பார்வையும் ஒன்றரைதான். ராஜியின் பெருமைக்குள், பூரிப்புக்குள் அவை பிடிபடவில்லை. குழந்தையைப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்தாள் அவள். பெயர் சந்தான கோபாலன் என்று வைத்துவிட்டு, பாலா, பாலு என்று அவனை அழைக்க ஆரம்பித்தார்கள்.



பிறகு, நானும் அவளும் சந்திக்கவில்லை. என் கணவர் அந்த நாளிலேயே கொஞ்சம் முற்போக்கானவர். எனக்கு நான்காவது பிரசவம் ஆனவுடன் 'திட்டமிட்ட குடும்பம்' என்று இந்த நாளில் கொண்டு வந்திருக்கும் திட்டத்தை அந்த நாளிலேயே மேற்கொண்டு விட்டார். நானும் பிறந்தகம் போவதை நிறுத்திக் கொண்டேன்.

ராஜிக்கு அடுத்தடுத்து ஐந்தாறு பிறந்தனவாம்; அதுவும் சட்டும் சவலையுமாக. அவைகளை வைத்துக் கொண்டு அவள் ரொம்பவும் கஷ்டப்படுகிறாளாம். ''தவமிருந்து பெற்றாளே, அந்தப் பிள்ளைக்கு ஒரு சமர்த்தில்லை. சதா வாயில் 'ஜொள்ளு'

கொட்டுகிறது. 'அம்மா, பாத்தி, தாத்தா, வாந்தாம், வோணும்' இவைதான் அவனுடைய பேச்சுக்கள். 'பள்ளிக்கூடமே அனுப்பவில்லையடி. ராஜி எப்படியாகிவிட்டாள் தெரியுமா? தலையெல்லாம் குப்பென்று நரைத்துப் போய்ப் பார்க்கச் சகிக்கவில்லை'' என்றாள் அம்மா, கங்கையில் புடவையை அலசியபடி. நாங்கள் அப்போது வாரணாசியில் இருந்தோம். குபீரென்று கண்ணீர் சூடாகப் பெருகிக் கங்கையுடன் கலக்க நான் பேச்சற்று நின்றேன். தவமென்றால் சாதாரணமாக இல்லை. சர்க்கரை இல்லாமல் காப்பி குடிப்பாள். இனிப்பே சாப்பிடாமல் இருந்தாள். தரையை மெழுகிப் பின்னால் கைகளைக் கட்டிக் கொண்டு வாயால் சாதத்தைக் கௌவி எடுத்துச் சாப்பிடுவாள். எல்லாம் இந்த அழகான பிள்ளை பிறக்க வேண்டுமென்றுதானா?

அன்னபூர்ணேசுவரியின் கோயிலை வலம் வந்து கொண்டே என்னென்னவோ நினைத்துக் கொண்டேன். தேவியின் அருள் ஒழுகும் முகத்தைப் பார்த்தவுடன், அவள் ஏன் இப்படித் தன்னை நம்பிய பேதை ஒருத்தியைச் சோதித்து விட்டாள் என்பது புரியாமல் இல்லை. கடவுளின் தன்மை, அவன் செயல் யாருக்குப் புரிகிறது ?

''அப்புறம் பிறந்த குழந்தைகள் இதைப் போல இல்லை. சமர்த்தாகப் படிக்கின்றன. இருந்தாலும் மூத்தது இப்படியாகிவிட்டதே என்று மாய்ந்து போகிறாள். 'எப்படியாவது அவனும் ஒரு மனுஷன் ஆகிவிட வேண்டும். அவ்வளவுதான் மாமி' என்றாள் என்னிடம். 'கவலைப்படாதேடி. பகவானுடைய அநுக்கிரகத்தால் எல்லாம் நன்றாக இருப்பாள்' என்றேன்......' ''

அம்மா வீட்டுக்கு வரும் வழியில் பேசிக் கொண்டே வந்தாள்.

வாரணாசியில் எங்களுடன் இரண்டு மாதங்கள் தங்கிவிட்டுப் போனவள் அப்புறம் வரவில்லை. அவள் காலம் ஆகிவிட்டது. இந்த அவசர யுகத்தில் யாரைப் பற்றி நினைக்கப் பொழுதிருக்கிறது?

என்னுடைய குழந்தைகள் வளர்ந்தார்கள். அவர்களுடைய படிப்பு, கல்யாணம் என்று எங்களைப் பற்றியே கவலைப்பட்டுக் கொண்டோம். எங்கேயாவது ஓர் அசட்டுக் குழந்தையைப் பார்த்தால் ராஜியின் பிள்ளை பாலுவின் நினைவு வரும்.

'இப்படியும் அப்படியும் தலையைச் சாய்த்து வாயில் ஒழுகும் எச்சிலுடன் பேந்தப் பேந்த விழிக்கும் அந்தப் பிள்ளை. 'என்ன பரிதாபம் இது?' என்றுதான் மனத்துக்குள் குமைந்து போவேன்.

ராஜியின் பெண் கல்யாணத்துக்கென்று திருமணப் பத்திரிகை வந்தது. பெரிய பிள்ளையைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை. ''அசடு தான் ! அவள் தலையெழுத்து இப்படி ஒரு பிள்ளையைப் பெற்றாள்!'' என்று என் கணவர் கூறினார் அங்கலாய்ப்புடன்.

என்னதான் வடக்கே பல வருஷங்கள் வேலையாக இருந்தாலும் பென்ஷன் வாங்கிக் கொண்ட பிறகு ஊரோடு போய் இருப்போமே என்று தோன்றியது. கிராமத்திலே அம்மாவுக்குச் சொந்தமான மனையில் அவர் பாணியில் ஒரு சின்ன 'காட்டேஜ்' கட்டிக் கொண்டோம். வீட்டைச் சுற்றிச் செடி கொடிகள் போட்டார். ஏதேதோ விவசாயப் புத்தகங்களை வைத்துக் கொண்டு ஆராய்ந்து செடிகள் வளர்ப்பதில் அவர் பொழுது போய்க் கொண்டிருந்தது.

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் ராஜி கிராமத்துக்கு வந்தாள். நாங்கள் அந்த ஊரில் இருக்கிறோம் என்று கேள்விப்பட்டுத் தான் வந்தாளாம். அவள் பிறந்தகத்தில் யாரும் இல்லை. அவளுடைய தமையன்கூட வீட்டை விற்று விட்டான். பழைய தலைமுறையின் பாசத்தில் வளர்ந்து ஒளி கூட்டிய வீடு புதிய தலைமுறையினரால் ஒதுக்கப்பட்டுச் சிதிலமாகி இடியும் நிலைக்கு வந்து விடவே விற்கும்படியாயிற்று. யாரோ ஒரு கணக்குப் பிள்ளை வாங்கி ரிப்பேர் செய்து கோயிலுக்குத் தருமமாக எழுதி வைத்திருந்தார்.

நான் அந்தக் கிராமத்துக்கு வந்த மறு தினமே ராஜியின் வீட்டைப் போய்ப் பார்த்தேன். வாசலில் சாய்மானத் திண்ணைகள். அந்தத் திண்ணைகளில் நானும், அவளும், ஊர்ச் சிறுமிகளும் நிலாச் சோறு சின்னச் சின்னக் குடுவைகளில் சமைத்திருக்கிறோம். பொம்மைக் கல்யாணம் பண்ணியிருக்கிறோம். நான் பிள்ளை வீட்டைச் சேர்ந்தவள். சம்பந்திச் சண்டை, நலுங்கு, அது இது எல்லாம் உண்டு.

வாயைப் 'பம்'மென்று வைத்துக் கொண்டு நாயனம் ஊதுவாள் ராஜி. தலை வேகமாக ஆடும்...... அந்தத் திண்ணையை ஒட்டியிருந்த நிலைப்படியின் அருகே ஒரு சாஸனம் காணப்பட்டது. அதை வாங்கிய கணக்கர் தமக்குச் சந்ததியில்லாமையால் ஸ்ரீ ராமலிங்கேசுவரர் தேவஸ்தானத்துக்கு மான்யமாக அளித்து விட்டதாகவும், அதில் வரும் வாடகையைக் கொண்டு எண்ணெய் வாங்கித் திருவிளக்கேற்றும் திருப்பணியைக் கோயிலார் மேற்கொள்ள வேண்டும் என்றும் அறிவித்திருந்தார்.....

வீட்டில் குடியிருந்தவர்கள் நாலு மாத வாடகை பாக்கி. எனவே, ஸ்ரீ ராமலிங்கேசுவரர் அநேகமாக இருளில் மூழ்கியிருந்தார்.

பல வருஷங்களுக்கப்புறம் வந்திருக்கிறவளை 'எங்கே வந்தாய்' என்று கேட்க எனக்கு மனசு வரவில்லை. குடும்பத் தொல்லைகளிலிருந்து விடுபட ஒரு மாறுதலுக்காக வந்திருக்கலாம். வேறு ஏதாவது காரணம் இருக்கலாம். பெண்ணுக்குக் கல்யாணம் நிச்சயமாகியிருக்கும். பணமுடையாக இருக்கலாம். கடன் கேட்க வந்திருக்கலாம்.

இருவரும் சாப்பிட்டு விட்டு ஊஞ்சலில் உட்கார்ந்து வெற்றிலை போட்டுக் கொண்டிருந்தோம். ராஜி அரைக் கவுளி வெற்றிலையைக் காலி செய்து விட்டாள். சுண்டினால் ரத்தம் தெறித்து விடும் போல் நல்ல சிவப்பு அவள். ஒரு காலத்தில் உதடுகளும் செம்பவழம் போல் இருந்தன. இப்பொழுதும் அவள் அழகு குலையவில்லை. பாவம், அந்தக் கண்களில்தான் ஏக்கம். அதுதான் தெரிந்த விஷயமாயிற்றே!

இப்படியும் அப்படியும் தலையைச் சாய்த்து வாயில் ஒழுகும் எச்சிலுடன் பேந்தப்

பேந்த விழிக்கும் அந்தப் பிள்ளை! ராஜி எப்படி உற்சாகமாக இருக்க முடியும்?

வெற்றிலையைச் சுவைத்துக்கொண்டே ராஜி கேட்டாள்: ''எங்கே வந்தேன்னு நீ கேக்கவே இல்லையே ஸரோ!''

''கேக்கலேன்னு உனக்குக் குறையா இருக்கா ராஜி? நீ வந்திருப்பதே என் மனசு நெறஞ்சு இருக்கிறது... எத்தனையோ விஷயங்கள் மனசில் கிடந்து திணறுகிறது. பேசத்தான் தெரியலே. ஆனாலும், உனக்கும் குறை இருக்கப்படாது பார்..... எங்கே வந்தே ராஜி?'' என்று கேட்டு விட்டுச் சிரித்தேன் நான்.




''கிழவியாகியும் குறும்புத்தனம் போகலேயேடி உன்னைவிட்டு.....'' என்றவள், ''பாலுவுக்குப் பெண் பார்க்க வந்திருக்கேண்டி. மேலத் தெரு சுப்பண்ணு மாமா பேத்தியின் ஜாதகம் வந்தது..... பொருத்தமா இருந்தது. முதல்லே நான் வந்து பார்த்துட்டு வரேன்னு அவர்கிட்டே சொல்லிண்டு வந்திருக்கேன்...... வாயேன் நீயும்!''

''என்னது? பாலுவுக்குப் பெண் பார்க்க வந்திருக்கியா ?''

''ஆமாண்டி. அவனும் ஒரு மனுஷன் தானே? அசடா இருந்தாலும் ஆசாபாசங்களுக்கு உட்பட்டவன்தானே? பாலு சம்பாதிக்கிறுண்டி. எலக்டிரிக் ஒயரிங் பண்ணுறன். மாசம் நூறு, நூற்றி இருபது கிடைக்கிறது. பணம் சேர்த்து வைச்சிருக்கான்......''

''ஹூம்.....'' என்றேன் அலுப்புடன். அசட்டுப் பிள்ளைக்கு என்ன கல்யாணம் வேண்டியிருக்கிறது என்பது என் குரலிலிருந்து அவளுக்குப் புரிந்து விட்டது.

''பாலுவுக்கு அடுத்தவன் ஜக்கு. அவனுக்குக் கல்யாணமாகி மூன்று குழந்தைகள் இருக்கு. தியாகுவுக்கும் போன வருஷம் கல்யாணம் ஆச்சு. பார்வதம், காமு எல்லோரும் புக்ககம் போயாச்சு..... இவன் ஒருத்தன்தான் பாக்கி. நாங்க இவனுக்குக் கல்யாணம் பண்ணணும்னு இல்லே. அவனுத்தான் கேட்டான் என்னிடம்.''

நான் அவளையே வியப்புடன் பார்த்தேன்.

''தியாகுவுக்காகப் பெண் பார்த்து விட்டுப் புரசைவாக்கத்திலிருந்து வந்து கொண்டிருந்தோம். வீட்டை விட்டு எங்கு போவதானாலும் பாலுதான் வீட்டைப் பார்த்துக் கொள்வான். அன்று எல்லாவற்றையும் போட்டது போட்டபடி கிளம்பினோம். 'பாலு! வேலைக்காரி தாயி வருவாள். கொஞ்சம் பாத்திரங்களை ஒழித்துப் போட்டுத் தேய்த்து வாங்கி வை. பால்காரன் வந்தால் பாலை வாங்கி வை. முடிஞ்சா இன்னியோடே ரேஷன் கடைசித் தேதி. அதையும் சைக்கிளில் போய் வாங்கி வந்துவிடு........' என்று கூறிவிட்டுக் கிளம்பினேன். பாலுவின் முகத்திலிருந்து எனக்கு ஏதும் புரியவில்லை. கற்சிலைபோல் நின்று அமைதியாகக் கேட்டவன், முகத்தைத் திருப்பிக் கொண்டு உள்ளே போய் விட்டான். திரும்பும் போது வேலைக்காரி தாயி மட்டும் வீட்டில் இருந்தாள். வீடு திறந்து கிடந்தது. 'பாலு எங்கேயடி' என்று கேட்டால், 'அதை யேன் கேட்கறே போ. அந்தப் புள்ளையாண்டான்தான் உங்களுக்கு எல்லா வேலைக்கும் ஆளா அம்மா? தம்பி குடும்பம், தங்கச்சிங்க குடும்பம்னு எல்லாருக்கும் மூட்டை சுமக்க என்னாலே முடியாது தாயி. நானும் ஒரு மனுசன்னு அப்பாவுக்குத் தெரியலே. அம்மாவுக்குத் தெரிய வேணும்?...... நான் சம்பாதிக்கலையா? கல்யாணம் கட்டினால் குடும்பம் நடத்த மாட்டேனு' என்று கத்திப்பிட்டு வெளியே போயிடுச்சி......'' என்றாள் தாயி.

இதயத்தின் ஆழத்தில் பாலு ஓர் அசடு என்று ஏற்பட்டிருந்த புண்ணை — பொருக்கேறிப் போயிருந்த புண்ணை — யாரோ கிளறி விட்டாற்போல் துடித்தேன். ஜக்குவின் மனைவியிடம் பாராமுகமாக வெடுவெடு என்று பாலு விழுந்தானே..... வீட்டுக்கு வரும் மாப்பிள்ளைகளிடம் முகம் கொடுத்துப் பேசாமல் இருந்தானே. அதற்கெல்லாம் பொருள் விளங்கிற்று.

இரவு வெகு நேரம் கழித்துப் பாலு வந்தான். அதற்கும் முன்பாக அவரிடம் அவன் மனத்தைப் பற்றிச் சொன்னேன். 'சுத்தப் பைத்தியமாக இருக்கியே! வாயிலே ஒழுகுகிற எச்சிலை முழுங்கத் தெரியலே. எவளடீ இவனுக்குக் கழுத்தை நீட்டுவாள் இந்தக் காலத்தில்!' என்று கூறிவிட்டுப் படுக்கப் போய் விட்டார்.

பிறகு தியாகுவின் கல்யாணம் நிச்சயமாயிற்று. தஞ்சாவூரில் கல்யாணம். பாலு வீட்டுக்கே வரவில்லை. அவன் வேலை செய்யும் கண்டிராக்டரிடம் சென்று விசாரித்தோம்.

இருநூறு ரூபாய் அட்வான்ஸ் வாங்கிக் கொண்டு பழநி, மதுரை, திருச்செந்தூர் என்று க்ஷேத்ராடனம் போயிருப்பதாகச் சொன்னார். 'வீட்டில் சொல்லவில்லையா? அட கஷ்டமே! பொறுப்பு வரணும்னு அந்தப் பையனுக்கு ஒரு கால் கட்டுக் கட்டிப் போடுங்க' என்றார் அவர்.

வீட்டில் கல்யாணம். முதல் பிள்ளை வீட்டை விட்டுப் போய் விட்டான். எனக்கும் அவருக்கும் அது ஒரு கல்யாணம் மாதிரியே இல்லை. தியாகுவும் பிரமை பிடித்த மாதிரி இருந்தான். பங்காரு காமாக்ஷியிடம் வேண்டினேன். 'தாயே! இப்படி என்னைச் சோதிக்கிறாயே?' என்று....... கல்யாணம் முடிந்து திரும்பவும் நாங்கள் சென்னை வரத் தஞ்சை ரயிலடியில் உட்கார்ந்திருந்த போது திடும் என்று பாலு வந்தான். மடமடவென்று திருக் கோயில்களின் பிரசாதங்களை வழங்கினான்.

'என்ன அண்ணா இப்படி?' என்று ஆரம்பித்த தியாகுவை, ''சரித்தாண்டா! இதோ பிரசாதங்களுடன் வந்திருக்கிறேனே.....'' என்று மடக்கி விட்டான்.

சென்னை செல்லும் வண்டியில் நாங்கள் சற்றும் எதிர்பாராத விதமாக நம் ஊர் மேலத் தெரு சுப்பண்ணா மாமாவும், அவர் பெண்ணும் மாயவரத்தில் ஏறினார்கள். பரஸ்பரம் யோக க்ஷேம விசாரணைகள் முடிந்த பிறகு பாலு கல்யாணமாகாமல் இருப்பதைப் புரிந்து கொண்டார் அவர்.

பெண் அப்படி ஒன்றும் அழகில்லை. ரொம்பச் சாதாரணம். எட்டாவது படித்திருக்கிறதாம். ஊருக்குப் போய் ஜாதகம் அனுப்பினார். ஜாதகம் பொருந்திடுத்து. பெண்ணை ரயிலில் பார்த்தாலும், முறைப்படி வீட்டில் பார்க்க வந்திருக்கேன்...... கிளம்புடி ராகுகாலத்துக்கு முந்திப் போய்ப் பார்த்துவிட்டு வரலாம்.''

யந்திரம்போல் ஏதோ நினைவுடன் அந்தத் திருமணத்தின் அவசியத்தையும், அது நிகழ வேண்டும் என்பது ஒரு நிர்ப்பந்தமாக அமைந்திருப்பதையும் நினைத்துப் பார்த்தேன். எச்சிலைக் கூட்டி விழுங்கத் தெரியாத அந்தப் பிள்ளையையும் கற்பனையில் நினைத்துப் பார்த்தேன். எதுவுமே நம் செயலில் இல்லாத போது வீணாக மன உளைச்சலுக்கு ஆளாக விரும்பாமல் பெண்ணைப் பார்க்கச் சென்றோம். பெண் பிடித்து விட்டது. அதற்கென்று ஒரு மனம் இருப்பதாகவே என்னால் ஊகிக்க முடியவில்லை.

''இதோ பாரு குழந்தை! என் பிள்ளை கொஞ்சம் அசடு. முன்னே பின்னே இருந்தாலும் என்னைப் போல நீ சமாளிச்சுண்டு போகணும். அப்புறம் கண்ணைக் கசக்கக் கூடாது. ஆமாம்...'' என்று ராஜி பட்டவர்த்தனமாகப் பேசினாள். அவள் அப்படிப் பேசியது எனக்குப் பிடித்திருந்தது. அந்தப் பெண் தலையைக் குனிந்து கொண்டு மெதுவாக, ''அசடுங்கறது என்னன்னு எனக்குத் தெரிஞ்சாத்தானே? நாம எல்லோருமே ஒவ்வொரு விதத்திலே அசடுகள்தான். அவர் கூடக் கொஞ்சம் அசடாக இருப்பாராக்கும்'' என்றது. எனக்கு அந்தப் பதில் அவள் மனத்தின் ஆழத்தை உணர்த்தி விட்டது.

அடுத்த இருபத்திரண்டாம் நாள் பாலு, சுந்தரி திருமணம் நடந்தே விட்டது. எனக்கென்று ராஜி பிரத்தியேகமாகக் கல்யாண பக்ஷணங்கள் அதிகமாகவே கட்டிக் கொடுத்தாள். நான் அவளுடன் வந்த வேளை தானோம். ஏதேதோ சொன்னாள். பிறகு நாலு வருஷங்கள் அவர்களைப் பற்றியே ஒன்றும் புரியவில்லை.

ஃ ஃ ஃ

திடும் என்று அன்று காலை ராஜி பெட்டி படுக்கையுடன் என்னை எதிர்பார்த்திருக்க மாட்டாள். சென்னையில் நடந்த ஒரு கல்யாணத்துக்கு வந்த நான் அப்படியே ராஜியின் வீட்டுக்கு வந்திருந்தேன். இருவருமாகப் புறப்பட்டுப் பாலுவின் வீட்டுக்குப் போனோம்.

மாம்பலத்தில் பாலுவின் வீட்டை அடையும்போது பகல் இரண்டு மணிக்கு மேலாகி விட்டது. மாமியாரைக் கண்டதும் சுந்தரி பரபரப்படைந்து போனாள். என்னையும் அடையாளம் புரிந்து கொண்டாள். அவர்கள் வீட்டு முன்புறம் மின்சாரச் சாமான்கள் அடங்கிய கடை ஒன்று இருந்தது. மேஜை அருகில் பாலு உட்கார்ந்திருந்தான். ''பாலுதானே இது?'' என்கிற கேள்வி என்னை அறியாமல் சற்று உரக்கவே வந்தது.

''ஆமாம் மாமி! சௌக்கியந்தானே? உள்ளே வாங்கோ...'' என்றபடி மேஜை டிராயரை இழுத்துப் பூட்டிக் கொண்டு கிளம்பினான் அவன். சதா எச்சிலை வழிய விட்டுக் கொண்டிருந்த அந்த உதடுகளில் ஓர் அழுத்தம், முகத்தில் பிரகாசம் எல்லாமே வந்துவிட்டிருந்தன.

''இது யாரென்று தெரிகிறதா சுந்தரி?'' என்று தன் மனைவியிடம் என்னைக் காண்பித்து விசாரித்தான்.

''உக்கும்... எனக்கு எல்லாம் தெரியும். என்னைப் பெண் பார்க்க வரலையா?''

''மறந்துட்டியோன்னு பார்த்தேன்... ஏன் மாமி! நான் இப்போ தனியா 'பிஸினஸ்' பண்றேன். முதலீடு எல்லாம் இவள் மஞ்சள் காணிலேந்துதான். இப்படி மாசம் முந்நூறு ரூபாய் தேறும்... அம்மாவும் அப்பாவும் தனியா பல்லாவரத்துலே இருக்கா. வேண்டாம்மா எங்களோடே வந்துடுன்னு சொன்னாக் கேக்கலை. அவாளுக்குத் தனிக் குடித்தனத்து மேலே ஆசை...'' என்று தாயை நையாண்டி செய்தான் பாலு.

பாங்கும், பதவிசுமான அந்தக் குடும்பத்தின் அழகிலே நான் என்னை மறந்து லயித்திருந்தேன்.

''பூஜை அறை, கூடம், வரவா போறவா உட்கார்ற இடம்...'' என்று பாலு ஏதேதோ பேசிக் கொண்டிருந்தான்.

அந்தப் பெண் இன்னும் பதவிசாகத் தன்னால் ஒரு பெரிய விஷயம் சாதிக்கப்பட்டிருப்பதை மறந்து அடக்கவொடுக்கமாக உட்கார்ந்திருந்தாள்.

'இப்படி அவசரமா வந்துட்டுப் போறியளே! பாயசத்தோடு உங்களுக்குச் சாப்பாடு போடணுமே...' என்று பாலுத் தம்பதியினர் என்னைப் பார்த்துக் கூறினர்.

இலட்சிய, இலட்சணத்துடன் கூடிய ஓர் உயர்தரமான இல்லறத்தை விடவா பாயசம் இனிக்கப் போகிறது? ராஜியும் நானும் அதற்கப்புறம் பேசவில்லை.

# அம்மன் கோவில்

ஐப்பசி மாதத்து அடை மழையில் நானும், என் தோழி யோமனாவும் ஒரு சிறு கிராமத்தில் அகப்பட்டுக் கொண்டோம். காலேஜ் ஹாஸ்டலிலேயே அடைபட்டுக் கிடந்த எங்களுக்குக் காலாற ஊர் சுற்றி விட்டு வரவேண்டும் என்று ஆசையாக இருந்தது. தீபாவளி விடுமுறைக்கு ஹாஸ்டல் மாணவிகளில் அநேகர் ஊருக்குப் போயிருந்தார்கள். முதல் நாள் நாங்கள் இருவரும் போட்டிருந்த திட்டத்தின்படி ஹாஸ்டல் தலைவியிடம் அனுமதி பெற்றுக் கொண்டு அதிகாலையில்—சூரிய உதயத்துக்கு முன்—ஹாஸ்டலுக்கு இரண்டு மைல் தொலைவில் இருந்த சமுத்திரக் கரையை நோக்கிப் புறப்பட்டோம். முதல் இரண்டு நாட்களாகப் பெய்த மழையின் காரணமாக ஒவ்வொரு பள்ளத்திலும் ஜலம் நிறைந்து, பசேல் என்று, எங்கு பார்த்தாலும் இயற்கையின் மலர்ச்சி எங்களைச் சந்தோஷத்தில் ஆழ்த்தியது. வருஷத்தில் பத்து மாதங்களில் மழையின்மையால் துவண்டு கிடந்த செடி கொடிகள் இளங்காற்றில் ஆடி அசைந்து களைத்துக் கொண்டிருந்தன.

'யோமனாவின் தோளில் காமிரா தொங்கிக் கொண்டிருந்தது. எதைக் கண்டாலும் அந்தச் சிறு கருவிக்குள் அதைப் பிடித்து விடவேண்டும் என்று ஒரே தீர்மானத்துடன் இரண்டு சுருள் பிலிம் பையில் திணித்துக் கொண்டு வந்திருந்தாள் அவள். எந்தக் காட்சியையும், கற்பனையுடன் கலந்து ஒரு கதை எழுதிவிட வேண்டும் என்று நான் சிந்தனையில் மூழ்கியிருந்தேன். ஆகவே, வெட்டிப் பேச்சுக்கிடமில்லாமல் நாங்கள் மௌனமாக நடந்தோம்,

கடற்கரையை அடைந்து பகலெல் [illegible] கடலில் செல்லும் படகுகளையும், [illegible] டிக்கும் சிறுவர்களையும், [illegible] விளையாடும் [illegible] யோமனா ஓயாமல் படம் எடுத்தாள். என் கற்பனைக்குத் தூண்டுகோலாக ஒன்றும் அமையவில்லை. மனம் வெறிச் சென்று கிடந்தது.

ஓய்வு நாளை வியர்த்தமாகக் கழித்து விட்டோமே என்று நான் வருந்திக் கொண்டிருக்கையில், இயற்கைக்கு ஆவேசம் வந்தது போல் எங்கிருந்தோ பெருங்காற்று ஒன்று சூறாவளியைப் போல் கிளம்பி வந்தது. 'உஸ்' என்று படமெடுத்த நாகம் சீறுவதுபோல் கிளம்பிய அக்காற்று வானத்தில் நாலாப்புறமும் சிதறிக் கிடந்த மேகங்களை ஒன்று சேர்த்து விட்டு எங்கோ சென்று மறைந்தது. எங்கும் காரிருள் சூழ பளீரென்று கண்ணைப் பறிக்கும் மின்னலுடன் மழை ஆரம்பித்தது. இதுவரையில் படம் எடுப்பதில் மூழ்கியிருந்த யோமனா மிகுந்த கவலையுடன் என்னையும், கைக் கடியாரத்தையும் கவனித்தாள். மணி நாலுதான் ஆகியிருந்தது.

அந்தப் பெரு மழையில் சிறிதுகூட இடையில்லாமல் சொட்டச் சொட்ட நனைந்து கொண்டே நாங்கள் அருகில் இருந்த ஊரை நோக்கி வேகமாக நடக்க ஆரம்பித்தோம். அந்தக் கிராமத்தைக் காக்கவும், எங்களைப்போல் மழையில் அகப்பட்டுக் கொள்பவர்களுக்கு அடைக்கலம் அளிக்கவும் ஒரு காளி அம்மன் கோவில் தென்பட்டது. அந்தக் கோவில் புராதனமானது. ஆனால் புதிதாகப் பழுதுபார்த்துக் கொண்டிருந்தார்கள். ஐப்பசி மாதமாதலால் மழைக்காகச் சாரம் கட்டிக் கொண்டு அநேகர் வேலை செய்து கொண்டிருந்தார்கள். அவர்களுக்குத் தலைவனாக ஒருவன் உட்கார்ந்து கொண்டு அவர்களுக்கு யோசனை சொல்லி வந்தான். தலைவனாக இருந்த அவனுக்கு வயது முப்பதுகூட இருக்காது. இருந்தாலும், அந்தக் கோவிலைப் [illegible] ஒரு சிலா [illegible] அவன் தலை முறையாக அறிந்தவன் போல் இருந்தது.

அவன் எங்களை மிகுந்த மரியாதையுடன் வரவேற்றான். "நல்ல மழையில் அகப்பட்டுக் கொண்டீர்களே அம்மா" என்றும் வருந்தினான். அப்பொழுது மழை அநேகமாக நின்றிருந்தது. இருந்தாலும், முழுதும் நனைந்திருந்த எங்களால் மேலும் நனைந்து கொண்டு போக முடியாமல் போய் விட்டது. ஆயாச மிகுதியால் நாங்கள் இருவரும் அங்கிருந்த கல் ஒன்றின் மேல் உட்கார்ந்தோம். கோவிலின் பழய வரலாற்றை அறிந்த பழனியும் அவன் கதையை ஆரம்பித்தான்.

● ● ●

பழனி தொண்டையைக் கனைத்துக் கொண்டு தன் முன்னோர்களின் பூர்வ வரலாற்றை ஆரம்பித்தான். என் தாத்தா பழனி ஆசாரியால் செய்யப்பட்ட இந்தச் சிலைக்கு வயது எண்பது வயது ஆயிற்று. ஆனால், மனுஷர்களுக்குத்தான் இளமை, முதுமை, சாவு எல்லாம்; சிரஞ்சீவியான இச் சிலைக்கு ஒன்றும் கிடையாது. பழனி ஆசாரி இந்தப் பிரசித்தியைத்திலே இருந்த கல் தச்சர்களில்—சிற்பிகளில்—பெயர் போனவர். முருக பக்தர். முருகனைத் தவிர வேறு எந்த தெய்வத்தினிடமும் நம்பிக்கை இல்லாத அதி தீவிர பக்தர். முருகனுடைய சிலையைத் தவிர வேறெதையும் அவர் உளி செதுக்கியதில்லை. அநேக ஊர்களில் [illegible] இலவிக்கமாகவ [illegible] சொல்லி வந்த அழைப்பை எல்லாம் அவர் இரமாக்து நிராகரித்தார். இந்த ஊரில் இந்தச் சிலை இருக்கும் இடத்தில் ஒரு சிறிய கல், —கண், காது, மூக்கு ஒன்றும் அடையாளம் தெரியாமல் வெகு காலமாக இருந்து வந்தது. அதிலே எங்கும் வியாபித்து விளங்கும் அன்னை சக்தி இருப்பதாக ஜனங்கள் துதித்து வந்தார்கள். அதற்குக் கூரை வேய்ந்த சிறிய கோவில் ஒன்றை அமைத்தார்கள். அதற்குத் தலைமை வகித்த கிராமத்துப் பெரியதனக்காரன் பொன்னம்பலம் செலவு முதலியவைகளைக் கவனித்து வந்தான். நாளடைவில் அவன் அந்தக் கோவிலுக்குத் தர்மகர்த்தாவானான். அவனுக்கு ஒரு மகள் இருந்தாள். சேற்றில் செந்தாமரை முளைத்தமாதிரி நத்தை வயிற்றில் முத்துப் பிறந்தது போல செங்கமலம் விளங்கினாள். அழகும், அறிவும், அன்பும், பக்தியும் அவளிடத்தில் இருந்தன. செங்கமலம் சிரித்தால் போதும், பேசினால் போதும், நிமிர்ந்து பார்த்தால் போதும் என்று இந்த ஊர் வாலிபர்கள் ஆசைப்பட்டார்கள். அவர்களில் பழனி ஆசாரியும் ஒருவன். அவன் சிரிப்பை மட்டும், பேச்சை மட்டும், பார்வையை மட்டும் அவன் அடைய ஆசைப்படவில்லை. அவளையே அடைந்துவிட ஆசைப்பட்டான்.

ஒரு வருஷம் ஆடி மாசத்தில் ஊரில் கலிச்சண்டை வலுத்தது. பொன்னம்பலம் பெரியதனக்காரனாக வாழ்வது சிலருக்குப் பிடிக்கவில்லை. அவன் வயலை ஆட்டையும், மாட்டையும் விட்டு மேய வைத்தார்கள். அவனுடைய தென்னந்தோப்பில் காய்களை சூறையாடினார்கள். கடைசியாக 'ஒரு நாள் காலையில் அவனும், செங்கமலமும் பயபக்தியுடன் பூஜித்து வந்த அம்மன் விக்ரகம்—அந்தக்கல்—மாயமாக மறைந்து விட்டது. செங்கமலம் கண்களில் நீர் பெருக நின்றுகொண்டிருந்தாள். பொன்னம்பலம் இடி விழுந்தவன் போல் உட்கார்ந்திருந்தான். கோவிலாக இருந்த இடம் வெறும் வெட்ட வெளிச்சமாயிற்று. செங்கமலத்தின் முகமும் களை இழந்து வாடியது.

அந்தக் காலத்திலேயிருந்து நாளது வரைக்கும் அந்த ஊரில் ஒரு வழக்கம் உண்டு. ஊரில் கல்யாணம் நிச்சயம் செய்வதற்கு முன் இந்த அம்மனிடம் பூ வைத்துப் பார்ப்பார்கள். அவள் உத்தரவு கொடுத்தால்தான் கல்யாணம் நிச்சயம் செய்வார்கள். இல்லாவிட்டால் இல்லை. இனிமேல்—அதாவது அம்மன் காணாமல் போனபிறகு ஊரில் இருக்கும் அத்தனை பெண்களும் கன்னிகைகளாகவா இருப்பது? அவர்கள் இருந்தார்களோ இல்லையோ, செங்கமலம் இருக்கவேண்டியதுதான் என்று பொன்னம்பலம் தீர்மானித்தான். அம்மனைத் தேட ஒவ்வொரு ஊருக்கும் ஆள் சென்று வெறுங்கையுடன் திரும்பி வந்தார்கள். பொன்னம்பலமும் நிராசை அடைந்தான்.

● ● ●

பழனி ஆசாரி செங்கமலத்தை அடைந்துவிடவேண்டும் என்று ஆசை பட்டது போல் செங்கமலமும் பழனியை அடைந்துவிடவேண்டும் என்று ஆசைப்பட்டாள். ஆனால், அம்மனுடைய உத்தரவு இல்லாமல் பொன்னம்பலம் கல்யாணத்தை நடத்தமாட்டான் [illegible] கையைக்குலைத்தது. பொன்னுக்கும், பொருளுக்கும் அவன் ஆசைப்படமாட்டான். அவன் உளி முருகன் சிலையைத் தவிர வேறு எதையும் செதுக்கியதில்லை. ஆயினும், சின்னஞ் சிறு வயதிலிருந்து செங்கமலம் வழிபட்டு வந்த தேவி பழனியின் மனதை மாற்றமாட்டாளா? தனக்கென்று அவன் கையால் ஒரு சிலையை வடிக்க அவன் மனதை மாற்றிவிடுவாள் என்று செங்கமலம் நம்பினாள். பழைய விக்ரகம் இருந்த இடத்தில் ஒரு நாள் அதிகாலையில் சென்று பூவும், பழமும் வைத்துப் பூஜித்தாள். "அம்மா, தாயே! என் ஆசையை நிறைவேற்று" என்று வேண்டிக் கொண்டாள்.

அன்று பழனியின் மனமும் ஏக்கமடைந்திருந்தது. இப்படியே எத்தனை காலம் இருப்பது? காணாமல் போன அம்மன் வந்தால்தான் கல்யாணம் நடக்கும், நாமாகவே ஏன் ஒரு சிலை செய்துவிடக்கூடாது?" என்று அவன் மனம் தீவிரமாக யோசித்தது. பழனியும், செங்கமலமும் வழக்கம்போல் குளத்தங்கரை தோப்பில் சந்தித்தார்கள். "ஆமாம், உங்கப்பனைக் கேட்டாயா?" என்று பழனி செங்கமலத்தைக் கேட்டான்.

"என்னத்தைக் கேட்க?" என்று அவள் பதிலுக்குக் கேட்டாள். அவள் குரலில் கோபமும் சோகமும் சேர்ந்து ஒலித்தது.

"நல்ல பைத்தியக்கார மனுசன்! ஒரு விக்ரகம் காணும் போச்சாம். அதுக்காகப் பெண்ணை கன்னியாகவே இருத்தியிருக்காராம்!" என்று கேலி செய்தான் பழனி.

"நீயும் பைத்தியம்தான்!" என்று முகத்தில் அடித்ததுபோல் கூறினாள் அவள்.

"ஏன்?" என்றான் பழனி.

"சாமி என்றால் எல்லாம் சாமிதான். நீதான் முருகனைத் தவிர வேறு எந்தச் சிலையையும் செய்வது இல்லையே! அதென்ன அப்படி!"

அவள் கண்களில் நீர் நிறைந்தது. பழனி மனமாறுதல் அடைந்தான்.

"சரிதான்! அதுக்காக அழாதே. நான் அம்மன் சிலை செய்துடறேன். நீ அவகிட்டே உத்தரவு வாங்கிடு" என்று சிரித்துக்கொண்டே கூறினான்.

செங்கமலத்தின் முகத்தில் புன்முறுவல் படர்ந்தது.

● ● ●

பழனி செய்த சிலை அபாரமாக இருந்தது. அசப்பில் பார்த்தால் அது செங்கமலம் மாதிரியே இருந்தது என்று சொல்லிவிடலாம். பொன்னம்பலம் சிலையைப் பார்த்து வியந்தான். பழனியே மனமாறுதல் அடைந்து சிலை செய்வதென்றால் அது அம்மனின் சக்தியாகத்தான் இருக்கும். இதைப் போலவே செங்கமலத்தின் [illegible]

அன்று கும்பாபிஷேகம். நாளை செங்கமலத்தைப் பழனிக்கு [illegible] த் கல்யாணம் செய்யப் பூ [illegible] சகுனம் பார்க்கவும் ஏற்பா[illegible] ந்து. காலையிலிருந்து [illegible] பயபக்தியுடன் உபவாசமிருந்[illegible] லை அடைந்தாள். பழனியு[illegible] நிக்குறி முகத்தில் [illegible] கோவிலை அடைந்தான். [illegible] கள் அடிக்கடி செங்கமல[illegible] களைச் சந்திக்க விரும்பின[illegible]. அவள் அவனை ஏறிட்டுக்கூடப் பார்க்கவில்லை. அவள் [illegible] பூர்த்தியடையும் வரையில் யாரையும் பார்க்க விரும்பவில்லை. அபிஷேகம், ஆராதனை ஆயிற்று. செப்பு புஷ்பம் [illegible] வெள்ளை புஷ்ப [illegible] வைத்துக் கட்டி [illegible] கள். கண கணவென்று மணி ஒலித்தது. பூசாரி கற்பூரம் கொளுத்திக் காட்டிவிட்டுப் பயபக்தியுடன் ஒரு குழந்தையைவிட்டு ஒரு பொட்டலத்தை எடுக்கச் சொன்னான். செங்கமலம் ஆவலுடன் குழந்தையின் கையிலுள்ள பொட்டலத்தை நோக்கினாள். பொன்னம்பலம் அதை வாங்கிப் பிரித்தான். அவன் கைகள் நடுங்கின. "அம்மாடி! அவள் உத்தரவு கொடுக்கவில்லை!" என்று கத்தினான். பொட்டலத்திலிருந்து [illegible] வெள்ளை புஷ்பம் கீழே விழுந்தது. எல்லோரும் அயர்ந்து நின்றுவிட்டார்கள்.

செங்கமலம் கண்ணீர் வழிய அந்த இடத்தைவிட்டுப் போனாள். அதன் பிறகு செங்கமலத்துக்கு வேறு எங்கேயோ கல்யாணம் நடந்தது. என் தாத்தாவும் வேறு பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கொண்டார்.

நேற்றும், இன்று[illegible] அம்மன் [illegible] இந்த ஊரில் கல்யாணம் நடக்கிறது 'அம்மா" என்று பழனி கதையை முடித்தான்.

"அவள் உத்தரவு கொடுக்காவிட்டால் எவ்வளவு உயர்வான இடமானாலும் விட்டுவிடுவீர்களா?" என்று கேட்டேன் நான்.

அதற்கு அங்கிருந்த கிழவர் ஒருவர்—பழனியின் தாத்தா காலத்து மனுஷர்—கூறினார்: "செங்கமலத்துக்கும் பழனிக்குந்தான் இவள் உத்தரவு கொடுக்கவில்லை அம்மா. அதன் பிறகு எனக்குத் தெரிந்த எல்லா கல்யாணங்களும் நடந்திருக்கிறது என்றார்.

தெய்வ சித்தத்தை நம்மால் அறியும் திறன் உண்டா என்று நினைத்துக் கொண்டே நானும், என் சிநேகிதியும் ஹாஸ்டலை அடைந்தோம்.

*ரோஜா ராமமூர்த்தி

# யாரோ ஒருவன்

சரோஜா ராமமூர்த்தி



நீல மலைத் தொடர்கள். அதிலே தழைத்திருக்கும் தருக்கள். அவைகளில் மலர்ந்திருக்கும் வண்ண மலர்கள். பாலெனப் பொழியும் நிலவிலே வழிந்தோடும் அருவி. அருவியிலிருந்து தண்ணீர் எடுத்துக்கொண்டு, வன போஜனம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த இடத்துக்கு அன்ன நடை போட்டுச் சென்றுகொண்டிருந்தாள், பாமா. காற்றிலே அலை மோதும் கூந்தல் கற்றைகளை ரிப்பனால் கட்டி வண்ண மலர்ச் சரத்தை அதன்மீது வளைவாகச் சூட்டிக்கொண்டிருந்தாள். உடம்போடு ஒட்டினாற்போல 'கிரேப்' புடவை. அதன் நிறம் பால் நிலவில் குளித்தெழும் அருவியின் நிறத்தைப் போலவே இருந்தது. அவளது பெரிய கரு விழிகள் சுழன்று அங்கும் இங்கும் பார்த்தன. யாரைத் தேடுகிறாள் அந்தப் பெண்?



கொஞ்சம் தொலைவிலே கொன்றை மரத்தடியில் சாய்ந்து நின்றுகொண்டிருந்த சங்கரனுக்கு, அவளுடைய எழில் போதையை ஊட்டியது. அப்படியே ஓடிச்சென்று அவளுடன் ஆயிரம் பேச்சுக்கள் பேச வேண்டும் என்று ஆசைப்பட்டான். ஆனால், சங்கரனுக்கு மன அடக்கம் அதிகம். விரைவில் வெளியில் எதையும் காட்டிக்கொள்ள மாட்டான்.

முசாபிர் பங்களாவில் பேச்சுக் குரல் பலமாகக் கேட்டது. 'சங்கரன் எங்கே? சாப்பிடும் நேரமாயிற்றே! அந்தப் பெண் பாமாவையும் காணோம்' என்று கூறிவிட்டு, ஜம்புலிங்கம் ஒரு மாதிரியாகச் சிரித்துக்கொண்டார்.

'எங்கே போனாளோ? தண்ணீர் கொண்டுவர ஆள் இல்லையா என்ன? நான்தான் எடுத்து வருவேன் என்று குடத்தைத் தூக்கிக்கொண்டு கிளம்பிப் போயிருக்கிறாள்' என்று சலிப்புடன் கூறினாள் அம்புஜம்.

'தண்ணீர் கொண்டு வந்தாச்சு அம்மா' என்று சொல்லிக்கொண்டே, பாமா உள்ளே வந்தாள்.

'நானும் வந்தாச்சு' என்று கூறிக்கொண்டே சங்கரன், மாமா ஜம்புலிங்கம் எதிரில் வந்து நின்றான்.

'இருவரும் வந்தாயிற்றே இல்லையோ, இனிமேல் நான் சாப்பிட வேண்டியதுதான்' என்று குமார் சொல்லிக்கொண்டே எழுந்தான்.

குளிர்ந்த நிலவிலே வன போஜனம் அமர்க்களமாக நடந்துகொண்டிருந்தது. பாலில் வேக வைத்துச் செய்த சர்க்கரைப் பொங்கல். கெட்டித் தயிரில் பிசைந்த தயிர் சாதம். கமகமவென்று மணக்கும் புளியோதரை. கோடை விடுமுறைக்காகத் தங்கள் மாமாவின் வீட்டு



க்கு வந்திருந்தனர் சங்கரனும் குமாரனும்.

எல்லோரும் வட்ட வடிவமாக உட்கார்ந்திருந்தனர். நிலவொளியில் தகதகவென்று மின்னும் எவர்சில்வர் தட்டுக்களில் உணவைப் பரிமாறிக்கொண்டு வந்தாள் மாமி அம்புஜம். அவளுக்கு உதவியாக அவள் மகள் பாமா பட்சணங்களைப் பரிமாறிக்கொண்டு வந்தாள்.

'வேண்டாம், வேண்டாம்' என்று சங்கரன் கைகளை முன்னால் நீட்டித் தட்டின் மீது குனிந்துகொண்டான்.

'வேண்டாம் என்றால் நானா விடுகிறவள்? உங்களுக்குத் தித்திப்பு என்றால் மிகவும் பிடிக்கும் என்கிற விஷயம் எனக்குத் தெரியும். பேசாமல் சாப்பிடுங்கள் அத்தான்!' என்று உபசரித்தாள் பாமா.

'தித்திப்பு பிடிக்குமென்றால் அதற்கும் ஒரு அளவு இருக்கிறதல்லவா! அளவுக்கு மீறிவிட்டால், அதுவும் திகட்டித்தானே போகும்! அத்துடன்கூட அவனுக்குப் பட்சணங்களையோ சாப்பாட்டையோ ரசித்துச் சாப்பிட முடியாமல் அவன் எதிரிலேயே நீ வேறு நிற்கிறாய். அவனுக்கு உன்னைப் பார்த்து ரசிப்பதற்குத்தான் பொழுது சரியாக இருக்கிறது' என்று கூறி நிறுத்திவிட்டுக் குமாரன் சங்கரனைக் கேலியாகத் திரும்பிப் பார்த்தான்.

குமாரன் என்ன சொல்கிறான் என்று ஆவலுடன் அவன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்த பாமா, வெட்கத்துடன் கண்களை நிலத்தில் பதிய விட்டாள். தண்ணென்றிருக்கும் அந்த நிலவில்கூட அவள் முகத்தில் வியர்வைத் துளிகள் முத்துப்போல் அரும்பி இருந்தன.

'உங்களுக்கு வேண்டுமானால் கேட்டு விட்டுப் போகிறதுதானே, குமாரு அத்தான்! அதற்கு இல்லாததும் பொல்லாததுமாகச் சொல்லி, என்னை ஏன் திணற அடிக்க வேண்டுமாம்!' என்று கூறிவிட்டு, பாமா நாலைந்து ஜாங்கிரிகளை ஒரேமுட்டாக எடுத்துக் குமாரன் இலையில் போட்டாள்.

குமாரன் கடகடவென்று சிரித்துவிட்டு, 'இல்லாததும் பொல்லாததும் என்னவாம்? ஸ்ரீமான் சங்கரனுக்கும் ஸ்ரீமதி பாமாவுக்கும் கூடிய சீக்கிரம் கல்யாணம் நடந்துவிடும் என்பது எல்லோருக்கும் தெரிந்ததுதானே அம்மா?' என்றான்.

'தெரிந்த விஷயத்தையே குழந்தை மறந்துவிட்டாள்போல் இருக்கிறது!' என்று கேலி செய்தார் பாமாவின் தகப்பனார் ஜம்புலிங்கம்.

'அதை நன்றாக நினைவு படுத்தத்தான் நீங்கள் வேறு அருகில் இருக்கிறீர்களே, அது போதாதா? குழந்தை எங்கே தப்பித் தவறி மறந்து விடுவாளோ என்று கவலை வேறு உங்களுக்கு. உங்களுக்கும் வேலை இல்லை, அவளுக்கும் வேலை இல்லை' என்று கோபத்துடன் பொரிந்து தள்ளிக் கொண்டே, கையிலிருந்த பாத்திரத்தை 'நக்'கென்று கீழே வைத்தாள் அம்புஜம்.

தேவாமிர்தமாக இருக்கும் உணவில் எங்கோ ஒரு சிறு கல் 'நறுக்'கென்று தட்டுப்பட்டதுபோன்ற உணர்ச்சி சங்கரனுக்கு உண்டாயிற்று. பாதி கடித்துச் சுவைத்த ஜாங்கிரியைத் தட்டின் ஓரமாக நகர்த்திக்கொண்டே, மாமியைத் திரும்பிப் பார்த்தான் அவன்.

பாமாவின் எழில் வதனத்தில்தான் எத்தனை பாவங்கள்! அதற்குள் கரு விழிகள் கலங்கிவிட்டிருந்தன. ரோஜாக் கன்னங்கள் திடீரென்று வெளுத்துப் போயின. நாணமும் மென்மையும் மிதந்துகொண்டிருந்த அந்த முகத்தில், சோகம் பரவி விட்டிருந்தது.

குமாரன் எதிலுமே கொஞ்சம் அவசரப் பேர்வழி. 'புதிதாக எந்த ஐ. ஏ. எஸ். மாப்பிள்ளையைப் பிடித்திருக்கிறீர்கள் மாமி?' என்று நறுக்கென்று கேட்டான் அம்புஜத்தைப் பார்த்து.

'அடேடே! நீ ஒன்று! வேடிக்கைக்கு ஏதாவது சொன்னால், அதைப்போய் நீ வினையாக்குகிறாயே தம்பி!' என்று மென்று விழுங்கிக்கொண்டே கூறிவிட்டு, இலையைவிட்டு எழுந்தார் ஜம்புலிங்கம்.

'வேடிக்கையாவது? விநோதமாவது? உண்மையாகத்தான் சொல்கிறேன். நமக்குப் புது சம்பந்தமே பயமாகத்தான் இருக்கிறது'—அம்புஜம் வெட்டு ஒன்று துண்டு இரண்டாகத்தான் பேசினாள்.

'என்ன? காமாட்சி அத்தை புதியவளா? அவள் மகன் சங்கர அத்தான் நமக்குப் புதியவரா? என் அப்பாவுடன் பிறந்த சகோதரி என் தாய்க்குப் புதியவளா? அம்மாவுக்கு மூளைக் கோளாறுதான் ஏற்பட்டிருக்க வேண்டும்' என்று பயந்தாள் பாமா.

நிலாச் சாப்பாட்டை உற்சாகமாக ரசிக்க வேண்டும் என்று நினைத்திருந்த ஜம்புலிங்கம், அயர்ந்து போனார். சங்கரன் நிலத்தைக் கையால் கீறிக்கொண்டே உட்கார்ந்திருந்தான். 'ஊருக்குக் கிளம்ப மூட்டை கட்டலாமா?' என்று கேட்டுக் கொண்டே மேலுங்கீழும் உலவினான் குமாரன். அம்புஜம்மட்டும் அமைதியாகப் பாத்திரங்களை அலம்பிக் கூடையில் நிரப்பிக் கொண்டாள்.

இரவின் நிசப்தத்தைக் கலைத்துக் கொண்டு கார் வேகமாக ஊரை நோக்கிக் கிளம்பி விட்டது. காரில் உட்கார்ந்திருந்தவர்கள் யாருமே உற்சாகமாக இல்லை. அங்கு நிலவியிருந்த மௌனத்தைக் கலைத்துக் குமாரன் அதட்டும் குரலில், 'நாளைக் காலையில் ஊருக்குப் புறப்படுகிறோம் மாமா. வந்த வேலை ஆயிற்று. வெறுமனே வீண் பொழுது போக்குவானேன்?' என்றான்.

'வந்த வேலை முடிந்துவிட்டதா? பாமாவுடன் தனித்துச் சில மணிகள்கூடப் பேசவில்லையே. வந்து இரண்டு நாளைக்குள் வன போஜனம் என்று மாமா இழுத்து வந்து விட்டார். இதற்குள் ஊருக்கு என்ன அவசரம்?' என்று எண்ணமிட்டபடி உட்கார்ந்திருந்தான் சங்கரன்.

'குமாரு அத்தானுக்கு எப்பொழுதுமே முன் கோபம் அதிகம். அவர் அப்படித்தான் பேசுவார். நீங்கள் அவர் வார்த்தைகளைக் கேட்காதீர்கள் அத்தான்' என்று சிரித்தபடிச் சொல்லிக்கொண்டே, பாமா சங்கரனைத் திரும்பிப் பார்த்தாள். அந்த முகத்தில்தான் எவ்வளவு கவர்ச்சி? அவளை நான்கு வயதில் பார்த்தபோது சங்கரன் அவளைத் திரியும் பட்டாம் பூச்சிக்கு ஒப்பிட்டான். வண்ண வண்ணமாகப் பாவாடைகள் உடுத்தி, கலகலவென்று சிரித்து, அவன் சிந்தையை மகிழ்வித்தவள் அவள். அப்புறம் பத்து வயசில், பள்ளியில் தான் படிக்கும் பாடங்களில் புரியாத சிக்கல்களை விளக்கித் தரும்படி அவனிடம் வந்து மன்றாடுவாள். பிறகு பதினைந்து வயதில் முகத்திலே நாணமும் நடையிலே மென்மையும், பேச்சிலே இனிமையும் நிறைந்து அவன் கைக்கு எட்டிய பொருளாகப் பூமியில் உலவும் மதியம்போல அவனுக்குத் தோன்றினாள். இன்று பதினெட்டு வயசில் 'உனக்காக நான் தவங் கிடக்கிறேனே!' என்று சொல்லாமல் சொல்லும் முகபாவங்களால் அவனைக் கவர, அவள் கற்றுக்கொண்டுவிட்டாள். 'அத்தானுக்கு இது பிடிக்கும். அத்தானுக்கு நான் அஜந்தாக் கொண்டை போட்டுக்கொண்டால்தான் பிடிக்கும்' என்று தன்னைச் சிங்காரித்துக்கொள்ளும் அளவுக்கு வந்து விட்டாள்.

⁂ ⁂ ⁂

'என்ன மௌன விரதமோ? நீங்கள் எந்தச் சாமியாருக்காவது உறவா?' அடுத்த நாள் மாலையில் மாடியில் சிந்தனையில் மூழ்கி உட்கார்ந்திருந்த சங்கரனை அவள் கேட்ட கேள்வி இது.

'ஊஹூம்—' என்று தலையை ஆட்டினான் சங்கரன்.

'பின்னே என்னவாம்? என்னவோ குடி முழுகிப் போனமாதிரி முகத்தை 'உர்'

றென்று வைத்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிறீர்களே அத்தான்!'

'பாமா! இதோ பார், முன்பின் தெரியாதவர்களுடன் புது சம்பந்தம் கூடாதென்று உன் அம்மா நேற்று சொல்லவில்லையா? அதன் அர்த்தம் விளங்காமல் தான் முழித்துக்கொண்டிருக்கிறேன். உனக்கு எல்லாமே விளையாட்டுத்தான். விளையாட்டுத்தனமாக எல்லாவற்றையுமே தள்ளிவிட முடியாது. எதற்கும் ஒரு வரம்பு உண்டல்லவா?'

பாமா உண்மையிலேயே கலங்கிப் போனாள். கூரிய வேல்விடக் கடுமையாகப் பாயும் சக்தி சுடு சொற்களுக்கு உண்டு என்பது அவளுக்கு அப்பொழுது தான் புரிந்தது.

திடீரென்று தாயின் மனதில் ஏற்பட்ட இந்த மாறுதலை அறிந்துகொள்ள அவளும்தான் ஆசைப்பட்டாள். நிறைந்த மனத்துடன் வந்த சங்கரன், மாமன் வீட்டை விட்டு வெறிச்சென்ற உள்ளத்துடன் வெளியே போனான். நேற்றுவரையில் நெருங்கியவனாக இருந்த அவன், இன்று அன்னியனாக மதிக்கப்பட்டுவிட்ட பின்பு, அவனுக்கு அங்கு என்ன வேலை இருக்கிறது? ஊருக்குப் புறப்படும் முன்பு நீர் நிறைந்த விழிகளுடன் அவன் பாமாவிடம் விடை பெற்றுக்கொண்டான்.

'திரும்பவும் எப்பொழுது வருவீர்கள் அத்தான்?' என்று இனிமையாகக் கேட்டுப் புன்முறுவல் பூத்தாள் பாமா.

'திரும்பவுமா? அது உன் அம்மாவின் மனப்போக்கைப் பொறுத்திருக்கிறது. திரும்பவும் என்னை இந்த வீட்டுக்கு மருமகனாக வரவேற்க அவளுக்கு ஆசை இருக்குமானால், இன்னும் சில மாதங்களில் கட்டாயம் வருவேன் பாமா.'

பாமாவின் கண்களில் கண்ணீர் தேங்கி நின்றது. 'போய்விட்டு வருகிறேன்' என்னும் பாவனையில் தலையைமட்டும் அசைத்தான் சங்கரன். 'புறப்படுகிறேன் மாமா' என்று சுருக்கமாகவே கூறிவிட்டுக் குமாரன் சற்று விறைப்பாகவே வண்டியில் ஏறி உட்கார்ந்தான்.

தெருக்கோடி வரைக்கும் வண்டி செல்லும் திசையில் கண்களை ஓட்டினாள் பாமா. சில நாட்களுக்கு முன்புகூட முளைத்துத் தழைத்து வளர்ந்து வரும் நிலையில் பசுமையாக இருந்த அவர்கள் காதல் விருட்சம், இன்று ஏதோ ஒரு காரணத்தால் உலுக்கப்பட்டுச் சீரழிந்து நின்றது.

பாமா கண்களைத் துடைத்துக்கொண்டு 'விருட்'டென்று உள்ளே போய்விட்டாள்.

⁂ ⁂ ⁂

ஊருக்குத் திரும்பி வந்த சங்கரன், மனதைத் துளைத்து வந்த கேள்வியைத் தன் தாயிடம் கேட்கத் துடித்துக்கொண்டிருந்தான்.

'ஊருக்குப் போய் வந்தாயே சங்கரா, மாமா ஏதாவது கல்யாணப் பேச்சை எடுத்தாரா? பாமாவுக்குப் படிப்பு முடிந்து விட்டதே. இன்னும் மேலே படிக்க வைக்கப் போகிறார்களா என்ன? வெறுமனே



பிரமுகர்:—''நீர் வருவதற்குமுன் நாலைந்து பேர் வந்தார்கள்...யாரையும் பார்க்க முடியாது என்று சொல்லிவிட்டேன்...நீர் அதிருஷ்டசாலி......!''

மற்றவர்:—''அந்த நாலைந்து தடவை வந்ததும் நான்தான்; வேறு யாருமில்லை...!''

பெண்களுக்கு எதற்கு அப்பா படிப்பு? அதனால் உத்தியோகம் பார்த்து ஒரு குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டிய அவசியம் இருந்தாலொழிய மேல் படிப்புப் படித்து என்ன செய்யப் போகிறாள் அவள்?'

'அவர்கள் வீட்டுப் பணத்தைச் செலவு செய்து படிக்க வைத்தால், நமக்கு என்ன அம்மா?' என்று எதிலும் படாமல் பேசினான் சங்கரன்.

'பெண்ணை உயர் படிப்புப் படிக்க வைத்தால்தானே நாளைக்குச் சரிசமமாக உயர்ந்த படிப்புப் படித்த மாப்பிள்ளையாகத் தேர்ந்தெடுக்க முடியும்?'

குமாரன் ஆத்திரத்துடன் தாயிடம் கூறிவிட்டு, அங்கிருந்து போய்விட்டான்.

'அவர்கள் என்னதான் அப்பா சொன்னார்கள்?' ஆதுரத்துடன் கேட்கும் தாயின் முகத்தைப் பரிதாபமாகப் பார்த்தான், சங்கரன். பிறகு துக்கம் நிரம்பிய குரலில், 'எனக்கு பாமாவை மண முடித்துக் கொடுத்தால், அது புது சம்பந்தமாம். முன்பின் அறிமுகமில்லாதவர்களாம்' என்றான்.

'அப்படியா?' என்று சிறிது நேரம் ஸ்தம்பித்து நின்றாள் அவன் தாய். அவள் மனதில் கடந்த காலத்தில் நடந்த நிகழ்ச்சிகள் ஓடுவதைச் சங்கரனால் அறிந்துகொள்ள முடிந்தது.

'ஏனம்மா! நாம் எல்லோருமே மாமா வீட்டாருக்குப் புதிதா? அல்லது நான் மட்டும் அவர்களுக்குப் புதியவனா?'

அவன் தாய் மறுபடியும் திடுக்கிட்டாள். நெற்றியில் வியர்வை பெருகி வழிய அவள் உடம்பு இரண்டு தரம் நடுங்கி ஓய்ந்தது. வார்த்தைகளுக்கு அப்பாற்பட்ட உணர்ச்சியில் சிக்கி, அவள் மனம் தடுமாறினாள்.

'என்ன அம்மா?' என்றான் மகன் மறுபடியும்.

'உம்...உம்...' என்று தலையைக் கைகளால் தாங்கிக்கொண்டாள் அவள். சங்கரனுக்கு அழுகை வெடித்துக்கொண்டு கிளம்பியது. கம்மிய குரலில், 'நான் உன் தங்கையின் மகன்தானே அம்மா? அப்படித்தானே அம்மா நீ என்னிடம் இது வரையில் கூறி வந்தாய்? அதுதானே அம்மா உண்மை? நான் அயலானா? ஊர் பெயர் தெரியாதவனா? அப்படித்தானே?' என்று பொங்கும் துயரை விழுங்கியவாறு கேட்டான் சங்கரன்.

'சங்கரா! நீ என் மகன்தான். பிறந்து பதினைந்து நாட்களுக்கு அப்புறம் நீ என் மகனாகத்தான் வளர்ந்து வருகிறாய்.'

அவள் கண்களிலிருந்து அருவிபோல் கண்ணீர் பெருகியது.

ஆழ்கடலின் ஆழத்தில் மறைந்துகிடக்கும் நல் முத்துக்களையே உலகோர் கண்டெடுத்து விடுகிறார்களே, மனித வாழ்வில் நடக்கும் ரகசியங்கள் எவ்வளவு காலத்துக்குத்தான் மறைந்து கிடக்கும்? இருபத்தைந்து வருஷங்களாகத் தன் மனசில் புதைந்து கிடந்த எண்ணங்களை அவன் தாய் அவனிடம் கூற ஆரம்பித்தாள்.

⁂ ⁂ ⁂

அவளுக்கும் சங்கரனின் தந்தைக்கும் அப்பொழுது வயது ஒன்றும் அதிகமாக ஆகிவிடவில்லை. இருந்தாலும் குழந்தையில்லையே என்கிற குறை அவள் மனத்தை அதிகமாக அரித்து வந்தது. தெருவிலே ஆடித் திரியும் குழந்தைகளைக் கண்டால் மெய்மறந்து வாசற்படியிலேயே நின்றுவிடுவாள். அவள் வீட்டுச் சுவரில் குழந்தைக் கண்ணனின் உருவப் படங்களும், பால முருகனின் ஓவியங்களும் வரிசைக் கிரமமாக மாட்டி இருந்தார்கள். சஷ்டியன்று சிறு பிள்ளைகளைக் கூப்பிட்டுப் பாலும் பழமும் கொடுத்து மகிழ்ந்தாள் அவள். கனவிலும் நனவிலும் 'குழந்தை குழந்தை' என்று ஏங்கியது அவள் மனம். 'உனக்குப் பைத்தியம்தான் பிடிக்கப் போகிறது' என்று அவள் கணவர் அவளைக் கேலி செய்வார்.

ஐப்பசி மாசத்தில் கந்த சஷ்டி உற்சவம் பார்ப்பதற்குத் தம்பதி இருவரும் வைத்தீஸ்வரன் கோவிலுக்குக் கிளம்பினார்கள். ரயிலை விட்டு இறங்கியதும் வண்டிக்காரன் இவர்களை அசலூர் என்று தெரிந்துகொண்டு விட்டான். அவர்கள் அவனை விவரம் விசாரிக்கும்முன்னர் அவனாகவே தகுந்த இடமாகப் பார்த்துப் போய்த் தன் வண்டியை நிறுத்தினான். அந்த ஊருக்கு வருகிறவர்களில் பெரும்பான்மையோர் தங்க வசதி செய்து கொடுத்து வந்தார் அந்தப் பண்டாரம். அன்று அவர்கள் போய்ச் சேர்ந்த வேளை நல்ல வேளையில்லை.

'ஐயா?' என்று குரல் கொடுத்தான் வண்டிக்காரன்.

'என்ன அப்பா தொந்தரவு செய்கிறாய்? இன்று இங்கே ஒருவரையும் அழைத்து வராதே...' என்றார் பண்டாரம்.

அதற்குள் சுப்பிரமண்யம் வண்டியிலிருந்து இறங்கி தெரு நடைப் பக்கம் சென்று உள்ளே பார்த்து, 'ஐயா! கொஞ்சம் பெட்டி, படுக்கையை மட்டும் வைக்க அனுமதி கொடுங்கள். மற்றபடி உங்களைத் தொந்தரவு செய்யவில்லை' என்று கேட்டார்.

உள்ளே பெண்களின் கூட்டம் நிரம்பி இருந்தது. வேதனையும் விம்மலுமாக ஒரு பெண் கூடத்து அறையில் முனகிக் கொண்டிருந்தாள். அந்தப் பெண் பிரசவ [illegible] நினைப்படுகிறாள் என்பது சுப்பிரமண்யத்துக்குத் தெரிந்துவிட்டது. ஆனால், அங்குக் கூடி இருந்தவர்கள் அவள் வேதனையை மகிழ்ச்சியுடன் அனுபவிக்க வில்லை. பிறக்கப் போகும் குழந்தையை விடத் தாயின் உடல் நிலையைப்பற்றித் தான் எல்லோரும் கவலைப்படுவதாகத் தெரிந்தது. குழந்தை எப்படி வேண்டுமானாலும் பிறக்கட்டும். அது உயிரோடு இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி; அந்தப் பெண் பிழைத்தால் போதும் என்று அபிப்பிராயப்பட்டார்கள். பண்டாரம் நொடிக்கொரு தரம் வாசல் கோபுரத்தைப் பார்ப்பதும் 'வைத்யநாதா' என்று கையெடுத்துக் கும்பிடுவதுமாக இருந்தார்.

'இந்தா! இப்படி இறங்கி வா உள்ளே' என்று சுப்பிரமண்யம் வண்டியில் உட்கார்ந்திருந்த மனைவியைக் கூப்பிட்டார்.

காமாட்சி இறங்கி உள்ளே சென்றாள். சற்றுமுன் அங்கு எழுந்த வேதனையின் ஒலி குறைந்துகொண்டே வந்தது. புது ஜீவன் ஒன்றின் வருகையை அறையிலிருந்து எழுந்த அழுகுரல் அறிவித்தது. அறையின் கதவைத் திறந்துகொண்டு வைத்தியர் வெளியே வந்தார்.

'பண்டாரத்தய்யா! நீங்கள் பலருக்குச் செய்து வரும் அறம் பொய்த்து விட்டது. நான் எவ்வளவோ முயன்றேன். உங்கள் மகள் தன் குறை நீங்காமலேயே போய் விட்டாள். தன் நினைவாக ஒரு ஆண் குழந்தையைக் கொடுத்துவிட்டுத்தான் அவள் மறைந்து விட்டாள்' என்றார் வைத்தியர்.

'வைத்திய நாதா! உன் அருள் இப்படியா இருக்கிறது அப்பனே! மனத்தாலும் ஒரு ஜீவனுக்கு இன்னல் நினைக்காத என்னைப் பெரிய சோதனைக்கு ஆளாக்கிவிட்டாயே...அம்மா தையல் நாயகி! உன் சன்னிதி விளங்குவதுபோல் என் மகளும் வாழ்வாள் என்று உன் பெயரை வைத்தேனே!' என்று கதறினார் பண்டாரம்.

காமாட்சியும், சுப்பிரமணியமும் தல யாத்திரை வந்த இடத்தில் வாழ்க்கையின் கொடுமைகளையும், இறைவனின் புரியாத விளையாட்டுக்களையும் பார்க்க நேர்ந்தது. கவனிப்பாரற்று, உதாசீனம் செய்யப்பட்டு, அழுது வாடும் அந்தப் புது உயிரை அங்கு யாரும் கவனிக்கவில்லை. காமாட்சிக்கு சுவாமி தரிசனத்தில் மனம் செல்லவில்லை. தங்கக் கவசம் பூண்டு, பார்ப்பவர் உள்ளத்தைத் தன்பால் இழுக்கும் பரமனை அவள் கண்கள் தரிசித்தாலும் உள்ளம் ஓயாமல் அந்தக் குழந்தையைப்பற்றியே நினைத்துக் கொண்டிருந்தது. பன்னீர் மாலைகள் புரளும் முத்துக்குமாரனை அவள் பார்த்தாலும் பண்டாரத்தின் வீட்டில் அழும் குழந்தையின் குரல் அவள் செவிகளில் விழுந்துகொண்டிருந்தது.

ஊருக்குக் கிளம்புவதற்குமுன் சுப்ரமண்யம் பண்டாரத்திடம் ஆறுதலாக இரண்டு வார்த்தைகள் பேச எண்ணினார்.

'ஐயா! உங்களுக்கு வந்த கஷ்டம் மலை போன்றது. இறைவன்தான் துன்பத்தைத் துடைக்க வல்லவன்' என்றார்.

பண்டாரம் தம் எதிரே இருந்த கோபுரத்தைப் பார்த்தார். 'ஐயா! இறைவன் என் துன்பத்தைத் துடைக்கவா போகிறான்? இல்லை, துன்பம் ஒன்றைப் புதிதாகச் சேர்த்திருக்கிறான். தாய்ப் பாலுக்கும் தாய் அன்புக்கும் ஏங்கும் அந்தக் குழந்தையின் அழுகையைக் கேளுங்கள். 'பண்டாரம்! மகளுக்குக் கல்யாணம் ஆனவுடன் உலக பந்தம் விட்டது என்று இறுமாந்தாயே...பார்...' என்று இறைவன் எனக்குச் சவால் விடுவதுபோல் இல்லையா?' என்று கேட்டார் கண்களில் கண்ணீர் மல்க.

காமாட்சி கண்ணீர் பெருக்கினாள். சுப்பிரமண்யம் சிறிது நேரம் ஆழ்ந்து யோசித்தார். பிறகு நிதானம் ததும்பும் குரலில், 'ஐயா! இந்தக் குழந்தை உங்களுக்குப் பாரமாக இருக்குமென்று நினைத்தால், குழந்தை இல்லாத எங்களுக்கு அதைக் கொடுத்து விடுங்கள். ஒரு குழந்தையை யாசிக்கத்தான் நாங்கள் தல யாத்திரை புறப்பட்டோம்' என்றார்.

பண்டாரத்துக்கு அப்போது இருந்த மன நிலையில், அது சரியென்றே தோன்றியது. காமாட்சி அந்த ஆண் குழந்தையை வாங்கி, மார்புடன் அணைத்துக்கொண்டாள். அவர்களின் தல யாத்திரையும் அத்துடன் முடிந்தது.

பிறகுதான் கடவுளின் கருணையால் குமாரன் பிறந்தான். காமாட்சி தன்னைப் பெற்றெடுத்த தாயல்ல என்ற உண்மை சங்கரனுக்குத் தெரியாது. தன்னுடைய சகோதரியின் மகன் என்று அவள் அவனிடம் கூறி இருந்தாள். தகப்பன் வெகு நாட்களுக்கு முன்பே எங்கோ போய்விட்டதாக அறிவித்திருந்தாள். பெற்ற தாயைவிடப் பரிவு காட்டும் அவளைத் தாயெனவே நினைத்து, அவன் அன்பு செலுத்தினான். சுப்பிரமண்யம் எதைச் செய்தாலும் சங்கரனுக்கு முதலில் செய்துவிட்டுத்தான் தன் மகனைக் கவனிப்பார். ஆகவே, அவன் மனதில் எந்தவிதமான வேற்றுமையும் எழவில்லை.

தான் பிறந்த சூழ்நிலையையும், வளர்ந்த விதத்தையும் கேட்டு, அவன் இதயம் துன்பத்தால் வாடியது. 'நான் அயலான் என்பதில் என்ன சந்தேகம்? அந்தக் குடும்பத்துக்கும் தனக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது? பிரமாவைக் கல்யாணம் செய்துகொள்ளத் தனக்கு உரிமை இல்லைதான்' சங்கரன் மனதுக்குள் குமைந்து போனான். அவனுக்கும் அவனை வளர்த்தவர்களுக்கும் இடையில் ஒரு பெரிய பிளவு ஏற்பட்டிருப்பதை உணர்ந்தான். இனி அவ்வீட்டில் இருந்தால், சொத்து உடைமைகள்பற்றிய தகராறுகள் எழும். விரைவில் வீட்டைவிட்டு வெளியேறிவிட ஆசைப்பட்டு, அதன்படியே சுப்பிரமண்யத்துக்கு ஒரு கடிதம் எழுதி வைத்துவிட்டு, சங்கரன் கிளம்பிவிட்டான்.

பிறருடைய தயவை நாடாமல் பிழைக்க வேண்டும் என்கிற எண்ணம் எழுந்தவுடன், சங்கரனுக்கு ஒரு வேலையும் கலபத்தில் கிடைத்தது. தென் பிராந்திய ரயில் வேயில் மின்சாரப் பகுதிக்கு அவனைத் தணிக்கையாளனாகப் போட்டார்கள். மாதத்தில் இருபத்தைந்து தினங்கள் ஊர் ஊராகச் சுற்றவேண்டியிருந்தது. பல ஊர்களைப் பார்த்தான். தெற்கே குமரி முனையிலிருந்து சென்னை வரை பல தடவைகள் சுற்றினான். ஆனால், வைத்தீஸ்வரன் கோயில் ரயில் நிலையத்தைப் பார்க்கும்போதெல்லாம் அவன் உள்ளத்திலே சிறு ஆசை ஒன்று எழும். அவன் தாத்தா அந்தப் பண்டாரத்தையா மட்டும் உயிரோடு இருந்தால், அவனுடைய மனிதர் என்று சொல்லிக் கொள்ளலாமல்லவா? ஊருக்குள்ளே சென்று விசாரிக்கப் பல தடவைகள் ஆசைப்பட்டான். அவன் பிறந்தபோதே அவருக்குக் கிட்டத்தட்ட அறுபது பிராயம் இருக்கும் என்று காமாட்சி கூறி இருந்தாள். இப்பொழுது கிட்டத்தட்ட எண்பத்தைந்து வயசு இருக்கலாம். போன இடம் புல் முளைத்துப் போயிருக்கும் என்று நினைத்து, வைத்தீஸ்வரன் கோவிலைத் தாண்டிக்கொண்டு மாயூரம் போய்விட்டான் ஒரு தடவை.

மாயூரம் சந்திப்பில் அவனுடன் வேலை செய்யும் நண்பன் ஒருவன் தன் குடும்பத்

துடன் வைத்தீஸ்வரன் கோவிலுக்குப் பிரார்த்தனை செலுத்தக் கிளம்பி, ஊரிலுக்கு வந்திருந்தான். நண்பர்கள் முதலில் உத்தியோக விஷயமாய் பேசிக்கொண்டார்கள். பிறகு குடும்ப விஷயமாகப் பேச்சு ஆரம்பித்தது.

'வாயேன், சுவாமி தரிசனம் செய்துவிட்டு வரலாம்' என்று நண்பன் அழைக்கவே, சங்கரன் தான் பிறந்த ஊரையாவது பார்க்கலாமே என்கிற ஆசையுடன் புறப்பட்டான்.

❖ ❖ ❖

அன்று முத்துக்குமாரனுக்குத் தேர் விழா. வைத்தியநாதனும் தையல்நாயகியும் தாங்கள் விசேஷமாக எந்த உற்சவங்களிலும் ஈடுபடாமல், தங்கள் செல்வக் குமாரனுக்குப் பல விழாக்களை ஒதுக்கிவிட்டார்களாம். செல்வக்குமரன் தேரில் அமர்ந்து, பன்னீர் மாலைகள் புரளப் பவனி வந்தான்.

விழாவின் கோலாகலங்களைப் பார்த்துக்கொண்டே, சங்கரன் சன்னிதித் தெருவில் ஒரு பழைய ஓட்டு வீட்டில் சென்று உட்கார்ந்தான். நண்பனின் குழந்தை மிகவும் அழுது தொந்தரவு செய்யவே, அதைச் சிறிது தூங்கப்பண்ண ஏதாவது ஒரு இடத்தைத் தேடிப் பிடிக்கும் நோக்கத்துடன் அந்த அமைதியான சிறு வீட்டை அடைந்தான், சங்கரன்.

வீட்டினுள் யாருமில்லை. கூடத்தில் கிழக்கு முகமாக முருகனின் படம் மாட்டியிருந்தது. குத்துவிளக்கு ஏற்றி வைக்கப்பட்டிருந்தது.

'ஐயா!' என்று குரல் கொடுத்தான் சங்கரன். நண்பனும் அவன் மனைவியும் வாசல் திண்ணையில் உட்கார்ந்திருந்தார்கள். கொல்லைப் பக்கத்திலிருந்து குடலை நிறைய மலர்களை எடுத்துக்கொண்டு, குறுகி, வற்றிப்போன ஒரு கிழவர் கூடத்துக்கு வந்தார். சற்று அவனைக் கூர்ந்து நோக்கிவிட்டு, 'யாரப்பா!' என்று கேட்டார்.

'நாங்கள் அசலூர். சுவாமி தரிசனத்துக்கு வந்தோம்.. குழந்தையைத் தூங்க வைக்கச் சிறிது இடம் வேண்டும்...'

'நிறைய இருக்கிறது. இப்படிப் படுக்கலை அப்பா...'

நண்பரின் மனைவி குழந்தையைக் கொண்டு வந்து கூடத்தில் படுக்க வைத்தாள்.

கிழவர் பூசை செய்ய ஆரம்பித்தார். நண்பனும் அவன் மனைவியும் கோவிலைச் சுற்றப் போய்விட்டார்கள்.

சங்கரன் பக்தியுடன் அவர் பூசை செய்வதைப் பார்த்துக்கொண்டே இருந்தான். பூசை முடிந்ததும் இரண்டு வாழைப் பழங்களையும், பாலையும் கொண்டுவந்து சங்கரனிடம் கொடுத்தார், அவர். தூங்கும் குழந்தையைச் சிறிது உற்றுப் பார்த்துவிட்டு, கிழவர் தனக்குள் விரக்தியாகச் சிரித்துக்கொண்டார்.

'என்ன தாத்தா சிரிக்கிறீர்கள்?'

'ஒன்றுமில்லை அப்பா. இந்த வீட்டில் இப்படி ஒரு குழந்தை படுத்துத் தூங்கி, எத்தனை காலம் ஆயிற்று?'

'ஏன் தாத்தா, உங்களோடு யார் இருக்கிறார்கள்?' என்று சங்கரன் கேட்டவாறு, வீட்டைச் சுற்றுமுற்றும் பார்த்தான்.

கிழவர் மீண்டும் விரக்தியாகச் சிரித்தார்.

'என்னோடு யார் இருக்கிறார்கள் என்று தானே அப்பா கேட்கிறாய்? யார் இருப்பார்கள்? இம்மையிலும் மறுமையிலும் துணை வரும் புண்ணியம் ஒன்றுதான் என்னோடு இருப்பதாக நினைத்திருக்கிறேன்....'

சங்கரனின் மனம் உருகிப் போயிற்று 'தள்ளாத கிழவர். இன்றோ நாளையோ என்று இருப்பவர். அவரை ஆதரவுடன் காப்பாற்ற யாரும் இல்லையே' என்று எண்ணிப் பெருமூச்செறிந்தான் அவன். ஆனால், அடுத்த விநாடியே அவன் தனக்குள் சிரித்துக்கொண்டான். அவனுக்கு மட்டும் யார் இருக்கிறார்கள்? பெற்றவர்களா, உடன் பிறந்தவரா, சுற்றத்தாரா? யாரும் இல்லை. இன்று இளமையும் வலுவும் இருக்கிறது. உற்சாகமாக இருக்கிறான்.

'என்னைப் பற்றி இருக்கட்டும் அப்பா. நான் உலகில் வாழ்ந்தாயிற்று. நீ எந்த ஊர்ப் பிள்ளை? கல்யாணம் ஆகிவிட்டதா உனக்கு?' என்று கேட்டார் அவர்.

சங்கரன் பணிச்சென்று பதில் சொன்னான்.

'நானும் ஒரு நாடோடிதான் தாத்தா. எனக்கு யாரும் கிடையாது...'

'பொய் சொல்கிறாய்..' என்று சிரித்தார் கிழவர்.

'ஏன் தாத்தா அப்படி நினைக்கிறீர்கள்?...'

---




வந்தவர்:—"என்னுங்க நீங்கி எப்பொழுது வந்து கேட்டாலும் பணம் இல்லேன்னு சொல்றீங்க! திருப்பிக் கொடுக்கப் போறீங்களா இல்லையா சொல்லிப்பிடுங்க!"

வீட்டுக்காரர்:—"ஸார்! நீங்க புறப்படுகிற நேரம் சரி இல்லிங்க! நீங்க நல்ல நேரமாகப் பார்த்துப் புறப்பட்டு வாங்க! அப்பொழுதுதான் என்னிடம் பணம் இருக்கும்!"

'நல்ல வேலையில் இருப்பவனுத் தெரிகிறது. நன்றாகப் படித்திருக்கிறாய். பண்பாடு நிரம்பியவனாக இருக்கிறாய்.. நல்ல சூழ்நிலையில் வளர்ந்தவன் அப்பா நீ...'

'உங்களைப் பற்றிச் சொல்லுங்கள் தாத்தா. அப்புறம்தான் நான் என்னைப் பற்றிக் கூறுவேன்...' என்று பிடிவாதம் பிடித்தான் சங்கரன்.

கிழவர் இரண்டு தடவை 'வைத்தியநாதா' என்று தமக்குள் சொல்லிக்கொண்டார். என்றோ மக்கி, மறைந்துபோன நினைவைத் தோண்டி எடுப்பதுபோல் தம் கண்களை மூடிப் பழைய சம்பவங்களை நினைத்துப் பார்த்துக்கொண்டார்.

அவர் மகள் தையல்நாயகி ஒரு மகனைப் பெற்றுப் போட்டுவிட்டுப் போனதைக் கூறிவிட்டு, அந்தப் பிள்ளை யாரோ ஒரு புண்ணியவானிடம் வளர்ந்து பெரியவனாகி இருக்கலாம்...என்று முடித்தார்.

சங்கரனுக்கு அவர் தன் பாட்டனார் என்பது புரிந்து போயிற்று. நேராகக் கிழவரிடம் தன்னை வெளியிட்டு அதிர்ச்சி ஏற்படுத்துவதைவிட, தன் வரலாற்றைக் கூறிக் கொஞ்சம் கொஞ்சமாக அவர் உலர்ந்து போன இதயத்தில் பாசத்தைப் புகுத்தினான்.

'சுப்பிரமணியம் என்கிற புண்ணியவானும், காமாட்சி அம்மாளும் அந்தக் குழந்தையை அனாதை ஆக்காமல் காப்பாற்றினார்கள். அவன் வளர்ந்தான். பெரியவனானான். ஆனால், 'ஒன்றே குலம், ஒருவனே தேவன்' என்கிற தத்துவத்தை உலகம் புரிந்துகொள்ளவில்லை. அவர்களை விட்டு விலகி, இரண்டு மூன்று வருஷங்களாக அந்தப் பிள்ளை வெளியில் சுற்றுகிறான்...'

கிழவர் பதறவில்லை. 'பேரப்பிள்ளையே' என்று அவனைச் சேர்த்துக் கட்டிக்கொண்டு, கண்ணீர் பெருக்கவில்லை.

'அப்பா! நீ தையல்மாவின் மகனா? நன்றாக இருக்கிறாயா அப்பா! உன்னை அவர்கள் வளர்க்க எடுத்துப் போன சில காலம் வரையில் எனக்குத் தகவல் கிடைத்து வந்தது. அப்புறம் நான் அவர்களுக்கு எழுதவேயில்லை.'

'ஏன் எழுதப் போகிறீர்கள் தாத்தா? சனியன் விட்டது என்று இருந்துவிட்டீர்களாக்கும்' என்று சங்கரன் கோபித்துக் கொண்டான்.

'அப்படியில்லை அப்பா. உலக பந்தத்திலிருந்து விடுதலை கிடைத்துவிட்டது. எப்படியோ ஆயுசு கெட்டியாக இருந்தால் வளர்ந்து வருவாய் என்று நம்பி இருந்தேன்...'

'இனிமேல் அப்படி இருக்க உங்களை விடமாட்டேன் தாத்தா. கிளம்புங்கள் என்னோடு. ஊர் பெயர் தெரியாதவன் என்று எனக்குப் பெண் கொடுக்க மறுத்தவர்கள் எதிரில் வந்து நில்லுங்கள்... போதும்...'

பல வருஷங்களாக விலகி இருந்த பாசம், கிழவரைப் பலமாகப் பிடித்துக் கொண்டது. தம் பேரனுடன் பெண் கேட்கப் பண்டாரத்தையா பயணமானார்.

★

# காதல் ஒரு ரகசியம்!

ஸரோஜா ராமமூர்த்தி




பூங்கொடி ''பார்க்'' கேட் அருகில் நின்றவாறு தன் தாய்க்குத் தொலைவில் சென்று கொண்டிருக்கும் ஒரு வாலிபனைச் சுட்டிக் காட்டினாள்.

பகல் நேரமாதலால், தெருவில் கூட்டம் அதிகம் இல்லை. பூங்கொடியின் தாயும் தன் பழ வியாபாரத்தை ஆரம்பிக்க வசதியான இடமாகப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

ஒல்லியாக ஒட்டடைக் குச்சிக்குக்கால் சராயும், சொக்காயும் அணிவித்தாற் போல் அவள் சுட்டிக் காட்டிய அந்த வாலிபன் நடந்து சென்று கொண்டிருந்தான்.

''இவன்தானடி அந்தமன்மதக் குஞ்சு? என்னவோங்காட்டியும் என்று பார்த்தேன்.....'' என்றாள் முத்தம்மா கேலியாகச் சிரித்தபடி.

பூங்கொடிக்குக் கோபம் வந்தது.

பத்தாவது படித்துப் பாஸ் செய்தவள் பூங்கொடி. டீச்சர்ஸ் டிரெயினிங் முடித்த பிறகு கார்ப்பரேஷன் உயர்நிலைப் பள்ளியில் இப்போது டீச்சராக இருக்கிறாள் அவள். நடையுடை பாவனைகளைப் பார்த்தால் சினிமா நடிகைகள் கூடத் தோற்றுவிட வேண்டியதுதான். வேளைக்கொரு புடவை, நாழிக்கொரு அலங்காரமாகத் தெருவில் போவோர் வருவோரின் கவனத்தைத் திருப்பும் வண்ணப் பூங்கொடியேதான் அவள். ஆனால் இவளுடைய ஸ்டைல் எல்லாம் முத்தம்மாவுக்குப் பிடிக்கவில்லை.

அன்று பள்ளிக்கூடம் அரை நாள் விடுமுறை. தன்னுடைய தாய் அவனைப் பார்க்க வேண்டுமென்று தான் அவள் அவனுடன் பேசியவாறே வந்தாள். ஆனால் அவன் பயந்து கொண்டே இன்னொரு நாள் வருவதாகச் சொல்லிவிட்டுப் போய்விட்டான்.

முத்தம்மாளை அவன் தான் அடிக்கடி அந்தப் பார்க் அருகில் பார்த்திருக்கிறானே. அவனைப் போல நாலு ஆளைச் சேர்த்துப் பண்ணிய உருவம் அவள். முகத்திலே ஒரு மினுமினுப்பு. புகையிலைக் காவி ஏறிய பற்களானாலும் சாம் தொடுத்து வைத்தது போல் அமைப்பாக இருந்தன. தலைமுடி கன்னங்கரேலென்று அடர்ந்து கழுத்தில் சுருண்டு வழிந்து தொந்தரவு கொடுத்துக்கொண்டேயிருக்கும். அதை வழித்து வாரித் தூக்கிச் சாய்வு கொண்டை போட்டிருந்தாள் அவள்.

''நீ முதுகுப்புறம்தானே பார்த்தே? நேரே பார்க்கலையே. சினிமா ஹீரோ மாதிரி இருப்பாரு......'' என்றாள் பூங்கொடி.

''ஆமாம்....சினிமாவும், மண்ணும்! அதைப்பார்த்துப் பார்த்துத் தான் நீயே பாதி வேசம் கட்ட ஆரம்பிச்சுட்டியே! போடி போ....வூட்டுக்குப் போயி பொழுதோடே பெருக்கித் தண்ணிப் பிடிச்சு, உலை ஏத்தி வை. நான் ஏழு மணிக்குள்ளாற வந்து... பாக்கி வேலையைக் கவனிக்கிறேன் போ......''

ஃ ஃ ஃ

பூங்கொடி 'ஸ்டைலாக' நடந்து செல்ல ஆரம்பித்தாள் வழியிலே அவள் சற்றும் எதிர்பாராத விதமாக அவளுடைய பழைய தோழியைச் சந்திக்க நேர்ந்தது.

''பூங்கொடி! பூங்கொடி! உன்னைத் தான் தேடிக்கொண்டு வருகிறேன். வாடி! நாம எல்லாம் சைதாப்பேட்டையிலே ஒரு ஆட்டம் பார்த்துட்டுப் போவலாம்....'' என்று அந்தச் சக உபாத்தியாயினி அழைக்கவே பூங்கொடி அவளுடன் அவசரமாக வீட்டுக்குச் சென்று ஏதோ ஒப்புக்காக இரண்டொரு வேலைகளை முடித்து விட்டு ஆட்டம் பார்க்கக் கிளம்பி விட்டாள்.

பார்க் அருகில், அன்று பழ வியாபாரமும், முத்தம்மாள் எதிர்பார்த்ததைவிட சீக்கிரமாகவே முடிந்து விட்டது. அவளுக்கும் அன்று என்னவோ போல் இருந்தது. தினம் தினம் கொத்தவால்சாவடிகிடங்குக்குப் போவது, பழங்களை வாங்கி வருவது, பார்க் அருகில் உட்கார்ந்து விற்பது-இல்லை, தெருத் தெருவாய் அலைந்து வியாபாரம் செய்வது என்று மாறுதல் இல்லாத வேலை. 'சீ! இது ஒரு வாழ்க்கையா?' என்று அலுத்தபடி சில்லறையை இடுப்பில் முடிந்து கொண்டு சைதாப்பேட்டைக்குப் புறப்பட்டாள் படம் பார்க்க.

நாற்பத்தாறு பைசாவுக்கு மேல் அவளால் செலவழிக்க முடியாது. ஒரு படி அரிசி, மிளகாய், புளி, காய்கறிச் செலவுக்கென்று அவள் தானே மாசத்தில் பாதி நாட்களை ஓட்ட வேண்டியிருக்கிறது?

நாற்பத்தாறு பைசா வரிசையில்,



இடித்து மோதிக்கொண்டு, கூச்சல் போட்டவாறு நின்றிருந்த பெண்கள் சினிமா தியேட்டர் என்கிற சொர்க்கத்துக்குள் நுழைய எந்த நரகவேதனையையும் அனுபவிக்கத் தயாராக இருந்தனர்.

டிக்கெட்கொடுப்பவர்வந்ததும்ஏதோ சுவாமி தரிசனம் கிடைத்த மாதிரி, எல்லோரும் இடித்து மோதிக்கொண்டு ''கவுண்டரை'' நோக்கிப் படையெடுத்தார்கள். டிக்கெட்டு வாங்கிக்கொண்டு உள்ளே நுழைந்த முத்தம்மாள் ஒண்ணரை ரூபாய் வரிசையில் நாலைந்து பெண்களுடன் பூங்கொடி உட்கார்ந்திருப்பதைப் பார்த்தாள். திரையில்மின்னும் நடிகையை விட அவள் 'மேக்அப்' பிரமாதமாக இருந்தது. நெற்றியெங்கும் சுருட்டி விடப்பட்ட குழற்கற்றைகள் ஊசலாட, காதளவு தீட்டப்பட்ட மையுடன், நெற்றி நடுவில் ஜிகினாப் பொடி கலந்த சாந்து பளபளக்க.. உதட்டுக்குச் சாயமும் போட்டிருப்பதைக் கண்டாள்.

முத்தம்மாள் தன் அலங்கோலமான உருவத்தை ஒருமுறை பார்த்துக் கொண்டாள். சாயம் போன நூல் புடவையும், எண்ணெய் காணாத தலையும்; இப்படி இந்தப் பெண் தாம்தூம் என்று செலவு செய்யத்தானா அவள் பொரியும் வெயிலையும், பொழியும் மழையையும் லட்சியம் பண்ணாமல் வாழ்ந்து வருகிறாள்? பூங்கொடி புதுச் சேலை கூட உடுத்தியிருக்கிறாளே!

ஃ ஃ ஃ

முத்தம்மாளுக்குத் தொண்டையை அடைத்துக் கொண்டு துக்கம் பொங்கி வந்தது.

சற்றைக் கெல்லாம் படம் ஆரம்பித்தது.

அங்கேயும் அதே கதைதான்! அம்மா இடியாப்பம் சுட்டு விற்பவள். மகள் நாகரிகமாக உடுத்திக்கொண்டு வேலைக் கொன்றாகக் காதலனைப் பார்க்கில் சந்திக்கிறாள்; ஆடிப்பாடி மகிழ்கிறாள். ''நல்ல வேளை! நம்ப பொண்ணுக்கு சந்தியில் ஆடிப்பாடி காதல் செய்யத் துணிவுவரவில்லை?'' என்றுமுத்தம்மாள் நினைத்துக் கொண்டாள்.

படம் அவளுக்கு ரசிக்கவில்லை. இடைவேளையின்போது விளக்குகள் எரிந்தன. டீக்காரப் பையனிடம் டீவாங்கிக் குடித்துக் கொண்டே பின்னால் திரும்பிப் பார்த்தாள்.

பூங்கொடியும் அவள் தோழிகளும் ஆளுக்கொரு ஐஸ் கிரீம் வாங்கிச் சுவைத்துக் கொண்டிருந்தனர். முத்தம்மாள் பசி பொறுக்க முடியாமல் முறுக்கு வாங்கியபோது பூங்கொடி இரண்டு சாக்கலேட் பார்கள் வாங்கினாள்.

விளக்குகள் அணைந்தன. படம் ஓட ஆரம்பித்தது. இடியாப்பக்காரிக்கும், மகளுக்கும் சண்டை ஆரம்பமாகியது. ஒட்டடைக் குச்சிக் காதலனைத்தான் திருமணம் செய்து கொள்ளப் போவதாக மகள் கூற, தாய் மறுக்கிறாள்.

''ஆமா, உடம்பை ஒடிச்சி வேலை செய்வானா இந்தப் பையன்? கூலிக்கு சராய் வாங்கி மாட்டிக்கிட்டு, புகை ஊதிக் கிட்டு ஷோக்கா நின்னா ஆம்பிளை ஆயிடுவானா? அவ சொல்றது நல்லதுக்குத்தானே' என்று திரைப்படத் தாய்க்குத் தன் ஆதரவை மனப் பூர்வமாக அளித்தாள்'' முத்தம்மாள்.

படம் முடிந்தது!

எல்லோருமாக ஒரு டாக்ஸி பிடித்து அவரவர் வீட்டுக்குப் போகப் புறப்பட்டார்கள்.

முத்தம்மாள் சுருக்கு வழியாக வீட்டிற்கு நடந்தே வந்து சேர்ந்தாள்.

பூங்கொடி வழியில் தன் ஒப்பனையைக் கலைத்து விட்டு, வீடு திரும்பும்போது, முத்தம்மா பாயையும், தலையணையையும் எடுத்துக்கொண்டு வெளி வாசலுக்குக் கிளம்ப ஆயத்த மானாள்.

''அம்மாவ்! நீ இப்பத்தான் வியாபாரத்தை முடிச்சிக்கிட்டு வர்றியா அம்மா?''

''ஏண்டி?'' என்று எரிச்சலுடன் திரும்பிக் கேட்டாள் முத்தம்மாள்.

''சும்மாத்தான் கேட்டேன் அம்மா. சோறாக்கலை? நான் திரும்பி ஸ்கூலுக்குப் போயிட்டு வர்றேன் அம்மா. யாரோ மேலதிகாரி வர்றாங்களாம், வேலையை முடிச்சிக்கிட்டு போங்கன்னு ப்யூன், வந்து கூப்பிட்டான்....''

முத்தம்மாள் அழுத்தலாகச் சிரித்தாள்.

''படம் சுத்த கயிலாத்துப் படம், அதைப்போய் பாத்தமே.... தூ!.... பொம்பளையா அவ! நடுத் தெருவிலே என்ன ஆட்ட பாட்டம் வேண்டிக் கிடக்குதோ? ஸ்கோலுக்குப் போறாளாம்!''

பூங்கொடியின் முகம் வெளுத்தது.

''ஏம்மா! சினிமாவுக்குப் போயிட்டு வர்றியா?''

''ஆமாம் போயிட்டுத்தான் வர்றாங்க?''

''கூட யார் வந்தாங்க?''

''என் கூட யார் வருவாங்க சொல்லு? உன்னாட்டம் நான் படிச்சிருக்கேனா? ஸ்கோலுக்குப் போயி டீச்சர் வேலை பார்க்கிறேனா? நாலு பேர் கூட வர்றத்துக்கு?''

பூங்கொடி அயர்ந்து நின்றாள்.

''ஏண்டி அப்படி முழிக்கிறே! ஒண்ணரை ரூபாய் கொடுத்துக்கிட்டுப்படம் பார்க்கப் போவே நீ. ஐஸ்கிரீம் வாங்கித் துன்னுவே. எல்லாமே சினிமாவாப் போச்சு இந்தக்காலத்துலே. நீயும்தான் ஒட்டடைக் குச்சிமாதிரி ஒருத்தனைக் காதல் செய்யறே. சினிமாவிலே வந்த ஆத்தாகாரிமாதிரிநானும் சொன்னேன் ஒனக்குப்பிடிச்சிருந்தா அந்தப் பையனையே கட்டிக்க ஆனா. பின்னாடி அவன் உன்னை வச்சுக்காப்பாத்துவானா, இல்லை, நீ சம்பாரிச்சிக் கொடுத்தா வாங்கிப் புகை ஊதுவானான்னு முதல்லேதெரிஞ்சுக்க. போவுதே 'புத்தி' ஒங்களுக்கு''

முத்தம்மாள், வாய்ப் புகையிலையை வெளியேதுப்பிவிட்டு மீண்டும்கூறினாள்.

''இந்தாப்பாரு! உன் இஷ்டம். அவனையேகட்டிக்க. ஆனா. இப்படி வீட்டை ஏமாத்திக்கிட்டு திரியாதீங்கோ. அவன் அப்பன் ஆத்தாகிட்டே சொல்லி மரியாதையா பொண்ணு கேக்கச் சொல்லு. நீ அவனைப் பார்த்துப்பேசறதை இனிமே நிறுத்திக்க.... இல்லேன்னா ஸ்கோல் வேலையை விடு.... இதெல்லாம் ஒண்ணும் ரகசியமில்லை. தெரிஞ்சுக்க....''

பூங்கொடி வாய் திறக்காமல் தலை குனிந்து நின்றிருந்தாள்......





# கதையின் கதை

ஸரோஜா ராமமூர்த்தி

மஞ்சள் நிற ஆரணிப் பட்டில் கருப்புக் கரை போட்ட பாவாடை, மருதாணிச் சிவப்பில் மேலாப்பு, வெள்ளைப் பட்டில் ரவிக்கை. அவள் ஒய்யாரமாக அசையும் போது ஆடிக் குலுங்கும் ஜிமிக்கிகள். அதற்குத் தாளம் போடுவது போல் தலைப் பின்னலில் ஆடித் துவளும் பட்டுக் குஞ்சலங்கள். கோதை நல்ல சிவப்பில்லை. மாநிறம்தான். கண்களில் ஒரு கவர்ச்சியும், பேச்சில் ஒரு துடிப்பும் நிறைந்தவள். மேலாப்புத் தலைப்பைக் கையில் சுற்றிப் பிடித்துக் கொண்டே மஞ்சள் குங்குமத்துக்காக மணிவண்ணன் வீட்டுக்குள் சரசரவென்று நுழைந்தாள் கோதை. ஒரு நிமிஷம் தாமதித்திருந்தால், எதிரில் பந்தாடப் புறப்பட்டுக் கொண்டிருந்த மணிவண்ணன் மீது மோதிக் கொண்டிருப்பான். சட்டென்று நகர்ந்து அவளுக்கு வழி விட்டான் மணிவண்ணன். நான்கு விழிகளும் ஒரு விநாடிகாலம் ஒன்றை ஒன்று, விழுங்கி விடுவதுபோல் பார்த்தன. 'விட்ட குறை, தொட்ட குறை' என்று சொல்வார்களே, அதுமாதிரி மணிவண்ணன் மனதில் அந்தப் பெண்ணின் முகம் புகைப் படம் போலப் பதிந்து விட்டது. கோதையின் உள்ளத்தில் ஒரு புயல். முகத்தில் முத்துக்களாக அரும்பி நின்ற வியர்வை வழிய, கடைக்கண் பார்வையை அவன் மீது வீசிவிட்டுக் கூடத்துக்குள் கொலு வைத்திருந்த இடத்துக்குச் சென்று அமர்ந்தாள்.

மணிவண்ணன் கையில் பிடித்திருந்த 'டென்னிஸ் ராக்கட்'டைச் சுழற்றிக் கொண்டே மறுபடியும் அவளைப் பார்வையால் தாக்கினான். ஆனால், அவள் பார்க்கவில்லை. 'சற்று முன் வீசிய ஒரு கடைக்கண் பார்வை போதும் இந்த ஜன்மம் முழுவதும் அவனை வசப்படுத்த!' என்று உறுதி பூண்டவள்போல், தலை குனிந்து நிலத்தில் கோலம் போட்டுக் கொண்டிருந்தாள்.

"வந்துவிட்டாயா கோதை? வா" என்று கூப்பிட்டுக் கொண்டே ராஜம்மாள் பழத்தட்டுடன் கூடத்துக்கு வந்தாள். குனிந்த தலை நிமிராமல் உட்கார்ந்திருக்கும் கோதையையும் வாயிற்படி அருகில் நிற்கும் தன் மகனையும் ஒரு கணம் பார்த்துவிட்டு, ஏதோ புரிந்தவள்போல் தலையை ஆட்டிக் கொண்டாள்.

"மணி! இந்தக் குழந்தை தாண்டா பத்திரிகைகளுக்குக் கதை எழுதுகிறாள், உன்னைப் போல!" என்றாள் மகனின் கருத்தை அறிந்துகொண்டே.

"ஓஹோ! அப்படியா? எந்தெந்தப் பத்திரிகைகளில் கதைகள் வெளியாகி இருக்கின்றன?" என்று தாயைப் பார்த்தே ஒரு கேள்வியைப் போட்டு வைத்தான். அவள் கதைகளைப் படித்திருந்ததாக அவனுக்கு லேசாக ஒரு ஞாபகம்.

"சொல்லேன் கோதை! என்ன இப்படி வெட்கப்படுகிறாயே!" —ராஜம்மாள் தட்டில் வெற்றிலைகளை அடுக்கி வைத்துக் கொண்டே பேசினாள்.

"எனக்கு நேரமாகிறது மாமி. வீட்டில் மாடு கறக்க இடையன் வந்து விடுவான். சந்துரு (அவள் தம்பி) பள்ளிக்கூடத்திலிருந்து வருவான். வெற்றிலை சீவல் கொடுங்கள்."

"இந்தக் காலத்துப் பெண்ணாகவே இல்லையே நீ! எதற்கெடுத்தாலும் வெட்கப்படுகிறாயே இப்படி!"

கழுத்தில் சந்தனத்தைப் பூசி, நெற்றிக்குத் தன் கையாலேயே குங்குமமிட்டு வெற்றிலைச் சீவலைக் கோதையிடம் கொடுத்தாள் ராஜம்மாள்.

வாசற்படி அருகில் நிற்கும் மணிவண்ணன் சற்று ஒதுங்கிக் கொண்டான், கோதை வருவதற்காக. தயங்கி நிற்கும் பெண்ணைப் பார்த்து, "நமஸ்காரம்! உங்களைப் பார்த்ததில் மிகவும் மகிழ்ச்சி" என்றும் தெரிவித்தான்.

கோதை, புன்னகை தவழும் முகத்தில் அரும்பும் சிரிப்புடன், வாயிற்படியைத் தாண்டித் தலை குனிந்தவாறே தன் வீட்டுக்குப் போய்விட்டாள்.

## 2

மகனுக்கு அந்தப் பெண்ணை அறிமுகம் செய்வித்தது தாய்க்குப் 'போதும், போதும்' என்றாகிவிட்டது. அன்று இரவு சாப்பிடும்போது மணிவண்ணன் யோசனையில் ஆழ்ந்திருந்தான். திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டவன் போல், "போயும் போயும், இந்தக் கண்டலையா கோதைக்குக் கொடுத்தாய் அம்மா? அதை வைத்துக்கொண்டே அவள் ஒரு கதை எழுதிவிடப் போகிறாள் பார்!" என்றான் மணிவண்ணன்.

"கண்டலையும், காய்க்காயையும் வைத்துக்கொண்டு கதை எழுதினால், ரொம்ப அழகாக இருக்கும்! நீ இப்படியே பேசாமல் இருக்கிறாயே மணி. அந்த வக்கீல் வீட்டுக்காரர்கள் உன் ஜாதகத்தை வாங்கிப் போனார்கள். ஜாதகம் சரியாக இருக்கிறதாம். நிச்சயம் செய்துவிட்டால் தை பிறந்ததும் கல்யாணம் நடந்து விடும். கல்யாணம் என்றாலே காத வழிக்கு ஓடுகிறவனாயிற்றே நீ? உன் இஷ்டம் இல்லாமல் நான் என்ன சொல்வது என்று பேசாமல் இருந்துவிட்டேன்!"

மணிவண்ணன் பதில் கூறுவதற்கு முன்பு வாசல் கதவைத் திறந்துகொண்டு கோதையின் தம்பி சந்துரு உள்ளே வந்தான்.

"மாமி! அக்காவுக்குப் பொழுது போகவில்லையாம். படிக்க ஏதாவது புஸ்தகம் வாங்கி வரச் சொன்னாள்" என்று கேட்டான்.

"புஸ்தகமா? உன் அக்கா இங்கிலீஷ் படிப்பாளா? இல்லே, தமிழ்ப் புஸ்தகம்

கள்தான் வேண்டுமா?" மணிவண்ணன் கேட்டுக் கொண்டே மோர் சாதத்தை இரண்டு பிடியாக அள்ளிப் போட்டுக் கொண்டு எழுந்துவிட்டான்.

"இரண்டும் படிப்பாள் ஸார்."

"ஆங்கிலம் படிப்பாள். தமிழ்க் கதைகள் எழுதுவாள். ஹூம்—இன்னும் என்ன தெரியும் உன் அக்காவுக்கு?" என்று கேட்டான் மணிவண்ணன், தன் அறையில் நாற்காலியில் சாய்ந்து கொண்டு.

"சமைக்கத் தெரியும். பாடத் தெரியும். பேசத் தெரியும்" என்று சந்துரு சமத்காரமாக அடுக்கிக் கொண்டே போனான்.

"உஸ்—பொய் சொல்லுகிறாயே தம்பி. உன் அக்காவுக்குப் பேசத் தெரியாது. வாயைத் திறக்க மாட்டாள்! அதுமட்டும் நிச்சயம் இல்லையா?"

"இல்லை ஸார்! அனாவசியமாகப் பேச மாட்டாள்! புஸ்தகம் கொடுக்கிறீர்களா ஸார்? அப்பா வந்து விடுவார். படிக்க வேண்டும்."

மணிவண்ணன் புஸ்தக அலமாரியைக் குடைந்தான். 'கமலாம்பாள் சரித்திர'த்தையும், வேறொரு ஆங்கில புஸ்தகத்தையும் எடுத்து மேஜை மீது வைத்தான்.



அதற்குள் வாசலில் பேச்சுக் குரல் கேட்டது. பரபரவென்று கோதை, அரக்குத் தாவணி பறக்க ஓடி வந்தாள்.

"மாமி! சந்துரு இங்கே வந்தானா? அப்பா வந்து விட்டார், மாமி. இங்கே வந்து அரட்டை அடித்துக் கொண்டு நிற்கிறானே."

"நமஸ்காரம்! புஸ்தகங்கள் கேட்டீர்களாம். தேடித் தருவதற்கு நேரமாகி விட்டது!"

மணிவண்ணனின் கண்களின் காந்த சக்தியால் தாக்கப்பட்ட கோதை, தலை குனிந்து கொண்டே புஸ்தகங்களைப் பெற்றுக் கொண்டாள்.

" 'தாங்க்ஸ்'. வருகிறேன் மாமி" என்று சாஜம்மாளிடம் சொல்லிவிட்டுச் சிட்டாகப் பறந்து விட்டாள். அந்தத் 'தாங்க்ஸ்' தனக்கா, அம்மாவுக்கா என்பது புரியாமல் அன்று இரவு பூராவும் தவித்தான் மணிவண்ணன்.

புஸ்தகங்களுடன் வீட்டுக்குச் சென்ற கோதை சாவதானமாகப் புஸ்தகத்தைத் திறந்தாள். அதனுள்ளிருந்து துண்டுக் கடிதம் ஒன்று கீழே விழுந்தது.

"புஸ்தகத்தைப் படித்து விட்டுத் தங்கள் கருத்தை அறிவிக்க வேண்டும். நேரிடையாக விவாதிக்கலாம் என்றால், தாங்கள்தான் நிமிர்ந்து பார்க்கவும், பேசவும் அஞ்சுகிறீர்களே!—மணிவண்ணன்"

கோதை தன் அழகிய விழிகளை மூடிக் கொண்டே யோசனை செய்தாள். 'என்ன இருந்தாலும், ஆண் பிள்ளைகள் துணிச்சல் உள்ளவர்கள்தான். இவர் ஒரு எழுத்தாளராகத்தான் இருக்கட்டுமே. யோசனையை அறிய வேண்டுமானால் கடிதம் எழுதுவதா? அதுவும் கையொப்பமிட்டு ஒரு விவாகம் ஆகாத பெண்ணுக்குக் கடிதம்எழுதுவதா?' என்று யோசித்தாள். அவளுக்குக் கோபம் வந்தது. ஆனால், மணிவண்ணன் சிறந்த எழுத்தாளன். பத்திரிகை உலகில் கோதைக்கு முன்பே ஒரு உயர்ந்த ஸ்தானத்தை வகிப்பவன். எல்லாவற்றிற்கும் மேலாக, வருஷம் தவறாமல் தீபாவளி மலர்களுக்குக் கதைகள் எழுதுபவன். அவளுடைய மற்ற கதைகளைப் பத்திரிகைகளில் பிரசுரிக்கிறார்களே தவிர, 'தீபாவளி மலருக்கு' என்று எந்த ஆசிரியராவது கதை எழுதச் சொல்லி, அவளை இதுவரையில் கேட்டதில்லை. ஒரு வேளை இந்தச் சிறு பெண் என்ன எழுதிவிடப் போகிறாள் என்று நினைக்கிறார்களோ? கோதையின் நெஞ்சில் இது ஒரு தீராத குறையாக இருந்து வந்தது. இன்னும் பதினைந்து நாட்களில் தீபாவளி வருகிறது. நவராத்திரி முடிந்து விட்டது. அநேகமாகத் தமிழ் நாட்டுச் சிறந்த பத்திரிகைகளில் மணிவண்ணனின் கதையைத் தாங்கி வராத தீபாவளி மலரே இல்லை எனலாம்.

கோதை ஒரு தீர்மானத்துக்கு வந்தாள். 'இந்த வருஷம் தீபாவளி மலரில் கதை வெளியானால்தான், அந்தச் சன்மானத்துக்குத் தீபாவளிக்குப் புடவை வாங்கிக் கொள்வது. இல்லாவிட்டால் புதுப் புடவையே தனக்கு வேண்டாம்' என்று தீர்மானித்துக் கொண்டாள். வீட்டில் இருப்பவர்கள் கேட்டால் தேசத்தின் பிதாவாகிய காந்தீஜி இறந்த வருஷம். ஆகையால், தான் கோடி உடுக்கவில்லை என்று சொல்லிவிடலாம் என்றும் முடிவு கட்டிக் கொண்டாள். மணிவண்ணன் தனக்குக் கடிதம் எழுதியதையே கருத்தாக அமைத்துத் தீபாவளி மலருக்குக் கதை எழுதுவது என்று தீர்மானித்தாள். மலரில் கதை வெளியானால், 'மலரில் வெளியான என் கதை எப்படி!' என்று தைரியமாக நிமிர்ந்து மணிவண்ணனைப் பார்த்துக் கேட்க வேண்டும் என்றும் நினைத்துக் கொண்டாள்.

இரண்டு தினங்களுக்குப் பிறகு கதைப் புஸ்தகங்கள் இரண்டையும் எடுத்துப் போய்ச் சந்துரு மணிவண்ணனிடம் கொடுத்தான்.

"என்னடா தம்பி! இரண்டு நாட்களில் படித்து விட்டாளா?" என்று வெகு ஜாக்கிரதையாக அவைகளை வாங்கி வைத்துக் கொண்டான். அதனுள் கோதை ஏதாவது பதில் வைத்து அனுப்பி இருந்தால் பையன் பார்த்து விடப் போகிறானே என்று உள்ளூர பயம்!

"வேறு ஏதாவது புஸ்தகம் வேண்டுமாடா?" என்றும் கேட்டான்.

"வேண்டாம் ஸார்! அக்கா தீபாவளி மலருக்குக் கதை எழுதுகிறாள். ஒழிவிருக்காது."

"கதை அனுப்பும்படி ஆசிரியர் எழுதி இருக்கிறாரா? எந்தப் பத்திரிகைக்கு எழுதுகிறாள்?"

"ஐயையோ! நான் உங்களிடம் சொல்லி இருப்பது தெரிந்தால் என் முதுகுத் தோலை உரித்து விடுவாள் ஸார். ஏதோ தவறுதலாகச் சொல்லி விட்டேன். அவளைக் கேட்டு விடாதீர்கள்" என்று சந்துரு கெஞ்சினான்.

"பயப்படாதேடா, நான் ஒன்றும் சொல்லமாட்டேன்" என்று சொல்லி விட்டுக் கோதை கொடுத்தனுப்பிய புஸ்தகங்களைத் திறந்தான். இரண்டிலும் அவன் எதிர்பார்த்த கடிதம் ஒன்றும் கிடைக்கவில்லை. அதற்கு மாறாக புஸ்தகம் பூராவும் அத்தரின் மணம் கம கம வென்று வீசியது. அந்த மணத்தின் இன்பப் போதை அவன் மனத்தைக் கிறங்க வைத்தது. அவ்வாசனையை ரசித்துக் கொண்டே, "ஏண்டா! உன் அக்காவுக்கு வாசனை என்றால் ரொம்பப் பிடிக்குமோ?" என்று கேட்டான் மணிவண்ணன், சந்துருவைப் பார்த்து.

"பிடிக்கும் ஸார்! நல்ல வாசனைகள், மலர்கள், நல்ல விஷயங்கள் எல்லாமே அக்காவுக்குப் பிடிக்கும்!"

"சரிதான்! நன்றாக எழுதுகிறவனைப் பார்த்தால்தான் பிடிக்காதாக்கும் உன் அக்காவுக்கு! அதான் அவள் கதை எதுவும் தீபாவளி மலரில் வரவில்லை. போய்ச் சொல்லுடா, இந்த மாதிரி நான் சொன்னேன் என்று!" கோதை தன்னை லட்சியம் பண்ணவில்லையே என்று மணிவண்ணனுக்குக் குறை, கோபம் எல்லாம்.

"ஆகட்டும் ஸார்! அப்படியே சொல்கிறேன்" என்றான் சந்துரு, லேசாகச் சிரித்துக்கொண்டே.

மணிவண்ணன் பக்கென்று சிரித்து விட்டான்.

"அடபாவி! நான் தமாஷுக்காகச் சொன்னேன். இதைப் போய்ச் சொல்லு ...ர்களோ? உன் அக்கா தீபாவளி மலருக்குக் கதை எழுதி உன்னைப் 'போஸ்ட்' செய்யச் சொன்னால் என்னிடம் அந்தக் கதையைக் கொண்டு வந்து கொடுக்கிறாயா? பயப்படாதே. விஷயம் காதும் காதும் வைத்த மாதிரி நடந்துவிடும். கதையை நான் திருத்தி, மாற்றி எழுதுகிறேன். நீ அதைக் 'காப்பி' செய்து அனுப்பி விடலாம். என் கையெழுத்தென்று ஆசிரியரும் சந்தேகப்படமாட்டார்!"

"அக்காவுக்குத் தெரிந்தால் என்னைக் கொன்று விடுவாள் ஸார்! அவளுக்குத் தானாகவே முன்னுக்கு வரவேண்டும் என்று ஆசை."

"வரட்டுமே! யார் வேண்டாம் என்கிறது? கதையைப் பார்த்துவிட்டுத் தருகிறேனே."

"ஆகட்டும் ஸார்! தீபாவளி மலரில் கதை வெளியானால்தான் ஸார் அக்கா தீபாவளிக்குப் புதுப் புடவை வாங்கிக் கொள்வாள். இல்லாவிட்டால் இல்லையாம். இப்படி ஒரு சபதம் வேறு அவள் செய்து கொண்டிருக்கிறாள். அது எனக்குமட்டும் தான் தெரியும்."

## 3

ஊரெங்கும் பட்டாசின் சப்தம். வீடெங்கும் நெய்யின் நறுமணம். தீபாவளி வந்துவிட்டது. தமிழ் நாட்டின் சிறந்த எழுத்தாளர்களின் கதைகளைத் தாங்கி மலர்கள் வரப் போவதாகத் தினசரிகளில் விளம்பரம். கோதைக்குப் பட்சணம் செய்யத் தோன்றவில்லை. பட்டாசு சுட வேண்டும் என்று ஆசையில்லை. வண்ணச் சேலை வாங்க வேண்டும் என்று துடிப்பில்லை. தீபாவளி மலரில் தன்னுடைய கதை ஒன்று வெளியாக வேண்டும். ஆயிரமாயிரம் ரசிகர்கள் உள்ளம் நிறைந்து தன்னைப் பாராட்ட வேண்டும் என்கிற ஒரே ஆசைதான். கோதை உணர்வில்லாமல் திரிந்து வந்தாள். "லட்டுத் தேய்ப்பதற்குக் காண்டி வாங்கி வா" என்று கோதையை அவள் தாய், ராஜம்மாளின் வீட்டுக்கு அனுப்பினாள்.

"கோதை! தீபாவளி மலருக்குக் கதை எழுத இருக்கிறாயோ நீ?" என்று கேட்டாள் ராஜம்மாள், மைசூர்ப்பாகைத் துண்டு போட்டுக்கொண்டே.

"இல்லையே மாமி? என்னை மதித்து யாரும் எழுதச் சொல்வதில்லை. நான் என்ன அவ்வளவு கெட்டிக்காரியா?"

கோதை மனமறிந்து பொய் சொல்லியது இதுதான் முதல் தடவை.

"என்னடி அம்மா அப்படிச் சொல்லிவிட்டாய்? நீ கொள்ளைச்சமர்த்து என்று நான் தினமும் மணிவண்ணனிடம் சொல்லிக்கொண்டே இருக்கிறேன்!"

"ஆமாம்—நீங்கள்தான் மெச்சிக்கொள்ள வேண்டும்!"

"எல்லோரும் மெச்சுவார்கள். அந்தக் காலமும் வரப் போகிறது!" மணிவண்ணன் மைசூர்பாகைப் பிட்டு வாயில் போட்டுக்கொண்டே கோதையைப் பார்த்து இவ்விதம் கூறினான். கோதையின் முகம் சிவந்தது. லட்டுக் காண்டிகளை எடுத்துக்கொண்டு போய்விட்டாள்.

கோதையின் வீட்டில் ஒரு சலசலப்பு. "நாளுங்கிழமையுமாகப் புடவை வேண்டாமாமே. நன்றாக இருக்கிறது கூத்து" என்றாள் அவள் தாய்.

"மலரில் கதை வந்து விடும் கோதை. புதுப் புடவை வாங்கிக் கொள்" என்று கூற சந்துருவின் மனம் துடித்தது. 'இன்னும் ஒரு நாள் தானே பொறுக்க வேண்டும்' என்று பேசாமல் இருந்துவிட்டான் அவன்.

வானம் நிர்மலமாக இருந்தது. அந்த வருஷம் ஐப்பசி மாதம் அடை மழை என்று பெய்யவில்லை. வீட்டிலே பெரிய



வர்கள் புடவை வாங்கிக் கொள்ளவில்லை என்று கோபிக்கிறார்கள். உள்ளத்திலே மகிழ்ச்சி இல்லை. மணிவண்ணன் எதிரில் தானும் ஒரு சிறந்த எழுத்தாளி என்று புகழ் பெற வேண்டும் என்று கோதை ஆசைப்பட்டது நிறைவேறுமா? கோதை பெருமூச்செறிந்தாள், வானத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டே. அடுப்பங்கரையில் அம்மா லட்டு தேய்த்துக் கொண்டே சொன்னாள்:

"என்னவோ பிரும்மஹத்தி பிடித்த மாதிரி தானும் கிழ[illegible]மாக இப்படி மாடியில் போய் உட்கார்ந்திருக்கிறதே இந்தப் பெண். அதன் பேச்சைக் கேளாமல் ஊதாப் பாவாடையும், தாவணியும் வாங்கி வைத்திருக்கிறேன். விடியற்காலம் ஸ்நானம் செய்து உடுத்திக் கொள்ளுமோ கொள்ளாதோ. அசடுதான் போங்கள்! தீபாவளி மலரில் கதை வரவில்லையாம். அதற்குத்தான் இந்த ஏக்கம்!"

ஏக்கம்தான்! கோதை கண்களில் நீர் ததும்ப, தாரைகள் மின்னும் வானத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டே உட்கார்ந்து கொண்டிருந்தாள். மணிவண்ணனுக்குத்தான் எவ்வளவு புகழ்! எவ்வளவு பெயர்! ஒரு வேளை அவரிடம் மலரின் கதையை அனுப்பி இருந்தால் திருத்திக் கொடுத்திருப்பாரோ? பிரசுரமாகி இருக்குமோ? மணிவண்ணன் வீட்டுக்குத் தீபாவளி மலர் வந்துவிட்டதா என்று கேட்க வேண்டும் என்று நினைத்தாள் கோதை. அவளுக்கு வெட்கமாக இருந்தது.

நக்ஷத்திர ஒளியில் உட்கார்ந்திருந்த கோதையைத் தேடிக் கொண்டு சந்துரு கையில் ஒரு புஸ்தகத்துடன் மாடிக்கு வந்தான்.

"அக்கா! உன்னுடைய கதை தீபாவளி மலரில் வெளியாகி இருக்கிறது. மணிவண்ணன் பத்திரிகாலயத்துக்குப் போயிருந்தாராம். உனக்கு அவர்கள் அனுப்ப வேண்டிய மலரையும், சன்மானத்தையும் நேரிலே பெற்று வந்திருக்கிறார். அவர் கதை இந்த வருஷம் மலரில் வெளியாகவில்லை. தான் ஒன்றும் எழுதவில்லை என்றும், அதற்குப் பதிலாக உன் கதையைப் பிரசுரிக்க வேண்டும் என்றும் கேட்டாராம்."

"என் கதையை அங்கே கொண்டு போய் நீ கொடுத்தாயடா?" ஆத்திரம் தொனிக்கக் கூறினாள் கோதை.

"ஆமாம் அக்கா! நானாகவே கொடுக்கவில்லை. மணிவண்ணன்தான் என்னைத் தூண்டி, வற்புறுத்தி வாங்கிப் பார்த்தார்." சந்துரு தமக்கையைப் பயத்துடன் பார்த்தான்.

கோதை அவசரமாகப் புஸ்தகத்தைப் பிரித்தாள். மறுபடியும் அதனுள்ளிருந்து ஒரு துண்டுக் கடிதம்!

"கதை வெளியாகி விட்டது. காரணம் நான் அல்ல, நீதான். வெறுமனே கதையைப் படித்தேன். வேறொன்றும் செய்யவில்லை. நீ கோபக்காரி என்பது தெரியும். கதை நன்றாக இருக்கிறது. எனக்கு எழுத முடியவில்லை. 'என் கதைக்குப் பதிலாக இதை மலரில் போடுங்கள்' என்று ஆசிரியரிடம் கூறி, உன் கதையைக் கொடுத்தேன். வேறு தவறு ஒன்றும் செய்யவில்லை.

"நாளைக் காலை ஊதா நிறப் பாவாடையும், தாவணியும் அணிந்து, கங்கா ஸ்நானம் செய்த கூந்தலை பின்னலிட்டு, மலர் சூடி என்னைத் தேடி—இல்லை, எங்கள் மனை தேடி வருவாய் என்று நினைக்கிறேன். வருவாயா கோதை?

"அடுத்த தீபாவளியின் போது நம் இருவரின் கதைகளும் தீபாவளி மலரில் இடம் பெறும். ஆண்டவன் அருளுவான்."

வீடு வீடாக மேளக்காரன் இசை ஊதி எல்லோரையும் எழுப்பினான். கோதை சிரத்தையுடன் தன்னை அலங்கரித்துக் கொண்டாள்.

"அம்மா! ராஜம் மாமி வீட்டுக்குப் பட்சணம் தருகிறாயா? போய் நமஸ்காரம் பண்ணிவிட்டு வருகிறேன்."

பட்சணத் தட்டுடன் தன் வீட்டினுள் நுழைந்த கோதையை தனக்கே உரித்தான புன்னகையுடன், "நமஸ்காரம். கங்கா ஸ்நானம் ஆயிற்றா?" என்று மணிவண்ணன் விசாரித்தான்.

கோதை வெட்கத்தால் சிறிது தயங்கினாள்.

"நமஸ்காரம். ஆயிற்று. உங்கள் உதவிக்கு என் நன்றி" என்று அவனைத் தலை நிமிர்ந்து பார்த்து முறுவலித்தாள்.

"கோதை! மத்தியானம் அம்மா வீட்டில்தானே இருப்பாள்? உன் ஜாதகத்தை வாங்கி வர நான் வருகிறேன். அடுத்த வருஷம் நீங்கள் இரண்டு பேருமாகத் தீபாவளி மலருக்குச் சேர்ந்து கதை எழுதலாம்" என்றாள் ராஜம்மாள்.

அப்பொழுது கோதையின் சிவந்த முகத்தில், மணிவண்ணன் ஏற்றும் மத்தாப்பின் ஒளி பரவி, மேலும் அதைச் சிவப்பாக்கியது.

# அவள் புனிதமானவள்!

ஸரோஜா ராமமூர்த்தி



வானொலி பெட்டியிலிருந்து இசை பெருகி வழிந்தது.

'கற்பு நிலையென்று சொல்ல வந்தார்—இரு
கட்சிக்கும் அதை பொதுவில் வைப்போம்...'

என்கிற பாரதியாரின் பாடலை யாரோ அழகாகப் பாடிக் கொண்டிருந்தார்கள். முதல் நாள் மாலை ஒரு பிரசங்கத்தில் கற்பைப் பற்றிப் பிரசங்கியார் மிகவும் அருமையான ஒரு பிரசங்கம் செய்தார். சிலப்பதிகாரத்திலிருந்தும், கம்பராமாயணத்திலிருந்தும் மேற் கோள்களுடன் விளக்கினார். பிரசங்கத்தை ரசித்துக்கொண்டிருக்கும் போது தான், ஒரு ஆச்சரியமான விஷயத்தைக் கேள்விப்பட்டேன். அந்த விஷயம் ஆச்சரியத்தை மட்டும் ஏற்படுத்தவில்லை. எனக்கு அதிர்ச்சியையும் ஏற்படுத்தியது. அப்படியும் இருக்குமா? வசந்தா அத்தகைய பெண் இல்லையே! அவளுடன் நாலைந்து வருஷங்கள் ஒன்றாகப் படித்திருக்கிறேனே! அவள் தெருவில் நிமிர்ந்து நடந்து நான் பார்த்ததில்லை. உரக்கச் சிரித்துக் கேட்டதில்லை. அடக்கமும் அறிவும் நிரம்பிய அந்தப் பெண்ணா இத்தகைய அவதூறுகளுக்கு ஆளாகி இருக்கிறாள்? என்பதை நினைத்தபோது என் உள்ளம் அந்தச் செய்தியை ஆதார மற்றதென்றே கருதியது.

கூட்டத்தில் உட்கார்ந்திருந்த போது என் அருகில் ஒரு பெண்மணி வந்து உட்கார்ந்தாள். எங்கேயோ பார்த்த முக



மாகஇருந்தது. சட்டென்று நினைவு வரவில்லை. ஆனால் அவள் என்னைப் புரிந்து கொண்டு விட்டாள்.

'என்னைத் தெரியவில்லையா உனக்கு? நீயும், வசந்தாவும் ஐந்தாவது படிவம் படிக்கும்போது நான் அந்தப் பள்ளிக்கூடத்தில் நாலாவது படிவத்தில் வந்து சேர்ந்தேனே...' என்றாள் அந்தப் பெண்.

சட்டென்று எனக்கு நினைவு வந்தது அவளைப் பற்றி. 'பெரிய வம்புக்காரி. குறும்பு நிறைந்தவள். ஜாடைமாடையாகப் பிறரைப் பற்றியே பேசுகிறவள்' என்று நானும், வசந்தாவும் முடிவு கட்டி வைத்திருந்தோம் அவளைப்பற்றி. 'ஓ! நன்றாக நினைவிருக்கிறது!' என்றேன் சிரித்துக்கொண்டே. பிறகு அவள் பக்கம் திரும்பி 'வசந்தாவைச் சமீபத்தில் எங்காவது பார்த்தாயா? கல்யாணமாகி விட்டதா? பம்பாயிலிருந்து வந்த பிறகு எனக்கு அவளைப் பற்றி ஒன்றுமே தெரியவில்லை...' என்று விசாரித்தேன்.

'உனக்குத் தெரியாதா ஒன்றும்?...' என்று வியப்புடன் அந்தப் பெண் என்னைப் பார்த்துக் கேட்டுத் தன் கண்களை அகல விழித்தாள்.

'தெரியாது. என்ன விஷயம்? சொல்லேன்...'

'வசந்தா போய் மூன்று வருஷங்கள் ஆகிவிட்டனவே...' என் இதய ஓட்டம் ஒரு விநாடி தடைபட்டதுபோல் இருந்தது.

'வசந்தா போய் மூன்று வருஷங்கள் ஆய்விட்டனவா? ஏன்? அவளுக்கு என்ன உடம்பு?...'

மேலும் எனக்குப் பிரசங்கம் கேட்க விருப்பமில்லை. 'வசந்தா போய் விட்டாள்' என்கிற சொற்கள் மட்டுமே என் செவிகளில் ஒலித்துக் கொண்டிருந்ததால், பிரசங்கத்தையோ அதன் சாரத்தையோ அறிந்து புரிந்து கொள்ளும் செயலை என் மனம் இழந்து விட்டது.

'வெளியே போய்ச் சற்று பேசலாம் வா' என்று அவள் கைகளைப் பற்றி அழைத்துக்கொண்டு கூட்டத்தை விட்டு வெளியே வந்தேன்.

வெளியே வந்தவள் சிறிது நேரம் மௌனமாகவே நின்றேன். அவள் சொல்லிய செய்தியை என் மனம் நம்பவில்லை. இருந்தாலும், மரணத்தைப் பற்றி யாரும் அவ்வளவு சுலபமாகப் பொய் சொல்ல மாட்டார்கள் என்றும் தோன்றியது எனக்கு. யோசித்துக் கொண்டிருந்த என்னைப் பார்த்து அவள், 'என்ன என் பேச்சில் நம்பிக்கை இல்லையா உனக்கு? வசந்தா போய் விட்டாள். நல்ல முறையில் வாழ்ந்து, நாலு பேருக்கு எதனால் கண்ணியமாக அவள் மறையவில்லை. யாரையோ இழுத்துக்கொண்டு...' என்று சொல்லிக்கொண்டு வந்தவள் என் முகத்தைப் பார்த்துத் திடுக்கிட்டாள்.

'நான் சொல்வதை நீ நம்பவில்லை. நான் கண்களால் பார்த்தேன். முதலில் கண்ணியமாகத்தான் அவள் வாழ்க்கை இருந்து வந்தது. பிறகுதான் அவமானம் நேர்ந்தது. 'ஒரு பெண் எப்படி



மாப்பிள்ளை:-இதோ பார், அந்த ரேடியோவைக் கொஞ்சம் திருப்பி விடேன்.

மனைவி:-ஏன்? சாப்பிடும்போது கூடவா பாட்டுக் கேக்கணும்?

மாப்பிள்ளை:-அதற்கில்லை! பாட்டின் இனிமையிலாவது மறந்துபோய் பலகாரம் உள்ளே போகுமா என்று பார்க்கிறேன்!

---

இருந்தாலும், தன்னுடைய மானத்தைப் பெரிதாக நினைக்க வேண்டும்.' கல்லூரிப் பிரசங்கத்தில் வசந்தா இப்படியெல்லாம் பேசிவிட்டு நடைமுறையில் தவறிப்போனது ஆச்சரியம்தான்' என்றாள் அவள்.

'அவள் வேலையாக இருந்த பள்ளிக்கூடத்தில் வேலை பார்த்து வந்த இன்னொரு ஆசிரியரிடம் அவளுக்குக் காதல் ஏற்பட்டது. அதுவே அவள் வாழ்க்கைக்கும் யமனாக வந்து முடிந்தது...'

காதல் தன்னுள் எவ்வளவோ தத்துவங்களையும், நீதிகளையும் அடக்கிக் கொண்டிருக்கிறது. அது ஒருவருடைய வாழ்க்கைக்கு யமனாக அமைகிறது என்றால் அந்தக் காதல் தேவைதானா? என்று சிந்தித்துப் பார்க்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது அல்லவா? பாவம்! வசந்தா ஏன் இந்தக் காதல் வியவகாரங்களில் ஈடுபடவேண்டும்? பிறவியிலேயே ஏழை. தானாகச் சம்பாதித்து வயிற்றைக் கழுவ வேண்டிய நிர்ப்பந்தம். பார்ப்பவர் உள்ளங்களை தன் பால் ஈர்த்துக்கொள்ளும் அழகு நிரம்பியவள். இம்மாதிரி ஒரு பெண்ணுக்கு இந்தக் காதல் 'பிஸினஸ்' சரிப்படாது என்பது என் அபிப்பிராயம்.

மௌனமாக எனக்குள் சிரித்துக் கொண்டே அந்தப் பெண் சொல்வதை முழுவதும் கேட்டேன். 'அப்புறம் யாரிடமும் சொல்லாமல் அவள் அவருடன் வீட்டை விட்டு வெளியேறிப் போய் விட்டாள்...'

'சரிதான் அம்மா, எனக்கு விவரங்கள் போதும் நான் போய் வருகிறேன்...' என்று சொல்லிக்கொண்டு அங்கிருந்து கிளம்பினேன். மனதிலே ஒரு பெரிய சுமை. அவள்—அதாவது வசந்தா— அவருடன் போய் சொற்ப காலம் வாழ்க்கையை அனுபவித்து விட்டுப் பிறகு ஆற்றிலே கிணற்றிலோ, கடலிலோ— வேறு எப்படியோ—விழுந்து தன் உயிரைப் போக்கிக் கொண்டிருப்பாள். அப்படியென்ன ஒரு தலை எழுத்து இவளுக்கு? படிக்காதவளா? சுயமாக வாழத் தெரியாதவளா? சனியன்! அதன் தலையெழுத்து எப்படி இருந்தது போல் இருக்கிறது' என்றெல்லாம் சிந்தித்துக்கொண்டே வீட்டை அடைந்தேன்.

வீட்டை அடைந்த பிறகும் எனக்கு நிம்மதி ஏற்படவில்லை. கேள்விப்பட்ட விஷயத்தில் ஏதோ குறைபாடு இருந்தது. சொன்னவள் தான் சரியாகச் சொல்லவில்லையோ அல்லது கேட்டவளின் மனம்தான் பலஹீனமாகி விட்டதோ...

ஒன்றும் புரியவில்லை.

## 2

அடுத்த நாள் மாலை வரையில் முதல் நாள் கேட்ட சம்பவத்தைப் பற்றி நினைத்தே என் மனம் ஓய்ந்துபோய் விட்டது. வசந்தா புனிதமானவள் அவள் முறை தவறி நடந்திருக்கமாட்டாள்' என்று ஒரு மனது சொல்லும். 'வசந்தா அப்படி முறை தவறிப் போயிருந்தாலும் இருக்கலாம். இளமையின் மயக்கம் அவள் அறிவை மழுங்கச் செய்து விட்டதோ என்னவோ! என்று இன்னொரு மனம் சந்தேகம் கொள்ளும்.

எவ்வளவோ சீருடனும், சிறப்புடனும் வாழ வேண்டிய இளம் பெண். ஏழையாக இருந்தாலும், நேர்மையாக ஒருவனை மணந்து கொண்டு பிறந்த இடத்துக்கும் புகுந்த இடத்துக்கும் சிறப்பைத் தர வேண்டிய ஒரு பெண் சீர் குலைந்து மாண்டுவிட்டாள் என்பதை நினைத்தபோது எனக்கு உலக வாழ்க்கையில் வெறுப்பும் அலுப்பும் ஏற்பட்டது.

அன்று சிற்றுண்டிகூட நான் சரியாகச் செய்யவில்லை. அலுவலகத்திலிருந்து கணவர் வந்தால் 'தலைவலி' என்று சாக்குச் சொல்லிவிடலாம் என்று பேசாமல் இருந்துவிட்டேன்.

மாலை கணவர் வீடு திரும்பினார். நேராகச் சமையலறைக்கு வந்து 'பார்த்தாயா? ஆறு மாதத்துக்கு முன்பு எழுதிய லீவு இப்பொழுது உத்தரவு ஆகி வந்திருக்கிறது. சயரில் பாஸும் வந்திருக்கிறது. இப்படி மைசூர், பிருந்தாவனம், ஸ்ரீரங்கப்பட்டணம் போய் எல்லாம் வருகிறாயா?' என்று கேட்டார்.

என் மனம் இருந்த நிலையில் எனக்கு எங்காவது போய்விட்டு வர வேண்டும் என்று தான் இருந்தது. ஆகவே, பிரயா

போகிறதை அன்று இதைக் கட்டியவன் நினைத்திருப்பானா...?'

என் கணவர் என்னை கேட்டார் இல் லாதம். ஆனால், நான் வேறு சிந்தனையில் மூழ்கியிருந்தேன். பதில் ஒன்றும் கூறாமல் இருக்கவே அவர் என்னைத் திரும்பிப் பார்த்தார்.

'என்ன இப்படி மூன்றும் பேந்த மாதிரி இருக்கிறாய்? நேற்றிலிருந்து பார்க்கிறேன். உன்னிடம் கலகலப்பே இல்லையே' என்று கேட்டார்.

'ஒன்றுமில்லை...' என்று சொல்லிக் கொண்டே அவர் பின்னால் நடந்தேன். திப்புவின் சமாதியாகிய தரியா தௌலத் அருகில் வந்ததும் 'நீ இங்கே சற்று உட்கார்ந்து இளைப்பாறு. உனக்கு உடம்பு வேறு சரியில்லை. நான் கொஞ்சம் இயற்கை காட்சிகளை படம் எடுத்துக் கொண்டு வருகிறேன்' என்று கூறியவாறு காமிராவுடன் கிளம்பிவிட்டார்.

என்னைச் சுற்றிலும் அமைதி. பொன்னி ஆறு மென்னடை பழகிக் கொண்டிருந்தாள், அந்தச் சமாதிக் கட்டிடங்களுக்குப் பின்னால். சலசலவென்று ஆற்று நீர் மணலை அரித்துக் கொண்டு ஓடியது. ஆற்றின் மீது கவிந்திருந்த மாமரங்களிலிருந்து விழுந்த பூவும், இலையும், பிஞ்சுகளையும் ஆற்று நீர் தன் போக்கில் இழுத்துச் சென்றது.

சூரியன் உச்சி வானத்தை அடைந்து மேற்கு பக்கம் சாயத் தொடங்கிவிட்டான். நீல விசும்பில் நான் தவறாமல் யாத்ரீகன் ஒருவனுக்குத் தின் உலகத்து நியாய அநியாயங்களும், தர்ம அநீ



ணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தேன். இருவரும் கிளம்பினோம்.

பங்களூரிலிருந்து நாங்கள் ஸ்ரீரங்கப்பட்டினத்தை அடையும்போது பகல் சுமார் பன்னிரெண்டு மணி இருக்கலாம். கோடை காலமாதலால் வெப்பம் சற்று கடுமையாகத்தான் இருந்தது. இருவரும் அருகில் இருந்த சாப்பாட்டு விடுதியில் ஆகாரத்தை முடித்துக்கொண்டு திப்புவின் கோட்டைக்குச் சென்றோம். இடிந்து சிதிலமாகிப் போயிருந்த அந்தக்கோட்டை எனக்கு வசந்தாவின் சிதைந்துபோன வாழ்க்கையை நினைவூட்டியது.

'என்ன இதைப் பார்த்தாயா? இந்த அரண்மனையிலுள் எத்தனை ராஜகுமாரிகள் சிப்பாய்கள் உலாவி இருப்பார்கள்? வாழ்க்கை சாசுவதமானது என்று எண்ணி என்னவெல்லாமோ நினைத்து இறுமாந்திருப்பார்கள். இப்படி ஒரு கற்குவியலாக இந்தக் கோட்டை மாறப்

...ங்களும் சரி வரத் தெரிந்திருக்கும்.

வானத்தை அண்ணாந்து பார்த்தவாறு மாமரத்தின் வேரில் சாய்ந்து உட்கார்ந்திருந்தேன். 'குபுக்'கென்று ஒரு சத்தம் சமீபத்தில் கேட்டது. திரும்பிப் பார்த்தேன். ஒரு பெண், என் பக்கமாகத் தன் முதுகுப் புறத்தைத் திருப்பிக்கொண்டு குடத்தில் நீர் முகந்து கொண்டிருந்தாள். பின்னலிடாமல் முடிச்சிட்ட கூந்தல் கற்றைகள் அவள் முதுகில் புரண்டு கொண்டிருந்தன. அவள் தலைப்பைப் பிடித்துக்கொண்டு சுமார் மூன்[று] வயசுக் குழந்தை ஒன்று நின்றி[ருந்த]து. குடத்தை இடுப்பில் வைத்துக் கொ[ண்]டு குழந்தையின் கரத்தைப் பிடித்தவாறு கரை ஏறத் திரும்பினாள் அவள்.

அவளைப் பார்த்ததும் என் உடல் வியர்த்தது. உடம்பிலே ஒரு ஆட்டம் ஏற்பட்டது. அவளையே வெறித்துப் பார்த்தேன். அவளும் என்னைப் பார்த்தாள்.

'யார்?... நீயா..' என்றாள் என்னைப் புரிந்துகொண்டு.

'யார்? ... நீயா? .. என்றேன் அவளை நான் புரிந்துகொண்டு.

'நான்தான் ...வசந்தா தான்' என்றாள் அவள் அழுத்தந்திருத்தமாக.

'நீதானா? ... உயிரோடு இருக்கிறாயா வசந்தா? .. நீ ...

இவ்விதம் தடுமாறி உளறிட்டுப் பிறகு தான் என் தவறை உணர்ந்தேன். யாரோ தீர விசாரியாமல் அவள் இறந்து போனதாகச் சொன்னாலும், அதை நம்பிய என் அறிவைச் சொல்ல வேண்டும். அதை வெளியிலும் கூறி 'நீ உயிரோடு இருக்கிறாயா?' என்று வேறு கேட்டுவிட்டேனே என்று என்னையே கடிந்து கொண்டேன்.

வசந்தா குடத்தைக் கீழே வைத்தாள். குழந்தையைத் தன் மடி மீது உட்கார்த்தி வைத்துக் கொண்டாள். சிறிது நேரம் பொன்னி நதியை வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தாள். அந்தக் குழந்தை என்னையும் அவளையும் மாறி மாறிப் பார்த்தது. அதன் உருண்டை முகம், வட்டமான கண்கள், குவிந்த உதடுகள் எதுவுமே வசந்தாவின் சாயலை ஒத்திருக்கவில்லை. நிறம்கூட வேறு தான். வசந்தா நல்ல சிகப்பு. அது மாநிறமாகத்தான் இருந்தது. ஆனால், தாயைக் கொள்ளாத குழந்தைகள் உலகத்தில் இல்லையா என்ன? தகப்பனைப்



போல இருக்கும் என்று எண்ணிக் கொண்டேன்.

'வசந்தா! நீ இங்கு எப்படி வந்தாய்? நீலக்கடல் ஓரத்திலே நித்தம் தவம் செய்யும் குமரித் தாயை விட்டு விட்டு, ரங்கநாதனின் சமீபம் வந்து விட்டாயே. கன்யாகுமரியை விட்டு வந்து நாளாயிற்றா?' என்று கேட்டேன். டேன்.

'ஆயிற்று. ஏறக்குறைய மூன்று வருஷங்கள் ஆயின' அப்படியா? உன் புருஷன் இங்கே தான் இருக்கிறாரா? உன்னைப் பற்றி என்னவெல்லாமோ கேள்விப்பட்டேனே.

ஊஹூம்...என்ன கேள்விப்பட்டாய்?' என்று அமைதியாக விசாரித்தாள் அவள்.

'நீ இறந்துபோய் விட்டதாகச் சொன்னார்கள்...' அப்படியே இருக்கட்டும். உலகத்தைப் பொறுத்த வரையில் நான் இறந்தவள். என்னைப் பொறுத்த வரையில் நான் உயிருடன் இருப்பவள். அதுவும் இந்தக் குழந்தைக்காக... உயிருடன் இருக்க சங்கல்பம் செய்து கொண்டவள்...'

வசந்தாவின் கண்கள் நீரைச் சொரிந்தன.

'அசடே! உன் புருஷன் எங்கே இருக்கிறார் என்று கேட்டேனே. அதற்கு நீ ஒன்றும் சொல்லவில்லையே...'

'அவர்.. இப்பொழுது இல்லை. மணத்திலே வரித்ததைத் தவிர நான் அவருக்கு மனைவி ஆகவும் இல்லை. அவர் எனக்குக் கணவராகவும் இல்லை. உலகத்தின் கண்களுக்கு முன்னால் நானும் அவரும் அந்தப் பெயரைக் காரணமில்லாமல் தரித்துக்கொண்டோம்...'

எனக்கு அலுப்புத் தட்டியது. 'உலகத்தை விட்டு நாம் விலகிப் போனால் தான் அதன் கட்டுப்பாடுகளுக்கு உடன்படாமல் நடக்க முடியும். உலகத்தில் இருக்கும்போது...'

வசந்தா அழுகையினூடே என்னைப் பார்த்துச் சிரித்தாள். 'கேள் கதையை...' என்று ஆரம்பித்தாள்.

## 3

நான் ஆசிரியையாகப் பணி ஆற்றிக் கொண்டிருந்த அந்தப் பள்ளிக்கூடத்துக்கு புதிதாக ஒரு தலைமை ஆசிரியர் வந்து சேர்ந்தார். அவருக்கு நாங்கள் எல்லோரும் அறிமுகம் செய்து வைக்கப் பட்டோம்.

'அப்படியா? மிகவும் சந்தோஷம்' என்று அவர் புன்னகையுடன் தலை அசைத்து எங்களுக்கு வணக்கம் செலுத்தினார். அவருடைய நடை, உடை பாவனைகள் என் மனத்தைப் பெரிதும் கவர்ந்தன. முகத்திலே நல்ல தெளிவு. ஆழ்ந்து சிந்திக்கும் பார்வை. மெதுவான பேச்சு. என்னவோ என் மனதில் அவரைப் பார்த்துக்கொண்டே இருக்க வேண்டும் என்கிற ஆவல் எழுந்தது.

இப்படி இருக்கையில் எங்கள் பள்ளிக்கூடத்தில் ஆண்டு விழா கொண்



அணுகுண்டு பார்டர் ஸ்டாக் ஆயிடுத்துங்கம்மா! க்ராம் தான் பார்டர் வேணுங்களா!

டாட ஏற்பாடு ஆயிற்று. மாணவிகளுக்கு ஒரு நாட்டிய நாடகம் தயார் செய்தோம். பின்னணிப் பாடகியாக என்னைத் தேர்ந்தெடுத்தார்கள். உனக்குத் தான் தெரியுமே. நான் சுமாராகப் பாடுவேன் என்று...' என்று இந்த இடத்தில் வசந்தா கதையை நிறுத்தினாள்.

'சுமாராகப் பாடுவாயா? உன் குரல் இனிமையைப் பூராவும் நான் கேட்டு அனுபவித்திருக்கிறேன். அது உனக்கு இப்பேர்ப்பட்ட இடைஞ்சலை வாழ்க்கையில் ஏற்படுத்தும் என்று எனக்குத் தெரியாமல் போய் விட்டது. ஹூம்... மேலே சொல்...என்றேன்.

வசந்தாவும் பெருமூச்செறிந்தாள்.

'நாட்டிய நாடகம் பாரதக் கதையில் வரும் கசனும் தேவயானியையும் பற்றியது. காதலுக்காக, காதலனுக்காக தேவயானி படும் கஷ்டங்களைப் பள்ளி மாணவிகள் மிகவும் திறமையாகவே நடித்து ஆடினார்கள். நான்தான் பாடினேன். தலைமை ஆசிரியர் தேவராஜன் உட்கார்ந்திருந்தவர் அப்படியே மெய் மறந்து போயிருந்தார். என் பாட்டைக் கேட்டுச் சிரம் அசைத்தார். அன்பு ததும்பும் கண்களால் என்னைப் பார்த்தார். அந்தப் பார்வை அவரும் என்னை விரும்புகிறார் என்பதை எனக்குத் தெரியப்படுத்தி விட்டது.

இருவருடைய உள்ளத்திலும் அன்புப் பிரவாகம், காதல் வெள்ளம் கரை புரண்டு ஓடத் தொடங்கியது. என்றாவது ஒரு நாள் கரையை உடைத்துக் கொண்டு பெருகிவிடும் என்கிற நிலைமை ஏற்பட்டு விட்டது.

'வசந்தா! இங்கே வா... உன்னைத் தனியாகச் சந்திக்க எத்தனை நாட்களாக முயற்சிக்கிறேன்?' என்று தேவராஜன் ஒருநாள் மாலை பள்ளியைவிட்டு வீட்டுக்குத் திரும்பும்போது என்னை அழைத்துப் பேசினார். மற்றவர்கள் எல்லோரும் வீட்டுக்குப் போய் விட்டார்கள். நான் மட்டும் தனியாக இருந்தேன்.

'என்ன ஸார்!' என்று திகைத்தவாறு கேட்டேன், அவரைத் தலைநிமிர்ந்து பார்க்காமல்.

'ஸாராவது, மோராவது! அதெல்லாம் ஒன்றும் மரியாதை வேண்டாம். என்னைப் பார்த்து நீ ஏன் தலையைக் குனிந்து கொள்கிறாய்? உனக்கு அப்படி என்ன என்னிடத்தில் அலாதி வெட்கம் வந்து விட்டது? மற்றவர்கள் எல்லோருடனும் சகஜமாகப் பேசுகிறாயே...'

ஒரு கணம்தான் அவரைப் பார்த்தேன். அவரும் என்னைப் பார்த்தார். வள்ளுவப் பெருமானின் வாக்கு எங்கள் விஷயத்தில் உண்மையாக இருந்தது. கண்ணோடு கண்கள் பேசிக் கொண்டன. 'வாய் சொற்கள்' அந்த இடத்தில் பயனில்லாமல்தான் போயின.

எந்த விஷயமும் ரகசியமாக இருப்பது உலக வழக்கமில்லை அல்லவா? எங்கள் இதயத்தில் மலர்ந்த அன்பு மலர் தன் மணத்தை நாற்திசையும் பரவ விட்டது. எங்கள் அன்பைப் பற்றி ஊரே பேச ஆரம்பித்தது.

உண்மையான காதல் எந்த இடத்தில் எப்பொழுது உண்டாகிறது? அதன் முடிவு என்ன என்பது இறைவனுக்கே தெரியுமோ தெரியாதோ? என் காதல் தகாத இடத்தில் மலர்ந்துவிட்டது என்பது அப்புறம்தான் எனக்குத் தெரிந்தது. தேவராஜனுக்கும் எனக்கும் இடையில் எத்தகைய மகத்தான பிளவு. சமதர்மப் பிரசாரம் நாட்டில் ஒருபுறம் பலமாக நடந்து வந்தாலும் மக்கள் தங்கள் கொள்கைகளைவிட இன்னும் தயங்கித்தான் நடக்கிறார்கள். கலப்பு மணம் நடப்பது எங்கோ ஆயிரத்தில் ஒன்று தான். எங்களுக்குள் பிளவை ஏற்படுத்தியது ஜாதி வித்தியாசம்தான். இம்மாதிரி தகாத அன்பை வளரவிடக் கூடாது என்று என்னைச் சேர்ந்தவர்கள் இரைந்தார்கள். தேவராஜன் எதற்கும் துணிந்தவர். அவர் என்னைப்போல தயங்கவில்லை. தன் தீர்மானத்தை என்னிடம் வெளியிட்டார். அந்த ஊரை விட்டு சுமார் ஆயிரம் மைல்களுக்கு அப்பால் சென்று மணம் புரிந்து வாழலாம் என்றும், என்னைத் தம்முடன் வரும்படியும் அழைத்தார். இங்கேதான் நான் பெரியவர்கள் வகுத்த வழிகளிலிருந்து பிசகி நடந்துவிட்டேன். நான் அவருடன் கிளம்பிப் போயிருக்கக்கூடாது. பலரறிய திருமணம் புரிந்து கொண்டு வாழும் மணவாழ்க்கையிலேயே சிக்கல்கள், இடைஞ்சல்கள் நேரும்போது, ஒருவருமறியாமல் நடக்கும் மணத்தைப் பற்றி என்ன சொல்ல முடியும்? ஆனால்,

மனதில் இருந்த ஆசை, சமூகத்தை எதிர்த்துத் தைரியமாக மணம் புரிந்து கொள்ள உறுதி இல்லாமை, யாவும் என்னைக் கோழையாக்கி ஊரை விட்டுத் துரத்தியது.

வானமே சாட்சியாக பிறந்து வளர்ந்த ஊரை விட்டு நானும், அவரும் கிளம்பி ரயில் ஏறினோம்...'

இந்த இடத்தில் கதையை நிறுத்தி என் முகத்தைக் கூர்ந்து கவனித்தாள் வசந்தா. வேதனை படர்ந்த என் முகத்தைப் பார்த்து அவள் பயந்து விட்டாள். பாவம்...

'சொல் வசந்தா!' என்றேன், என் வேதனைகளை மறைத்துக்கொண்டு.

வசந்தா கண்ணீரை துடைத்துக் கொண்டு மேலும் கூற ஆரம்பித்தாள்.

நானும் அவரும் ஊரை விட்டுக் கிளம்பிய அன்று இரவு வானமும், பூமியும் ஒன்றை ஒன்று விழுங்கிவிடுவதுபோல் கறுத்து இருந்தன. நாற்புறமும் கருமேகங்களின் கூட்டம். பளீர் பளீர் என்று மின்னல்கள் வீசிக்கொண்டு சஞ்சரித்தன. பூமி அதிரும்படியாக இடிமுழக்கம் கேட்டது. வானம் எங்களைப் பார்த்துக் கண்ணீர் வடிப்பதுபோல் மழை தாரை தாரையாகப் பெய்ய ஆரம்பித்தது.

எங்களை ஏற்றிச் சென்ற ரயில் வண்டி இருளையும், மழையையும் எதிர்த்துக் கொண்டு ஓடியது. அவர் எந்த ஊருக்குப் பிரயாணச் சீட்டு வாங்கி இருக்கிறார் என்பதுகூட எனக்குத் தெரியாது. என் வருங்காலம் எப்படி ஆகும்? என்று நான் சிந்திக்கவில்லை. ஒரே குழப்பம். ஒரே சிந்தனை!

'வசந்தா! என்ன இப்படிக் கல்லாக உட்கார்ந்திருக்கிறாயே' என்று கேட்டார் தேவராஜன்.

என் மனம் தெளிவாக இல்லை. சிரித்துப் பேசக்கூடிய நிலையில் நான் இருப்பதாகவே எனக்குத் தோன்றவில்லை.

வசந்தா! ஊரைவிட்டு உற்றாரைவிட்டு வந்து விட்டோமே என்று கலங்குகிறாயா?' தேவராஜன் என் எதிரில் அமர்ந்து என்னைப் பார்த்து அன்புடன் இவ்விதம் கேட்டார்.

'ஆம்... பொழுது விடிந்தால், ஊரும், உற்றாரும் என்னைப் பற்றி என்னவெல்லாம் பேசமாட்டார்கள்? என்பதை நினைத்தபோது என் மனதை ஏதோ ஒரு பயங்கரம்–அமைதியின்மை சூழ்ந்துகொண்டு வாட்டியது.

'உனக்கு ஒரே பயம்.. பாவம், கொஞ்சம் தூங்கி எழுந்திரு. எல்லாம் சரியாகிவிடும்...' என்று கூறி அவர் தம்முடன் கொண்டு வந்திருந்த படுக்கையைத் தலைக்கு வைத்துக் கொள்ளக் கொடுத்தார்.

கனவிலே இன்பக் கனவென்றும், பயங்கரக் கனவென்றும் இரண்டு உண்டல்லவா? காதலனுடன் செல்பவள் இன்பக் கனவில் தானே சஞ்சரிக்க வேண்டும்? ஆனால், சொல்லொணாத் துயரமும் வேதனையும், என் இதயத்தை வாட்டிப் பிழிய ஆரம்பித்தன.

ரயிலின் சக்கரங்கள் கடகடவென்று உருண்டு தண்டவாளத்தின் மீது ஓடின. அவைகளிலே ஒன்று கழன்று திசை தடுமாறி தண்டவாளத்தை விட்டுப் பெயர்த்து விழுந்தது. அடுத்த கணம் துன்பத்தின் எல்லை பயங்கரத்தின் முடிவு எல்லாமே தெரிந்தது. வண்டி ஒரு ஆட்டத்துடன் நின்றது. ஆட்டம் சாமான்யமானதல்ல. என் வாழ்க்கையில் கண்ட ஆட்டத்தைவிட பலமானது. விடிய இன்னும் ஒரு மணிப்பொழுதிருக்கலாம். ஆனால் பலருடைய வாழ்வு அஸ்தமித்து விட்டது.

தண்டவாளத்தின் அருகில் உடைந்த மரப்பெட்டிகளின் இடையில் நான் கிடந்தேன். கை கால்களை அசைக்க முடியாத ஒரு நிலை. கண்களைத் திறந்து பார்த்தேன். நாங்கள் வந்த ரயில் கவிழ்ந்து ஏற்பட்டிருந்த பயங்கரம் எனக்குப் புலனாகியது.

அவர்?– என் அருகே சவமாகக் கிடந்தார். காதல் அவரைப் பொறுத்த வரையில் வெற்றிப் பாதையைக் காண்பித்து விட்டது. அவர் அதில் வெற்றி பெற்று விட்டார்.

நான்?–என் அருகில் வெகு சமீபத்தில் ஒரு குழந்தை கதறிக்கொண்டு கிடந்தது. உடம்பிலே ஒரு சிராய்ப்பு காயம்கூட இல்லாமல் பாலுக்காக அந்தக் குழந்தை தன் நாவினால் என் கை விரல்களை நக்கி அழுதவாறு இருந்தது.

சற்றைக்கெல்லாம் உதவி புரிகிறவர்கள், வைத்தியர்கள், அதிகாரிகள் என் அருகில் வந்தார்கள். குழந்தையையும், என்னையும் பார்த்தார்கள். என் குழந்தை தான் அது என்று தீர்மானித்து சிகிச்சை பெற குழந்தையுடன் என்னை ஆஸ்பத்திரிக்கு அனுப்பினார்கள். நான் விவாகம் ஆகாதவள் என்று அவர்களிடம் மன்றாடினேன். என் கழுத்திலே மாங்கல்யம் இல்லை என்று கூறினேன். விபத்திலே வேண்டியவர்களை இழந்த



அப்பா! அந்த மாமா என் கேப்பை வெடிச்சுட்டாருப்பா! உம்ம்ம...

துக்கத்தில் அவ்வாறு கூறுவதாக அவர்கள் நினைத்தார்கள். கோர விபத்தில் சிக்கியவர்களில் எவ்வளவு பேர்கள் நகைகளை இழந்து மங்கலப்பொருள்களை இழந்து வாடி இருக்கிறார்கள்? நான் சொல்வதை ஒருவருமே ஒத்துக் கொள்ளவில்லை.

தாய், தந்தையை இழந்த அந்தக் குழந்தை என்னிடம் ஒட்டிக் கொண்டது. விவாகம் ஆகாத ஒரு பெண் ஒருவனுடன் வீட்டை விட்டுப் போய் விட்டாள் என்னும் களங்கம் ஒன்று போதாதா எனக்கு? இந்தக் குழந்தை வேறு வேண்டுமா? என்றெல்லாம் நினைத்து என் மூளை குழம்பியது.

மறுபடியும் ஊருக்குப்போனால் அங்கு கிடைக்கும் வரவேற்பு எத்தகையது என்பது எனக்குப் புரிந்துதான் இருந்தது.

உலகம் தெரியாத குழந்தை. கடவுள் எந்த நோக்கத்துடன் இதை என் பக்கத்தில் கிடத்தினாரோ தெரியவில்லை. கடைசியாக ஒரு முடிவுக்கு வந்து இந்தக் குழந்தையுடன் நான் ஆஸ்பத்திரியை விட்டு வெளியேறிவிட்டேன்.

ரயில் விபத்தில் நான் இறந்துவிட்டதாக ஊரார் நினைத்திருக்கலாம். அவர்களைப் பொறுத்த வரையில் நான் இறந்தவள் தானே. இந்த ஊருக்கு வந்து நானு குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்து என் வாழ்க்கையை நடத்துகிறேன்.

வசந்தா குழந்தையின் முகத்தைப் பரிவுடன் தடவிக் கொடுத்தாள்.

'அம்மா' என்று அழைத்து அது ஆசையுடன் அவளிடம் ஒட்டிக் கொண்டது.

ஃ ஃ ஃ

மாலை ஐந்து மணிக்கு என் கணவர் திரும்பி வந்தார்.

வசந்தா அவர் வருவதற்கு முன்பே குழந்தையுடன் என்னிடம் விடை பெற்றுக்கொண்டு போய் விட்டாள்.

பல நாட்களாகக் குழம்பிக் கிடந்த என் மனசில் தெளிவு ஏற்பட்டது. வசந்தா தன் புனிதம் கெடாமல் கற்பு நெறி பிசகாமல் உலகத்தில் வாழ்க்கை நடத்துகிறாள்.

வீணர்கள், வம்பர்கள் அந்தப் புனிதவதியைப் பற்றி அப்படித்தான் பேசுவார்கள் என்கிற தீர்மானத்துடன் அங்கிருந்து கிளம்பினேன்.

அமைதியாகத் தவழ்ந்து செல்லும் காவிரியும், வசந்தாவும், ஒருவரேதான். தன்னிடம் வந்து கலக்கும் அழுக்குகளை ஒதுக்கிவிட்டுத் தெளிந்த நீரை உலகத்து மக்களுக்கு வழங்கும் காவிரித் தாயைப் போன்றவள் தான் வசந்தா.

யார் பெற்ற குழந்தையையோ தன்னுடையது என்று ஏற்று அதை வளர்க்கும் மகத்தான பொறுப்பை வகிப்பவள் அல்லவா?

அவள் புனிதமானவள்தான்.



# காதல் மடிவதில்லை

சரோஜா ராமமூர்த்தி

அவள் உள்ளத்தில் ஏதோ சுமை இருக்கிறதென்று எனக்குத் தெரிகிறது. அச்சுமையின் கனம் தாங்காமல் இதயம் சுருண்டு வலிக்கிறது என்பதும் புரிகிறது.

இருந்தாலும், எங்களிடையே மௌனம் நிலவியது. அப்படியே ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு இருந்தோம். அந்த மனச்சுமையை இறக்கி வைக்கும்படி அவளிடம் நான் கேட்கவில்லை.

இதய அந்தரங்கத்தில் ஒளிந்து கொண்டிருந்த எண்ணங்கள் தாமாக விடுபட ஆரம்பித்தன.

1

காற்று சீண்டைப் பிய்த்துக்கொண்டு வீசியது. கம்பளிச் சட்டையை இழுத்துப் பித்தான்களைப் பொருத்திக் கொண்டாள் ராது. ராதிகா என்கிற அவள் திருநாமம் ராது என்று குறுகிவிட்டது.

"அப்படிக் குளிருகிறதா என்ன?" என்று கேட்டேன் நான்.

"உனக்குக் குளிராது அம்மா. உனக்குக் குளிராது... நான் வாழ்க்கையில் ரொம்பவும் நொந்து போனவள்டி..." என்று சலித்துக்கொண்டாள் ராது. தலையைச் சுற்றி ஆழ்ந்த பச்சை நிறத்தில் மப்ளர் வேறு கட்டியிருந்தாள். அதற்குள்ளிருந்து முன்னுச்சியெங்கும் நரைத்துவிட்ட கூந்தல் காற்றில் பறந்தது.

"கடல் இன்று ரொம்பவும் கொந்தளிக்கிறது" என்று கூறிக் கடலையே வெறித்துப் பார்த்தாள் ராது.

"கடல்கள் என்று சொல். நாம் இப்போது குமரிக்கரையில் இருக்கிறோம். பாரதத்தின் தென்கோடியில் நின்று பாரதத்தின் மாண்பை நினைத்துப் பார்த்தால் நான் பெண்ணாக இருந்தாலும், என் தோள்கள் பூரிக்கின்றன..." என்றேன் நான். என்னுடைய அகக்கண்களில் "மன்னும் இமயமலை"யும், புனித கங்கையும், டெல்லி செங்கோட்டையும், சுதந்தர பாரதத்தின் சிற்பியான பண்டிதரும் தோன்றினர்கள்.

கதிரவன் மேற்கே சாயத் தொடங்கி விட்டான். காந்தி நினைவு மண்டபத்து வெளிச் சுவரில் சாய்ந்தபடி நானும், ராதும் கடல்களைப் பார்த்துக் கொண்டிருந்தோம்.

"உனக்கு எப்போது சென்னைக்குப் போக வேண்டும்? அதாவது உன் கணவர் எத்தனை நாட்களுக்கு உனக்கு காஷுவல் லீவு கொடுத்திருக்கிறார்?" கேட்டவள் என் தோழி.

"குழந்தைகளுக்கு விடுமுறைதானே? பௌர்ணமி வரை இருந்துவிட்டு—கீழைக் கடலில் நிலவு எழும்போது, மேலைக் கடலில் கதிரவன் இறங்கும் காட்சி அற்புதம் வாய்ந்தது என்கிறார்களே...... போகலாமே...!"

"அந்தக் காட்சி?" என்று சலிப்புடன் அலுத்துக்கொண்டாள் ராது. முதலில் அவள் கன்யாகுமரிக்கே வரமாட்டேன் என்று பிடிவாதம் பிடித்தாள். எனக்குக் காரணம் விளங்கவில்லை. நானும், அவளும் பால்யத் தோழிகள் அல்ல. ஆறேழு வருஷங்களாக ஒரே கல்லூரியில் பணியாற்றும் நாங்கள் மனத்தளவில் நெருக்கம் கொண்டவர்களாக இருந்தாலும், குடும்ப வாழ்க்கையைப்பற்றி மனம் விட்டுப் பேசிப் பழகியதில்லை.

ராது திருமணம் ஆகாதவள். நல்ல அழகிதான். புத்தி கூர்மையும், அறிவும் நிரம்பியவள். அவளுக்குத் திருமணம் ஆகாமற்போனது விந்தைதான். ஒவ்வொருவர் வாழ்க்கையில் நிழல் போல் ஏதாவது துன்பம் படர்ந்து விடுகிறது. "துன்ப நினைவுகளும், சோர்வும், பயமும் எல்லாம் அன்பில் அழியும்" என்று மகாகவி பாடினன். அன்பு என்கிற நீர் ஊற்று அவள் வாழ்க்கையில் சுரக்கவே இல்லையோ?

என்னுள் கற்பனை குமிழியிட்டுப் பெருகிக்கொண்டிருந்தது. ராதுவோ பொங்கும் கடலையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

காலம் என்கிற சூறவளிக் காற்றுல் அடித்துச் செல்லப்பட்டு, பெரும்பாலும் இளமை விடை பெற்றுக்கொள்ளும் இத்தருணத்தில் அவள் மனம் பின்னேக்கி சென்றிருக்கவேண்டும். கண்களில் சுரக்கசிவுடன் அவள் என் கைகளை ஆதுரத்துடன் பற்றிக் கொண்டு, "போகலாமா?" என்று கேட்டாள்.

"ஓ! போகலாம்... உனக்கு ஏதோ கலக்கம் போலும். போகலாம்... காற்றும் அதிகமாக இருக்கிறது..." என்றவாறு நாங்கள் ஹோட்டலை நோக்கி எங்கள் அறைக்குத் திரும்பினேம்.

கடற்காற்றிலிருந்து திரும்பியிருந்தும் ராதுவுக்கு வியர்த்துக் கொட்டியது. நெடிய பெருமூச்சொன்றை உதிர்த்து விட்டு அவள் கட்டிலில் சாய்ந்து படுத்துக்கொண்டாள்.

நான், தெற்குப் பக்கமாக இருந்த சாளரத்தைத் திறந்து வைத்தேன். குமரி அன்னையின் கோபுர விளக்கு பளிச்சென்று தெரிந்தது. அதற்கடுத்தாற்போல் மணற்பரப்பு. அப்புறம் கடல்கள். கடலைப் பின்னணியாக வைத்து வரைந்த ஓவியம் போல அவள் படுத்திருந்தாள்.

வானத்தையும், கடலையும் மாறிமாறிப் பார்த்தாள் அவள்.

"பல வருஷங்களுக்கு முன்பு இதே குமரி முனை"யில் என்று ஆரம்பித்தாள் ராது. கழுத்து ரவிக்கை மடிப்புக்குள் இருந்து பளபளவென்று மின்னும் திருமாங்கல்யச் சங்கிலியை எடுத்து மேலாகப் போட்டபடி என்னைப் பார்த்தாள்.

"ராது! உனக்குக் கல்யாணம் ஆகியிருக்கிறதா?"

"பல வருஷங்களுக்கு முன்பு இதே குமரிமுனையில் நான் அவரைக் கணவனாக வரித்து, உடனே பிரிந்தும் சென்றேன்" என்றவள் பேசிக்கொண்டே போனாள்.

"கதிரவன் கீழைக்கடலில் உதித்து மேலே ஏறி பவனி வந்து கொண்டிருந்தான். கடற்பாறை ஒன்றின்மேல் சாய்ந்து ராதிகாவும், பாலனும் மௌனமாகக் கடலைப் பார்த்துக் கொண்டிருந்தனர். 'உய்' என்று காற்று சீண்டைப் பிய்க்கவில்லை. காதுக்குள் ரகசியம் பேசுகிற மாதிரி கிசுகிசுத்துக் கொண்டிருந்தது. குமரிக் கோயிலின் காலை பூஜை மணி ஓங்காரமிட்டு முழங்கிக்கொண்டிருந்தது. தலை நிறைய பிச்சிப் பூச்சரம் சூட்டியிருந்தாள் அவள்.

பாலன் அவளைக் கண் இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தான். அந்தப் பார்வை, அதில் தோன்றும் கண்ணியம், அந்த அமைதி, அதில் ததும்பும் காதல் யாவுமே ராதிகாவுக்குப் பிடித்தவை.

"என்ன பார்க்கிறீர்கள்?" என்று சிரித்தபடி கேட்டாள் அவள்.

"உன்னை" பார்க்கிறேன் ராது. இக்காலையில் தரிசித்தோமே குமரி அன்னையை, அவளைப் போலவே நீ இருப்பதாக எனக்கு ஓர் எண்ணம்."

ராதிகா திடுக்கிட்டு மிரண்டு போய், "அப்படியெல்லாம் நினைக்காதீர்கள். அவ்வளவு உயர்ந்த நிலைக்கு இந்தப் பிறவியை ஒப்பிடாதீர்கள்" என்று உரக்கவே கூறினாள்.

இதில் பதட்டப்படவோ, ஆத்திரப்படவோ ஒன்றும் இல்லையே. கோயில் சிலை போல, குத்துவிளக்குப் போல, மகாலக்ஷ்மி மாதிரி என்றெல்லாம் ஒரு பெண்ணை வர்ணிப்பதில்லையா என்ன? அதுவும், இருவரும் ஒருவரை ஒருவர் மனப்பூர்வமாகக் காதலித்து மணந்து கொண்டிருக்கிறோம்! இதென்ன அபஸ்வரம் மாதிரி ஒரு பேச்சு? என்று பாலன் நினைத்திருக்கவேண்டும். சட்டென்று அவன் முகம் தொய்ந்து வாடியது.

ராதிகா சிறிது நேரம் எங்கோ வெறித்துப் பார்த்துவிட்டுப் புத்தம் புதியதாய் நேற்று அவள் கழுத்தில் திருச்செந்தூர் முருகன் கோயிலில் வானத்தையும், கடலையும், அவற்றையும் கடந்து நிற்பவனாகிய சரவணபவனின் முன்னிலையில் அணிவித்திருந்த திருமாங்கல்யத்தை எடுத்துக் கண்களில் ஒற்றிக்கொண்டாள். அப்படியே இரண்டு சொட்டுக் கண்ணீர் கன்னங்களில் வழிந்தது.

புதிதாக மணம் செய்து கொண்டவனுக்கு மனைவியின் கண்ணீர் அதிர்ச்சியைத்தானே தரும்? பாலன் பதறியே விட்டான்.

எத்தனை மறுப்புகள், சமாதானங்களுக்கப்புறம் ராதிகாவை அவன் திருமணம் செய்து கொள்ள வேண்டியிருந்தது?

அவர்கள் இருவரும் அநாதைகள் அல்ல. பரந்த இந்த உலக சமுதாயத்தில் நாதி உள்ளவர்கள், நாதியற்றவர்கள் என்று பிரித்துப் பேசவே நமக்கு அதிகாரமில்லை. பெற்றோர், உற்றாரை இழந்தவர்களாக இருந்தாலும், உலகத்தில் அவர்களும் பிடிப்போடு வாழ்ந்து முன்னேற வேண்டும். இப்படியெல்லாம் பாலன் அடிக்கடி லட்சியம் பேசுவான்.

ராதிகாவுக்கு வயது சென்ற தாய் இருந்தாள். பாலனுக்கு இருவருமே இருந்தார்கள். மகனுக்கு ராதிகாவைவிட சிறந்த பெண்ணை மணமுடிக்க அவர்கள் விரும்பினார்கள். அப்பொழுது—அந்தக் காலத்தில்—அவள் சாதாரணமாகப் படித்தவள். தாயைக் காப்பாற்றுவதற்காக பள்ளியில் வேலையாகவும் இருந்தாள். இருவரும் விசித்திரமான சூழ்நிலையில் ஒரு நாள் சந்தித்தார்கள். அன்று பள்ளிக்கூட அலுவல்களில் சிலவற்றை அவள் பிரத்யேகமாகக் கவனிக்க வேண்டும் என்று தலைமையாசிரியர் கூறிவிட்டுப் போனார். வேலைகளை முடித்தபோது இருட்டிவிட்டது. வானம் கருத்துக் கிடந்தது. இடையிடையே மின்னலும், இடியும் அச்சுறுத்தின. வயல் வரப்பு வழியாக சுமார் இரண்டு மைல்கள் அவள் தனியாக நடக்க வேண்டியிருந்தது.

வெளியுலக இருட்டைவிட மனிதனின் அக இருள் சிலர் வாழ்க்கையில் விபரீதமான பலனை ஏற்படுத்திவிடும். அந்த இருளிலும், மழையிலும் உயிர் பிழைத்ததே போதும் என்பது போல் தாறுமாறாக ராதிகா தன் வீட்டை நோக்கி வரப்புகளில் ஓடிக்கொண்டிருந்தாள். மழை இரைச்சலுக்கு மேலாக அவள் இதயம் ஓவென்று அலறியது. இடையிலே தறுக்கிட்ட ஓடையில் நீர் நிரம்பி ஓடிக்கொண்டிருந்தது. அதனால் என்ன? இனிமேல், வெள்ளம் தலைக்குமேல் போனால் என்ன? முழுகியா போய் விடப்போகிறாள்?

ஊரின் எல்லைக்கு சிறிது தூரத்தில் ஒருவன்—பாலன் தான் அது அவளைத் தடுத்து நிறுத்தியிராவிடில் அவள் எங்கு போய் நின்றிருப்பாளோ!

மங்கலான விளக்கொளியில் அவள் ஒரு சோகச் சித்திரம் போல் அவனுக்குக் காப்பி போட்டுக்கொண்டு வந்து வைத்து, "என்னை ஏன் காப்பாற்றினீர்கள்? உலகத்தில் தீமை ஏன் இவ்வளவு பெருகியிருக்கவேண்டும். அதுவும் அபலைகள் விஷயத்தில்?" என்று கேட்டுக் கண்ணீர் பெருக்கினாள்.

"புகை நடுவிற் கானும் தீக்கொழுந்துபோல் தீமையின் இருளுக்கு நன்மை ஒளியூட்டுகிறது..."

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்றாள் ராதிகா.

மூச்சு துரத்தல் இன்னும் நிற்கவில்லை.

பாலன் அவளை அன்று அமைதியாக இருக்க விட்டுவிட்டுப் போய் விட்டான். பிறகு அவள் உள்ளம் ஓவென்று புலம்பி, சுருண்டு, நொறுங்கி ஒருவாறு திண்மையும் பெற்றது.

அவள் அந்த மழை இரவில் நடந்ததை மறக்க முயன்றாள். ஆனால், பாலன் அவளை மறக்க முடியவில்லை.

திருமணம் செய்துக் கொள்வதானால் அவளைத்தான் செய்துக் கொள்ளவேண்டும். இதைக் காதல் என்று கண்ணியமாக அவன் ஒப்புக்கொண்டான். அவள் அதை ஒரு அவசர முடிவாக நினைத்தாள். பாலனின் நட்பை ஒதுக்கிவிட முயன்றாள் ராதிகா.

"என்ன? பார்த்துக்கொண்டே பார்க்காதது மாதிரி இதென்ன வேஷம்? ரொம்ப நாட்களாக ஒதுங்கி, ஒதுங்கிப் போகிறாயே...ஏதாவது லைட்டாகச் சாப்பிடலாம்" என்று ஒரு தினம் பாலன் அவளை வழியில் பார்த்தபோது கூப்பிட்டான்.

"சாப்பிடுகிறதா? ஓ'ம் வேண்டாமே. நான் அவசரமாக வீட்டுக்குப் போகவேண்டும். அம்மாவுக்கு மருந்து தர வேண்டும்..."

"வீட்டுக்குத்தானே? - இன்னும் இருட்டவில்லை. இன்று மழை வராது. நீ அன்று போல் விழுந்தடித்துக்கொண்டு தலைகால் தெரியாமல் ஓடவும் வேண்டாம். நான் துணைக்கு வருகிறேன்......"

துணை! அன்று அவளுக்கு அந்த இருளில் யாரும் துணை நிற்கவில்லையே! ஈஸ்வரா! ராதிகா குழம்பிப் போய் அப்படியே நின்றாள்.

"வா...போகலாம்" என்றபடி கான்டீனுக்குள் நுழைந்துவிட்டான் அவன். வருவோரும், போவோருமாக அங்கே நிற்க பிடிக்காமல் அவளும் உள்ளே நுழைந்தாள். "என்னைக் காதலிக்காதீர்கள் என்று சொல்லிவிட வேண்டும். நல்ல மனிதரின் இதயத்தில் நான் ஏன் நம்பிக்கையை வளர்க்க வேண்டும்?" என்றபடி ஐஸ்க்ரீமைக் கரண்டியால் கிளறிக்கொண்டிருந்தாள்.

"உனக்கென்ன இன்றைக்கு? உடம்பு, கிடம்பு ஏதாவது சரியில்லையா?"

"உங்களிடம் ஒன்று சொல்ல வேண்டும்."

"சொன்னால் போகிறது. அதற்கு இப்போது என்ன அவசரம்? ஐஸ்கிரீம் சாப்பிடு!"

அன்று வீடு வரைக்கும் துணை வந்தவன், அவள் அளித்த காப்பியைப் பருகிவிட்டு, அவள் தாயிடம் ராதிகாவை மணக்க விரும்புவதாகக் கூறினான்.

தாயின் முகத்தில் மலர்ச்சியும், மகளின் முகத்தில் கலக்கத்தையும் கண்டவன், ராதிகா துணிவற்றவள் என்கிற நினைப்போடு விடை பெற்றுக் கொண்டான்.

"அம்மா ராது! நான் இருக்கும் நிலையில் உன் திருமணம் சீக்கிரம் ஆகிவிட்டால் கவலை இருக்காது. தெய்வம் வந்து ரக்ஷிப்பது போல் அந்தப் பிள்ளை உன்னைப் பெண் கேட்கிறான். ஏதோ என்னால் முடிந்த பணத்தைக் கொடுக்கிறேன்..."

"அம்மா! எனக்கு கல்யாணமே வேண்டாம்" என்றாள் ராதிகா. காரணம்? அவள் எப்படிக் கூறுவாள்?

அவளுடைய எண்ணத்தை மீறிக்கொண்டு பாலன் திருமண ஏற்பாடுகளில் முனைந்தான். அவன் வீட்டார் இந்தத் திருமணத்தில் அக்கரை காட்டவில்லை. ஆகவே, திருச்செந்தூரில் ஆண்டவன் முன்னிலையில் மிக எளிய முறையில் திருமணம் நடைபெற்று விட்டது.

அந்தத் திருமண நாளன்றும் பௌர்ணமிதான். இதே கடலோரம் இருவரும் அமர்ந்திருந்தார்கள். ராதிகா புது மணப் பெண்ணின் மகிழ்ச்சியையோ, நாணத்தையோ காட்டிக்கொள்ளாமல் தனக்குள் லயித்திருந்தாள்.

அப்படி என்னதான் அவள் மன அந்தரங்கத்துக்குள் ஒளிந்து கொண்டிருந்ததோ? மனத்தோடு போராடும் அவள் முகம் வெளுத்து, கலங்கிப் போயிருந்தது.

"சுத்த பத்தாம் பசலி! மூஞ்சியைப் பார் மூஞ்சியை! ஏதாவது பேசேன்......!"

"என்ன பேசுவது?"

"ஏதாவது......"

"இதய பூர்வமான பேச்சையெல்லாம் முதன்முதல் நீங்கள் என்னைப் பார்த்த அன்றே இழந்து விட்டேன். அந்த இழப்பின் எல்லையில்தான் என்னை நீங்கள் சந்தித்தீர்கள். நானும் உங்களை மனப்பூர்வமாகக் காதலித்தேன்......"

"காதலித்த — காதலிக்கிற லட்சணம்தானா இது?"

"காலம் பூராவும் காதலித்து வாழவும் என்னால் முடியும். ஆனால், தங்களுக்கு மனைவியாக இருக்கும் தகுதி அன்று அந்தப் பெரும் மழையில் போய் விட்டது......"



"என்ன சொல்கிறாய் ராது?" என்று திடுக்கிட்டுக் கேட்டான் பாலன்.

ராதிகா கடலையே வெறித்துப் பார்த்தாள். பிறகு துணிவுடன், "அதைக் கேட்டுவிட்டு நீங்கள் என்னை வெறுத்து ஒதுக்கி விடுவீர்கள். முடிவு அப்படித்தான் இருக்கும்..." என்றாள்.

பாலன் அவளை இமைக்காமல் பார்த்தான்.

"அன்று அந்தப் பெருமழையில் நான் வீடு திரும்பிக் கொண்டிருந்தபோது இருளில் என்னை ஒருவன் பற்றி இழுத்து ......நான் என் புனிதத் தன்மையைச் சந்தர்ப்பவசத்தினால் இழக்கும்படியாகி விட்டது. அந்த மனித மிருகம் யார், எவன் என்றுகூட எனக்குத் தெரியாது. இதைப் பல முறை உங்களிடம் கூற முயன்றும் தோற்று விட்டேன்..." ராதிகாவின் குரல் நடுங்கிற்று.

"என்னது?" என்று திடுக்கிட்டான் பாலன்.

அதன் பின்னர் அவர்கள் இருவரும் பேசவில்லை. சத்திரத்தை நோக்கி நடந்தார்கள். அன்று பூர்ணிமை அல்லவா? நிலவு பாலாகக் காய்ந்து கொண்டிருந்தது. நல்லவர்களுக்கும், தீயவர்களுக்கும் யாருக்கும் அது அமுத வெள்ளத்தைப் பொழிந்து கொண்டிருந்தது. சத்திரத்து உள் அறையில் ராதிகா படுத்திருக்க, பாலன் வெளித்திண்ணையில் படுத்திருந்தான்.

பொழுது விடிந்தது. ராதிகா வெளியே வந்து பார்த்தபோது பாலனைக் காணவில்லை. உள்ளே அவன் பெட்டிக்கருகில் ஒரு கடிதம் இருந்தது.

"சமீபத்தில் பாகிஸ்தானியரால் கற்பழிக்கப்பட்ட இளம் பெண்களை நம் அரசாங்கம் மீட்டிருக்கிறது. இப்பெண்கள் மனத்தால் மாசற்றவர்கள். அவர்களைத் திருமணம் செய்து கொண்டு புனர் வாழ்வு தர நம் இளைஞர்கள் முன் வரவேண்டும்" என்று காந்திஜி வேண்டுகோள் விடுத்திருக்கிறார். அவர் வேண்டுகோளை ஏற்றுக் கொண்டு நடத்தும் உள்ளத் திண்மையைப் பெறுவதற்கு நம் இளைஞர்கள் எத்தனையோ தியாகங்கள் புரிய வேண்டியிருக்கும். வீம்புக்காகவும், வீறாப்புக்காகவும் நான் நடந்து கொண்டாலும் சமூகம் அதை எப்படி வரவேற்கும் என்று சொல்ல முடியாது. சமூகத்துக்குத் தெரியாத உனக்கும், எனக்கும் மட்டும் தெரிந்த ரகசியம் என்று வைத்துக் கொண்டாலும் மனத்தோடு போராட வேண்டியிருக்கும். இந்த அக்னிப் பரீட்சையை நான் செய்து உன் நிம்மதியைக் குலைக்க விரும்பவில்லை. நான் ஒரு அவசரக்காரன். என்னை மன்னித்து விடு. நான் ஊரை விட்டே போகிறேன். என்றாவது உன் மனத்தைத் தேடி வருவேன். அந்தப் பக்குவம் ஏற்படுகிற வரையில்......பிரிவுதான்...

ராதிகா தனியாக ஊர் திரும்பினாள். மேற்கொண்டு கல்லூரிப் படிப்பு படித்தாள், பட்டம் பெற்றாள். என்றைக்கும் காதல் என்பது புனிதமான நினைவு என்பதோடு மனத்தைத் தேற்றிக்கொண்டு தன் வழியே இயங்கினாள்..." மேலே கிடந்த திருமாங்கல்யத்தை எடுத்து ரவிக்கைக்குள் போட்டுக்கொண்ட ராதிகா — என் பிரியமான தோழி ராது விழிகளில் நீரைப் பெருக்க விட்டுக்கொண்டு படுத்திருந்தாள் சிறிது நேரம்.

கற்றுணர்ந்த பேராசிரியை அவள். பல மாணவிகளின் எதிர்கால வாழ்வுக்கு வழி காட்டும் அவள் தமிழ் போதிக்கும்போது நான் கல்லூரியில் எங்கிருந்தாலும், அவள் போதிக்கும் அறை பக்கமாக நடந்து செல்வேன். காதலைப் பற்றி அவள் உருகி நின்று பேசும் காரணம் எனக்குப் புலப்பட்டது. அவளுடைய காதல் உடலைப் பற்றியதல்ல. உள்ளத்தில் உறைந்து அங்கே நித்யவாசம் புரிகிறது. அது ஒரு நாளும் மடியாது. "காதல் மடிவதில்லை" என்றேன் நான்.

"ஆம்...அது மடிவதில்லை. காதலிப்பவர்கள் மறந்தாலும், காதலை தன் கணையால் எய்யும் மன்மதன் மறந்துவிட்டாலும், அது மடிவதில்லை..." என்று ஆரம்பித்தாள் ராதிகா

**ஓ! அது ஒரு இலக்கிய பாடம். கதை அல்ல.**




நாதஸ்வர வித்வான் வராளி ராகம் வாசிப்பது கல்யாண சத்திரத்தில் நன்ருகக் கேட்டது. கோயிலிலிருந்து மாப்பிள்ளை அழைப்பு ஊர்வலம் தெருக் கோடியில் வந்துகொண்டிருந்தது. தெருக் கோடியில்தான் கோயில் இருந்தது. ஆழ்வார்கள் மங்களசாசனம் செய்த திருப்பதியாம். இப்போது இரண்டு வேளை ஆராதனைக்கே அர்ச்சகர்கள் திணறிக் கொண்டிருந்தார்கள். சென்னையில் தண்ணீர்ப் பஞ்சம் வந்த பிறகு பெண்ணைப் பெற்றவர்களுக்குத் தத்தம் கிராமங்கள் ஒன்று இருப்பதாக நினைவுக்கு வரவே, பலர் அவரவர் ஊர்களில் திருமணங்களை நடத்த ஆரம்பித்தார்கள்.

விஜயத்தின் கல்யாணத்தை அவள் பெற்ருேர் இந்தத் தலத்தில் நடத்தலாமென்று சொன்னதும் பிள்ளைவீட்டார் ஆயிரம் ஆக்ஷேபனை சமாதானங்கள் சொன்ஞர்கள். தங்கள் பிள்ளையின் கல்யாணம் இப்படியொரு குக்கிராமத்தில் எளிமையாக நடத்தப்படுவதை அவன் அப்பா விரும்பவில்லை. இதைச் சரிக்சட்டி சமாளித்தவன் கல்யாணப் பிள்ளை ரகுவின் நண்பன் விஸ்வம்தான். இந்த ஒரு பிரச்னைக்குச் சரி என்று அவரைத்தலையாட்ட வைக்க விஸ்வம் பட்டபாடு கொஞ்சநஞ்சமல்ல. மேற்கொண்டு அவன் லட்சியங்கள் .. வரதக்ஷிணை ஒழிப்பு, மாப்பிள்ளை ஜானவாச ஊர்வல ரத்து, பாத்திர பண்டங்களிலிருந்து ஸ்கூட்டர்வரை சீர் வரிசை கேட்பதைத் தவிர்ப்பது முதலியவைகளை அவனல் ரகுவின் வீட்டாரிடம் புகுத்த முடியவில்லை.

ஆகவே, விஸ்வம் தன் நண்பன் காரில் ஊர்வலமாக வருவதை வரவேற்காமல் மாடியில் மற்ற நண்பர்களுடன்எப்படியோ உரையாடிக் கொண்டிருந்தான். அவன் பக்கத்தில் உட்கார்ந்திருந்த நண்பன் ஒருவன் எழுந்திருந்து மாடிக் கைப்பிடிச் சுவரண்டை போய் வெளியே எட்டிப் பார்த்தான். ரகு ஜோராக ஜம்மென்று காரில் பவனி வந்து கொண்டிருந்தான். அவன் சட்டென்று திரும்பி, ''டேய் விஸ்வம்! நீ என்னதான் கொள்கை பேசு. இந்த மாதிரி வாழ்க்கையிலே ஒருமுறை தான் காரிலே மாப்பிள்ளை முறுக்கோட வரமுடியும். சில சமயம் ஜானவாசம் வேணும்னே எனக்குத் தோணறது...'' என்ருன்.

'ஆஹ்ஹா' என்று சிரித்தான் விஸ்வம்.

''வாழ்க்கையிலே ஒரு முறைதான் பிறக்கிருேம், வளர்கிருேம், காதலிக்கிருேம். எல்லாமே ரெண்டு முறையா வரது? போடா பைத்தியக்காரா... இந்த ரகு ஒரு கோழைப் பயல். பீச்சுலே உக்காந்துண்டு நாலு பொட்டலம் பட்டாணி சுண்டலைக் கொரிச்சுண்டே வாய்ப்பந்தல் போட்டவன். இப்பப் பாத்தியா, எப்படி அப்பா அம்மா சொல்றபடி ஆடருன்?''

''நீ மாத்திரம் என்னடா! நாளைக்கு உங்கம்மா மூஞ்சியை உர்ரென்று வைச்சுண்டு நின்ஞ, வரதட்சனையே வாங்கலாம்பே...'' தெருவில் ஊர்வலம் நெருங்கி வந்து கொண்டிருந்தது. சில பெண்கள் பரக்கப் பரக்க மாடிக்கு வந்து ஆரத்தி கரைக்கத் தாம்பாளம் தேடிஞர்கள். ஒருத்தி தலையில் ஒரு பக்கமாக வழிந்த மல்லிகைப் பூவைச் சரிசெய்கிற சாக்கில் இவர்கள் பக்கம் திரும்பிப் பார்த்தாள்.

''டேய் விஸ்வம்! அந்தப் பெண்'' என்றான் நண்பன். ''உனக்குப் பார்க்கலாமா சொல்! உங்கம்மா கேட்கிற ஐயாயிரம் வரதட்சணை; பதினைஞ்சு பவுன்; வெள்ளிப் பாத்திரங்கள் இத்யாதி கிடைக்குமான்னு கேட்டுப் பார்க்கட்டுமா?''

''டேய்! டேய்! எனக்கு இன்னும் இரண்டு தங்கைகள் இருக்காடா! அவாளை கட்டிக் குடுத்தப்புறம்தான் ஐயாவுக்கு 'லைன்'க்ளியர் ஆகும்...''

விஸ்வம் மறுபடியும் அந்தப் பெண்ணைத் திரும்பிப் பார்த்தான். பிறகு துணிவாக, ''என்ன வேணும்? என்ன தேடறேள்?'' என்று கேட்டு வைத்தான்.

பெண்கள் இருவரும் சிரித்தனர்.

''சிரிக்கிறதுதான் பதிலா?''

''ஆரத்தி கரைக்கத் தாம்பாளம் தேடறோம்...'' என்றாள் சற்று கறுப்பாக, ஒல்லியாக இருந்த பெண்.

ஆரத்தி அவசியந்தானா என்கிற சர்ச்சையில் நண்பர்கள் இறங்கி விட்டதைக் கவனித்த அந்தப் பெண்கள், தாம்பாளத்தையெடுத்துக் கொண்டு வியப்பும், சிரிப்புமாகக் கீழே இறங்கிப் போனார்கள். கீழே கெட்டி மேளம் கேட்டது. மாப்பிள்ளை ரகு வலது காலை வைத்து உள்ளே வந்து, சற்றைக்கெல்லாம் மாடிப்படி ஏறி வந்தான். மாப்பிள்ளை ரகுவை அவன் மனைவியாக வரப்போகிற விஜயா மட்டும் ஆசை தீரக் கண்களால் பருகவில்லை. அவள் வயதையொத்த பல பெண்கள் அவனை ஆசை தீரப் பார்த்தார்கள். விஸ்வத்துக்கே அவனை இன்னொரு முறை பார்க்க வேண்டும் போல் இருந்தது. ஆஜானுபாகுவாய், சிவப்பு நிறத்துடன், புன்னகைக்கும் முகத்துடன் மாலையும் கழுத்துமாய் அவன் நின்ற கோலம் அவனை அழகன் என்று ஒப்புக் கொள்ள வைத்தது.

''டேய் விஸ்வம்! என்னடா அப்படிப் பார்க்கிறே?'' என்று கேட்டான் ரகு.

''உன்னைப் பாத்துண்டே இருக்கணும்னு தோணித்துடா. நிஜமாகவே நீ நல்ல அழகன்...... அதான்...''

''ஒண்ணுமில்லேடா, நேத்து உன் கல்யாணத்துக்குக் கிளம்பறச்சே 'பீச்' ஸ்டேஷன்லே சரளாவைப் பார்த்தேன். சர்வ சாதாரணமா 'ரகுவுக்கு மாரேஜ் ஆமே'ன்னு கேட்டா... எனக்கு அந்தப் பழைய கதையெல்லாம் ஞாபகம் வந்தது. நீயும் அவளும் பீச்சுக்குப் போனது, சினிமாப் பார்த்தது எல்லாம். இந்தக் காலத்துலே பிரமாதம்னு சொல்ல முடியாது. ஓரளவுக்கு இந்தக் காலத்துலே சகஜமாகப் போய் விட்ட விஷயங்கள்னு சொல்லலாம். ஆனா, சிதம்பரத்துக்கு அவளைக் கூட்டிண்டு போய் ஹோட்டல் ரூம்லே தங்கறதுக்கு புருஷன், மனைவின்னு கையெழுத்துப்போட்டு, அதுக்காக அவ கழுத்துலே மஞ்சக் கயிறைக் கட்டி, கால்லே மெட்டியைப் போட்டு...''

கீழே மணவறையில் விஜயா நிச்சயதார்த்தத்துக்காக உட்கார்ந்திருந்தாள். விஸ்வத்தின் நண்பன் ஒருவன் அந்தக் காட்சியை எட்டிப் பார்த்து விட்டு ரகுவின் பக்கம் திரும்பி, ''ஐ ஸே! யூ லில்லி ஃபெல்லோ! அவன் அறுக்கிறதைக் கேட்டுண்டு நிக்கறயேடா. இங்க வந்து பாரு...'' என்று அழைத்தான்.

விஜயா கொள்ளை அழகாக இருந்தாள். கண்கள் கயல்களாகக் காதளவு நீண்டு மீன்களைப் போல் விளையாடின. அவள் நிச்சயமாகப் பலரைக் கவர்ந்தவளாகத்தான் இருக்க வேண்டும். ஓ! இவளை ரகு காலேஜ் பஸ்ஸில் பார்த்திருக்கிறான். குறும்புச் சிரிப்புடன் ஒரு மாணவனின் ஷர்ட்டுக்குள் கம்பளிப் பூச்சியை நெளிய வைத்த பெண் தான் இவள். அன்றைக்கு இவள் எப்படியெல்லாம் சிரித்தாள்?

''விஸ்வம்! இவளை நீயும் பார்த்திருக்கேடா...'' என்றான் ரகு.

விஸ்வம் விஜயாவை உற்றுப் பார்த்தான். ஆமாம்... ஆர்ட்ஸ் காலேஜ் ஸ்டாப்பிங்கில் இறங்கும் போது அவள் மீது மோதி இடித்த படி இறங்கிய விஸ்வத்தை அவள், ''மிஸ்டர்! டோண்ட் யூ ஹாவ் ஐஸ்...'' என்று கேட்டிருக்கிறாளே!

பெண் பார்க்கப் போன அன்று ரகுவும் அவளைச் சரியாகக் கவனிக்கவில்லை. டிபன், காபி கொடுத்து விட்டு ஒரு நிமிஷம்தான் அவள் நின்றாள். பிறகு உள்ளே போய் விட்டாள். அதற்குமேல் இன்னொரு முறை அவளைச் சரியாகப் பார்ப்பதற்கு மறுபடியும் கூப்பிடலாமா என்று சிலர் யோசித்த போது அதெல்லாம் நாகரிகமில்லை என்று சொல்லிவிட்டான்!

ரகுவின் உள்ளம் துணுக்குற்றது. இவளும் நம்மைக் கவனித்திருப்பாள். சரளாவும் அதே பஸ்ஸில் தானே வந்து கொண்டிருந்தாள்? ஓ! மைகாட்! என்ன இப்படியொரு தர்ம சங்கடம்? இந்தக் கல்யாணத்துக்கு சரளாவும் வந்தாலும் வரக் கூடும்.

''டேய் விஸ்வம்! கீழே போய் சூடா ஒரு கப் காப்பி கொண்டு வாடா... பைதிபை... அந்தச் சரளா வந்திருக்கிறாளா என்று பாரேன்...''

விஸ்வம் சிரித்தான். ''அந்த சரளா உன் விஜயாவின் தோழி தான் அப்பா... ரொம்ப மிரண்டு போயிடாதே...அவள் வந்தா என்ன பண்ணப் போறாள்?'' என்று கேட்டபடி விஸ்வம் கீழே போய் சூடாகக் காப்பி எடுத்துக் கொண்டு வந்தான்.

நிச்சயதார்த்தம் முடிந்து சாப்பாட்டுப் பந்தி நடந்து கொண்டிருந்தது. கல்யாணப் பெண் எல்லோருக்கும் நமஸ்காரம் பண்ணிக் கொண்டிருந்தாள். பிறகு காலியாக இருந்த அறைக்குள் சென்று விச்ராந்தியாக உட்கார்ந்தவளின் எதிரே சரளா உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தாள்.

மணப் பெண்ணின் ஜடை அலங்காரத்தைக் கலைத்து சாதா பின்னலாகப் பின்னிக் கொண்டிருந்தாள் சரளா. அவளும் விஜயாவும் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள்.

''நீ ரகுவைப் பல தரம் பஸ்லே மீட் பண்ணியிருக்கே விஜயா!'' என்றாள் சரளா.

''ஸோ வாட்?'' என்று நிதானமாகப் புன்னகைத்தாள் விஜயா.

''ஒண்ணுமில்லேடி. அவர் உன்னைப் பத்தி ஏதாவது தப்பா நெனச்சுக்கப் போறாரேனு இருக்கு. ஒரு தடவை யாரோ ஒரு பையன் முதுகிலே கம்பளிப் பூச்சியைப் போட்டே இல்லே நீ?''

''ஆமாம்... கொஞ்சம் தமாஷ் பண்ணலாமேன்னுதான்...''

விஸ்வம் கீழே இறங்கி வந்தான். அறையின் வாசற்படியருகில் வந்து நின்று ''மிஸ் சரளா, மாப்பிள்ளைக்கு இன்னும் சாப்பாடு வரலே...'' என்று நினைவு படுத்தினான்.

''ரொம்பப் பசிக்குதாமா? பசிக்கும் பசிக்கும்! இனிமே விஜயா சாப்பாடு தான் போடுவாளோ, பட்டினி தான் போடுவாளோ?''

விஸ்வம் சிறிது யோசித்தான். இவளால் எப்படி இந்த மாதிரி இருக்க முடிகிறது? ஓர் ஆணுடன் தனியறையில் ஓர் இரவு பூராவும் கழித்து விட்டு, அவனே தன் தோழியின் கணவன் ஆகப் போகிறான்

என்று தெரிந்தும் மிகச் சாதாரண மாக, மிக மிக சாதாரணமாக எப்படி இருக்க முடிகிறது? அவனுடைய சின்ன வயசில் அவள் அக்கா யாரையோ 'லவ்' பண்ணி னுள் என்பதற்காக (வெறும் லவ் தான். பார்க், பீச் என்று எங்கேயும் சந்திப்பது கிடையாது!) அவள் அப்பாவும், அம்மாவும், தாத்தாவும், பாட்டியும் போட்ட சத்தமெல்லாம் இன்னும், இப் போதும் காதைத் துளைப்பது போல் இருந்தது.

'காலம் மாறி விட்டதா? வானத் தில் சூர்ய கதி மாறவில்லை. தாரா கணங்கள் அதன் வழியே செல் கின்றன. மனித சமுதாயம் மட்டும் மாறுதல்களுக்கு உட்படக் காரணம் என்ன?' என்று யோசித்தாள். சமையற்காரர் சாப்பாடு வகை களுடன் மாடிக்குப் போவதைக் கண்டு அங்கே போனுன்.

ரகு ரஸித்துச் சாப்பிட்டான். இடையிடையே சரளாவைப் பற்றி ஜோக் அடித்தான். அவள் விளுடிக் கொரு தரம் கண்களைச் சுழற்றிய வாறு பேசுவது போல் தன் நண்பர் களுடன் பேசிக் காட்டினுன். எல்லோரும் சிரித்தார்கள். சமையற் காரரும் சிரித்தார். கீழேயிருந்து ரகுவின் மாமனுர் வந்து எட்டிப் பார்த்து மாப்பிள்ளையின் பலத்த சிரிப்பின் காரணத்தை அறிந்து கொள்ள விரும்பினுர்.

''அவனோடே படிச்ச பொண்ணைப் பத்திப் பேசருன்...'' என்று ரகுவின் அப்பா சம்பந்தியிடம் விவரித்தார்.

''அது அப்படித்தான்னு... அந்தக் காலத்துலே பாருங்கோ, எங்க கிராமத்துலே காவேரியிலே குளிக்க பெண்கள் வருவா. ஒளிஞ்சிண்டிருந்து பார்க்கறதுலே ஒரு திருப்தி....'' என்று அவர் அனுபவத்தை அவர் விவரித்தார்.

'' அப்போ ஒளிஞ்சுண்டு தானே பார்த்தோம்? இப்ப பப்ளிக்கா பார்க்கருன்கள்! கேள்வி முறை கிடையாது. அதுகளும் அரையும், குறையுமாத் திரியறதுகள்!'' ரகுவின் அப்பா எரிச்சல் பட்டுப் பேசினுர்.

''அது அப்படித்தான்னு... வயசுக் கோளாறு...'' என்றபடி கீழே இறங்கிப் போனுர்.

கூடத்திலே ஜமக்காளம் விரிக்கப் பட்டது. எல்லோரும் சீட்டுக் கட்டு களை எடுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தார்கள். சமையற்காரர் ஒரு கெட்டில் நிறைய காப்பி கொண்டு வந்து வைத்து விட்டு, வெற்றிலைத் தாம்பாளத்தையும் கொண்டு வைத்தார்.

''டேய் விஸ்வம்! ஒரு கை கொறையறது. கீழே சரளா இருக் காளா பார்... ரொம்ப நன்னு ஆடுவா... கொஞ்சம் 'காஷ்' எடுத் துண்டு வரச்சொல்லு...''

விஸ்வம் தயங்கினுன்.

''போடா! யூ இடியட்! நானும், அவளும் மறந்து போனதை நீ ஏண்டா நெனவு வச்சுண்டு இருக்கே? ஒனக்குக் கிடைக்கல லேன்னு ஆங்காரப் படறயா?''

''விஜயாவைக் கூப்பிடறேண்டா. இனிமே அதான் சரி...''

''நோ... நோ... விஜயாவைப் பார்த்தாலே தெரியலை... அவளுக்குச் சீட்டை எப்படிப் பிடிக் கிறதுன்னு தெரியாதுன்னு.''

கீழே பெண்களின் குரல் கேட்டது.

''மாடியிலே சீட்டு ஆடறுப் போல இருக்கே...''

''ஆமாம்... மாப்பிள்ளையும் அவா சிநேகிதாளும் ஆடறு... காசு வச்சு ஆடறு...'' என்றுர் சமையற்காரர்.

''நானும், ரகுவும் ரொம்பத் தரம் சீட்டு விளையாடி இருக்கோம்... நான் நெறய ஜெயிப்பேன். ஒரு தடவை இரண்டு 'புல் வாயில்' சாரி வாங்கப் பணம் கெடச்சுதுன்னுப் பாரேன்...''

''அப்படியா? எனக்கும் கத்துக் குடேண்டி...''

''போடி... இனிமே உன் அவர் எல்லாம் கத்துக் குடுப்பார்...''

''நாம்ப போய் வேடிக்கை பார்க் கலாமா? அவாத்துலே எல்லோரும் —அதாவது— லேடிஸ் எல்லாம் தூங்கியிருப்பாளா?''

''இரு, நான் போய்ப் பார்த்துட்டு வரேன்...''

சரளா சிறிது நேரத்தில் மாடிக் குப் போய் விட்டுக் கீழே வந்தாள்.

''விஜயா! உன் அவர் என்னை ஆடக் கூப்பிடுகிருர்...''

''ஸோ வாட்! போய் ஆடேன். நான் ஒளிஞ்சு நின்னபடி பார்க் கிறேன்!''

சரளாவுக்கு அன்று ஏகப்பட்ட லாபம். இருநூறு ரூபாய்களுக்கு மேலே அள்ளிக் கொண்டு அவள் கீழே வந்தபோது விஜயாவின் அப்பா மாடி பால்கனியில் சம்பந்தி யிடம், ''போய்ப் படுத்துக்குங்கோ. காலமே எழுந்திருக்கணும். இப்படிப் பேசிண்டிருந்தா அவா சீட்டுக் கச்சேரியை நிறுத்த மாட்டா; நாமும் புகையிலை போடறதை நிறுத்த மாட்டோம்...'' என்று சொல்வது கேட்டது.

''நன்னு உக்காந்து ஆடறு ஒரு பொம்மனுட்டி...'' என்றபடி அவர் எழுந்ததும், சம்பந்தி, ''அது அப்படித்தான்னு...'' என்று ஆரம் பித்தார்.

மேலும் அவர் விவரிக்கப் போகும் பழங்கதைகளைக் கேட்க விருப்பமில் லாமல் பால்கனி விளக்கை அணைத்துவிட்டுப் படுத்தார் அவர். ☙

சீதா இன்னமும் அரைக் கண் தூக்கத்தில் இருந்தாள். அற்புதமான கனவுகள்— யாது நினைவிருக்கிறது; பாதி மறந்து போய்விட்டன. அவள் படுக்கையில் இப்புறமும் அப்புறமும் புரளும்போது, கைகளில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த வளையல்கள் கலகல வென்று ஒலித்தன. அந்த இனிய ஓசை யாரோ ஒருவர் வீணையைத் தடவுவது போலவும் காற்றில் இழைந்து மெல்லிய ஒலியாக வரும் நாதஸ்வரம் போலவும் அவளுக்குத் தோன்றியது. எல்லாமே கனவின் மயக்கம்தான். அத்துடன், சின்னஞ் சிறு மதலையின் மென் சிரிப்பு இடைவிடாமல் கேட்டுக்கொண்டேயிருந்தது.

காலை வந்துவிட்டதற்கு அறிகுறியாக அவள் [illegible] நன்றாக விழித்துக் கொண்டாள். இரண்டு கைகளையும் தலைக்கு மேல் உயர்த்தி நெட்டி முறித்தவாறு கைகளை உதறி விட்டுக் கொண்டாள். தலையில் முதல் நாள் மாலையில் அடுக்கடுக்காகச் சூட்டியிருந்த மல்லிகை, இருவாட்சி முல்லை யாவும் ஒரே மணமாகச் சங்கமித்து, அந்த அறை பூராவும் கமழ்ந்தது.

சீதாவுக்கு முதல் நாள்தான் வளை காப்பு நடந்தது. விரல்களில் மருதாணி இட்டு, தலை நிறையப் பூச்சூட்டி அவளை மணையில் உட்கார்த்தினார்கள். வளைச் செட்டியாரவர், வளையல் பெட்டியைத் திறந்து வைத்துக் கொட்டிக் கும்பிட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டார். பழுத்த சுமங்கலியான ஓர் அம்மாள் முதலில் வேப்பிலைக் காப்பைக் கைகளில் பூட்டினாள். அப்புறம் பொன் காப்பும், வெள்ளிக் காப்புகளும் கைகளில் குலுங்கின. [illegible] விதவிதமாகக் கண்ணைப் பறிக்கும் வளையல்கள் மின்னின.

சீதா வலது கரத்தை மெதுவாக நீட்டினாள். பச்சை, சிவப்பு, நீலம், ஊதா என்று [illegible] ஒன்றாக அடுக்கிக் கொண்டு வந்தார் வளைக்காரச் செட்டியார்.

'செட்டியாரே! அரக்கு வளையல் இருக்கிறதா?' என்று கேட்டுக்கொண்டு அந்தக் காலத்து அம்மாள் இடையில் ஒரு கேள்வியை எழுப்பினாள்.

'ஓ! இருக்குங்களே! நீங்க கேப்பீங்கன்னு தெரிஞ்சுதான் கொண்டாந்திருக்கேன்... எங்கே தாயி.. கையைக் காட்டம்மா...' என்றவாறு வளைச்செட்டி அரக்கு வளையலை எடுத்துக் கைகளில் பூட்டினார். பவழத்தைக் குடைந்து வைரக் கற்களைப் பதித்ததுபோல் கண்ணாடித் துண்டுகளை அழகாகப் பதித்த அந்த வளையல்கள் சீதாவின் கைகளில் பளீரென்று ஒளிர்ந்தன.

சீதா மெதுவாகத் தலையை நிமிர்த்திக் கூடமெங்கும் தன் பார்வையை ஓடவிட்டாள். செம்மையும், செழுமையுமாக இருந்த அந்த மதிவதனத்தில் புன்னகை [illegible] நிரம்பி இருந்தது. வாசல் அறையில் உட்கார்ந்திருந்த அவள் கணவன் சுந்தரராஜன் கூடத்துக்கு வந்து [illegible] 'க்ளிக்'கைத் தட்டிவிட்டு மறுபடியும் உள்ளே போய்விட்டான். அந்த விநாடி [illegible]

சுந்தரராஜன் சற்று முற்போக்கானவன். கல்யாணமானவுடன் அவன் மனைவியை எதிர்பார்த்தது, எங்கேயோ இருக்கவில்லை. ஆனால் சீதா அவனுக்கு மாறான உள்ளம் படைத்தவள்.





# செம்பவழ வாய் திறந்து....

சரோஜா ராமமூர்த்தி

அழகிய குழந்தை, சின்னஞ் சிறு மதலை ஒன்று அவள் உள்ளத்தில் தன்னுடைய பூப்பாதங்களைப் பதித்து ஒய்யாரமாக நடை பயின்றுகொண்டே இருந்தது.

இந்த ஆவல் அவளுள் இன்று, நேற்று ஏற்பட்டதல்ல; பேதைப் பருவம் நீங்கி மங்கையானபோதே அவள் கற்பனையில் அந்தப் பெயர்–இனம் தெரியாத குழந்தை உருவாகி வளர்ந்து வந்தது.

அதற்கும் காரணமில்லாமற் போகவில்லை. கீதா அவள் பெற்றோருக்கு ஒரே மகள். அத்தனை பெரிய வீட்டில் தன்னந் தனியாக ஒரு சிறு பொம்மை போல் அவள் உலவி வந்தாள். அவள் அப்பா அடிக்கடி வெளியூர்களுக்குப் போய்விடுவார். அம்மாவுக்கு அவள் அலுவல்கள்தான் முக்கியம். கீதா மட்டும் எப்பொழுதும் தனிதான். எத்தனை நேரம்தான் உயிரற்ற பொம்மைகளுடன் விளையாட முடியும்? அதற்கு அவள் உயிரூட்டிப் பார்த்தாள். செல்லமாகக் குழந்தையைக் கொஞ்சினாள். உச்சி முகர்ந்தாள். காலில் போட்டுக் குளிப்பாட்டினாள். 'ஆராரோ...' என்று தாலாட்டும் பாடினாள். ஆனால், பொம்மைக்கும், குழந்தைக்கும் வேறுபாடு தெரியும் வயது வந்ததும் அதுவும் அலுத்து விட்டது அவளுக்கு.

பள்ளியிலிருந்து வீட்டிற்கு வந்ததும் தோட்டத்தின் மூலைக்குப் போய் விடுவாள் கீதா. அங்கிருந்து தெரியும் கடைத் தெருவில் திரியும் குழந்தைகளை ஆசையுடன் பார்ப்பாள். ஒன்று அம்மாவின் இடுப்பில் ஜம்மென்று உட்கார்ந்து சவாரி செய்ய, இன்னொன்று அம்மாவின் தலைப்பைப் பிடித்து இழுக்க, குறுகுறுவென்று அவற்றுக்கே உரித்தான பார்வையும் அதுவுமாக... கீதா உள்ளத்திலிருந்து பேராவா ஒன்று பெரிய வினாவாக உருவெடுத்தது. 'ஒவ்வொருத்தர் வீட்டிலும் நாலைந்து குழந்தைகள் இருக்க, நம் வீட்டில் நான் மட்டும் ஒண்டியாக...ஏன்? அம்மாவைக் கேட்க வேண்டும்.'

தோட்டத்து மூலையிலிருந்து வீட்டுக்கு வந்த அவள் என்றுமில்லாமல் ஒரு வினாவைத் தொடுத்தாள், அம்மாவைப் பார்த்து.

'அம்மா! என்னோடு விளையாட நம் வீட்டிலே இன்னொரு பாப்பா பிறக்காதா, அம்மா?'

அம்மா இதைச் சற்றும் எதிர்பார்க்கவில்லைதான். கீதாவுக்கப்புறம் குழந்தை இல்லையே என்கிற ஏக்கம் தன் அளவில்தான் என்று நினைத்திருந்த அந்தத் தாய், அந்த ஏக்கம் மற்றொரு மனத்திலும் புகுந்து விட்டதைப் பார்த்து வேதனைப்பட்டாள்.

'இல்லையம்மா...' தாய் தானே ஏதோ குற்றம் புரிந்தமாதிரித் தலை குனிந்து விடையளித்தவுடன் மகள், 'ஏன்?' என்று கேட்டு விட்டாள்.



'ஏனோ? அதோ பார் அவனைக் கேள்...' என்று கூடத்தில் மாட்டியிருந்த கடவுளின் திருவுருவைச் சுட்டிக் காட்டிவிட்டு விடுவிடுவென்று உள்ளே போய்விட்டாள். பிறகுதான் புரிந்தது கீதாவுக்கு, தன் அம்மாவைப் புண்படுத்திவிட்டோம் என்று.

அதன் பிறகு அந்த ஆசையை அவள் உள்ளத்தில் புதைத்துக் கொண்டு பள்ளிப் படிப்பைப் படித்து முடித்தாள். உரிய இடத்தில் திருமணம் ஆயிற்று. கணவன் வீட்டில் காலடி வைத்தவுடன் அவள் கருத்தில் இருந்த எண்ணம் கற்பனையில் பெரிதாக வளர்ந்துகொண்டே வந்தது. கணவனுடன் கடைத் தெருவுக்குப் போனபொழுது அவளே ஒரு குழந்தையைப்போலக் குழந்தைப் படங்களையும் பொம்மைகளையும் வாங்கினாள்.

'உனக்கென்ன பைத்தியமா?' என்று அவள் கணவன் கேட்டுச் சிரித்தபோது, 'ஆமாம்...' என்று தீர்மானமாகச் சொன்னாள், அதை லட்சியமே செய்யாமல். மானசீகமாக அவள் கண்களை மூடி ஒரு அழகுக் குழந்தையின் உருவத்தைத் தன் மனத்திரையில் வரைந்து பார்த்தாள்; பெருமூச்செறிந்தாள்.

இதோ அந்தக் கனவும் நனவாகப் போகும் தருணம் வந்து விட்டது. படுக்கையில் புரண்டு படுத்த கீதாவின் வயிற்றுக்குள் ஏதோ ஒன்று எழும்பி உதைத்தது. பின்னர் அது அமைதி அடைந்து விட்டது. அந்த ஒரு வினாடிக்குள் அவள் மனத்தில் சொல்ல முடியாத கிளுகிளுப்பும், இன்பப் போதையும் நிரம்பி வழிந்தன.

அப்படியே படுக்கையில் ஒருக்களித்துச் சாய்ந்து படுத்திருந்தாள். பஞ்சணையில் தன் அருமைச் சேயைப் படுக்க வைத்துத் தாலாட்டுவதுபோல ஒரு பிரமை. அவள் தன்னுள்ளே கண்ட இன்பத்தில் பொழுது விடிந்ததையோ, கதிரவன் உதித்ததையோ கவனிக்கவில்லை. தெளிந்த வானத்தில் ஆதவன் கிரணங்களால் கோலமிட்டு அதனிடையே சக்கர வட்டமென எழுந்து வந்தது பலகணி வழியாகப் பளிச்செனத் தெரிந்தது.

கீதா படுக்கையில் எழுந்து உட்கார்ந்தாள். திடீரென்று ஏற்பட்ட அந்தப் பேரொளியை வியப்புடன் நோக்கினாள் அவள். ஒளி வட்டத்தின் நடுவே அது என்ன? கண்ணைப் பறிக்கும் எழிலுடன் குருத்துக் கால்களும், கைகளுமாக, செம்பவழ வாயுடன்? —கீதா கண்களைக் கொட்டி, நன்றாக விழித்துப் பார்த்தாள். அங்கே ஒன்றுமில்லை. கதிரவன் சுழன்று எழுந்து வந்து கொண்டிருந்தான்.

அவளுக்கு ஏனோ சிரிப்பு வந்தது. கன்னம் குழியத் தனக்குத் தானே சிரித்தவளாய்த் தலை குனிந்தாள்.

'கீத்... இன்னுமா தூக்கம்? நான்

இன்று பத்து மணி வண்டிக்குக் கிளம்புகிறேனே...' என்றவாறு அவள் கணவன் சுந்தரராஜன் வந்தான்.

கன்னம் குழிந்த நிலையில், குவிந்த அதரங்களுடன் கண்கள் நிலைத்த நோக்க அமர்ந்திருந்த மனைவியை அவனும் பார்த்த வாறு நின்றான்.

தன் மனைவி நல்ல அழகி என்பதை ஏற்கெனவே அவன் உணர்ந்துதான் இருந்தான். ஆனால், அந்த அழகு இன்று அவன் கண்களைக் கூசச் செய்தது. பொங்கிப் பெருகும் புது வெள்ளம் போல் அவள் மேனியெங்கும் எழில் அலைகள் விளையாடின. தாழம்பு வண்ண மேனியில் செம்மை படர்ந்து, கைகள் உருண்டு திரண்டு, துடியிடை பெருத்து பாரம் சுமக்க அவள் தாய்மைக் கோலத்தில் பெருமையாக, கம்பீரமாகக் காட்சி தந்தாள்.

'கீதா...' என்று செல்லமாக, அதே சமயத்தில் பக்தியுடன் அவளை அழைத்தான் சுந்தரராஜன். கீதா சட்டென்று தன் கற்பனையிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டாள்.

'தூங்கிப் போய்விட்டேன்' என்று பச்சைப் புளுகைக் கூறியவாறு, 'நீங்கள் இன்றே போக வேண்டுமா? அப்படியானால் நானும் வருவேன்' என்று செல்லமாகச் சிணுங்கினாள்.

'நீயும் வருவதா? அழகுதான் போ!...தன்னந் தனியாக உன்னை அழைத்துப் போய் நான் என்ன செய்வதாம், கீது?'—கீதா கண்களில் நீர்த்திரை யிட அவனை ஏறிட்டுப் பார்த்தாள்.

'இதோ...பார்...இன்னும் மூன்று மாசங்கள். அப்புறம் நீ என்னைக் கவனிக்கவே மாட்டாய். உன் பாப்பாவை விட்டு நான் ஒருத்தன் இருப்பதைக் கூட நினைவுபடுத்திக்கொள்ள மாட்டாய். நீ ஒரு குழந்தைப் பைத்தியமாச்சே!' சுந்தரராஜன் ஏதோ நகைச் சுவையாகப் பேசிவிட்டாற்போல் கலகல வென்று சிரித்தான்.

கீதாவின் முகம் சட்டென்று வாடிவிட்டது. 'ஆம்...அவள் ஒரு குழந்தைப் பைத்தியந்தான். அந்தப் பைத்தியத்தின் எண்ணங்களில்தானே எத்



னை எத்தனை இன்பக் கனவுகள்? இவரால், இந்த மனிதரால் தன் வருங்கால மதலையைக் கற்பனை செய்தாவது பார்க்க முடியுமா? ஏன், தந்தையர் யாராலும் காண முடியாத கற்பனை அது!'

சுந்தரராஜன் ஊருக்குக் கிளம்பி விட்டான். இனி அவளை, அவள் எண்ணங்களை யாராலும் கலைக்க முடியாது. அம்மா ஆசையாக அமுது படைக்க அதை உண்டுவிட்டு கீதா தன்னை மறந்த நிலையில், கருவில் வளரும் சேயுடன் பேச ஆரம்பித்து விடுவாள்.

நாட்கள் நழுவி மாதங்கள் தேய்ந்தன. பழுத்த மாங்கனிபோல் கீதா தள்ளாடிக்கொண்டிருந்தாள். அவள் எதிர்பார்த்த நாளும் வந்தது. ஆஹா.. தாய்மைச் சுமை மிகமிகக் கடினம் என்றால், தாயாவது அதைவிடக் கடினம். உயிரின் வேதனை அவள் ஒவ்வொரு நாம்பிலும் தெறித்து ஓட, கருவிலிருக்கும் மற்றொரு உயிர் இந்த மண்ணில் குதிப்பதற்குள் கீதா துடிதுடித்துவிட்டாள்.

'அம்மா—' என்ற அலறலுக்குப் பின் 'குவா' 'குவா' என்கிற இன்ப கீதத்தின் ஒலியில் தன்னையே மறந்து மயங்கிவிட்டாள் அவள். கண் விழித்தபோது அவள் அன்னை தான் பாட்டியான பெருமையை இந்த அன்னைக்கு விண்டுரைப்பதுபோல் தங்க மதலையைக் கையில் ஏந்தியவாறு அவள் முன் உட்கார்ந்திருந்தாள்.

'கீதா குழந்தையைப் பார்க்கிறாயா, அம்மா? பையன்தான். எல்லாம் உன்னுடைய 'அவரின்' அச்சுதான் போ...'—கீதாவுக்கு ஒரே பெருமை, தான் பெற்ற செல்வம் அவரைப்போல இருப்பதில்.

புண்ணியாஹவாசனத்துக்கு வந்த சுந்தரராஜன்கூட கீதாவிடம் மரியாதையாக நடந்துகொண்டான். அவள் அவனுடைய பழைய கீதா அல்லவே; கண்ணனின் அம்மா அல்லவா?

'கீதா... எப்பொழுது வரப்போகிறாய் நம் வீட்டுக்கு?'—சுந்தரராஜன் கேட்டான்.

'அழகுதான் போங்கள்... பச்சைக் குழந்தையை வைத்துக்கொண்டு எனக்கு என்ன தெரியும்? குழந்தை நன்றாக நடக்க வேண்டும். அப்பொழுது தான் வர முடியும்... ஆமாம்..'

'ஓஹோ!' என்றான் அவன்.

கண்ணனின் கருக்கம் விழுந்த மேனியெங்கும் செழுமை தோன்றலாயிற்று. மணிக்கணக்கில் தூங்கி, ஹாரியிரட்டலுக்கிடையே சிரித்தும், அழுதும் வந்தவன், அன்னையின் முகம் பார்த்துச்சிரிக்க ஆரம்பித்துவிட்டான்.

'அம்மா... அம்மா.. இவனைப் பாரேன். 'ங்க்கூ' என்கிறான்...' —கீதா தன் அம்மாவைக் கூப்பிட்டாள்.

'மூன்றும் மாசமோ, இல்லையோ?' —பாட்டியின் பதில் இது.

பஞ்சணையில் படுக்க வைத்த கண்ணனைக் காணோம்! மார்பும், வயிறும் புழுதியில் தோய, நீந்தி நீந்திக் களைத்துப்போய் வாசற்படியருகில் தலை வைத்துப் படுத்திருந்தான் அவன்.

'ஆறு மாசத்துக்குள் என்னடா உனக்கு அவசரம்?'— பாட்டி கடிந்து கொண்டே குழந்தையை அள்ளி அணைத்துக் கொண்டாள்.

'அவனுக்கு அப்பாவிடம் போக வேண்டுமாம்... அவசரப்படுகிறான்'— கீதா கணவனுக்குக் கண்ணனின் விளையாட்டுகளை விளக்கிக் கடிதம் எழுதிக் கொண்டே நவின்றாள்.

அன்புள்ள கண்ணனப்பாவுக்கு.

நமஸ்காரம். குழந்தை நேற்றிலிருந்து தன் செம்பவழ வாய் திறந்து 'அம்மா'வென்று அழைக்கிறான். அவன் 'அப்பா'வென்று அழைப்பதைத் தாங்கள் கேட்கவேண்டுமே என்று இன்றே புறப்பட்டு ஓடோடி வந்துகொண்டிருக்கிறேன். ரயிலடிக்கு வாருங்கள். மறக்காமல் நல்ல பசும்பாலாகக் குழந்தைக்கு வாங்கிக் காய்ச்சி வையுங்கள்.

உங்கள் கீதா.

சுந்தரராஜன் கடிதத்தைப் படித்தவுடன் 'ஓஹோ! பிள்ளையை அழைத்து வருகிறதற்கு அதிகாரம் செய்வதைப் பார்...! வரட்டும் சொல்கிறேன்' என்று கருவிக் கொண்டே பசும்பால் கிடைக்குமா என்று விசாரிக்க வெளியே சென்றான். ★

# நிறைந்த மனம்

ஸரோஜா ராமமூர்த்தி...

ஸ்ரீ தியாகராஜ ஐயர் வீட்டு அறுபதாம் கல்யாணத்துக்கு நீதான் போகும்படி யாக இருக்கும். எனக்கு அன்று ஆபீ

தட்சிணை ஆயிரம். நகை கள் ஆயிரம். வைரத் தோடு ஆயிரம். சீர் வரிசைகள் ஆயிரம். பிறகு இருக்கவே இருக் கிறது கல்யாணச் செலவு. இப்படி ஆயிரக்கணக் கில் பணம் செலவழிக்கப் பெண்ணைப் பெற்றவர்கள் எல்லோரும் பெரிய பணக்காரர் அல்லவே!



் முக்கியமான வேலைகள் இருக்கின் சில 'பேப்பர்கள்' மேலுக்குப் யாகவேண்டும்" என்றார் என் கண ர், அப்தபூர்த்தி அழைப்பிதழைக் கையில் வைத்துக்கொண்டு.

"ஆமாம், போனார்கள்!" என்றேன் நான். மேலும் தொடர்ந்து, "எனக்கு இரண்டு மூன்று சிறு கதைகள் எழுதி யாகவேண்டும். ஹிந்தி வகுப்பு வேறு இருக்கிறது. இதற்கெல்லாம் யார் போகி றது?" என்றேன். வழக்கமான புன் சிரிப்புடன், "ஓஹோ! பரவாயில்லையே. இவ்வளவு தூரம் பேச வந்துவிட்டதே உனக்கு. போகட்டும். உனக்கு அவர்கள் பேரில் என்ன கோபம்? அறுபது வயசு வரை தம்பதிகள் ஒன்றாக வாழ்ந்து அதைக் கொண்டாடுகையில் சிறியவர் கள் போய்ப் பார்த்து ஆசி பெறுவது நல்லதாமே. மாங்கல்ய பலம்கூட ஏற் படும் என்று சொல்கிறார்கள்."

"இருக்கலாம். ஆனால், இவர்களிடம் எனக்கு ஆசி ஒன்றும் தேவையில்லை. அதனால் போகப் போகிறதில்லை" என் றேன், தீர்மானமாக.

"அப்படியானால் சரி. உன்னை நான் அதைக் குறித்து இனிமேல் வற்புறுத்தப் போகிறதில்லை. உன் இஷ்டப்படி நடந்து கொள்ளலாம்" என்று நிஷ்டூரமாகச் சொல்லிவிட்டுத் தம் அலுவலைக் கவனிக் கச் சென்றுவிட்டார் என் கணவர்.

எனக்கு தியாகராஜ ஐயரின் குடும் பத்தார் மீது யாதொருவிதமான பகை யும் கிடையாது. தியாகராஜனின் மனைவி கமலா, என் வரைக்கும் மிகவும் அன்புடன்தான் நடந்துகொண்டாள். தோட்டத்தில் மலரும் மல்லிகையிலி ருந்து கனகாம்பரம் வரையில் பறித்துத் தோட்டக்காரன் மூலம் எனக்கு அனுப்பு வாள். வாழை தார் போட்டால், சீப்பு சீப்பாகப் பழங்கள் வரும். இருந்தாலும் அவளிடம் எனக்கு உள் ளூர ஒரு வெறுப்பு...

தியாகராஜனின் உடன்பிறந்த சகோ தரன் கோபாலனுக்குப் பெரிய குடும்பம். நாற்பத்தைந்து வயசில் எட்டு குழந்தை கள். மூத்தது பெண். இருபது வயசு முடிந்து இருபத்தொன்றும் வயசாகியும் அவளுக்கு வரன் ஒன்றும் திகைந்து வர வில்லை. துடைத்து வைத்த சிலை மாதிரி வாளிப்பான உடலும், தீர்ந்த மூக்கும், சுழலும் விழிகளுமாக அப்பெண் மங் களத்தைப் பார்த்தாலே பசியாறிப் போகும். அப்படிப் பைங்கிளியாகப் பெண் பிறந்தாலும், அவளுக்கும் கல் யாணமாவது தற்கால சமூகத்தில் ஒரு பிரச்னையாகத்தானே இருக்கிறது? வர

கோபாலனுடைய மாதச் சம்பளம் நூற்றி எண்பது ரூபாய். கிம்பளம் வரு கிற உத்தியோகம் அவருக்கு வாய்க்க வில்லை. உப்பிலிருந்து நெருப்புப்பெட்டி வரை, 'டயபடிஸி'லிருந்து டிஸ்பெப் ஸியா' வரை வரும் வியாதிகளுக்குச் செலவழிப்பதெல்லாம் இந்த நூற்றி எண் பது ரூபாயிலிருந்துதான் ஆகவேண்டும். மாதம் பிறந்து எட்டு தேதிக்குமேல் அவர் உள்ளத்தில் ஆரம்பிக்கும் சோர்வு முப்பது தேதிக்குள் 'இது என்ன வாழ்க்கை? இது என்ன வறுமை?' என்று கசப்புடன் அலுத்துக்கொள்ளும் அளவுக்குப் பெருகிவிடும். ஆனால், அவர் ஏதோ ஒரு உறுதியுடனும், நம்பிக்கை யுடனும்தான் வாழ்க்கை நடத்தி வந் தார். மங்களம் அந்த வருஷம் பத்தாவது தேறிவிடுவாள். பிறகு அவளுக்குக் குறுக்கெழுத்துப் போதித்து எல்லோ ரையும்போல வேலைக்கு அனுப்பிவிட லாம் என்று நம்பிக்கையுடன் கோபாலன் காலத்தைக் கடத்திவந்தார்.

மங்களத்தின் மனதில் தனக்குக் கல் யாணம் ஆகவில்லையே என்கிற ஏக்கமே இல்லை. 'கல்யாணம்' என்பது பணத்தை ஈடாக வைத்து நடத்தப்படும் சடங்கு என்பதே அவள் அபிப்பிராயம். இளம் உள்ளங்கள் இரண்டும் ஆனந்தமாகப் பிணைந்து வாழவேண்டிய புனிதச் சடங்

காக இருந்த கல்யாணம், தற்கால சமூகத்தில் வியாபாரமாக மாறி இருந்ததே, அவள் அந்த முடிவுக்கு வரக் காரணமாக இருந்தது. அவளுடன் படித்த அவள் தோழிகளுக்கு விவாகம் நடக்கும் போது மங்களம் போய் வந்தாள். அங்கெல்லாம் அவள் கண்டதும் கேட்டதும், பணமும், சீரும்தான். வெள்ளியிலே 'ஷேவிங் செட்' வாங்கி மாப்பிள்ளைக்குக் கொடுக்கவில்லை என்று ஒரு மாப்பிள்ளை 'காசி யாத்திரை' கிளம்ப மறுத்தார்! மணப்பெண்ணின் கழுத்தில் தாய் வீட்டாரால் போடப்பட்ட சங்கிலியில் ஒரு பவுன் எடை குறைந்ததாம், அதற்காகப் பெண்ணின் மாமியார் கல்யாண விருந்தைச் சாப்பிட மறுத்தாள்! எங்கேயோ அத்தி பூத்தாற்போல் ஒன்றிரண்டு சௌஜன்யமான விவாகங்களும் நடந்தன.

மண வாழ்க்கைக்கும் வெள்ளி 'ஷேவிங் செட்'டுக்கும் இவ்வளவு நெருங்கிய உறவா? பிறந்த வீட்டிலிருந்து பெண்ணுக்குப் போடப்படும் நகைகளின் எடைக்கும், பெண்ணின் மாமியார் உண்ணாவிரதத்துக்கும் இவ்வளவு நட்பா? என்று மங்களம் எண்ணி வியந்தாள். இதனால் அவள் மனம் கல்யாணத்தில் கசப்பைக் காண்பித்தது. அவளுடைய பெரியப்பா தியாகராஜ ஐயர் மனசு வைத்தால் அவளைத் தகுந்த இடத்தில் விவாகம் செய்து கொடுக்கலாம். செழித்துப் படர வேண்டிய அந்தப் பசுங்கொடிக்கு ஒரு கொம்பை ஊன்றி இருக்கலாம். மங்களத்தின் தம்பி சபேசனுக்கு அவர் எட்டாவது வகுப்புக்குச் சம்பளம் கட்டிவந்ததே பெரிய பாக்கியம் என்று நினைக்க வேண்டும். மாதம் பிறந்தவுடன் நான்கு தடவைகளாவது சபேசன் பெரியப்பா வீட்டின் வாசற்படியில் போய் நிற்க வேண்டும். 'இன்று வா, நாளை வா, இதென்ன பெரிய தொல்லையாகப் போச்சு' என்றெல்லாம் சொல்லிக் கொண்டு, அவன் பெரியம்மா கமலா அவனிடம் ஒரு ஐந்து ரூபாயை எடுத்துக் கொடுப்பாள்.

"கமலம்! இந்த மாசம் அவனுக்கு ஏதோ புஸ்தகம் வாங்க வேண்டுமாம். கூட ஒரு ஐந்து ரூபாய் கொடுத்தனுப்பு" என்று சொன்னார் தியாகராஜன்.

"ஆமாம், புஸ்தகம் வாங்கறான்! மாசா மாசம் என்ன புஸ்தகம் வாங்குகிறதாம்? இவாளுக்கெல்லாம் கொடுக்கிறதுக்குத் தான் இங்கே கொட்டி வைச்சிருக்கு!"

பீரோவைப் 'பட்'டென்று திறந்து 'டப்'பென்று மூடி ஒரு ஐந்து ரூபாய் நோட்டைக் கொண்டுவந்து சபேசன் முன்னால் எறிந்துவிட்டுப் போனாள் கமலம். பெரியப்பா அருகில் தான் உட்கார்ந்திருந்தார். உணர்ச்சியற்ற ஜடப்பொருளாக அவர் எப்படித்தான் இருக்கிறாரோ? நம்மால் முடியவில்லையே என்று நினைத்துக் கண்களில் கண்ணீர் ததும்ப சபேசன் ரூபாயை எடுத்துக் கொண்டு வீட்டிற்குப் போனான். கண் சிவக்க அழுதுகொண்டு வரும் சபேசனைக் கண்டதும் அவன் தாயின் மனம் வேதனையால் துடித்தது.




"ஏண்டா அழுகிறாய்?" என்று கேட்

டான், வேதனை படரும் விழிகளால் அவனைப் பார்த்து.

"அம்மா! நான் இந்த மாசத்தோடு பள்ளிக்கூடம் போவதை நிறுத்திவிடுகிறேன். இந்த மாதிரி.." வார்த்தைகளை முடிக்காமலேயே சபேசன் மளமளவென்று கண்ணீர் பெருக்கினான்.

"நிறுத்திவிட்டு மிட்டாய்க் கடைக்குப் போடா. இஞ்சி, வெங்காயம் நறுக்கித் தரலாம். படித்தவன் எல்லாம் தகிங்கிணதோம் போடுகிறான். இவன் பள்ளிக்கூடத்திலேயிருந்து நிக்கப்போறானாமே" என்றார் எரிச்சலுடன், மகன் சொல்வதைக் கேட்டுக்கொண்டு வந்த கோபாலன்.

"அதுவே தேவலை அப்பா. இந்த மாதிரி யாசகம் வாங்கிப் படிப்பதைவிட, அதுவே தேவலை" என்றாள் மங்களம். அவள் முகம் கோபத்தால் சிவந்திருந்தது. கையில் இருந்த காகிதத்தை ஒரு முறைக்குப் பல முறைகள் படித்துவிட்டு அவள் தீர்மானத்துடன் சபேசனைப் பார்த்தாள்.

"சபேசா! எனக்கு ஒரு கம்பெனியில் டைபிஸ்ட் வேலை கிடைத்திருக்கிறது. அடுத்த மாசத்திலிருந்து பெரியப்பா வீட்டுக்கு யாசகத்துக்குப் போகாதே. ஆமாம்.." என்று உரக்கக் கூறினாள் மங்களம்

கோபாலன் திடுக்கிட்டு நின்றார். பிறகு மகிழ்ச்சியுடன், "வேலை கிடைத்துவிட்டதா? பரவாயில்லையே" என்றார் அவர்.

"என்ன பரவாயில்லை? வயசு வந்த பெண்ணை ஆபீசுக்கு அனுப்பலாவது! எனக்கு என்னவோ ஒன்றும் பிடிக்கவில்லை. அறிவு வளர்ச்சிக்குப் பெண்கள் படிக்க வேண்டியதுதான். மங்களம் சம்பாதித்துத்தான் நம் வயிற்றைக் கழுவ வேண்டுமா என்ன? எப்படியோ இன்னும் ஐந்தாறு வருஷங்கள் பொறுத்தால் சபேசன் தலையெடுத்துவிடமாட்டானா? மூத்த குழந்தையை லட்சணமாகக் கல்யாணம் செய்து கொடுத்துக் கண் குளிரப் பார்க்கவேணுமென்கிற ஆசை உங்களுக்கு இல்லையே" என்று படபடவென்று சொற்களைக் கொட்டினாள், மங்களத்தின் தாய் சம்பகம்.

"அடேடே! அவளுக்குக் கல்யாணம் பண்ணிக் கண் குளிரப் பார்க்க வேண்டுமென்கிற எண்ணம் எனக்கு எப்படி இருக்கும் சொல்? உனக்குத்தான் இருக்கும்" என்று குத்தலாகக் கூறினார் கோபாலன்.

"உங்களுக்கு அந்த எண்ணம் இருக்கிற சுவடே தெரியவில்லையே. 'இந்த ஆபீஸுக்கு எழுது, அங்கே எழுது' என்றுதானே சொல்லிக்கொண்டிருக்கிறீர்கள்? அந்தத் தஞ்சாவூர்ப் பிள்ளையைப் போய்ப் பார்த்துக் கேட்கிறது தானே?" என்றாள் சம்பகம்.



"இரண்டு வருஷமாக தீபாவளிக்கும் பாக்கி, அதைக் கேட்கத்தான் நான் வந்தேன்."

"அதுக்கும் முந்தி, பொங்கல் இனும் தரல்லே! அதுக்காகத்தான் நான் வந்தேன்!"

"தஞ்சாவூர்ப் பையனா? அவனுக்கு நம் மங்களத்தைப் பிடித்திருக்கிறதாம். ஆனால், அவன் அம்மாவுக்கு நாட்டுப் பெண் நிறைய சீரும் சிறப்புமாக வர வேண்டுமென்று ஆசை. பவுன் விற்கிற விலையில் பதினைந்து பவுன்கள் நகை போட வேண்டுமாம். அப்புறம் இருக்கவே இருக்கிறது மற்ற செலவுகள்."

மங்களத்துக்கு இந்தக் கல்யாண ஜாபிதாவைக் கேட்கப் பிடிக்கவில்லை. அங்கிருந்து எழுந்துவிட்டாள்.

"ஹும்..அப்புறம்?" என்றாள் சம்பகம்.

"அப்புறம் என்ன அம்மா? அப்பாவுக்கு மஞ்சள் கடுதாசிதான் தேவை! நான் வேலைக்குப் போகிறேன்" என்றாள் மங்களம் உறுதியாக

அவள் அங்கிருந்து சென்றதும் சம்பகம் கோபாலனிடம் மெதுவாக, "உங்கள் அண்ணாவிடம் மூவாயிரம் ரூபாய் கடன் கேட்டுப் பாருங்கள். நீங்கள் ரிடையர் ஆனதும், வருகிற பணத்தில் திருப்பித் தந்துவிடலாம்" என்றாள்.

"அண்ணாவிடமா? என்னை நம்பி அவரா கடன் தருவார்? அண்ணாவுக்கு வருகிற முதல் தேதி அறுபதாம் கல்யாணம். அதற்காக அவருக்கு அன்பளிப்பு என்ன தரலாம் என்று நான் யோசிக்கிறேன்."

"ஆமாம்.. எனக்கு நினைவே இல்லையே. அண்ணாவுக்கும், மன்னிக்கும் புடவை, வேஷ்டி வாங்க வேண்டுமே" என்று கவலைப்பட்டாள் சம்பகம்.

வாசலுடன் மங்களம் போய்க்கொண்டிருந்தாள். தாழை மடல் போன்ற பசுமையான நிறம். கழலும் விழிகளால் என்னைப் பார்த்துப் பின் புன்முறுவல் செய்தாள்.

"ஆபீஸுக்கா?" என்றேன்.

"ஆமாம். நூறு ரூபாய் சம்பளம். குடும்பம் கஷ்டப்படாமல் இருக்குமே" என்றாள் மங்களம்.

"ஆமாம்" என்றேன் நான். ஏதோ ஒரு அயர்வு என் உள்ளே தோன்றி மனதை உலுக்கியது. கணவனுடன் வாழவேண்டிய வயசு. வீட்டின் லட்சுமியாக இருந்து இல்லறம் நடத்த வேண்டிய பெண். பிறந்த இடத்தின் வறுமை காரணமாக, பணமில்லாமல் அவளை ஏற்க ஒரு படித்த இளைஞனும் வராத காரணமாக வாடி வதங்கி உழைக்கிறாள். மங்களம் தெருக்கோடியைக் கடந்து செல்லும் வரையில் பார்த்துவிட்டு அயர்வுடன் திரும்பினேன். எதிரில் தியாகராஜ ஐயரின் மனைவி கமலா நின்றிருந்தாள்.

"வாருங்கள்."

"பார்த்தாயோல்லியோ?" என்றாள் கமலா.

"எதை? யாரை?"

"வயசுப் பெண் வேலைக்குப் போகிறதை!"

"பார்த்தேன்."

"அதானே கேட்டேன். காலாகாலத்தில் கல்யாணம் பண்ணிவைக்காமல் வேலைக்கு அனுப்புகிறானே, கோபாலன், அவனைச் சொல்ல வேண்டும்."

"கல்யாணம் பண்ண வேண்டியதுதான். அதற்கு நிறைய பணம் வேண்டுமே."

கமலா சாமர்த்தியம் நிறைந்தவள். சாதுர்யமாகப் பேச்சை மாற்றினாள்.

"பார்த்தாயா? வருகிற வெள்ளிக்கிழமை எங்களுக்கு அறுபதாம் கல்யாணம். அதற்காக உன்னை அழைக்க வேண்டுமென்று வந்தேன். பின்னால் யாராவது வந்து கூப்பிடுவார்கள். நானே நேரில் சொல்வதுபோல ஆகுமா? தவறாமல் வந்துவிடு" என்றாள்.

அவள் விடைபெற்று வாசல் வரைக்கும் சென்ற பிறகுதான் எனக்குத் தோன்றியது, என் கை தானாகவே இயங்கி அவளுக்குக் குங்குமம் கொடுத்து அனுப்பி இருக்கிறதென்று.

உலகத்தில் அறுபது பிராயம் வாழ்ந்தவர்கள் இம்மாதிரி வைபவங்களைக் கொண்டாட வேண்டியதுதான். மஞ்ச

ளும், குங்குமமும், பூவும் நிலைத்துக் கணவனுடன் வாழ்ந்து வருவதே ஒரு பாக்கியமாகவல்லவா பெண்கள் நினைத்து வருகிறார்கள்? ஆனால், மலர்ந்து மணக்கும் மலரை இறைவனுக்குச் சூட்டுவது மரபு. தலையில் சூடிக்கொள்வது வழக்கம். பறித்துக் கசக்கிப் போடுவது அல்ல. மங்களம் மலர்ந்து மணம் வீசும் மலர். அவளைத் தகுந்த கணவனுக்கு மணம் செய்வித்துத் தியாகராஜ ஐயர் தம்பதி பெருமைப்படலாம். இவர்களின் அறுபதாம் கல்யாண வைபவத்தைவிட அது சாலச் சிறந்தது என்று எனக்குத் தோன்றியது. எனக்குத் தோன்றி என்ன செய்வது? அதன் பிறகுதான் அழைப்பிதழ் வந்தது. எங்கள் வீட்டில் சிறு பூசல் எழுந்தது.

"சரி, நமக்கென்ன? நாலு பேரைப் போல் போய்க் கல்யாணத்தைப் பார்த்துவிட்டு, விருந்து சாப்பிட்டு பெரியவர்களின் ஆசியைப் பெற்று வந்துவிட வேண்டியது. போகப்போகிறேன்" என்று பூசல் நடந்த அன்று மாலையே காரியாலயத்திலிருந்து திரும்பி வந்த என் கணவரிடம் கூறினேன். அவர் எனக்கு அளித்த பதில் ஒரு புன்முறுவல்தான். 'தர்க்கம் செய்வேன். பிறகு ராமரைப் பின்பற்றிய சீதையைப்போல் பணிந்துவிடுவேன்' என்பதுதான் அவருக்குத் தெரியுமே!

ஆனந்தமாக, வைபவமாக தியாகராஜ தம்பதியின் அறுபதாம் கல்யாணம் நடந்தது. நானும்தான் போயிருந்தேன். கோபாலனுக்குத்தான் என்னவோ தெரியவில்லை. வீட்டிலிருந்த வெள்ளித்தட்டை அடகு வைத்து மன்னிக்குப் பட்டுப் புடவையும், அண்ணாவுக்குப் பட்டு வேஷ்டியும் வாங்கியிருந்தார். சம்பகம் ஓடி ஓடி தன் மகள் கல்யாணத்துக்கு வேலை செய்வதுபோல் பறந்தாள். வறுமையில் வாழும் இவர்கள் பொருட் செல்வம் குறைந்தவர்களாக இருந்தாலும் அறிவுச் செல்வம் படைத்தவர்களாக இருக்கிறார்களே என்று வியந்தேன்.

அன்று காலை மங்களம் கல்யாணத்துக்கு வரவில்லை. பாவம், சிறிசுதானே? 'கிழங்களுக்கு என்ன கல்யாணம் வேண்டியிருக்கிறது?' என்று நினைத்து வரவில்லையோ என்னவோ என்று எண்ணினேன். மாலையும் என்னை வீட்டுக்கு அனுப்ப கமலா மறுத்தாள். 'ஒரு வேளை நலங்கு உண்டோ' என்று நான் ஆச்சர்யத்தில் மூழ்கியிருந்த சமயம் மங்களம் ஓடி ஓடி வந்தாள். நேராகக் காரியாலயத்திலிருந்து வந்திருக்க வேண்டும். சோர்ந்த முகத்தில் புன்னகை தவழ உள்ளே வந்தவள் கையிலிருந்த பொட்டலத்தை எடுத்துக்கொண்டு பெரியப்பாவின் அறைக்குள் நுழைந்தாள்.

"வா, அம்மா" என்று கூப்பிட்டார் தியாகராஜன்.

"பெரியம்மாவைக் கூப்பிடுங்கள் பெரியப்பா. இருவரும் சேர்ந்து நில்லுங்கள்."

கமலா வந்து கணவர் பக்கத்தில் நின்றாள். மங்களம் கையிலிருந்த பொட்டலத்தைப் பிரித்தாள். அதிலிருந்து ஒரு சால்வையையும், ராமாயண புஸ்தகத்தையும் எடுத்தாள். பக்தியுடன் பெரியப்பாவின் முன்பு வைத்துவிட்டுப் பெரியம்மாவிடம் குங்குமச் சிமிழ் ஒன்றைக் கொடுத்து அவர்கள் பாதங்களில் வணங்கினாள்.

"என்ன அம்மா இதெல்லாம் குழந்தை?" என்று தியாகராஜன் தடுமாறினார்.

"என்னடி அம்மா இது?" கமலா வியப்புடன் பார்த்தாள் மங்களத்தை.

"இன்று முதல் தேதி இல்லையா பெரியப்பா? எனக்கு சம்பளம் வந்தது. என்னுடைய அன்பளிப்பு" என்றாள் மங்களம் நிறைந்த மனத்துடன்.

"கோபாலா!" என்று அழைத்தார் தியாகராஜன். பிறகு எதிரில் வந்து நின்ற தம்பியைப் பார்த்து, "நாளை போய்த் தஞ்சாவூர்ப் பிள்ளையின் தாயைப் பார்த்துப் பேசி வருவோமா?" என்று கேட்டார்.

கோபாலன் ஒன்றும் புரியாமல் விழித்தான்.

"ஆமாம், நான் அந்தப் பையனைப் பார்த்திருக்கிறேன். நன்றாக இருப்பான். மங்களத்துக்கு ஈடாக இருக்கும். பார்த்து முடிவு செய்யலாம்" என்றாள் கமலா.

"மன்னீ"

"மங்களத்தின் கல்யாணம் எங்கள் பொறுப்பு. நீ கவலைப்படாதே" என்று கூறிவிட்டு, "இங்கே வா மங்களம்! அடுத்த மாசத்திலிருந்து உனக்கு உத்தியோகம் இல்லாமல் போகட்டும். இதுதான் என் ஆசீர்வாதம், தெரிகிறதா?" என்று கமலா கேலி செய்தாள்.

❀ ❀ ❀

நிறைந்த மனம், நிறைந்த அன்பு என்று எதைச் சொல்வது? நான்தான் அன்பாக இருக்கிறேன் என்று நாலு பேர்கள் எதிரில் தம்பட்டம் அடிப்பதையா? இல்லை, நீறு பூத்த நெருப்பு போல் மனத்தின் அடித்தளத்திலே பெருகி வழியும் அன்பைச் சமயம் நேர்ந்தபோது தியாகராஜ தம்பதி வெளியிட்ட மாதிரியையா?

எனக்குப் புரியாமல் என் கணவரைக் கேட்டேன்.

"விடை நான் சொல்ல வேண்டாம். நேரிலேயே தெரிந்துகொண்டாய் அல்லவா?" என்று வழக்கமான தன் புன்சிரிப்புடன் கூறினார் அவர்.

# அமைதி பிறந்தது!

தெரு அமைதியில் ஆழ்ந்திருந்தது. அவள் உள்ளத்தில் அமைதி யில்லை.

ஜன்னல் கம்பிகளைப் பிடித்தபடியே எதிர் வீட்டைப் பார்த்துக் கொண்டிருந்தாள் ஜானகி.

தாழிட்டிருந்த கதவைத் திறந்துகொண்டு எதிர் வீட்டிலிருந்து பெண்ணொருத்தி கையில் பூக்குடலையுடன் வெளியே வந்தாள். மல்லிகையும் சம்பங்கியும் சேர்ந்து பின்னிப் படர்ந்திருந்த பந்தலுக்கடியில் நின்றவாறு ஒவ்வொரு மொட்டாகக் கிள்ளி எடுத்துக் குடலைக்குள் போட்டாள்.

ஜாதி மல்லிகை அரும்பின் மென்மைக்கும், அவள் செவ்விரல்களின் மென்மைக்கும் வித்தியாசம் ஏதும் தெரியவில்லை. இடுப்பளவு புரண்ட கூந்தல் நெளி நெளியாய், அலை அலையாய் அவள் முதுகில் பரவிக் கிடந்தது.

'எண்ணெய்க் குளியல் போலும்!' ஜானகி முணு முணுத்துக் கொண்டிருந்தாள். குடலைக்குள் அரும்புகளை நிரப்பிக் கொண்டு தெருக் கதவைத் திறந்து தெருவை எட்டிப் பார்த்தாள் அந்தப் பெண். இப்பொழுது ஜானகியால் அவள் முகத்தை நன்றாகப் பார்க்க முடிந்தது.

மேனியெங்கும் ஒருவித வெளுப்பு. அதில் மஞ்சள் பூச்சு. நெற்றியில் வட்டமான சாந்துப் பொட்டு. 'ஓஹோ! சமீபத்தில் நாலைந்து மாதங்களுக்கு முன் மகப் பேற்றை அடைந்தவள் போலிருக்கிறது! குளித்து விட்டு மஞ்சளும், அழகும் சேர்ந்து இழைய வாழைக் குருத்தாக நிற்கிறாள்.......'

ஜானகிதான் தனக்குள் மெதுவாகச் சொல்லிக் கொண்டாள். தெருச் சந்தடி அடங்கி வெறிச்சென்று கிடந்தது. காலையில் மனிதக் கூட்டம் மொய்த்து ஊறிய தெரு நடுப் பகலில் ஓய்ந்து அமைதி கண்டிருந்தது. ஜானகி தெருவையும் எதிர்வீட்டையும், பூப் பறிக்கும் பெண்ணையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தாள். எதிர் வீட்டில் உள்ளேயிருந்து பச்சைக் குழந்தையின் அழுகுரல் கேட்டது. தெருவில் வேடிக்கை பார்த்தவள் விசுக்கென்று 'கேட்'டை அறைந்து மூடிக் கொண்டு உள்ளே போகத் திரும்பினாள். 'வாணி' என்று அதட்டிக் கூப்பிடும் ஆண் குரலைத் தொடர்ந்து, ''இதோ, வந்தேன். தடியன்! இதற்குள் முழிச்சிண்டாச்சா!'' என்று கேட்டபடி படியேறினாள், பூப் பறித்துக் கொண்டிருந்த வாணி.

வராந்தாக் கதவைத் திறந்தவள், ஆண் மகன் கையில் குழந்தையை ஏந்தியபடி நிற்பதைப் பார்த்து அதை அப்படியே வாங்கி அணைத்துக் கொண்டு உள்ளே போய் விட்டாள்.

மறுபடியும் தெரு அமைதியில் மூழ்கியது. ஜானகி மட்டும் அடித்து வைத்த சிலையாக அங்கே நின்றிருந்தாள். மணி பதினொன்றுக்கு மேல் ஆகிவிட்டது. இன்னும் அவர்கள் வீட்டில் சாப்பாடு ஆகவில்லை. அவள் கணவன் தியாகு ஆஸ்பத்திரியிலிருந்து வர இன்னும் ஒரு மணி நேரமாவது பிடிக்கும். அது வரை பொழுதை ஓட்டுவது மிக மிகக் கடினமான வேலை.

அப்படித் தியாகு ஆஸ்பத்திரியிலிருந்து வீட்டுக்கு வந்தால்தான் என்ன? கதர்க்கடையின் வரவு செலவுகள், மதிய உணவுச் சாப்பாட்டின் கணக்கு, சமூக நலச் சங்க ஆண்டு விழா, அந்த நிதி, இந்த நிதி என்று பல அலுவல்கள் அவன் மேசை மீது குவிந்து கிடக்கின்ற போது தன்னோடு பேச அவருக்கு நேரமா இருக்கிறது? ஜானகியைப் பொறுத்தமட்டில் கணவன் வீட்டிலிருந்தாலும் ஒன்றுதான், வெளியில் புறப்பட்டுப் போயிருந்தாலும் ஒன்றுதான். வீட்டில் இருந்தால் பெறப் போவதும் வெளியே போயிருந்தால் இழக்கப் போவதும் இரண்டுமே இல்லை.

எதிர் வீட்டிலோ கணவன் அலுவலக வேலைகளை முடித்துக் கொண்டு வந்து விட்டால் பிறகு வீட்டிலே சிரிப்பும் களிப்பும்தான்.



அதோ கலகலவென்று மணி குலுங்கி ஓடுகிறாற் போல் சத்தம் கேட்கிறதே! ஜானகி காதைத் தீட்டிக் கொண்டு கேட்கிறாள்.

அவர்கள் குழந்தை தவழ்ந்து கூடத்தைச் சுற்று கிறது. அதன் கூடவே தாயும், தந்தையும் சுற்றி வந்து சிரிக்கிறார்கள். அவ்வளவுதான் விஷயம். ஆனால் அவ்வளவுதானா?

ஜானகி தன் மகன் முரளியை நினைத்துக் கொண் டாள். இப்பொழுது அவனுக்கு ஏழு வயது ஆகிவிட்டது. பள்ளிக்குப் போகிறான். அந்த நாளில், அவன் தவழும் பருவத்தில் அவனைப் பார்த்து ஒரு நாளாவது அவன் தந்தை மகிழ்ந்திருப்பாரா? இந்தமாதிரிக் குழந்தையைச் சுற்றி வந்து சிரித்து மகிழ்ந்திருப்பாரா?

தியாகு என்ன அவ்வளவு கல்நெஞ்சுக்காரனா? இதயமற்றவனா? தன்னையே சமூகப் பணிக்கு அர்ப் பணித்துக் கொண்ட பெரிய தியாகி என்றல்லவா அவனைப்பற்றி ஊரில் எல்லோரும் பேசிக் கொள்ளு கிறார்கள்? எல்லோரும் சொல்லித்தானா அது தெரிய வேண்டும்? உண்மையே அதுதான்.

தியாகு கல்லூரிப் பட்டம் பெற்றவுடனே தேசம் அவனைத் தன் பணிக்கு அழைத்த காலம் அது. இந்திய விடுதலைக்காகத் தங்களைத் தியாகம் செய்த பல தியாகி களில் அவனும் ஒருவன். தேசம் விடுதலை அடைந்த பிறகு அவன் ஓய்ந்து விடாமல், எந்தப் பட்டம் பதவி யிலும் தன்னைப் புகுத்திக் கொள்ளாமல் சமூகத் தொண்டு செய்ய ஆரம்பித்தான். அந்தத் தொண்டின் முன்பாக அவனுடைய வீடு உற்றம், சுற்றம் எல்லாம் மிக மிகச் சிறியதாகி விட்டன.

ஜானகி அவன் கரம் பற்றிய அன்று அளவிலாப் பெருமை கொண்டாள். தன் கணவன் பெரிய தியாகி என்னும் எண்ணமே அவள் நெஞ்சை நிரப்பியது. ஊரெல்லாம் புகழ்கிற உத்தமனைக் கணவனாக அடைந்த வளுக்குப் பெருமை உண்டாகாதா? ஆனால் ஜானகி தியாகியோ, விரக்தி உள்ளம் படைத்தவளோ அல்ல. பெண்ணாகிய அவளுக்கு மனத்தில் ஆயிரம் ஆசைகள் முளைத்துச் செழித்தன. மணமான புதிதில் ஓர் இளம் பெண் கணவனுடன் எவ்வளவு அன்போடு வாழவேண் டும் என்று ஆசைப் படுவாளோ, அவ்வளவு ஆசைகளும்



அவளுக்கும் இருந்தன. ஆனால் அவள் கணவனுக்கு இருந்த ஆசைகளோ தொண்டு, சமூக நலம், தியாகம்-இப்படிப்பட்டவை. வீட்டு வாசலில் படர்ந்திருக்கும் மல்லிகை அரும்புகளைப் பறித்துத் தொடுத்துச் சரமாக் கிக் குழலில் சூட்டிக் கொண்டு தியாகு பார்த்து மகிழ வேண்டும் என்று அவன் வரவுக்காக ஜானகி காத்து நின்ற நாட்கள் எல்லாம் வீணாகி விட்டன.

தியாகு வீட்டுக்கு வந்தால் அதையெல்லாம் கவ னிக்க மாட்டான். மனைவி அழகாக இருக்கிறாளா, மலர் சூடிக் கொண்டிருக்கிறாளா என்பதைப் பற்றி அவன் நினைத்துப் பார்ப்பதே இல்லை.

தான் பணிபுரிந்து வந்த அந்த ஆஸ்பத்திரியை எப்படி விஸ்தரிக்கலாம்? நோயாளிகளுக்கு எந்தவிதத் தில் சௌகரியங்களை மிகைப்படுத்தலாம் என்பதுதான் அவன் சிந்தனையாக இருக்கும். அந்தச் சிந்தனை வெள் ளத்தில் மூழ்கி அதிலே லயித்தவாறு வேறு அலுவல் களுக்காக வெளியே போய் விடுவான் அவன்.

தியாகுவின் அன்னை, ஜானகியின் மாமியார், பிள்ளை யின் இந்நிலை கண்டு தர்மசங்கடத்தை அனுபவித்தாள்.

''ஜானகி! இந்த ஊரில் தெருக்கோடியில் சினிமா வந்திருக்கிறதே. போய்ப் பார்த்து வாயேன்....''

''வேண்டாம், அம்மா....''

ஏக்கத்தின் எதிரொலியாக அவள் பெருமூச்சு விட்டவாறு மாமியாருக்குப் பதிலிறுப்பாள். 'என்ன வேண்டியிருக்கிறது சினிமாவும், இன்னொன்றும்!' என்று அவள் வாய் திறந்து சொல்வதில்லை. எண் ணங்கள் உறுத்த சோகப் பார்வை ஒன்றை வீசிவிட்டு அங்கிருந்து மறைந்து விடுவாள்.

எதிர்வீட்டிலிருந்து இரட்டைக் குரலில் சினிமாப் பாணியில் தாலாட்டுக் கேட்க ஆரம்பித்து விட்டது. ஓர் அடி கணவன் பாட, மறு அடி மனைவி பாட இரு வருமாகக் குழந்தையைத் தூங்கப் பண்ணுகிறார்கள். குழந்தை தூங்கி விட்டது போலும்! இருவரும் வாசல் அறையில் வந்து உட்காருகிறார்கள். ஜன்னலின் மெல் லிய திரை வழியாக அவர்கள் சேர்ந்து சோபாவில் அமர்ந்திருப்பது நன்றாகத் தெரிகிறது.

எதிர் வீட்டிலிருந்து காட்சிகள் தெரிகின்றன. பேச்சுக்கள் கேட்கின்றன.

''இன்று என்ன டிபன் பண்ணட்டும்?'' வாணி வீணைக் குரலில் மிழற்றுகிறாள்.

''எங்கே ஒவ்வொரு பலகாரத்தின் பெயராகச் சொல்லிக் கொண்டு வா, பார்ப்போம்.''

''நான் ஹோட்டல் சர்வரா என்ன?'' கலீ ரென்ற சிரிப்பொலி கேட்கிறது.

அப்புறம் அவர்கள் இருவரும் பேசிக் கொண்டே உள்ளே போனார்கள். ஜானகி ஜன்னல் கம்பிகளில் முகத்தைப் புதைத்துக் கொண்டாள்.

தெரு அமைதியில் உறங்கியது. தெருக் கோடி யில் தபால்காரனின் தலை தெரிந்தது.

''ஓ! மணி பன்னிரண்டு ஆகிவிட்டதா?''

தனக்குள் சொல்லிக் கொண்டே அவள் சமைய லறைக்குள் சென்று தட்டை எடுத்து வைத்தாள். மணை போட்டுத் தண்ணீரும் எடுத்து வைத்தாயிற்று.

வாசல் கதவு கிரீச்சிடுகிறது. 'சரக் சரக்' என்று செருப்பொலி கேட்கிறது.

தியாகு உள்ளே வந்து கைகால்களைக் கழுவிக் கொண்டு சாப்பிட உட்காருகிறான். கணவனுடன்

சரோஜா ராமமூர்த்தி

ஏதாவது பேச வேண்டும் என்று அவள் மனம் அலை பாய்கிறது. திடீரென்று நினைவு வந்தாற்போல் பேசுகிறாள்.

''முரளி காலையில் பள்ளிக்கூடம் போகும்போது தெருவில் விழுந்து காலில் சிராய்த்துக் கொண்டான். மருந்து போட்டு அனுப்பினேன்.....''

''காயத்தைக் கழுவித்தானே மருந்து போட்டாய்.''

''ஆமாம்.....''

''சரி பள்ளிக்கூடத்திலிருந்து வரட்டும், பார்க்கிறேன்.....''

அதற்கு மேல் அவனுடைய பேச்சு வளரவில்லை. 'குழந்தை விழுந்தானா? அடி பலமா?' என்று ஒருத்தர் பதறமாட்டேரோ? இதுதான் ஜானகியின் குற்றச்சாட்டு. அவள் மனத்தாங்கல், வேதனை, எல்லாம்.

உள்ளே மேசைமீது அன்று வந்த தபால்களைப் பார்வையிட்டான். ஊரிலிருந்து அவன் அம்மா எழுதிய கடிதம். 'செள ஜானகியைக் கவனித்துக் கொள். நீ அவளிடம் இப்படி நடந்து கொள்வது...' வழக்கமான குற்றச்சாட்டுத்தான். அவன் அதைப் படித்துப் புரிந்து கொண்டதாகக் காணோம். இன்னொரு கடிதம் ஏதோ ஒரு பொது நலச் சங்கத்திலிருந்து வந்திருந்தது. 'அன்புடையீர்' என்று அது ஆரம்பித்திருந்தது. ஜானகி அந்தக் கடிதத்தைப் படித்தவுடன் சிரித்தாள். வேதனையின் வெடிப்பாக இருந்தது அந்தச் சிரிப்பு. அன்பை உடையவர் என்று அதற்குப் பொருள் என்று அவள் நினைத்தாள். பிறர் விஷயத்தில் மகா மேருவாக உயர்ந்து நிற்கும் அந்த அன்பு, அவளிடத்தில் தரை மட்டமாகத் தாழ்ந்து நிற்கும் நிலைதான் விந்தை!

அந்தச் சங்கத்தில் பல அனாதைப் பெண்கள் ராட்டை சுழற்றி, தறி நெய்து வாழ்கிறார்களாம். அவர்களுக்கெல்லாம் இந்த வழியைக் காட்டிய தியாகுவை ஆண்டு விழாவுக்கு வருமாறு அழைத்திருந்தனர்.

தியாகு பீரோ நிறைய அடுக்கி வைக்கப்பட்டிருந்த நூல் சிட்டங்களைக் கட்டுக் கட்டாகக் கட்டி வைத்துக் கொண்டிருந்தான்.

சமையலறையிலிருந்து வாசல் அறை தெளிவாகத் தெரிந்தது. ஜானகி சுவரில் சாய்ந்தபடி கணவனைப் பார்த்துக் கொண்டேயிருந்தாள்.

எதிர்வீட்டுச் சாமான் அறையை இப்போது நன்றாகப் பார்க்க முடிந்தது. மச்சிலிருந்து கணவன் ஒவ்வொரு பாத்திரமாக எடுத்துக் கொடுக்க, மனைவி வியர்வை வழியக் கீழே ஒவ்வொன்றாக வைத்துக் கொண்டிருந்தாள்.

அவர்கள் வீட்டில் ஏதோ விசேஷம் போலும். ''ஓஹோ! விருந்து சமைக்கப் பாத்திரங்களை எடுக்கிறார்கள் போலிருக்கிறது.''

உடனே அவளுக்கு முரளியின் பிறந்த நாள் நினைவுக்கு வந்து விட்டது. அன்று தியாகு ஊரில் இல்லை. எங்கோ என்னவோ என்று போய் விட்டான்.

அவளுக்கு அன்று ஒன்றுமே பிடிக்கவில்லை. ஊரெல்லாம் திரண்டுதான் வந்திருந்தது. பலன்?

குடும்பம், குழந்தை குட்டி என்று அவள் தன்னைச் சுற்றி அமைத்துக் கொண்டிருக்கும் சிறிய வட்டத்துக்குள் அவன் என்றுமே எட்டிப் பார்த்ததில்லை.

சமூகம், தொண்டு என்று அவன் தன்னைச் சுற்றி வரைந்திருக்கும் பெரிய வட்டத்துக்குள் இவள் எட்டிப் பார்க்க நுழைந்ததுமில்லை.

ஜானகி அன்று சாப்பிட வில்லை. கணவன் வந்து சாப்பிட்டாயா என்று கேட்கவில்லையே என்ற ஆதங்கம்தான் காரணம். என்றாவது ஒரு நாள் அவன் அப்படிக் கேட்கமாட்டானா என்று அந்த நாளை ஆவலுடன் எதிர்நோக்கியிருந்தாள் அவள்.

தெருவில் தந்திச் சேவகன் வந்து நின்றான்.

''சார்...'' கூடத்து வரை வந்து எட்டிப் பார்த்த ஜானகி யாருக்கு என்னவோ என்று பதறினாள். தந்தியை வாங்கிக்கொண்டே தியாகு மனைவியின் முகத்தை உற்றுப் பார்த்தான். அதில் ஓடிய பயமும், பீதியும் அவன் மனத்தைக் கலக்கின.

''என்ன ஜானகி? யாருக்கும் ஒன்றும் இல்லை. தெற்கே வெள்ளம் புரளுகிறதே. வெள்ளக் கஷ்ட நிவாரண வேலைக்கு என்னை வரும்படி கலெக்டர் தந்தி அனுப்பியிருக்கிறார். அவ்வளவுதான்.''

இவ்வாறு சொல்லிக் கொண்டே தோல் பெட்டியில் உடைகளை எடுத்து வைத்தான். காப்பி கூடச் சாப்பிடாமல் புறப்பட்டு விட்டான். ஜானகி மறுபடியும் ஜன்னல் கம்பிகளின் மீது முகத்தைப் பதித்துக் கொண்டு நின்றாள். தெருவில் சந்தடி இல்லைதான். மணி மூன்றுகூட இருக்காது..

எதிர் வீட்டில் கணவனும் மனைவியும் பரபர வென்று இங்கும் அங்கும் ஓடிக் கொண்டிருந்தார்கள். வேதனையும் துயரமும் அவர்கள் முகத்தில் பொங்கி வடிந்தன. அவர்கள் வீட்டில் யாருக்கென்ன? ஜானகிக்கு ஒன்றும் புரியவில்லை. சற்றுமுன் சிரிப்பும் களிப்புமாக இருந்த வீட்டில் ஏன் இப்படிப் பரபரக்க வேண்டும்? குழந்தை முக்கி முக்கி முனகுகிறதே!

வாணி தெருக் கதவைத் திறந்து கொண்டு எதிர் வீட்டிலிருந்து இவளை நோக்கி வந்தாள்.

''வந்து...வந்து... குழந்தை தூங்கி விழித்ததிலிருந்து வயிறு உப்பிக் கொண்டு மூச்சு முட்டி முட்டி வருகிறது மாமி. எனக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை....''

கண்ணீர் கொப்பளிக்க அவள் தன் இரு நயனங்களையும் தலைப்பால் பொத்திக் கொண்டாள்.

ஜானகி அவளுடன் அந்த வீட்டினுள் சென்றாள். ஏதோ மருந்தின் பெயரைச் சொல்லி அதை வாங்கி வரச் சொன்னாள். மருந்தைக் குழந்தையின் மார்பிலும், முதுகிலும் தடவித் தவிட்டை வறுத்து ஒத்தடம் கொடுத்தாள்.

குழந்தையின் வேதனை குறைந்தாற் போலிருந்தது. வீறிட்டு அழுது தாயின் மடியில் அது புரள்வதைப் பார்த்தவாறு நின்றிருந்தாள் ஜானகி.

''அப்பா...கொஞ்ச நாழியில் எப்படிப் பயமுறுத்திட்டேடா, ராஜா...'' என்று குழந்தையை உச்சி முகர்ந்தாள் அதன் அன்னை.

''பார்த்தாயா, உனக்கு ஒன்றும் தெரியவில்லை. அவர்களுக்கு எல்லாம் தெரிந்திருக்கிறது. பெரிய தொண்டரின் மனைவி அல்லவா? அவர் எவ்வளவு தொண்டுகள் செய்கிறார் ஆஸ்பத்திரியில்!'' என்று வியப்பும், நன்றியும் கலந்த குரலில் ஜானகியைப் பாராட்டினான் வாணியின் கணவன்.

மற்றவர் துயர் துடைப்பதில் மற்றவர் முகத்தில் சிரிப்பதைக் காண்பதில் இருக்கும் மகிழ்ச்சியை ஜானகியால் நன்கு உணர முடிந்தது. அதோடு தன் கணவனையும் உணர முடிந்தது.

இந்நாள் வரை முரண்பட்ட கருத்துடன் ஒருவரிடமிருந்து ஒருவர் ஒதுங்கியே வாழ்ந்த அவர்கள் இருவரிடையும் இன்று கருத்தொற்றுமை நிலவக் காரணமாக இருந்த அந்த எதிர்வீட்டு மதலைச் செல்வத்தை இமைக்காமல் பார்த்தாள் ஜானகி.

எங்கோ பிறர் இன்னல் களையப் போயிருக்கும் தன் கணவன் தியாகு அப்போதும் அருகில் இருப்பதாகவே அவள் உணர்வு கொண்டாள்.

மறுபடியும் ஜானகி தெருவில் இறங்கிய போது தெரு கலகலப்பாக இருந்தது. முன்பு தெருவில் இருந்த அமைதி இப்போது அவள் உள்ளத்தில் இருந்தது. அவள் தன் வட்டத்திலிருந்து தானாகவே நழுவி வெளியேறிக் கணவனுடைய இலட்சிய வட்டத்தில் புகுந்தாள்!



# கடவுள்- ஒரு நம்பிக்கை

சரோஜா ராமமூர்த்தி

என்னுடைய தோழி ஜானகியும் அந்த வீட்டுக்குக் குடி வந்த செய்தி அவளுடைய மகன் முத்துவைப் பார்த்தபோதுதான் தெரிந்தது.

"ஏண்டா! எங்கே இந்தப் பக்கம்?" என்றேன் நான்.

"இந்த ஊருக்கே குடி வந்துட்டோம் மாமி!..." என்றான் முத்து. [...]ன தடவை முத்துவை (ஆறு [...]ங்களுக்கு முன்) பார்த்தபோது அவனுக்கு மீசை அரும்பவில்லை. இப்போது உதட்டுக்கு மேலே கீற்றாக மீசை அரும்பியிருந்தது. 'எனக்கும் உலகம் தெரிய ஆரம்பித்து விட்டது' என்கிற தோரணையில் அவன் பேச ஆரம்பித்தான்.

"எங்கேடா ஜாகை? நியூ காலனியா? சாந்தி நகரா?"

"இதே தெருதான் மாமி. பதினெட்டாம் நம்பர் கிருஹம். அஷ்டக் கிருஹம்னு பேர் வைக்கலாம். எட்டுக் குடித்தனங்கள்..."

[...]ட்டிற்குள் நுழையும் [...]த ஊதுவத்தியின் [...]ம்ன்று வீசும். மூன்று [...] நடுவில் பெரிய முற் [...]மேலே இரும்புக் கம்பிகள் [...]ட்டியிருந்தார்கள். பகல் நேரத்தில் கம்பிகளின் நிழல் வரி வரியாக முற்றத்தில் விழுவதை வேடிக்கைப் பார்ப்பவர்களும் உண்டு. அந்த வீட்டை வாங்கியவர் கல்யாணக் கூடத்தை மரப்பலகையால் தடுத்து போர்ஷன் ஆக்கியிருந்தார். பின் கட்டுக் கூடத்தையும் அவ்விதமே செய்து குடி வைத்திருந்தார். ஆக மொத்தம் அந்த வீட்டில் எட்டுக் குடித்தனங்கள் முறையே ஒண்ணும் நம்பரிலிருந்து எட்டாம் நம்பர் வரை பல தரப்பட்டவர்கள் குடியிருந்தார்கள்.

"ஓ! அந்த வீடா? முத்துசுவாமி ஐயர் வீடு. இப்போ கை மாறிப் போச்சுன்னு கேள்வி. ஒரு நாயுடு வாங்கி வீட்டைச் சின்னாபின்னம் பண்ணி அடைக்கிற இடத்திலே எல்லாம் அடைச்சு, காசு பண்ணிண்டு இருக்கார். காத்தே வராதே?"

"வராம என்ன? மொட்டை மாடிக்குப் போனா தலையைப் பிச்சுண்டு போறது..." நான் சிரித்தேன். எங்க வீட்டுப் பக்கத்துக் கடையில் குழம்புக்கென்று கால் கிலோ கத்தரிக்காயை வாங்கிக் கொண்டு, "ஆத்துக்கு வாங்கோ மாமி! அம்மாவே உங்களைப் பார்க்க வரணும்னா..." என்று சொல்லியபடி போய் விட்டான்.

ஜானகியைப் பார்க்கப் போக வேண்டும் என்று அன்று முத்துவைப் பார்த்ததும் நினைத்துக் கொண்டதோடு சரி. ஏதோ வேலைகள் இருந்து கொண்டேயிருந்தன. யாராவது வருவார்கள். காப்பி, டிபன், அரட்டை என்று பொழுது போய் விடும். எப்படியும் இன்று கிளம்பி விடுவது என்று தீர்மானம் பண்ணிக்கொண்டு ஒரு டஜன் வாழைப் பழம், புஷ்பம் எல்லாம் வாங்கி வைத்தேன். பரபரவென்று வேலைகளை முடித்துக்கொண்டு கிளம்பினேன்.

வாசல் பக்கம் ஒரு கீற்றுச் சார்பு போட்டுப் பசு மாட்டைக் கட்டி வைத்திருந்தார் நாயுடு. கன்றுக் குட்டி வாசல் ஆளோடியில் படுத்துக் கொண்டு அசை போட்டுக் கொண்டிருந்தது. காலையில் போட்ட கோலம் கரைய கன்றுக் குட்டி அசிங்கம் செய்திருந்தது. அதைத் தாண்டியபடி உள்ளே போனேன்.

நாயுடு தெரிந்தவர்தான். இருந்தாலும், அவர் என்னை எதிர் பார்க்காதவர் போல் ஒரு தினுசாகப் பார்த்தபடி தன் அறைக்குள் போய் விட்டார். இடைக்கழியில் மாடிப்படிகள் இருந்தன. கீழே வளைவினுள் ஏகப்பட்ட மரச்சட்டங்கள், சிமிட்டி, கொல்லுறு, கடப்பாரை என்று அடுக்கி வைத்திருந்தது. அதைத் தாண்டியதும் கூடம் வந்தது. அந்தக் கூடத்தில் ஹரிக்கன் லாந்தர் வெளிச்சத்தில் முத்துசுவாமி ஐயர் மனைவி தர்மு கொலு வைத்து அடுக்கு நிறையக் கடலைச் சுண்டலை வைத்துக்கொண்டு வெற்றிலைப் பாக்குடன் கொடுத்தது நினைவுக்கு வந்தது. மஞ்சளும், அரக்கும் கட்டம் போட்ட புடவையும், காதுகளில் சிவப்புக் கம்மல்களும், சற்று கோணிய வாயும், ஒரு நிமிஷம் தர்மு என் எதிரில் நிற்பது போலவே இருந்தது. ஆனால், அது தர்மு இல்லை. ஒரு வைஷ்ணவ சுமங்கலி நின்று கொண்டு என்னையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். உள்ளே கட்டிலில் ஒருவர்—அவள் கணவர் போலும்—படுத்திருந்தார். இருவரும் ஒருவரை ஒருவர் பாய்ந்து குதறத் தயாராக இருக்கும் புலி போல வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

"இங்கே ஜானகின்னு..."

அந்த அம்மாள் வெடுக்கென்று திரும்பிக் கூடத்தை இரண்டாகத் தடுத்திருந்த மரச் சட்டத்துக்கு அந்தப்புறம் தன் கைகளை நீட்டினாள்.

"அந்தப் போர்ஷனா?..."

"ஆமாம்! இன்னிக்கி என்னவோ பாட்டும் கூத்தும் அமர்க்களப் படக் காணும்..."

"உனக்குப் பிடிக்கலைன்னா காதுலே பஞ்சை அடச்சுக் கோயேன்..." என்று உள்ளேயிருந்தவர் இரைந்து கத்தினார்.

"உங்களுக்குப் பிடிச்சா..."

அதற்கு மேல் நான் அங்கே நிற்கவில்லை. ஜானகியின் வீட்டு வாசலில் அழகிய தாமரைக் கோலம் என்னை வரவேற்றது. முன் அறையில் சுவர் முழுவதும் தெய்வ உருவங்கள். ஒரு சிறிய மேஜை, ஸ்டூல், ஈஸிசேர். சொர சொர வென்று பெஞ்சு நான் உள்ளே நுழைந்தபோது ஜானகி காஸ் அடுப்பில் குனிந்தவாறு ஏதோ செய்து கொண்டிருந்தாள். முதுகுப் புறத்தைப் பார்த்தாலே அவள் அதிகம் மாறவில்லை என்று தோன்றியது. ரவிக்கையின்

படியில் வியர்வை கசகசத் கொண்டிருந்தது.

கவாட்டில் மூக்கு கூர்மையாக ருந்தது. அவள் அப்படி ஒன்றும் ணிக்கத் தகுந்த அழகி அல்ல. பிச்சென்று இருப்பாள். கால ம் கேட்டு அவள் திரும்பிப் ர்த்தாள். அப்படியே கையில் நந்த 'இடுக்கி'யைப் போட்டு ட்டு ஓடிவந்து கட்டிக் கொண் ாள். அவள் எப்போதுமே அப்ப ந்தான். மிகவும் உணர்ச்சி வசப் டுகிறவள். எதைப் பார்த்தாலும், தைப் பேசினாலும், என்ன பாடினு ம் அவள் தேம்பித் தேம்பி ழுவாள்.

"வா... வா... நீயா?"

"ஆமாம்! உன் பிள்ளை முத்து வப் பார்த்தேன். கோடம்பாக் த்திலேயிருந்து மாற்றி இந்த ரருக்கு வருகிறவள் ஒரு வார்த்தை ன்னிடம் சொல்லவில்லையே?"

"அது ஒரு கதை. திடுமென்று ங்கே வீட்டைக் காலி பண்ணச் சான்னார்கள். பரங்கிமலையில் வீடு கிடைக்கிறது என்று கேள்விப்பட் டாம். அதே மாதிரி அதிகம் அலை ாமல் வந்தவுடன் கிடைச்சுது. ன்னைப் பற்றி வீட்டுக்காரரிடம் விசாரித்தோம். 'தெரியும்'னு ஏதோ இழுத்துவிட்டுப் பேசாம இருந்துட் டார்."

"தெரி...வது? அந்த நாளிலே ன் மா...ம் எடுபிடி ஆளாக ருந்தவ...ன்... என்னை இப்போ ...ச்சே ...த்துட்டுத் தெரியாத ...ர்... ஆமாம்... இங் ...சதியே இருக் கா...

"வசதி...மலேயே வாழ்க்கை நடத்தப் ...கிண்டாச்சு... எப்ப டியோ ...டைய அம்பாளுக்கு வ்சதியா...மாரி கிடைச்சிருக்கு. கோடம்...ந்நுலே ஒரே எலி உபத்ரவ...லக்ஷ்மி விக்ரகத்தை ஒரு தட...டுத்துண்டு போய்ப் பரணிலே ...ிச்சு வைச்சுடுத்து... மூணு நா...த் தேடு தேடுன்னு தேடி ஒ...களை போ... எனக்கு இந்த உ... வேண்டியிருக்கலே."

எனக்...னை காவிரியில் வீசி யெறிய... ஸ்ரீ ராம விக்ரகத் தைத் ...கொண்டு அலைந்த சத்குரு...யாகப் பிரும்மத்தின் நினைவு...

...க்ஷ்மி எப்படிக்

...ற! செவ் வாய்... விக்ரகத்தைக்



...வியாழக்கிழமை அன் னிக்கே நான் வெள்ளிக்கிழமை பூஜைக்குத் தயாராகி விட றவழக் கம். விளக்கையெல்லாம் தேய்ச்சுத் தொடச்சுண்டு இருக்கறப்போ பர ணிலேஎன்னமோ சத்தம் கேட்டது. பெரிய பூனை ஒண்ணு பாஞ்சு காத்துவாரி வழியா வெளியே ஓடித்து. பரண் மேலிருந்து விக்ரகம் என் மடியிலே வந்து விழுந்தது."

"நீ தேடாமயே — அதாவது பரணை ஒழிக்காமயே—மகாலக்ஷ்மி உன்னைத் தேடிண்டு வந்துட்டா... ஆனால், இந்தக் காலத்துலே இதைக் கேட்டுட்டு பின்னுடி உம் மேலே எதையாவது சொல்லிண்டு திரிவா. சாமி பைத்யம். அது இதுன்னு!"

பக்கத்துப் போர்ஷனிலே இது வரை கசமசவென்று இருந்த சண்டை பலக்க ஆரம்பித்தது.

"மொதத் தேதியே அவளண்டை பாதிப் பணத்தைக் குடுத்துட்டு வந்துடுங்கோ... இப்போ மூலையிலே உக்காந்துண்டு என் கழுத்தை அறுங்கோ..."

"இல்லேன்னு இங்கே லக்ஷ்மி கடாக்ஷம் பொங்கி வழியறது! உம். இந்த மூஞ்சியை எவன் பார்த் துண்டு உக்காந்துண்டு இருப் பான்..." ஐயங்கார் துண்டை உத றித் தோளில் போட்டுக்கொண்டு வெளியே வந்தார். அவரோடு சந் தனப் பவுடரின் மணம் கம்மென்று வீசியது.

...பத்து வருஷமா... இரண்டு குழந்தைகள் கூட காம். தீபாவளி, சங்கரா... போது இங்கே அதுகளும் வ... இவளைப் 'பெரியம்மா'ன்னு பிட்டுச் சீராடுமாம்..."

"வேடிக்கைதான்... அந்தக் குழந் தைகளைப் பிடிக்கிறது இவளுக்கு.. அவளைப் பிடிக்கலே..."

"ரொம்ப நன்னா இருப்பாளாம் முகத்திலே லக்ஷ்மீகரம் தாண்டவ மாடுமாம்..." நான் ஜானகி பூஜை செய்யும் மகாலக்ஷ்மியின் முகத்தைப் பார்த்தேன். இவளின் கடாட்சம் எங்கெங்கோ, யார் யாரிடமோ பரவி நிற்கிறது போலும் என்று நினைத்துப் பார்த் தேன்.

ஐயங்கார் போன பிறகு அந்த அம்மாள் உடம்பைக் குறுக்கிக் கொண்டு ஒரு கரண்டியில் அடுத்த நாளுக்காகக் காப்பிப் பொடி கடன் கேட்க ஜானகியைத் தேடி வந் தாள். என்னை ஒரு தினுசாகப் பார்த்துக் கொண்டே காப்பிப் பொடியை வாங்கிப் போனாள். எதிர்ப் போர்ஷனிலிருந்து ஒரு பெண் வந்தாள்.

"வாடி சக்கு!"

"திரும்பித்திரும்பி இப்படிக் கடன் குடுக்கிறேளே மாமி! திரும்பி வராது" என்றாள் சக்கு. நல்ல



மான உடல். முக
மைத் தழும்பு. தலை கூந்தல். வயசு இருபத்து மேல் இருக்கும். கழுத்திருந்த ஒற்றை கருகமணிச் சரமும், கண்ணாடி வளையல்களும் அவளுடைய ஏழ்மையைப் பறை சாற்றின.

நான் கொண்டு போயிருந்த புஷ்பத்தைக் கிள்ளி சக்குவிடம் கொடுத்தாள் ஜானகி. "மாமிக்கு நமஸ்காரம் பண்ணு... சீக்கிரமா கல்யாணம் ஆயிடும்."

அந்தப் பெண் நமஸ்காரம் பண்ணியது. ஒரு நிமிஷம். 'கல்யாணம் ஆகாதா?' என்று ஏங்கும் பெண்களின் முகங்கள் என் முன் தோன்றி மறைந்தன.

"போன வாரம்தான் ஒரு பையன் வந்து இவளைப் பார்த்துட்டுப் போயிருக்கிறான். அவன் வருகிற அன்னைக்குப் பார்த்து இவ அம்மா கொல்லையில் உக்காந்துட்டா. நான்தான் பஜ்ஜி, சொஜ்ஜி எல்லாம் பண்ணினேன். அதைப் பத்தி இங்கேயிருக்கிற ஏழு குடித்தனங்களும் வம்பளந்தார்கள் இவ அம்மா ஒசியிலேயே காரியத்தைச் சாதிச்சுண்டுடுவளாம். கையிலே காலணா இல்லாம எப்படித் தைரியமாப் பொண்ணுக்குக் கல்யாணம் பண்ண இறங்கறாள்னு வேற பேச்சு... பேசாம கோடிக் குடித்தனத்துலே இருக்கிற நாராயணன் சொல்ற மாதிரி சக்குவை சினிமாவிலே சேர்த்துட்டா என்னங்கறது இவாளுடைய கட்சி..."



'எல்லோரும் நடிகையாவோ, கலை சேவை செய்கிற ஆர்வத்தோடே பிறந்துட்டா அப்புறமா ஒவ்வொரு வீட்டிலும் அடுப்படியை யார் கவனிக்கிறது? என்று நினைத்துப் பார்த்தேன். ஒரு வேளை நடிகைகளும் அடுப்படிக்கு வந்தாலும் வரலாம்!

சக்கு தலையைக் குனிந்துகொண்டு நின்றிருந்தாள்.

"ஏண்டி! அந்தப் பிள்ளையாண்டான் என்ன சொல்லி அனுப்பிச்சான்?"

"அவாளுக்குச் சகுனம் சரியில்லையாம் மாமி! என்னை வந்து பார்த்துட்டுப் போன அன்னைக்கே கிராமத்துலே அவருடைய பாட்டி தவறிப் போயிட்டாளாம்..."

"அதுக்கும், இதுக்கும் என்னடி சம்பந்தம்? வயசானா போக வேண்டியது தானே? ஈஸ்வரி...தாயே..." என்று அங்கலாய்த்தாள் ஜானகி.

அளவற்ற பிரச்னைகளும், சோதனைகளும் நிரம்பியிருக்கும் தன் குடும்பத் தொல்லைகளுடன் பிறத்தியாரின் தொல்லைகளையும் இழுத்துப் போட்டுக்கொண்டு கவலைப் படுவது அவள் குணம். சக்கு சிரித்துக் கொண்டே விடைபெற்றுக் கொண்டு போனாள்

ஐயங்கார், அப்புறம் அவர் மனைவி சக்கு வந்துவிட்டுப் போனதும் ஜானகி எனக்குக் காப்பி கலந்து கொண்டுவந்து வைத்தாள். அந்தச் சமயம் பார்த்து, 'சினிமா அட்வைஸர்' நாராயணன் உள்ளே நுழைந்தார். "அவர் இல்லையா" என்று கேட்டு வைத்தார்.

"இல்லையே... ஏழு மணிக்குத்தான் வருவார். உக்காருங்கோ... காப்பி சாப்பிட்டுட்டுப் போகலாம்..."

இன்னொரு டம்ளர் காப்பி கலந்து எடுத்து வந்தாள். நாராயணன் அதற்காகவே வந்தவர் போல மறுப்பு ஏதும் சொல்லாமல் காப்பியை ஆற்ற ஆரம்பித்தார்.

"இந்த எதுத்தாத்துப் பொண் சமாசாரம்..."

"ஆமாம், பஜ்ஜியும், சொஜ்ஜியும் ப்ளேட் கணக்கிலே விழுங்கிட்டு சகுனம் கிகுனம்ங்கறுளும்..."

"அதெல்லாம் ஒண்ணுமில்லை, யம்மா...இவாளுடைய ஏழ்மை நிலையை யாரோ அவனுக்கு இந்தாத்து வாசல்படி [illegible] குள்ளே சொல்லி இருக்காள்...... ஏதோ சாத்துப் போட்டு... இப்பவெல்லாம் அழகை வச்சுண்டு சம்பாதிக்கிற காலம்... எனக்கு ஏகப்பட்ட [illegible] தெரியும். பேசாம சேர்ந்துடலாம் (சினிமாவிலே)..."

ஜானகி அடுத்த நாள் வெள்ளிக்கிழமையாதலால் சிறு பலகை ஒன்றில் அரிசி மாவினால் 'ஹிருதய கமலம்' கோலம் போட்டுக்கொண்டிருந்தாள். அலமாரியின் நடுத் தட்டில் சிறிய பீடத்தில் மகாலக்ஷ்மி கொலுவிருந்தாள். அவளுக்கு அவள் அணிவித்திருந்த திருவாபரணங்கள் யாவும் போலியானவை. உண்மையான ஒரு குந்துமணி தங்கம் கூட அவள் உடம்பில் இல்லாதபோது தேவிக்கு அணிவிக்க அவள் எங்கே போக முடியும்? எல்லாவற்றிலும் சிறந்த அவள் உள்ளம் போலியானது அல்ல. அவள் அவரை நிமிர்ந்து பார்த்தாள்.

"மாமா! சொல்றேனேன்னு தப்பா நினைக்காதீங்கோ. எனக்கு இந்த வெளி வியவகாரங்கள்ளாம் அதிகமாத் தெரியாது. அழகை வச்சுண்டு சம்பாதிக்கிறதை விட தன் அழகை ஆராதிக்க ஒருத்தன் வருவான்ங்கற நம்பிக்கை சக்குவுக்கு அதிகமா இருக்குன்னு எனக்குப் படறது. நீங்க ஏன் அவ கல்யாண விஷயத்துலே அனாவசியமாக் கவலைப் படறேள்? எல்லாம் இவ பாத்துப்பா..." என்று எரிச்சலுடன் மகாலக்ஷ்மியைக் காண்பித்தாள்.

அன்று காலடி மண்ணில், 'பவதி பிக்ஷாம்தேஹி' என அழைத்து ஏழை ஒருத்தியை வாழ்விக்க எண்ணிய சங்கரரின் திடமான நம்பிக்கை ஜானகியிடமும் இருப்பதைப் பார்த்தேன்

சினிமாப் பைத்திய மாமா அங்கிருந்து நகர்ந்து விட்டார். அவர் எதிர்ப் போர்ஷன்காரரிடம், 'இதிலே ஒண்ணும் கொறச்சல், இல்லை. மாசத்துலே இருபது நாளைக்கு இவ புருஷன் படற பாடு எனக்குன்னா தெரியும்? பூஜை பண்றாளாம் பூஜை..." என்று சொல்லிவிட்டுப் போவது காதில் விழுந்தது.

சக்கு மகாலக்ஷ்மி முன்னால் நமஸ்கரித்து விட்டு குங்குமம் இட்டுக் கொண்டு கிளம்பினாள். "பாவம், பொண் ரொம்ப நன்னா இருக்கா... யார் கிட்டே இருக்கா?" என்று கேட்டு வைத்தேன் நான்.

"அக்காவாத்துலே தாயாரும், பொண்ணுமா இருக்கா... அக்கா

வேலையிலே இருக்கா... வீட்டுக காரியம் பூரா இவதான். இதுவும் பத்தாவது பாஸ் பண்ணியிருக்கு. ஒரு வேலையைப் பார்த்துக்கலாம். எதுக்காவது எழுதிப்போட்டுப்பதில் வந்ததுன்னு அக்காக்காரி வாசல் குடித்தனக்காராக் கிட்டே சொல்லிக் கடுதாசியை வாங்கி வச்சுண்டு கிழிச்சுப் போட்டுடறு..."

சக்குவின் அக்கா குழந்தைகள் இரண்டு வெளியில் விளையாடி விட்டுப் புழுதியோடு உள்ளே ஓடி வந்தன.

"மாமி... மாமி... கல்கண்டு கொடுங்கோ மாமி..."

"ஏண்டி! எப்பப் பார்த்தாலும் கல்கண்டு கொடுக்க முடியுமா? சாயங்காலமா விளக்கேத்தினதற்கு அப்புறமா வாங்கோ..."

"இப்ப வேணும் மாமி..." என்று இரண்டும் ராகம் பாட ஆரம்பித்தன. சக்கு வந்து முதுகில் இரண்டு வைத்து அதுகளை இழுத்துக் கொண்டு போனாள். உள்ளே போனதும் இன்னும் நாலு வைத்தாள். "மோர்ருஞ்சாதம் போடறேன். மாமியைப் போய் இனிமே கல்கண்டு கேட்காதீங்கோ..." என்று அதன் பாட்டி—சக்குவின் அம்மா—வேறு நாலு அறைவது காதில் விழுந்தது.

"இங்கே... இந்தச் சத்தத்தில்... உன் பூஜை..." என்று ஜானகியை நான் பார்த்தேன்.

அவள் சிரித்தாள். முகமெங்கும் வழியும் அந்தச் சிரிப்பினூடே, "இதைப் போல எத்தனையோ சண்டைகள், சச்சரவுகள், கேலிகள், பேச்சுகள், ஊடல்கள், இந்தக் குடித்தனங்களிலே சகஜம். சொல்லப் போனா இது ஒரு குட்டி உலகம். இன்னிக்கி வியாழக்கிழமை இல்லையா? எம் பூஜை புனஸ்காரத்தைப் பத்தி இவாள்ளாம் ஏதாவது பேசிண்டு இருப்பா... 'கல்யாணத்துக்குப் பொண்ணிருக்கறது... பையன் படிச்சு முன்னுக்கு வரவாண்டாமா? அவர்தான் என்ன பண்ணுவார் ஒரு பொம்மனாட்டி இப்படி சாமி பைத்தியம் புடிச்சு அலைஞ்சா...' ன்னு பேசிண்டிருப்பா...நாளைக்கு வந்து பாருங்கோ... அத்தனை பேரும் என்னோடே ஒற்றுமையா ஸ்தோத்திரம் ... ஆய்ந்து கொடுக்க, கட்டறதும், கோ... றதும்னு எல்லாருமே ... யின் நினைவாகவே இருப்பா... அவாளுக்கு இந்த உலகத்துல ஏதோ ஒரு பிடிமானம் வேண்டியிருக்கு சுவாமியைத் தூஷிக்கிறவா எல்லாம் நிஜமா அவரைத் தூஷிக்கிறவாஇல்லை...தினசரி சாப்பிடுகிற, தூங்குகிறமாதிரி இந்த தூஷணையும் ஒண்ணு. அதுக்கு மேலே அவா அவாளுக்கு ஒரு நம்பிக்கை இருக்கு. அது தன்னாலே வெளிப்படவும் செய்கிறது..."

அவள் நீட்டிய குங்குமச் **சிமிழி**லிருந்து நான் எடுத்துக் **குங்குமம்** தரித்துக் கொண்டேன். **மகாலக்ஷ்மி**யின் முன்பு அழகிய தீபம் **ஒளி சிந்**திக் கொண்டிருந்தது.

ஓ! விளக்கு வைக்கும் நேரமாகி விட்டதா?

"நான் வருகிறேன் ஜானகி... நானும் விளக்கேற்ற வேண்டும்" என்று அவளிடம் விடை பெற்றேன்.

ஃ

**கு**ழந்தைகளுக்குக் கேழ்வரகுக் கஞ்சி தயாரித்துக் கொடுத்துக் கொண்டிருக்கும்போது, தினசரி படித்துக்கொண்டிருந்த என் கணவர் திடீரென்று என்னை அழைத்தார். டம்ளரிலிருந்த கஞ்சியைச் சுவைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்த குழந்தை மேலும் கஞ்சிக்காக என்னிடம் டம்ளரை நீட்டினான்.

"கூப்பிட்டவுடனே, வருகிற பழக்கம் தான் உன்னிடம் இல்லையே! அதிலும் குழந்தைகளுக்குச் சேவை செய்வதென்றால் உனக்கு, சுற்றிலும் என்ன நடக்கிறது என்பதையே மறந்துவிடுவாயே!" என்று என் மீது குற்றம் சாட்டினார் என் கணவர்.

"என்ன அப்படி தலை போகிற அவசரம்? உங்களைப்போல காலை வேளையில் என்னால் பத்திரிகையில் கவனம் செலுத்த முடியாது. வீட்டிலே சம்சாரம் நடக்க வேண்டாமா?" வார்த்தைகள் சற்று கோபத்துடன்தான் வெளி வந்தன எனலாம்.

"அடேயப்பா! கோபத்தைப் பார்! நீயும்தான் இலக்கிய சேவை செய்கிறாய். உன் கதைகளும்தான் பதினைந்து வருஷங்களுக்கு மேலாகப் பத்திரிகைகளில் வெளியாகின்றன. ஆனால், ராஜியைப் போல தினமும் உன் பெயர் பத்திரிகைகளில் அடிபடுகிறதா? இல்லை, புகைப்படமாவது அடிக்கடி வெளியாகிறதா? ஒன்றுமில்லை. இப்படிச் சம்சாரத்தைக் கட்டிக்கொண்டு அழுதால் எப்படி பிரபலமாக முடியும்சொல்" என்று கூறி தினசரியை என்னிடம் கொடுத்தார். கலகலவென்று எனக்குச் சிரிக்கத் தோன்றியது! அவர் இவ்விதம் கூறியதும் கலகலவென்று சிரித்துவிட்டேன். பத்திரிகையிலே வந்திருந்த செய்தி இதுதான்:

"பிரபல பாடகி ஸ்ரீமதி ராஜலக்ஷ்மி அவர்கள் சமீபத்தில் ஆரம்பித்திருக்கும் சங்கீதப் பள்ளிக்கூடத்தின் வருடாந்திர விழா நேற்று சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. நகரத்துப் பிரமுகர்களும், சங்கீத அபிமானிகளும், கலா ரசிகர்களும் வந்திருந்து மேற்படி விழாவைச் சிறப்பித்தனர்."

ஃ ஃ ஃ

செய்தி பிரசுரித்திருந்த 'காலத்'துக்கு பக்கத்தில் ராஜியின் புகைப்படம் வெளியாகி இருந்தது. பெண்கள்தான் ஆடம்பரப் பிரியர்கள் என்று சிலர் சொல்வார்கள். ஒருவேளை அவர்களின் ஆடை ஆபரணங்களைப் பார்த்து அவ்விதம் தீர்மானித்திருக்கிறார்களோ என்னவோ! என்னைப் பொறுத்தவரையில் ஆண்கள் ஒன்றும் சளைத்தவர்கள் இல்லை என்றுதான் கூறுவேன். அவர்களில் பெரும்பாலோர் டாம்பீகமாக உடை அணியாவிட்டாலும் ஆடம்பரத்தைக் கண்டு பிரமிக்கிறவர்கள். தங்கள் மனைவிகளும் அவளைப்போல் பாட வேண்டும். இவளைப்போல் ஆடவேண்டும். பத்திரிகைகளில் புகைப்படங்களும், பெயர்களும் வெளியாக வேண்டும் என்று ஆசைப்படுகிறவர்கள். அதற்காக அவர்களைத் தூண்டுகிறவர்கள் என்றுகூடச் சொல்லலாம். பொதுநலச் சேவையில் ஈடுபட்டிருக்கும் பெண்மணிகளின் மன ஆழத்தில் என்ன இருக்கிறது என்பது எனக்குத் தெரியாது. ராஜியைப்பற்றி எனக்குத் தெரியும். அவளும் நானும் ஒன்றாகப் படித்தவர்கள். இருவருடைய கஷ்டசுகங்களையும் மனம்விட்டுப் பேசி அறிந்து கொண்டிருக்கிறோம். ஒரு தரம் பங்களூரிலிருந்து சென்னை வந்திருந்த போது ராஜியைச் சந்தித்தேன். பழைய சாதாரண ராஜியாக இல்லை அவள். காதுகளில் சுடர்விடும் வைரக் கம்மல்களும், ஜாஜ்வல்யமாகப் பிரகாசிக்கும் பேஸரி-



யும், கார்டு அகலத்தில் ஜரிகை போட்ட பட்டுப் புடவையும், இன்றைய நாகரிகத்தின் அறிகுறியான 'வெல்வெட்' சோலியும் அணிந்து வெகு டாம்பீகமாகக் காணப்பட்டாள்.

என்னுடன் அவள் படித்த காலத்தில் ஆறு கஜம் மில் புடவையும், ஒன்றிரண்டு ஆபரணங்களையும் தவிர வேறு டாம்பீக உடைகளை, அணிகளை அவள் அணிந்ததில்லை. 'வடக்கத்திக்காரர்களிடமிருந்து நாம் அறிந்து கொள்ள வேண்டியவைகளில் இந்த அம்சம் முக்கியமானது' என்று அடிக்கடி என்னிடம் சொல்வாள். அவளுடைய சாதாரண அழகுக்கு அந்த உடைகள் பொருத்தமாகத்தான் இருந்தன. சங்கீதத்தில் ஆசை இருந்தாலும் அதைப் பயின்று பிரபலமாக ஆகவேண்டும் என்று அவள் விரும்பியதில்லை. அந்த ஆவல் எனக்குத்தான் அதிகம் உண்டு. பாட்டுகள் பாட நிறைய சந்தர்ப்பம் அளிப்பார்கள் என்று பள்ளிக்கூட நாடகங்களில் கதாநாயகி வேஷம் அணியத் தயங்காமல் ஒப்புக்கொண்டவளும் நான்தான். அவள் எனக்கு எதிராகக் கதாநாயகன் வேஷத்தில் தோன்றி அடுக்குச் சொற்களை உதிர்த்து என்னைத் திணறவைப்பாள். புத்தகங்கள் படிப்பதிலும், பேசுவதிலும் மிகுந்த கெட்டிக்காரி. வீட்டில் பொழுது போகவில்லை என்று பாடிக்கொண்டிருந்தால், என் வாயைப் பொத்தி என்னை வெளியே இழுத்துப்போய் விடுவாள் ராஜி. இப்படிப்பட்டவள் இன்று பிரபல பாடகியாக இருக்கிறாள். அவளிடம் சங்கீதம் பயில ஏகப்பட்ட குழந்தைகள் வருகிறார்கள். பயின்று பலனை அடைகிறார்கள். இது ஆச்சர்யமான விஷயம்தான் என்று என் கணவர் ஒப்புக்கொண்டிருக்கிறார்.

இதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமே இல்லை. அவளுக்கு வாய்த்த கணவனின் மனோநிலையைப் பொறுத்து அவள் ஆசைகள், விருப்பங்கள் வேறு வழியில் திரும்பின. கல்யாணத்தன்றே தன் மனைவி பிரபல பாடகி ஆகவேண்டும் என்று

செல்லக் குழந்தை ஒன்று முணுமுணுத்துச் சிணுங்குவது போல் காற்று பொருமிக் கொண்டேயிருந்தது. சரளா தன்னந் தனியளாக அந்த வீட்டு வராந்தாவில் பிரம்பு நாற்காலியில் சாய்ந்து உட்கார்ந்தபடி கம்பளிச் சட்டை பின்னிக் கொண்டிருந்தாள்.

எதிர்ச்சாரி வீடுகளுக்கிடையே அமைந்திருந்த புல் தரையில் குழந்தைகள் ஓடிப் பிடித்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். நீல நிறச் சராயும் வெள்ளைக் கம்பளிச் சட்டையும் அணிந்து அவள் மகன் முரளி இருக்கப் போறே? மாசம் சாப்பாட்டுக் குன்னு அண்ணனிடம் ஏதாவது குடுத்திடேன்.... அப்புறம் பால், பழம்னு தனியா வாங்கிக்க — ''

''நான் ஒண்ணும் அங்கே போகல்லே. எனக்குப் பிடிக்கலேன்னு விடுங்க — ''

''பின்னே எங்க வீட்டிலே போய் இரு...!'' என்றான் சிகாமணி.

''ஐயே !'' என்று உதட்டைப் பிதுக்கிக் கேலி செய்தாள் சரளா.

□ □ □ □

அட்டைப் படக் கதை

□ □ □ □

# தனிமைத் துயர்

ஸரோஜா ராமமூர்த்தி

அடித்துப் பிடித்து ஓடி ஆர்ப்பாட்டம் செய்து கொண்டிருப்பதைக் கண்டு சரளாவின் உதடுகளில் இளநகை அரும்பியது. வைத்த கண் வாங்காமல் அவனையே பார்த்துக் கொண்டிருந்து விட்டுப் பெருமிதத்துடன் மீண்டும் சட்டை பின்னுவதில் முனைந்தாள்.

முரளி ஆரோக்கியமான சிறுவன். அதிகம் வியாதி வந்தது கிடையாது. நன்றாக ஓடியாடி விளையாடிவிட்டு வந்தானாகில்,— ''அம்மா! தூங்கப் போறேன், கதை சொல்றியா?'' என்றபடி தன் செப்பு வாயைத் திறந்து நீண்ட கொட்டாவி ஒன்று விடுவான். அவனும் தூங்கிவிட்ட பிறகு அங்கே ஆழமான அமைதி நிலவும் போது அவள் செய்வதொன்றும் தெரியாமல் கணவன் தொலைவிலிருந்து எழுதும் கடிதங்களைப் படிப்பாள். அப்படிப் படிக்கையில் அவள் கணவனுடன் உல்லாசமாகப் பொழுதைக் கழிப்பது போல் கற்பனையில் மிதந்து கொண்டேயிருப்பாள்.

திடுமென்று முரளி தூக்கத்தில் முனகுவான். பிறகுதான் தன் கணவன் அஸ்ஸாம் எல்லையில் தேசத்தைக் காக்கும் பணியில் ஈடுபட்டிருப்பது நினைவுக்கு வரும். ஜன்னலின் திரைச் சீலைகளை விலக்கிவிட்டு நெடுந் தொலைவில் பார்வையைப் பொருத்தி இரண்டு துளிக் கண்ணீரைச் சிந்துவாள் சரளா.

தன்னந் தனியாக அந்த வீட்டில் அவளும், முரளியும் இருப்பதே ஒரு வேடிக்கை. அதுவும் அவள் பிடிவாதத்தால் விளைந்தது.

கணவன் யுத்தகளத்துக்குச் செல்லுமுன்பாக அவளிடம் இதைப் பற்றி நீண்ட நேரம் விவாதித்தான்.

''உன் அம்மா வீட்டுக்குப் போயேன் '' என்றான் சிகாமணி சரளாவைப் பார்த்து.

''அதெப்படி முடியும்? அம்மாவுக்கு அந்த வீட்டில் முன்னைப் போல அதிகாரம் இல்லே. அண்ணி வந்த பிறகு அவர்கள் எதிலும் தலையிடுவதில்லே. எங்க அண்ணியைப் பற்றித்தான் தெரியுமே உங்களுக்கு! பெரிய ராஜா வீட்டு மகன்னு நெனைப்பு ! அத்தனையும் கர்வம் !''

''சரி, சரி, அவங்க எப்படியோ இருந்துட்டுப் போறாங்க. நீ என்ன சும்மா அவங்க வீட்டுச் சாப்பாட்டை எதிர்பார்த்துக்கிட்டா

''உங்க ஊரும், நீங்களும்! சுத்தப் பட்டிக் காடு. குழந்தைக்குத் தலையை வலிச்சாக்கூட நல்ல டாக்டர் கிடையாது. அங்கே யார் போய் இருக்கிறது?''

''அப்ப இங்கேயே இருந்துக்க.... நான் நாளன்னைக்குக் கிளம்பறேன். உன் இஷ்டம். நீ எந்த வழியும் போக விடமாட்டே. அப்புறமா தனியா விட்டுட்டுப் போயிட்டான்னு உன் அம்மா, அப்பா என்னைக் கரிச்சுக் கொட்டுவாங்க....!''

''அவங்க கரிச்சுக் கொட்டறதைக் கேட்க நீங்கதான் இங்கே இல்லியே. அதைப் பத்தி உங்களுக்கு எதுக்குங்க கவலே?'' என்று சரளா சிரித்தாள். பளிச்சென்று முத்து வரிசை போல் இருந்த பற்களின் ஒளி முத்தாக மின்னின.

அவனும் பதிலுக்குக் குறும்பாகச் சிரித்தபடி அவள் கண்களை உற்றுப் பார்த்தான்.

இரண்டு பேருமே நல்ல பிடிவாதக் காரர்கள்.

சிகாமணி மிகவும் சிக்கனமாக அவன் பெற்றோர்களுக்கு மட்டும் சரளாவை அந்த ஊரில் தனியாக விட்டு விட்டுப் போவதைப் பற்றி எழுதினான். அதற்கு அவன் தந்தை நிஷ்டூரமும், கோபமும் கலந்த கடிதம் ஒன்றை எழுதியிருந்தார்.

'இந்தக் காலத்துப் பிள்ளைகளின் போக்கே மிகவும் விசித்திரமாக இருக்கிறதென்றும், அவனே ராணுவத்தில் சேர்ந்திருக்க வேண்டிய அவசியம் இல்லை என்றும், படித்த மனைவியை விரும்பித் தேடிக் கொண்டவன் அவன் போக்குப்படி நடப்பதில் தாம் ஒன்றும் வியப்படையவில்லை என்றும் எழுதியிருந்தார்.

''மாமா என்ன எழுதியிருக்காங்க?'' சரளா அவன் உடுப்புகளுக்கு இஸ்திரி போட்டபடி கேட்டாள்.

''படித்துப் பாரேன். வழக்கமானதைத் தான் எழுதியிருக்காரு. வயசாச்சில்லே? அப்படித்தான் எழுதுவாங்க — ''

''அவங்க என்ன வேணும்னாலும் எழுதட்டும். ஊருக்குக் கிளம்பறதுக்கு முன்னாடி அவங்களைப் போய்ப் பார்த்துச் சொல்லிக் கும்பிட்டுவிட்டுக் கிளம்புங்க'' என்றாள் சரளா.

சிகாமணி வியப்புடன் அவளைப்பார்த்தான். வண்டி வண்டியாக அவளைப் பற்றி அவர்கள் எத்தனைதான் குறை கூறினாலும் சரளாவின் மனம் சலிப்படைவதில்லை. ஒருவேளை அவள் தன்னைச் சோதிக்கிறாளோ என்ற ஒரு சந்தேகம் அவனுள் எழுந்தது.

''நிசம்மாத்தான் சொல்றியா சரளா?'' என்று கொஞ்சலுடன் கேட்டான் அவன்.

''ஏன் உங்களுக்கு அப்படியொரு சந்தேகம் அவங்களைப் பத்தி நான் எப்பவுமே உயர்வாத்தான் நெனச்சிருக்கேன்—'' சிகாமணி இதயத்தில் ஏக்கம் கவிந்தது. 'படித்த மனைவி படித்த பெண்' என்று அடிக்கடி தன் பெற்றோர்கள் ஏசினாலும் அந்தப் படித்த மனைவியின் பண்பு உள்ளத்தைப் பற்றி அவர்கள் புரிந்துகொள்ளவே இல்லையே என்றுதான் அவன் ஏங்கினான்.

சரளா கணவனின் பிரயாணத்துக்கு வேண்டியவைகளைப் பற்றிக் கவனிப்பதில் முனைந்திருந்தாள். தொட்டிலில் கண் வளரும் மதலைக்கு மூன்று மாதங்கள் இருக்கலாம். சிகாமணி ரயிலுக்குப் புறப்படும் போது அது தன் பொக்கை வாயைத் திறந்து சிரித்தது. மனைவியின் கண்கள் கலங்கின. உதடுகள் புன்முறுவலை உதிர்த்தன. மகிழ்ச்சியும் துயரமும் கலந்தவாறுசரளா ரயிலடியில் நின்றிருந்தாள்.

''எப்படித் தனியா இருப்பே?'' என்று ரயில் கிளம்புவதற்கு முன்பு திரும்பவும் கேட்டான் சிகாமணி.

''தனி என்ன தனி? இதோ உங்க மகன் இருக்கானே. இவனை விட இன்னொருத்தர் துணை எதற்கு?''

ரயில் கடைசியாகக் கூவிவிட்டுப் புறப்பட்டது. வீட்டுக்குத் திரும்பியதும் சரளாவுக்கு வீடே 'ஹோ'வென்று காட்சி தந்தது. ரேடியோவை உரக்கத் திருகிவிட்டுச் சோபாவில் உட்கார்ந்து கொண்டாள்.

மருமகன் அஸ்ஸாமுக்குச் சென்றுவிட்டதைக் கடிதம் மூலம் அறிந்த சரளாவின் தாய் சிறிது காலம் மகளுடன் வந்து தங்கியிருந்தாள். வயது சென்றவளாதலால் அவள் சரளாவின் தனிமையை அதிகம் போக்கி விட்டதாக நினைக்க முடியாது. மேலும் அந்த ஊரில் கோடை நாட்களில் கூட மாலை நேரத்தில் லேசான குளிர் உண்டு. கிழவி எப்பொழுதுமே கம்பளியைப் போர்த்துக் கொண்டு கணப்படியில் உட்கார்ந்திருப்பாள். சரளாவுக்கு ஏதாவது வேலைகள் இருந்து கொண்டே இருக்கும். ஸ்வெட்டர் பின்னுவது, தோட்டம் போடுவது, கடைக்குப் போய் வருவது, குழந்தை முரளியைக்



ஏதாவது பேச வேண்டும் என்று அவள் மனம் அலை பாய்கிறது. திடீரென்று நினைவு வந்தாற்போல் பேசுகிறாள்.

''முரளி காலையில் பள்ளிக்கூடம் போகும்போது தெருவில் விழுந்து காலில் சிராய்த்துக் கொண்டான். மருந்து போட்டு அனுப்பினேன்.....''

''காயத்தைக் கழுவித்தானே மருந்து போட்டாய்.''

''ஆமாம்.....''

''சரி பள்ளிக்கூடத்திலிருந்து வரட்டும், பார்க்கிறேன்.....''

அதற்கு மேல் அவனுடைய பேச்சு வளரவில்லை. 'குழந்தை விழுந்தானா? அடி பலமா?' என்று ஒருத்தர் பதறமாட்டேரோ? இதுதான் ஜானகியின் குற்றச்சாட்டு. அவள் மனத்தாங்கல், வேதனை, எல்லாம்.

உள்ளே மேசைமீது அன்று வந்த தபால்களைப் பார்வையிட்டான். ஊரிலிருந்து அவன் அம்மா எழுதிய கடிதம். 'சௌ ஜானகியைக் கவனித்துக் கொள். நீ அவளிடம் இப்படி நடந்து கொள்வது...' வழக்கமான குற்றச்சாட்டுத்தான். அவன் அதைப் படித்துப் புரிந்து கொண்டதாகக் காணோம். இன்னொரு கடிதம் ஏதோ ஒரு பொது நலச் சங்கத்திலிருந்து வந்திருந்தது. 'அன்புடையீர்' என்று அது ஆரம்பித்திருந்தது. ஜானகி அந்தக் கடிதத்தைப் படித்தவுடன் சிரித்தாள். வேதனையின் வெடிப்பாக இருந்தது அந்தச் சிரிப்பு. அன்பை உடையவர் என்று அதற்குப் பொருள் என்று அவள் நினைத்தாள். பிறர் விஷயத்தில் மகா மேருவாக உயர்ந்து நிற்கும் அந்த அன்பு, அவளிடத்தில் தரை மட்டமாகத் தாழ்ந்து நிற்கும் நிலைதான் விந்தை!

அந்தச் சங்கத்தில் பல அனாதைப் பெண்கள் ராட்டை சுழற்றி, தறி நெய்து வாழ்கிறார்களாம். அவர்களுக்கெல்லாம் இந்த வழியைக் காட்டிய தியாகுவை ஆண்டு விழாவுக்கு வருமாறு அழைத்திருந்தனர்.

தியாகு பீரோ நிறைய அடுக்கி வைக்கப்பட்டிருந்த நூல் சிட்டங்களைக் கட்டுக் கட்டாகக் கட்டி வைத்துக் கொண்டிருந்தான்.

சமையலறையிலிருந்து வாசல் அறை தெளிவாகத் தெரிந்தது. ஜானகி சுவரில் சாய்ந்தபடி கணவனைப் பார்த்துக் கொண்டேயிருந்தாள்.

எதிர்வீட்டுச் சாமான் அறையை இப்போது நன்றாகப் பார்க்க முடிந்தது. மச்சிலிருந்து கணவன் ஒவ்வொரு பாத்திரமாக எடுத்துக் கொடுக்க, மனைவி வியர்வை வழியக் கீழே ஒவ்வொன்றாக வைத்துக் கொண்டிருந்தாள்.

அவர்கள் வீட்டில் ஏதோ விசேஷம் போலும். ''ஓஹோ! விருந்து சமைக்கப் பாத்திரங்களை எடுக்கிறார்கள் போலிருக்கிறது.''

உடனே அவளுக்கு முரளியின் பிறந்த நாள் நினைவுக்கு வந்து விட்டது. அன்று தியாகு ஊரில் இல்லை. எங்கோ என்னவோ என்று போய் விட்டான்.

அவளுக்கு அன்று ஒன்றுமே பிடிக்கவில்லை. ஊரெல்லாம் திரண்டுதான் வந்திருந்தது. பலன்?

குடும்பம், குழந்தை குட்டி என்று அவள் தன்னைச் சுற்றி அமைத்துக் கொண்டிருக்கும் சிறிய வட்டத்துக்குள் அவன் என்றுமே எட்டிப் பார்த்ததில்லை.

சமூகம், தொண்டு என்று அவன் தன்னைச் சுற்றி வரைந்திருக்கும் பெரிய வட்டத்துக்குள் இவள் எட்டிப் பார்க்க நுழைந்ததுமில்லை.

ஜானகி அன்று சாப்பிட வில்லை. கணவன் வந்து சாப்பிட்டாயா என்று கேட்கவில்லையே என்ற ஆதங்கம்தான் காரணம். என்றாவது ஒரு நாள் அவன் அப்படிக் கேட்கமாட்டானா என்று அந்த நாளை ஆவலுடன் எதிர்நோக்கியிருந்தாள் அவள்.

தெருவில் தந்திச் சேவகன் வந்து நின்றான்.

''சார்...'' கூடத்து வரை வந்து எட்டிப் பார்த்த ஜானகி யாருக்கு என்னவோ என்று பதறினாள். தந்தியை வாங்கிக்கொண்டே தியாகு மனைவியின் முகத்தை உற்றுப் பார்த்தான். அதில் ஓடிய பயமும், பீதியும் அவன் மனத்தைக் கலக்கின.

''என்ன ஜானகி? யாருக்கும் ஒன்றும் இல்லை. தெற்கே வெள்ளம் புரளுகிறதே. வெள்ளக் கஷ்ட நிவாரண வேலைக்கு என்னை வரும்படி கலெக்டர் தந்தி அனுப்பியிருக்கிறார். அவ்வளவுதான்.''

இவ்வாறு சொல்லிக் கொண்டே தோல் பெட்டியில் உடைகளை எடுத்து வைத்தான். காப்பி கூடச் சாப்பிடாமல் புறப்பட்டு விட்டான். ஜானகி மறுபடியும் ஜன்னல் கம்பிகளின் மீது முகத்தைப் பதித்துக் கொண்டு நின்றாள். தெருவில் சந்தடி இல்லைதான். மணி மூன்றுகூட இருக்காது..

எதிர் வீட்டில் கணவனும் மனைவியும் பரபரவென்று இங்கும் அங்கும் ஓடிக் கொண்டிருந்தார்கள். வேதனையும் துயரமும் அவர்கள் முகத்தில் பொங்கி வடிந்தன. அவர்கள் வீட்டில் யாருக்கென்ன? ஜானகிக்கு ஒன்றும் புரியவில்லை. சற்றுமுன் சிரிப்பும் களிப்புமாக இருந்த வீட்டில் ஏன் இப்படிப் பரபரக்க வேண்டும்? குழந்தை முக்கி முக்கி முனகுகிறதே!

வாணி தெருக் கதவைத் திறந்து கொண்டு எதிர் வீட்டிலிருந்து இவளை நோக்கி வந்தாள்.

''வந்து...வந்து... குழந்தை தூங்கி விழித்ததிலிருந்து வயிறு உப்பிக் கொண்டு மூச்சு முட்டி முட்டி வருகிறது மாமி. எனக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை....''

கண்ணீர் கொப்பளிக்க அவள் தன் இரு நயனங்களையும் தலைப்பால் பொத்திக் கொண்டாள்.

ஜானகி அவளுடன் அந்த வீட்டினுள் சென்றாள். ஏதோ மருந்தின் பெயரைச் சொல்லி அதை வாங்கி வரச் சொன்னாள். மருந்தைக் குழந்தையின் மார்பிலும், முதுகிலும் தடவித் தவிட்டை வறுத்து ஒத்தடம் கொடுத்தாள்.

குழந்தையின் வேதனை குறைந்தாற் போலிருந்தது. வீறிட்டு அழுது தாயின் மடியில் அது புரள்வதைப் பார்த்தவாறு நின்றிருந்தாள் ஜானகி.

''அப்பா...கொஞ்ச நாழியில் எப்படிப் பயமுறுத்திட்டேடா, ராஜா...'' என்று குழந்தையை உச்சி முகர்ந்தாள் அதன் அன்னை.

''பார்த்தாயா, உனக்கு ஒன்றும் தெரியவில்லை. அவர்களுக்கு எல்லாம் தெரிந்திருக்கிறது. பெரிய தொண்டரின் மனைவி அல்லவா? அவர் எவ்வளவு தொண்டுகள் செய்கிறார் ஆஸ்பத்திரியில்!'' என்று வியப்பும், நன்றியும் கலந்த குரலில் ஜானகியைப் பாராட்டினான் வாணியின் கணவன்.

மற்றவர் துயர் துடைப்பதில் மற்றவர் முகத்தில் சிரிப்பதைக் காண்பதில் இருக்கும் மகிழ்ச்சியை ஜானகியால் நன்கு உணர முடிந்தது. அதோடு தன் கணவனையும் உணர முடிந்தது.

இந்நாள் வரை முரண்பட்ட கருத்துடன் ஒருவரிடமிருந்து ஒருவர் ஒதுங்கியே வாழ்ந்த அவர்கள் இருவரிடையும் இன்று கருத்தொற்றுமை நிலவக் காரணமாக இருந்த அந்த எதிர்வீட்டு மதலைச் செல்வத்தை இமைக்காமல் பார்த்தாள் ஜானகி.

எங்கோ பிறர் இன்னல் களையப் போயிருக்கும் தன் கணவன் தியாகு அப்போதும் அருகில் இருப்பதாகவே அவள் உணர்வு கொண்டாள்.

மறுபடியும் ஜானகி தெருவில் இறங்கிய போது தெரு கலகலப்பாக இருந்தது. முன்பு தெருவில் இருந்த அமைதி இப்போது அவள் உள்ளத்தில் இருந்தது. அவள் தன் வட்டத்திலிருந்து தானாகவே நழுவி வெளியேறிக் கணவனுடைய இலட்சிய வட்டத்தில் புகுந்தாள்!

# அம்மன் கோவில்

**சரோஜா ராமமூர்த்தி**

ஐப்பசி மாதத்து அடை மழையில் நானும், என் தோழி ஷியாமளாவும் ஒரு சிறு கிராமத்தில் அகப்பட்டுக் கொண்டோம். காலேஜ் ஹாஸ்டலிலேயே அடைபட்டுக் கிடந்த எங்களுக்குக் காலாற ஊர் சுற்றி விட்டு வரவேண்டும் என்று ஆசையாக இருந்தது. தீபாவளி விடுமுறைக்கு ஹாஸ்டல் மாணவிகளில் அநேகர் ஊருக்குப் போயிருந்தார்கள். முதல் நாள் நாங்கள் இருவரும் போட்டிருந்த திட்டத்தின்படி ஹாஸ்டல் தலைவியிடம் அனுமதி பெற்றுக் கொண்டு அதிகாலையில்—சூரிய உதயத்துக்கு முன்—ஹாஸ்டலுக்கு இரண்டு மைல் தொலைவில் இருந்த சமுத்திரக் கரையை நோக்கிப் புறப்பட்டோம். முதல் இரண்டு நாட்களாகப் பெய்த மழையின் காரணமாக ஒவ்வொரு பள்ளத்திலும் ஜலம் நிறைந்து, பசேல் என்று, எங்கு பார்த்தாலும் இயற்கையின் மலர்ச்சி எங்களைச் சந்தோஷத்தில் ஆழ்த்தியது. வருஷத்தில் பத்து மாதங்களில் மழையின்மையால் துவண்டு கிடந்த செடி கொடிகள் இளங்காற்றில் ஆடி அசைந்து களைத்துக் கொண்டிருந்தன.

ஷியாமளாவின் தோளில் காமிரா தொங்கிக் கொண்டிருந்தது. எதைக் கண்டாலும் அந்தச் சிறு கருவிக்குள் அதைப் பிடித்து விடவேண்டும் என்ற ஒரே நிர்மாணத்துடன் இரண்டு சுருள் பில்மை பையில் திணித்துக் கொண்டு வந்திருந்தாள் அவள். எந்தக் காட்சியையும், கற்பனையுடன் கலந்து ஒரு கதை எழுதிவிட வேண்டும் என்று நான் சிந்தனையில் மூழ்கியிருந்தேன். ஆகவே, வெட்டிப் பேச்சுக்கிடமில்லாமல் நாங்கள் மௌனமாக நடந்தோம்.

கடற்கரையை அடைந்து பகலெல்லாம் கடலில் செல்லும் படகுகளையும், மீன் பிடிக்கும் செம்படவர்களையும், அலைகளில் நீந்தி விளையாடுபவர்களையும் ஷியாமளா ஓயாமல் படம் எடுத்தாள். என் கற்பனைக்குத் தூண்டுகோலாக ஒன்றும் அமையவில்லை. மனம் வெறிச்சென்று கிடந்தது.

ஓய்வு நாளை வியர்த்தமாகக் கழித்து விட்டோமே என்று நான் வருந்திக் கொண்டிருக்கையில், இயற்கைக்கு ஆவேசம் வந்தது போல் எங்கிருந்தோ பெருங்காற்று ஒன்று சூறாவளியைப் போல் கிளம்பி வந்தது. 'உஸ்' என்று படமெடுத்த நாகம் சீறுவதுபோல் கிளம்பிய அக்காற்று வானத்தில் நாலாப்புறமும் சிதறிக் கிடந்த மேகங்களை ஒன்று சேர்த்து விட்டு எங்கோ சென்று மறைந்தது. எங்கும் காரிருள் சூழ பளீரென்று கண்ணைப் பறிக்கும் மின்னலுடன் மழை ஆரம்பித்தது. இதுவரையில் படம் எடுப்பதில் மூழ்கியிருந்த ஷியாமளா மிகுந்த கவலையுடன், என்னையும், கைக் கடியாரத்தையும் கவனித்தாள். மணி நாலுதான் ஆகியிருந்தது.

அந்தப் பெரு மழையில் நிற்கக்கூட இடமில்லாமல் சொட்டச் சொட்ட நனைந்து கொண்டே நாங்கள் அருகில் இருந்த ஊரை நோக்கி வேகமாக நடக்க ஆரம்பித்தோம். அந்தக் கிராமத்தைக் காக்கவும், எங்களைப்போல் மழையில் அகப்பட்டுக் கொள்பவர்களுக்கு அடைக்கலம் அளிக்கவும் ஒரு காளி அம்மன் கோவில் தென்பட்டது. அந்தக் கோவில் புராதனமானது. ஆனால் புதிதாகப் பழுதுபார்த்துக் கொண்டிருந்தார்கள். ஐப்பசி மாதமாதலால் மழைக்காகச் சாரம் கட்டிக் கொண்டு அநேகர் வேலை செய்து கொண்டிருந்தார்கள். அவர்களுக்குத் தலைவனாக ஒருவன் உட்கார்ந்து கொண்டு அவர்களுக்கு யோசனை சொல்லி வந்தான். தலைவனாக இருந்த அவனுக்கு வயது முப்பதுகூட இருக்காது. இருந்தாலும், அந்தக் கோவிலை [illegible] சிலா [illegible] அவன் தலை முறையாக அறிந்தவன் போல் இருந்தது.

அவன் எங்களை மிகுந்த மரியாதையுடன் வரவேற்றான். "நல்ல மழையில் அகப்பட்டுக் கொண்டீர்களே அம்மா" என்றும் வருந்தினான். அப்பொழுது மழை அநேகமாக நின்றிருந்தது. இருந்தாலும், முழுதும் நனைந்திருந்த எங்களால் மேலும் நனைந்து கொண்டு போக முடியாமல் போய் விட்டது. ஆயாச மிகுதியால் நாங்கள் இருவரும் அங்கிருந்த கல் ஒன்றின் மேல் உட்கார்ந்தோம். கோவிலின் பழைய வரலாற்றை அறிந்த பழனியும் அவன் கதையை ஆரம்பித்தான்.

● ● ●

பழனி தொண்டையைக் கனைத்துக் கொண்டு தன் முன்னோர்களின் பூர்வ வரலாற்றை ஆரம்பித்தான். "என் தாத்தா பழனி ஆசாரியால் செய்யப்பட்ட இந்தச் சிலைக்கு எழுபது எண்பது வயது ஆயிற்று. ஆனால், மனுஷர்களுக்குத்தான் இளமை, முதுமை, சாவு எல்லாம்; நிரந்தரமான இச் சிலைக்கு ஒன்றும் கிடையாது. பழனி ஆசாரி இந்தப் பிராந்தியத்திலேயே இருந்த கல் தச்சர்களில்—சிற்பிகளில்—பெயர் போனவர். முருக பக்தர். முருகனைத் தவிர வேறு எந்த தெய்வத்தினிடமும் நம்பிக்கை இல்லாத அதி தீவிர பக்தர். முருகனுடைய சிலையைத் தவிர வேறெதையும் அவர் உளி செதுக்கியதில்லை. அநேக ஊர்களில் அம்மன் விக்ரகம் சிவலிங்கம் முதலியவை செய்யச் சொல்லி வந்த அழைப்பை எல்லாம் அவர் நிராகரித்தார். இந்த ஊரில் இந்தச் சிலை இருக்கும் இடத்தில் ஒரு சிறிய கல், —கண், காது, மூக்கு ஒன்றும் அடையாளம் தெரியாமல் வெகு காலமாக இருந்து வந்தது. அதிலே எங்கும் வியாபித்து விளங்கும் அன்னை சக்தி இருப்பதாக ஜனங்கள் துதித்து வந்தார்கள். அதற்குக் கூரை வேய்ந்த சிறிய கோயில் ஒன்றை அமைத்தார்கள். அதற்குத் தலைமை வகித்த கிராமத்துப் பெரியதனக்காரன் பொன்னம்பலம் செலவு முதலியவைகளைக் கவனித்து வந்தான். நாளடைவில் அவன் அந்தக் கோவிலுக்குத் தர்மகர்த்தாவானான். அவனுக்கு ஒரு மகள் இருந்தாள். சேற்றில் செந்தாமரை முளைத்தமாதிரி நத்தை வயிற்றில் முத்துப் பிறந்தது போல் செங்கமலம் விளங்கினாள். அழகும் அறிவும், அன்பும், பக்தியும் அவளிடத்தில் இருந்தன. செங்கமலம் சிரித்தால் போதும், பேசினால் போதும், நிமிர்ந்து பார்த்தால் போதும் என்று இந்த ஊர் வாலிபர்கள் ஆசைப்பட்டார்கள். அவர்களில் பழனி ஆசாரியும் ஒருவன். அவள் சிரிப்பை மட்டும், பேச்சை மட்டும், பார்வையை மட்டும் அவன் அடைய ஆசைப்படவில்லை. அவளையே அடைந்துவிட ஆசைப்பட்டான்.

ஒரு வருஷம் ஆடி மாதத்தில் ஊரில் கட்சிச்சண்டை வலுத்தது. பொன்னம்பலம் பெரியதனக்காரனாக வாழ்வது சிலருக்குப் பிடிக்கவில்லை. அவன் வயலை ஆட்டையும், மாட்டையும் விட்டு மேய வைத்தார்கள். அவனுடைய தென்னந்தோப்பில் காய்களை சூறையாடினார்கள். கடைசியாக 'ஒரு நாள் காலையில் அவனும், செங்கமலமும் பயபக்தியுடன் பூஜித்து வந்த அம்மன் விக்ரகம்—அந்தக்கல்—மாயமாக மறைந்து விட்டது. செங்கமலம் கண்களில் நீர் பெருக நின்றுகொண்டிருந்தாள். பொன்னம்பலம் இடி விழுந்தவன் போல் உட்கார்ந்திருந்தான். கோவிலாக இருந்த இடம் வெறும் வெட்ட வெளிச்சமாயிற்று. செங்கமலத்தின் முகமும் களை இழந்து வாடியது.

அந்தக் காலத்திலிருந்து நாளது வரைக்கும் அந்த ஊரில் ஒரு வழக்கம் உண்டு. ஊரில் கல்யாணம் நிச்சயம் செய்வதற்கு முன் இந்த அம்மனிடம் பூ வைத்துப் பார்ப்பார்கள். அவள் உத்தரவு கொடுத்தால்தான் கல்யாணம் நிச்சயம் செய்வார்கள். இல்லாவிட்டால் இல்லை. இனிமேல்—அதாவது அம்மனைக் காணாமல் போனபிறகு ஊரில் இருக்கும் அத்தனை பெண்களும் கன்னிகைகளாக இருப்பது? அவர்கள் இருக்கிறார்களோ இல்லையோ, செங்கமலம் இருக்கவேண்டியதுதான் என்று பொன்னம்பலம் நிர்மாணித்தான். அம்மனைத் தேட ஒவ்வொரு ஊருக்கும் ஆள் சென்று வெறுங்கையுடன் திரும்பி வந்தார்கள். பொன்னம்பலமும் நிராசை அடைந்தான்.

● ●

பழனி ஆசாரி செங்கமலத்தை அடைந்துவிடவேண்டும் என்று ஆசைப்பட்டது போல் செங்கமலமும் பழனியை அடைந்துவிடவேண்டும் என்று ஆசைப்பட்டாள். ஆனால், அம்மனுடைய உத்தரவு இல்லாமல் பொன்னம்பலம் கல்யாணத்தை நடத்தமாட்டான். பழனியின் தீவிர வைராக்கியம் வேறு நம்பிக்கையைக் குலைத்தது. பொன்னுக்கும், பொருளுக்கும் அவன் ஆசைப்படமாட்டான். அவன் உளி முருகன் சிலையைத் தவிர வேறு எதையும் செதுக்கியதில்லை. ஆயினும், சின்னஞ் சிறு வயதிலிருந்து செங்கமலம் வழிபட்டு வந்த தேவி பழனியின் மனதை மாற்றமாட்டாளா? தனக்கென்று அவன் கையால் ஒரு சிலையை வடிக்க அவன் மனதை மாற்றிவிடுவாள் என்று செங்கமலம் நம்பினாள். பழைய விக்ரகம் இருந்த இடத்தில் ஒரு நாள் அதிகாலையில் சென்று பூவும், பழமும் வைத்துப் பூஜித்தாள். "அம்மா, தாயே! என் ஆசையை நிறைவேற்று" என்று வேண்டிக் கொண்டாள்.

அன்று பழனியின் மனமும் ஏக்கமடைந்திருந்தது. இப்படியே எத்தனை காலம் இருப்பது? காணாமல் போன அம்மன் வந்தால்தான் கல்யாணம் நடக்கும், நாமாகவே ஏன் ஒரு சிலை செய்துவிடக்கூடாது?" என்று அவன் மனம் தீவிரமாக யோசித்தது. பழனியும், செங்கமலமும் வழக்கம்போல் குளத்தங்கரை தோப்பில் சந்தித்தார்கள். "ஆமாம், உங்கப்பனைக் கேட்டாயா?" என்று பழனி செங்கமலத்தைக் கேட்டான்.

"என்னத்தைக் கேட்க?" என்று அவள் பதிலுக்குக் கேட்டாள். அவள் குரலில் கோபமும் சோகமும் சேர்ந்து ஒலித்தது.

"நல்ல பைத்தியக்கார மனுஷன்! ஒரு விக்ரகம் காணாமப் போச்சாம். அதுக்காகப் பெண்ணை கன்னியாகவே நிறுத்தியிருக்கானும்!" என்று கேலி செய்தான் பழனி.

"நீயும் பைத்தியம்தான்!" என்று முகத்தில் அடித்ததுபோல் கூறினாள் அவள்.

"ஏன்?" என்றான் பழனி.

"சாமி என்றால் எல்லாம் சாமிதான். நீதான் முருகனைத் தவிர வேறு எந்த சிலையையும் செய்வதில்லையே! அதென்ன அப்படி!" அவள் கண்களில் நீர் நிறைந்தது.

பழனி மனமாறுதல் அடைந்தான்.

"சரிதான்! அதுக்காக அழாதே. நான் அம்மன் சிலை செய்துடறேன். நீ அவகிட்டே உத்தரவு வாங்கு" என்று சிரித்துக்கொண்டே கூறினான்.

செங்கமலத்தின் முகத்தில் புன்முறுவல் படர்ந்தது.

● ● ●

பழனி செய்த சிலை அபாரமாக இருந்தது. அசப்பில் பார்த்தால் அது செங்கமலம் மாதிரியே இருந்தது என்று சொல்லிவிடலாம், பொன்னம்பலம் சிலையைப் பார்த்து வியந்தான். பழனியே மனமாறுதல் அடைந்து சிலை செய்வதென்றால் அது அம்மனின் சக்தியாகத்தான் இருக்கும். இதைப் போலவே செங்கமலத்தின் [illegible] என்று [illegible]

அன்று கும்பாபிஷேகம். [illegible] செங்கமலத்தைப் பழனிக்குக் [illegible] கல்யாணம் செய்யப் பூ [illegible] சகுனம் பார்க்கவும் ஏற்பாடாகியிருந்தது. காலையிலிருந்து [illegible] பயபக்தியுடன் உபவாசமிருந்து [illegible] அடைந்தாள். பழனியும் [illegible] நிற்குறி முகத்தில் [illegible] கோவிலை அடைந்தான். [illegible] அடிக்கடி செங்கமலத்தின் [illegible] சந்தித்த [illegible] ஆனால் அவன் அவளை எதிர்நோக்கிப் பார்க்கவில்லை. அவன் மனோ[illegible] பூர்த்தி அடையும் வேளையில் யாரையும் பார்க்க விரும்பவில்லை. அபிஷேகம், ஆராதனை ஆயிற்று. சிவப்பு புஷ்பம் ஒரு பொட்டலத்திலும், வெள்ளை புஷ்பம் ஒரு பொட்டலத்திலும் வைத்துக் கட்டி [illegible]கள். கண கணவென்று மணி ஒலித்தது. பூசாரி கற்பூரம் கொளுத்திக் காட்டிவிட்டுப் பயபக்தியுடன் ஒரு குழந்தையைவிட்டு ஒரு பொட்டலத்தை எடுக்கச் சொன்னான். செங்கமலம் ஆவலுடன் குழந்தையின் கையிலுள்ள பொட்டலத்தை நோக்கினாள். பொன்னம்பலம் அதை வாங்கிப் பிரித்தான். அவன் கைகள் நடுங்கின. "அம்மாடி! அவள் உத்தரவு கொடுக்கவில்லை!" என்று கத்தினான். பொட்டலத்திலிருந்து [illegible] வெள்ளை புஷ்பம் கீழே விழுந்தது. எல்லோரும் அயர்ந்து நின்றுவிட்டார்கள்.

செங்கமலம் கண்ணீர் வழிய அந்த இடத்தைவிட்டுப் போனாள். அதன் பிறகு செங்கமலத்துக்கு வேறு எங்கேயோ கல்யாணம் நடந்தது. என் தாத்தாவும் வேறு பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கொண்டார்.

நேற்றும், இன்று[illegible] அம்மன் [illegible]தான் இந்த ஊரில் கல்யாணம் நடக்கிறது அம்மா" என்று பழனி கதையை முடித்தான்.

"அவள் உத்தரவு கொடுக்காவிட்டால் எவ்வளவு உயர்வான இடமானாலும் விட்டுவிடுவீர்களா?" என்று கேட்டேன் நான்.

அதற்கு அங்கிருந்த கிழவர் ஒருவர்—பழனியின் தாத்தா காலத்து மனுஷர்—கூறினார்: "செங்கமலத்துக்கும் பழனிக்கும்தான் இவள் உத்தரவு கொடுக்கவில்லை அம்மா. அதன் பிறகு எனக்குத் தெரிந்த எல்லா கல்யாணங்களும் நடந்திருக்கிறது" என்றார்.

தெய்வ சித்தத்தை நம்மால் அறியும் திறன் உண்டா என்று நினைத்துக் கொண்டே நானும், என் சிநேகிதியும் ஹாஸ்டலை அடைந்தோம்.

# நங்கும் அழுகிறுள்

ஸந்நோஜா நரமமூர்த்தி

ரங்கம் நல்ல [illegible] போகும்போதெல்லாம் அந்தத் தெருவே வேடிக்கை பார்த்தது [illegible]. அவளால் இரண்டு வேளை கஞ்சியும் வயிறு நிறையச் சாப்பிடாமல், வாரம் ஒரு முறை எண்ணெய் தேய்த்துக் குளிக்காமல், பழம் என்று [illegible] காதால் கேட்டது கூடக் கண்ணால் பார்க்காமல் இவ்வளவு ஆரோக்கியமாக இருக்க முடிகிறது என்று அந்தத் தெருக்காரர்களுக்கு வியப்பாக இருந்தது.

[illegible] குடத்தை (சித்தனின் [illegible] மார்வாடிக் கடையில் அடகில் இருக்கிறது) இடுப்பில் வைத்துக்கொண்டு [illegible] ஒரு கையை வீசியபடி அவள் நடந்து போவாள். சில நாட்களில் மாலை நேரமாக இருந்தால் [illegible], முகம் கழுவி, பொட்டு வைத்து, சாயம் போன புடவையைச் சற்றுக் கீழே இறக்கிக் கட்டி ஒய்யாரமாக நடந்து போவாள்.

அம்மன் கோவில் மதிற்சுவர் ஓரம் வளைந்து இருந்தது. பூசாரி அவ்வப்போது நிர்மால்ய புஷ்பத்தை வெளி வாசற்படியில் வைத்திருப்பார். ரங்கம் ஆவலோடு, பக்தியோடு பூவை எடுத்துச் சூடிக்கொள்வதுண்டு. இதுவும் சில நாட்களுக்குத்தான். வேறு பெண்கள் யாராவது இருந்தால் இவள் போட்டிக்குப் போவதில்லை. [illegible] இட்டுக்கொண்டு வந்து விடுவாள். [illegible]

''[illegible] ரங்கம்! [illegible] போய்வரே'' [illegible] என்று மாமி கேட்டதும், ''ஓ! அதுக்கென்ன மாமி வரேனே. அப்படியே ராத்திரி சமைச்சும் வச்சுடட்டா?'' என்று இன்னொரு வேலையையும் இழுத்துப் போட்டுக்கொள்வாள். வக்கீலாத்து மாமி கொடுக்கிறதாலேயோ, புளிச்ச மோர், புழுத்துப்போன ரவையெல்லாம் அள்ளிக்கொண்டு வந்து அவள் பாங்கோடு உள்ளே எடுத்து வைப்பதை மற்றக் குடித்தனக்காரர்களும் கவனிப்பார்கள்.

இவள் புருஷன் ஒரு லாரி டிரைவர். நியாயமான சரக்குகளோடு, அநியாயமான சரக்குகளும் ஏற்றிக்கொண்டு போய் போலீஸ் அது இது என்று உள்ளம் காய்த்துப்போனவன். ஊரிலே வாரத்தில் ஒரு நாள் தங்கினால் அபூர்வம். இவளை மனைவியாக நினைத்தானு, இல்லை வேலைக்காரியாக நினைத்தானு? அதுவுமில்லை அவன் யாரோ தான் யாரோ என்று நினைத்தானு என்பது ரங்கத்துக்கு இன்னும் புரியவில்லை. அவன் வீட்டில் இருக்கும் அன்று இரண்டு வேளை சமையல் உண்டு. கண்டதைத் தின்று கண்டபடி இருப்பவனுக்கு ரங்கத்தின் பதவிசான போக்கும் வேலைகளும் புரியவில்லை. அவன் வெளியூர்களில் சந்தித்திருக்கிற பெண்களைப் போல ரங்கம் இல்லை. இவன் சகவான சரவணன் மனைவி இவளைக் கண்டால் ''வாங்க அண்ணிச்சி! என்று 'சி'யை அடித்துப் போட்டுக் கூப்பிட்டு, குலுங்கிச் சிரித்து வரவேற்கிற பாங்கு ரங்கத்துக்குச் சொல்லிக் கொடுத்தால் கூடப் புரிய வைக்க முடியாது. சரவணன் இவனைத்தேடி வந்தால் 'அவர் இல்லையே!' என்பதோடு சரி.

''என்னடா உம் பொஞ்சாதி ஸ்டார் மாதிரி இருக்கா, ஆனுக்க நயமில்லே'' என்பான் அவன்.

நயத்துக்கு என்ன விளக்கம்' என்பது அவன் பொஞ்சாதியைப் பார்த்த பிறகு இவனுக்குப் புரிந்தது. இந்தக் காலத்தில் பெண்கள் நிறையச் சிரிக்கிறார்கள். சிரிக்க வேண்டும். ரங்கம் ஏன் அதிகமாகச் சிரிப்பதில்லை? வேண்டுமென்றே மூஞ்சியை உம்மென்று வைச்சிண்டு, அழுது வடிஞ்சிண்டு இருப்பதாக அவன் நினைத்தான்.

அந்தத் தெருவில் இருக்கிற ராகவன், மளிகைக்கடைக்கார சீனுவாசனு, மருந்து கடைக்கார ராமானுஜம், பழக்காரநாயுடு, லாரி டிரைவர் சரவணன் எல்லோருக்குமே ரங்கத்தின் பேரில் ஒரு கண்.

ஒவ்வொருத்தரும் அவளைப் பற்றி ஒவ்வொரு விதமாகக் கற்பனை பண்ணி வைத்திருந்தார்கள். ராகவனைப் பார்த்து அவள் சிரித்தால் அவனுக்குக் குறைந்தபட்சம் டெரிகாட்டன் புடவை கிடைக்க வழி இருந்தது. மளிகைக்கடை சீனு வாசனு மாசாந்திர மளிகையைப் பையனிடம் கொடுத்து இரண்டு மூன்று தரம் அவள் வீட்டுக்கே அனுப்பி வைத்து வாங்கிக் கட்டிக் கொண்டான். பழக்கார நாயுடு காலையிலும், மாலையிலும் "என்ன ரங்கம்மா! பழம் (அவர் மதுரைக்காரர், பழம் என்றுசொல்லமாட்டார்) சாப்பிடறியா? நல்ல ரஸ்தாளிப் பழம். தளதளன்னு..'' என்று இழுத்துப் பார்ப்பார்.

ரங்கம் கையை வீசி தம்தம் மென்று நடந்து போய்க்கொண்டேயிருப்பாள்.

மிட்டாய்க்கடை கோபு எட்ட இருந்தே அவளைப் பார்த்து ரசிப்பான். அவன் கடை பூராவும் நட்சத்திரங்களின் படங்களை மாட்டி வைத்து ரசிப்பது போல் இவளையும் ரசித்துக்கொண்டிருப்பது அவன் பொழுது போக்கு. எத்தனையோ நாட்கள் கோதுமை அல்வா கிளறும்போது சரக்கு மாஸ்டரிடம் 'ஸ்பெஷல் நெய்' ஊற்றி தயார் செய்த நெய் அல்வாவைத் தனியாகப் பொட்டணம் கட்டி வைக்கச் சொல்லுவான். கோபு கல்யாணமாகாதவன். அவன் யாருக்காக அல்வாவைப் பொட்டணம் கட்டச் சொல்கிறான்? சரக்கு மாஸ்டர் யோசித்துப் பார்த்தார். ரங்கம் எப்போதாவது ராத்திரி வேளையில் தொட்டுக் கொள்ள பக்கோடா வாங்க வருவாள். நாலணுவுக்குக் கேட்டால், எட்டணு சரக்கை மடித்துக் கொடுத்து விட்டு அவள் தரும் நாலணுவைப் பெற்றுக் கொள்ளாமல் அவளையே பார்த்துக்கொண்டு இளிப்பான்.

அவள் ஒருதடவை நாலணுவை 'ணங்' கென்று அவன்கடைவெள்ளி கலப் பேலாவில் வீசிப் போட்டு விட்டு 'முகரையைப் பார்' என்ற படி போவதைச் சரக்கு மாஸ்டர் கவனித்து விட்டார். அதற்காக அவர் வழியில் பார்த்த போது 'ரங்கம்மா! அந்தக் காலிப்பயக் கடைக்கு வராதேம்மா...'' என்று எச்சரித்து வைத்தார்.

அவள் சிரித்தபடி கூறினாள்: ''வந்தாக்க என்ன மாமா? யமன் அறியாமெ உசிர் போயிடுமா?, அவன் இளிப்பு என்னை என்ன பண்ணிடும்? சொல்லுங்கோ..... நீங்க போடற பக்கோடா மாதிரி வாசனை வேறே எந்தக் கடையிலும் கிடைக்கிறதில்லே...அதான் வரேன் --'' என்று.

சில சமயங்களில் அவள் கணவன் எந்த ஊரில் இருக்கிறான், எப்போது வருவான் என்பது அவளுக்குத் தெரிவதில்லை. இன்று [illegible] காலைவகவாய் என்று சமைத்து வைத்துக் கொண்டு ஜன்னல் ஓரம் கிடக்கும் கயிற்றுக் கட்டிலில் அமர்ந்து படித்தபடி எதையாவது படித்துக் கொண்டிருப்பாள். [illegible] வானம் இருண்டு விட்ட மாதிரி பளிச்சென்று கிடக்கும். [illegible] நட்சத்திரங்கள் மினுக்கும். 'இப்படி அந்த ஆகாசத்தைப் போல [illegible] என்று அவள் [illegible] ஒரே மாதிரியான [illegible] [illegible] இருப்பா-

தற்செயலாக எதிர் [illegible] ரங்கம் திரும்பினாள் [illegible].

ராகவன் அவளை [illegible] கொண்டு, அவன் வீட்டு [illegible] கைப்பிடிச்சுவரில் [illegible] படி புகை பிடித்துக் கொண்டிருந்தான். இந்த அழகான [illegible] வேளையிலே புகைப் பிடிப்பதை விட, குடிக்கிறதை விட [illegible] அழகான பாட்டுக்களைப் பாடலாம். தொலைவில் தெரியும் கோபுரத்தை அதன் [illegible] ரசிக்கலாம்.

ஆனால் பாவம் [illegible]. இந்த ரசனை வெள்ளத்தில் [illegible] புகைப்பது, குடிப்பது. அவர் [illegible] பார்ப்பது. இவையெல்லாம் கண மாத்திரம் மனத்தை சலனப்படுத்தவும், சபலப் படுத்தவும், அடிமைப் படுத்தவும் முடியலாம். ஆனால் பிறகு நல்ல பாட்டைப் போல கோபுரத்தைப் போல அமைதிப் படுத்த முடியாது...''



ரங்கம் படித்துக் கொண்டிருந்த புத்தகத்தில் ஒரு கதையில் எழுத்தாளர் ஒருவர் எழுதியிருந்ததைத், திரும்ப திரும்பப் படித்தாள்.

பாதி ராத்திரி வரையில் ரங்கம் தன் கணவனின் வருகைக்காக காத்திருந்தாள். ஜன்னல் கதவை மூடிவிட்டால், அவன் வருவது தெரியாது. அவன் ஒரே மாதிரியானவன் அல்ல. பல நாட்கள்குடித்தும் விட்டு வருவான். நிலைகொள்ளாமல் அவன் போதையுடன் தள்ளாடிக் கொண்டு வரும்போது ரங்கம் ஓடிப் போய் தாங்கிப் பிடித்துக் கொள்வாள்.

அதற்காகவேஅவள் ராகவனின் கண்களுக்கு விருந்தாக அந்த இரவில் ஜன்னல் கதவுகளை மூடாமல் காத்திருந்தாள். இரவுக் கென்றே சில ஓசைகள் உண்டு. சுவர்க்கோழியின் சத்தம் விடாமல் காதைத் துளைக்க, எங்கோ சாலையில். வேகமாகப் பாய்ந்து வரும் லாரிகளின்அலறல் அவளைத் திடுக்கிட்டு விழிக்க வைத்தது.

இருட்டில் ஜன்னல் ஓரம் ராகவன் நின்றிருந்தான்.

அந்த இருட்டில் மினுக் மினுக்கென்று எரியும் சிகரெட் ஒளியுடன் வாயிலிருந்து, மூக்கிலிருந்து புகை குப் குப்பென்றுவெளியே வந்து கொண்டிருந்தது.

ரங்கம் படுக்கையில் எழுந்து உட்கார்ந்து கொண்டாள். மாடிக் கைப்பிடிச் சுவர் மேல் இருந்து கொண்டு தன்னை ரசித்தவன் ஜன்னல் வரைக்கும் வந்து விட்டானே என்று அவள் கவலைப் படவில்லை. அறை விளக்கைப் போட்டுவிட்டு, அவள் ஜன்னல் ஓரம் வந்து நின்றாள்.

'இந்தப் பெண்தான் எவ்வளவு அழகு?'' என்று நினைத்தான் ராகவன்.

'சினிமாவிலே சேர்ந்தால் லட்சக் கணக்கில் வாரிக் கொட்டுவாள். மேக்கப்பே போட வேண்டாம்.'

ரங்கம் பேசாமல் நிற்பதை அவனால் ரசிக்க முடியவில்லை.

''சாப்பிட்டியா?'' என்றுஏதோ கேட்டு வைத்தான் அவன்.

அவள் அசையவில்லை.

'இப்படி உம் புருஷனுக்காகக் காத்துக் கிடக்கிறியே. அதை நெனச்சா பாவமா இருக்கு--'

ரங்கம் அவனை வியப்போடு பார்த்தாள். 'புருஷனுக்காக மனைவி காத்துக் கிடப்பது பாவமாம்... உலகம் எப்படி தலைகீழா மாறியிருக்கு. பின்னே ஒரு குலப் பெண் யாருக்காகக் காத்திருப்பாளாம்-' எண்ணங்கள் மனதில் ஓட அவள் குறுநகை புரிந்தாள். அந்த நேரத்தில் அவள் இரைந்து நாலு வார்த்தைகள் பேச முடியாது. பேசி விட்டால், பழக்காரா ரா மளிகைக் கடை சீனுவாசனு, மிட்டாய்க் கடை கோபு, எல்லோருக்குமே இளப்பமாகி விடும்.

ராகவனும் ரங்கமும் ஜன்னல் ஓரத்திலேன்று ஏதாவது பேச ஆரம்பித்து விடுவார்கள்.

தெருக்கோடியில் லாரி திரும்புவது கேட்டது. ராகவன் இருட்டோடு இருட்டாகப் பதுங்கியபடி அவன் வீட்டை நோக்கிபோனுன். ரங்கம் இப்போது குறுநகை புரியாமல் பற்கள் தெரிய முறுவலித்தாள்.

'கோழைப் பயல்' என்று சிரித்தபடி அவள் வெளியே வந்தாள். வழக்கம்போல அவள் கணவன் குடித்திருந்தான். ஆனால் நல்ல நிதானத்துடன் இருந்தான். ரங்கம் எங்கே அவன் சாக்கடையில் குடிபோதையில் விழுந்து விடுவானே என்று தாங்கிப் பிடிக்க அருகில் சென்றாள்.

அவன் வேண்டாம் என்கிற பாவனையாகக் கையை அசைத்தபடி அவளுடன் உள்ளே வந்தான்.

அவள் சட்டென்று சாப்பிடும் தாலத்தை எடுத்து வந்தாள்.

''சாப்பாடு வேண்டாம் ரங்கம்.... நான் கொலைகாரப்பாவி'' என்று சொல்லிவிட்டு அவன் அழ ஆரம்பித்தான்.

''என்னது?'' என்று திடுக்கிட்டாள் அவள்.

''ஆமாம்... ரங்கம்! வாய்க்காங்கரைப் பக்கமா லாரியைத் திருப்பறச்சே ஒருத்தி-யாருயம் பிடிச்சவ ரோட்டோரம் குந்தியிருந்தவ அந்தப் பக்கம் தாண்டப் போகச்சே.... அவமேலே லாரியை ஏத்திப்பிட்டேன்....''

''ஆ'' ''ஆ்..... அவ்.....''

''இந்நேரம் பிராணன் போயிருக்கும்.... அந்தப் பக்கம் யாருமே இல்லை. இவ....பிச்சைக்காரியோ, விவகாரம் பண்ணுகிறவளோ எனக்குச் சனியனு வந்து சேர்ந்தா-''

''போலீஸ் வருமே...'' என்று பயந்தாள் ரங்கம்.

''ஆமாம்.. வரும்... எப்படியும் நான் இந்தக் குற்றத்தை மறைக்க விரும்பல்லே.... இப்பவே போய் போலீஸிலே ஒப்புக் கறதுதான் நல்லது....''

ரங்கம் தேம்பித் தேம்பி அழுதாள்.

ரங்கம் தாலத்தில் சாதத்தைப் பிசைந்து அவன் வாயில் ஊட்டியபடி அழுதாள். அவன் பரந்த மார்பில் முகம்புதைத்தும் விம்மினள். அவனைஇறுகஆரத் தழுவிக் கொண்டு அழுதாள்.

ரங்கத்தின் புருஷன் உள்ளே வந்தவுடன் அந்த அறையின் சன்னல்கள் அறைந்து மூடப்படாமல் இன்று திறந்தே இருந்தன. இவைகளையெல்லாம் ராகவன் பார்த்துக்கொண்டே புகைத்துக் கொண்டிருந்தான். எதற்காக ரங்கம் அழுகிறாள்? அவள் அழுது அவன் பார்த்ததில்லை.

சற்றைக்கெல்லாம் ரங்கத்தின் புருஷன் வாசற் கதவைத்திறந்து கொண்டு வெளியே வந்து தெருவில் இறங்கி நடந்தான். ரங்கம் வெளியே நின்றவள், அழுதபடி நின்றிருந்தாள். அடுத்த நிமிஷம் அவள் உள்ளே சென்று ஜன்னல் கதவுகளை அறைந்து சாத்தினாள்.

அதிஅதிகாலையில் ரங்கம் தூங்கும்போதே மூட்டை முடிச்சுகளோடு ஊருக்கு வெளியே இருக்கும் ரயிலடியை நோக்கிப்போய்க் கொண்டிருந்தாள்.

பொழுது புலர்ந்ததும் ரங்கம் நல்ல தண்ணீர் குளத்துக்குப் போவதை எதிர்பார்த்து மருந்துக்கடை ராமானுஜம், பழக் கடை நாயுடு, எதிர்வீட்டு ராகவன், மளிகைக்கடை சீனிவாசது மிட்டாய்க்கடை கோபு எல்லோருமே காத்திருந்தார்கள்.

ஒரு பெண்ணின் மானத்தை, உணர்ச்சிகளை, புனிதத்தைக் கொலை பண்ணும் இவ்வளவு பேர்களிடமிருந்து தப்பித்துக் கொள்ளும் நோக்கத்துடன் ரங்கம் தன் பிறந்த ஊருக்கு ரயில் ஏறிப் போய்க்கொண்டிருந்தாள்.

# தேகப் பயிற்சி - யோகாசனங்கள்

—: டாக்டர் வி. நாராயணசாமி :—

தேகப் பயிற்சிக்காக சில ஆசனங்களை [illegible] 15-20 நிமிஷங்கள் பழகினால் போதுமானதென்று கூறப்பட்டது. அவை யாவை என்ன என்பதில் அபிப்பிராய பேதமிருக்கலாம். ஆனால் [illegible] பழகி பலனடைந்த [illegible] இங்கே கூறுகிறேன்.

1. [illegible]:

இவ்வாசனம் மிக எளிதாக எல்லோராலும் செய்யக்கூடியது. [illegible] வேண்டும். இந்நிலையில் ஐந்து நிமிஷங்கள் இருந்தால் போதுமானது. [illegible] இவ்வாசனத்தைப் பழகினால் முதுகெலும்பு நேராக நிமிர்ந்து விடுகிறது. முதுகெலும்பை இயக்கும் சிறுசிறு தசைநார்கள் முறுக்கேறி வலிவடைகின்றன. கால்களில் இருக்கும் தசைகளும் அவைகளை எலும்புகளுடன் பிணைக்கும் தசை நார்களும் வலிவடைவது எளிதில் தெரியக்கூடியவைகளாகவும் ஆகின்றன. பின்னால் சொல்லப் போகிற சில ஆசனங்களுக்கும் இந்த ஆசனத்தின் பயிற்சி அதிக முக்கியமானது.

2. சிரசாசனம்:

இவ்வாசனத்தை முதல் முதல் பழகுகிறவர்கள் ஐம்பது வயதுக்குள்ளானவர்களாயிருக்க வேண்டும். சிறு வயதிலிருந்து பழகுகிறவர்கள் எந்த வயதிலும் இதைப் பழகலாம். ஒரு சிறிய தலையணை மேல் தலையை வைத்துக்கொண்டு கைகளை தரைக்கு ஆதாரமாக வைத்துக்கொண்டு கால்களை மெதுவாக உயரத் தூக்க வேண்டும். இந்நிலையில் ஐந்து நிமிஷங்கள் தங்கி பிறகு கால்களைக் கீழே கொண்டு வர வேண்டும். இதை 2, 3 தடவைகள் செய்யலாம். கால்கள் உயரே இருக்கும்போது சுவாசம் சாதாரணமாக நன்கு இழுத்து தடையின்றி மூச்சு விட வேண்டும். ஆரம்பிக்கும்போது ஒரு சுவற்றுக்குச் சமீபத்தில் தலையை வைத்துக்கொண்டு சிரசாசனம் செய்தால் கால்கள் பின்னால் போகாமலிருக்கும். பழகப் பழக எந்த இடத்திலும் இதைச் செய்யலாம்.

இந்த ஆசனத்தைச் செய்வதால், தலையிலிருக்கும் மூளைக்கு அதிக ரத்த ஓட்டம் உண்டாகி மூளை நன்றாக வேலை செய்யும். மேலும் கண், காது, மூக்கு முதலிய இந்திரியங்களுக்கு அதிக ரத்தம் வருவதால் அவைகளின் நரம்புகளும், மாம்ச பேசிகளும் வலிவடைகின்றன. நுரையீரலும் நன்றாக சுத்தமடைகிறது. இவ்வாசனங்களைப் பழகும்போது யாராவது இவைகளில் தேர்ச்சி அடைந்தவரை வைத்துக் கொண்டு செய்வது நலம். ஒன்றிரண்டு நாட்களுக்குப் பிறகு தாமே செய்துகொள்ளலாம்.

3. சர்வாங்காசனம்:

ஒரு விரிப்பில் மல்லாந்து படுத்துக்கொள்ள வேண்டும். பிறகு கால்களைச் சேர்த்தாற்போல் உயரே தூக்க வேண்டும். அதன் பிறகு கால்களையும் இடுப்பையும் உயரே தூக்க வேண்டும். அந்தச் சமயத்தில் கைகளால் இடுப்பைப் பிடித்துக் கொள்ள வேண்டும். தேகத்தின் பளுவெல்லாம் தோள் பட்டைகளிலும், கழுத்திலும் விழுகிறது. முடிவு

(6-ம் பக்கம் பார்க்க)

# அழைப்பு

[ஸரோஜா ராமமூர்த்தி]

"ஜயம், ஜயம்" என்று அடுக்களையில் வேலையாக இருக்கும் தன் மனைவியைக் கூப்பிட்டான் சீதாராமன். இங்கே வந்து பார், யார் வந்திருக்கிறார்கள் என்று" என்றும் கூறினான்.

அடுப்பில் வைத்திருந்த பாலை இறக்கி வைத்துவிட்டு நிதானமாக ஜயம் கூடத்துக்கு வந்தாள். அங்கே அவனுடைய மாமியார் சீதாலக்ஷ்மியும், மாமனார் நாகசாமியும் மைத்துனன் தியாகுவும் உட்கார்ந்திருந்தார்கள். ஜயம் ஒரு கணம் திகைத்து நின்றாள். மறு விநாடி தன்னை சமாளித்துக்கொண்டு எல்லோரையும் "வாருங்கள் அம்மா" என்றும் கூறினாள்.

"என்ன மதனி ஒரேயடியாக இப்படி மாறிவிட்டீர்கள்?" என்று கேட்டான் மைத்துனன் தியாகு.

"மாறிவிட்டேனா? அப்படி ஒன்றும் தெரியவில்லையே" என்று சொல்லிவிட்டு, "எல்லோரும் வாருங்கள். காப்பி சாப்பிடலாம்" என்று சொல்லிக்கொண்டே ஜயலக்ஷ்மி காபி தயாரிப்பதற்காகச் சமையலறைக்குள் போய்விட்[illegible]

வந்திருக்கிறது. பெண்ணின் தகப்பனார் இந்த ஊரில்தான் இருக்கிறார். பெண்ணைப் பார்க்கத்தான் வந்திருக்கிறோம். மத்தியானமே போய்ப் பார்த்துவிட வேண்டியது. நாம் புறப்படுவதற்குமுன்பே பெண்ணின் தகப்பனார் வந்தாலும் வந்துவிடுவார்" என்று தாம் வந்திருக்கும் விஷயத்தைப் பற்றி நாகசாமி சீதாராமனிடம் பிரஸ்தாபித்தார்.

"ரொம்பப் பெரிய இடமோ?"

"ஆமாம். பத்தாயிரத்துக்குச் செய்கிறேன் என்று சொல்லுகிறார்கள்" என்றாள் இதுவரையில் பேசாதிருந்த சீதாலக்ஷ்மி. அப்பொழுது அங்கே ஏதோ அலுவலாக வந்த ஜயலக்ஷ்மியை அர்த்த புஷ்டியுடன் பார்த்தாள். ஜயத்தின் முகத்தில் திடீரென்று வாட்டம் ஏற்பட்டது. ஆனால், வெளியில் காண்பித்துக் கொள்ளாமல் உள்ளே போய்விட்டாள்.

அதற்குப் பிறகு மாமியார் அடிக்கடி வெள்ளிப் பாத்திரங்களைப்பற்றியும் சீர் வகையறாக்களைப்பற்றியும் பேசுவது ஜயத்தின் காதுகளில் விழவில்லை. சீதாலக்ஷ்மி அகலமான ஜரிகைக் கரை போட்ட புடவையை உடுத்திக்கொண்டாள். அவர்கள் எதிர்பார்த்த மாதிரி பெண்ணின் தகப்பனாரே இவர்களை நேரில் அழைப்பதற்கு வந்துவிட்டார்.

"இதோ கிளம்பிவிட்டோம்" என்[illegible] உள்ளேயிருந்து கூறினாள் சீதாலக்[illegible]

"மதனி வர[illegible] அம்மா?" என்று சிரத்தையு[illegible] கேட்டான் தியாகராஜன்.

"அதென்னவோ அப்பா" என்[illegible] சிரத்தை இல்லாமல் பதில் அளித்தாள் சீதாலக்ஷ்மி.

"நான்கு நாட்களாகக் குழந்தைக்கு உடம்பு சரியில்லை. எப்படி வருகிறது?" என்று கூறினாள் ஜயலக்ஷ்மி. காலையிலிருந்து வீட்டுக்கு வந்தவர்கள் அவளை வாய்ப் பேச்சுக்காவது வா என்று அழைக்கவில்லை. தியாகராஜன் சிறிது தயங்கினான். இதற்குள் சம்பந்தி வீட்டார் அவசரப்படவே, எல்லோரும் காரில் ஏறிக்கொண்டார்கள்.

ஜயம் வாயிற்படிவரை வந்து எல்லோரையும் வழி அனுப்பினாள்.

2

எதிரில் வீடு ஒன்று புதிதாகக் கட்டிக்கொண்டிருந்தார்கள். அதன் வாயிலில் தச்சன் உட்கார்ந்து மரத்தை வாளால் அறுத்துக்கொண்டிருந்தான். 'கொர், கொர்' என்ற அந்தச் சத்தம் ஜெயத்தின் மனதை வேதனையில் ஆழ்த்தியது. அவள் மனதையும் யாரோ வாள்கொண்டு அறுப்பதுபோல் இருந்தது.

ஜயம் நிலைப்படியில் சாய்ந்துகொண்டு கார் சென்ற திசையைக் கவனித்தாள். பத்து வருஷங்களுக்கு முன்பு ஒருநாள் காலை ஜயம் கிணற்றிலிருந்து நல்ல ஜலம் எடுத்துக்கொண்டு சாலை வழியே [illegible]த்துகொண்டிருந்தாள். அவள் [illegible] ஒரு வாலிபன் வந்து [illegible]கொண்டிருந்தான். இவள் அருகில் வந்ததும், "நாகசாமியின் வீடு அங்கே இரு[illegible] [illegible]" என்று கேட்டான். "மேலண்டைத் தெருவில் இ[illegible]கிறது" என்று கூறிவிட்டு நகர்ந்தான் ஜயம்.

அன்று மாலை ஜயத்தைப் பெண் பார்ப்பதற்காக யாரோ வந்திருந்தார்கள். அவள் கூடத்துக்கு வந்த போது காலையில் சாலையில் பார்த்த வாலிபன் உட்கார்ந்திருப்பதைக் கவனித்தாள். சீதாராமன் புன்னகையுடன் ஜயத்தைப் பார்த்தான். ஜயம்தான் அவனை நிமிர்ந்து பார்க்கவும் தைரியம் இல்லாமல் தலையைக் குனிந்துகொண்டிருந்தாள். ஜயத்தின் தகப்பனார் நக்ஷத்திரம் [illegible] வருவாய் சொல்பம். குடும்பமோ பெரிது. ஆனால், சீதாராமனின் மனதுக்குச் சீர் வகையறாக்கள், வரதக்ஷிணை முதலியவை அர்த்தமற்ற பேரம் என்றே தோன்றியது. அவன் மனதில் ஜயலக்ஷ்மி விலைமதிக்கமுடியாத பொருளாகப் பதிந்துவிட்டாள். நாகசாமிக்கும், சீதாலக்ஷ்மிக்கும் ஜயத்தை மிகவும் பிடித்திருந்தது. சம்பந்தி வீட்டார் கொடுப்பதும், பெண்ணுக்குச் செய்வதும் அவர்கள் இஷ்டம் என்று இருந்துவிட்டார்கள். ஜயத்தின் கல்யாணத்திற்குப் பிறகு நாகசாமிக்குத் திடீரென்று அதிர்ஷ்டம் அடித்தது. லக்ஷ்மி கடாக்ஷம் அவர்கள் வீட்டில் நிறைந்தது.

[illegible]வும் செய்தாள்.

செல்வம் மனிதர்களைச் சீர் திருத்துவதுபோலவே, மாற்றவும் செய்கிறது என்பதை சீதாலக்ஷ்மி காண்பித்துவிட்டாள். இன்னும் இரண்டொரு வருஷங்கள் பொறுத்திருந்தால் சீதாராமனுக்குச் சீரும், சிறப்புமாக வேறு இடத்தில் பெண் கிடைத்திருப்பாளே என்று வருந்தினாள். அந்த எண்ணம் பேச்சிலும், செய்கையிலும் மாறி மாறித் தோன்றிக்கொண்டே இருந்தது.

ஒருதடவை தியாகராஜனுக்குப் [illegible]




பெண் கொடுப்பதற்காக யாரோ வந்திருந்தார்கள்.

"உங்கள் முதல் நாட்டுப்பெண்ணுக்குச் செய்திருப்பதுபோலவே செய்துவிடுகிறோம்" என்று சொன்னார்கள்.

"அப்படி ஒன்றும் அந்த இடம் உயர்ந்ததல்லை. அவளுடைய பிராப்தம் அவ்வளவுதான்" என்று வருத்தத்தோடு கூறினாள் சீதாலக்ஷ்மி.

ஜயலக்ஷ்மிக்குத் தன்னுடைய மைத்துனனுக்கு பெரிய இடத்திலிருந்து பெண் வருவது சந்தோஷமாகத்தான் இருந்தது. இருந்தாலும் அதற்காகத் தன்னைத் தன் மாமியார் எடுத்ததற்கெல்லாம் குறைவுபடுத்திப் பேசுவதுதான் பிடிக்கவில்லை.

ஜயலக்ஷ்மி நிலைப்படியில் சாய்ந்துகொண்டு நேரம் போவது தெரியாமல் நின்றுகொண்டிருந்தாள். [illegible] [illegible] வைத்த மாதிரி இன்று அவளை அவர்களில் யாரும் 'வா' என்றுகூட அழைக்காமல் போனதுதான் அவள் மனதை வாள்கொண்டு அ[illegible]துபோ[illegible] இருந்தது.

3

பெண் பார்த்துவிட்டு எல்லோரும் வந்துவிட்டார்கள். பெண் அ[illegible]காகவும், படித்தவளாகவும் இருப்[illegible]தாக எல்லோரும் பேசிக்கொண்டார்கள். "நகை மாத்திரம் நால[illegible]யிரத்துக்குமேல் இருக்கும். நா[illegible] ஒன்றுமே வாய்திறந்து கேட்[illegible] வேண்டாம். அவர்களே செய்துவிடுவார்கள்" என்று பெருமைப்பட்டுக் கொண்டார்கள் அவர்கள்.

"எல்லா விஷயங்களும் திருப்திகரமாகத்தான் இருக்கின்றன. ஆனால் கல்யாணம் மட்டும் பெண்ணின் பாட்டி இருக்கும் ஊரில் நடத்தப் போவதாகச் சொல்லுகிறார்களே" என்று கேட்டான் தியாகராஜன்.

"நடத்திவிட்டுப் போகட்டுமே. நமக்கு என்ன அதைப்பற்றி?" என்று கேட்[illegible] [illegible].

"வருகிறவர்களுக்குச் சௌகரியு[illegible] [illegible] இருக்க வேண்டாமா? குழந்தைகுட்டிகளை இழுத்துக்கொண்டு

(4-ம் பக்கம் பார்க்க)

# அழைப்பு...

(முன்பக்கத் தொடர்ச்சி)

இந்தக் காலத்தில் ரயில் பிரயாணம் என்றால் சாமானியமாகவா இருக்கிறது, அம்மா?"

"சௌகர்யப்பட்டவர்கள் வரட்டும். இல்லாதவர்கள் இல்லை" என்று அழுத்தந் திருத்தமாகப் பதிலளித்தாள் சீதாலக்ஷ்மி.

அதற்கு மேல் வேறு பேச்சு எதுவுமில்லாமல் அவர்கள் ஊருக்குப் புறப்பட்டார்கள்.

"நாலு நாள் லீவு எடுத்துக் கொண்டு வந்து சேரப்பா சீதாராமா" என்று நாகசாமி பிள்ளையிடம் கூறினார். மற்றவர்கள் யாரும் ஜயலக்ஷ்மியைக் கல்யாணத்துக்கு அழைக்கவில்லை. அவர்கள் ஊருக்குப் போனபிறகு, சீதாராமன் ஜயலக்ஷ்மியைக் கேட்டான். "ஜயம் நீயும் கல்யாணத்துக்கு வருகிறாய் அல்லவா?" என்று கேட்டான்.

"நானா?" என்று ஆச்சர்யத்துடன் டங்களையும் ஒதுக்கி வைத்து விட்டுக் கிளம்பி இருப்பாள்.

கல்யாணத்துக்கு முதல் தினம் காலை ஜயம் திடீரென்று தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்டாள். சற்றுமுன் நித்திரையில் தியாகு வருத்தம் கலந்த குரலில், "எல்லோரும் என் கல்யாணத்துக்கு வந்திருக்கிறார்களே. நீங்கள் மட்டும் வரவில்லையே மதனி?" என்று கேட்பதுபோல் இருந்தது அவளுக்கு.

ஆமாம், குடும்பம் என்று இருந்தால் குற்றம் குறைகள் இருந்தே தீரும். தான் கல்யாணத்துக்குப் போகாமல் இருப்பது சரியென்று தோன்றவில்லை அவளுக்கு. அவசரமாக எழுந்து பிரயாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தாள் ஜயம். ரயிலில் ஏறி உட்கார்ந்த பிறகுதான் அவள் மனம் நிம்மதி அடைந்தது.

4

கல்யாண வீட்டில் ஒரே அமர்க்களமாக இருந்தது. வருகிறவர்கள் எல்லோரும், "ஜயம் வரவில்லையா?" என்று கேட்டார்கள்.

# ஓய்வு

"சரோஜா ராமமூர்த்தி"

ஐப்பசி மாதத்துக் கனத்த இருள், அடை மழையெல்லாம் அந்தக் காலத்தில், இப்போது அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை. வானம் தெளிவாகவே இருந்தது. அவ்வப்போது கருத்த மேகங்கள் கர்ஜனை புரிந்து கொண்டு வான வீதியில் உலா வரும். சில சமயங்களில் சடபடவென்று மழையும் பெய்யுமல்லவோ. ஓதுவார் தம் வீட்டுக்குள்ளிருந்து வெளியே எட்டிப் பார்த்தார். மேக மூட்டமில்லை. வானமெங்கும் எண்ணற்ற வெண்புள்ளிகளாகப் பொட்டுகள் தெரிந்தன. மணி நான்கிருக்கும். குடலையும், தாட்டுக் கம்புமாக அவர் ஆற்றங்கரையை நோக்கிப் புறப்பட்டார். அன்று ஐப்பசி நாலாம் தேதி. அந்த நாளில் வரப்போகிற தீபாவளிக்காக மூட்டம்போட்டு மழை சக்கையாகப் பிழிந்து தள்ளிவிடும். இப்போது மழைக்குக்கூட ஒரு அலட்சியப் போக்கு ஏற்பட்டு விட்டது என்று நினைத்து அவர் லேசாகச் சிரித்துக் கொண்டார்.

ஆற்றங்கரை அமைதியாக இருந்தது. சில்லென்ற நீரில் மெதுவாக இறங்கி ஸ்நானம் செய்து முடித்தவர், ஆற்றோர கொன்றை மரங்களில் அலர்ந்தும் அலராமலும் தொங்கிய சரக்கொன்றை மலர்களைக் குடலையில் பறித்துப் போட்டுக் கொண்டார். உடலுக்கு அந்தக் காலைக் காற்று இதமாகவே இருந்தது. வழக்கம்போல் அவர் கோயில் திருப்பள்ளி எழுச்சிக்காகப் பாடுவதற்கு விரைந்து வந்தபோது அவர் வாய் 'பொன்னார் மேனியனே' என்று பாட ஆரம்பித்தது. கோயிலில் கூட்டம் அதிகமில்லை. துலாஸ்நானம் செய்து விட்டுச் சிலர் ஸ்வாமிதரிசனம் செய்ய வந்திருந்தார்கள். அன்று ஓதுவார் எதைப் பாடினாலும் சற்று நடுங்கும் குரலிலேயே பாடினார். கருவறையில் அபிஷேகத்தில் ஈடுபட்டிருந்த குருக்கள்கூட, "பாவம்! வயசாயிடுத்து. முன்னைப் போல இல்லே, கணீரென்று காலைத் தென்றலோடு சுகமாக இந்தக் கற்சுவர்களில் மோதி வீதியெல்லாம் கேட்குமே. அப்படி இல்லே இப்போது வயசாச்சு. அறுபத்தைந்து வயசு இருக்காதோ? குரலிலே பிசிறு தட்டிப் போயிடித்து......"

"ஆமாம்... ஆமாம்..." என்று கூட வந்தவர்கள் ஆமோதித்துக்கொண்டு வந்தார்கள்.

கருவறையில் தீபாராதனை ஆயிற்று கற்பூரத்தைக் காட்டிக்கொண்டே குருக்கள், "ஓதுவார்" உடம்பு கிடம்பு சரியில்லையா? உம்மைக்கூட சிங்கப்பூர் ப்ளூ ஜுரம் பிடிச்சுண்டுடுத்தா? குரலே நன்றாயில்லையே' என்று கேட்டு வைத்தார். ஓதுவார் நன்றாகத்தான் இருந்தார், அவரால் அதிகாலையில் கண்விழிக்க முடிந்தது. சில்லென்ற தண்ணீரில் முழுக முடிந்தது. உயரமான கிளைகளில் தொங்கும் மலர்க்கொத்துக்களைச் சிதைக்காமல் பறித்து இறைவனுக்கு மலர்த்திருப்பணி செய்யமுடிந்தது. "அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை ஸ்வாமி இன்னிக்கு ஏதோ கொஞ்சம் குளிருகிறாப்போலே இருந்தது. ஐப்பசியிலே மார்கழி மாச வாடை அடிக்குது பார்த்தீங்களா?"

"மார்கழியுமில்லே, தையுமில்லே. உமக்குத்தான் வயசாச்சு." என்று மனதுக்குள் நினைத்தவாறு குருக்கள் உள்ளேபோய்விட்டார். குருக்களின் இந்தப்பாராமுகம் நறுக்கென்று ஓதுவாரின் இதயத்தில் குத்தியது. இன்றுதான் போல இருக்கிறது. ஊரில் சிற்றன்னையின் கொடுமை தாங்காமல் இரவோடிரவாக ரயில் ஏறியதும் இந்த ஊரில் வந்து இறங்கியதும் கோயில் தர்மகர்த்தாவை அண்டி தனக்கொரு வேலை கொடுக்கப் பிரார்த்தித்ததும். அவர் 'உனக்குஎன்ன வேலையப்பா தெரியும்' என்று கருணையுடன் கேட்டார்.

"சாமி! நன்றாகப்பாடுவேன். இறைவனின் புகழைப்பாடியே திருப்பணி செய்துவரும் சந்ததியில் வந்தவன் நான்"... என்றதும்" இவரைப்பாடச் சொல்லி அவர் கேட்டார்.

அடுத்த நாள் தீபாவளி. ஊரெங்கும், பட்டாசும், வாணங்களும் ஒலிக்க, ஆலயத்தில் கணீரென்று ஒலிக்கும் இசையையும் கேட்டார்கள் அவ்வூர் மக்கள்.

"பையன் நன்றாகவே பாடுகிறான், நல்ல சிட்சை—அன்" றையிலிருந்து பையன் ஓதுவார் ஆக மாறி விட்டான்.

ஐம்பது வருடங்கள். ஐம்பது வருடகால சேவை செய்த பிறகு தங்க விழா கொண்டாட வேண்டிய காலம் இது. எதெதற்கோ. யார் யாருக்கோ தங்க விழாக்கள் கொண்டாடிக் கொண்டிருந்தார்கள். ஓதுவார் அதற்கெல்லாம் ஆசைப்படவில்லை. அவருடைய கடைசி [illegible] இருக்[illegible] தாம். [illegible] என்று வேறு கேட்டாகிறது.

ஊரெல்லாம் தீபாவளியின் வாடை வீசிக்கொண்டிருந்தது. விதவிதமான வாணங்களைச் சிறுவர்கள் ஏற்றி மகிழ்ந்தார்கள். ஊரின் வெளியே இருந்த கீற்றுக் கொட்டகை சினிமாவில்கூட தீபாவளிக்காக மக்கள் விரும்பும் படமொன்று வரப்போவதாகச் சுவரொட்டிகள் அறிவித்தன. கோவில் சத்திரத்தில் ஐப்பசியிலும் போட்டி போட்டுக்கொண்டு திருமணங்கள் நடந்தன. அதில் ஒலிபெருக்கி மூலம் 'எலந்தப் பயம்' பாடல் நாலுதிசையிலும் எதிரொலித்தது. அதைக் கேட்டு ஆனந்திப்பதுபோல் ஒரு கூட்டம் கோவில் படிகளில் உட்கார்ந்திருந்தது. கோவில் மேளக்காரர்கூட சில சமயம் அப்படி நோக்காக 'எலந்தப் பயம்' வாசித்தார்.

அதையும் ஒரு புன்னகையோடு ஏற்றவாறு குருக்கள் தம் மந்திரத்தை ஓதிக்கொண்டிருந்தார்.

சிலநாட்களாகவே ஓதுவாரை ஒருவரும் கவனிக்கவில்லை. சந்நதியின் முன்பு நின்று அவர் பாடும்போது ஒருவரும் அவரைக் கவனிப்பதில்லை. அவர் பாடி முடிக்கும் வரை காத்திருப்போர்கூட தங்கள் அவசரத்தைக் காண்பித்தனர். ஓதுவாரின் உள்ளம் இதனால் பாதிக்கப்படவில்லை.

விடிந்தால் தீபாவளி. தம் வீட்டுக்குள் உட்கார்ந்து சேக்கிழாரின் பெரிய புராணத்தின் ஏடுகளை ஒழுங்காக அடுக்கி வைத்துக் கொண்டிருந்தார் அவர். அந்த அறையின் மூலையில் இறைவனின் படத்தின் முன் பாசகிருளிளக்குகுடர்பரப்பியது.

வாசலில் ஏழெட்டுப் பேர்கள் வந்து நிற்பது தெரிந்தது. பழைய தர்மகர்த்தாவின் மகன் என்று தெரிந்ததும் ஓதுவாரே எழுந்து வாசலுக்கு வந்துவிட்டார்.

தட்டுகளில் பழங்கள், மலர்மாலை, புதுவேட்டி, பலகாரங்கள், வருடா வருடம் வரும் சன்மானம்தான். ஆனால், அத்துடன் தாம்பாளத்தின் மீது கனத்த உறையில் நோட்டுக் கற்றைகள் காணப்பட்டன.

இதெல்லாம் சரி, பணம் எதற்கு? எனக்குத் தேவைப்பட்டதெல்லாம் தந்து ஆதரிக்கிறீர்கள். பணம் எனக்குத் தேவைப்படாத ஒன்று—":

"ஐயா" என்று மிடுக்குடன் அழைத்தான் தர்மகர்த்தாவின் மகன். "நாளையிலிருந்து நீங்கள் கோயில் திருப்பணியிலிருந்து ஓய்வு பெறப்போகிறீர்கள். நீங்கள் ஓய்வுக் காலத்தைக் கழிக்க பணம் வேண்டாமா?" ஓதுவார் திகைத்து நின்றார்.

"நான் ஓய்வு பெறப் போகிறேனா? இறைவனைப் பார்த்து எனக்கு ஓய்வு தரும் வரை நான் ஓய்[illegible] இல்லை. நான் ஓய்ந்து உட்கார மாட்டேன்...

எல்லோரும் சிரித்தார்கள். பிறகு சென்று விட்டார்கள். கூடத்தில் தாம்பாளத்தில் வைத்தவை அப்படியே இருந்தன.

பின்னிரவு நேரம். ஊரில் எல்லோரும் தீபாவளி ஸ்நானம் செய்து, புத்தாடை உடுத்தி, வாணங்கள் கொளுத்திக் கொண்டிருந்தார்கள். ஓதுவார் வழக்கம் போல் ஆற்றுக்குப்போனார். குளிர்ந்த நீரில் குடைந்து குளித்தார். திருநீறு அணிந்தார். மலர் கொய்தார். இறைவன் இருப்பிடம் நாடி வருபவரை ஒரு குரல் திகைக்க வைத்தது. வண்டின் ரீங்காரம் போல் அக்குரல் மண்டபத்துச் சுவர்களில் மோதி, தெருவெங்கும் எதிரொலித்தது. 'பொன்னார் மேனியனே' என்ற அந்தப் பாடல்தான் எத்தனை இனிமையாகப் பொன்னிலே குழைத்து மெருகேற்றிப் பாடுவது போல் இருக்கிறது. இருந்தாலும் ஓதுவாரின் உள்ளம் இந்த யாறுதலை ஏற்கவில்லை.

(10-ம் பக்கம் பார்க்க)

## ஓய்வு...

(9-ம் பக்கத் தொடர்ச்சி)

பிடுவிடுவென்று கோயிலுக்கு அருகில் சென்றார். வெளி மண்டபத்தில் நின்று 'நாமார்க்கும் குடியல்லோம்' என்று உரத்த குரலில் பாட ஆரம்பித்தார். ஊரார் முகம் களித்தார்கள். தர்மகர்த்தாவின் மகன் கோபத்துடன் வெளியே எட்டிப்பார்த்தான்.

'நமனை அஞ்சோம்' என்று ஓதுவார் மேலும்பெரியகுரலில் பாடினார். குரலில் பிசிறு தட்டுகிறதாமே! கண்ட பாட்டுகளைக் கேட்டுவிட்டு என் பாட்டிலே குற்றம் காணுகிறார்கள் என்று நினைத்தவாறு தேவார இசையை முழக்கினார் அவர். பட்டணத்திலிருந்துவந்திருந்த இளைஞர் சங்கடப்பட்டார்.

'பெரியவரின் பகை வேண்டாம். அவரேபாடட்டும். நான் விலகிக்கொள்கிறேன். என்றதும் ஒருவரும் அவன் சொல்வதைக் கேட்கவில்லை.

'அவர் பாட்டுக்குக் கத்தட்டும். நீ பாடப்பா' என்று அவனை ஊக்குவித்தனர்.

பொழுது விடிந்து விட்டது.

ஓதுவார் கோயில்ஆளைக் கூப்பிட்டுத் தர்மகர்த்தாவின்வீட்டிலிருந்து வந்தவற்றைத் திருப்பி அனுப்பினார்; பணத்தையும் கூடத்தான்.

சற்றைக்கெல்லாம்இளைஞன் ஒருவன் மீண்டும் பரிசுகளை எடுத்து வந்தான். வந்தவன் நெடுஞ்சாணாக அவர் பாதங்களில் வீழ்ந்து வணங்கினான்.

“ஐயா! தெரியாமல் உங்களுக்குத் தவறு செய்து விட்டேன். என்றால் பிழைக்க வேண்டிய குடும்பம் ஒன்று இருக்கிறது. ஏதோ வருமானம் வருமே என்று பாட வந்தேன் உங்கள்உள்ளத்திண்மை எனக்குத் தெரிகிறது. நான் விலகிக்கொள்கிறேன்.”

ஓதுவார் ஒரு கணம் சிந்தித்தார். அவருக்குக் குடும்பமோ, உற்றாரோ யாரும் இல்லை. அவனுக்கு அவர்கள் இருந்தார்கள். அவருக்குப் பணம் தேவையில்லை. அவனுக்கு தேவையாக இருந்தது. அவர் இறைவனுக்காகப் பாடுகிறார். அவன் தன் கடமையைச் செய்ய இறைவனுக்குப் பாடுகிறான்.

“பையா!” என்று கனிவுடன் அழைத்த அவர், “இனி நீயே பாடப்பா... நான் ஓய்வு பெறுகிறேன்” என்றார்.

இந்த மனமாற்றத்தினால் ஓதுவார் பாதிக்கப்படவில்லை. வழக்கம்போல் அதிகாலையில் எழுந்து நீராடி, மலர் கொய்து இறைவன் வழிபாட்டுக்கு வருவார். மண்டபத்தில் இளைஞன் பாடுவதைக் கேட்பார். அவரும் பாடுவார். ஆனால், உரக்க அல்ல. மௌனம் என்கிற குரலில் இறைவன் செவிமடுக்கும் அளவுக்கு. மௌனத்துக்கு விளக்கமாக விளங்கும் இறைவன் அதையும் ஏற்று புன்னகைத்துக் கொண்டிருந்தான்.

---

அன்பு உண்மை, பிறரின் உரிமைகளுக்கு மதிப்பு ஆகிய அண்ணல் காந்தியின் அறிவுரைகள் முன் எப்போதையும்விட முக்கியத்துவம் பெறுகின்றன. நிறம், இனம், அரசியல் கொள்கை ஆகியவற்றைப் பொருட்படுத்தாமல் சமாதான சகவாழ்வு வேண்டும் என்று மக்கள் உணர்ந்து அதை ஏற்றுக் கொண்டால் தான் உண்மையான அமைதியும் முன்னேற்றமும் இருக்க முடியும் என்பதை ஒருவரும் மறுக்க முடியாது. நலம் செய்ய விரும்புவோர் சுயநலக்காரர்கள் அல்லஎன்று மகாத்மா காந்தி கூறியது மிகவும் சரியானதே. இதற்கு மகாத்மா காந்தியின் வாழ்க்கையைவிட சிறந்த ஒரு உதாரணம் இருக்க முடியாது,

இந்தியாவிலும், ஆபிரிக்காவிலும் சுதந்திரத்திற்காகவும் நீதிக்காகவும் காந்திஜி போராடியதற்குப் பலன் கிடைத்திருக்கிறது. அவரது தத்துவம் உலகெங்கிலும் பின்பற்றப்படுகிறது. மனித சுதந்திரத்திற்கே அது அடிப்படையாக இருக்கிறது.

தமது வாழ்நாளில் மனித குலத்தை இந்த அளவு நேசித்து, இந்த அளவு சேவை செய்த ஒரு மகா புருஷர் வாழ்ந்தார் என்பதில்இந்தியா

---

### நாள்தோறும்
## 18 லட்சம் குழந்தைகள் பிறப்பு!

ஐ. நா., அக். 18—நாள்தோறும் உலகில் 18 லட்சம் பேர் பிறக்கிறார்கள். சென்ற ஆண்டு உலகின் ஜனத்தொகை 342 கோடி. இப்போதைய வேகத்தில் மக்கள் தொகை பெருகினால் இன்னும் 40 ஆண்டுகளில் உலக ஜனத்தொகை இரட்டிக்கும்.

உலக மக்களில் 75 சதவிதம் பேர் அபிவிருத்தி அடைந்து வரும் நாடுகளில் வாழ்கிறார்கள்.

# கனவு



ஸரோஜா ராமமூர்த்தி

சென்னை

அன்புள்ள சூடாமணிக்கு,

ஆசிர்வாதம். உன் கல்யாணத்திலிருந்து வந்த பிறகு எனக்கு உடம்பே சரியாக இல்லை. அதனால்தான் பத்து தினங்களாகக் கடிதம் எழுத முடியவில்லை. உன் கணவர் அங்குதான் இருக்கிறாரா? நீ எவ்வளவுக்கெவ்வளவு வருத்தப்பட்டுக்கொண்டிருந்தாயோ, அப்படி யில்லாமல் நல்ல புருஷனை உனக்குக் கிடைத்து விட்டார் பார்த்தாயா? இனிமேல் தான் இருக்கிறது உன் சாமர்த்தியமெல்லாம். முகூர்த்தத் தன்று உன் மாமியார் உன்னைக் கையோடு அழைத்துப் போகப் போவதாக என்னிடம் கூறினார். 'பிள்ளை நாலைந்து வருஷங்களாகச் சாப்பாட்டுக்குக் கஷ்டப்படுகிறான். எனக்கு ஒருத்தி மாற்றி ஒருத்தி பெண்கள் பிரசவத்துக்கு செய்வதற்கே சரியாக இருக்கிறது. கலியாணம் ஆனபிறகும் அவனை அலைய விடுவானேன்?' என்று சொன்னார்.

கல்யாணம் ஆவதற்கு முன்பு புக்ககம்போய் குடித்தனம் செய்ய ஆசைப்படுகிறோம் ஆனபிறகு பிறந்தகத்தில் ஒருமாதம் இருக்க ஆசைப் பட்டாலும் கிடைப்பதில்லை. வேடிக்கையாக இல்லையா இது? உனக்கு இப்பொழுது அம்மா, அண்ணாமார்களுடன் இருக்க ஆசையாக இருந்தாலும் அவர் விட்டு வைக்கப் போவதில்லை. உன் அண்ணா மாத்திரம் என்ன? போன வருஷம் வேலூருக்கு என் அக்கா பெண் கல்யாணத்துக்காகப் பத்து தினங்கள் முன்னாடியே போயிருந்தேன். கல்யாணத்துக்கு வரப் போவதில்லை என்று சொல்லிக்கொண்டிருந்த உன் அண்ணா கல்யாணத்தன்று காலை வண்டியில் வந்து நின்றார்! அன்று இரவே யார் சொல்லியும் கேட்காமல் என்னை அழைத்துக் கொண்டு பட்டணம் வந்து விட்டார். புருஷர்கள் நம் இஷ்டப்படியெல்லாம் ஆடுவதாக புக்ககத்தில் குறை கூறுவார்கள். ஆனால் அவர்கள் இஷ்டப்படிதான் நாம் ஆடுகிறோம். 'வா'

என்கிறபோது வருகிறோம். 'போ' என்கிறபோது போகிறோம். கணவரின் மனம் குளிர வேண்டுமென்று பாடு படுகிறோம். குற்றம் சொல்கிறவர் என்னவோ நம்பேரில்தான் சொல்லுவார்கள். இது உலக வழக்கம்.

நீ இன்னும் எவ்வளவோ தெரிந்து கொள்ள வேண்டி இருக்கிறது. தாம்பத்ய வாழ்க்கையில் ஏற்படும் சிக்கல்கள் அபாரமானவை. உனக்கு இஷ்டமிருந்தால் அவைகளைப் பற்றி எழுதுகிறேன்.

உன் அன்புள்ள

ரேவதி

ஹூப்ளி

என் அன்புள்ள மன்னிக்கு,

நமஸ்காரம். நீ பங்களூருக்கு எழுதிய கடிதத்தை அம்மா எனக்கு அனுப்பினாள். ஒரு வாரம் இருந்து விட்டு போகச் சொல்லி இவரிடம் அம்மா எவ்வளவோ சொன்னாள். ஒரே பிடிவாதமாக மறுத்து விட்டார் இவர். என்னிடம் நடந்து கொள்ளும் அன்பைப் பார்த்து ஏமாந்து நானும் தனிமையில் எவ்வளவோ கேட்டேன். 'நீ வேண்டுமானால் ஒரு வாரமில்லை; ஒரு மாதத்திற்கு இருந்து விட்டு வா. என்னால் முடியாது' என்று வெடுக்கென்று பதில் சொன்னார். நான் என்ன புடவை கட்டிக் கொள்ள வேண்டும் என்பது கூட இவர் உத்தரவுதான்.

நேற்று வீட்டுக்கு நாலைந்து நண்பர்கள் சாப்பிட வந்திருந்தார்கள். அவர்கள் எதிரில் நான் எப்படியெல்லாம் நடந்து கொள்ளவேண்டுமென்று முதல் நாள் இவரும் எனக்கு உபதேசம் செய்தார். அவர்கள் எதிரில் நான் ஒளிந்து ஒளிந்து வேலை செய்யக் கூடாதாம். எல்லாம் தெரிந்தவள் போல் பழகவேண்டுமாம். இவைகளெல்லாம் எனக்கு மிகவும் கஷ்டமானவை என்பது உனக்குத் தெரியும். நம் வீட்டிலேயே நாலு பேர் வந்துவிட்டால் நான் தைரியமாய் பேசவே பயப்படுவேன். அத்துடன் நீ கல்யாணத்தின்போது எனக்கு வாங்கித் தந்த பச்சைப் புடவையை கட்டிக்கொள்ள எடுத்து வைத்திருந்தேன். நான் குளித்து விட்டு வந்ததும் சமையலறையில் வந்து 'அந்த நீலப் புடவை இருக்கிறதே அதைக் கட்டிக்கொள்; பச்சை உனக்கு நன்றாக இல்லை' என்றார். மறுத்துப் பேசவும் தைரியம் வரவில்லை. கல்யாணம் ஆன பிறகு அற்ப விஷயங்களுக்கெல்லாம் நம்மை அவர்கள் அடிமைப்படுத்தி விடுகிறார்கள். பார்த்தாயா மன்னி? கல்யாணத்திற்கு முன்பு நாம் என்ன கனவெல்லாம் காண்கிறோம்? கடைசியில் சில பெண்கள் 'எங்காத்துக்காரர் இதைத்தான் கட்டிக்கொள்ள வேண்டுமென்று சொல்கிறார்' என்று பெருமையாக வேறு சொல்லிக்கொள்கிறார்கள். எனக்கு என்னவோ அது பிடிக்கவில்லை.

தாம்பத்ய வாழ்க்கையில் ஏற்பட்ட முதல் சிக்கல் அதுதான்.

இன்னும் போகப்போகத் தெரியும். ஆனால் நீயும் அண்ணாவும் சண்டை போட்டுக்கொள்ளுகிற மாதிரி தெரியவில்லையே. ஒருவேளை எங்களால் கண்டு பிடிக்க முடியவில்லையோ என்னவோ?

உன் அன்புள்ள
**சூடாமணி**

சென்னை

அன்புள்ள சூடாமணி,

ஆசீர்வாதம். உன் கடிதம் பார்த்தேன். இந்த ஒரு மாத தனி வாழ்க்கையில் உனக்குக் கொஞ்சம் அனுபவம் ஏற்பட்டிருக்கிறது. கல்யாணம் ஆன புதிதில் புருஷர்கள் சுபாவமே அலாதியாக இருக்கும். அவர்கள் 'நில்' என்றால் நிற்க வேண்டும். இது பல இடங்களில் நடக்கிறதுண்டு. நாளடை



வில் நம்மை 'சாப்பிட்டாயா' என்று கூட கேட்க அவர்களுக்குத் தோன்ருமல் போய்விடும். நானும், உன் அண்ணுவும் வேண்டிய சண்டை போட்டுக்கொண்டிருக்கிறேம். வாரக் கணக்கில் பேசாமல் கூட இருந்திருக்கிறேம். ஆனல் இந்த விஷயங்களை நாலுபேர் அறியும்படி செய்வது அவ்வளவு உசிதமல்ல. புருஷன், மனைவி சண்டை நீடித்த மனஸ்தாபம் அல்ல. ஒன்றிரண்டு துர்ப்பாக்கியசாலிகள்தான் வாழ்க்கையில் நீடித்த விரோதிகள் ஆகிருர்கள். 'எங்காத்துக்காரர் என்னேடு பேசவே இல்லை' என்று அயலாரிடம் குறைப்பட்டுக் கொள்ளாதே. நாளைக்கே இருவரும் தெருவோடு சிரித்துப் பேசிக்கொண்டு போனீர்களானல் உன்னை அவர்கள் கேலியாகப்பேசும்படி நேரிடும்.

அவர் பேசவில்லை என்ருல் நீயும் கூடியவரையில் மௌனமாகவே உன் வேலைகளைச் செய்துவிட்டுப் பேசாமல் இரு. வலுவில் பேசினல் ஏதாவது 'வெடுக்'கென்று சொல்லுவார்கள். ஸ்திரீ ஜன்மங்களுக்கே ரோஷம் அதிகம். அந்த வார்த்தைகளைக் கேட்டதால் உனக்கு மனக் கஷ்டம் அதிகம் ஆகும். நாம் கணவனிடமிருந்து அனுதாபமாகவோ, ஆசையாகவோ ஒவ்வொரு சமயங்களில் ஒரு வார்த்தையை எதிர்பார்க்கிறேம். அவர்கள் அம்மாதிரி ஒன்றும் சொல்லா விட்டாலும் பாதகமில்லை. 'வெடுக்'கென்று ஏதாவது சொன்னர்களானல் நம ஆசை வெறும் கனவாக இருக்கிறது.

வாழ்க்கையில் சண்டையே இல்லா விட்டாலும் ரஸிப்பதில்லை. நம் அப்பாவும், அம்மாவும் எவ்வளவு சண்டை போட்டுக்கொண்டிருக்கிருர்கள்? அவர்கள் ஒருவர்மேல் ஒருவருக்கு அன்பில்லாமலா சண்டை போட்டுக் கொண்டார்கள்? வாழ்க்கை ரோஜா மலர்ப் படுக்கை அல்ல. அதில் முட்களும் நிறைந்திருக்கும். ரோஜாவின் மென்மையை அனுபவிப்பது போல் முட்களின் கூர்மையையும் அனுபவித்துத்தான் ஆகவேண்டும். அதுதான் வாழ்க்கையின் தத்துவம்.

உன் அன்புள்ள

ரேவதி

ஹுப்ளி

பிரியமுள்ள மன்னிக்கு,

நீ வர வர பெரிய தத்துவ ஞானியாகி விட்டாய். வாழ்க்கை என்பது முட்கள் நிறைந்த ரோஜா மலர்ப் படுக்கை என்று நீ சுலபமாக எழுதி விட்டாய். எனக்கு என்னவோ அது சங்கடமாய்த்தான் தோன்றுகிறது. கூரிய முட்கள் 'சுரீர்' என்று குத்தும்போது யாராவது இலவம் பஞ்சினல் அதன் அருகில் ஒத்திக்கொண்டே வந்தால் பஞ்சின் மென்மையை யாராவது அனுபவிக்க முடியுமா? அதே மாதிரிதான் என்னுடைய நிலைமை இருக்கிறது. முந்தாநாள் ஊரிலிருந்து என்னுடைய நாத்தனர் வந்திருக்கிருள்.

அப்பா! அவள் என்னைப் படுத்தி வைக்கிற பாடு! தமயனுக்கு ஆயிரக் கணக்கில் சம்பளம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாள் போலிருக்கிறது. 'கல்யாணம் ஆனதுமே, அண்ணா செட்டாகக் குடித்தனம் பண்ணுகிறான்' என்று வாய்க்கு வாய் சொல்லிக் காண்பிக்கிறாள். கல்யாணம் பண்ணின வுடனேயே எனக்கு என்ன நகையும், புடவையுமாக வாங்கியா போட்டு விடுகிறார் மன்னி? நானும் இல்லையா உன்னிடம்? இப்படித்தான் எதையாவது சொல்லிக் கொண்டிருந்தேனா? எனக்கு என்னவோ வார்த்தை கேட்க முடியவில்லை. வந்து இரண்டு நாளைக்குள் இந்த மாதிரியெல்லாம் அவள் சொல்வது எனக்குப் பிடிக்கவில்லை. மனதை உறுத்திக் கொண்டே இருந்தது. நேற்று இரவு இவரிடம் சொல்லி விட்டேன். இவருக்குக் கோபம் பிரமாதமாக வந்து விட்டது. 'ஆமாம், சொன்னதால் உனக்கு என்ன முழுகிப் போய் விட்டதாம்? கேட்டுக் கொண்டால் ஒன்றும் முழுகிப் போய் விடாது: தெரியுமா?' என்று இரைந்தார்.

எனக்கு அழுகை வந்து விட்டது. எல்லோருக்கும் சாதம் போட்டு விட்டு நான் சாப்பிடாமல் போய் என் அறையில் படுத்துக் கொண்டு விட்டேன்.

பத்து மணி வரைக்கும் அண்ணாவும், தங்கையும் பேசிக் கொம்மாளம் அடித்துக் கொண்டிருந்தார்கள். காதல், அன்பு என்றெல்லாம் சொல்லுகிறார்களே, 'சாப்பிட்டாயா' என்று கூட கேட்கவில்லை. காதலும், அன்பும் என்ன என்று யோசித்துப் பார்த்தும் எனக்குத் தெரியவில்லை.

நான் கண் விழித்துப் பார்த்த போது, அவர் நிம்மதியாகத் தூங்கிக்கொண்டிருந்தார். கடியாரத்தைப் பார்த்தேன். மணி பதினொன்றரை ஆகியிருந்தது. மேஜை மேல் வைத்திருந்த பால் அப்படியே இருந்தது. எனக்கு மனம் கேட்கவில்லை. மெதுவாகத் தட்டி எழுப்பினேன். சாயங்காலம் ஏழு மணிக்கு என் பேரில் எரிந்து விழுந்தவர் ஒரே சாந்த ரூப



மாக இருந்தார். என் கையைப் பற்றிப் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு 'சூடாமணி! நீ சாப்பிடவே இல்லையே, என்பேரில் கோபமா?' என்று கேட்டார். ரோஜா மலரைப்போல் அவர் பேச்சு மிருது வாய்த்தான் இருந்தது. இருந்தாலும் முட்களின் கூர்மையை அதன் மிருதுத் தன்மையால் போக்க முடியுமா? அவர் ஆறுதல் மொழிகளால் என் மனம் வேதனைதான் பட்டது. காரணம் தெரியவில்லை. எனக்கு அனுபவம் போதவில்லையா என்ன?

உன் அன்புள்ள
சூடாமணி

சென்னை

பிரியமுள்ள சூடாமணி,

உன் கடிதத்தைப் பார்த்ததும், உன்னுடைய சஞ்சல புத்தியைக் கண்டு வருத்தப்படுகிறேன். தொட்டதற்கெல்லாம் கோபித்துக் கொள்வதும், கோபப்படுவதும் குடும்ப வாழ்க்கைக்கு ஏற்றதல்ல. சம்சாரத்தை ஒரு மகா சமுத்திரத்துக்கு ஒப்பிட்டிருக்கிறார்கள் பெரியவர்கள். மகா சமுத்திரத்தில் நல்முத்துக்களும் இருக்கின்றன. உயிரைக் குடிக்கும் ராக்ஷஸ மீன்களும் இருக்கின்றன. பொதுவாக மனிதன் இரண்டையும்தான் பயன்படுத்திக்கொள்கிறான். கரையிலிருந்து கடலின் நீல நிறத்தைக் கண்டு ஆனந்தப்படும்போது அதனுள் இருக்கும் எண்ணற்ற விஷ ஜந்துக்களின் ஞாபகமே

நமக்கு வருவதில்லை. அந்த அழகிய நீல நிறத்தைக் கண்டு வியந்து ஆனந்தப் படுகிறோம். இது எப்படி சாத்தியமாகிறது?

உன் கணவரின் இன்மொழிகளால் உன் மனம் ஏன் ஆறுதல் அடையவில்லை தெரியுமா? உன் நாத்தனாரின் கடுமையான சொற்களையே நீ நினைத்துக் கொண்டிருப்பதால்தான். நான் சொல்வது உனக்குப் புரிகிறதோ இல்லையோ? அசடு மாதிரி எதையோ நினைத்துக் கொண்டு மனதைக் கெடுத்துக் கொள்ளாதே. குடித்தனத்துக்குப் போய் மூன்று மாதங்களுக்குள் கணவனுடன் யாராவது சண்டை போட்டுக்கொள்வார்களா? நீயே இப்படி இருந்தால் இரண்டு குழந்தைகளுக்குத் தாயான என்னைப் பற்றி என்ன சொல்வது? உன் அண்ணாவிடம் நீ எழுதிய கடிதத்தைக் காண்பித்தேன். கொஞ்ச நேரம் சிரித்துவிட்டு, 'அவளை இவ்வளவு சீக்கிரம் புக்ககம் அனுப்பி யிருக்கக் கூடாது' என்றார்.

'ஏன்?' என்று கேட்டேன் நான். கொஞ்ச காலம் எல்லாவற்றையும் சொல்லிக்கொடுத்து விட்டு பிறகு அனுப்பி யிருக்க வேண்டும் என்று சொல்லுகிறார் உன் அண்ணா. உன் கணவரை உத்தரவு கேட்டுக் கொண்டு இங்கே வந்து இரண்டு மாதங்கள் இருந்து விட்டுப் போயேன்.

உன் அன்புள்ள

ரேவதி

ஹாபி

பிரியமுள்ள மன்னிக்கு,

நமஸ்காரம். நீ எழுதியபடியே என் நாத்தனார் சொல்லுவதை நான் கவனிப்பதில்லை. இருந்தாலும் இவர் மேல் எனக்குக் கொஞ்சம் மனஸ்தாபம் தான். தினமும் ஆபீசிலிருந்து வீட்டுக்கு வருகிறாரே, இரவு படுக்கும்போதுதான் இன்முகமாகப் பேசுகிறாரே தவிர மற்ற வேளைகளில் ஒன்றும் அதிகமாகக் கவனிப்பதில்லை. என் மனம் புண் பட்டிருந்தாலும் சரி, ஆனந்தமாக இருந்தாலும் சரி, எதுவுமே இவர் கண்ணில் படுவதில்லை.. வாழ்க்கையை நாம் எந்தவிதக் கனவாகப் பாவிக்கிறோமோ அவ்விதம் தோன்றுவதுதான் உலக இயல்பு போலும்! குளிர்ந்த நிலவிலே நதியில் படகில் உல்லாசமாகப் போவது போல் கனவு கண்டால் எவ்வளவு இன்பமாக இருக்கிறது? வாழ்க்கையில் மேடு பள்ளங்களையும் இன்பக் கனவாகப் பாவித்து விடும்படி நீ உபதேசிக்கிருக்கிறாய். அவ்வளவுதானே மன்னி?

கூடிய 'சீக்கிரமே நான் பிறந்தகம் வரும் சந்தர்ப்பம் நேரலாம். திடீரென்று ஒரு நற்செய்தி உனக்குத் தெரிவிக்கப் போகிறேன்.

உன் அன்புள்ள

சூடாமணி

## ஸரோஜா ராமமூர்த்தி

# ஆசை

பங்களூர்.

அன்புள்ள மன்னிக்கு,

நமஸ்காரம். நீயும், அண்ணாவும் ஊருக்குப் போன பிறகு எனக்கு இந்த வீட்டில் பொழுதே போகவில்லை. ஒரே ஊரில் உத்தியோகமாக இருக்கக் கூடாதா என்று தோன்றுகிறது. தை பிறக்கிறதற்கும் நீ கிளம்புவதற்கும் சரியாக இருக்கவே, இனிமேல் பெண் கேட்பதற்கு யாராவது வந்தால் "நான் என்ன பண்ணுவது?" என்று அம்மா சொல்லிக் கொண்டிருக்கிறாள். சங்கராந்தி அன்று சின்ன அண்ணா நடராஜனுடன் ஒருவர் வந்திருந்தாரே சிகப்பாய், அண்ணா மாதிரி மூக்குக்கண்ணாடி போட்டுக் கொண்டு அவருக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லையாம். கலகல வென்று சிரித்துக் கொண்டு அவர் பேசுகிற மாதிரி அம்மாவுக்கு ரொம்பவும் பிடித்திருக்கிறது. நீண்ட கதர் ஜிப்பாவும், சற்று கலைந்த கிராப்பும் முகத்தில் படபடப்பும்— அவரை நம் தேசத் தலைவர்களில் யார் மாதிரியோ என்று சொல்லத் தோன்றுகிறது.

சங்கராந்திக்கு அப்புறம இந்தப் பத்து தினங்களில் அவர் இருபது தரம் நம் வீட்டிற்கு வந்து போய் விட்டார். நடராஜன் சொல்லுகிறான்; "காரணமில்லாமலா வருகிறான் சந்துரு?" என்று. பெயர்கூட அழகாக இல்லையா மன்னி? "நம் ஸ்திதி தான் தெரிந்திருக்கிறது. மூவாயிரம், நாலாயிரம் என்று வரதக்ஷிணை கொடுக்க முடியுமா? பெண் அழகாகவும், புத்திசாலியாகவும் மட்டும் இருந்து விட்டால் போதுமா?" என்று அம்மா விசாரத்தில் குன்றி விட்டாள். இந்த சந்துருவை பார்க்கும்போதெல்லாம் அம்மாவின் வாடிய முகத்தில் புன்சிரிப்புத் தோன்றுகிறது. ஆனால், அவருடைய நடை உடை பாவனைகளைப் பார்த்தால் பணக்கார வீட்டுப் பிள்ளையாக இருக்குமோ? கேட்டு விட்டுப் பிறகு ஏமாறப் போகிறோம் என்றும் அம்மா சொல்லுகிறாள்.

நீ வைத்த துளசிச் செடி நன்றாக துளிர் விட்டு வளர்ந்திருக்கிறது. அதைப் பார்க்கும் போதெல்லாம் உன் நினைவு வராமல் இருக்க முடியவில்லை. அண்

ணாவுக்கு என் நமஸ்காரம் சொல்லு. பதில் எழுது.

உன் அன்புள்ள

**சூடாமணி**

சென்னை.

அன்புள்ள சூடாமணிக்கு,

ஆசிர்வாதம். உன் கடிதம் கிடைத்தது. இரண்டு வருஷங்களாக பங்களூரில் இருந்து விட்டு வந்தது பெரிய தொந்தரவாக இருக்கிறது. வெயில் பொறுக்க முடியவில்லை. காலையில் எழுந்த கொஞ்ச நேரத்துக்கெல்லாம் கதகத வென்று உடம்பு முழுதும் வியர்த்து விடுகிறது. என்னை விட இந்த விஷயத்தில் அண்ணாதான் ரொம்பவும் சிரமப்படுகிறார். கொஞ்ச நாள் ஆனதும் சரியாகி விடும் என்று நினைக்கிறோம்.

நீ எழுதி யிருக்கும் சந்துருவைப் பற்றி படிக்கும்போது நன்றாகத்தான் இருக்கிறது. நானும் அன்று அவரை கவனித்தேன். அடிக்கடி உன்னையே கவனித்ததாகக் கூட நினைவு வருகிறது. சாதாரணமாக வயது வந்த பெண்ணாகட்டும், ஆணாகட்டும் ஒருவரை ஒருவர் சந்தித்தால் அடிக்கடி உற்றுப் பார்க்கிறார்கள். அவரவர் தம் சாமர்த்தியத்தை வெளிக்காட்டிக் கொள்ள முயற்சிப்பதும் உண்டு. பெண்ணாக இருந்தால் தனக்கு நன்றாகப் பாடத் தெரியும் என்று அவன் கவனிக்குமாறு அந்த சமயத்தில் மிருதுவாகப் பாடி அவன் மனதைக் கவர முயற்சிக்கிறாள். புருஷனாக இருந்தால் தன் காலேஜ் பிரதாபங்கள், உத்தியோக விஷயத்தில் ஆபீஸர் தன்னைப் பாராட்டுகிற விஷயம் முதலியவற்றைப் பாதி தமிழும், இங்கிலீஷுமாகப் பெண்ணின் காதில் விழும்படி பேசுகிறான்.

உன் அண்ணாகூட என்னை முதலில் பார்க்கவந்தபோது அப்படித்தான் பேசினார். என்னைக் கூட நீ சொல்லுவாயே-"டைப் அடிக்கத் தெரியும் என்று காட்டிக் கொள்ளத்தானே மன்னி உன் அப்பாவின் ஆபீஸ் குப்பை கூளங்களைக் கட்டுகட்டாகவைத்துக் கொண்டு நாங்கள் வந்த போது பிரமாதப் படுத்திக் கொண்டிருந்தாய்?" என்று.

போகட்டும் சூடாமணி! நீ எந்த மாதிரி சந்துருவின் மனதை ஆகர்ஷிக்க திட்டம் போட்டிருக்கிறாய். உன் தம்பூருக்கு வேலை அதிகமாக இருக்குமே? சாதாரண நாளில் அம்மா எவ்வளவு நச்சரித்தாலும் பாட மாட்டாய். இப்பொழுது சந்துரு வருகிற சமயம் தெரிந்து தம்பூரை மீட்டுவாய் என்று நினைக்கிறேன். உன் முயற்சி வெற்றி அளிக்கட்டும்.

துளசிச் செடிக்கு தினம் ஜலம் விட்டு வா. பிருந்தையைப் போல நல்ல பர்த்தாவாக உனக்கும் கிடைப்பான். பதில் எழுது.

உன் அன்புள்ள

**ரேவதி**

பங்களூர்

அன்புள்ள மன்னிக்கு,

நமஸ்காரம். உன் கடிதம் கிடைத்தது. கண்டபடி யெல்

லாம் பரிகாசம் செய்து எழுதியிருக்கிறாய். ஆனால், நீ எழுதியிருப்பதும் வாஸ்தவம்தான். 'இன்னும் வரக்காணேனே' என்கிற பாட்டுதான் அவருக்கு ரொம்பவும் பிடிக்கும் போல் இருக்கிறது. முந்தாநாள் வெள்ளிக்கிழமை சாயந்திரம் ஸ்வாமிக்கு விளக்கேற்றிவிட்டு, பழய பாட்டுகளெல்லாம் மறந்து விடுகின்றனவே என்று பாட ஆரம்பித்தேன். சின்ன அண்ணாவும், சந்துருவும் வந்துவிட்டார்கள். உடனே நீ கிண்டல் செய்திருப்பது நினைவுக்கு வரவே பாட்டை நிறுத்தினேன். நிறுத்தி ஐந்து நிமிஷம் கூட ஆகியிருக்காது. சின்ன அண்ணா உள்ளே வந்து அவர்கள் வந்தபோது பாடிய 'இன்னும் வரக்காணேனே' என்கிற பாட்டையே திரும்பவும் பாடச் சொன்னான். இருவரும் பூஜை அறையின் வாசற்படி அருகில் உட்கார்ந்து கொண்டு பாட்டைக் கேட்டார்கள்.

"வீணை சொல்லிக் கொடுத்தால் நன்றாக இருக்கும். நல்ல இழைந்த சாரீரம்!" என்று சந்துரு பாராட்டினர்.

"அவளும்தான் ஆசைப்படுகிறாள்" என்றான் சின்ன அண்ணா.

"போய் விட்டு வரட்டுமா? ரொம்ப தாங்க்ஸ்" என்று என்னிடம் சொல்லிக்கொண்டு சந்துரு எழுந்தார். என் தொண்டையில் வார்த்தைகள் மாட்டிக் கொண்டது போன்ற உணர்ச்சி ஒன்று தோன்றியது. தலையை மட்டும்தான் என்னால் அசைக்க முடிந்தது.

அந்த சம்பவத்துக்குப் பிறகு மன்னி! என் மனம் ஆனந்தத்தால் துள்ளிக் குதித்துக் கொண்டே இருக்கிறது. தினம் கோவிலுக்கு வேறு போகிறேன். அம்மாதான் அவருடன் தினம் பேசுகிறாளே. ஒரு நாளாவது அவரது பூர்வோத்திரங்களைக் கேட்கவில்லை. நீ இந்த சமயத்தில் இங்கே இல்லையே என்ற வருத்தமாக இருக்கிறது.

உன் மனசுக்கு என்ன தோன்றுகிறது? ஒவ்வொரு சமயம் இதெல்லாம் பைத்தியக்கார எண்ணங்கள் என்று மனதைச் சமாதானப் படுத்திக் கொள்கிறேன். ஆனால், இந்தக் காலத்தில் பணம் காசு இல்லாமல் பாட்டு ஒன்றையே பிரதானமாகக் கருதிக் கல்யாணம் பண்ணிக் கொள்கிறவர்கள் அபூர்வம் இல்லையா? அவ்வளவு தைரியமாக யார் முன் வருகிறார்கள்?

இந்தக் கேள்விகள் எழும்போது மனம் கவலையால் தத்தளிக்கிறது.

உன் அன்புள்ள

சூடாமணி

சென்னை.

அன்புள்ள சூடாமணிக்கு,

ஆசீர்வாதம், உன் கடிதம் வந்த பத்து தினங்களுக்குப் பிறகுதான் என்னால் உனக்குப் பதில் எழுதமுடிகிறது. காரணம் வேறு ஒன்றுமில்லை. என்

தங்கை பத்மா ஊரிலிருந்து வந்திருந்தாள். அவளுக்கு இங்கே ஒரு வரன் வந்தது. பிள்ளை வீட்டார் பெண்ணைப் பார்க்க ரயில் ஏறி தேகத்துக்குச் சிரமத்தை அளிக்கவிரும்பவில்லை. பெண்ணைக் கொண்டுவந்து இங்கேயே காட்டச் சொல்லி அப்பாவுக்கு எழுதிவிட்டார்களாம்! பத்மா கண்ணுக்கு சுமாராக இருப்பாள். அப்பா, அவளுக்கு அதிக சிரத்தை எடுத்துக் கொண்டு பாட்டு, படிப்பு எல்லாம் சொல்லித் தரவில்லை. பத்மாவைப் பார்க்க வந்த பிள்ளை ஒரு சங்கீதப் பைத்தியம்—ரஸிகன் என்றும் நீயும், நானும் சொல்லுவோம். பிள்ளையின் தாயார் பெண்ணைப் பார்த்ததுமே 'பாட்டுப் பாடத் தெரியுமா' என்று கேட்டாள். சம்பிரதாயத்துக்காகக் கேட்கிறார்கள் என்று அப்பா நினைத்துக் கொண்டு பத்மாவைப் பாடச் சொன்னார்.

முதல் பாட்டைக் கேட்டதுமே பிள்ளை அசிரத்தையாக எழுந்து மேஜைமேல் கிடந்த புதிய பத்திரிகைகளைப் புரட்டத் தொடங்கி விட்டான். அப்பா, அவன் தாயாருடன் வரதக்ஷிணை, சீர் முதலியவற்றைப் பற்றிப் பேச ஆரம்பித்துவிட்டார். எதிர் ஜாமீன் இரண்டாயிரம் ரூபாய். சீர் வகையறுக்கள் கல்யாணச் செலவு உள்பட இரண்டாயிரம். மொத்தம் நாலாயிரம் செலவழிக்க அப்பா தயாராக இருந்தார். பிள்ளையின் தாயாருக்கும் சபலம்தான். ஆனால், பிள்ளையின் முகத்தைப் பார்த்



தால் சம்மதிக்கமாட்டான் போல் தோன்றியது. நாங்கள் நினைத்தபடியே அவர்கள் ஊருக்குப் போய்க்கடிதம் போட்டார்கள். பணம் முக்கியமாக இருந்த போதிலும் பெண்ணுக்குப்பாட்டு, படிப்பு இல்லாததால் பிள்ளைக்கு சம்மதமில்லை என்று தெரிவித்திருந்தார்கள்.

எப்படி இருக்கிறது நம் சமூகம்? ஒன்று பிடித்தால் ஒன்று பிடிப்பதில்லை. ஒரு கன்னிகையிடம் சர்வ லக்ஷணங்களையும், பணம் உள்பட, எதிர் பார்க்கிறார்கள் இந்தப் பஞ்சம் நிரம்பிய பூமியில்!

போகட்டும் அந்த சந்துருவின் மனம் எப்படியோ? அவர் பரந்த நோக்க முடையவராக இருந்தாலும், அவரைச் சேர்ந்தவர்கள் எப்படியோ? எப்படி இருந்தாலும் உன் எண்ணம் ஈடேறினால் போதும். அதுதான் என் ஆசையும் கூட.

உன் அன்புள்ள

ரேவதி

பங்களூர்.

அன்புள்ள மன்னிக்கு,

நமஸ்காரம். உன் கடிதத்தைப் பார்த்தது முதல் என் மனம் குழம்பிக் கிடக்கிறது. அம்மாவுக்கு அவரை நேரில் விசாரிக்க மனோபலம் இல்லை. சின்ன அண்ணா, 'வீட்டுக்கு சிநேகித முறையில் வருபவனைப் போய், என் தங்கையைக் கல்யாணம் பண்ணிக் கொள்கிறாயா' என்று எப்படிக் கேட்பது என்கிறான். நான்தான் வெட்கத்தை விட்டுக் கேட்க வேண்டும் போல் பேசுகிறார்கள் இவர்கள்!

'எனக்குச் சூடாமணியைக் கல்யாணம் பண்ணிக்கொள்ள இஷ்டம்; அவளுக்கு இஷ்டமிருக்கிறதா என்று தெரிந்துகொள்ள வேண்டும்' என்று இந்த சந்துருதான் கேட்கக் கூடாதா, மன்னீ! நம் சமூகத்தில் ஆண் பிள்ளைகளுக்கு அவ்வளவுக்கு தைரியம் இல்லையே! பெரிய பெரிய பிரச்னைகளை வைத்துக் கொண்டு மேடை ஏறிப் பிரசங்கம் செய்கிறார்கள்! ஆபீஸிலிருந்து அண்ணாவுடன் வருகிறார். தினம் பாடச் சொல்லிக் கேட்கிறார். புகழவும் புகழ்கிறார். எழுந்து போய் விடுகிறார். நான் சோர்ந்த மனதுடன் தம்பூரை உறையில் போட்டு வைக்கிறேன். இவைகள்தான் தினம் நடக்கும் சம்பவங்கள்.

அந்தப் பிள்ளை அவளைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளாததைப் பற்றி பத்மா, ஏதாவது உன்னிடம் வருத்தப்பட்டாளா? ஆனால், பண உதவியினால் அவளுக்கு விவாகம் ஆகிவிடும் என்கிற தைரியம் இருக்கலாம். ஆஹா, இந்தப் பணத்துக்குத்தான் என்ன மதிப்பு? எனக்குக் கல்யாணம் ஆனபிறகு ஆத்துக்காரருடன் குடித்தனம் செய்யும்போது ரொம்பவும் சிக்கனமாக இருந்து பணம் சேர்க்கப் போகிறேன். என் குழந்தைகளாவது என்னைப் போல் கஷ்டப்படாமல் இருப்பார்கள் அல்லவா?

இந்தக் கடிதத்தைப் படித்து விட்டு நீ விழுந்து விழுந்து சிரிப்பாய். என்னவோ சொல்லுவார்களே, 'அடி என்பதற்கு பெண்டாட்டி இல்லை!' என்று ...ந்த மாதிரி இருக்கிறது என் ...னவுகள் எல்லாம்.

துளசிச் செடி தழைத்து பசுமையாக இருக்கிறது. அதன் மேல் கவிந்து நிழல் தரும் பவழ மல்லிகை மரத்தடியில் உட்கார்ந்துதான் இந்தக் கடிதம் எழுதுகிறேன். புஷ்பங்கள் துளசியின் மேல் உதிர்ந்து அழகாக இருக்கிறது. நீ இங்கு இல்லையே மன்னி இதைப் பார்ப்பதற்கு.

உன் அன்புள்ள,

சூடாமணி

பங்களூர்

அன்புள்ள மன்னிக்கு,

நமஸ்காரம். நேற்று ஒரு கடிதம் எழுதினேன் அல்லவா? அதைத் தபாலில் சேர்த்த பிறகு சந்துரு வீட்டுக்கு வந்திருந்தார். அவர் வருவதற்கு முன் அம்மாவுக்கும், சின்ன அண்ணுவுக்கும் வாக்குவாதம் நடந்தது. அவருடைய சம்மதத்தைக் கேட்டு விடேன் என்று அம்மா அண்ணுவுடன் சண்டை பிடித்தாள். 'நீதான் கேளேன்' என்றுன் அண்ணு. இவர்கள் இப்படிப் பேசிக்கொண்டிருக்கும்போதே சந்துரு வந்து விட்டார். வழக்கம்போல் நான் நேற்றுப் பாடவில்லை. பாட ஆரம்பிப்பேன் என்று அரை மணி எதிர்பார்த்து விட்டு, 'சூடாமணி ஊரில் இல்லையா?' என்று அவர் கேட்பது அறையில் இருந்த எனக்குக் கேட்டது. அதற்குள் அம்மா எனக்குத் தலைவலி என்று சாக்குச் சொன்னுள்.

'தினம் பாட்டுக் கேட்டுக் கேட்டு ஆபீஸில் வேலை செய்த களைப்பு நீங்கி விடும்' என்ருர் சந்துரு. அம்மாவுக்கு அந்தத் தைரியம் எங்கிருந்துதான் வந்ததோ?

'சூடாமணியின் பாட்டு உங்களுக்குப் பிடித்திருக்கிறதா? அப்படியானுல் அவளைக் கல்யாணம் பண்ணிக்கொண்டு விடுங்கள். எங்கள் கவலை நீங்கி விடும்' என்ருள் அம்மா. வார்த்தைகள் தட்டுத் தடுமாறித் தான் வெளிவந்தன. என் மனம் படபட வென்று அடித்துக் கொள்ள ஆரம்பித்தது.

சந்துரு கலகல வென்று சிரித்தார். "செய்து கொண்டால் போச்சு. உங்கள் அபிப்பிராயம் தெரியவில்லையே என்று தான் பேசாமல் சும்மா இருந்தேன். நாளைக்கு அம்மாவுக்கு எழுதி அவள் சம்மதத்தையும் கேட்டு விடுகிறேன். அவளுக்கு நான் ஒரே பிள்ளை. என் பேரில் உயிரை வைத்திருக்கிருள். மறுத்து எதுவும் சொல்ல மாட்டாள்' என்ருர். 'சூடாமணிக்கு தலைவலிதானு, ஜுரம் கூடவா?' என்றும் விசாரித்தார். மாமியார் மிகவும் நல்லவராக இருப்பார் போல இருக்கிறது மன்னீ! அவரிடம் எப்படியெல்லாம் நடந்துகொள்ள வேண்டும் என்று எனக்குச்

சொல்லித் தருகிருயா? நீ கல்யாணத்துக்கு ஒரு வாரத்துக்கு முன்பே வந்து விடு. உன்னிடம் நேரில் பல விஷயங்கள் பேச வேண்டும்.

உன் அன்புள்ள,

**சூடாமணி**

சென்னை

அன்புள்ள சூடாமணிக்கு,

ஆசிர்வாதம். உன் கடிதத்தைப் படித்ததும் ரொம்பவும் சந்தோஷப் பட்டேன். கடைசியில் சில விஷயங்களில் பெண்களுக்கு இருக்கும் மனேபலம் புருஷர்களுக்கு இருப்பதில்லை என்று தெரிகிறது. சமயமறிந்து அம்மா அம்மாதிரி பிரஸ்தாபித்திராவிட்டால் விஷயம் இவ்வளவு தெளிவாகத் தெரிந்திராது. இன்னென்று சொல்லுகிறேன். அவசரப் பட்டு உன் மனசை ஆசைகளில் மூழ்கடித்துக் கொள்ளாதே. விஷயம் இன்னும் தெளிவாக வில்லை. உன் கடிதத்தைப் பார்த்தால் நீ ஒரே ஆனந்தத்தில் மூழ்கி இருப்பதாக அறிந்து கொள்கிறேன். அது இயற்கைதான். இருந்தாலும் கொஞ்சம் நிதானித்து நடந்து கொள்.

கல்யாணம் ஆனபிறகு மாமியாரிடம் நடந்து கொள்ளும் விதத்தைப் பற்றி உனக்குச் சொல்லித் தருகிறேன். 'மாமியார் மெச்சிய மருமகள் இல்லை' என்று சொல்லுவார்கள். அதில் உண்மை இருக்கிறது. இருவரும் வெவ்வேறு குடும்பங்களைச் சேர்ந்தவர்கள். ஒருவர் வழக்கம் இன்னொருவருக்குப் பிடிக்காது. இருவரில் ஒருவராவது தன் கொள்கையை மாற்றிக் கொள்ளமாட்டார்கள். இம்மாதிரி பல குடும்பங்களில் தகராறுகள் ஏற்படுகின்றன. கூடிய வரையில் சண்டை சச்சரவில்லாமல் இருக்க முயற்சிக்கலாம். அதற்கு ஒருவரிடமாவது விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை இருக்க வேண்டும். இதெல்லாம் அனுபவத்தின் பேரில் உனக்கே ஏற்பட்டு விடும்.

ஒன்று மட்டும் சொல்லி வைக்கிறேன். புருஷனுடன் ஒரு ஆறுமாதமாவது பழகிய பின்புதான் குடும்பத்தி லுள்ள குறைபாடுகளை அவரிடம் சொல்லி ஏதாவது ஒரு வழி தேட முயற்சிக்கலாம். ஆரம்பத்தில் புருஷன் நம்பேரில் அன்பைச் சொரிவது போல் தோன்றும். நாம் கிழித்த கோட்டைத் தாண்டுவாரா என்றும் உறுதி ஏற்படும். ஆனால் திடீரென்று எந்தப் பக்கம் பாய்ந்தாலும் பாய்வார்கள். குடும்பத்தில் நடுநிலைமை வகிப்பதுதான் ஆரம்பத்தில் செய்யக் கூடியது. நமக்குத் தெரிந்த வேலைகளைச் செய்து விட்டு எதையும் தெரிந்தது போல் காட்டிக் கொள்ளாமல் இருந்து விடுவதுதான் சிலாக்கியம்.

சந்துருவின் தாயாரிடமிருந்து கடிதம் வந்ததா? ஒவ்வொரு நிமிஷமும் உன் மனேபிஷ்டம் நிறைவேற வேண்டும் என்று பகவானைப் பிரார்த்திக்கிறேன்.

உன் அன்புள்ள,

**ரேவதி**

பங்களூர்

அன்புள்ள மன்னிக்கு,

நமஸ்காரம். கடைசியில் இலவு காத்த கிளி' என்பார்களே அம்மாதிரிதான் என் ஆசைகள் வியர்த்தமாக முடிந்தன. நான்கு தினங்களாக சந்துரு இந்த வீட்டுப் பக்கமே வரவில்லை. ஆபீஸில் சின்ன அண்ணாவைக் கண்டாலும் சரிவரப் பேசவில்லையாம். சின்ன அண்ணாவே தைரியத்தை வரவழைத்துக் கொண்டு கேட்டாராம். 'சாயந்திரம் சொல்லுகிறேன்' என்று சொல்லிவிட்டு வேலைக்குப் போய்விட்டாராம்.

சாயந்திரம் சந்துரு ஆபீஸில் இல்லை. சின்ன அண்ணா விஷயம் தெரியாமல் வீட்டுக்கு வந்துவிட்டான். அவன் வருவதற்கும் தபால்காரன் ஒரு கடிதத்தைக் கொடுப்பதற்கும் சரியாக இருந்தது. பிரித்துப் பார்த்தால் கடிதம் சந்துருவிடமிருந்து வந்திருந்தது. விஷயம் இன்றைய சமூகத்தில் இருப்பதுதான். 'பெண் அழகாக இருந்து பாட்டும் பாடி விட்டால் போதுமா? என்னுடைய நாட்டுப் பெண் கொஞ்சம் ஐசுவரியம் உள்ளவளாகவும் இருக்க வேண்டும். எனக்கு நீ ஒரே பிள்ளை. இப்படி ஏழைப் பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொள்வானேன்? நான் இங்கு நல்ல இடமாகப் பார்க்கிறேன்' என்று அவர் தாயாரிடமிருந்து கடிதம் வந்திருந்ததாம். 'உங்களுக்கு எப்படிச் சொல்லுவது என்று தயங்கிக் கொண்டே நான்கு தினங்களாக தட்டிக் கழித்து வந்தேன். யோசனை செய்து பார்த்தால் தாயாரின் மனசைப் புண்படுத்தியாவது நம் அபிலாஷையைப் பூர்த்தி செய்து கொள்ளவாவது? என்று தோன்றுகிறது. என் மனம் குழம்பிக் கிடக்கிறது' என்று சந்துருவின் கடிதம் ஒரே குழப்பமாக இருந்தது.

அம்மா வருத்தத்துடன் உட்கார்ந்து விட்டாள். என்னைப் பற்றி என்ன எழுத மன்னி? நான் ஏன் பெண்ணாகப் பிறந்தேன்? இதுதான் என்னுடைய கேள்வி.

உன் அன்புள்ள,
சூடாமணி

சென்னை

அன்புள்ள சூடாமணி,

இதென்ன இப்படிக் கோழை மாதிரி எழுதி இருக்கிறாய்? அந்த சந்துரு உன்னைக் கல்யாணம் பண்ணிக்கொள்ளா விட்டால் அவருக்கு அதிர்ஷ்டமில்லை என்று நினைத்துக்கொள். புஜத்தில் வலிமையுள்ள ஆண் பிள்ளைகள் பெண்கள் மூலமாகப் பணத்தை எதிர்பார்க்கும் போது இந்தச் சமூகம் எவ்வளவு பிற்போக்கில் இருக்கிறது என்று யோசித்துப் பார். அது எப்படியாவது இருக்கட்டும். உன்னைப் பற்றி ஏன் நீ தாழ்வாக நினைத்துக் கொள்கிறாய்?' ஏன் பெண்ணாகப் பிறந்தேன்?' என்கிற கேள்வியைக் கேட்பது மடத்தனம்.

பெண் பிறவியே இழிவு என்னும் எண்ணம் பெண்

னுக்கே உண்டாவதென்றால்...! சூடாமணி! உன்னை நீயே தாழ்வு படுத்திக்கொள்ளாதே.

முதலிலேயே எழுதினேன். ஆசைகளை வளரவிடாதே. மனதை ஆசைக்கு அடிமைப் படுத்தி விட்டாய். உனக்கு இன்னும் அனுபவம் போதாது. எல்லோரையும் நம்பி விடுவது தான் தவறு.

மனசை உறுதியாக வைத்துக் கொள். இனிமேல் எப்படிப் பட்டவர் கிட்டவும் மனசுக்கு ஆசை ஊட்டாதே. இதுதான் நான் உனக்கு எழுதக்கூடிய ஆறுதல் வார்த்தைகள். இப்பொழுது ஒன்றும் முழுகிப் போய்விடவில்லை. உனக்கு நல்ல கணவர் கிடைப்பா ரென்று நான் உறுதியாக நம்பு கிறேன். நீயும் அதே உறுதியை மனதில் வைத்துக் கொள். யாரைப் பார்த்தாலும் 'அந்த நல்லவர் இவராக இருப்பாரோ என்று மாத்திரம் மனசை அலைய விடாதே. உன் உற்சாக மான பதிலை எதிர்பார்க்கிறேன்.

உன் அன்புள்ள,

ரேவதி

# ஜன்னல்





**சரோஜா ராமமூர்த்தி**

காற்று பலமாக வீசவே, திறந்திருந்த ஜன்னல் கதவுகள் பட்டென்று மூடிக்கொண்டன. மாலதி விசுக்கென்று எழுந்து போய்க் கதவுகளைத் திறந்து வைத்துக் கொக்கிகளைப் பொருத்தினாள். சற்று நேரம் கம்பிகளில் முகத்தைப் புதைத்துக் கொண்டு, வெளியே பார்த்தாள்.

சென்று விட்ட மாரிக் காலத்தில் நல்ல மழை பெய்ததன் விளைவாக, நிலமெங்கும் பசுமை பூத்துக் குலுங்கிக் கொண்டிருந்தது. மரங்களில் தளிர்கள் தழைத்திருந்தன. மாமரங்களில் சரம் சரமாக மலர்கள். சிறு சிறு பிஞ்சுகள் கூட விட ஆரம்பித்திருந்தன. ஓ! இளவேனில் வருகிறது என்று மாமரத்துக் குயில் கூடக் கூவித் தெரிவிக்கிறதே.

மாலதி கண்ணுக்கெட்டிய வரை கண்களை ஓட விட்டாள். தெளிந்த வானம்; அதன் அடியில் மகிழ்ச்சியே உருவான இந்த உலகம். பூவும், பிஞ்சும், காயும், கனியுமாக ஒரே வளர்ச்சி. ஆனால், அதோ, அந்த வீட்டுக்கு அடுத்த வீட்டில் தெரிகிறதே ஒரு காட்சி, அது அவ்வளவு இன்பம் பயப்பதாக இல்லை. ஓட விட்ட தன் கண்களை மாலதி இடுக்கிக் கூர்ந்து கவனித்தாள்.

அடுத்த வீடு ஒருசிறிய ஓட்டு வீடு. ஆங்காங்கு இடிந்து

விட்ட வீடு. பின் கட்டில் நாலைந்து தென்னைகள். பெரிய வேப்ப மர மொன்று கிளைகளைப் படர விட்டு வளர்ந்திருக்கிறது. அதனடியில் நார்க் கட்டிலில் இளம் வெயி லுக்கு இதமாக உடலைக் காட்டிய படி ஒரு பெண் படுத்திருந்தாள். ஒல்லியான உடல். அங்கங்கள் யாவுமே ஓர் எல்லைக்குள் பார்த்துப் பார்த்துச் செய்த மாதிரி அளவோடு இருந்தன. ஒரு காலத்தில்—அப்படி காவம் கிலம் என்று சொல்லும்படி அவளுக்கு வயதாகியிருக்காது-நன்ருக இருந்தபோது, அழகியாக இருந்திருப் பாள். இளமை, அழகு எல்லாமே இந்த உலகத்தில் இனிய கனவுகள். பாவாடை கட்டுகிறவள் பாட்டியாகி, போன இடம் புல் முளைப்பதைக் காலம் காலமாகப் பார்த்தும் பக்குவப் பட வில்லையே நாம்!

அந்த ஒரு ஜீவனைத் தவிர அந்த வீட்டில் உயிரோட்டம் ஏதாவது இருக்கிறதா என்று கவனித்தாள் மாலதி. 'டொக் டொக்' கென்று மரங் கொத்திகள் மரத்தைத் துளைபோடும் சத்தம் கூடத் தாளம் பிசகாமல் கேட் டது. மாலதி எப்பொழுதுமே ஒரு மாதிரி. இம்மாதிரி விஷயங்களைப் பார்த்தால் நெருங்கிப் போய் விடு வாள். புதிதாக வந்திருக்கும் அவ ளுக்கு அவ்வூரில் இன்னும் யாரும் நண்பர்கள் ஏற்படவில்லை. கணவன் அலுவலகத்துக்கும், குழந்தைகள் பள்ளிக்கும் சென்ற பிறகு பொழுது நகர்வதாகவே இல்லை. போய் அவ ளிடம் என்ன ஏது என்று கேட்போமா என்று தோன்றிவிட்டது அவளுக்கு.

மாலதி வாசலை இழுத்துப் பூட்டிக் கொண்டு அடுத்த வீட்டுக்குள் நுழைந்த போது, அந்தச் சிறிய வீடு 'ஹோ' வென்று திறந்து கிடந்தது. கூடத்தில், கிழிந்த பாயின் மீது கலைந்து கிடந்த சீட்டுக் கட்டுகளும், கூஜா வில் பாதி தண்ணீரும், காப்பி சாப் பிட்டு வைத்த டம்ளர்களும் இறை பட்டுக் கொண்டிருந்தன. நல்ல தொரு குடும்பம் அமைதியாக வாழக் கூடிய எந்தவிதமான சூழ்நிலையும் அங்கு இல்லை.

மாலதி தோட்டத்தை அடைந் தாள். கட்டிலில் படுத்திருந்த அந்தப் பெண், அசைவற்று அப்படியே கிடப் பதைப் பார்த்ததும் மாலதிக்குப் பயமாகப் போய் விட்டது. அருகில் சென்று உற்றுக் கவனித்தாள். வெளுத் துப் போன முகத்தில், குழி விழுந்த கண்களில், இரண்டு சொட்டுக் கண் ணீர் திரண்டு நின்றிருந்தது. முத்துக் கள் போல் உருண்டிருந்த அந்தக் கண்ணீரில் ஒரு சோகக் கதையே புதைந்திருக்கிறது என்பது மாலதிக் குத் தெரிந்து விட்டது.

வேப்பங் காற்றின் சுகத்தில் தன் துயரை மறந்து துயிலும் அவளை எழுப்ப நினைக்காமல் மாலதி, அங் கிருந்த துணி துவைக்கும் கல்லின் மீது அமர்ந்து வானத்தை அண் ணாந்து பார்த்துக் கொண்டிருந்தாள். கதிரவன் உச்சி மேட்டுக்கு வேகமாக வந்து கொண்டிருந்தான். ஆனால், அவனின் வெப்பத்தைத் தடுத்து நிறுத்தும் ஆற்றல் அந்தக் குளிர் தருவுக்கு இருந்தது.

கட்டிலில் படுத்திருந்தவள் கண் விழித்துக் கொண்டாள். சற்று அசைந்து படுத்தாள். நாக்கால் உதடு களைத் தடவி விட்டுக் கொண்டு, ஈரத்தை உண்டாக்கினுள். ஒரு காலத் தில் - ஒரு காலம் என்றுதான் சொல்லி யாக வேண்டும் - இனிமையும், இன்ப மும் தோய்ந்திருந்த அதரங்கள் அவை. இமைகளின் விளிம்பில் உருண்டி ருந்த கண்ணீர் அவள் இமைகளைத் திறந்ததனுல் கன்னத்தில் வழிந்தது. மாலதி மெதுவாக அவள் அருகில் சென்று நின்ருள். வியப்புடன் தன் னைப் பார்க்கும் அவளை நோக்கி, ''அம்மா! உங்களுக்குச் சாப்பிட ஏதா வது கொண்டு வரட்டுமா? சூடாக வேண்டுமா? குளிர் பானமாக இருக்க லாமா?'' என்று கேட்டாள்.

அன்பு, தயை, கருணை என்பவற் றுக்கு விளக்கமாகத் திகழும் இறை வனே தன் எதிரில் பெண்ணுருக் கொண்டு வந்து விட்டானே என்று தான் அவள் மாலதியைக் குறித்து நினைத்திருக்க வேண்டும். கண்களில் தெரிந்த வியப்பு அடங்காமல் மாலதி யைப் பார்த்துக் கொண்டே, ''ஏதா வது கொடுங்கள்....ஏதாவது...சாப் பிட்டு ஒருநாளாகிறது....'' என்ருள்.

மாலதிக்கு சுறு சுறுப்பு அதிகம். ஐந்து நிமிடங்களில் சூடான காப் பியை எடுத்துக் கொண்டு வந்து விட் டாள்.

''சாப்பிடுங்கள்... உங்கள் உடம் புக்கு என்ன அம்மா?''

'பேச்செல்லாம், சோகமெல்லாம், கதையெல்லாம் அப்புறம், முதலில் என் பசியை ஆற்றிக் கொண்டு பேசுகிறேன்' என்பது போல், டம்ளரில் இருந்த காப்பியை ஒரே உறிஞ்சில் குடித்து விட்டு, நீண்ட பெருமூச்சுடன் மனத்திலிருந்த பாரத்தைக் குறைத்துக் கொண்டாள் அந்தப் பெண். பிறகு மாலதியை ஏறிட்டுப் பார்த்து, ''நீங்கள் அடுத்த வீட்டுக்கு வந்திருக்கிறீர்களா?'' என்று கேட்டாள்.

''ஆமாம்..உங்களுடன் ஒருவரும் இல்லையா?''

''ஏன் இல்லை? என் கணவர் இருக்கிறாரே...வெளியே போய் இருக்கிறார்.....''

''ஒகோ! தன்னந்தனியாக நோய் வாய்ப்பட்டிருக்கும் உங்களை விட்டு விட்டு வெளியே போய் இருக்கிறாரா?'' அந்தப் பெண் விசுக்கென்று தன் முகத்தைத் திருப்பிக் கொண்டு கண்ணீரை ஆறாகப் பெருக்க ஆரம்பித்தாள். மாலதி வேப்ப மரத்தில் சாய்ந்து கொண்டு அவளையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். மனத்தில் எவ்வளவு துயரமிருந்தால் இப்படிக் கண்ணீரைக் கொட்ட முடியும்? சிறிது கழித்து அவள் தலைப்பால் முகத்தை அழுத்தித் துடைத்துக் கொண்டு, ''நிற்கிறீர்களே அம்மா... அப்படி உட்காருங்கள்'' என்று அங்கிருந்த சிமிட்டித் திண்ணை ஒன்றைச் சுட்டிக் காட்டினாள்.

இதற்குள் தெருப்பக்கம் சத்தம் கேட்டது. நாலைந்து ஆடவர்கள் இரைந்து பேசிக் கொண்டு உள்ளே வந்தார்கள். அவர்களில் ஒருவன் மட்டும் பின்பக்கம் வந்தான். கையிலிருந்த ஒரு பொட்டலத்தை அவள் கட்டிலின் மீது வீசி எறிந்தான்.

''தின்று தொலை சனியனே! அழுது அழுது என் பிராணனை வாங்குகிறாயே....'' சற்றுத் தள்ளி திண்ணையில் அமர்ந்திருக்கும் மாலதியை அவன் கவனிக்கவில்லை. இரைந்து விட்டு உள்ளே போய்விட்டான். அடுத்த நிமிஷம் தபேலாவின் சத்தத்துடன் சிதார் ஒலித்தது. இனிய குரலொன்று அதனுடன் பாட ஆரம்பித்தது.

''யாரம்மா அது?'' என்று மாலதி எழுந்து வந்து கேட்டாள்.

''அவர்தான் என் கணவர்...'' என்று அமைதியாகப் பதிலளித்தாள் அந்தப் பெண்.



'' நாடகத்திலிருந்து சினிமாவுக்கு வந்திருக்கீங்களே, இப்போ என்ன மாறுதலைப் பார்க்கறீங்க......?''

''ஒரு மாறுதலும் இல்லை......சினிமாவில் நடிக்கும்போது என்னாலே எதிரில் ஜனங்களைப் பார்க்க முடியாது. நாடகத்தில் நான் ஜனங்களையே பார்த்ததில்லே......!''

---

''பாட்டும் கூத்துமாக இருக்கிறதே....''

''அப்படித்தான் நானும் ஒரு காலத்தில் இருந்தேன்...''

''அப்படியென்றால்....?''

அந்தப் பெண் கட்டிலில் நன்றாக எழுந்து உட்கார்ந்து கொண்டாள்.

''பத்து வருஷங்களுக்கு முன்பு சம்பா இன்னும் எவ்வளவோ அழகாக இருந்தாள். மனைவியை இழந்து விட்ட தந்தைக்கு ஆறுதலாகவும், உடன் பிறந்த தம்பிகளுக்குத் தாயாகவும் அவளால் அந்தப் பதினாறு வயதில் எப்படித்தான் நடந்து கொள்ள முடிந்ததோ? சந்தர்ப்பங்கள் சிலரை அடியோடு மாற்றத்தான் செய்கின்றன. தாயை இழந்த பெரிய துயரைத் தவிர, சம்பாவுக்கு அந்த வீட்டில் ஒரு குறையும் இல்லை. அவளை மாற்றும்படியான நிகழ்ச்சியே அந்த வீட்டுக்கு ஓர் இளைஞன் வந்த பிறகுதான் நடக்க ஆரம்பித்தது. கலைகளில் ஆர்வம் கொண்ட அந்த இளைஞன், அழகையும் ஆராதிப்பவனும்.''

சம்பா இவ்விதம் கூறிவிட்டு மாலதியைப் பார்த்து விரக்தியாகச் சிரித்தாள்.

'வலுவில் அந்தக் குடும்பத்துடன் பேசி, வலிய நட்புறவு பூண்ட அந்த இளைஞனின் கண்கள், சமையலறையில் நடமாடும் சம்பாவின் பேரிலேயே பதிந்திருந்தன. பெண்களின் விழிகளைத் துள்ளும் கயல்களுடனும், கூந்தலைக் கரிய மேகத்துடனும், பாதங்களைத் தாமரை மலர்களுடனும் ஒப்பிட்டு அவன், சம்பாவின் தந்தையிடம் மணிக் கணக்கில் பேசுவது வழக்கம். அந்த அப்பாவி மனிதர் தமக்கு ஏற்பட்டிருந்த நஷ்டத்தை இந்தப் பையனின் பேச்சில் லயித்து மறந்து விட முயன்று கொண்டிருந்தார்.

அன்று தந்தையும், தம்பிகளும் வெளியே போய் விட்டார்கள். வழக்கம் போல் இளைஞன் வந்தான். திரை மறைவில் ஆடப்பட்ட நாடகம், மேடையில் அரங்கேறுவது போல் இருவரும் நேருக்கு நேர் சந்தித்துக் கொண்டார்கள். அதன் விளைவு, பெற்ற தந்தையை விட்டு, உடன் பிறந்தவர்களை விட்டு, இன்று அநாதையாக இந்த வேப்ப மரத்தடியில் கிடக்கிருள் சம்பா! கலைகளில் ஆர்வம் கொண்ட அவன், இவளைக் கலைகளில் ஈடு படுத்தாமல் இருப்பானு? உபரி நடிகையாக இந்தச் சம்பா நடிக்காத படமே இல்லை. சீக்கிரத்தில் அவளை நட்சத்திரப் பதவிக்கு உயர்த்துவதாக அவனும் எவ்வளவோ செய்து பார்த்தான். சீர்கெட்ட உடல், மனத்தில் அமைதிக் குறைவு, எல்லாமாகச் சேர்ந்து சம்பா துப்பி விட்ட பண்டமாக இருக்கிருள்.'

எங்கிருந்தோ கடிகாரம் மூன்றடிப்பது காற்றில் மிதந்து வந்தது. மாலதிக்குத் தான் வெகு நேரம் அங்கிருந்து விட்டது நினைவுக்கு வரவே, சம்பாவிடம் விடைபெற்றுக் கொண்டு கிளம்பினுள்.

அன்றுமாலை முழுவதும் மாலதிக்கு வீட்டில் வேலை இருந்தது. பள்ளியிலிருந்து திரும்பும் குழந்தைகளுக்கு டீ தயாரித்துத் தின்பண்டங்கள் செய்தாள். தலை பின்னிக் கொண்டாள். மேஜை மீது வேலைக்காரி வைத்திருந்த மலர்ச் சரத்தை எடுத்து வளைத்துத் தலையில் சூட்டிக் கொண்டாள். சுவாமிக்கு விளக்கேற்றினுள். தம்புராவைச் சுருதி சேர்த்து இழையும் குரலில் 'மாணிக்க வீணைம்....' என்று பாடி முடித்தாள். திடீரென்று மேகம் விலகிய வானம்போல, சம்பாவின் எண்ணம் அவள் மனத்தில் பளிச்சிட்டது.

காற்று வேகமாக வீசுவதாக எண்ணி, வேலைக்காரி சாத்தியிருந்த ஜன்னல் கதவுகளை அகலமாகத் திறந்து அடுத்த வீட்டை எட்டிப் பார்த்தாள்.

அங்கே சுவரில் சாய்ந்தவாறு சம்பா மாலதியின் இனிய இசையைக் கண் மூடி ரசித்துக் கொண்டிருந்தாள். நீல வானில் வெண் நிலவு முளைத்து விட்டது. சம்பாவின் மெலிந்த உடலெங்கும் நிலவின் ஒளிக் கீற்றுக்கள் பறந்தன. உள்ளே இருந்தவர்கள் போய் விட்டார்களா என்று உற்றுப் பார்த்தாள் மாலதி. உள்ளேயிருந்து மிகவும் லேசாக 'ஸ்டவ்' எரியும் சத்தம் கேட்டது.

கண்களைத் திறந்தவுடன், ஜன்னலில் தோன்றும் அந்த அழகிய, கருணையுள்ள முகத்தை இமைக்காமல் பார்த்தாள் சம்பா. உலகில் நிலவும் கொடுமைகளின் இடையே ஆட்சி செலுத்தும் நன்மையைப்போல, மாலதி புன்முறுவலுடன் சம்பாவைப் பார்த்தாள்.

''சாப்பிட்டாயா?'' என்று மரியாதையை ஒதுக்கி வைத்து விட்டு உரிமையுடன் ஒருமையில் அழைத்துக் கேட்டாள்.

''இல்லை....ஸ்டவ் பற்ற வைத்திருக்கிறேன். ஏதாவது கஞ்சி வைத்துச் சாப்பிடுவேன்...அதிகமாகச் சாப்பிட்டால் இரவில் எனக்கு ஜீரணமாவதில்லை. சாப்பிடக் கூடக் கொடுத்து வைக்காதவள்...''

''வைத்தியரைப் பார்ப்பது தானே?''

''பார்த்து இந்த உடம்பைக் காப்பாற்றி, நான் என்ன பிரமாதமாகச் சாதித்து விடப் போகிறேன்?''

மாலதியின் அழகிய புருவங்கள் கோபத்தால் சற்று ஏறி இறங்கின. இந்த வரட்டு வேதாந்தமெல்லாம் அவளுக்குப் பிடிக்காது. இனிய பொழில்கள், வயல்கள், மலைகள், கனிகள், காய்கள் யாவுமே மனிதன் வாழவென்றே படைக்கப் பட்டிருக்கின்றன. ஒவ்வொரு விநாடியும் வளர்ச்சியும், வளமும், கொழிக்கும் வாழ்க்கையை ஒவ்வொருவனும்

ருசித்து அனுபவிக்க வேண்டும். அது மனிதனின் உரிமை. இறைவன் கொடுத்திருக்கும் இந்த உரிமையைப் பறிக்க நாடுகளுக்கிடையே நடக்கும் கொடுமைகளும், போர்களும், அதற்கு மேலாகச் சம்பாவைப் போல வரட்டுப் பேச்சுப் பேசுகிறவர்களும் அவளுக்கு எட்டிக் காயாகக் கசந்தன.

''உன் அவர் சாப்பிட வர மாட்டாரா?'' என்று தன்னைச் சமாளித்துக் கொண்டு கேட்டாள் மாலதி. இப்பொழுது மாலதியின் குழந்தைகள் இருவரும் ஜன்னல் அருகில் வந்து, தன் தாய் யாருடன் பேசுகிறாள் என்று கவனித்தார்கள்.

''உங்கள் குழந்தைகளா?'' என்று கேட்டு விட்டு, ஏக்கப் பெருமூச்சு விட்டாள் சம்பா.

பத்து வருஷங்களுக்கு முன்பு, தான் விட்டுப் பிரிந்து வந்த இரண்டு தம்பிகளின் நினைவு வந்தது அவளுக்கு.

குழந்தைகளா அவர்கள்? தங்கக் குஞ்சுகள்! 'அக்கா! அக்கா!' என்று அவளைச் சுற்றிச் சுற்றி வந்தார்களே! அந்தத் தூய சகோதர பாசத்தை நொடியில் எப்படி அவளால் உதறி எறிய முடிந்தது? சம்பா மறுபடியும் மாலதியைப் பார்த்து, ''என்ன கேட்டீர்கள்! அவர் இரவு வருவதே சந்தேகம். எங்கோ படப் பிடிப்பு இருக்கிறதாம். பகலில் ஒருத்தி பாடுறாளே, அவளை அங்கு அழைத்துப் போகப் போகிறாராம்... கலைகளை வளர்க்கிறார் அம்மா...அவர், கலைகளை வளர்க்கிறார்.....''

மாலதியின் நெஞ்சம் பட படத்தது. அவனைப் போய்த் தரதரவென்று இழுத்து வந்து, 'இதோ உன் கட்டிய மனைவி....என்ன? கட்டிய மனைவி...' எண்ணம் தடைப்பட்டது. சட்டென்று மாலதி கம்பிகளின் இடையே கண்களைக் கூர்மையாகச் செலுத்தி சம்பாவின் கழுத்தை ஆராய்ந்தாள். அங்கே புனிதமாகக் கருதப்படும் மாங்கல்யச் சரட்டைக் காணோம்! போலி முத்து மாலை, தன் பவிஷை இழந்து துவண்டுகிடந்தது.

மாலதிக்குக் கண்ணீர் குப்பென்று பொங்கி வந்தது. பெண்கள்தான் எத்தனை பலஹீனமானவர்கள்? இவள் அவனைக் கணவன் என்கிறாள், அவனோ?

உள்ளே கஞ்சி பொங்கி வழிந்து, தீய்ந்து போகும் வாசனை வீசியது. மாலதியின் கணவனும் அலுவலகத்திலிருந்து வந்து விட்டான்.

''மா....ல...தி....'' என்று அவன் உற்சாகத்துடன் அழைத்தவாறு வந்ததும், பின் தொடர்ந்து 'கல கல' வென்று எழுந்த சிரிப்பொலியும், பேதைப் பெண் சம்பாவின் மன நோய்க்கு அன்றிரவு மருந்தாக அமைந்திருந்தது.

வேனிற்காலத்தின் எழிலில் மலர்கள் மலர்ந்தன. வாசம் வீசின. வீதிக்கொரு திருமணமும், ஆலயங்களில் திருவிழாக்களுமாக வசந்தத்தின் அழகு, உலகை ஆட்சி செலுத்திக் கொண்டிருந்தது. இடையில், மாலதி சம்பாவுக்கு மிகவும் வேண்டியவளாகி விட்டாள். அவளுடைய துயரை அவளால் பகிர்ந்து கொண்டு அனுதாபம் செலுத்த முடிந்ததே தவிர, அவள் மனப் புண்ணை ஆற்ற முடியவில்லை. இரவு வேளைகளில் சம்பா படும் வேதனையும், அடி உதைகளும் மாலதிக்கு நன்றாகத் தெரியும். ஆனால் சம்பாவின் மனத்தில் ஊன்றியிருந்த அந்தக் கணவனைப் பற்றிய எண்ணத்தை, பக்தியை மாலதியால் அசைக்க முடியவில்லை.

பிறந்த வீட்டிலிருந்து அவள் தங்கைக்குத் திருமணம் என்று மாலதிக்கு ஒரு கடிதம் வந்தது. சம்பாவிடம் சொல்லிக் கொண்டு புறப்பட்டாள்.

''தன்னந் தனியாக இருக்கிறவளுக்குத் துணையாக இருந்தீர்கள் அம்மா....'' என்று விம்மினாள் சம்பா.

''உன் அவர் வீட்டுக்கு வந்து எத்தனை நாளாயிற்று?'' என்று கோபத்துடன் கேட்டாள் மாலதி.

''பதினைந்து நாட்களுக்கு மேலாகி விட்டதம்மா. வாடகைக்காக வீட்டுக்காரர் தொந்தரவு செய்கிறார். சமையல் சாமானெல்லாம் தீர்ந்து விட்டன. அவரிடம் கேட்டால் 'நீ என்ன ஆடிப் பாடிச் சம்பாதிக்கிறாயா? இருக்கிற பவிஷை வைத்துக் கொண்டே நாலு படங்களில் நடிக்கலாம்; அவ்வப்போது ஏதாவது கிடைக்கும். துரைசானி மாதிரி காற்று வாங்கிக் கொண்டு கட்டிலோடு கிடக்கிறாயே. கிட....' என்று திட்டிவிட்டுப் போய் விட்டார்...''

'தென்னை மரத்தில் ஏறுகிறவனுக்கு எத்தனை உயரம் கை கொடுக்க முடியும்? சம்பாவைப் பற்றிய பிரச்னையை மாலதியால் எத்தனை நாட்களுக்கு ஏற்றுக் கொள்ள முடியும்?'

மாலதி மன வேதனையுடன் தான் ரயிலேறினாள். திருமண வீட்டின் களிப்பிலும், வேடிக்கையிலும் மனம் தன்னை மறந்தாலும், பளிச் சென்று அவள் நினைவைச் சம்பா வசப்படுத்திக் கொள்வாள். திடீரென்று கவலை தோயும் அவள் முகத்தைப் பார்த்து எல்லோருமே அதிசயித்தனர்.

பத்து நாட்களாகப் பூட்டியிருந்த கதவைத் திறந்ததும் அவசரமாக மாலதி ஜன்னலுக்கருகில் ஓடினாள். சித்திரை மாதத்து நிலவும், இளம் காற்றும் முகத்தில் சில்லென்று வீசின. கம்பிகளிடையே முகத்தைப் பொருத்திக் கொண்டு, வேப்ப மரத்தடியை உற்றுப் பார்த்தாள்.

அங்கே அந்தப் பழைய நார்க் கட்டிலைக் காணோம்! சின்னதும், பெரியதுமாகக் குழந்தைகள் சிலர், தாயின் கரங்களால் அமுது படைக்கப்பட்டு நிலாச் சாப்பாடு சாப்பிட்டுக் கொண்டிருந்தனர். மாலதிக்கு ஒன்றும் புரியவில்லை. உள்ளே வந்த வேலைக்காரியை அழைத்துச் சம்பாவைப் பற்றிக் கேட்டாள்.

''அந்தப் பொண்ணுங்களா? அது செத்துப் போச்சுங்களே. ஏழெட்டு நாளாகுதுங்க. அதும் புருசன் அப்புறம் வரவே யில்லீங்க. அநாதை மாதிரி யாரோ எடுத்துப் போட்டாங்க...வேறே குடி கூட வந்தாச்சுங்களே. அது போனது வீட்டுக்காரங்களுக்கு நிம்மதி அம்மா...எத்தனை நாளைக்குத்தான் வாடகை நஷ்டப் படுவாங்க, சொல்லுங்க?...''

மெலிந்த அந்த உடல், ஒரு காலத்தில் அழகு ஊற்றுகளாக இருந்த கண்கள், வெளுத்த அதரங்கள், சோகப் புன்னகை, அவளைக் கைவிட்ட அந்தக் கசடனிடம் மாறாத பக்தி இவையெல்லாம் கொண்ட அந்தப் பெண், இன்று, ஒரு நாள் மலர்ந்து உதிரும் மலர் போல் மண்ணில் உதிர்ந்து விட்டாள்.

அவளுக்கெனக் கொண்டு வந்த இனிப்புப் பொட்டலங்கள் மேஜை மீது கிடந்தன. ஆழ்ந்த பெரு மூச்சுடன், திறந்திருந்த அந்த ஜன்னலுக்குத் திரை ஒன்றை எடுத்து மாட்டினாள் மாலதி.

அடுத்த வீடு, அவள் பார்வையிலிருந்தே மறைந்தது.

# பொம்மைக் கல்யாணம்



**சரோஜா ராமமூர்த்தி**

"அடியே லீலா!"

"இதோ வந்துட்டேம்மா..."

பங்கஜம் கோபத்தால் சிவந்த முகத்தினளாக இடுப்பில் கைகளை ஊன்றி லீலாவின் வரவை எதிர் பார்த்து வெந்நீர் அறை வாசலில் நின்றிருந்தாள். புடவையின் முன் கொசுவத்தை மடிப்பாக எடுத்துத் தூக்கிச் செருகி, ஒரு கையில் எண்ணெய்க் கிண்ணமும், மற்றதில் சீக்காய் மாவையும் வைத்தவாறு மகளை அதட்டிக் கூப்பிட்டுக் கொண்டிருந்தாள்.

வாரத்தின் ஓய்வு நாளாகிய ஞாயிற்றுக்கிழமையன்று அவளுக்கு ஏகப்பட்ட அலுவல்கள் காத்துக் கிடந்தன. வண்ணனுக்கு அழுக்குத் துணிகளைப் பொறுக்கிப் போட்டாக வேண்டும். பள்ளிக்கூடம் போகும் லீலாவுக்கு அன்றுதான் எண்ணெய் தேய்த்துக் கொள்ள அவகாசம் இருக்கிறது. மற்ற நாளில் அவள் புஸ்தகப் பையும் தானுமாக ஒன்பது மணிக்கே விழுந்தடித்துக் கொண்டு ஓடி விடுவாள்.

காலையிலிருந்து கூப்பிட்டுக் கொண்டேயிருக்கிறாள். அந்தப் பெண்ணின் காதில் விழுந்தால்தானே?

மாடியில் லீலாவும், மீனுவும் தத்தம் பொம்மைகளைச் சிங்காரிப்பதில் முனைந்திருந்தனர். மூன்று நாட்களாக குழந்தைகள் திட்டமிட்டு பொம்மைக் கல்யாணம் நடத்த வேண்டுமென்று ஆரம்பித்திருக்கிறார்கள். ஞாயிற்றுக்கிழமையை விட்டால் இப்படி ஆர்வத்துடன் விளையாட முடியாது.

மாடிக்கூடத்தில் இரண்டு மணைகளைப் போட்டு பெரிய பெரிய பொம்மைகளைச்



சிங்காரித்து வைத்து அண்டை அயலில் ஊர் அழைத்து அமர்க்களமாகத் தான் செய்ய நினைத்திருக்கிருர்கள். கல்யாணமா சொக்கா? லீலாவின் ராஜா பொம்மைக்கும், மீனுவின் ஜீஜி பொம்மைக்கும் அன்று கல்யாணம். போன ஞாயிற்றுக்கிழமையே ராஜா போய்ப் பெண்ணைப் பார்த்து விட்டு வந்தாள்.

''ரொம்ப ரொம்ப புடுச்சிது அம்மான்னு ராஜா சொல்ருள்...'' என்று லீலா தன் ஒப்புதலை மீனுவிடம் சொல்லி விட்டாள்.

மீனுவும் ராஜா பெண் பார்க்க வந்த அன்று உப்பு பிஸ்கோத்தும், 'டாபி' சாக்லேட்டும் கொடுத்து சம்பந்தி அம்மாளை உபசாரம் பண்ணித் தீர்த்து விட்டாள். அந்தப் பிஸ்கோத்துக்காகவும், சாக்லேட்டுக்காகவுமே லீலா ஒப்புக்கொண்டு விட்டாள்.

இதெல்லாவற்றையும் விட மீனுவின் அம்மா உஷா இவர்களுடன் சேர்ந்து கொண்டு லூட்டி அடிக்க ஆரம்பித்திருக்கிருள். கடையிலிருந்து பிஸ்கோத்துகள், பழங்கள், தின்பண்டங்கள் என்று பத்து ரூபாய்களுக்கு வாங்கித் தள்ளி விட்டாள். கேட்க வேண்டுமா குழந்தைகளின் மகிழ்ச்சிக்கு! பெரியவர்கள் அதைப் பொம்மைக் கல்யாணம் என் பார்களே தவிர, குழந்தைகள் உண்மைக் கல்யாணம் என்றே தங்கள் எண்ணங்களை அதில் தேக்கவிட்டு அதற்குள் மூழ்கி இருந்தார்கள்.

ராஜா பொம்மையும் ஜீஜி பொம்மையும் பழைய மரப் பொம்மைகள் அல்ல; இந்தக் காலத்து நவீன பொம்மைகள். ஆனால் கல்யாண மென்னவோ பழைய காலத்திலிருந்து குழந்தைகளிடம் ஒன்றி வந்ததுதான். காலம்தான் வேறே தவிர செயல் ஒன்றுதான்.

''அடியே லீலா? உன்னை எத்தனை தரம் கூப்பிடறது? நீயும், உன் திமிரும்...'' பங்கஜம் கோபக் கனல் பறக்க எண்ணெய்க் கிண்ணத்தை 'நக்' கென்று கீழே வைத்தாள்.

கீழே யிருந்து பேரிரைச்சலாக வந்த அந்தச் சத்தம் மாடிக் கூடத்தில் புகுந்து அலைமோதிற்று. லீலாவும் மீனுவும் தத்தம் காதுகளைப் பொத்திக் கொண்டு ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டார்கள். எல்லாம் தெரிந்தவர்கள் இந்தப் பெரியவர்கள் என்கிருர்களே, இவர்களுக்குக் குழந்தைகளைப் பற்றி ஒன்றுமே தெரியவில்லையே என்றுதான் இருவரும் நினைத்திருக்க வேண்டும். இரங்கற் பார்வை ஒன்றை அவர்கள் இருவரும் பார்த்துக் கொண்டு மறுபடியும் பொம்மைகளை அலங்கரிப்பதில் முனைந்தனர்.

கீழே வெந்நீர் அறையில் பக்கெட் தடாலென்று வைக்கப் பட்டது.

''அடியே லீலா சனியன்......''

''இதோ வந்துட்டாள் பெம்மா. சித்த நாழி கழிச்சு வந்துடுவாள்.'' பெரிதாகத் தொண்டை எடுத்துக் கத்தினள் மீனு. 'பெரியம்மா' என்று அவளுக்கு அழைக்க வருவதில்லை.

மாடிக்கும், கீழுக்குமாகச்சொற்போர் நடப்பதைக் கவனித்தவாறு வந்த உஷா, ''நீங்கள் குளித்து விட்டு வாருங்கள் மன்னி. லீலா விளையாடிவிட்டு வந்ததும் நான் எண்ணெய் தேய்த்து விடுகிறேன்'' என்று கூறி பங்கஜத்தை சமாதானப் படுத்த முயன்ருள். ஆனல் பங்கஜத்தின் இரு கண்களும் இரு தீப்பந்தங்களாகச் சிவந்து தகதகவென்று ஒளி வீசின. அவள் பார்வையின் ஒளியைத் தாங்க மாட்டாமல் உஷா தலையைக் குனிந்து கொண்டாள்.

''உன்னுல்தான் அந்தச் சனி இப்படியாகிவிட்டது. கடா மாதிரி ஒன்பது வயசாகிறது. எனக்கு ஒத்தாசையாக விரலை மடக்குகிறதா அது? சதா விளையாட்டும், கூத்தும்தான்.

மாடிக் கூடத்தில் கலீரென்று சிரிப்பொலி கிளம்பிற்று. சற்று முன் லீலாவும், மீனுவும் மட்டும் இருந்த இடத்தில் அண்டை அயல் வீட்டுக் குழந்தைகள் வேறு வந்து குழுமியிருந்தனர். லீலா அந்த இடத்துக்குச் சர்வாதிகாரிணியாக விளங்கினுள்.

''இதோ பாருங்கடி! நான் பிள்ளையைப் பெற்றவள், சம்பந்தியாக்கும்! நான் சொல்கிறபடிதான் மீனு கேட்க வேண்டும். இல்லையாடி?''

''ஆமாம்... ஆமாம்... லீலா சொல்கிற— இல்லை, இல்லை— சம்பந்தி சொல்கிறபடிதான் மீனு கேட்கவேண்டும்—'' வந்திருந்த பெண்களில் ஒருத்தி ஆமோதித்தாள். மீனுவுக்கு அவள்மீது கோபம் தான். இருந்தாலும் அவளைவிட வயதிலும் விளையாட்டு அனுபவத்திலும் அந்தப் பெண் பெரியவள். ஆகவே, மீனு முகத்தைத் தூக்கிக் கொண்டு மௌனமாக இருந்தாள்.

''பின்னே என்னவாம்? பெண்ணுக்கு ஹூம்...வந்து ஜீஜிக்கு சிவப்பு சாந்திலே தான் பொட்டு வைக்கணுங்கறேன். இவ வந்து கறுப்புச் சாந்துங்கரு... இப்ப

யாரு கறுப்புச் சாந்துலே பொட்டு வச்சுக்கறு? அது பாஷனே இல்லே...''

''ஆமாண்டி லிலா!'' என்று குழந்தைகள் இரைந்து கூச்சலிட்டார்கள்.

இந்தச் சத்தம் உஷாவின் காதுகளைத் துளைத்தெடுத்தது. என்னதான் குழந்தைகளென்றாலும் கும்மாளம் அதிகமாக இருக்கவே உஷா கோபத்துடன் படிகளில் ஏறினாள். பாதிப் படிகளைக் கடந்ததும் மாடிக்கூடத்து ஜன்னல் வழியாகக் கைப்பிடிச் சுவர் மேல் சாய்ந்தவாறு உள்ளே எட்டிப் பார்த்தாள்.

உண்மையிலேயே அங்கு நடப்பது கல்யாணம்தான். மாக்கோலமும், மாவிலைத் தோரணமும் யார் போட்டுக் கொடுத்தார்கள் இவ்வளவு அழகாக? வேலைக்காரியை லிலா துளைத்து எடுத்திருப்பாள்.

கல்யாணப் பிள்ளை ராஜா தலையில் தொப்பி அணிந்து 'சூட்' போட்டுக் கொண்டிருக்கிறான். அவனுக்குத் தலைமுடி கூடச் சற்று செம்பட்டை நிறம் தான். இருந்தாலும் அவன் நறுக்கு மீசையும், கறுக்காக வெட்டியிருந்த கிராப்புத் தலையும் ஆளைக் கிறங்கத்தான் வைத்து விடும். மீனுவைப் பார்த்ததும் உஷாவுக்குச் சிரிப்பு வந்து விட்டது. அவளே புதுப் பாவாடையும், தலையில் சுட்டியுமாக மணப்பெண்ணாக மாறி இருந்தாள்.

அவள் பெண் ஜிஜிதான் என்ன அழகு, என்ன அழகு! சிங்கப்பூர் நைலான் பாவாடையும், ரிப்பன் தாவணியும், நத்தும், மாட்டலும் ஜிலு ஜிலு அட்டிகையும்—அசல் கல்யாணப் பெண்தான்.

குழந்தைகள் சளசள வென்று பேசிக் கொண்டே அலுவல்களில் முனைந்திருந்தார்கள். உஷா சுவரின் மேல் சாய்ந்தவாறு பேச்சைக் கேட்டு முறுவலித்தாள்.

'பிள்ளை வீட்டு சம்பந்தி உயர்வு' என்பது குழந்தைகளின் உள்ளத்துக்குக் கூட நன்றாகப் புரிந்திருந்தது. அதுதானே உண்மையுங் கூட?

உஷாவின் கல்யாணத்தின் போது அவள் ஓரகத்தி பங்கஜம் படுத்தி வைத்த பாடு கொஞ்சமல்ல. ஒவ்வொரு விஷயத்திலும் குற்றம் அகப்படுமா என்று துருவித் துருவித் தேடியலைந்தாள். ஆனால் அவள் மனம் கோணாமல் உஷாவின் பெற்றோர்கள் கண்ணியமாக நடந்து கொண்டார்கள்.

கல்யாணத்தன்று மாலை வரவேற்பின் போது உஷா கொஞ்சம் நவநாகரிகத் தோற்றத்துடன் காணப்பட்டதும் எள்ளாகப் பொரிந்தாள் பங்கஜம்.

'' இதென்ன புடவை? லட்சணமாக பட்டுப் புடவை உடுத்தாமல் ... இந்தப் புடவை ...'' என்று அவள் சம்பந்தியிடம் கேட்பதைக் கவனித்த அவள் கணவன் ரகுநாதன் இடையில் புகுந்து பேச்சை மாற்றி அவளை வேறு இடத்துக்கு அழைத்துப் போய் விட்டான்.

உஷாவின் வீட்டில் எல்லோரும் பங்கஜத்தைப் பார்த்து நடுங்கினர்.

'' அடியே உஷா! நீ எப்படித்தான் இந்த மனுஷியிடம் சமாளிக்கப் போகிறாயோ?'' என்று உஷாவின் தாய் கூறுவதைக் கேட்டு அவள் தந்தை கூறினார்:

'' எல்லாம் சரிப்பட்டுவிடும். பெண்ணாகப் பிறந்தவள் ஒரே குடும்பத்துடன் இணைந்து இருந்துவிட முடியாதே! பிறந்த குடும்பத்தை விட்டு வேறு குடும்பத்துடன் சென்று வாழ ஆரம்பித்தவுடன் எப்படி வேண்டுமானாலும் தன்னை மாற்றிக் கொண்டு விடுவாள். நீ வந்த புதிதில் எப்படி இருந்தாய்? இப்பொழுது உன் பிறந்த வீட்டின் பழக்க வழக்கங்களே உனக்கு மறந்து போயிருக்கும்...''

உஷா கணவன் வீட்டுக்கு வந்ததும் லிலா தளர் நடை பயின்றவாறு வந்து 'தித்தி' என்று அவள் கால்களைக் கட்டிக் கொண்டாள். மீனு இப்பொழுது பங்கஜத்தைப் 'பெம்மா' என்று அழைப்பதுபோல லிலா 'தித்தி' என்றுதான் அழைத்தாள்.

குறு குறு வென்று மழலை மிழற்றும் குழந்தையை யார்தான் விரும்பமாட்டார்கள்? சதா வெடுவெடுப்புடன் இருந்த பங்கஜத்தைவிட லிலா உஷாவின் கவனத்தை வெகுவாகக் கவர்ந்தாள். பிறகு எல்லாமே சித்தியிடம்தான் நடைபெற்றன. குளிப்பது, சாப்பிடுவது, விளையாடுவது கூடத்தான்.

இப்படி யொரு கருத்து வேற்றுமை நிலவக் காரணமாக இருப்பதற்கு உஷாவின் கணவன் ரங்கனாதனின் பதவி ஏற்றமும் துணை செய்தது.

ரகுநாதன் மாதம் இருநூறு ரூபாய் சம்பாதிக்கும் குமாஸ்தாவாக இருப்பதும், ரங்கனாதன் மட்டும் ஐந்நூறுக்கு மேல் வாங்கும் பெரிய அதிகாரியாக இருப்பதும் பங்கஜத்தின் மனத்தை வெகுவாக உறுத்தியது.

ரங்கனுக்குப் பணம் என்றால் தண்ணீர் பட்டபாடுதான். நினைத்ததை வாங்கி வருவான். லிலாவுக்கு ஒரு நாள் விளையாட்டு மோட்டார். ஒரு நாள்

பொம்மை, மோட்டாரில் அவளை உட்கார வைத்துத் தானும் கூடச் சுற்றி வருவான். லீலாவுக்கு ஐந்து வயதாகும் போது உஷாவுக்கு மீனா பிறந்தாள். குழந்தையுடன் பிறந்த வீட்டிலிருந்து சீரும் சிறப்புமாகத் திரும்பி வந்த உஷாவைப் பார்த்தவுடன் பங்கஜத்துக்குத் தன் நிலை பெரிதாகத் தெரிந்தது.

'ஸ்டாண்ட்' தொட்டிலும், கொசு வலையும் உயர்தர பால் டப்பாக்களும் உஷாவின் அறையை அலங்கரித்தன. ஆனால், மீனா நோஞ்சானாகத்தான் இருந்தாள். லீலாவைப் போல செழுமிய கன்னங்களும், பால்நிறமும், குமுத வாயும் அவளுக்கு வாய்க்கவில்லை.

ரங்கன் தன் மன்னியிடம் குழந்தை நோஞ்சானாக இருப்பதாகக் குறைப்பட்டுக் கொண்டான்.

"பூ! என்ன பிரமாதம்? நீதான் சம்பாதிக்கிறயே. நல்ல டானிக்காக வாங்கிக் கொடுத்தால் சரியாகிறது. பணத்தை வாரி இறைத்தால் எல்லாம் சரியாகி விடும்..."

ரங்கனுக்கு மன்னியின் சுபாவம் தெரிந்ததுதான். பெரியவள், தன்னை வளர்த்து ஆளாக்கியவள், பேசிவிட்டுப் போகட்டும். எப்பொழுதும் குறைப்படுகிற ஜன்மம்... நாளடைவில் அந்த வீட்டில் அமைதி குறைந்து கொண்டே வந்தது. லீலாவும் மீனாவும் ஒன்றாக விளையாடுவது கூட பங்கஜத்தின் கண்களை உறுத்தியது. இதில் பேதம் கற்பித்துக் கொள்ள ஒன்றுமில்லை என்பது பங்கஜத்துக்கு எட்டவில்லை.

அன்று காலை எழுந்தவுடன் லீலாவுக்குக் கடுமையாக உத்தரவிட்டாள் பங்கஜம்.

"உனக்கு அவள் மாதிரி செல்வம் கிடந்து கொழிக்கவில்லை. பொம்மை கிம்மைன்னு விளையாடப் போனாயோ கொன்று விடுவேன் கொன்று..."

சுடு சரங்களாகப் பாய்ந்த சொற்களை உஷாவும், ரங்கனும் கேட்டார்கள். நீர் சுரந்த விழிகளுடன் தன்னைப் பார்த்த உஷாவை ரங்கன் தன் நண்பனின் கல்யாணத்துக்கு வரும்படி அழைத்துப் போய் விட்டான். பங்கஜம் கைக் குழந்தைக்குப் பால் புகட்டப் போனதும் லீலாவும், மீனாவும் விளையாட மாடிக்குப் போய் விட்டார்கள்.

கீழேயிருந்து மறுபடியும் அதிர்ந்து வந்தது பங்கஜத்தின் குரல்.

"அடியே லீலா!"

லீலாவின் காதில் இது பயங்கரமாகத்தான் ஒலித்தது. ஆயினும் அவள் உலகமாகிற பொம்மைக் கல்யாணத்துக்குள் அன்னையின் வேற்றுமைக் குரல் ஒலிக்கவில்லை — எடுபடவில்லை.

"டுடும்... டுடும்" என்று வாயால் மேளத்தை முழக்கினாள் ஒரு பெண்.

"ஆச்சுடியம்மா! தாலி கட்டற வேளை வந்தாச்சு. எல்லோரும் பெண்ணைப் புடிச்சுக் கொண்டு வந்து உக்கார வையுங்கோ!—" லீலா சொன்னாள்.

"முடியாது... முடியாது... மாப்பிள்ளை வந்துதான் எங்க பொண் கழுத்திலே மாலை போட்டுட்டு தாலி கட்டணும்" மீனா மறுத்தாள்.

"ஒம் பொண் ரொம்ப ஒசத்தியோ?" இது லீலா.

"ஒம் பிள்ளை ரொம்ப ஒசத்தியோ?" இது மீனா.

"போங்கடி அம்மா... சும்மா சண்டைதான் உங்களுக்கு —" வந்திருந்த விருந்தாளிப் பெண் சண்டையைத் தீர்க்க முயன்றாள்.

உஷா மாடிப் படிகளில் நின்றவள் நின்றவள்தான்.

குழந்தைகளாகிற அவர்கள் பெரியவர்களின் உலகத்துக்குள் புகுந்து அந்த நிலவரத்தை அழகாகச் சித்தரித்து விளையாடுவதைக் கலைக்க அவள் முயலவில்லை.

பெரியவர்களால் இம்மாதிரி மனத்தைத் திறந்து ஒரு காரியம் செய்ய முடியுமா? தங்கள் கௌரவம், அந்தஸ்து முதலியவற்றிலிருந்து அவர்கள் ஒரு இம்மியும் நகர்ந்து வாழ முயன்றதில்லை. இந்தக் குழந்தைகளைப் போல ஒரு நிமிஷம் சண்டை, அடுத்த நிமிஷம் சல்லாபம் என்று அவர்களால் இருக்க முடியுமா. சண்டை என்றால் சண்டைதான். அப்புறம் சமரசம் ஏற்பட எத்தனை ஆண்டுகள் ஆகின்றன?

இவர்கள் உலகம்தான் உண்மை அன்பு கொண்ட உலகம். இதனுள் மன்னி வந்து எட்டிப் பார்ப்பதே இல்லை. பார்த்து விட்டால்...

சிந்தனை கிளைத்துச் செழித்துப் படர உஷா முகவாயில் கைகளை ஊன்றியவாறு அந்தக் காட்சி இன்பத்தில் லயித்து விட்டாள்.

"டுடும்...டுடும்...மாப்பிள்ளை வரார்... எல்லோரும் வழி விடுங்கோ.."

லீலா ராஜாவை எடுத்துக் கொண்டு அசைந்து அசைந்து நடந்து வந்தாள். அவளே மாப்பிள்ளை என்கிற நினைப்பு! கம்பீரமான அழகிய ஆண் மகனைப் போல் அவள் அதிர்ந்து நடந்தாள்.

எதிரே ஜீஜியுடன் தலை குனிந்து காத்திருந்தாள் மீனா. மணப் பெண்ணின் நாணம், கன்னக் குழிவுகள், கடைக்கண் பார்வை எல்லாமே அந்த ஐந்து வயதுப் பாவை படித்து விட்டாள் போலும்.

உஷாவுக்குச் சிரிப்பு பொத்துக் கொண்டு வந்தது.

"மாப்பிள்ளை மாலை போடறார்..." லீலா ஜீஜி பொம்மையின் கழுத்தில் மாலை போட்டாள்.

"பெண்ணும் மாலை போடறாள்... மீனா மழலைக் குரலில் நவின்றாள்.

"டுடும்... பீபீ... டுடும்..." கூட இருந்த பெண் ஒருத்தி முழக்க மாப்பிள்ளை தாலி கட்டி முடித்து விட்டார்.

குழந்தைகள் ஆளுக்கொரு பிஸ்கோத்தும், இனிப்புகளும் எடுத்துச் சுவைக்க ஆரம்பித்தார்கள்.

உஷா சிந்தனை கலைந்து திரும்பியவுடன் பங்கஜம் அருகில் நிற்பதைக் கண்டாள்.

"நீங்கள் எப்பொழுது வந்தீர்கள்?"

"அப்பொழுதே வந்து விட்டேன். லீலாவைத் தர தரவென்று இழுத்துப் போய் நாலு அறை வைக்க வேண்டும் என்று வந்தேன். ஆனால்..."

பிறகு அவள் என்ன சொல்லப் போகிறாள் என்பது உஷாவுக்குப் புரிந்து விட்டது.

குழந்தைகள் உலகமாகிற பொம்மைக் கல்யாணத்துக்குள் அவளை அறியாமல் உள்ளே நுழைந்து விட்டிருக்கிறாள். சில நிமிஷங்கள் அவளை மறந்து, அவள் வேற்றுமைகளை மறந்து அவர்களுடன் அவள் ஒன்றி விட்டாள். மீண்டும் பழைய பங்கஜமாக அவள் ஆனாலும் பாதகமில்லை. அந்தச் சில நிமிஷங்கள் அவள் உள்ளத்திலே ஏற்படுத்திய மாறுதல்கள் எத்தனை எத்தனையோ? பங்கஜம் கீழே எப்பொழுது போனாளோ?

"அடியே லீலா!"

"இதோ வந்துட்டேம்மா —" லீலா சொல்லிக் கொண்டே படிகளில் தடதடவென்று இறங்கி ஓடினாள்.



கார்த்திகை மாதம். சாரல் காற்றும் கொசுத் தூறலுமாக இருந்தது. வாடைக் காற்று 'ஊ' என்று பலமாக வீசவே வாசல் கதவைச் சாத்தித் தாழிட வெளியே போனேன். இருட்டிலே முக்காடு இட்ட ஓர் உருவம் கதவின் அருகில் நின்றிருந்தது. எனக்கு அந்தக் குளிரிலும் வியர்த்துக் கொட்டியது.



# விட்ட குறை

ஸரோஜா ராமமூர்த்தி

அன்று என் கணவர் காரியாலயத்திலிருந்து இரவு எட்டு மணி ஆகியும் வீடு திரும்பவில்லை. குழந்தைகள் எல்லோரும் கூடத்தில் தூங்கிக் கொண்டிருந்தனர். சட்டென்று கூடத்துக்குச் சென்று விளக்கின் 'ஸ்விட்'சைத் தட்டினேன். பளீரென்று தெருவில் வெளிச்சம் விழுந்தது. முக்காடிட்டு நின்றிருந்த உருவம் ஒரு ஸ்திரீ. அதிலும் கர்ப்பிணி. மழையில் நனைந்த புடவையுடன் அவள் வெட வெட என்று உதற நின்றிருந்தாள். எனக்குத் தைரியம் உண்டாயிற்று.

"யாரம்மா நீ?" என்று கேட்டேன்.

பதில் இல்லை.

"யாரம்மா நீ? ஏன் பேசமாட்டேன் என்கிறாய்?"

அந்தப் பெண் விக்கி விக்கி அழுதாள்.

விளக்கொளியில் அவள் முகத்தைக் கூர்ந்து கவனித்தேன். பால் வடியும் அந்த முகத்தில்தான் எத்தனை துயரம்? உருண்டையான கனை பொருந்திய முகத்தில் குவிந்த உதடுகளும், வட்டக் கரிய விழிகளும், தாய்மையால் நிறைவு பெற்றுக் கொழுவிய கன்னங்களும் வறுமை இளமையுடன் போட்டியிட்டு ஜெயிக்காது என்பதை எடுத்துச் சொல்லின. அவள் என் முகத்தைப் பரிதாபமாகப் பார்த்தாள்.

"உள்ளே வா அம்மா, சாப்பிடலாம்" என்று அழைத்தேன். தயங்கிக் கொண்டே படியேறி வந்தாள் அவள். கூடத்தில் ஒரு பக்கம் இலை போட்டுப் பரிமாறினேன். நல்ல பசி. அவள் ஆவலுடன் சாப்பிடுவதைக் கவனித்துக் கொண்டே உட்கார்ந்திருந்தேன். பாதி சாப்பாட்டில் அவள் தேம்பினாள். மாலைமாலையாகக் கண்ணீர் முத்துப் போல் உருண்டு அவள் கன்னங்களில் வழிந்தது. பரிவுடன் அவளைப்பார்த்து, "ஏனம்மா அழுகிறாய்? உன் புருஷன் எங்கே? உனக்கு இது எத்தனை மாசம்?" என்றுகேட்டேன்.

அவள் என்னைப் பரிதாபமாக ஏறிட்டுப் பார்த்தாள். அவள் மனம் குமுறிக் குமைந்து கொண்டிருந்ததை அவள் பார்வையிலேயே ஊகிக்க முடிந்தது. உதடுகள் துடிக்க அவள், "என் புருஷனா? அவர் எங்கே இருக்கிறார் என்பதே எனக்குத் தெரியாதே! அவர் வீட்டை விட்டுக் கிளம்பி மூன்று மாதங்கள் ஆகின்றன" என்றாள்.

"அப்படியா? புருஷன் வீட்டிலிருந்து போய்விட்டார் என்றால் அதற்கு ஏதாவது காரணம் இருக்கவேண்டுமே?" என்று கேட்டேன் நான்.

"காரணமா? அதற்குக் காரணம் நான்தான்! என் வயிற்றில் வளரும் இந்தக் குழந்தைதான்! நான் கர்ப்பமாக இருக்கிறேன் என்கிற ஒரு விஷயமே அவரை வீட்டை விட்டு விரட்டி விட்டது."

"ஏன்?"—எனக்கு ஒன்றுமே புரியவில்லை. மகப்பேறுக்காகத் தவம் இருக்கும் பலரின் நினைவுதான் என்னுள் எழுந்தது. குழந்தை பிறந்து விடுகிறதே

என்று புருஷன் கோபித்துக்கொண்டு வீட்டை விட்டு ஓடி விட்டானமே !

'' உனக்கு வேறு குழந்தைகள் இருக்கிறார்களா ?'' என்று கேட்டேன்.

'' இருக்கிறார்கள். மூன்று குழந்தைகளை அனாதைப் பள்ளிக்கூடங்களில் விட்டிருக்கிறேன். நான்காவதாக இதையும் நான் அனாதையாக்குவதற்குத்தான் சுமந்து கொண்டு வருகிறேன் '' என்றாள் அந்தப் பெண்.

பிறகு அவள் கூறிய வரலாறு இது தான் :—

அவளும், அவள் கணவனும் எல்லோரையும் போல் விவாகம் செய்து கொண்டுஆனந்தமாக இல்வாழ்க்கையை ஆரம்பித்தவர்கள்தான். முதல் குழந்தை பிறந்தவுடன் அவளுடைய கணவனுக்கு வேலை போயிற்று. இரண்டாவது பிறந்தவுடன் கணவனின் உடல் நலமே பாதிக்கப்பட்டு விட்டது. மூன்றாவது குழந்தையின் போது இந்தப் பெண்ணே வியாதியாகப் படுத்து விட்டாள். வறுமையின் கொடிய பிடியில் சிக்கி அந்தக் குடும்பம் தத்தளித்த போது, சிலர் இரக்கப்பட்டுக் குழந்தைகளை அனாதை விடுதிகளுக்கு அனுப்பி வைத்தார்கள். வியாதியிலிருந்து மீண்டவுடன் தன் வயிற்றில் மறுபடியும் ஒரு உயிர் வளர்வதை உணர்ந்தாள் அவள். இந்த ரகசியத்தைக் கணவனிடம் அவள் தெரிவித்தபோது அவன் அலட்சியமாகச் சிரித்தான். '' வேண்டியதுதான் ! நம்முடைய பரம்பரை பெருக வேண்டியது தான் !'' என்றான் சிரிப்பினிடையே. ஆனால், அவன் உள்ளத்தில் குமுறும் எண்ணங்கள் சீறிக்கொண்டு வார்த்தைகளாக வெளி வந்தன.

''முதலில் அந்தப் பீடையை முளையிலேயே கிள்ளி விட ஏதாவது வழி இருக்கிறதா என்று பார், சாரதா !'' என்று இரைந்தான். அவன் வார்த்தைகளின் சீற்றத்தைப் பார்த்தால் அவன் மூன்று குழந்தைகளுக்குத் தகப்பனா என்று ஆச்சர்யப்படத் தோன்றும்.

'' என்ன பண்ணச் சொல்கிறீர்கள் ?'' என்று கேட்டாள் சாரதா.

'' என்ன பண்ணச் சொல்கிறேனா ? பெற்றுப் பெற்று அனாதை ஆச்ரமத்துக்கு அனுப்பச் சொல்கிறேன் ! யாரிடமாவது ஏதாவது மருந்து வாங்கிச் சாப்பிடு. கர்ப்பச் சிதைவுக்கு எத்தனையோ மருந்துகள் விற்கின்றன. பிச்சை வாங்கியாவது மருந்தை வாங்கி வருகிறேன்.''

சாரதாவின் உடம்பெல்லாம் பதறியது. முழுசு முழுசாக மூன்று குழந்தைகளைப் பெற்ற அன்னை அவள். நான்காவது வேண்டும் என்று அவள் கோவிலுக்குப் போகவில்லை. நோன்புகள் செய்யவில்லை. இருந்தாலும் கர்ப்பத்தைச் சிதைப்பதா ? வளரும் உயிரை அழிப்பதா ?

'' ஹூம்......சாப்பிடுகிறாயா வாங்கி வருகிறேன் '' என்றான் மீண்டும்.

'' வேண்டாம், என்னால் முடியாது !'' என்றாள் சாரதா தீர்மானமாக.

'' சீ! நீயும் ஒரு மனுஷியா ? வெட்கம் அற்றவள் !'' என்று கணவன் கூறிவிட்டுச் சென்றவன்தான். மூன்று மாதங்களாக அவனைப்பற்றித் தகவலே இல்லை.

* * *

சாரதாவின் கதையைக் கேட்டு என் மனம் புண்ணாக வலித்தது. தாய்மையை ஒரு மகத்தான பேறாகக் கருதி இருந்த நாம் இவ்வளவு தூரம் அதைத் தாழ்வு படுத்துகிறோமே என்று வருத்தப்பட்டேன். குழந்தைகள் பெருகாமல் இருப்பதற்கு வேண்டுமானால் எதையாவது செய்துவிட்டுப் போகட்டும். கர்ப்பத்தில் வளரும் உயிரை அழிப்பதற்குக் கூட வழி இருக்கிறதாமே? எனக்கு அது பிடிக்கவில்லை. யோசனையிலிருந்து விடுபட்ட நான் ஏறிட்டு அவளைப் பார்த்தேன்.

'' அப்புறம் ? நீ என்ன செய்வதாக உத்தேசம் ? உனக்கு ஆறுமாசம் இருக்கும்போல் இருக்கிறதே ?'' என்று கேட்டேன்.

'' என்னத்தைச் செய்கிறது ? அவர் சொன்னதைக் கேட்காமல் போனோமே ?'' என்று வருத்தமாக இருக்கிறது என்றாள் சாரதா.

''சட்டென்று எந்த முடிவுக்கும் வந்து விடாதே அம்மா. வளரும் உயிர் உன்னுடையதல்ல. அது ஆண்டவனுக்குச் சொந்தம்'' இதற்குமேல் நான் அவளுக்கு ஒன்றும் சொல்ல முடியவில்லை. தெருத் திண்ணையில் அவள் படுத்துக் கொள்ள வசதிசெய்து கொடுத்துவிட்டு, நான் என் வேலைகளைக் கவனிக்கப் போய்விட்டேன்.

## 2

நடு இரவில் என்னுள்ளே ஒரு பயம் என்னைத் தூங்கவிடாமல் செய்து கொண்டிருந்தது. 'பிள்ளைத்தாச்சியைத்

தெருத் திண்ணையில் தனியாக விட்டு விட்டோமே, அவள் புத்தி எப்படி யெல்லாம் மாறுமோ' என்று இரவெல்லாம் என் மனம் சஞ்சலப் பட்டுக் கொண்டே இருந்தது.

விடிந்து வரும் நேரத்தில் தெருக் கதவைத் திறந்து பார்த்த போது வாசல் திண்ணையில் அவளைக் காணவில்லை. 'நினைத்தபடியே நடந்து விட்டதே. பாவம், எங்கு போனளோ' என்று மனம் வருந்தினேன். அவளுடைய பரிதாபமான முகம் என் முன் தோன்றி மறைந்து கொண்டிருந்தது.

நான்கு நாட்களுக்கு அப்புறம் வீட்டில் குழந்தைக்கு ஜுரம் வரவே, டாக்டர் சத்யபாமாவின் வீட்டுக்குக் குழந்தையுடன் சென்றேன். காலை பத்தரை மணிக்குமேல் ஆகிவிட்டதால் 'டிஸ்பென்ஸரி'யில் கூட்டம் அதிகம் இல்லை. டாக்டர் சத்யபாமா குழந்தையைப் பார்த்து மருந்து கொடுத்தாள். மருந்துடன் நான் வாசற்படி தாண்டும்போது உள்ளே பரிசோதனை அறையின் ஜன்னல் அருகே ஒரு முகம் தெரிந்தது. சாரதா அங்கு சுவரில் தலையைச் சாய்த்துக் கொண்டு நின்றிருந்தாள்.

"உனக்கு ஆறு மாசம் ஆகி விட்டதே அம்மா! நிதானமாக வந்திருக்கிறயே, அரைக் குழந்தையாகி விட்டதே?" என்றாள் டாக்டர் சத்யபாமா.

"போனல் போகிறது டாக்டர். முழுக் குழந்தையாகப் பிறந்து பட்டினியால் சாவதை விட அரைக் குழந்தையாக இருக்கும்போதே போகட்டும்" என்றாள் சாரதா.

டாக்டர் சத்யபாமா யோசனை செய்தாள். அவளுடைய மனசில் ஓடும் எண்ணங்களை என்னல் ஊகிக்க முடியவில்லை. என் பொறுமை எல்லையை மீறியது. ஜன்னல் அருகே சென்று, "சாரதா!" என்று அழைத்தேன்.

அவள் திடுக்கிட்டு என்னைத் திரும்பிப் பார்த்தாள்.

"டாக்டர்! இவளை எங்கள் வீட்டுக்கு அனுப்புங்கள். எனக்கு உதவியாகக் குடும்ப வேலைகளைச் செய்து பிழைத்துக் கொள்ளட்டும். உங்கள் அறிவு, திறமை எல்லாம் அழிவு வேலைக்குப் பயன்பட வேண்டாம். ஆக்க வேலைக்குப் பயன்படட்டும். இவள் வயிற்றில் வளரும் சிசு எந்த நோக்கத்துடன் உலகத்துக்கு அனுப்பப்பட்டிருக்கிறதோ? அந்த நோக்கத்தை 'அந்த சக்தி'யை நாம் உணராத வரையில் அதன் அழிவுக்கு மாத்திரம் நாம் காரணமாக இருக்கலாமா?"

மூச்சுவாங்கப் பேசிய என்னை டாக்டர் சத்யபாமா அன்புடன் தட்டிக் கொடுத்தாள். பிறகு புத்திமதிகள் கூறி சாரதாவை என்னுடன் அனுப்பி வைத்தாள்.



வாத்தியார்:— டேய், சோமு. அக்ரைப் பற்றி எந்த நூலில் எழுதி யிருகிறது. சொல்?

சோமு:— நூலில் எப்படி சார் எழுத முடியும்?

---

3

"வீட்டிலே ஒரு புதுப்பெண் வந்திருக்கிறளே. பாவம், கர்ப்பிணி மாதிரி இருக்கிறதே. யார் அது?" என்று கேட்டார் என் கணவர்.

அவள் கதையைக் கூறினேன்.

"உனக்கு உதவியாக அவள் வந்திருக்கிறளா? அவளுக்கு உதவியாக நீ அவளுக்குப் பிரசவம் பார்க்கப் போகிறயா? வேண்டாத வம்பை எல்லாம் விலைக்கு வாங்கிக் கொண்டு. ஹும்......" என் கணவரின் சந்தேகமான கேள்வி இது.

நான் அவருடைய கேள்விக்குச் சரியான பதிலைக் கூறவில்லை. யாருக்கு யார் உதவி புரிகிறர்கள்? அவளுக்கு உதவி புரிய என்னை ஆண்டவன் நியமித்திருக்கிறனே என்னவோ! இல்லையெனில் வீட்டை விட்டுச் சொல்லாமல் வெளியேறியவளை மறுபடியும் நான் டாக்டர் 'டிஸ்பென்ஸரி'யில் சந்திப்பானேன்? அவள் வயிற்றில் வளரும் சிசு எந்தக் காரணத்துக்காக இந்த உலகத்துக்கு வர இருக்கிறதோ? முன் ஜன்மத்தில் விட்டுப் போன குறையை இந்த ஜன்மத்தில் பூர்த்தி செய்து கொள்ள வருகிறதோ என்னமோ? அப்படியும் உண்டா?

மூளை குழம்பப் போகிற நிலையில் நான் கூடத்தில் உட்கார்ந்து சிந்தனையில் ஆழ்ந்திருந்தேன். எதிரே சாரதா பகல் உணவுக்கு அப்புறம் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். கடந்த பத்து நாட்களில் அவள் உடம்பு எவ்வளவோ தேறி யிருந்தது. தளதள வென்றிருந்த அவள் சிவந்த மேனியில் பசுமஞ்சள் பூசி இருந்தாள். வெற்றிலை போட்டி ருந்த அவள் அதரங்கள் சிவந்து கவிந்திருந்தன. தாய்மைக்குத் தான் எவ்வளவு அழகு? உட்கார்ந்த நிலையிலேயே நான் கண்களை மூடிக்கொண்டே யாசித்தேன்.

என் முன்னே ஒரு புது உலகம் தெரிந்தது. கொழு கொழு என்றிருக்கும் கைகளும், உருண்டை முகமும், வட்டமான விழிகளும், குமுத வாயும் உடைய ஓர் அழகிய பெண் குழந்தை என்னைப் பார்த்துக் 'களுக்' கென்று சிரித்தது. சாரதாவின் வயிற்றிலே வளரும் குழந்தைதான் அது! வியப் பினால் அந்தக் குழந்தையையே பார்த்தேன் நான்.

"என்ன பார்க்கிறீர்கள்?" என்று கேட்டது குழந்தை. சிசு பேசுகிறதே என்று வியந்து ஆவலுடன் கவனித்தேன்.

"அம்மா! நான் பேசுவேன். ஏனெனில், இன்னும் நான் இந்த உலகத்தில் உதிக்க வில்லை பாருங்கள்? நான் பேசுவேன். பேச மட்டும்தானா செய்வேன்? அழகாக ஆடவும் செய்வேன்."

என் ஆச்சரியம் எல்லையை மீறியது.

"நான் யார் தெரியுமா? காமாட்சி!" என்றது குழந்தை.

"என்ன! பிறப்பதற்கு முன் நாமகரணமா?"

"முன் ஜன்மத்தின் பெயர் அம்மா!" காமாட்சி பேச ஆரம்பித்தாள்:—

**கா**ஞ்சியிலே கொலுவிருக்கும் என் அம்மை காமாட்சியின் சன்னிதியில் நாட்டியம் ஆடிச் சேவை புரிந்து வந்த காமாட்சி நான்தான். என்னுடைய கலையைப் பற்றிப் புகழாதவர் யாருமே இல்லை. பதினாறும் வயசிலேயே நாட்டியக் கலையின் சகல நுணுக்கங்களையும் நான் கற்று விட்டேன். என்னைப் பற்றியே எனக்கு ஒரு பெருமிதம். இப்படிப் பெருமை கொள்வதில் தவறு உண்டா? இதைத் தற்பெருமை என்று சொல்லி விட முடியுமா?

இப்படி என்னுள்ளே பூரித்து வளர்ந்த பெருமை என்னை நிலை கொள்ளாமல் அடித்து, சீக்கிரத்தில் பலர் முன்னிலையில் அரங்கேற்றம் ஆகிப் பெருமை அடைய வேண்டும் என்று ஆசைப்பட்



டேன். அதை என் தாயிடமும், குரு விடமும் வெளியிட்டேன்.

முதலில் அவர்கள் என் வேண்டுகோளை நிராகரித்தாலும் பின்னர், என் பிடிவாதத்திற்கு இணங்கினர்கள்.

அன்று காமாட்சி அம்மனுக்குத் தவன உற்சவம். கமகம வென்று மணக்கும் தவனத் தட்டிகளால் பந்தல் வேயப்பட்டு இருந்தது. லோக நாயகியான அவளும் தவனப் பாவாடை அணிந்து பவனி வந்தாள். நாகஸ்வரம் இன்னிசை பொழிந்தது. வானத்தில் மத்தாப்புகள் பூச் சொரிந்தன. அம்பிகையின் முன்பு கலீர் கலீர் என்று சதங்கை ஒலிக்க, நான் அலங்கிருதையாக வந்து கொண்டிருந்தேன். தவன மண்டபத்தில் எள் விழக் கூட இடமில்லாமல் கூட்டம் நெருக்கியடித்துக் கொண்டு நின்றது. அழகி காமாட்சியின் அரங்கேற்றத்தைக் காண மக்கள் திரண்டு இருந்தார்கள்.





ஆட்டம் ஆரம்பமாயிற்று. நான் என்னை மறந்து ஆடினேன். என் சுற்றுப்புறங்களை மறந்தேன். சிலா ரூபிணியாக இருக்கும் தேவியுடன் என் உள்ளம் கலந்தது. அந்தக் கூட்டத்தில் எல்லோரும் என்னையே வியப்புடன் பார்த்தனர்.

ஆட்டம் முடிந்தது. கற்பூர தீபாராதனையும் ஆயிற்று. மருதோன்றி இட்ட என் விரல்களால் கற்பூரத்தைச் சுற்றி வளைத்து எடுத்து என் கண்களில் ஒற்றிக் கொள்ளப் போகு முன்பு சிறு கலக்கம் ஏற்பட்டது. கற்பூர தீபம் விரல்களை நன்ருகச் சுட்டு விட்டது. 'உஸ்ஸ்' என்று சொல்லிக் கொண்டு கையைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டேன் நான். வீட்டுக்கு வந்த பிறகுதான் தெரிந்தது. கையில் புளியங்கொட்டை அளவில் நெருப்புச் சுட்ட புண் செவேல் என்று என்னைத் துன்புறுத்தியது.

அம்மா தேங்காய் எண்ணெயைத் தடவிக் கொண்டே, "முதன் முதலிலே கற்பூரம் விரலைச் சுட்டு விட்டதே! குழந்தைக்கு ஒன்றும் வராமல் அந்தக் காமாட்சிதான் காப்பாத்தணும்" என்ருள்.

தவன உற்சவம் ஆன அடுத்த வெள்ளிக்கிழமை, அம்பிகை காமாட்சியைப் பார்த்து ஒரு வாரத்துக்கு மேலாகி விட்டதே என்கிற எண்ணத்தினால் உந்தப்பட்டு, இரவு ஒன்பது மணிக்குக் கோவிலுக்குப் போனேன். கோவிலில் அன்று கூட்டம் அதிகமில்லை. அம்பிகையின் தரிசனம் முடிந்து அநேகர் போய் விட்டார்கள். உள்ளே நாகசாமி தீட்சிதர் மட்டுமே இருந்தார். "சுவாமி! பிரசாதம் கொடுங்கள்" என்றேன்.

"நீயா காமாட்சி? கைப் புண் எப்படி இருக்கு அம்மா?" என்று விசாரித்தார்.

"தேவலை" என்றேன் நான் சிரித்துக் கொண்டு.

"போகிறது போ. அரங்கேற்றம் பிரமாதமாக இருந்தது. ஆனால் உன் அம்மா பணத்தாசை பிடிச்சவள். எங்கேயாவது வகை தெரியாமல் உன்னைத் தள்ளி விடப்போகிறாள்! நானும் அவளிடம் அப்படியெல்லாம் குழந்தையைப் பாழடித்து விடாதே என்று சொல்லி இருக்கிறேன்."

"சுவாமி! கல்யாணம் அவசியமா? இப்படியே கன்னியாகவே காலம் கழித்து விட்டால் என்ன?" என்று அவரைக் கேட்டுக் கொண்டே, அவர் கொடுத்த கதம்பத்தைக் கூந்தலில் சூட்டிக் கொண்டு, நெற்றியில் குங்குமத்தையும் இட்டுக் கொண்டேன்.

தீட்சிதர் என்னையே உற்றுப் பார்த்தார்.

"அம்மா! இதெல்லாம் நம் சித்தப்படி நடப்பதில்லை. இந்த ஜகன்மாதா புரியும் லீலைகளை உன்னாலும், என்னாலும் அறிய முடியுமா? அவள் என்ன நினைத்திருக்கிறாளோ. அதன்படி ஆட வேண்டியவர்கள் நாம்" என்றார்.

உண்மை! அவள் என்னை அன்றே ஆட்டுவிக்க ஆரம்பித்தாள். சன்னிதியில் நான் நின்றிருக்கும்போதே இரண்டு வாலிபர்கள் தேவியின் தரிசனத்துக்காக வந்தார்கள்.

நான் சன்னிதியை விட்டுப் புறப்பட்டேன். "காமாட்சி! கற்பூர தீபாராதனை நடக்கிறது. பார்த்து விட்டுப் போ அம்மா!" என்றார் தீட்சிதர்.

இரண்டாவது வாலிபன் என்னைத் திரும்பிப் பார்த்தான். வாய்க்குள் "காமாட்சி காமாட்சி" என்று சொல்லிக் கொண்டான். தீபாராதனை முடிந்ததும், "சுவாமி! நான் படம் எழுதுகிறவன். இரண்டு நாட்கள் காஞ்சியில் தங்க வேண்டும். வசதி செய்து தர முடியுமா?" என்று கேட்டான். அதே கேள்வியை முதல் வாலிபனும் கேட்டான். நான் ஒரு கணம் தயங்கினேன். பிறகு சட்டென்று என்னையும் அறியாமல், "என் வீடு அருகில்தான் இருக்கிறது. வந்து தங்கிப் போகலாம்" என்று அழைத்தேன்.

அந்தக் கவிஞனும், சித்திரக்காரனும் என்னுடன் வீட்டிற்கு வந்தனர்.

**ப**டம் எழுதுகிற வாசுதேவன் என்னிடம் அடுத்த நாள் கேட்டார்: "பத்மாசனம் போட்டு தேவி உட்கார்ந்திருக்கிற நிலையில் ஒரு படம் எழுதிப் பத்திரிகைக்கு அனுப்ப வேண்டும். நீதான் அபிநயத்தில் தேர்ந்தவள் ஆயிற்றே? ஒரு நிலையில் உட்கார்ந்தால் படம் எழுதி முடித்து விடுவேன்" என்று.

கவிதை பொழியும் வாலிபர் சொன்னார்: "அப்பொழுது நான் அந்நிலையை ஒரு பாட்டாகப் புனைந்து பாடுவேன். அதைக் கேட்டவர்கள் உருகிப் போவார்கள். தேவியே பிரத்யட்சமாக எதிரில் இருப்பது போல் ஆனந்தம் அடைவார்கள்" என்றார்.

"பாடலைக் கேட்டு உருகிப் போவார்கள் என்பது வாஸ்தவம் தான் அப்பா! ஆனால், நேரில் ஓவியத்தில் அம்பிகையைப் பார்த்தார்களானால் உன் பாடலை விட அதைத்தான் அதிகம் ரசிப்பார்கள்" என்றார் வாசுதேவன்.

கவிஞன் பெருமூச்சு விட்டான்!

"உன் கலை உனக்குப் பெரிது. இருந்தாலும் என்னைத் தாழ்வு படுத்துகிறாய். நீ படம் எழுது. நான் பாட்டு எழுதுகிறேன். காமாட்சியே தீர்ப்புக் கூறட்டும்" என்றார்.

நான் திடுக்கிட்டேன். 'கலைஞர்களுக்குள் போட்டியா? பந்தயமா?' என்று திகைப்படைந்தேன்.

அடுத்த வியாழன் அன்று இருவரும் பாட்டும், படமும் எழுதுவது என்று தீர்மானமாயிற்று. இருவரும் என்னை விரும்புவதாகவே எனக்குத் தோன்றியது.

புதன்கிழமை மாலை கவிஞர் எங்கோ வெளியே போய்விட்டு வந்தார். வந்தவர், "காமாட்சி! தலைவலி மண்டையைப் பிளக்கிறது. ஏதாவது கஷாயம் வைத்துத் தருகிறாயா?" என்று கேட்டார். கஷாயம் வைத்துக் கொடுத்தேன். இரவு கடுமையான ஜுரம். எனக்குப் பயமாக இருந்தது. காலையி

லும் ஜுரம் விடவில்லை. வாசுதேவனிடம் சென்று விஷயத்தைக் கூறினேன்.

"அவன் என்னுடன் போட்டி போடுவது தேவிக்கே பொறுக்கவில்லை. அது தான் ஜுரம் வந்து விட்டது" என்று சொல்லி, லேசாகக் கண்ணைத் திறந்து பார்த்தார்.

"உட்கார் காமாட்சி! சித்திரம் வரைவதற்கு எல்லாம் தயாராக இருக்கிறது, உட்கார்."

"பாவம்! உங்கள் நண்பருக்கு நல்ல ஜுரம். கஞ்சி கொடுத்து விட்டு வருகிறேன்" என்றேன்.

"இருக்கட்டும், கொடுக்கலாம், உட்கார். நீ இருக்கும் இந்த நிலை, படம் எழுத அழகாக இருக்கும். சுருண்ட கூந்தலும், பிறை போன்ற நெற்றியும், வளைந்த புருவமும், பார்ப்பவரின் மனத்தைக் காமப் பாதைக்கு இழுக்கும் கண்களும்! காமாட்சி!" என்று பிதற்றினார் வாசுதேவன்.

என் உடல் நடுங்கியது: உள்ளம் எரிந்தது.

வேதங்களும், மறைகளும் துதி செய்யும் அந்தப் பெயரை, ஒரு தரம் சொன்னால் முக்தி தரக்கூடிய அந்தப் பெயரைக் கேவலம் பதவுரை, கருத்துரை மூலம் தெளிவு படுத்த விரும்புகிறான் அறிவிலி!

"காமாட்சி! தேவி! என்னை மன்னித்து விடு அம்மா. தாயே!" என்று கதறிக் கொண்டே ஜுரத்தில் தவிக்கும் அந்தக் கவிஞனைப் பார்க்கச் சென்றேன் நான்.

**அ**ங்கே ...? அவர் நினைவு தப்பிக் கிடந்தார்.

"ஐயா!" என்று அழைத்தேன். "சுவாமி! என்னைப் பாருங்கள். அன்று கோவிலில் தேவியைத் துதி செய்து பாடிய கவிதைகளைப் பாடுங்கள், சுவாமி!" என்று கூப்பிட்டேன்.

அவர் கண்களை லேசாகத் திறந்தார்.

"காமாட்சி! ஜகன்மாதா! உன் ஊரில், உன் கோவிலுக்கு அண்மையிலேயே இந்த ஜீவனுக்கு முக்தி அடையும் பாக்கியம் இருக்கிறதா அம்மா?" என்றார் என்னைப் பார்த்துக் கை கூப்பி வணங்கி.

"சுவாமி! நான் தேவியல்ல. நான் பதிதை. காமாட்சி என்கிற மனிதப் பெண்" என்றேன்.

"இல்லை. நீ தேவிதான். அதோ ஏலவார்குழலி பத்மாசனம் போட்டு அமர்ந்திருக்கிறாளே!"

அவர் சுட்டிக் காட்டிய திசையில் காமாட்சி ஆலய கோபுர விளக்கு சுடர் விட்டது. திரும்பிப் பார்த்தேன். அந்த ஜீவன் காமாட்சியுடன் ஐக்கியமாகி விட்டது.

படம் எழுதுகிறவர் தம் மூட்டைகளுடன் ஊருக்குப் புறப்பட்டு விட்டார்.

ஆனால், கவிஞர் என் உள்ளத்தில் அழியாத இடம் பெற்றார். இந்தச் சந்திப்பு எதற்கு ஏற்பட்டது? தேவி ஏன் அதை நிறைவேற்றவில்லை?

4

**ப**ல நாட்கள் மனம் புண்ணாகித் தவித்திருக்கிறேன். ஏன், தேவி காமாட்சியிடமே மன்றாடிக் கேட்டிருக்கிறேன். உள்ளம் நைந்து, நைந்து வாலிபம் போய் முதுமையும் வந்தது.

முன்பு நாகசாமி தீட்சிதர் நின்ற இடத்தில் அவர் குமாரர் சுவாமிநாத தீட்சிதர் நின்று தேவியை அர்ச்சித்தார். நான் கன்னி தான். என் மனத்திலே க்ஷண காலம் வரித்து விட்ட அந்தக் கவிஞரை நான் அடையவில்லையே என்கிற ஏக்கம் ஒன்றே என்னை நிரந்தரமாகக் கன்னியாகவே இருக்கும்படி செய்து விட்டது.

அன்றும் தவன உற்சவம். எனக்கு வயசு ஐம்பைத்தைந்து. என்னைப் போல எவ்வளவோ பேர் ஆடக் கிளம்பி விட்டார்கள். கோவிலிலிருந்து நாகஸ்வர இசை காற்றில் தவழ்ந்து வந்தது. 'கோவிலுக்குப் போவோமா?' என்ற ஆசை எனக்குள் மூண்டது. இதற்குள் சுவாமிநாத தீட்சிதரே வந்து விட்டார்.

"அம்மா! இன்றைக்கு நீங்கள் தான் ஆட வேண்டும்" என்றார்.

"நானா? கிழமாச்சே சுவாமி! யார் ரசிப்பார்கள்? மேலும் நான் ஆடி எவ்வளவு காலம் ஆயிற்று?"

"கலைக்கு இளமை முதுமை என்று உண்டா அம்மா? உங்கள் சரீரம் மூப்படைந்து விட்டதென்றால் உங்கள் கலை கூடவா வயோதிகம் அடைந்து விட்டது? தேவி காமாட்சியே உத்தரவு தந்திருக்கிறாள்."

"என்ன! தேவி உத்தரவு தந்திருக்கிறாளா?"

"ஆமாம், மாடத் தெரு கமலா, சன்னிதித் தெரு வனஜா, எல்லோரும் தான் போட்டி போட்டார்கள். உங்கள் பெயரையும் எழுதிச் சீட்டுப் போட்டுப் பார்த்தோம். உங்கள் பெயர் தான்



"இனனும் நான்கு வருஷத்தில் உலகமே அழியப் போவதாக நம் ஜோசியர்கள் கூறுகிருர்கள ...!"

"அதைப் பற்றி நான் கவலைப்படவில்லே. இன்னும் நான் நாற்பது வருஷம் உயிரோடு இருப்பதாக என் ஜாதகத்தில் இருக்கிறது!"

---

வந்தது. அன்னே காமாட்சி உங்களே ஆடச் சொல்லி அழைக்கிருள் அம்மா."

அன்னே காமாட்சி என்னே ஆடச் சொல்லி மட்டும் அழைக்க வில்லே. நிரந்தரமாக இவ்வுலகிலிருந்து அழைக்கவே அதை ஒரு சாக்காக அமைத்தாள்.

கோவிலில் அன்றும் பிரமாதமாக ஆடினேன். தேவியின் பிரசாதம் பெற்று வீடு திரும்பியவளே விடியற்காலம் தேவி அழைத்தாள். மலர்கள் மலரும் வேளே, சூரியன் உதிக்கும்பொழுது, கோவிலின் உஷக்கால பூஜையின் மணியின் நாதம் கேட்கும் சமயத்தில் பதிறு வயது மங்கை ஒருத்தி தேஜோமயமாக என்னேப் பார்த்து முறுவலித்தாள்.

"வா காமாட்சி!" என்று அழைத்தாள்.

"அம்மா மாரை வலிக்கிறதே!" என்றேன் பரிவுடன். தேவியின் கரங்கள் என்னேத் தாங்கிக் கொண்டன. துன்பமயமான உலகிலிருந்து நான் விடுபட்டேன்.

5

அன்னே காமாட்சி என்னேப் பார்த்து முறுவலித்து மறுபடியும், "வா, காமாட்சி!" என்று கருணே ததும்ப அழைத்தாள். தேனும், கதலியு... கற்கண்டும் கலந்தாற்போல் இனித்த ... அந்தக் குரலின் மதுரத்தை என்னவென்று சொல்ல?

தேவியின் சன்னிதானத்தில் நின்ற என்னேப் பார்த்து அவள், "குழந்தாய்! பூலோகம் உனக்குக் கசந்து போய் இருக்கும் என்று நினேக்கிறேன். கவலேகளும், ஆசைகளும், விருப்பங்களும், கனவுகளும் இல்லாத இந்த உலகத்தில் நிரந்தரமாக இருந்து விடு" என்ருள் சிரித்துக் கொண்டே.

சிறிது முன்பு என் மனத்தில் நிலவியிருந்த ஆனந்தம் சட்டென்று மறைந்தது. கண்களிலிருந்து கண்ணீர் பெருகி வழிந்தது. தாங்க முடியாத துயரத்துடன் தேவியின் முன்பு வீழ்ந்து வணங்கி எழுந்தேன்.

கை கூப்பிக் கொண்டு யாசித்தேன். "அம்மா! மீண்டும் பூலோகத்தில் நான் பிறக்க வேண்டும்."

"என்ன? மீண்டும் பிறவியா?" தேவி கேலியாக என்னேப் பார்த்தாள்.

"ஆமாம் தாயே! மீண்டும் உலகில் பிறக்க ஆசைப்படுகிறேன். முற்றுப் பெருத என் கலேயைப் பூர்த்தி செய்ய ஆசைப்படுகிறேன். பதினுறு வயசில் உன் சன்னிதியில் ஆடியவள் ஐம்பத்தைந்து வயசு வரைக்கும் வீட்டில் அடைந்து கிடந்தேன். க்ஷணகாலம் உதித்த ஓர் அற்ப ஆசைக்காக நீ எனக்கு அளித்திருந்த அகண்ட கலே—இன்பத்தை நுகர முடியாத அபாக்கியவதியாகி விட்டேன். எனவே மீண்டும் பெண் ஜன்மம் வேண்டும் தாயே. அதிலும், உன்னே ஆடிப் பாடித் துதிக்கும்படியான மகத்தான பேற்றை எனக்கு அருள்வாய் அம்மா."

அன்னே காமாட்சி முறுவலித்தாள். பிறகு கருணே பொங்க என்னேப் பார்த்து, "அப்படியே ஆகட்டும்" என்று அருளிஞள்.

விட்டுப்போன குறையை நிறைவேற்ற, பூர்த்தி செய்ய, மறுபடியும் கர்ப்ப வாசம் செய்யும் என்னேக் கருவிலேயே அழிக்க என் தந்தையும் ஆத்திரப்பட்டார். அவரைப் பிரிந்து அல்லல் படும்போது என்னே அழித்துவிட என் தாயும் யோசித்தாள். அதற்கு ஆதரவு தருவது போல் வைத்தியரும் ஒத்துப் பேசிஞள். அழிவற்ற ஆதிசக்தியிடம் வரம் பெற்று, விட்ட குறையைப் பூர்த்தி செய்ய வந்திருக்கும் என்னே இவர்களால் அழித்து விட முடியுமா?"

நான் அகல விழித்த கண்களுடன் அந்தக் குழந்தை சொல்வதைக் கேட்டுக் கொண்டே இருந்தேன்.

ஜன்னல் வழியாகப் பாயும் சூரிய வெளிச்சம் என் முகத்தில் சுரீரென்று குத்தியது. கண்களைத் திறந்து பார்த்தால் சாரதா அப்பொழுதுதான் தூக்கம் கலைந்து எழுந்து உட்கார்ந்திருந்தாள். என் மனத்தில் விவரிக்க முடியாத ஆச்சர்யமும்,பயமும் நிறைந்தது. என்ன அதிசயமான கனவு? கனவா அது? கர்ப்பத்தில் வளரும் ஒரு ஆத்மாவின் புனிதமான சரிதை அல்லவா? ஆனால் வெளியில் யாரிடமாவது சொல்ல முடியுமா இதை? நம்புவார்களா?

"நன்றாகத் தூங்கினாய் போல் இருக்கிறதே?" என்று சாரதாவைப் பார்த்துக் கேட்டேன்.

"ஆமாம், தூங்கிப் போனேன். அழகிய பெண் குழந்தை ஒன்று மழலை பேசி என்னைச் சுற்றி சுற்றி வந்தது. குழந்தை தான் என்ன அழகு போங்கள்!" என்றாள் சாரதா சிரித்த முகத்துடன்.

நான் அவளுக்குப் பதில் எதுவும் கூறவில்லை. நான் கண்ட கனவைப் பற்றியே என் மனம் ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டே இருந்தது.

அடுத்த நாள் வெள்ளிக்கிழமை. காலையிலேயே சாரதாவுக்கு உடம்பு சரியில்லை. அவசரமாக வீட்டு வேலைகளைக் கவனித்து விட்டு அவளை டாக்டர் சத்யபாமாவின் 'ஹோமு'க்கு அழைத்துப் போனேன்.

என்னைச் சாரதா அதிக நேரம் காத்திருக்கும்படி செய்யவில்லை. ஏதோ அலுவலாக வீடு சென்று திரும்பிய என்னைப் பிரசவ அறையிலிருந்து "குவா குவா" என்று குழந்தையின் அழு குரல் வரவேற்றது.

சாரதாவின் அருகில் தங்கச் சிலை மாதிரி அழகிய பெண் குழந்தை ஒன்று படுத்திருந்தது. ஆஹா! குழந்தைதான் என்ன அழகு! அந்தக் கண்களில் தான் என்ன கவர்ச்சி? காதளவு நீண்ட அந்தக் கருவிழிகளின் அசைவிலே எத்தனையோ பாவங்களை வெளியிட முடியும். கனவு லோகத்திலே நான் கண்ட அந்தப் பெண்தான்... ஒருவேளை அதெல்லாம் நிசந்தானா?

டாக்டர் சத்யபாமா வந்து என் தோளின் மீது கையை வைத்தாள். நான் திரும்பி அவளைப் பார்த்தேன்.

"பார்த்தீர்களா? குழந்தை பிறப்பதற்கு முன்பு குழந்தையே வேண்டாம் என்றவள், இப்பொழுது குழந்தையை அணைத்துப் பிடித்துக் கொண்டு படுத்திருப்பதை?" என்றாள் சிரித்துக் கொண்டே.

சாரதா மெல்லிய குரலில் சொன்னாள்.

"குழந்தையை எனக்குக் கொடுத்துவிடு என்கிறார்கள் டாக்டர் அம்மாள். இந்தத் தங்கச் சிலையை எப்படிக் கொடுக்க முடியும்?"

"குழந்தை வெள்ளிக் கிழமை பிறந்திருக்கிறாள். லக்ஷ்மி என்று பெயர் வைத்து விடு. நான் வேடிக்கையாகக் கேட்டேன் சாரதா. தவறாக நினைத்து விடாதே. நீ ஏதாவது அசட்டுத்தனமாகச் செய்து விடாமல் அந்த மட்டும் சமர்த்தாக இருந்தாயே?" என்றாள் டாக்டர் சத்தியபாமா.

"லக்ஷ்மி என்று கூப்பிடச் சொல்கிறீர்கள்? நான் வேறு என்னவெல்லாமோ நினைத்துக் கொண்டிருந்தேனே?" என்றாள் சாரதா மகிழ்ச்சி பொங்கும் குரலில்.

இதுவரை பேசாமல் நின்றிருந்த என்னை ஏதோ ஒரு சக்தி பேச வைத்தது.

"குழந்தையின் கண்களின் பார்வை அன்பு மயமாக இருக்கிறது. பார்வையிலே நயமும், அன்பும் மிதக்கின்றன. என் உள்ளத்திலே ஏதோ ஒன்று ஓயாமல் ஒரு நாமத்தைச் சொல்லி அதை உங்களுக்கு அறிவிக்கும்படி என்னைக் கேட்டுக் கொள்கிறது" என்றேன் நான்.

டாக்டரும் சாரதாவும் ஆவலோடு என்னைப் பார்த்தனர்.

நான் கண்களை மூடிச் சிறிது நின்றிருந்தேன். பிறகு ஆசையுடன் அந்தக் குழந்தையைப் பார்த்து, "'காமாட்சி' என்று பெயர் வைத்து விடலாம்" என்றேன்.

"ஆஹா! அப்படியே செய்யலாம். பேஷான பெயர் ஆயிற்றே! ஒரு தரம் நினைத்தாலும் அழைத்தாலும் இன்பத்தை அருளும் பெயர் அல்லவா?" என்றாள் டாக்டர் சத்யபாமா.

குழந்தை காமாட்சி நித்திரையில் இருந்தாள். அவளுடைய விட்ட குறையைப் பூர்த்தி செய்ய பூலோகத்தில் பிறந்து விட்ட சாந்தியில் அவள் முகம் மலர்ந்து நித்திரை செய்து கொண்டிருந்தாளோ என்னவோ?

# படைப்பு

**சரோஜா ராமமூர்த்தி**

கடல் சூழ்ந்த இவ்வையகத்தை இறைவனும் இறைவியும் அளவிலாப் பெருமையுடன் பார்த்துக் கொண்டிருந்தனர். காற்றில், நீரில், நிலத்தில் ஒவ்வொரு விநாடியும் உயிர்கள் தோன்றிப் பெருகிக் கொண்டேயிருந்தன. இறைவி தன் விழி மலர்களை மலர்த்தி, அவற்றை மகிழ்ச்சியுடன் நோக்கினாள். இறைவன் இறைவியின் மந்தகாச முகத்தைப் பார்த்துப் பார்த்து போதை தலைக்கேற, உன்மத்தம் பிடித்தவன் போல் அவளை இறுகப் பற்றி அணைத்துக் கொண்டான்.

இறைவி நாணம் கொண்டாள். இறைவன் அதை ரசித்தான், மகிழ்ந்தான். அப்பொழுது காற்றில் எங்கிருந்தோ இரு குரல்கள் வந்து அவர்கள் திருச் செவிகளில் மோதின. இறைவி கவலையுடன் நாயகனை நோக்கினாள்.

''பிரபோ! தங்கள் படைப்பின் விநோதத்தின் ரகசியம் எனக்கு விளங்கவில்லையே! அதோ அந்தப் பையன் சொல்வதைக் கேட்டீர்களா?..''

''என்ன சொல்கிறான் தேவி...?''

''அவன் சூளுரைப்பதைக் கேளுங்கள். அவனுக்குத் திருமணத்தில் ஆசையில்லையாம். உளுத்துப் போன அவனால் இந்த வையகத்துக்கு வம்ச விருத்தி வேண்டாமாம்...இப்படியே இருந்து மறைந்து விடப் போகிறானாம். இப்படி அவன் தன் அன்னையுடன் வாதாடுகிறான் சுவாமி...''

உலக நாயகி கூறுவது கேட்டு உலக நாயகன் நகைத்தவாறு இறைவியை அன்புடன் அணைத்துக் கொண்டான்...

மாதவா! என் அப்பனே இல்லையோ? நான் சொல்கிறதைக் கேளடா: உன்னாலே இந்த வம்சம் விளங்க வேண்டுமடா...ஏழையோ, பாழையோ ஒரு பெண்ணைப் பார்த்துக் கல்யாணம் பண்ணிக் கொள் அப்பா.... உன் வயிற்றில் ஒன்று...அது ஆணோ பெண்ணோ பிறந்தால் போதும்.... பார்த்து விட்டு நான் கண்ணை மூடுகிறேனடா...''

தாயின் வற்றிச் சுருங்கிய விரல்கள் அவன் மோதிரச் சுருள் கிராப்புத் தலையுடன் விளையாடின. காய்ச்சிய பசும் பாலில் படிந்திருக்கும் லேசான பொன் நிறத்தை உடையவன் மாதவன். கூர்மையான மூக்கும், நீண்ட விழிகளும் கொண்ட அழகன் அவன்: தந்தை வைத்து விட்டுப் போன சொத்து ஏராளமாக இருந்தது. ஏகப்பட்ட செல்வத்தை வைத்துப் போன தந்தை ஆரோக்கியமுள்ள மகனை வைத்து அந்த கிழத் தாயை மகிழும் படிச் செய்யவில்லை.

மாதவனுக்கு இதய பலவீனம். பார்ப்பதற்கு ஆள் வாட்ட சாட்டமாக அமைந்திருந்தாலும், அவன் எதற்கும் உபயோகமில்லாதவன். காலையில் எழுந்தவுடன் மேஜை மீது காப்பி தயாராக இருக்கும். தோட்டத்தை ஒரு சுற்றுச் சுற்றி விட்டு வந்தாலே மார்புக் கூடு பட பட வென்று அடித்துக் கொள்ளும். கண்களைச் சுழற்றும்.

''மாதவா, ஏண்டா இப்படி அலையறே!..'' என்று கூறி ஆதரவுடன் அணைத்துக் கொள்வாள் அன்னை. அதெல்லாம் பதினைந்து வயதில். மகன் பெரியவனாக வளர வளர அவனுடைய அழகும் போட்டி போட்டு வளர்ந்தது.

ராஜா மாதிரி இருக்கிருன். இந்தக் கிழவி கொடுத்து வைக்கவில்லை. ஒன்றே ஒன்று. அது நன்ருக இருக்காதோ?' ஊராரின் விமரிசனம் இது. ஊராருக் கென்ன? நல்லது கெட்டது இரண்டையுமே பல்லில் கடித்துச் சுவைப்பார்கள்.

நெடிதுயர்ந்து நிற்கும் மகனின் கழுத்தில் மாலையைப் போட்டு மணக்கோலத்தில் காண அன்னையின் மனம் துடித்தது. பால்யத்தில் கணவன் மறைந்ததும், இரண்டு வயசுப் பிள்ளையின் கையை ஊன்றுகோலாகப் பற்றிக் கொண்டு,இருண்டு விட்ட தன் வாழ்க்கையில் ஒளியைக் காண முயன்ற அந்த அன்னை, அப்படி ஆசைப்பட்டதில் தவறென்று மில்லையே ?

''மாதூ!...'' என்று அழைத்து, ஆவலே உருவாக மகனின் முகத்தை நிமிர்த்தி, ஆசையுடன் அவன் என்ன சொல்லப் போகிருன் என்பதைக் கவனித்துக் கொண்டிருந்தாள் அவள்.

''அம்மா...அம்மா... உனக்கு ஒரு பிள்ளை பிறக்கவே இல்லை யென்று நினைத்துக் கொள் அம்மா...என்னைக்கல்யாணம் செய்து கொள்ளச் சொல்லி வற்புறுத்தாதே...'' மாதவன் அன்னையின் இரு கர மலர்களையும் பற்றிக் கொண்டு'ஓ' வென்று அழுது விட்டான்.





வநது விட்டது பாழும் படபடப்பு. அது ஓய்வதற்குள் அந்தக்கிழவி அலங்க மலங்கப் பதறி விட்டாள். மார்பைத் தடவி விட்டாள். தன் மேல் சாய்த்துக் கொண்ட மகனின் கன்னங்களை ஆசையுடன் வருடினுள்.

''வேண்டாம் மாது.. வேண்டாம்.. நீ எனக்குப் பிள்ளையாக இரப்பா... நான் அதிகம் ஆசைப்படக் கொடுத்து வைக்காத ஜென்மம்..'' அந்த அம்மாள் தன் வேதனையை விழுங்கிய வாறு மகனிடம் கூறி அவனைத் தேற்றினுள்.

மாதவனுக்குச் சிறிது நேரத்தில் படபடப்பு அடங்கி விட்டது. எப்பொழுதும் போல அவன் அறையில் நாற்காலியில் சாய்ந்தவாறு தொடு வானத்தையும், அதில் அடுக்கடுக்காய் மலைத் தொடர்களைப் போல் பரவிக் கிடக்கும் வெண் மேகங்களையும் பார்த்துக் கொண்டிருந்தான். தொடு வானத்தைத் தவிர மற்ற இடமெல்லாம் ஒரே நீலம். காயும் கதிரவனின் ஒளி, நீள் விசும்பில் சுடர்விட்டுக் கொண்டிருந்தது.

அந்த ஒளிப் பிழம்பை ஊடுருவிச் செல்கிறுப் போல் இரு பறவைகள் விண்ணில் 'விர்'ரென்று சென்றன. ஒன்று ஆண், மற்ருென்று பெண். பறந்து சென்ற அப்புட்கள் ஓங்கிப் பரந்து வளர்ந்திருந்த மாமரத்தின் உச்சியில் உட்கார்ந்தன. பெண் பறவை ஊட, ஆண் பறவை அதைச் சுற்றிச் சுற்றிப் பறக்க....

''ஆகா! எத்தகைய காட்சி இன்பம்?'' மாதவன் தனக்குள் சொல்லிக்

கொண்டான். மாமரத்துச் சிட்டுக்களின் மேல் லயித்திருந்த அவன் கவனத்தை, வாசல் கேட்டைத் திறந்து வந்து, எதிரில் நின்ற மங்கை ஒருத்தி கவர்ந்தாள்.

''யார்?'' — இது மாதவன்.

''இந்த வீட்டில் 'அவுட் ஹவுஸில்' காலி இருக்கிறதாமே... பார்க்கலாமா?'' — அவள் கேட்டாள்.

''ஓ! தாராளமாக...உள்ளே அம்மா இருக்கிருள்...'' என்றவன் உள்புறம் திரும்பி, ''அம்மா...'' என்று அழைத்தான்.

அவன் தாயும், அந்தப் பெண்ணும் உள்ளே செல்வதைச் சிறிது பார்த்திருந்து விட்டு, மறுபடி மாமரத்தைக் கவனித்தபோது சிட்டுக்கள் இரண்டும் ஜோடியாக அமர்ந்து கிசுகிசுத்தன.

உள்ளேயிருந்து கணீரென்ற குரலில் அந்தப் பெண் பேசினுள்.

''எனக்கு மாதச் சம்பளம் எழுபது ரூபாய்தான். தாயார் மட்டும் தான் இருக்கிருள். வேறு யாரும் கிடையாது. வாடகையில் ஐந்து ரூபாய் குறைத்துக் கொள்ளுங்கள்—''

''ஆகட்டும் அம்மா. ஏதோ எனக்குப் பேச்சுத் துணைக்கு என்று இருந்தால் போதும். வாடகையைப் பற்றி என்ன இப்போ? வந்து..உன் பெயர் என்ன வென்று சொன்னுய்?..''

''நீலா...''

'நீலா' என்று மாதவனின் மனமும் அந்தப் பெயரை வாங்கிப் பதிவு செய்து கொண்டது. உள்ளே யிருந்து பேச்சுக் குரல் அருகில் நெருங்கி வந்தது.

''மாது! இந்தக் குழந்தையும், இவள் அம்மாவும் நம் 'அவுட் ஹவு'ஸுக்கு நாளைக்குக் குடி வருகிருர்கள். வாடகையில் ஐந்து ரூபாய் குறைக்கச் சொன்னுள், சரியென்றுவிட்டேன்—''

''உன் இஷ்டம் அம்மா...''-மாதவன் நீலாவை ஏறிட்டுப் பார்த்தவாறு கூறினுன்.

''ரொம்ப தாங்ஸ்..''- நீலா கூறியது மாதவனுக்குத்தான். இல்லாவிடில் அந்தக் குரலில் ஒரு குழைவும் நளினமும் மிளிர்வானேன்?..

நீலாவும், அவள் தாயும் குடி வந்தார்கள். அவளுடைய சுறு சுறுப்பு, மகிழ்ச்சி, கலகலப்பு எல்லாம் அவளுடன் குடிவந்தன; சாமான்களைத் தவிர உடன் வந்தவை நாலைந்து பாத்திரங்கள், இரண்டுபெட்டிகள், படுக்கை இவ்வளவு தான். பெட்டியிலிருந்து வெகு அக்கறையாகப் பக்தியுடன் ஆறுமுகனின் திருவுருவப் படத்தை எடுத்து அறையில் மாட்டி வணங்கினுள் நீலா. அந்தப் படத்தின் சோபை அவர்கள் வீடெல்லாம் நிறைந்து விளங்கியது.

இது காறும் மாதவனின் இதயம் நோயின் கொடுமையால் படபடத்து வந்தது. இப்பொழுது நோயின் கொடுமையினூடே இன்ப வேதனையால் துடித்தது. இதயம் துள்ளியது. மகிழ்ந்து ஏங்கியது.

''பள்ளிக்கூடத்துக்குக் கிளம்பியாச்சா?.'' வெளியே கிளம்பும் நீலாவைக் கேட்டான் மாதவன்.

''கிளம்பிக் கொண்டே,....இருக்கிறேன்....'' இழுத்தவாறு வாக்கியத்தை முடிக்காமல் அவனைப்பார்த்து இள நகை சிந்தி விட்டு மறைந்து விடுவாள் அவள்.

''பள்ளிக்கூடத்திலிருந்து வந்தாச்சா?..'' கேசம் காற்றில் பறக்க சோர்வினூடே மிளிரும் அவள் அழகைக் கண்களால் விழுங்கியவாறு கேட்பான் மாதவன்.

''வந்து கொண்டேயிருக்கிறேன்..'' என்றபடி முறுவல் காட்டி உள்ளே போய் விடுவாள் அவள்.

அவர்களின் காதலின் தோற்றுவாய் இவ்வளவு தான். 'பார்க்'கைத் தேடியோ, கடற்கரையில் ஒளிந்தோ அவர்கள் காதல் வளரவில்லை. கச்சிதமாக, நேர்மையாக, புனிதமாக வளர்பிறை மதி போல் வளர்ந்தது.

மாதவன் பல மாதங்களுக்கு அப்புறம் தன் அன்னையின் முன்பாக ஒரு நாள் வந்து நின்ருன்.

''அம்மா—!''

''என்னப்பா...?''

''அம்மா'' என்று தயங்கினுன் மாதவன்.

''என்ன மாது...என்னிடம் எதையும் சொல்ல உனக்கு ஏன் தயக்கம்?'' அந்தத் தாய் சாலப் பரிந்து அவனைக் கேட்டுக் குழைந்தாள்.

''வந்து...அம்மா...''

''உம்...வந்து...'' என்று முறுவல் காட்டினுள் அன்னை. ஈன்றெடுத்த மகனின் போக்கை அவளால் புரிந்து கொள்ள முடியாதா என்ன? ஒன்றிலும் கவனமில்லாமல், நாட்டமில்லாமல் இருந்தவன் அடிக்கடி நீலாவைக்

வலிப்பதையும், சிரிப்பதையும் அவள் எப்படியோ தெரிந்து கொண்டிருந்தாள்.

மாதவன் தாயை நிமிர்ந்து நேருக்கு நேர் பார்த்தான். பிறகு துணிவுடன் ''அம்மா! நீலாவை நான் கல்யாணம் பண்ணிக் கொள்கிறேன். அவள் தாயைப் பார்த்துப் பேசி ஏற்பாடு செய்யுங்கள்'' என்று கூறி முடித்து விட்டு, அந்த ஆனந்தத்தின் சுமை தாங்காமல் அறைக்குள் சென்று படுத்து விட்டான்.

ஒரு விநாடி தாயுள்ளம் மகிழ்ச்சிக் கடலில் மூங்கி எழுந்தது. உலகத்தாரைப்போல் அவளும் மாமியாகி, அப்புறம்பாட்டியாகவும்ஆகிவிடுவாள். மாதவனின் பால்ய விளையாட்டுக்களை யெல்லாம், அவன் மதலைமூலம் மறுபடியும் பார்த்து மகிழலாம். எண்ணி எண்ணி அந்தப் பேதை மனம் மகிழ்ந்தாலும், கூடவே இதயத்து மூலையிலிருந்து எச்சரிக்கை ஒன்று பலமாகக் கிளம்பியது.

மாதவன் மண வாழ்க்கைக்கு அருகதை யுள்ளவன் தானே? ஏன் இருக்கக் கூடாது? வைத்தியம், எச்சரிக்கை இவற்றை மீறிக் கடவுள் சக்தி என்று ஒன்று இருக்கிறதே: அது பலமாக இருப்பதால்தான் இத்தனை காலம் மண வாழ்க்கையில் நாட்ட மில்லாம லிருந்தவனின் மனம் புரண்டு கொடுத்திருக்கிறது.

அன்று தை வெள்ளிக்கிழமை. எல்லாம் பொருத்தமாக அமைந்திருக்கிறது என்று நினைத்து, அவள் ரோஜா கதம்பமும், வெற்றிலை பாக்கு பழத்துடனும் அவுட் ஹவுஸுக்குப் போய் விட்டாள் பெண் கேட்க!

நீலா தழையத் தழைய நெளிந்து புரளும் பின்னலும், நெற்றியில் துலங்கும் செஞ்சாந்துத் திலகமும் ஒளியிட விளக்கேற்றி வணங்கும் வேளையில், வீட்டுக்கார அம்மாளை எதிர்பார்க்க வில்லை தான்.. சாதாரணமாக அந்த அம்மாள் ஏதாவது விஷயம் இல்லாமல் எங்கும் போவதில்லை.

''வாருங்கள் அம்மா—''

மணையைப் போட்டு உபசரித்தாள் நீலா.

''அம்மா இல்லையா? இந்தா! பூ வைத்துக் கொள்..'' என்று கதம்பத்தை எடுத்துச் சூட்டினாள். அப்புறம் எல்லாமே விரைவில் நடந்தன.

அடுத்த நாளிலிருந்து மாதவன், ''பள்ளிக்கூடத்துக்குக் கிளம்பி



'' என்ன காஷியர் ஸார்... நீங்கள் ரிடையர் ஆகப் போகிறீர்களாமே ?''

''ஆமாம் ஸார்...வருகிறவர்கள் போகிறவர்களுக்கெல்லாம் எவ்வளவு நாள் தான் பணத்தை வாரிக் கொடுத்துக் கொண்டிருப்பது ?..''

யாச்சா?..'' என்று கேட்டால், அந்தப் பொல்லாத பெண் பதிலேதும் கூறுமல் கடைக் கண்ணை அம்பு போல் பாய விட்டுத் துள்ளி ஓடி விடுவாள்.

நாணமாம் அவளுக்கு!

'அங்கிங்கெனுதபடி எங்கும் பிரகாசமாய்' நிறைந்திருக்கும் பரம் பொருள் மாதவனையும், நீலாவையும் ஒன்று சேர்த்துக் கணவனும் மனைவியுமாகப் பிணைத்தான்.

கோயில் பிராகாரத்தை தம்பதி வலம் வரும் போது மாதவனின் தாய் சிந்தை குளிரப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்தாள். மங்கல அரிசி தூவி ஆசி கூறினாள். இறைவனின் அருள்வேண்டி மெய்யுருக மாதவனின் நலனுக்காக முறை யிட்டாள்.

கல்யாண அலுப்பு என்று கூறுகிறார்களே அது முற்றிலும் உண்மை. திருமணத்தை நடத்தி வைப்பவர்கள் மனத்திலிருந்த பாரம் குறைய சரீர அசதியினால் அயர்ந்து தூங்கி விட்டார்கள். திருமணம் புரிந்து கொண்டவர்களோ மனம் அயர்ந்து விடுவதில்லை. புதிதாக ஒன்றை, புரியாத ஒன்றை, இனம் தெரியாத உறவை நினைத்து நினைத்து அவர்கள் விழித்துக் கொண்டு

தான் இருப்பார்கள். அவர்கள் ஆயிர மாயிரம் மைல்களுக்கப்பால் இருந்தா லும் இந்த ஏக்கம் இருந்து கொண்டு தான் இருக்கும். அருகில் இருந்துவிட் டால்?..

தை மாதமாகையால் வானத்தில் மேகங்கள் இல்லை. அது வளர் பிறை. பொட்டுப் பொட்டாய் விண்ணெங் கும் புள்ளிக் கோலங்களாகத் தாரகை கள் கொலுவிருந்தன. அவற்றின் இடையே சந்திரனின் ஆட்சி உலகை ஒளியிலே தோய்த்து எடுத்தது.

இளம் தென்றல் வீசியது. ஆனால் திருமண வீட்டார் தங்கியிருந்தது ஒரு சாதாரண சத்திரம். மிக மிகப் பழ மையானது. சுண்ணாம்பு அடித்து வெகு காலம் ஆனது. ஆங்காங்கு சுவ ரில் அழுக்கேறியும் பழுப்புடனும் காணப் பட்டது.

சத்திரத்துத் திண்ணைகளில் சிலர் படுத்து விட்டார்கள். உள்ளே அநே கம் அறைகள் காலியாகவே இருந்தன.

மாதவன் கண்களை விழித்தவாறு தலையை உயர்த்தி ஜன்னல் வழியாக வெளியே பார்த்தான். அந்த இரவு என்று மில்லாத புதுமையாக அவ னுக்குக் காட்சி தந்தது. அத்துடன் அவன் இனி 'தனியன்' அல்ல என்கிற எண்ணமும் ஊடே எழுந்தது.

'என் நீலா எங்கே?'

தனக்குள்ளாகவே கேட்டவன் திரும்பி, கூடத்தைப் பார்த்தான். தலையில் சூட்டிய மல்லிகை மலரும், மை கரைந்த நீள் விழிகள் சோர, புதுப் புடவை மெருகிட வாழைத் தண்டு போல நீண்டிருந்த கையை தலைக்குயரமாக வைத்துக் கொண்டு நீலா கண் வளர்வது நன்றாகத் தெரி ந்தது.

'சே! சரியான ஜடம்! என்ன தூக்கம் வேண்டி இருக்கிறது? '

'விசுக்'கென்று எழுந்து விட்டான் மாதவன். நீலாவின் பக்கத்தில் ஒரு பத்து வயதுப் பெண் படுத்துத் தூங் கிக் கொண்டிருந்தது.

கனவு உலகத்தில் களித்திருந்த நீலாவின் முகவாயைப் பற்றி வருடி எழுப்பிய கரங்கள் மாதவனுடை யவை. அவள் கன்னங்கள் சிவந்தன.

நேரம் ஏற ஏற நிலவு அடிவானத் தை நோக்கி கனவேகமாகப் போய்க் கொண்டிருந்தது. சற்று முன்பு உல கத்துக்கு அழகு தந்த ஒளி மறைந்து இப்போது இருளாகப் பரவி வந்தது.

விடிய இன்னும் எவ்வளவோ நாழி கை இருக்கிறதே!

அந்த இருளின் ஊடே நீலா அலை யக் குலைய வேகமாக சத்திரத்துத் திண்ணையை நோக்கிப் பாய்ந்து ஓடி வந்தாள்.

''அம்மா..அம்மா!..''

அவளுடைய பயங்கரமான அலறல் அந்தப் பிராந்தியத்தையே அலற வைத்தது.

''என்ன? என்ன?..''

''ஏன் ஏன்?''

ஒன்றுக் கொன்று சம்பந்த மில்லா மல் கேள்விகள் பிறந்தன.

''அம்மா உள்ளே வாருங்களேன்!.. அவரை வந்து பாருங்களேன்...—''

நீலா எல்லோரையும் கூட்டிக் கொண்டு உள்ளே ஓடினாள்.

மாதவன் திணறிக் கொண்டிருந் தான். வேதனைப் பட்டான். அணு அணுவாக அடங்கிக் கொண்டிருந் தான்.

''மாது...'' என்று அமைதியைக் கிழித்துக் கொண்டு அன்னையின் குரல் ஒலித்தது. அருகே நிற்கும் மருமக ளின் தோற்றம்? கீழே சிதறிக் கிடக் கும் மலர்கள்?

''மாதா..''— அன்னை முட்டிக் கொண்டாள். மாதவன் முகத்தில் அமைதி நிரம்பி இருந்தது. கண்கள் மூடிக் கிடந்தன. ஊரே திரண்டு விட் டது. ஆறுதலுக்கோ தேறுதலுக்கோ அவசியமில்லாத நிலையில் அங்கே ஒரு உண்மையை ஊரார் எல்லோருமே பார்த்தார்கள்.

பழுப்பேறிய சுவரில் கரித் துண்டி னால் 'அவளும்..நானும்..மனோ வாக்கு காயத்தினால்...'

வாக்கியம் முடிவு பெறவில்லை.

ஒரு நாள் வாழ்ந்து ஓய்ந்து விட்ட அந்தப் பெண்ணை அவர்கள் எந்தக் கண் கொண்டு பார்த்தார்கள் என் பது வேறு விஷயம்.

வற்றி உலர்ந்துபோன விரல்கள் அடுத்த பத்தாவது மாதத்தில் மடியில் குழந்தையைக் கிடத்தியவாறு மாத வனின் சேயை வருடிக் கொண்டிருந் தது. குழந்தை மாதவனின் மறு அச்சு என்று பாட்டி யுள்ளம் எண்ணி மகிழ்ந்தது.

எங்கும் நிறைந்த இறைவன், இறை விக்கு இந்தக் காட்சியைச் சுட்டிக் காட்டத் தவறவில்லை.

# விசிறுதே-கோபத் தீயை!

சரோஜா ராமமூர்த்தி

எங்கு பார்த்தாலும் தோரணங்கள், வளைவுகள், வர்ண விளக்குகள் என்று பந்தல் பூராவும் அலங்காரம் நிரம்பியிருந்தது. பாண்டுக்காரர்கள் வரிசையாக ஒரு புறம் அமர்ந்திருந்தார்கள். மேளக்காரர்கள் மற்றொரு புறம் அமர்ந்து கானமழை பொழிய ஆரம்பித்து விட்டார்கள்.

அன்று அந்தக் கல்யாண வீட்டில் மாப்பிள்ளை அழைப்பு. வெளியே நின்றிருந்த எண்ணற்ற கார்களுக்கு நடுநாயகமாய் மல்லிகைச் சரங்களால் தன்னை அழகு படுத்திக் கொண்டு ஒய்யாரமாக நின்றிருந்தது அந்த ஊர்வலக் கார். மற்ற வண்டிகளுக்கு இல்லாத பெருமை அதற்கு! பெரிய பதவியில் இருக்கும் மாப்பிள்ளையைப் பூப்போன்ற மெத்தையில் உட்கார்த்திக்கொண்டு 'கியாஸ்' விளக்கொளியில் மங்கையர் குழாம் சந்தனம் மல்லிகை மணக்க, வைரங்கள் ஒளி வீச, பட்டுப் புடவை சரசரக்கத் தன்னைச் சுற்றி வருவதே பெருமைப் படக்கூடிய விஷயம்தானே?

கல்யாண வீட்டிலிருந்து சமையற்காரர்கள் பலகாரங்களை 'எவர்சில்வர்' தூக்குகளில் சுமந்து கொண்டு சம்பந்தி வீட்டுக்குப் புறப்படத் தயாராக நின்றிருந்தார்கள். பெண்ணைப் பெற்றவர் அவர்கள் எதிரில் வந்து நின்றார். எல்லோரையும் ஏற இறங்கப் பார்த்தார்.

''சொன்னதெல்லாம் நினைவிருக்கிறதா?'' என்று கேட்டார். ''இருக்கிறது ஸார். எல்லோரையும் தக்கபடி உபசரிக்கவேண்டும். குளிர்ந்த முகத்தோடு பரிமாற வேண்டும். இல்லையென்னுது எது கேட்டாலும் தரவேண்டும்...'' புஜ்ஜையா என்கிற வாலிபன் பதிலளித்தான் அவருக்கு.

பெண்ணைப் பெற்றவர் அவனைப் பார்த்து முறுவலித்தார். ஏனோ சில நிமிடங்கள் அவனையே பார்த்தார். அரைத்த விழுதுச்சந்தனம்போன்ற உடலும், கறுத்த முடியும், எடுப்பான நாசியும், குளிர்ந்த பார்வையும் கொண்ட அந்த இளைஞனின் அரையில் கட்டியிருந்த வேட்டியில் எண்ணெய்ச் சிக்கும், அடுப்புக் கரியும் நித்ய வாசம் புரிந்தன. ஆனால், அவை அவன் அழகை ஒளிக்கவில்லை. அழகும் அசுத்தமும் தனித் தனியே விலகி நின்று காட்சி அளித்தன.

'இவன்—இந்த அழகான இளைஞன்—வாய்ப்பும் வசதியும் இருந்து முன்னுக்கு வந்திருந்தால் அதோ தெருவில் நிற்கும் அலங்கார வண்டியில் பணக்காரர் ஒருவரின் அந்தஸ்து பெற்ற மாப்பிள்ளையாக வந்திருக்கக் கூடும்...'

சிந்தனை படர்ந்து கிளைத்துச் செழிப்பதற்குள் அவரைப் பல அலுவல்கள் தேடி வந்து விட்டன.

''சம்பந்தி வீட்டுக்கு யாரோ முக்கியஸ்தர்கள் வந்திருக்கிறார்களாம். நல்ல காப்பியாக அனுப்பவேண்டுமாம்...'' சொல்லிக்கொண்டே வந்து நின்றான் கல்யாணப் பெண்ணின் தமையன்.

புஜ்ஜையாவும் மற்றவர்களும் 'நல்ல' காப்பியையும், சிற்றுண்டியையும் எடுத்துக்கொண்டு சம்பந்தி விடுதிக்கு விரைந்தார்கள்.

ஆண்களும், பெண்களும், குழந்தைகளுமாக அந்த வீடு நிறையக் குழுமி இருந்தார்கள். சளசளவென்கிற பேச்சும், கலகலவென்கிற சிரிப்பொலியும் வீட்டை அதிர வைத்தன.

''என்னய்யா கவனிப்பு இது? வந்து அரைமணி ஆகிறது. டிபன் கொண்டு வருகிற லட்சணமோ இது?'' வைர மோதிரங்கள் பளிச்சிட, சற்று முன் தள்ளிய வயிற்றுடன், உயரமும் பருமனுமான ஒருவர் புஜ்ஜையாவைப் பார்த்துக் கேட்டார்.

அவன் மலர்ந்த முகத்துடன் வினயமாகத் தலையைக் குனிந்து கொண்டான். அடுத்தவினாடி கூடத்தைத் துப்புரவாகப் பெருக்கிவிட்டு இலை போட்டான்.

வைர மோதிரக்காரர் மிடுக்காக நடந்துசென்று வராந்தாவில் இருந்த சோபாவில் உட்கார்ந்துகொண்டார்.

'ஒருவேளை அவர்தான் சம்பந்தியோ? பிள்ளையைப் பெற்றவர் அல்லவா? ஒரு படி மேல்தான்.' புஜ்ஜையா யோசித்தபடி நின்றான்.

''இலை போட்டிருக்கே. எல்லோரும் டிபன் பண்ணுங்கள்...'' இரட்டைப் பேட்டுச் சரிகைப் புடவை கட்டிய

அம்மாள் சொல்லிக்கொண்டே கூடத்துக்குள் நுழைந்தாள். கழுத்திலே துவண்டதங்கமும், காதில் சுடர்விட்ட வைரமும் அவளைச் சாமானியமானவளாகக் காட்டவில்லை.

''அண்ணா எங்கேடா சீமா?'' என்று முழக்கினாள் அந்த அம்மாள்.

சீமா கூனிக் குறுகிக் கொண்டு ஓடி வந்தார். ''இங்கேதானே இருந்தார். எங்கே அவர்?'' சீமா தேட, இரட்டைப் பேட்டுச் சரிகைப்புடவை அங்கலாய்க்க, அந்த அண்ணா வராந்தாவில் மின் விசிறியின் கீழே சோபாவில் சாய்ந்திருந்தார்.

''அண்ணா, டிபன் பண்ண வாருங்கள்.'' சீமா அழைத்தார் அவரை.

''வேண்டாம்பா... நீங்களாம் சாப்பிடுங்கள்...'' வைரமோதிரம் அலட்சியமாகத் தலையை அசைத்துவிட்டு சோபாவில் சாய்ந்துவிட்டார்.

''என்ன நடந்தது அண்ணா? இப்படி நீங்களே பித்துக் கொண்டால் பாக்கி காரியமெல்லாம் எப்படி நடக்கும்?''

''மனுஷர்களை மதிக்காத இடத்திலே...'' வைரமோதிரம் சம்பந்திச் சண்டையைத் துவக்கி வைத்தது.





''மதிக்கலையா? அண்ணாவை மதிக்கலன்னா...'' என்று இரட்டைப் பேட்டு சுருதி சேர்ந்தது.

இதற்குள்ளாகப் பெண்ணின் தகப்பனார் வந்துவிட்டார். கூடத்திலே இலைகள் காற்றில் பறந்து கொண்டிருந்தன. சமையற்காரர்கள் நின்று கொண்டேயிருந்தார்கள்.

''என்னப்பா இது, இன்னும் டிபன் ஆகவில்லையா?''

''ஒருத்தரும் வரவில்லை ஸார்...'' புஜ்ஜையா பதிலிறுத்தான்.

பெண்ணைப் பெற்றவர் கூடத்துக்கும், வாசலுக்கும் அலைந்தார்.

'அண்ணா' டிபன் சாப்பிடவில்லையாம். குழந்தை முதல் பெரியவர் வரை இதையே பேசினார்கள்.

''யார் அந்த அண்ணா?'' பெண்ணைப் பெற்றவர் திகைத்து நின்று விட்டு, நாளை தன் பெண்ணை மருமகளாக ஏற்றுக் கொள்ளப் போகிறவரிடம் சென்று கேட்டார்.

''அதோ பாருங்கள்...அவர் தான்... என் ஒன்றுவிட்ட தமையன். நல்ல நிலையிலே இருப்பவர்...சாமானியமாக இந்தச் சின்னக் கல்யாணத்தை மதித்து வருகிறவர் இல்லை...''

''அப்படியா? என்ன தவறு நடந்து விட்டது?''

''என்ன தவறு நடந்து விட்டது?'' பிள்ளையைப் பெற்றவரும் தம்மையே கேட்டுக் கொண்டு பதில் தெரியாமல் விழித்தார்.

''புஜ்ஜையா! என்னனப்பா நடந்தது?''

''ஒன்றுமில்லை சார்...டிபன் கொண்டு வரக் கொஞ்சம்நாழிகையாகிவிட்டதோ இல்லையோ?''

பெண்ணைப் பெற்றவர் நழுவி விட்டார். அவர் வந்து சிறிது நேரம் திண்டாடித் திணறிவிட்டுப் போனது அங்கிருந்தவர்களுக் கெல்லாம் பரம ஆனந்தத்தையும், திருப்தியையும் கொடுத்தது.

கூடத்து இலைகளின் முன்பு சட சடவென்று எல்லோரும் வந்து உட்கார்ந்தார்கள். அண்ணாவும் கூடத்தான். குனிந்த இடுப்பை நிமிர்த்தாமல்

புஜ்ஜையா பறிமாறிக்கொண்டேயிருந்தான்.

ஒருத்தருக்கு இனிப்பு, மற்றவருக்குக் காரம், இன்னொருவருக்குக் காப்பி. இடையிலே ஒவல் இல்லையா என்கிற கேள்விக்கும் ஈடு கொடுத்தான்.

அண்ணு இனிப்பையும், காரத்தையும் சுவைத்தார். காப்பி அருந்தி ஒவலையும் மேலே போட்டு வைத்தார்.

அதற்குள்ளாகப் பாண்டு முழங்க, நாதஸ்வரத்தின் இசை கேட்க, சம்பந்தி வீட்டார் வந்து விட்டார்கள் மாப்பிள்ளையை அழைக்க!

''ஒய் புஜ்ஜையா! நீர்தானே இங்கே இருக்கப் போகிறவர்?''

''ஆமாம் சார்...''

''எல்லாம் பத்திரமாக இருக்குமோ இல்லையோ?''

''பார்த்துக்கொள்கிறேன் சார்...''

''இங்கே வாரும். ராத்திரி நான் ஒன்றும் 'ஹெவி'யாகச் சாப்பிடுகிறதில்லை.''

''சம்பந்தியிடம் சொல்லி உங்களுக்கு எது தேவையோ...''

''ராத்திரி என்ன 'ஸ்வீட்'?''

''பாகு பூரியும், பாதாம் கிரும் ஸார்...''

''லைட்டா நாலு பூரியும் ஒரு கப் 'கிரும்' கொண்டுவாரும். போதும்...''

''சரி சார்...''

அண்ணு வைரமோதிரத்தைத் துடைத்துக்கொண்டு கிளம்பிக் கொண்டிருந்தார். இரட்டைப் பேட்டுச் சரிகைப் புடவை அடுத்தபடியாக வந்து நின்றது.

''இங்கே வாரும்... நீர்தானே சம்பந்தி வீட்டு ஆள்?''

''ஆமாம் அம்மா...''

''நான் 'டயட்டில்' இருக்கிறேன்...''

புஜ்ஜையாவுக்கு முதலில் புரியவில்லை.

''என்ன அம்மா சொல்கிறீர்கள்?''

''நான் பத்தியம் என்றேன். ராத்திரி காய்கறியெல்லாம் எப்படி?''

''இரண்டு பொரியல், கூட்டு, சாம்பார்...'' அடுக்கிக்கொண்டே போனன் புஜ்ஜையா.

''இலைக்கு என்ன போடப் போகிறீர்கள்?''

''பாகுப் பூரி...''

''ஐயோ, ஐயோ! சர்க்கரையே நமக்கு உதவாது. நான் சொன்னேன் என்று பாகில் நனைக்காமல் நாலு பூரியும், காய்கறியும் கொண்டுவந்து வையும்.''

''சரி அம்மா...''

முந்தானையால் வைரக் கம்மல்களை அழுத்தித் துடைத்துக்கொண்டு இரட்டைப் பேட்டு சென்றது. உள்ளேயிருந்து மாப்பிள்ளைப் பையன் வெளியே வந்தான்.

''இதோ பாரும். ராத்திரி ஒரு மணிக்கு என் 'பிரண்ட்ஸ்' நாலுபேர் வருவார்கள். 'லைட்டா' டிபன் பார்த்து வைத்திரும். அவர்கள் வேண்டாமென்பார்கள்; பார்த்துப்போட வேண்டியது உமது பொறுப்பு...''

''அப்படியே மாப்பிள்ளை சார்...''

மாப்பிள்ளை நாளை வதுவை முடிக்கப் போகும் கன்னியைப்பற்றிக் கற்பனை செய்துகொண்டே அலங்கரித்துக் கொள்ள உள்ளே போய்விட்டான்.

தூரத்திலே பாண்டு முழங்க, நாதஸ்வர இசை காற்றிலே தவழ மாப்பிள்ளை காரில் ஊர்வலம் வந்து கொண்டிருந்தார்.

''அண்ணுவுக்கு டிபன் ஆச்சா?'' சம்பந்தி வீட்டில் வைரமோதிரத்தைப் பார்த்து யாரோ கேட்டார்கள்.

''ஆச்சு... அதிகமாக நான் சாப்பிடுகிறதில்லே. ...ராத்திரிகூடச் சாப்பிட மாட்டேன்...''

''ஏன்? ஏன்?'' ஏக காலத்தில் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள் பலர்.

''மாமிக்கு டிபன் ஆச்சோ?''

''ஆச்சுடியம்மா. சர்க்கரை தான் எனக்கு உதவாதே. நீரிலே கெடுதல். கல்யாண வீட்டிலே இதெல்லாம் பார்த்தால் முடியுமா?''

''அப்போ... நீங்க ஒன்றுமே சாப்பிடலையா?''

''சாப்பிட்டேம்மா... ராத்திரி கூட 'லைட்டா' ஆகாரம் பண்ணிஞல் போதும்...''

''ஓ! அதுக்கென்ன? கவனித்து அனுப்புகிறோம்..''

மாப்பிள்ளை அழைப்பு முடிந்து சந்தடி அடங்கி விட்டது. வைரமோதிரம் 'லைட்' டிபனை முடித்துக்கொண்டு விட்டார். சரிகைப்புடவை சர்க்கரை நீக்கிச் சாப்பிட்டு முடித்துவிட்டாள்.

''உஸ்... உஸ்... என்ன புழுக்கம்!'' வைரமோதிரம் புஸ்ஸென்று பெருமூச்சு விட்டது.

''அந்த மனுஷன் எங்கே?'' என்றது சரிகைப் பேட்டு.

''ஏம்மா?'' புஜ்ஜையா ஓடி வந்து நின்றான்.

''நாலு வெட்டிவேர் விசிறி வாங்கிப் போடமாட்டார்களா? நான் கேட்டேனென்று போய்க் கேட்டு வாங்கி வா...''

''ராத்திரி ஒருமணிக்குத் தூங்கிப் போய் விடாதீர்!'' மாப்பிள்ளை புஜ்ஜையாவை எச்சரித்தான்.

''இல்லை ஸார்...''

இரவு ஒரு மணியாகத்தான் இருக்க வேண்டும். மாப்பிள்ளையின் நண்பர்களை புஜ்ஜையா உபசரிக்கிறானே!

கீழ்வானம் வெளுக்கு முன்பே புஜ்ஜையா வென்னீர் அடுப்பைப் பற்ற வைத்துத் தவலைக்குத்தண்ணீர் நிரப்பிக் கொண்டிருந்தான்.

''புஜ்ஜையா! வென்னீர் ரெடியா?''

''ஆச்சு ஸார்...''

''தொட்டியிலே தண்ணீர் இருக்கிறதா?''

''இருக்கிறது ஸார்...''

''நீர் போய் நாங்கள் குளிப்பதற்கு முன்பு சுடச்சுடக் காப்பி கொண்டு வாரும். அப்புறம் இட்டிலியோடு பார்த்துக் கொள்ளலாம்...''

''இதோ ஸார்...''

''புதுப் பாலா பழைய பாலா?'' சரிகைப் பேட்டு, காப்பியைச் சப்புக் கொட்டிக் கொண்டு கேட்டது.

கீழ்வானம் வெளுக்காமல், உலகம் விழிக்காமல், உயிர்கள் விழித்தெழாமல் புதுப்பாலை எங்கிருந்து கொண்டு வருவது?

பிள்ளையைப் பெற்றவர்கள் இல்லையா?

''பழைய பால்தான் அம்மா. இனி மேல்தான் 'டிப்போ'விலிருந்து பால் வரும். டிபனோடு சாப்பிடலாம்...''

''முதலிலேயே சொல்லித்தொலைக்கக் கூடாதா? கட்டி விழுந்த குழந்தைக்குக் காப்பியைக் கொடுத்துத் தொலைத்தேன்...'' ஜார்ஜெட் புடவை ஒன்று இடையில் புகுந்து வெட்டியது.

புஜ்ஜையா இதற்குள்ளாக நாற்பது தடவைகள் இட்டிலித் தூக்குடன் அங்கும் இங்குமாக அலைந்துவிட்டான்.

மாப்பிள்ளையும், பெண்ணும் ஊஞ்சல் ஆடினார்கள். கெட்டிமேளம் ஒலித்தது. தாலி கட்டியாகிவிட்டது.

''அப்பாடா! ஒரு கல்யாணம் என்றால் சாமானியமா? காலை ஒன்பது மணி ஆகலை. இதற்குள் வெய்யிலைப் பார்த்தியா?'' வைரமோதிரம் சரிகைப் பேட்டைக் கேட்டுக்கொண்டே விடுதிக்கு வந்து சோபாவில் சாய்ந்தது.

''காற்றே இல்லையே. விசிறியைப் போடுமேன்...''

சரிகைப்பேட்டு சொல்ல, புஜ்ஜையா ஸ்விட்சைத் தட்டினான்.

மின் விசிறியில் ஏதோ கோளாறு. அது சுற்றவில்லை.

''சரிதான் போம்...விசிறியை எடுத்து வந்து அண்ணாவுக்கு விசிறும்!''

புஜ்ஜையா விசிறிக் கொண்டுதான் நின்றான்.

ஆனால், அவன் புலன்கள் செயல்பட மறுத்தன. கண்கள் சுழன்றன. கைகள் இற்றுவிடுகிறாற்போல் வலித்தன.

''என்ன ஓய் விசிறுகிறீர்?''

''விசிறிக்கொண்டுதான் இருக்கிறேன் சார். சும்மா விரட்டுகிறீர்களே...'' புஜ்ஜையா ஒரு சொல் அதிகமாகப் பேசிவிட்டான். பேசியே விட்டான்.

''என்ன பேசுகிறாய் நீ? நான் யார் தெரியுமா உனக்கு? நீ விசிறித்தான் நான் காலமெல்லாம் வாழுகிறேனா? மரியாதை கெட்டவன்!...'' வைரமோதிரம் அவன் கை விசிறியைப் பிடுங்கி, தாமே படபடவென்று விசிறிக் கொள்ளலானார்.

''அண்ணாவுக்குக் கோபம் வரலாமோ?'' அப்படி வந்த விஷயம் காட்டுத் தீ போல் அந்த விடுதி முழுதும் பரவ, ''என்ன, என்ன?'' என்று கேட்டுக் கொண்டேபலர் வந்துவிட்டார்கள்.

''புஜ்ஜையா!'' என்று அழைத்தார் பெண்ணைப் பெற்றவர்.

''சார்...''

''என்ன நடந்தது?''

''ஒன்றுமில்லை சார். அசதியாக இருந்தது. விசிறுவதற்குக் கை சளைத்து விட்டது. வேறே ஒன்றுமில்லை, சார்...''

''அதற்காக மரியாதையில்லாமல்...'' சரிகைப்பேட்டு சீறிக்கொண்டு கிளம்பியது.

புஜ்ஜையா பதிலேதும் சொல்லவில்லை. மௌனமாக வெளியே நடந்தான்.

முந்தின நாளிலிருந்து அவர்கள் அனைவருடைய தேவைகளையும் ஆடி ஓடி கவனித்தவன்தான் அவன். காய்ச்சலில் படுத்திருந் தவன்தான். உடல் நலம் கெட்டு இருந்தவன்தான். சாண் வயிற்றுக்காகத் தன்னை யந்திரமாக்கிக் கொண்டு உழைத்தான். அப்படியும் அந்த மனித யந்திரத்தை மற்ற மனிதர்களால் புரிந்துகொள்ள முடியவில்லை.

அந்த மனித யந்திரம் பொரியும் வெயிலை லட்சியம் செய்யாமல் தெருவில் இறங்கி நடந்து விட்டது.

தனக்கென வாழாது பிறருக்காகவே வாழ்ந்துவிட்டாள் பகவதி. மேஜையின்மீது கைகளை ஊன்றியபடி அவளெதிரே பிரித்தபடி கிடக்கும் கடிதத்தைப் படித்துச் சிந்தனையில் ஆழ்ந்திருக்கிறாள்.

வாழ்க்கையில் எதிரே வந்தவைகளைக் கூட்டியும், கழித்தும் பார்த்தால், மீதியாகத் தெரிவது அவளைப்பொறுத்தவரைத் துன்பங்கள்தாம் அதிகமானவை. அதனால் ஏற்பட்ட சின்னங்களைப்போல் முகமெங்கும் வரி வரியாகக் கவலைக் கோடுகள். நெற்றியெங்கும் சுருக்கங்கள். கண்களின் கீழே கருவட்டங்கள். வகிட்டின் இருபுறமும் நரை கண்டுவிட்ட கூந்தல்.

ஆனால், பகவதி அழகாக இல்லை என்று முடிவு கட்டிவிடக் கூடாது. அன்னையின் மடியில் ஆட்டிவிட்டு மகளை மன நிறைவுடன் பார்த்து ஆனந்தித்த காலம் ஒன்று இருந்தது.

இன்று?

பகவதி மறுபடியும் கடிதத்தைப் படித்தாள் சற்று உரத்த குரலில்.

அன்புள்ள பகவதிக்கு,

வணக்கம். பல வருஷங்கள் உன்னுடன்—ஏன்—உங்கள் குடும்பத்துடன் பழகிய சுதந்திரத்தினால் இந்தக் கடிதத்தைத் துணிந்து



# வாழாது...

தவழ்ந்த காலத்தில் கொழுகொழுவென்று உருண்டைக் கைகளும், உருண்டைக் கால்களும், குண்டு முகமுமாக இருந்தாள். இளமையில் தாயும், தந்தையும் மகளின் அழகைக் கண்டே மகிழ்ந்து போனார்கள்.

அந்த அழகு முழுமையாகச் சங்கமமாக வேண்டிய இடம் அவளுக்குத் தகுந்த மாப்பிள்ளையாகத் தேடுவதுதான் என்று காமாட்சி அம்மாள்—பகவதியின் தாய்—தன் கணவரிடம் அடிக்கடி சொல்லுவாள். அவர் சிரித்து ஆமோதிப்பதுபோல் தலையை

உனக்கு எழுத ஆரம்பிக்கிறேன். உனக்குத் தெரியும் இந்த உலகத்தில் நானும் தனியாக நிற்பவன் என்று. நீயும் இன்று தனிமையில் நிற்கிறாய். இந்த ஒரு பொருத்தம் காரணமாகவே நான் என் மனத்தில் இருப்பதைத் துணிந்து இதில் எழுதிவிடுகிறேன். உனக்குத் தெரியும் சரஸ்வதியும் நானும் எவ்வளவு இன்பமாக இல்லறம் நடத்தினோம் என்று. நீயே பன்முறை எங்களைப் புகழ்ந்து பேசியிருக்கிறாய். அவளின்றி நானோ நானன்றி அவளோ இருக்க முடி

யாது என்கிற அன்பின் பிணைப்பிலே நான் இறுமாந்திருந்த காலம் ஒன்று இருந்தது. ஆனால், கடவுளின் எண்ணம் வேறாக இருந்துவிட்டது. அவள் நினைவாக ஒரு குழந்தைகூட இல்லாமல் சரஸ்வதி திடீரென்று போய்விட்டாள். எல்லாவற்றையும் நீதான் நேரில் பார்த்தாயே. ஒரு டாக்டரை அழைத்து வர, மருந்து கொடுக்க, பேச, எதற்கும் சந்தர்ப்பம் எனக்கு அளிக்காமல் எண்ணெய் தேய்த்து, மஞ்சள் பூசி, பொட்டிட்ட மங்களகரத்துடன் ஒரு வெள்ளிக்கிழமை திடீரென்று போயே விட்டாள்.

அப்புறம் என்ன பகவதி? இந்த மூன்றாண்டு காலமாக நான் தனிமரமாக துன்பம் என்னும் தீயில் கருகி உலர்ந்து வருகிறேன். உனக்கிருந்த ஆறுதல்—ஒரே துணையான—உன் தந்தை, அவர் உன்னை விட்டுப் போய்விட்டார். 'எனக்கு அண்ணன் இருக்கிறானே' என்கிறாயா? அவனை உறவாக உள்ளன்புடன் இனிமேல் என்றுவது உன்னால் ஏற்றுக்கொள்ள முடியுமா? பெற்றவர்களைப் பாராது, ஏனென்று கேளாது கத்தரித்துக் கொண்டுவிட்ட அவனைப்பற்றி நீ நினைக்கத்தான் நினைப்பாயா? அவன் அப்படி விலகிப் போகக் காரணமாக இருந்த அதே செயலை உன்னைச் செய்யும்படி நான் தூண்டவில்லை. ஆனால், அந்தச் செயலை ஏற்கும் துணிவு உன் பெற்றோருக்கு இல்லை. உனக்கு இல்லை என்று நான் முடிவு கட்டிவிடவில்லை. கலப்பு மணத்தில் பத்தொன்பதாம் நூற்றாண்டு மனிதர்களாகிய உன் பெற்றோர்கள் நம்பிக்கை வைக்கவில்லை. நாம் வாழுவது இருபதாம் நூற்றாண்டல்லவா? ஆகவே, நீயும் நானும் வாழ்க்கைத் துணைவர்களாக ஆகிவிட்டால் தனிமை என்கிற உணர்ச்சியிலிருந்து விடுபட்டு வாழலாம் என்கிற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. தவறாக இருந்தால் ஒரு குடும்ப நண்பனை மன்னித்து விடு பகவதி.

இப்படிக்கு,

பாண்டுரங்கன்.

பகவதி தன் எதிரே பெரிதாக மாட்டப்பட்டிருந்த புகைப் படங்கள் இரண்டை அண்ணாந்து பார்த்தாள். ஒன்றில் அப்பா. கட்டுக் குடுமியும், சந்தனப் பொட்டும், மேலே சட்டைகூடப் போடாமல் சரிகை அங்கவஸ்திரத்தைப் போர்த்தியபடி பஞ்சகச்ச வேஷ்டியுடன் அமர்ந்திருந்தார். முகத்தில் அலாதியான களை. நான்கு வேதங்களையும், உபநிடதங்களையும், புராண இதிகாசங்களையும் படித்துத் தேர்ந்து ஆராய்ந்த அறிவுக்களை கண்களில் சுடர்விட்டது. அவர் பக்கலில் பகவதியின் தாய் காமாட்சி இருந்தாள். மஞ்சளில் குளித்துப் பழுத்திருந்த முகத்தில் சிவப்புக் குங்குமத்தின்மீது திருநீறு துலங்க, வகிட்டில் பொட்டும், கழுத்து நிறைய நகைகளைச் சுமந்துகொண்டு இழுத்துப் போர்த்திய தலைப்புடனும், அந்த அம்மாள் பழைமையின் சின்னமாக இருந்தாள். கணவனின் எண்ணம், செயல் யாவற்றிலும் அவருடைய நிழல்போல் பங்கு கொண்டவள். பகவதியின் தகப்பனார் சாமிநாத அய்யர் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் பிறந்தவர். வேத சாஸ்திரங்களிலும், சம்பிரதாயங்களிலும் அசைக்க முடியாத நம்

பிக்கை கொண்டவர். காமாட்சிக்கும், அவருக்கும் திருமணம் நடந்தபோது அவருக்கு வயது பத்து, காமாட்சிக்கு ஐந்து. மனைவியிடத்தில் அளவில்லாத அன்பு பூண்டவர். இருப்பினும், அந்த அன்பு நீறுபூத்த நெருப்பாக இருந்ததே தவிர வெளிப் பார்வைக்கு அவருடைய கெடுபிடிகளுக்கெல்லாம் பயந்து, பணிந்து தன் நாட்களைக் கடத்தினாள் காமாட்சி.

முதல் பிள்ளை—சீமந்த புத்திரன் ரகுராமன் பிறந்த பிறகுதான் காமாட்சியுடன் நாலு பேர்கள் முன்பு சற்று முக மலர்ச்சியுடன் பேசுவார் சாமிநாதன். இதைப்பற்றி அவளுக்குக் கொஞ்சம்கூட வருத்தம் கிடையாது. 'அதிர்ந்து வருகிற புருஷன்தான் உயர்வானவன்' என்று சொல்லி அவருடைய கம்பீரத்தைப் புகழ்ந்து பேசுவாள் காமாட்சி. ரகுராமனுக்கு அப்புறம் ஆறேழு வருஷங்கள் கழித்து பகவதி பிறந்தாள்.

சாதாரண வக்கீல் குமாஸ்தாவாகக் காலம் தள்ளி வந்த சாமிநாத ஐயர் அதிக அளவில் எதிலும் ஆசை வைக்கவில்லை. ஏதோ பகவான் கொடுத்ததை நிறைவாகக்கொண்டு தம் வாழ்க்கையை நடத்தி வந்தார். காமாட்சிதான் கணவன் நிழல்போன்றவளாயிற்றே. அவளுக்கும் எதிலும் அதிக ஆசைகள் ஏற்படவில்லை. குழந்தைகள் இரண்டு பேரும் புத்திசாலிகளாக இருந்தார்கள். ரகுராமன் நன்றாகப் படித்தான். ஏழு வயதில் சாஸ்த்ரோக்தமாக உபநயனம் ஆயிற்று. காலேஜில் சேருகிறவரையில் அப்பாவுக்குப் பயந்துகொண்டு குடுமி வைத்திருந்தான். பிறகு ஒரு நாள்

இளும்தார்கள்!



"நீங்க பரீட்சையிலே பாஸ் பண்ணினத்துக்காக எங்கப்பா உங்களுக்கு ஸ்கூட்டர் வாங்கிக் கொடுக்கப் போறார்!"

"ஸ்கூட்டரா? சரிதான்! 'பின்னாலே உக்காத்தி வெச்சுக்கறதுக்குப் பெண்ணைத் தேடவேண்டாம்... எங்கிட்டே இருக்கு'ன்னு சொல்லப்போறார்... ஆபத்து!"

கிராப் தலையுடன் தகப்பனாரின் எதிரில் வந்து வசவுகளை வாங்கிக் கட்டிக்கொண்டு, தாய் பரிந்து பேச ஒரு வழியாக சமாதானமாகிவிட்டது.

இருந்தாலும் சாமிநாத ஐயருக்குப் பிள்ளை கிராப் வைத்துக்கொண்டது பெரிய குறைதான். பகவதிக்கு இன்றுகூட அதெல்லாம் நன்றாக நினைவிருக்கிறது. அண்ணா அன்று அப்பா முன்னிலையில் பேந்தப் பேந்த விழித்ததும், அவர் கண்கள் சிவக்க ஆஜானுபாகுவாக அவன் முன்பு நின்று, 'டேய்! என்னைப் பாரேண்டா பயலே! நான் குடுமி

வைத்திருப்பதால் என்னடா கெட்டுப் போய்விட்டேன். எனக்கிருக்கிற கௌரவமும், புத்தி தீட்சண்யமும் உனக்கு வருமாடா' என்று இரைந்தது பகவதிக்கு நன்றாக நினைவிருக்கிறது.

ரகுராமன் தகப்பனாரை எதிர்த்து ஒரு வார்த்தை பேசாவிட்டாலும், எதிர்ப்பெல்லாம் செயலில் காண்பிக்கப்பட்டது. அப்பாவும், பிள்ளையும் நாளுக்கு நாள் ஒருவரைவிட்டு ஒருவர் மனத்தால் விலகிப் போய்க்கொண்டேயிருந்தார்கள்.

சாமிநாத ஐயருக்கு வாலிபம் தேய்ந்து வர, ரகுராமனுக்கு இளமை வளர்ந்துகொண்டு வந்தது. எதிலும் பிடிவாதம் பிடித்து நிறைவேற்றிக்கொள்ளும் ரகுராமன்தான் அயல்நாட்டுக்குப் போவதிலும் பிடிவாதமாக இருந்தான். வழக்கம்போல பெற்றோர்களுக்கு மனக் கவலை ஏற்பட்டது. தகப்பனார் அநேகமாக அவன் பேரில் நம்பிக்கை இழந்துவிட்டார். 'அங்கே போன பிறகு அப்படி இப்படித்தான் இருக்கும். சம்பாதித்ததைக் கொட்டிப் படிக்க வைத்தாயிற்று. இங்கேயே நல்ல வேலை பார்த்துக்கொள்ளக் கூடாதா என்ன? எவளையாவது வெள்ளைக்காரியை இழுத்துக் கொண்டு வருவான்' என்று மனைவியிடம் இரைந்தார் அவர்.

'ஆமாம்...ஆமாம்...வெள்ளைக்காரி பிடிக்க அங்கேதான் போக வேண்டுமா என்ன? என்றைக்கும் இரு நூறு, முன்னூறு சம்பளத்துக்கு இங்கே தொங்க வேண்டும். வெளிநாடுகளுக்குப் போய்விட்டு வந்தால் நல்ல சம்பளம் கிடைக்கும். பகவதியை நல்ல இடத்தில் கல்யாணம் செய்து கொடுக்கலாம்' என்று தாயுடன் வாதாடினான் ரகுராமன்.

பகவதிக்கு அன்று தந்தை பேரில் அடங்காத கோபம் உண்டாயிற்று. படுகர்நாடகமாக இந்த அப்பா என்னைப் பத்தாவது வரை என்ன படிப்பு வேண்டியிருக்கிறது என்று நிறுத்திவிட்டார். அண்ணா வெளிநாட்டுக்குப் போய் வேலை பழக்கிக்கொண்டு வருகிறேன் என்றால் குறுக்கே விழுந்து மறிக்கிறார். பெண்கள் எல்லோரும் கல்சட்டி தேய்ப்பதற்கும், ஆண்கள் படித்துவிட்டு குமாஸ்தா வேலைக்குப் போய் காலமெல்லாம் வறுமையில் உழலவும்தான் பிறந்திருக்கிறார்கள் என்பது இவரின் தீர்மானமாக்கும்' என்று மனத்துக்குள் பொருமினாள்.

பகவதி அப்பொழுது பதினாறு, பதினேழு வயதுப் பெண்ணாகத் திருமணத்துக்குத் தயாராக இருந்தாள். இளம் மனத்தில் எத்தனையோ ஆசைகள், கனவுகள் கொப்பளித்து எழுந்த காலம் அது.

ரகுராமன் பிடிவாதமாகக் கப்பல் ஏறிவிட்டான். புறப்படுவதற்கு முன்பு தகப்பனாரை வணங்க வந்தவனை முறைத்துப் பார்த்துவிட்டு ஏதோ பார்க்கத் தகாத பொருளைப் பார்ப்பது போல் சாமிநாத ஐயர் முகத்தைத் திருப்பிக்கொண்டார்.

தாய்? அந்தப் பாசமே தனி அல்லவா? ஆயிரம் கசப்பிருந்தாலும் குடியிருக்க இடம் கொடுத்த அந்தத் தெய்வம் மகனை வாயார வாழ்த்தி வழியனுப்பி வைத்தது. பகவதி தன் வருங்காலக் கனவுகள் நனவாக மலர அண்ணனை எதிர்பார்த்துக் காத்திருந்தாள்.

ஆனால் ரகுராமன் அங்கேயிருந்து தனியாக வரவில்லை. தந்தை சொன்னது போல் அவன் மனத்துக்குப் பிடித்த அயல்நாட்டுப் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டு திரும்பினான். அதை பட்டவர்த்தனமாக முன்கூட்டியே தகப்பனாருக்குத் தெரிவித்தான். சாமிநாத ஐயர் அதைப் படித்து விட்டு ஆத்திரப்படவில்லை. அமைதியுடன் தாங்கிக் கொண்ட விதத்தைக் காமாட்சியாலேயே நம்ப முடியவில்லை.




ஒருவர்:—"இவங்களெல்லாம் ஏன் இங்கே நிற்கிறாங்க?"

மற்றவர்:—இங்கே புதுசா ஒரு ஸ்கூல் கட்டப் போறாளாம். அதுக்காக அட்மிஷனுக்காக இப்போ பிடிச்சு நிற்கிறாங்க!'

'என்ன பேசாமல் இருக்கிறீர்கள்?' என்று அழுகை பொங்கக் கேட்டாள் அந்த அம்மாள்.

'என்ன பேசச் சொல்கிறாய்? நான் நினைத்ததைச் செயலில் செய்து காட்டிவிட்டான் உன் பிள்ளை. குலத்துக்கு என்ன லாபம் இப்பொழுது?'

ரகுராமனின் காதல் ஆழமானதாக இருக்கலாம். அந்த அன்பு விசாலமானதாகவும் இருக்கக் கூடும். ஒரே மகனிடம் அசையாத நம்பிக்கை வைத்து அவனை எதிர்பார்த்து இகத்திலும், பரத்திலும் காத்திருக்கப் போகும் அந்த இரு ஜீவன்களுக்கு ஏனோ அந்தக் காதலின் மகத்துவம் புரியவில்லை. யாராலும் புரிய வைக்க முடியவில்லை. மற்றவர்கள் 'இதனால் என்ன மிஸ்டர் சாமிநாத ஐயர். இதெல்லாம் இந்தக் காலத்தில் சகஜம் தான்' என்று சொன்னாலும், அவரைப் பொறுத்தவரை அதை ஒதுக்கித் தள்ள முடியவில்லை.

ரகுராமனை பகவதி சென்று பார்த்தாள். ஒரு இளைய சகோதரி மூத்த சகோதரனிடம் எவ்வளவு பேச முடியுமோ அதற்கு மேல் அவளால் வேறொன்றும் பேச முடியவில்லை.

'பகவதி, அம்மா வரவில்லையா?' என்றுகேட்டான் ரகுராமன். 'வருவாள் அண்ணா, அவளால் உன்னைப் பார்க்காமல் இருக்க முடியாது. வருவாள் அண்ணா வருவாள்...'

'அப்பா?'

பகவதி ஏக்கத்துடன் அவனை நிமிர்ந்து பார்த்தாள். 'நான் சொல்ல வேண்டுமா அண்ணு. அவர் எந்தக் காலத்திலும் உன்னைத் தேடி வரமாட்டார்.'

பெற்றோர்களும், உடன் பிறந்தவளும் இருந்த அதே ஊரில் ரகுராமன் இருந்தாலும், ஒருவர் வீட்டுக்கு மற்றவர் வருவது நின்று போயிற்று. ஏதாவது உதவி செய்ய வந்தாலும் பெற்றோர் அதை ஏற்றுக்கொள்ளவில்லை.

இந்த நிலையில் பகவதிக்கு அவ



சாமிநாத ஐயர் எந்த மகனிடம் அசையாத நம்பிக்கை வைத்திருந்தாரோ அவனைத் துச்சமாக உதறிவிட்டார். குடும்பம் நடந்தாக வேண்டும். பகவதி மேலே படித்தாள். ரகுராமனின் நிலையில் தன்னை நிறுத்திக் கொண்டு அவன் செய்ய வேண்டிய கடமையில் தன்னை அர்ப்பணித்துக் கொண்டாள் பகவதி.

னைப் பற்றி நினைக்க முடியவில்லை. மாதம் இருநூறு ரூபாய் சம்பளத்தில் சர்க்கார் காரியாலயம் ஒன்றில் வேலைக்குச் சேர்ந்திருந்தாள். பலருடன் பழகும் வாய்ப்பு ஏற்பட்டது. அவளுடன் வேலை செய்யும் பாண்டுரங்கனுடன் நட்பு ஏற்பட்டது.

உயிருடன் மகனைப் பறி கொடுத்த நிலையில் இருந்த சாமி

பெண்கள் ஆங்கிலக் கல்வி கற்க வேண்டும் என்று ஆசைப்படுகிறோம். அதே சமயத்தில் அவர்கள் வீட்டிற்குள் மருமகளாய் மனைவியாய் பழைய முறையிலிருக்க வேண்டுமென்றும் நினைக்கிறோம். பையன்களும் ஆங்கிலக் கல்வி கற்கிறார்கள். 'கல்சர்' பழகுகிறார்கள். ஆனால் பழைய வழக்கப்படி தான் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும். அந்த சமயத்தில் மட்டும் நாம் இந்தியர்கள். இது பெருத்த அநியாயமில்லையா சத்யா? மந்திரிகள், தலைவர்களின் குழந்தைகள் வெளிநாட்டில் படிக்கிறார்கள். ஆங்கிலம், தெரிந்தவர்களுக்குத்தான் மதிப்பு, மரியாதை, உயர்ந்த பதவி எல்லாம். நீயே சொல்லு. நம் குழந்தைகளுக்கு ஆங்கிலம் போதிக்காமல் கெடுத்துவிடவா சொல்லுகிறாய்? அவர்களின் வாழ்க்கையைக் குட்டிச்சுவராக அடிப்பதா? இங்கே இவர்களென்னடா என்றால் கீழ் வகுப்புக்களில் ஆங்கிலத்தை எடுத்துவிட்டார்கள். ஆனால் நடப்பதென்னவோ ஆங்கிலத்தின் ஆட்சி தான்.' பட்நாகர் ஒரே மூச்சில் பேசினான்.

சத்யன் விழிகளை மூடியவாறு சிந்தனையில் ஒன்றி இருந்தான்.

'கேளடா சத்யா, யாராவது வெளிநாட்டான் ஹிந்தியைப் புகழ்ந்தால் சும்மா தலையாட்ட வேண்டியிருக்கிறது. நம்முடைய 'கல்சரை'ப்பற்றி நாம் வெட்கப்படுகிறோம். பாதிரி தன் உடையை அணிந்துகொள்ள வெட்கப்படுகிறானா? இல்லையே! இன்னும் அவனுக்குள்ள மதிப்பு அப்படியே தானே இருக்கிறது! ஒவ்வொரு ஆங்கிலேயனும் மாதா கோவிலுக்குள் நுழைய வெட்கப்படுவதில்லையே? நாமும் இருக்கிறோமே அர்ச்சகர்கள் நம் நெற்றியில் திலகமிட வெட்கப்படுகிறோம், கூசுகிறோம். கோவிலுக்குள் நுழைந்துவிட்டால் நண்பர்களிடம் 'என்னப்பா செய்வது? அம்மாவின் கட்டாயம்' என்று சால்ஜாப்பு சொல்லுகிறோம். அது சரி. சத்யா, என்னடா யோசனை? சொல்லு. ஏன் வேலையை விட்டுவிட்டாய்? எப்பொழுது வேலையில் சேர்ந்தாய்?, ஏன் விட்டாய்?'




"என்னடா அதுக்குள்ளவா பள்ளிக்கூடம் விட்டுட்டாங்க?"

"நீதானே அம்மா சொன்னே. எல்லாத்திலேயும் 'பஸ்டா' வரணும்னு?

சத்யன் கண்களைத் திறந்தான். மனக்கதவு படீரென திறந்து கொண்டது.

கடந்தகாலம் கண் முன்னே சுழன்றது.

(தொடரும்)

# கனவு பலித்தது!

[ ஸரோஜா ராமமூர்த்தி ]

சரிந்து விழ இருந்த புடவைத் தலைப்பைச் சரிப்படுத்திக் கொள்ள ஸரஸா தன் கணவன் பக்கம் திரும்பினான். அதே சமயத்தில் ராஜூவும் புஷ்பமாலை தோள்பட்டையில் சரிந்து விழுவதைச் சரிப்படுத்திக் கொள்ள ஸரஸாவின் பக்கம் திரும்பினான். ஊர்வலம் பிரதான தெருக்களையெல்லாம் கடந்து ஒரு சிறிய சந்தின் வழியாக வந்து கொண்டிருந்தது. காஸ்லைட்காரன் தூங்கி வழிந்து கொண்டே ஊர்வலத்துக்கு முன்னாடி விடுவிடு என்று நடந்தான். பின்னால் பெண்கள் கூட்டமும் தூக்கக் கலக்கத்தில் ஆடி அசைந்து வந்து கொண்டிருந்தது. நாதஸ்வரக்காரன், ' யாரோ, இவர் யாரோ '' என்று உற்சாகமாகப் பாடிக் கொண்டு வந்தவன், ஊர்வலத்தில் எல்லோரும் நித்திரை மயக்கத்தில் இருப்பதை உணர்ந்து தன் வாசிப்பையும் படிப் படியாகக் குறைத்துக் கொண்டு வந்தான்.

மாப்பிள்ளையும் பெண்ணும் ஒருவரை ஒருவர் நன்றாகக் கவனித்துக் கொள்ள எல்லோருமாகச் சேர்ந்து சந்தர்ப்பம் அளித்தது போல் இருந்ததால், ஸரஸாவும் ராஜூவும் சட்டென்று ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். அப்பொழுது பக்கத்தில் கல்யாணப் பெண்ணின் தோழியாக வந்து கொண்டிருந்த பங்கஜம் களுக்கென்று பரிகாசமாகச் சிரிக்கவே இருவரும் வெட்கத்துடன் தலையைக் குனிந்து கொண்டனர். ராஜூவின் மனதில் கடந்த ஒரு மாதத்துக்கு முன்பு நடந்த சம்பவங்கள் பளிச் சென்று நினைவுக்கு வந்தன.

பங்கஜமும் ஸரஸாவும் பால்யத் தோழிகள். எட்டு வயதிலிருந்து ஒரே பள்ளியில் படித்து இணைபிரியாமல் இருந்தனர். ஸரஸாவையும், பங்கஜத்தையும் இரவு வேளைகளில் தவிர, பகலில் பிரிந்து காண முடியாது. பங்கஜம் எந்த நிற ஜாக்கெட்டும் பாவாடையும் உடுத்திக் கொள்கிறாளோ அதையே ஸரஸாவும் உடுத்திக் கொள்வாள். இதில் ஆச்சரியம் என்னவெனில் பங்கஜத்தின் தாயாருக்கும், ஸரஸாவின் தாயாருக்கும், தங்கள் பெண்களைப் போலவே மன ஒற்றுமை இருந்தது தான்.

பங்கஜம் மாநிறம். அகன்ற கண்கள். அந்தக் கண்களில் ஒருவித சோகபாவம் எப்பொழுதும் குடிகொண்டிருக்கும். தலையில் சாட்டைபோல் பின்னல் நெளிந்து கிடக்கும். ஸரஸா தாழை மடல் போன்ற நிறமுடையவள். மூக்கும் விழியும் சிலைக்குச் செதுக்கினாற் போல் இருக்கும். தலையில் கட்டுக்கடங்காமல் பறந்து தொந்தரவு கொடுக்கும் சுருட்டையான கூந்தல். முகத்தில் நல்ல சாதுர்யம்; திடீரென்று பார்ப்பவர்கள் ஸரஸாவைத் தான் நல்ல அழகி என்று சொல்லுவார்கள். படபடவென்று பேசுவான். இவர்கள் இருவருக்கும் வாத்தியார், பங்கஜத்தின் அத்தான் ராஜகோபாலன். பள்ளிக்கூடத்தில் கொடுக்கும் வீட்டுக் கணக்குகளைச் சொல்லிக் கொடுப்ப

திலும், 'காம்போஸிஷன்' எழுதிக் கொடுப்பதிலும் பங்கஜம், ஸரஸா இருவருக்கும் ராஜு உதவி புரிந்து வந்தான்.

பங்கஜத்தின் தகப்பனார் அவன் சிறு குழந்தையாக இருந்த போதே இறந்து விட்டதால் அவன் தாயாருடன் அத்தை வீட்டில் வசித்து வந்தான். சிறு வயதிலிருந்தே ராஜுவுக்கும் பங்கஜத்திற்கும் கல்யாணம் செய்து வைக்க வேண்டுமென்று பெரியவர்கள் ஆசைப்பட்டார்கள். அநேகமாகத் தீர்மானமும் செய்து வைத்திருந்தார்கள்.

காலையில் பழையது சாப்பிட்டு விட்டுப் புஸ்தகத்துடன் எட்டரை மணிக்கே ஸரஸா பங்கஜத்தின் வீட்டுக்கு வந்து விடுவாள். முதல் நாள் பள்ளிக்கூடத்தில் வாத்தியாரம்மா கொடுத்த வீட்டுக் கணக்கில் அநேகமாக ஒன்றைக்கூட அவள் போட்டிருக்க மாட்டாள். கணக்கு என்றால் அவளுக்குப் பிடிப்பதில்லை. எத்தனை தரம் வாத்தியாரம்மாவும், ராஜுவுமாக அவளுக்கு அதைச் சொல்லிக் கொடுத்தாலும் அவளால் அதைக் கிரஹித்துக் கொள்ள முடியவில்லை. மற்றப் பாடங்களில் இருந்த சிரத்தை, கணக்கில் அவளுக்கு இல்லை. பங்கஜம் அதற்கு நேர் விரோதம். கணக்கு எத்தனை வேண்டுமானாலும் போட்டு விடுவாள். ஸரஸா கணக்குப் புரியாமல் விழிக்கும்போது, "மக்கு! மக்கு! பங்கஜத்தைப் பார். ஒரு தரம் சொல்லிக் கொடுத்தால் அப்படியே போட்டுவிடுகிறாளே! உன் மூளையில் என்னடி இருக்கிறது, ஸரஸா?" என்று கடிந்து கொள்வான் ராஜு.

"இல்லை, அத்தான்" என்று ஸரஸா பயத்துடன் பதில் அளிப்பதைக் கண்டதும் ராஜுவின் மனம் இளகிவிடும்.

"நானும் இப்படித்தான் கணக்கில் மக்காக இருந்தேன். இப்போ பாரேன்!" என்று பெருமை அடித்துக் கொள்ளும் ராஜுவை பங்கஜம் கடிந்து கொள்வாள்.

"என் அவளை வெறுமனே ஏதாவது சொல்லிக் கொண்டிருக்கிறாய், அத்தான்? உன்னைப் பற்றி அத்தையைக் கேட்டாலல்லவா தெரியும்? உன்னைக் கணக்கு வாத்தியார் அடித்ததும் அவரிடம் அடிபடாமல் இருக்க நீ பக்கத்துப் பையனைப் பார்த்துக் 'காபி' அடித்ததும், அத்தை எனக்குச் சொல்லியிருக்கிறாள்" என்று பங்கஜம் அவன் 'குட்டை' உடைத்து விடுவாள்.

ராஜுவுக்கு அவள் பேரில் கோபம் வரும். அந்த ஜோரில் ஸரஸாவின் கணக்குகளை எல்லாம் தானே போட்டுத் தந்து விடுவான்.

இப்படி பால்யத்தில் பங்கஜமும், ஸரஸாவும் இணைபிரியாமல் இருந்தனர். இருவருக்கும் வயது ஆக ஆக இரண்டு குடும்பங்களிலும் அவர்கள் கல்யாணத்தைப் பற்றிப் பேச்சு ஆரம்பமாயிற்று. ராஜு சென்னையில் காலேஜில் படித்து வந்தான். பங்கஜமும், ஸரஸாவும் பள்ளிக்கூடம் போவதை நிறுத்தி விட்டனர். பங்கஜத்தின் விவாகத்தைப் பற்றி அவள் தாயார் அதிக கவலைப் படவில்லை. ராஜு இருக்கும் போது அவனைவிட வேறு உயர்வாக அவளுக்குக் கிடைத்து விடப் போகிறதா என்ன என்று நினைத்துத் திருப்தியுடனிருந்தாள்.

ஸரஸாவின் பெற்றோர் அவளுக்காக வரன் தேடுவதில் முனைந்து இருந்தனர். வீட்டில் கல்யாணப் பேச்சு அடிபடும் போதெல்லாம் ஸரஸாவின் மனதில் சொல்லாத ஆசை ஒன்று தோன்றி மறையும். ராஜுவின் சிரித்த முகமும், அவன் கள்ளங் கபடமற்ற பேச்சும் அவள் மனதை மயக்கி இருந்தன. 'ராஜு வாவது நமக்குக் கிடைப்பதாவது!

பங்கஜம்தான் இருக்கிறளே அதற்கு?" என்று எண்ணி உருகு வாள் ஸரஸா.

## 2

அந்த வருஷம் விடுமுறைக்குச் சென்னையிலிருந்து ராஜு அவர்கள் ஊருக்கு வந்திருந்தான். வண்டியை விட்டு இறங்கும்போதே தெருவில் நின்று கொண்டிருந்த பங்கஜம் வேகமாக உள்ளே சென்று மறைந்தாள். "என்ன இது, பங்கஜமா இவள்? போன வருஷம் இருந்ததற்கு இப்பொழுது எவ்வளவு மாறுதல்! உயர்ந்து, கொடி மாதிரி எவ்வளவு அழகாக மாறிவிட்டாள்?" என்று நினைத்துக்கொண்டான் ராஜு.

உள்ளே சென்றவள் வெகு நேரம் வரையில் வெளியே திரும்பி வரவில்லை. ராஜு அவளுக்காகவும், ஸரஸாவுக்காகவும் சென்னையிலிருந்து வாங்கி வந்திருந்த ரிப்பன்களைக்கொடுக்க எண்ணி பங்கஜத்தை எதிர்பார்த்து உட்கார்ந்திருந்தான். "பங்கஜம், பங்கஜம்" என்று கூப்பிட்டுக் கொண்டே ஸரஸா உள்ளே வந்தாள். அதே சமயத்தில் பங்கஜமும் காப்பியை எடுத்துக்கொண்டு ஹாலுக்கு வந்தாள். ஹாலில் உட்கார்ந்திருந்த ராஜு ஸரஸாவைக் கண்டு ஆச்சரியமடைந்தான். தந்தச் சிலை போல் ஒரு நிமிஷம் அவ்விடத்தில் நின்று விட்டு ஸரஸா பங்கஜத்தைத் தேடிக் கொண்டு உள்ளே சென்றுவிட்டாள். தன் எதிரில் காப்பியுடன் நிற்கும் பங்கஜத்தை சிறிது நேரம் ராஜுவால் கவனிக்க முடியவில்லை. அவன் மனம் தீவிரமாக ஸரஸாவின் சௌந்தர்யத்தோடு பங்கஜத்தின் சௌந்தர்யத்தை ஒப்பிட்டுப் பார்ப்பதில் ஈடுபட்டிருந்தது. மூக்கும், முழியும், சிவந்த நிறமும் நடுத்தர உயரமுமாக ஸரஸாவின் அழகின் முன்னால் பங்கஜம் ஒன்றும் பிரமாதமாக அவனுக்குத் தோன்றவில்லை.

"காப்பி ஆறிப்போகிறதே, அத்தான்" என்று சொல்லிக் கொண்டே மேஜை மேல் காப்பியை வைத்தாள் பங்கஜம்.

"இந்தா பங்கஜம்! உனக்காகவும் ஸரஸாவுக்காகவும் ரிப்பன்கள் வாங்கி வந்தேன். நீதான் என் கண்ணிலேயே படவில்லையே நான் வந்தது முதற் கொண்டு" என்று ரிப்பன்களை அவளிடம் கொடுத்தான் ராஜு.

பங்கஜத்தைத் தேடிக் கொண்டு பின் கட்டுக்குச் சென்ற ஸரஸா திரும்பவும் ஹாலுக்கு வந்தாள்.

ராஜு அவளை விழுங்கி விடுவது போல் பார்த்தான். ஸரஸா ஒரு நிமிஷம் தயங்கி நின்று விட்டு, "நான் வரட்டுமா, பங்கஜம்?" என்று சொல்லிக் கொண்டு புறப்பட்டாள்.

"உனக்கும் உன் சுணக்கு வாத்தியார் ரிப்பன் வாங்கி வந்திருக்கிறார். இந்தா! அவரிடம் பேசாமல் போகிறாயே?" என்று கேட்டாள் பங்கஜம்.

வெட்கத்துடன் அவள் அப்போது ராஜுவைப் பார்த்த பார்வை அவனைப் பரவசப்படுத்தியது.

இதற்குப் பிறகு ஸரஸா பங்கஜத்தின் வீட்டுக்கு அதிகமாக வருவதில்லை. பங்கஜம் ராஜுவுக்காகக் காத்திருக்கும்போது தன் மனதில் இருப்பது பொல்லாத ஆசை என்று எண்ணி அவனை அதிகம் சந்திக்க அவள் ஆசைப்படவில்லை.

## 3

ஒரு தினம் பங்கஜம் ஸரஸாவைக் கோவிலில் பார்த்தபோது அவளிடம் ரகசியமாக, "ஸரஸு! எனக்கும் அத்தானுக்கும் கல்யாணம் நிச்சயம் செய்திருக்கிறார்களடி! முன்னைப் போல் நீதான் எங்கள் வீட்டுக்கு வருகிறதில்லை.

கல்யாணத்துக்கும் வராமல் இருந்து விடாதே'' என்றாள்.

ஸரஸாவின் மனம் காரணமில்லாமல் வருந்தியது. பங்கஜத்துக்கும் ராஜூவுக்கும் கல்யாணம்! ஆமாம், இந்த விஷயம் வருஷக்கணக்காகத் தெரிந்தது தானே? இதற்காக இப்பொழுது ஏன் தன் மனம் திடீரென்று வருந்த வேண்டும்?

"வருகிறேன், பங்கஜம்! ஆனால், அப்பாவை இந்த ஊரை விட்டு மாற்றி விட்டார்களே! திடீரென்று இவ்வளவு வருஷங்கள் இருந்தவரை மாற்றி யிருக்கிறார்கள். நீயும் நானும் பிரிய வேண்டிய காலம்போல் இருக்கிறது. கல்யாணம் ஆனவுடன் எப்படியிருந்தாலும் நீ அவருடன் போய் விடுவாய் அல்லவா?'' என்று கேட்டாள் ஸரஸா.



பங்கஜத்தினால் ஒரு நிமிஷம் பேச முடியவில்லை. பிள்ளைப் பிராயத்திலிருந்து ஒன்றாக இணை பிரியாமல் வளர்ந்த இருவரும் இப்பொழுது கல்யாண சமயத்தில் பிரிந்து விடப் போகிறோம் என்பதை நினைத்தவுடன் அவள் கண்களில் ஜலம் ததும்பியது.

"நாளை சனிக்கிழமை இங்கிருந்து புறப்படுகிறோம், பங்கஜம்'' என்று கம்மிய குரலில் பதில் அளித்தாள் ஸரஸா.

"என் கல்யாணத்துக்கு வருகிறாயா, ஸரஸா?'' என்று ஆவலுடன் கேட்டாள் பங்கஜம்.

"வராமல் இருப்பேனா,பங்கஜம்?'' என்றாள் ஸரஸா.

ஸரஸாவை ரயிலேற்றி விட்டு வந்த பங்கஜம் இரண்டு மூன்று தினங்கள் சரியாகச் சாப்பிடக் கூட இல்லை. மனதில் இருந்த ஏக்கம் முகத்தில் பிரதிபலித்தது. ஆனால், ஸரஸாவின் மனக் கண் முன்பு ராஜூவின் அழகிய முகம் தான் பதிந்து போயிருந்தது. தன் தோழிக்குத் துரோகம் செய்வதாக அவள் மனம் கூறினாலும் அவளால் அந்தப் பொல்லாத ஆசையை விலக்க முடியவில்லை.

"பங்கஜத்தின் கல்யாணத்துக்குப்போகக்கூடாது'' என்று தீர்மானித்துக் கொண்டுதான் அவள் ரயில் ஏறினாள். ஸரஸா ஊருக்குப் போன சில நாட்களில் ராஜூ அவளை மறந்து விட்டான். மறந்து விட்டான் என்றால் அடியோடு அவள் நினைவு அற்றுப் போகவில்லை, ஸரஸாவின் அழகைப்பற்றி அதிகமாக அவன் மனம் சிந்திக்கவில்லை. பங்கஜத்துக்கும் ராஜூவுக்கும் விவாகம் நடத்தத் தேதியும் குறிப்பிட்டு விட்டார்கள். ஸரஸா ஊருக்குப் போய் ஒரு பௌர்ணமி கழிந்து விட்டது. அடுத்த சித்திரா பௌர்ணமி அன்று கல்யாணம்.

நிலவில் உட்கார்ந்து பங்கஜம் வெற்றிலை போட்டுக் கொண்டிருந்தாள். ராஜுவும் அவன் தாயாரும் எதிரில் உட்கார்ந்திருந்தார்கள். "இவ்வளவு நாள் கூட இருந்து விட்டு ஸரஸா இல்லாமல் எனக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை, அத்தை" என்றாள் பங்கஜம்.

"எல்லாம் கல்யாணத்துக்கு வருவாள். வேண்டுமானால் அப்பொழுது பத்துநாள் கூட வைத்துக் கொள்வேன்" என்றாள் அத்தை.

"அவள் இருக்க வேண்டுமே, அத்தை. முன்னைப் போல் அவள் இப்பொழுதெல்லாம் இல்லை. நான் போட்ட இரண்டு கடிதங்களுக்கும் பதில் கூடப் போடவில்லை" பங்கஜம் துக்கம் நிரம்பிய மனத்துடன் இதைக் கூறினாள்.

"போடி பைத்தியம்! உனக்கு ஏதாவது சந்தேகம், புது ஊரோ இல்லையோ, புதுக் குடித்தனம் வேறு, வேலை ஒழியாமல் இருந்திருக்கும்!" என்று சமாதானப் படுத்தினாள் அத்தை.

வாஸ்தவத்தில் அவள் மனம் நொந்து போயிருந்தது, அன்று இரவு தூக்கத்தில் பங்கஜம் ஒரு அதிசயக் கனவுகண்டாள். தன் அத்தான் ராஜுவின் கரங்களைப் பற்றி ஸரஸா அழைத்துப் போவதாகவும், இவளைப் பார்த்துக் கேலி செய்தது போலவும் இருந்தது. அந்தக் கனவைப்பற்றி நினைத்து நினைத்து அவள் தலைகனத்துப் போயிற்று.

அன்று இரவு பூராவும் தூக்கமில்லாமல் வேதனையுடன் கழித்த பங்கஜத்துக்கு அடுத்த நாள் ஒரு புது விஷயம் காத்திருந்தது.

## 4

அன்று ஸரஸாவின் தகப்பனாரிடமிருந்து கடிதம் ஒன்று வந்தது. ஸரஸாவும், அவரும் பங்கஜத்தின் கல்யாணக் கடிதத்தை ஆவலுடன் எதிர்பார்த்ததாகவும், இதுவரையில் கடிதம் ஒன்றும் வராமல் போகவே பங்கஜத்துக்கும் ராஜுவுக்கும் கல்யாணம் நிச்சயமாகாதிருந்தால் ஸரஸாவை ராஜுக்கு விவாகம் செய்துகொள்ள முடியுமா என்றும் கேட்டிருந்தார். பங்கஜம் இந்தக் கடிதத்தை வேடிக்கையாக ராஜுவிடம் காண்பித்தாள். ராஜு கடிதத்தை ஆவலுடன் நாலுதரம் திருப்பித் திருப்பி வாசித்தான்.



"அத்தானுக் கென்ன ஸரஸா விடத்தில் இவ்வளவு ஆசை?" என்று கூட நினைத்துக் கொண்டாள். ஸரஸாவின் பேச்சை எடுத்தாலே அத்தானுக்கு முகத்தில் சந்தோஷமும் வெட்கமும் பொங்குகின்றன. ஆனால், தான் நேருக்கு நேர் அவன் கண் எதிரில் இருந்தும் தன்னைப் பார்ப்பதிலும் தன்னுடன் பேசுவதிலும் ஓர் ஆனந்தமும் அவனுக்கு ஏற்படுகிறதில்லையே!

இதற்கேற்றாற் போல் அடுத்த வீட்டில், புதிதாகக் கல்யாணம் ஆன இளந் தம்பதிகள் குடி வந்திருந்தனர். அவள் ஒரு தினம் பங்கஜத்தின் வீட்டிற்கு வந்திருந்தாள்.

"கல்யாணம் ஆகப்போகிற பெண்ணாகவே இல்லையே நீ? உற்சாகமாக இருப்பதாக உன்னைப் பார்த்தால் தோன்றவில்லையே!" என்று கேட்டாள் அவள்.

"கல்யாணமென்றால் அப்படி உற்சாகப் படும்படி என்ன இருக்கிறது?" என்று கேட்டாள் பங்கஜம்.

"பூ, இவ்வளவுதானா, எனக்குக் கல்யாணம் நிச்சயம் செய்தவுடன் வரப்போகிற ஆத்துக்காரர் எப்படி இருப்பார் என்றெல்லாம் கற்பனை செய்து பார்ப்பேன், ஜான்வாஸ ஊர்வலம் வரும்போது ஒருவருக்கும் தெரியாமல் மாடியில் நின்று அவரைப் பார்த்தேன். கல்யாணத்தில் அவர் என் கைகளை பிடித்துக் கொண்டிருக்கும் போது என் தேகம் சிலிர்த்தது" என்று வர்ணித்துக் கொண்டிருந்தாள் அடுத்த வீட்டுப் பெண்.

பங்கஜம் யோசித்துப் பார்த்தாள். தன் அத்தானைப் பார்க்கும் போது அவ்வித எண்ணங்கள் அவள் மனதில் எழவில்லை. குழந்தைப் பருவத்திலிருந்து ஒன்றாக வளர்ந்தவர்கள் மனதில் தூய்மையான அன்பைத் தவிர காதலுக்கு இடம் இருக்காது போலும் என்று நினைத்தாள். ஆனால், ஸரஸாவின் தகப்பனாரிடமிருந்து வந்த கடிதத்தைப் பார்த்த ராஜு எப்படிப் பூரித்துப் போனான்?

## 5

"அத்தான்! இந்தச் சீட்டுகளில் இரண்டைப் பொறுக்கி எடுங்கள்" என்று ராஜுவின் முன்னிலையில் மூன்று சீட்டுக்களைக் குலுக்கிப் போட்டாள் பங்கஜம். ராஜு சிரித்துக் கொண்டே, "இது என்ன விளையாட்டு பங்கஜம்?" என்று கேட்டுக் கொண்டு சீட்டுகளைப் பொறுக்கினான். ஒன்றில் ஸரஸா என்றும், இன்னொன்றில் பங்கஜம் என்றும் எழுதியிருந்தது.

"ஐயைய! நீ தப்பாக எடுத்து விட்டாய். இன்னொரு தரம் எடு" என்று மறுபடியும் சீட்டுகளைக் குலுக்கிப் போட்டாள் பங்கஜம்.

இந்தத் தடவை ராஜு என்றும் ஸரஸா என்றும் சீட்டுகள் வந்தன.

"பார்த்தாயா, அத்தான்!" என்றாள் பங்கஜம்.

"என்ன பார்த்தாயா?" என்று ஒன்றும் புரியாமல் கேட்டான் ராஜு.

"உனக்கும் ஸரஸாவுக்கும் தான் முடி போட்டிருக்கிறது" என்று உள்ளே ஓடினாள் பங்கஜம்.

* * *

நாதஸ்வரக்காரன் புதிதாக ஒரு பாட்டை ஆரம்பித்தான். ராஜுவின் சிந்தனையும் கலைந்தது.

# வைர மாலை

ஸரோஜா ராமமூர்த்தி

போலீஸ் சூப்ரிண்டெண்ட் சந்தானம் காப்பியை உறிஞ்சியவாறு தமது மகளின் தைரியத்தைப் பாராட்டிக் கொண்டிருந்தார். அவர் மருமான் ராமதுரை சுசீலாவின் அளப்பைக் கேட்டு மனதுக்குள் சிரித்துக் கொண்டிருந்தான்.

"ஆமாம், அப்பா! இந்த அத்தானுக்கு இன்ஸ்பெக்டர் வேலை வாங்கித் தரப் போவதாக அடிக்கடி சொல்கிறீர்களே, அதுதான் எனக்கு வேடிக்கையா இருக்கு! பூனை சத்தப்படுத்தறதைக் கண்டு மிரள்கிறாரே இவர்!" என்றாள் சுசீலா, ராமதுரையைக் கேலியாகப் பார்த்துக் கொண்டே.

சந்தானம் சுசீலா கூறியதைக் கவனித்ததாகத் தெரியவில்லை. "சுசீலா! மேலே கதாநாயகன் என்ன செய்கிறான் என்று கூறவில்லையே?" என்று கேட்டார்.

"முதலில் விஷத்தைக் கொடுக்கிறான் தன் காதலிக்கு. விஷம் சரியாக வேலை செய்யவில்லை. சாகவும் மாட்டாமல், பிழைக்கவும் மாட்டாமல் அவள் திண்டாடி, 'தாகம், தாகம்' என்று பறக்கிறாள். மறுபடியும் ஒரு கோப்பை ஜலத்தில் விஷத்தைக் கலந்து கொடுக்கிறான். நிம்மதியாக மரணமடைகிறாள் காதலி. தான் செய்தது கொலை என்று தெரியாமல் இருக்க, பாதி ராத்திரியில் மாடி அறையில் அவள் உடலைக் கிடத்தி வீட்டையும் பற்ற வைக்கிறான். நெருப்பு நன்றாகப் பிடித்து எரியும்போது அவசரமாக நெருப்பணைப்பவர்களுக்குப் 'போன்' செய்கிறான்."

"போறுமே, சுசீ! இந்தக் கொலைகாரர்கள் கதைதானா உனக்கு அகப்பட்டது?" என்றான் ராமதுரை.

"பார்த்தியாப்பா ராமு! உனக்கும் இதிலெல்லாம் சிரத்தை ஏற்படணும். அப்பத்தான் போலீஸ் டிபார்ட்மெண்டில் வேலை கிடைக்கும்" என்றார் சந்தானம்.

"ஐயய்யோ! எங்கேயாவது கொலை கிலை நடந்தால் அத்தான் வேலையை உடனே ராஜிநாமா செய்து விடுவாரே, அப்பா!" என்று இரைந்து சிரித்தாள் சுசீலா.

சூப்ரிண்டெண்ட் சந்தானமும் "ஹ ஹ!" என்று சிரித்துக் கொண்டு, "அப்படிச் சொல்லாதே, சுசீலா. இவன் அழுத்தக்காரன். இல்லையாடா ராமு?" என்று மருமானைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே கேட்டார்.

அப்பொழுது ராமதுரை சுசீலாவின் அகன்ற நெற்றியையும், அதில் தவழ்ந்து புரளும் சுருண்ட கூந்தலையும் பார்த்துக் கொண்டிருந்தான். "இவ்வளவு அழகைக் கொடுத்த பகவான் இவளுக்குப் பணிவையும் கொடுத்திருக்கக் கூடாதா?" என்று தோன்றியது அவனுக்கு.

"காலேஜ் பாடங்களைப் படிக்கிறதில்லையா சுசீலா நீ?" என்று ராமதுரை கேட்டான்.

"ஓ! படிக்காமல் என்ன? ஆனால் கிணற்றுத் தவளை மாதிரி ஒரு விவரமும் தெரியாமல் இருக்க என்னால் முடியாது. ஐரோப்பிய நாடுகளைப் போல் நம் தேசத்திலும் பெண்களைப் போலீஸ் வேலையில் எடுத்துக்

கொள்வதானால் நாளைக்கே நான் படிப்பை விட்டு விட்டு வேலையில் சேர்ந்து விடுவேன். ஆனால், இந்தப் புஸ்தகங்களில் வரும் 'ஸ்காட்லண்ட் யார்ட்' துப்பறிபவர்களைப் போல் நமது தேசத்தில் கெட்டிக்காரர்கள் மிகவும் குறைவு" என்றாள் சுசீலா.

சந்தானம் ஒரு புன்னகையுடன் மகளைத் திரும்பிப் பார்த்தார். "அப்படியெல்லாம் சொல்லி விடாதே, சுசீலா. அந்த ஊர்த் திருடர்களைப் போல் சாமர்த்தியம் வாய்ந்த திருடர்கள் நம் தேசத்தில் மிகவும் குறைவு" என்றார்.

"அதிலும் நம் அத்தானுக்குத் துப்பறிபவர் வேலை கிடைத்தால் திருடர்களுக்குக் கொண்டாட்டம் தான்!" என்றாள் சுசீலா ராமதுரையைக் கடைக் கண்ணால் பார்த்துக் கொண்டு.

"சுசீ! சும்மா ராமுவைக் கேலி பண்ணாதே, அம்மா. நீ என்ன இருந்தாலும் பெண்தானே?" என்று கூறிக் கொண்டு அவள் அத்தை ஸ்வர்ணம் அங்கே வந்தாள்.

## 2

சூப்ரின்டெண்ட் சந்தானம் வேலையில் கெட்டிக்காரர். அவர் எந்த ஜில்லாவில் வேலையில் இருந்தாலும் அங்கே குற்றங்கள் குறைவாக இருக்கும். உத்தியோக விஷயத்தில் அவ்வளவு சிரத்தை அவருக்கு. ராமதுரையும், ஸ்வர்ணமும் அவர்



ஆதாவை நாடிவந்தனர். ஸ்வர்ணத்தின் கணவன் இளம் வயதில் இறந்து விட்டான். ராமதுரைக்குத் தமது இலாகாவில் வேலை வாங்கித் தந்து விடலாம் என்ற நம்பிக்கை ஏற்பட்டது. சுசீலாவும் ராமதுரையும் மிகவும் நெருங்கிப் பழகினார்கள்; ஒன்றாக விளையாடினார்கள். எதிலும் ராமதுரை சற்று நிதானமாகவே நடந்து கொள்வான். அவசரப்பட மாட்டான். சுசீலா படபடப்பு நிறைந்தவள்; ராமதுரையை "பயந்தாங்கொள்ளி" என்று சிறு வயதிலேயே கேலி செய்வாள். வழக்கப்போல் அன்றும் தகப்பனார் முன்னிலையில் அவள் அத்தானைக் கேலி செய்தாள். வழக்கம் போலத்தான் என்றாலும் அது அவன் மனதை எவ்வளவு புண்படுத்தியிருந்தது என்பதை அவள் உணரவில்லை.

சந்தானம் வெளியே போன பிறகு சுசீலா ராமதுரையைக் கடற்கரைக்குக் கூப்பிட்டாள்.

"நான் வரவில்லை, சுசி !" என்று அவன் மறுத்து விட்டான்.

"சினிமாவுக்குத் தான் வாங்களேன்" என்றாள் சுசீலா.

"இல்லை !" என்றான் அவன்.

ராமதுரைக்கு அவளையே வருகிற வைகாசி மாசத்தில் கொடுத்து விவாகம் செய்து விடுவதென்று பெரியவர்கள் இருவரும் தீர்மானித்திருந்தனர். அதனால் சுசீலா அவனை வெகு மரியாதையாக, "நீங்கள்" என்று கூப்பிட்டு வந்தாள்.

சுசீலா கேலி செய்த ஒரு வாரம் வரைக்கும் ராமதுரை அவளுடன் அதிகமாகப் பேசவில்லை. ஏதோ ஆழ்ந்து யோசனை செய்வதில் மூழ்கியிருந்தான்.

"ஊட்டிக்குப் போயிட்டு வரலாம்னு இருக்கேன், மாமா" என்றான் ஒரு தினம் சந்தானத்திடம்.

"என்ன விசேஷம்?" என்று கேட்டார் அவர்.

"ஒன்றுமில்லை. காலேஜில் நாலைந்து சிநேகிதர்கள் போகிறார்கள். அவர்களுடன் தமாஷாகப் போய் விட்டு வருகிறேனே!"

"சுசீலாவையும் உன்னுடன் அனுப்பலாமென்று பார்த்தேன்."

"அதெப்படி முடியும், மாமா! நான் நாலைந்து சிநேகிதர்களுடன் போகும்போது....."

"ஆமாண்டாப்பா! நீ சொல்றது சரிதான்" என்றாள் ஸ்வர்ணம். ராமதுரை எல்லோரிடமும் விடை பெற்றுக் கொண்டான்.

## 3

அத்தான் தன்னிடம் ஒரு வார்த்தை கூடச் சொல்லாமல் சென்றதைக் குறித்து சுசீலா வருந்தினாள். ராமதுரை அவளுடன் பேசிப் பழகும்போது ஏற்படாத ஒருவித அன்பு அவன் பேரில் அப்பொழுதுதான் அவளுக்கு ஏற்பட்டது. "அத்தானுக்குத் தன் பேரில் கோபம் ஏற்பட்டதால் தான் லீவில் வேறு ஊருக்குப் போய் விட்டார்; கண்டிப்பாகக் கோபம்தான்" என்று சுசீலா அழாக் குறையாக வருந்தினாள்.

ராமதுரை ஊருக்குப் போன பத்து தினங்கள் கழித்து மாடியில் சுசீலா தன் அறையில் உட்கார்ந்து துப்பறியும் நாவல் ஒன்றைப் படித்துக் கொண்டிருந்தாள். இரவு மணி எட்டரைதான் இருக்கும். திடீரென்று ஜன்னல் அருகிலிருந்த கொய்யா மரத்தில் சலசலவென்று சத்தம் கேட்டது. சுசீலா 'டார்ச்' விளக்கை எடுத்து ஜன்னலுக்கு வெளியே பார்த்தாள். 'பொத்' தென்று அவள் காலடியில் ஒரு கடிதம் வந்து விழுந்தது. சூப்ரிண்டெண்ட் சந்தானத்தின் பெண்ணாக இருந்தாலும், என்னதான் ராமதுரையை வாயடி அடித்தாலும், சுசீலா அந்த நிமிஷத்தில் பயந்துதான் போனாள்.

நடுங்கிய கரத்தால் அந்தக் கடிதத்தை எடுத்துப் படிக்க ஆரம்பித்தாள்.

"அம்மணி,

தேவைக்கு அதிகமான பணமோ, நகைகளோ உங்களைப் போன்ற பணக்காரரிடம் இருப்பதால்தான் சமூகம் ஏழைகள் - தனவந்தர்கள் என்ற இரண்டு பிரிவுகளாக இருக்கிறது. இந்தப் பெருங் குறையை நிவர்த்திக்க எங்கள் கூட்டம் முயன்று வருகிறது. தங்களிடமிருந்து நாங்கள் அதிகம் ஒன்றும் கோரவில்லை. தங்களிடமுள்ள வைர மாலையை நாளை இரவு இதே நேரத்தில் இதே ஜன்னலில் ஒரு துணியில் சுற்றி வைத்து விடுங்கள். தவற மாட்டீர்கள் என்று நிச்சயமாக நம்புகிறோம். தங்கள்,

............"

சுசீலா, கடிதத்தை மூன்று நான்கு முறை படித்தாள். அவள் தகப்பனாரோ ஊரில் இல்லை. அத்தை ஸ்வர்ணம் சீக்கிரமாகச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு பஜனை மடத்தில் ராமாயணம் கேட்கப் போயிருந்தாள். கையில் கடிதத்துடன் மாடிப் படிகளில் இறங்கும்போது கூட சுசீலாவின் நெஞ்சு வேகமாக அடித்துக் கொண்டது.

"அடே! முன்னூத்தி ஆறு" என்று இரைந்து கூப்பிட யத்தனித்தாள். வார்த்தைகள் வெளி வராமல், "மூ...மு...மூ" என்று தொண்டையில் சிக்கிக் கொண்டன. முன்னூத்தி ஆறு அவளுக்குத் துணைக்காகப் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து சாயந்திரமே வந்து, வெளி வராந்தாவில் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தான்.

"அடே, முன்னூத்தி ஆறு! இதென்னடா பாழும் தூக்கம் இதற்குள்? எழுந்திரு. திருடன் வந்து தோட்டத்தில் ஒளிஞ்சிண்டிருக்கான்" என்று அவனருகில் சென்று கத்தினள் சுசீலா. 'முன்னூத்தி ஆறு' உளறி அடித்துக் கொண்டு எழுந்தான். "என்னம்மா! ஏதாவது சொப்பனம் கிப்பனம் கண்டீங்களா?" என்று கொட்டாவி விட்டுக் கொண்டு அவளைக் கேட்டான்.

"ஆமாண்டா; முழித்துக்கொண்டே சொப்பனம் கண்டு உளறுகிறேன்! உனக்கு யாரடா போலீஸில் வேலை கொடுத்தது?" என்று கோபமாகச் சொல்லிக் கொண்டே, "வாடா! இரண்டு பேருமாகப் போய்ப் பார்க்கலாம்" என்று கூப்பிட்டாள். முன்னூத்தி ஆறு சிரித்துவிட்டு, "நீங்க இங்கேயே உக்காந்திருங்க. நீங்க வரவாவது?" என்று சொல்லிவிட்டுப் போய், கொய்யா மரத்தின் மேல் முன்னூறு தரம் 'டார்ச்சை' அடித்துப் பார்த்தான். அதில் குண்டு குண்டாகப் பாதி பழுத்த பழங்கள் தான் தொங்கின!

"நல்லா பாத்தீங்க அம்மா! மணி ஒன்பதுதான் ஆவுது. எந்தத் திருடனாவது அவ்வளவு தைரியமாக உள்ளே வருவானா?" என்றான் அவன்.

"நாசமாய்ப் போனே நீ! இந்தக் கடுதாசி கூடப் பொய்யா?" என்று சுசீலா கடிதத்தை விட்டெறிந்து, "போய் சப் இன்ஸ்பெக்டரைக் கூட்டிவாடா!" என்றாள்.

இதற்குள் அத்தை ஸ்வர்ணம் காலக்ஷேபம் முடிந்து வந்து விட்டாள். "என்னவோடி அம்மா! அண்ணாவும் ஊரில் இல்லை. இவனும் வெளியூருக்குப் போயிருக்கான்" என்று அங்கலாய்த்துக் கொண்டாள்.

"ஸப் இன்ஸ்பெக்டர் ஐயாவும், நம்ம ஐயாவோடுதான் கேஸ் விசாரிக்க ஊருக்குப் போனாங்க" என்று சாவதானமாகச் சொல்லி முடித்தான் முன்னூத்தி ஆறு. "அண்ணா வரமட்டும் நீ மாடியில் படுக்க வேண்

டாம் சுசீலா! கீழ் ரூமில் படுத்துக்கோ. நான் உனக்குத் துணையாகப் படுத்துக் கொள்கிறேன்'' என்றாள் ஸ்வர்ணம்.

## 4

சூப்பரிண்டெண்ட் சந்தானத்தை ஆச்சரியத்தில் மூழ்கடித்த விஷயம் ஒன்று தான். திருடனுக்குத் தான் வெளியே போயிருந்ததும், தன் தங்கை ஸ்வர்ணம் காலக்ஷேபத்துக்குப் போயிருந்ததும் எப்படித் தெரிந்தது என்பது தான் அது.

அடுத்த நாள் குறிப்பிட்ட நேரத்தில் சந்தானத்தின் வீட்டில் பாராச் சேவகர்கள் ஏழெட்டு பேர் இருந்தனர். இரண்டு ஸப் இன்ஸ்பெக்டர்களும், ஒரு இன்ஸ்பெக்டரும் இருந்தார்கள். ஆனால், அன்று ஒன்றும் நிகழவில்லை. அடுத்த இருபது தினங்கள் வரையிலும் ஒன்றுமே நடக்கவில்லை.

"எவனோ சோதாப் பையன் பயமுறுத்திக் கடுதாசி போட்டிருக்கான்'' என்றார் சந்தானம்.

எல்லோரும் அந்த விஷயத்தைப் பற்றி அசிரத்தையாக இருந்துவிட்டனர். சுசீலாவுக்கு வீட்டுக்குள் அடைபட்டுக் கிடந்தது என்னவோ போல் இருந்தது. இருபது தினங்களுக்குப் பிறகு அன்று காரில் திருவல்லிக்கேணியிலிருந்த சிநேகிதி ஒருத்தியின் வீட்டுக்குப் போனாள். அவள் இவளைக் கடற்கரைக்குக் கூப்பிட்டாள். இருவருமாகச் சென்றனர். அப்பொழுது மணி ஏழு இருக்கும். சுசீலா அன்றுதான் இருபது தினங்களுக்குப் பிறகு அந்த வைர மாலையை மறுபடி அணிந்திருந்தாள். அதை வீட்டில் பெட்டியில் வைத்துவிட்டுவர அவளுக்குப் பயம்.

சிநேகிதிகள் இருவருமாகப் பேசிக்கொண்டே கடற்கரை ஓரமாக வெகு தூரம் சென்று, ஒரு படகின் பின்னால் உட்கார்ந்தனர்.

அப்பொழுது பின்னால் ஆள் அரவம் கேட்டது. திடுக்கிட்டுத் தோழி திரும்பினாள். "ஐயோ!'' என்று அலற முயன்றவளுக்குத் தொண்டை எழும்பவில்லை. அவர்கள் பின்னால் ஒருவன் கையில் துப்பாக்கியுடன் நின்றிருந்தான். அவன் முகம் கண்கள் வரையில் மறைக்கப்பட்டிருந்தது. கைத்துப்பாக்கியை சுசீலாவின் மார்புக்கு நேராக நீட்டி, கழுத்தில் தவழ்ந்த வைர மாலையைக் காட்டினான் அவன்.

சுசீலா மறுமொழி கூறாமல் அதைக் கழட்டி அவன் கையில் போட்டாள். மறு நிமிஷம் அவன் சாலையில் நிறுத்தப் பட்டிருந்த காரில் ஏறிப் போய்விட்டான்.

## 5

இந்தத் தடவை சந்தானத்துக்கு என்ன செய்வது என்று புரியவில்லை. "அசட்டுப் பெண்களா! வாய் விட்டுச் சத்தம் போடாமல் இடித்த புளி மாதிரி என்ன செய்தீர்கள்?'' என்று திரும்பத் திரும்பக் கேட்டார் அவர்களைப் பார்த்து.

இவ்வளவு அமளிக்கிடையில் ராமதுரை ஊரிலிருந்து திரும்பி வந்து, சந்தானத்திடமிருந்து சகல விவரங்களையும் அறிந்து கொண்டான். சுசீலாவின் குதிப்பும், பரிகாசமும் அடங்கிப் போயிருந்ததை அவன் கவனித்தான். உண்மையில் அத்தானை நிமிர்ந்து பார்க்கக்கூட அவளுக்குத் தைரியம் இல்லை.

"சுசீலா! நான் வந்ததிலிருந்து என்னுடன் பேசவே மாட்டேன் என்கிறாயே? என்மேல் உனக்கு என்ன கோபம்? கோபம் திருடன் பேரில் அல்லவா இருக்க வேண்டும்?'' என்று கேட்டான் ராமதுரை அன்று சாயங்காலம்.

"ஆமாம் அத்தான்! உங்கள் பேரில் தான் எனக்குக் கோபம்! நீங்கள் ஏன் என்னை உங்கள் கூட அழைத்துப் போகவில்லை? அத னால் தானே நான் இங்கே தனி யாக இருக்கும்படி நேர்ந்தது? என் வைர மாலையும் பறி போயிற்று?" என்று வருந்தினாள் அவள். அவள் கண்களிலிருந்து உருண்டு இரண்டு துளி நீர் கன்னங்களில் வழிந்தது.

ராமதுரையின் மனம் இளகி விட்டது "அசடே! வருத்தப் படாதே! நான் கண்டுபிடிக்கிறேன் உன் நகையை. அதைத் திருடின வனுக்கு என்ன தண்டனை அளித் தால் உனக்குத் திருப்தியாயிருக் கும்? சொல், பார்க்கலாம்" என்று கேட்டான் ராமதுரை.

"ஆமாம், கண்டு பிடித்தீர்கள்!" என்று முகத்தைத் திருப்பினாள் அவள்.

"பாரேன், என் சாமர்த்தி யத்தை!" என்றான் ராமதுரை.

அதற்குப் பதினைந்து தினங்களுக் குப் பின் சுசீலாவுக்கும், ராமதுரைக் கும் விவாகத்துக்கு முகூர்த்தம் வைத்தாயிற்று.

## 6

வீட்டில் எல்லோரும் அந்த விஷயத்தையே மறந்து விட்டார் கள். சுசீலாவின் மனம் மட்டும், ராமதுரையைத் தான் செய்த பரி காசத்துக்குத் தண்டனைதான் அது என்று வருந்தியது.

கல்யாணத்துக்குப் பத்து தினங் களுக்கு முன் மாடியில் இருவரும் தனியாக உட்கார்ந்திருந்தனர்.

"என்ன சுசீலா, எப்பொழுதும் உன் முகம் வாடியே இருக்கிறதே!" என்று கேட்டான் ராமதுரை.

சுசீலா விசித்து விசித்து அழு தாள். "அத்தான்! நீங்கள் என்னை

மன்னிக்க வேண்டும். உங்களைக் கேலி செய்ததன் பலன் தான் இது" என்றான் அவன் விம்மல்களுக் கிடையில்.

"சுசீலா! நீ இவ்வளவு பைத்தியமாக இருப்பாய் என்று நான் நினைக்கவில்லை. என்னை நீ அடிக்கடி கேலி செய்த போது உன் பேரில் எனக்குக் கோபம் ஏற்பட்டது உண்மை தான். அந்தக் கோபம் தான் என்னை 'ஊட்டிக்குப்' போகிறேன் என்று பொய் சொல்ல வைத்தது."

"அப்படியானால் நீங்கள் ஊருக்குப் போகவில்லையா?" என்று ஆவலுடன் கேட்டாள் சுசீலா.

"இல்லை! இங்கேயே ஹோட்டலில் தங்கியிருந்தேன். உன்னை மட்டந்தட்ட வேண்டும் என்று தான் நான் கடிதம் எழுதிப் பயமுறுத்தியது. பிறகு கடற் கரையில் உன் மாலையை அபகரித்தவனும் நான் தான். நீ அவ்வளவு பயந்தாங் கொள்ளியாக அதைக் கழட்டிக் கொடுப்பாய் என்று நான் நினைக்கவில்லை. நீ கூச்சல் போடுவாய் உடனே முகத்தில் கட்டியிருந்த கறுப்புத் துணியை அவிழ்த்துவிட்டு உன்னுடன் சேர்ந்து சிரிக்கலாம் என்று தான் நினைத்திருந்தேன். நீ நடுங்கிய கைகளால் நகையைக் கொடுத்துவிட்டு என்னைப் பார்க்கவும் அஞ்சினாய். நானும் அசட்டுத்தனமாக 'டாக்ஸி'யில் ஏறிக் கொண்டு போய் விட்டேன். நான் செய்ததும் பெரிய பிசகு என்பதைப் பின்னால் தான் உணர்ந்தேன்" என்று கூறி முடித்து விட்டுத் தன் சட்டைப் பையிலிருந்து அவள் மாலையை எடுத்துக் கொடுத்தான்.

"அப்பாவுக்குத் தெரிந்தால்!" என்று பயத்துடன் அவனைப் பார்த்துக் கேட்டாள் சுசீலா.

"அவருக்கு இப்பொழுது தெரியாதென்று நினைத்துக் கொண்டிருக்கிறாய்? காலையிலேயே நான் அவரிடம் சொல்லி விட்டேன்" என்றான் ராமதுரை புன்சிரிப்புடன். பிறகு, "திருடனுக்கு என்ன தண்டனை கொடுத்தால் உனக்குத் திருப்தி? இப்போது சொல், பார்க்கலாம்" என்று கேட்டான்.

சுசீலா வெட்கத்துடன் முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.



முதல் மனுஷன்:—"ஸார்...அதோ போறாரே, அவரைத் தெரியுமா உங்களுக்கு? சீனுவாசய்யர்னு பேரு! ......மகா சத்திய சந்தர்!...அடாடாடா!...... சும்மா விளையாட்டுக்குக் கூடப் பொய் சொல்ல மாட்டார். அவருக்கு நாலு பிள்ளை மூணு பெண்கள்! பிள்ளைகளெல்லாரும் நல்ல 'போஸிஷன்'லே இருக்கா!"

இரண்டாவது ஆசாமி:—"ஆமா!... இவர் பெண்களுக்கெல்லாம் எப்படிக் கல்யாணம் பண்ணினார்!"

# பரிசு பெற்ற மகன்

இலேக்கட்டும், கறிகாய்கள் நிறைந்த கோணிப்பையுடனும் சைகிளில் வந்திறங்கிய துரைசாமி நெற்றியில் வழிந்த வியர்வையைத் துடைத்துக் கொண்டான். நீர்க்காவி ஏறிப் பழுப்பு நிறமான வேஷ்டியும், பித்தான் போடாத சட்டையும், முள்ளம் பன்றி போல் சிலிர்த்துக் கொண்டிருக்கும் கிராப்புத் தலேயும் கொண்ட துரைசாமியை அந்த வீட்டில் யாரும் மதிக்காததில் ஆச்சர்யம் ஒன்றும் இல்லேதான். படிப்பு இல்லாவிட்டாலும், பரந்த அறிவு இல்லாவிட்டாலும் நாகரிக மேல் பூச்சுகளேக் கண்டு மயங்குகிற காலமல்லவா இது? துரைசாமி அந்தக் குடும்பத்தின் மூத்த பிள்ளே. பிறக்கும் போது நேராகத்தான் பிறந்தான். குழந்தையின் அழகைக் கண்டுதான் பெற்றோர்கள் துரை என்று செல்லமாகப் பெயர் வைத்திருக்க வேண்டும். பிள்ளே படித்துப் பட்டங்கள் பெற்று பெரிய பெரிய பதவிகளே வகிப்பான் என்று பெற்ற வயிறு எதிர்பார்த்து ஏமாந்தும் இருக்கும். தடபுடலாகச் செலவழித்து துரைசாமிக்கு அவன் பெற்றோர் வித்தியாப்பியாசம் செய்தனர்.

வேளேக்கொரு அலங்காரம் செய்து குடுமியில் பூச்சூட்டிப் பள்ளிக்கு அனுப்பி தாய் மனமகிழ்ந்து போனுள். அரிச்சுவடி வகுப்பிலிருந்து அவன் ஆரும் வகுப்பை எட்டிப் பிடிப்பதற்குள் காலம் மள மளவென்று வளர்ந்து விட்டது. அவன் வயதும் வளர்ந்தது. உடலும் வளர்ந்தது. அறிவு மட்டும் வளரவில்லே. பதினெட்டு வயசுப் பிள்ளே ஆருவது படிக்கிருன் என்று சொல்லிக்கொள்ள எந்தப் பெற்றேருக்குத்தான் கௌரவமாக இருக்கும்? படிப்பைத் தவிர இதர விஷயங்களில் துரைசாமி சூடிகையாக இருந்தான். தாய்க்கு அடுப்பங்கரை வேலேகளில் உதவி செய்வதில் நிபுணன். கடை கண்ணிக்குப் போய்ச் சாமான்கள் வாங்கிப் போடுவதில் கை தேர்ந்தவன். வீட்டுப் பொறுப்பு அத்தனேயும் அவனுல் திறமையாகச் சமாளிக்க முடியும். ஆனுல் பாமும் கணக்கும், பூகோளமும், சரித்திரமும் மட்டும் அவன் மண்டையில் ஏறவில்லே. டாக்டர்களேக் கேட்டால் மூளே பலஹீனமாக இருப்பதால் விஷயங்களேக் கிரகித்துக் கொள்ளும் சக்தி ஏற்படவில்லே என்று சொன்ஞர்கள். ஜோதிடர் கிருகங்களின் குரூரம் என்று சொல்லி விட்டார். ஒவ்வொருத்தர் ஒவ்வொன்று சொல்லி விட்டார்கள்.

துரைசாமியின் போக்குமட்டும் திருந்தவே இல்லே. அவனுக்குப் பின் பிறந்தவன் நாகராஜன் பத்தாவது பரீட்சை தேறிவிட்டு தொழில் படிப்புப் படிக்க ஆரம்பித்தான். மூத்தது மோழையாகவே போய்விட்டது. துரைசாமியின் தாய் பாகிக்கு மூத்த மகனேப் பற்றி ஏற்பட்ட குறை வடுவாக மனதில் பதிந்து விட்டது, நெருப்புச் சுட்ட புண்ணேப் போல. ஆனுல், நாகராஜனின்

ஸரோஜா ராமமூர்த்தி

சாதுர்யமான பேச்சிலும், கல்வியில் அவன் காட்டும் ஆற்றலும் அவள் மனப்புண்ணை ஒருவாறு ஆற்றி விட்டன எனலாம். நாகராஜனுக்கு இடைவேளை உணவு எடுத்துப் போவது துரைசாமி தான். தம்பி கெட்டிக்காரனைப் படிக்கிறான் என்பதில் அவனுக்கு அளவற்ற பெருமை. பெற்ற அன்னையே 'அவன் படிக்கிற குழந்தை' என்று கட்டித் தயிரும் ஆடைப் பாலும் கொடுத்து நாகராஜனைப் பரிந்து பரிந்து உபசரிப்பாள். துரைசாமிக்கு நீர் மோரும், காப்பியும் தான் கிடைக்கும். அவன் மனதிலே அன்னை காட்டும் இந்தப் பேதம் தாங்கவே இல்லை. "படிக்கிறவன் நன்றாகத்தான் சாப்பிட வேண்டும். அவன் நன்றாகத் தான் உடுத்தவேண்டும். அவன் நன்றாக இருப்பதில் தனக்கும் பெருமைதானே' என்று நினைத் தான் துரைசாமி. அண்ணன் படிப்பில்லாமல் மதமத வென்று வளர்ந்து குடும்பத்துக்கே பாரமாக இருப்பதாகத் தம்பி கருதினான். ஏன் அவன் அவ்விதம் கருதவேண்டும்? தாய் காட்டிய பேதம்தான் காரணமாக இருக்க வேண்டும். சலவைக் கடையிலிருந்து ஒரு நாள் தாமதமாகத் துணிகளை வாங்கி வந்தால், 'நேற்றே வாங்கி வருவதற்கென்ன?' என்று அதட்டல் போடுவான் நாகராஜன், துரைசாமியை. இடைவேளை உணவைக் கொஞ்சம் தாமதமாக எடுத்து வந்து விட்டால், 'என்னடா உனக்கு இவ்வளவு நாழிகை?' என்று நாலுபேர் முன்னடி ஏசுவான். துரைசாமி அசட்டுச் சிரிப்பு சிரித்துக் கொண்டே, 'அம்மா தாண்டா தாமதப் படுத்தி விட்டாள்' என்று தலையைச் சொறிந்து கொள்வான். 'ஆமாம், நீயும் உன் டிரஸ்ஸும்!' என்று சம்பந்தமில்லாமல் துரைசாமியின் துணியின் மேல் பாய்வான் நாகராஜன்.

பாகிக்கு ஒரொரு சமயம் நாகராஜன் துரைசாமியை அதட்டி உருட்டி வேலை வாங்கும்போது, 'ஏண்டா ராஜா! கொஞ்சமாவது பெரியவன் என்கிற மதிப்பே இல்லையேடா அவனிடம்?' என்று கேட்பாள்.

"பெரியவன்! எதில் பெரியவன் அம்மா? உடம்புதான் பெரிசாக இருக்கிறது!"

துரைசாமியின் மனசில் யாரோ ஊசியால் குத்தியதுபோல் இருக்கும் அவ்வார்த்தைகளைக் கேட்டவுடன். இருந்தாலும், கூடப் பிறந்தவன் அல்லவா? உடன் பிறந்தவன் தானே சொல்லுகிறான்? சொல்லிவிட்டுப் போகட்டும் என்று பொறுத்துப் போய் விடுவான். மண்ணிலே நடக்கும் அக்ரமங்களை பூமாதா சகித்துக்கொள்கிறாள். அவளும் சகிக்காமல் குமுறுவது இல்லையா? அக்கினிப் பிழம்புகளைக் கக்குவதில்லையா? பச்சைப் பசேல் என்று தழைத்திருக்கும் இடத்தைப் பாழாக்கி விடுவதில்லையா? துரைசாமியின் மனதுக்குள்ளும் ஒரு எரிமலை குமுறிக் கொண்டே இருந்தது. சாந்தம், அடக்கம் என்கிற நீரை வார்த்து அவைகளை அணைத்து வந்தான் அவன்.

நாகராஜன் மாகாணத்திலேயே முதல் வகுப்பில் தேறி விட்டான். வீட்டிலே ஒரே குதூகலம். பாகிக்குப் பெருமை பிடிபட முடியவில்லை. "ராஜாவுக்கென்ன? அவன் அதிர்ஷ்டசாலி தான். நான் நீ என்று யாராவது சீரும் சிறப்புமாகப் பெண்

ணக் கொடுக்க வருவார்கள்'' என்று சொல்லிக் கொண்டே யிருந்தாள். ஒன்றுக்கும் பிரயோசனமில்லாமல் தண்டச் சோறு தின்னும் துரைசாமியைப் பற்றியும் அவள் மனம் புண்பட்டுக் கிடந்தது.

ஒரு தினம் வீட்டு எஜமானர் பாகியிடம், ''ஏண்டி! நாகராஜனுக்கும் வயசு இருபத்தி மூன்று ஆகிறதே, கல்யாணம் பண்ண வேண்டாமா?'' என்று கேட்டார்.

''பண்ண வேண்டும்...... மூத்த பிள்ளை—சிமந்த புத்திரன்—பிரம்மசாரியாக இருக்கும் போது இளையவனுக்கு எப்படிக் கல்யாணம் பண்ணுகிறது? சாஸ்திரப்படி மூத்தவனுக்குத் தானே முதலில் கல்யாணம் பண்ண வேண்டும்? அதற்குத் தான் வழி இல்லாமல் இருக்கிறதே.''

பாகி கண் கலங்கிப் பெரு மூச்சு எறிந்தாள். அவள் கணவரும் வேதனை தேங்கும் முகத்துடன் அண்ணாந்து பார்த்துக் கொண்டு இருந்தார். குழந்தையிலிருந்து துரைசாமி, குடும்பத்தில் நடக்கும் எந்த வேலைக்கும் தடங்கலாக இல்லை. அவனுக்குப் படிப்பு ஏறவில்லை; படிக்கவில்லை. படிப்பில்லாமையால் வேலை கிடைக்கவில்லை. வீட்டுக்கு உழைத்துக் கொண்டு இருக்கிறான். சாப்பாடு போடுகிறார்கள். ஏதோ துணிமணிகள் எடுத்துக் கொடுக்கிறார்கள். கூடப் பிறந்தவன் அதட்டி உருட்டி வேலையும் வாங்குகிறான்.

ஆனால், நாகராஜனுக்கு விவாகம் செய்யவேண்டுமென்று பெற்றோர் உத்தேசிக்கும்போது துரைசாமி ஒரு பெரிய முட்டுக் கட்டையாக அவர்களுக்குத் தோன்றுகிறது.

''அவனுக்குப் போய்க் கல்யாணத்தையும் பண்ணுவார்களோ! அவனே குடும்பத்துக்குப் பாரமாக இருக்கும்போது இன்னொன்றையும் விலைக்கு வாங்குவார்களோ?'' என்று தகப்பனர் அபிப்பிராயப் பட்டார்.

'என்ன செய்கிறது என்று தெரியவில்லையே?' என்று குழம்பிக் கிடந்தாள் பாகி. திடீரென்று அவளுக்கு நாலும் தெரிந்த சங்கர தீக்ஷதரைப் பற்றி நினைவு வந்தது. மத்தியானம் அடுக்களையை இழுத்து மூடி விட்டு சங்கர தீக்ஷதரைப் பார்க்கப் போனாள் பாகி. கலக்கத்துடன் விஷயத்தை அவரிடம் கூறி விட்டு, அவர் பதிலையும் எதிர் பார்த்து இருந்தாள். சங்கர தீக்ஷதருக்குத் துரைசாமியிடம் விரோதம் ஒன்றும் இருக்க நியாயமில்லை. அந்தக் குழந்தையும் நன்றாகத்தான் இருக்க வேண்டும் என்று அவர் மனமும் விரும்பி இருக்க வேண்டும். குடியும் குடித்தனமுமாக வாழ நாலு காசு வேண்டாமா? அதைச் சம்பாதிக்கத் திறன் வேண்டாமா? துரைசாமிக்கு வீட்டுக்குச் சாமான் செட்டு வாங்கிப் போட்டுப் பணத்தைச் செலவழிக்கத் தெரியுமே ஒழிய, அதைச் சம்பாதிக்கும் வழி தெரியாது.

'ராஜாவுக்கு நல்ல இடமாக வந்திருக்கிறது. முடித்து விடலாம் என்று பார்க்கிறேன். மூத்த பிள்ளை பிரம்மச்சாரியாக இருக்கும்போது இளையவனுக்கு எப்படிக் கல்யாணம் பண்ணுவது? சம்பிரதாய விரோதமாக இருக்கிறதே, தீக்ஷதரே!'' என்று கேட்டாள் பாகி.



'அதனால் பரவாயில்லை அம்மா. அவனவன் வழி அவனவனுக்கு. அதற்காகப் பார்த்து முடியுமா? அதனால் தோஷமிருப்பதாகத் தெரியவில்லை. எவ்வளவோ சாஸ்திரம் கற்றவர்கள் குடும்பங்களில் எல்லாம் இப்படி நடக்கிறது உண்டு. பார்த்திருக்கிறேன்' என்றார் சங்கர தீக்ஷிதர்.

நாகராஜனுக்குத் தகுந்த இடத்தில் கல்யாணம் நடந்தது. கல்யாணத்தில் கூடச் பம்பந்தி

வீட்டார் எதிரில் துரைசாமியை அழைத்துப் போக வில்லை. வீட்டைப் பார்த்துக்கொள்ளச் சொல்லி அவனை ஊரிலேயே விட்டுவிட்டுப் போய்விட்டார்கள். ஊரிலிருந்து வந்ததும் நாட்டுப்பெண்ணையும், சம்பந்திகளையும் கிருஹப்பிரவேசமாகத் தங்கள் வீட்டிற்கு அழைக்க கெப் பிரமாதமாக ஏற்பாடு பண்ணினார்கள். அதற்காகத்தான் துரைசாமி காய்கறிகளும், வாழை இலைக்கட்டும் சுமந்து கொண்டு வீடு திரும்பி யிருந்



தான்.

சமையலறையில் பாகி பரபர வென்று வேலைகளைச் செய்வதில் முனைந்திருந்தாள். சமையலுக்கு வேண்டி இருந்த கறிகாய் வரத் தாமதமாகவே 'துரைசாமி இன்னுமா வரவில்லை? ஆடி அன்றைக்குப் போய்த் தை அன்று திரும்புவானே அவன்! ஒன்றிலர்வது சாமர்த்தியம் வேண்டுமே. பெற்ற வயிற்றில் பிரண்டையைத்தான் வைத்துக் கட்ட வேண்டும்' என்று பாகி அங்கலாய்த்துக் கொண்டிருக்கும் போதே துரைசாமி வியர்வை சொட்ட உள்ளே நுழைந்தான்.

துரைசாமி 'உஸ்' ஸென்று முகத்தில் வழியும் வியர்வையைத் துடைத்துக்கொண்டான். வீட்டிலுள்ளவர்கள் அத்தனை பேரும் ஸ்நானம் செய்வதற்காக அவன்தான் வெந்நீர்த் தவலையில் ஜலம் இருக்கிறதா என்று கவனித்தாக வேண்டும். வேலைக்காரி கவனிக்கக்கூடாதா? அவள் கூட 'அல்லவா பெரிய பிள்ளை பாத்துக்கும் அதையெல்லாம்' என்று கூறித் தட்டிக் கழித்து விடுகிறாள்!

துரைசாமி வெந்நீர்த் தவலைக்கு ஜலம் நிறைத்துக்கொண்டிருந்தபோது சம்பந்திகள் வந்து விட்டார்கள். உள்ளே ஏகப்பட்ட அமர்க்களம். பலமான உபசாரம். சுடச்சுடக் காப்பியை எடுத்துக்கொண்டு பாகி நாட்டுப் பெண்ணைத் தேடிப்போய் உபசாரம் செய்தாள்.

'சாப்பிட்டாயிற்றே அம்மா' என்று நாகராஜனின் மனைவி மெதுவாகக் கூறி, பேருக்காகக் காப்பியை ஒரு வாய் சாப்பிட்டு விட்டு அருகிலிருந்த ஜன்னல் மீது வைத்து விட்டாள். வெயிலில் அலைந்துவிட்டு வந்த அசட்டுப் பிள்ளையிடம் அந்தக் காப்பியைக் கொடுத்திருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்?

தம்பி மனைவியின் மென் குரலைக் கேட்டுத் துரைசாமி கூடத்துக்கு வந்தான். படபடப்பும் கோபமும் நிறைந்த நாகராஜனுக்கு வாய்த்திருக்கும் தர்ம பத்தினி எப்படித்தான் இருக்கிறாள் என்று பார்ப்பதற்காகவும் இருக்கலாம்; அல்லது இனிமேல் அவளாலும் அந்த வீட்டில், தான் ஒரு வேலைக்காரனைப்போல் நடத்தப்படுவோமோ என்கிற காரணமாகவும் இருக்கக் கூடும்.

ஆரணிப் பட்டுப் புடவையும், காஞ்சீபுரம் ரவிக்கையுமாக வைரங்கள் மின்ன உலவி வரும் மாமியார் பாகியைக் கவனித்தாள் புது நாட்டுப்பெண். மாமனார் கூட 'டிப்டாப்' பாகத்தான் இருக்கிறார். வீட்டில் வேலை செய்யும் வேலைக்காரிகூட ஒழுங்காக உடுத்திக் கொண்டு பெருமை பொங்க உலாவி வருகிறாள். ஆனால், தலை பறக்க, முகத்தில் எண்ணெயும், வியர்வையும் ஒன்றையொன்று போட்டி போட்டுக்கொண்டு வழியும் துரைசாமியை 'யார் இவர்?' என்று கேட்கும் தோரணையில் வில்லைப்போல் புருவங்களை வளைத்து, மை தீட்டிய மையுண்கண விழிகளால் ஊடுருவி நோக்கினாள் அவள்.

பாகி வெகு சாமர்த்தியமாக நாட்டுப்பெண்ணின் பார்வையை வேறு விஷயங்களில் திருப்ப முயன்றாள். 'மாமனாருக்கு நமஸ்காரம் பண்ணினாயோ' என்று கேட்டாள்.

'ராத்திரியெல்லாம் கண் விழித்துக்கொண்டு ரயிலில் வந்திருப்பாய். சீக்கிரம் ஸ்நானம் செய்து சாப்பிட்டுப் பிறகு ஓய்வு எடுத்துக்கொள்' என்றெல்லாம் கூறினுள்.

வீட்டிலிருந்த அவ்வளவு பேர்களும் மரியாதை பெறுவதற்கு உகந்தவர்களாக இருந்தார்கள். புதுநாட்டுப் பெண்ணிடமும், சம்பந்திகளிடமும் மரியாதையை அடைந்தனர். துரைசாமியின் மனசை இச் சம்பவம் சுருக்கென்று தைத்திருக்க வேண்டும். மாமனுருக்கும், ஊரிலிருக்கும் பாட்டிமார்களுக்கும் நமஸ்காரம் செய்து கௌரவித்த நாட்டுப் பெண்ணுக்குத் தன் மைத்துனனைக் கௌரவிக்கத் தெரியவில்லை. தெரிய வைப்பதற்கும் யாரும் தயாராக இல்லை.

நாகராஜன் மனைவியிடம், 'என் அண்ணு ஒரு மாதிரி அசடு. கொஞ்சம் ஜாக்கிரதையாகவே பழகவேண்டும்' என்று சொல்லி எச்சரித்தான்.

மத்தியான விருந்தின்போது சம்பந்திகளுடன் வந்திருந்த உறவினர் ஒருத்தர் மட்டும் துரைசாமியைப் பற்றி அக்கறையுடன் விசாரித்தார்.

'உங்கள் மூத்த பிள்ளையா இவன்? என்ன செய்துகொண்டிருக்கிறுன்?'' என்றெல்லாம் தகப்பனுரைப் பார்த்துக் கேட்டார்.

விஷயத்தைச் சொல்லாமல் அவர் விடமாட்டார் என்கிற நிலைமை ஏற்பட்டவுடன், 'ஆமாம். என்னத்தைச் செய்கிறது? படித்தவனுக்கே வேலை கிடைக்காமல் திண்டாடும் போது இவனுக்கு எங்கேயிருந்து வேலை சம்பாதிக்கிறது, சொல்லுங்கள்?' என்று தம் குறையைத் தகப்பனுர் வெளியிட்டுக் கொண்டார்.

உறவினர் வாய்விட்டுக் கட கட வென்று சிரித்து விட்டார்.

'பட்டம் பெற்று குமாஸ்தா தொழிலில் புகுவதையோ, தொழில் கல்வி கற்று அத் துறையில் தொழில் ஆற்றுவதையோதான் நீங்கள் வேலைகளாகக் கருதுகிறீர்கள் போல் இருக்கிறது. ஹும்'—என்றுர்.

பிறகு என்னவோ தீர்மானித்துக் கொண்டவராகத் துரைசாமியை நோக்கி, 'என்னுடன் ஊருக்கு வருகிறுயா அப்பா? ஏதாவது உன் பிழைப்புக்கு வழி தேடித் தருகிறேன்' என்று அவனைக் கூப்பிட்டார்.

இவ்வளவு காலமாக இருந்தால் துரைசாமி அவருடன் கிளம்பியிருப்பானு என்பது சந்தேகம். ஆனுல், வீட்டுக்கு வந்திருக்கும் புது மனுஷியன் முன்பு, தான் கௌரவமாக வாழ வேண்டும் என்கிற எண்ணத்தால் உந்தப்பட்டு அவர் கேட்டதற்குத் தலை அசைத்து விட்டான்.

* * *

'அசட்டுப் பிள்ளையைக் கௌரவமானவருடன் முன்பின் யோசியாமல் அனுப்பி விட்டாயே' என்று நாகராஜன் தாயை அடிக்கடி கடிந்து கொண்டான். 'பெயரைக் கெடுத்துக் கொள்வதோடு, குடும்பத்தின் பெயரையும் கெடுத்துவிட்டு வரப்போகிறுன், பார்' என்று தகப்பனுர் வேறு கிஷ்டரப்பட்டுக் கொண்டார்.

துரைசாமியிடமிருந்து எப்பொழுதாவது நான்கு வரிகள் கடிதம் வரும். அதில் தான் சுக

மாக இருப்பதாக எழுதுவான். தன்னை அழைத்துப் போனவர் தன்னிடம் பட்சமாக இருப்பதாக எழுதுவான். வேறு எதைப் பற்றியும் அவன் குறிப்பிடுவதில்லை. ஒன்றிரண்டு முறை அவனை வரச்சொல்லி எழுதிப் பார்த்தார்கள். எடுத்த காரியத்தை முடித்துக் கொண்டு தான் திரும்புவதாக எழுதிவிட்டான். அப்படி என்ன பிரமாத காரியம் அவன் செய்கிறானோ என்று எல்லோரும் பயந்து கொண்டிருந்தார்கள்.

திடீரென்று ஒரு தினம் துரைசாமியை அழைத்துப் போன உறவினரிடமிருந்து கடிதம் வந்தது. அதில் அவர் துரைசாமி சுகமாக இருப்பதாகவும், தம்முடைய விவசாயப் பண்ணையில் அவன் பயிற்சி பெற்று வருவதாகவும் குறிப்பிட்டிருந்தார்.

'ஆமாம் — இதொன்றுதான் குறைச்சலாக இருந்தது! இங்கே குடும்பத்துக்கு மாடு கணக்கில் உழைத்துக் கொண்டிருந்தான். அங்கே வயலிலே மாடு மாதிரி வேலை செய்கிறானாக்கும்!' என்று பாகி சூள் கொட்டினாள்.

பெற்ற மனம் பித்து கொண்டது என்பது விளையாட்டுப் பேச்சல்ல. அடிக்கடி அவனை நினைத்துக் கண்ணீர் பெருக்குவாள்.

'என்ன! ஒரு கடுதாசி போட்டு அவனை வரவழைத்து விடுங்கள்' என்று தினம் கணவனை எச்சரிக்க ஆரம்பித்தாள். அவர் பாடு தர்மசங்கடமாக இருந்தது. உறவினரோ சம்பந்தி வீட்டைச் சேர்ந்தவர். வெட்டிப் பொழுது போக்கிக் கொண்டிருந்தவனை அழைத்துப்போய் வேலை என்று ஏதோ ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறார். 'என் பிள்ளை தேய்ந்து போய் விடுவான். அனுப்பி விடுங்கள்' என்று அவருக்கு எப்படி எழுதுவது?

அன்று காலை தினசரி படிக்கும் கணவனிடம் காப்பியைக் கொடுத்து விட்டுப் பாகி, 'இதோ பாருங்கள். இன்றைக்கு நீங்கள் அவருக்குத் துரைசாமியை அனுப்பச் சொல்லி எழுதப் போகிறீர்களா இல்லை, நாட்டுப் பெண்ணை விட்டு எழுதச் சொல்லட்டுமா?' என்று ஒரு திமிர்த் தாக்குதலை ஆரம்பித்தாள்.

'உம்... உம்...' என்று தலையை ஆட்டிக் கொண்டே தினசரியின் தாள்களைப் புரட்டிக் கொண்டே இருந்தார் அவர். பத்திரிகையின் ஒரு பக்கத்தில் வெளியாகி இருந்த புகைப்படம் அவர் திருஷ்டியைக் கவர்ந்தது. அவசர அவசரமாக அதைப் படித்துவிட்டு, 'அடியே!' என்று உள் பக்கம் திரும்பி ஒரு குரல் கொடுத்தார், மனைவியை அழைக்கிற மாதிரியில்!

பாகி பரபரவென்று கூடத்துக்கு வந்தாள். கணவன் அருகில் நின்று அவரிடமிருந்த தினசரியை வாங்கிப் பார்த்தாள். பார்த்துவிட்டு, 'என்னது?' என்றாள், ஆச்சரியத்தால் விழிகள் மலர.

"உன் பிள்ளைக்குப் பரிசு கொடுக்கிறார் கவர்னர். விவசாயத்திலே ஜப்பானிய முறை என்று புதுசாக நம் அரசாங்கம் ஒரு வழியைப் புகுத்தி இருக்கிறார்கள். அந்த முறையில் அவன் மிராசுதார் நிலங்களைப் பயிரிட்டு இருக்கிறானாம். ஏகப்பட்ட கொள் முதலாம். மாகாணத்திலேயே முதல் பரிசு கிடைத்திருக்கிறது. மிராசுதார் வேறு அவனைப் பற்றிப் புகழ்ந்து பேசியிருக்கிறார். 'தொழில், தொழில் என்று திரும்பத் திரும்ப ஒரே இடத்தில் போய் விழ வேண்டாம். நில மிருப்பவர்கள் சொந்தமாக உழைத்துப் பயன் காணலாம். நன்றாகப் படித்தவர்கள்கூட இனிமேல் ஏர் உழுதுதான் ஆகவேண்டும்' என்று கூறியிருக்கிறார்" என்றார் பாகியின் கணவர்.

பாகியின் வயிற்றில் பாலை வார்த்த மாதிரியிருந்தது.

"குழந்தையைப் பார்க்கப் போகணும்!" என்றாள். 'போகலாம், கிளம்பு என்றார் அவர்.

# மாறுதல்

ஸரோஜா ராமமூர்த்தி

சர்மா அன்றைய தினசரி ஒன்றைப் படித்துக் கொண்டே, சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டிருந்தார். உள்ளே அடுப்பங்கரையில் அவர் மாட்டுப் பெண் ருக்மிணி சமைக்கும் அவசரத்திலிருந்து இன்னும் கொஞ்ச நாழிகைக்கெல்லாம் அந்த வீட்டில் சாப்பாடு முடிந்து விடும் என்று தோன்றியது. ருக்மிணி அவசரமாகக் காமரா அறைக்குள் வந்தாள். அங்கு உட்கார்ந்திருந்த அவள் கணவனை சமையல் அறைக்குள் அழைத்துச் சென்றாள்.

“கூடப் போகிறது. குழம்புக்கு எல்லாம் சரியாக இருக்கிறதா என்று பார்த்துச் சொல்லுங்கள்” என்று அவன் கையில் கொஞ்சம் மாதிரிக்காகக் குழம்பை ஊற்றினாள்.

“சரியாக இருக்கிறது” என்று கூறிவிட்டு ஜயராமன் மறுபடியும் காமரா அறைக்குப் போய் விட்டான். உப்பு இல்லாமல் இருந்தால் கூட அவனுக்குத் தெரியாது! வயிற்றுப் பசிக்கு ஏதாவது சாப்பிட வேண்டுமே என்று நினைத்து, மனைவி போட்டதைச் சாப்பிட்டு விட்டுப் போய் விடுவான் ஜயராமன்.

அவனுடைய குணத்துக்கு நேர் விரோதமாக இருந்தது, அவனுடைய தகப்பனார் சர்மாவின் குணம். சமையலில் விருந்து பக்ஷணங்கள் செய்வது வரை அவர் தெரிந்து வைத்திருந்தார். ஒவ்வொன்றுக்கும் எவ்வளவு சாமான்கள் செலவாகும் என்பதும் அவருக்குத் தெரியும். ஒரு மாசத்துக்குக் குடும்பத்துக்கு எவ்வளவு சாமான்கள் தேவை என்பது தெரிந்து அந்த அளவுதான் அவர் வாங்கிப் போடுவார். மாதக் கடைசியில் ‘இல்லை’ என்று அவரிடம் சொல்லி சாமான்கள் வாங்கிவிட முடியாது. சர்மா இவ்வளவு கெட்டிக்காரராக இருந்ததற்கு அவர் பால்யத்திலேயே மனைவியை இழந்து கஷ்டப்பட்டது தான் காரணம். மனைவி இறந்த பிறகு சமையலுக்கு வந்த ஆட்கள் யாரும் அவரிடம் நிலைக்கவில்லை. ‘குழம்பில் வாஸனை இல்லை; ஊறுகாய்போடத் தெரியவில்லை’ என்று ஏதாவது குற்றச் சாட்டுகளுடன் அவர்கள் மாசம் ஒருவராக மாறிக் கொண்டே வந்தனர். அவர்கள் வேலையை விட்டுப் போய் விட்டதால் சர்மா கவலைப்படவில்லை. பள்ளிக்கூடம் போகும் பிள்ளை ஜயராமனுக்குச் சமைத்துப் போட்டுவிட்டுத் தாமும் சாப்பிட்டு முடித்துக் கொண்டு காரியாலயத்துக்குக் கிளம்பி விடுவார். அங்கேயும் தமது நண்பர்களிடம் தாம் செய்யும் சமையலைப் பற்றியே பேசி அளவளாவுவதில் அவருக்குப் பரம திருப்தி.

இவ்வளவு கெட்டிக்கார மனிதருக்கு வந்து வாய்த்த மாட்டுப் பெண்ணுக்கு சமையல் அவ்வளவாகத் தெரியாமல் இருந்தது அவருக்குப் பெரிய குறையாக இருந்தது. ஓட்டலிலிருந்து ‘ஸெட்’ வரவழைத்துச் சாப்பிடும் இந்தக் காலத்தில், யாரும் இதை அவ்வளவாகப் பாராட்ட மாட்டார்கள். இருந்தாலும் சர்மாவுக்கு மாட்டுப் பெண்ணைத் தூஷிக்க இது ஒன்றே முக்கிய காரணமாயிற்று.

கூடத்தில் இருந்த கடிகாரம் பத்து அடித்து ஓய்ந்தது. சமையல் அறையில் இலை போட்டு மணை போடும் ஓசை ‘டக்’ கென்று கேட்டது. சர்மா தம் மூக்குக் கண்ணாடியைக் கழற்றி வைத்து விட்டு சாப்பிட எழுந்தார். அவர் உள்ளே வருவதற்குள் ருக்மிணி இன்னொரு தடவை குழம்பை ருசி பார்க்கச் சொல்லி தன் கணவனைக் கூப்பிட்டாள். அவன் முடியாதென்று மறுத்து விடவே கோபத்தில் முகம் சிவக்க சமையலறைக்குள் சென்று விட்டாள்.

பாதி வரைக்கும் சாப்பிடுகிற மட்டும் சர்மா வாய் திறக்க வில்லை. ‘இன்றைக்

குத் தப்பி விட்டோம்!' என்று ருக்மிணி நினைத்துக் கொண்டு, உள்ளேயிருந்து ஊறுகாய் எடுத்துக் கொண்டு வந்தாள்.

"குழம்பு நன்றாகத் தான் இருக்கு; ஆனால் மணம் இல்லை" என்றார் சர்மா. மாட்டுப் பெண் பதில் பேசாமல் ஊறுகாயைப் பரிமாறி விட்டு உள்ளே போகத் திரும்பினாள்.

"சாரதா இருக்கிறாளே, அவள் ரஸம் வைத்தால் கம கமவென்று மணக்கும். அவள் சமையலை நீ சாப்பிட்டதில்லையே?" என்று கேட்டார் சர்மா.

சாரதா சர்மாவின் பெண். தகப்பனாரைப் போலவே அவளும் சமையலிலிருந்து மற்ற எல்லா வேலைகளிலும் கெட்டிக்காரியாக இருந்ததில் வியப்பொன்றுமில்லை. இருந்தாலும் சர்மா நொடிக்கொரு தரம் தம் பெண்ணைப் புகழ்ந்தும், மாட்டுப் பெண்ணைத் தாழ்வு படுத்தியும் பேசியது ஜயராமனுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை.

தயங்கியபடி வாசற்படியில் நிற்கும் மாட்டுப்பெண்ணைப் பார்த்து மறுபடியும், "சாரதாவை இங்கு ஒரு மாசம் வரச் சொல்லி எழுதுகிறேன். நீயே நேரில் அவள் சமையலைப் பார்த்தால்தான் என் பேச்சில் நம்பிக்கை ஏற்படும் உனக்கு" என்றார் சர்மா.

அன்று அதிக கோப தாபம் இல்லாமல் சாப்பாடு முடிந்தது. சர்மாவும் சாப்பிட்டு விட்டுக் காரியாலயத்துக்குக் கிளம்பி விட்டார். அவர் புறப்பட்டுப் போன பிறகு தான் ஜயராமன் காரியாலயத்துக்குக் கிளம்புகிற வழக்கமாகையால் வெற்றிலை மடித்துத் தரும் மனைவியின் முகவாட்டத்தைக் கவனித்தான் அவன்.

"என்ன ருக்கு! அப்பா சொல்லுகிறாரே என்று வருத்தப்படுகிறாயா?" என்று ஆதரவுடன் கேட்டான் அவன்.

"ச்சூ" என்று சூள் கொட்டினாள் அவள்.

"தினத்தை விட இன்று என்ன பிரமாதமாகச் சொல்லி விட்டார்? உங்கள் அக்காவின் சமையலைப்பற்றி தினமும் தானே சொல்லிக் கொண்டேயிருக்கிறார்?"

"அக்காவை இங்கு வரவழைக்கப் போகிறாராமே?" என்று கேட்டான் ஜயராமன்.

"அக்காவே நேரில் வந்து பார்த்தால் தெரிந்து கொள்கிறாள்" என்று கூறி விட்டு ருக்மிணி சிரித்தாள்.

"அக்கா இருக்கிற இடத்துக்கு அப்பாவை ஒரு மாசம் அனுப்பி வைக்க வேண்டும். அப்பா அவளை நம் இடத்துக்கு அழைப்பதற்கு முன்பே நான் அவளுக்கு விஷயத்தை எழுதி விடுகிறேன்."

ருக்மிணி ஒன்றும் விளங்காமல் வெற்றிலைத் தட்டை எடுத்துக் கொண்டு உள்ளே போய் விட்டாள்.

நாலைந்து தினங்கள் கழித்து சர்மாவுக்கு சாரதாவிடமிருந்து கடிதம் வந்தது. அதில் அப்பாவைத் தன் இடத்துக்கே வரும்படி அழைத்திருந்தாள் அவள். இதில் அவருக்குப் பரம திருப்தி தான். இருந்தாலும் குடித்தனம் செய்யத் தெரியாத மாட்டுப்பெண்ணை விட்டு விட்டுப் போக முதலில் அவருக்கு இஷ்டமில்லை. ஆனால் கொஞ்ச நாளைக்குக் குடும்பப் பொறுப்பை இருவர் தலையிலும் சுமத்திவிட்டுப் போவது ஒரு விதத்துக்கு நல்லது என்றும் தோன்றியது. ருக்மிணி ஒருவேளை வேலையில் திருந்தக் கூடுமல்லவா?

பலவித யோசனைகளில் மூழ்கிய சர்மா ஜயராமன் ஆபீஸிலிருந்து வருவதற்குக் காத்திருந்தார். அவன் வந்ததும் சாரதாவின் கடிதத்தை அவனிடம் கொடுத்து அவன் அபிப்பிராயத்தைக் கேட்டார்.

"போய்விட்டுத்தான் வாருங்களேன் அப்பா. அவளையும் குழந்தைகளையும் பார்த்து இரண்டு வருஷங்களுக்கு மேலாகிறதே. குழந்தைகளை அழைத்

துக் கொண்டு ரயிலில் வருவது சிரமம் என்று எழுதி இருக்கிறாளே" என்றான் ஜயராமன்.

"நீ வீட்டைக் கவனித்துக் கொள்ள வேண்டுமே?" என்று கவலையுடன் கேட்டார்.

"கவனித்துக் கொள்கிறேன்" என்று சாந்தமாகவே பதிலளித்தான் அவன். உள்ளூர அவருடைய சந்தேகத்தைப் பற்றி அவனுக்குக் கோபம் குமுறிக் கொண்டிருந்தது.

"வேளா வேளைக்குச் சாப்பிட வேணுமே?" என்று கேட்டார் சர்மா.

ருக்மிணி இதைக் கேட்டு சமையலறையில் சிரித்துக் கொண்டாள்.

"சரியாகச் சாப்பிடாமல் படுத்துவதற்கு இவர் என்ன குழந்தையா?" என்று அவள் நினைத்தது தவறில்லை.

"அப்பொழுது ஒரு பிரயாணம் போய் விட்டு வா என்கிறாயாக்கும்?"

"ஆமாம், இல்லாவிட்டால் சாரதா ரொம்பவும் வருத்தப்படுவாள் அப்பா."

சர்மா, வீட்டு வாசலில் வண்டியில் ஏறுகிறவரைக்கும் மாட்டுப் பெண்ணுக்குத் தாம் இல்லாதபோது நடந்து கொள்ள வேண்டிய விதங்களைச் சொல்லிக் கொண்டிருந்தார்.

"அவனுக்கு வயிற்றுக்குச் சாப்பிடக் கூடத் தெரியாது, நீ தான் கவனித்துக் கொள்ள வேண்டும்" என்று பல தடவைகள் கூறினார். பெற்ற தந்தையின் அஞ்ஞானம் இப்படித்தான் இருக்கும் என்று அவர்களுக்குத் தெரியவில்லை. அதற்குப் பதிலாக அவர்கள் கோபமடைந்தார்கள். ரயிலில் புறப்படுகிற வரைக்கும் ஜயராமனுக்கும் புத்திமதிகள் கூறினார். எல்லாவற்றிற்கும் தலையை ஆட்டிக் கொண்டிருந்தான் ஜயராமன். ரயிலும் புறப்பட்டு விட்டது.

"உடம்பு ஜாக்கிரதை, உடம்பு ஜாக்கிரதை!" என்று ரயிலின் சப்தத்துக்கு இடையில் சர்மா கூறிக் கொண்டிருந்தார்.

இரண்டு வருஷங்களுக்கு அப்புறம் தகப்பனாரைக் கண்டதும் சாரதா சந்தோஷம் அடைந்தாள்.

"ஜயராமன் சௌக்கியமாக இருக்



கிறானா அப்பா? மாட்டுப் பெண் குடித்தனப் பாங்குடன் இருக்கிறாளா?" என்றெல்லாம் விசாரித்தாள் அவள்.

"என்னவோ இருக்கிறான். சாப்பாடு சுகமில்லை அவனுக்கு! அந்தப் பொண்ணுக்கு ஒன்றுமே தெரியவில்லை."

தகப்பனார் தன்னிடம்-பிள்ளை, மாட்டுப் பெண்ணைப் பற்றிக் குற்றப் பத்திரிகை படிக்கவே வந்திருக்கிறார் என்று சாரதாவிற்குத் தெரிந்து போயிற்று.

"இந்தக் காலத்தில் அப்படித்தான் இருக்கிறது, அப்பா. கொஞ்ச நாளைக்கப்புறம் தானாக சரியாகி விடும்" என்று கூறிக் கொண்டே காப்பி கொண்டு வருவதற்கு உள்ளே போய்விட்டாள் அவள்.




"இந்தச் செருப்பு அடி தேய்ந்து போச்சுங்க.... இதைப் புதிசு பண்ணிக் கொடுக்க முடியுங்களா?..."

"இது மோட்டார் டயரை புதுசு பண்ணுகிற கம்பெனியப்பா.. செருப்புக் கடை பக்கத்துக் கடை!..."

"அது தெரியுங்க!... இது மோட்டார் டயரிலே பண்ணிய செருப்பு தானுங்க....... அதான் இங்கே கேட்கிறேன்!..."

சர்மா நாற்காலியில் உட்கார்ந்தபடியே பெண்ணின் வீட்டைக் கவனித்தார். கூடத்து அலமாரியில் புஸ்தகங்கள் தாறுமாறாக இறைந்து கிடந்தன. 'கோட்'டை அதன் இடத்தில் மாட்டி வைக்காமல் நாற்காலியின் வளைவில் மாட்டியிருந்தது. ஆபீஸ் அறையில் மேஜை மேல் காகிதக் கட்டுகள் தூசு படிந்து கவனிப்பாரற்றுக் கிடந்தன.

'சாரதா இப்பொழுதெல்லாம் வீட்டு வேலைகளில் கவனம் செலுத்துவது இல்லை போல் இருக்கிறது' என்று தமக்குள் சொல்லிக் கொண்டார் சர்மா.

காப்பியைக் கொண்டு வந்து கொடுத்துவிட்டு, 'உஸ்' என்ற பெரு மூச்சுடன் தரையில் உட்கார்ந்தாள் சாரதா.

காப்பியை ருசி பார்த்த தந்தை, முகத்தை ஒருவாறு சுளித்துக் கொள்வதைப் பார்த்ததும் சாரதா, "சர்க்கரை போதவில்லையா என்ன?" என்று கேட்டாள்.

"இல்லை, இல்லை. மொத்தத்தில் காப்பியே நன்றாக இல்லையே! முன்பெல்லாம் நீ போடுகிற காப்பி கள்ளிச் சொட்டு மாதிரி இருக்குமே?"

"அந்த நாளைப் போல் இப்பொழுது இருக்க முடிகிறதா அட்பா? காப்பிக் கொட்டையின் விலையும், பாலின் விலையும் எறிக் கிடக்கிறதே!" என்றாள் சாரதா.

"இந்த மாதிரி ஒப்புக்குக் காப்பி சாப்பிடுவதை விட அதை விட்டுத் தொலைத்தால் என்ன?" என்று கேட்டார் சர்மா.

அவருக்குக் காப்பி தான் வேண்டும் என்பதில்லை. ருசியாக வேறு எந்த பானத்தையும் சாப்பிடுவார்.

"காப்பி சாப்பிடா விட்டால் சுறுசுறுப்பாக வேலையே ஓடுகிறதில்லை, அப்பா."

ஊரில் அவருடைய மாட்டுப் பெண் ருக்மிணி ஒன்றிரண்டு தடவைகள்

பயந்துகொண்டே இவ்வாறு கூறியதும், தான அவளைக் கண்டிப்பாகக் காப்பி பிடக் கூடாது என்று கூறியதும் அவர் நினைவுக்கு வந்தன. பாவம், அவள் அடுத்த நாளே காப்பியை விட்டு விட்டாள்! இங்கே சாரதா காப்பியைக் கழுநீர் மாதிரியாவது சாப்பிட்டுத்தான் ஆகவேண்டும் என்று அடித்துச் சொல்லி விட்டாள். அவருடைய பெண்ணாக இருந்தாலும் அவரால் கண்டிப்பாக ஒன்றும் சொல்ல முடியவில்லை.

இவ்விதமே ஒவ்வொரு விஷயத்திலும் சாரதா முன்னைவிட மிகவும் மாறிப் போயிருந்தாள். ஒருதினம் உப்பில்லாமலே குழம்பு வைத்திருந்தாள்; வேறொரு தினம் வேகாமலே உருளைக் கிழங்குக் கறி சமைத்திருந்தாள். அவளுடைய கணவன் உப்பில்லாக் குழம்பையும், வேகாத உருளைக் கிழங்கையும் சுவைத்தே சாப்பிடுவதை சர்மா கவனித்தார். கணவனும் மனைவியும் அன்னியோன்யமாக இல்லறம் நடத்துவதைக் கண்டு மனசுக்குள் வியந்து கொண்டார்.

ஊரில் ருக்மிணியும் ஜயராமனும் அவருக்காக ஒவ்வொரு விநாடியும் பயந்து பயந்து அவர்களுடைய ஒற்றுமையைக் குலைத்துக் கொண்டிருந்தார்கள். மனிதனுக்கு உணவு எப்படி அத்யாவசியமோ அவ்விதமே நிம்மதியும் சந்துஷ்டியும் தேவை என்பது சர்மாவுக்கு இதுவரையில் தெரியவில்லை.

"ஊரிலே இருந்து அப்பா வந்திருக்கிறாரே, நல்லதாக ஏதாவது செய்து போடேன்" என்று அவள் கணவன் சாரதாவிடம் கூறினான்.

"அப்பா என்ன சம்பந்தியா?" என்று ஒரே வார்த்தையில் பதில் கூறி விட்டாள் அவள்.

இந்த வார்த்தைகள் முதலில் சர்மாவுக்கு சுருக் கென்று தைத்தன. பிறகு தான் அதன் அர்த்தத்தைப் புரிந்து கொண்டார் அவர். நமக்கு நெருங்கியவர்கள், உறவினர்கள் வரும்போது அளவுக்கு மீறி உபசாரங்கள் செய்து அவர்களுடைய உறவை மிகைப்படுத்துகிறோமல்லவா? சேற்றுவரை அவர் வளர்த்த பெண்ணாக இருந்த சாரதா இன்று வேற்று மனுஷி ஆகிவிட்டாளா? அவள் அன்புடன் அளிக்கும் உணவை விட இந்த வெற்று உபசாரமா அவரைத் திருப்தி செய்து விடும்?

சர்மா ஊரில் இருந்து வந்து பத்து தினங்களில் புதிய மனிதராக மாறி விட்டிருந்தார். குடும்பம் என்றால் ஏற்றத் தாழ்வு எல்லாம் இருக்கத்தான் செய்யும். சாரதா எப்படி இருந்தவள் எப்படி மாறி விட்டாள் என்பதை நினைத்து நினைத்து அவர் ஆச்சர்யத்தில் மூழ்கினார். தன்னுடைய ஆசை, விருப்பம் முதலியவற்றை ஒதுக்கிவிட்டு தேர்ந்த ஞானியைப் போல் அவள் நடத்தும் வாழ்க்கை அவர் மனதில் ஒரு வித அமைதியையே நிலை நாட்டியது.

ஒரு நாள் பிற்பகல் சிற்றுண்டி சாப்பிட்டுக் கொண்டே சர்மா, "ஊருக்குத்தான் வந்து ஒரு மாசம் இரேன் அம்மா" என்று ஆதங்கத்துடன் அவளைக் கூப்பிட்டார்.




"காப்பியாடா இது! கேட்டால், உங்கப்பா எழுதிக் கொடுத்தார் என்று வேறே சொல்றே!... யாருடா உங்க அப்பா?..."
"எங்கப்பா தான் கண்டாக்டர், ஸார்!"

"என்னுடைய இவ்வளவு பெரிய குடும்பத்தை இழுத்துக் கொண்டு வருவது சிரமம் அப்பா. ஜயராமனையும் அவன் மனைவியையும் ஏதாவது விடுமுறைக்கு இங்கு அனுப்பி வையுங்கள்" என்று கூறினர்.

## 2

சர்மா, பெண்ணுடைய வீட்டிலிருந்து திரும்பியதும் மிகவும் மாறிப் போயிருந்தார். சமையல் விஷயத்தில் அவர் ருக்மிணியை ஒன்றுமே சொல்வதில்லை. கடு கடுவென்று சதா கோபமாக இருந்து வந்தவர் இன்முகத்துடன் அவர்களிடம் நடந்து கொண்டார்.

"சாரதா எவ்வளவு மாறி விட்டாள் தெரியுமா?" என்று வேறு அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தார்.

"சாரதா மாறி இருக்கிறளோ இல்லையோ, அப்பா ரொம்பவும் மாறி இருக்கிறர்" என்று ஜயராமன் சொல்லிக் கொண்டிருந்தான்.

இதெல்லாம் ருக்மிணிக்குப் புரியாத புதிராகவே இருந்தன. அவளுடைய புரியாத புதிரைப் புரிய வைக்க சாரதாவிமிருந்து அவளுக்கு ஒரு கடிதம் வந்தது. அதில்,

அன்புள்ள ருக்கு,

அப்பா உங்கள் இருவரிடமும் கொஞ்சம் மாறுதலாக நடந்து கொள்வார் என்று நம்புகிறேன். அப்பாவுக்காக நான் இங்கு ஒரு பத்து தினங்கள் மாறி நடந்து கொண்டேன். ஆனல், இது அப்பாவுக்குத் தெரியாது. எப்படியோ அவரும், நீங்கள் இருவரும் ஒத்துப் போக வேண்டும் என்றே நான் அசட்டுப் பட்டம் கட்டிக் கொள்ளத் தயங்க வில்லை!

உன் அன்புள்ள,

சாரதா.

என்று எழுதியிருந்தாள் சாரதா.

ருக்மிணியும் ஜயராமனும் சாரதாவை நன்றியோடு வாழ்த்தினர்.

# பூர்வ ஜன்ம பலன்

ஸரோஜா ராமமூர்த்தி

நான்கு தினங்களுக்கு முன் மாடியில் குடி வந்திருந்த ரங்கநாயகிதான் ரேடியோவில் அடிக்கடி பாடும் பாடகி என்பதை அறிந்தவுடன், மாலதி திடுக்கிட்டுப் போனாள். கவர்ச்சிகரமான தோற்றமோ, தற்கால நாகரிகப் பூச்சுக்களோ, வாக்குச் சாதுர்யமோ இல்லாமல் பரம சாதுவாக இருந்த ரங்கநாயகிக்கு, குரலினிமை மட்டும் அமைந்திருந்த காரணம், அவளுடைய பூர்வ ஜன்ம பலன் என்று தான் கூற வேண்டும்.

ரங்கநாயகி சாமான்களுடனும், குழந்தைகளுடனும் வண்டியை விட்டு இறங்கியதும், உறையிட்ட ஒரு தம்புராவையும் வேலையாள் ஒருவன் மாடியில் கொண்டு போய் வைத்தான். இவையெல்லாவற்றையும் ஜன்னலின் பூப்போட்ட திரைச் சீலையைச் சிறிது விலக்கி எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தாள், கீழே குடியிருந்த மாலதி. பரம சாதுவாகவும் பணிவாகவும் இருக்கும் ரங்கநாயகிதான் அந்தப் பாடகி என்பதை ஏற்க மாலதியின் மனம் துணியவில்லை.

ரங்கநாயகியின் முதல் பெண்ணுக்கோ வயது ஐந்துக்கு மேல் இராது. ஒரு வேளை அவளுடைய கணவர் பெரிய பாடகராக இருக்கலாமோ என்று சந்தேகப்படுவதற்கில்லாமல் அவர் கட்டைத் தொண்டையில் வண்டிக்காரனுடன் வாக்குவாதம் செய்து கூலி கொடுத்து அனுப்பியதுமே மாலதிக்கு அவர் அப்படி இல்லை என்பது தெரிந்து போயிற்று.

மாலதியின் சந்தேகம் தெளியவில்லை. மாடியில் ஒரு வாரம் வரைக்கும் குழந்தைகள் அழும் சப்தத்தைத் தவிர சங்கீதத்தின் சாயல் கூடத் தென்படவில்லை. ஒரு நாள் மாலை விளக்கேற்றியதும் தம்புரா சுருதியுடன் இனிமையான குரலில் ரங்கநாயகி பாடிக் கொண்டிருந்தாள். இடையில், 'அதைப் பாடு', 'இதைப் பாடு' என்று கட்டைத் தொண்டையில் அவள் கணவர் கூறிக் கொண்டிருந்ததும் மாலதியின் காதுகளில் விழுந்தது. மாலதி ஆச்சர்யம் தாங்காமல் தெரு வராந்தாவில் நின்றிருந்தாள். அப்பொழுது மாடியிலிருந்து ரங்கநாயகியின் பெண் கீழே வந்தாள்.

"பாப்பா! இங்கே வாயேன்! உங்கள் வீட்டில் யார் பாடுகிறது?" என்று கேட்டாள் மாலதி.

"எங்க அம்மா தான், மாமி."

"ஊஹூம்......"

"எங்க அம்மா நாளன்றைக்கு ரேடியோவிலே பாடப் போறா. அதுக்காக முன்னாடி பாடிப் பார்த்துக் கொள்கிறாள்."

மாலதி வியப்புடனும், குழம்பிய மனத்துடனும் உள்ளே சென்றாள். ரங்கநாயகியை விடத் தான் பல விஷயங்களிலும் கெட்டிக்காரி என்றே அவள் மனதுக்குத் தோன்றியது. வீட்டில் எங்கு பார்த்தாலும் பூ வேலை செய்த திரைச் சீலைகளும், மேஜை விரிப்புகளும், பட்டுத் துணியில் பூப்போட்ட திண்டுகளும், இப்படியாக வீடே ஒரு அழகிய மலர் வனம்போல் காட்சி அளித்தது. விதவிதமாக பின்னப்பட்ட நூல் திரைகளும், துணிகளை அழகான மாதிரிகளாகத் தைக்க தையல் இயந்திரம் ஒன்றும் இருந்தன. ஒழிந்த வேளைகளிலெல்லாம் மாலதி, ஏதாவது தைத்துக் கொண்டே இருப்பாள். வீட்டை அலங்கரித்துப் பார்ப்பதில் அவளுக்கு ஆசை அதிகம்.

மாடியிலிருந்து இன்னும் இன்னிசை கேட்டுக் கொண்டிருந்தது. ராக ஆலாபனமும், தானமும், பல்லவியும் பாடி முடித்தாள் ரங்கநாயகி.

"வா வா, அற்புதமாகப் பாடுகிறாய் ரங்கம்!" என்று அவள் கணவர் சொல்ல

"ஸ்துதி செய்யாதீர்கள்" என்று தன் அடக்கத்தை வெளியிட்ட சகதர்மிணியின் குரல் லேசாக மாலதியின் காதுகளில் ஒலித்தது.

## 2

ரங்கநாயகி வீட்டு வேலைகள் எல்லாம் தீர்ந்து ஒழிந்து உட்காருகிறது என்பதே கிடையாது. அப்படிக் கொஞ்ச நேரம் உட்கார்ந்தாலும் சங்கீதம் சாதகம் செய்தால் அந்தப் பொழுதும் சரியாகி விடும். மாலதியின் வீட்டில் அவள் கணவனையும் அவளையும் தவிர வேறு யாரும் இல்லை. மற்ற அலுவல்களைக் கவனிக்க வேலையாட்கள் வேறு இருந்தனர். மாலதிக்குப் பொழுது போவது நத்தை ஊர்வது போல் தோன்றும், எதையாவது தைத்துக் கொண்டும் பின்னிக் கொண்டும் பொழுதைக் கழிப்பாள்.

"இவ்வளவு நன்றாகப் பாடுகிறாளே. மற்ற வேலைகளிலும் கெட்டிக்காரியாகத்தான் இருப்பாள்" என்று மாலதி ரங்கநாயகியைப் பற்றி நினைத்துக் கொண்டாள்.

அன்று பகல் வேலையெல்லாம் முடிந்த பின்பு மாடியில் கொடிகளில் துணி உலர்த்திக் கொண்டிருந்தாள் ரங்கநாயகி. அவளை அறிமுகம் செய்து கொள்ள வேண்டும் என்று நினைத்திருந்த மாலதி, கையில் நூல் பை ஒன்றை வைத்துக் கொண்டு, அழகிய இரு கட்டைப் பைகளில் அவைகளைப் பொருத்திக் கொண்டிருந்தாள். தற்செயலாக இருவர் கண்களும் சந்தித்துக் கொண்டன.



...ஒரு மலர் வனத்துக்கே வந்து விட்டதாக...

"வேலையெல்லாம் ஆகி விட்டதா?" என்று ரங்கநாயகி மாலதியைப் பார்த்துக் கேட்டாள்.

"எனக்கு எப்பொழுதுமே வேலை அதிகம் இருப்பதில்லை. பொழுது போகாமல் திண்டாடுகிறேன்" என்று பதில் அளித்தாள் மாலதி.

"இங்கே வாருங்களேன்!" என்று கூப்பிட்டாள் ரங்கநாயகி.

மாலதி மாடிக்குச் சென்றாள். அவள் கையில் இருந்த பையின் நூல்கள் வெய்யில் பட்டுப் பளபளவென்று மின்னின. மஞ்சளும் சிவப்பும் சேர்த்து ரோஜா புஷ்பங்களைக் கோத்த மாதிரி இருந்தது அந்தப் பை.

"இந்த மாதிரிப் பை கையால் பின்னுவதுதானா? மிஷினில் பின்னுவது என்றல்லவா நினைத்திருந்தேன்!" என்று சொல்லிக் கொண்டே பையை வாங்கி மேலும் கீழும் திருப்பிப் பார்த்தாள் ரங்கநாயகி.

"பூ! இது என்ன பிரமாதம்? நாலே நாளில் பின்னி விடலாம். இதை விட இன்னும் கஷ்டமான வேலைகள் எல்லாம் எனக்குத் தெரியும்."

இவ்விதம் கூறிவிட்டு, மாலதி அந்த வீட்டைச் சுற்றிப் பார்த்தாள். மாதிரிக்காகக்கூட அங்கே ஒரு திரைச்சிலையோ, மேஜை விரிப்போ இல்லை.

"உங்களுக்குத் தையல் வேலை ஒன்றும் வராதோ?" என்று ஒரு மாதிரியாகக் கேட்டாள் மாலதி.

"வராது என்பதில்லை. முயற்சி செய்து பார்க்கவில்லை" என்று கூறினாள் ரங்கநாயகி.

"என்னோடு வாருங்கள். நான் செய்திருக்கும் தையல் வேலைகளைக் காண்பிக்கிறேன்" என்று சொல்லி, ரங்கநாயகியைத் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்றாள்.

ரங்கநாயகி அந்த வீட்டினுள் நுழைந்ததும், தான் ஒரு மலர் வனத்துக்கே வந்துவிட்டதாக உணர்ந்தாள். கண்ணைப் பறிக்கும் வர்ணங்களில் கண்ணுக்கும், கருத்துக்கும் விருந்தாக இருந்தன அவைகள்.

"நாமும் இருக்கிறோமே, நம்மைப் போல இவளும் பெண்தானே?" என ரங்கநாயகி நினைத்துக் கொண்டாள்.

"இவ்வளவு நன்றாகச் செய்யத் தெரியாவிட்டாலும் கற்றுக் கொண்டால் சுமாராகவாவது தைக்க வராதா? கொஞ்சம் எனக்கும் சொல்லித் தருகிறீர்களா?" என்று ரங்கநாயகி மாலதியைக் கேட்டாள்.

"இதில் சொல்லித் தர என்ன இருக்கிறது? ஊசிநூலால் தைக்க வேண்டியதுதானே?" என்று மாலதி வெடுக்கென்று கூறியதும், ரங்கநாயகியின் மனம் வெட்கி, பேசாமல் இருந்துவிட்டாள்.

அன்று இரவு சாப்பாடு முடிந்ததும் ரங்கநாயகியும், அவள் கணவனும் நிலவொளியில் உட்கார்ந்திருந்தனர்.

"ரங்கம்! ஏதாவது பாடேன் கேட்கலாம்" என்றார் அவர்.

வழக்கம் போல் அவள் மனம் உற்சாகமாக இல்லை. வீட்டுவேலையைத் தவிர இந்தப் பாட்டு ஒன்றுதானே அவளுக்கு உற்சாகம் அளித்து வருகிறது? ஆனால், இன்னும் கண்ணுக்கினிமை தரும் எவ்வளவோ விஷயங்கள் கற்றுக் கொள்ளலாம்.

"ஹூம்... திரும்பத் திரும்ப என்ன பாட்டு வேண்டியிருக்கிறது! வேறு ஒன்றும்தான் எனக்குத் தெரியவில்லை" என்று சலிப்புடன் பதில் கூறும் மனைவியின் முகத்தை ஆச்சர்யத்துடன் பார்த்தார் அவர்.

"சங்கீதத்தை அவ்வளவு சாமானியமாகச் சொல்லி விட்டாயே, ரங்கம்!" என்று ஆச்சர்யத்துடன் கேட்டார் அவர்.

"நம் வீட்டின் கீழ்ப் பாகத்தில் குடி இருக்கிறார்களே, அவர்கள் வீட்டைக் கவனித்தீர்களா நீங்கள்?"

"ஓஹோ! இதென்ன பிரமாதம்? நீயும் அவளிடம் தையல் வேலைகளைக்

"கற்றுக் கொள்ளேன்" என்று கூறினார் அவர்.

அவர் சாதாரணமாகச் சொல்லி விட்டார். மாலதி தற்பெருமை கொண்டவள் என்பது அவருக்குத் தெரியாது! அடுத்த நாள், மனைவியின் விருப்பப்படி அழகிய வர்ண நூல்களும் துணிகளும் வாங்கி வந்தார். ரங்கநாயகிக்குப் பரம திருப்தி. அவைகளை எடுத்துக்கொண்டு மாலதியைத் தேடிப் போனாள் ரங்கம். மாலதிக்குத் தூக்கி வாரிப் போட்டது. 'வெறுமனே கேட்டதோடு திருப்தி அடையாமல் காரியத்திலும் செய்து விடுவாள் போல் இருக்கிறதே!' என்று நினைத்துக் கொண்டாள் அவள்.

"ஐயையோ! இதெல்லாம் கொஞ்சம் கஷ்டமான வேலையாயிற்றே. அவசரப்பட்டுப் பணத்தைக் கொட்டி வாங்கி விட்டீர்களே!" என்றாள் மாலதி.

"கொஞ்சம் சிரத்தையுடன் கற்றுக் கொண்டால் வராதா என்ன?"

"வராது என்று சொல்லவில்லை. ஊகத்தினால் செய்ய வேண்டியது, அவ்வளவுதான்!" என்றாள் மாலதி.

"ஊகம், ஊகம்" என்று திரும்பத் திரும்ப எதைப்பற்றிச் சொல்கிறாள் மாலதி என்பது ரங்கநாயகிக்குப் புரியவில்லை. ஒரு வேளை தனக்கு ஊகம் போதாது என்று மறைவாகச் சொல்லுகிறாளோ? அதற்கு மேல் ரங்கநாயகி அங்கே இருக்கப் பிடிக்காமல் கீழே இறங்கிச் சென்றாள்.

"பத்துப் பதினைந்து ரூபாய் செலவு செய்து வாங்கியதுதான் மிச்சம். நூல் எல்லாம் அப்படியே கிடக்கிறதே" என்று அவள் கணவன் அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தார்.

இதனால் ரங்கநாயகிக்கும் மாலதிக்கும் மனஸ்தாபம் ஒன்றும் நேரவில்லை. இருவரும் சகஜமாகவே பழகி வந்தார்கள். ரங்கநாயகி மாலதியின் வீட்டுக்குப் போய்க் கொண்டு தான் இருந்தாள். மாலதியும் ரங்கநாயகியின் வீட்டுக்கு வந்து கொண்டிருந்தாள். ஆனால், தையல் விஷயமாக இருவரும் ஒன்றும் பேசவில்லை.

ஒரு தினம் மாலதி திடீரென்று ரங்கநாயகியிடம், "மாமி! நாங்கள் வேறு வீட்டுக்குக் குடி போகிறோம். இங்கிருந்து அவருக்கு ஆபீஸ் போய் வர சௌகர்யமில்லை. வேறு வீடு பார்த்தாகிவிட்டது. இன்னும் இரண்டு நாளில் ஜாகை மாற்றி விடுவோம்" என்று கூறினாள்.

"அப்படியா? இதுவரைக்கும் உங்களுக்கு ஜாகை மாற்றுகிற உத்தேசம் இருப்பதாக என்னிடம் சொல்லவில்லையே?"—ரங்கநாயகி வியப்புடன் கேட்டாள்.

"வீடு கிடைப்பது நிச்சயம் ஆகட்டும் என்று இருந்து விட்டேன்" என்று கூறினாள் மாலதி.

மாலதி வேறு வீட்டுக்குப் போய் மாதக் கணக்கில் ஆகிவிட்டது. ரங்கநாயகியின் வீட்டு ஜன்னல்களும், வாயில்



சாமான் வாங்கியவர் (இடக்காக): இது என்ன பொட்டலங்க?.... வாசனையே தெரியல்லேயே!

கடைக்காரர்:— அடடே! உங்களுக்குத் தெரியல்லேயா? தெரியாது. தெரியாது!... கற்பூரம் ஆச்சுங்களே அது!

நிலைப்படிகளும் அழகிய திரைச் சீலைகளுடன் விளங்கின. மேஜை மீது அழகிய விரிப்பு ஒன்று காற்றில் பறந்து கொண்டிருந்தது. வெறுமனே வெள்ளைத் துணியால் உறையிட்ட தம்புராவுக்குப் பூ வேலை செய்த உறை போடப் பட்டிருந்தது.

"பாவம், இப்போது மாலதி இருந்தால் மூர்ச்சையாகி விடுவாள் இவைகளைப் பார்த்து!" என்று ரங்கநாயகியின் கணவர் அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தார்.

"அவள் விலாசம் கூட எனக்குத் தெரியவில்லையே. இந்த ஊரில் தான் எங்கோ இருக்கிறாள்" என்றாள் ரங்கநாயகி.

"எப்படியாவது அவளைக் கண்டு பிடித்து நம் வீட்டுக்கு அழைத்து வந்து காண்பிக்க வேண்டும்" என்றார் அவர்.

சில தினங்களுக்குப் பிறகு ரங்கநாயகி மாலதியைத் தற்செயலாகக் கடை வீதியில் சந்தித்தாள்.

"மாலதி! உன்னைப் பார்க்க வேண்டும் என்று அடிக்கடி நினைத்துக் கொள்வேன், விலாசம் தான் தெரியவில்லை. நீ ஒருவேளை என்னை மறந்து விட்டாயோ என்னவோ?" என்று சந்தோஷத்துடன் கேட்டாள் ரங்கநாயகி.

"மறக்கவில்லை, மாமி."

"இவ்வளவு தூரம் வந்திருக்கிறாயே, எங்கள் வீட்டுக்குத் தான் வாயேன்!" என்று அழைத்தாள் ரங்கநாயகி.

**மா**லதி, ரங்கநாயகியின் வீட்டுக்குள் நுழைந்ததும் திகைத்து நின்றாள்.

"என்னைக் கற்றுத் தரும்படி கேட்டீர்களே, மாமி! நீங்கள் அவைகளைத் தெரிந்து கொண்டுதான் வெறுமனே கேட்டீர்களா?" என்றாள் மாலதி. அவள் முகம் வாட்டமடைந்தது.

"இல்லை மாலதி! உன்னைப் பார்ப்பதற்கு முன் எனக்கு ஒன்றுமே தெரியாது. உன் வீட்டுக்கு வந்து போய்க் கொண்டிருந்தேனே, இல்லையோ? நீ தைக்கும் போது பார்த்துப் பார்த்து நானும் தைத்துப் பார்த்தேன்."

மாலதி ஒவ்வொன்றாகக் கவனித்து வந்தாள். சிறிது நேரம் இருவரும் ஒன்றுமே பேசவில்லை.

"மாலதி! இன்று வெள்ளிக்கிழமை. தீபம் ஏற்றுகிற சமயம் ஆயிற்று, கொஞ்சம் இரேன். இரண்டு பாட்டுக்கள் பாடி விட்டுத் தாம்பூலம் தருகிறேன்" என்று சொல்லிக் கொண்டே தம்புராவை எடுத்து, சுருதி சேர்த்துப் பாட ஆரம்பித்தாள் ரங்கநாயகி.

வண்டின் ரீங்காரம் போல் இருந்தது அவள் குரல் இனிமை. மாலதி மெய்ம் மறந்து உட்கார்ந்திருந்தாள். பாட்டு முடிந்ததும் மாலதியைப் பார்த்து ரங்கநாயகி கேட்டாள்: "மாலதி! நீ எவ்வளவோ கெட்டிக்காரியாக இருக்கிறாயே. உனக்குப் பாட்டும் தெரிந்து இருக்க வேண்டும். ஏதேனும் ஒரு பாட்டுப் பாடேன்!"

"எவ்வளவோ செலவழித்து எனக்குப் பாட்டு சொல்லிக் கொடுத்தார்கள். சரியாக வரவில்லை, மாமி" என்று பதில் சொன்னாள் மாலதி.

"ஆமாம், ஆமாம்! நன்றாகப் பாடுவதெல்லாம் பூர்வ ஜன்ம பலனுக்கும்!" என்றாள் ரங்கநாயகி.

இவ்விதம் அவள் கூறியதும் மாலதியின் மனத்தில் பலவித எண்ணங்கள் தோன்றி மறைந்தன. தையல் கற்றுத் தரும்படி தன்னிடம் ரங்கநாயகி கேட்டதும், அதற்கு அவள் 'அதற்கெல்லாம் ஊகம் வேண்டும்' என்று சொன்னதும் அவள் நினைவுக்கு வந்தன. அவைகளையாவது ஊகத்தினால், கண்ணால் பார்த்தால் கூடக் கற்றுக் கொண்டு விடலாம். ஆனால், வரப்பிரசாதத்தினால் வர வேண்டிய வித்தைகள் பல இருக்கின்றனவே. அவை பூர்வஜன்ம பலன் இல்லாவிடில் எவ்வளவு முயன்றாலும் சித்திப்பதில்லை.

ரங்கநாயகியின் குரல் இனிமையும், சங்கீத தேர்ச்சியும் பூர்வ ஜன்ம பலன் என்று தான் கூற வேண்டும்.



# துணை

— ஸரோஜா ராமமூர்த்தி —

பார்வதிக்கு மூன்று நாட்களாக ஜுரம். ஜுர வேகத்தில் உடம்பு எங்கோ ஆகாயத்தில் பரப்பது போன்ற ஒரு உணர்ச்சி. அவள் படுத்திருந்த கட்டிலும், அந்த அறையும் சுழல்வது போல் ஒரு பிரமை. உடம்பு தெம்பாக இருக்கிற வரையில் இன்னொருவருடைய உதவியைத் துச்சமாக மதிக்கும் உள்ளம் படைத்தவர்கள்கூட, உடம்பு அயர்ந்து கீழே படுத்து விட்டால் இன்னொருவர் வந்து நமக்கு உதவமாட்டார்களா என்று ஏங்குவது இயல்புதானே? மேஜை மீது இருந்த 'பிளாஸ்'கிலிருந்து வென்னீரை டம்ளரில் கொட்டி ஆற்றித் தர அருகில் யாரும் இல்லை. ஜுர வேகத்தில் நாக்குப் 'பொடி'யாக ஒட்டிக் கொண்டது. எப்படியாவது மெதுவாக எழுந்து சாப்பிடலாம்என்று தட்டுத் தடுமாறிக் கொண்டே எழுந்தாள் பார்வதி.

''பார்வதி டீச்சர்! உங்களுக்கு என்ன வேண்டும் என்று அம்மா கேட்டுக் கொண்டு வரச் சொன்னாள்,'' என்று கூறியவாறு பத்து வயதுச் சிறுமி ஒருத்தி உள்ளே வந்தாள். வந்தவள் பார்வதி தடுமாறிக் கொண்டே எழுந்திருப்பதைப் பார்த்து, ''உங்களுக்கு என்ன வேண்டும் டீச்சர்? ஜலமா? நான் எடுத்துக் கொடுக்கிறேன். 'குளூகோஸ்' போட்டுத் தரட்டுமா?'' என்று அன்புடன் கேட்டு, அந்தப் பெண் பார்வதிக்கு ஜலம் கொடுத்து உபசரித்தாள்.

''மூன்று நாட்களாக உங்களுக்கெல்லாம் ரொம்பவும் சிரமம் கொடுத்துவிட்டேன் விஜயா. எனக்கு யாருமே இல்லை பார்; கதியற்றவளாக இருப்பதால்தான் பிறத்தியாருக்குச் சிரமம் கொடுக்க வேண்டி இருக்கிறது.''

பார்வதியின் கண்களிலிருந்து கண்ணீர் பெருகி வழிந்தது. உஷ்ணமான பெருமூச்சுடன் அவள் தனக்குள்ளாகவே என்னவோ பேசிக்கொண்டாள்.

''ராத்திரிக்கு நீங்கள் என்ன சாப்பிடுகிறீர்கள் டீச்சர். அம்மா கேட்டுக் கொண்டு வரச் சொன்னாள். நொய்க் கஞ்சி வேண்டுமா?''

''நாலு குழந்தைகளை வைத்துக் கொண்டு உன் தாய் ரொம்பவும் சிரமப்படுகிறாள் விஜயா. நான் வேறு அவளுக்குத் தொந்தரவு கொடுக்கிறேன்.''

''அதெல்லாம் ஒன்றுமில்லை டீச்சர். ஒருத்தருக்கு ஒருத்தர் துணையாக. ஆதரவாக இருக்கவேண்டும் என்று அம்மா அடிக்கடி சொல்வாள். நீங்கள் தவறாக நினைக்காதீர்கள் டீச்சர்.''

விஜயா இவ்விதம் கூறிவிட்டு அந்த அறையை விட்டு வெளியே போய் விட்டாள்; டீச்சருக்குக் கஞ்சி தயாரித்துக் கொண்டு வருவதற்காக.

'ஒருவருக்கொருவர் துணையாக இருக்க வேண்டும் என்று என் அம்மா சொல்வாள்' என்கிற வார்த்தைகள் பார்வதியின் மனத்தில் சுழன்று வந்தன. கடவுளுடைய படைப்பில் ஒவ்வொரு உயிரும் துணையை நாடித்தான் வாழ்கின்றன. ஒரு குடும்பத்தில் பெண் பிறந்து பதினைந்து வயசாகிவிட்டால் அவளுக்கு ஒரு துணையைத் தேடி வைக்கப் பெற்றோர் கவலைப்படுகிறார்கள். துணையோடு

தான் வாழ வேண்டும் என்பது நியதி. அதிலிருந்து மாறுபட்டு வாழ்க்கை நடத்த எல்லோராலும் முடியாது.

பார்வதிக்குப் பதினேழாவது வயசில் வாழ்க்கைத் துணைவன் ஏற்பட்டான். வெகு ஆடம்பரமாக தம் ஒரே மகளுக்கு அவள் பெற்றோர் மண முடித்து வைத்தார்கள். அந்த நாளில் சீமைக்குப் போய்ப் படித்துப் பட்டம் பெற்று வந்த வாலிபர்களுக்குக் கௌரவம் அதிகமாக இருந்தது. மூன்று பிள்ளைகளுக்கு நடுவில் அருமையாக வளரும் பெண்ணுக்கு, பார்வதியின் பெற்றோர் பிரத்யேகமாகச் சலுகை அளித்தனர். புகுந்த வீட்டில் சிறிதும் கஷ்டப் படாமல் தங்கள் மகள் வாழ வேண்டும் என்று எண்ணியே பெரிய பட்டம் பெற்றவனைத் தேடி மணமுடித்து வைத்தார்கள்.

பார்வதி சுபாவத்திலேயே சற்று கண்டிப்புக்காரி. ஒவ்வொருவரும் வாழ்க்கையில் தவறு செய்வது சகஜம் என்பதை ஒப்புக்கொள்ள மாட்டாள்! 'ஒன்றைச்செய்வதற்கு முன்பு யோசித்துச் செய்தால் என்ன?' என்று தர்க்கிக்கும் சுபாவம் படைத்தவள் அவள்.

கல்யாணத்தின் போதே மாப்பிள்ளை சேகரன் யாருடனும் கலகலப்பாகப் பழகாமல் 'உம்' மென்று இருந்ததை ஜாடையாகக் கவனித்தாள் அவள். பாதி ஊர்வலத்தில் லேசாக மழைத்தூறல் போட ஆரம்பித்தது. காரின் மேல் மூடியை மூடிவிட்டார்கள். அப்பொழுதாவது கணவன் தன்னை ஏதாவது கேட்கக்கூடும் என்று அவள் எதிர்ப்பார்த்து ஏமாந்தாள். ஏதோ ஒன்றைப் பறி கொடுத்தவன்போல் அவன் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு உட்கார்ந்திருந்தான். பார்வதியின் உள்ளம் பொறுமிக்கொண்டே இருந்தது. கண்களில் தேங்கி இருந்த கண்ணீர் எந்த நிமிஷத்திலும் கன்னங்களில் வழிந்து விடுமோ என்று பயந்து கொண்டே காரை விட்டு இறங்கி அவசரமாகத் தன் அறைக்குள் போய்விட்டாள் பார்வதி.

சிறிது நேரத்துக்கெல்லாம் கல்யாண வீட்டில் ஒரு சிறு அமளி. கல்யாணப் பெண்ணுக்குத் தலைவலியாம்! ஒரு வயதான பாட்டி முகத்தைத் தோளில் இடித்துக் கொண்டே சொன்னாள்.

''பிள்ளை வீட்டார் ஓர் அநியாயத்தை மறைத்து வைத்துக் கல்யாணம் பண்ணிவிட்டார்கள். ஒரு வேளை பெண்ணுக்கு அது தெரிந்துவிட்டதோ என்னவோ?'' ரகசியத்தை மனதுக்குள் வைத்துக் காப்பாற்றத் தெரியாத பெண்மணி ஒருத்தியின் பேச்சு எல்லோரையும் திகைக்க வைத்தது.

இந்த அமளியுடனேயே கல்யாணம் முடிந்து விட்டது. மூன்று மாதங்களுக்குப் பிறகு பார்வதியும், அவள் கணவன் சேகரனும் தனிமையில் சந்தித்த முதல் தினம்...

ஆகாயம் நிர்மலமாகத்தான் இருந்தது; அதில் களங்கம் இல்லை. காற்று மென்மையாகத்தான் வீசியது; அதில் படபடப்பில்லை. நிலவு குளுமையைத்தான் கொடுத்தது; அதில் ஆத்திரப்பட ஒன்றுமேயில்லை. கீழே எல்லோரும் பேசிக் கொண்டார்கள். ''இனிமேல் சேகரன் நம்மை எல்லாம் மறந்து விடுவான்டி. பார்வதியையே பார்த்துக்கொண்டு இருக்கப் போகிறான் பார்'' என்று.

''அவள் மாத்திரம் என்ன? ஆத்துக்காரரையே சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருப்பாள். என்னையும், உன்னையும் 'யாரென்று' கேட்பாள்.''

பார்வதிக்கு இவர்கள் பேசுவதெல்லாம் அர்த்த மற்றவைகளாகத் தோன்றின. நிலவு பொழியும் வானத்தை அண்ணாந்து பார்த்துக்கொண்டே மொட்டை மாடியில் நின்றிருந்தாள் அவள்.

படுக்கை அறையில் 'மெர்க்குரி' விளக்கின் பிரகாசம் கண்ணைப் பறித்தது. ஊதுவத்தியின் மணம் பரவி வந்தது. மல்லிகையின்



மனைவி:—உங்களுக்குக் குபேரனைப்போல் பணம் இருந்தால் என்ன செய்வீர்கள் ?"

கணவன்:—நான் அதைப்பற்றிக் கவலைப்படவில்லை. குபேரனுக்கு உன்னைப்போல் ஒரு மனைவி வாய்த்திருந்தால் அவன் பணத்துக்கு என்ன செய்திருப்பான் என்று தான் யோசிக்கிறேன்.

---

வாசனை 'கம்'மென்று வீசியது. சேகரன் பார்வதியின் தலைப் பின்னலையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். கல்யாணத் தின்போது எவளைத் திரும்பிப் பாராமல் இருந்தானோ அவளுடைய கடாட்சம் தன் மீது விழாதா என்று ஏங்கினான். குறும்பு தவழும் கண்களால் தன்னை அவள் ஏறிட்டுப் பார்க்க மாட்டாளா என்று காத்திருந் தான். இதற்காக ஒன்றிரண்டு முறை அவள் வீட்டைத் தேடிப் போனான். பார்வதி அவனுடன் அப்பொழுது முகம் கொடுத்துப் பேசவில்லை. இன்று அவள் அவன் அருகாமையிலேயே இருக்கிறாள்.

"என்னடி மாடியிலே சத்தமே காணோம்?" இளம் பெண் ஒருத்தி, இன்னொருத்தியைக் கேட்டாள்.

"சத்தம் போடுவார்களா ?" மற்றவள் இவ்விதம் கூறிவிட்டுக் 'கலீ'ரென்று சிரித்தாள்.

சேகரன் துணிவுடன் எழுந்து பார்வதியின் அருகில் வந்தான். "பார்வதி! யாரோ சொன்னதைக் கேட்டுவிட்டு நீ என்மேல் கோபமாக இருக்கிறாயே." பார்வதியின் கைகளைச் சுவாதீனமாகப் பற்றிக் கொண்டான்.

பார்வதி சடாரென்று கைகளை உதறிக் கொண்டாள். "நான் கேட்பதற்குப் பதில் சொல்லுங்கள். அவர்கள் சொன்னது உண்மைதானே? அயல் நாட்டில் ஒரு பெண்ணுடன் உங்களுக்கு நட்பு இருந்தது வாஸ்தவந்தான் இல்லையா? இதைக்கூட நீங்கள் மறுக்கிறீர்களா ?"

பார்வதியின் கண்களில் வீராவேசம் பொங்கி நின்றது. சேகரன் மௌனமாக நின்றான். பிறகு தாங்க முடியாத துயரத்துடன் அவளைப் பார்த்தான்.

"பார்வதி? நீ சொல்வது வாஸ்தவம்தான். எனக்கும், ஒரு பெண்ணுக்கும் அங்கே நட்பு இருந்தது உண்மை. தாய்நாடு திரும்புகிற வரையில் அவளைத்தான் மணக்க வேண்டும் என்று உறுதியுடன் இருந்தேன். இங்கு வந்த பிறகும் எனக்கு அந்த நம்பிக்கை தளர வில்லை. என் விருப்பத்துக்குத் தடையாக இருந்தவர்கள் என்

பெற்றோர். வாழ்க்கையில் என்னுடைய செய்கைகளைப் பொறுத்திருந்தது அவர்களுடைய சந்தோஷம். முதலில் அம்மாவிடம் வெளியிட்டபொழுது, ''என்னடா சொல்கிறாய்?'' என்றாள் அவள். அந்த முகத்தில் ஏற்பட்ட ஏமாற்றத்தையும், பயங்கரத்தையும் என்னால் வர்ணிக்க முடியவில்லை பார்வதி. அப்பா அதைக் கேட்டு விட்டு, ''அப்படியா? எதற்காக ஊருக்கு வந்தாய்? எங்களைச் சம்மதம் கேட்டு, ஆசி பெற்றுப் போகவா?'' என்று உறுமினார். தாயின் கண்ணீருக்கு முன்பு என் உறுதி தளர்ந்து போயிற்று. கல்யாணத்தின்போதுகூடப் பழைய நினைவில் தான் நான் உன்னுடன் பேசவில்லை.''

பார்வதி ஏளனமாக அவனைத் திரும்பிப் பார்த்தாள்.

''நீங்கள் எல்லாவற்றையும் மறந்து விட்டீர்கள். காதல் என்னும் ஒரு மாபெரும் சக்தியை நீங்கள் கேவலம் ஒரு பம்பரமாக ஆட்டி விட்டீர்கள். நான் அதை அவ்விதம் கருதவில்லை. காதல் புனிதமானது என்றுதான் கருதுகிறேன். நொந்துபோன அந்தப் பெண்ணின் மனதை எண்ணிப் பார்த்து ஏங்குகிறேன். நீங்கள் மறந்து போன விஷயத்தை நான் மறக்க விரும்பவில்லை.''



''வேண்டாத சில விஷயங்களை நாம் மறந்துதானே ஆகவேண்டும் பார்வதி?''

சேகரன் கனிவு பொங்க இவ்விதம் கேட்டான்.

''என்னால் மறக்க முடியாது. ஒருத்திக்கு அநியாயமாக நீங்கள் தீங்கு செய்து விட்டதாகவே நினைக்கிறேன்.''

''பார்வதி!'' மறுபடியும் ஆவலுடன் அவள் கரங்களை அவன் பற்றினான்.

''என்னைத் தொடாதீர்கள். நான் சுதந்திரமாக இருக்க விரும்புகிறேன்.''

''எங்கே போகப் போகிறாய் பார்வதி?''

''எங்கும் போகவில்லை. இன்றிரவு இங்கேதான் இருப்பேன். நாளை என் வழி எனக்கு. என்னைப்போல் ஏமாற்றமடைந்த பெண்கள் எவ்வளவோ பேர் சுதந்திரமாக வாழவில்லையா என்ன?''



## 2

பார்வதி கணவனைப் பிரிந்து வந்து இருபது ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டன. கழுத்திலே புரளும் அந்த மஞ்சள் சரட்டைத் தவிர கணவன், மனைவி உறவைப் பற்றி அவள் ஆராயவே இல்லை. படித்தாள். பட்டம் பெற்றாள். ஆசிரியையாக வேலை ஏற்றுச் சுதந்திரமாக வாழ்ந்தாள். பெற்றவர்களையும், உடன் பிறந்தவர்களையும் அவள் அண்டவே இல்லையே. அவர்கள் ஏன் அவளை 'என்ன, ஏது' என்று கேட்கப் போகிறார்கள்?

சரீரத்தை யந்திரத்துக்குச் சமானமாக ஒப்பிட்டிருக்கிறார்கள். சரீர உழைப்புக்கும், மூளை உழைப்புக்கும் ஓர் எல்லை வேண்டும். பார்வதி, கடந்த இருபது வருஷங்களில் உடம்பைப் பற்றி அக்கரை கொண்டதே இல்லை. இருக்கிற வரைக்கும் உழைக்கிறோம். சரீரம் கீழே விழுந்தால் நம் வேலை முடிந்தது. யாருக்காக அதைப் போற்றி வளர்க்க வேண்டும்

என்று அசிரத்தையாகவே இருந்து விட்டாள்.

"குழந்தை! நாங்கள் இருக்கிற வரைக்கும் நம் வீட்டில்தான் வந்து இரேன்" என்று பெற்றோர் அழைத்தனர்.

"அவளையும் குடும்பத்தில் ஒரு மகளைப் பாவிக்கிறோம். வரட்டுமே" என்றார்கள் உடன் பிறந்தார்கள்.

இந்தச் சலுகைகளையும் பார்வதி ஆமோதிக்கவில்லை. இறக்கை முளைத்த பிறகு பறந்துதான் ஆக வேண்டும். அம்மாவையும், அப்பாவையும் சுற்றி வரத்தான் குழந்தை இல்லை என்று அவர்கள் கூறுவதை அவள் மறுத்துவிட்டாள். தனியாக வாடகைக்கு ஓர் அறை எடுத்துக்கொண்டு, தன் ஊதியத்தை வைத்துக் கொண்டு காலத்தைக் கடத்தினாள் பார்வதி.

பார்வதி சென்ற பிறகு சேகரனின் வாழ்க்கையில் எவ்வித மாறுதல்களும் நிகழவில்லை. 'காதலுக்கும் தனக்கும் சம்பந்தம் இல்லை. மணவாழ்க்கைக்கும் தனக்கும் பிராப்தி கிடையாது. இனிமேல் அவைகளைப் பற்றித் தான் நினைக்க வேண்டிய அவசியமே இல்லை என்று தீர்மானித்துக் கொண்டான் சேகரன். அதன் படி வாழ்ந்தும் வந்தான். அவன் உள்ளத்தில் பார்வதிக்கு நிரந்தரமான இடம் இருந்தது. அயல் நாட்டில் தோன்றிய காதல்-ஆசை என்றுதான் அதைச் சொல்ல வேண்டும்—மின்னலைப் போல் மறைந்து விட்டது. வாழ்க்கைப் படிகளில் ஏற்பட்ட சிறு சறுக்கல் அது என்றுகூட அதைப்பற்றி அவன் நினைத்தான். அந்தச் சறுக்கல்தான் எவ்வளவு விபரீதமான பலனைக் கொடுத்து விட்டது. நிஜமாகவே சறுக்கி இருந்தால் கூடக் காயம் இவ்வளவு ஆழமாகப் பட்டிருக்காது. ஹிருதயத்திலேயே அல்லவா அடி பட்டு விட்டது?

பார்வதி ஒரு கல்லூரியின் ஆசிரியை. நூற்றுக்கணக்கான குழந்தைகளுக்குக் கல்வி போதிக்கும் மகத்தான பாக்கியத்தை அடைந்தவள். சேகரன் மிகவும் பெருமையுடன் இதைப் பற்றி சிந்தித்தான். அவளை வாழ்க்கையில் ஒரு தரம் சந்திக்கவேண்டும் என்பது அவனுடைய ஆசை. மனைவி என்கிற ஹோதாவில் அல்ல. பண்பு மிக்க பெண்மணி என்கிற மரியாதையில் அவளைப் பார்க்கவேண்டும் என்று ஆவலுற்றான் சேகரன்.

வகுப்பு நிசப்தமாக நடந்து கொண்டிருக்கிறது. பார்வதி மளமள வென்று பிரசங்கம் புரிகிறாள் :—

"வால்மீகியின் ஆச்ரமத்திலிருந்து அச்வமேத யாக சாலைக்கு (மகரிஷியால்) அழைத்து வரப்பட்ட சீதாதேவியை ஸ்ரீராமன் மறுபடியும் அக்னிப் பிரவேசம் பண்ணச் சொல்லி அக்னி பரீக்ஷை நடத்த விரும்புகிறான்."

பெண் குழந்தைகள் சீதா தேவிக்கு ஏற்பட்டிருக்கும் பரீக்ஷையை நினைத்து, கண்களில் நீர் பெருக டீச்சரின் முகத்தையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்கின்றனர்.

"பார்வதி! உங்களைப் பார்க்க யாரோ வெளியில் வந்து நிற்கிறார்கள். உள்ளே வரச் சொல்லட்டுமா? அங்கே 'கேட்' அருகில் நிற்கிறார்கள்." தலைமை உபாத்யாயினி பார்வதியை இவ்விதம் கேட்டாள்.

"யார்?"

"சேகரனும்! தங்கள் உறவினர் தானும்"

"அவரை இப்பொழுது பார்க்க முடியாது" என்று சொல்லுங்கள். தலைமை உபாத்யாயினி அவளைச் சிறிது உற்றுப் பார்த்து விட்டு, வெளியே போய் விட்டாள்.

அன்றெல்லாம் பார்வதிக்கு ஒரே குழப்பம். அறைக்கு வந்த பிறகு கழுத்திலே கிடந்த மஞ்சள் சரடைக் கையால் நெருடிப் பார்த்தாள். ஆஹா! இதற்குத்தான் எவ்வளவு மகிமை இருக்கிறது? இந்த ஓர் உரிமையை வைத்துக் கொண்டல்லவா அவர் என்னைப் பார்க்க வருகிறார்? இதன் பெருமையால் அல்லவா எல்லோர் முன்

# எங்கள் ரோஸி



சரோஜா ராமமூர்த்தி

கப்பும், கிளைகளுமாய்ப் பரவி நிற்கும் அந்த வாதாம் மரத்தி னடியில்தான் எங்கள் 'ரோஸி' நிம்மதியாகத் துயின்று கொண் டிருக்கிறாள். அதன் கீழே குழந் தைகள் கோலி ஆடுகிறார்கள். என் கணவர் தம் நண்பர்களுடன் அமர்ந்து வட்டமேஜை ஒன்றை மையத்தில் போட்டுக்கொண்டு சீட்டாடுகிறார். எண்ணிறந்த குருவிகளும், பச்சைக் கிளி களும் இராப் பொழுதைக் கழிக் கும் குளிர் தருவாக ஓங்கி வளர்ந்திருக்கிறது அந்த மரம்.

மரத்தில் கணுவுக்குக் கணு காய்கள். சில பசுமையானவை. சில சிவப்பானவை. அணிற் பிள்ளைகள் வாதாம் பழத்தைக் கோதிக் கோதிக் கீழே எறிகின் றன. அவற்றைப் பொறுக்கி வந்து குழந்தைகள் உடைத்து பருப்பெடுத்துச் சுவைத்து சாப் பிடுகிறார்கள்.

அடுத்த வீட்டு லட்சுமிப் பாட்டி தினம் பகல் நேரத்தில் வந்து விடுவாள் மர நிழலுக்கு. பழுத்த இலைகளைப் பொறுக்கி வாரி மடி நிறையக் கட்டிக் கொண்டு இலை தைக்கப் போய் விடுவாள் அந்தக் கிழவி.

நான்? நான் மட்டும் அந்த மரத்தைப் பார்க்கும்போது ஏக்கப் பெருமூச்சு ஒன்று விடு கிறேன். இதயம் புண்ணாகி வலிப் பது போல் இருக்கிறது. ஒரு கணம் உலகமே வெறிச்சோடி கிடப்பதுபோலத் தோன்றுகிறது. மரத்தை ஆசையுடன் தடவு கிறேன். ஆம்...மரத்தின் அடிப் பாகம் காடுமுரடாகத் தானே இருக்கும்?

'ஆமாம், அப்படித்தான் இருக் கும். இது தெரியாதா உனக்கு?' என்கிறீர்களா?

நான் இலேசாகச் சிரிக்கிறேன். 'இல்லை...இல்லை... பட்டுப் போல

மெத்து மெத்தென்று இலவம் பஞ்சைத் தடவுவது போல் இருக்கிறதே.' அது மட்டுமா? பளபள வென்று மின்னும் கருமணிக் கண்கள். வெண்மையாகத் தொங்கும் காதுகள். கறுத்து விரிந்த மூக்கு. குட்டையான வால். ஒரே வெள்ளை. பஞ்சு மூட்டைப்போல் வால் எது முகம் எது என்று தெரியாத தோற்றம். இவ்வளவும் அந்த தடித்த மரத்தினடியிலே எனக்குப் புலப்படுகிறது.

பார்க்கிறேன் அவளை. பார்த்துக்கொண்டே இருக்கிறேன். பரிவுடன் அவள் என் அருகில் வருகிறாள். நீண்ட நாக்கினால் பாதங்களை, கைகளை நக்கித் தடவுகிறாள். 'ரோஸி! ரோஸி!' என் கண்கள் குளமாகின்றன. கண்ணீரை வழித்துச் சுண்டி எறிகிறேன். வானத்தை ஏறிட்டு நோக்கினால் அங்குப் பரிதிக் கோளம் திருமாலின் சக்கரம் போல் சுழல்வது தெரிகிறது. 'பிறந்தவன் சாவதுறுதியெனில், செத்தவன் பிறப்பதுறுதியெனில்' என்கிற கண்ணனின் பேருரை நினைவில் எழுகிறது.

ரோஸி – எங்கள் நாய்–இறந்துவிட்டது. ஆத்மா அழிவற்றது என்கிறான் கண்ணன். அதைத் தாங்கி நிற்கும் உடல்தான் அழியும் தன்மையது. உண்மைதான். இருந்தாலும், அந்த வெள்ளை உடலுக்குள்ளே இருந்த அந்த உயிருக்குத்தான் எங்களிடம் எத்தனை ஆசை, அன்பு எல்லாம்?

சித்திரை மாதத்திலே ஒரு நாள். அன்று ஞாயிற்றுக்கிழமை. வெயில் வெளியே தலைகாட்ட முடியவில்லை. மாலை ஐந்து மணிக்கு மேலே குழந்தைகளுடன் நாங்கள் கடற்கரைக்குப் போவதாகத் திட்டமிட்டிருந்தோம். குழந்தைகள் உற்சாகமாக உடுத்திக் கொண்டு கிளம்ப ஆரம்பித்தார்கள். ஆனால் எங்கள் பெரிய மகன் ரவி மட்டும் புறப்படவில்லை.

'ஏன் நீ வரவில்லையா?' என்று அவன் தகப்பனார் கேட்டார்.

'இல்லை அப்பா...'

'ஏண்டா?'

அவன் சிரித்து மழுப்பினான். அவருக்குப் புரிந்துவிட்டது.

'தெரியுமடா உன் திருட்டுத்தனம். நாலு நாட்களாக நாய்க்குட்டி ஒன்று வாங்கி வரத் திட்டம் போடுகிறாய். அதெல்லாம் ஒன்றும் இங்கே வேண்டாம்...' உறுதியும், கண்டிப்பும் நிறைந்த குரலில் கூறினார் அவர்.

'ஏன் வாங்கி வந்தால் என்னவாம்?' தகப்பனாரின் காதுகளில் விழாமல், எனக்கு மட்டும் கேட்கும்படியாக முணுமுணுத்தான் அவன்.

'ஆமாம்... சொல்லிவிட்டேன். நாய் கீய் என்று ஆரம்பித்தாயோ நான் பொல்லாதவனாகி விடுவேன்...'

'கிடக்கிறது விடுங்கள். ஏதோ குழந்தைக் கேட்கிறான்.' என் சிபார்சு இது.

'குழந்தையாவது? இதெல்லாம் வேண்டாத பந்தம்.'

'வேண்டிய பந்தம் எது சுவாமிகளே?' என்று நான் சிரித்தவாறு கேட்டேன்.

'நீ, குழந்தைகள், இந்த வீடு, உற்றம், சுற்றம் எல்லாம்...' நறுக்கென்று கூறிவிட்டுச் சட்டையை எடுத்து உதறிப் போட்டுக்கொண்டார்.

உண்மைதான். ஒரு வருஷத்துக்கு முன்பு, அவரே ஒரு நாள் நாய்க்குட்டி ஒன்றை அலுவலகத்திலிருந்து திரும்பி வரும்போது கொண்டு வந்தார்; அன்புடன் சீராட்டி வளர்த்தார். திடீ

ரென்று ஒரு நாள் அது ஒன்றும் சாப்பிடாமல் படுத்துக் கிடந்தது. அருகில் சென்று அழைத்தால் அவரைப் பரிதாபத்துடன் பார்த்தது. வாலை ஆட்டவில்லை. கண்கள் கலங்க உள்ளே வந்துவிட்டார்.

'சே...சே...இதையெல்லாம் எதற்கு வாங்கி வருகிறீர்கள்? வேண்டாத பந்தம்...' என்று நானும் வருந்தினேன். அப்புறம் அது 'பொக்'கென்று கண்ணை மூடிவிட்டது. அதன் பிறகு அவர் முகத்தில் முறுவலைக் காண நான் வெகுவாக ஏங்கினேன். ஆழமாகத் தைத்த முள்ளைக் களைய, ஏற்படும் துன்பத்தைப் போல் அந்த பந்தம் அவர் இதயத்தில் வெகு நாட்கள் வரையில் ஆழப்பதிந்து போயிருந்தது. ஆனால், ரவிக்கு இதெல்லாம் ஒன்றும் புரியவில்லை. புரிந்து கொள்கிற வயதுமில்லை. அடுத்த சில நாட்களுக்கெல்லாம் அவன் வேறு நாய்க்குட்டி வாங்கி வந்து வளர்க்க ஆசைப்பட்டான்.

பாலும், சோறும், ரொட்டியும் கொடுத்துக் காப்பாற்றிய அந்த நாயை மறக்க நான் பட்டபாடு கொஞ்ச நஞ்சமல்ல. ஆகவே, அவன் வேண்டுகோளை நான் பலமாக நிராகரித்துவிட்டேன்.

'அதெல்லாம் ஒன்றும் வேண்டாமப்பா. பேசாமல் இரு' என்று நான் சொன்னதை அவன் பொருட்படுத்தியதாகத் தோன்றவில்லை.

என் மன அமைதிக்காக நான் அழகிய வெண்புறு ஒன்றை வளர்க்கலானேன். அதனிடம் கொஞ்சிப் பேசுவதில் எனக்கு அலாதியான மகிழ்ச்சி ஏற்பட்டது. என் வீட்டின் தோட்டத்தில் உள்ள மரக்கிளையில் அது அமர்ந்திருந்தால், மரத்தில் சாய்ந்தபடி அதன் வெண்மை நிறத்தையும் கூர்மையான மூக்கையும் அதைத் தாங்கியுள்ள கிளையின் பசுமையான இலைகளையும் காணும்போதெல்லாம் என் உள்ளம் களிக்கும். என்னுடைய இந்தப் பொழுது

'எனக்கு இதில் சம்பந்தமே கிடையாது சார்...எல்லாம் அடுத்த 'டிபார்ட்மெண்டி'ல் கேட்க வேண்டும்' என்று சமையலறையைக் காட்டினார்.

'நாயிலேகூட என்ன ஜாதியைப்பற்றி ஆராய்ச்சி வேண்டி இருக்கிறது? அன்பைப் புரிந்துகொண்டு நன்றியோடு இருக்கிற நல்ல ஜாதி. அவ்வளவுதான்'. அடுத்த 'டிபார்ட்மெண்ட்' பதில் அளித்தது.

ரோஸி அவர் வாங்கி வந்திருந்த பிஸ்கோத்துகளைச் சுவைத்துச் சாப்பிட்டுவிட்டு வாலை ஆட்டித் தன் நன்றியைத் தெரிவித்தது.

நண்பரும் ரோஸி குட்டிகள் ஈன்றால் ஒன்று தமக்குத் தரும்படிக் கேட்டுக்கொண்டு விடை பெற்றார். நண்பர் புறப்பட்டுச் சென்றுவிட்டாலும் அவர் எழுப்பிய அந்தக் கேள்வி என் சிந்தனையைத் தூண்டிவிட்டது.

ரோஸி வந்து இப்பொழுது நான்கைந்து மாதங்கள் சென்றுவிட்டன. 'ரோஸி உயர்ந்த ஜாதி நாய். அது மற்ற சாதாரண ஜாதி நாய்களுடன் நட்பு கொள்ளுமா?' என்கிற என் சிந்தனைக்கு ஒரு நாள் விடை கிடைத்தது. எங்கள் வீட்டு மாட்டுக் கொட்டிலில் கறுப்பு நாய் ஒன்று வந்து ஒண்



போக்கு அவருக்கோ பிள்ளை களுக்கோ பிடிப்பதில்லை. ரோஸி க்குப் பதிலாகப் புதியதொரு ரோஸியை வளர்க்கவேண்டும் என்று அவர்கள் விரும்பினார்கள்.

ஒரு நாள் நாங்களெல்லாம் கடற்கரைக்குப் போகத் திட்ட மிட்டிருந்தோம். அன்று ரவி எங்களுடன் வரவில்லை. படிக்க வேண்டும் என்று கூறி வீட்டி லேயே தங்கிவிட்டான். அவன் அப்பாவுக்கு மட்டும் அவன் பேரில் சந்தேகம்.

'இந்தப் பயல் ஏதோ செய்யப் போகிறான். அதுதான் வரவில்லை' என்று வழிநெடுகச் சொல்லிக் கொண்டே வந்தார்.

இரவு நாங்கள் திரும்பியவுடன் கூடத்து மூலையில் பஞ்சு மூட் டைப்போல் ஒன்று தெரிந்ததைக் கண்டதும் அயர்ந்துதான் போனோம். வெள்ளைவெளேர் என்று ரோமம் அடர்ந்து இரண்டு கருமணிக் கண்கள்மட்டும் பிர காசிக்க குச்சு நாய் ஒன்று வாலை ஆட்டிக்கொண்டிருந்தது.

சின்னஞ் சிறிய குட்டி. பிறந்து ஒரு மாதம் இருக்கலாம். ஆசையுடன் அதை எடுத்து நான் மடிமீது வைத்துக்கொண்ட வுடன் அவர் என்னை விழித்துப் பார்த்தார். 'உன் வேலைதானா இது? நீயும் இதற்கு உடந்தை தானா?' என்றார் அவர்.

'ஆமாம்' என்றேன்.

நாள் பறந்தது.

நாய் வளர்ந்தது.

'நாயா வளர்க்கிறாய்?' எனறு கேட்டுக்கொண்டே லக்ஷ்மிப் பாட்டி ஒரு தினம் வீட்டுக்கு வந்தாள்.

'ளொள்...ளொள்...' என்று சிறு குரல் எழுப்பி ரோஸி என்னை எச்சரித்தது. அந்த வீட்டுக்கு வந்த பத்து தினங்களுக்குப் பிறகு முதன் முதலாக ஒரு புது நபரைப் பார்த்து அதிசயிக்கிற குரலாகவும் இருக்கலாம்.

'ஐயே! இதன் மூஞ்சியும், வாலும்! ஏண்டியம்மா! வால் எது மூஞ்சி எதுன்னு தெரியலையே...'

ரோஸி சிலிர்த்துக்கொண்டு பாட்டிமேல் உராய்ந்துகொள்ளப் போயிற்று.

'ஹூ...ஹூ...சிங்கக் குட்டி மாதி ரின்னா இருக்கு? எங்கே பிடித்தே இதை...ஆனா...இதெல்லாம் என் னத்துக்கு?' என்று பாட்டி கேட்டு என்னை ஊடுருவிப் பார்த்தாள்.

ரோஸி என்னை நிமிர்ந்து பார்த்தது. தனக்கு வீட்டில்மட் டும் எதிர்ப்பு இல்லை. வெளியி லிருந்தும் எதிர்ப்பு உண்டு என் பதை அது புரிந்துகொண்டது. காதுகளை நிமிர்த்தி மிடுக்குடன் பார்த்துவிட்டு ஒதுங்கிப் போய்ப் படுத்துக்கொண்டது. இப் பொழுது வாதாம் இலைகளை ஒன்றுவிடாமல் பொறுக்கி மடி யில் கட்டிக்கொள்கிறாளே அந்தப் பாட்டியை அன்று அது லட்சி யமே செய்யவில்லை. பிறகு எப் பொழுது பாட்டி வந்தாலும், போனாலும் அது கவனிப்பதே இல்லை.

எங்கள் வீட்டுக்கு உற்றார் உற வினர் யாராவது வந்து போய்க் கொண்டேயிருப்பார்கள். வாசல் கதவு திறக்கப்படுமுன்பே ரோஸி தன் அழகிய காதுகளை நிமிர்த் திக்கொண்டு எழுந்து நிற்கும். அடுத்த விநாடி பெருங் குரலில் ஓசை எழுப்பும். நான் கூடத் துக்கு வந்துவிட்டால் வாலைக் குழைத்துக்கொண்டு மேஜையின் கீழ்ச் சென்று படுத்துவிடும். ஒரு சமயம் பம்பாயிலிருந்து நண்பர் ஒருவர் வந்தார்.

'நாயா வளர்க்கிறீர்கள்? என்ன ஜாதி சார்?'

டிக்கொண்டிருந்தது. சுத்தக் கறுப்பு. வயிறு ஒட்டி, கண்கள் இடுங்கி, பார்க்க வேதனையாகத் தான் இருந்தது.

குழந்தைகள் 'சூ…சூ…' என்று விரட்டப் போனார்கள். ரோஸி யும் வள் வள்ளென்று குரைத்துக் கொண்டு கொட்டிலுக்குள் ஓடியது.

கறுப்பு நாய் உடம்பைக் கூனிக் குறுகிக்கொண்டு எழுந்து நின்றது. பணிவாக, குழைவாக அது ரோஸி முன்பு நின்று, 'அழகியே! நீ நிறத்திலும், தோற்றத் திலும் என்னைவிட உயர்வாக இருக்கலாம். ஆனால், நானும் உன் இனம்தான் என்பதை மறந்து விட்டாயா? கடவுளின் படைப் பிலே இப்படியும் அப்படியுமாகத் தான் உயிர்கள் படைக்கப்படு கின்றன. அவன் செயலுக்கு நாம் என்ன செய்ய முடியும்?' என்று கேட்டது வள் வள் மொழியிலே.

ரோஸி உடனே குரைப்பதை நிறுத்திவிட்டது. பரிவுடன் அதை நக்கிக் கொடுத்தது. வாலை ஆட்டியது. என்னைத் திரும்பிப் பார்த்து, 'அம்மா! கறுப்பனுக் கும் கொஞ்சம் சோறு போடம்மா' என்றது.

தினம் கறுப்பன் வருவான். ரோஸி சாப்பிட்ட பிறகு சாப் பிடுவான். அவளுடன் விளையாடு வான்.

நாய் இனத்திலே ஜாதிப் பிரச்னைக்கு இடமில்லை என்கிற விஷயம் எனக்குத் தெளிவாகி விட்டது.

வீட்டிலே நாங்கள் அனைவரும் காட்டும் பரிவைவிட அதற்கு வெளியிடத்திலிருந்தும் பரிவும், அன்பும் கிடைத்தன. பத்திரிகை களுக்குக் கதைகள் எழுதுகிற அம்மாள் ஒருவர் எனக்குத் தோழியாக வந்து வாய்த்தார்.

அவருக்குக் கதைக்குக் கருத்து ஒன்றும் தோன்றாமற் போனால் ரோஸியைத் தன் மடிமீது வைத் துக்கொண்டு 'ரோஸி! எனக்கு ஒரு நல்ல கதைச் சொல்லேன்' என்று கேட்பார்.

'உர்…உர்…' என்று அது உறு மிக்கொண்டே அவர்மீது உரா சிக்கொள்ளும்.

'இதோ! ஒரு அற்புதமான கதை எனக்குத் தோன்றிவிட் டது' என்று சொல்லிக்கொண்டே அந்த எழுத்தாளி எழுந்து சென்றுவிடுவார்.

அப்புறம் அந்த அற்புதமான கதை பிரசுரம் ஆனதும் கிடை த்த சன்மானத்தில் எங்கள் ரோஸி வயிறு புடைக்க ரொட்டி யும், பிஸ்கோத்துகளும் சாப் பிடும்.

'இந்தாருங்கள் அம்மா. ரோஸி மீது உங்கள் அன்பைக் கொஞ் சம் குறைத்துக்கொள்ளுங்கள். அதற்கு உடம்பு சரியில்லை…' என்று நான் கூறவும், அந்தத் தோழி அதற்காக என்மீது வருத் தப்பட்டுக்கொண்டதும் ரோஸி க்கு நன்றாகத் தெரிந்தது.

எப்பொழுது அது தின்பண் டங்களைச் சாப்பிட்டாலும் நான் போதும் என்றவுடன் நிறுத்தி விடும். ஆகவே, எங்கள் நட்பும் வளர்பிறைபோல் வளர்ந்துதான் வந்தது.

சமீபத்திலே பெரு மழை பெய்ததல்லவா? அப்படி அந்த வருஷமும் மழை பெய்தது. எங் கும் ஒரே வெள்ளக்காடு. வான மெங்கும் கனத்த முகிற் போர்வை. ஊழிக்காலம்போல் உலகம் இருண்டு கிடந்தது. வீட் டிலே எங்கு பார்த்தாலும் ஈர மும், நசநசப்பும். சுவர்களிலிரு ந்து நீர் கசிந்துகொண்டேயிருந் தது. இரவெல்லாம் கொட்டு கொட்டு என்று மழைக் கொட்டி-

யது. காலை மலர்ந்ததும் கீழ் வானத்தில் வெள்ளிக் குழம்பு போல் கதிரவன் தோன்றினான்.

'ஆ...வெயில்...வெயில்...நாங்கள் பள்ளிக்கூடம் போகிறோம்' என்று என் கடைசிப் பிள்ளை புத்தகத்துடன் கிளம்பிவிட்டான். ஆனால், பகல் பதினொரு மணிக்குள் அடிவானத்திலிருந்து பூதம்போல் கறுத்த மேகங்கள் திரண்டு வந்து வானத்தை முற்றுகையிட்டன. இருட்டு. எங்கும் ஒரே இருட்டு. பள்ளிக்கூடம் விடுவதற்கும் பலத்த மழை பெய்வதற்கும் சரியாக இருந்தது.

அன்று என் கணவர் அலுவலகம் செல்லவில்லை. 'இந்த வானத்தை நம்பிக் குழந்தையை அனுப்பினாயே' என்று என்னைக் கடிந்துகொண்டார். கவலையுடன் நான் குடையைப் பிரித்தவாறு பள்ளிக்குக் கிளம்பினேன். அவ்வளவுதான். ரோஸி தாவிக் குதித்து என்னுடன் மழையில் பாய்ந்தது.

'ஏய்! ரோஸி!' என்று அழைத்தார் அவர்.

'வருகிறேன் இருங்கள் அப்பா. அம்மாவை மழையில் தனியாக விரட்டுகிறீர்கள். நான் துணைக்குப் போகிறேன்' என்றது அது.

'வள்...வள்...உர்...உர்...' இந்த நான்கு ஒலிகளில் அந்த விளக்கம் பதுங்கி இருந்தது என்று நான் புரிந்துகொண்டேன்.

கொட்டுகிற மழையில், வீசுகிற குளிர் காற்றில் எனக்கு முன்னே பாய்ந்து சென்றது ரோஸி.

'அந்த அம்மாவுக்குத் துணை போவது பார்த்தியா?' என்று கிராம மக்கள் ஒன்றிரண்டு பேர் மூக்கில் விரலை வைத்தார்கள். இதில் ஒரு விசேஷம். நாங்கள் இம்மாதிரிப் பயிற்சி ஒன்றும் அதற்கு அளிக்கவில்லை. ஒரு குழந்தையை வளர்ப்பதுபோல் வளர்த்து வந்தோம். மழையிலே நாங்களும் அநேகமாக நனைந்து விட்டோம். ரோஸி சொட்டச் சொட்ட நனைந்து வந்தது.

'மழையிலே இப்படி நனைந்து விட்டதே. உடம்புக்கு ஆகுமா?' என்று கேட்டு அவர் ரோஸியின் உடம்பைத் துடைத்துவிட்டார்.

ஆஹா! அப்பொழுது அதன் முகத்தில்தான் எத்தனை ஆனந்தம்? எத்தனை கர்வம்?...அவர் முகம், புறங்கை, முகவாய், பாதங்கள்—பூராவும் நக்கி வாலை ஆட்டித் தன் பரவசத்தை வெளிப்படுத்தியது. குறுக்கும், நெடுக்குமாக ஓடியது.

'பார்த்தீர்களா? அப்பாவுக்கு என் மீது எத்தனை ஆசை என்று? அவருடைய அன்பு ஆழமானது தான் அம்மா. ஒரு பிஸ்கோத் திலோ, ரொட்டித் துண்டிலோ அடங்கிவிடுகிற அன்பு இல்லை...' என்று கூறுவதுபோல என்னைப் பெருமிதத்துடன் பார்த்தது. அன்று அதற்கு அளவுகடந்த மகிழ்ச்சி. அப்பா அவளை அரவணைத்துக்கொண்டுத் தன் அன்பைப் பொழிந்துவிட்டார் அல்லவா?

வெளியே மழை சற்று ஓய்ந்தது. பிறகு திடீரென்று பிடித்துக்கொண்டது. பெரு மழை. இரவு பூராவும் கொட்டித் தீர்த்தது. எங்கள் ஊர் மையத்தில் இருந்த குளம் ஒன்று நிரம்பி வழிந்து தெருக்களிலே ஆறுபோல் பாய்ந்து ஓடிக்கொண்டிருந்தது.



மணமகள்: மெஸர்ஸ் சேஷசாயி பிரதர்ஸின் புதுடில்லி பிரதிநிதியான ஸ்ரீ ஆர். சக்ரவர்த்தி அவர்களின் புதல்வி சௌ. லக்ஷ்மி பி. ஏ. (ஹானர்ஸ்)
மணமகன்: கிருஷ்ணகிரி, அட்வகேட் ஸ்ரீ பி. டி. வெங்கடாச்சாரியாரின் புத்திரன் சிர. பி. டி. கஸ்தூரி பி. ஈ. இவர்களது திருமணம் சென்னையில், ஜூலை 9ல் நடைபெற்றது.

குழந்தைகள் சிரித்தார்கள். தண்ணீரில் அலைந்தார்கள். பெரியவர்கள்கூடக் குடைகளைப் பிரித்துத் தூக்கிப் பிடித்துக் கொண்டு முழங்கால் நீரில் இறங்கி இப்படியும், அப்படியும் நடந்தார்கள்.

ரவியும் தண்ணீரில் இறங்கினான். சற்று நடந்தான். நீரின் வேகம் அதிகமாக இருந்ததால் கால் இடறி விழுந்துவிட்டான். தெருவிலே நின்றிருந்த ரோஸி நீரில் பாய்ந்தது. ரவியின் சட்டையைப் பற்றி இழுக்க ஆரம்பித்தது. அதற்குள்ளாகத் தெருவிலிருந்தவர்களே அவனைத் தூக்கிவிட்டார்கள்.

அதிர்ச்சியாலும், பயத்தாலும் வெளிறிய முகத்துடன் அவன் உள்ளே வந்து படுத்துக்கொண்டான். ரோஸிக்குத்தான் எத்தனை கவலை?

'அம்மா! ரவிக்கு என்ன உடம்பம்மா?' உண்மையில் அதன் கவலை நிரம்பிய பார்வைக்கு அதுதான் அர்த்தமாக இருக்க வேண்டும்.

வீட்டிலே நடக்கும் ஒவ்வொரு செயலிலும் அது பங்கு பெற்று எங்கள் உற்ற உறவினரைப்போல் பழகிற்று. ஊரிலே நாலு பேர்கள் பலவிதமாகப் பேசினார்கள்.

'இருக்கிற பிடுங்கல்கள் போதாதென்று இவளுக்கு இது வேறே' என்றார்கள்.

'ஓ! அவர்கள் வீடா? அங்கே போனால் ஒரு 'ஜூ'வே பார்க்கலாமே. இன்னும் கொஞ்ச நாள் போனால் அவள் கழுதைகூட வளர்ப்பாள்' என்றார்கள்.

நாய் வளர்க்கலாம். ஆனால், பணக்காரர்கள்தாம் வளர்க்க வேண்டும். அவை உயர்ந்த ரக நாய்கள். இப்படி நடுத்தர வகுப்பினர் வளர்ப்பது அவர்களுக்குப் பிடிக்கவில்லை.



நாங்கள் ரோஸியை நாகரிகத்துக்காக வளர்க்கவில்லை. ஏதோ எங்களிடம் வந்து சேர்ந்தது. பந்தம், பாசம், விட்ட குறை என்று எப்படி வேண்டுமானாலும் வைத்துக்கொள்ளலாம்.

ஊராரின் அபிப்பிராயங்களைத் தாண்டி நின்ற எங்கள் நட்பு வளர்ந்துதான் வந்தது. ரோஸி அழகுடன் வளர்ந்து வந்தாள்.

கொல்லைப் பக்கத்தில் அவனுடன் நண்பனாக இருந்த கறுப்பனும் இப்பொழுது அழகாகத்தான் இருந்தான். ஒரு வேளை பழக்கம் காரணமாக இருக்கலாம். மினு மினு என்று எண்ணெய் தேய்த்து விட்ட மாதிரி ஒரு பளபளப்பு அதன் உடம்பில் தெரிந்தது.

'இனிமேல் ரோஸியைக் கவனமாகப் பார்த்துக் கொள்ள வேண்டும்' என்றார் அவர்.

'ஏன்?'

'பெரிசாக வளர்ந்துவிட்டதே. கண்டபடி ஊர் சுற்றவிடக் கூடாது. நல்ல ஜாதி நாயுடன் பழக்கம் ஏற்படுத்திக்கொடுத்தால் நல்ல குட்டிகள் போடும்...'

'ஓ!' என்றேன் நான். ரோஸியின் உள்ளத்திலே என்ன இருக்கிறது என்று எனக்கல்லவா தெரியும்? அது ஒரு நாள் கறுப்பனைக் காணவிடில் படும் ஏக்கம்?

'அந்தக் கறுப்பு நாய் வந்தால் அடித்து விரட்டு...'

'ஆகட்டும்...'

'சொல்லுவாயே தவிர, செய்ய மாட்டாய். உனக்கு எதைப் பார்த்தாலும் பரிவும், ஆசையும் தான்...'

'அப்படித்தான் இருக்கட்டுமே...'

'எப்படியோ தொலே...'

அன்று நடுப் பகலில் கொல்லே யில் முருங்கை மரத்தினடியில் கறுப்பு நாயும், ரோஸியும் விளே யாடிக்கொண்டிருந்தன.

'அழகுப் பெண்ணே! என்னேக் கல்யாணம் செய்துகொள்கிரு யாடி?' கறுப்பன் கேட்டான்.

'ஓ! அதற்கென்ன? ஆனால், ஒரு நிபந்தனே. என்னேத் தவிர, நீ யாரையும் கண்ணெடுத்துப் பார்க் கக் கூடாது...'

'பார்ப்பேனடி தங்கமே!' என் முன் கறுப்பன் பரவசத்துடன்.

அப்புறம்? எனக்குக் குடும்ப வேலைகள் காத்துக் கிடந்தன.

ரோஸி உள்ளே வந்து பரி வுடன் என் காலடியில் படுத்துக் கொண்டது.

'என்னடி கண்ணு!'

அதற்குத்தான் எத்தனே வெட் கம்? 'போம்மா, போம்மா என்னே ஒன்றும் கேட்காதே...?'

நாட்கள் உருண்டன. ரோஸி யின் உடம்பில் மாறுதல். தாய்மை யின் கனத்திலே தளதளவென்று பருத்துவிட்டாள் அவள். ஆனால், அவள் முகத்திலே ஒரே சோகம். அன்றைக்கப்புறம் கறுப்பனேக் காணவில்லே.

'கறுப்பு நாயைக் காணேமே! அடித்து விரட்டிவிட்டாயா?'

'சே...சே...நான் ஒன்றும் அடிக்கவில்லே. அதை ஒரு மாச மாகக் காணவில்லே.'

ரோஸி தளர் நடையுடன் தினம் மாட்டுக் கொட்டிலேயும், முருங்கை மரத்தடியையும் சுற் றிச் சுற்றி வருவாள். கருமணிக் கண்களில் கண்ணீர் சுரக்க என்னே ஏறிட்டுப் பார்ப்பாள்.

'உன் கறுப்பனேக் காணேம் என்று ஏன் ஏங்குகிருய்? போனல் போகிருன் விடு. நன்றி கெட்ட ஜன்மம்.' நான் வாய்விட்டுக் கூறி னேன் அதற்குப் புரியுமென்று நினேத்து.

'ஏன் இப்படி இளேத்துவிட்டது நாய்?' என்று என்னேக் கேட்காத வர்கள் கிடையாது.

நாங்கள் பேசிக்கொண்டோம்:—

'ஒரு வேளே அந்தக் கறுப்பு நாயை யாராவது அடித்துப் போட்டிருப்பார்களோ?' ஏனெ னில், தெருவில் தன் பாட்டுக்கு ஓடும் நாய்களே அடித்துக் கொல் வது எங்கள் ஊரின் பிரசித்த மான 'ஸ்போர்ட்ஸ்'.

'இருக்கலாம். அப்படியானல், நம்ப பையன்கள்தான் லீவு நாட் களில் ஊரைச் சுற்றுகிருன்களே.

'நியூஸ்' கொண்டு வந்திருப்பான் கள்...'

'நாய் வண்டி வந்து ஏற்றிக் கொண்டு போயிருக்கும்...'

'பாவம்...மனிதப் பிறவிகளே ஒருவரைப்பற்றி ஒருவர் கவலைப் படாத இந்த யந்திர யுகத்திலே நாயின் உணர்ச்சிகளை யார் மதிக் கப் போகிறார்கள்? நம் சட்ட திட்டங்கள், கட்டுப்பாடுகள் எல் லாம் அவைகளுக்கு எப்படித் தெரியும்?' என்றார் என் எழுத் தாளர் தோழி.

அன்று மாலை ரவி வெளியில் போய் வந்தவன் ஒரு நூதனச் செய்தி கொண்டு வந்தான்.

'ஏரிக்கரை பக் கம் ரோஸியை அழைத்துப் போனேன் அம்மா. அங்கே கறுப்பனைப் பார்த்து விட் டது. இது என்ன குரைத்துக் கூப் பிட்டாலும் அந் தக் கறுப்பன் இன்னொரு வெள்ளை நாயு டன் விளையாடிக் கொண்டே ஓடி விட்டது...'



நான் விக்கித்து நின்றேன். ரோஸி திண்ணைக்குச் சென்று சோர்ந்து படுத்தது. இரவு ஏதோ சாப்பிட்டது. படுக்கப் போகு முன் அதற்குக் கோணிப் பை ஒன்றை உதறிப் போட்டேன். வந்து படுத்துக்கொண்டது. வாலை ஆட்டியது. கைகளை நக்கியது.

அந்த முகத்திலே எல்லையில் லாத சோகமும், துயரமும் கவிந் திருந்தன.

பெருமூச்சுடன் படுக்கப் போய் விட்டேன்.

பொழுது விடிந்தது. தெருத் திண்ணையிலே சுருட்டி மடக்கிப் படுத்துக் கிடந்தது ரோஸி.

'அம்மா! அம்மா! நாய் அசைய வில்லை...'

'ரோஸி!' என்று அழைத்தேன். எத்தனைத் தூக்கத்திலும் என் குரல் கேட்டு எழும் அவள் மௌனத் தூக்கத்தில் ஆழ்ந்து கிடந்தாள்.

எப்பொழுது? எப்படி?

எங்களுக்கு விடை கிடைக்க வில்லை.

பரிவுடன் அணைத்துப் பாலூற்றி வளர்த்த கையினால் தடவினேன் அவளை.

ஃ ஃ ஃ

'பைத்தியம்! என்ன மரத்தைத் தடவிக் கொண்டு நிற் கிறாய்?' கணவர் அதட்டினார்.

மரத்தையா தடவுகிறேன்? அல்ல; அல்ல. விரிந்து படர்ந்து நிற்கும் அந்த பசுமரத்தின் அடியிலே புதைந்துவிட்ட; என்னுள்ளே உறைந்துவிட்ட அன்பை, நினைவையல்லவா தட வித் தட்டி எழுப்பி அமைதி காண்கிறேன்?

வாதாம் இலைகள் அசைகின் றன. கிளிகள் கொஞ்சுகின்றன. வழக்கம்போல லக்ஷ்மிப் பாட்டி இலைகள் பொறுக்க வருகிறாள்.

★

# நீறு விலகிறது

தலைப்பை இழுத்துப் போர்த்தியவாறு வாசலை எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தாள் செல்லம்மாள். சற்றைக்கெல்லாம் தெருவில் டாக்ஸி ஒன்று வந்து நின்றது. புது மணத்தம்பதி இறங்கியதும், அவர்களை கிழக்கு முகமாக நிற்கச் சொல்லி ஆரத்தியைச் சுற்றிவிட்டு நிமிர்ந்து அந்தப் பெண்ணைப் பார்த்தாள் அவள்.

நல்ல சிவப்பான நிறம் அந்தப் பெண்ணுக்கு. அகன்ற நெற்றியில் சிறிய குங்குமப்பொட்டு காணப்பட்டது. மூக்கில் ஆபரணம் ஒன்றும் இல்லை. காதுகளில் மட்டும் தோடுகள். கழுத்தில் முத்து அட்டிகை. ஆனால் கழுத்திலே செல்லம்மாள் எதிர்பார்த்த மாங்கல்யச்சரடு எங்கே!

டாக்ஸி சப்தம் கேட்டு வெளியே வந்தார் செல்லம்மாளின் கணவர் கணபதி அய்யர்.

"சுந்தரேசா! உன் மனைவியை அழைத்துக் கொண்டு உள்ளே வா அப்பா. செல்லம்! அந்தப் பெண்ணை உள்ளே கூப்பிடு" என்றார்.

சுந்தரேசனும், அவன் மனைவி வனஜாவும் வீட்டினுள் நுழைந்தார்கள். செல்லம்மாள் சமையற்காரருக்கு ஏதேதோ கூறிவிட்டு வனஜாவை அழைத்துக் கொண்டு அவள் குடியிருக்கப் போகும் 'போர்ஷனைத்' திறந்து காண்பிக்க ஆரம்பித்தாள்.

"சுந்தரேசன் நாகபுரிக்கு வேலையாக வந்ததிலிருந்து எங்கள் வீட்டில் இந்தப் 'போர்ஷனில்' தான் இருக்கிறான். முதலில் என்னிடமே சாப்பிட்டுக் கொண்டிருந்தான். அவன் வேலை ஒரு தினுசானது. வெளியில் போனால் இரவில் அகாலத்தில் வருவான். எனக்குத் தொந்திரவாக இருக்கும் என்று கிளப்பு சாப்பாடு ஏற்பாடு செய்து கொண்டான் 'சீக்கிரம் கல்யாணம் பண்ணிக் கொள் அப்பா' என்று நானும் மாமாவும் அவனைத் தொந்திரவு செய்தோம். கல்யாணம் செய்துகொண்டு வந்து இருக்கிறான். நீங்கள் இரண்டு பேரும் நல்லபடியாக இருக்கவேண்டும். 'உன் மனைவியை அழைத்து வருகிற அன்று எங்கள் வீட்டில்தான் சாப்பாடு' என்று சொல்லி விட்டேன். 'அதற்கென்ன மாமி, அப்படியே செய்யுங்கள்' என்று ஊரிலிருந்து வருகிற தேதியையும் எழுதினான்." என்று பேசியவாறு ஒவ்வொரு அறையையும் காண்பித்துக் கொண்டே செல்லம்மாள் வனஜாவுடன் வீட்டைச் சுற்றி வந்தாள். இடை இடையே வனஜாவின் கழுத்தையும் உற்றுப் பார்த்துக் கொண்டே இருந்தாள். வனஜா அதிகமாகப் பேசவில்லை. தலையை அசைத்துக் கொண்டே அவள் பின்னால் நடந்தாள்.

கொல்லைக் குழாய் அருகில் நின்றிருந்த இருவரையும் கணபதி பார்த்துவிட்டு "செல்லம் இரண்டு நாள் ரயிலில் பிரயாணம் செய்து களைத்து வந்திருப்பாள் அந்தப் பெண். அவளை உட்காரவிடாமல் இழுத்துக் கொண்டு வீட்டைச் சுற்றி வருகிறாயே. நீ உள்ளே வா. அம்மா, அவள் ஒரு கர்னாடகம்!" என்று சிரித்தவாறு கூறினார்.

செல்லம்மாள் தன் கணவரின் வார்த்தைக்குக் கட்டுப்பட்டவளாக வனஜாவை அழைத்துக் கொண்டு உள்ளே சென்றாள்.

"வென்னீர் தயாராக இருக்கிறது வனஜா. குளித்துவிட்டு வா. சாப்பிடலாம். இன்றையப் பொழுதுக்கு நம் வீட்டில் சாப்பிட்டுவிடு. நாளைக்கு வெள்ளிக்கிழமை. உன் போர்ஷனில் அடுப்பு மூட்டலாம்." என்றாள் அவள்.

வனஜா சந்தன சோப்பை எடுத்

ஸரோஜா ராமமூர்த்தி

துக்கொண்டு மற்றொரு கையில் புடவை. ரவிக்கையுடன் வென்னீர் அறைக்குள் நுழைந்தாள்.

சுந்தரேசன் தன் காரியாலயம் வரையில் போய்விட்டு வருவதாகக் கூறிச் சென்றிருந்தான். செல்லம்மாள் பரபரப்புடன் கூடத்துக்கு வந்து தன் கணவன் அருகில் நின்று "ஏன்னா! உங்களை ஒன்று கேட்கணும் இந்தப் பெண் நம்ம பக்கத்துப் பெண் தானே! கல்யாணப் பத்திரிகையில் ஊர் பெயரைச் சரியாகப் பார்த்தீர்களோ?" என்று கேட்டாள்.

"ஏன்? திடீரென்று அந்த சந்தேகம் என்ன வந்தது இப்போது?" என்று கேட்டார் கணபதி.



"கழுத்தில் திருமங்கல்யச் சரட்டையே காணுமே. புதிசாகக் கல்யாணம் ஆகி வந்த பெண் 'பளிச்' சென்று மாங்கல்யச்சரடு இருக்காதோ? முத்து நெக்லேசும் இன்னொன்றும் எனக்கு வேண்டியிருக்கவில்லை!"

"கர்னாடகம்! உன்னைப் போல தேர்வடம் மாதிரி கழுத்திலே கயிற்றைத் தொங்கவிட்டுக்கற காலமில்லே இது! தெரிஞ்சுதா? எல்லாம் இருக்கும். கவனித்துப்பார்" என்றார் கணபதி.

வனஜா வென்னீர் அறைக்குள்ளேயே அரைகுறையாகப் புடவையைச் சுற்றிக் கொண்டு வெளியே வந்தாள். சரியாகப் பித்தான் பொருத்தப்படாமல் ரவிக்கையின் மேல் பக்கம் சற்றே திறந்திருந்தது. உள்ளே ஒரு மெல்லிய சரடு காணப்பட்டது. செல்லம்மாள் ஓரக்கண்ணால் அதை கவனித்தாள் நேரிடையாகப் பார்த்தால் அந்த நாகரீக யுவதி ஏதாவது நினைத்து விடுவாளோ என்று பயம். பரபரவென்று ரவிக்கையின் பித்தான்களைப் பொருத்திவிட்டு சரட்டை உள்ளே தள்ளினாள் வனஜா. பிறகு அரை மணி நேரம் கண்ணாடியின் முன்பு நின்று தன்னை அழகுபடுத்திக் கொள்வதில் முனைந்தாள். பளபளவென்று ஜ்வலிக்கும் தங்க அட்டிகையை எடுத்து உள்ளங்கழுத்தில் அணிந்து நெற்றியில் சிறு பொட்டு ஒன்றை வைத்துக் கொண்டு சமையலறைக்குள் வந்தாள்.

எந்த மாங்கல்யத்தினால் ஒரு பெண்ணின் வாழ்வு மலர்ச்சியும் பெருமையும் அடைகிறதோ அந்த மாங்கல்யத்தை ரவிக்கைக்குள் மறைத்துக் கொண்டு திரியும் நாகரீகத்தைக் கண்டு செல்லம்மாளின் மனம் துணுக்குற்றது.

வாசல் வராந்தாவில் சாய்வு நாற்காலியில் படுத்திருந்த கணபதியின் அருகில் வந்து நின்ற செல்லம்மாள் "ஏன்னா! இப்பொழுதுதான் எனக்குப் புரிந்தது" என்றாள்.

"புரிந்ததோ இல்லையோ? நிம்மதியாக இனிமேல் தூக்கம் வரும் உனக்கு" என்று கூறி கணபதி சிரித்தார்.

"உங்களுக்கு எப்பொழுதுமே என்னையும், என் பேச்சையும் கேட்டு அலட்சியம் செய்கிற வழக்கம் உண்டு. மாங்கல்யத்தை நாலு பேருக்குத் தெரியாமல் மறைக்கிற நாகரீகம் எனக்குத் தெரிய வேண்டிய அவசியமில்லை." என்று கோபத்துடன் கூறிவிட்டு விருந்தினர்களுக்கு இலை போட விரைந்தாள் செல்லம்மாள்.

கணபதி மறுபடியும் சிரித்தார்.



## 2

வனஜாவும் சுந்தரேசனும் அடுத்த போர்ஷனில் தனிக் குடித்தனம் ஆரம்பித்தார்கள். புதிதாக மணம் புரிந்த தம்பதி உல்லாசமாகத்தான் இருந்தார்கள். ஒரு நாளாவது 'பச்' சென்று மஞ்சள் பூசி பசுமையாக அந்தப் பெண் இருப்பதில்லை. பலர் முன்னிலையில் பல விதிகளின்படி கட்டப்பட்ட அந்த மாங்கல்யம் அவள் ரவிக்கைக்குள் மறைந்து கிடந்தது. வர வர அந்தப் பெண் கழுத்துத் தெரியாத ரவிக்கைகளையே அணிய ஆரம்பித்தாள். விதம் விதமாகக் காலர்கள் வைத்துச் சங்கு போன்ற அவள் கழுத்தை மறைத்துக் கொள்வதில் அவளுக்கு என்ன ஆர்வம்தான் இருந்ததோ! பகவானுக்கு வெளிச்சம். முதன் முதல் அவர்கள் வீட்டுக்கு வந்த அன்று அந்த மாங்கல்யச் சரட்டை அரைகுறையாகப் பார்த்தாளே செல்லம்மாள், அதற்கப்புறம் ஒரு தினமாவது மறுபடியும் அதைப் பார்க்கவில்லை அவள்.

கணபதி மட்டும் இதிலெல்லாம் அக்கரை காட்டவில்லை. படித்த பெண்கள் பல தினுசாக இருப்பார்கள் என்பது அவர் கொள்கை. அதே சமயம் செல்லம்மாளின் பழமைக்கும் அவர் மதிப்புக் கொடுத்திருந்தார். அவள் அந்த மாங்கல்யச் சரட்டுக்கு வைத்திருக்கும் மதிப்புக்கு இணையாக உலகத்தில் எதையுமே அவரால் நினைத்துப் பார்க்க முடியவில்லை. ஒரு வேளை குழந்தை குட்டிகள் இருந்திருந்தால் செல்லம்மாளுக்குக் கணவன் மீது ஏற்பட்டிருந்த அன்பு பகிர்ந்து காணப்பட்டிருக்குமோ என்னமோ, அவளுடைய உலகம் அவர்தான். அவருடைய அன்புச் சின்னமாக மங்களத்தைத்தரும் மகா சக்தியாக அந்த மாங்கல்யச் சரடு அவள் இதயத்தில் இடம் பெற்றிருந்தது. ஆகவே வனஜா மாங்கல்யத்துடன் விளங்கும் மாங்கல்யத்தை எடுத்து ரவிக்கைக்குள் போட்டு மூடி மறைத்துவிட்டு, விதவிதமாக கழுத்தணிகள் பூணுவதைப் பார்த்துச் செல்லம்மாள் வியப்பும் வருத்தமும் அடைந்தாள். கணவரிடம் கூறி ஆற்றிக் கொண்டபோதுதான் கண

பதி 'பைத்தியம்' என்று கூறி அவளுடைய தீவிரமான பக்தியைக் கண்டு அதிசயித்தார்.

### 3

பக்கத்துப் போர்ஷனிலிருந்து சிரிப்பின் ஒலி அலை அலையாகக் காற்றில் மிதந்து வந்தது. கணபதி கையில் இருந்த புத்தகத்தை மூடி வைத்துவிட்டு, செல்லம்! இங்கே வாயேன்...'' என்று மிகவும் மெதுவாக அழைத்தார். செல்லம்மாள் அங்கு வந்ததும் இருவரும் சேர்ந்து அடுத்த போர்ஷனில் எழுந்த சிரிப்பின் ஒலிக்குக் காரணம் கண்டு பிடிக்க முனைந்தனர்.

''வனஜா! இன்றைக்கு என்னடியன் பிரமாதமாக இருக்கிறது? எனக்கு இன்று 'போனஸ்' வரும் என்று உனக்கு எப்படித் தெரியும்? நேற்றுவரை எங்கள் காரியாலயத்தில் யாருக்குமே தெரியாத பரம ரகசியமாக இருந்த விஷயமாச்சே!'' என்றான் சுந்தரேசன்.

''போனஸ் வந்ததா என்ன?'' என்று கேட்டாள் வனஜா.

''ஆமாம்... திடீரென்று மானேஜர் காரியாலயத்தினுள் வந்ததும். அறிவிப்பு பலகையில் செய்தி ஒட்டப்பட்டது. ஒவ்வொருத்தருக்கும் இரண்டு மாதச் சம்பளம் இனமாகக் கிடைக்கிறதென்றால் எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கும்? அப்படியே தேனில் விழுந்த ஈக்களைப் போல தத்தளித்தார்கள்...'' சுந்தரேசன் இவ்விதம் கூறியவாறு நோட்டுக் கற்றைகளை எடுத்து மேஜைமீது வைத்தான்.

''இந்தா! இது உனக்காக! உன் இஷ்டம் போல எது வேண்டுமானாலும் செய்து கொள்...''

செல்லம்மாளும் கணபதியும் ஒருவரை ஒருவர் பார்த்துப் புன்னகை புரிந்து கொண்டார்கள். இளம் தம்பதி இருவரும் இப்படி ஒற்றுமையாக இருப்பதில் அவர்களுக்கு அளவற்ற மகிழ்ச்சி.

சிறிது நேரம் கழித்து வனஜாவும் சுந்தரேசனும் கதவைப் பூட்டிக் கொண்டு கடைத் தெருவுக்குக் கிளம்பினார்கள்.

மேற்கு வானத்தில் கதிரவன் மறையும் காக்ஷி கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது. சந்தனக் குழம்பை வாரி அப்பியது போல் மேற்குவானம் பசுமையாகக் காணப்பட்டது. சந்தனக்குழம்பில் தோய்ந்து எழுந்திருப்பவன் போல் சூரியன் பொன்னிறம் காட்டி மறைந்து கொண்டிருந்தான் செல்லம்மாள் பூஜை அறையில் குத்து விளக்கேற்றி, குங்குமம் இட்டு லலிதா தோத்திரங்களைப் பாடிக் கொண்டிருந்தாள்.

''செல்லம்! தென்னிந்திய சங்கத்தில் இன்று காலட்சேபம் வருகிறாயா போய்விட்டு வரலாம்......'' என்று அழைத்தார் அவர்.

''நீங்கள் மட்டும் போய் வாருங்கள். விடிந்தால் காரடை நோன்பு. வீட்டில் கொள்ளைக் காரியங்கள் கிடக்கின்றன...'' என்று பதிலளித்தாள் செல்லம்மாள்.

கணபதி தனியாகக் கிளம்பினார். அவர் தெருக்கோடியில் செல்லும் போது வனஜாவும் சுந்தரேசனும் எதிரே வந்தார்கள்.

''நகைக் கடைக்குப் போய்விட்டு வருகிறோம் மாமா'' என்று இருவரும் ஏகோபித்த குரலில் கூறினார்கள் அவரிடம்.

''அப்படியா! சந்தோஷம்......'' என்று சிரித்தவாறு சொல்லிக் கொண்டே கணபதி போய்விட்டார்.

மறுநாள் உதயத்தில் செல்லம்மாள் தெருவில் கோலமிட்டு, விளக்கேற்றி பூஜைப் பொருள்களை அம்பிகையின் சன்னதியில் நிரப்பி வைத்துவிட்டு மஞ்சள் கயிற்றில் இரண்டு மல்லிகைப் பூவை வைத்துக் கட்டி பூஜைக்கு தயாராக இருந்தாள். 'பச்' சென்று மஞ்சள் பூசிய முகமும் கழுத்தில் பசுமையுடன்

ஒளிரும் மஞ்சள் கயிறும், மாங்கல்யமும் அந்த சுமங்கலிக்கு என்றுமில்லாத சோபையை அளித்தன. பூஜை அறையை எட்டிப் பார்த்த கணபதி தன் மனைவியின் தோற்றத்தைக் கண்டு சற்றே பயபக்தியுடன் ஒதுங்கி நின்றிருந்தார். செல்லம்மாள் அவரைத் திரும்பிப்பார்த்தாள்.

"வனஜாவை கூப்பிடுங்களேன். அவளும் என்னுடன் சேர்ந்து நோன்பு செய்வதாகச் சொல்லி இருந்தாள். காரடை செய்யத் தெரியாதாம் அந்தப் பெண்ணுக்கு! வரச் சொல்லி இருந்தேனே" என்றாள்.

கணபதி அடுத்த போர்ஷனுக்கு விரைந்தார். காலை நேரத்தில் கதவு பூட்டி இருந்தது. அவர்கள் இல்லை என்கிற செய்தி தெரிந்ததும், "என்னவோ! இந்தக் காலத்துப் பெண்களின் போக்கே எனக்குப் புரியவில்லை" என்று கூறியவாறு தன் பூசையைச் செய்துவிட்டு நோன்புச் சரட்டை எடுத்துக் கழுத்தில் கட்டிக் கொண்டாள். அருகில் நின்றிருந்த கணவரின் பாதங்களில் வணங்கிய போது அவளையுமறியாமல் அவள் கண்களில் கண்ணீர் சுரந்திருந்தது.

## 4

வனஜாவும் சுந்தரேசனும் பெரிதாகச் சிரித்தப்படி காலை ஒன்பது மணிக்கு வீட்டுக்கு வந்தனர். வாசலில் செம்மண் கரையிட்ட முத்துக் கோலங்களைப் பார்த்ததும் வனஜா, "அடாடா!" என்று கத்தினாள்.

"என்ன?" என்று கேட்டான் சுந்தரேசன்.

"இன்றைக்கு மாசி பங்குனி கூடுகிற நோன்பு இல்லையா? மாமி என்னை வரச் சொல்லி இருந்தாரே..." என்றாள்.

"அதனால் என்ன? இப்பொழுது தான் போயேன்..."

அவள் செல்லம்மாளின் வீட்டுக்குள் நுழைந்தாள். அந்த அம்மாள் தன் கணவரின் எதிரில் இருந்த நுனி வாழை இலையில் அடைகளை வைத்து, உருகாத வெண்ணெயை இலை நுனியில் எடுத்து வந்து போட்டாள். வாசற்படி அருகில் வந்து நின்ற வனஜாவைப் பார்த்து, "எங்கே போய் விட்டாய் அம்மா? இன்று நோன்பாச்சே? அதுவும் தாலி நோன்பு இல்லையா இது? பயபக்தியுடன் செய்ய வேண்டிய தாச்சே!" என்று கேட்டவாறு செல்லம்மாள் அவளை ஏறிட்டுப் பார்த்தாள்.

வனஜாவின் கழுத்தில் பளபளவென்று தங்கக்கொடி ஒன்று மின்னிக் கொண்டிருந்தது.

"இதோ பாருங்கள்! நேற்று என் கணவருக்குப் 'போனஸ்' வந்ததோ இல்லையோ? இந்தக் கொடி வாங்கிக் கொண்டேன். இத்தனை மாசமாய்க் கயிற்றில் போட்டுக் கொண்டிருந்த திருமாங்கல்யத்தை இதில் எடுத்து கோர்த்திருக்கிறேன். பத்து நாளைக்கொருதரம் எண்ணெய்ப் பிசுக்கேறி அந்தக் கயிற்றைப் பார்க்கச் சகிக்கவில்லை........" என்று கூறியவாறு வனஜா தன் கழுத்தில் இருந்த தங்கக்கொடியை வெளியே எடுத்துக் காட்டினாள்.

"என்னது?" என்றாள் செல்லம்மாள். அவள் விழிகள் இரண்டும் வியப்பினால் அசையாமல் இருந்தன.

"என்ன மாமி அப்படி விழித்துப் பார்க்கிறீர்கள்?"

"நாளும் கிழமையுமா மஞ்சள் கயிற்றை கழற்றிவிட்டுத் தங்கத்தில் கொடி வாங்கி போட்டுக் கொண்ட பெருமையா இது?"—— செல்லம்மாள் இரைந்து கத்தினாள்.

"இதிலே என்ன தப்பு? திருமாங்கல்யம் தானே முக்கியம்? அந்த சரட்டிலே என்ன இருக்கிறது?......"

"உன்னோடு எனக்குப் பேச வராது. நீ போ அம்மா......"

செல்லம்மாள் தனக்கு ஏதோ நேர்ந்து விட்டது போல் நினைத்து.

கழுத்தில் புரண்டு கொண்டிருந்த மஞ்சள் கயிற்றைக் கண்களில் ஒற்றிக் கொண்டாள்.

## 5

செல்லம்மாளுடைய வீட்டில் இனிமேல் இருப்பது உசிதமில்லை என்று வனஜாவுக்குத் தோன்றியது. 'உன்னோடு பேச வராது' என்று அவள் சொல்லிய பிறகு அங்கு இருப்பானேன்? சுந்தரேசன் அவசரமாக வேறு வீடு தேடினான். நோன்பு கழித்த நான்கு நாளைக்கெல்லாம் வேறு ஜாகை மாற்றிக் கொண்டு கிளம்பி விட்டார்கள்.

''பங்குனி மாதம் அப்பா சித்திரை பிறந்ததும் போயேன்'' என்றுகூட கணபதி கூறிப் பார்த்தார்.

''மஞ்சள் கயிற்றிலேயே நம்பிக்கை இல்லாத எங்களுக்கு மாசங்களில் என்ன நம்பிக்கை வைத்திருக்கிறது?'' என்று 'வெடுக்' கென கூறினாள் வனஜா. புதுக் குடித்தனம் வந்த அன்று மலர்ந்த முகத்துடன் மஞ்சள் நீர் சுற்றி வரவேற்ற செல்லம்மாளிடம் ஒரு வார்த்தைகூட பேசாமல் வனஜா விடு விடு என்று வெளியே நடந்து வண்டியில் ஏறிக் கொண்டாள்.

உள்ளே கண்ணீர் உகுத்துக் கொண்டிருந்த தன் மனைவியைப் பார்த்துக் கணபதி, ''பைத்தியமே! படித்த பெண்களோடு பழகவே உனக்குத் தெரியவில்லையே உன் பாட்டுக்கு உன் மஞ்சள் கயிற்றின் மேல் விசுவாசம் வைத்துக் கொண்டு பேசாமல் கிடப்பது தானே? அவளுக்குப் போதனை செய்யக் கிளம்பி விட்டாய் கிடக்கிறது போ. எழுந்திருந்து வேலையைப் பார்'' என்றார்.

''அப்படி அவளை நான் என்ன சொல்லி விட்டேன்? அந்த மஞ்சள் கயிற்றுக்காகத் தானே சாவித்திரி நோன்பு நூற்று கௌரியை வழிபட்டாள். ஆயிரம் இருந்தாலும் அதற்கு ஈடு ஆகுமா என்று தானே சொன்னேன்? நாளும், கிழமையுமாக மஞ்சள் கயிற்றைக் கழற்றி எறிந்துவிட்டுத் தங்கச் சங்கிலியில் தாலியைக் கோர்த்துக் கொண்டு வந்து நின்றால்?......''

செல்லம் நிஷ்டூரத்துடன் கணவனிடம் பொரிந்து தள்ளினாள்.

''சரி, சரி, போ......''

''அவளுக்கு அதனுடைய மதிப்பும், உயர்வும் தெரியவில்லை. ஏதோ விளையாட்டுச் சாமானாக நினைத்திருக்கிறாள். தெரிந்து கொள்கிற காலம் ஒன்று வரும்......''

செல்லம்மாள் கண்ணீர் வழிந்த கண்களை அழுத்தித் துடைத்துக் கொண்டு உள்ளே போய் விட்டாள்.

★

செல்லம்மாள் கூறியபடி மாங்கல்யத்தின் மகத்துவத்தைத் தெரிந்து கொள்கிற காலம் வனஜாவுக்குச் சட்டென்று வாய்க்கவில்லை. ஆனால் ஆரோக்கியமாக உலவி வந்த கணபதி அடிக்கடி நோயில் படுத்துக் கொண்டார். காலை எழுந்தவுடன் காப்பி சாப்பிடுவது, பத்து மணிக்கு நல்ல சாப்பாடு, மாலை சிற்றுண்டி இரவு சாப்பாடு என்று உடலைப் பாதுகாத்து வந்த அவருக்கு நோய் வந்தது வியப்புத் தான். வயிற்றில் ஓயாத வலியும் எரிச்சலும் ஏற்பட்டது. பரங்கிப் பழம் போல் தள தளவென்று இருந்தவரின் உடலில் வாட்டம் ஏற்பட்டது. ருசியாக சமைத்த உணவெல்லாம் சாப்பிடுவாரின்றி வீணாகிப் போயின. செல்லம்மாள் பதறினாள். பெரிய வைத்தியர்களை அழைத்து வைத்தியம் செய்தாள். நாளுக்கு நாள் வியாதி அதிகரித்தது. கணபதி வேலையிலிருந்து ஓய்வு பெற்ற போது கிடைத்த பணத்திலிருந்து வீட்டைக்கட்டி இருந்தார். அதன் மீதும் சிறிது கடன் இருந்தது. மாதம் வரும் பென்ஷனில் தம்பதி இருவரும் காலம் தள்ளி வந்தனர். குடலில் ஏற்பட்ட புண் சாதாரணமாகத் தீருவதாக இல்லை. செல்லம்மாள்

கழுத்தில் இருந்த கெம்பு அட்டி கையை விற்று வைத்தியம் செய்தாள். வியாதி பணத்தைச் சாப்பிட்டு ஏப்பம் விட்டது. ஒவ்வொரு நகையாக 'ஸேட்'டின் கடைக்குப் போயிற்று. கடைத் தெருவுக்குச் சாமான்கள் வாங்க வந்த சுந்தரேசனிடம் ஸேட் மெதுவாக விஷயத்தைக் கூறினார்.

"மூன்று மாதத்திற்குள் ஏகப்பட்ட நகைகளை விற்று விட்டார்கள் அந்த அம்மாள்......"

சுந்தரேசன் செல்லம்மாளின் வீட்டுக்கு வந்தான். கட்டிலின்மேல், உடல் வெளுத்து, களை இழந்த முகத்துடன் கணபதி படுத்திருந்தார்.

"என்ன மாமா இப்படி இருக்கிறீர்கள்? எனக்கு ஒரு வார்த்தை சொல்லி அனுப்பக் கூடாதோ?" என்று பரிவுடன் கேட்டான் சுந்தரேசன்.

உள்ளே இருந்து வந்த செல்லம்மாளைப் பார்த்தான்.

கைகளில் புதையப் புதைய இருந்த வளையல்களை காணோம். ஒரு தங்க காப்பு மட்டும் இருந்தது. கழுத்தில் ஒரு ஒற்றைவடம் சங்கிலியும், மஞ்சள் கயிறும் 'பளிச்' சென்று காணப்பட்டன.

"சுந்தரேசா! மாமாவைப் பார்த்தாயா அப்பா!" என்று கதறினாள் செல்லம்மாள்.

சுந்தரேசனின் தொண்டையில் ஏதோ அடைத்துக் கொண்ட மாதிரி இருந்தது.

"மாமி! உங்களுக்கு ஒன்றும் குறைவு வராது. அந்த ஏழுமலையான் காப்பாற்றுவான். கவலைப் படாதீர்கள் அடிக்கடி நான் வந்து பார்த்துக் கொள்கிறேன்..."

"வனஜா ஊரில் இல்லையாமே?" என்று ஹீனஸ்வரத்தில் விசாரித்தார் கணபதி.

"ஆமாம் மாமா! அடுத்த மாசம் அவளுக்கு வளைகாப்பு பிரசவம் கழித்துத்தான் வருவாள்......"

சுந்தரேசன் அங்கிருந்து சென்ற பிறகு செல்லம்மாள் பூஜை அறையில் நுழைந்தாள். அங்கே மாட்டியிருந்த ஏழுமலையானின் திருஉருவப்படத்தின் முன்பு நின்று கண்ணீரை ஆறாகப் பெருக்கினாள்.

"அப்பனே! எனக்கு உலகில் ஒன்றுமே வேண்டாம். அவர் பிழைத்து எழுந்து இந்த மஞ்சள் கயிறு தக்கினால் போதும். உன் சன்னதிக்கு வருகிறேன், என் நகைகள் அனைத்தும் உனக்கு அர்ப்பணம் செய்து விடுகிறேன். தங்கத்தால் ஆன இந்தத் திருமாங்கல்யத்தைக் கூட உனக்குக் காணிக்கையாக்கி விடுகிறேன். எனக்கு நீ மட்டும் இந்த மஞ்சள் கயிற்றைக் கொடுத்து விடு, போதும்......"

"செல்லம்! அங்கே என்ன பண்ணுகிறாய்? கொஞ்சம் இப்படி வந்து உட்கார், ஏதாவது படி கேட்கிறேன்..." என்று கணபதி அழைத்தார் அவளை.

## 6

அன்று சென்னை சென்ட்ரலில் டில்லி ஜனதாவுக்கு ஏகப்பட்ட கூட்டம். செல்லம்மாளும் கணபதியும் எப்படியோ நெருக்கியடித்துக் கொண்டு வண்டியில் ஏறினார்கள். கணபதியின் உடம்பு முன்னைப் போல் இராவிட்டாலும், சற்றுத்தேறி நடமாடும் நிலைக்கு வந்திருந்தார். வண்டிக்குள் ஏறியதும் கணபதிக்கு ஜன்னல் ஓரமாக ஓர் இடத்தைப் பிடித்து அவரை உட்காரவைத்தாள் செல்லம்மாள். அருகில் இருந்த இடத்தில் ஒண்டிக் கொண்டு தன்னுடன் எடுத்து வந்திருந்த பிரம்பு பெட்டியைத் திறந்து பார்க்க ஆரம்பித்தாள் அவள். அதனுள் அலர்மேலு மங்கையுடன் கூடிய வெங்கடாஜலபதியின் படம் இருந்தது. பகவானின் திலகத்திலிருந்து கொடுத்த பிரசாதமான பச்சைக்

கற்பூரம் கமகமவென்று மணத்தது.

''என்ன பார்க்கிருய்?'' என்று கேட்டார் கணபதி

''ஒன்றுமில்லே. திருச்சானூரில் இரண்டு படங்கள் வாங்கினேன் எங்கே வைத்தேன் என்று பார்த்தேன்......''

ரயில் கிளம்ப பத்து நிமிஷங்களே இருந்தன. ஒரு பெரியவர் ஓர் இளம் பெண்ணுடன் ஒவ்வொரு பெட்டியாக பெயர் எழுதி ஒட்டியிருக்கும் சீட்டுக்களேப் பார்வையிட்டுக் கொண்டே வந்தார். இவர்கள் பெட்டியின் அருகில் வந்ததும் சீட்டை உற்றுப் பார்த்துவிட்டு, ''மிஸஸ் வனஜா நாகபுரி......'' என்று சொல்லிக் கொண்டே, ''இங்கே வாம்மா குழந்தை! உன் பெயர் இருக்கிறது. நீ முதலில் வண்டியில் ஏறிக்கொள்...... குழந்தையை என்னிடம் கொடு'' என்ருர்.

அந்தப் பெண் வண்டியில் ஏறியதும் தன் இரு கரங்களேயும் நீட்டிக் குழந்தையைப் பெற்றுக் கொண்டு, ''அப்பா! நீங்கள் உள்ளே வராதீர்கள், எப்படியோ நான் இடம் பிடித்துக் கொள்வேன் கூட்டம் அதிகமாக இருக்கிறது.'' என்று சொல்லிக் கொண்டே கூலியாள் கொண்டு வந்த சாமான்களேப் பலகையின் மீது வைத்தாள்.

கிழவர் ஜன்னல் ஓரமாக இருந்த கணபதியைப் பார்த்தார்.

''சார், என் பெண் நாகபுரிக்குப் போகிருள் கொஞ்சம் கவனித்துக் கொள்ளுங்கள்...... வனஜா!...... போய்ச் சேர்ந்ததும் மாப்பிள்ளேயின் உடம்புக்குத் தந்தி கொடு...''

செல்லம்மாள் கூட்டத்தின் ஊடே பார்வையைப் பெட்டிக்குள் செலுத்தினுள். பர பரவென்று எழுந்து, ''வனஜா! இப்படிக் குழந்தையை என்னிடம் கொடு. மாமாவின் பக்கத்தில் நீ உட்கார்ந்து கொள். உன் இடத்தில் குழந்தையைப் படுக்க வைக்கலாம் நான் இந்தப் பெட்டி மீது உட்காருகிறேன்...''

''யார்? மாமியா?'' என்று வனஜா திகைத்து வியப்புடன் செல்லம்மாளேப் பார்த்தாள்.

''ஏன் மாமி இப்படி இருக்கிறீர்கள்? மாமாவின் உடம்பு இளேத்து விட்டதே, எங்கே போய்விட்டு வருகிறீர்கள்''

''எப்படி இருக்கிறேன் வனஜா! இப்படி இருக்க வேண்டும் என்று தான் அந்த ஏழுமலேயானிடம் வரம் கேட்டேன், அவன் கொடுத்த மாங்கல்யப் பிச்சை இந்த மஞ்சள் கயிறு.''

செல்லம்மாள் நகரும் வண்டியில் தன் கழுத்தில் கிடந்த மஞ்சள் கோர்த்த மஞ்சள் கயிற்றை எடுத்து வனஜாவுக்குக் காட்டினுள். அதை பக்தியுடன் கண்களில் ஒற்றிக் கொண்டாள். வனஜாவின் கண்களில் கண்ணீர் திரண்டது.

''மாமி! நானும் மாறி விட்டேன். அவர்... என் கணவர் ஜீப் விபத்தில் அகப்பட்டுக் கொண்டு......'' மேலே பேச முடியாமல், கூட்டம் நிறைந்த இடம் என்றுகூடப் பாராமல் வனஜா 'ஹோ' என்று அழுதாள்.

''அப்புறம்? சுந்தரேசன் சௌக்கியமாக இருக்கிருனே இல்லேயோ?'' என்று செல்லம்மாளும், கணபதியும் பதட்டத்துடன் கேட்டனர்.

வனஜா ஒருவாறு துயரத்தை விழுங்கிக் கொண்டு பேச ஆரம்பித்தாள்.

''பத்து தினங்களுக்கு முன்பு திடீரென்று தந்தி வந்தது மாமி. அவர் வேலே விஷயம்தான் உங்களுக்குத் தெரியுமே. எங்கோ வெளியில் போய்விட்டு வீடு திரும்பும் போது இரவு பதினென்னுக்கு மேல் ஆகிவிட்டதாம். ஜீப் டிரைவர் கண்மண் தெரியாத வேகத்துடன் வந்திருக்கிருன். எதிரில் வந்த காரில் மோதி வலது கால் மடங்கி முட்டியில் எலும்பு விரிந்து விட்டதாம். மூக்குக் கண்ணுடி கழண்டு

தூரப் போய் விழுந்து கிடந்த தாம்......''

"அப்படியா ? நல்ல காலம்தான் அம்மா கண்ணடி நொறுங்கி இருந் தால் என்ன கதி ஆகி இருக்கும் ? இம்மாதிரி சந்தர்ப்பங்களில்தான் கடவுளின் கருணை நமக்குப் புலப் படுகிறது'' என்ருள் செல்லம்மாள்.

"தந்தி வந்ததும் நான் எண்ணு தது எண்ணினேன் மாமி ... அந்த காரடை நோம்பும், அதை நான் உதாசினம் செய்ததும், மங்களகர மான மஞ்சள் கயிற்றை மதியாமல் தங்கச் சங்கிலியில் மாங்கல்யத்தை கோர்த்துக்கொண்டதும் நினைவுக்கு வந்து என் மனத்தைக் கலங்க அடித்தன. கூடத்திலே மாட்டி இருந்த ஏழுமலையான் படத்தின் முன்பு நின்று எனக்கு மாங்கல்யப் பிச்சை தரவேண்டி மன்ருடினேன். தந்தி வந்த அடுத்த தினம் காலையில் கடிதம் வந்தது. அவரே எழுதி இருந்தார். தனக்கு ஒன்றும் உயிருக்கு அபாயமில்லை என்றும், சற்று சாவகாசகாகவரலாம் என்றும் குறிப்பிட்டிருந்தார். நானும் திருப் பதி போய் எல்லாவற்றையும் காணிக்கை செலுத்திவிட்டு மஞ்சள் கயிற்றில் மஞ்சளைக் கோர்த்துக் கட்டிக் கொண்டுதான் வருகி றேன்......''

கணபதி பெருமையுடன் செல்லம் மாளைப் பார்த்து, "செல்லம்! அன்று சொன்னுய் அல்லவா வனஜாவுக்கு மஞ்சள் கயிற்றின் மதிப்புத் தெரியவில்லை என்று அதன் உயர்வைப் பற்றி அவளா கவே தெரிந்து கொண்டு விட்டாள் பார்த்தாயா ?'' என்று கேட்டார்.

"இந்த மட்டும் சுந்தரேசன் பிழைத்தானே அதுவும் இவளு டைய மஞ்சள் கயிற்றின் பலத்தினுல் தான்'' என்று கூறி அவள் வனஜா வின். கழுத்தில் மங்களகரமாகத் துலங்கும் அந்த மஞ்சள் கயிற்றைட் பார்த்துப் பூரித்துப் போனுள். நீறு விலகினுல் தானே ஒளியின் தன்மை புலப்படும்.

# வெறுமை

சரோஜா ராமமூர்த்தி

கதவுச் சங்கிலி 'கிளுங்' கென்று ஓசைப்படுகிறது. ஒருக்களித்திருந்த வாசல் கதவைத் திறந்து கொண்டு யாரோ உள்ளே வருகிறார்கள். மெட்டியின் ஒலி சுநாதமாகக் கேட்கிறது. பின் தொடர்ந்து மல்லிகையின் மணம் கும்மென்று வீசுகிறது. கலகல வென்று கண்ணாடி வளையல்கள் குலுங்குகின்றன.

'' மாமீ! மாமீ!'' மெல்லிய, மென்மையான குரல் ஒன்று கல்யாணியைத் தட்டி எழுப்புகிறது. கையில் வைத்திருக்கும் பாத்திரத்திலிருந்து புழுங்கலரிசிக் கஞ்சியின் மணம் எழும்புகிறது. ஆவி சுருள் சுருளாக எழுந்து மேலே மிதக்கிறது.

'' உம்....'' என்று முனகிக்கொண்டு கல்யாணி மாமி அரைக் கண்களை விழித்துப் பார்க்கிறாள். அவள் எதிரே மஞ்சள் மினுக்கும், முகத்தில் நெருப்புச் சுடர் போல் குங்கும திலகமும் ஒளிர அபிராமி கஞ்சிப் பாத்திரத்துடன் நிற்கிறாள். எதிரே நிற்பவளைப் புரிந்து கொள்ளாத ஒருவித மயக்க நிலையில் இருக்கிறாள் கல்யாணி.

'' நீ யாரம்மா?'' கல்யாணி மாமி, கேள்விக் குறியைத் தேக்கிய பார்வையில் எதிரில் நிற்பவளைப் பார்க்கிறாள்.

'' நேற்றிலிருந்து உங்களை நான் பார்க்கவில்லை மாமி, என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்? எதிர் வீட்டில் இருக்கும் அபிராமிதான். என்ன உடம்போ ஏதோ என்று காலையிலேயே என் பெண்ணைப் பார்த்து விட்டு வரச் சொன்னேன். கண்ணைத் திறக்காமல் படுத்திருப்பதாகச் சொன்னாள். கஞ்சி கொண்டு வந்திருக்கிறேன் மாமி. எங்கே வாயைத் திறவுங்கள்....''

பதமாக ஆற்றிய கஞ்சியைக் கல்யாணி மாமியின் வாயில் புகட்டுகிறாள் அபிராமி. அவளைப் பற்றித் தெரிந்து கொள்ள கல்யாணிக்கு ஆசைதான். எதிர் வீட்டுப் பெண். அடக்கமும், அன்பும், இன்முகமும் ஒருங்கே அமையப் பெற்றவள். ஏட்டிலே பலபல படித்து அறிவதை விட, அவளைப் பார்த்தே பலவற்றைப் படித்துப் பயன் பெற்று விடலாம். அந்தக் குளிர்ந்த பார்வை ஒன்றே போதுமே! இருந்தாலும் அவளை எப்படி அறிமுகப் படுத்திக் கொள்வது?

கல்யாணியும் சற்று சங்கோஜி. வலுவில் யாருடனும் பேச மாட்டாள். கஞ்சி இதமாக நெஞ்சில் இறங்கியவுடன் கல்யாணி பேச ஆரம்பிக்கிறாள்.

'' நேற்று மத்தியானம் படுத்தவள் தான். ஒரே தலைவலி. ராத்திரி ஜுரம் வந்து விட்டது. தட்டுத் தடுமாறி காப்பி போட்டுச் சாப்பிட்டேன். உனக்கு வீண் தொந்தரவு....பாவம்! பிள்ளைத்தாச்சியைச் சிரமப்படுத்தி விட்டேன்....''

அபிராமிக்கு எங்கிருந்தோ வெட்கம் வந்து விடுகிறது. எத்தனை பெற்றாலும், ஒவ்வொரு தரமும் தாய்மை அடையும் போது வெட்கம் வரத்தான் செய்கிறது.

தலை குனிந்து நிற்பவளைப் பார்க்கிறாள் கல்யாணி.

'' உட்காரம்மா....நிற்கிறாயே ....எத்தனை மாசம் உனக்கு?''

'' நாலு மாசம் மாமி..'' கண்களிலே கண்ணீர் மின்னுகிறது.

'' ஏனம்மா வருத்தப்படுகிறாய்? தாய்மை அடைந்து விட்டோம் என்று பொங்கிப் பூரித்து இருக்க வேண்டியது போக, இந்தக் காலத்தில் ஒன்றுக்கு மூன்று குழந்தைகள் ஆகி விட்டால் எல்லாப் பெண்களும் இப்படித்தான் அலுத்துக் கொள்கிறார்கள். என்னைப் பார்....'' மேலே அவள் பேசவில்லை. பார்வை எங்கோ வெறுமையில் போய் நிலைத்து விட்டது. உயிரினம் வாழ்ந்து சிரிக்கும் இந்த உலகம் அவளுக்கு மட்டும் ஒரே சூன்யமாகத் தோன்றுவானேன்?

காரணம் இல்லாமல் இல்லை. கல்யாணி ஒண்டிக்கட்டை. பரந்த உலகத்தில் அவளுக்கு வேண்டியவர்கள், உறவினர்கள் என்று சொல்லிக்கொள்ள யாரும் இல்லை. கல்யாணி உலகத்தா

ரைப்போல ஒருவனுக்கு வாழ்க்கைப்பட்டாள், சில காலம் வாழ்ந்தாள். ஒரு பூவோ, பிஞ்சோ தளிர்க்கு முன்பே தனியாகி விட்டாள். அவளைத் தனிமைப் படுத்தியவன் தெருவிலே நிறுத்தாமல் சோற்றுக்கும், துணிக்கும் வைத்து விட்டுப் போனுன். சோறும், துணியும் மனித வாழ்வின் முதல் தேவையாக இருந்தாலும், அது கிடைத்த பிறகும் அந்த வாழ்வு பூரணத்துவம் அடைவதில்லை.

இப்படித் தனி மரமாக இருக்கிருேமே என்று வேதனைப்பட்டு நாட்களைக் கழித்துக் கொண்டே வந்து விட்டாள். ஒவ்வொரு உயிரும் ஏதோ ஓர் ஆதங்கத்துடன் உலகில் பிறக்கிறது. நன்ருக வாழ்ந்துவிட வேண்டும் என்று துடிக்கிறது. ஆனுல், அவற்றின் வாழ்க்கைப் பாதையில் எத்தனை ஏற்றங்கள், இறக்கங்கள்? இவள் வாழ்விலே ஏற்றமே காணவில்லை. ஒரே பள்ளம்தான். இட்டு நிரப்ப முடியாத பிளவு.

இரண்டு மாதங்களுக்கு முன்பு ஒரு நாள் அபிராமியும், அவள் கணவனும், குழந்தைகளும் அந்த ஊருக்கு வந்தார்கள். மாட்டு வண்டியிலிருந்து அவர்கள் இறக்கிய சாமான்களைப் பார்த்தவுடன் கல்யாணிக்குப் புரிந்து போயிற்று; வளர வேண்டிய அந்தக் குடும்பத்தைப் பற்ருக்குறையும், பசியும், பாடுபடுத்திப் பேயாட்டம் ஆடி இருக்கின்றன என்று. ஒடிந்த மணைகள், ஒட்டைத் தகர டப்பாக்கள், கிழிந்த சாக்கில் நசுங்கிய பாத்திரங்கள், படுக்கை என்கிற பெயரிலே வெறும் கந்தல்கள்.

காற்று வாக்கிலே கல்யாணியின் காதில் விழுந்த செய்தி இதுதான்.

பள்ளிக்கூட வாத்தியாராக இருந்து வந்தானும் அபிராமியின் கணவன். ஒரு வார ஜுரத்தில் கால் இழுத்துக் கொண்டு விட்டதாம். அபிராமி குடும்ப பாரத்தைத் தன் தோளில் ஏற்றுக் கொண்டு விட்டாள். சிட்டுக்கள்போல துளித் துளியாய் நிற்கும் மூன்று பெண் குழந்தைகளை வீட்டில் விட்டு விட்டு அபிராமி ஓடி ஓடி உழைத்தாள். ஒரு வீட்டில் பிறந்த நாள் என்ருல் விடிய நாலு நாழிகைக்கே எழுந்து, கணவனுக்கும், குழந்தைகளுக்கும் சமைத்து வைத்து விட்டுப் போய் விடுவாள்.

மாலை அவள் வீடு திரும்பும்போது பையில் தின்பண்டங்களும், முகத்தில் மலர்ச்சியும் கொண்டு வரத் தவறியதேயில்லை. முகத்தில் சிரிப்பு ஒன்றுதான் வற்ருமல் இருக்கும். வீட்டில் ஒன்றுமிராது. சமையலறையில் டப்பாக்கள் ஒழுங்காகக் கொலுவிருந்தாலும், தன்னுள்ளே சூன்யத்தை நிரப்பிக் கொண்டு அமர்ந்திருக்கும். எதிரும், புதிருமாக அமைந்திருந்த இவர்கள் இருவருடைய வீட்டிற்கும் ஏகப்பட்ட ஒற்றுமை! கல்யாணிக்குப் பட்டினி கிடக்க வேண்டிய அவசியமில்லை. அவளுடன் பகிர்ந்து உண்ண யாருமில்லையே என்கிற ஏக்கம் தான் அவளுக்கு. பகிர்ந்து சாப்பிட கணவனும், குழந்தைகளும் இருக்கும் அபிராமிக்கோ வயிருர உண்ண உணவில்லை என்கிற ஆதங்கம்.

எப்படியோ இருவருக்கும் ஒற்றுமை இருந்தது!

"கஞ்சி வாய்க்குப் பிடிக்கிறதா மாமி? ஜுரம், தலைவலி என்ருல் என்னை ஒரு குரல் கூப்பிடக் கூடாதா?" அபிராமி பரிவுடன் கேட்கிருள்.

"சமையல் அறை வலை பீரோவில் நேற்று பால் பிரைகுத்தி வைத்திருக்கிறேன். கறிகாயும் வாடி வதங்கிப் போகும். எடுத்துப் போம்மா..." என்கிருள்.

ஒரு துளியாக ஆரம்பித்த நட்பு, மலையாக வளருகிறது. நாட்கள் பிறந்து மடிகின்றன. ஆனுல், பாசமும், அன்பும் பிணைந்து கொண்டு வளருகின்றன. இருவரும் மனத்தில் ஒன்றிப் போகிருர்கள்.

கல்யாணிக்குத் தான் ஒண்டிக்கட்டை என்கிற எண்ணம் மெல்ல மெல்லத் தேய்ந்து வருகிறது. அபிராமி இருக்கிருளே!

மாதம் வளர வளர அபிராமி இளைத்துக்கொண்டே வருகிருள்.

"அடியே அபிராமி! எட்டு மாசம் ஆகிறதடி உனக்கு. பேசாமல் வீட்டோடு விழுந்து கிட...." கடுமையாகக் கல்யாணி எச்சரிக்கிருள்.

அவள் விழுந்து கிடந்தால் ஐந்து வயிறுகள் நிரம்ப வேண்டுமே! ஒரு குடும்பத்துக்கு இன்ஞெருவர் இட்டு நிரப்ப முடியுமா? தீராத பிரச்னையாகி விட்ட இல்லாமையை இந்தக் கல்யாணியின் பரிவும், உதவியும் எப்படிப் போக்கடித்து விடும்?

இதயம் விம்மித் தணிகிறது அபிராமிக்காக. சூம்பிப்போன காலும், கோணிய வாயுமாக இருக்கும் அபிராமியின் கணவனைப் பார்க்கும்போதெல்லாம் கல்யாணிக்கு வேதனையும், கோபமும் கொப்பளித்து எழுகின்றன.

ர்ளிக்கூட வாத்தியார் ஆயிற்றே, நாலு குழந்தைகளுக்கு ஏதாவது சொல்லிக்கொடுத்து ....' கல்யாணி ஊரில் விசாரித்து நாலு குழந்தைகளை அழைத்து வந்து விடுகிறுள். அபிராமி கல்யாணியிடம் சண்டைக்கு வந்து விடுகிறுள்.

"என்ன மாமி இது? அவர் கிடந்த கிடைக்கு இந்த மட்டும் தாலிச் சரடு தப்பியதே என்று பார்த்தால்?..."

"வயிறும், வாயுமாக நீ அலைவது எனக்குப் பொறுக்க முடியவில்லையடி.."

"அதற்காக? என் தலையில் எழுதியது அது..." துயரம் நெஞ்சிலிருந்து இறங்கி வயிற்றுக்குள் சென்று விடுகிறது.

ஒன்பதாம் மாதம் பிறந்து விடுகிறது. கூடவே கோடையும் பிறக்கிறது. ஊரிலே எங்கு பார்த்தாலும் கொட்டு மேளமும், திருவிழாக்களும் அமளிப் படுகின்றன. யார் வீட்டிலோ ஏதோ விசேஷமாம். அபிராமி வந்து உதவிஞல் தான் காரியம் நிறத்து மணக்குமாம். அபிராமிக்கு ஆகி வந்த கை வேறு, அவளை அழைக்க வந்து விட்டார்கள்.

'வீட்டு வரைக்கும் தான் சாப்பாடு. இருபது பேர்களுக்குச் சமைக்க வேண்டும். கூடமாட எங்கள் பெண்களும் உதவி செய்வார்கள். ஐந்து ரூபாய் கொடுக்கிறோம்?'

ஐந்து ரூபாய்! பெரிய தொகைதான் அவளுக்கு. நாலு நாளைக்கு ஒரு வேளைச் சாப்பாட்டுக்காவது கவலைப்படாமல் இருக்கலாம். போகிறேன் என்று பறக்கிறுள் அவள். போய்விட்டுத்தான் வரட்டுமே! மூன்று நாட்களாக அரை வயிற்றுக்குச் சாப்பிட்டுச் சாப்பிட்டு அலுத்து விட்டது அவளுக்கு.

கல்யாணி வேறு ஊரில் இல்லை. அடுத்த ஊரில் ஏதோ திருவிழாவாம். அபிராமியின் குழந்தைகளை அழைத்துக் கொண்டு போய் இருக்கிறுள். அவளைப் போகவேண்டாம் என்று கூறித் தடுத்து நிறுத்த யாருமில்லை. புறப்பட்டு விட்டாள்.

நேரம் நகர்கிறது. தெருவில் மாட்டு வண்டி வந்து நிற்கிறது. முனகிக் கொண்டே இறங்குகிறுள் அபிராமி. நெற்றியில் முத்துக்களாக அரும்பியிருக்கும் வியர்வைத் துளிகளும், வெளுத்துப் போன முகமும், சோர்வும் அவளுக்கு உடல் நிலை சரியில்லை என்று காட்டுகின்றன.

வாசற்படி ஏறிக்கொண்டே, 'சாப்பிட்டீர்களா? நீங்களே போட்டுக் கொண்டு சாப்பிட்டால் வயிறு நிறையாதே....' என்று கணவனிடம் பரிவுடன் கேட்டவாறு உள்ளே சென்று படுக்கிறுள்.

விநாடிக்கு விநாடி அவள் வேதனை அதிகரிக்கிறது. அப்புறம் யார் யாரோ வருகிறுர்கள். அபிராமியின் நினைவில் கல்யாணி ஒருத்தியைத்தான் நிறுத்திக் கொள்ள முடிகிறது.

"விளக்கு வைக்கும் நேரமாகி விட்டதே....மாமி வரவில்லையா?" வாய் திறந்து கேட்கிறதாக ஒரு நினைப்பு. பேசத்தான் முடியவில்லையே!

அதோ! அதோ! கல்யாணி மாமியின் குரல் கேட்கிறது. "அபிராமி! அபிராமி! என்னிடம் காலையிலேயே ஒரு வார்த்தை சொல்லியிருக்க மாட்டாயா? உன்னைத் தனியாக விட்டு விட்டு நான் போயிருக்கமாட்டேனே.." பரிவும், பாசமும் தோய்ந்த சொற்கள் அவை. கல்யாணியால் தான் அவ்விதம் பேசவும் முடியும்.

அவளைச் சுற்றி ஏதோ நடக்கிறது. 'மயக்கம்..மருந்து' என்ற யாரோ பேசுகிறுர்கள். பிறகு? அபிராமி தன்னிலை நழுவி, புரியாத ஓர் இடத்தில் இருக்கிறுள். வலி, இல்லாமை, பசி, எதுவுமே மனித தேகத்தை ஆட்கொள்ள முடியாத ஓர் இடம். அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. அவ்வளவுதான்!



பையன்:— டேய், எங்க வாத்தியார் ரொம்ப நல்லவர்டா. கேள்விக்குப் பதில் சொல்லலேன்னு, 'வெளியே போ' என்று வீட்டுக்கு அனுப்பிச்சுட்டார்டா!

"குவா குவா" உலக வனத்திலே அரும்பிய மொட்டு ஒன்று மலர்ந்து விட்டது. கல்யாணி குழந்தையைப் பார்க்கிறாள் ஆண் குழந்தை. அபிராமியின் அழகையும், தகப்பனின் வாட்ட சாட்டமான உடலையும் கொண்ட அழகுக் குழந்தை. சட்டென்று அபிராமியைப் பற்றிய நினைவு வருகிறது அவளுக்கு.

"அபிராமி! அபிராமி!"

புதிய ஒன்றைப் பார்க்கும் வேகத்தில் பழைய ஒன்றின் நினைவை மறக்கச் செய்யும் மாயை!



டாக்டர் அபிராமியின் கையைப் பிடித்துக் கொண்டே நிற்கிறாள். உணர்ச்சிகளைத் தாண்டிய நிலையில் அவள் நின்ற நிலை விடை அளித்து விடுகிறது. ஜனனத்தின் தோற்றுவாய் மரணத்தின் விளிம்பிலே நின்று பேய்க் கூச்சல் இடுவதை அறிந்து கொள்கிறாள் கல்யாணி.

காலையில் தன்னைப் பார்த்துப் பேசிச் சிரித்தவளின் உடல், அவள் எதிரே கிடக்கிறது. வாழ்ந்து ஓய்ந்து போனவள் அருகில் வாழ வந்திருக்கும் புது உயிர், குரலெழுப்பி தன் வரவை அறிவித்துக் கொண்டிருக்கிறது.

ஊரார், உறவினர்கள் வந்து காரியத்தை முடிக்கிறார்கள். சம்பிரதாயத்துக்காக வந்தவர்கள் அது முடிந்தவுடன் விலகி விட்டார்கள். அவனும், அந்தக் குழந்தைகளும் மட்டுமே தனியாக நின்றார்கள்.

கல்யாணி பசும் பாலை எடுத்துக் கொண்டு வருகிறாள் குழந்தைக்கு. நெளிந்து நெளிந்து அது தாய் பாலுக்காக அழுது கொண்டிருக்கிறது.

பெற்றவனோ இருந்த இடத்தை விட்டு அசையாமல் உட்கார்ந்திருக்கிறான், பாலைப் புகட்டி விட்டுத் துணியில் வைத்து அணைத்து அதை எடுத்து வருகிறாள் கல்யாணி.

"இப்படி இருந்தால் முடியுமா அப்பா? இந்தக் குழந்தையின் வேதனையைக் கவனிக்காமல் உட்கார்ந்திருக்கிறாயே! தந்தையும் தாயுமாக இருக்க வேண்டியவனாயிற்றே நீ!.."

எப்பொழுதும் போல முனகுகிறான் அவன். கல்யாணி ஏதோ ஒரு வேகத்திலே அதைத் தன் வீட்டுக்குள் எடுத்துப் போகிறாள்; 'நாளை..மறுநாள்.. பெற்றவன் வந்து கேட்டால்?' என்கிற எண்ணமே அவளுக்கு எழவில்லை. மனைவிக்காக அவன் உருகுகிறானா? நாளைக்கு நமக்கு உழைத்துப் போட யார் இருக்கிறார்கள் என்று வேதனைப் படுகிறானா? புரியவில்லை அவளுக்கு,

தாயாக வேண்டும் என்று ஒரு காலத்தில் அங்கமெல்லாம் உருக அவன் அருளை வேண்டிய கல்யாணி இதோ எளிதில் தாயாகி விட்டாள் வேண்டுமென்றே யாரோ சுமத்தி விட்ட பதவி!

நாட்கள் ஓடுகின்றன. குழந்தை — அபிராமியின் குழந்தை — இப்பொழுது கல்யாணியின் செல்வனாக வளருகிறான். பல மாதங்கள் வரை அவன் பெயரில் குழந்தையாகவே வளருகிறான். அபிராமியை உரித்து வைத்திருக்கிறது. ஏதோ ஒரு பெயர் வைத்து அழைக்க வேண்டாமா? கல்யாணி யோசிக்கிறாள். என்னவோ ஒன்று மூளையில் பளிச்சிடுகிறது.

ஸ்ரீராமன்! அற்புதமான பெயர். "ஸ்ரீராம்.." என்று வாய் நிறைய, குளிர அழைக்கிறாள் அவள். ஸ்ரீராமனுக்கு



முகம் பார்த்துச் சிரிக்கத் தெரிகிறது பாவம், தாய் முகம் அறியாத அந்தச் சேய், தாயின் உருவத்திலே தன்னை வளர்க்கும் அவளைப் பார்த்துச் சிரிக்கிறது.

மெல்ல மெல்ல ஸ்ரீராமனின் தந்தையின் மனம் விழிப்படைகிறது. கால் இழுத்துக் கொண்டிருந்தாலும் சாய்த்து நடந்து கொண்டே ஒரு வேலையைத் தேடிக் கொள்கிறான். பெரிய பெண் தான் குடும்பத்தைப் பார்த்துக் கொள்கிறது. கும்மட்டியைப் பற்ற வைக்கிறதும், சமைக்கிறதும் அசல் அபிராமி தான் வேலையில்! தன்னுடன் பிறந்த இரண்டையும் பார்த்துக் கொண்டும் இடையிலே எதிர்வீட்டை



> பழைய நாட்களில் ரஷ்யா தேசத்தில் ஒரு பெண்ணுக்கு விவாகம் நடக்கும்போது ஆக வேண்டிய சடங்குகளில் இது ஒன்று. பெண்ணின் தகப்பன் ஒரு புது சாட்டையை எடுத்து இலேசாகப் பெண்ணுக்கு ஒரு அடி கொடுத்து 'இது நீ என்னிடம் வாங்கும் கடைசி அடி' என்று சொல்லி விட்டு, சாட்டையை மாப்பிள்ளையிடம் ஒப்படைப்பான்!

யும் எட்டிப் பார்க்கிறாள் அவள். உடன் பிறந்த ரத்தமாயிற்றே!

"தம்பிப் பாப்பாவை அப்பாதான் தூக்கிக் கொடுத்துவிட்டாரே!" உடன் பிறந்த பாசத்தில் கண்ணீர் விடுகிறாள் தமக்கை. ஆசையுடன் முத்தமிட, அன்புடன் தாலாட்ட, மகிழ்வுடன் தூக்கிச் சுமக்க அவள் துடிக்கிறாள்.

ஒருநாள்.. ஸ்ரீராமனை எடுத்துக் கொண்டு கல்யாணி வாசல் திண்ணையில் வந்து உட்காருகிறாள். குழந்தை எதற்கோ அழுகிறான்.

அந்தத் தொலை வானத்திலிருந்து குதித்து வருபவன்போல் அந்த மனிதன் வருகிறான். தெருக்கோடியில் வரும் அவனைப் பார்த்துக் குழந்தை சிரிக்கிறது.

அருகிலே வந்ததும் ஸ்ரீராமனின் தந்தை தன் வீட்டு வாயில்படி ஏறுமுன் ஒரு தடவை திரும்பிப் பார்க்கிறான். குழந்தை சிரிக்க, அவன் பார்க்க..

கல்யாணியின் நெஞ்சில் — நிறைந்திருந்த அந்த மனத்தில் வெறுமை நிரம்புகிறது. ஏதோ பறி போய் விட்டாற் போல் இதயம் வெறிச்சென்று ஆகிறது. குழந்தையை உள்ளே கொண்டு வந்து தொட்டிலில் கிடத்திவிட்டு உட்காருகிறாள்.

வெறிச்சோடிய இதயத்தைக்குழந்தை நினைவால் நிரப்பிக் கொள்ள முயல்கிறாள்.

நாளைக்கு ஸ்ரீராமனுக்குப் பிறந்த நாள். அவன் பிறந்த நாள் அவன் தாயின் மறைவு நாள் அல்லவா? எதிர் வீட்டுக்கு யார் யாரோ வருகிறார்கள். இங்கே இவள் குழந்தையின் பிறந்த நாளுக்காகப் பட்டுச் சட்டை வாங்கி யிருக்கிறாள். அங்கே அவன் தன் மனைவியின் நினைவுக்காக ஆயத்தங்கள் செய்து கொண்டிருக்கிறான்.

வாசல் குறட்டில் யாரோ ஏறி வருகிறார்கள். கல்யாணி திரும்பிப் பார்க்கவில்லை. குழந்தையைப் பறி கொடுத்து வெறுமையாய் நின்று விடுவோமோ என்கிற நினைப்பு. தொட்டிலில் கண் வளரும் மதலையின்மீது அவள் பார்வை நின்று நிலைத்து விடுகிறது.

ரேழியில் காலடிச் சத்தம் கேட்கிறது. கல்யாணி கண்களை இறுக மூடிக் கொள்கிறாள். ஆடாது, அசங்காது துயில் கொள்ளும் பாலகனை அந்த வெற்று இதயத்துள் இருத்திக் கொள்கிறாள்.

முற்றத்தைத் தாண்டிக் கூடத்துக்கே வந்து விடுகிறார்கள்.

"மாமி!"

அபிராமியின் மூத்த பெண் அல்லவா?

"மாமி! அப்பா என் தம்பியை வாங்கிண்டு வரச் சொன்னார் மாமி.."

கல்யாணியின் நெஞ்சம் கனக்கிறது. கடந்த சில மாதங்களாக வளர்த்து வந்த நம்பிக்கை கரைந்து போகிறது.

"கேட்கிறேனே மாமி! என் தம்பியை அப்பா வாங்கிண்டு வரச் சொன்னார். நாளைக்கு எங்கம்மாவுக்கு திதி மாமி. அவனை இங்கே விட்டுட்டு..அப்பா எப்படி மாமி ஒண்டியா காரியத்தைச் செய்வா?" கல்யாணியின் மனம் பதில் தருகிறது.

'அவன் அபிராமியின் மகன். உன் மகன் அல்லவே?'

தொட்டில் அசைகிறது. குழந்தை விழித்துக் கொள்கிறான். வழக்கம் போல ஒரே புன்னகைதான்.

அந்தச் சிரிப்பு அவளை ஒன்றும் செய்யவில்லை.

"கண்ணே! உன் அம்மாவுக்குச் செய்ய நீ வேண்டுமாம். உன் அப்பா அழைக்கிறார். போடா.." மின்னலைப் போல் பாய்கின்றன கரங்கள். குழந்தையை எடுக்கின்றன. தமக்கை உரிமையுடன் குழந்தையைப் பெற்றுக் கொள்கிறாள்.

தொட்டில் ஓர் அசைவுடன் தன்னை வெறுமைப்படுத்திக் கொள்கிறது. தெருத் திண்ணையிலிருந்து பார்த்தால் அடிவானத்தில் மாலையில் நடந்த இந்திர ஜாலங்கள் மறைந்து இருள் படர்ந்து கிடக்கிறது.

# குழந்தை மனம் ஒரு புதிர்!



ஸரோஜா ராமமூர்த்தி

கீழ்வானத்தில் அருணோதயம் ஆகிறது. புள்ளினங்கள் பாடுகின்றன. வண்ண மலர்களிலிருந்து வண்டுகள் தேனை உறிஞ்சுகின்றன. உலகம் விழித்துக் கொள்கிறது. இடையர்கள் பசுக்களை மேய்ப்பதற்காக, வயல்களுக்கு ஓட்டிப் போகிறார்கள். எங்கும் விழிப்பு. இயற்கையின் விழிப்பால் எல்லாரும் தூண்டப்பட்டுத் தொழிலில் ஈடுபடுகிறார்கள்.

அதோ! வயல்களின் வரப்பின் மேலே இளமங்கை ஒருத்தி, தலையில் தயிர்க் கலயத்துடன் வருகிறாள். தென்றலில் அசைந்தாடும் பூங்கொடி போன்ற தேகத்தைப் படைத்தவள். மை தீட்டிய வேல் விழிகளை உடையவள். புன்சிரிப்பால் உலகத்தையே மயக்கி விட முயலுகிறாள். அநாயாசமாக அவள் கைகளை வீசி நடந்து வருவதையே ஒரு காவியமாகப் பாடி விடலாம். ஒயிலாக அவள் நடந்து வரும்போது, எங்கிருந்தோ புதருக்குள்ளிருந்து கண்ணன் வருகிறான். கையிலிருந்த வேய்ங்குழலை இடுப்பில் செருகிக் கொள்கிறான். பட்டுப் போன்ற பாதங்கள் நோக, மெதுவாக நடந்து, அவளுடைய பின்புறத்தில் வந்து, அவள் மேலாக்கைப் பற்றி இழுத்துத் தயிர்க்கூடையைத் தள்ளி விடுகிறான். கூடையிலிருந்த பானைத் தயிரும் கீழே பெருகி வழிகின்றது. அள்ளி அள்ளிச் சாப்பிடுகிறான் கண்ணன். உலகம் பூராவும் தன் வயிற்றுள் வைத்திருப்பவனுக்கு அடங்காத பசி! தணியாத தாகம்!

மங்கை கோபத்தால் மலர் விழிகளை உருட்டி விழிக்கிறாள். வாயில் வெண்ணெய் ஒழுக மாதவன் பயந்து நடுங்குகிறான். இடைச்சி கண்ணனைக் காதைப் பிடித்துத் திருகிக் கன்னத்தில் செல்லமாக அடிக்கிறாள்.

* * *

பள்ளிக்கூடத்தின் கூடம் அதிர்ந்து போகிற மாதிரி கரகோஷம். 'ஆஹா! அற்புதம்! அபாரம்!' என்று எல்லாரும் இந்த நிகழ்ச்சியைப் பாராட்டினார்கள். இடைச்சியாக நடித்த பாமாவுக்கும், அன்று அமோகமாகப் பாராட்டுதல்கள் கிடைத்தன. கண்ணனாக வந்து நடித்த சிறுவன் மாதவனுக்கு ஏகப்பட்ட புகழ்மாலைகள். பள்ளிக்கூட நிர்வாகிகளால் சூட்டப்பட்ட மலர் மாலைகளுடன் இருவரும் வீடு திரும்பினர்.

மாதவனும் பாமாவும் சம வயதினர் அல்ல. பாமாவுக்குப்

புதிரிந்து வயதாகி விட்டது. மாதவனுக்கு ஆறு வயது தான் இருக்கும். ஆனால், உடன் பிறந்தவர்களைப் போல், அவ்வளவு ஆசையும் பாசமும் ஒருவர் மேல் ஒருவர் வைத்திருந்தனர். இருவரும் பக்கத்து வீட்டுக்காரர்களாக இருந்தாலும், மாதவன் பாமாவைவிட்டு அரைக் கணமும் பிரியமாட்டான். உலகத்திலே பாமாவைத் தவிர, வேறு எதுவும் அவனுக்கு உன்னதமாகத் தெரியவில்லை. இதற்கெல்லாம் காரணம் வேறு.

ஃ ஃ ஃ

ஆறு வருஷங்களுக்கு முன்பு...

ஒருநாள் பொழுது விடியும் நேரத்தில், பாமாவின் பக்கத்து வீட்டில் குழந்தை அழும் குரல் கேட்டது. இந்த அதிசயத்தை நேரில் பார்க்கவேண்டும் என்று நினைத்து அடுப்பங்கரைக்குச் சென்ற பாமாவை அவள் தாய், "பாமா! பக்கத்து வீட்டு அம்புஜம் மாமிக்குக் குழந்தை பிறந்துவிட்டதே! உனக்குத் தெரியுமா?" என்று விசாரித்தாள். மகிழ்ச்சியால் துள்ளும் மனசுடன் பாமா அடுத்த வீட்டுக்குள் சென்றாள்.

"வா, வா, பாமா! உனக்கு விளையாட ஒரு பாப்பா வந்திருக்கிறான் பார். அந்த உள்ளில்!" என்று மாதவனின் தந்தை அவளை வரவேற்றுக் குழந்தையைக் காண்பித்தார்.

கண்களை மூடி நிம்மதியாக உறங்கும் அதன் முகத்தையே உற்றுப் பார்த்தாள் பாமா. நிஷ்களங்கமான அதன் வதனத்தில் தன் மனசைப் பறிகொடுத்தாள். அன்றைய தினத்திலிருந்து பாமாவும் மாதவனும் இணைபிரியாமல் வளர்ந்து வந்தார்கள்.

இந்நிலையில் பாமா வளர்ந்து பெரியவளாகிவிட்டாள். ஒரு தினம் அவள் தன்னைப் பிரத்யேகமான முறையில் அலங்காரம் பண்ணிக் கொண்டாள். தலையில் ராக்கொடி வைத்துப் பின்னிப் பூச்சூடி, மஞ்சள் பாவாடையும், அரக்குத் தாவணியும் அணிந்து, அவள் மாதவன் வீட்டுக்கு வந்தாள். மாதவன் அப்படியே வாயைப் பிளந்துகொண்டு நின்றான்.

"இன்றைக்கு என்ன அலங்காரமெல்லாம் பலமாக இருக்கிறதே?" என்று கேட்டுக்கொண்டே வந்தார், மாதவனின் தகப்பனார் சேதுராமன்.

"நாளைக்கு எங்கள் பள்ளிக்கூடத்தில் நடன ஒத்திகை நடக்கப் போகிறது. அதில் நான்தான் கோபிகை பாலகிருஷ்ணனாக நம் மாதவன் நடிக்கிறான்" என்றாள் பாமா.

"அப்படியா? பேஷ்! எனக்கெதிரில் கொஞ்சம் நடனம் ஆடிக்காட்டேன், பார்க்கலாம்" என்றார் சேதுராமன். சிறிது நேரத்திற்குள் மாதவனைக் கிருஷ்ணனைப்போல் அலங்கரித்தாள் அவன் அப்பாவின் பட்டு வேஷ்டியும், அம்மாவின் நகைகளையும் அணிந்து கிருஷ்ண வேஷத்தில் நின்றான் மாதவன். ஆட்டம் ஆரம்பமாயிற்று. பாட்டின் சாராம்சம் இதுதான்:

> "நீ எவ்விதம்பண் இசைக்கிறாய், என்பது எனக்குத் தெரியவில்லையே! மௌனமாகி, சிந்தையை நிலை நிறுத்தி உன் குழலோசையை உற்றுக் கேட்கிறேன்.
>
> "ஹே பிரபோ! உன் இசை உலகத்தை ஒளி மயமாக்குகிறது. உன் இசையின் மூச்சு வான வெளியெங்கும் வியாபித்து நிற்கிறது. உன் குழலின் நாதம் கற்பாறைகளையும் கரைந்து போகச் செய்கிறது.
>
> "மாதவா! என் உள்ளம் உன் இசையோடு கலக்க ஆசைப்படுகிறது........"

மகா கவிதாகூரின் கீதாஞ்சலியிலிருந்து தேர்ந்தெடுக்கப் பட்ட வரிகள் அவை. இதற்குத் தான் மேடையிலும் ஆடி, பாராட்டைப் பெற்றாள்.



இதற்குப் பிறகு அவர்களுடைய பாசம் மேலும் உறுதிப்பட்டது. ''இப்படி இருக்கிறாயே மாதவா? நாளைக்குப் பாமாவைக் கல்யாணம் பண்ணிக் கொடுத்து விடுவார்கள். அப்போது நீ என்னடா பண்ணுவாய்?'' என்று கேட்டாள் அவன் தாய் வேடிக்கையாக.

''பாமாவுக்குக் கல்யாணமா? நானே அவளைக் கல்யாணம் பண்ணிக் கொள்கிறேனே'' என்று

கபடமில்லாமல் பதில் சொன்னான் அவன்.

''அழகு தான் போ!'' என்று கூறி, பெற்றோர் இருவருமே பெரிதாகச் சிரித்தார்கள்.

அவர்கள் விளையாட்டாகச் சொன்னது உண்மையாகவே நடக்க ஆரம்பித்தது. பாமாவைப் பெண் பார்க்க வடக்கே இருந்து ஒரு பிள்ளை வந்தான். சிம்லாவில் சர்க்கார் வேலையில் இருப்பவன். வீடு அமர்க்களப்பட்டது. அம்புஜம் பாமாவின் வீட்டிலேயே அன்று பூராவும் இருந்தாள். பாமாவுக்கு அலங்காரம் செய்தாள். வந்தவர்களுக்கு உபசாரம் செய்து சிற்றுண்டி பரிமாறினாள்



"மாதவன் எங்கே மாமி?" என்று கேட்டாள் பாமா.

"அவனு? வீட்டில்தான் இருக்கிறுன். எத்தனைக் கூப்பிட்டாலும் வர மாட்டேன் என்கிறுன். அதென்ன பொல்லாத்தனமோ, தெரியவில்லை!" என்றுள் அம்புஜம்.

"அவன் தான் நேற்று சொன்னுனே, பாமாவை அவனே கல்யாணம் பண்ணிக் கொள்கிறுனும். அந்த பொறுமைதான் காரணம்" என்றுர் சேதுராமன்.

வந்திருந்த கல்யாணப் பிள்ளையிலிருந்து ஊரார் அனைவரும் 'கொல்' லென்று சிரித்தார்கள்.

எல்லாம் முடிந்த பிறகு பாமா தின்பண்டங்களுடன் அடுத்த வீட்டுக்குள் சென்றுள். கவலையே உருவாய்க் கன்னத்தில் கை வைத்து உட்கார்ந்திருந்த மாதவனின் அருகில் போய் நின்றுள்.

"கண்ணே, மாதவா! உனக்கு என்பேரில் என்னடா, கோபம்? இதோ பார், லட்டும் மைசூர் பாகும் கொண்டு வந்திருக்கிறேன்" என்று பலகாரத் தட்டை அவன் முன் வைத்து, அவன் முகத்தைத் திருப்பினுள்.

கண்களில் நீர் பெருக உட்கார்ந்திருந்த மாதவனின் முகம் களையிழந்து வாடிக் கிடந்தது.

"எதற்காகடா அழுகிறுய்?" என்று கேட்டாள் பாமா.

"ஒன்றுமில்லை. உனக்குத் தான் கல்யாணமாச்சே!" என்றுன் மாதவன், வெறுப்புத் தொனிக்கும் குரலில்.

"ஆமாம், கல்யாணந்தான். அதற்காக நீ அழவேண்டுமா, என்ன?" என்று கேட்டாள் அவள்.

மாதவன் அவளைப் பாதிக் கேலியாகவும் பாதிக் கோபமாகவும் பார்த்தான்.

"நீதான் சொல்லேன். பிறந்ததிலிருந்து என்னேடு விளையாடிவிட்டு நீ யாரோ இன்று வந்தவரோடு கல்யாணம் பண்ணிக்கொண்டு ஊரையும் விட்டுப் போகிறேன் என்கிறுயே!?"

குழந்தைதான் என்றுலும், கேள்வியின் அர்த்தம் ஆழமானதாக இருந்தது. குழந்தைகளின் மனமே விசித்திரமான ஒரு புதிர். மண் வீடு கட்டி விளையாடும் குழந்தைகள், அந்த வீட்டை மண்ணுல் ஆனது என்று நினைத்தால்தானே? மரப்பாச்சியை வைத்துக்கொண்டு விளையாடும் குழந்தை அதற்குப் பாலூட்டித் தாலாட்டி மகிழ்கிறது. பாமாவின் அன்பில் திளைத்து வளர்ந்து வந்த மாதவனுல் அவள் பிரிவைச் சகிக்கமுடியவில்லை.

மாதவன் சொன்னதைக் கேட்டுப் பாமா 'கலகல' வென்று சிரித்து விட்டுப் போய் விட்டாள்.

ஃ ஃ ஃ

பாமாவின் கல்யாணம் அமர்க்களப்பட்டது. காரில் மாப்பிள்ளை ஜானவாஸ ஊர்வலம் போகும்போதும், அடுத்த நாள் உதயத்தில் பாமாவின் கழுத்தில் மாலையிட்டு, அவள் கரம் பற்றும்போதும் மாதவன் அவன் வீட்டு ஜன்னலின் அருகில் உட்கார்ந்தே அக்காளைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"இப்படி ஒரு பொறுமையா அந்தப் பையனுக்கு?" என்று பாமாவின் தாய் அலுத்துக் கொண்டாள்.

"நாற்றுக் கிழவன் மாதிரி நீயும் உன் முகமும்!" என்று மாதவனின் தாய் அவனைக் கடிந்து கொண்டாள்.

"மாதவா! அடுத்த வீட்டில் ஜிலேபி பண்ணியிருக்கிறுர்கள். பன்னீர் ஜிலேபி! ஏ ஒன்! போய்ச் சாப்பிட்டுப் பார்!" என்றுர் சேதுராமன்.

அவன் உள்ளமே கசந்திருக்கும்போது ஜிலேபி மட்டும் இனிக்கவா போகிறது?

கல்யாணம் முடிந்தவுடன், பாமா அவள் கணவனுடன் ஊருக்குப் புறப்பட்டாள்.

வண்டியில் ஏறிப் புறப்படும் போது, அடுத்த வீட்டுக்குள்

ஒரு தாய் மிக ஆவலுடன் எதிர்பார்க்கும் காட்சி. பள்ளிக்கூடத்திலிருந்து குழந்தைகளை ஏற்றிவரும் பஸ்தான்.

நுழைந்து. "மாதவா! நான் ஊருக்குப் போய் வருகிறேன். சமத்தாக இருக்கிறாயா, மாதவா? என்னை மறந்து விட மாட்டாயே?" என்று பாதிக் கேலியாகவும் பாதி வருத்தமாகவும் கேட்டாள் பாமா.

மாதவன் மௌனம் சாதித்தான். அந்த மௌனத்தின் அர்த்தம் என்னவென்றே ஒருவருக்கும் புரியவில்லை.

ஃ ஃ ஃ

மாதவனின் மனத்தில்தான் எத்தகைய மாறுதல்? யாருடனும் அதிகம் பேசுவதில்லை. 'கல கல'வென்று சிரிப்பதில்லை. பள்ளிக்குப் போனாலும், மற்றச் சிறுவர்களைப் போல் எதிலுமே பங்கெடுத்துக் கொள்வதில்லை. அவனுடைய போக்கு ஆசிரியர்களுக்கும் பெற்றோருக்கும் வியப்பையும் வருத்தத்தையும் அளித்தது.

"அந்தப் பெண் இப்படி ஒரு குழந்தையை அநியாயமாகக் கெடுக்க வேண்டாம்" என்று சொல்லி அங்கலாய்த்தாள்.

"பைத்தியம்! பாமா அவனிடம் எவ்வளவு அன்பாக இருந்தாள்! கண்டபடியெல்லாம் பேசாதே" என்று சேதுராமன் அவளை அதட்டி விட்டு, மாதவனை எப்படிக் குழந்தையாக மாற்றுவது என்பதில் ஈடுபட்டார்.

இப்படியே ஒன்றரை வருஷங்களாகிவிட்டன. மாதவன் மனசில் ஏற்பட்ட ஏக்கம் குறையவே இல்லை. அப்பொழுதுதான் அவர்களுக்கு ஒரு புதுச் செய்தி வந்தது. பாமா பிரசவத்திற்காக பிறந்தகம் வரப் போகிறாள் என்பது தெரிந்ததும், சேதுராமன் மகிழ்வடைந்தார்.

பாமா வந்ததை மாதவன் தான் முதலில் பார்த்தான். உருத் தெரியாமல் இளைத்து வாடிப் போயிருந்த அவனைப் பார்த்து அவள் திகைத்துப் போனாள்.

"மாதவா! என்னடா இப்படி ஆகிவிட்டாய்?" என்று விசாரித்தாள். மாதவன் பேசவே இல்லை. தலையைக் குனிந்து கொண்டு உள்ளே போய் விட்டான். அப்புறம் அந்த வீட்டில் வளையல் காப்பும் சீமந்தமும் அமர்க்களப்பட்டன. அவைகளை அந்தப் பிஞ்சு உள்ளம் எப்படி வரவேற்றதோ, யாருக்குத் தெரியும்!

ஆனால், ஒரு நாள் உதயத்தில் பாமாவின் வீட்டிலிருந்து குழந்தையின் அழுகுரல் மிதந்து வந்தது. மாதவன் துள்ளியெழுந்தான். விசையாக எறிந்த அம்பு போல் அவள் வீட்டுக்கு ஓடினான். அங்கே அந்த அறையின் ஒரு சின்னஞ் சிறு பெண் குழந்தை வீறிட்டு அழுதுகொண்டிருந்தது. மாதவன் வாயிற்படி அருகில் தயங்கி நின்றான். ஒரே ஒரு கணந்தான். அடுத்த நிமிஷம் உள்ளே ஓடி அந்தக் குழந்தையின் பட்டுக் கன்னங்களில் முத்தமிட்டான்.

"பாமா! இந்தப் பாப்பா எனக்குத்தானே?" என்று கேட்டான்.

"ஆமாம், மாதவா! அவள் உனக்குத்தான்" என்றான் பாமா.

மாதவனின் முகத்தில்தான், எத்தகைய மலர்ச்சி? அவன் குமுத வாயில் முகிழ்த்த சிரிப்புடன் அங்கிருந்து துள்ளி விளையாட வெளியில் சென்றான். அவனுடைய சூன்யமான மனத்தை அன்பு மயமாக்க அவனுக்கு ஒரு ஜோடி கிடைத்துவிட்டது.

"குழந்தைகளின் மனமே ஒரு புதிர்" என்றார், இக் காட்சியைக் கவனித்த சேதுராமன்.




விடிய இன்னும் இரண்டு மணி நேரம் இருக்கலாம். லேசான காற்று ஜிலுஜிலு என்று வீசிக் கொண்டிருந்தது. அந்தப் பெரிய தோட்டத்தின் கோடியில் அழகிய மாட்டுக் கொட்டகை ஒன்று காணப்பட்டது. அழகிய என்று சொன்னதற்குப் பொருள் உண்டு. கொட்டகையைச் சுற்றி குளிர் தருக்கள், கொட்டகை மீது படர்ந்திருந்த சுரைச் செடியில் மஞ்சள் நிற மலர்கள் பாதி வெடித்துக் கதிரவனின் வருகைக்காக வானத்தைப் பார்த்த வண்ணம் காத்திருந்தன. காலைக் கன்னி உறக்கம் தெளிந்து தன்னை உதறிக் கொள்ளும் நேரம். கொட்டிலில் இருந்த பசு விழித்துக் கொண்டு குணதிசையைப் பார்த்துச் சிரம் தாழ்த்தி வணங்கிற்று. சற்றுத் தொலைவில் படுத்திருந்த கன்றுக்குட்டி காதுகளை நிமிர்த்திக் கொண்டு தாயைத் திரும்பிப் பார்த்தது. 'அம்மா விழித்துக் கொண்டு விட்டாள்.' தனக்குள்ளே சொல்லிக் கொண்டது அது. கன்று முணுமுணுத்தது எப்படியோ தாய்க்குத் தெரிந்து விட்டது.

''அடியே சிவப்பி! விழித்துக் கொண்டாயா?'' என்று தாய் கேட்டது. சிவப்பி தலையைப் பலமாகக் குலுக்கியது. கழுத்தில் கட்டியிருந்த சதங்கைகள் 'கிளுங் கிளுங்' கென்று ஓசையிட, ''விழித்துக் கொண்டேன் அம்மா. எனக்கு ரொம்பக் குளிராக இருக்கிறதே. உன் உடம்போடு ஒட்டிக் கொண்டு படுத்தால் தேவலை அம்மா...'' என்று குறைப்பட்டுக் கொண்டது அது. பசு சிரித்தது.

''அசட்டுப்பெண்ணே! உனக்கு ஆசை அதிகம். இந்த மட்டும் நம் எஜமானன் மிக மிக நல்லவர். ஏதோ கொஞ்சம் உன் மீது கருணை இருப்பதால் உனக்குப் பால் விட்டு வளர்க்கிறார்......... உனக்கு முன்பு ஒரு மகன் பிறந்தான் எனக்கு......ஹூம்...என்ன அழகு? என்ன அழகு?......'' என்று விசனத்துடன் வியந்தது பசு.

''அவன் எங்கேயம்மா?'' என்று கேட்டது சிவப்பி. தாயின் கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் வழிவதை அந்த இருள் பரியும் நேரத்திலும் சிவப்பியால் பார்க்க முடிந்தது.

''அழாதே அம்மா, நீ அழுதால் எனக்கும் அழுகை வருகிறது. வாயற்ற நமக்கு உணர்ச்சிகளும் அற்றுவிட்டாற்போல இந்த மனி

# அழகு தமிழ் - இனி பழகு தமிழ்

விடை :

1. அக்னாலட்ஜ்மெண்ட் ட்யூ
2. புக்போஸ்ட்
3. அப்பர் டிவிஷன் கிளார்க்
4. டெண்டர்
5. ஹைவேஸ் டிபார்ட் மெண்ட்
6. பப்ளிக் வொர்க்ஸ் டிபார்ட்மெண்ட்
7. லோயர் டிவிஷன் கிளார்க்
8. டெபுடி சீப் அக்கௌண் டண்ட்
9. ஹைவேஸ் இன்ஜினியர்
10. கமிஷனர்
11. ரெஜிஸ்டிரார்
12. மணிஆர்டர்
13. கலெக்டர்
14. டிராப்ட்ஸ்மென்
15. அனுப்புபவர் *(From)*
16. டைரக்டர்
17. மேனேஜர்
18. பப்ளிக்சர்வீஸ் கமிஷன்

தர்கள் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். சொல்லு அம்மா...''

''அவன் வெள்ளை வெளேர் என்று இருப்பான். நெற்றியில் சூலம் போட்டாற்போல் இரண்டு கருப்புக் கோடுகளும், கன்னங்கரிய விழிகளுமாக அவன் துள்ளிக் குதித்து என்னிடம் பால் உண்ண வரும்போது நான் எத்தனை பெருமைப்பட்டேன் தெரியுமா?'' பசு வேதனைப்படுவது நன்றாகத் தெரிந்தது.

சிவப்பி பரிவுடன் தாயைத் திரும்பிப் பார்த்தது.

''போ...அம்மா...தொடர் கதை மாதிரி நீயும் நிறுத்தி நிறுத்திப் பேசுகிறாய். அவன் எங்கே என்று சொல்...இல்லாவிட்டால் எனக்குக் கோபம் வரும் அப்புறம் நான் அழுவேன்......''

''சொல்கிறேனடி கண்ணே! இதற்கு முன்பு ஒருவரிடம் இருந்தேன். அவருக்கு என்னுடைய ஒவ்வொரு சொட்டுப் பாலும் விலை மதிப்பற்றதாக இருந்தது. சொட்டச் சொட்டக் கறந்து கொண்டு வெறும் மடியை விட்டுச் சென்றால் பச்சைக் குழந்தை எதைச் சாப்பிடுவான்? மடியை இழுத்துச்சுவைத்துவிட்டுவெறும் வாயைக்கூட்டி விழுங்கியபடி என் முகத்தை அண்ணாந்து பார்ப்பான் அவன்......எத்தனையோ பச்சைக் குழந்தைகளின் பசி தீர்க்கும் அமுதமாக இருக்கும் என் பால் என் குழந்தையின் பசி தீர்க்க உதவவில்லை.''

''அப்புறம்!''

''பசித்துப் பசித்து வாடி ஒரு நாள் அவன் இறந்து விட்டானடி கண்ணே...'' பசுவின் ஓலம் பெரிதாகத்தான் இருந்தது.

''அம்மா! அவன் கையாலாகாதவன். நானாக இருந்தால் கட்டுத்தறியிலிருந்து அறுத்துக்

கொண்டு ஓடிவந்து பால் குடித்து எப்படியோ பிழைத்துக் கொள் வேன்...'' சிவப்பி ரோஷத்துடன் சீறிப் பெருமூச்சு விட்டது.

''ஆஹா! செய்வாய்! செய் வாய்! எதோ உன்னைக் கட்டி யிருக்கும் கயிற்றை அவிழ்த்துக் கொண்டு வாயேன் பார்ப்போம்... அதெல்லாம் முடியாது.''

சிவப்பி என்றோ இறந்துபோன தன் உடன்பிறந்தானை நினைத்து வருந்தியவாறு தலை குனிந்து நின்றது.

பசு ஆதுரத்துடன் மகளைத் திரும்பிப் பார்த்தது.

''என்னடி கண்ணே! யோசனை பலமாக இருக்கிறது?''

''ஒன்றுமில்லை அம்மா. உன் மடியில் இருக்கும் பால் எப்படி இந்த மனிதர்களுக்குச் சொந்த மானது?...'' பசு கிழ்த் திசை யைத் திரும்பிப் பார்த்தது. நீலப் பட்டில் பதித்த வைரமணி போல் விடிவெள்ளி சுடர் விட்டது.

''எனக்கு மட்டும் என்ன தெரி யும்? என் பாட்டி உன்னைப் போல் நான் இருக்கும்போது இரவு வேளைகளில் எனக்குக் கதைகள் சொல்லுவாள். இப் படித்தான் கேட்டேன் நானும், அவள் கூறியதைச் சொல்கிறேன் கேள்...'' என்று ஆரம்பித்தது பசு.

ஆதி மனிதன் பல விஷயங் களில் நாகரிக மற்றவனாகத் திரிந்து வந்த காலம் அது. எத் தனையோ ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால், உலகில் வளமையும், செழுமையும் பொங்கிப் பெருகிய அந்த நாளிலே காடுகள் பூராவும் நெல்மணிகள் இறைபட்டுக் கிடந் தன. மரங்களில் கனிகள் பழுத் துத் தொங்கின. பூமிக்கடியில் கிழங்குகள் புதைந்து கிடந்தன. செடிகளில் மலர்கள் சிரித்துக் கொஞ்சின. ஆணும், பெண்ணும் தங்களுக்கு என்று ஒரு பெயர் கூடச் சூட்டிக்கொள்ளாத காலம். ஒருவரை ஒருவர் ஊளையிட்டு அழைத்துக் கொண்ட காலம். ஆனால், இயற்கை எப்படியோ அவர்களுக்குப் போதித்திருந்தது. அத்துடன் 'பசி' என்கிற ஒருவித உணர்ச்சியும் அவர்களுக்கு ஏற்



பட்டிருந்தது. எதையாவது உண்ண வேண்டும் என்கிற ஆவலிலே கையில் அகப்பட்டதை உண்டார்கள். சில இனித்தன, சில கைத்தன, சில துவர்த்தன. சில அவர்களின் உயிருக்கு நஞ்சாகவும் அமைந்தன. அதை நீக்கி....விஷத்தை நீக்கி....அமுதத்தைத் தேடித் தேடி அலைந்தான் ஆதி மனிதன்.

பயங்கரமான காட்டிலே ஓங்கிப் பின்னிப் படர்ந்து செழித்து வளர்ந்த மரங்களினூடே தன் காதலியை அழைத்துக் கொண்டு நடந்து சென்று கொண்டே யிருந்தான். அவன்.

அங்கே! அவன் எதிரில் வெள்ளை உருவத்தில் ஒரு பிராணி நின்று கொண்டிருந்தது. அதன் அருகில் சின்னஞ்சிறு கன்று ஒன்று அதன் மடியைமுட்டி முட்டிப் பால் அருந்திக் கொண்டிருந்தது. பால் என்றோ, அது உயிர்களைக் காக்கும் அமுதமென்றோ அவனுக்குத் தெரியாது. கன்றின் வாயிலிருந்த காம்பைத்தவிர, மற்றகாம்புகளிலிருந்து, வெள்ளை நிறத் திரவமொன்று பெருகி வழிவதைக் கண்டான் ஏதோ ஆவலினால் உந்தப்பட்டு அதைக் கைகளில் ஏந்திச் சுவைத்துப்பார்த்தான் அவன்.

''ஆஹா!....என்ன சுவை? என்ன சுவை?''

வியப்புடன் கூவிக் குதித்தான் அவன்.

''பிறகு?'' என்று கேட்டது சிவப்பி.

''பிறகு என்ன? பசி தீர்க்கும் கடவுளாக நினைத்து அதை வணங்கவே ஆரம்பித்து விட்டான். ஆனால், ஒன்றை மாத்திரம் அவன் சந்ததியினர் மறந்தே விட்டனர். பால், பசு ஈன்ற கன்றுக்கும் சொந்தமென்பதை அறவே மறந்து ஒட்டக் கறந்து விட்டார்கள்.''

''மனிதனின் பேராசையைப் பார்த்தாயா அம்மா?''

''அதுமட்டுமல்ல சிவப்பி. இறந்துபோன கன்றின் உடலில் வைக்கோலைத் திணித்து நம்மை ஏமாற்றும் பெரும் புரட்டுக்காரனாகவும் ஆகிவிட்டான் மனிதன்.'' உள்ளக் கொதிப்புடன் கூறிய பசு மனித வர்க்கத்தையே வெறுப்பதுபோல் காணப்பட்டது.

வெளியே ஆளரவம் கேட்க ஆரம்பித்து விட்டது. வெள்ளிக் கீற்றுகளென கதிரவனின் ஒளிக் கற்றைகள் கொட்டிலுக்குக் கோலம் புனைந்தன.

சிவப்பி உடலைச் சிலிர்த்துக் கொண்டு எழுந்து நின்றது. அதோ எஜமானனின் எட்டு வயதுப் பையன் ஒருத்தன் சிவப்பியைப் போலவே துள்ளிக் குதித்துக்கொண்டு ஓடி வருகிறான். கட்டுத்தறியிலிருந்த கன்றை அவிழ்க்கிறான். ''போ... போ...உன் அம்மாவிடம் பால் குடி போ...'' என்று அவிழ்த்து விட்டு விட்டு ''நான் என் அம்மாவிடம் பலகாரம் வாங்கிச் சாப்பிடப் போகிறேன்'' என்றவாறு உள்ளே ஓடிவிட்டான்.

மனிதன் பெரியவனாக வளருவதற்கு முன்பாகபல அரிய பெரிய பண்புகள் அவனிடம் குடி கொண்டுதான் விளங்குகின்றன.

ஆனால், பண்பைப்பற்றி அவன் பிரசங்கம் புரிய ஆரம்பித்தவுடன் அவை வெறும் பேச்சோடு நின்று செயல் பட மறுக்கின்றன.

சிவப்பி தாயின் மடியில் முட்டி முட்டிப் பால் அருந்தியது. காலை வெயிலில் அதன் வாயினின்று ஒழுகும் அமுத வெள்ளத்தைப் பார்த்தவாறு நின்றிருந்தான் பையன்.




உச்சி வானில் சாய்ந்து தொங்கும் அரை நிலவை வெறித்துப் பார்த்தபடி படுத்திருந்தாள் கிழவி ரங்கம். பொழுது விடிந்தால், அன்றுடன் ஆறு மாதங்கள் ஆகின்றன, அவள் மகன் முத்து பட்டாளத்தில் சேர்ந்து. கடந்த ஏழு நாட்களாகக் கிழவி சரியாகச் சாப்பிடவில்லை; தூங்கவுமில்லை. ஒரே மகன். பிறந்த நாளாக அவளை விட்டுப் பிரியாத ஒரே பிள்ளை. எப்படித்தான் அவனுக்கு மனசு வந்ததோ, தெரியவில்லை.

அவள அருகில் படுத்துத் தூங்கும் அந்த அபலைப் பெண்ணைப் பார்க்கும் போது மகனின் பரிவு மேலும் வேதனையை அளித்தது.

ரங்கம் படுக்கையில் திரும்பிப் படுத்தாள். வானில் சற்று முன் சாய்ந்து தொங்கிய நிலவு, திரௌபதியின் முகத்துக்கு நேராக வந்து ஒளி வீச ஆரம்பித்தது. பாவம், ரங்கத்தின் அண்ணன் மகள் அவள். குழந்தையிலேயே தாய், தகப்பனை இழந்து அத்தையின் வீட்டில் வளர்ந்து வந்தாள். ஆயிற்று, பையன் படித்து முடித்து வேலைக்குப் போனதும் முகூர்த்தம்வைக்க வேண்டியதுதான்.

திரௌபதி கிராமத்துப் பெண்ணானால் எழுதப் படிக்கக் கற்றுக்கொள்ளவில்லை. முத்து எவ்வவோ முயன்றும் ரங்கம் அவளைப் பள்ளிக்கு அனுப்பச் சம்மதிக்கவில்லை. வீட்டில் அத்தைக்கு உதவியாக வேலைகள் செய்து குடும்பத்தை நன்றாக நிர்வகிக்கப் பழகிக் கொண்டாள் திரௌபதி. அவள் உள்ளத்தில் என்ன கனவுகள் மலர்ந்திருக்கும், அவள் முத்துவைக் காதலிக்கிறாளா இல்லையா என்பதைப்பற்றி ஒருவரும் ஆராயவில்லை.

காலம் அதன் போக்கில் போய்க் கொண்டிருந்த போது திடீரென்று



சரோஜா ராமமூர்த்தி



முத்து ஒரு நாள் வீரமும், துடிப்பும் நிறைந்த முகத்துடன் வீட்டுக்கு வந்தான். திரௌபதி, அத்தான் கைகால் கழுவுவதற்காகத் தண்ணீர் மொண்டு வந்து வைத்தாள். சாப்பிடத் தட்டை வைத்து விட்டு நின்றாள்.

"அம்மா எங்கே?" என்று கேட்டான் முத்து.

"வெளியே போயிருக்காங்க..."

"எங்கே போயிருக்காங்க? உங்கிட்டே சொல்லிட்டுப் போகலையா?"

"பெரிய நாட்டாமை வீட்டுக்குன்னாங்க—"

"ஓஹோ இந்தம்மாவுக்கென்ன வேலை? எப்ப பார்த்தாலும் கல்யாண நெனப்புதான்: நாள், நட்சத்திரம் கேக்கப் போயிருப்பாங்க. இதோ பார் திரௌபதி! நான் பட்டாளத்திலே சேர்ந்துட்டேன். நாலு நாளைக்கு முன்னே நம் பிரதம மந்திரி பேசியதை ரேடியோவிலே கேட்ட பிறகு எனக்கு ஒன்றுமே பிடிக்கலே. ஆமாம்....அம்மா கேட்டா வருத்தப்படுவாங்க. இருந்தாலும் தேசத்துக்கு என்னாலானதைச் செய்யணும்கிற ஆவலைத் தடுக்க முடியலே..."

திரௌபதி அவனையே வெறித்துப் பார்த்தாள். உணவுத் தட்டை நகர்த்தியபடி மனையில் உட்கார்ந்தான் முத்து.

ரங்கம் திரும்பி வந்தபோது மகன் புதிய உடை அணிந்து நிற்பதைக் கண்டாள்.

"என்னடா தம்பி, இதெல்லாம்?" என்று அவள் அலறியே விட்டாள்.

முத்து அன்னையைத் தட்டிக் கொடுத்து ஆறுதல் கூறினான். அவள் தன் கையால் மகனின் நெற்றியில் திலகம் வைத்து அனுப்புமாறு அவளுக்குத் தேறுதலும், தைரியமும் கூறினான் முத்து.



இந்த ஆறு மாதங்கள் எப்படித்தான் சிட்டாகப் பறந்தனவோ தெரியவில்லை. வாரம் தவறாமல் முத்துவிடமிருந்து கடிதம் வந்து கொண்டிருந்தது. சண்டை மும்முரமாக நடக்கும்போது இடையில் பதினைந்து இருபது நாட்கள் ரங்கம் கடிதத்துக்காகக் காத்திருக்க வேண்டியிருந்தது. கடிதம் வந்தால், உடனே படித்தோம் என்பதில்லாமல் நாட்டாண்மைக்காரர் வீட்டைத் தேடி ஓடுவாள் ரங்கம். அவர் தம் அலுவல்களை முடித்து விட்டுப் படித்துச் சொல்லும் வரை ரங்கத்தின் மனத்திலே எத்தனையோ உணர்ச்சிகள், போராட்டங்கள். 'தம்பி எத்தனை தரம் சொன்னான் இந்தப் பொண்ணைப் படிக்கப் போடும்படி? திரௌபதி நாலு எழுத்துப் படித்திருந்தால் இப்படிக் கடிதத்தைத் தூக்கிக் கொண்டு அலைய வேண்டாமே!' ரங்கம் தன்னையே நொந்து கொண்டாள்.

வெளியே பேச்சரவம் கேட்டது. திரௌபதியுடன் இளைஞன் ஒருவன் நின்றிருந்தான்.

"அத்தை! உங்களைப் பார்க்க யாரோ வந்திருக்காங்க..." என்றவாறு அவள் உள்ளே நுழைந்தாள். ரங்கம் தன் வேதனையை உதறி விட்டு வெளியே வந்தாள்.

"யாரு தம்பி?" என்று விசாரித்தாள். மௌனமாக நின்ற அந்த இளைஞன் தன் கரங்கள் இரண்டையும் குவித்து அவளை வணங்கினான். பிறகு மெதுவாகப் பேச ஆரம்பித்தான்.

"அம்மா! நாங்கள் கல்லூரி மாணவர்கள். பரீட்சை எழுதி விட்டோம். விடுமுறையைக் கழிக்க இந்தக் கிராமத்துக்கு

வந்திருக்கிறோம். உங்களுக்குப் புரியும் என்று நினைக்கிறேன். கிராமத்தில் எத்தனையோ விஷயங்கள் பின் தங்கி இருக்கின்றன. இருந்தாலும், இந்த எளியவர்களிடம் உள்ள சில திறமைகளை நாங்கள் கற்றுக் கொண்டு, எங்களால் முடிந்த சேவையைச் செய்ய வந்திருக்கிறோம் ..... உங்கள் மகன் முத்து, பட்டாளத்தில் சேர்ந்திருக்கிறாராம். தேசத்துக்காக ஒருவனை அர்ப்பணித்த வீரத் தாயைப் பார்த்துப் பேசவே வந்தேன், அம்மா...''

ரங்கம் மாணவனின் பேச்சைக் கேட்டுக் கண்களில் வழிந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். அவனை அண்ணாந்து பார்த்தாள். ஏறக்குறைய முத்துவின் வயதுதான் அவனுக்கும் இருக்கும். முத்துவை விட சற்று உயரமாகவும், சிவப்பாகவும் இருந்தான். கிராப்புத் தலையை வாரியிருக்கும் விதம், உடை அணிந்திருக்கும் விதம் யாவுமே முத்துவைப்போல் இருந்தன. ரங்கத்தின் உள்ளம் அன்பால் நிறைந்தது.

''உள்ளே வா தம்பி! காப்பி பலகாரம் சாப்பிடு. அப்புறம் என் மகன் கிட்டே யிருந்து ஒரு கடுதாசி வந்திருக்கு. அதைப் படிச்சுக் காட்டிட்டுப் போ. இனிமேல், கடுதாசி படிக்கக் கண்டவங்களைத் தேடிப் போக வேண்டாம்னு சொல்லு... ஒன் பேரு என்ன தம்பி?''

''சண்முகம்.''

இளைஞன் புன் முறுவலுடன் உள்ளே நுழைந்தான். திரௌபதி கொண்டு வைத்த காப்பி, பலகாரத்தைச் சாப்பிட்டான்.

''தம்பி! உனக்குச் சாப்பாடெல்லாம் எங்கே?'' என்று கேட்டாள் ரங்கம்.

''கூட வந்திருப்பவர்கள் சமைக்கிறார்கள் அம்மா....'' என்றான் சண்முகம்.

''பரவாயில்லை தம்பி. நீ இங்கே இருக்கிற வரைக்கும் நம் வீட்டிலேயே சாப்பாட்டை வைத்துக் கொள். உன்னைப் பார்த்தால்..'' ரங்கம் வார்த்தையை முடிக்கவில்லை. அவள் கண்கள் மகனின் படத்தில் சென்று நிலைத்தன. மீண்டும் அவள் விழிகளைத் திருப்பிய போது கண்ணீர் உருண்டது.

''ஆகட்டும் அம்மா....எனக்கும் உங்களைப் போல வயது சென்ற தாய் இருக்கிறார்கள். நானும் ஏழைதான். சர்க்காரின் உபகாரச் சம்பளத்தில் படித்தவன். அம்மாவைப் பார்த்து ஒரு வருஷம் ஆகிறது. கிராமத்தில் வேலை முடிந்ததும் ஊருக்குப் போக வேண்டும்...'' என்றான் சண்முகம்.

அன்றையிலிருந்து சண்முகம் அவர்கள் குடும்பத்தவன் போல் பழகி வந்தான். முத்துவின் கடிதங்களைப் படிப்பது மட்டுமல்லாமல், பொழுது போக்குக்காகப் பல கதைகளும் கூறுவான். கடைத் தெருவுக்குப் போய் சாமான்கள் வாங்கி வருவான். கிணற்றிலே நீர் இறைப்பான். இப்படி அந்தக் குடும்பத்தில் ஒட்டி வாழ்வதில் அவன் உள்ளத்துக்கும் ஓர் ஆறுதல் ஏற்பட்டிருந்தது.

வைகாசி மாதம் பிறந்து விட்டது. கத்தரி வெயிலின் கொடுமை ஊரை ஆட்டிப் படைத்தது. ஊரில் எத்தனையோ வியாதிகள். மாணவர்கள் சமூக சேவை செய்வதால் ஊரில் வியாதிகள் அதிகம் பரவாமல் இருந்தன. வெயிலின் கடுமை தெரியாமல் இருக்க சண்முகம், ரங்கத்தின் வீட்டு வாயிற்படி அருகில் தென்னங் கீற்று வேய்ந்து பந்தல் போட்டுக் கொண்டிருந்தான். திரௌபதி கட்டுகளாகக் கீற்றுகளை எடுத்துக் கொடுத்து உதவிக் கொண்டிருந்தாள்.

ரங்கம் வெற்றிலையைக் குதப்பியபடி, பனிவரையின் தனிமையில் காவல் புரியும் தன் மகனைப் பற்றிய கற்பனையில் மூழ்கி யிருந்தாள். கிழவி தூங்குகிறாளா, விழித்திருக்கிறாளா என்று சொல்ல முடியாது. உள்ளம் எண்ணங்களை அசை போட, அதன் சுகத்திலே தன்னையே மறந்திருந்தாள் அவள்.

''சார்! தந்தி!....'' சிவப்புச் சைக்கிளைத் தள்ளிக் கொண்டே தந்திக்காரர், நிழலுக்காகத் தென்னை மரத்தின் கீழே ஒதுங்கினார்.

மேலே இருந்த சண்முகம் குதித்துக் கீழே இறங்கினான். கையெழுத்திட்டுத் தந்தியைப் பிரித்தான்.

''தி....டிபன்ஸ் மினிஸ்ட்ரி ரிக்ரெட்ஸ்ட்..'' என்கிற வாக்கியங்களைப் படித்தவன் மலைத்துப் போய் நின்றான். அவன் பூராவும் படிப்பதற்கு முன்பு தந்திக்காரரின் சைக்கிள் தூரத்தில் சென்று மறைந்தது.

தம்பீ! நல்ல இளநியா பறிக்கச் சொல்றேன். வெயிலுக்குச் சாப்பிடறயா? முத்துவுக்கு இளநின்னா உசிரு தம்பீ'' என்றவாறு கிழவி, தன் மோன நிலையிலிருந்து இந்த உலகுக்கு வந்து கூறினாள்.

''அம்மா!....''

''என்ன தம்பீ? இளநி சாப்பிடறயா?''

''அம்மா.....''

''என்ன தம்பீ? உன் கையிலே என்னப்பா கடுதாசி? தம்பி போட்டிருக்கானா?''

''அம்மா.....'' என்றவாறு சண்முகம் அலறினான். ''அம்மா! உங்க மகன் வீரனாக மட்டுமில்லை. அமரன் ஆகி விட்டான். அம்மா....''

''என்ன தம்பீ? நீ என்னப்பா சொல்லுறே? தம்பி எப்போ வருவானாம்?''

சண்முகம் அந்த எளிய, அன்பு நிறைந்த அன்னையைப் பார்த்தான்.

''அம்மா, முத்து சண்டையிலே அமரனாகி விட்டானாம்....'' என்று விளக்கினான். காலத்தைக் கடந்த அமரனைக் காலமாகி விட்டான் என்று குறிப்பிட விரும்பாமல் தன் தலையைத் தாழ்த்தி வணங்கினான் அவன்.

வேதனை, சோகம் என்னும் சொற்களால் இந்தத் துயரை விளக்கிவிட முடியாது, துன்பத்தின் எல்லையைக் கண்ட சண்முகம், அடுத்த நாளிலிருந்து அந்த வீட்டுக்கே வரவில்லை. ஊரிலே அம்மாவைப் பார்க்க வேண்டும் என்று கிளம்பிப் போனான்.

ஊரிலே அவனை நாலு பேர்கள் 'பிலு பிலு' வென்று பிடித்துக் கொண்டார்கள்.

''என்னதான் படியேன் தம்பி. பெத்தவ சீக்காக இருக்கிரு. எட்டிப் பார்க்காம இருந்துட்டியே'' என்றார்கள். அவன் தாய் உடல் நலமின்றி இருப்பதை அவன் அறியவில்லை. கல்லூரி விடுமுறை விட்டவுடன் கிராமத்துக்குப் போய் விட்டான் அல்லவா? கடிதங்கள் ஹாஸ்டலில் அவன் அறைக்குப் போயிருக்கும்.

எலும்பும் தோலுமாக இருந்தவளைப் பார்த்த போது அவன் நெஞ்சில் அவளைப் பற்றிய நம்பிக்கை வரண்டு விட்டது. மகனை இழந்த தாயின் துயரத்தின் முன்பு, இந்தத் துயரம் அவனை வெகுவாகப் பாதிக்கவில்லை. ஒன்றினால்

பாதிக்கப் பட்ட மனம், இன்னொன்றைத் தாங்கும் வலிமையை அடைந்திருக்கலாம்.

அவன் மனக் கண் முன்பு அடிக்கடி ரங்கமும், திரௌபதியும் தோன்றிக் கொண்டே யிருந்தார்கள். 'பாவம், அந்தக் கிழவி எப்படி யிருக்கிறளோ' என்று நினைத்துக் கொள்வான். மகன் தன் அருகில் இருப்பது சண்முகத்தின் தாய்க்கு ஆறுதலாக இருந்தது. அந்த வருடத்துடன் படிப்பு முடிந்து விட்டதென்றும், விரைவில் வேலை கிடைத்து விடும் என்று தாயிடம் கூறினான் சண்முகம்.

பெருமையும், களிப்பும் பொங்க மகனைப் பார்த்தாள். காலம் கடந்த பின் செய்த உதவி போல், வியாதி முற்றிய பின் எத்தனை வைத்தியம் செய்து என்ன பயன்? சண்முகம் எதிர் பார்த்தபடி அவனுடைய தாய் ஒரு நாள் கண்ணை மூடிவிட்டாள். தன்னந்தனியனாக அவன் இனி அந்த ஊரில் எதற்காக, யாருக்காக இருக்க வேண்டும்?

வெறிச் சோடிக் கிடந்த உலகத்தில் அவனுடைய உள்ளத்தைப் பகிர்ந்து கொள்ள இருவர் எப்பொழுதுமே தயாராக இருக்கிறார்கள் என்று உள் மனம் சொல்லிக்கொண்டே யிருந்தது.

ஒரு நாள் இரவு, வீட்டிலிருந்த ஒன்றிரண்டு உடமைகளுடன் அவன் ரயிலேறி விட்டான்.

அவனை அறியாமல் ரங்கத்தின் கிராமத்துக்கே புறப்பட்டான்.

உலகம் அற்புதமாக இருந்தது. சாலையில் நடந்தவன் ஊருக்குள் திரும்பினான். எதிரே திரௌபதி, வாய்க்காலில் குளித்து விட்டு புத்தம் புதிய மலராக வந்து கொண்டிருந்தாள். ஒப்பனை யற்ற அவள் முகம் பளிங்காக இருந்தது. நெற்றியில் மஞ்சள் படிந்த அந்த முகத்தைப் பார்த்தான். பேச வில்லை.

''நீங்களா?'' என்று வாயை முதன் முதலாகத் திறந்தாள் அவள்.

''ஆமாம்..... அம்மா எப்படி யிருக்காங்க...''

திரௌபதி பதில் பேசவில்லை.

''வீட்டுக்கு வாருங்கள்'' என்று மட்டும் கூறினாள்.

சண்முகமும், திரௌபதியும் ஒன்றாக வீட்டுக்குள் நுழைந்த போது இடியாப்பத்தின் மணம் வீசியது. கூடத்தில் முத்துவின் படத்தின் மீது மல்லிகை மாலை மலர்ந்து துவண்டிருந்தது.

''தம்பி! வாப்பா....சொல்லாமல் போயிட்டியே!'' ரங்கம் வரவேற்றாள் அவனை. கிழவி ஒடுங்கிப் போய் விட்டாள்.

''உன் அம்மா எப்படி இருக்காங்க தம்பி?''

''அம்மா! இனிமேல் நீங்கதான்..''

ரங்கம் விஷயத்தைப் புரிந்துகொண்டாள். ''தம்பி ! முத்து சாகவில்லை தம்பி. அவன் இறந்து விட்டான்என்று யார் சொன்னாலும் நான் ஒப்புக் கொள்ளவில்லை....அப்படித் தானே தம்பி!''

''ஆமாம்...அம்மா....இனி நான் தான் உங்கள் மகன்....'' என்றான் சண்முகம்.

திரௌபதி முதன் முதலாக சண்முகத்தை நேருக்கு நேர் பார்க்க வெட்கப் பட்டாள்.

# பண்பும் பயனும்

ஸரோஜா ராமமூர்த்தி

நீல வானத்தை முகர்ந்து முத்தமிடுவது போல நெடிதுயர்ந்து நின்ற மலைமுகடு வானத்துடன் உறவாடிக் கொண்டிருந்தது. பகலும் இரவும் ஒன்றாகக் கலக்கும் அந்தி வேளை. கீழ் வானத்திலே நிலவும், அடிவானத்திலே கதிரவனுமாக உலகை ஒளியில் குளிப்பாட்டிக் கொண்டிருந்தனர்.

அப்பொழுது மாரிக்காலம்முடிந்து பனிக்காலம் ஆரம்பமாகிவிட்டதற்கறிகுறியாக வானத்திலிருந்து மெல்லிய பனிப்படலம் புகைபோல் உலகின் மீது இறங்கி வந்து கொண்டிருந்தது. ஐப்பசி, கார்த்திகையில் பெய்த பெரு மழையில் மூங்கியெழுந்த உவகையில் மரங்கள் பசுமை செழித்து மதர்த்து நின்றன. இந்த அழகு மயக்கத்தினுள் மாதங்கியின் மனம் புகவில்லை. துயரம் தோய்ந்த முகத்துடன் ஓங்கி வளர்ந்திருந்த ஆலமரத்தின் வேரின் மீது உட்கார்ந்து சிந்தனையில் லயித்திருந்தாள் அவள்.

அவளுக்கும் அவள் தாய் இருந்த இடத்துக்கும் இப்பொழுது இடைவெளியாக ஐந்நூறு மைல்கள் இருந்தன. முதல் நாள் இரவு சென்னை எழும்பூரில் அம்மா கட்டிக்கொடுத்த தோசை, தயிர் சாதத்துடன் ரயில் ஏறியவள், அதற்கடுத்த நாள் பூராவும் பிரயாணம் செய்து மறுநாள் விடிந்து எட்டு மணியாகிய பிறகு இந்த ஊரை வந்து எட்டிப் பிடித்திருக்கிறாள்.

புத்தம் புதிய சூழ்நிலை.

புதிய—மிகவும் புதிய மனிதர்கள்.

அவர்களுக்கே உரித்தான பேச்சு, செயல் யாவும்தான். அவர்கள் தம் தலையைச் சாய்த்து அங்கு வந்திருக்கும் பெண்களைப் பார்ப்பதே புது மாதிரியாக இருந்தது. கருணை அன்பு ஒளிர வேண்டிய முகங்களில் ஒருவித அலட்சியம் தோன்ற அவர்கள் நடந்து கொள்வதும் மாதங்கிக்கு புது அனுபவம்தான்.

மாதங்கிக்கு அங்கு எல்லோருமே புது முகங்கள். கண்ணைக்கட்டிக் காட்டில் விட்டமாதிரி அவர்களுக்கு ஒன்றும் தோன்றவில்லை. அவள் அம்மா தாம்பரம் ரயில்வரை அவளுடன் கூடவே வந்தாள்.

"என்ன? ஜாக்கிரதையாகப் போவாயா?" சமத்தாக நடந்து கொள்வாயா?' ரயில் சேத்துப்பட்டை அடைந்ததிலிருந்து பல தடவைகள் இந்த இரண்டு வினாக்களை அவள் தொடுத்துக்கொண்டேயிருந்தாள்.

போவேன்...போவேன்... கவனமாக நடந்துகொள்வேன்...முகம் சிவக்க ஆத்திரத்துடன் கூறிவிட்டு மாதங்கி ஜன்னல் வழியாக வெளியே எட்டிப் பார்த்தாள். சேத்துப்பட்டு ரயில் நிலையத்துக்கு அருகில் பெரிய குட்டை ஒன்று இருந்தது. அதில் நீர் தெரியாமல் அல்லி மலர்கள் மலர்ந்து மூடிக்கொண்டிருந்தன. மாட்டுக்கார பையன் ஒருவன் கரைமீது உட்கார்ந்து தன் ஒரு காலை நீரில் விட்டுத் துழாவிக்கொண்டிருந்தான். நீர் கலங்கிய இடத்தில் ஒரே சேறும், சகதியுமாகக் காணப்பட்டது.

மாதங்கியின் மனநிலையும் இப்படித்தான் இருந்தது. உள்ளத்தின் மேற்புறத்தில் அவள் எடுக்கப் போகும் உபாத்தியாயினி பயிற்சியைப் பற்றிய எண்ணங்கள், அதிலிருந்து கிளைத்தெழும் ஆசைகள்!



அடியிலே அவள் குடும்பத்தின் வறுமை இலை, அதை முழுதும் புரிந்துகொள்ளாத ஒரு சமூகத்தினிடம் அவர்கள் ஓட்டி வாழ முயற்சி செய்து வருவது, எல்லாமே ஒரே போலித்தனம் நிறைந்தது போல் காணப்பட்டது.

மாதங்கியின் தாய் மத்தியதர குடும்பத்துக்கும் கடைசி ரகக் குடும்பத்துக்கும் இடையே ஊசலாடுபவள். அவள் பெண்ணாகப் பிறந்தது முதற் குற்றமென்றால் பிறகு ஒரு அப்பாவிக்குக் கழுத்தை நீட்டியது இரண்டாவது குற்றம்; அப்புறம் அடுக்கடுக்காக நாலைந்தை பெற்றது பெரிய குற்றம். இப்படி பல குற்றங்கள் அவள் மீது.

எப்படியும் அவள் பொழுது ஓடியாக வேண்டும். ஒரு நாளைக்கு முக்கால் படி அரிசி வெந்தாக வேண்டும். மாதங்கியின் அப்பாவித் தந்தையும் போய்விட்டார். பிறகு, குடும்ப பாரம் முழுவதும் அவள் தாயின் மீது சரிந்தது. குடும்ப பாரம் என்பது லேசுப்பட்டதா என்ன? அந்த பாரத்தை அவளுடன் பகிர்ந்துகொள்ளும் வயதில் மாதங்கி ஒருத்திதான் இருந்தாள். மற்றக் குழந்தைகள் சிறியவர்கள். வேளா வேளைக்கு சாப்பிட்டுவிட்டு படித்த நேரம் போக காற்றாடி விடவும், கோலி ஆடவும்தான் அவர்களுக்குத் தெரியும். அம்மாவின் பற்றாக்குறை, வேதனை எதையுமே புரிந்துகொள்ள முடியாத வயது அவர்களுக்கு.

மாதங்கி எப்படியோ மூன்றாம்படிவம் அரசாங்கப் பரீட்சை பாஸ் செய்துவிட்டாள். அன்று அவர்கள் ஏதோ நிதியைக் கண்ட மாதிரிதான் குதூகலித்தார்கள். பாயசம் வைத்துச் சாப்பிட்டார்கள்.

மாதங்கியின் தாய் அன்னம்மாள் அன்றே இன்பக் கனவுகள் பல காண ஆரம்பித்தாள். அவள் தையல் மிஷினும், அதன் கடகட ஒலியும் குறைந்து, மகள் சம்பாதித்து வருவது போலவும் அதில் தான் சிக்கனமாகக் குடும்பம் நடத்துவது போலவும் பல கனவுகள்.

ஆம்... அவர்கள் குடும்பத்தை அந்த யந்திரம் தான் காப்பாற்றி வந்தது. நாகரிகம் அடைந்துவிட்ட நாம் மாதா மாதம் கடைகளில் வந்து குவியும் பல ரகத் துணிகளை வாங்கி வந்து தையற் கடைகளைத் தேடி ஓடிக்கொண்டுதானே இருக்கிறோம்? எப்படியும் அவளுக்கு மாதத்துக்கு ஐம்பது அறுபது ரூபாய் வருமானம் வந்தது. ஐம்பதும் அறுபதும் போதாதுதான். ஏதோ அரை வயிற்றுக் கஞ்சிதான்.

இந்த உடல் உழைப்பு அவளிடத்தில் சோர்வை ஏற்படுத்திக் கொண்டே இருந்தது. மூட்டுக்கு

கூட்டு [வலி என்று படுத்துவிடுவாள் அன்னம்மாள். அன்று தையல் யந்திரம் சோம்பேறியாக மூலையில் முடங்கிவிடும். ஐந்து வயிறுகளும் பட்டினிதான்.

அன்னம்மாள் மகள்மீது காய்ந்து விழுந்தாள் "தடி மரம் மாதிரி வீக்கறியே... ஏதாவது வேலைக்குப் போகப்படாது... எட்டாவது படிச்சிருக்கியே!...

எட்டாவது படிப்பே எட்டாத அஷ்ட ஐஸ்வர்யத்தையும் தனக்களித்திடும் என்று அந்தத் தாய் நம்பினாள். "ஆமாம்...எனக்கு என்ன வேலை கொடுப்பாங்க? மேலே வாத்தியாரம்மா வேலைக்குப் படிச்சா மாசம் எண்பது, எழுபதுன்னு வரும்...சேத்து விடேன்...மகிழ்ச்சியுடன் உடனே முயற்சியில் இறங்கி விட்டாள் அன்னம்மாள். அந்தப் பிராந்திய பொது நல அதிகாரியை பார்த்துப் பேச பல தடவைகள் அலைந்தாள். பல காகிதங்களில் கையெழுத்து வாங்கினாள். அரசாங்கத்துக்கு பல உறுதி மொழிகளில் கையெழுத்திட்டு ஒருவழியாக மாதங்கியை ஆசிரியைப் பயிற்சிக்கு தெற்கே ஒரு ஊருக்கு அனுப்பும் வரை வந்து விட்டாள்......

இதுவரை தன் பெண்ணைப்பற்றி நினைக்காமல் அவளுக்குக் கிடைக்க வேண்டிய வேலையைப் பற்றியே நினைத்து வந்தவளுக்கு, மாதங்கி எழும்பூரில் ரயிலில் உட்கார்ந்ததும் பிரிவின் வேதனை இதயத்தைப் பிளந்தது.

அவள் அருகே இருந்த அந்தச் சிறிய தகரப் பெட்டிக்குள் மாற்றி உடுத்த இன்னொரு புடவை, இரண்டு ரவிக்கைகள், சிறிய முகம் பார்க்கும் கண்ணாடி, சீப்பு இருந்தன.

குழந்தைக்குப் பசித்தால் சாப்பிட வறுத்த கோதுமை மாவும், நாட்டுச் சர்க்கரையும் வாங்கித் தந்திருந்தாள். அங்கேதான் ரொம்ப நன்றாகக் கவனித்துக் கொள்கிறார்களாமே. காலையிலே கஞ்சியாம். அப்புறம் பகலில் நல்ல சாப்பாடாம் மாலையில் சிற்றுண்டி உண்டாம். பல ஆட்ட பாட்டங்களாம். உல்லாசப் பிரயாணம் கூட உண்டாமே!

அட! மாதங்கி ஒரு சுவர்க்க பூமிக்குத்தான் போகிறாள். முன்பு அவள் சென்னையில் அம்மாவுடன் வசித்த அந்த எட்டடிக் குச்சில் எங்கே? கசகசக்கும் பத்துக் குடித்தனங்களுக்கிடையே தையல் யந்திரத்தின் கட கட ஒலியும், மற்றொரு அறையில் பிரசவமும், வாசல் திண்ணையில் வம்பளக்கும் கூட்டமுமாக இருந்த அந்த நகரத்தை விட்டு போகபுரியில் தான் அவள் காலெடுத்து வைக்கப் போகிறாள்.

அன்னம்மாள் நூறாவது தடவையாகத் தாம்பரத்தில் அவளை, "கவனமாகப் போய்வா...சமத்தாக இரு...என்று எச்சரித்து விடை பெற்றுக் கொண்டவுடன், மாதங்கியைத் தனிமை வந்து சூழ்ந்து கொண்டது.

மகிழ்ச்சி, துயரம் என்ற இரு அனுபவங்களுடன் அவள் இறங்க வேண்டிய ரயில் நிலையத்தில் இறங்கினாள். அந்த வண்டியிலிருந்து பல ஊர்களிலிருந்து அவளுடன் சேர்ந்து படிக்க அநேகம் பெண்கள் வந்திருந்தார்கள். தாங்களாகவே ஒருவருக்கொருவர் அறிமுகப்படுத்திக்கொண்டார்கள். ஒவ்வொருத்தருடன் பெரிய பெட்டியை வந்திருந்தன. மாதங்கி தன் கையில் இருக்கும் சிறிய தகரப் பெட்டியைக் குனிந்து பார்த்துக்கொண்டு கூசி நின்றாள்.

"உன் 'லக்கேஜ்' இவ்வளவுதானா?"...என்று ஒரு பெண் தன் இரட்டைப்பின்னலை எடுத்து முன்னால் போட்டவாறு வினவினாள்...

"ஆமாம்..."

"எத்தனை புடவை கொண்டு வந்திருக்கிறே?"...

"இரண்டு...ஹூம்...அதாவது கட்டியிருப்பது போகப் பெட்டியில் இரண்டு இருக்கிறது..."



பெண்களில் பாதிப்பேர் 'குபீர்' என்று சிரித்தார்கள். 'இரண்டு புடவை' என்றதும் சிரிப்பவர்கள், இரண்டு ரவிக்கைகள் என்றால் குதிப்பார்களோ' என்று மாதங்கிக்குப் பயமாக இருந்தது.

அவர்கள் பேசிக்கொண்டே பள்ளிக்கூடத்துக்கு வந்து சேர்ந்தார்கள். தலைமை ஆசிரியை ஒவ்வொரு பெட்டியாகத் திறந்து பார்த்தாள். பக்கத்தில் ஒரு பெண் நின்றவாறு ஒவ்வொரு பெண்ணின் பெயரையும் படித்துக்கொண்டே வந்தாள். அத்துடன் அவள் கொண்டு வந்திருக்கும் பொருள்களின் ஜாபிதாவும் படிக்கப்பட்டது.

"சோப்பு ஒன்று. துணிச்சோப்பு இரண்டு கட்டிகள். அலுமினிய தட்டு ஒன்று, குவளை ஒன்று, சீப்பு ஒன்று, கண்ணாடி ஒன்று. துணி துவைக்கும் வாளி ஒன்று... செப்பு...செப்பு...ஏ பொண்ணே! ஏன் செம்பு வாங்கிக்கொண்டு வரவில்லை?"

அதிர்ந்து வந்த குரலின் முன்பு அடக்க வொடுக்கமாக நின்றிருந்த மாதங்கி..."செம்பா? கொண்டுவரவில்லை டீச்சர், மறந்துட்டேன்..." என்று பதிலிறுத்தாள்.

"பின்னே எப்படி குளிப்பாயாம்? 'ஸ்விம்' பண்ணுவாயோ? அதுக்கு இங்கே தண்ணி கிடையாது. இந்த ஜில்லாவிலே தண்ணிப் பஞ்சம்... அப்படியே வாளியிலிருக்கிற தண்ணியைக் கையால் இறைச்சு ஊத்திக்கோ..."

சாப்பாடு விடுதியின் அம்மா பட்டை திருநீறுடன் சிவப்பழமாகக் காட்சி அளிப்பவர் கூறவும், பெண்கள் 'கொல்' லென்று சிரித்தார்கள்.

சாப்பாட்டு விடுதியின் தலைவி இவ்விதம் தீர்மானமாகக் கூறி விடவே, மாதங்கிக்கு அடுத்த நாளிலிருந்து எப்படிக் குளிப்பது என்பது பெரிய பிரச்னையாகிவிட்டது. ஆனால், அவளுடன் படிக்கும் பெண்ணொருத்தி அந்த பிரச்னையை தீர்த்து வைத்தாள்.

அவள் மாதங்கியிடம் சொம்பைக் கொடுத்துவிட்டு "இந்தச் சலுகை பத்து நாட்களுக்கு மட்டும்தான். ஊருக்கு எழுதி உன் அம்மாவிடமிருந்து பணம் வரவழைத்து சீக்கிரம் செம்பு வாங்குவதற்கு வழி பார்..". என்று எச்சரிக்கை செய்தாள்.

ஊரிலே தாயின் பரிதாபகரமான முகம் மாதங்கியின் முன் தோன்றியது. அவளை இங்கு அனுப்புவதற்கென்று அவள் அந்த ஊரில் ஒருவரிடம் வட்டிக்குப் பணம் வாங்கியதும், அசலை வட்டியுடன் ஆறே மாதங்களில் அடைப்பதாகக் கூறியதும் மாதங்கி நன்கு அறிந்தவை. மேலும், அம்மாவைப் பணம் கேட்க வேண்டுமாம். ஒரு வேளை விடுதியின் விதிகளுக்குப் புறம்பாக நடக்கக் கூடாது என்று இவ்விதம் கண்டிப்பாக இருக்கிறார்களோ? அதா

வது, மனிதத்தன்மை, இரக்கம் இவற்றின்மீது அமையவேண்டிய பொதுநலத் தொண்டு. விதிகள், சட்டதிட்டங்கள் என்கிற வரம்புக்குள் அடைக்கப்பட்டு இருக்கிறதோ?

மாதங்கிக்கு விடுதிக்குள் நுழைந்த அன்றே இவ்வித வரவேற்பு கிடைத்ததிலிருந்து மனங்குன்றிவிட்டது. எதிர்காலம் எத்தனையோ கனவுகளாக விரிந்த அவள் எண்ணங்கள் பேய்க் காற்றில் பறக்கு குப்பைக் கூளங்களாக அவள் மனத்திலிருந்து சிதறின.

நீண்ட பெருமூச்சுடன் அவள் மரத்தை அண்ணாந்து பார்த்ததும், நூற்றுக் கணக்கான சிட்டுகள் வரிசை வரிசையாகக் கிளைகளில் உட்கார்ந்து ஆலம் பழங்களைச் கோதிக் கோதிச் சுவைப்பதைக் கண்டாள். சமுதாயம் அமைத்த வரம்புக்குள் பழக வேண்டியவர்களுக்குத்தான் நாகரிகம், அநாகரிகம் என்கிற வேறுபாடுகளைப் புரிந்து கொண்டு செயல்பட வேண்டியிருக்கிறது.

இந்தக் குருவிகள் நாகரிக வர்க்கத்தில் சேர்ந்தவையா அல்லவா என்பது மாதங்கிக்குப் புரியவில்லை.

சாப்பாடு விடுதியிலிருந்து மாலை பிரார்த்தனை மணியின் ஒலி கேட்டது. மாதங்கி வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தாள். மாணவிகள் எல்லோரும் கோயிலின் முன்பு அமைதியாக நின்றிருந்தனர். பிரார்த்தனை முடிந்தது. விடுதித் தலைவி நெற்றியில் நீறு துலங்கக் கண்களை மூடியவாறு அமர்ந்திருந்தாள்.

அவளைப் பார்ப்பதற்கு இரண்டு பெண்கள் வந்திருந்தார்கள். பிரார்த்தனை முடிகிறவரை காத்திருந்தனர். தலைவி வெளியே வந்ததும் பெண்கள் இருவரும் வணங்கினர்.

"யாரம்மா நீங்கள்?"

சற்று நாகரிகமாகவும், கண்ணியமாகவும் காணப்பட்ட பெண்மணியைத் தலைவி கூர்ந்து கவனித்தாள்.

"நான்...... அங்கேயிருந்து வருகிறேன்... என் உறவுப் பெண் ஒருத்திக்கு உங்கள் விடுதியில் இடம் இருக்குமா என்று தெரிந்துகொள்ள வந்தேன்.. நான்...இன்னுருக்கு உறவு—

தலைவி திடுக்கிட்டு விழித்துக் கொண்டாள்.

"மாதங்கி......"

"அம்மா.." என்றவாறு மாதங்கி வந்து நின்றாள்.

"ஒரு நாற்காலி கொண்டு வந்து போடு....."

மாதங்கி கொண்டுவந்தாள்.

"நிற்கிறீர்களே...உட்காருங்கள்"

உபசாரம் பெரிய மனுஷிக்கு அபாரமாக இருந்தது. அருகில் இருந்தவளை யார் மதித்தார்கள்?

கதவோரத்தில் நின்று கவனித்த மாதங்கிக்கு அந்தப் பெண்ணின் தோற்றம் அவள் தாயை நினைவூட்டியது. அதே சாயம் போன புடவை. அமைதியான தோற்றம். வாழ்க்கைப் பாதையில் முட்டி மோதிக் கொண்ட பல வடுக்கள் அவள் பார்வையிலும் பேச்சிலும் தெரிந்தன. அவள் பரம ஏழை என்பதை யாருமே அறிமுகப்படுத்த வேண்டாம்.

இதுவரை அவளை ஏற இறங்கப் பார்த்து வந்த தலைவி 'இது யார்? என்கிற பாவனையில் புருவத்தை சுளித்துக்கேட்டாள்.

"இந்த அம்மாளுக்கு யாரும் இல்லை. ஏதாவது வேலை கிடைக்குமானால்...நன்றாக சித்திரம் வரைவார்கள்..."

சித்திரம் வரைகிறவர்கள் கந்தல் புடவையுடுத்தி எண்ணெய் காணாத தலையுடன் அவள் எதிரில் நின்றால் அவளால் நம்ப முடியவில்லை.

'இவளா சித்திரம் வரைகிறாள்?' என்கிற தோரணையில் அந்தப் பேச்சை ஒதுக்கிவிட்டு "இங்கே சமையல் அறையில் காய்கறி நறுக்க, பால் காய்ச்ச ஓர் ஆள்

தேவைப்படுகிறது. சாப்பாடு போட்டு மாசம் இருபது தருவார்கள். ஓழிந்த வேளையில் சித்திரக்கலை டீச்சர் வராவிட்டால் 'கிளாஸ்' எடுக்கவேண்டும்...' என்றுள்.

மாதங்கிக்கு அங்கே நிற்க முடியவில்லை. அவள் சித்திரக்கலை டீச்சரைத்தான் தினமும் பார்க்கிறுளே. விதவிமான புடவைகளும் உதட்டுச் சாயமும், உயரக் கொண்டையுமாக! இந்த எளிமை உருவம் வகுப்பறைக்குள் நுழைந்தால், இந்தக் காலத்து மாணவிகள் மதித்துப் பணியப் போகிறுர்களா?

பாவம்! அந்த எளிய உருவம் கடவுளின் வரப்பிரசாதமாக தனக்கமைந்த கலையை மனத்தில்போட்டு மூடியவண்ணம் இருபது ரூபாய்ச் சம்பளத்துக்குச் சமையல் அறைக்குள் புகுந்தது.

பத்து நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் பகல், சாப்பாட்டு விடுதி அமளிப்பட்டது. மாதங்கி அவள் ஊரிலிருந்து வந்திருந்த இன்னொரு வகுப்பின் பெண்ணுடன் அனுமதி இல்லாமல் பேசிவிட்டாளாப்; இலை முன்பு உட்கார்ந்திருந்தவளை சாப்பாட்டு விடுதித் தலைவி வந்து எழுந்திருக்கச் சொன்னுள்.

"இங்கே வா இப்படி..."

மாதங்கி சோற்றை உதறிவிட்டு எழுந்தாள்.

"உன் பெயர்?"

"மாதங்கி......"

"உனக்கு பெற்றேர்கள் இருக்கிறுர்களா?..."

"அம்மா மட்டும் இருக்கிறுர்கள்..."

"உனக்கு முன்னே பின்னே பள்ளிக்கூடத்தில் படித்துப் பழக்கம் உண்டா?..."

"எட்டாவது படித்திருக்கிறேன்...

"உன் வகுப்பு—அதாவது உங்கள் பிரிவு மாணவிகளைத் தவிர இங்கே யாருடனும் பேசக்கூடாது என்று முதல் நாளே உனக்குச் சொல்லவில்லை? ஏன் அவளுடன் பேசினுய்?..."

"டீச்சர்..." என்று தேம்பினுள் அவள். "அம்மாவுக்கு உடம்பு சரியில்லையாம் டீச்சர். அவள் எங்கள் ஊரிலிருந்து நேற்று வந்தவள் எனக்குத் தெரிந்தவள்... அம்மா எப்படியிருக்கிறுள் என்கிற ஆவலில் கேட்க நினைத்துப் பேசிவிட்டேன் டீச்சர்..."

தலைவி தலைகுனிந்து சிறிது நேரம் உட்கார்ந்திருந்தாள்.

'நீ இன்னும் சாப்பாட்டுப் பணம் கட்டவில்லையாமே... அரசாங்கத்திலிருந்து பணம் வரும் வரை அவரவர் கட்ட வேண்டுமென்பது விதியாயிற்றே. வேளா வேளைக்குச் சாப்பிட மட்டும் வந்து உட்கார்ந்து விடுகிறுயாமே..."

'சாப்பாட்டுப் பணம் வரும்வரை என்னை இலவசப் பிரிவில் சேர்த்துக் கொள்ளச் சொல்லி சிபாரிசு கடிதம் வாங்கி வந்திருக்கிறேன் டீச்சர்..."

"எங்கே அந்தக் கடிதம்?"

தலைமை ஆசிரியை வாங்கிக் கொண்டார்"

சாப்பாட்டு விடுதித் தலைவி மாதங்கியின் சோறு பிசைந்த கை உலர நிற்பதைப் பொருட்படுத்தாமல் தலைமை ஆசிரியையைத் தேடிப் போனுள். அப்புறம் அரைமணி கழித்து வந்தாள்.

"போ...... போ......சாப்பிடு போ..."

மாதங்கி அன்று உணவை விழுங்கவில்லை. துயரத்தை அணு அணுவாக விழுங்கினுள் விடுதியில் இருந்த மாணவிகள் அவளை ஓரக் கண்ணுல் பார்த்தனர். கசமச வென்று பேசினர்.

அடுத்த நாள் உல்லாசப் பிரயாணம் கிளம்ப வேண்டுமாம். அடுக்களை கல்யாண வீடு போல் இருந்தது. தயிர்ச்சாதம் புளியோதரை, சர்க்கரைப் பொங்கல் எல்லாம்மணத்தது.

மாணவிகள் உடுத்திக்கொண்டு கிளம்பினார்கள். மாதங்கியும் முதல் நாள் துவைத்து மடித்து வைத்த சேலையைக் கட்டிக்கொண்டு வந்து நின்றாள்.

"ஏண்டி மாதங்கி! உனக்கு எதற்கும் இந்த ஒரு புடவைதானா அகப்பட்டது. வேறு கிடையாதா? உடன்படிக்கும் மாணவி ஒரு மாதிரியாகச் சிரித்துக்கொண்டு கேட்டாள். சற்று வசதியுள்ள குடும்பத்துப் பெண் அவள்.

"இந்தப் புடவை ஒன்றுதான் மாதங்கியின் 'டிரேட் மார்க்' அதோ பாருங்களேன்: நாம் புடவை உலர்த்தும் கம்புகளில் எத்தனை புடவைகள் இருக்கின்றன? ஒரே சள்ளை தான், அவைகளை துவைக்க, உலர்த்த, மடித்து வைக்க. இவளுக்கு அந்த வேலையே கிடையாது. அவள் துணி உலர்த்தும் கம்பு காலியாகவே கிடக்கிறது..."

—அந்தப் பெண் அதிகம் வசதியுள்ளவள்.

அப்புறம் மாதங்கிக்கு அது உல்லாசப் பிரயாணமாகவே இல்லை. ஒற்றுமை நோக்கம் பரவ வேண்டிய இடத்திலேயே வேற்றுமை உணர்ச்சிகளும் பேதங்களும் ஆரம்பிக்கப் படுவது விந்தையல்லவா?

எண்ணற்ற விஷயங்களைத் துயரம் நிரம்பிய மனத்தில் தேக்கிக் கொண்டு மாதங்கி அந்த ஆண்டு கோடை விடுமுறைக்காகச் சென்னைக்கு ரயில் ஏறினாள். இந்த ஒரு வருட அனுபவத்தில் ஆசிரியைப் பயிற்சிப் பாடங்களைத் தவிர, குத்தல் மொழிகள், பணக்காரன், ஏழை, அழகுள்ளவள், அழகற்றவள் என்றே வேற்றுமை உணர்ச்சிகளையும் அவள் இதயத்தில் சுமந்து கொண்டு பிரயாணம் செய்தாள்.

எழும்பூரில் தாயும், மகளும் சந்தித்துக் கொண்டனர். வீடு செல்லும் வரை இதயத்தைக் கல்லாக்கிக் கொண்டு மௌனமாகவே நடந்தாள் மாதங்கி.

> **கல்யாணம்!**
>
> **அர்ச்சாபீஸ்காரர்:** என்ன சார்' கல்யாணப் பத்திரிகை...... போயும் போயும் ஒரே ஒரு பத்திரிக்கை 'பிரிண்ட்' செய்து தர சொல்றீங்களே! ஏன்?
>
> **வந்தவர்:** இப்படியொரு கல்யாணம் நிஜமாவே நடக்கலை சார்! எங்க ஆபீஸிலே சிநேகிதன் கல்யாணத்துக்கு போகணும்னு லீவு கேட்டால் எங்கே? எப்போ கல்யாணப் பத்திரிக்கையை காட்டுன்னு சொல்றான் இடியட்! அவங்கிட்டே சும்மா ஒரு பத்திரிக்கையை காட்டினா போதாது?

வீட்டினுள் சென்றதும் இலை முன்பாக அன்புடன் அமுது படைக்கும் தாயின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள் அவள். ஒரு வருடத்தில் அன்னம்மாள் மிகவும் மாறிவிட்டாள். கவலையின் கீற்றுக்கள் முகமெங்கும் குறுக்கும் நெடுக்குமாக ஓடின. தலையில் நரை ஓடிவிட்டது. கன்னங்கள் வற்றிவிட்டன.

"மாதங்கி! எப்படியம்மா இருக்கிறாய்? பரீக்ஷை நன்றாக எழுதியிருக்கிறாயா இல்லையோ? இன்னும் ஒரு வருஷத்தை படித்து முடித்துவிட்டால்..."

அன்னம்மாள் இவ்விதம் கேட்டு நம்பிக்கையுடன் மாதங்கியின் முகத்தைப் பார்த்தாள்.

மணி மணியாகக் கண்ணீர் உகுக்கும் மகளின் வேதனை கண்டு அந்தத் தாய் உள்ளம் வெம்பியது.

"இனிமேல் நான் அங்கே போகவே மாட்டேன்...என்னை ஒன்றுமே கேட்காதே. ஏழையாக இருப்பவர்களுக்கு சுதந்திரம், வெட்கம், ரோஸம் எதுவுமே கூடாது

அம்மா...என்னவோ சொல்கிறார்கள், சமத்துவம் என்று. காந்திமகான் சுலபமாகச் சொல்லி, அவர் வரையில் செயலில் காட்டிவிட்டும் சென்றுவிட்டார். அதைப் பின்பற்றுகிறவர்களைத்தான் காணோம்... அம்மா, இனி நான் அங்கே போகப் போவதில்லை; உன்னோடு, தையல் தைத்தே பிழைத்துக் கொள்கிறேன்.

மண்ணில் புதையுண்டு கிடந்த ரகசியங்களை ஒருவன் தோண்டித் தோண்டி எடுத்தவுடன் பளிச் சென்று காணமுடிவதைப் போல் மாதங்கி மனத்தைக் கொட்டிவிட்டுக் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

அன்னம்மாள் வாழ்க்கையில் அடிபட்டவள்.

தையலும் இன்னொன்றும் கணிசமான வரவைக் கொடுக்குமா என்பதை மாதங்கி உணரவில்லை. அன்னம்மாவுக்குத் தெரியும், இந்தக் காலத்தில் ஒரு நாளை ஒரு ரூபாய், இரண்டு ரூபாய்களை வைத்துக் கொண்டு ஓட்ட முடியாதென்று. அன்னம்மாள் உடலும் உள்ளமும் தளராமல் உழைக்கவேண்டும். மாதங்கியும் வேலைக்குப் போக வேண்டும். அப்பொழுதுதான் குடும்பச் சகடம் தடையில்லாமல் உருளும்.

விடுமுறை முடிந்து மாதங்கி ஊருக்குப் புறப்பட்டு விட்டாள்.

தாயும், மகளும் எழும்பூர் ரயில் நிலையத்தில். உட்கார்ந்திருந்தனர். இருவர் மனத்திலும் வேதனை கொப்பளித்துக் கொண்டிருந்தது.

ரயில் பிளாட்பாரத்துக்குள் நுழைந்தபோது அன்னம்மாள் விருட்டென்று எழுந்தாள்.

"இதோ பார்! எதையாவது குருட்டு யோசனை பண்ணாதே; உலகம் என்றால் அப்படித்தான் இருக்கு. சமூக சேவை என்பது ஓர் உயர்ந்த லட்சியம். அதைச் செயலாக்குகிறவர்கள் எல்லோரையுமே நாம் லட்சிய வாதிகள் என்று சொல்லிவிட முடியாது. மனித சுபாவப்படி அவரவர்களிடம் பல நற்குணங்களும் பல துர்க்குணங்களும் தான் இருக்கும்.

சிலர் சமூக சேவை என்கிற ஏணியிலே ஏறி, தம்மைத் தாமே உயர்த்திக் கொள்வார்கள். ஏழையிருக்கும் சமூகத்தை அவர்கள் பார்ப்பதேயில்லை.

ஏழையின் மனத்தைப் புரிந்து கொண்டு, அவள் ஏழ்மையைக் குத்திக் காட்டாமல் அவளை உயர்த்துவது என்பது எல்லோராலும் முடிகிற விஷயமில்லை. எதையும் பொருட்படுத்தாமல் பிழைக்கிற வழியைப் பார். அன்பும் சமூக சேவையும் ஒன்றுடன் ஒன்று இணைந்தால் ஓர் உயர்ந்த லட்சியம் என்றோ நிறைவேறியிருக்கும்...... ஹும்...வா...போகலாம்...

இடித்து மோதும் கூட்டத்தின் இரைச்சலில் அன்னம்மாள் பிரசங்கம் செய்கிற மாதிரி மகளுடன் பேசிக்கொண்டே பெண்கள் பெட்டியைத் தேடி மாதங்கியை அதில் ஏற்றிவிட்டாள்.

ரயில் 'கூ' வென்று ஊதிவிட்டுப் புறப்பட்டது. ரயில் நிலையம் தன் கலகலப்பை கொஞ்சம் கொஞ்சமாக இழக்க ஆரம்பித்தது. அடுத்த ரயில் கிளம்புவதற்குள் சேரும் கூட்டத்துக்கு முன் ஓய்வெடுக்கிற மாதிரி ஒரு வெறுமை அங்கே.

அன்னம்மாளின் கண்களில் ரயிலின் பின்புற விளக்குகள் இரண்டும் கொஞ்சம் கொஞ்சமாய் மறைந்து, பிறகு புள்ளிகளாக மாறித் தேய்ந்தன. ரயில் கண்ணுக்கு மறைந்தாலும், அது தன் நெடுவழிப் பிரயாணத்தைத் தொடர்வது போல் எதிர்காலத்தில், வாழ்க்கையின் தொடர்பில் நம்பிக்கையுடன் தாயும், மகளும் வெவ்வேறு திசையில் பிரிந்து போய்க்கொண்டிருந்தார்கள்.

# அறை எண் 17

சரோஜா ராமமூர்த்தி

மருத்துவ மனை என்று அதை யாரும் கூறமாட்டார்கள். முற்றும் துறந்த முனிவர் ஒருவரின் ஆச்ரமம் என்று வேண்டுமானால் சொல்லலாம். ஆனால், காய்ந்த புல்லும், மூங்கிலும் கொண்டு வேய்ந்த பர்ணசாலை எங்கே! நவீன வசதிகள் அவ்வளவும் வாய்க்கப்பெற்ற இந்தப் பெரிய மாளிகை எங்கே! ஒழுங்காக இரண்டு வரிசைகளிலும் நோயாளிகளுக்கென்று அமைக்கப்பட்ட அறைகள், நல்ல காற்றோட்டமும் வெளிச்சமும் உடையவை. மாடியிலும் இம்மாதிரி அறைகள் இருந்தன. ஆனால், அவைகளுக்கு வாடகை அதிகம்; ஏனெனில், ஒவ்வொரு அறைக்குப் பின்னாலேயே குளிக்கும் அறை இருந்தது. நோயாளியுடன் இருப்பவர் படுத்துக்கொள்ள சிறிய கட்டிலும் மாடி அறைகளில் உண்டு. அத்துடன் அலங்காரம் செய்து கொள்ளும் கண்ணாடி அமைத்த மேஜை வேறு கொடுத்திருந்தார்கள்.

ரமாவும், மோகனும் மருத்துவ மனைக்குள் நுழைந்ததும் அதன் நிர்வாகி அவர்களை அழைத்துப்போய் மாடி அறைகளையும், கீழே இருக்கும் அறைகளையும் காட்டினார். ''எது வேண்டுமானாலும் எடுத்துக்கொள்ளுங்கள்'' என்றார் அவர்.

மோகன் மனைவியைத் திரும்பிப் பார்த்தான். ''மாடியா? கீழேயா?'' என்றும் கேட்டான். ரமாவுக்கு மாடியைவிடக் கீழ் அறைகளே பிடித்திருந்தன. பதினேழாம் எண்ணுள்ள அறையை திறந்துவிட்டு நிர்வாகி முன் கூடத்துக்குப் போய் விட்டார்.

அறையில் கிழக்குப் பார்த்தாற்போல் ஒரு சன்னல் இருந்தது. ஒரு மூலையில் சிறிய அலமாரி ஒன்றும் அதை அடுத்து மேஜை ஒன்றும் இருந்தன. அறையின் நடுவில் இரும்புக் கட்டிலில் நோயாளிக்குப் படுக்கை போட்டிருந்தார்கள். எல்லாமே ஒரே தூய்மைதான். வெள்ளை வெளேர் என்று தும்பைப் பூவைப் போல் படுக்கை கண்ணைப் பறித்தது.

ரமா தன்னுடன் கொண்டுவந்திருந்த பைகளிலிருந்து பொருள்களை அலமாரியில் ஒவ்வொன்றாக எடுத்து வைத்தாள். ஹார்லிக்ஸ், ஓவல்டின், பழங்கள், நுரை பிஸ்கோத்துகள் அடங்கிய டப்பா, குளுகோஸ் என்று வரிசையாக அவள் வைப்பதைப் பார்த்தவுடன் மோகன் சிரித்தே விட்டான். ''என்ன ரமா? நாம் இருவரும் தனிக் குடித்தனம் வந்திருக்கிறோமா?'' என்று கேட்டான்.

ரமா வேதனையும், மகிழ்வும் கலந்த புன்சிரிப்பு ஒன்றை உதிர்த்தாள்.

''ஐயே! தனிக் குடித்தனம் பண்ணி ஆஸ்பத்திரியைத் தேடித்தான் வர வேண்டுமாக்கும்? எனக்கிருக்கிற கவலையில் நீங்களும், உங்கள் ஹாஸ்யமும்!'' என்று கோபித்துக் கொண்டாள் அவள்.

மோகன் அவள் பக்கத்தில் வந்து நின்றான்.

''இதோ பார்! இதைப் பார்த்தால் ஆஸ்பத்திரி மாதிரி இல்லை. ஜன்னலுக்கு வெளியே பார், கொத்துக் கொத்தாக ரோஜா மலர்கள். அடேயப்பா! இலைகளே தெரியவில்லை. அந்தப் பக்கம் எலுமிச்சை மரத்திலே இலை தெரியாமல் பழங்கள், டாக்டர் வாசுதேவன் சஸ்திர சிகிச்சையில் நிபுணர் மட்டும் அல்ல. அவர் ஒரு சிறந்த கலாரசிகர். எனக்கு என்னவோ பயமாகவே இல்லை, நீதான் வேதனைப்படுகிறாய்.''

ரமா பதில் கூறுவதற்குள்ளாக அவர்களைத் தேடி வெள்ளைக் கலையுடுத்தி ஒரு நர்ஸ் அறைக்குள் வந்தாள். தம்பதி இருவரும் திரும்பிப் பார்த்தார்கள்.

நீலக் கடலின் நுரையைக் குழைத்து அமைத்த உடலைப்போல்

இருக்கும் சோர்ந்த நிலையில் ஊருக்குள் பறந்து செல்லவும் அதனால் முடியவில்லை.

கங்கையில் கொஞ்சம் தண்ணீராவது குடித்துக் களைப்பைப் போக்கிக்கொள்ளலாம் என்று எண்ணிய காக்கை, மரத்தை விட்டுக் கீழே பறந்து வந்தது.

இந்தச் சமயம், கங்கைப் பிரவாகத்தில் ஒரு பிணம் மிதந்து சென்றுகொண்டிருந்தது. அந்தப் பிணத்தைத் தன் கூரிய கண்களால் பார்த்துவிட்டது காக்கை. உடனே அதன் பசி அதிகமாகியது. நாவில் ஜலம் ஊறியது. ஆனால், அந்தப் புரு, 'மாமிசப்பட்சணம் பண்ணக்கூடாது!' என்று தடை விதித்திருக்கிறதே!...

காக்கை அவசரமாகச் சுற்றிலும் திரும்பிப் பார்த்தது. கங்கை நதியின் இரு கரைகளிலும் சில கிழங்கெட்டான மனிதர்கள் உட்கார்ந்திருந்தார்கள். மற்றப்படி ஒரு புருக்கூட அங்கு இல்லை.

வெள்ளைக் காக்கை தனக்குத் தானே சொல்லிக்கொண்டது: 'சரிதான், இந்த இடத்தில் நாம் மாமிசப் பட்சணம் புசித்தால், எங்கோ இருக்கும் அந்தப் புருவுக்குத் தெரியப்போகிறதா என்ன? அது என்னைப் பார்த்துக்கொண்டா இருக்கப் போகிறது? சட்டென்று போய் பிணத்தின் இரண்டு கண்களைமட்டும் கொத்திப் பிடுங்கித் தின்றுவிட்டு ஓடிவந்துவிட்டால் என்ன''--

இதற்குமேல் சிந்தனைக்கு இடம் தராத வெள்ளைக் காக்கை, கங்கையில் மிதந்து வரும் அந்தப் பிணத்தை நோக்கி ஒரே தாவாகத் தாவிப் பறந்து சென்று அதன்மேல் உட்கார்ந்தது.

அட, பாவமே! காக்கையின் பளுவைத் தாளமாட்டாமலோ என்னவோ, மல்லாந்த வாக்கில் மிதந்து வந்த அந்தப் பிணம் சடக்கென்று ஒருக்களித்துப் புரளவே, காக்கையும் அதனுடன் சேர்ந்து ஆற்றில் உருண்டு விழுந்துவிட்டது!



ஸ்பெயின் ராணி இசபெல்லா கருவுற்றிருந்தாள். பத்தாவது மாதம் வந்ததும் கருவுற்றிருந்த ராணி அந்தப்புரத்திலிருக்கும் எல்லா விளக்குகளையும் அணைத்துவிடுமாறு கட்டளையிட்டாள். விளக்குகளை ஏன் அணைக்கவேண்டும் என்று கேட்டபோது "பிரசவ காலத்தில் வலி தாளாது என் முகம் கோணல் மாணலாகப் போகும். அதை ஒருவரும் பார்க்கக்கூடாது; அதற்காகத்தான்" என்றாள். "ராணி அம்மா, இடுப்பு வலி அதிகமானால் வாய்விட்டுக் கத்துங்கள். வலி கொஞ்சமும் தெரியாது" என்றார்கள் பணிப் பெண்கள். "சீ, என்ன யோசனை சொல்கிறீர்கள்? ராணியாவது அழுவாவது. நான் செத்தாலும் சாவேனேயன்றி வாய்விட்டு அழமாட்டேன்" என்றாள் ராணி!

நல்லவேளையாக அதற்கு உயிராபத்து ஒன்றும் ஏற்படவில்லை. கங்கை நீரில் நன்றாக அமிழ்ந்துவிட்டாலும், எப்படியோ நெம்பி எழுந்து தட்டுத் தடுமாறிப் பறந்து போய் தேவதாரு மரத்தின் மேல் உட்கார்ந்துகொண்டது.

ஆனால், ஐயோ! சற்று முன்வரை தூய வெண்ணிறமாகக் காட்சியளித்த அந்தக் காக்கை இப்போது அசல் காக்கைக் கறுப்பாக அல்லவா மாறிவிட்டிருக்கிறது?

அண்டங்காக்கை தன் பழைய கரிய வண்ணத்தைப் பார்த்துப் பார்த்துக் கண்ணீர் வடித்தது!

அழகிய நிறம் அந்தப் பெண்ணுக்கு. 'புசு புசு' வென்று அடர்ந்து வளர்ந்திருந்த கூந்தல். கீற்றுப் புருவங்கள். சிறிய கூர்மையான நாசி நீண்ட செவ்வரி படர்ந்த கண்கள். செப்பு வாய். உண்மையிலேயே அவள் நல்ல அழகி. கண்டிப்பாக ரமாவைவிட அழகிதான். சந்தேகமில்லை. கணவன் வைத்த கண் வாங்காமல் அவளைப் பார்ப்பதைக் கண்ட ரமா இமைகளைத் தாழ்த்திக் கொண்டு தான் கொண்டுவந்திருந்த பைகளை ஆராய ஆரம்பித்தாள்.

"யுவர் நேம் பிளீஸ்..." என்று அவள் கேட்டதும், தன்னை ஒரு நிலைக்குக் கொணர்ந்து சமாளித்துக் கொண்டு "மோகன்" என்று கூறினான் மோகன்.

"யுவர் ஏஜ்?"

"இருபத்திரண்டு......" என்றான் அவன்.

"என்ன?" என்று அவளை ஏறிட்டுப் பார்த்துக் கண்களால் சிரித்தாள் அவள்.

'மன்னிக்க வேண்டும். முப்பத்திநாலு......"

ரமா கணவனை 'சுரு சுரு' வென்று ஏறிட்டுப் பார்த்தாள். பிறகு அவள் அவன் விலாசத்தையும் கேட்டு அங்கிருந்த பதிவுச்சீட்டில் எழுதி அதை ஒரு பலகையில் பொருத்தி அவனுக்கு எதிராக மாட்டிவிட்டு "மிக்க நன்றி" என்று கூறியவாறு வெளியே போய்விட்டாள்.

திடீரென்று வானுலகத்திலிருந்து அழகிய மங்கை ஒருத்தி இறங்கி வந்து தேவபாஷையில் மிழற்றி



மறைந்தாற்போல் இருந்தது அவனுக்கு.

'டாக்டர் வாசுதேவன் சிறந்த கலா ரசிகர் மட்டும் அல்ல. அழகையும் ரசிக்கத் தெரிந்தவர்' என்று நினைத்துக்கொண்டாள்.

"ஆமாம்......" என்று நீட்டி முழக்கிய ரமா அவன் அருகில் வந்து நின்று அவன் ஏதோ யோசனையில்

ஈடுபட்டிருப்பதைக் கவனித்தாள்.

"என்ன யோசனை?" என்று கேட்டும் வைத்தாள்.

"ஒன்றுமில்லை" என்று பீடிகை போட்டுவிட்டு, "அந்தப் பெண் எவ்வளவு அழகாக இருக்கிருள் பார்த்தாயா?" என்ருன்.

"பார்த்தேன், பார்த்தேன், ஆமாம்... ராத்திரி உங்களுக்கு என்ன ஆகாரம் என்று கேட்டீர்களா?" என்று பேச்சை மாற்றினுள் ரமா.

இதற்குள் வார்டு பையன் தாமு வந்துவிட்டான்.

"சார்! இப்படிக் கொஞ்சம் வறீங்களா?" என்று கேட்டு மோகனை மாடிக்கு அழைத்துச் சென்ருன்.

ரமா வெளியில் வந்து ஒன்றும் புரியாமல் நின்ருள். சற்று முன்வந்து தன் அழகை அள்ளித் தெளித்துவிட்டுப் போன நர்ஸ் வராந்தாவில் கையைக் கட்டிக்கொண்டு இப்படியும், அப்படியும் உலவிக் கொண்டிருந்தாள்.

திடும் என்று அவளை என்னவென்று அழைத்து, எதைக் கேட்பது என்பது புரியாமல் விழித்தாள் ரமா. என்னதான் படித்திருந்தாலும் சமயத்தில் விழிக்கத்தான் வேண்டியிருக்கிறது!

வராந்தாவின் மறுகோடியிலிருந்து நர்ஸ் திரும்பி வரும்போது ஒரு புன்முறுவலை அவள் மீது வீசிக்கொண்டே. 'இப்ப வந்து அவரை...." என்று அவள் கேட்பதற்கு முன்பாகவே நறுக்கென்று பதில் கூறிவிட்டாள் நர்ஸ். "நாளைக்கு அவருக்கு ஆப்பரேஷன், இல்லையா? முன்ஞடி 'எனிமா' கொடுத்து, வயிற்றைக் கட்டிவைக்கவேண்டும்" சொல்லிவிட்டு அவள் நிற்கவில்லை. மோகனிடம் பேசியபோது காட்டிய முறுவலும், குழைவும் இல்லை.

ரமாவுக்கு என்னவோ போல் இருந்தது. முகத்தைத் திருப்பிக்கொண்டு உள்ளே போய்விட்டாள். சிறிது நேரத்துக்குப் பிறகு அவள் வெளியே வந்தபோது அந்தி வெயிலின் தங்க ஒளி சுவரெல்லாம் முலாம் பூசியதுபோல் மின்னியது.

காலாற அந்தக் கட்டிடத்தைச் சுற்றி வந்தாள் அவள். தோட்டமெங்கும் வெள்ளையும், சிவப்பும், நீலமுமாகக் கொத்துக் கொத்தாக மலர்ந்திருக்கும் காசித் தும்பைச் செடிகள், அவைகட்கு அரண் கட்டிய சீமைப் பொன்ஞங்கணிக்கீரை.

ஒரு சுற்று, இரண்டு சுற்றுகள் மூன்று சுற்றுகள் என்று மருத்துவமனையைச் சுற்றிச் சுற்றி வந்தவள், மாடிக்குச் சென்ற கணவன் திரும்பிவிட்டாரு என்று பார்க்க உள்ளே வந்தாள்.

கட்டிலில் படுத்திருந்த அவன் வலக் கையைப் பிடித்து நாடியைச் சோதித்தவாறு நின்றிருந்தாள் அந்த நர்ஸ். முகத்திலே மென்முறுவல். அவனும் அவளைத்தான் பார்க்கிருன்; பார்த்துக்கொண்டே இருக்கிருன்.

"சீ...சீ.........இந்த ஆண்களே இப்படித்தான். அழகைப் பார்த்தால் பல்லைக் காட்டிக்கொண்டு!"

உள்ளம் பயங்கரமாகத்தான் அலறியது. ஆனுல் அந்த அலறல் வெளியே வரவில்லை. பேரிரைச்சலுடன் பொங்கிவரும் அலையொன்று கரையில் வந்து மோதி வந்த சுவடு தெரியாமல் மறைவதுபோல், எண்ணம் மனத்திலே உருப்பெற்று பொருமி மனத்துக்குள்ளேயே மோதி நசித்தது.

"ராத்திரிக்கு பாலும், ரொட்டியும்தான் ஆகாரம். அதுவும் கொஞ்சமாகக் கொடுங்கள்......"

உத்தரவு இடுவதுபோல் கூறிவிட்டு வெளியே போய்விட்டாள் அவள்.

ரமா ஜன்னல் வழியாக வெளியே பார்த்தாள். வானம் ஒரே நீலமாக இருந்தது. பொட்டுப் பொட்டாக புள்ளி வைத்தாற்போல் தாரகைக் கூட்டங்கள் மினுங்கின. வெளியே வருவோர் போவோரின் சந்தடி குறைந்துவிட்டது. நோயாளியுடன்

இருப்பவர்களில் சிலரே ஆங்காங்கு உட்கார்ந்திருந்தார்கள்.

இரவு நேரத்துக்கென்று அமர்த்தப்பட்ட நர்ஸ் வந்ததும் அந்த அழகி மாற்றுடையுடன் அங்கு வந்தாள். நீல வாயில் புடவை. அதில் மின்னும் நக்ஷத்திரப் புள்ளிகள்.

'விரு விரு' என்று அவள் புது நர்ஸை அழைத்துக்கொண்டு மோகனின் அறைக்குள் நுழைந்து, 'ஸிஸ்டர்! இதுஒரு புது பேஷண்ட்! நாளைக்கு'ஹெரனியா' ஆப்பரேஷன் ராத்திரி தூங்க ஒரு மாத்திரை கொடுங்க'' என்று கூறிவிட்டு ''குட் ஈவினிங் மிஸ்டர் மோகன். காலையில் சந்திக்கலாம்......'' என்றவாறு வெளியே போய்விட்டாள்.

அவள் போகும் வேகம்தான் என்ன? கூட்டிலிருந்து விடுபட்ட புறுவைப் போல் ரமா மீது உராசிக் கொண்டு அவள் போனதும் ரமா அறைக்குள் சென்று 'பொத்'தென்று நாற்காலியில் உட்கார்ந்தாள்.

கணவனுடன் பேசுவதற்குக் கூட அவளுக்குத் தோன்றவில்லை.

''பாலுக்கு சக்கரை போதுமா?''

''சீக்கிரம் தூங்குங்கள்'' இந்த வகையில் உற்சாகமில்லாமல் இருந்தது அவள் பேச்சு.

மோகன் இரண்டு மூன்று முறைகள் அவளைப் பார்த்து முறுவலித்தான்.

''நீ என்ன சாப்பிடப் போகிறாய்?'' என்று விசாரித்தான்.

''ஏதோ ஒன்று, எனக்குப் பசியே இல்லை...''

''சே...சே......நீயும், பாலும் ரொட்டியும் சாப்பிட்டுவிடேன்,'' என்றான் அவன்.

''அதொன்று தான் குறைச்சல் எனக்கு; உங்கள் பக்கத்தில் நானும் ஒரு படுக்கையைப் போட்டுக் கொள்ள வேண்டியதுதான்...''

''போட்டுக் கொண்டால் போச்சு. இருக்கவே இருக்கிறாள் சுமதி. உன்னையும் கவனித்துக் கொள்கிறாள்.''

'சுமதி!' ''அட, பெயர்கூடத் தெரிந்து வைத்திருக்கிறீரே. அதுவும் இத்தனை சடுதியில்!''

ரமா சுரத்தில்லாமல் படுக்கையை விரித்துக்கொண்டு கட்டிலுக்கு மறுபுறம் படுத்துக்கொண்டு விட்டாள். சிறிது நேரத்துக்கெல்லாம் மோகன் அயர்ந்து தூங்குகிறான் என்பதற்கு அடையாளமாக மெல்லிய குறட்டைச் சத்தம் கேட்க ஆரம்பித்து விட்டது.

ராமாதான் தூங்கவில்லை. ஜன்னலுக்கு வெளியேதெரியும் நீலவானத்தில் பொரிந்த தாரகைகளையே விழித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

## 2

பொழுது எப்பொழுது விடிந்ததென்பதே ரமாவுக்குத் தெரியாது கண் விழித்துப் பார்த்த போது அவள் எதிரில் நர்ஸ் ரமாவும் வார்டு பையன் ராஜூவும் நின்றிருந்தார்கள்.

''அம்மா நல்லா தூங்கிட்டாங்க'' என்றான் ராஜூ.

''ஆமாம்ப்பா! ராத்திரி தூக்கமே இல்லை. ஒரே கவலைதான் காரணம்...'' என்றாள் ரமா.

''அதெல்லாம் கவலைப்படாதீங்க அம்மா நம்ப டாக்டர் ஐயா நல்ல கைராசி உள்ளவரு...'' சொல்கிறவன் நம்பிக்கையுடன் சொல்வதைக் கேட்டுக் கொள்கிறவளும் நம்பிக்கையுடன்தான் கேட்டுக் கொண்டாள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் ரமாவும், வார்டுப் பையனும் மோகனை மாடிக்கு அழைத்துப்போனார்கள்.

திரும்பவும் அறைக்கு அழைத்து வரும் வரையில் ரமா இருப்புக் கொள்ளாமல் தவித்தாள். வெளியே நீண்டு நெளிந்து செல்லும் பூந்தமல்லிச் சாலை, நெடிதுயர்ந்து நிற்கும் மரங்கள், சாலையில் விரைந்துசெல்லும் வண்டிகள் எதைக் காணவும் அவளுக்குப் பிடிக்கவில்லை.

நர்ஸ் சுமதி குறுக்கும் நெடுக்குமாக அலைந்து கொண்டுதான் இருந்தாள். அவளிடம் என்ன பேசுவது எதைக் கேட்பது என்பதுதான் ரமாவுக்குப் புரியவில்லை.

அவள்தான் என்ன, நின்று ஒரு வார்த்தை சொல்கிறாளா? பறக்கிறாள், பறக்கிறாள் அப்படி!

மோகன் மறுபடியும் அறைக்கு வந்து விட்டான்.

"உங்கள் மனைவிக்குத்தான் ரொம்ப ரொம்ப கவலை......" சுமதி சொல்லிக் கொண்டே அவன் நாடியைப் பிடித்துப் பார்க்கிறாள். துன்பம், துயரம், ஏக்கம், கவலை, இவைகளுக்கு நடுவே சிரிக்கிறாள் அவள். முல்லைப் பற்கள் ஒளி வீசுவதைக் காண்கிறான் மோகன்.

"இப்போ ஒன்றும் வலிக்காது. மரத்துப் போக ஊசி போட்டிருக்கிறது. பகல் ஒரு மணிக்கு மேலே வலி வரும். ஜோஸ்யக்காரிபோல் கூறிவிட்டு "பத்துமணிக்கு இரண்டு அவுன்ஸ் ஹார்லிக்ஸ் கொடுங்கள்" என்று உத்தரவு இட்டுவிட்டு வெளியே நடந்து விடுகிறாள் சுமதி.

மோகன் ஆயாசத்துடன் கண்களை மூடிக்கொண்டு விடுகிறான். 'சுமதியைப் பார்த்தால் பேசத் தோன்றுகிறது இவருக்கு...' மனம் எதைத்தான் நினைக்காது? ஆத்திரமும், அன்பும் ஒன்றுடொன்று முந்துகின்றன. அன்பு வெல்கிறது. ரமா பரிவுடன் கணவனின் நெற்றியை வருடுகிறாள். கண்களிலிருந்து இரண்டு சொட்டுக் கண்ணீர் உருண்டு அவன் நெற்றியில் விழுகிறது.

"அழுகிறாயா என்ன ரமா? எனக்கு ஒன்றுமில்லை. அதுவும் இந்த ஆப்பரேஷன் இவர் கையில் ரொம்பச் சுலபமாம்......" மோகன் மெல்லிய குரலில் கூறுகிறான்.

நாட்கள் உருண்டு ஓடுகின்றன. ரமா கணவன் அருகில் அமர்ந்து பணி புரிந்துகொண்டுதான் இருக்கிறாள். இடையில் சுமதி வரும்போதெல்லாம் அவன் காட்டும் மகிழ்ச்சியும் பரிவும் அவள் நெஞ்சைக் குடைந்துகொண்டே இருக்கிறது.

"இன்று உடம்பு துடைக்க வேண்டிய நாள்" என்று சொல்லிக் கொண்டே சுமதி பீங்கான் பாத்திரத்தில் சுடுநீரைக் கொண்டு வந்து வைத்தாள்.

தூய்மையான அந்த வெள்ளைப் புடவையும், ரவிக்கையும் கண்ணைப் பறித்தன. மழ மழ வென்று வாழைத்தண்டுகள் போல் கைகள், சங்கு போன்ற கழுத்து, மாசுமறு வற்ற முகம், வளைந்து அலை அலையாய்ப் பரவிக் கிடக்கும் குழலைத் தூக்கி வாரிக் கொண்டை போட்டிருந்தாள்.

செம்மையும், செழுமையும் நிறைந்த அவள் இதழ்களிலே ஆரோக்கியம் துள்ளிக் கொண்டிருந்தது.

ரமா அவளை ஆடாமல் அசங்காமல் பார்த்தாள். பார்த்துக்கொண்டேயிருந்தாள்.

'இவள் நம் கணவரின் உடலைத் தொட்டுத் துடைக்கப் போகிறாள்?

"கொஞ்சம் வெளியில் போகிறீர்களா?" சுமதி அறைக் கதவை ரமாவை வெளியே அனுப்பிவிட்டு மூடத் தயாராகநின்றிருந்தாள்.

வெளியே வந்து உட்கார்ந்தவள் உள்ளத்தில் பல சிந்தனைகள். ரமா படித்தவள்தான். தற்கால நாகரிகம் தெரிந்தவள்தான். இருந்தாலும், அவள் மனம் சந்தேகப்படத்தான் செய்தது, ஒன்று, இரண்டு என்று நிமிடங்கள் விரைந்தன. பத்து நிமிடங்கள் கழித்து சுமதி பீங்கான் பாத்திரத்தை ஏந்திக் கொண்டு வெளியே வந்தாள்.

விர்ரென்று அம்புபோலப் பாய்ந்து சென்ற ரமாவை சந்தன சோப்பின் மணம் வரவேற்றது.

சுருண்டு படிந்திருந்த கிராப்புத் தலையைத் தடவியவாறு மோகன் புத்தம் புதியவனாகத் தென்பட்டான்.

"நல்ல கைத்திறன் சுமதிக்கு. கொஞ்சம்கூட உடம்பை அலட்டாமல் பஞ்சுக் கைகளால் பட்டால்

ஒற்றுவதுபோல் குளித்த மாதிரி துடைத்து விட்டுவிட்டாளே......''

"ஊஹூம்......அப்படியா?''

"பாவம், நல்ல பெண். ஊர் மங்களூராம். பெற்றோர் கிடையாதாம். இங்கே அக்கா வீட்டிலிருந்து கொண்டு வேலை பார்க்கிறாளாம் சிரிக்கச் சிரிக்கப் பேசுகிறாள்...''

"என்ன பேசினாள்?'' என்று கேட்டாளே பார்க்க வேண்டும் ரமா.

"அரசியல், காதல், சினிமா...... இன்னும் எதை எதைப் பற்றியோ...''

"ஆஹா... ...அரசியலுக்கும் காதலுக்கும் தாவிக் கடைசியில் கலையைக் கொலை செய்ய ஆரம்பித்து விட்டாயாக்கும்!''

"என்ன சொல்கிறாய், ரமா நீ?...'

"நான் என்ன சொல்ல முடியும்? நேற்று உங்களுக்குத் தையல் பிரித்தாயிற்று. நாளைக்கு வீட்டுக்குப் போகலாமா என்று டாக்டர் வந்ததும் கேட்கவேண்டும்... ..''

"அதற்கும், இதற்கும்...''என்று தயங்கினான் மோகன்.

சுமதி 'சுரமானி'யை எடுத்துக் கொண்டு உள்ளே வந்து விட்டாள்.

"மிஸ்டர் மோகன்! உங்களுக்கு ஜுரம் கிரம் ஒன்றும் கிடையாது. இருந்தாலும் என் கடமையைச் செய்துதான் ஆகவேண்டும் எங்கே கையைக் காட்டுங்கள். ஏதோ எழுந்து மெதுவாக உட்காருங்கள். ஆ.. ஆ...மெதுவாக...'' என்று அவனைத் தாங்கிப் பிடித்துக் கொண்டாள் சுமதி.

வெளியே டாக்டரின் காலடிச் சத்தம் கேட்டது.

டாக்டர் வாசுதேவன் புன்முறுவலுடன் வந்து எதிரில் நின்றார்.

"நீங்கள் இன்று மாலை வீட்டுக்குப் போகலாம் சார்...அடுத்தவாரம் மீண்டும் வர வேண்டும். நாளைக்கு வீட்டுக்குப் போய் சக்கரைப் பொங்கல் சாப்பிடுங்கள்.''

ரமா சுமதியைப் பார்வையால் ஒரு வெட்டு வெட்டினாள்.

நம்மவர்களுக்கு நம் இலக்கியங்களை பல்லாயிரம் வருஷங்கள் முந்தினவை என்று சொல்லிக்கொள்வதில் ஒரு பெருமை. டார்வின் பரிணும தத்துவப்படி தோன்றிய முதல் குரங்கு தமிழ்க் குரங்கு என்றால்தான் நம்மவர்களுக்கு திருப்தி. **—புதுமைப் பித்தன்.**

* * *

உண்மையான ஞானி யார்? ஐயோ காலம் பறந்து கொண்டிருக்கிறதே என்று உணர்கிறவன் தான். **—மகாகவி தாகூர்.**

மாலை மங்கிக் கொண்டு வந்தது. தெரு விளக்குகள் பளிச் சென்று எரிந்தன. மருத்துவமனை கலகலப்போடு காணப்பட்டது. பூந்தமல்லிச் சாலையில் வாடகைக் கார்களுக்குப் பஞ்சமில்லை. ரமா நொடியில் ஒரு காரை அழைத்து வந்து விட்டாள்.

சுமதி பதினேழாம் எண் அறையை எட்டிப் பார்த்தாள்.

"வீட்டுக்குப் புறப்பட்டு விட்டீர்களா மிஸ்டர், மோகன்...''

"ஆமாம் சகோதரி! உங்கள் அன்பால்தான் நான் இவ்வளவு சடுதியில் குணமடைந்தேன் ..''

"அதெல்லாம் ஒன்றுமில்லை பிரதர்! எனக்கு உங்கள் வயதின் ஒரு சகோதரன் இருக்க வேண்டும். சென்ற வருஷம் காலமாகிவிட்டார். அந்த ஏக்கத்தின் சுழலில் ஒவ்வொரு ஆண்மகனின் முகத்திலும் அவருடைய சாயலைக் கண்டு ஆறுதல் அடைகிறேன். போய் வாருங்கள் அண்ணு...உடம்பைக் கவனித்துக் கொள்ளுங்கள்......''

மோகனும், ரமாவும் வெளியேவந்தவுடன் ஆதரவு ததும்பும் தன் கரங்களால் இன்னொரு நோயாளியை அழைத்து வந்து பதினேழாம் எண் அறைக்குள் நுழைந்தாள் சுமதி... அதோ அந்த நோயாளிக்கு அன்பும், ஆதரவும் நல்க அவள் பட்டுப் பூச்சி போல் பறந்து செல்வதைப் பாருங்கள்.

# உயிரின் விலை

நிறைகுடம் போல் மடி கனக்க அன்று வெள்ளைப் பசு ஆடி அசைந்து கொண்டே மேய்ச்சலிலிருந்து திரும்பிக் கொண்டிருந்தது. கண்ணுக் கெட்டிய தூரம் ஒரே பசுமை. ஏரிகளிலும், குளங்களிலும் நீர் நிரம்பி அலை அடித்துத் ததும்பிக் கொண்டிருந்தது. அதன் கரையோரங்களில் புற்கள் புதர்களாக மண்டிக் கிடந்தன.

"அப்பா! இந்த வருஷம் நல்ல மழை, நல்ல விளைச்சலும் கூட. ஆனா... பயிரிலே வாயை வைக்க என்னை விடுவாங்களா? இல்லை, அப்படி மேயறதுதான் நல்லதா? எத்தனை புல்லைச் சாப்பிட்டாலும், ஒரு அரி சம்பாக் கதிரைக் கடிச்சு மென்று முழுங்கறுப்லே ருசி வருமா! என்று ஏக்கத்துடன் நினைத்துக் கொண்டே நடந்தது வெள்ளை. பெருமிதத்துடன் தன் உடலைக் கவனித்துக் கொண்டது அது. மினுமினு வென்று எண்ணெய் தேய்த்து மெழுகி விட்டாற் போல் ஒரு வித மினு மினுப்புடன் அழகாகத்தான் இருந்தது: தாய்மை, மாட்டிலிருந்து மனிதவர்கம் வரை அழகிய பூரிப்புத்தான்.

வெள்ளைக்கு இது ஒன்பதாவது மாதம். அதற்கு எப்படி மாதக் கணக்கும், இன்னொன்றும் தெரியப் போகிறது என்றுதானே நீங்கள் வியக்கிறீர்கள்? ஏன் தெரியாது? கருவுற்ற நாளிலிருந்து ஈனும் நாள் வரை அதற்கு நன்றாகத் தெரியும். ஏரி மதகின் மீது மெதுவாக ஆடி அசைந்தவாறு பொன்னாங்கண்ணிக் கீரையைத் துளிராகக் கடித்துக் குதப்பி விழுங்கியது அது. "அம்மாடி! என்ன ருசி" மதகின் சரிவிலே காஞ வாழைச் செடிகளும் குண்டாங்கண்ணி இலைகளும் மண்டிக் கிடந்தன. 'குண்டாங்கண்ணி இலைகள் உடம்புக்கு நல்லது.' என்றவாறு அதன் சொர சொரப்பைக் கவனியாது கடித்து விழுங்கியது.

"காஞ வாழை மழமழ வென்று வாழைப் பழம் போல் இருக்குமே"

ஆனால், அதற்குக் காஞ வாழையை மென்றுவிட மனம் வரவில்லை. கன்றுக் குட்டி தன் இளம் பற்களால் கடித்து விழுங்கும் காட்சியை மனத்திலே தீட்டிப் பார்த்தது அது. அந்த விநாடியே அதன் மனக்கண் முன்பாக அழகிய வெள்ளைக் கன்றுக் குட்டி ஒன்று காதுகளை நிமிர்த்திக் கொண்டு, நீலமணிக் கண்களை உருட்டி விழித்தவாறு நின்றது. தலைமட்டும் கருப்பு.

'அதன் அப்பா அப்படித்தான் இருப்பாரு' என்று வெட்கத்துடன் நினைத்துக் கொண்டது வெள்ளை. முகம் சிவக்க மதகை விட்டு இறங்கி ஏரியில் தெளிந்திருந்த நீரைப் பருகிக் கொண்டே அங்கு மலர்ந்திருந்த தாமரை மலர்களை பார்த்தவாறு நின்றிருந்தது.

அலர்ந்திருந்த தாமரை மலர்கள் கூம்பி இதழ்களை மடித்துக் கொண்டு தலையைச் சாய்த்து உறங்குவது போல் இருந்தன. "ஓஹோ! சூரி

யன் ' மறைகிற நேரமாயிடிச்சா''
என்று எண்ணி வெள்ளை மேற்கு
வானத்தை ஏறிட்டுப் பார்த்தது.

வானமங்கை செவ்வண்ணச் சாறு
பூசி, தங்கத் துகில் உடுத்து நின்ருள்.
கதிரவன் மெல்ல மெல்ல நகர்ந்து
மலைவாயிலுக்குப் போய் விட்டான்.
அதற்குள் வெள்ளையைத் தேடிக்
கொண்டு சண்பகம் வந்து விட்
டாள்.

''வெள்ளை! வெள்ளை! ஏண்டி
கண்ணு! நீ இங்கேயே நின்
னுட்டே?'' என்றவாறு பரிவுடன்
பசுவைச் சுற்றிச் சுற்றி வந்தாள் சண்
பகம்.

''அம்மா! அம்மா!'' என்றழைத்து
அன்புடன் அவள் கரங்களை நக்கிக்
கொடுத்தது.

சண்பகம் பரிவுடன் அதை மெது
வாக ஓட்டிக் கொண்டு வீடு வந்து
சேர்ந்தாள். தவிடும், பிண்ணுக்கும்
கலந்து வைத்தாள். குழந்தைக்கு
அன்ன மூட்டுவது போல கையில்
எடுத்து வாயில் ஊட்டி மகிழ்ந்தாள்.
அடுத்த வீட்டு பொன்னம்மாளுக்கு
ஏனே வெள்ளை என்ருலே பிடிப்ப
தில்லை. ஏன்? மனித சுபாவங்கள்
பலவிதம். சிலருக்கு உலகில் எல்
லாமே அழகாகவும், கடவுளின்
படைப்பின் பேரதிசயமாகவும்
தோன்றும். பலருக்கு இதெல்லாம்
ஒன்றும் விளங்குவதில்லை. காடாகப்
படர்ந்திருந்த சுரைச்செடியை நீக்கி
விட்டு அவள் பொருமை நெஞ்சை
அழுத்த அந்தக் காட்சியைப் பார்த்
தாள்.

முகத்தை நக்கென்று தோளில்
இடித்துக் கொண்டு உள்ளே போய்
விட்டாள். அந்த வெள்ளைப் பசுவை
அவள் வாங்க வேண்டுமென்று
இருந்ததும், சண்பகம் போட்டி
பரக அதைக் கூட விலை கொடுத்து
வாங்கியதும் பெரிய கதை. வியா
பாரமென்ருல் போட்டி இருக்கத்
தான் செய்யும்; மாட்டுக்குடைய



தாயை வணங்கி
தந்தையை வணங்கி
குருவை வணங்கி
தெய்வத்தை வணங்கி
இக்காரியத்தை
துவங்குகிறேன்.

—சேத்தூர் கூத்தன்

வன் முன்னூற்று ஐம்பது ரூபாய்கள் விலை சொல்ல, பொன்னம்மாள் முன்னூறு ரூபாய் கேட்டு விட்டு நின்ருள். மாட்டின் பொருள் மதிப்பைவிட அதன் அழகு சண்பகத்தின் மனத்தை ஈர்த்தது. வெள்ளை வெளேர் என்று பால் வண்ணமும், வளைந்து தலை உச்சியில் ஒடுங்கிய கொம்புகளும், நீண்ட அதன் விழிகளும், முகத்திலே ததும்பி நின்ற அமைதியும் அதை திருவின் இருப்பிடமாகக் காட்டின.

முன்னூற்று ஐம்பது ரூபாயை எண்ணி வைத்து விட்டு சண்பகம் கீழே விழுந்து பசுவின் கால்களில் வணங்கி எழுந்தாள். வியாபாரி மாட்டை அவளுடன் ஒட்டி விட்டார். மூன்று மாதத்திய சினைப் பசுவை நம்பி அந்தப் பேதைப் பெண் தன் வருங்காலத்தின் வளப்பத்தை கற்பனைக் கண் கொண்டு ரசித்தாள்.

வீட்டிலே நோயாளிக் கணவன். மாடு ஈன்று பால் கொடுத்தால் குடியே விளங்கி விடும் என்பதுதான் அவளுடைய திடமான நம்பிக்கை.

வேலிக்கு அப்பால் ஒரு ஜோடிக் கண்கள் தன்னையும், மாட்டையும் உற்றுப் பார்த்துக் காய்வது கண்டு சண்பகம் பதறிப் போனுள்.

'கண்ணேறு ஏதும் இல்லாம், மாரி யாத்தா புண்ணியத்துலே நல்ல படியா கண்ணு போடணுமே'' என்று வேண்டியவாறு வெள்ளையின் முகத்தைத் தன் இரு கரங்களாலும் சுழற்றி திருஷ்டி முறித்துவிட்டு, வீட்டு அலுவல்களைக் கவனிக்கச் சென்று விட்டாள் அவள். பிறகு அவள் சோருக்கிக் கணவனுக்குப் படைத்து விட்டுத் தானும் உண்டு உறங்கப் போகும் போது வெள்ளை நீணமாக முணகிக்குரல் கொடுத்து அவளை அழைத்தது. வெளியே வந்த போது சுற்றிலும் நல்ல இருட்டு. வானத்தில் நிலவு இருந்தால் தான் இந்த எளிய மக்களின் சுற்று வட்டாரங்களில் வெளிச்சம் உண்டு. அமாவாசைக்கு ஐந்தாறு நாட்களுக்கு முன்பு முன் இரவில் நிலவேது? சண்பகம் உள்ளே சென்று காடா விளக்கை எடுத்து வந்து மாட்டைப் பார்த்தாள். தளதள வென்று சூலுற்றிருந்த அதன் வயிற்றில் கருப்புக் சோடுகளாய் சூட்டை இழுத்தவர்கள் யாராக இருப்பார்கள்?

அடுத்த குடிசையில் இருட்டு தான். ஆனுலும், பொருமைக் கண்கள் இரண்டு நெருப்பாய்க் காய்வது சண்பகத்துக்கு நன்ருகத் தெரிந்தது.

''ஐயோ! ஆத்தா'' என்று மகமாயிஆத்தாளை அழைத்தவாறு சண்பகம் உள்ளே ஓடி கலயத்தில் விளக்கெண்ணெயை எடுத்து வந்து சூட்டின் மேல் தடவினுள். வெள்ளையின் கண்களிலிருந்து கண்ணீர் பொங்கி வழிந்தது. அதுவே தனைத் தாங்காமல் கட்டுத்தறியில் சுற்றிச் சுற்றி வந்தது.

மறுநாள் பொழுது விடிந்ததும், சண்பகம் தானுகவே வலுவிச் பொன்னம்மாளுடன் பேச்சை ஆரம்பித்தாள்.

''இதோ பாரு பொன்னம்மா சினை மாட்டின் வயிற்றிலே சூ

போட்டுட்டுப் போயிருக்காங்க பாவிங்க—''என்று பொருமிக் கொண்டே கூறினுள் சண்பகம்.

பொன்னம்மா அலட்சியத்துடன் சிரித்தாள்.

''இதுக்குப் போய் இப்படி மாய்ஞ்சுப்போறியே. யாரும் போட்டிருக்க மாட்டாங்க; எங்காச்சும் முள்ளுலே கீறிக்கினு வந்திருக்கும்... போயேன். மகா மாட்டைக் கண்டுட்டே நீ...''

சண்பகத்துக்கு ஆத்திரம் எல்லை மீறிப் போயிற்று.

''உனக்கு எம் மாட்டைக் கண்டா வவுத்தெரிச்சல். ஆன்னிக்கி சந்தையிலே நீ எங்கிட்டே போட்டி போட்டவதானேடி?'' என்று இரைந்தாள்.

பொன்னம்மாளும் வரிந்து கட்டிக் கொண்டு மல்லுக்கு நின்ருள்.

''நீதாண்டி எங்கிட்டே போட்டி போட்டவ. முன்னூறு ரூபாய் மாட்டை மேலே அம்பது கொடுத்து வாங்கியாந்துட்டு எம் பொழைப்பிலே மண்ணைப் போட்டவ—''

இந்த இரைச்சலில் கட்டுத்தறியில் இருந்த மாடு பிரசவவேதனைப் படுவதை சண்பகம் கவனிக்கவே இல்லை. இரவெல்லாம் சூடு போட்ட இடத்தின் எரிச்சல் தாளாமல் அரற்றிய மாடு, விடியற்காலையிலிருந்து தாய்மை வேதனையில் தவித்துக் கொண்டிருந்தது.

சண்டை ஓய்ந்து சண்பகம் மாட்டைக் கவனித்த போது அது வேதனையுடன் படுத்து அரற்றியவாறு இருந்தது. சண்பகம் பதறிப் போனுள். கன்று ஈனப்போகும் அது என்னதான் வேதனை யுற்ருலும், முகத்திலே தெளிவும், உற்சாகமும் கொண்டு இருப்பது தான் வழக்கம், ஆனல், வெள்ளை ஏன் கண்கள் சொருகப் படுத்துக் கிடக்கிறது?

''வெள்ளை! வெள்ளை! எங்கி

ருந்து அவள் குரல் கொடுத்தாலும், 'அம்மா' என்று பரிவுடன் அவளுக் குப் பதில் குரல் கொடுக்கும் வெள்ளை அசையாமல் கிடந்தது.

பொன்னமாள் மறுபடியும் வேலி யில் படர்ந்திருந்த சுரைச் செடியை நீக்கி மாட்டைப் பார்த்துப் பல மாகத் தலையை அசைத்துத் தன் திருப்தியைத் தெரிவித்தாள்.

சண்பகம் கைகளைப் பிசைந்து கொண்டே, ''பொன்னம்மா! உன்னை என்னென்னவோ சொல்லிப் பூட் டேன். அதையெல்லாம் மனசுலே வச்சுக்காதே. மாடு என்னவோ கணக்குலே இருக்குது. வந்து பாரேன்—'' என்று அழைத்தாள்.

பொன்னம்மா வேண்டா வெறுப் பாகத் தலையை நீட்டிப்பார்த்தாள்.

''தே! சும்மா ஏன் கூவுறே? கன்னு போடற மாடு அப்படித்தான் இருக் கும். சும்மாக் கிட...'' இப்படிச் சொல்லியவாறு பொன்னம்மா தன் வீட்டுக் கதவைத் திறந்து தெவில் இறங்கி எங்கோ சென்றாள். மறு படியும் திரும்பி வீட்டுக்குள் போய் விட்டாள்.

நேரம் செல்லச் செல்ல மாட்டின் நிலைமை மோசமாகிக் கொண்டே வந்தது.

யார் யாரோ வந்து பார்த்தார் கள். குக்கிராமமாகிய அந்த ஊரில் வைத்திய வசதியோ இன்னென்றே கிடையாது.

மாடு இனி பிழைக்காது என்று சண்பகத்துக்குத் தெரிந்து விடவே அவள் அதன் அருகிலேயே உட்கார்ந் திருந்தாள். மாலை மங்கிக் கொண்டே வந்தது. ஏரிக்கரை, கணவாய், மதகு எல்லாம் மஞ்சள் குளித்துப் பொன்னுகத் துலங்கின.

மடி நிறைய அமுதமும், வாய் நிறைய அசை போடும் புல்லுமாக ஆடி ஆடி அசைந்து வெள்ளை வரு வதுபோல் அவளுக்குள் ஒரு பிரமை.

''வெள்ளை'' என்று அரற்றினுள் சண்பகம். அதை மீறிக் கொண்டு ஆண் குரல் ஒன்று எழுந்தது.

''யாரு வூட்டுலே! மாடு செத்துப் போச்சுன்னுங்க; கொடுக்கிறியா?''

சண்பகம் பதட்டத்துடன் எழுந் தாள். தலைப்பை வரிந்து கட்டிக் கொண்டாள்

''யோவ்! யாரய்யா சொன்னுங்க உன்னிடம் அப்படி? அது பிராண னுக்கு மன்ருடிக்கிட்டு இருக்கிறப் பவே செத்துப் போச்சுன்னுங்களா? இல்லை, கேக்கறேன். யாரய்யா சொன்னுங்க?''

அவன் அவளைக் கோபத்துடன் நிமிர்ந்து பார்த்தான் ''ஏம்மா கத் தறே? உங்க பக்கத்து வூட்டுப் பொம்பளைதான் சொன்னு...''

''சொன்னுளா? ஏய்யா! மாட்டை செத்தப்புறம்தான் விலை பேசுவாங்க. காசு சம்பாறிப்பாங்க. அதும் உசிரு இருக்கச்சேயே ஏய்யா இப்படி அலையுறீங்க?''

''நீங்களும் மனுசன் கணக்கிலே சாவடியிலே காந்தி படத்துக்கு முன் னுடி குந்திக்கிட்டு கதை வேறே கேக்கறீங்க—''

தன் எஜமானியின் ஆவேசமான அன்புக் குரலை வெள்ளையின் செவிப் புலன்கள் நுகர்ந்தனவோ என்னவோ 'அம்மா!' என்று அடிவயிற்றிலிருந்து இரைந்துகத்தி தன் கடைசிமூச்சைக் காற்றுடன் கலக்கவிட்டு ஓய்ந்தது.

மனிதத்தனம், பண்பாடு, பாவ புண்ணியத்தில் நம்பிக்கை கொண்ட நம் பாரதம் வெறும் வாய்ப் பேச்சு டன் செயலாற்றும் வெறும் வியா பார நாடாக மாறும்வரை அண் ணல் இருந்து பார்த்திருந்தால்...

சண்பகம் படித்தவள் அல்ல. ஆனுல், பொன்னம்மாளின் உள் ளப் பாங்கைக் கண்டதும் ஏனே காந்தியடிகளை நினைத்து நினைத்து ஏங்கினுள்.

உயிருக்கு விலையா அல்லது உட லுக்கா?




இப்படியும் நடக்குமா என்று நான் அடிக்கடி யோசித்துப் பார்க்கிறேன்; எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. ஆச்சரியமாகவும் இருக்கிறது. பங்கஜம் உண்மையாக நடந்ததைத்தான் கூறினளா அல்லது எல்லாம் அவள் கற்பனையா? கற்பனை என்றும் சொல்வதற்கில்லை. உண்மை, வாஸ்தவம் என்று பலதடவைகள் கூறியிருக்கிறாள். அவள் சொன்ன கதையைச் சொல்லுகிறேன், நீங்களே பாருங்கள்.

சோலையூர் கிராமத்தில் என் கணவருக்கு ஆறு மாசம் வேலை இருந்தது. கால் நடைகளுக்கு வியாதி அதிகரித்திருந்தால் அந்தக்கிராமத்திலேயே தங்கி வைத்தியம் செய்யும்படி சர்க்காரின் உத்தரவு. எனக்கு அந்த உத்தரவைக் கேட்டதும் சந்தோஷம் தாங்கவில்லை. நகரவாசத்திலிருந்து அலுத்துப்போன எனக்கு கிராமம் என்றவுடன் அதன் சூழ்நிலையை நினைத்து மனம் ஆறுதல் அடைந்தது. கிராமத்துக்கு நான் வருவதா வேண்டாமா என்கிற பிரச்னையை வேறு என் கணவர் கிளப்பிவிட்டார்.

"பொறுக்கி எடுத்தாற்போல் ஐந்தாறு வீடுகள்தான் இருக்கின்றன. மற்ற இடங்களெல்லாம் குடியானவர்கள் வசிக்கிறார்கள். இருக்கும் ஐந்தாறு வீடுகளும் ஒன்றுக்கொன்று அருகில இல்லை. எட்டி இருக்கின்றன. உனக்குப் பொழுது போகாதே" என்றார்.

"பொழுது போகாமல் என்ன? எல்லாம் போய்விடும். கிணற்று ஜலம் இறைத்துக் கொல்லையில் கொஞ்சம் கறிகாய்த் தோட்டம் போட்டால் போயிற்று" என்று கூறினேன்.

"சரி, அப்புறம் என்னைக் குறை சொல்லாதே" என்று உத்தரவு கொடுத்துவிட்டார் அவர்.

சோழியூருக்கு வந்துவிட்டோம். வீடு கிராம ஓரமாயில் இருந்தது. கொல்லை விஸ்தாரமானது. வாசலில் இரண்டு மாமரங்கள்; மூன்று பலா மரங்கள்; திருஷ்டிபரிகாரம் மாதிரி ஒரு பெரிய புளியமரம். நிமிர்ந்து, அடி பருத்து வளர்ந்திருந்த அந்த மரத்துக்கு முப்பது வயது இருக்கலாம். அதன் வெகு சமீபத்தில் வீட்டின் திண்ணை இருந்தது. சாயங்கால வேளைகளில் குளிர்ந்த காற்றுக்காக அந்தத் திண்ணையில் உட்கார்ந்திருப்பேன். வந்து ஒரு வாரம் வரையில் வீட்டைச் சுத்தம் செய்யவே அவகாசம் போதவில்லை. வீடு ரொம்ப நாளாகப் பூட்டி இருந்தது என்று யாரும் சொல்லவேண்டிய அவசியமே இல்லை. பிறகு காய்கறித் தோட்டம் போடுவதில் கொஞ்ச நாட்கள் கழிந்தன. எனக்கு ஒத்தாசைக்காக வேலைக்காரி ஒருவள் கிடைத்தாள். சம்பா — வேலைக்காரியின் பெயர் அதுதான் — வீட்டுக்குள் நுழைந்ததும் வீட்டைச் சுற்றி இரண்டு மூன்று தடவை பார்த்தாள்.

"போயும், போயும் இந்த வீட்டையா அம்மா புடிச்சீங்க?" என்று கேலியாகக் கேட்டாள் அவள்.

"வீடு நன்றாகத்தானே இருக்கிறது சம்பா? வாசலைப் பார் கிளி கொஞ்சுகிறது. கொல்லையில் கொஞ்ச தூரத்தில் வாய்க்கால ஓடுகிறது. ஆடி மாசம் பிறந்து விட்டால் அதில் கொள்ளை ஜலம் போகும்" என்றேன் நான். பட்டணத்தில் சொட்டுக்குழாய் ஜலத்துக்கு ஏங்கியவளுக்கு ஜலம், கிணற்றில் ஒரு முழத்தில் ஜலம், தெருக்கோடியில் குளத்தில் ஜலம் என்று பார்த்தவுடன் ஆனந்தமாகத்தானே இருக்கும?





**மாமனர்**: மாப்பிள்ளையிடம் டிபனுக்கு பெரியவளை அனுப்புடி!

"அந்தப் புளிய மரத்தை வெட்டிப் போட்டாக்க வீடு நல்ல வீடு தான் அம்மா. புளிய மரம் இருக்கிற வீடு அவ்வளவு சொகமில்லிங்க. நானும் உங்களைப்போல இந்த ஊருக்குப் புதுசுதாங்க" என்று தன் அபிப்ராயத்தை மேலும் உறுதியாகச் சொன்னாள் சம்பா.

'மரம் வைத்துப் பயிராக்க வேண்டிய சமயத்தில் மரத்தை வெட்டியா போடுவாங்க? பசுமையாய் எப்படி இருக்கு அந்த மரம்?" என்று கூறிவிட்டு அவள் பேச்சைக் காதில் வாங்காமல் இருந்துவிட்டேன்.

சம்பா மட்டும் அவள் சொல்வதையே திருப்பித் திருப்பிச் சொல்லிக்கொண்டிருந்தாள்.

நடுப்பகல் வாய்க்காலில் ஸ்நானம் செய்தவிட்டு அப்பொழுது தான் வீட்டுக்கு வந்தேன். குழந்தை ரவி தொட்டிலில் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான். அவனுக்குத் துணையாக இதுவரையில் உட்கார்ந்திருந்த சம்பா வீட்டுக்குப் போய் விட்டாள். சாப்பாடு முடிந்தது தெரு நடையை ஒட்டினாற் போல் உள்ள தாழ்வாரத்தில் பாயை விரித்துக்கொண்டு அன்றைய தினசரியைப் படிக்க ஆரம்பித்தேன்.

"மாமீ, மாமீ" கணீரென்று வீணையின் நாதத்தைப்போல் இருந்தது அந்தக் குரல்.

என் எதிரில் ஒரு பெண் நின்று கொண்டிருந்தாள். தழையத் தழைய பச்சைப்புடவை ஒன்றைக் கட்டிக்கொண்டு, அரக்கு ரவிக்கை போட்டிருந்தாள் அவள். அவள் தலையில் அன்று மலர்ந்த மல்லிகையும், முல்லையும் செண்டாக வைக்கப்பட்டிருந்தது. அவள் உடல் தாழம்பூ நிறமுள்ளது. கண்கள் சிறியனவாக இருந்தாலும் நீண்டு காதளவு ஓடின கருத்த இமைகள் இரண்டும் சிறகடித்துப் பறக்கும் வண்டுகளை எனக்கு நினைப்பூட்டின. அவள் மோவாய் சிறிது நீண்டு, அவள் சிரிக்கும்போது அந்த முகத்துக்கே அழகை அளித்தது. பொதுவாக கிராமாந்திரப் பெண் ஆனதால், பதவிசாக மேலாடையைப் போர்த்திக்கொண்டு, பதுமை மாதிரி நின்றிருந்தாள் அவள்.

"வா அம்மா! உட்கார்ந்து கொள்" என்று அவளை உட்காரச் சொல்லி உள்ளே அழைத்தேன்.

"பரவாயில்லை மாமி, இங்கேயே காற்றோட்டமாக இருக்கு உட்கார்ந்து கொள்கிறேன்" என்று கூறிவிட்டு சம்பாவின் கண்களை உறுத்திக்கொண்டிருந்த அந்தப் புளிய மரத்தின் அடியில் கால்களை மண்டியிட்ட வண்ணம் உட்கார்ந்து கொண்டாள்.

"நீ இந்த ஊர்தானா? உன் வீடு எங்கே இருக்கிறது?" என்று கேட்டேன். அவள் ஒரு கோணல் புன்னகை புரிந்தாள்.

"குளத்தங்கரைக்கு தெற்கில் ஒரு தெரு இருக்கிறது. அங்கே போக வேண்டும். அம்மாவுக்கு சதா காரியம் 'உஸ்'ஸென்று உட்காரமாட்டாள். எனக்குப் பொழுதே போகவில்லை மாமி" என்றாள் அவள்.

"எனக்கும் அப்படித்தான் அம்மா. உனக்குக் கல்யாணமாகிவிட்டதா? புக்ககத்துக்குப் போகவில்லையா இன்னும்?" என்று கேட்டேன் அவளை.

அவள்முகத்திலே சலனம் தோன்றியது. கருத்த இமைகள் இரண்டும் கண்ணீரால் நனைந்தன. அவள கழுத்தை ஊடுருவிப் பார்த்தேன். போர்த்தியிருந்த மேலாடையின் இடுக்கு வழியாக மாங்கல்யச் சரடு பளிச்சென்று தெரிந்தது.

எனக்குக் காரணம் விளங்கவில்லை. மேலும் அவள் துன்பத்தை அதிகப்படுத்த நான் விரும்பவில்லை. பேசாமல் இருந்தேன்.

"உங்களைப் போல் எனக்கும் படிக்க ஆசைதான். அம்மாவுக்கு அதெல்லாம் பிடிக்கிறதில்லை மாமி. படு கர்நாடகம். மூன்றாவது படிக்கும் போதே பள்ளிக்கூடம் போக வேண்டாமென்று நிறுத்திவிட்டாள்."

இந்தக் குக்கிராமத்தில் கல்வி அறிவு என்கிற ஆவல் ஏற்படுவது சிறிது சிரமம்தான் என்று எனக்குத்தோன்றியது.






"ஆத்துக்காரருக்கு எங்கே வேலை?" என்று கேட்டுவைத்தேன்.

"வேலையுமில்லை ஒன்றுமில்லை. அவர் படித்திருப்பதே ஆறுவது வரைக்கும் தான்" என்றாள் வெட்கத்துடன். இந்தச் சூழ் நிலையில் இந்தப் பெண் படிக்க ஆசைப்படுகிறதே என்று நினைத்துக்கொண்டு பேசாமல் இருந்தேன்.

"அடியே, மங்களம்...!" என்று வாய்க்காலுக்கு அப்பாலிருந்த வீட்டிலிருந்து ரங்கம்மாள் என்னைக் கூப்பிட்டாள்.

"இரு அம்மா! வரேன்" என்று நான் எழுந்தவுடன் அந்தப் பெண் விசுக்கென்று எழுந்தாள். போகிறேன் என்று கூடச்சொல்லாமல் போய்விட்டாள். ரங்கம்மாள் எதற்காகக் கூப்பிட்டாள் என்று கேட்பதற்கு நானும் அவசரமாகக் கொல்லைப் பக்கம் போனேன்.

கல்பகம் — அதுதான் அந்தப் பெண்ணின் பெயர்—தினம் முதலில் வந்து கொண்டிருந்தாள். சில சமயம் வெள்ளிக்கிழமை, பூஜா விசேஷங்கள் முதலிய தினங்களில் அவள் வருவது கிடையாது சுமங்கலிப் பெண் ஆயிற்றே வெற்றிலை பழம் கொடுக்கலாமென்று எடுத்து வைத்திருந்து காத்திருப்பேன் வருவதில்லை.

அன்று ஆடி வெள்ளிக்கிழமை அம்பாளுக்கு பூஜை செய்துவிட்டுச் சம்பாவிடம் கல்பகத்தைப் போய் அழைத்து வரச்சொன்னேன்.

"எங்கே அம்மா இருக்காங்க?" என்று கேட்டாள் சம்பா.

"குளத்தங்கரைக்கு தெற்கிலே ஒரு தெரு இருக்காமே, அதுலே எதாவது ஒரு வீடாக இருக்கும்" என்றேன்.

சம்பா விழுந்து விழுந்து சிரித்தாள்.

"குளத்தங்கரைக்கு தெற்கில் சுடுகாடு அல்ல இருக்குது! அங்கே வீடாவது வாசலாவது!" என்றாள் அவள்.

"போடி மக்கு! இந்த ஊருக்கு வந்து மூணுமாசம் ஆகிறது என்கிறாய், ஊரே சரியாகத் தெரியவில்லை உனக்கு" என்று அவளைக் கோபித்துக் கொண்டேன் நான்.

"விசாரிச்சுப் பார்க்கிறேன் அம்மா. சுடுகாட்டுக்கு அப்பாலே ஏதாவது ஊரு இருக்கும்" என்று சொல்லி விட்டுச் சம்பா அசுவாரஸ்யமாக எழுந்து போய் விட்டாள்.

அவள் போன சிறிது நேரத்துக்கெல்லாம் வாசலில் கல்பகம் வந்து உட்கார்ந்து கொண்டாள். அன்றும் அதே பச்சைப் புடவை தான். "இதென்ன உனக்கு இந்தப் புடவையைத் தவிர வேறு கிடையாதா? இல்லை, இந்தப் புடவை மேல் அவ்வளவு ஆசையா?" என்று கேட்

டன். அவள் என்னைப் பார்க்க வரும் போதெல்லாம் அந்தப் பச்சைப் புடவையையே கட்டிக் கொண்டு வந்தாள்.

"வாழா வெட்டிக்கு யார் மாமி தினுசு தினுசாகப் புடவைகள், வாங்கித் தருவார்கள்?" என்று துக்கம் தோய்ந்த குரலில் கேட்டாள் அவள்.

கொஞ்சங் கொஞ்சமாக அவளிடமிருந்தே அவள் வாழாவெட்டியாக இருப்பதின் காரணத்தை அறிந்து கொண்டேன்.

புக்ககம் சென்ற முதல் இரண்டு வருஷங்கள் அவளுடைய வாழ்க்கை ஆனந்தமாக இருந்தது. சீர் வகையறுக்களுக்கும், நகை நட்டுகளுக்காகவும் அவள் புக்ககத்தார் அவளைப் படுத்தவில்லை. திடீரென்று எங்கிருந்தோ ஒரு நாள் பகல் கல்பகத்தைஉறவு கொண்டாடிக் கொண்டு அத்தை முறை ஆக வேண்டிய ஒருத்தி கல்பகத்தின்மாமியார் வீட்டைத் தேடிவந்தாள். கல்பகத்துக்கு முதலில் வந்தவளை அடையாளமே புரியவில்லை.

"ஏண்டி! என்னை மறந்து விட்டாயாடி? நீ என்னை ஐந்து வயசு குழந்தையிலே பார்த்தது, உன் அப்பாவே என்னை மறந்து விட்டானே" என்று கேட்டாள் கல்பகத்தின் ஒன்று விட்ட அத்தை.

"எனக்கு ஒன்றுமே நினைவில்லையே" என்று பதிலளித்தாள் கல்பகம். அந்த அத்தை முறை ஆக வேண்டியவள் அன்று அங்கே இருந்து விட்டு மறுதினம் போய் விட்டாள். அன்று அந்த வீட்டில் புயல் அடிக்கவில்லை. கல்பகம் தன் கணவனுடன் கடைசியாக இன்பம் அனுபவித்த நாள் அது. மறுதினம் அத்தை ஊருக்குப் போன பிறகு கல்பகத்தின் மாமியார் காவேரிக்குக் குளிக்கப் போயிருந்தாள். திரும்பி வரும்போது அவளுடைய முகம் ஒரு அசாதாரண அமைதியைக் காட்டியது. ஸ்நானம் செய்து வந்தவள் தன்னுடைய பூஜை, புனஸ்காரங்களை முடித்துக் கொண்டு வாசல் திண்ணையில் போய்ப் படுத்துக் கொண்டாள். கல்பகம், மாமியார் சாப்பிட வராமல் போகவே திண்ணைக்குப் போய்ச் சாப்பிட வரும்படி அழைத்தாள்.

"உன் கையால் இனிமேல் சமைத்தப் போட்டு நான் சாப்பிட






மாட்டேன்" என்றாள் மாமியார். கல்பகம் வாயடைத்து நின்றாள். அந்த வீட்டில் அன்று கடும் புயல் அடித்தது. கெட்டுப்போன அத்தை ஒருத்தி இருப்பது தெரிந்திருந்தால் இந்தச் சம்பந்தமே செய்திருக்க வேண்டாமே என்பது தான் புயலின் காரணம். கல்பகத்தின் தகப்பனார் காரணம் தெரிந்து கொண்டு ஊரிலிருந்து வந்தார். இரண்டு மூன்று தலைமுறைவிட்ட உறவு முறை என்றும், அதற்கும் தம் குடும்பத்துக்கும் சம்பந்தம் இல்லையென்றும் மாப்பிள்ளையிடம் முறையிட்டார் அந்தப் அப்பாவி. அத்தையின் பாவத்துக்காக கல்பகம் வாழா வெட்டியானாள்.

சமூகத்தின் அர்த்தமற்ற கொடுமைகள் என் மனதை உருகச் செய்தன. கல்பகமும் நானும் கொஞ்ச நேரம் பேசாமல் இருந்தோம். கல்பகம் விம்மி விம்மி அழுதாள். என் எதிரில் இருந்த அமெரிக்கப் பத்திரிகை ஒன்றில் வந்திருந்த விவாகரத்து செய்தி அடங்கிய தாள் ஒன்று என் எதிரில் பிரித்தபடி கிடந்தது. அந்த நாட்டில் மனைவி தும்மினாள், கணவன் நேரம் கழித்து வீட்டுக்கு வந்தான் என்று பலவித கேலிக்கிடமான காரணங்களைக்காட்டி விவாகரத்து கோருகின்றனர். நம் ஊரிலே கோர்ட்டுக்குப் போக வேண்டிய அவசியமில்லாமலே பல இளம் பெண்கள் கணவனால் தள்ளி வைக்கப்பட்டு கல்பகத்தைப் போல் வாழா வெட்டியாக இருக்கின்றனர்.

"நீ ஏன் வீட்டிலேயே அடைபட்டுக் கிடக்கிறாய் கல்பகம்" எங்காவது பள்ளிக்கூடத்தில் சேர்ந்து படிக்கக் கூடாதா?" என்று கேட்டேன் நான்.

"அம்மாவுக்கு இஷ்டமில்லை மாமி. என்றைக்காவது அவருக்கு மனசு இரங்காதா என்று நினைக்கிறாள்" என்றாள் கல்பகம்.

அவள் களை பொருந்திய முகத்தில் ஆசை தளிர்விட்டது. கணவனுடன் இன்பமாகக் கழித்த நாட்களின் நினைவு வந்திருக்க வேண்டும்.

"உன்னைத் தள்ளிவைத்து எத்தனை வருஷங்கள் ஆகியிருக்கும்?"

"நான்கு வருஷங்கள் ஆயிற்று மாமி. அவர் வேறு கல்யாணம் பண்ணிக்கொண்டு விட்டாராம். குழந்தைகூட பிறந்திருக்கிறதாம்!"

"ஹூம்" என்று பெருமூச்சு விட்டேன் நான். என் மனதை யாரோ வாள்கொண்டு அளைப்பது போல் இருந்தது கல்பகத்தின் கதையைக் கேட்டபின்.

"போய்விட்டு வருகிறேன் மாமி" என்றாள் கல்பகம்.

"உள்ளே வந்து குங்குமம் இட்டுக் கொண்டு போ அம்மா" என்றேன்.

"அதெல்லாம் வேண்டாம்மாமி!"

"ஏ! சுமங்கலிப் பெண் குங்குமம் வேண்டாமென்று சொல்லுவாயா? உன் காலம் இப்படியே போகாது. உனக்கு வாழ்வு காலம் வரும் கல்பகம்" என்றேன்.

"மாமீ! அந்தக் கொல்லைப்பக்கம் இருக்கிறாளே கங்காமாமி அவளுடன் சகவாசம் வைத்துக் கொள்ளாதீர்கள். சுத்த வம்புக்காரி" என்று பயங்கரமாக விழித்தபடி கூறினாள் கல்பகம்.

"நான் ஒருத்தருடனும் வம்பு பேசுகிறதில்லை கல்பகம். மனிதர்களுடைய கஷ்ட சுகங்களை அறியாதவர்களுக்குத்தான் வம்பு வேண்டும்" என்றேன் நான்.

இப்படிப் பேசிக்கொண்டிருந்துவிட்டுக் கல்பகம் குங்குமம் இட்டுக் கொள்ளாமலேயே போய்விட்டாள்.

என் கணவர் காம்பிலிருந்து திரும்பி வந்துவிட்டார். அவருக்கு ஜாதகத்தில் அபார நம்பிக்கை. யாரோ அவரை விஷ்ணு சகஸ்ரநாமம் செய்யச் சொன்னார்களாம். ஒருவாரம் வரையில் எங்கள் வீட்டில் பூஜை அமர்க்களப்பட்டது. கங்கம்மாள் விசேஷ சிரத்தையுடன் சாயங்கால வேளைகளில் விஷ்ணுவின் அவதார மகிமையைப்பற்றி புண்ய கதைகள் வேறு சொல்லி வந்தாள். கல்பகம் எங்கள் வீட்டுப் பக்கமே வரவில்லை. பூஜை முடிந்ததும் உத்தியோக உயர்வுடன் என் கணவருக்கு வேறு ஊருக்கு மாற்றல் உத்தரவு வந்தது. கடைசியில் கல்பகத்தைப் பாராமலே போகிறோமே என்று நான் வருத்தமடைந்தேன்.



நான் அந்த கோடியை கவனிச்சிக்கிறேன்

சாமான்களைக் கட்டி அனுப்பிவிட்டு, கங்கம்மாள் வீட்டில் விருந்து சாப்பிட்டோம். முன்பிருந்த வீட்டைக் காலி செய்தாயிற்று. கங்கம்மாளின் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்

தேன். "மாமீ, மாமீ" என்று வெண்கலநாதம் போல் கல்பகத்தின் குரல் முன்பிருந்த வீட்டு வாசலிலிருந்து கேட்டது.

"கல்பகம் வந்திருக்கிறாள். போய்ப் பார்த்து வருகிறேன்" என்று எழுந்தேன். அன்றுதான் கல்பகத்தைப் பற்றி கங்கா மாமியிடம் கூறினேன். கல்பகத்தைப் பற்றி வம்பளக்கிறாள் என்று கல்பகம் கூறவே அவளிடம் நான் ஒன்றுமே பிரஸ்தாபிக்கவில்லை.

"யாரது கல்பகம்?" என்று உரத்த குரலில் கேட்டாள் கங்கா மாமி.

"அதுதான் அந்த வாழாவெட்டிப் பெண்" என்றேன் நான்.

"ஹா" என்றாள் கங்காமாமி. "அந்தப் படுபாவி வீட்டுக்காரனை அந்தப் புளியமரத்தை வெட்டிப் போடடா என்றால் கேட்கமாட்டேன் என்கிறானே. அந்தச் சனி இன்னுமா அங்கே இருக்கிறது? அம்மா மங்களம்! நீ தைரியசாலி!" என்றாள் அவள்.

"என்ன?" என்றேன் நான் அச்சத்துடன்.

"அடியே பித்து! அவள் மனுஷி இல்லையடி பிசாசு!" என்றாள் கங்காமாமி. என் தேகம் உச்சியிலிருந்து உள்ளங்கால் வரைக்கும் நடுங்கியது.

**ஆவி**

உயிரோடு சாதுவாக இருப்பவர்கள், செத்துப்போனதும் ஆவி ரூபத்தில் ரொம்ப சுருசுருப்பாக பிறர் பிராணனை வாங்குவார்கள். —லூக்கஸ்

உடம்பில் ஆவி இருக்கும் வரை, அது பலருக்கும் அடிமையாக வாழ வேண்டியதாகிறது; விடுபட்டதும் தனக்குத் தானே ராஜா. —ஹென்லே

"பிசாசா? நிஜமாகவா?"

"நீ இருந்தாயே அந்த வீட்டிலே கல்பகம் தூக்கு போட்டுக்கொண்டு செத்துப் போனாளடி. வீட்டுக்குள்ளேயே அலைந்து கொண்டிருந்தது. நல்ல மாந்திரீகர்களை வைத்துத் திக்பந்தனம் செய்து விட்டார்கள். வீட்டைவிட்டுப் போய் மரத்தைப் பிடித்துக் கொண்டதாக்கும். வீட்டிலே ஒண்ணுமில்லையென்றல்லவா நினைத்துக் கொண்டேன்!"

"கல்பகம் பிசாசா? இறந்து போன கல்பகத்தின் ஆவியா அது?"

"நான் இந்த ஊரிலேயே இருக்கிறேனே எனக்குத் தெரியாதா?" என்றாள் கங்கா மாமி.

கல்பகம் கூறிய கதையைக் கூறினேன், வாஸ்தவம் என்று கங்கா மாமி ஒப்புக் கொண்டாள்.

"நான் அவளைப்பற்றி வம்பு பேசவில்லை மங்களம். அது தூக்குப் போட்டுக்கொண்டு செத்த அப்புறம் இந்த வாய்க்காங்கரைப் பக்கமே தலைகாட்ட முடியவில்லை. எனக்கு தேவி உபாஸனை உண்டு. என்னிடம் அவள் ஆர்ப்பாட்டம் செல்லாது பந்தனம் செய்துவிட்டேன். அதான் உன்னிடம் பொய் சொல்லி இருக்கிறது."

"வீட்டுக்குள் வா என்றால் வரவில்லை மாமி" என்றேன் நான்.

"அதெப்படி வரும்? வாசக்காலுக்கு வாசக்கால் தான் சக்கரம் புதைத்திருக்கிறதே."

"இதென்ன ஆச்சர்யம்? பிசாசுடனா இரண்டு மூன்று மாசமாக ஸ்நேகம் வைத்துக் கொண்டிருந்தேன்?"

கங்காமாமி உள்ளே போய் தேவியின் ரக்ஷை ஒன்றும், விபூதி, குங்குமமும் கொண்டு வந்து என்னிடம் கொடுத்தாள், வாங்கி பயபக்தியுடன் அணிந்து கொண்டேன். என்னை அந்தத் தேவிதான் காப்பாற்றியிருக்கவேண்டும்!

ரகுநாத ஐயர் அன்று தம் இறுதி யாத்திரையைத் தொடங்கி விட்டார். அவருக்கு வயது எழுபத்தி ஐந்து. ‘பூவோ, பிஞ்சோ’ என்று யாரும் கலங்க வேண்டிய தில்லை. வாழவேண்டிய காலம் வாழ்ந்துவிட்டார். பொருளும் பாக்கியமும் பெற்றே வாழ்ந்தார்.

# முதுமையில்

ஸரோஜா ராமமூர்த்தி

ஆனால், அவருடைய வாழ்க்கையில் ஒரே ஒரு குறை இருந்தது. அவருக்கு மகப்பேறு இல்லை. வாழ்நாள் முழுவதும், மனைவியும் அவருமாக ஒண்டியாகவே காலத்தைக் கடத்தி வந்தார்கள்.

“ரகுநாத ஐயர் வீட்டில், அழுவதற்குக் கூடயாரும் இல்லை” என்று, ஒரு கிழவர் தம் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்தவாறு முணுமுணுத்துக் கொண்டார். அவருக்கு வயது எண்பதுக்கு மேல் ஆகியிருந்தது. கண்கள் தம் செயலை மறந்து பல வருஷங்கள் ஆகிவிட்டன. காதுகளும் தம் உணர்வை இழந்துவிட்டன. வாய் மட்டும் மூடவில்லை! அவருடைய கொள்ளுப் பேரன் தான் காலையில் எழுந்தவுடன், ‘ரகுநாத ஐயர் போய் விட்டார்’ என்கிற செய்தியை இரைந்து தன் கொள்ளுத் தாத்தாவின் காதில் ஓதியவன்.

“த்சொ, த்சொ, போய்விட்டானா? நானும் அவனும் ஒன்றாக விளையாடியவர்கள்; ஒன்றாகப் படித்தவர்கள். முன்னே - பின்னே மணமுடித்துக் கொண்டவர்கள்...” என்றார் கிழவர்.

“அப்படி எல்லா விஷயங்களிலுமே உங்களையும் அவரையும் ஒப்பிட்டுச் சொல்லிவிட முடியுமா, தாத்தா? அவர் வீட்டில் அந்த மாமியாரைத் தவிர வேறு ‘ஈ, காக்காய்’ இல்லை. இங்கே வேளைக்குப் பதினைஞ்சு பேர் சாப்பிட இருக்கிறோமே..” என்றான் பேரன்.

கிழவருக்குத் தன்னைப்பற்றிப் பெருமையாகத்தான் இருந்தது. மண்ணில் நட்ட விதை முளைத்து, வளர்ந்து, பெரிதாகி, மரமாகிக் கப்பும் கிளைகளுமாகப் படர்ந்து வாழ்ந்தால், அதில் பெருமை இருக்கத்தானே செய்கிறது? கிழவருக்கு ஆறு பிள்ளைகள். தற்சமயம் மூத்த மகனிடத்தில் இருக்கிறார். அவருடைய பேரனுக்குக் கூட ஒன்பதுவயதில் பையன் இருக்கிறான். அவன் தான் இப்பொழுது அவருடன் பேசுகிறவன்.

அருகில் இருந்த கம்பை நகர்த்தி வைத்துவிட்டுக் கிழவர் பேரனுடன் பேச ஆரம்பித்தார்.

“ரகுநாதனுக்கு என்ன இருந்து பிரயோஜனம்? அவனுக்குச் சுயபுத்தியே இல்லை. எடுப்பார் கைப்பிள்ளை. சிறு வயதிலிருந்தே அவன் இப்படித்தான்; கடைசி வரைக்கும் ஒருத்தர் பேச்சைக் கேட்டுக்கொண்டே, வாழ்ந்தானே தவிர, தானாக சுயமாக ஒன்றுமே செய்யத் தெரியாதவன்...”

கிழவரின் மூத்த மகன் வந்தார்.

“ஏனப்பா, திண்ணையில் உட்கார்ந்திருக்கிறீர்கள்? காலை வெய்யில் ‘சுளீ’ரென்று அடிக்குமே. உள்ளே போய் உட்காரக் கூடாதா? நான் ரகுநாத ஐயர் வீட்டுக்குப் போய்விட்டு வருகிறேன். அந்த அம்மாள் ஒருத்தரையும் வரச் சொல்லிக் கூப்பிடவில்லை. என்னவோ வயதானவர்; அவருக்குத்தான் பிள்ளை - குட்டி கிடையாது. ஊரில் இருக்கிற நாமும் விட்டுக் கொடுத்துவிட்டால் எப்படி?..”

இவ்விதம் சொல்லிக்கொண்டே, அவர் படி இறங்கித் தெருவில் நடந்தார். பேரன் பள்ளிக்கூடத்துக்கு நேரமாகிவிட்டதென்று ஓடி விட்டான். ஆனால், கிழவரின் சிந்தனைகள் மட்டும் முடிவில்லாமல் சுழன்றன. ரகுநாத ஐயரைப் பற்றி அவர் நினைத்துக்கொண்டே இருந்தார்.

எண்ணங்கள் சுழன்று வந்து மனப் பாறையில் முட்டி மோதின.

ரகுநாதனுக்கு அப்போது பதினைந்து வயசு. ஊரிலேஇருந்து ஒரு கல்யாணக் கடிதம்வந்திருந்தது. தகப்பனருக்கு உடல் நிலை சரியில்லை. அவருடையசொந்தத் தம்பிப் பெண்ணிற்குக் கல்யாணம். தமையன் குடும்



பந்தார் அவசியம் வரவேண்டும் என்றுதம்பி கடிதம் வேறு எழுதியிருந்தார். தம்மால் போக முடியாவிட்டாலும், மனைவியையும் மகனையுமாவது அனுப்பி வைக்க வேண்டும் என்று ஆசைப்பட்டார் ரகுநாதனின் தகப்பனர். மனைவியைக் கூப்பிட்டுக் கேட்டார். அந்த அம்மாள் சீறி எழுந்தாள். மைத்துனன் மீது குற்றச் சாட்டுக்களை 'கபகப'வென்று ஒப்பித்தாள். மைத்துனன் தனக்கு ஒரு புடவை கூட வாங்கித் தராதது, தன் மனைவிக்கு மட்டும் வைரத் தோடு வாங்கிப்போட்டது, தன்னை நேரில் வந்தழைக்காதது எல்லாவற்றையும் கூறி, அந்தக் கல்யாணத்துக்குப் போகத் தயாராயில்லை என்றும் கூறிவிட்டாள்.

அவர் பயந்துவிட்டார். தனியாக, ரகசியமாக மகனை அழைத்து, ''ரகு! என்னுடன் பிறந்தவன் ஒருவன். அவனை என் மகனைப்போல

வளர்த்தேன். அவன் அதை நினைவில் வைத்துக்கொண் டிருக்கிறுன். அந்த நாளிலிருந்தே உன் தாய்க்கு அவனைக் கண்டால் ஆகாது. நீயாவது கல்யாணத்துக்குப் போய்விட்டு வா...'' என்றுர்.

ரகுநாதன் சரி என்று ஒப்புக்கொண்டான்.

சிறிது நேரத்திற் கெல்லாம் தாய் அவனை ரகசியமாக அழைத்து, ''உன் சித்தப்பா கஞ்சன்; இந்தக் குடும்பத்து உப்பைத் தின்று வளர்ந்தவன்; இந்தக் குடும்பத்துக்குக் காலணுவுக்குச் செய்திருக்கமாட்டான். அவன் வீட்டுக் கல்யாணத்துக்குப் போகாதே....உன் அப்பா சொன்னுல் கேட்காதே..'' என்று உபதேசித்தாள்.

'யார் சொல்வதைக் கேட்பது? அப்பா சொல்வதையா? அம்மா சொல்வதையா?' என்பது புரியாமல் திகைத்தான் ரகுநாதன்.

ரகுநாதன் தாயின் கோபத்துக்குப் பயந்தான். சிற்றப்பா வீட்டுக்குப் போய் விட்டு வந்த செய்தி எப்படியாவது அவளுக்குத் தெரிந்துவிடும். பிறகு, அவள் எதிரில் தான் நிற்க முடியாது என்பதை உணர்ந்து, கல்யாணத்துக்குப் போகாமலேயே இருந்துவிட்டான்.

மகன் ஒரு கோழை. எதையும் சுய புத்தியுடன் செயலாற்றும் திறமைசாலி அல்ல என்பதை அவன் தந்தை அறிந்துகொண்டு, அதே ஏக்கத்தில் போய்விட்டார்.

மேற்படி கல்யாண விஷயமாவது ரகுநாதனின் வாழ்க்கையைப் பாதிக்கக்கூடியது அல்ல. ஆனுல், அவன் சொந்தக் கல்யாண விஷயத்திலேயே பராமுகமாக இருந்தான். அவர்கள் வீட்டுக்கு அருகில் அவனுக்கு மனைவியாகப் போகின்றவளின் குடும்பத்தினர் வசித்தனர். வேண்டிய மட்டும் பொன்னும் பொருளும் படைத்தவர்கள். வீட்டுக்கு ஒரே பெண் குழந்தை.

அளவுக்கு மீறிய சலுகை காண்பித்து வளர்த்துவிட்டார்கள். பெண்மைக்கு இருக்க வேண்டிய இரக்க உணர்ச்சியே அந்தப் பெண்ணிடம் வற்றிவிட்டது. யாரைப் பார்த்தாலும் அடிப்பாள். எதைப் பார்த்தாலும் சிரிப்பாள். தெருப் பையன்களையெல்லாம் நையாண்டி செய்வாள். அவளை வாயைத் திறந்து யாராவது ஏதாவது கூறிவிட்டாலோ, இடுப்பில் குடத்தில் இருக்கும் நீரை, அவர்கள் மீது ஊற்றிவிட்டுப் போய் விடுவாள். இந்தப் பெண்ணுக்கென்று எந்தப் புண்ணியவான் பிறந்து இருக்கிறுனே' என்று ஊரார் ஏசுவார்கள். இம்மாதிரி குணவதியான ஒரு பெண்ணைத் தன் மகனுக்கென்று தேர்ந்து எடுத்தாள் ரகுநாதனின் தாய்.

''ரகு! அம்மணியை உனக்கு நிச்சயம் செய்தாகிவிட்டது. நாளைக்கு 'நிச்சய தாம்பூலம்' மாற்ற வருகிறுர்கள். நீ எங்கேயாவது போய்விடாதே'' என்று எச்சரித்தாள் அவன் தாய்.

சமையலறை நிலைப்படியைப் பிடித்துக்கொண்டு நின்றவன், அப்படியே சிறிது நேரம் நின்றுன்.

''என்னடா! வாயைத் திறக்கவில்லை!'' தாய் அதட்டியவாறு கேட்டாள்.

''சரி..அம்மா..'' ரகுநாதன் மனத்தில் ஆயிரமாயிரம் போராட்டங்களுடன் வெளியே போய்விட்டான். அவன் நண்பர்கள் அவனைத் 'தாய்ச் சொல்லைத் தட்டாத தனயன்' என்றும், 'ஏமாளி' என்றும் ஏசியதை யெல்லாம் சகித்துக் கொண்டான். அடுத்த சில நாட்களில் அம்மணியின் கரம் பற்றினுன் ரகுநாதன்.

அம்மணி அவனுடன் வாழ்க்கை நடத்த வந்த சில மாதங்களிலேயே, அவள் தன் தாயின் ஸ்தானத்தைக் கைப்பற்றிவிட்டாள் என்பதும் அவனுக்குத் தெரிந்து விட்டது.

'அங்கே போகாதீர்கள்! இங்கே வராதீர்கள்! அதைச் செய்யாதீர்கள்! இதைப் பார்க்காதீர்கள்!' என தடை உத்திரவுகளைப் போட்டு வந்தாள். 'பிள்ளைக்குச் சுயபுத்தி இல்லை' என்று ரகுநாதனின் தாய் மருமகள் வந்தபிறகுதான் உணர்ந்தாள். அதைப் பலரிடம் சொல்லிச் சொல்லி ஆற்றிக் கொண்டாள்.

அம்மணியின் ஆட்சிதான் அந்த வீட்டில் நடைபெற்றது. அவளை அறியாமல் ரகுநாதன் ஒரு காலணு செலவு செய்யமுடியாது. வாய்க்கு ருசியாக ஏதாவது வாங்கிச் சாப்பிட வேண்டும் என்றுலும், அம்மணி மனசு வைத்தால் தான் நடக்கும். முன்பு அவன் தாய்,

ளையத் தன் கட்டுப் பாட்டுக்குள் வைத்திருந்தாலும், அறுசுவை உண்டியோடு மகனை ஆதரித்து வளர்த்தாள். அம்மணிக்குப் பொன்னும், புடவைகளும், நிலபுலன்களும், வீடு வாசல்களும் தான் முக்கியமாகத் தோன்றின.

வருடங்கள் உருண்டோடின. அவனாயிருந்த ரகுநாதன் அவரானார். காலத்தின் ஓட்டத்திலே 'ன்' 'ர்' ஆயிற்றே தவிர, பெண்டாட்டி தாசனாகயிருந்த ரகுநாதனின் வாழ்க்கையில் எந்தவிதமான மாறுதலும் கிடையாது. பழைய படியே தாரம்சொல் தட்டா கணவராகவே இருந்து வந்தார்.

ரகுநாதனின் உடன் பிறந்தவர்கள் யாரும் இல்லை. இருந்தாலும், அவருடைய சித்தாப்பா பிள்ளை ஒருவன் இருந்தான். அவனாக வலுவில் சென்று அவரைப் பாரா விட்டாலும், அவன் ஒரு தடவை ரகுநாதனைப் பார்க்க வந்தான். ரகுநாதனின் பிரும்மாண்டமான வீட்டைப் பார்த்துப் பிரமித்தான். மன்னி அம்மணியின் உடலில் குலுங்கும் நகைகள் அவன் கண்களைப் பறித்தன. கொல்லையில் நாலு கறவை மாடுகள் கட்டி இருந்தார்கள். வீட்டுக்குத் தேவைப்பட்டதில் சிக்கனமாகக் கொஞ்சம் எடுத்துக் கொண்டு, மீதியை விற்று விடுவாள் அம்மணி. அவளுக்குத் தொட்டதெல்லாம் பணமாக மாற்றும் வித்தை தெரிந்திருப்பதைக் கண்டு, ஊரிலிருந்து வந்த மைத்துனன் ஆச்சரியப்பட்டான்.

'' என்ன அண்ணா?.. உன்னைப் பார்த்து எத்தனை வருஷங்கள் ஆச்சு..?''

புதுக்குரல் கேட்டு அம்மணி உள்ளே எட்டிப் பார்த்தாள்.

'' உன் சின்ன மாமனார் பிள்ளை; உன் மைத்துனன்'' என்று, ரகுநாதன் மனைவிக்கு நடுங்கிக் கொண்டே உறவை விளக்கினார்.

'' அப்படியா? வாருங்கள். இத்தனை வருஷங்கள் கழித்தாவது வந்தீர்களே....''

'' வராமல் என்ன, மன்னீ?.. அண்ணாதான் எங்களையெல்லாம் மறந்துவிட்டார். முன்பு பெரியப்பா போன போது வந்தது. அப்புறம் பெரியம்மா போய்விட்டாளென்று தெரிஞ்சது...''

'' அண்ணாவாவது மறக்கவாவது? காரியம் இருந்தால் வருவீர்கள்..''

அம்மணி 'விசுக்'கென்று உள்ளே போய்விட்டாள். வந்தவருக்கு என்னவோ போல் ஆகிவிட்டது.

'' எங்கேடா வந்தாய்?'' என்று மெதுவாக விசாரித்தார் ரகுநாதன், தன் ஒன்றுவிட்ட தம்பியை.

'' நீ நல்ல நிலையில் இருப்பதாக எல்லோரும் சொன்னார்கள். நம் பையனில்ஒருவனுக்கு மாசாமாசம் பள்ளிக்கூடச் சம்பளமாவது கட்ட ஒப்புக் கொள்ளணும்..''

ரொம்பவும் பவ்யமாக, எண்சாண் உடம்பையும் குறுக்கிக் கொண்டு கேட்டான் அவன்.

'' சம்பளமா?.. ஆகட்டும்.... அம்மணியைக் கேட்டுப் பார்க்கிறேன்.''

'' மன்னி என்ன சொல்லப் போகிறாள் அண்ணா? நீ மனசு வைத்தால் அவள் ஒன்றும் சொல்ல மாட்டாள்.''

ரகுநாதனின் மனத்தில் அவருடைய கௌரவம் குதித்து எழுந்தது. தம்மையே ஒருதரம் பார்த்துக் கொண்டார்! ஆயிரக் கணக்கில் இரண்டு கைகளாலும் சம்பாதிக்கிறவர். அதில் ஒரு சிறு பகுதியைக் கூடத் தன்னுடையது என்று உரிமை கொண்டாட முடியாமல் நடுங்கிக் கிடக்கிறார். வீடு, மனைவியின் பெயரில் இருந்தது. நிலங்கள், ரொக்கம், பாத்திரங்கள் பண்டங்கள் யாவும் அவள் உடைமை. கணவன் மனைவியானாலும் இப்படி ஒரு அடிமைத்



ஸ்ரீ டி. என். சுந்தரத்தின் குமாரி சௌ. விஜயலட்சுமிக்கும் சிவி. டி. ஏ. ராமசுப்பனுக்கும் சென்னையில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

தனம் ஆகாது. இதை உயர்ந்த அன்'' என்றோ, அரிய பண்பாடு என்றோ எவ்விதம் கொள்ள முடியும்?

மௌனமாக உட்கார்ந்திருந்தவரை வந்திருந்தவன் பார்த்துக் கொண்டே இருந்தான்.

''என்ன அண்ணா? நான் வேண்டுமானாலும் மன்னியை கேட்டுப் பார்க்கிறேன்..

அதற்குள் அம்மணியே ரகுநாதனை சாப்பிட அழைக்க வந்தாள்.

இருவரும் ஒன்றாகவே சாப்பிட்டார்கள்.

''நீங்கள் மட்டும் வந்தீர்களே, உங்கள் மனைவி குழந்தைகள் வரவில்லையே..'' என்று விசாரித்தவாறு, அம்மணி உணவு பறிமாறினாள்.

பேச்சு என்னவோ தேனொழுகத்தான் இருந்தது. ''எங்கே எல்லாரும் வர முடிகிறது, காலம் இருக்கிற இருப்பில்..'' என்று ஆரம்பித்தான் மைத்துனன்.

அம்மணி வெகு சாமர்த்தியசாலி.

''ஆமாம்..அதை ஏன் கேட்கிறீர்கள்! எங்களுக்கே வீடு கட்டிய கடன் அடையவில்லை. நிலத்திலே விளைச்சல் இல்லை..என்னவோ நாலு பேருக்குக் கௌரவமாக இருக்கிறோம்.''

வந்திருந்தவன் அந்த ஒரு வேளைச் சாப்பாட்டுடன் போய்விட்டான்.

ஃ ஃ ஃ

தெம்பும், திடமுமாக இருந்த ரகுநாதனை வயோதிகம் அணுக ஆரம்பித்தது. தனக்கென்று ஒரு பிள்ளையோ, பெண்ணோ இல்லையே என்று வருந்தினார். பெரியவர்களிடம் அதைக் கூறி வருந்தியபோது, ''அதனால் என்ன, அப்பா? உன் ஒன்றுவிட்ட தம்பிக்குத்தான் நாலு பிள்ளைகள் இருக்கிறார்களே. ஒருவனை நீ தான் வளர்த்து முன்னுக்குக் கொண்டு வாயேன். உனக்கும் ஆதரவாக இருக்கும்..'' என்று யோசனை கூறினார்கள்.

தயங்கித் தயங்கி மனைவியிடம் யோசனை கேட்டார் அவர். ''நன்றாக இருக்கிறது, போங்கள்! இந்த வயசில் நமக்கு எதற்குப் பிடுங்கல்? அந்தப் பிள்ளைதான் ஆகட்டும்; பதினெரு வயசு ஆகிறதாமே, அவனுக்கு! நம்மிடம் ஒண்டிக்கொண்டு இருக்குமா அது? எல்லாவற்றையும் வாங்கிக் கொண்டு தன்னைப் பெற்றவர்களிடம் போய்விடுவான். நமக்குக் கொடுத்து வைத்திருந்தால் நமக்கென்று பிறந்திருக்காதா?'' என்று தடுத்துவிட்டாள்.

அவருக்கு அந்த வாழ்க்கை அலுத்துவிட்டது. சாப்பிடுவது, தூங்குவது, மனைவியின் கைப் பொம்மையாகத் தனக்கென்று ஒரு சுதந்திரமும் இல்லாமல், தன் மனசையே அடகுவைத்த நிலையில் ரகுநாதனின் வாழ்க்கைச் சக்கரம் சுழன்று வந்தது. இப்படி ஒரு வாழ்க்கை முறை தமக்கு இருப்பதைவிடச் சீக்கிரம் உலகத்தில் இருந்து விடுதலை பெற்றுவிட ஆசைப்பட்டார் அவர்.

கடைசி நாட்களில் யாரிடமும் பேசாமல், எதையும் செய்யாமல் அவர் மனம் ஒரே விஷயத்தில் லயித்துக் கிடந்தது. 'தாயின் கர்ப்பத்திலிருந்து விடுபட்ட மனிதனை ஆசைகளும், பந்தங்களும், பிணிகளும் சூழ்ந்து கொண்டாலும் அவைகளை உதறித் தள்ளி தனக்கென வாழ்ந்து பிறருக்கு அடிமையாகாத ஓர் உயர்ந்த நிலையைத் தன் மனம் அடையவில்லையே' என்கிற ஏக்கம் அவரை உருக்குலைத்துக் கொண்டே வந்தது.

அந்த இன்பமயமான சுதந்திரத்தை அவர் நுகர ஆசைப்பட்டார். அந்த ஆசை அன்று காலை நிறைவேறியது. பல் துலக்கி, வெண்ணீறு அணிந்து, கிழக்கு முகமாக உட்கார்ந்து ஆதவனுக்கு அர்க்கியம் விடும்போது, ரகுநாதனின் ஆத்மா சிறையிலிருந்து விடுதலை அடைந்தது.

சுதந்திரமாக வான வெளியில் மிதந்து சென்று அந்த இன்பத்தை நுகர்ந்தது.

ஃ ஃ ஃ

ரகுநாத ஐயரின் வீட்டிலிருந்து திரும்பிய கிழவரின் மகன் தன் தந்தையிடம், ''அப்பா! உங்கள் நண்பர் இன்றுதான் சுதந்திர மனிதனாக மாறினார்..'' என்றார்.

கிழவர் பேசவில்லை.

மௌனமாகத் தலையை அசைத்தார்.

# கிரகண மேளி

ஸரோஜா ராமமூர்த்தி

## 1

"நாளைக்கு நீ ஒன்றும் செய்யக் கூடாது. உனக்கு தெரியுமா விசாலம்? நாளைக்கு சூரியனைக்கிரகணம் பிடிக்கிறது. கர்ப்ப ஸ்திரீகள் வெளியே வந்து கிரகணச்சாயையில் நிற்கக்கூடாது" என்று சொல்லிக் கொண்டே வந்தாள் காமாக்ஷி; ஊஞ்சலில் படுத்திருந்த தன் மகள் விசாலத்தை பார்த்து.

"வெளியேதான் வரக்கூடாது அம்மா. வீட்டுக்குள்ளேயும் வெறுமனே எப்படி கொட் கொட்டென்று உட்கார்ந்திருப்பது? அது என்னல் முடியவே முடியாதே!" என்று கவலையுடன் கேட்டுக் கொண்டே எழுந்து உட்கார்ந்தாள் விசாலம்.

"அப்படித்தான் பெரியவர்கள் சொல்கிருர்கள். வெறுமனே உட்கார்ந்திருந்தால் மட்டும் போதாது தரையைக் கிறுக்குகிறது. உதட்டைக் கடிக்கிறது. முகத்தைச் சுளிக்கிறது. என்று எதுவுமே செய்யக் கூடாது. பூச்சவுக்கம் பின்னுகிறேன் என்று நூலையும் ஊசியையும் எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்துவிடாதே!"

காமாக்ஷி அம்மாள் பேசி முடித்து பெருமூச்சு விட்டாள்.

"அப்போ. மூச்சுக்கூட தாராளமாக விடக்கூடாது என்று சொல்?" என்று கூறிவிட்டு விசாலம் சிரித்தாள்.

"உனக்கு எதற்கும் குதர்க்கம் தான் பேசத் தெரியும். நாங்கள், அந்த நாளில் பெரியவர்கள் இது ஆகாது என்று சொன்னல் மறு வார்த்தை பேசாமல் சரி யென்று இருந்து விடுவோம். இப்போதான் எதற்கெடுத்தாலும் ஆராய்ச்சி மயமாக இருக்கிறதே." என்று பாதி கேலியாகவும், பாதி கோபமாகவும் கூறிவிட்டுக் காமாக்ஷி தன் வேலையைக் கவனிக்கச் சென்றுவிட்டாள்.

விசாலம். பிறந்த வீட்டுக்கு மகப் பேறுக்காக வந்திருக்கிறுள். முன்னுடி இரண்டு மூன்று குறைப் பிரசவங்களுக்குப் பிறகு முழுசாக ஒன்றைக் காண்போமா என்று ஏங்கிய உள்ளத்துடன் வந்திருப்பவள் அவள். விசாலம் கணவன் வீட்டில் இருந்த போது காமாக்ஷிக்கு கடிதம் எழுதினல் அதில் வேறு விஷயமே அடங்கியிராது. திடீரென்று உடம்பு மோசமாகி தான் ஆஸ்பத்திரியில் இருந்துவிட்டு வந்த சவரணையை விவரித்திருப்பாள். அத்துடன் ஒரு 'மருந்து சாப்பிடுகிறேன். ஓய்வு எடுத்துக் கொள்கிறேன். இருந்தாலும், மூன்று மாதங்களுக்கு மேல் என்னுல் தாய்மையைத் தாங்க வலுவில்லை போல் இருக்கிறது. பத்துக் குழந்தைகள் பெற்று வளர்த்த உன் வயிற்றில் நான் எங்கே இருந்து பிறந்தேனே?' என்று வருத்தப் பட்டுக்கொண்டு எழுதியிருந்தாள் ஒருதரம்.

அப்படி இருக்கும்போது ஒன்பது மாசம் முழுசாக ஆகியிருப்பதை ஒரு பாக்கியமாகக் கருதினுள் காமாக்ஷி.

"நாளைக்குக் கிரகணம் அம்மா, நீ கொஞ்சம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். விசாலம்!" என்று சொல்லிக் கொண்டே அவள் தகப்பனர் உள்ளே வந்தார்.

"அதைத்தான் நானும் சொன்னேன். அவள் கையும் காலும் துருதுருவென்று அலையுமே. இரண்டு மணி நேரம் வெறுமனே இருடி என்ருல், அது எப்படி முடியும்?" என்று கேட்கிருள். காமாக்ஷி வேதனை தொனிக்க இப்படி கூறி விட்டு மகளின் முகத்தைப் பார்த்தாள்.

## 2

அந்த வீட்டுக் கூடத்தில் ஊஞ்சலுக்கு எதிரில் குழந்தைக் கண்ணனின் படம் மாட்டி இருந்தது. நீல

நடைபெற தாமதம். இப்பொழுது ராகுதசை, சுக்ரபுக்தி, ஆகவே ஸ்வாதி நக்ஷத்ரப் பெண்ணை மணக்கலாம்.

குப்புசாமி, கோபி.

கேள்வி "திருமணம் விரைவில் நடைபெறும்" உமக்கு வயது 29. ஆகவே கேள்வியில் "விரைவில்" என்னும் வார்த்தையை எழுதியிருப்பீர் போலும், வருகிற வைகாசி மாதம் நடைபெறும்' உமது ஜாதக ரீதியாக 7ம் வீட்டிற்கு சனி சம்பந்தமிருக்கவேண்டும். அதனால் தான் வெறுப்பு தட்டும் வரை, தாமதம். சுருக்காக வராமலிருக்கிறது.

கணேசன், தஞ்சாவூர்.

தஞ்சையில் பிறந்தவர். பிறந்த தேதியில் சந்தேகமிருக்கிறதென சொல்லி இப்பொழுதுதான் முதல் முறை கேள்விப்படுகிறேன். நீர் பிறந்த தேதி 21-3-1934. அதாவது 20-3-1934 இரவும் 21-3-34 விடியற் காலையுமாகும் ஹஸ்தம் நக்ஷத்திரம். கன்னி ராசியாம். சில மாதங்களில் வேலை மாறும். இடம் பெயரும். மேன்மையுண்டு நன்மை விளையும்.

---

[விவரமாகவும் துல்லிபமாகவும் ஜாதகம் குறிக்க வேண்டுபவர்கள், கணபதி ஜோஸ்யருக்கு ரூ. 5/- மணியார்டர் செய்து, பெற்றுக் கொள்ளவும்.]

மேனியில் புரளும் முத்துச் சரங்களும், பதக்கங்களும், நெற்றியில் சுருண்டு புரளும் கேசமும், நடுவில் துலங்கும் கஸ்தூரி திலகமும், அழகுக்கு அழகு செய்வதே போல அமைந்திருந்தது.

"அம்மா! இந்தப் படம் புதுசாக இருக்கிறதே. போன தடவை நான் வந்தபோது இதைப் பார்க்கவேயில்லையே!" படத்தை ஆனந்தத்துடன் பார்த்துக் கொண்டே விசாலம் தாயை இவ்விதம் கேட்டாள்.

"உனக்குத் தரவேண்டுமென்றுதான் வாங்கி வைத்திருக்கிறேன் விசாலம். அரையும் குறையுமாக இப்படி நேர்கிறதே, என்று நினைத்துத்தான் இதை வாங்கினேன். இந்தத் தடவை நல்லபடியாய் பெற்றுப் பிழைத்தால் எடுத்துப் போ. ஆண் குழந்தையானால் அவன் பெயரையே வைத்துவிடலாம்!"

காமாக்ஷிக்குத்தான் எவ்வளவு கவலை? அத்துடன் அவள் மனதில் ஒரு பேரக்குழந்தையைக்காண எவ்வளவு ஆவல் இருந்தது என்பதும் வெளியாகியது.

"அதற்குத்தான் சொல்ல வந்தேன். நாளைக்குக் கிரஹணமும் அதுவுமாக நீ பாட்டுக்கு அலையாதே. முழுசாக ஒன்றைக் கண்ணால் காண்போமா என்று இருக்கிற நிலையில் மூளி வேறு அமையப் போகிறதென்று."

காமாக்ஷி பயபக்தியுடன் பழனி ஆண்டவனின் திருநீற்றைக் கொண்டு வந்து விசாலத்தின் நெற்றியில் இட்டாள்.

அடுத்தநாள் பொழுது விடிந்தது. வழக்கத்தை விடப் பிரகாசமாக சூரியன் கீழ்வானில் தோன்றினான். அடுத்தக் கணத்தில் நமக்கு நேரப் போவதை அறியாமல் வாழ்க்கையில் வெற்றி கண்டு விட்டதாக இறுமாந்து போகிறோமே, அதே நிலையில்தான் சூரிய பகவானும் இருந்தார்.

காமாக்ஷி அவசர அவசரமாக விசாலத்துக்காகக் காலை ஆகாரம் தயார் செய்தாள். அவளைக் குளித்துச் சாப்பிடச் சொல்லி ஒதுப்புறமாக ஒரு அறையில் சூரியனின் சாயை படாமல் படுத்திருக்கச் சொன்னாள்.

விசாலத்துக்கு இதெல்லாம் தலை வேதனையாக இருந்தது. அகண்ட வானில் நிகழும் ஒரு நிகழ்ச்சி பூமியில் வாழும் ஒரு கர்ப்பஸ்திரீயை எவ்விதம் பாதிக்கும், என்கிற கேள்விதான் அவள் மனத்துள் விசுவ ரூபமெடுத்திருந்தது.

"விசாலம்! உள்ளேதானே அம்மா இருக்கிறாய்?" என்று அவள் தகப்பனார் வேறு நச்சு நச்சென்று துணப்பிக் கொண்டிருந்தார். விசாலம் அறையை வளைய வந்தாள். அலமாரியில் இருந்த புத்தகங்கள் எல்லாம் படித்தவை. நூலும் ஊசியும் கேட்பாரற்று மேஜை மீது கிடந்தது. நூல் சவுக்கத்தில் தவழும் கண்ணனின் உருவம் பாதியில் நிறுத்தப்பட்டிருந்தது. அதை முழுசாகப்பின்னி முடித்துவிடலாம், — அம்மாதான் அதெல்லாம் ஒன்றும்



கூடாது என்று சொல்லியிருக்கிருளே!

விசாலத்தின் தகப்பஞர் கிரகணம் ஆரம்பித்தவுடன் ஸ்னனம் செய்யக் குளத்துக்குப் போய்விட்டார். கொல்லேக் கிணற்றில் தண்ணீர் இழுத்துக்கொண்டே காமாக்ஷி ஸ்தோத்திரங்கள் பாடுவது கேட்டது. ஜன்னல் வழியாக விசாலம் வெளியே பார்த்தாள். நல்ல நடுப் பகலில் மாலேயின் தோற்றம் தெரிந்தது. சிலுசிலுவென்று காற்று வீசியது. குளுகுளுவென்று மனத்துக்கும் தேகத்துக்கும் இன்பம் தரும் ஒரு சூழ்நிலே அமைந்திருந்தது. மரங்களிலிருந்து பட்சிகள் வான வீதியில் பறந்து சென்றன. விசாலத்துக்கு வெளியே போகவேண்டும். இன்பமயமான அந்த சூழ்நிலேயை அனுபவிக்க வேண்டும் என்று ஆவல் எழுந்தது.

வெளியே கொஞ்சம் எட்டிப் பார்த்தால் என்ன? என்று கூட ஒரு அசட்டுத் தைரியம் தோன்றியது. ஆனல், அம்மாவுக்குப் பயந்து கொண்டு வெளியேவர அதைரியப் பட்டாள்.

வயிற்றிலிருந்த சிசு புரண்டு கொடுத்தது. வெளியே போகலாம் பார்த்தும் வரலாம். ஆனல், நாளேக்கு மூளியோடு ஒரு பிள்ளே பிறந்து வைத்தால் என்ன பண்ணுகிறது? "உன் பிள்ளேயோ நீயோ" என்று அவர் பழி பூராவையும் நம் தலேயில்தானே போடுவார்? என்று விசாலம் தனக்குள் கூறி எச்சரித்துக் கொண்டாள்.

அமைதியான சூழ்நிலேயை கலேத்துக் கொண்டே தபால்காரன் கடிதம் ஒன்றை வீசி நடுக்கூடத்தில் எறிந்துவிட்டுப் போனன். அறையின் வாசலில் நின்று கடிதத்தைக் கூர்ந்து கவனித்தாள் விசாலம். விலாசத்தில் அவள் பெயர் காணப்பட்டது. ஒரே நிமிஷம்தான், 'திடும்' மென வெளியே வந்தாள். கடிதத்தை 'லபக்' கென்று எடுத்துக் கொண்டு உள்ளே போய்விட்டாள். அதன் பிறகு கதவை சாத்திக் கொண்டு சாவதானமாகப் படிக்க ஆரம்பித்தாள்.

"இன்றுடன் உனக்கு ஒன்பது மாசம் முடிந்துவிட்டது. எப்படி இவ்வளவு கணக்காகச் சொல்கிறீர்கள் என்று கேட்பாய். அல்லும் பகலும் உன் கருவில் வளரும் குழந்தையைப் பற்றித்தானே விசாலம் நான் எண்ணிக் கொண்டிருக்கிறேன்? முன்னேப் போல் நீயும் அடிக்கடி எனக்குக் கடிதம் போடுவதில்லே. இப்பொழுதே இப்படி இருக்கிருயே விசாலம்? பிள்ளே பிறந்துவிட்டாளுகில் நீ எங்கே என்னேக் கவனிக்கப் போகிருய்?"

கணவனின் அன்புக்கடிதம் விசாலத்தைப் பரவசத்தில் ஆழ்த்தியது. பொழுதுதான் நகரவில்லே. கணவனுக்குக் கடிதம் எழுதினல் என்ன? என்று தோன்றியது விசாலத்துக்கு. கணவனின் அன்பிஞல் தூண்டப்பட்டு விசாலம் காகிதமும் பேனவையும் எடுத்து வைத்துக்கொண்டு மளமளவென்று கடிதம் எழுத ஆரம்பித்தாள்.

முதலில்தான் ஆரோக்யமாக இருப்பதாகக் குறிப்பிட்டாள். பிறகு தன்னுடைய அம்மா அவனுக்காக வாங்கி வைத்திருக்கும் கார்வண்ணனகிய கண்ணனின் திரு உருவப் படத்தைப்பற்றி வர்ணித்திருந்தாள். "குழந்தை சிவப்பாக மூக்கும் விழியுமாகத்தான் இருக்கவேண்டும், என்று விரும்புகிறேம். வெண்ணேயை திரட்டி அமைத்த உருவத்தைப் போல கொழுவிய கன்னங்களும் குமுதச் செவ்வாயும், நீல மணிக் கண்களும், தாமரை மலர் போன்ற கரங்களும் அமையவேண்டும் என்றுதான் தாயுள்ளம் நினேக்கிறது. ஆனல் ஸ்ரீ கண்ணன் கார் மேனி வண்ணன் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. ஆகையால் பிறக்கும் குழந்தை மூக்கும் விழியும் உங்களேக் கொண்டு, கருப்புக்கு என்னேக் கொண்டால் அது என் குற்றமல்ல. சாக்ஷாத் கண்ணனே அவதாரமாகிவிட்டான் என்று தான் கொள்ளவேண்டும்"—

விசாலம் கடிதத்தைப் படிக்கும் போது குறும்பாகச் சிரித்துக்கொண்டாள். கடிதத்தை முடித்து உறையில் இட்டு ஒட்டி விலாசம் எழுதி

தலையணைக்குக் கீழே அம்மாவுக்குத் தெரியாமல் வைத்துக்கொண்டாள். வெளியே பேச்சுக் குரல் கேட்டது.

"இன்னும் அரைமணியில் கிரஹணம் விட்டு விடும். பாவம், பிள்ளைத்தாய்ச்சிப் பெண் பட்டினியாய் கிடக்கிறாள்" என்று காமாக்ஷி கொல்லை பக்கம் யாருடனோ பேசிக் கொண்டிருந்தாள்.

கடிதத்தை அம்மாவுக்குத் தெரியாமல் வேலைக்காரியிடம் கொடுத்துத் தபாலில் சேர்க்க வேண்டும். என்று தனக்குள் சொல்லிக் கொண்டே விசாலம் கண் அயர்ந்து விட்டாள்.

## 3

**வ**யிற்றில் இருந்த பாரம் குறைந்து விட்டது. வேதனைக்கும் விம்மல்களுக்குமிடையே 'குவா குவா' என்ற புதுக்குரல் அவள் உள்ளத்தை மகிழ்வித்தது. "பிள்ளையா பெண்ணா?" என்று காமாக்ஷி ஆவலுடன் விசாரிக்கிறாள்.

"உனக்குப் பேரன் தான் பிறந்திருக்கிறான்!" யாரோ இவ்விதம் கூறுகிறார்கள்.

"ஐயையோ! ஏண்டி! கிரஹண மூளியாக இருக்கும் போல் இருக்கிறதே. உதடு அறுந்துபோய் இருக்கிறதே! 'த்ஸொ. த்ஸொ' கிரஹணத்தின் போது எதையாவது பின்னம் பண்ணியிருப்பாள் குழந்தையும் மூளியாகப் பிறந்திருக்கிறது.!"

விசாலம் பக்கத்தில் கிடந்த குழந்தையை திரும்பிப் பார்க்கிறாள். கொழுவிய கன்னங்களையும், நீர்ந்த மூக்கையும், பரந்த விழிகளையும் பார்த்து விட்டு அதன் வாயைப் பார்க்கிறாள். "ஐயோ! குமுதச் செவ்வாய்! என்று அவருக்குக் கடிதம் எழுதினேனே! அவர் வந்து பார்த்தால் என்ன சொல்லமாட்டார்?"

விசாலத்துக்கு உலகமே சூன்யமாகிவிட்டது. கிரஹணத்தின் போது கடிதத்தை எடுத்துவர நடுக் கூடத்துக்கு ஓடியது. பிறகு ஏதோ ஒரு ஆவலினால் கணவனுக்குப் பதில் கடிதம் எழுதியது எல்லாம் படங்களாக மாறி அவள் மனத் திரையில் ஓடின.

"விசாலம்! விசாலம்!" காமாக்ஷியின் குரல் அண்மையில் கேட்டது. "விசாலம்! உன் அழகான குழந்தைக்குப் பால் கொடு" என்று அம்மா சொல்லுகிறாளா என்ன? ஆனால் கூனோ, குருடோ, மூளியோ, சுமந்தவள் நானே வெறுத்தால் அதன் கதி என்ன ஆவது? பால் கொடுத்து வளர்த்துத் தான் ஆக வேண்டும். ஆமாம்—

## 4

"**வி**சாலம்! எழுந்திரு! கிரஹணம் விட்டுவிட்டது. வென்னீர் போட்டிருக்கிறேன். ஸ்னானம் செய்து சாப்பிடவா அம்மா!"

வாஞ்சையுடன் தட்டி எழுப்பிய தாயைக் கண் திறந்து பார்த்தாள் விசாலம். இடுப்பில் லேசாக ஒரு வலி. கனிந்த பழம் மரத்தில் தான் ஒட்டிக் கொண்டிருக்கிறது. தன் வயிற்றுச்சிசு இன்னும் பூமியைக் காணவில்லை. இவ்வளவும் கனவு தான்.

"உஸ்!" என்று பெரு மூச்சு விட்டாள்.

"எனக்கு உடம்பு சரியில்லையம்மா!" என்றாள் தாயைப் பார்த்து கலங்கிய கண்களுடன்.

"இதற்குப் போய் அழுவார்களா? எழுந்திரு. குளித்து சாப்பிடலாம். அப்பாவை போய் டாக்டரை கூட்டிவரச் சொல்லுகிறேன்."

விசாலம் வெளியே வந்து ஆகாயத்தை அண்ணாந்து பார்த்தாள். கிரஹணத்திலிருந்து விடுபட்டு சூரியன் தேஜோமயமாக பிரகாசித்துக் கொண்டிருந்தான். ஒரு வேளை சற்று முன் சூரியனுக்கு ஏற்பட்டிருந்த மூளியைப் போல வயிற்றில் வளரும் சிசுவிற்கும் மூளி ஏற்பட்டிருக்கிறதோ என்னவோ?

அன்னை பரிமாறிய உணவு கசந்தது. மகளுக்கு உடல் நிலை சரியில்லையென்று காமாக்ஷி பேசாமல் இருந்து விட்டாள். மாலை நெருங்குவதற்கு முன்பு விசாலத்திற்கு வேதனை அதிகமாகிவிட்டது.—டாக்டர் கூறினாள்.

"நீங்கள் ஒன்றும் பயப்படாதீர்கள் அம்மா. சுகமாக ஆகிவிடும்" என்று.

"சுகமா? என்ன சுகத்தை காணப் போகிறேனோ? மூளி இல்லாமல் இருந்தால் அதுவே பெரிய சுகமல்லவா?"

விசாலத்தின் மனதில் கனவின் எண்ணங்கள் சுழன்று வந்து மோதின.

சூர்யன் அஸ்தமனத்தின் போது அந்த வீட்டில் ஒரு புது ஜீவன் உதயமாகியது. குழந்தையைப் பார்த்து விட்டு டாக்டர் ஒரு நிமிஷம் அயர்ந்து போனாள். பால் போன்ற அதன் நெற்றியின் நடுவில் திலக வடிவத்தில் அகலமாக ஒரு மச்சம் இருந்தது. செக்கச் செவேல் என்று நெருப்புத் தழல்போல் பிரகாசித்தது அது.

"அம்மா! இது என்ன? குழந்தையின் நெற்றியில் இப்படி இருக்கிறதே. உங்கள் குடும்பத்தில் யாருக்காவது இம் மாதிரி உண்டா?" டாக்டர் பிறந்த சிசுவைக் கையிலேந்தி காமாக்ஷியிடம் காட்டினாள்.

காமாக்ஷி கூடத்தில் மாட்டியிருந்த கண்ணனின் படத்தை அண்ணாந்து பார்த்தாள். கண்ணனின் நுதலில் துலங்கும் கஸ்தூரி திலகத்தின் அழகைப் பார்த்தாள்.

"உம்.... இல்லை... இருக்கிறது. அதோ பாருங்கள் அந்தப் படத்தை குழந்தை கண்ணனின் நெற்றியில் திலகம் அமைந்திருக்கும் அழகைப் பாருங்கள்."

விசாலம் அவலுடன் குழந்தையைச் சேர்த்துத் தன்னுடன் அணைத்துக் கொண்டாள். கிரஹணத்தின்போது அவள் மனதில் ஓடிய எண்ணங்களையும் கணவனுக்குக் கடிதம் எழுதியதையும் நினைத்துப் பார்த்தாள். மனதில் உருவகமாகும் எண்ணங்கள்தான் செயலில் எப்படிப் பிரதி பலிக்கின்றன, அச்சில் 'பளிச்'சென்று தெரியும் ஓவியம் போல?

வீட்டுக் கூடத்தில் மாட்டியிருந்த கண்ணனின் படத்தை அல்லும் பகலும் அனவரதமும் பார்த்துக் களித்து வந்ததினால் ஏற்பட்ட பலனாக இருக்குமோ என்று விசாலம் ஆச்சரியப்பட்டாள். அவளுக்குத் தன் குழந்தையைப் பார்க்கும்போதெல்லாம் மனதிலே அடக்க முடியாத வியப்பு ஏற்பட்டது. கிரகண மூளி ஏற்பட்டு விடுமோ? என்று அஞ்சியவளுக்கு நெற்றியில் திலகத்துடன் குழந்தை பிறப்பானேன்?

அவள் மனதில் ஓடும் எண்ணங்களை அறிந்து கொண்ட டாக்டர் புன்முறுவல் பூத்தாள்.

சமீப காலத்தில் வயிற்றில் வளரும் சிசுவைப்பற்றியும், படத்தில் தவழும் கண்ணனையும் ஒப்பிட்டுப் பார்த்திருக்கிறீர்கள். கர்ப்ப காலத்தில் தாயின் சிந்தனையைப் பொறுத்தே கருவின் வளர்ச்சி அமைகிறது என்று வைத்திய நிபுணர்கள் கூறுகிறார்கள். குழந்தையின் நெற்றியில் இருக்கும் திலக வடிவத்தில் அமைந்திருக்கும் மச்சத்திற்கும், கண்ணனின் நுதலில் இருக்கும் திலகத்திற்கும் சம்பந்தம் இருக்கிறதா என்பது மனோதத்துவம் படித்தவர்களால்தான் கூறமுடியும். எப்படி இருந்தாலும் அந்த மச்சம் உன் குழந்தைக்கு எடுப்பாக இருக்கிறது" என்றாள் டாக்டர்.

டாக்டர் இவ்விதம் கூறிவிட்டுச் சென்ற பிறகு வெகு நேரம் வரையில் விசாலம் சிந்தனையில் மூழ்கியிருந்தாள். அவள் வரையில் கிரஹண மூளி என்பதற்கு அர்த்தம் புரியவே இல்லை. அவள் கனவைப் போல அவளுக்கு அது அர்த்தமற்றதாகவே தோன்றியது.

# வெறுமை

சரோஜா ராமமூர்த்தி

கதவுச் சங்கிலி 'கிளுங்' கென்று ஓசைப்படுகிறது. ஒருக்களித்திருந்த வாசல் கதவைத் திறந்து கொண்டு யாரோ உள்ளே வருகிறார்கள். மெட்டியின் ஒலி சுநாதமாகக் கேட்கிறது. பின் தொடர்ந்து மல்லிகையின் மணம் கும்மென்று வீசுகிறது. கலகல வென்று கண்ணாடி வளையல்கள் குலுங்குகின்றன.

'' மாமீ ! மாமீ !'' மெல்லிய, மென்மையான குரல் ஒன்று கல்யாணியைத் தட்டி எழுப்புகிறது. கையில் வைத்திருக்கும் பாத்திரத்திலிருந்து புழுங்கலரிசிக் கஞ்சியின் மணம் எழும்புகிறது. ஆவி சுருள் சுருளாக எழுந்து மேலே மிதக்கிறது.

'' உம். . . .'' என்று முனகிக்கொண்டு கல்யாணி மாமி அரைக் கண்களை விழித்துப் பார்க்கிறாள். அவள் எதிரே மஞ்சள் மினுக்கும், முகத்தில் நெருப்புச் சுடர் போல் குங்கும திலகமும் ஒளிர அபிராமி கஞ்சிப் பாத்திரத்துடன் நிற்கிறாள். எதிரே நிற்பவளைப் புரிந்து கொள்ளாத ஒருவித மயக்க நிலையில் இருக்கிறாள் கல்யாணி.

'' நீ யாரம்மா ?'' கல்யாணி மாமி, கேள்விக் குறியைத் தேக்கிய பார்வையில் எதிரில் நிற்பவளைப் பார்க்கிறாள்.

'' நேற்றிலிருந்து உங்களை நான் பார்க்கவில்லை மாமி, என்ன அப்படிப் பார்க்கிறீர்கள் ? எதிர் வீட்டில் இருக்கும் அபிராமிதான். என்ன உடம்போ ஏதோ என்று காலையிலேயே என் பெண்ணைப் பார்த்து விட்டு வரச் சொன்னேன். கண்ணைத் திறக்காமல் படுத்திருப்பதாகச் சொன்னாள். கஞ்சி கொண்டு வந்திருக்கிறேன் மாமி. எங்கே, வாயைத் திறவுங்கள் ? . . . .''

பதமாக ஆற்றிய கஞ்சியைக் கல்யாணி மாமியின் வாயில் புகட்டுகிறாள் அபிராமி. அவளைப் பற்றித் தெரிந்து கொள்ள கல்யாணிக்கு ஆசைதான். எதிர் வீட்டுப் பெண். அடக்கமும், அன்பும், இன்முகமும் ஒருங்கே அமையப் பெற்றவள். ஏட்டிலே பலபல படித்து அறிவதை விட, அவளைப் பார்த்தே பலவற்றைப் படித்துப் பயன் பெற்று விடலாம். அந்தக் குளிர்ந்த பார்வை ஒன்றே போதுமே ! இருந்தாலும் அவளை எப்படி அறிமுகப் படுத்திக் கொள்வது ?

கல்யாணியும் சற்று சங்கோஜி. வலுவில் யாருடனும் பேச மாட்டாள். கஞ்சி இதமாக நெஞ்சில் இறங்கியவுடன் கல்யாணி பேச ஆரம்பிக்கிறாள்.

'' நேற்று மத்தியானம் படுத்தவள் தான். ஒரே தலைவலி. ராத்திரி ஜுரம் வந்து விட்டது. தட்டுத் தடுமாறி காப்பி போட்டுச் சாப்பிட்டேன். உனக்கு வீண் தொந்தரவு. . . .பாவம் ! பிள்ளைத்தாச்சியைச் சிரமப்படுத்தி விட்டேன். . . .''

அபிராமிக்கு எங்கிருந்தோ வெட்கம் வந்து விடுகிறது. எத்தனை பெற்றாலும், ஒவ்வொரு தரமும் தாய்மை அடையும் போது வெட்கம் வரத்தான் செய்கிறது பெண்களுக்கு.

தலை குனிந்து நிற்பவளைப் பார்க்கிறாள் கல்யாணி.

'' உட்காரம்மா. . . .நிற்கிறாயே . . . .எத்தனை மாசம் உனக்கு ?''

'' நாலு மாசம் மாமி. .'' கண்களிலே கண்ணீர் மின்னுகிறது.

'' ஏனம்மா வருத்தப்படுகிறாய் ? தாய்மை அடைந்து விட்டோம் என்று பொங்கிப் பூரித்து இருக்க வேண்டியது போக, இந்தக் காலத்தில் ஒன்றுக்கு மூன்று குழந்தைகள் ஆகி விட்டால் எல்லாப் பெண்களும் இப்படித்தான் அலுத்துக் கொள்கிறார்கள். என்னைப் பார். . . .'' மேலே அவள் பேசவில்லை. பார்வை எங்கோ வெறுமையில் போய் நிலைத்து விட்டது. உயிரினம் வாழ்ந்து சிரிக்கும் இந்த உலகம் அவளுக்கு மட்டும் ஒரே சூன்யமாகத் தோன்றுவானேன் ?

காரணம் இல்லாமல் இல்லை. கல்யாணி ஒண்டிக்கட்டை. இப் பரந்த உலகத்தில் அவளுக்கு வேண்டியவர்கள், உறவினர்கள் என்று சொல்லிக்கொள்ள யாரும் இல்லை. கல்யாணி உலகத்தா

ரைப்போல ஒருவனுக்கு வாழ்க்கைப்பட்டாள், சில காலம் வாழ்ந்தாள். ஒரு பூவோ, பிஞ்சோ தளிர்க்கு முன்பே தனியாகி விட்டாள். அவளைத் தனிமைப் படுத்தியவன் தெருவிலே நிறுத்தாமல் சோற்றுக்கும், துணிக்கும் வைத்து விட்டுத்தான் போனான். சோறும், துணியும் மனித வாழ்வின் முதல் தேவையாக இருந்தாலும், அது கிடைத்த பிறகும் அந்த வாழ்வு பூரணத்துவம் அடைவதில்லையே.

இப்படித் தனி மரமாக இருக்கிறோமே என்று வேதனைப்பட்டு நாட்களைக் கழித்துக் கொண்டே வந்து விட்டாள். ஒவ்வொரு உயிரும் ஏதோ ஓர் ஆதங்கத்துடன் உலகில் பிறக்கிறது. நன்றாக வாழ்ந்துவிட வேண்டும் என்று துடிக்கிறது. ஆனால், அவற்றின் வாழ்க்கைப் பாதையில் எத்தனை ஏற்றங்கள், இறக்கங்கள்? இவள் வாழ்விலே ஏற்றமே காணவில்லை. ஒரே பள்ளம்தான். இட்டு நிரப்ப முடியாத பெரும் பிளவு.

இரண்டு மாதங்களுக்கு முன்பு ஒரு நாள் அபிராமியும், அவள் கணவனும், குழந்தைகளும் அந்த ஊருக்கு வந்தார்கள். மாட்டு வண்டியிலிருந்து அவர்கள் இறக்கிய சாமான்களைப் பார்த்தவுடன் கல்யாணிக்குப் புரிந்து போயிற்று; வளர வேண்டிய அந்தக் குடும்பத்தைப் பற்றாக்குறையும், பசியும், பாடுபடுத்திப் பேயாட்டம் ஆடி இருக்கின்றன என்று. ஒடிந்த மணைகள், ஓட்டைத் தகர டப்பாக்கள், கிழிந்த சாக்கில் நசுங்கிய பாத்திரங்கள், படுக்கை என்கிற பெயரிலே வெறும் கந்தல்கள்.

காற்று வாக்கிலே கல்யாணியின் காதில் விழுந்த செய்தி இதுதான்.

பள்ளிக்கூட வாத்தியாராக இருந்து வந்தானும் அபிராமியின் கணவன். ஒரு வார ஜுரத்தில் கால் இழுத்துக் கொண்டு விட்டதாம். அபிராமி குடும்ப பாரத்தைத் தன் தோளில் ஏற்றுக் கொண்டு விட்டாள். சிட்டுக்கள் போல துளித் துளியாய் நிற்கும் மூன்று பெண் குழந்தைகளை வீட்டில் விட்டு விட்டு அபிராமி ஓடி ஓடி உழைக்கிறாள். ஒரு வீட்டில் பிறந்த நாள் என்றால் விடிய நாலு நாழிகைக்கே எழுந்து, கணவனுக்கும், குழந்தைகளுக்கும் சமைத்து வைத்து விட்டுப் போய் விடுவாள்.

மாலை அவள் வீடு திரும்பும்போது பையில் தின்பண்டங்களும், முகத்தில் மலர்ச்சியும் கொண்டு வரத் தவறியதே யில்லை. முகத்தில் சிரிப்பு ஒன்றுதான் வற்றாமல் இருக்கும். வீட்டில் ஒன்று மிராது. சமையலறையில் டப்பாக்கள் ஒழுங்காகக் கொலுவிருந்தாலும், தன்னுள்ளே சூன்யத்தை நிரப்பிக் கொண்டு அமர்ந்திருக்கும். எதிரும் புதிருமாக அமைந்திருந்த இவர்கள் இருவருடைய வீட்டிற்கும் ஏகப்பட்ட ஒற்றுமை! கல்யாணிக்குப் பட்டினி கிடக்க வேண்டிய அவசியமில்லை. அவளுடன் பகிர்ந்து உண்ண யாருமில்லையே என்கிற ஏக்கம் தான் அவளுக்கு. பகிர்ந்து சாப்பிடக் கணவனும், குழந்தைகளும் இருக்கும் அபிராமிக்கோ வயிறார உண்ண உணவில்லை என்கிற ஆதங்கம்.

எப்படியோ இருவருக்கும் ஒற்றுமை இருந்தது!

"கஞ்சி வாய்க்குப் பிடிக்கிறதா மாமி? ஜுரம், தலைவலி என்றால் என்னை ஒரு குரல் கூப்பிடக் கூடாதா?" அபிராமி பரிவுடன் கேட்கிறாள்.

"சமையல் அறை வலை பீரோவில் நேற்று பால் பிரைகுத்தி வைத்திருக்கிறேன். கறிகாயும் வாடி வதங்கிப் போகும். எடுத்துப் போயேன் .." என்கிறாள்.

ஒரு துளியாக ஆரம்பித்த நட்பு, மலையாக வளருகிறது. நாட்கள் பிறந்து மடிகின்றன. ஆனால், பாசமும், அன்பும் பிணைந்து கொண்டு வளருகின்றன. இருவரும் மனத்தில் ஒன்றிப் போகிறார்கள்.

கல்யாணிக்குத் தான் ஒண்டிக்கட்டை என்கிற எண்ணம் மெல்ல மெல்லத் தேய்ந்து வருகிறது. அபிராமி இருக்கிறாளே!

மாதம் வளர வளர அபிராமி இளைத்துக்கொண்டே வருகிறாள்.

"அடியே அபிராமி! எட்டு மாசம் ஆகிறதடி உனக்கு. பேசாமல் வீட்டோடு விழுந்து கிட...." கடுமையாகக் கல்யாணி எச்சரிக்கிறாள்.

அவள் விழுந்து கிடந்தால் ஐந்து வயிறுகள் நிரம்ப வேண்டுமே? ஒரு குடும்பத்துக்கு இன்னொருவர் இட்டு நிரப்ப முடியுமா? தீராத பிரச்னையாகி விட்ட இல்லாமையை இந்தக் கல்யாணியின் பரிவும், உதவியும் எப்படிப் போக்கடித்து விடும்?

இதயம் விம்மித் தணிகிறது அபிராமிக்காக. சூம்பிப்போன காலும், கோணிய வாயுமாக இருக்கும் அபிராமியின் கணவனைப் பார்க்கும்போதெல்லாம் கல்யாணிக்கு வேதனையும், கோபமும் கொப்பளித்து எழுகின்றன.

'பள்ளிக்கூட வாத்தியார் ஆயிற்றே, நாலு குழந்தைகளுக்கு ஏதாவது சொல்லிக்கொடுத்து ....' கல்யாணி ஊரில் விசாரித்து நாலு குழந்தைகளை அழைத்து வந்து விடுகிறாள். அபிராமி கல்யாணியிடம் சண்டைக்கு வந்து விடுகிறாள்.

"என்ன மாமி இது? அவர் கிடந்த இடைக்கு இந்த மட்டும் தாலிச் சரடு தப்பியதே என்று பார்த்தால்?..."

"வயிறும், வாயுமாக நீ அலைவது எனக்குப் பொறுக்க முடியவில்லையடி.."

"அதற்காக? என் தலையில் எழுதியது அது..." துயரம் நெஞ்சிலிருந்து இறங்கி வயிற்றுக்குள் சென்று விடுகிறது.

ஒன்பதாம் மாதம் பிறந்து விடுகிறது. கூடவே கோடையும் பிறக்கிறது. ஊரிலே எங்கு பார்த்தாலும் கொட்டு மேளமும், திருவிழாக்களும் அமளிப் படுகின்றன. யார் வீட்டிலோ ஏதோ விசேஷமாம். அபிராமி வந்து உதவினால் தான் காரியம் நிறைந்து மணக்குமாம். அபிராமிக்கு ஆகி வந்த கை வேறு, அவளை அழைக்க வந்து விட்டார்கள்.

"வீட்டு வரைக்கும் தான் சாப்பாடு. இருபது பேர்களுக்குச் சமைக்க வேண்டும். கூடமாட எங்கள் பெண்களும் உதவி செய்வார்கள். ஐந்து ரூபாய் கொடுக்கிறோம்?" என்றார்கள்.

ஐந்து ரூபாய்! பெரிய தொகைதான் அவளுக்கு. நாலு நாளைக்கு ஒரு வேளைச் சாப்பாட்டுக்காவது கவலைப்படாமல் இருக்கலாம். போகிறேன் என்று பறக்கிறாள் அவள். போய்விட்டுத்தான் வரட்டுமே! மூன்று நாட்களாக அரை வயிற்றுக்குச் சாப்பிட்டுச் சாப்பிட்டு அலுத்து விட்டது அவளுக்கு.

கல்யாணி வேறு ஊரில் இல்லை. அடுத்த ஊரில் ஏதோ திருவிழாவாம். அபிராமியின் குழந்தைகளை அழைத்துக் கொண்டு போய் இருக்கிறாள். அவளைப் போகவேண்டாம் என்று கூறித் தடுத்து நிறுத்த யாருமில்லை. புறப்பட்டு விட்டாள்.

நேரம் நகர்கிறது. தெருவில் மாட்டு வண்டி வந்து நிற்கிறது. முனகிக் கொண்டே இறங்குகிறாள் அபிராமி. நெற்றியில் முத்துக்களாக அரும்பியிருக்கும் வியர்வைத் துளிகளும், வெளுத்துப் போன முகமும், சோர்வும் அவளுக்கு உடல் நிலை சரியில்லை என்று காட்டுகின்றன.

வாசற்படி ஏறிக்கொண்டே, 'சாப்பிட்டீர்களா? நீங்களே போட்டுக் கொண்டு



பையன் :— டேய், எங்க வாத்தியார் ரொம்ப நல்லவர்டா. கேள்விக்குப் பதில் சொல்லலேன்னு, 'வெளியே போ' என்று வீட்டுக்கு அனுப்பிச்சுட்டார்டா!

சாப்பிட்டால் வயிறு நிறையாதே....' என்று கணவனிடம் பரிவுடன் கேட்டவாறு உள்ளே சென்று படுக்கிறாள்.

விநாடிக்கு விநாடி அவள் வேதனை அதிகரிக்கிறது. அப்புறம் யார் யாரோ வருகிறார்கள். அபிராமியின் நினைவில் கல்யாணி ஒருத்தியைத்தான் நிறுத்திக் கொள்ள முடிகிறது.

"விளக்கு வைக்கும் நேரமாகி விட்டதே....மாமி வரவில்லையா?" வாய் திறந்து கேட்கிறதாக ஒரு நினைப்பு. பேசத்தான் முடியவில்லையே!

அதோ! அதோ! கல்யாணி மாமியின் குரல் கேட்கிறது. "அபிராமி! அபிராமி! என்னிடம் காலையிலேயே ஒரு வார்த்தை சொல்லியிருக்க மாட்டாயா? உன்னைத் தனியாக விட்டு விட்டு நான் போயிருக்கமாட்டேனே.." பரிவும், பாசமும் தோய்ந்த சொற்கள் அவை. கல்யாணியால் தான் அவ்விதம் பேசவும் முடியும்.

அவளைச் சுற்றி ஏதோ நடக்கிறது. 'மயக்கம்.. மருந்து' என்று யாரோ பேசுகிறார்கள். பிறகு? அபிராமி தன்னிலை நழுவி, புரியாத ஓர் இடத்தில் இருக்கிறாள். வலி, இல்லாமை, பசி, எதுவுமே மனித தேகத்தை ஆட்கொள்ள முடியாத ஓர் இடம். அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. அவ்வளவுதான்!

"குவா குவா!" உலக வனத்திலே அரும்பிய மொட்டு ஒன்று மலர்ந்து விட்டது. கல்யாணி குழந்தையைப் பார்க்கிறாள். ஆண் குழந்தை. அபிராமியின் அழகையும், தகப்பனின் வாட்ட சாட்டமான உடலையும் கொண்ட அழகுக் குழந்தை. சட்டென்று அபிராமியைப் பற்றிய நினைவு வருகிறது அவளுக்கு.

"அபிராமி! அபிராமி!"

புதிய ஒன்றைப் பார்க்கும் வேகத்தில் பழைய ஒன்றின் நினைவை மறக்கச் செய்யும் மாயை!



டாக்டர், அபிராமியின் கையைப் பிடித்துக் கொண்டே நிற்கிறார். உணர்ச்சிகளைத் தாண்டிய நிலையில் அவர் நின்ற நிலை விடை அளித்து விடுகிறது. ஜனனத்தின் தோற்றுவாய் மரணத்தின் விளிம்பிலே நின்று பேய்க் கூச்சல் இடுவதை அறிந்து கொள்கிறாள் கல்யாணி.

காலையில் தன்னைப் பார்த்துப் பேசிச் சிரித்தவளின் உடல், அவள் எதிரே கிடக்கிறது. வாழ்ந்து ஓய்ந்து போனவளின் அருகில் வாழ வந்திருக்கும் புது உயிர் குரலெழுப்பி தன் வரவை அறிவித்துக் கொண்டிருக்கிறது.

ஊரார், உறவினர்கள் வந்து காரியத்தை முடிக்கிறார்கள். சம்பிரதாயத்துக்காக வந்தவர்கள், அது முடிந்தவுடன் விலகி விட்டார்கள். அவனும், அந்தக் குழந்தைகளும் மட்டுமே தனியாக நின்றார்கள்.

கல்யாணி பசும் பாலை எடுத்துக் கொண்டு வருகிறாள் குழந்தைக்கு. நெளிந்து நெளிந்து அது தாய்ப் பாலுக்காக அழுது கொண்டிருக்கிறது.

பெற்றவனோ இருந்த இடத்தை விட்டு அசையாமல் உட்கார்ந்திருக்கிறான். பாலைப் புகட்டி விட்டுத் துணியில் வைத்து அணைத்து அதை எடுத்து வருகிறாள் கல்யாணி.

"இப்படி இருந்தால் முடியுமா அப்பா? இந்தக் குழந்தையின் வேதனையைக் கவனிக்காமல் உட்கார்ந்திருக்கிறாயே! தந்தையும் தாயுமாக இருக்க வேண்டியவனாயிற்றே நீ!.."

எப்பொழுதும் போல முனகுகிறான் அவன். கல்யாணி ஏதோ ஒரு வேகத்திலே அதைத் தன் வீட்டுக்குள் எடுத்துப் போகிறாள்; 'நாளை..மறுநாள்.. பெற்றவன் வந்து கேட்டால்?' என்கிற எண்ணமே அவளுக்கு எழவில்லை. மனைவிக்காக அவன் உருகுகிறானா? நாளைக்கு நமக்கு உழைத்துப் போட யார் இருக்கிறார்கள் என்று வேதனைப் படுகிறானா? புரியவில்லை அவளுக்கு.

தாயாக வேண்டும் என்று ஒரு காலத்தில் அங்கமெல்லாம் உருக அவன் அருளை வேண்டிய கல்யாணி இதோ எளிதில் தாயாகி விட்டாள். வேண்டுமென்றே யாரோ சுமத்தி விட்ட பதவி!

நாட்கள் ஓடுகின்றன. குழந்தை — அபிராமியின் குழந்தை — இப்பொழுது கல்யாணியின் செல்வனாக வளருகிறான். பல மாதங்கள் வரை அவன் பெயரில் குழந்தையாகவே வளருகிறான். அபிராமியை உரித்து வைத்திருக்கிறது. ஏதோ ஒரு பெயர் வைத்து அழைக்க வேண்டாமா? கல்யாணி யோசிக்கிறாள். என்னவோ ஒன்று மூளையில் பளிச்சிடுகிறது.

ஸ்ரீராமன்! அற்புதமான பெயர். "ஸ்ரீராம்.." என்று வாய் நிறைய, குளிர அழைக்கிறாள் அவள். ஸ்ரீராமனுக்கு





முகம் பார்த்துச் சிரிக்கத் தெரிகிறது. பாவம், தாய் முகம் அறியாத அந்தச் சேய், தாயின் உருவத்திலே தன்னை வளர்க்கும் அவளைப் பார்த்துச் சிரிக்கிறது.

மெல்ல மெல்ல ஸ்ரீராமனின் தந்தையின் மனம் விழிப்படைகிறது. கால் இழுத்துக் கொண்டிருந்தாலும் சாய்த்து நடந்து கொண்டே ஒரு வேலையைத் தேடிக் கொள்கிறான். பெரிய பெண் தான் குடும்பத்தைப் பார்த்துக் கொள்கிறது. கும்மட்டியைப் பற்ற வைக்கிறதும், சமைக்கிறதும் அசல் அபிராமி தான் வேலையில்! தன்னுடன் பிறந்த இரண்டையும் பார்த்துக் கொண்டும் இடையிலே எதிர்வீட்டை

பழைய நாட்களில் ரஷ்யா தேசத்தில் ஒரு பெண்ணுக்கு விவாகம் நடக்கும்போது ஆக வேண்டிய சடங்குகளில் இது ஒன்று. பெண்ணின் தகப்பன் ஒரு புது சாட்டையை எடுத்து இலேசாகப் பெண்ணுக்கு ஒரு அடி கொடுத்து 'இது நீ என்னிடம் வாங்கும் கடைசி அடி' என்று சொல்லி விட்டு, சாட்டையை மாப்பிள்ளையிடம் ஒப்படைப்பான்!

யும் எட்டிப் பார்க்கிறாள் அவள். உடன் பிறந்த ரத்தமாயிற்றே!

"தம்பிப் பாப்பாவை அப்பாதான் தூக்கிக் கொடுத்துவிட்டாரே!" உடன் பிறந்த பாசத்தில் கண்ணீர் விடுகிறாள் தமக்கை. ஆசையுடன் முத்தமிட, அன்புடன் தாலாட்ட, மகிழ்வுடன் தூக்கிச் சுமக்க அவள் துடிக்கிறாள்.

ஒருநாள்.. ஸ்ரீராமனை எடுத்துக் கொண்டு கல்யாணி வாசல் திண்ணையில் வந்து உட்காருகிறாள். குழந்தை எதற்கோ அழுகிறான்.

அந்தத் தொலை வானத்திலிருந்து குதித்து வருபவன்போல் அந்த மனிதன் வருகிறான். தெருக்கோடியில் வரும் அவனைப் பார்த்துக் குழந்தை சிரிக்கிறது.

அருகிலே வந்ததும் ஸ்ரீராமனின் தந்தை தன் வீட்டு வாயில்படி ஏறுமுன் ஒரு தடவை திரும்பிப் பார்க்கிறான். குழந்தை சிரிக்க, அவன் பார்க்க..

கல்யாணியின் நெஞ்சில் — நிறைந்திருந்த அந்த மனத்தில் வெறுமை நிரம்புகிறது. ஏதோ பறி போய் விட்டாற் போல் இதயம் வெறிச்சென்று ஆகிறது. குழந்தையை உள்ளே கொண்டு வந்து தொட்டிலில் கிடத்திவிட்டு உட்காருகிறாள்.

வெறிச்சோடிய இதயத்தைக்குழந்தை நினைவால் நிரப்பிக் கொள்ள முயல்கிறாள்.

நாளைக்கு ஸ்ரீராமனுக்குப் பிறந்த நாள். அவன் பிறந்த நாள் அவன் தாயின் மறைவு நாள் அல்லவா? எதிர் வீட்டுக்கு யார் யாரோ வருகிறார்கள். இங்கே இவள் குழந்தையின் பிறந்த நாளுக்காகப் பட்டுச் சட்டை வாங்கி யிருக்கிறாள். அங்கே அவன் தன் மனைவியின் நினைவுக்காக ஆயத்தங்கள் செய்து கொண்டிருக்கிறான்.

வாசல் குறட்டில் யாரோ ஏறி வருகிறார்கள். கல்யாணி திரும்பிப் பார்க்கவில்லை. குழந்தையைப் பறி கொடுத்து வெறுமையாய் நின்று விடுவோமோ என்கிற நினைப்பு. தொட்டிலில் கண் வளரும் மதலையின்மீது அவள் பார்வை நின்று நிலைத்து விடுகிறது.

ரேழியில் காலடிச் சத்தம் கேட்கிறது. கல்யாணி கண்களை இறுக மூடிக் கொள்கிறாள். ஆடாது, அசங்காது துயில் கொள்ளும் பாலகனை அந்த வெற்று இதயத்துள் இருத்திக் கொள்கிறாள்.

முற்றத்தைத் தாண்டிக் கூடத்துக்கே வந்து விடுகிறாள்.

"மாமி!"

அபிராமியின் மூத்த பெண் அல்லவா!

"மாமி! அப்பா என் தம்பியை வாங்கிண்டு வரச் சொன்னார் மாமி.."

கல்யாணியின் நெஞ்சம் கனக்கிறது. கடந்த சில மாதங்களாக வளர்த்து வந்த நம்பிக்கை கரைந்து போகிறது.

"கேட்கிறேனே மாமி! என் தம்பியை அப்பா வாங்கிண்டு வரச் சொன்னார்; நாளைக்கு எங்கம்மாவுக்கு திதி மாமி; அவனை இங்கே விட்டுட்டு..அப்பா எப்படி மாமி ஒண்டியா காரியத்தைச் செய்வா?" கல்யாணியின் மனம் பதில் தருகிறது.

'அவன் அபிராமியின் மகன். உன் மகன் அல்லவே?'

தொட்டில் அசைகிறது. குழந்தை விழித்துக் கொள்கிறான். வழக்கம் போல ஒரே புன்னகைதான்.

அந்தச் சிரிப்பு அவளை ஒன்றும் செய்யவில்லை.

"கண்ணே! உன் அம்மாவுக்குச் செய்ய நீ வேண்டுமாம். உன் அப்பா அழைக்கிறார். போடா.." மின்னலைப் போல் பாய்கின்றன கரங்கள். குழந்தையை எடுக்கின்றன. தமக்கை உரிமையுடன் குழந்தையைப் பெற்றுக் கொள்கிறாள்.

தொட்டில் ஓர் அசைவுடன் தன்னை வெறுமைப்படுத்திக் கொள்கிறது. தெருத் திண்ணையிலிருந்து பார்த்தால் அடிவானத்தில் மாலையில் நடந்த இந்திர ஜாலங்கள் மறைந்து இருள் படர்ந்து கிடக்கிறது.



# மாற்றம்

ஸரோஜா ராமமூர்த்தி

அன்றைய தபால் மேசைமீது கிடந்தது. கிராமத்திலிருந்து சங்கரிக்கு வந்த பல கடிதங்களில் அது ஒன்று. அவள் கட்டாயமாகக் கிராமத்துக்கு வந்து தீரவேண்டும் என்று அவள் பெரியப்பா உத்தரவு போட்டிருந்தார். இம்மாதிரி ஒரு மாதமாகப் பல கடிதங்கள் வந்துவிட்டன. அவருடைய நாலைந்து கடிதங்களைப் படித்தும் சங்கரியின் மனம் நெகிழ்ந்துவிடவில்லை. ஏனெனில், அந்தப் பெரியப்பாவை அவள் நன்கு புரிந்து கொண்டிருந்தாள்.

'உன்னைப்போல உண்டா குழந்தை?' என்பார் ஒரு தரம். அடுத்த விநாடியே 'நன்றி கெட்ட பெண்' என்று சொல்லிவிடுவார். முன்னதைவிடப் பின்னதுதான் அவள் மனத்தில் நிலைத்திருந்தது.

கிராமத்துக்குப் போய்விட்டு வந்த உறவினர்களும், 'பெரியப்பாவின் உடல் நிலை மோசமாகத்தான் இருக்கிறது. அவருக்கு நினைவு இருக்கும்போதே போய்ப் பார்த்துவிட்டு வந்துவிடு' என்று சொன்னார்கள்.




சங்கரியின் மனத்துக்கு அதற்குமேல் அமைதியாக இருக்க முடியவில்லை. பெரியப்பாவுக்குப் பிடித்த இனிப்புகள், ஊறுகாய்கள் என்று தூக்குகளில் நிரப்பிக்கொண்டு ரயில் ஏறினாள். வீட்டில் சின்னதும், பெரியதுமாக நாலைந்து குழந்தைகள். பட்டணவாசத்தின் அவசர வாழ்க்கை வேறு. காலை ஒன்பதுக்குள் சமையலை முடித்து மற்ற அலுவல்களைக் கவனிக்க வேண்டும்.

குழந்தைகள் மாம்பலத்துக்குப் போய்ப் படிக்கிறார்கள். பைகளில் பிதுங்கப் பிதுங்கப் புத்தகங்கள். கைகளில் சோற்று மூட்டை! ரயிலில் ஏறுவதும், இறங்குவதும் ஒரே அவசரம்.

'அட கண்ணு! கவனமாக ஏறி

இறங்கு. அடி அம்மா லல்லு! பாவாடை தடுக்கப் போகிறது. பார்த்து ஏறு' என்று தினமும் குழந்தைகளை எச்சரித்து அனுப்ப வேண்டியிருந்தது.

'குழந்தைகளை இந்த விடுமுறைக்கு ரயில் காணாப் பிரதேசம் ஒன்று இருந்தால் அங்கு அனுப்ப வேண்டும். பாவம்! அதுகள் படுகிற பாடு' என்று கணவரும், மனைவியும் பேசிக்கொள்வார்கள்.

இப்படி அவசரத்தில் திளைத்து வளர்ந்துவரும் குடும்பத்தை விட்டு அவளால் அரை நாள்கூட வெளியே போக முடியாது. பெரியப்பாவையும், பெரியம்மாவையும் பார்த்துப் பத்து வருஷங்கள் ஆகிவிட்டன. அவளுக்கு வளைகாப்பு சீமந்தம் என்று அழைத்துப் போய் அவர்கள்தான் செய்தார்கள். சங்கரியின் தாயற்ற குறையை அவர்களால் ஓரளவு பூர்த்தி செய்ய முடிந்தது. ஓரளவுதான்.

ஆனால், முதல் பிள்ளைப் பேற்றுக்குப் பெரியம்மா அவளை 'வா'வென்று அழைக்கவில்லை. சீமந்தத்தின்போது நெருங்கி உறவு கொண்டாடிய அவள் அடுத்த இரண்டு மாதங்களுக்குள் வேற்று மனுஷி போல் நடந்துகொண்டாள். முதல் மகப்பேற்றிலேயே சங்கரி துன்பத்தின் எல்லையில் நின்றாள். மாமியார் வீட்டில் எத்தனையோ சுடுசரங்களை ஏற்க வேண்டியிருந்தது. பிறகு விசாரித்த போது, 'பிள்ளையில்லாத சொத்தை வாரி இறைக்க முடியுமா என்ன? இவ்வளவு செய்ததே மேல் என்று நினைக்கவேண்டும்' என்று பெரியப்பா இரைந்தாராம்.

'உண்மைதான்' என்று நினைத்து சங்கரி மனத்தைத் தேற்றிக் கொண்டு, முதல் குழந்தைப் பிறந்து மூன்று மாதங்களுக்கு அப்புறம் பெரியப்பாவிடம் பேரனைக் கொண்டு போய்க் காண்பித்து வந்தாள். சங்கரிக்கு ரயில் கிளம்பியதும் இதெல்லாம் நினைவுக்கு வர ஆரம்பித்தது.

'அடேயப்பா! பெரியப்பா அவ்வளவு பணக்காரர் அவ்வளவு ...'

'அடேயப்பா! பெரியப்பா அவசியமாயிருந்தாலும் காலணா செலவழிக்கமாட்டாரே!—'

சங்கரி தனக்குள் அதிசயித்துக்கொண்டாள். அந்தக் காலத்தில் பெரியப்பா வக்கீல் குமாஸ்தாவாக இருந்து வந்தார். தினம் அவர் ஜோபியில் நோட்டுகளும், சில்லரைகளும் கலகலவென்று நிரம்பி இருக்கும். வக்கீல் மனைவி வீட்டில் கறக்கும் பால், தயிர் என்று வேறு குமாஸ்தாவுக்குக் கொடுத்து விடுவாள். வக்கீலைப் பார்க்கவரும் கட்சிக்காரர்கள் பங்கு தராமல் போக மாட்டார்கள். விலைவாசி எல்லாம் மனிதன் எட்டிப் பிடிக்கும் எல்லையில் இருந்தன. என்று மனிதனுக்கு விண்ணை அளக்கும் ஆவல் ஏற்பட்டதோ அன்றிலிருந்துதான் இத்தனை பேராசையும், அதிருப்தியும் உலகத்தில் ஏற்பட ஆரம்பித்துவிட்டது. பிள்ளை குட்டி இராமற் போகவே சிறுகச் சிறுகக் காசு சேர்ப்பதில் முனைந்தார் அவர்.

'ஒரு நல்ல வேஷ்டி கட்டியிருப்பாரா அவர்? இதென்ன வாணியன் துணி மாதிரி ஒண்ணைக் கட்டிக்கொண்டு?' என்று பெரியம்மா அலுத்துக்கொள்வாள்.

அவள் காஞ்சீபுரம் பட்டுப் புடைவைதான் உடுத்திக்கொள்வாள். என்ன விலை இருக்கும் என்கிறீர்கள்? பன்னிரண்டு, பதினைந்துக்கெல்லாம் சரிகை

இல்லாமல் சாதா புடைவை கிடைக்கும். ஆற்றிலும், குளத்திலும் அறைந்து தோய்த்து அலசினாலும் மூன்று வருஷங்கள் உழைக்கும். சங்கரிகூட பட்டுப் பாவாடைகள் பல ரகங்களில் கட்டியிருக்கிறாள். இப்பொழுது விதவிதமான துணிகள் என்னவோ வந்திருக்கின்றன. ஒரு நடுத்தர குடும்பத்துக்கு வருஷாவாரியில் ஐந்நூறு அறுநூறு என்றுதான் பணம் கொடுத்து வாங்க வேண்டியிருக்கிறது. ஆனால், வாங்கிய சுருக்கில் துணிகள் கிழிந்து போகின்றன. அதிக நாள் உழைத்துவிட்டால், அடுத்த ரக துணியை யார் வாங்குவார்கள்? பெரியம்மா 'குழந்தைக்கு, குழந்தைக்கு' என்று ஒவ்வொரு பண்டிகைக்கும் பாவாடை வாங்கித் தருவாள்.

'ஹூம்...ஏதடி குட்டிப் புதுப் பாவாடை?' என்று சாப்பிட்டுக் கொண்டே கேட்பார் பெரியப்பா.

'பெரியம்மா வாங்கித் தந்தா...' சங்கரிக்குப் பதிலளிக்க பயம்தான். இருந்தாலும் வாயை மூடிக் கொண்டு இருக்க முடியாதே!

பெரியப்பாவுக்கு அதற்கப்புறம் எங்கிருந்தோ கோபாவேசம் உண்டாகிவிடும்.

'இதென்ன உன் அப்பன் வீட்டுச் சொத்தா?' என்று கேட்டு இரைய ஆரம்பிப்பார்.

அப்பொழுதெல்லாம் பெரியம்மாவின் அன்பு முகம் வாடி வதங்கிக் கூம்பிப் போய்விடும். தனிமையில் சென்று கண்ணீர்ப் பெருக்கி, சேலைத் தலைப்பினால் கண்களை அழுத்தித் துடைத்துக் கொண்டுதான் வருவாள்.

'பாவம் பெரியம்மா! பெரியப்பா அப்படியேதான் இருப்பார். அவர் எங்கே மாறி இருக்கப் போகிறார்?'—சங்கரி இவ்விதம் எண்ணியபடி ஜன்னலுக்கு வெளியே எட்டிப் பார்த்தாள்.

சற்றுமுன் துல்லியமாக இருந்த வானத்தின் கோடியில் கருத்த மேகங்கள் படை கிளம்புகிறாற் போல் கூட்டங் கூட்டமாய் பரவிக் கொண்டிருந்தன.

'மனிதனின் மனமும் இப்படித்தான். நொடிப் பொழுதிலே மாறினாலும் மாறும். பெரியப்பா மாறிவிட்டால் போகிறார். நான் எப்படியோ மனம் மாறி அவரைப் பார்க்கப் புறப்பட்டிருக்கிறேனே! பத்து வருஷங்களாக அவர்மேல் ஏற்பட்டிருந்த அதிருப்தி மாறி நான் கிளம்பியதே விந்தைதான். எனக்கு எப்படி அவர்மேல் விரோதம் ஏற்பட்டது? அவருக்கிருக்கும் பணத்துக்கு அவர் நன்றாகச் செலவழித்து நல்ல இடமாக என்னைக் கொடுத்திருக்கக்கூடாதா? இப்படி மாதம் இருநூறு ரூபாய்ச் சம்பளத்தில் நாலைந்தைக் கட்டிக்கொண்டு வாய்க்கும், கைக்குமாக அவதிப்படவேண்டாமே? ஒருதரமாவது புடைவை கிடவை நகைநட்டு என்று செய்திருப்பாரா? போகிறார் கஞ்சன்!' என்று நானே என்னுள்ளே பகைமையை வளர்த்துக்கொண்டு அவரைப் போய்ப் பார்க்காமல் இருந்துவிட்டேன்.

அவர் வயிற்று மகளாக இருந்தால் இப்படி இருந்திருப்பாளா? தந்தை கஞ்சனாக இருந்தாலும், தாய் கொடுமைக்காரியாக இருந்தாலும் அவர்கள் பாசத்தின் பிணைப்பிலே எல்லாவற்றையும் மறந்துதான் போயிருப்பார்கள். இப்பொழுது மட்டுமென்ன? அவர்களிடம் கொஞ்சம் பசை இருக்கிறது என்று தெரிந்துதான் புறப்பட்டிருக்கிறாள். வளர்ந்து பெருகிவரும் குடும்பத்துக்கு

ஏதாவது பெரியம்மா உதவுவாள் என்கிற நம்பிக்கை தான் அவளை ரயிலேற்றி அனுப்பி இருக்கிறது.

ஊர் நெருங்கிக்கொண்டிருந்தது. தொலைவில் கோபுரத்தின் உச்சியில் சுடர்விடும் மின்விளக்கு நன்றாகத் தெரிய ஆரம்பித்துவிட்டது. பாலாற்றங் கரையும், ஓங்கி வளர்ந்த பனைமரங்களும், அப்படியே தான் இருந்தன.

சங்கரி ஜன்னலுக்கு வெளியே எட்டிப் பார்த்துக் கொண்டே வந்தாள். பாலாற்றின் வெண் மணலைப் பார்த்ததும் அவளுக்கு மறுபடியும் எண்ணங்கள் எங்கோ சென்றன.

பாவாடை கட்டிக்கொண்டு மேலே சட்டைகூட இல்லாமல் நாலைந்து பெண் குழந்தைகளுடன் ஆற்றங் கரைக்குக் கிளம்பிவிடுகிறாள் சங்கரி. எல்லாரும் மணலில் துழாவித் துழாவி கூழாங் கற்களைப் பொறுக்குகிறார்கள். கீழே பஞ்சுப் பாதங்கள் சிவப்பதைக்கூட அவர்கள் பொருட்படுத்துவதில்லை. சங்கரியும் அழகழகான குண்டுக் கற்களாகப் பொறுக்கி மடியில் கட்டிக் கொண்டு வீடு திரும்புகிறாள்.



பெரியப்பா குதிரைச் சவுக்குடன் வாசல் திண்ணையில் உட்கார்ந்திருக்கிறார். வெய்யிலில் காய்ந்த தலை எண்ணெய் வற்றி காற்றில் பறக்கிறது. வியர்வைப் பெருகி வழிந்து முகமெல்லாம் கருத்துபோயிருக்கிறது.

'இங்கே வாடி குட்டி...'

பெரியப்பாவின் கையிலிருக்கும் சவுக்கைவிட அவர் கண்கள் பயங்கரமாக இருக்கின்றன.

'மடியிலே என்ன?'

'வந்து, வந்து...'

'என்ன வந்து வந்து...ஊர் சுற்றப் போனாயா?'—குதிரைச் சவுக்கு வெற்றுடம்பில் படிரென்று ஒரு தடவை சொடுக்கிவிட்டு ஓய்ந்தது.





ஒரே ஒரு தடவைதான். இப்பொழுது சங்கரி தன் குழந்தைகளை விசிறிக் காம்பால் வெளுத்து வாங்குகிறாள்! வரித் தழும்பாக வயிற்றில் கோடு போட்டாற்போல் இருந்ததைப் பார்த்ததும் சங்கரியின் அழுகை ஓயவே இல்லை. அப்புறம் ஊரிலிருந்து தகப்பனார் வந்தார், அழைத்துப் போக.

பெரியம்மாவுக்குமட்டும் அவளை அனுப்பவே மனமில்லை.

'இரவல் எல்லாம் சொந்தமா என்ன? போனால் போகட்டும்!என்றுசொல்லி விட்டார் பெரியப்பா.

கல்யாணம் கார்த்திகை நடந்தது. இருவரும் வந்திருந்தார்கள். பெரியப்பாவிடம் அவள் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. வளைகாப்புக்கு தகப்பனார் அக்கறை காட்டவில்லை. பெரியம்மா என்ன கூறினாளோ? திடும் என்று பெரியப்பா வந்து அழைத்துப் போனார். திரும்பவும் ஏனென்று கேட்கவில்லை.

அவள் உடம்பின் மேலே விழுந்த அடி இதயத்துக்குள்ளும் பலமாக விழுந்துவிடவே, அந்தப் பக்கம் பத்து வருஷங்களாக எட்டிப் பார்க்கவில்லை.

பெரியப்பாவைப் பற்றி நன்றாக அறிந்தவள்தான். அந்த ஓர

வஞ்சனையும், கொடுமை நிறைந்த சொற்களும் அவளுக்கு மனப் பாடம் ஆனவைதான்.

இருந்தாலும், மனிதர் மரணத்தை நோக்கி அடி அடியாக முன்னேறுகிறார். அந்தக் கம்பீரம், அதட்டும் குரல், உடனே காட்டும் பரிவு, திரும்பவும் அகங்காரம் எல்லாம் ஒடுங்கிவிட்டதாம். எலும்புக் கூட்டிற்குள் உயிர்தான் ஊசலாடிக் கொண்டிருக்கிறதாம். ஒரு வாய், இரண்டு வாய் பால்தான் ஆகாரமாம்.

சங்கரி ஜன்னலுக்கு வெளியே இருந்து முகத்தை இழுத்துக் கொண்டு திரும்பியவுடன் அவள் விழிகள் நீரை உதிர்த்தன. கோபுர விளக்கு முன்னைவிட அதிக ஒளியுடன் அவள் முன்னே நின்றது.

ரயிலும் ஊருக்கு வந்துவிட்டது. வானமெங்கும் திரண்டிருந்த கருமேகங்கள் சடசடவென்று பொழிய ஆரம்பித்து விட்டன. அந்தச் சின்ன ஊரில் ஒதுங்கக்கூட இடமில்லை. ரயிலடிக்கு வெளியே பூதாகாரமாக ஓங்கி வளர்ந்திருந்த தூங்கு மூஞ்சி மரங்களின் கீழே இரண்டு மாட்டு வண்டிகள் இருந்தன. அதே வண்டிக்கார கிழவன்தான். அவனும் கூனிக் குறுகித்தான் போயிருக்கிறான். இருந்தாலும், உழைப்பை விடவில்லை.

'ஊரே மாறவில்லையே!' என்று அதிசயித்தபடி வண்டிக்காரனைக் கூப்பிட வண்டியின் உள்ளே பார்த்தாள். கிழவன் நன்றாகத் தூங்கிக்கொண்டிருந்தான். வண்டியின் கூண்டின் மேலே சினிமா விளம்பரம் பெரிய அளவில் ஒட்டப்பட்டிருக்கிறது. 'ஊர் முன்னேறிதான் இருக்கிறது. சினிமா வந்திருக்கிறதே!' என்று வாய்விட்டுச் சொல்லிக்கொண்டே கிழவனை எழுப்பினாள்.

கிழவன் அவளை மறந்துவிட்டிருந்தான். அவளும் அவனுக்குத் தன்னை நினைவுபடுத்த விரும்பவில்லை. புடைவையைப் பிழிந்துவிட்டுக் கொண்டு வண்டியில் ஏறினாள்.

பழைய கடை வீதி, புதிதாக வந்திருக்கும் சினிமாக் கொட்டகை எல்லாவற்றையும் தாண்டி பெரியப்பாவின் வீட்டு வாசலில் வண்டி போய் நின்றது.

பெரியம்மா லாந்தரைத் தூக்கிப் பிடித்தபடி அவள் முகத்தை உற்றுப் பார்த்தாள்.

'சங்கரியாடி? வாடி அம்மா வா. எங்களை எல்லாம் உனக்கு நினைவு இருக்கிறதோ?' என்று விசாரித்தாள்.

'ஊஹூம்... நினைவு இருக்குமா எனக்கு? மறந்துதான்விட்டேன்' சிரித்தபடி சொல்லிவிட்டு உள்ளே சென்றாள் அவள்.

ரேழித் திண்ணையில் பெரியப்பா படுத்திருந்தார். அவளிடம் யார் யாரோ வந்து சொன்னது அவ்வளவும் உண்மைதான். அத்தனை பெரிய படுக்கையில் எத்தனையூண்டு உடம்பு?

'பெரியப்பா! நான் வந்திருக்கிறேன் உங்களைப் பார்க்க.'—நெஞ்சம் தழதழக்கக் கூறினாள் சங்கரி.

'வந்திருக்கிறாயா அம்மா? நீ வருவாய் என்று எனக்கும் தெரியும். இவள்தான், நீ வரமாட்டாய்; பணக்காரியாகிவிட்டாய், அப்படி இப்படி என்று ஓயாமல் குற்றம் சொல்லிக்கொண்டே இருக்கிறாள்...'

சங்கரிக்குப் பெரியப்பாவின் பரிவையும், அன்பையும் நம்பவே முடியவில்லை.

'ஆமாம்...சொன்னேன். மனிதர்கள் வேண்டியிருந்த காலத்தில்

உனக்கு வேண்டியிருந்தது. எட்டிப் பார்த்தாயா, ஏனென்று கேட்டாயா?'

மேலும், மேலும் வெளியில் பெய்த மழையைவிட சொல்மழையின் தாக்குதல் அதிகமாகத்தான் இருந்தது. ஈரப் புடைவையுடன் நிற்பவளை பெரியம்மா கவனிக்கவேயில்லை.

சங்கரி உள்ளே சென்று உடை மாற்றிக்கொண்டு வந்தாள். பிறகு பெரியப்பா ஆரம்பித்துவிட்டார். 'குழந்தை வந்திருக்கிறாள். நான் என்னவோ பிழைக்கப் போவதில்லை. இத்தனைச் சாமான்களும், அதுவும், இதுவும் உனக்கு வேண்டுமா என்ன? வேண்டியதை வைத்துக்கொண்டு வேண்டாததைக் கொடு...'

பெரியம்மா முகத்தைத் திருப்பிக்கொண்டு உள்ளே போய்விட்டாள்.

அவளுக்கு அவரைப் பிரியப் போகிற வேதனையில் எல்லாமே வேண்டியிருந்தது. தேய்ந்து போன வெண்கலச் செம்பு, ஓட்டைத் தகரப்பெட்டி, காது ஒடிந்த வாணலி, வளையம் போன தூக்குச் செம்பு.

இவைகளைப் பெரியப்பா 'உபயோகமில்லை. கடையில் போட்டு உனக்கு வேண்டியதை வாங்கிப் போ' என்கிறார். முன்பு மனம் வராமல் இருந்த பெரியப்பா தான் சொல்கிறார்!

பெரியம்மா எல்லாவற்றையும் தனக்கு வேண்டும், தனக்கு வேண்டும் என்று எடுத்து வைத்துக் கொள்கிறாள்.

ஆயிற்று; சங்கரி வந்து நான்கு நாட்களுக்குமேல் ஆகிவிட்டது.

'இன்று காலை வண்டிக்குப் புறப்படுகிறேன்' என்று இருவரிடமும் சொல்கிறாள்.

'ஏனம்மா! பத்து நாட்கள் இருக்கிறமாதிரி வரக் கூடாதா?' பெரியப்பாவின் ஏக்கம் இது.

'குழந்தை குட்டிகளை விட்டு விட்டு இவ்வளவு வந்ததே மேல். புறப்படட்டும்...'—பெரியம்மாவின் பதில் இது.

வெற்றிலைத் தட்டில் நாலு காய்ந்த வெற்றிலையும், இரண்டு பாக்கும், இரண்டு மஞ்சளும் வைத்து எடுத்து வருகிறாள் பெரியம்மா.

ஏதாவது ரவிக்கைத் துண்டு கிண்டு? ஊஹூம்...ஒன்றையும் காணோம்...

'பெரியப்பாவின் வைத்தியத்துக்கே பணம் போதவில்லை; அதனால் உனக்கு ஒன்றும் தர முடியவில்லை...'

'பரவாயில்லை. உங்கள் ஆசி போதும்...'

'ஏண்டி! ஒரு ரூபாயாவது வைத்துக் கொடேன்...'

பெரியப்பா ஈனமாக இழுக்கிறார்.

பெரியம்மாவின் காதில் விழுந்தால்தானே?

ரயிலில் ஜன்னல் ஓரத்தில் உட்கார்ந்த சங்கரி வானத்தைப் பார்க்கிறாள். ஒரே நீலமாக மாசு மறுவற்று இருக்கிறது. அவள் மனமும் தெளிந்துவிட்டது.

பெரியப்பாவைப் பார்த்தாகி விட்டது. பெரியம்மா மாறி இருப்பதிலும் நியாயம் இருக்கிறது. உலகில் அவளுக்கு எல்லாமுமாக இருந்த அவரைப் பிரியப் போகும் துயரில், மற்ற எல்லாவற்றையும் இறுகப் பிடித்துக்கொண்டு தேற முயற்சிக்கிறாள்போலும்.

பாவம்!

நீண்ட பெருமூச்சுடன், ரயிலும் இரைந்துகொண்டு ஓடியது.

★

தார்மு பாட்டி ஐந்தாறு நாட்களாக கங்கையில் ஸ்னனம் பண்ணப் போக முடியவில்லை. வ.ழியில் இருக்கிற ஹனுமானைத் தரிசனம் பண்ண முடியவில்லை. மாட்டுப்பெண் குஞ்சரிக்கு ஒத்தாசையாகக் காய்கறி நறுக்கி, அரிசி உளுந்து அரைத்து எதையுமே செய்ய முடியவில்லை. சிவனே என்று படுத்துக் கிடந்தால் போதும் போல் ஆகிவிட்டது. அடுத்த அறையிலிருந்த காமுப் பாட்டி வந்து தர்மு பாட்டியின் அருகில் நிற்கிருள். புருவங்கள் கூட, நாசி விடைக்க தர்மு பாட்டி இழுத்து இழுத்து மூச்சு விடுகிருள்.

''ஏண்டி குஞ்சரி! என்னியிலேந்து இப்படி இருக்கா?'' என்று கேட்கிருள் காமுப் பாட்டி.

''நேத்தியிலேந்து..''

''பேசருளோ?''

''ஹூம்.. அப்பப்போ என்னவோ 'காவேரி, காவேரி'ன்னு சொல்லிண்டிருக்கார்...''

அறைக்குள் தர்மு பாட்டியின் பிள்ளை கணேச சாஸ்திரிகள் எட்டிப் பார்த்து விட்டு, ''கங்கைக் கரைக்கு வந்து இந்த ஹனுமான் கட்டத்துலே அம்மா ஐம்பது வருஷமா வாழ்ந்திண்டிருந்தும் காவேரிக் கரையைப் பத்தியே நினைச்சுண்டிருக்கா போல இருக்கு.. அவளும் எவ்வளவோ பயபக்தியா கங்கையிலே தினம் தினம் தான் முழுகிஞ.. இருந்தாலும்.....'' என்று இழுத்துவிட்டு வெளியே நடக்கிருர்.

குஞ்சரிக்கு மாமியாரின் ஒத்தாசை இல்லாமல் வேலையே ஓடவில்லை. அடுப்பில் ஏதோ தீய்ந்த வாசனை வருகிறது.

# கங்கையில் சிறந்த...



சரோஜா ராமமூர்த்தி

காசி யாத்திரை வந்த சிலர் முன்னாடியிருந்த அறைகளில் தங்கியிருக்கிறார்கள். அவர்களுக்கு சாப்பாடு இவர்கள் வீட்டில்தான்.

''பட்டணத்துலேந்து வந்திருக்கா. ஸ்னானம் பண்ண கங்கைக்குப் போயிருக்கா. வந்ததும் காப்பி குடுத்துடு. பதினொரு மணிக்கு மேல் பூஜை ஆனதும் சாப்பாடு போட்டால் போறும். நான் கேதார் கட்டத்துக்குப் போயி காய்கறி வாங்கிண்டு வந்துடறேன்'' என்றவாறு கணேச சாஸ்திரிகள் கிளம்புகிறார். பின்னாடியே அவர் பெண் பாலா, ''அப்பா! நானும் வரேம்ப்பா..'' என்றபடி கிளம்புகிறது.

''இந்தா! இந்த சனியனைக் கூப்பிடு. ஒரு இழவும் உனக்குத் தெரியலே. அம்மாவானா ஒரு அதட்டல் போட்டு இதை அடக்கி வைப்பா.''

குஞ்சரி சிரித்தபடி பெண்ணின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டே, ''டாக்டரை வேணா கூட்டிண்டு வாங்கோ. எனக்கு என்னவோ பயமாயிருக்கு..''

''அம்மாவுக்கா? டாக்டரா? நன்னா பாத்துப்பளே வைத்தியம்! விஸ்வேஸ்வரனை விட்டா வேறு வைத்தியம் என்னத்துக்குன்னு சொல்லிண்டிருக்கிறவ. விஸ்வேஸ்வரம் போய் தரிசனம் பண்ணாமல் பச்சைத் தண்ணி பல்லிலே குத்தமாட்டா. அவளுக்கு டாக்டரை அழைச்சுண்டு வந்து காமிங்கிறியே. அவ நம்பிக்கையை நாம்ப பழிக்கிற மாதிரி ஆயிடக்கூடாது பார்.''




பாலா அழுதுகொண்டே அவர் கூடப் போயிற்று. தயிர்க் கடையில் விருந்தினர்களுக்குத் தயிர் வாங்கி வைத்து விட்டு அப்புறமாக கேதார் கட்டத்துக்குப் போகலாமென்று ஹரிச்சந்திர ரோடுக்குப் போனார் சாஸ்திரிகள்.

கங்கை பிரவாகமாகப் பெருகிக் கொண்டிருந்தாள். ஹரிச்சந்திர கட்டத்துக்குள் பிரவேசித்து காமகோடீஸ்வரர் ஆலயத்து மதில் சுவரில் மோதிக் கொண்டிருந்தாள்.

அதோ, அந்த மேட்டின் மேலே பெரிய மரத்தடியில் 'திகுதிகு' வென்று ஓர் உடல் எரிந்து கொண்டிருந்தது. குபீரென்று நிணவாடையும் நெய்ப் புகையும் அவர் மூக்கைத் துளைத்தது. எத்தனையோ ஆண்டுகளாக—அவர் சிறுவனாக இருந்தது முதல்—இந்தக் காட்சியைப் பார்த்தவர்தாம். காசியில் உடலின் நிலையாமையை உணருவதற்கென்ற ஹரிச்சந்திர கட்டமும், மணிகர்ணிகை கட்டமும் ஊரோடு இணைந்தே இருப்பதையும் பார்த்தவர். சில சமயங்கள் உடல் எரிவதை வேடிக்கையாகப் பார்த்திருக்கிறார். சில நேரங்களில் பயத்துடன்

பார்த்திருக்கிறார். அப்புறமாக அது பழகிப் போய் விட்டது. லட்சியம் பண்ணுமல் போகிறதும் உண்டு.

இன்று அவர் மனத்தில் பயத்தின் நிழல் தோன்றியது. 'அம்மா ஒருவேளை போய் விடுவாளோ! அவளையும் இந்த மாதிரி வைத்துவிட்டு.'— கணேச சாஸ்திரிகள் பரபரவென்று கேதார் கட்டத்தின் பக்கமாக நகர்ந்தார்.

கூடை நிறைய பிஞ்சுப் புடலங்காய் களும் பாகற்காய்களும் வாங்கிக்கொண்டு வீட்டுக்கு வந்தபோது குஞ்சரி ஒரு குழந்தைபோல ஓடி வந்து, ''அம்மா கண்ணை முழிச்சிண்டிருக்கார். காப்பிகூட இரண்டு வாய் சாப்பிட்டார்'' என்றாள்.

''நீதான் கிடந்து பயந்தே. அவ உசிரு கெட்டி. இன்னும் எத்தனை கங்கா ஸ்னனம் பாக்கியிருக்கோ! எல்லாத்தை யும் முடிச்சிண்டுதானே கரை ஏறணும்?''

காமுப் பாட்டி கங்கையில் ஸ்னனத்தை முடித்துக் கொண்டு ஈரப் புடவையோடு மறுபடியும் தன் சிநேகிதியை வந்து பார்க்கிறாள்:''ஏண்டி குஞ்சரி! கொஞ்சம் தெளிவா இருக்காளே. ஏதானும் வயித்துக்குக் குடுத்தியோ?''

''உம்..காப்பி சாப்பிட்டார்.''

**'கங்கா தரங்க ரமணீய ஜடாகலாபம்**
**கௌரீ நிரந்தர விபூஷித வாமபாகம்'**

என்றபடி காமுப் பாட்டி ஈரப் புடவை யைப் பிழிந்து உலர்த்திக் கொண்டே மேலும் சுலோகத்தைச் சொல்லியபடி அறையைத் தாண்டிப் போனாள்.

''அடியே காமு!'' என்று தீனமான குரலில் அழைத்தாள் தர்முப் பாட்டி.

''ஏண்டி தர்மு!''

''ஐப்பசி இன்னிக்கித்தானே பொறந்தது?''

''ஆமாம்.. துலா ஸ்னனம் பண் ணிட்டு வரேன். உனக்குத்தான் ஒடம்பு முடியலையே! பேசாமக் கட..''

''துலா ஸ்னனமா? கங்கை இங்கே எங்கே இருக்கா? காவேரியிலே போய்ச் சேர்ந்துட்டா. ஹி..ஹி..''

கணேச சாஸ்திரிகளுக்கு இப்போது புரிகிறது; அம்மா காவேரிக் கரை ஊருக்குப் போக விரும்புகிறாள் என்று.

ஆமாம்.. காவேரிக் கரை ஊரிலே காவேரி ஒருத்திதான் இவளை வாவென்று கூப்பிட நிரந்தரமா, ஆதங்கமா இருக்கிறவள். மற்ற பங்காளிகளின் உபத்திரவம் பொறுக்காமல்தானே அம்மா சின்ன வயசிலே என்னைக் கையிலே பிடிச்சுண்டு, ஓலைப் பெட்டியிலே இரண்டு புடவைகளோடும், தகர டப்பாவிலே கொஞ்சம் சமையல் சாமான்களோடும் காசியைப் பார்க்கக் கிளம்பினவள். அப்புறமா அவர்களுக்கும், இவளுக்கும் ஒரு பிடிப்பும் இல்லே. அந்தப் பக்கத்திலே யிருந்து யார் வந்தாலும் இவள் எதைப் பற்றியும், ஏன் காவேரியைப் பற்றிக் கூடப் பேசுவதில்லே.

இந்த வாராணசி தலம் ஒன்றே தன்னையும், தன் மகனையும் வாழ வைக் கும் என்கிற நம்பிக்கையுடன் இருந்தாள். எத்தனை உழைப்பு? எத்தனை எத்தனை கஷ்டங்கள்? கணேச சாஸ்திரிகள் அத்யயனம் பண்ணி விட்டுப் புரோகிதம் ஆரம்பித்த பிறகுகூட அவள் உழைப்பு ஓயவில்லே.

நாளடைவில் பிள்ளைக்குத் தானும், தனக்குப் பிள்ளையும் என்று இருந்தவள், 'தனக்குப் பிள்ளை என்பது நியாயம். பிள்ளைக்குத் துணையாக இன்னொருத்தி வரவேண்டாமா' என்று ஏங்கினாள்.

அவளைப் போல நிராதரவாக எத்த னையோ பேர்கள் அங்கு வசிக்கிறார்கள். ஊர்களின் தொடர்பை அறுத்துக் கொண்டு, காசியில் சுபிட்சமாக வாழலாம் என்கிற நம்பிக்கையுடன் வந்த குடும்பத்தில் குஞ்சரி வளர்ந்து வந்தாள். கொஞ்சம் அசடு. பெண்களுக்கு அதீத மான சமர்த்து வேண்டாம் என்பாள் தர்முப் பாட்டி.

கணேச சாஸ்திரிகள் குஞ்சரியைக் கல்யாணம் பண்ணிக் கொண்டார். கணேச சாஸ்திரிகளின் இலையில் பரிமா றிக் கொண்டிருந்த குஞ்சரி, கணவனைப் பார்த்து, ''ஆமாம், உங்களுக்கு புடலங் காய் கூட்டு ரொம்பப் பிடிக்கும்னு அம்மா சொல்வாரே. ஏன் சரியா சாப்பிடலே? அம்மா பண்ற மாதிரி மணமாக இல்லையா?''என்று கேட்டாள்.

''அம்மாதான் மணமாகச் சமைக்க ஒனக்குக் கத்துக் குடுத்துட்டாளே. அதெல்லாம் இல்லே. திடீல்னு அம்மா காவேரிக் கரையை நெனச்சுண்டிருக் காளே. நாம அங்கேயெல்லாம் எங்கேடி போறது இப்போ?''

''போகத்தான் வோணும். நேக்குக் கூட ஆசையா இருக்கு. நான் காவேரியே பார்த்ததில்லே. நம்ப கங்கையைவிடப் பெரிசா இருப்பாளா? முங்கி முங்கி ஸ்னனம் பண்ணலாமோல்லியோ?''

''அசடு, அசடு'' என்று சிரித்தார் சாஸ்திரிகள்.

''கங்கை எங்கே, காவேரி எங்கே? அவ ஒரு மாதிரி, இவ ஒரு மாதிரி. எனக்கும் மறந்து போச்சு.''

''நேக்கு நன்னு நெனவு இருக்குடா. சிந்தாமணி படித்துறைப் பிள்ளையார் கோவில் சுவத்திலே ஏறி 'தொபீல் தொபீல்'னு நீயும் பதினெட்டாம் பெருக்கன்னைக்கு குதிப்பே. அப்படியே என் வயித்தைக் கலக்கும்.''

''ஏம்மா, காலமே 'புஸ் புஸ்'னு மூச்சு முட்டிண்டு கிடந்தே. இப்போ காவேரி வர்ணனை பிரமாதமா இருக்கே. சித்தே தூங்கு..''

முற்றத்திலே காய்ந்து கொண்டிருந்த வெயில் தாழ்வாரத்துக்கு ஏறிக் கொண்டிருந்தது. பெட்டி படுக்கையோடு ஓர் ஆணும் பெண்ணும் கணேச சாஸ்திரிகளின் வீட்டில் நுழைந்தார்கள்.

''யாரு?'' என்று கேட்டார் சாஸ்திரிகள்.

''நான்தான் காவேரி. உன் ஒண்ணு விட்ட பெரியம்மா பொண். செரத்தை யார் (சிறிய தாயார்) இருக்காளோ? என்னைத் தெரியலையாடா கணேசா?''

பெரிய சுமங்கலியாய் வாய் கொள்ளாச் சிரிப்புடன், உடன் பிறந்த பாசத்தைவிடப் பெரிய பாசத்துடன் 'கணேசா' என்று உரிமையுடன் அழைத்த அந்த அம்மாளை உற்றுப் பார்த்தார் சாஸ்திரிகள். தர்மு பாட்டி படுக்கையில் எழுந்து உட்கார்ந்தாள்.

''யாரு, காவேரியா? அடியே அம்மா, உள்ளே வாடி! ஒன்னைப் பார்த்து எத்தனை வருஷமாச்சு? என்னை- எங்களை நெனவு வச்சுண்டு வந்திருக்கியே—அதுதான் உன் ஆத்துக்காரரா? மாப்பிள்ளையை ஒக்காரச் சொல்லேண்டா. அடியே குஞ்சரி! இவ உன் நாத்தனார். நமஸ்காரம் பண்ணு....''

ஊர் விஷயங்கள் பேசினார்கள். தர்முப் பாட்டியின் அக்கா காலமாகி விட்டாளாம். ''அதுக்குக்கூட நீ வரலையே சித்தி...?''

''நான் எதுக்குடி வரணும்? அன்னைக்கு என்னை இப்படி தேசாந்தரம் போகாதேன்னு யாராவது தடுத்தாளா? பொறந்தவா ஒரு நாளைக்குப் போகத் தானே வோணும்?''

''அம்மா! நீ செத்தே வாயை மூடிண்டு படுத்துக்கோ. நாப்பத்தஞ்சு வருஷத்து சமாசாரங்களை உடனே பேசிப்பிடணுமா? காலமே நீ இருந்த இருப் பென்ன? போயிடுவேன்னு பார்த்தேன்'' என்று சத்தம் போட்டார் சாஸ்திரிகள்.

தர்முப் பாட்டி மௌனமானாள். ''இன்னும் எத்தனையோ கொள்ளை கொள்ளையா சமாசாரங்கள் இருக்கே. வாயை மூடிக்கோன்னுட்டான்'' என்று பொருமியபடி படுக்கையில் சாய்ந்தாள்.

காவேரி தான் கிளறிக் கொண்டு வந்திருந்த திரட்டுப்பாலை எடுத்து வந்து சித்தியிடம் கொடுத்தாள். ''ஆத்துப் பால்லே கிளறினது. கொட்டில் நெறய பசுவும், எருமையுமா இருக்கு..''

''ஒனக்கு?''

''ஒண்ணுமில்லே. போகாத கோயில் இல்லே. குளிக்காத தீர்த்தமில்லே. பண்ணின பாவத்தைப் போக்கலாம்னு கங்கையைத் தேடிண்டு வந்திருக்கேன்.''

''பாரேன், பொறக்கப் போறது. கணேசனுக்கு நீ ஒரு வயசுதானே மூத்தவ. நாப்பத்திரெண்டுதானே ஆறது?''

தம்பதி இருவரும் கயைக்குப் போய் வந்தார்கள். பிரயாகைக்குப் போய் வந்தார்கள். ஊருக்குக் கிளம்புவதற்குள் தர்முப் பாட்டி பழையபடி கம்பை ஊன்றிக் கொண்டு வளைய வரலானாள்.

''சித்தி! என்னோடு வாயேன். துலா மாசமா இருக்கு. காவேரி ஸ்னானம் பண்ணுவியாம்'' என்று கூப்பிட்டாள் காவேரி.

''ஆமாண்டி! போன வாரம் கெடக்கச்சே அதே நெனவா இருந்தது. இவனைக் கேட்டா என்ன சொல்லுவானோ?''

கணேச சாஸ்திரிகள் உள்ளே வந்து கொண்டிருந்தார்.

''என்னவாம்? உன் சித்தி காவேரியைப் பார்க்கக் கிளம்பறாளாக்கும்.. ஹூம்..வயசாறது. கங்கைக்கரைன்னு நான் நெனச்சுண்டு இருக்கேன். இவளானா காவேரி காவேரின்னு பறக்கிறா..''

''இந்தத் துலா மாசம் முப்பது நாளும் கங்கை அங்கே போயிடறாடா. எத்தனையோ வாசிச்சிருக்கே. உனக்கு இது புரியலையே?''

''ஐம்பது வருஷமா..'' என்று எதையோ ஆரம்பித்தவர், 'டக்'கென்று நிறுத்தினார்.

''அப்ப அழைச்சண்டு போயேன். முடிஞ்சா நானும், குஞ்சரி குழந்தையோட இந்த மாசக் கடைசியிலே ஒரு பயணம் வரோம்...''

தர்முப் பாட்டி இல்லாமல் காமுப் பாட்டி மிகவும் கஷ்டப்பட்டாள்:

''ஏண்டா கணேசா, அவளை இந்த வயசுக் காலத்திலே அங்கே அனுப் பிச்சே?'' என்று தினம் அவரைக் கேட்டுக்கொண்டே யிருந்தாள்.

'ஆமாம். அம்மா போன வாரத்திலே கிடந்த மாதிரி கண்ணை மூடிண்டு கெடந்தா, சட்டென்று அந்தக் கிழப் பிராணன் போயிட்டா நாமகூடப் பக்கத்தில் இல்லையே' என்று நினைத்துக் கொண்ட கணேச சாஸ்திரிகள், குஞ்சரி குழந்தையை விட்டு விட்டு திடுமென்று தெற்கே போக ரயில் ஏறினர்.

ஊரிலே பலத்த மழை பெய்து கொண்டிருந்தது. வயற்காட்டில் இரண்டு மைல்கள் நடந்தாக வேண்டும். வழியிலே காவேரி நொப்பும் நுரையுமாக ஓடிக் கொண்டிருந்தாள்.

மெல்ல இருட்டுப் பிரிந்து வெளிச்சம் பரவிற்று. ஊரின் எல்லையை அணுகியவ ருக்கு எதிர்ப்பட்ட ஒருவரிடம் காவேரி யின் கணவன் பெயரைச் சொல்லி அந்த வீட்டின் விலாசம் கேட்டார்.

''எங்கேயிருந்து வரேள்?''

''காசியிலேந்து—''

''காவேரியோட சித்தி பிள்ளையா?''

''ஆமாம்....''

''இதைத்தான் பகவத் கிருபைங் கிறது.''

''ஏன்... ஏன்...?''

''உங்க அம்மா ராத்திரி காலம் ஆயிட்டா. படுக்கையிலே படுக்கலே; காவேரி ஸ்னனம் பண்ணிட்டு ஜபதபங் களை முடிச்சுண்டு சாப்பிட்டுட்டு ரேழித் திண்ணையிலே உக்கார்ந்தபடி இருந்தவ கிழே சாஞ்சுட்டா. அப்புறமா நெனவு இல்லே. ராத்திரி போயிட்டா. நான் பக்கத்தூர் தபாலாபீசுக்குப் போறேன் உங்களுக்குத் தந்தி குடுக்க. நீங்களானு எதிர்லே நிக்கறேள்.''

கங்கையில் புனிதமாய காவேரிக் கரையில் தாயின் உடல் தகனமாவதை வெகு நேரம் இமைக்காமல் பார்த்துக் கொண்டே நின்றார் கணேச சாஸ்திரிகள்.

'துலா மாசத்துலே கங்கைதான் காவேரிக்கு வந்துடறுளே' என்று அவர் வாய் முணுமுணுத்தது.



மாற்றம் என்பதே இல்லாமல் ஒரே மாதிரியாக இருந்து தொலைக்க வேண்டிய தலையெழுத்து சிலவற்றிற்கு உண்டு! அதில் ஒன்று தபால் பெட்டி!

முதல் தபால் பெட்டியை உருவாக் கியவர் அந்தோணி ட்ரோலோப் என்ற ஆங்கிலேயர். இங்கிலாந்தில் 1852-ம் ஆண்டிலிருந்து அவர் உரு வாக்கிய தபால் பெட்டிகளை உபயோ கிக்க ஆரம்பித்தார்கள். பிறகு 1857-ல் கப்பலில் முதல் தவணையாக ஐம்பது தபால் பெட்டிகள் இந்தியா வுக்கு வந்து இறங்கின. சில சிறிய மாற்றங்களைத் தவிர அதே தபால் பெட்டியின் அமைப்புத்தான் இன்று வரை இருப்பது.

தபால் பெட்டியில் மட்டும் 'இம்ப் ரூவ்மெண்ட்' என்பதைச் செய்யவே முடியாதா என்ற கேள்வி எல்லோ ருடைய மண்டையைக் குடைய, 1972-ல் ஐ. ஐ. டி. (பம்பாய்) தயாரித்து அளித்த ஒரு புது டிசைன் நன்ருக எளிமையாக இருப்பதாக முடிவு செய்யப்பட்டது. அதை யொட்டி 1972 சுதந்திர தினத்தன்று டில்லியில், முதல் பதினைந்து புது தபால் பெட்டிகள் நிறுவப்பட்டன. பிறகு, உ. பி-யிலும், மகாராஷ்டிரா விலும் 119 பெட்டிகளுக்குத் 'திறப்பு விழா' நடந்தேறியது. அதோடு சரி!

பழைய மாடல் தபால் பெட்டி யைத் தயாரிக்க ரூ. 320 செல வாகும். புது 'டிசை'னுக்கு 400 ரூபாய் தேவைப்படுகிறதாம். இந்த புது மாடல் தபால் பெட்டிகள் வெற்றிகரமாக நடைபாதைகளில் நிற்கத் தடையாக இருப்பது இந்த விலை வித்தியாசம் ஒரு முக்கிய காரணமாம்.

—ஸயன்ஸ் டுடே



ஜன்னலின் திரைச் சீலையை நீக்கிவிட்டு ருக்மிணி அடுத்த வீட்டைப் பார்த்தாள். சுதா எப்படியும் பகல் சாப்பாட்டுக்கு வீட்டுக்கு வந்துதான் ஆக வேண்டும். என்ன அவசரமான கால்ஷீட்டாக இருந்தாலும் பகலில் அவள் தன் கணவனுடன் சேர்ந்து சாப்பிடுவதையே விரும்புகிருள். ருக்மிணிக்குத் தெரிந்த விஷயம். இருவரும் அடுத்தடுத்த வீடுகளில் வசிப்பதால் ஏற்பட்ட நட்பு அல்ல அவர்களுடையது. அரிச்சுவடி வகுப்பிலிருந்து காலேஜ் வரை ஒன்ருகப் படித்தவர்கள். ருக்மிணி தனக்குத் திருமணம் ஆனவுடன் சுதாவைத் திருமணம் செய்து கொள்ளும்படி கூறி வற்புறுத்தி செயலில் நடத்தியும் வைத்தாள்.

ருக்மிணியும், சுதாவும் பள்ளிக்கூட நாடகங்களில் ஒன்ருக நடித்தவர்கள். ஆனல், நடிப்பைப் பொறுத்தவரை சுதாவுக்குத்தான் முதல் மார்க். குரலினிமையிலும், இசையிலும் திறமையானவள் ருக்மிணி.

சுதா திடும்மென்று தன் தோழியிடம் ஒரு நாள் தான் திரைப் படங்களில் நடிக்கப் போகும் செய்தியை வெளியிட்டாள். என்ன தான் ருக்மிணி முன்னேற்றக் கருத்துக்களுக்கு ஆதரவு அளிப்பவளாக இருந்தாலும் 'ஷாக்' அடித்தாற்போல் சில நிமிடங்களுக்கு ஒன்றும் பேசத் தோன்ருமல் நின்ருள்.

''என்னடீது? ஒரே மௌனம்?'' என்று சுதா அவள் தோள்களைப்பற்றி உலுப்ப வேண்டியிருந்தது.

''அப்பா...உன் அப்பா சரீன்ருராடீ?'' என்று கேட்டு வைத்தாள். சுதாவுக்கு இந்தக் கேள்வி பிடிக்கவில்லை. அவள் அப்பாவைப் பற்றி இப்படியொரு கேள்வியைத் தன் தோழி கேட்டு வைத்ததும் பிடிக்கவில்லை.

# சௌபாக்யவதி சுதா

இம்மாதிரியான விஷயங்களுக்குத் தன் முழு ஆதரவையும் அவர் எப்போதுமே அளித்து வருகிறவர் ஆயிற்றே! இதென்ன அசட்டுக் கேள்வி வேண்டிக் கிடக்கிறது!

''உன் அபிப்பிராயத்தைச் சொல்லித் தொலையேண்டி ருக்கு. அதை விட்டுட்டு அப்பா குப்பான்னு எதுக்குக் குட்டை குழப்பறே?''

''என் அபிப்பிராயத்தைக் கேட்டா, பள்ளிக்கூட, காலேஜ் நாடகங்களிலேருந்து நீ ரிடையர் ஆகிவிடேன். சினிமா கினிமான்னு எதுக்குடீ? நான் அதைப்பற்றி மட்டமா நினைக்கலே. இருந்தாலும், நம்ப ஜனங்களுடைய மதிப்பு சினிமாவைப் பத்தி உசரணும்.

அதை ஒரு பொழுது போக்குன்னு நினைக்கறதைவிட அதை ஒரு கலைன்னு மதிக்கணும். அந்த மதிப்பிட்டில் அது உயரும்போது தாராளமா யார் வேண்டுமானாலும் நடிக்கலாமேடி...''

சுதா சிரித்து விட்டுப் போய் விட்டாள். அதன் பிறகு பத்து நாட்களுக்குள் சுதா நடிக்கப் போகும் படத்தைப்பற்றி விளம்பரம் பத்திரிகைகளில் வந்தது. சில மாதங்களில் நடித்த படங்களும் திரைக்கு வந்தன. ருக்மிணியும் தன் ஆருயிர்த் தோழிக்கு ஆற்ற வேண்டிய கடமையில் கண்ணும் கருத்துமாக இருந்து, தன் கணவர் மூலமாக நல்ல வேலையில் இருக்கும் ஒருவனைத் தேடி சுதாவுக்கு மணமுடித்து வைத்தாள்.

''நடிப்பு உன் மனத் திருப்திக்காகவாவது இருக்கட்டும். இல்லை....உன்னை அறியாமல் அது உன்னைக் கவர்ந்து விட்டது என்றுவது இருக்கட்டும். நீ ஒரு குடும்பப் பெண், மணமானவள் என்கிற பெயர் உனக்குப் பெரிய கவசமாக இருக்குமடி...'' என்றாள் ருக்மிணி.

சுதாவும் அவள் கணவன் ரவியும் இப்போது சேர்ந்து சிரித்தார்கள்.

சுதா இப்போது திரைவானில் சுடர்விடும் தாரகை. பல பட்டங்களும், புகழ் மாலைகளும் அவளைத் தேடி வந்து கொண்டேயிருக்கின்றன. அவள் எவ்வளவுதான் புகழ் ஏணியின் உச்சியில் இருந்தாலும், சமீப காலமாக அவள் அடிக்கடி ஏற்று நடித்து வரும் ஒரு பாத்திரத்தைப் பற்றிய உறுத்தல் ருக்மிணியைக் கலங்க வைத்தது. வெள்ளைப் புடவையும், வெறிச்சோடிப் போன நெற்றியும், வெளுத்துப் போன முகமுமாக அந்த 'விதவை'ப் பாத்திரத்தில் சுதா பிரமாதமாக நடிப்பதாகப் பத்திரிகை சாற்றலாம். ரசிகர்கள் வரவேற்று மகிழலாம். அந்தப் பாத்திரத்தில் நடிப்பதால் ஏற்படும் புகழ்மாலைகள் சுதாவைத் திணற அடிக்கலாம்.

## ஸரோஜா ராமமூர்த்தி

ஆனால், பாரத நாட்டுப் பெண்கள் எந்த ஒரு கோலத்தைக் கற்பனையிலும் விரும்ப மாட்டார்களோ அதை இவள்....

ருக்மிணி ஜன்னலில் புதைத்திருந்த முகத்தைத் திருப்பிக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டாள். பட்டும் படாததுமாகப் பூசப் பட்ட மஞ்சள் பூச்சின் நடுவே நெற்றியில் ஒளிரும் குங்குமம். இரண்டு மூக்கிலும் சுடர் விடும் மூக்குத்திகள், மஞ்சள் கயிறு பசும் பொன்னால் குளிப்பாட்டிய மாதிரி மஞ்சள் பூச்சுடன் கழுத்தில் மின்னியது. இந்த மங்களகரமான தோற்றத்தையே ஒவ்வொரு பெண்ணும் மகிழ்ந்து வரவேற்று, பெறற்கரிய பாக்கியமாக அல்லவா கருதுகிறார்கள். இந்த அசடு மட்டும் ஏன் வெள்ளைப் புடவையும்,



கழுத்தும், கைகளும், முகமும் வெறிச்சோட நடிக்க வேண்டும்? 'பயித்தியம்...பயித்தியம்...' என்று முணுமுணுத்தாள் ருக்மிணி.

தெருவில் இவள் வீட்டுக்கெதிரே காரின் ஒலி 'பாம் பாம்' என்று முழங்கியது. ருக்மிணி பார்வையை வாசற் பக்கம் திருப்பினாள். சட்டென்று துணுக்குற்றது அவள் மனம். சுதா 'ஸ்டீயரிங்' கைப்பற்றியபடி வெள்ளைப் புடவையும், பாழும் நெற்றியும், மூளிக் கழுத்துமாக உட்கார்ந்து சிரித்துக் கொண்டிருந்தாள்.

''ஏய் ருக்கு! வீட்டுக்குள்ளே உட்கார்ந்துண்டு என்னடி செய்கிறாய்? உன்னுடையவர்தான் 'காம்ப்' போயிருக்கிறாரே. வாயேண்டி கதவைப் பூட்டிக் கொண்டு! கொஞ்சம் என்னோடு 'கம்பனி கீப்' பண்ணேன் சாப்பாட்டில்!''

ருக்மிணியின் முகம் கோபத்தால் சிவந்து விட்டிருந்தது. எண்ணெய் தேய்த்து முழுகிய தலையைக் கோடாலி முடிச்சிட்டு, அம்பாளின் நிர்மால்யப் பிரசாதமாகிய பிச்சிப் பூச்சரத்தை முடிச்சின் மீது சுற்றி யிருந்தாள் ருக்மிணி. நெற்றிக் குங்குமத்துடன் வகிட்டுக் குங்குமம் போட்டி போடுவது போல் வகிட்டில் சிவந்து படர்ந்திருந்தது. காலைச் சாப்பாட்டுக்கு அப்புறம் தரித்துக் கொண்டிருந்த தாம்பூலத்தின் சிவப்பு அதரங்களைப் பவழங்களாக்கி யிருந்தன.

''ஜிலுங்...ஜிலுங்...'' என்று சதங்கை மெட்டிகள் தாளமிட வரிந்து கட்டிய சேலையைப் போர்த்தியவாறு வெளியே வந்தாள் ருக்மிணி. இன்னமும் அவளுக்குத் தோழி மீது கோபம்தான்! முகம்தான் கடுகைப் போட்டால் வெடிக்கிறாற்போல் சிவந்து ஜொலிக்கிறதே!

சுதா கன்னம் குழியச் சிரித்துக் கொண்டே தோழி மீது உராசியபடி காரைக் காம்பவுண்டுக்குள் செலுத்தினாள். கார் கதவைச் சாத்தியவள் தோழியின் கழுத்தில் கையைப் போட்டு அணைத்தபடி ''அடேயப்பா! தேவிக்கு என்ன கோபம் இன்றைக்கு? ஒரே ரத்த வர்ணமாக இருக்கிறதே எல்லாம். அரக்குப் புடவை, சிவப்புக் கல் தோடுகள், வாயில் வெற்றிலைச் சிவப்பு வேறே, முகத்திலே கோபச் சிவப்பு! அடேயப்பா!....'' என்று கேலி செய்தாள் சுதா.

## நன்றி...



விக்டோரியா மகாராணியார் பேரன் எட்வர்டுக்கு மாதா மாதம் செலவுக்குப் பணம் அனுப்புவது வழக்கம். பேரன் அதிகச் செலவு செய்வதாக அவர் காதில் விழுந்தது. பணம் கேட்டு எழுதிய கடிதத்துக்குத் தம் கைப்பட பேரனுக்குப் புத்திமதிகள் சொல்லி ஒரு கடிதம் எழுதினார்.

சில நாட்களுக்குப் பிறகு பதில் வந்தது ''நன்றி. உங்கள் கடிதத்தை ஒரு பெரிய மனிதருக்கு ஐம்பது பவுனுக்கு விற்று விட்டேன்'' என்று எழுதி இருந்தார் எட்வர்ட்!

---

ருக்மிணி பட்டென்று தோழியின் கரத்தைக் கழுத்திலிருந்து நீக்கி வீசினாள்.

''சும்மா கிடடி! நீயும் உன் பரிகாசமும்! உன்னைப் பார்க்கச் சகிக்கவில்லை! தரித்திரம் பிடிச்ச மாதிரி. நீயும் உன் முகரக்கட்டையும்!''

'டைனிங் டேபிள்' மீது சமையற்காரி இன்னொரு வெள்ளித் தட்டைக் கொண்டு வந்து வைத்து தம்ளரில் தண்ணீர் வைத்தாள்.

''தட்டை எடுத்துப் போங்கள் அம்மா. இவளோட என்ன சாப்பாடு வேண்டியிருக்கிறது எனக்கு!'' என்று ருக்மிணி எரிந்து விழவும், அந்த அம்மாள் நடுங்கிப் போய் விட்டாள்.

''முதலில் இந்தக் கோர உருவத்தை மாத்திக்கோடி. போய் லட்சணமா நெற்றிக்கு இட்டுக்கோ...கழுத்திலே.. அதாண்டி திருமங்கல்யம்...அதை வெளியே எடுத்துப் போட்டுக்கோ போடி. இத்தனை பணமும், புகழும் அதன் சௌபாக்கியத்தில் அடங்கியிருக்கிறதடி. பாவம், அவர்...உன் வீட்டுக்காரர் நூறு வயசு நன்றாக இருக்கணும்...கண்றாவி சகிக்கவில்லை....''

சுதா கல கலவென்று சிரித்தாள்.

''ஓஹோ! இவ்வளவுதானா விஷயம்? இதெல்லாம் நாமாக ஏற்படுத்திக் கொள்கிற நம்பிக்கைகள் ருக்கு. கொஞ்ச நேரம் நான் நெற்றியில் பொட்டு வைத்துக் கொள்ளவில்லையென்றால், அவருக்கு என்னவாகி விடும்! பிறப்பு, இறப்பு இரண்டும் ஆண்டவன் வகுத்த வழி. எனக்கு சாப்பாட்டுக்கு அப்புறம் திரும்பவும்




அமெரிக்காவில் உள்ள வர்ஜீனியாவில் ஒரு பாங்கில் வாரா வாரம் கொள்ளை நடக்கிறது. துப்பாக்கி முனையில் காஷியரிடமிருந்து பணம் மூட்டை மூட்டையாகக் கொள்ளைக்காரர்களால் எடுத்துச் செல்லப்படுகிறது. ஆனால் யாரும் இதைத் தடுத்து நிறுத்துவதாகக் காணோம்!

இந்த பாங்கி, அமெரிக்காவின் துப்பறியும் துறையான எப். பி. ஐக்குச் (Federal Bureau Of Investigation) சொந்தமானது. அனுபவம் மிக்க இன்ஸ்பெக்டர்கள், இக்கொள்ளையை நடத்திய பின், சில தடயங்களை விட்டுச் செல்வார்கள். பயிற்சிக்காக வந்திருக்கும் இன்ஸ்பெக்டர்கள் அந்தத் தடயங்களைத் தாங்களாகவே கண்டு பிடித்து, அவற்றின் மூலம் குற்றவாளிகள் பற்றிய துப்புகளைத் துலக்க வேண்டும்.

இந்த முறையில் தேர்ச்சி பெற்றவர்கள் தாம், பிற்காலத்தில் பயங்கரமான பாங்கிக் கொள்ளைக்காரர்களை யெல்லாம் கண்டு பிடித்து இருக்கிறார்களாம்!

"அணி"

'கால்ஷீட்' இருக்கிறது. மேக்கப்பைக் கலைச்சால் திரும்பிப் போட்டுக் கொள்ள நேரமாகி விடும்...'' என்றவாறு சாப்பிடலானாள் சுதா.

அவளுடைய மதியச் சாப்பாடு இரண்டு சப்பாத்திகள், கூட்டு, பழரசம், மோர் இவ்வளவுதான். வீட்டில் பிரத்யேகமாக இரண்டு வகைகள் சமைக்கப்பட்டிருந்தன. வெண் பொங்கல், சர்க்கரைப் பொங்கல் என்று. அரிசிச் சாப்பாடு சாப்பிட்டால் உடம்பு பருத்து விடுமாம்!

ருக்கு ஒன்றும் அதிகமாகச் சாப்பிடவில்லை. சாப்பிட்டதாகப் பெயர் பண்ணினாள். இதற்குள் சுதாவின் கணவன் ரவி வந்து விட்டான். நல்ல உயரமும், பருமனும் கொண்ட அவன் ஷோக்குப் பேர்வழி என்பது தெரிந்தது. காதவழிக்குப் பவுடர், செண்டின் மணம் குப்பென்று வீசியது.

''ஹலோ சுதா!'' என்றவன் ருக்மிணியின் பக்கம் திரும்பி பவ்யமாக ''வணக்கம் அம்மா.....பார்த்து நாளாச்சே'' என்று விசாரித்தான்.

ருக்மிணியும் அடக்கமாகச் சிரித்தாள். பதிலுக்கு, ''சௌக்யந்தானே! நான் வீட்டில்தான் இருக்கிறேன், உங்களைத்தான் பார்க்க முடியவில்லை'' என்றாள். 'சுதாவின் அந்தத் தோற்றத்தை ரவி எப்படி ரசித்திருக்க முடியும்? ரசித்தானா, அல்லது கவனிக்கவே இல்லையோ? வாழ்க்கையில் நல்லவற்றை ரசிப்பதற்கே நேரமில்லாத போது, நல்லவை அல்லாதவற்றை ரசிப்பானேன் என்று ஒதுங்கியும் இருக்கலாம் அல்லவா?' ருக்மிணி சிந்தித்தாள்.

''சுதா! நீ ஸ்டுடியோவுக்குப் போக வேண்டுமே. என்னோடு வாயேன்..... உன்னை 'டிராப்' செய்துவிட்டுப் போகிறேன்...''

ருக்கு இருவரிடமும் விடை பெற்றுக் கொண்டு தன் வீட்டினுள் நுழைந்து அதே ஜன்னலின் ஓரத்தில் போய் நின்று கொண்டாள்.

சுதாவின் அருகில் ஆஜானுபாகுவாக உட்கார்ந்திருக்கும் ரவியைப் பார்த்தாள். 'பாவம், அவன் நன்றாக இருக்க வேண்டும். ஒரு வேளை தன் கணவன் இவ்வளவு நன்றாக இருப்பதால்தான் இத்தனை அலட்சியமோ இவளுக்கு?' என்று நினைத்தாள் ருக்மிணி. அந்த நினைவுச் சுழலில் சிக்கியிருந்தவள், சுதா சிரித்தபடி தன் தந்தக் கரங்களை வீசி இவளுக்கு 'டாடா' காண்பித்ததை கவனிக்கவே இல்லை! அவள்தான் 'சுதா சௌபாக்யவதியாக இருக்க வேண்டும் கடவுளே' என்று அரற்றிக் கொண்டிருந்தாளே!

சுதாவின் பாங்கிக் கணக்கில் பணமாகக் குவிந்தது. அவளைப்பற்றி ஒரே புகழ்மாலைகள். ஒன்றில் விதவைத் தாயாக நடித்தாளாம். அதற்குப் பாராட்டுகள். மற்றதில் விதவைச் சகோதரி. இன்னொன்றில் விதவைக் காதலி! அப்புறம் சீர்திருத்த விவாகம்...இப்படி.

ருக்மிணி இப்பொழுதெல்லாம் அவளுக்கு அறிவுரைகள் கூறுவதில்லை. ஏதாவது சொன்னால் ''இவையெல்லாம் அர்த்தமற்ற குழப்பங்கள், நாமே வகுத்துக் கொண்ட நம்பிக்கைகள்'' என்று சிரித்துக் கேலி

செய்பவளிடம் என்ன பேச்சு வேண்டியிருக்கிறது? அத்துடன் ருக்மிணி தன் கணவனுடன் கன்னியாகுமரி வரைக்கும் க்ஷேத்ராடனம் போயிருந்தாள். குமரி முனையிலிருந்து திருச்செந்தூர், திருவனந்தபுரம் போய்விட்டுத் திரும்பி ராமேஸ்வரம் வந்தார்கள். புயலும், வெள்ளமும் பிரளய தாண்டவம் ஆடி ஓய்ந்த அந்தத் தீவில், மறுபடியும் திட்டுத் திட்டாகக் குடிசைகளும், கட்டடங்களும் முளைக்க ஆரம்பித்திருந்தன.

ஆலய மண்டபத்தில், இயற்கை கோர நடனம் புரிந்தபோது மக்கள் அடைக்கலம் புகுந்த கதையைச் சிலர் கூறினார்கள். "பேய்க் காற்று, கடலின் கொந்தளிப்பு, எத்திசையில் பார்த்தாலும் இருள். எந்த நிமிஷமும் நாங்கள் ஜல சமாதியாகி விட்டிருக்கலாம். 'ராமநாதா! பிரபோ!' என்று முழு மூச்சுடன், இதயங்கலந்த தாபத்துடன், நம்பிக்கையுடன் இவனிடம் சரண் புகுந்தோம்...எப்படியோ இன்று காப்பாற்றப்பட்டு இருக்கிறோம்" என்று உணவு விடுதி மூதாட்டி உணவைப் படைத்துக் கொண்டே ருக்மிணியிடம் கூறினாள். நம்பிக்கை எத்தனை பெரிய காரியத்தைச் சாதித்து விட்டது? இந்த நம்பிக்கையைச் சுதா துச்சமாக உதறி விட்டிருக்கிறாள்.

ஊர் திரும்பியதும் அதிர்ச்சிதரும் செய்தியைக் கூறினாள் சுதாவின் வீட்டு சமையற்காரி. மாடி அறையில் ரவி உயிருக்கு மன்றாடிக் கொண்டு படுத்திருக்கிறானும். ஏதோ மலை வாசஸ் தலத்தில் படப் பிடிப்பாம். இருவரும் போயிருந்தார்களாம். விஷ ஜுரம் இருவரையும் தொற்றிக் கொண்டது. சுதா மீண்டு விட்டாள். ரவிதான்..... சந்தேகமாக இருக்கிறதாம்.

ருக்மிணி வேகத்துடன் சுதாவைப் பார்க்க வந்தவள், வெறுப்புடன்தான் அவளை அணுகினாள்.

"ஏய் சுதா! எழுந்திரு...இப்படி தரித்திரம் பிடித்த வேஷம் போடாதே என்று எத்தனை தடவை முட்டிக் கொண்டேன். எந்த ஒரு கோலத்தை நம் பெண்கள் மனமாற வரவேற்பதில்லையோ, அதைக் காசுக்காகப் போட்டுக் கொண்டு, உன் மனச் சாட்சியை நீயே சிதைத்துக் கொண்டாய். நம் பண்பாட்டுக்குப் புறம்பானது எதையும் நாம் கலை யென்று கௌரவிக்க வேண்டியதில்லை என்று எத்தனை தடவை உனக்குச் சொல்லியிருக்கிறேன்?..."

சுதா ருகமிணியை வெறித்தபடி பார்த்துக் கொண்டிருந்தாள்.

டாக்டர், அவர் திறமை, வைத்திய வசதிகள், பணத்தின் செழிப்பு யாவுமே தோற்று விடுமோ? தான் கலைக்காகப் போட்டுக் கொண்ட வேஷம் நிரந்தரமாகத் தங்கிவிடுமோ? ஆஹா! என்ன பயங்கரமான சோதனை? வேஷம் என்கிற அளவில்

---

## "மிஸ்டர் அவர்கள்"



நகைக்கத் தக்க அளவு, அன்னியர்கள் இந்தியர்களின் பெயர்களைச் சித்திரவதை செய்கிறார்கள் அல்லவா? இந்தியப் பெயர்களை அன்னியர் எவ்வாறு கெடுக்கிறார்கள் என்பதற்கு இதோ ஓர் உதாரணம் :

பாரிஸ்டர் பரீட்சையில் தேறியவர்களின் பெயர்களைக் கூப்பிடும் பொழுது, சேலம் பாரிஸ்டர் ஆதிநாராயண செட்டியார் அவர்களை "மிஸ்டர் அவர்கள்" என்று அழைத்தார்களாம் லண்டனில்!

ஆதாரம் :

தமிழ்ப் பெரியார்கள்—வ. ரா.

தகவல் :

புஷ்பா ஸ்ரீநிவாஸ்.

அதை வேடிக்கையாகவும், விளையாட்டாகவும் ஏற்றுக் கொள்ள முடிந்தது.

"ருக்கு! ருக்கு! நீ எனக்குத் தோழி மட்டுமில்லை. மூத்த சகோதரி போன்றவள். எனக்கு ஒன்றும் தோன்றவில்லை ருக்கு. என்னை என்ன செய்யச் சொல்லுகிறாயோ செய்கிறேன். இந்தச் சோதனையிலிருந்து நான் மீண்டால் போதும்..." இருவரும் அமைதியாகப் பூஜை அறையை நெருங்கினர். அங்கே கடவுளின் முன்பாக சுதா என்ன பிரதிக்ஞை எடுத்துக் கொண்டாளோ?

முகத்தில் தீவிரம் பொங்க அவள் அறையை விட்டு வெளியே வந்தாள். உண்மையான, மனப்பூர்வமான வேண்டுகோளைக் கடவுள் அங்கீகரிப்பது போல ரவி படிப்படியாகத் தேறி வந்தான்.

அவன் உடம்பு சற்று தேற வேண்டும் என்று காத்திருந்தாற்போல் பட முதலாளிகள் சுதாவைத் தங்கள் தங்கள் படங்களில் நடிக்க ஒப்பந்தம் செய்ய வந்தார்கள். ஒரு நடிகை குறிப்பிட்ட பாத்திரம் ஒன்றில் சோபித்து பண வருலுக்குக் காரணமாக இருந்தால், திரும்பத் திரும்ப அதே பாத்திரத்தில் அவளை நடிக்க வைப்பதற்காக ஒரே மாதிரிக் கதையைப் பல தினுசாக மாற்றி எழுதி எடுத்து வந்திருந்தார்கள் அவர்கள்.

சுதா கதையைப்பற்றியோ எதைப் பற்றியோ கவலைப்படவில்லை. இத்தனை காலமாகத் துச்சமாக 'விதவை'யாக நடித்தால் என்ன என்று கருதியவள், அந்தப் பாத்திரத்தைப்பற்றிக் கேட்டவுடன் நடுங்கினாள், மறுத்தாள்.

பத்திரிகை உலகத்திற்கு, பட முதலாளிகளுக்கு, அவள் கணவன் ரவிக்கு, ரசிகப் பெருமக்களுக்கு அவளுடைய மறுப்பு ஒரு புதிராக இருந்தது.

ருக்மிணிக்கு மட்டும் அது புதிராக இல்லை. ஏனென்றால், அவள் சௌபாக்யவதி சுதாவாகத் திகழ வேண்டும் என்று ருக்மிணி விரும்பியது நிறைவேறி விட்டது.

திரை உலகுக்கு அந்த இழப்பு வேதனையாக இருக்கலாம்.

சுதாவின் மனத்துக்கு தீர்க்க சௌமங்கல்யம் என்பது வற்றாத செல்வம், லாபம் என்றே தோன்றியது.

# பறித்த தாமரை

**ஸரோஜா ராமமூர்த்தி**

ஏரிக்கரைக் கிணற்றிலிருந்து குடிதண்ணீர் எடுத்துக்கொண்டு வீட்டுக்குள் வந்தாள் நர்மதா. அடுப்பிலே பால் பொங்கி வழியக் காத்திருந்தது. சுரு சுரு என்று பாத்திரத்தின் மேல் விளிம்பு வரையில் அது பொங்கி யெழுந்து மறு நிமிஷம் அடுப்பில் வழியத் தயாராக இருந்தது. குடத்திலிருந்து ஒரு கை தண்ணீரை எடுத்துப் பாலில் தெளித்து அதன் கோபத்தைத் தணித்தாள் அவள். ஆனால் அவள் நெஞ்சம் படிப்படியாகக் கோபத்தின் உச்சியில் ஏறி உட்கார்ந்து கொண்டது.

வாசல் அறையில் அண்ணா சம்பத்தும், மன்னி சுஜாவும் அடிக்கும் கொட்டம் அவள் கோபத்தீயில் நெய்யைப் பொழிந்ததுபோல் இருந்தது. வாழா வெட்டியாக, கணவன் இருந்தும் வாழ்வை இழந்தவளாக காலை மலர்ந்து நடுப்பகலிலேயே கருகிப் போனவளாக நர்மதா தன் தமையன் வீட்டுக்கு வந்து நான்கு மாதங்கள் ஆகி இருந்தன. அவள் வந்த பிறகு சுஜாவுக்கு வேலை செய்யவேண்டிய நிர்ப்பந்தமே இல்லாமல் போய்விட்டது.

அண்ணாவும், மன்னியும் எழுந்திருப்பதற்கு முன்பே எழுந்து காப்பிப் போட்டு, சமையலுக்கும் ஆரம்பித்து விடுவாள் அவள். சாப்பாடு முடிந்ததும் சம்பத்து காரியாலயம் சென்றுவிடுவான். சுஜாவுக்கு எப்பொழுது பார்த்தாலும் தூக்கம். காலை பத்து மணிக்குப் படுத்தால், மாலை சூரியன் மேற்கே சென்று விழும் வரையில் கனவுகள் கண்டவாறு தூங்கிக்கொண்டேயிருப்பாள். கனவுகள் யாவும் இன்பக் கனவுகள்! கேட்பானேன். எழுந்திருக்க மனமின்றி தலையணையில் படுத்துக்கொண்டே பாதி விழிப்பும், பாதி தூக்கமுமாக இருப்பதுதான் அவள் வேலை. மாலை மஞ்சள் வெயில் படர்ந்துவரும்போது எழுந்திருந்து சிற்றுண்டி அருந்திவிட்டு, தலைவாரிப் பின்னி அலங்காரம் செய்துகொண்டு கணவன் வருகைக்காகக் காத்திருப்பாள். சம்பத்தின் கையில் ஒரு புஷ்பக் கடையே வீட்டுக்கு வரும். கனகாம்பரம், கதம்பம், ஜாதி மல்லிகை முல்லைச் சரம் என்று எட்டணாவுக்குப் பூ வாங்கி வருவான் அவன். அதில் ஒரு துணுக்கைக் கிள்ளி தன் நாத்தியிடம் கொடுத்துவிட்டு, நிலைக் கண்ணாடியின் முன் அமர்ந்து அடுக்கடுக்காகத் தன் குழலில் சூட்டிக்கொண்டு அழகு பார்ப்பாள் சுஜா.

அன்றும் அவன் கட்டுப் புஷ்பம் வாங்கி வந்திருந்தான். அத்துடன் அவனாகவே அவளுக்கு அதை அழகு பெற சூட்டிவிட்டான். இதெல்லாம் பெரிய பாக்கியம்தான் அன்புக் கணவன் கையால் மலர் சூட்டிக்கொள்ள ஆசை மனைவி கொடுத்து வைத்திருக்கவேண்டும். வாழ்வில் நிறைவு பெற்றவர்கள் இதைத் தவறாக நினைக்கமாட்டார்கள். பொறாமை படவும் மாட்டார்கள். ஆனால், அடுப்பிலிருந்து பொங்கும் பாலை இறக்கி வைத்த நர்மதா பொங்கும் கோபத்துடன் வாசல் அறையை விழித்துப் பார்த்தாள். அங்கே அண்ணா மன்னிக்குப் பூச்சூட்டும் வைபவம் நடந்துகொண்டிருப்பதைப் பார்த்ததும் அவள் உள்ளம் திகுதிகு என்று தீப்பற்றி எறிவதுபோல் இருந்தது.

குபீரென்று சமையலறையை விட்டுக் கூடத்துக்கு வந்து குப்புறப் படுத்துக்கொண்டு தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தாள் அவள். அந்த விசும்பலின் ஒலி சுஜாவின் காதில் அவலக்ஷணமாக ஒலித்தது. வெளியே பர பரவென்று வந்து நின்று பார்த்து விட்டு திரும்பவும் தன் அறைக்குள் விரைந்தாள்

அவள். சற்று நேரம் அங்கே வாக்கு வாதம். சிறு மனஸ்தாபம்; போலி அழுகை; ஊடல்; பிணக்கு எல்லாமே நிகழ்ந்தன ஒரு கதம்பக் காட்சியைப் போல.

நர்மதா தானகவே அழுகை தேறி எழுந்து உட்கார்ந்தாள்.

## 2

மூன்று நாட்களுக்கு அப்புறம் எங்கள் தெருவோடு சென்ற குதிரை வண்டியில் ஒரு அம்மாள் உட்கார்ந்திருந்தாள். சம்பத்தின் வீட்டில் வண்டி நின்றது. மூட்டை முடிச்சுகளுடன் அந்த அம்மாள் வீட்டுக்குள் சென்றதையும் நான் பார்த்தேன். அந்தக் குடும்பம் எங்கள் ஊருக்குக் குடி வந்து ஐந்தாறு மாதங்களே ஆகியிருந்தன. மகளையும், மருமகளையும் வைத்து விட்டு அந்த அம்மாள் — வெங்கு லக்ஷ்மி வெளியூருக்குச் சென்று விட்டாள். இரண்டு மாதங்கள் வரையில் தினம் ஒரு சினிமாவும், வாரம் தவருமல் கடற்கரை என்றும் புதுத் தம்பதிகள் தெருவோடு போவதைப்பார்த்திருக்கிறேன். திடீரென்று ஒரு நாள் ஏதாவது கதைப் புத்தகம் இருக்குமா என்று கேட்டு என்னைத் தேடி வந்தாள் சுஜா. பிறகும் அவளும் சிறுகதைகள் எழுதுவதாகச் சொல்லிக்கொண்டு ஒரு கதைக் கட்டைக் கொண்டு வந்து என்னிடம் கொடுத்தாள். 'தவறுகள் இருந்தால் திருத்திக் கொடுங்கள்' என்று கேட்டாள். என் கதைகளை வெளியிடும் ஆசிரியர்களின் திண்டாட்டத்தை அவள் கதைகளை நான் படித்த போது என்னல் ஒருவாறு ஊகிக்க முடிந்தது! இப்படி எங்கள் நட்பு மேலெழுந்தவாரியாக வளர்ந்து வரும் போதுதான் நர்மதா ஒரு தினம் நடுப்பகலில் கையில் ஒரு பெட்டியுடன் கொதிக்கும் வெயிலில் தன் தமையன் வீட்டைத் தேடி வந்தாள், பாவியும் வழி நடக்க அஞ்சும் பகல் வேளையில். நர்மதா கால்கள் கொப்பளிக்க, வியர்வை ஆருகப் பெருக, கண்களில் அபரிதமான சோகம் கொந்தளிக்க உலகத்தில் ஏன் பெண்ணுகப் பிறந்தோம் என்று நொந்து கொண்டே எங்கள் வீட்டுப் படியேறி உள்ளே வந்தாள். தமையனின் விலாசம் கேட்டு விசாரித்தாள். போய் விட்டாள். அப்புறம் சில நாட்களுக்கெல்லாம் மன்னிக்கும், நாத்திக்கும் ஒத்துக் கொள்ளவில்லை என்று காதில் விழுந்தது. இந்த அபஸ்வரமான எண்ணத்தை நம் பெண் குழந்தைகளுக்கு நாமே போதிக்கிருேம் என்றுதான் நான் நினைக்கிறேன். மாமியும், மருமக



ளும் ஒட்டமாட்டார்கள். மன்னியும், நாத்தியும் ஒன்றுபட மாட்டார்கள் என்று நாம் பெண் குழந்தைகள் பிறந்த அன்றிலிருந்து பேசிப் பேசி அந்த எண்ணத்தை அவர்கள் மனத்தில் புகுத்தி விடுகிறோம். நமக்குப் புகுத்தியவர்கள் நம் பெரியவர்கள். இது வழி வழியாக வரும் பரம்பரை சொத்தைப் போன்றது.

நர்மதாவும், சுஜாவும் ஒற்றுமையாக இல்லை என்பது ஊரறிந்த செய்தியாகி விட்டது. இந்த சமயத்தில்தான் வெங்கு லக்ஷ்மி அம்மாள் ஊரிலிருந்து வந்தாள். தன் மகளை அழைத்துக்கொண்டு ஒரு தினம் என்னைப் பார்க்க வந்தாள்.

“இந்தப் பெண்ணைப்பற்றி விவரமெல்லாம் உங்களுக்குத் தெரியுமா?” என்று என்னைப் பார்த்துக் கேட்டாள் அந்த அம்மாள்.

நான் ஒன்றும் புரியாமல் விழித்தேன். நான் ஏதும் கேட்காமலேயே அந்த அம்மாள் கூறிய விவரம் இதுதான் :—

“நர்மதா வளர்ந்து மணப் பருவத்தை அடைந்தவுடன் எல்லா பெற்றோர்களையும் போல் அவள் தாயும் நல்ல வரனுக்காக அலைந்து கஷ்டப்பட்டாள். விதவையாகிய அவளால் பெரிய பதவியில் இருப்பவனையோ, பணக்கார வீட்டுப் பிள்ளையையோ தேடிப் பிடிக்க முடியவில்லை. நர்மதாவின் சகோதரனும் உலக அனுபவம் இல்லாதவன். இந்நிலையில் வலுவில் ஒரு சம்மந்தம் அவர்களுக்குக் கிடைத்தது. பிள்ளை பார்ப்பதற்கு லக்ஷணமாக இருந்தான். உடன் பிறந்தவன் ஒருத்தன் மட்டும் அவனுடன் வந்திருந்தான். ஓர் ஆயிரம் ரூபாய் கொடுத்துவிட்டால் எங்காவது கோவிலில் திருமணம் செய்து கொள்வதாக அவர்கள் கூறவே, யாரிடமோ கடன்பட்டு ஆயிரம் ரூபாயை அவர்களிடம் கொடுத்தான் நர்மதாவின் சகோதரன். கல்யாணம் முடிந்தது. சீர் வரிசைகளுடன் நர்மதாவை வெங்கு லக்ஷ்மி புக்ககம் அனுப்பி வைத்தாள்.

அண்ணன் தனக்காகப் பட்ட கடனிலும், தாய் தனக்காக அலைந்த அலுச்சலிலும்தான் தன் இன்ப வாழ்வு ஆரம்பமாகிறதென்று எண்ணியவாறு அன்று கணவனின் அறையில் அடி எடுத்து வைத்தாள் நர்மதா.

வானத்தில் நிலவு இருந்தது. ஆனால், அந்த யுவனின் மனம் இருண்டு கிடந்தது. படுக்கையில் படுத்து நிம்மதியாக அவன் தூங்கிக் கொண்டிருந்தான். நர்மதா ஜன்னல் அருகில் போய் நின்றாள். உலகமே அவளுக்குப் புதுமையாக இருந்தது. வானத்துச் சந்திரன், தாரகைகள், கொடியில் மலர்ந்த மல்லிகை, செம்பிலே மணக்கும் பால், கிண்ணத்தில் தளும்பும் சந்தனம் யாவுமே அவளுக்கு அன்று புதுமையானவைகள் தான்.

நர்மதா தன் கண்களைத் திருப்பி அவனை ஒரு பார்வை பார்த்தாள். சற்று முன் தூங்கியவன் படுக்கையில் எழுந்து உட்கார்ந்திருந்தான். கணவனைப் பார்க்க வெட்கப்பட்டு அவள் தலை கவிழ்ந்து நின்றிருந்தாள்.

“நர்மதா! இங்கே வா. இந்தா இதை வெளியே எடுத்துப் போய்க் காலையில் படி. மறுபடியும் இந்த அறைக்குள் வராதே...” காகிதம்

சுருட்டி எறியப்பட்ட காகிதம் ஒன்று அவள் காலடியில் வந்து விழுந்தது. அதை எடுத்துக் கொண்டு அவள் வெளியேறினாள்.

வானத்து நிலா கொஞ்சங் கொஞ்சமாக மங்கி மறையும் வரையில் அவள் கண்ணீர் பெருக்கியவாறு உட்கார்ந்திருந்தாள்.

கூடத்திலிருந்து கொல்லைப் பக்கம் சென்றவளைப் பார்த்து ஓரகத்தி உதட்டைக் கடித்துக் கொண்டு சமையலறைக்குப் போனாள். கிழக்கு வெளுத்து விட்டது. உலகத்து அக்ரமங்களைப் பார்க்கக் கதிரவன் தோன்றினான். நர்மதா கடிதத்தைப் படித்தாள்.

“பெண்ணே! நான் ஒன்றுக்கும் உதவாதவன். அளவற்ற பாவங்

களின் பயனாக இந்தப் பிறவியை எடுத்திருக்கிறேன். மண வாழ்க்கைக்கு அருகதையற்ற அலி நான்! என்னை மன்னித்து மறந்து விடு''

நர்மதாவின் தேகம் தீப்பற்றி எரிவதுபோல் இருந்தது. நாற்புறமும் தீக் கொழுந்துகள் அவளை உயிருடன் விழுங்க வந்தாற்கூட அவள் இவ்வளவு வேதனை அடைந்திருக்க மாட்டாள். கண்களில் கண்ணீர் பெருக சமையலறையில் இருத்த ஓரகத்தியிடம் கடிதத்தைக் காட்டிக் கதறினாள். அவள் கடிதத்தை வாங்கி ஒன்றும் கூறாமலேயே எரியும் கும்மட்டியில் போட்டுவிட்டு அதன் மீது பால் அடுக்கைத் தூக்கிவைத்தாள்.

வெங்குலக்ஷ்மி அம்மாள் இதுவரையில் கூறிவிட்டுக் கண்ணீர் பெருக்கி என் இரு கைகளையும் சேர்த்துப் பிடித்துக்கொண்டு, ''கல்யாணம் கல்யாணம் என்று நானே அவள் வாழ்க்கைக்கு யமனாக வந்தேனே'' என்று அரற்ற ஆரம்பித்தாள். நர்மதா கற்சிலையாக உட்கார்ந்திருந்தாள்.

''அப்புறம்? பெரியவர்கள் யாரிடமும் இதைப் பற்றி நீங்கள் கூறவில்லையா?'' என்று கேட்டேன்.

''மாப்பிள்ளையின் தமையனிடம் கேட்டேன். அவனுக்கு ஏகப்பட்ட கடன் தொல்லைகள் இருந்தனவாம். அதற்கு தன் தம்பியின் கல்யாணத்துக்கு வந்த ஆயிரம் ரூபாயை உபயோகித்துக் கடனை அடைத்தானாம். உங்கள் பெண்ணை நீங்கள் கூட்டிப் போங்கள். இல்லாவிட்டால் இங்கேயே வீட்டு வேலைகள் செய்துகொண்டு கிடக்கட்டும்'' என்று சொல்லிவிட்டான்.

நான் எந்தவிதமான யோசனையும் கூறமுடியாமல் திகைத்தேன். ஆழங்காண முடியாத பள்ளத்தில் வீழ்ந்து தவிக்கும் அந்தப் பெண்ணைப் பார்த்ததும் வெங்குலக்ஷ்மி அம்மாளின் மீது எனக்குக் கோபம் வந்தது.

மூன்று மணிக்கு சிற்றுண்டி செய்யவேண்டும் என்று சொல்லிக் கொண்டு தாயும், மகளும் போனார்கள்.

## 3

இதன் பிறகு அவர்கள் வீட்டில் சண்டையும், சச்சரவும் அதிகமாகி வந்தது. வயது வந்த பெண்ணொருத்தி மற்றவளின் நிறைந்த வாழ்வைக்கண்டு மெழுகாக உருகி வந்தாள். ஆம்...நர்மதா, சுஜாவின் இன்ப வாழ்க்கையைப் பார்த்து தன் மனத்துள் ஆறாத துயரை அடைந்தாள். பொறாமைத் தீ அவளை நாற்புறமும் சுட்டுப் பொசுக்கியது. உடன் பிறந்தவளின் சந்தோஷத்தை நிறைந்த மனத்துடன் மதிக்கவேண்டிய சகோதரி சீறிப் பெருமூச்செறிந்தாள். சுஜாவின் மலர்ந்த முகத்தைத் தன் அனல் கக்கும் விழிகளால் பார்த்து அப்படியே கருக்கிவிட ஆசைப்பட்டாள். எஞ்சியது விரோதமும், சண்டையும்தான்.

வாழா வெட்டியை வீட்டில் வைத்துக்கொண்டு யாருமே அமைதி காணமுடியவில்லை. வெங்குலக்ஷ்மியால் மகன் பக்கமும் பேசமுடியவில்லை. மகளின் கண்ணீரையும் துடைக்க முடியவில்லை. ஆயுள் காலம் பூராவும் கொடிய வியாதியின் பிடியில் அகப்பட்டவளைப் போல அந்த அம்மாள் தன் வலுவெல்லாம் இழந்து கைகள் நடுங்க, கண்ணீர் சோர நின்றாள். இந்தத் துயரமும் பலஹீனமும் சேர்ந்து அவளை யார் பேரிலும் எரிந்து விழச் செய்தது.

இடையில் ஒரு தடவை நான் அந்த அம்மாளிடம் கூறினேன்:—

''பெண்கள் வாழ்வை இழந்து விட்டாலும், கணவனால் கைவிடப் பட்டாலும் வருந்தி மூலையில் உட்கார்ந்திருக்க வேண்டிய காலமெல்லாம் மறைந்துவிட்டது. அவர்கள் பல துறைகளில் கல்வி கற்று தங்களைத் தாங்களே காப்பாற்றிக் கொள்ளலாம். நர்மதாவை எங்காவது நல்ல பள்ளியில் சேர்த்து விடுங்கள் என்று.

அதற்கு அந்த அம்மாள் கூறிய பதில் என்னை வியப்பில் ஆழ்த்தியது. நான் மனோதத்துவம் படித்

தவன் அல்ல. உடல் இயற் கூறு களைப் பற்றியும் எனக்கு அவ்வள வாகத் தெரியாது.

நர்மதாவுக்கு படிப்பில் அக்கறை இல்லை. அவள் படிக்க வேண்டிய நாட்களிலேயே ஒழுங்காகப் படிக்க வில்லை. அவள் மனம் மண வாழ்க்கையைப் பின்பற்றி நிற் கிறது. அவளுக்குத் தானும் மற்ற பெண்களைப்போல இல்லறம் நடத்தவேண்டும் என்று ஆசை இருக்கிறது'' என்ருள் வெங்கு லக்ஷ்மி. கணவனுடன் சேர்ந்து வாழவேண்டும் என்று அவள் ஆசைப்படுவதில் தவறு ஒன்று மில்லை. முதலில் கட்டிக் கொண் டதுதான் ஒன்றுக்கும் உபயோக மில்லை என்று ஆகிவிட்டதே? அவனை விடுதலை செய்து கொண் டாலல்லவா இன்னெரு கல்யாணம் செய்து கொள்வதற்கு? ஆண் பிள்ளையானல் ஒரு நொடியில் விடுதலைப் பத்திரம் வாங்கிவிட்டு, இன்னெருத்திக்கு ஜாம் ஜாம் என்று தாலி கட்டிவிடுவான். ஒரு பெண்ணுல் என்ன செய்யமுடியும்? விவாகரத்து வேண்டுமானுல் செய் யலாம். வேறெருத்தனை மணஞ் செய்துகொள் என்று முதற் கண வன் எழுதிக் கொடுத்த காகிதத் தைப் பார்த்து யார் நர்மதாவைக் கல்யாணம் பண்ணிக்கொள்ளக் காத்திருக்கிருர்கள்?

"யாராவது யோக்கியமான பையனுக இருந்தால் உங்களவரி டம் சொல்லி ஏற்பாடு பண்ணுங் கள், எங்காவது கோவிலில் கல் யாணத்தை முடித்துவிடுகிறேன்.'' வெங்குலக்ஷ்மி அம்மாள் கண்ணீ ரும், கம்பலையுமாக என்னிடம் கூறி னுள்.

யோக்கியமான பையன்கள் ஆயி ரக் கணக்கில் இருக்கிருர்கள். அவர் கள் கற்பனையில் வளர்ந்து வரும் கன்னிகைகள் எப்படி எப்படியோ இருப்பார்கள். இப்படி ஒருத்தனுல் ஏமாற்றப்பட்ட பெண்ணுக அந்தக் கற்பனைக் கன்னி இருக்க வேண்டு மென்பதென்ன?

நான் தலையை ஆட்டிவிட்டு, வாயை இறுக மூடிக் கொண்டேன். என் இதயத்தில் ஏற்பட்ட துன்ப மும், துயரமும் ஒரு நெடிய மூச்சாக வெளி வந்தது. சற்றைக்கெல்லாம் நர்மதாவின் பேரில் ஆத்திரம் வந் தது.

"இந்த அழகான பெண்ணுக்கு மறு விவாகம் வேறேயா? நல்ல ஆசை? அப்படி என்ன வேண்டி இருக்கிறது?'' என்று நினைத்து நான் ஆத்திரம் அடைந்தேன். பேசாமல் படித்து பிழைப்பைத் தேடிக் கொள்ளக்கூடாதா?

வெங்குலக்ஷ்மி தினம் பகல் வேளைகளில் என் வீட்டுக்கு வரு வதும், திரும்பத் திரும்ப என்னை ஏதாவது கேட்பதுமாகவே நாட்கள் ஓடின. செயல் முறையில் ஒன்றும் நடைபெறவில்லை.

"படித்த பெண்ணுக இருக்கி ருயே. நீயாவது உன் நாத்திக்கு ஏதாவது வழி தேடக்கூடாதா'' என்று சுஜாவைக் கேட்டேன்.

"என்ன வழி இருக்கிறது சொல்லுங்கள். அவளுக்குப் படிப்பு என்ருல் கசக்கிறது. கைத் தொழில் ஏதும் பிடிக்கவில்லை. நம் மைப் போல அவளுக்குப் புருஷன், வீடு ஒன்று இருக்க வேண்டும் என்று ஆசை இருக்கிறது. அதற்கு நான் என்ன பண்ண முடியும் சொல்லுங்கள்'' என்ருள் அந்தப் பெண்.

இதற்குள் அந்த ஊரில் கிளம் பிய வம்புகளும், வதந்திகளும்! அடேயப்பா! இந்த பொல்லாத வம்புகளுக்குத்தான் எத்தனை வேகம்? அவள் மாலையில் அலங்கரித்துக் கொண்டு வாசலில் நிற்பதைப்பற்றி ஆண்கள் தங்கள் ஆபீஸ் 'காண்டீன்' களில் வம்ப ளந்தார்கள். இந்தப் பெண்ணைப் பார்க்கவே சிலர் நண்பர்களைப் பார்க்க வருவது போல் வந்து போனுர்கள். பெண்களைப் பற்றித் தான் சொல்லவே வேண்டாம்.

"வாழாவெட்டிக்குப் பூ என்ன?''

"புருஷனேடு இல்லாமல் வாச னையும், பவுடரும் எதற்கு?''

"கட்டுகிற புடவையெல்லாம் ஓசத்தியான வாயல் புடவை!'' என்று ஒவ்வொருத்தி ஒவ்வொரு

விதமாகப் பேச ஆரம்பித்தாள். நர்மதாவின் காதுகளில் இத்தனைப் பேச்சுக்களும் விழுந்தன. பெண்ணுகப் பிறந்தவள் உயர்வாக நாலு பேரால் மதிக்கப்பட்டு இருக்கப் புருஷன் அவசியம் என்று அவள் மனசில் ஆழமாகப் பதிந்துவிட்டது. ஆகவே, தான் கட்டாயம் கல்யாணம் பண்ணிக்கொள்ள வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டாள்.

நான் அவளைக் கேளாமலேயே சமூக நல போர்டுக்கு ஒரு கடிதம் எழுதினேன். அவர்கள் உடனே பதில் எழுதினுர்கள். 'பெண்ணின் நிலைமை என்னவாளுலும் சரி. விவாக ரத்து விஷயமெல்லாம் கோர்ட்டார் தீர்மானிக்க வேண்டிய விஷயம். அந்தப்பெண்ணுக்குத் தங்களிடம் கல்வி பயில இஷ்டமாளுல் மூன்று வருஷங்களுக்கு அவள் வாழ்க்கையில் யாரும் தலையிடாமல் இருக்க வேண்டும். நாங்கள் ஏற்றுக் கொள்ளத் தயார்'' என்று.

அந்தக் கடிதத்தை நர்மதாவிடமும், வெங்குலக்ஷ்மியிடமும் காட்ட வேண்டும் என்று தீர்மானித்து நான் கிளம்பிக் கொண்டிருக்கையில் வெங்குலக்ஷ்மி புயலைப் போல வேகமாக உள்ளே வந்தாள். அவள் கையில் தினசரி ஒன்று இருந்தது. அதில் ஒரு பக்கத்தில் வந்திருந்த விளம்பரத்தை என்னிடம் காண்பித்தாள்.

'' மைசூர் ராஜ்யத்தைச் சேர்ந்த தனவந்தர் ஒருவருக்கு ஒரு பெண் துணை தேவை. வயது ஐம்பது. அவர் தற்சமயம் 'காஷ்மீர்' என்ற ஹோட்டலில் தங்கி இருக்கிறுர். நேரில் சந்தித்து விவரங்கள் அறியவும். விஷயம் ரகசியமாக இருக்கட்டும் ... ஜலகண்டப்பா ...'' என்றிருந்தது.

ஐம்பது வயதுக்கு மேலே ஆற அமர பெண் துணை தேவை என்று விளம்பரப்படுத்தி இருந்த அந்த தனவந்தர் ஒரு நூதனமான பிறவியாக இருக்க வேண்டும் என்று நினைத்துக்கொண்டேன்.

'' இதோ பார்த்தீர்களா! சமூக நல போர்ட்டிலிருந்து உங்கள் பெண்ணுக்காக எழுதி பதில் வந்திருக்கிறது. இஷ்டமிருந்தால் அங்கே சேர்த்து விடுங்கள்'' என்று கடிதத்தைப் படித்துக் காண்பித்தேன்.

நர்மதா அருவருப்புடன் முகத்தைச் சுளித்துக் கொண்டாள். மகளின் முகத்தைப் பார்த்த தாய் அவசரமாக எழுந்துவிளம்பரம் வந்திருந்த பத்திரிகையையும் எடுத்துக் கொண்டுபோய் விட்டாள்.

பிறகு ஒரு மாதம் வரையில் வெங்குலக்ஷ்மியின் வீட்டார் அங்கு இருந்தார்கள். ஒருதினம் பகல் பன்னிரண்டு மணிக்கு வெங்குலக்ஷ்மியும் நர்மதாவும் திடீரென்று என் வீட்டுக்குள் நுழைந்தார்கள். தாங்கள் மதுராந்தகம் போவதாக அந்த அம்மாள் கூறிஞள்.

'' விளம்பரம் என்ன ஆயிற்று?'' என்று விசாரித்தேன்.

'' ஹீ... ஹீ...'' என்று வெங்குலக்ஷ்மி சிரித்தாள்.

நர்மதா குறுநகை புரிந்தவாறு என்னைப் பார்த்தாள்.

'' என்ன சிரிக்கிறீர்கள்? விளம்பரத்தைப் படித்தா? விளம்பரம் செய்த மனிதனை நினைத்தா? எதற்கு இந்தச் சிரிப்பு?'' என்று கேட்டேன்.

'' உங்களுக்கே இன்னும் கொஞ்சகாலம் போளுல் தெரியும். இன்னும் இரண்டு வருஷங்கள் கழித்து எங்கள் நர்மதாவைப் பாருங்கள். தலையோடு கால் வைரமாகப் பூட்டிக் கொண்டு ஜிலு ஜிலுவென்று காரிலே வந்து இறங்கப் போகிருள்!''

'' அப்படியென்ருல் அந்த ஜலகண்டப்பாவுக்கு இவளைக் கல்யாணம் செய்து கொடுத்து விடப் போகிறீர்களா?''

வெங்குலக்ஷ்மி பதில் கூறுவதற்கு முன் தெருவில் நர்மதாவின் தமையன் வண்டியுடன் வந்து நின்று கூப்பிட்டான்.

அந்தக் குடும்பம் அன்று எங்கள் ஊரை விட்டுப் போனதுதான். பிறகு அவர்களைப் பற்றி ஒரு தகவலும் எனக்கு எட்டவில்லை.

# பறித்த தாமரை

ஸரோஜா ராமமூர்த்தி

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

## 3

குடகிலே பிறந்து தவழ்ந்து குதி நடை போட்டு வந்தாள் அன்னை காவிரி. கண்ணம்பாடியில் எங்கு பார்த்தாலும் ஒரே பசுமை. எப் பக்கம் திரும்பினாலும் கேழ்வரகுக் கொல்லைகள் காற்றிலே அசைந்தாடி களிப்புடன் நின்றன. உலகம் புகழும் 'பிருந்தாவனத்' தோட்டத்தைப் பார்ப்பதற்காக நாங்கள் கண்ணம்பாடி சென்றிருந்தோம். கையிலே கொண்டு போயிருந்த கட்டுச் சாதத்தைப் பிரித்து எல்லோரும் ஒரு மரத்தின் கீழ் உட்கார்ந்து சாப்பிட ஆரம்பித்தோம். அப்பொழுது முதுவேனில் காலம். நன்கு இருட்டிய பிறகுதான் நீர் வீழ்ச்சிகளில் விளக்குகள் போடுவார்கள். சாப்பாட்டை முன்னாடி முடித்துக் கொண்டு விடலாம் என்பது எங்கள் தீர்மானம். எனக்கு மட்டும் அன்று மனசிலே அமைதி இல்லை. ஆழ்ந்த அமைதியுடன் பெருகி ஓடும் அன்னை காவிரியைப் பார்த்தும் எனக்கு நிம்மதி ஏற்படவில்லை. தலையிலே பிசு பிசுத்த விளக்கெண்ணையுடன் கன்னடப் பெண் ஒருத்தி ஒரு உருண்டை சாதத்துக்காக என்னிடம் வந்து கையேந்தினாள். அவள் சாப்பிட்டு ஒருநாள் ஆயிற்று என்று கூறினாள். 'பிருந்தாவனம்' ஹோட்டலிலிருந்து கலீரென்று சிரிப்பொலி கேட்டது. 'சர்வர்'கள் தட்டு தட்டாகக் குளிர்ந்த பானங்களையும், சிற்றுண்டிகளையும் ஏந்திச் செல்வது என் கண்களில் பட்டது. ஒருபக்கம் பசி. ஒருபக்கம் குதிப்பும், கொம்மாளமும் அமர்க்களப் பட்டது.

இருட்டிக் கொண்டே வந்தது. குபீரென்று தீப்பற்றுவது போல் வண்ண விளக்குகள் எரிய ஆரம்பித்தன. ஆஹா... நவரத்தினங்களையும் வாரி இறைப்பது போல அப்படியொரு மகேந்திர ஜாலம் அங்கு பார்ப்பதற்கு ரம்மியமாக இருந்தது. தோட்டத்தில் இறங்கிச் சுற்றிச் சுற்றி வந்தோம். கூட்டங் கூட்டமாக ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் நின்று அந்த வர்ண ஜாலத்தைப் பார்த்து வியந்து கொண்டிருந்தார்கள். எனக்கு அலுப்புத் தட்டி விட்டது. குழந்தைகளை நண்பரின் பொறுப்பில் விட்டு விட்டு அணைக்கட்டின் மீதேறி கிராமத்தில் பழைய மரத்தடிக்கு நானும், என் கணவரும் வந்து சேர்ந்தோம். பிருந்தாவனத்தின் ஒளியை விட்டு வெளியே வந்ததும் இருளின் தன்மை அலாதியாக இருந்தது. தெருக்களில் எரியும் மின் விளக்குகள்கூட வெளிச்சம் இல்லை போல் தோன்றின.

மரத்தின் கீழ் நின்றவாறு துலைவிலே பெருகி நடை போடும் காவிரியைப் பார்த்தேன். அங்கே ஒரு மண்மேட்டின் மீது புள்ளியாக ஒரு உருவம் தெரிந்தது. அந்த உருவம் மெதுவாக கீழே இறங்கி நகர்ந்து நடந்து வருவது தெரிந்தது. தோட்டத்துக்குள் இருந்த இரைச்சலுக்கும், நெரிசலுக்கும் புறம்பாக கிராமத்தில் அமைதி நிலவிக் கொண்டிருந்தது.

அருகிலே வர வர அந்த உருவம் ஒரு பெண் என்பது தெரிந்து போயிற்று. இடுப்பில் எண்ணைச் சிக்கேறிய பழைய புடவையும், பல இடங்களில் கிழிந்து போன ரவிக்கையும், காற்றில் அலைமோதும் கூந்தலும், ஒட்டி உலர்ந்து போன கன்னங்களுமாக அந்தப் பெண் தலையைக் குனிந்தவாறு நடந்து வந்தாள்.

முதுகைச் சற்றே வளைத்து இடது கையை மட்டும் வீசி அவள் நடந்து வந்தது எனக்கு ஏதோ நினைவுக்கு வந்தாற் போல் இருந்தது. பழைய நினைவைத் தூண்டுவது போல

இரண்டு நிமிஷங்கள் கண்களை மூடிக் கொண்டு உட்கார்ந்தேன். சுரீரென்று அவளைப்பற்றி ஓர் எண்ணம் எனக்குள் எழுந்தது. கண்களைத் திறந்து பார்த்த போது நானும், அவளும் நேரடியாகச் சந்தித்துக் கொண்டோம். அவளும் தயங்கி நின்றாள். நான் அவளைக் கூர்ந்து கவனித்தேன்.

"நீ ... நீ ... நர்மதா தானே ?" என்று கேட்டேன்.

"ஆமாம் ... நீங்கள் கதை எழுதுகிற மாமிதானே ?"

"மறந்து விட்டாயா ? இங்கே எப்படி வந்தாய் நீ ?" நர்மதா முத்து முத்தாக கண்ணீர் உதிர்த்தவாறு நின்றிருந்தாள். அவள் உள்ளத்தில் கலந்திருந்த வெம்மை பூராவும் கண்ணீராக வடிவது போல் இருந்தது. அவளே அழுகையை நிறுத்தி விட்டுப் பேசினாள்.

"நான் அன்றே இங்கு வந்து விட்டேன்."

"யாரோடு ?"

"அவரோடு ..."

"யார் ? அந்த ஜலகண்டப்பாவுடனா ?"

அவள் தலையைக் குனிந்தவாறு பரிதாபமாகத் தலையை அசைத்தாள்.

களிப்பை நாடி வந்த நான் கதை கேட்கும்படியாக இருந்தது.

## 4

ஹோட்டல் 'காஷ்மீரி'ன் ஒரு அறையில் உலாவிக் கொண்டிருந்தார் தனவந்தர் ஜலகண்டப்பா. நொடிக் கொருதரம் அவர் ஜன்னல் அருகில் சென்று கீழே தெரியும் ஜனநெரிசலைப் பார்த்துக் கொண்டே இருந்தார்.

அழகான பெண்கள், இளம் பெண்கள், எழில் ததும்பும் நடுத்தர வயது மங்கைகள் இப்படி யாராவது தெருவோடு போவதைப் பார்த்தால் பல்லைக் காட்டித் தமக்குத் தாமே இளித்துக் கொண்டார் அந்தப் பெரிய மனிதர். அடிக்கடி மேஜை அருகில் சென்று கண்ணாடித் தம்ளரில் இருந்த பானத்தைப் பருகி தம் உள்ளத்தின் வெப்பத்தைத் தணித்துக் கொள்ள முயன்றார். அலமாரியைத் திறந்து மல்லிகை 'சேண்ட்' மேலெங்கும் தெளித்துக் கொண்டு, கழுத்தளவு வளர்ந்திருந்த முடியை சீவியவாறு அலங்கார புருஷனாக அவர் காட்சி அளித்ததற்குக் காரணம் இருந்தது. நர்மதாவின் தாயும், தமையனும் அந்த விளம்பரத்துக்குப் பதில் எழுதிப் போட்டார்கள். பதிலும் வந்தது ; தன்னை வந்து நேரே சந்திக்கும்படியாக. எதற்கு என்று கடிதத்தில் ஒன்றும் குறிப்பிடவில்லை.

வெங்குலக்ஷ்மி அம்மாள் நவநதியைக் கண்ட மாதிரி அந்தக் கடிதத்தைக் கையில் வைத்துக் குதித்தாள். அடுத்த நாளே அலுவலகத்துக்கு லீவு எழுதி விட்டு அவன் சமர்த்துப் பிள்ளையும் தாயை அழைத்துக் கொண்டு கிளம்பினான். பணத்தைப் பற்றியும், அது அளிக்கும் சுகபோகங்களைப்பற்றியுமே கனவாகக் கொண்டிருந்தவளின் எதிரில் ஒரு இந்திரபுரியே தோன்றியது. ஹோட்டல் 'காஷ்மீரத்தின்' வழ வழப்பான தரைகளும், வர்ண விளக்குகளும், அறைகளில் காணப்பட்ட போகப் பொருள்களும், கனவு லோகத்தில் உலாவும் காதலர்கள் போல் அங்கு உலவி வந்த ஜோடிகளும் அவள் கண்களை அகல விழிக்கவைத்தன.' மாடி அறையில் உட்கார்ந்திருந்த ஜலகண்டப்பாவிடம் இவர்களை அழைத்து போய் நிறுத்தினான் பணிப் பையன் ஒருவன்.

அவர்கள் உட்கார்ந்த ஆசனத்தைப் போல இந்த ஜன்மத்தில் தன் வீட்டில் பார்க்க முடியாது என்பது வெங்குலக்ஷ்மி அம்மாளின் அபிப்பிராயம். நான்கு பக்கங்களிலும் வெளிர் நீலத்தில் திரை போட்டு வைத்திருந்த கட்டிலின் அழகை ரசித்தபடியே மகன் உட்கார்ந்திருந்தான்.

"என்ன ? நீங்கள் மாத்திரம் வந்திருக்கிறீர்கள் ?" என்று

தொண்டையைக் கனைத்துக் கொண்டு ஆரம்பித்தார் தனவந்தர்.

"ஹீ...ஹீ..." என்று சிரித்தாள் அந்த அம்மாள்.

"முதலில் எங்களுக்கு ஒன்றும் புரியவில்லை. தெரிந்துகொண்டு அவளை அழைத்துவரலாம் என்று வந்துவிட்டோம்..."

"அடே! தேவுடா!" என்று அலுத்துக்கொண்டார் அவர்.

"ஊரிலே ரொம்ப அவசரம். மருமகளுக்கு இது பிரசவ காலம். கூடமாட ஒத்தாசைக்கு வேண்டுமென்றுதான் அப்படி அவசரமாக விளம்பரம் செய்தேன். நீங்களானல்..."

ஜலகண்டப்பாவுக்குக் கோபம் பொத்துக்கொண்டு வந்தது.

"அதெற்கென்ன? மறுநாள் பிறந்து விட்டால் கூடவே அனுப்புகிறோம்..." என்று வெங்குலக்ஷ்மி அம்மாள் அவர் பீரோவைத் திறந்து 'கரன்ஸி' நோட்டுகளை உருவியபோது கூறினாள்.

சுமந்தபோது பாரமாகத் தோன்றாத மகள், பிறந்து வளர்ந்தபோது சுமையாகத் தெரியாத பெண், வெங்குலக்ஷ்மி அம்மாளுக்கு அன்று பெருஞ்சுமையாகத் தோன்றினாள். சரசரவென்று நோட்டுகள் கை மாறின. நான்கு சில்க் புடைவைகளும் ரவிக்கைகளும் பெட்டியோடு அவர்களுடன் வந்தன. தலைநிறைய பூவைத்து அழகுபெற சிங்காரித்துப் புத்தாடை உடுத்தி வளர்த்தவளே பலிக்கு ஆட்டைச் சிங்காரித்து அனுப்புவதுபோல நர்மதாவை பெங்களூர் மெயிலில் ஏற்றி அனுப்பினாள். வாரம் தவருமல் கடிதம் வரும் என்று ஜலகண்டப்பா கூறினார். தன் மருமகள் நிரம்பவும் கருணை உள்ளவள் என்று புகழ்ந்து பேசினார் அவர். நர்மதாவைப் பெண்கள் வண்டியில் ஏற்றிவிட்டு, தாம் மட்டும் இரண்டாவது வகுப்பில் சென்றார் அவர்.

நஞ்சன்கூடின் அருகில் உள்ள கிராமம் ஒன்றில் பெரிய வீட்டில் நர்மதாவை அழைத்துப் போய்ச் சிறை வைத்தார் ஜலகண்டப்பா. அங்கே கர்ப்ப ஸ்திரீ ஒருத்தியையும் காணோம். சமைத்துப் போட ஒரு கிழவியும், அப்பாவியான ஒரு தோட்டக்காரனும் இருந்தார்கள். கிழவி இவளைப் பார்த்ததும் நமுட்டுச் சிரிப்பு சிரித்தவாறு உள்ளே சென்றாள். இம்மாதிரி எத்தனை பெண்களை அவள் பார்த்தவளோ?

பங்களாவின் மாடியிலிருந்து பார்த்தால் தெரியும் குன்றுகளும் வாழைத்தோட்டங்களும், நெளிந்து ஓடும் ஆறும் தவிர, வேறு ஒன்றும் அங்கு தென்படுவதில்லை. கிராமத்து ஜனங்கள் கூடைகளில் தயிர், பால் சுமந்து செல்வது தெரியும். அண்மையில் இருந்த நகரங்களுக்கு அவர்கள் சென்றுவிட்டால் கிராமமே சூன்யமாகத் தோற்றமளிக்கும். இக் காட்சியைப் பார்த்துப் பார்த்து நர்மதாவின் கண்கள் பூத்துப் போயின. பாஷை தெரியாத ஊர். பேச்சுத் துணை யாருமில்லை. ஜலகண்டப்பா அவளைச் சென்னையிலிருந்து அங்கு கொண்டுபோய்ச் சேர்த்தவுடன், அன்றே அவசரமாக சிவசமுத்திரம் சென்றுவிட்டார். தலைக்காட்டிலிருந்து ஒரு குடகுப் பெண் கிடைத்திருப்பதாக வந்த செய்திதான் அவரை அவசரமாக வெளியூருக்கு அனுப்பியது.

மனதை மயக்கும் மாலைப் பொழுதில் தூரத்துக் குன்றுகளின் இடையே கதிரவன் சென்று விழுவதை மாடி அறையில் உட்கார்ந்து பார்த்துக்கொண்டிருந்தாள் நர்மதா. இப்படி உலகத்து அதிசயங்களைக் கண் இமைக்காமல் நாள் தோறும் பார்த்துவிட்டு, மலைவாயிலில் போய் விடுவது அவன் வழக்கம். பொன்னிறம் காட்டும் அந்த மாலை நேரத்தில் பங்களாவின் வாயிலில் கார் ஒன்று வந்து நின்றது. காரின் கதவைத் திறந்துகொண்டு வாலிபன் ஒருவன் உள்ளே வந்தான். கிழவியும், தோட்டக்காரனும் அவனை எதிர்பார்க்காதவர்கள்போல் சற்று திகைத்து நின்றார்கள். தோட்டக்காரன் குடுகுடு என்று ஓடி காரிலிருந்த பெட்டி, படுக்கையை எடுத்துவந்தான். எஜமானர் வெளி

பூர் சென்றிருப்பதாகவும் அறிவித்தான்.

வாலிபன் ஜலகண்டப்பாவின் ஒரே மகன் அலிகார் சர்வகலாசாலையில் ஏதோ ஆராய்ச்சித் துறையில் படிப்பதற்காகச் சென்றிருந்தவன், படிப்பைமுடித்துக்கொண்டு கிராமத்துக்குத் திரும்பி இருந்தான். அநேகமாக அவனைப் பார்த்தால் இந்தியன் என்று யாருமே சொல்ல மாட்டார்கள். நடை, உடை, பாவனைகள் யாவும் அவனை மகம்மதியனுகவே காட்டியது. நெடி துயர்ந்த அவன் நடையும், எலுமிச்சம்பழ நிறமும், பளபளக்கும் கண்களுமாக அவன் நின்றதை நர்மதா மாடி ஜன்னல் வழியாகக் கூடத்தில் பார்த்தாள்.

"கெம்ப்பா! வீட்டிலே யாருமில்லையா? அப்பா எப்போது வருவார்?" என்று விசாரித்தான் அவன்.

கெம்ப்பன் தயங்கினுன். பிறகு திக்கித் திணறிக்கொண்டே மாடியைச் சுட்டிக் காட்டினுன். மேலே அண்ணாந்து பார்த்தவன் கண்களில் நிலவு முகம் ஒன்று தெரிந்தது.

"யார் அது?" என்று கிழவியைப் பார்த்து கேட்டதும், "யாரோ? எனக்கென்ன தெரியும் ருத்ரப்பா?" என்ருள் அவள்.

வானத்தில் நிலவு ஊர்ந்து வந்தது. கைப்பிடிச் சுவரைப் பார்த்தவாறு நர்மதா ஆழ்ந்த சிந்தனையில் இருந்தாள். இதயம் பூராவும் ஏக்கமும், கலவரமும் நிறைந்திருந்தது. மனித வாடை அதிகம் வீசாத அந்த வீட்டில் தான் சிறைப்பட்டிருக்கும் விதியை நினைத்துக் கண்ணீர் பெருக்கினுள் அவள். காலையில் வந்தவன் யாராக இருக்கும் என்பது அவளுடைய புதுக் கவலையாக அமைந்தது.

சிந்தனையில் தோய்ந்து போயிருந்த அவளுடைய நினைவைக் கலைப்பது போல ருத்ரப்பா அந்த வராந்தாவின் ஓரமாக உட்கார்ந்து அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். ஆழ்ந்து பள பளக்கும் கண்கள், கூரிய நாசி, விசாலமான நெற்றி, எடுப்பான தோற்றம்; யாவும் படைத்த அவன் எழுந்திருந்து அவளருகில் வந்து நின்று வானத்தை அண்ணாந்து பார்த்து விட்டு, அவள் மதி முகத்தையும் கூர்ந்து கவனித்தான்.

நர்மதாவின் தேகம் பயத்தால் கிடு கிடுவென்று ஆடியது. தண்மையான அந்த இரவிலும், வியர்வைத் துளிகள் அவளை தெப்பமாக நீராட்டின.

"யார் நீ? என்னைப் பார்த்து விட்டு ஏன் இப்படிப் பயப்படுகிருய்?" என்று கனிவுடன் விசாரித்தான் ருத்ரப்பா.

நான்... இந்த வீட்டு எஜமானருடன் வந்தவள். வேறு ஒன்றும் எனக்குத் தெரியாது. தன்னுடைய மருமகளான கர்ப்ப ஸ்திரீ ஒருத்திக்குத் துணை தேவை' என்று அழைத்து வந்தார். இங்கே என்னைத் தவிர இளம்பெண் யாரையுமே காணும். நீங்கள் அவர் மகனு? உங்கள் மனைவி எங்கே?..."

பயத்தோடு அரை குறையாக உளறினுள் நர்மதா.

ருத்ரப்பாவுக்குத் தன் தந்தையின் போக்கு புரிந்து விட்டது. தலைதாரம் தன்னை ஒழித்துத் தலை முழுகி விட்டு அவர் பெண் வேட்டை ஆடுகிருர் என்பது புரிந்து விட்டது. அவருடைய உல்லாச வாழ்க்கைக்கு ஒவ்வொரு புதுக் காரணங்கள் அவருக்கு கிடைத்து வந்தது போலும் என்று நினைத்து அவன் வெறுப்புடன் சிரித்துக் கொண்டான்.

நர்மதா வியப்புடன் அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். சிறிது நேரம் மௌனமாக இருந்த அவன் மெதுவான குரலில், "நீ ஏன் இப்படி வீடு வாசலை விட்டு இவருடன் வரவேண்டும்? பகட்டான வாழ்க்கை வாழ வேண்டும் என்கிற அற்ப காரணத்திற்காக முன்பின் யோசிக்காமல் வரலாமா? வா, இப்படி உட்கார். நான் இவருடைய மகன். எனக்கு இன்னும் கல்யாணமே ஆகவில்லை..." என்ருன்.



நர்மதா மேலும் அவனை ஆச்சரியத்துடன் பார்த்தவாறு உட்கார்ந்திருந்தாள். வானத்து நிலவு மேற்கே சாயும்வரை அவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்தவாறு உட்கார்ந்தார்கள்.

இரண்டு தினங்களுக்குப் பிறகு ஒருநாள் மாலை ருத்ரப்பா அவளிடம் வந்து கேட்டான். "உனக்கு என்னை மணந்து கொள்ள ஆசை இருந்தால் சொல். நாம் இருவரும் நஞ்சன் காட்டில் தெய்வத்துக்கு முன்பாக மணந்து கொண்டு வெளியூருக்குப் போய் விடுவோம். பிறகு உன் உறவினருக்கு விவரங்கள் எழுதலாம்" என்றான்.

நடுக்கடலில் அகப்பட்ட படகு போல் தத்தளித்தாள் நர்மதா. எங்கோ பிறந்து வளர்ந்த தன்னுடைய வாழ்க்கை இப்படித் திசை மாறித் தத்தளிக்கிறதே என்று அந்தப் பேதை நினைத்துக் கண்ணீர் விட்டாள்.

ஆறுகப் பெருகும் அவள் கண்ணீரைப் பார்த்து ருத்ரப்பாவின் உள்ளம் உருகியது.

"நானும் என் தகப்பனைரைப் போல நேர்மையற்றவனாக இருப்பேன் என்று கருதுகிறாயா நர்மதா? அப்படியெல்லாம் இல்லை. சிறு வயதில் தாயை இழந்த நான், தந்தையை விட்டுத் தூரவே விலகி வளர்க்கப்பட்டேன். உண்மையாகவே உன்னைக் காப்பாற்ற வேண்டும் என்கிற எண்ணம்

எனக்கு இருக்கிறது.'' ருத்ரப்பா ஆவேசத்துடன் பேசினான்.

அன்பு, ஆதரவு என்பதே இன்னதென்று அறியாமல் இருந்த நர்மதாவின் இதயத்தில் முதன் முதலாக அன்பு ஊற்று பெருக ஆரம்பித்தது. ஆவல் ததும்ப அவனைப் பார்த்து விட்டுத் தலை குனிந்து கொண்டாள் அவள். ருத்ரப்பா மென்மையான அவள் கரங்களைத் தன் கைகளில் சேர்த்துப் பிடித்துக் கொண்டான். இப்படி சில நிமிஷங்கள் அவர்கள் தங்களையே மறந்திருந்தார்கள்.

வாயிற்படியில் யாரோ கனைக்கும் சத்தம் கேட்டது. சீறிப்பாயும் சிங்கமென நின்றிருந்தார் அவன் தந்தை.

'' நீ எப்போடா வந்தாய்?''

'' மூன்று நாட்கள் ஆயிற்று.''

'' ஓஹோ! உனக்கு இங்கே என்ன வேலை? நேராக நீ மைசூர் வீட்டுக்குப் போவதுதானே?''

'' போயிருந்தால் உண்மை தெரிந்திருக்காதே?'' மகன் மிஞ்சிப் பேசுகிறான் என்பது தந்தைக்கு விளங்கி விட்டது.

'' துப்பு துலக்க வந்து விட்டாயா நீ? போடா வெளியே. அவளோடு உனக்கு என்ன பேச்சு?''

'' பேசினால்தானே அப்பா உங்களைப்பற்றி எனக்குத் தெரியும்?''

ருத்ரப்பா நர்மதாவின் கைகளைப் பற்றிக் கொண்டு வெளியே போகக் கிளம்பினான். ஜலகண்டப்பா முரட்டுத்தனமாக நர்மதாவைப் பிடித்து அறைக்குள் தள்ளினார். கதவைத் தாழிட்டுப் பெரிய பூட்டாக பூட்டினார்.

'' அப்பா!''

'' சீ... சீ... போ. உன்னால் என்ன முடியுமோ செய்து கொள் போ...''

நர்மதா இதுவரை கூறிவிட்டு முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டு தேம்பினாள்.

'' கதை போல் அல்லவா இருக்கிறது? என்னால் நம்பவே முடியவில்லையே?'' என்றேன் நான். ஆனால், விவரங்களை மேலும் அறிய ஆவலுடன் இருந்தேன்.

ருத்ரப்பா பிறகு வீட்டில் இல்லை. ஏதோ திட்டம் போட்டு அவளைக் காப்பாற்ற வேண்டும் என்கிற நோக்கத்துடன் வெளியே போய் விட்டான்.

மாலை தேய்ந்து அந்த ஆற்றங்கரை கிராமத்தை இருள் சூழ்ந்து கொண்டே வந்தது. வெளியே சென்றிருந்த ருத்ரப்பா அமைதியாக வீடு திரும்பினான். அன்றிரவு எப்படியாவது அவளை அழைத்துக் கொண்டு வீட்டை விட்டு வெளியேறி விடுவது. பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்பது அவன் முடிவு.

பூட்டியிருந்த அந்த அறைக்கதவு திறந்திருந்தது. உள்ளே அலையக் குலைய நர்மதா கீழே கிடந்தாள். வெறிபிடித்த மிருகம் ஒன்று தன் இரையைக் குத்திக் குதறி எறிந்திருப்பது போல் இருந்தது அந்தக் காட்சி. அவள் பிரக்ஞையை இழக்கவில்லை. விலை மதிப்பற்ற கற்பை இழந்த நிலையில் இதயம் சூன்யமான நிலையில் கீழே கிடந்தாள்.

ஜலகண்டப்பா வெற்றிப் புன்னகையுடன் மகனைத் திரும்பிப் பார்த்தார்.

'' என்ன இதெல்லாம்?'' என்றான் ருத்ரப்பா.

ஹோ... ஹோ... என்று சிரித்தார் அவர்.

'' உனக்குத் தெரிய வேண்டிய அவசியமில்லை. பேசாமல் போய் விடு. என் வயிற்றில் பிறந்த தோஷத்துக்காக உன்னைச் சும்மா விடுகிறேன். போடா வெளியே...'' அந்த அறையில் நொடிப் பொழுதில் யாவும் நடந்தன. மேஜை மீது கிடந்த பழம் நறுக்கும் கத்தி ஜலகண்டப்பாவின் இதயத்தில் பாய்ந்ததும், ருத்ரப்பா வெறி பிடித்தவனைப் போல ஓடியதும் நர்மதாவுக்குத் தெரிந்தது. அவள் அந்த வீட்டை விட்டு வெளியேறி மனம் போனபடி நடந்து கண்ணம்பாடிக்கு வந்திருந்தாள்.

நான் அவளையே உற்றுப் பார்த்தேன்.

கட்டிய கணவனுடன் வாழ்க்கை நடத்தி இருந்தால் — அவன் உபயோகமில்லாதவனாக இருந்தாலும் நீ எவ்வளவு பெருமையுடன் இருக்கலாம்? எதையோ நினைத்துக் கொண்டு உன்னையே நீ பாழ் அடித்துக் கொண்டாயே நர்மதா?''

அவள் தலைகுனிந்து நின்றிருந்தாள். அன்றிரவே மைசூருக்குச் சென்று சென்னை போயாக வேண்டும் என்று என் கணவர் எனக்கு நினைவுபடுத்தவே, அங்கிருந்து நர்மதாவுடன் நாங்கள் கிளம்பினோம்.

∴ ∴ ∴

மதராஸ் மெயில் தடதடவென்று வேகமாக வந்து கொண்டிருந்தது. இரவு நெடுநேரம் வரையில் எனக்குத் தூக்கம் வரவில்லை. ஏதோ ஒரு குடும்பத்தில் பிறந்து, வறுமையின் காரணமாக ஒருவனால் ஏமாற்றப்பட்டு, தனக்கு வாழ்வு எங்கே இருக்கிறது என்று தேடி அலைந்து ஒரு காமுகனின் அயோக்யத்தனத்துக்குப் பலியாகி, ஒரு கொலைக்கும் தூண்டு கோலாக அமைந்த அந்தப் பெண்ணையே நான் கவனித்துக் கொண்டு உட்கார்ந்தேன்.

எங்கள் பெட்டியில் கூட்டம் அதிகம் இல்லை. இருந்த சிலரும் அமைதியாகத் தூங்கிக் கொண்டிருந்தார்கள். அவள் வாயைத் திறந்து ஏதாவது பேசினால் தேவலை என்று எனக்குத் தோன்றவே, அவளைப் பார்த்து நான், ''படுத்துக் கொள்ளேன். விடிய இன்னும் ரொம்ப நாழிகை இருக்கிறது'' என்றேன்.

பள பளக்கும் விழிகளால் என்னை உற்றுப் பார்த்தாள் அவள். ரயில் பெட்டியில் மங்கலாக எரிந்த நீல விளக்கின் ஒளியில் அவை பளபளவென்று மின்னியது.

நான் ஆதுரத்துடன் எழுந்து அவள் கைகளைப் பிடித்து, ''படுத்துக் கொள். உன்னை எப்படியாவது விசாரித்துக் கொண்டு போய்ச் சேர்த்து விடுகிறேன்'' என்றேன்.

நர்மதா பயங்கரமாக விழித்தாள். ''கொலை! கொலை!'' என்று அலறியவாறு சரியாகப் பொருந்தப் படாமல் இருந்த கதவை நோக்கிப் பாய்ந்தாள் அவள். காற்றின் வேகத்தில் கதவு படீரென்று திறந்து கொண்டது. புது மழையால் கீழே பொங்கிப் பெருகி வழிந்து போய்க் கொண்டிருந்தது பாலாறு.

தண்ணீரில் தடாலென்று ஒரு சத்தம். பெட்டியில் இருந்தவர்கள் தூக்கத்தில் அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்தார்கள்.

அந்தக் காட்டாற்று வெள்ளத்தில் அலை அலையாகப் பரவும் அவளுடைய கூந்தல் தெரிந்தது. ரயில் தட தடவென்று ஓடி கொஞ்ச தூரம் சென்று நின்றது. எல்லோரும் சுழித்துக் கொண்டு ஓடும் அந்த ஆற்றைப் பார்த்துக் கொண்டே சிறிது நேரம் நின்றோம். யாரோ அனாதைப் பெண் ஆற்றில் தவறி விழுந்ததாக அதிகாரிகள் முடிவு கட்டி மேலும் ரயிலைத் தொடர்ந்து செல்ல அனுமதித்தார்கள்.

நர்மதா அனாதைப் பெண்ணா? அவளைப் பெற்ற வெங்குலக்ஷ்மி எவ்வளவு கபடமற்றவள்? அவள் உடன் பிறந்தவன் எத்தனை வெள்ளை உள்ளம் படைத்தவன்? இவர்கள் எங்கோ இருக்கும் போது நர்மதா அனாதையாகப் போய் விட்டாள்!

இதுதானா இன்றைய சமுதாயத்தின் தீர்ப்பு? நாகரிகத்தின் முடிவு? என்று நான் உள்ளம் வாடி மறுபடியும்பிரயாணத்தைத் தொடர்ந்தேன்.

காலைக் கதிரவனின் ஒளியில் ரயிலின் இருபக்கங்களிலும் இருந்த ஏரித் தண்ணீரின் ஓரத்தில் தாமரை மலர்கள் மலர்ந்து சிரித்தன. தாங்கள் பிறந்த கொடியில் அவைகள் மலர்ந்து நிற்கும் போது எவ்வளவு கவர்ச்சியாகவும் உன்னதமாகவும் இருக்கின்றன? அதோ! ஒரு இடைப்பையன் வெடுக்கென்று ஒரு தாமரையைக் கொய்து இப்படியும் அப்படியும் ஆட்டி அலைக்கழித்து ஏரிக்கரை மீது வீசியவாறு போகிறான். மலரைப் பறித்தவன் மகாதேவனின் பாத கமலங்களில் அதை அர்ப்பணித்திருந்தால் அது எவ்வளவு பெருமை அடைந்திருக்கும்?

நர்மதாவும் இந்தப் பறித்த தாமரைக்கு ஒப்பாக ஆகிவிட்டாள். ★

# வளர்த்த பாசம்

ஸரோஜா ராமமூர்த்தி

அன்று வகுப்பு ஆரம்பித்ததும் பள்ளிக்கூடத்து வேலைக்காரி பாலுவைக் கொண்டு வந்து இரண்டாவது வகுப்பில் உட்கார வைத்துவிட்டுப் போனாள். பாலு உட்கார்ந்ததும், அதே பெஞ்சியின் கோடியில் உட்கார்ந்திருந்த ரகுவைப் பார்த்து வேலைக்காரி திடுக்கிட்டாள். ஆனால், அவளுக்கு அங்கே அதிக நேரம் நிற்க முடியவில்லை. மற்ற அலுவல்கள் காத்துக் கிடந்தன. இது வரையில் நோட்டுப் புஸ்தகங்களைப் புரட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்த உபாத்தியாயனி ஞானம் நிமிர்ந்து உட்கார்ந்தாள். குழந்தைகள் எல்லோரும் புஸ்தகங்களைத் திறந்து வைத்துக் கொண்டு பாடங்களைப் படிப்பதற்குத் தயாராக இருந்தனர்.

ரகு உட்கார்ந்திருந்த பெஞ்சியின் மறு கோடியில் இருந்த பாலுவைப் பார்த்து ஞானம் கேள்விகள் கேட்க ஆரம்பித்தாள்.

"அவன் புதுப் பையன், டீச்சர்!" என்று மற்றப் பிள்ளைகள் கத்தினார்கள்.

"உஷ்!" என்று மேஜையைத் தட்டிவிட்டு, "குழந்தைகளே! சத்தம் போடக் கூடாது!" என்று கோபத்துடன் கூறிவிட்டு, "எங்கே, நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல் பார்க்கலாம்!" என்றாள் ஞானம், மறுபடி பாலுவைப் பார்த்து. மறுபடியும் வகுப்பில் கொல்லென்ற சிரிப்பு எழுந்தது.

"நான் இன்றைக்குத்தான், டீச்சர் பள்ளிக்கூடத்தில் சேர்ந்தேன்!" என்றான் பாலு பயத்துடன்.

ஞானம் ஆச்சர்யத்துடன் வகுப்பை எதிரிட்டுப் பார்த்தாள். பாலு உட்கார்ந்திருந்த பெஞ்சியின் மறு கோடியில் ரகு உட்கார்ந்து சிரித்துக் கொண்டிருந்தான். தனித் தனி குடும்பத்தைச் சேர்ந்த பிள்ளைகள் இருவர் ஒரே மாதிரியாக இருக்க முடியுமா? இவர்கள் அண்ணன் தம்பியும் இல்லையே! நீலநிறக் கண்கள், கறுத்துச் சுருண்ட தலை மயிர், துறு துறுவென்று களை சொட்டும் முகம். எல்லாம் ஒரே மாதிரி



யாக — அதுவும் குரல், பேசும் மாதிரி எல்லாம் — ஒரே மாதிரியாக இருக்குமா?

ஞானத்தின் தலை சுற்ற ஆரம்பித்தது. ஈசனின் சிருஷ்டி விநோதங்களில் இதுவும் ஒன்றாக இருக்குமோ, என்னவோ? ஆவலுடன் பாலுவின் கரங்களைப் பற்றி அழைத்துப் போய் ரகுவின் பக்கத்தில் உட்கார வைத்தான். அவனாலேயே யார் ரகு, யார் பாலு என்று கண்டு பிடிக்க முடியவில்லை!

அன்று வகுப்பில் மற்ற பாடங்களைப் படிக்கவோ, குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுக்கவோ குழந்தைகளாலும், ஞானத்தாலும் முடியவில்லை. தனித் தனி குடும்பத்தைச் சேர்ந்த இரு பிள்ளைகளும் ஒரே மாதிரியாக இருக்கும் விந்தையைப் பற்றியே அன்று பூராவும் பேச்சாக இருந்தது.



## 2

பாலு வீட்டுக்குப் போனதும் அவன் அம்மா ஜானகி பள்ளிக்கூடத்தைப் பற்றி அவனிடம் விசாரித்தாள்.

“அம்மா! பள்ளிக்கூடம் எனக்குப் பிடிச்சிருக்கு. அங்கே என்னைப் போலவே ஒரு பையன் படிக்கிறான் அம்மா! என்னைப் போலவே அவனும் இருக்கான் அம்மா!”

ஜானகி கூடத்தில் உட்கார்ந்திருந்த தன்னுடைய இன்னொரு பிள்ளையைப் பார்த்தாள். பாலுவும் சோமுவும் இரட்டைக் குழந்தைகள் என்றால் யாராவது ஒப்புக் கொள்வார்களா? பாலுவின் நிறம் நல்ல வெளுப்பு. சோமு கறுப்பாக இருந்தான். ஒரே சமயத்தில் ஒன்றாக அன்னையின் கர்ப்பத்தில் வளர்ந்த இரு குழந்தைகளுக்கும் கொஞ்சமாவது ஒற்றுமை இருக்க வேண்டாமா? இதைப் பற்றி அவளும் அவள் கணவனும் பல தடவைகள் பேசியிருக்கிறார்கள். வியந்தும் இருக்கிறார்கள்.

ஆனால் பாலுவை விட சோமு தன் பெற்றோரிடம் அதிக அன்பாக இருந்தான். அம்மாவை விட்டு அவனால் ஒரு நிமிஷம் பிரிந்திருக்க முடியாது. அந்தக் காரணத்தினால் தான் ஜானகி சோமுவைப் பள்ளிக்கூடம் அனுப்பவில்லை. அத்துடன் பாலுவைப் பிரிந்து சோமு இதுவரைக்கும் இருந்ததில்லை. ஆகையால் பாலு வீட்டுக்கு வந்ததும் சோமுவுக்கு விளையாட வேண்டும் என்று ஆசை உண்டா

யிற்று. இருவரும் விளையாடக் கிளம்பினர்கள்.

ஜானகி, ஒன்றாக விளையாடும் தன் இரட்டைப் பிள்ளைகளை மாறி மாறிப் பார்த்தாள். அண்ணன், தம்பி ஒரே மாதிரியாக இல்லாவிட்டால் போகிறார்கள். குடும்பத்தில் இருக்கும் வேறு யாரைப் போலவாவது இருக்க மாட்டார்களா? சோமுவுக்கும் அவர்கள் குடும்பத்துக்கும் துளிக்கூட சம்பந்தம் இருப்பதாக யாரும் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். பாலு பள்ளிக்கூடத்திலிருந்து வந்து சொன்ன வார்த்தைகளை ஜானகி நினைத்துப் பார்த்தாள்.

"அங்கே என்னைப் போலவே ஒரு பையன் இருக்கிறான் அம்மா! என்னைப் போலவே அவனும் இருக்கான்!" என்று பாலு கூறியது திரும்பத் திரும்ப அவள் காதுகளில் ஒலித்துக் கொண்டிருந்தது.

தினம் பள்ளிக்கூடத்திலிருந்து வந்ததும் பாலு தன் அம்மாவிடம் ஓயாமல் ரகுவைப்பற்றிச் சொல்லிவந்தான். வகுப்பிலே திடீரென்று குழப்பம் ஏற்பட்டதாம், ரகுவைப் போய் பாலு என்று நினைத்துக் கொண்டு 'டிராயிங்' வாத்தியார் அவன் போட்டிருந்த சித்திரங்களில் வர்ணம் சரியாக இல்லை என்று சொன்னாராம்!

ஜானகிக்கு ஆச்சர்யம் அதிகமாயிற்று. ஒரே வயிற்றில் ஒரே சமயத்தில் வளர்ந்து ஜனித்த குழந்தைகளுக்கு இல்லாத சாயல் ஒற்றுமை வெவ்வேறு குடும்பங்களைச் சேர்ந்த குழந்தைகளுக்கு இருப்பது ஆச்சர்யம் அல்லவா?

ஒரு தினம் இந்த ஆச்சர்யத்தை நேரில் பார்ப்பதற்காக பாலுவின் பள்ளிக்கூடத்துக்குப் போனள் அவள். உபாத்தியாயனி ஞானம் இந்த அதிசயத்தை பாலுவின் அம்மாவிடம் சொல்ல வேண்டும் என்று நினைத்திருந்தாள்.

ஜானகி வகுப்புக்குள் நுழைந்ததும் பெஞ்சியில் உட்கார்ந்திருந்த ரகுவைப் பார்த்துச் சிரித்துக் கொண்டு நின்றாள்.

"இவன் நன்றாகப் படிக்கிறானா? வீட்டிலே துறு துறு வென்று விஷமம் செய்கிறானே என்று உங்களைக் கேட்க வந்தேன்!" என்று கூறினாள் ஜானகி.

"இவன் உங்கள் பிள்ளை இல்லை, அம்மா! அதோ இருக்கிறான் பாலு! நாங்களும் இப்படித்தான் ஏமாந்து போகிறோம் அடிக்கடி" என்று உபாத்தியாயனி ஞானம் கூறிக் கொண்டே பாலு இருக்குமிடத்தைச் சுட்டிக் காட்டினாள்.

பாலு அங்கே சிரித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

இருவருக்கும் எவ்வளவு ஒற்றுமை? பெற்ற தாயே ஏமாந்து போகும்படியான ஒற்றுமை இரு குழந்தைகளுக்கும் இருந்தது!

## 3

அதற்கு மேல் ஜானகியின் மனம் நிம்மதியாக இல்லை. பாலுவும் ரகுவும் ஒரே மாதிரியாக இருக்கிறார்கள். நிறம், சாயல், குரல் எல்லாவற்றிலும் ஒற்றுமை இருக்கிறது. இரட்டைக் குழந்தைகள் என்று இவர்களைத்தான் கூற வேண்டும். எல்லாவற்றிலும் வித்தியாசமாக இருக்கும் சோமு எப்படி பாலுவின் கூடப் பிறந்திருப்பான்?

இதைப் பற்றி நினைத்தவுடன், ஜானகிக்குத் தான் இவ்விரு குழந்தைகளையும் பிரசவித்த ஆஸ்பத்திரியின் நினைவு வந்தது. ஒரு நாளைக்குப் பத்து, இருபது என்று எண்ணிக்கையில்லாமல் அங்கு ஜனிக்கும் மதலைகளின் ஞாபகமும் கூடவே ஏற்பட்டது.

ஒருவேளை குழந்தை மாறிவிட்டதோ! ஜானகியால் அதைக் கற்பனை கூட செய்து பார்க்க முடியவில்லை. பத்து மாதம் சுமந்து பெற்ற குழந்தை மாறி இன்னொருவரிடம் வளரவாவது?

அவள் மனம் நிம்மதி இழந்து தவிக்க ஆரம்பித்தது. குழம்பிய மனத்துடன் வீட்டை அடைந்தாள்.

அவள் வீட்டை அடைவதற்கு முன்பு அவள் கணவன் காரியாலயத்திலிருந்து வந்திருந்தான். "அம்மா என்னை விட்டுட்டுப் பள்ளிக்கூடம் போயிட்டாப்பா!" என்று அப்பாவிடம் புகார் சொல்லிக் கொண்டிருந்தான் சோமு.

"ஊம்......நாம் இரண்டு பேரும் அம்மாவை விட்டுட்டு சினிமாவுக்குப் போயிடலாம் ஒரு நாளைக்கு!" என்று பதிலுக்குக் கூறினான் ஜானகியின் கணவன் சதாசிவன்.

இந்தக் கேலிப் பேச்சில் ஜானகியின் மனம் செல்லவில்லை. தன் மனத்தில் எழுந்திருக்கும் இந்தப் புதிருக்கு விடை எப்படிக் கிடைக்கப் போகிறது என்று குழம்பியவாறு ஜானகி, இரவு சாப்பாட்டுக்கு வேண்டிய அலுவல்களைக் கவனித்தாள்.

சதா கலகலவென்று குழந்தைகளைப் பற்றி ஓயாமல் பேசும் அவள் இன்றைக்கு மௌனமாக இருப்பது பற்றி சதாசிவனுக்கு வியப்பாக இருந்தது. குழந்தைகள் எல்லோரும் தூங்கி விட்டார்கள். தம்பதிகள் சாவகாசமாக உட்கார்ந்து குடும்ப விவகாரங்கள் பேசும் சமயம், யோசனையில் ஆழ்ந்திருந்த ஜானகியைப் பார்த்து, "என்ன ஜானகி? சாயந்திரம் பள்ளிக்கூடத்திற்குப் போய்வந்தது முதல் உற்சாகமில்லாமல் இருக்கிறாயே?" என்று விசாரித்தான் சதாசிவன்.

"ரொம்ப நாளாக பாலு தன்னுடன் படிக்கும் பையன் ஒருத்தனைப் பற்றிச் சொல்லிக்கொண்டிருந்தான். அப்படியே பாலுவை உரித்து வைத்திருக்கு, அந்தப் பையனைப் பார்த்தால்! குரல், பேச்சு எல்லாம் அப்படியே! எனக்கு அந்தப் பையனைப் பார்த்ததிலிருந்து என்னவோ குழப்பமாக இருக்கு. ஒரு வேளை இரட்டைக் குழந்தைகளில் ஒன்று மாறி, யார் குடும்பத்திலாவது வளருகிறதோ என்று தோன்றுகிறது. விசாரித்துப் பார்க்க வேண்டும்" என்றாள்.

சதாசிவனுக்கு முதலில் இது அர்த்தமற்றதாகவே தோன்றியது. ஆனால், ஜானகியின் உறுதியான அபிப்பிராயம் அவன் மனத்தையும் குழப்பியது. "ரகுவின் வீட்டுக்குப் போய் அவன் தாயை விசாரித்துப் பார்!" என்று கூறினான்.

அப்படியே ஒரு தினம் ஜானகி ரகுவின் வீட்டைத் தேடிச் சென்று விசாரித்தாள். அவள் பிறந்த ஆஸ்பத்திரி, தேதி முதலிய விவரங்களையும் கேட்டாள்.

பாலுவும் சோமுவும் பிறந்த அன்றே ரகுவும் அதே ஆஸ்பத்திரியில் பிறந்திருந்தான். ஜானகியின் மனத்திலிருந்த சந்தேகம் தெளிந்து விட்டது. எண்ணற்ற குழந்தைகள் பிறந்து வளரும் இடத்தில் குழந்தைகள் அடையாளம் தெரியாமல் மாறிப்போவது சகஜமாக ஏற்படக்கூடியதுதானே? சோமு, ரகுவின் தாயாக இருக்கும் பங்கஜத்தின் குழந்தைதான்! முக ஜாடையும், நீண்ட கருவிழிகளும் அவன் அன்னையைப் போலவே அவனுக்கும் இருந்தன. ஜானகியின் மனத்துக்கு ஆறுதல் அளித்த விஷயம் ரகு, தன்னைவிடப் பன்மடங்கு அன்பு செலுத்தும் 'அன்னை' ஒருத்தியிடம் வளர்ந்து வருவதுதான்.

ரகுவைத் தன் உயிரினும் மேலாக நினைத்து வந்தாள் பங்கஜம். இவ்வளவு அழகான குழந்தையை அடையக் கொடுத்து வைத்தவளுக்கு இறைவன் செல்வத்தை ஏராளமாக அருளவில்லை. பள்ளிக்குப் போகும் மற்றச் சிறுவர்கள் அணிந்து செல்லும் விதவிதமான உடைகளைப்போல் தன் பிள்ளையும் அணிந்து போக வேண்டும் என்று ஆசைப்பட்டாள். அவள் கணவன் சம்பாதித்த சொற்ப சம்பளத்தால் இவைகளெல்லாம் வெறும் கனவுகள் ஆயின.

முதல் நாள் அவளைப் பார்த்து ரகுவைப் பற்றிய விவரங்களை அறிந்து போன ஜானகி, அவனுக்கு அழகிய சட்டைகளையும், விளையாட்டுச் சாமான்

களையும் அடுத்த நாள் கொண்டு வந்து கொடுத்தாள். தன்னுடன் அவனைக் காரில் தன் வீட்டுக்கு அழைத்துப் போனாள்.

காரியாலயத்திலிருந்து கணவன் வீடு திரும்பியதும், பாலுவையும் ரகுவையும் அவன் எதிரில் அழைத்துப் போய் நிறுத்தினாள்.

"எங்கே சொல்லுங்கள், பார்க்கலாம்? உங்கள் பாலு யார்?" என்று கேட்டாள் ஜானகி.

சதாசிவன் கொஞ்ச நேரம் திகைத்து நின்றான். பாலு யார் என்றும், ரகு யார் என்றும் அவனுக்கும் அடையாளம் தெரியவில்லை! "எனக்குப் புரியவில்லையே! இப்படி ஒரே மாதிரி உடைகளை அணிவித்து என் முன் நிறுத்தினால் எப்படிச் சொல்ல முடியும்?" என்றான் திகைப்புடன்.

ஜானகி ரகுவைத் தன் கணவன் அருகில் அழைத்துப் போனாள். "இங்கே பாருங்கள். வலது காதின் பின்புறத்தில் இருக்கும் மச்சத்தின் அடையாளத்தை வைத்துக் கொண்டு தான் இவர்களைக் கண்டுபிடிக்க முடியும். பாலுவும் இவனும் ஒரே அச்சாக இருக்கிறார்கள், இல்லையா?" என்று கேட்டாள்.

சதாசிவன் வியப்பும் சந்தேகமும் மேலிட இருவரையும் மாறி மாறிப் பார்த்தான். சற்று தூரத்தில் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கும் சோமுவையும் பார்த்தான்.

பூராவும் வேறு சாயலாக இருக்கும் அந்தக் குழந்தை எப்படி பாலுவுடன் சேர்ந்து பிறந்தவனாக இருக்க முடியும்? தன்னுடைய மனைவி இதுகாறும் கூறி வந்ததை ஏதோ அலட்சிய பாவத்துடன் நினைத்து வந்தவனுக்கு இதில் சிரத்தை ஏற்பட்டது. அதற்கு மேல் அவனால் பொறுமையாக இருக்க முடியவில்லை.

4

ஜானகி பிரசவித்த ஆஸ்பத்திரி டாக்டர் லேசாகச் சிரித்துக் கொண்டாள். குழந்தைகள் இருவரையும் மாறி மாறிக் கவனித்தாள்.

"இந்த விஷயம் சற்று சிரமமானது தான். இருந்தாலும் அலட்சியமாக விட்டு விடுகிறதற்கில்லை. இரட்டைக் குழந்தைகள் சில ஒரே மாதிரியாகவும், சில வெவ்வேறு மாதிரியாகவும் பிறப்பதுண்டு. அது அவர்கள் தாயின் கர்ப்பத்தில் வளரும் தன்மையைப் பொறுத்தது" என்று கூறிவிட்டு, வைத்திய முறையில் அதைப்பற்றி எழுதி இருப்பதையும் தெரிவித்தாள்.

"உங்கள் சந்தேகம் தீர வேண்டுமானால் ஆறு வருஷங்களுக்கு முன்பு உங்கள் மனைவி பிரசவித்த தேதியில், அந்த மணிக்குள் வேறு யாராவது பிரசவித்திருக்கிறார்களா என்று தெரிய வேண்டும்" என்று கூறி, அவற்றின் வரலாறு அடங்கிய புஸ்தகங்களைப் பார்த்தாள் டாக்டர்.

அந்தத் தேதியில் ஜானகியின் பிரசவம் ஆன அரை மணிக்குள் பங்கஜம் என்னும் பெண் ஒருத்தி ஆண் குழந்தையைப் பெற்றிருந்தாள்! பங்கஜத்தைத் தவிர சோமுவின் தாய் வேறு யாராகவும் இருக்க முடியாது. சோமு கறுப்பாக இருந்தாலும், ஹிருதயத்தை ஊடுருவிப் பார்க்கும் புத்திசாலித்தனம் நிறைந்த கரு விழிகளைப் பெற்றிருந்தான். பங்கஜத்தின் கருவிழிகளுக்கும், அவனுடைய கண்களுக்கும் வித்தியாசமே யில்லை. ஜானகி, சதாசிவன், டாக்டர் மூவரும் ஒரே உறுதியான அபிப்பிராயத்துக்கு வந்தனர்.

"ஏதோ அஜாக்கிரதையினாலும், இருவரும் ஒரே அறையில் பிரசவித்து இருந்ததாலும் குழந்தைகள் மாறி விட்டன. அதுவும் பிறந்த குழந்தைகள் ஒன்றைப்போலவே மற்றொன்று இருப்பதாலும் அதை அவ்வளவாகக் கவனிக்கவும் முடிவதில்லை" என்றார் டாக்டர்.

திரும்பி வீட்டுக்கு வரும்போது சதாசிவன் மனைவியைக் கவனித்தான். அவள் முகத்தில் கவலை படர்ந்திருந்தது.

அப்படியானால் சோமுவை அவர்களிடம் அனுப்பிவிட வேண்டியதுதான், ஜானகி. பாவம், குழந்தை ரகு இத்தனை காலம் எவ்வளவோ நன்றாக இருக்க வேண்டியவன், ஏழைமையில் வளர்ந்து விட்டான்! இனிமேலாவது நன்றாக இருக்க வேண்டாமா?''

"என்ன, சோமுவையா?'' என்று ஜானகி திடுக்கிட்டுக் கேட்டாள்.

"ஆமாம்.''

"நினைத்துப் பாருங்கள், அவனுக்காக நான் எவ்வளவு கஷ்டப்பட்டிருப்பேன்...?'' என்று கூறிவிட்டு, ஜானகி விசும்பினாள்.

* * *

ஜானகி இந்த விஷயத்தை பங்கஜத்திடம் கூறியபோது அவள் உணர் விழந்து போனாள். செல்வமும் சீரும் இல்லாமற் போனாலும் தன்னுடைய அன்பு ஒன்றையே ரகுவுக்கு அளித்து வளர்த்தவள் அவள்.

பங்கஜத்தின் கணவன் இந்த ஆச்சர்யமான செய்தியைக் கேட்டான். அவனுடைய வறுமை அவனைப் பாசமற்றவனாக்கியது.

"அவர்களுக்கென்ன, பணக்காரர்கள்! காசு கொடுத்து வேண்டுமானாலும் இன்னொரு குழந்தையை வாங்கி வளர்க்க முடியும்! சோமுவை அவர்களே வைத்துக் கொண்டிருப்பதானால் கொஞ்சம் பணமும், ரகு நம்மிடம் வளர்வதற்காகக் கொஞ்சம் பணமும் கொடுத்தார்களானால் ஏதாவது வியாபாரமாவது செய்யலாம். இல்லாவிட்டால் ரகுவை அனுப்பிவிட்டு, சோமுவை அழைத்து வந்து விடு'' என்று கூறினான் அவன் தன் மனைவியிடம்.

ஆசையுடன் தன் அருகில் நித்திரை புரியும் பாலகன் ரகுவைப் பார்த்ததும் பங்கஜத்தின் கண்களில் நீர் சுரந்தது.

அரும்பாடுபட்டு வளர்த்த குழந்தையை கேவலம் பணத்துக்காக அனுப்பி விடுவதா? கர்ணன் உயர்வா; அர்ஜுனன் உயர்வா என்கிற பிரச்னையைக் கிளப்பி விட்ட ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் நினைவு வந்தது பங்கஜத்துக்கு.

கர்ப்ப வாசத்தில் மறைந்து வளர்ந்து, பிறந்தவுடன் பிரிந்து வேறு இடத்தில் வளரும் சோமு தன்னுடைய பிள்ளையாக அவளுக்குத் தோன்றவில்லை. அர்ஜுனன் தான் பிள்ளை என்று அன்பு செலுத்திய குந்தி தேவியின் மனநிலை தான் அவளுக்கு ஏற்பட்டது.

மழலை மொழிகளும், இளம் பருவத்து விளையாட்டுகளும் விளையாடித் தன்னை மகிழ்வித்த ரகுவை அவளால் எப்படிப் பிரிந்து இருக்க முடியும்? உயிரைப் பிரிந்து உடல் வாழ முடியுமா?

கண்ணீர் மல்க பங்கஜம் ரகுவை அணைத்துக் கொண்டாள். இன்னும் ஏழு ஜன்மங்கள் வறுமையில் உழன்றாலும், ரகுவைப் பணத்துக்காக அனுப்ப அவளால் முடியாது!



பையன்:— "எனக்கு மாத்திரம் விளக்கெண்ணெய் கொடுக்கிறயே, அம்மா. அப்பாவுக்கும் கொடேன்!''

அப்பா:— "உங்க அம்மா எனக்குத் தான் காப்பி கொடுத்திருக்காளேடா!''

# பேசாமடந்தை

ஸரோஜா ராமமூர்த்தி

ராமநகரத்தின் தெருக்களில் நிசப்தம் நிலவி இருந்தது. தெருக் கோடியில் படுத்திருந்த கறுப்பு நாய் ஒன்று 'லொள் லொள்' என்று குரைத்துக் கொண்டு ஓடி வரவும், அதைத் தொடர்ந்து 'சரக் சரக்'கென்று செருப்பின் சத்தம் கேட்டது. சிறிது நேரத்துக்கெல்லாம் அந்தத் தெருவில் பெரிதாகக் கட்டப்பட்டிருந்த பங்களா ஒன்றின் கதவைத் திறந்து, தபாற்காரன் உள்ளே சென்று அந்த வீட்டு எஜமானியிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்து விட்டு வெளியே சென்றான். மறுபடியும் செருப்பின் சத்தம் 'சரக் சரக்'கென்று கேட்டது. கடைசியில் அதுவும் ஓய்ந்து போயிற்று.

கையில் வைத்திருந்த கடிதத்தை இரண்டு மூன்று தடவைகள் படித்து விட்டு அலுத்துப்போய் அதை மேஜை மீது எறிந்து விட்டு, சுசீலா ஜன்னல் வழியாகத் தெருவைப் பார்த்தாள். சற்று முன் குரைத்துக் கொண்டிருந்த நாயும் அசந்து தூங்குவதைக் கண்டதும் அவளுக்கு ஏனோ காரணமில்லாமல் அதன்மேல் கோபம் ஏற்பட்டது. இரவில் நிலவி இருக்க வேண்டிய அமைதி அந்தத் தெருக்களில் பகலிலும் நிலவி இருந்தது அவளுக்கு பயத்தையும் வெறுப்பையும் அளித்தது.

ராமநகரம் என்பது பெரிய ஊராக இருந்த போதிலும், சுசீலா குடியிருந்த வீடு ஊருக்கு வெளியே புதிதாகக் கட்டப்பட்டிருந்த வீடுகளின் மத்தியில் இருந்தது. பெரும்பாலான வீடுகளுக்கு இன்னும் யாரும் குடி வர வில்லை. வந்திருந்த ஒன்றிரண்டு வீட்டாரும் தமிழ் தெரியாத வடக்கத்திக்காரர்கள்.

சுசீலாவின் கணவன் கிருஷ்ணன் காலை ஒன்பது மணிக்கு வீட்டிலிருந்து புறப்பட்டால் மாலை ஏழு மணிக்குத்தான் வீடு திரும்புவான். மத்தியில் பேச்சுத் துணைக்கு யாரும் இல்லாமல் தனியாக சுசீலா இந்த வீட்டில் மிகவும் கஷ்டப்பட்டாள்.

சுசீலா மறுபடியும் ஜன்னல் வழியாகப் பக்கத்து வீட்டைப் பார்த்தாள். அதில் ஒரு ஸேட்டும், அவர் மனைவியும் குடி இருந்தார்கள். ஸேட் ஏதோ அலுவலாக வெளியூர் போயிருந்தபடியால், ஸேட்டின் மனைவி வீட்டில் வேலை ஒன்றும் இல்லாமல் நிம்மதியாகப் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தாள். அந்த வீட்டிலும் தெருவில் நிலவி இருக்கும் அமைதிதான் காணப்பட்டது. எதிர் வீட்டிலாவது யாராவது இருக்கிறார்களா என்றால், அந்த வீட்டின் வாயிற் கதவில் பெரிய பூட்டு ஒன்று தொங்கிக் கொண்டிருந்தது. பக்கத்து வீட்டுக்காரிக்குப் பாஷை தெரியவில்லை. எதிர் வீடோ காலியாகக் கிடந்தது! என்ன செய்வாள் சுசீலா?

இந்தத் தனிமை அவளுக்கு அலுத்து விட்டது. எவ்வளவு நரம்தான் தோட்டத்தைச் சுற்றி வருவது, ரேடியோவைத் திருப்புவது, புஸ்தகங்கள் படிப்பது? இரண்டே பேர் இருக்கும் வீட்டில் சதா என்ன வேலை இருக்கப் போகிறது?

அன்று சாயங்காலம் கிருஷ்ணன் வழக்கத்தை விடக் கொஞ்சம் முன்னடியே வந்து விட்டான். சுடச்சுட காப்பியையும், அன்று மத்தியானம் செய்த பக்ஷணத்தையும் கொண்டு வந்து மேஜைமீது வைத்து விட்டு சுசீலா தொப்பென்று நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள். தலை கூட வாரிப் பின்னிக் கொள்ளாமல், வாடிப் போன முகத்துடன் தன் எதிரே உட்கார்ந்திருந்த மனைவியைப் பார்த்ததும் கிருஷ்ணனுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

"என்ன சுசீலா, என்னவோ போல் இருக்கிறாய்! உடம்புக்கு ஒன்றுமில்லையே?" என்று அன்புடன் விசாரித்தான் கிருஷ்ணன்.

"உடம்புக்கு ஒன்றுமில்லை. மனசுதான் சரியாக இல்லை!" என்று தலையைக் குனிந்துகொண்டே பதில் கூறினாள் அவள்.

"மனம் சரியில்லாமல் போவதற்கு அப்படி என்ன முக்கியமான காரணம் இருக்கப் போகிறது?"

"ஆமாம், காலையில் நீங்கள் பாட்டுக்கு ஆபீஸுக்குப் போய் விடுகிறீர்கள். நான் முழுதும் கொட்டுக் கொட்டென்று இந்த வீட்டைச் சுற்றி வர எனக்குப் பிடிக்கவே இல்லை."

"வீட்டைச் சுற்றி வருவானேன்? வீட்டிலே ரேடியோ இருக்கிறது. புஸ்தகங்கள் இருக்கின்றன. தோட்டத்தைப் பார்த்தால் பச்சைப்பசேலென்று செடி கொடிகள். ஒவ்வொரு ரோஜாச் செடியிலும் எவ்வளவு புஷ்பங்கள்! இவ்வளவு அழகான வீடு நமக்குக் கிடைத்திருப்பது என் நண்பர்களுக்கெல்லாம் பொறாமை!" என்று சந்தோஷத்துடன் கூறினான் கிருஷ்ணன்.

"உங்கள் நண்பர்களையே இந்த வீட்டுக்கு வரச் சொல்லுங்கள். நாள் பூராவும் பைத்தியம் மாதிரி தோட்டத்தைச் சுற்றி வர முடியுமா என்ன?"

சுசீலா அதற்கு மேல் அவனுடன் பேச விருப்பமில்லாமல் சமையலறைக்குள் சென்று விட்டாள்.



## 2

அடுத்த நாள் காலை காப்பியை எடுத்துக்கொண்டு சுசீலா கிருஷ்ணனின் அறைக்குள் நுழைந்தாள். கிருஷ்ணன் ஆவலுடன் அவள் முகத்தைப் பார்த்தான்.

"நேற்று என் பேரில் அப்படிக் கோபித்துக் கொண்டாயே? பார்த்தாயா, எதிர் வீட்டுக்கு யாரோ குடி வருகிறார்கள்? இன்னும் கொஞ்ச நாழியில் உனக்கு ஒரு சிநேகிதி கிடைத்து விடுவாள். அப்போது இந்த வீடும் உனக்கு ஜோராகவே தோன்றும்!" என்று கேலி செய்தான் கிருஷ்ணன்.

அவன் கூறுவதைக் கவனியாமல் சுசீலா அவசரமாக ஜன்னல் அருகில் சென்று எதிர் வீட்டைக் கவனித்தாள். பெரிய லாரி ஒன்றிலிருந்து சாமான்கள் இறங்கிக் கொண்டிருந்தன. கணவனும், மனைவியும் என்று தோன்றிய ஒரு தம்பதி காரிலிருந்து இறங்கி, சாமான்கள் ஒழுங்கு செய்யப்படுவதைக் கவனித்துக் கொண்டிருந்தனர். கணவன் என்று சுசீலாவின் மனம் மதிப்பிட்ட யுவன் சுமாரான அழகுடையவனாகத்தான் இருந்தான். ஆனால் மனைவி என்று அவள் நினைத்தயுவதியின் அழகு கவிகள் வர்ணனைக்கு உவமையாக இருந்தது. பிறைச்சந்திரனைப் போன்ற

நெற்றியில் சுருண்டு விழும் கூந்தலும், ஆயிரம் வார்த்தைகளை ஒரு நொடியில் கண்களாலேயே பேசிவிடும் திறமையை உடைய அந்தக் கண்களும், தாழம்பூவை ஒத்த மேனியும், அவள் அணிந்திருந்த சிவப்புப் பட்டுப் புடவையும் சுசீலாவின் கண்களைப் பறித்தன.

இவ்வளவு அழகுடைய பெண்ணிடம் எப்படியாவது சிநேகிதம் செய்து கொள்ள வேண்டும் என்கிற ஆசை சுசீலாவுக்கு ஏற்பட்டது.

"உனக்கு இனிமேல் இந்த வீடு ரொம்பவும் பிடித்துவிடும் இல்லையா?" என்று கேட்டான் கிருஷ்ணன்.

"அந்தப் பெண் எவ்வளவு அழகாக இருக்கிறாள், பார்த்தீர்களா? நானும் எத்தனையோ பெண்களைப் பார்த்திருக்கிறேன். இப்படி எல்லாப் பொருத்தமும் அமைந்த பெண்ணைப் பார்த்ததில்லை, நல்ல அழகு!" என்று சுசீலா வியந்து கொண்டாள்.

அவளுக்கு அடுப்பங்கரையில் அன்று வேலையே ஓடவில்லை. அன்று மத்தியானமே எதிர் வீட்டுக் காரியுடன் சிநேகம் செய்து கொள்ள வேண்டும் என்று சுசீலா நினைத்தாள்.

கிருஷ்ணன் வழக்கம் போல் அவசர அவசரமாகச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு ஆபீஸுக்குச் சென்றான். மத்தியானம் வாயிற் கதவைத் திறந்து கொண்டு சுசீலா தோட்டத்தைச் சுற்றி வந்தாள். ஒவ்வொரு செடி அருகிலும் நின்று அன்று மலர்ந்திருந்த புஷ்பங்களைக் கவனித்தாள். அப்படியே எதிர் வீட்டையும் நோக்கினாள். வாயிற் கதவு தாழிடப் பட்டிருந்தது. கூடத்து ஜன்னல் அருகே நின்று அந்தப் பெண் இந்த வீட்டைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

சுசீலாவின் மனம் சந்தோஷமடைந்தது. அவளுக்கும் தன்னுடன் சிநேகம் செய்து கொள்ள வேண்டும் என்கிற ஆசை இருப்பதாக அவளுக்குத் தோன்றியது. இல்லாவிடில் கண் கொட்டாமல் இந்த வீட்டையே அவள் பார்ப்பானேன்? தானாகவே வலுவில் அவளுடன் பேசுவது கௌரவக் குறைவு என்று நினைத்துக்கொண்டாள் சுசீலா. பரபரவென்று ஒரு கொத்து ரோஜா மலர்களைப் பறித்துக்கொண்டு உள்ளே போய்க் கதவைத் தாழிட்டுக் கொண்டாள்.

## 3

சாயங்காலம் கிருஷ்ணன் காரியாலயத்திலிருந்து வீடு திரும்பினான். சுசீலா தினத்தை விடத் தன் அலங்காரத்தில் அதிகம் அக்கறை காண்பித்





"என்ன ஸார் இது! ஆச்சரியமாய் இருக்கே! நான் வந்து அரைமணியாறது. உங்க பையன் வாயைத் திறக்காமெ சாதுவா உட்கார்ந்துண்டிருக்கானே?"

"மேல் வரிசையில் இரண்டு பல் விழுந்திருக்கு......நீங்க கேலி பண்ணப் போறேளென்னு வெட்கம் அவனுக்கு..."

திருந்த மாதிரி அவனுக்குத் தோன்றியது. புன்னகை மிளிரும் வதனத்துடன் காப்பியைக் கொண்டு வந்து கணவன் கையில் கொடுத்துவிட்டு சுசீலா அவன் எதிரே வந்து உட்கார்ந்து கொண்டாள்.

"என்ன, அலங்காரம் பலமாக இருக்கிறது! எங்காவது வெளியில் போகப் போகிறாயா?" என்று கேட்டான் கிருஷ்ணன்.

"இல்லையே! வெறுமனே தான்! அத்தனை பூவும் செடியிலேயே வாடப் போகிறதே யென்று கட்டி வைத்துக் கொண்டேன்."

"உனக்குப் புது சிநேகிதி கிடைத்து விட்டாள் இல்லையா? அந்த சந்தோஷம் தான் இந்த அலங்காரத்துக்குக் காரணம்! உண்மை அதுதானே?"

"இன்னும் அவளுடன் ஒரு பேச்சு கூடப் பேசவில்லை. அதற்குள் சிநேகிதி என்று விட்டீர்களே?"

'பூ! இதுதானா பிரமாதம்? அதுவும் பெண்களுக்குப் பேசுவதற்குத்தானா விஷயம் அகப்படாது? நகைப் பேச்சு ஆரம்பித்தால் ஒரு யுகம் முடியும் வரை பேசலாமே?" என்றான் கிருஷ்ணன்.

"நான் ஒன்றும் நகைப் பைத்தியம் இல்லை!" என்று சுசீலா கோபித்துக் கொண்டாள்.

பிறகு அவளாகவே, "மத்தியானம் தோட்டத்தில் செடிகளைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அவளுக்கும் என்னுடன் பேசவேண்டும் என்று ஆசை போலிருக்கிறது. ஜன்னல் அருகே நின்று கொண்டு நம் வீட்டையே பார்த்துக்கொண்டிருந்தாள். ஏன், அவள் தான் முதலில் பேசட்டுமே என்று நான் உள்ளே வந்து விட்டேன்" என்றாள்.

கிருஷ்ணனுக்குச் சிரிப்பு வந்தது. "பேச்சுத் துணைக்குக் கூட யாரும் இல்லை என்று நச்சரித்து வந்தாள். இப்போது எதிர் வீட்டில் பேச்சுத் துணைக்கு குடி வந்திருக்கிறார்கள். ஆனால் அவள் தான் முதலில் பேசட்டுமே என்று பிடிவாதம் பிடிக்கிறாளே! ரொம்ப நன்றாக இருக்கிறது!"

இப்படியே ஏழெட்டு தினங்கள் வரையில் ஒருவரை ஒருவர் ஜன்னல் மூலமாகப் பார்த்துக் கொள்வதோடு இருந்தது. சுசீலாவுக்கு எதிர் வீட்டுக்கு அவர்கள் குடி வந்த இரண்டு மூன்று தினங்கள் வரை மனத்துக்கு உற்சாகமும் தெம்பும் ஏற்பட்டிருந்தன. மறுபடியும் அது படிப்படியாகக் குறைந்து போயிற்று. இருந்தாலும், எப்படியாகிலும் அந்தப் பெண்ணுடன் சிநேகம் செய்து கொள்ள வேண்டும் என்கிற ஆவல் மட்டும் அவளுக்குக் குறையவில்லை.

ஒரு நாள், செடியிலிருந்து பறித்து ஒரு சிறிய கூடை நிறையப் புஷ்பங்களை வைத்துத் தன் வேலைக்காரியின் மூலமாக எதிர்வீட்டுக்கு அனுப்பினாள். கதவைத் தட்டியதும், அந்தப் பெண் வந்து கதவைத் திறந்து புஷ்பங்களை வாங்கிக் கொண்டு உள்ளே போய் விட்டாள், படக்கென்று கதவை மூடிக் கொண்டு! சுசீலா இதை ஆவலுடன்

கவனித்துக் கொண்டிருந்தாள். அவள் படக்கென்று கதவை மூடிக் கொண்டு போனது அவளுக்கு என்னவோபோல் இருந்தது. "ரொம்ப கர்வக்காரியாக இருப்பாள் போலிருக்கிறதே! இப்படிப் பட்டவளுடன் நாமாகவே வலுவில் போய்ப் பேசக்கூடாது!" என்கிற உறுதியான தீர்மானத்துக்கு வந்தாள்.

அன்று சாயங்காலம் கிருஷ்ணன் சீக்கிரமாகவே வீடு திரும்பி விட்டான். சுசீலா தன்னை அலங்கரித்துக்கொண்டு அவன் வரவுக்காகக் காத்திருந்தாள். அவன் வந்ததும் வராததுமாக, "வருகிறீர்களா? டவுனில் ஏதோ புதுப் படம் வந்திருக்கிறதாம். பார்த்து விட்டு வந்து விடலாம்" என்று கூப்பிட்டாள் அவள்.

"சினிமாவுக்கா? எனக்கு ஆபீஸ் வேலை நிறைய இருக்கிறதே!"

"எல்லாம் நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம்."

"சரி, சரி, உன் இஷ்டமா என்ன இதுவும்? முக்கியமான அலுவல்கள். நாளை என்று தள்ளிப் போட முடியாது."

சுசீலாவுக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. அவள் எதற்குப் பிரயத்தனப் பட்டாலும் தோல்வியே வந்து கொண்டிருக்கிறது அல்லவா? எதிர் வீட்டுப் பெண்ணுடன் இரண்டு வாரங்களாகச் சிநேகிதம் செய்து கொள்ள வேண்டும் என்று ஆசைப் பட்டுத் தோற்றுத்தானே போனாள்? இப்போது பொழுது போக்குக்காகக் கணவனை சினிமாவுக்குக் கூப்பிட்டால் அவன் வர மறுக்கிறான்!

சுசீலாவின் கண்களிலிருந்து கண்ணீர் மள மள வென்று பெருகியது.

"இந்தப் பாழும் ஊருக்கு வந்ததிலிருந்து உங்களுக்கு ஓயாமல் ஆபீஸ் வேலைதான்! அதுதான் எப்படியாவது போகட்டும் என்றால், சிறையில்வைத்த மாதிரி இந்தப்பாழும் வீட்டைத்தேடிப் பிடித்து என்னைக்கொண்டு வந்துவைத்திருக்கிறீர்கள். அக்கம் பக்கம் என்று ஏதாவது உண்டா? பக்கத்து வீட்டிலே என் பேச்சு அவளுக்குப் புரியவில்லை. அவள் பேச்சு எனக்குப் புரிய வில்லை. ஏதாவது கேட்க வேண்டுமானால் ஊமை ஜாடையில் பேச வேண்டியிருக்கிறது?" — சுசீலா அழுது கொண்டே கூறி விட்டுப் பேச்சை நிறுத்தினாள்.

"பக்கத்து வீடு கிடக்கிறது! எதிர் வீட்டுக்காரியோடு சிநேகிதம் செய்து கொள்கிறது தானே? உனக்கு அசட்டுப் பிடிவாதம் அதிகம்!"

"அவள் தான் முதலில் பேசட்டுமே! என்னைப் பார்த்து விட்டுப் பேசாமல் உள்ளே போய் விடுகிறாளே! அவள் என்ன அவ்வளவு ஒசத்தி?"

"சங்கோஜமாக இருக்கிறதோ என்னமோ! உன்னை விடச் சின்னவள் மாதிரி தெரிகிறதே. நீதான் ஒரு நாள் போய்ப் பேசிப் பாரேன்."

"நான் ஒன்றும் பேசவில்லை! நீங்கள் சினிமாவுக்கு வருகிறீர்களா இல்




"என்ன ஸார்! ஏதோ முணுமுணுத்துக் கொண்டே வருகிறீர்களே, ஏதாவது பிரார்த்தனையோ?"

"ஆமாம்! நாம் போய்ச் சேருகிற இடம் வரையில் ஸ்திரீகளே பஸ்ஸில் ஏறக் கூடாதுன்னு ஸ்வாமியை பிரார்த்தித்துக் கொண்டு வருகிறேன்!"

லையா ?" சுசீலா நாற்காலியிலிருந்து எழுந்தாள்.

"வராமல் போனால் நீதான் அழுது ஆகாத்தியம் செய்கிறாயே, போய்விட்டு வந்தால் போச்சு, நாழிகை ஆகிவிட்டதோ என்னவோ?" என்று கிருஷ்ணன் தன் கைக் கடியாரத்தைக் கவனித்தான். அது நாலு மணியோடு நின்று போய் இருந்தது.

"இந்தா சுசீலா! கடியாரம் நின்று விட்டது. உன் கடியாரத்தில் மணி என்ன ஆகிறதென்று பார்!" என்று மனைவியிடம் கூறினான் கிருஷ்ணன்.

சுசீலா பரபரவென்று எழுந்து உள்ளே போனாள். அந்தக் கடியாரமும் மூன்றரை மணியோடு நின்று போயிருந்தது!

"ரொம்ப அழகாக இருக்கு! அந்தக் கடியாரமும் நின்று போய் இருக்கே!" என்று கூறிக் கொண்டு வந்தாள் சுசீலா.

"சினிமா கிடக்கிறது! இரண்டு கடியாரங்களும் ஒரே சமயத்தில் நின்று



"எங்க வீட்டிலே ரேடியோ இருக்குன்னு பேரே ஒழிய, வைக்கிறதே இல்லே, ஸார்."

"எங்க வீட்டிலே ரேடியோ இல்லேன்னு பேரே ஒழிய, பக்கத்து வீட்டிலே வைக்கிறா ஸார்!"

போய் விட்டனவே? மணி தெரிய வேண்டுமே, சுசீலா! கொஞ்சம் எதிர் வீட்டுக்குப் போயாவது மணி கேட்டுக் கொண்டு வாயேன்!" என்றான் கிருஷ்ணன்.

"என்னது!" என்று அதட்டினாள் சுசீலா. "என்னால் முடியாது! அவள் தான் என்னுடன் முதலில் பேசவேண்டும் என்று நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன்."

"அசடாக இருக்கிறாயே நீ! நீதான் முதலில் பேசிப் பாரேன். அவள் சகஜமாகப் பேசினால் பழகுகிறது. இல்லாவிடில் விட்டு விடுகிறது!" என்று விரட்டினான் கிருஷ்ணன்.

சுசிலா தயங்கிக் கொண்டே சென்றாள். மெதுவாகக் கதவைத் திறந்து கொண்டு வாயிற்படி அருகில் போய் நின்று நாசூக்காக இரண்டு தடவைகள் தட்டினாள். கதவு திறக்கப்படவில்லை. இவ்வளவு தூரம் வந்து விட்டுப் பேசாமல் திரும்பினால் கணவனின் ஏச்சுக்கு ஆளாக நேரிடுமே என்று பலமாகவே இரண்டு முறை தட்டினாள்.

பட்டென்று கதவு திறந்து கொண்டது. அவள் யாருடன் பேச வேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்தாளோ அந்தப் பெண் திறந்த வாய் மூடாமல் அவளையே பார்த்துக் கொண்டு நின்றாள், வாசற்படியில்!

"கடியாரம் நின்று விட்டது. மணி என்ன ஆகிறது என்று உங்களைக் கேட்டுப் போக வந்தேன்" என்றாள் சுசீலா.

அதற்குப் பதில் கூறாமல் அந்தப் பெண் இவளைப் பரிதாபமாகப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளால் இவளுடைய கேள்விக்குப் பதில் கூற முடியாது என்பதை அவளுடைய அழகிய நீண்ட இரு விழிகளும் தெரிவித்தன.

பாவம்! அழகுள்ள அந்தப் பெண் ஊமை என்பதைச் சுசீலா புரிந்து கொள்ள அதிக நேரம் ஆகவில்லை.

# ஏழைக் கோயில்

சரோஜா ராமமூர்த்தி

Saroja Ramamurthy



அந்தக் கிராமத்தில் பரம்பரை பரம்பரையாக வசித்து வந்தவர்கள் எல்லோரும் ஏழைகள். அந்த ஊர்க் கோயிலும் ஏழைக் கோயில்தான். அதில் வாசம் புரியும் இறைவனும், அம்பிகையும் ஏழைகள்தாம். அந்த ஊர் மக்கள் அந்தக் கோயிலை, ஏழைக் கோயில் என்று தான் அழைத்தார்கள்.

ஆம்...அவர்கள் இருட்டுக் கருவறையிலே, கந்தல் உடுத்தி இருளோடு இருளாகவே பல ஆண்டுகளாக வாழ்ந்து பழக்கப்பட்டுப் போனவர்கள். திடீரென்று புரட்டாசி மாதத்திலே அவ்வூர் மக்களின் இதயத்தில் ஒளி வீசி தன்னுடைய இருக்கையினும் ஒளியை நிரப்பிக் கொள்வாள் அன்னை. நவராத்திரி விழா ஒன்பது தினங்களிலும் அந்தக் கோயிலிலே விளக்கெரியும். வெறும் எண்ணெய் விளக்கல்ல! ஊருக்குப் புதிதாக வந்து குடியேறிய பணக்காரரர் இல்லத்திலிருந்து கிடைத்த மின்சார வசதியினால் மின் விளக்குகள் பளிச்சென்று எரிய, இங்கே கோயிலின் ஏழைமையை மேலும் விளக்கிக் காட்டும். அபிஷேகம், ஆராதனை, அர்ச்சனை என்று அமர்க்களப்படும். ஊர் ஆண்களும், பெண்களும் பிராகாரத்தில் கூடி இருப்பார்கள். புதர் மண்டிக் கிடக்கும் மஞ்சள் அரளிச் செடிகளில் குழந்தைகள் கண்ணாமூச்சி ஆடுவார்கள். சாம்பிராணி, கற்பூரத்தின் புகை மண்டலத்தின் இடையே, அம்பிகையின் திரு உருவம் மேகம் சூழ்ந்த நிலவுபோல் ஒளிர்வதைப் பார்த்துத் 'தாயே' என்று எல்லோரும் கன்னத்தில் போட்டுக் கொள்வார்கள்.

பிறகு, சகஸ்ரநாம அர்ச்சனை நடைபெறும். வடை, பொங்கலுக்காகக் குழந்தைகள் காத்துக் கொண்டிருப்பார்கள். பிராகாரத்தில் பெண்கள் உட்கார்ந்து அவரவர் வீட்டு விஷயங்களைக் கொட்டி அளந்துகொண்டிருப்பார்கள். அவர்களில் பெரும்பாலோருக்குப்பெரிய குறை—ஊரிலே இவ்வளவு அழகான கோயில் ஒன்று இருந்தும், அதில் விளக்குக் கூட எரியாமல் இருப்பதும், தங்கள் தோழிகளைச் சந்தித்துப் பேசி மகிழ இடமில்லாமல் இருப்பதும் தான்.

வழக்கம்போல் அந்த வருஷமும் நவராத்திரி விழா ஆரம்பமாயிற்று. முதல் நாள் விடியற்காலம் கோயிலில் கொட்டு மேளம் கொட்டியது. தர்மகர்த்தா கந்தசாமி பிள்ளையும், ஊரில் பிரபலஸ்தரான ஜம்புலிங்கமும், ஊர் நலனில் அக்கறை கொண்ட கேசவமூர்த்தி என்ற இளைஞனும் கருவறைக்கு வெளியே நின்றிருந்தார்கள். முத்துசாமி குருக்கள் ஒவ்வொரு அபிஷேகமாகச் செய்து கொண்டு வந்தார். பால், தயிர், தேன், பஞ்சாமிர்தம், பன்னீர் என்று வரிசையாக நடைபெற்று வந்தது.

''அடடா!'' என்று அலுத்துக் கொண்டார் குருக்கள்.

''என்ன மாமா?'' என்று கேட்டான் கேசவமூர்த்தி.

''என்னப்பா?'' என்று வினவினார் ஜம்புலிங்கம்.

''என்னய்யா ஐயரே?'' என்று மிடுக்குடன் கேட்டார் கந்தசாமிப் பிள்ளை.

'' ஒண்ணுமில்லே. அம்பாளுடைய பீடத்தின் கீழே எலியோ என்னமோ வளை வைத்திருக்கிறது. பெரிய புரைசல் ஒன்று தெரிகிறது. கொஞ்சம் லேசாக அம்பாள் ஆடுவதுபோலத் தெரிகிறது'' என்றார் முத்துசாமி குருக்கள்.

'' எத்தனை நாளாய் இப்படி இருக்கிறது மாமா?'' என்று கவலையுடன் விசாரித்தான் கேசவமூர்த்தி.

''தெரியலையே அப்பா...'' என்று கூறினார் குருக்கள்.

''அவருக்கு ஏன் தெரியப்போவுது? போன நவராத்திரிக்குக் கோயில் கதவைத் தொறந்தாரு. இந்த நவராத்திரிக்கு திரும்பவும் தொறந்திருக்காரு.'' தர்மகர்த்தா பிள்ளையின் அலட்சியமான அபிப்பிராயம் இப்படி எழுந்தது.

''ஆமாமாம் ......சொல்ல மாட்டீங்க பின்னே? கோயிலுக்கு நீங்க எண்ணெய் கொடுத்து எத்தனை வருஷமாச்சு? எண்ணெய் இல்லாம நான் என்ன தண்ணியையா ஊற்றி விளக் கேத்தறது?'' என்று பாய்ந்தார் குருக்கள்.

''ஐயரே! சும்மாப் பேசாதீங்க. நான் எல்லாத்தையும் ஒழுங்காச் செய்துகிட்டு வந்தவன்தான். நேத்திக்கி, இன்னிக்கி எலக்ஷன்லே நின்னுட்டு பதவிக்கு வந்தவங்க எல்லாம் எம் மேலே வவுறெரிஞ்சுகிட்டு கோயிலுக்குள்ளே வந்து போட்டி போட வந்தாங்க. அவங்களே கோயிலை நடத்தட்டும்னு நான் ஒதுங்கிக் கிட்டேன்......''

முத்துசாமி குருக்கள் மௌனமாக அம்பிகைக்கு மஞ்சள் நீராட்டுவதில் முனைந்திருந்தார். கந்தசாமிப் பிள்ளை கூறுவதிலும் உண்மை இருந்தது.

அந்தச் சிவன் கோயிலில் ஓகோ என்று திருவிழாக்கள் நடக்காவிடினும், மாதா மாதம் கிருத்திகை விழாவும், தைப் பூசமும், மாசி மகமும், திருவாதிரையும் ஒழுங்காக நடைபெற்று வந்தன. இரண்டு கால பூஜையை ஒழுங்காகவே செய்து வந்தார் குருக்கள். மாலை நேரத்தில் சிலர் மன அமைதியை நாடிக் கோயிலுக்கும் சென்று வந்தனர். ஆனால், கடந்த சில வருஷங்களாக — ஊரில் தேர்தல் அது இது என்று போட்டியும், பூசலும் ஆரம்பித்த பிறகு — கோயிலைக் கவனிப்பார் யாரும் இல்லை. அந்த வருஷம் தேர்தலில் வெற்றிகண்ட சுப்பையா பிரமாதமாக முருகனுக்கு அபிஷேகம் செய்வித்தார். அன்று கிருத்திகையும் சேர்ந்துவிடவே, முருகன் விழாக் கோலம் பூண்டு,இரு மாது புடைசூழ உலா வர ஆரம்பித்தான். நான்கு மாட வீதிகளையும் சுற்றி வந்து கோயிலுக்குச் செல்லும் தெருவில் அவன் திரும்பியவுடன் இதுவரையில் அமைதியாக முருகனுடன் வந்துகொண்டிருந்த சுப்பையா திடீரென்று கட்டளை ஒன்று பிறப்பித்தார்.

''ஐயரே சாமி எப்படியும் நம்மவூட்டு வாசலுக்கு வந்தாகணும்'' என்றார் அவர்.

குருக்களும் தர்மகர்த்தா பிள்ளையும் திடுக்கிட்டார்கள்!

''வழக்கமில்லையே அப்படி'' என்றார் கந்தசாமிப் பிள்ளை.

''இன்னையிலேந்து வழக்கமாயிருக்கட்டுமே பிள்ளை! ஊருக்குப் பெரிய மனுஷன் சொல்றேன், தட்டிப் பேசறீங்களே...'' என்று வம்புக்கிழுத்தார் சுப்பையா.

''நீங்க ஊருக்குப் பெரிய மனிசன்தானுங்க. அதை நான் ஒத்துக்கிடறேன். ஆனா......நம்மைவிட அவன் பெரியவன் என்கிறதை நாம மறுக்கப் படாது பாருங்க. அவனைக்கூடவா நம்ப தேர்தல முறைப்படி ஆட்டிவைக்கிறது? யோசனை பண்ணிப் பாருங்க ஐயா...'' விநயமாக தர்மகர்த்தா மறுக்கவும், சுப்பையாவைச் சேர்ந்தவர்கள் கந்தசாமிப் பிள்ளையைத் தாக்கத் தயாராக நின்றார்கள்.

''நாலு தெரு சுத்தறவங்க அவர் வாசலுக்கும்தான் போவணும்...'' என்றார்கள்.

ஆனால், கந்தசாமிப் பிள்ளை ஒரே பிடிவாதமாக மறுத்தார். 'வழக்கத்துக்கு மாறாக இன்று ஒருவர் வீட்டு வாசலுக்குப் போனால், நாளை இன்னொருவன் கூப்பிடுவான். மனிதருக்குள்ளே ஓடுகிற இந்த ஆசைகளுக்கு நம்மைப் படைத்தவனைப் பணயம் வைக்கக் கூடாது' என்று கூறிவிட்டு கோயிலுக்குச் சென்று விட்டார் அவர்.

அப்புறம், சுப்பையா கறுவினாராம்; 'அடுத்த கிருத்திகையிலே சாமி எப்படி தெருவிலே வறது பார்க்கலாம்' என்று. அடுத்த கிருத்திகை அன்று ஊர்க் காலிகள் அனைவரும் கோயிலில் சுற்றிக் கொண்டேயிருந்தார்கள். முருகன் விழாக் கோலம் புனைந்து கொண்டு மயிலின் மீது ஆரோகணித்திருந்தான். ஆனால், வெளியே கிளம்பவில்லை. 'வேண்டியவர்களுக்கும், வேண்டாதவர்களுக்கும் நான் வேண்டியவன். என்னை அவர்களே வந்து காணட்டும்' என்கிற உறுதியுடன் அவன் மனிதப் பிறவிகளைக் கண்டு புன்னகைத்தான். முத்துசாமி குருக்கள் மட்டும் மனம் பதைத்தார்.

''நீர் சும்மா இரும் ஐயரே! கிருத்திகை விழா கோயிலுக்கு உள்ளாறவே நடக்கட்டும். போகப் போகப் பார்த்துக்கலாம்...'' என்றார் கந்தசாமிப் பிள்ளை. அப்புறம் ஒவ்வொரு திருவிழாவாக நின்று விட்டது. ஊரிலே ஒரு கோயில் இருப்பதை நவராத்திரியின் போது நினைவு படுத்திக் கொண்டு உடனே அதை மறந்தும் வந்தனர் அவ்வூர் மக்கள். தர்மகர்த்தாப் பிள்ளையைப் பார்த்தாலே பெரும்பாலோருக்கு ஒரு ஏளனம். காரணம், 'காலத்தோடு அனுசரித்துப் போகாதவன். பெரிய மனுஷங்களைப் பகைச்சுக்கிட்டுத் திரியறவன். இந்தக் காலத்துலே இப்படி இருந்தா முடி

யுமா?' என்று பலர் ஏசினார்கள். அவர் அந்த ஊரை விட்டு வெளியூர் சென்று வசிக்க ஆரம்பித்தார். நவ ராத்திரி விழாவின்போதும், எப்பொழுதாவது தம் மன துக்குத் தோன்றியபோதும் கோயிலுக்கு வருவார்.

''அப்பனே! தாயே!'' என்று கண்மூடி மெய்ம் மறந்திருப்பார். ஆதியும், அந்தமும் இல்லாத அவர்களின் திரு உள்ளத்தில் என்னதான் இருக்கிறதோ என்று நினைத்து ஏங்கி மறுகு வார். வெளி வம்பு எதையும் அவர் விலை கொடுத்து வாங்கத் தயா ராக இல்லை. ஒருவேளை சட்டம் அது இது என்று அவர் வழக்கறிஞர் களைத் தேடி ஓடி இருந்தால் அவர் செல்வாக்கே தலை தூக்கி இருகக லாம். உண்மையின், அன்பின் இருப்பிடமான இறைவனிடம் முறை யிட்டு விட்டு ஒதுங்கி நின்றார் பிள்ளை.

அரக்கு வர்ணத்தில் மஞ்சள் கரையிட்ட பாவாடை உடுத்தி, சாய்ந்த கொண்டை வேய்ந்து, ரோஜாவும், மருக்கொழுந்தும் சேர்த்துக் கட்டிய மாலை புனைந்து, பாதங்களில் சிலம்புகள் தவழ, மார் பில் முத்துச் சரங்கள் புரள, நெற்றியில் சிவப் புத் திலகத்துடன் மென்னகை புரிந்தாள் அன்னை. அலங்காரம் அன்று அற்புதமாக இருந்தது. 'ஓம், ஓம்' என்று ஜாலராக்கள்



முழங்க தீபாராதனை நடந்தது. சகஸ்ர நாம அர்ச்சனை ஆரம்பித்தவுடன் ஜம்பு லிங்கமும், கந்தசாமிப் பிள்ளையும், கேசவமூர்த்தியும் வெளிப் பிராகாரத்தில் வந்து அமர்ந்து கொண்டார்கள். குழந்தைகள் கொம்மாளமிட்டு கண்ணு மூச்சி விளையாடிக் கொண்டிருந்தனர். பிள்ளையாரின் பின்புறம் ஒளிந்து கொண்டிருந்த சிறுவன் பிடிபட்டு விடவே, அவர்கள் போட்ட இரைச்சலில் தேவியின் திருநாமங்களின் ஒலி தேய்ந்து விட்டது.

" டேய் வாலுங்களா! வெளியே போறீங்களா இல்லையா? உதைக்கட்டுமா?" என்று சொல்லிக் கொண்டே எழுந்தார் கந்தசாமிப் பிள்ளை.

" இருங்கள் பிள்ளை " என்று கையமர்த்தினான் கேசவமூர்த்தி.

" இந்தக் குழந்தைகள் இப்படி தினமும் குதூகலமாக விளையாட வழி இல்லாமல் இந்தக் கோயிலைப் பாழாக்கி வைத்திருப்பது யார் குற்றம், சொல்லுங்கள்? நிலவு நாட்களைத் தவிர, மற்ற நாட்களில் கோயிலின் இருண்ட மூலைகளும், முட்புதர்களும், ஹோவென்று ஆடும் மரநிழல்களைத் தவிர, இந்தக் கோயிலினுள் அவர்கள் எதையும் பார்க்கவில்லை. அதனால், அவர்கள் உள்ளே நுழைவதும் இல்லை. விளக்குகளும், நறுமணமும்கூடிய இந்த ஒன்பது நாட்களில் மட்டும் கோயிலுக்குள் விளையாடிவிட்டு மறுபடியும் பெரியவர்களைப் போல அவர்களும் மறந்து விடுகிறார்கள். எந்த விதத்திலும் நாம்தான் அவர்களுக்கு வழி காட்டிகளாக இருக்கிறோம்......"

ஜம்புலிங்கம் தம் எதிரே இருந்த நாகலிங்க மரத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். பச்சை இலைகளினூடே அழகிய மலர்கள் இதழ் வெடித்து மணத்தைச் சிந்தின. நான்கு இதழ்களுக்கு மேலே ஐந்தாவது இதழ் அரவின் தலைபோல் உயர்ந்து குடை பிடிக்க லிங்க உருவில் சின்னஞ்சிறிய மொட்டு ஒன்று — பெரிய தத்துவத்தைச் சிறிய உருவிலே வடித்துக் காட்டிய இயற்கையின் பேரதிசயம்! விஷயம் எவ்வளவு பெரிதாக இருந்தாலும், சிறிய மனிதனால் செய்தும் பார்க்க முடியும் என்று அவருக்குள் ஏதோ ஒன்று கூறிற்று.

" பிள்ளைவாள்!" என்று கையைச் சொடுக்கிக்கொண்டே திரும்பினார் ஜம்புலிங்கம்.

" இந்த விஜயதசமி அன்று கோயில் கும்பாபிஷேகத்துக்கென்று ஊரிலே நிதி திரட்ட ஆரம்பிக்கலாம்......சேர்ந்த பணத்தோடு, அப்புறம் நாலு பெரிய மனுஷங்களைப் போய்ப் பார்க்கறது. நல்லதுக்கு நாலுபேர் உதவ மாட்டாங்களா?" என்று ஜம்புலிங்கம் கூறி முடிக்கவும், கருவறையில் தீபாராதனை நடப்பது தெரிந்தது.

விஜயதசமி அன்று காலையில் ஜம்புலிங்கமும், கந்தசாமிப் பிள்ளையும் மட்டும் கும்பாபிஷேகத்துக்கு நிதி திரட்ட வெளியே கிளம்பினார்கள். பத்து, ஐந்து என்று இருநூறு ரூபாய்கள் வரையில் சேர்ந்தது. அத்துடன் ஒரு வாரத்துக்கு மும்முரமாகக் கேசவமூர்த்தியும் வசூல் செய்தான். எல்லாமாகச் சேர்ந்து ஐந்நூறு ரூபாய் வரைக்கும் எட்டியது. ஊருக்குப் பெரிய மனிதர் ஆயிற்றே என்று சுப்பையாவையும் இந்த விஷயத்தில் கலந்து ஒரு முடிவுக்கு வருவது என்று மூவரும் தீர்மானித்தார்கள். அப்படியே போய்ப் பார்த்தார்கள்.

"அதுக்கென்னங்க பிள்ளைவாள். எம் பங்குக்கு ஐந்நூறு போட்டுக்குங்க..." என்று இறங்கி வந்தார் சுப்பையா. அடுத்து என்ன செய்யப்போகிறார்கள் என்பதைப் பொது மக்களுக்கு அறிவிக்க ஒரு கூட்டமும் போட்டார்கள். மேடையிலே பக்தியைப் பற்றியும், நம் கோயில்களில் இருக்கும் கலைச் செல்வங்களைப் பற்றியும் மனம் உருகப் பேசினார்கள். இவற்றை நிர்வகிக்க ஒரு கமிட்டி தேவையல்லவா? அந்தப் பிரஸ்தாபம் வந்தபோது தான் மறுபடியும் தகராறு மூண்டது. 'கும்பாபிஷேகக் கமிட்டி யார்' என்று பொதுவாக இருக்கட்டும் என்றான் கேசவமூர்த்தி.

" அதெப்படி முடியுங்க? எம்பேருதான் போடுங்களேன். ஊர் ஜனங்களுக்கு உழைக்கிறவன் அந்த கௌரதை அடையக் கூடாதுங்களா?" என்று சண்டைக்கு வந்தார் சுப்பையா.

" பரம்பரை பரம்பரையாக நாங்க தர்மகர்த்தாவா இருக்கோம், எம் பேருதான் வழங்கட்டுமே..." என்றே சண்டைக்கு வந்தார் கந்தசாமிப்பிள்ளை.

சண்டையும், குழப்பமுமாகக் கூட்டம் கலைந்து விட்டது. வசூலான பணத்தைம் பாங்கியில் போட்டு விட்டு, எல்லோரும் ஓய்ந்து விட்டார்கள். அதன் பிறகு வழக்கப்படி நடந்து வந்த திருவிழாக்களுக்குப் பிடித்தது சனியன். கந்தசாமிப் பிள்ளையைக் கேட்டால் சுப்பையாவைக் கேள் என்பார்; அவர், பிள்ளையைக் கேள் என்பார். முத்துசாமி குருக்கள் அலுத்துப் போய் வேறு கோயிலில் வழி தேடிக் கொண்டார்.

இறைவனும், இறைவியும் அந்தக் கோயிலின் இருட்டறையில் இருந்தவாறு ஒருவரை ஒருவர் பார்த்து இவர்கள் அறியாமையைக் கண்டு நகைத்துக் கொண்டே இருந்திருக்க வேண்டும்!

இரண்டு மூன்று வருஷங்களுக்குப் பிறகு ஒரு நாள் மாலை ஒருவர் தாடியும், திருநீறும் பூண்டு, வட இந்தியா பூராவும் சுற்றி அலைந்து விட்டு தென் கடலாடி மீண்டும் தன் போக்கில் வந்து அந்தக் கிராமத்தின் ஏழைக் கோயிலின் முன் பாக வந்து நின்றார். ஐப்பசி மாதத்து மழைக்காலப் பொழுது. அந்திவானம் பொன்னிறம் காட்டவில்லை. வான மெங்கும் கனத்த மேகப் போர்வை.

வெளியே கனத்த மழை பெய்ய ஆரம் பித்ததும் பெரியவர் கோயிலுக்குள் சென்று உட்கார்ந்தார். அவரைச் சுற் றிலும் ஒரே இருட்டு. வெளியே கனத்த இருள். சிறிது யோசித்து விட்டு அவர் தமது பையில் இருந்து 'டார்ச்' விளக்கு ஒன்றை எடுத்து விசையை அழுத்தினார். அதைக் கையிலே பிடித்தவாறு தெய்வ உருவங்களைப் பார்வையிட்டார். ஓர் அறையில் லிங்கமூர்த்தி, மற்றொரு கரு வறையில் அம்பிகை. இருவருமே எழி லுக்கு இலக்கணமாக இருந்தனர். ஆனால், அவர்களைச் சுற்றி? வௌவால் களும், தேள்களும், வண்டுகளும் நிரம்பி இருந்தன. பெரியவர் சிறிது நேரம் கண்களை மூடியவாறு நின்றிருந்தார்.

உலகத்திலே அவர் எப்படி எப்ப டியோ வாழ்ந்து விட்டார். குழந்தைப் பருவத்தில் அவருக்கு எதைப் பற்றியும் சிந்திக்கும் திறன் ஏற்படவில்லை. நடுத் தர வயதில் அத் திறன் ஏற்பட்டும் சிந்திக்க முடியவில்லை. கறுப்பு மார்க் கட்டில் அவர் எவ்வளவோ பணம் சேர்த்தார். தம் இஷ்டப்படி செலவு செய்தார், உண்டார், களித்தார். அந்த மகிழ்ச்சி ஆற்று வெள்ளம்போல் குமிழி யிட்டுப் பெருகி அவர் குடும்பத்தைத் திணற வைத்துக் கொண்டிருந்தது.

ஆற்றின் திசை மாறுவதுபோல் அவர் வாழ்க்கையின் திசை திடீரென்று ஒரு நாள் மாறியது. மேற் படிப்புக்காக வெளி நாடு புறப்பட்ட அவர் ஒரே மகன் விமான விபத்தில் உயிரிழந்த போது அவர் செய்த பாவங்களின் உரு வம் அவர் முன் எழுந்து கைகொட்டி நகைத்தது. அந்த ஏக்கத்தில் வாழ்க் கைத் துணைவியும் மறைந்தபோது அது பேய்க் கூச்சல் போட்டு, அவரைத் தடு மாற வைத்தது. அப்புறம்தான் அவர் சிந்திக்கத் தொடங்கினார். அள்ளி அள்ளி தருமம் செய்தார். பெரியவர் மனம் வெறுத்து தனக்கு அமைதி தேடிக் கொள்ளவே அறம் வளர்ப்பதாக ஊரார் கருதினர். மேலும் மேலும் அவருக் குப் புகழ் வளர்ந்தது. ஒவ்வொரு பொதுக் கூட்டத்திலும் அவரைப்போற் றிப் புகழ்ந்தார்கள். அவர் இதயத்தி னுள் எழும் குரலுக்கு அவரால் அமைதி தர முடியவில்லை. மனச்சாட்சி அவரை ஓயாமல் துன்புறுத்தியது. இருக்கிற சொத்துக்களை விற்று ரொக்கமாகப் பாங்கியில் கட்டி விட்டு ஊரை விட்டே கிளம்பி விட்டார் அவர்.

கண்களில் நீர் மணிகள் பளபளக்க கோயிலுக்கு வெளியே அவர் வரும் போது இரவு பதினொரு மணி இருக்க லாம். மழை விட்டு வெளிறிய வானத் தில் மூளிச் சந்திரன் சாய்ந்து உறங்கிக் கொண்டிருந்தான். பெரியவர் தெரு வில் இறங்கி நடக்க ஆரம்பித்தார். தெற்கு வடக்காக இருந்த தெரு ஒன்றில் ஒரு வீட்டில் விளக்கு எரிந்து கொண் டிருந்தது. அவ்வீட்டுக்கு உரியவர் அந்த ஊர் மணியக்காரர். தெருத் திண்ணையில் வந்து உட்கார்ந்த பெரியவருக்கு அவ் வீட்டு அம்மாள் உணவு அளித்து உப சரித்தாள். பெரியவர் கோயிலைப் பற்றி விசாரித்தார். எல்லாவற்றையும் புரிந்து கொண்டார். மனிதன் எதிலும் தனக்கு முதலிடம் தேடிக் கொள்ள ஆசைப்படு வதே இதற்கெல்லாம் காரணம் என்பது அவருக்குப் புரிந்து போயிற்று. அங் கிருந்து அடுத்த நாள் புறப்பட்டுச் சென் றவர், திரும்பவும் ஒரு வாரத்துக்கு அப் புறம் ஒரு நாள் காலை நேரத்தில் கந்த சாமிப் பிள்ளையைத் தேடிக்கொண்டு வந்தார். இந்தச் சாமியாரைப் பார்த்த போது பிள்ளை பக்தியுடன் அவரை வர வேற்றார்.

"ஐயாவுக்கு எந்த ஊர்?" இது கந்தசாமிப் பிள்ளை.

"எல்லா ஊரும் என்னுடையதுதான். ஆனால் எவருக்கும் எதுவுமே சொந்த மில்லை என்றுஉணர்ந்து வந்திருக்கிறேன். பக்கத்து கிராமத்துக் கோயிலுக்கு நீங்கதான் தருமகர்த்தான்னு சொன் னார்கள்—" பெரியவரின் தயக்கமான பதில் இவ்வாறாக வெளிவந்தது.

"கோயிலுக்குக் கும்பாபிஷேகம் செய் யத்தான் வேணுங்க. கையிலே இருப் பது ஆயிரம் ரூபாய் தாங்க. அத்துடன் யார் பேரைப் போடறதுன்னு ஒரு திகைப்புங்க......" கந்தசாமிப் பிள்ளை

யும் சாமியார் கோயிலைப்பற்றி விசாரிப்பதன் நோக்கத்தைப் புரிந்து கொண்டு பதிலளித்தார். பெரியவர் சிரித்தார்.

"உங்க இரண்டு பேர் பேரையும் போட்டுக்குங்க..."

"அதெப்படிங்க முடியும்? ஒருத்தர் பேரு மேலே, இன்னொருத்தர் பேரு கீழே...நல்லா இருக்குதே நியாயம்?..."

"அப்படியில்லை பிள்ளைவாள். பத்தாயிரம் ரூபாய் நான் தருகிறேன். உங்கள் இரண்டு பேர்களுடைய பெயர்களையும் ஒரே வரிசையில் போட்டுக் கொள்ளுங்கள்......"

"என்னங்க?... என்னங்க? பத்தாயிரமா? அப்ப உங்க பேருதாங்க முதல்லே இருக்கணும்?..."

"அதுதான் வேண்டாம் என்கிறேன். கும்பாபிஷேகத்தன்று நான் எங்கிருந்தாவது இறைவனைத் தரிசனம் செய்து கொள்ளுகிறேன்... இந்தாருங்கள்... பிடியுங்கள்! ....."

பத்தாயிரம் ரூபாய்களைக் கந்தசாமிப் பிள்ளையின் முன்பாக வைத்து விட்டு எழுந்தார் பெரியவர்.

"அப்போ உங்க விலாசம்? கும்பாபிஷேகப் பத்திரிகை அனுப்பணுமே?" என்று வியந்து கொண்டே நோட்டுக் கற்றைகளையும், பெரியவரையும் மாறி மாறிப் பார்த்தார் பிள்ளை.

"வேண்டாம் பிள்ளைவாள்! நான் ஒரு நாடோடி. எப்படியும் கும்பாபிஷேகத்தன்று காலை வந்து தரிசனம் செய்து விட்டுப் போவேன்......" என்று மொழிந்து விட்டு அங்கிருந்து நகர்ந்து விட்டார் பெரியவர்.

காலைக் கதிரவன் ஒளியில் தெளிந்த வானத்தின் கீழே தீட்டிய சித்திரம் போல் கோபுரம் புத்தம் புதியதாய்க் காட்சி தருகிறது. மக்கள் 'ஏழைக் கோயிலிலே' திருவிழா என்று சொல்லிக் கொண்டு குழுமி இருக்கிறார்கள். முத்துசாமி குருக்கள் கருவறைக் கோபுர கலசத்தின்மீது அபிஷேகம் செய்கிறார். 'ஹரஹர சம்போ' என்கிற ஒலி விண்ணை முட்டுகிறது. ஒளி வீசும் கருவறையில் நின்றவாறு இறைவனும், இறைவியும் ஒருவரை ஒருவர் பார்த்து முறுவலிக்கிறார்கள்.

சென்னிமேல் கரம் கூப்பி வணங்கிய ஒருவர், நெற்றிநிறையத் திருநீறும் வாய் நிறையப் பஞ்சாட்சரமுமாக, என்றுமில்லாத அமைதியுடன் தாம் வந்தவழியே திரும்பி நடந்து செல்கிறார்.

**குறைசொல்லிக் குறைத்துக்கொள்ளவும் முடியவில்லை. போற்றிப் புகழ்ந்து பெருக்கிக்கொள்ளவும் முடியவில்லை. இதுதான் பாசத்தின் தன்மையோ?**



# வெண்ணெய் திரள...

சரோஜா ராமமூர்த்தி

சூரிய சந்திரன் நித்தியவாசம் புரியும் அந்தக் கரியேறிய சமையலறையில் அடுப்பின் மீது சாய்ந்து கொண்டிருந்த தோசைக் கல்லில் 'சொய்'யென்று மாவை ஊற்றி எண்ணெயை மொண்டு விட்டாள் காமு.

நரைத்த கூந்தல் பளபளவென்று மின்னியது. வற்றி உலர்ந்து போன உடல். வாழ்க்கை பூராவும் அமைதி, மகிழ்ச்சி இரண்டையும் இழந்துவிட்ட ஏக்கம் முகத்தில் குமிழியிட காமு வெறித்து அந்தக் கரியேறிய சுவர்களை ஏனிப்படிப் பார்க்கிறாள்?

அந்தச் சுவர்களில் அழகிய அலமாரிகளோ, எவர்சில்வர் பாத்திரங்களோ, கண்ணாடி ஜாடிகளைத் தாங்கும் வலை பீரோவோ எதுவுமே இல்லை. ஆனால், சுவரின் கோடியில் புரை ஒன்றில் நசுங்கிப் போன அலுமினியத் தட்டு ஒன்று வெளியே எட்டிப் பார்க்கிறது. சற்று வசதியுள்ள வீடானால் அந்தத் தட்டின் மதிப்பு வேறுவிதமாக இருக்கும். கொல்லையில் பாத்திரம் துலக்க சாம்பலையோ, மண்ணையோ அதில் போட்டு வைத்திருப்பார்கள். ஓரங்கள் நசுங்கி, நடுவில், பள்ளம் விழுந்திருந்தாலும் அதற்கு இன்னமும் 'சாப்பிடுகிற தட்டு' என்கிற பெயரில் ஒரு பதவி ஒட்டிக்கொண்டிருந்தது. காமு அதைத்தான் பார்க்கிறாள் அப்படி. அந்தத் தட்டும் அசைவதுபோல் இருக்கிறது. ரோமம் அடர்ந்தகரம் ஒன்று தட்டை வேகமாக எடுக்கிறது. காமுவின் மகன் வாசு அந்தத் தட்டுடன் அவள் எதிரில் வந்து அமர்ந்து கொள்கிறான். கல்லில் தும்பைப் பூப்போல, வட்டவடிவமாகத் தோசை வெந்து கொண்டிருக்கிறது. அசல் திருநெல்வேலிக் கல் தோசை, கமகமவென்று உளுந்தின் மணம் காதம் வீசுகிறது. தொட்டுக்கொள்ள ஒன்றும் வேண்டாம். பிட்டு வாயில் போட்டால் பஞ்சுபோல் சுகமாகத் தொண்டைக்குள் இறங்கி வயிற்றுக்குச் சென்றுவிடும்.

'அம்மா! தோசைக்குத் தொட்டுக்கொள்ள சட்டினியா மிளகாய்ப் பொடியா?' என்று அதட்டுகிறான் வாசு.

'இரண்டுமே இல்லையப்பா. நீ பாட்டுக்கு இப்படி இருந்து கொண்டே இரு மைனர் மாதிரி. உனக்கு வயணம் வேறே.' காமு வின் குரல் ஓங்கி ஒலிக்கிறது. அத்துடன் தோசைச் சட்டுவமும் ஓங்கி ஆடுகிறது.

வாசு அலமாரியில் இருந்த தகர டப்பாவைத் திறக்கிறான். நாலு மிளகாய் வற்றலைப் பொறுக்கி எடுத்துக்கொண்டு உப்பை வைத்து அம்மியில் தானே மிளகாய்ப் பொடி தயார் செய்து கொள்கிறான். 'குடக், குடக்' கென்று அம்மிக் குழவி இப்படியும், அப்படியும் கல்லில் உராய்ந்து தேயும் சத்தம் வருகிறது.

'அடப்பாவி! கடன்காரா! குழம்புக்குத் தாளிச்சுக் கொட்ட வைத்திருந்த மிளகாயை எடுத்துப் போய்விட்டாயே...'

'உஸ்ஸ்...சும்மா சத்தம் போடாதே. நாலு மிளகாய்க்கே இந்தச் சத்தம் என்றால் இதோ பார் நண்பன் ஒருவன் என்னை நம்பி நாற்பத்தைந்து ரூபாய் கொடுத்திருக்கிறான்' வாசு ரூபாய் நோட்டுகளை எடுத்து அம்மாவின் முகத்துக்கு நேராக ஆட்டுகிறான். காமு வியப்புடன் அவனைப் பார்த்து, 'எதுக்கடா' என்று அதிசயிக்கிறாள்.

'ஜக்கு இல்லே ஜக்கு? அதாம்மா! அந்த டாக்டர் பிள்ளை. அவன் வெளியூர் போகிறான். சும்மா வைத்திருடா. வந்து வாங்கிக் கொள்கிறேன் என்றான்...வந்து கேட்டாலும் கேட்டு வாங்கிக் கொள்வான். இல்லே இவருக்கே 'பக்ஷீஸ்' ஆகக் கொடுத்துவிட்டாலும் விடுவான்.'

'உன்னை நம்பி ஒருத்தன் பணத்தைக் கொடுத்திருக்கிறானே. பணத்தின் அருமை தெரியாதவன்.'

பிள்ளையின் குணம் அவளுக்கு நன்றாகத் தெரியும். பணத்தின் அருமை மட்டுமல்ல, ஐம்பது வயசுக்கு மேல் அடுப்படியில் நெருப்பின் முன்னால் கோடையிலும், குளிரிலும், மாரியிலும் வற்றிச்சாகிறாளே நம் அம்மா' என்கிற எண்ணம் லவலேசமும் இல்லாமல் வளர்ந்து ஆளாகியிருப்பவன் வாசு.

குடும்பத்தின் மூத்த மகன். அந்த வறுமையிலும் வாலிபத்தின் எழிலைக் காட்டும் இருபத்திரண்டு வயசாகியவன். இருந்தும் விளையாட்டுப் பிள்ளைதான்.

காமுவின் வெறித்த நோக்கு குறைய நாலைந்து நிமிஷங்கள் ஆகின்றன. சற்றுமுன் அவள் கண்ட வாசுவோ, அவன் செய்யும் அட்டகாசங்களோ வெறும் பிரமையாக மாறிவிடுகிறது. தோசை, கல்லில் காய்ந்து தீய்ந்துக் கருகும் பருவத்தை அடைந்துவிட்டது. காமு கண்களில் கண்ணீர் ஆறாகப்பெருக, அடிவயிற்றிலிருந்து நெருப்பாய்த் தகித்துக்கொண்டு பாசம் என்கிற உணர்ச்சி பொங்கிப் பெருக விம்முகிறாள்.

'அடியே மங்கா! வாசு வந்து விட்டாண்டி வாசு! வந்து பாரேண்டி' பாசத் தீயில் வெந்து சொற்கள் சிதைந்து வெடிக்கின்றன. மங்கா என்கிற அவள் மகள் மங்களம் தாயின் அலறல் கேட்டு ஓடோடி வருகிறாள். அவளை அணைத்துக் கொண்டு, 'அம்மா...அம்மா அழாதே அம்மா' என்று தேற்றி தானும் கண்ணீர்ப் பெருக்குகிறாள்.

'இன்றோடு பதினைந்து நாட்கள் ஆகிவிட்டதடி மங்கா நம்ப வாசு போய். தோசை என்றால் அவனுக்குக் கொள்ளை ஆசை, வார்த்துப்

போடப் போடத் தின்பாண்டி. அதற்கு மிளகாய்ப் பொடி தான் வேண்டும் அவனுக்கு...'

'அம்மா...இதோ என்னைப் பார். நீ இப்படி வெறுமனே அவனை நினைச்சுண்டு அழாதே அம்மா. அவன் பிறக்கவில்லைன்னு நெனச்சுக்கோ. இல்லை...அவனுக்கு முந்தி எத்தனையோ பூவும், பிஞ்சுமாய்ப் போச்சுன்னு சொல்வியே. அப்படி நெனச்சுக்கோ. அம்மா! உன்னைப் பார்க்கச் சகிக்கலையே. வாசுவும்–நீயும், எலியும் பூனையுமா இருந்ததைப் பார்த்த நான் 'அம்மாவுக்கு வாசு பேரிலே ஆசையே இல்லைன்னு நெனச்சேனே. இப்படி உருகிப் போயிட்டியே அம்மா. கடன்காரன்! போகிற பாட்டிலே உன்னை உருக்குலைச்சுட்டானே.'

உழைப்பின் உயர்வில் நம்பிக்கை கொண்ட காமுவுக்கு வாசு பிள்ளையாகப் பிறந்ததே அதிசயம்தான். இரண்டு குழந்தைகளுடன் நிர்க்கதியாக நின்றுவிட்ட ஏழைத்தாய் அவள். தன் குழந்தைகளின் வருங்காலம் சிறப்பாக அமைய அவள் சந்தனம் போல் தேய்ந்து வந்தாள். ஆனால், இம்மாதிரி தாய்களுக்கென்று பிள்ளைகள் வந்து பிறக்கின்றனவே! வாசுவுக்குக் காமுவின் உழைப்பின் பெருமையோ, இன்னதென்றே தெரியவில்லை. அம்மா எப்படியும் வேளா வேளைக்குச் சாப்பாடு போட்டு விடுவாள் என்கிற திடமான நம்பிக்கையில், அவன் தன்னுடைய பொன்னான காலத்தை வீணாக்கிக்கொண்டு எதிலும் ஈடுபாடு இல்லாமல் வளர்ந்து விட்டான்.

உதயத்திலிருந்து அஸ்தமனம் வரை வாசுவுக்கு அன்றாடப் பொழுதே ஒரு வெற்றிப் பொழுதாக அமைந்திருந்தது. வாசுவின் முகராசி அவனுக்குப் பெரிய இடத்துப் பிள்ளைகளின் நட்பு கிடைத்தது. அவர்கள் தயவில் அவன் உல்லாசமாக நாட்களைக் கடத்தியும் வந்தான்.



காமு மாம்பலத்தில் பல பெரிய மனிதர்களின் வீடுகளில் விசேஷ நாட்களில் சமைப்பதற்குச் செல்வதுண்டு. யாருடைய காலையாவது பிடித்து வாசுவை ஒரு வேலையில் சேர்த்துவிட ஆசைப்பட்டாள். அவளுக்குக் கௌரவமாக வாழவேண்டும் என்று இருக்கிற எண்ணத்தைப்போல ஒரு துளி யாவது வாசுவுக்கு இருந்தால் அவன் என்றோ உருப்பட்டிருப்பானே.

அதையும் மகனிடம் கேட்டு விட்டாள் காமு.

'வாசு! சப்ஜட்ஜ் கோபால சாமி உன்னை அவர் வீட்டுக்கு வரச் சொன்னாரப்பா. ஏதாவது வேலை பார்த்துத் தருகிறாராம். போய் விட்டு வா அப்பா...'



வாசு அலட்சியமாகச் சிரித்தான், அவனுக்கே உரித்தான சிரிப்புடன். 'என்ன வேலையாம்! பிரமாத வேலை' என்று கேட்டான். தாயினால் பொறுமை வகிக்க முடியவில்லை.

பிரமாதமான வேலை என்று ஒன்று இருக்கிறதா என்ன? எல்லாவிதமான உழைப்புக்கும் தனித்தனி மதிப்பு இருக்கத்தான் செய்கிறது. ஏன், காமு சமைக்கிறாளே பலர் வீட்டில். அதற்கும் மதிப்பு உண்டு. சுவையாக அவள் சமைத்துப் பரிமாறியதை ஒரு வீட்டில் உண்டு களித்தவர்கள், அவளைத் தங்கள் வீட்டு விசேஷங்களுக்கு மனமுவந்து அழைக்கிறார்கள். என்றுமே அவள் தான் செய்யும் வேலையைப் பற்றிய தாழ்வு எண்ணத்தை மனத்துக்குள் வளர்த்துக்கொண்டதில்லை.

அடுப்பங்கரையில் காடு முரடான வேலைகளில் ஈடுபட்டு உழைத்து உழைத்துக் காய்த்துப் போயிருந்த தன் கைகளைப் பார்த்துக்கொண்டே காமு மகனின் கேள்விக்குப் பதில் கூறாமல்



இருந்தாள். வாசு, ஆணியில் மாட்டியிருந்த சட்டையை எடுத்து மாட்டிக்கொண்டு ஜேபியிலிருந்து சிகரெட் ஒன்றை எடுத்துப் பற்றவைத்தான். சற்றுமுன் அடங்கிப் போன கோபம் காமுவுக்குச் சீறிக்கொண்டு வந்தது.

'அடே! இது ஒண்ணுதான் உன் குணத்துக்குக் குறைச்சலாக இருந்ததடா. நான் பாட்டுக்குப் பேசிக்கொண்டே இருக்கிறேன். நீ எங்கேயோ வெள்ளையும் சள்ளையுமாக உடுத்திக்கொண்டு கிளம்புகிறாயே. உனக்கு என்னுடைய கஷ்டம் கொஞ்சமாவது தெரிகிறதாடா. தெரிகிறதான்னு கேட்கிறேன்...'

வாசு மிடுக்காக அம்மாவைப் பார்த்துக்கொண்டே நின்றான். தாயும், மகனும் ஒருவர் மனத்தில் ஓடும் எண்ணங்களை இன்னொருவர் அறிந்துவிட முயன்று கொண்டிருந்தார்கள்.

'இப்போ என்னைத் தடுக்காதே அம்மா...நான் முக்கியமான காரியமாக வெளியில் போகிறேன். வந்து உன்னோடு பேசிக் கொள்கிறேன்...' விருட்டென்று சிகரெட் புகை காற்றில் வீச வெளியே போய்விட்டான் அவன். வாசல்வரை வந்த காமு வெறித்த நோக்குடன் அவன் தெருக்கோடி வரைச் செல்வதைப் பார்த்தபடி நின்றிருந்தாள். தெருவில் வெயில் நெருப்பாய்த் தகித்தது. நெல்லை அள்ளிப் போட்டால் பொரிந்துவிடும் போல் மண் சூடுபிடித்துவிட்டதுகூட அவளுடைய உரமேறிய கால்களுக்கு உறைக்கவில்லை.

மங்கா தெருக்கோடி திரும்பி தோளில் புத்தகப் பையைத் தொங்கவிட்டவாறு வந்து கொண்டிருந்தாள். அவள் அருகில் வந்து தாயின் கனவைக் கலைத்த பிறகு காமு சுயஉணர்வு பெற்றாள்.

'அம்மா! சப் ஜட்ஜ் கோபாலசாமியின் வீட்டிலே ஏதோ வேலை இருக்குன்னு சொன்னியே, போகலையா?' என்று அவள் நினைவூட்டியவுடன் காமு அஞ்சறைப் பெட்டியிலிருந்து சில்லறையை எடுத்துத் தலைப்பில் முடிந்தவாறு, தெருவில் இறங்கி ரயிலடியை நோக்கி நடந்தாள்.

மாம்பலத்தில் ஜட்ஜ் வீட்டை அடைந்தபோது அந்த வீட்டு அம்மாள் அன்று காமுவைச் சரியாக வரவேற்கவில்லை.

'உன் பிள்ளை வருவான் என்று காத்துக்கொண்டிருந்தார். நல்ல இடத்தில் ஒரு வேலை காலி இருந்ததாம். உன்னையும் காணோம், உன் பிள்ளையையும் காணோம்' என்ற தோரணையில் பேச்சு நிஷ்டூரமாக எழுந்தது.

காமு பதில் பேசாமல் தன் வேலைகளில் முனைந்திருந்தாள். அந்த அம்மாளுக்கு மேலும் ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்தது.

'என்ன காமு நான் பேசிக் கொண்டேயிருக்கிறேன். நீ வாயைத் திறக்கமாட்டேன் என்கிறாய். நான்தான் கேட்கிறேன். நீ இப்படி மங்குமங்கென்று ஓடியாடி உழைத்துப் போட்டால் அவன்தான் எப்படி வேலைக்குப் போவான்? உன் பிள்ளை கொஞ்சமாகவா அமர்க்களப்படுத்துகிறான்? சிகிரெட் ஊதுகிறதும், ஓடுகிற ரயிலில் ஏறுகிறதும்! கஷ்டத்தை உணர்த்தி வளர்க்க வேண்டாமா பிள்ளையை? பிள்ளை வளர்க்கிறாளாம் பிள்ளை!'

வாசு பொல்லாதவன். அயோக்கியன். இருந்தாலும் அவனை நான் ஏசுவேன். இந்த அம்மாள் யார் அவனைப்பற்றிப் பேசுவதற்கு? மனம் இப்படி ஓயாமல்

பொருமிக்கொண்டு இருந்தது. அத்துடன், அவள் வீடு திரும்பும்போது அவள் ஏறிய அதே மின் வண்டியில் ஆண்கள் பெட்டியில் வாசுவும் தொத்திக்கொண்டு ஓடிவந்து ஏறினான். உள்ளே உட்கார இடம் இருந்தபோதிலும் ஓரத்திலே நின்று வருவதில் பெருமைப்பட்டுக் கொள்வது போல மிடுக்காக நின்றான். அதையும் கண்ணாரக் கண்டுவிட்டாள் காமு. சற்று முன் கோபாலசாமியின் மனைவி ஏசியதற்கும், வாசு நடந்து கொள்வதற்கும் சரியாகத்தான் இருந்தது.

இருவரும் ஒன்றாகவே வந்து ரயிலடியில் இறங்கினார்கள். தனித்தனியாக ரயில் நிலையத்திலிருந்து ஒரே வீட்டை நோக்கிச் சென்றார்கள்.

வீட்டினுள் ஒன்றாக நுழைந்தார்கள்.

'வாசு! இங்கே வாடா இப்படி?' காமு உரத்த குரலில் மகனை அழைத்தாள்.

'வாசு! இனிமேல் நீ நிதானமாக நடந்துகொள்ள வேண்டுமப்பா. ஓடுகிற ரயிலில் ஏறக் கூடாது. இங்கே உன் நலனுக்காக ஒருத்தி அல்லும், பகலும் வாழ்ந்து கொண்டிருக்கிறேன் என்பதை மறந்துவிடாதேடா.'




அடுத்த நாளிலிருந்து வாசு வேலைக்குப் போக ஆரம்பித்து விட்டான்.

மாதம் ஒன்றும் கழிந்தது. அன்று இரவு வாசு தன் தாயிடமும் தங்கையிடமும் நெடுநேரம் பேசி மகிழ்ந்தான். பிறகு வழக்கம்போல் வெளித் திண்ணையில் படுத்துறங்கினான்.

காலையில் மகன் எழுந்து குளித்துவிட்டுச் செல்ல வேண்டுமே என்பதற்காக வழக்கத்துக்கு மாறாக முன்னதாகவே எழுந்து வெந்நீர் தயாரித்த காமு மகனை எழுப்பச் சென்றாள். பாசத்தை நெஞ்சத்தில் தேக்கிக் குழைத்துக் கூப்பிட்டாள். வாசு குரலும் கொடுக்கவில்லை— அசைவும் காட்டவில்லை. அவளுக்குப் பகீரென்றது. மெதுவாக பதற்றத்தோடு அருகில் சென்றாள். விவரிக்க முடியாத அச்சம் அவளுக்குத் தோன்றிவிட்டது. அவனைத் தொட்டெழுப்ப முயன்றாள். 'வாசு' என்று பெருங்குரலில் விஸித்தவள் கண்ணீர்ப் பெருக்கி அவன் மீதே சாய்ந்தாள்.

மகன் திருந்திவிட்டான்—சம்பாதிக்கத் தொடங்கிவிட்டான்—இனி வறுமையில்லை, வாட்டமில்லை என்றெல்லாம் எண்ணிய தாய் மனம், பிணமாய்க் கிடந்த மகனைக் கண்டு வெந்து நொந்தது.

# வஸந்த காலம்

ஏறக்குறைய புவனாவைப் பார்த்து இருபது ஆண்டுகளுக்கு மேலாகிவிட்டது. அவளுடைய லட்சியங்கள், கனவுகள் எல்லாம் என்ன ஆயின என்று எனக்குத் தெரியாது. சமூக சேவை செய்ய வேண்டும் என்கிற ஆர்வம் காரணமாக அவள் ராம்ஜி என்கிற மராட்டிய வாலிபனைத் திருமணம் புரிந்து கொண்ட செய்தி மட்டும் எனக்குத் தெரியும். தெரியுமாவது? அவர்கள் திருமணத்தன்று இந்தப் பாரத நாடே சுதந்திர வேட்கை கொண்டு பொங்கியெழுந்தது. அதன் பிறகு ஒரு தடவை சந்தித்து இருக்கிறேன்.

வருடம் 1942. மகாத்மாஜியின் 'வெள்ளையனே வெளியேறு!' என்கிற கோஷம் நாடெங்கும் முழங்கிக் கொண்டிருந்தது. நானும் அந்தச் சுதந்திர வேட்கையில் முங்கிக் கொண்டுதான் இருந்தேன். 'என்ன செய்யலாம், எப்படி இந்த வெள்ளையர்களை விரட்டியடிக்கலாம்' என்பதே என் சிந்தனை. இத் தருணத்தில் புவனா



# ஸரோஜா ராமமூர்த்தி

அவசரமாக எங்கள் வீட்டைத் தேடி வந்து, ''சரோ! இன்று எனக்கும், ராம்ஜிக்கும் மகாலட்சுமி கோவிலில் திருமணம்'' என்றவுடன் நான் அயர்ந்து விட்டேன்.

''இந்தச் சமயத்திலா?'' என்று என் மனத்தை ஒளிக்காமல் அப்பட்டமாக அவளிடம் கேட்டேன்.

''இது தான் சரியான தருணம். இன்று எங்கள் திருமணம் நடந்தால் நான் என் ஆசைகள், லட்சியங்கள் யாவும் நிறைவேறும். நாளைக்கே நானும் அவரும் சத்யாக்ரகம் செய்து, சிறைக்குப் போகப் போகிறோம்..'' என்று கூறி விட்டு, 'என்று தணியும் இந்தச் சுதந்திர தாகம்' என்று பாடிக் கொண்டே சிரித்தாள் புவனா.

அடுத்த நாள் விடிவதற்கு முன்பே பம்பாய் நகரம் அமளிப்பட்டுக் கொண்டிருந்தது. 'பாபுவைக் கைது செய்து விட்டார்கள். மற்றத் தலைவர்களும் கைது. இன்று மாலை சிவாஜி பார்க்கில் கஸ்தூரி பா பேசுவார்' என்று தார் ரோடெங்கும் சுண்ணாம்பினால் மாதுங்காவில் அழகிய தமிழில் எழுதி வைத்திருந்தார்கள். சில இடங்களில் ஆங்கிலத்திலும், பல இடங்களில் இந்தியிலும் இதே வாசகங்கள் காணப்பட்டன.

அன்று கல்லூரிகள் தாமாக விடுமுறை எடுத்துக் கொண்டு விட்டன. கல்லூரிகளில் ஈ, காக்காய் கூட இல்லாமல் அவ்வளவு மாணவ, மாணவிகளும் வெளியே வந்து விடவே, நானும் புவனாவின் திருமணத்துக்கு 'ஜாம் ஜாம்' என்று கிளம்பினேன்.

சுற்றிலும் அலைகள் வீச, சுதந்திர தாகத்தின் வேட்கைக் குமுறல்களுக்கிடையே ராம்ஜி மிக எளிய முறையில் அம்பிகையின் முன்பு புவனாவை மணந்து கொண்டார். பிறகு, அவர்கள் இருவரும் தங்கள் தேநிலவைக் கழிக்க, திசைக்கொருவராக வெவ்வேறு சிறைக்குக் கொண்டு போகப்பட்டது வேறு கதை. அவர்கள் சிறைக்குப் போகும் முன்பாக புவனா, அவளுடைய ஒரே தங்கையான பவானியை எங்கள் பொறுப்பில் விட்டிருந்தாள். எட்டு வயதுச் சிறுமியாகிய பவானியைத் தேற்றுவது எனக்கும், என் குடும்பத்தாருக்கும் மிகவும் சங்கடமாக இருந்தது.

புவனா சிறை சென்ற சுருக்கில் என் கல்லூரிப் படிப்புக்கு முற்றுப் புள்ளி வைத்துவிட்டு, அவசரமாக எனக்குத் திருமணம் செய்து வைத்தனர் என் பெற்றோர். எங்கே நானும் சத்யாக்ரகம் செய்து, சிறைக்குப் போய் விடுவேனோ என்கிற பயம் அவர்களுக்கு!

பம்பாயிலிருந்து பவானியுடன் நான் சென்னை வந்து சேர்ந்தேன். என் கணவர், பவானி என்னுடன் இருப்பதற்கு எந்தவிதமான மறுப்பும் கூறவில்லை.



அவ்வாண்டு நடந்த சத்யாக்ரகத்தில் தொண்டர்கள் எண்ணிக்கை பெருகி விடவே, அவர்களை அடைத்து வைக்க இடமில்லாமல் பிரிட்டிஷ் அரசாங்கம் திணறியது. குறிப்பிட்ட தண்டனைக் காலத்துக்குள் ராம்ஜியும் புவனாவும் விடுதலை அடைந்து வந்து விட்டார்கள்.

சகோதரிகள் இருவரும் ஒன்று சேர்ந்த அந்த நாட்கள்? பேச்சற்று, கண்கள் இமைக்க மறந்து, துடிக்கும் உதடுகளுடன், பரபரக்கும் கைகளினால் இரண்டு பேரும் சேர்த்துத் தழுவிக் கொண்ட அந்தக் காட்சி?

நான் கண்களைத் துடைத்துக் கொண்டேன், மறுபுறம் திரும்பியவளாக.

''அழுகிறீர்களா, பஹன் ஜீ?'' என்று என்னை ராம்ஜி விசாரித்தார்.

''இல்லை, அண்ணா! சகோதர பாசத்தின் நெருக்கத்தை இவ்வளவு நெருக்கமாக நான் உணர்ந்ததில்லை. புது அனுபவத்தின் பேரில் மனம் நெகிழ்ந்து விட்டது.''

''பாசமும் ஓர் எல்லைக்குள், வரம்புக்குள் இருக்க வேண்டும் பஹன்ஜி.''

எனக்குப் புரியவில்லை. 'ஆண் மனத்தின் போக்கே விசித்திரமானது. பாசத்துக்கு அணை போடுவது போல் இதென்ன பேச்சு?' என்றெல்லாம் என் சிந்தனைகள் ஓடின.

ராம்ஜி, பெங்களூரில் ஒரு சேவை நிலையம் ஆரம்பிக்கப் போவதாகவும், எங்களால் இயன்ற உதவியைச் செய்ய வேண்டும் என்கிற கோரிக்கையுடன் எங்களிடம் விடை பெற்றுக் கொண்டார்.

ஒரு நாள் குடும்ப வேலைகள் முடிந்த பிறகு, தினசரிப் பத்திரிகையைப் படிப்பதற்காகப் பிரித்தேன். நடனமாடும் தோற்றத்தில் ஒரு பெண்ணின் புகைப்படம் வெளியாகி யிருந்தது. அந்தப் பெண் வேறு யாருமில்லை, பவானிதான்! அட! அவள் எப்படி வளர்ந்து மாறி விட்டிருந்தாள்? சிறு வயதிலேயே அமைப்பாக இருந்த கண்கள் இன்று பாவத்துடன் ஆயிரம் கதை பேசின.

நிகழ்ச்சி நடக்குமிடம் சென்னைதான் என்று அறிந்ததும் நான் மகிழ்ச்சியில் நெகிழ்ந்து விட்டேன். நெடு நாளைய நட்பின் நெருக்கம் என்னைத் திணற வைத்தது. இந்த அன்பின் ஆழம் வெறும் வார்த்தைகளிலோ, கடிதப் பரிமாறல்களிலோ இல்லை. மனத்தின் அடித்தளத்தில் பாறைபோல் அன்பு இறுகி விட்டாலும், கல்லிலிருந்து நீர் எந்தச் சமயத்திலும் வெடித்துக் கசிவது போல் அன்பு பாய்ந்து வெளி வந்து விடும்.

மாலை அவருக்குக் காப்பி கொடுத்து விட்டு செய்தித் தாளைக் காண்பித்தேன். கட்டாயம் கலந்து கொள்ள வேண்டிய நிகழ்ச்சிதான் என்று கூறி டிக்கெட்டுகள் வாங்குவதாகக் கூறி விட்டார் என் கணவர்.

'க்ரீன் ரூமு'க்குள் சென்றே என் தோழியை நான் பார்த்து விட்டேன். என்னைக் கண்டவுடன் அவள்தான் எப்படி விக்கித்துப் போய் விட்டாள்?

''அட! சரோவா?''

''ஆமாம்... மறந்து விட்டாயா?''

''மறதியா?'' என்று கூறி விட்டுச் சிரித்தாள் புவனா. ''உன்னைப் பார்த்து எத்தனை காலம் ஆகி விட்டதடி?...''

''காலம், கீலம் என்று கணக்குப் போடாதே. 1941 லிருந்து ஐம்பத்தொண்ணு வரைக்கும் ஒரு காலமா? பத்து வருஷங்கள்தானே?''

''உனக்கு அவை சாதாரணப் பத்து வருஷங்கள். எனக்கு, எங்களுக்கு அது ஒரு சகாப்தம் போல் தோன்றுகிறது.''

வெளியே மேடையில் பக்கவாத்தியக்காரர்கள் சுருதி சேர்த்துக் கொண்டிருந்தார்கள். நலங்கிட்ட பாதங்களுக்குச் சதங்கை கட்டிக் கொண்டிருந்தாள் பவானி.

''பவானி! என்னைத் தெரிகிறதோ உனக்கு?'' என்று அவள் முகத்தை நிமிர்த்திக் கேட்டேன்.

மாதுளங் கனியைப் பிளந்தாற் போன்ற சிரிப்பு வெடித்து வர, ''தெரியாமலா? நீங்க சரோ அக்கா தானே?'' என்று கேட்டாள் பவானி.

கோகலே ஹால் அன்று நிரம்பி வழிந்தது. வருங்கால நடனமணி என்று பிரபல நடனக்காரர்களே அன்று புகழ்ந்தார்கள். புகழ்மாலைகளைச் சூட்டிக் கொண்ட பவானியின் முகத்தில் பரபரப்பும், குறுகுறுப்பும் நெளிந்தன. பவானி இப்படிப் பிரபலமாவதற்குத் துணையாக இருந்த ராம்ஜியும், புவனாவும் மேடைக்கு அழைத்து வரப்பட்டு, பாராட்டப் பெற்றார்கள்.

## நினைவில் நிற்கும் சூழ்ச்சி

**போ**ஸ்டாபீசில் 'மணியார்டர் கவுன்ட்ட'ரில் நல்லகூட்டம். மாதத்தின் முதல் வாரம். பெற்றவர்களுக்கும், கட்டியவளுக்கும், வாங்கியவர்களுக்கும் பணம் அனுப்பும் பெரிய'க்யூ' ஒன்று நின்று கொண்டிருந்தது. ஊர் பெரியதானுலும், இருப்பவை மூன்றே தபால் அலுவலகங்கள். அதிலும் ஒன்றுக்கும், மற்றென்றுக்கும் இடையிலுள்ள தூரமும் அதிகம். அதிகம் படிக்காத தொழிலாளிகள் செய்யும் தவறுகளைத் திருத்தித் திருத்திப் பொறுமையை இழந்து கொண்டே பணத்தைக் கையில் வாங்கிப் போட்டுக் கொண்டிருந்தார் அந்த ஊழியர். வேலைக்குச் செல்ல வேண்டுமே என கவலைப் பட்டுக் கொண்டு, ஆமை வேகத்தில் நகரும் அந்தக் 'க்யூ' வின் மீது எரிச்சல் பட்டுக்கொண்டு ஒன்றும் சொல்ல முடியாமல் இருந்தனர்.

இந்த நிலையில் திடீரென்று ஒருவர் 'க்யூ'வைத் தள்ளிஅடித்துக் கொண்டு, முன்னே சென்று பணத்தைக் கட்ட முயன்ருர்.

''பார்த்தால் படிச்சவன் மாதிரி இருக்கிருன், மூளை இருக்கா? இவ்வளவு பேர் வரிசையாக நிற்கிறது அவன் கண்ணில் படவில்லையா?'' என்றது ஒரு குரல். இதற்கிடையில் ''என்ன பேச்சு அவனேடு, இழுத்துத் தள்ளப்பா!'' என்றது ஒரு முரட்டு உருவம்.

அந்தப் பையன் பொறுமையாகச் சொன்னுன்:

''அவசரப்படாதீங்க! இந்தப் பணம் நான் ரொம்பக் கஷ்டப் பட்டுச் சேர்த்தது. என் காலிலே அடிபட்டு அதுக்குத் தினம் கட்டுக் கட்டிக் கொள்ள ஆஸ்பத்திரிக்குச் செல்வதற்காக என் அண்ணு பஸ் செலவிற்காகவும், பழம் வாங்கிக் கொடுத்ததிலும் கொஞ்சம் கொஞ்சமாகச் சேர்த்து இப்போ அதை அனுப்ப வந்திருக்கிறேன். என்னுலே அதிக நேரம் நிற்க முடியாது. மறுபடியும் இந்தப் பணத்தைக் கொண்டு வீட்டிலே வைத்து, அது என் அண்ணன் கண்ணிலே பட்டுதுன்னு, அப்புறம் எனக்கும் பணம் வராது. இந்தப் பணமும் வராது. அதனுல்தான் அவசரப்படுகிறேன்''

கூட்டத்தில் ஒருவர், ''அப்படிச் சேர்த்து யாருக்கப்பா அதை அனுப்புகிருய்?'' என்று கேட்டார்.

''பஞ்ச நிவாரண நிதிக்காக டில்லி அரசாங்க அலுவலகத்துக்கு!'' என்று அந்தப் பையன் சொன்னவுடன், க்யூவிலிருந்த அனைவரும் தங்களுடைய அவசர முடிவிற்காகவும், அவனைத் திட்டியதற்காகவும் மனம் வருந்தினர்.

— எஸ். சேஷாத்திரி.
நெய்வேலி.

---

நிகழ்ச்சிக்குப் பிறகு அவர்களை நாங்கள் ஓட்டலில் தங்க விடுவோமா? காரில் அவர்கள் சாமான்களைத் தூக்கிப் போட்டுக் கொண்டு அவர்களையும் எங்கள் இல்லத்துக்கு அழைத்து வந்தோம்.

விருந்துபசாரம் என்று நான் ஒன்றும் புவனுவுக்கு விருந்து வைக்கவில்லை. விருந்து நடத்தி உபசரித்தால்தான் அவள் மன மகிழ்ந்து போவாள் என்று நான் நினைக்கவில்லை. மேல் மாடியில் நிலா முற்றத்தில் நானும், அவளும் பேசினேம். அவை பழம் கதைகள் அல்ல. 1941 லிருந்து 51 வரை இந்திய அரசியலில் ஏற்பட்ட மாறுதல்கள், இடையில் மகாத்மா, குண்டுக்கு இரையாகியது வரை எல்லாவற்றையும் பேசித் தீர்த்தோம்.

''அன்று நீ ராஜ்கட்டத்துக்குப் போயிருந்தாயா? நான் வானெலிப் பெட்டியின் அருகில் உட்கார்ந்தவள் தான். பேச்சு, செயல், திறன் எல்லாவற்றையும் இழந்த நிலை என்று சொல்வார்களே, அண்ணல் அமரரான அன்று அந்த நிலையில் நான் மட்டும் இல்லை, இந்த நாட்டு மக்கள் அனைவருமே இருந்தார்கள்...''

புவனுவின் விழிகளில் நீர் பள பளத்தது.

''அதற்கு முதல் நாள்தான் அவர் எனக்கும், என் கணவருக்கும் ஓர் உத்தரவை நல்கியிருந்தார். அரசியலில் நுழைவதற்கு வேண்டிய சாதுர்யமோ, மனே வலிமையோ, சமாளிக்கும் திறனே ராம்ஜியிடம் இருப்பதாக

அவர் கருதவில்லை. 'அன்பும், பணியும் நிறைந்த மனைவியை அடைந்திருக்கிறீர்கள். நீங்கள் ஏன் சமூகப் பணிக்கு உங்களை அர்ப்பணித்துக் கொள்ளக் கூடாது?' என்று கேட்டாராம். அதைக் குருவாக்கியமாக ஏற்றுக் கொண்டு நாங்கள் சேவை நிலையத்தை ஆரம்பித்தோம், நடத்தினோம். வெளியேயும் வந்து விட்டோம்.''

''இப்போது அங்கே இல்லையா நீங்கள்?'' என்று திடுக்கிட்டவள் போல் கேட்டேன் நான்.

''இல்லை. அந்த இடத்துக்கு எங்கள் தொண்டு தேவைப்படவில்லை'' என்று சுருக்கமாகப் பதிலளித்தாள் புவனா.

ஒரு ஸ்தாபனத்தின் ஆரம்பமும், நடுநிலையும் ஓரளவு புரியக்கூடும். அதன் வளர்ச்சியைப் பற்றி யாராலும் சடுதியில் கணித்துவிட முடிவதில்லை. காலம் ஒன்றுதான் அந்த முறையில் பதிலளிக்கக் கூடியது.

எதிரே சாய்வு நாற்காலியில் சாய்ந்திருந்த ராம்ஜி நிமிர்ந்து உட்கார்ந்தார். ''பஹன்ஜி! புவனா எதையுமே மனசில் போட்டுப் புழுங்கிக் கொள்கிறவள். அது அவள் சுபாவம். எதிலும் ஒரு நெருக்கம் வேண்டும். அதே நேரத்தில் பற்றற்றும் இருக்க வேண்டும். சேவை நிலையத்தோடு ரொம்பவும் ஒட்டிக் கொண்டு வாழ்ந்தாள். கணக்கு, பணப் புழக்கம் இதுகளில் தகராறு வந்து, குற்றம் சாட்டப்பட்டு வெளியே வந்தோம்...''

சாதாரணமாகச் சொல்லிவிட்டு அவர் 'பான்' மெல்ல ஆரம்பித்து விட்டார்.

ஒரு ஸ்தாபனத்தில் எதற்காக இந்தப் பழிச் சொற்களை ஒருவர் மீது ஒருவர் வீசிக் கொள்கிறார்கள் என்று கேட்க வேண்டியது அனாவசியம். மனித மனம் விசித்திரமான இயல்புகளைக் கொண்டது. தெளிவான ஓடையைப் போலவும், சகதி குழம்பிய குட்டையைப் போலவும் அது அவ்வப்போது மாறிக் கொண்டே யிருக்கும். சுருக்கமாகச் சொன்னால் புவனாவையும், ராம்ஜியையும் புகழ் வந்து அடைவது சிலருக்குப் பிடிக்கவில்லை, அவ்வளவுதான்.

''இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் அண்ணா? உங்களுக்கு வேறு எந்தத் தொழிலும் பழக்கமில்லையே!''

ராம்ஜி சிரித்துவிட்டுப் பேசாமல் இருந்து விட்டார்.

புவனா பள்ளிக்கூட ஆசிரியையாக இருப்பதாக என்னிடம் கூறினார். குழந்தைகள் பெறவில்லையாயினும், அவள் சிறு பிராயம் முதற் கொண்டே குழந்தைகளிடமும், அவற்றின் வளர்ச்சியிலும் மாறாத ஊக்கமுடையவள்.

அடுத்த நாளே அவர்கள் ஊருக்குக் கிளம்பி விட்டார்கள்.

பவானி மட்டும் சென்னையிலிருந்து வடக்கே செல்லும் ஒரு நடன கோஷ்டியுடன் சென்று நடனமாடி விட்டு ஊர் திரும்புவதாக ஏற்பாடு. அவளை என் பொறுப்பில் விட்டுச் சென்றாள் புவனா. பவானி என்னுடன் இருந்த அந்தக் குறுகிய இரண்டு நாட்களைப் பற்றிக் கூறத்தான் வேண்டும்.

கால்களில் சதங்கை கட்டிக் கொண்டவுடன் கலையை ஆராதிக்கும் அந்தப் பெண், 'மேக்கப்' பைக் கலைத்தவுடன் சாதாரணமான பெண்ணாக மாறிவிடும் விந்தையைக் கண்டேன். அடுத்த நாள் பகல் வண்டியில் அந்த நடன கோஷ்டி, டில்லிக்குப் புறப்படுவதாக ஏற்பாடு. பவானி, பெட்டியைத் திறந்து வைத்துக் கொண்டு எதையோ தேடிக் கொண்டிருந்தாள்.

''என்ன தேடுகிறாய் பவானி?'' என்று நான் கேட்டேன்.

''எலுமிச்சை கலரில் பச்சைக் கரை போட்ட நடன உடையை அக்கா எடுத்துக் கொண்டு போய் விட்டாள்.. நான் அது இல்லாமல் எப்படி நடனம் ஆடுவது?''

''அடடா! தவறுதலாக எடுத்துப் போய் விட்டாளாக்கும். பார்சலில் டில்லிக்கு அனுப்பச் சொல்லி எழுதட்டுமா?''

''அதெல்லாம் ஒண்ணும் வேண்டாங்கா... அங்கே அவளுக்குத் தெரிந்தவா யாருக்காவது நடன நிகழ்ச்சி இருக்கும். அதுக்காக எடுத்துப் போயிருப்பாள்... இப்படித்தான் அவள்!''

'இப்படித்தான் அவள்' என்கிற இந்தக் குற்றச்சாட்டு நறுக்கென்று என் உள்ளத்தில் தைத்தது.

''உன்னைவிட மற்றவர்கள் அவளுக்கென்ன ஒசத்தியா, பவானி?'' என்று கேட்டு விட்டேன் நான். பிறகு ஏன் சொன்னேம் என்று பரபரத்தேன்.

பவானி பெட்டியைப் 'பட்' டென்று மூடினாள்.

என்னை வெறித்துப் பார்த்து விட்டு, ''அப்படித்தான் இந்த உலகமே நினைக்கிறது. நான் ஒண்ணும் அவளுக்கு ஒசத்தி இல்லே. அவளுக்கு அவள் ராம்ஜிதான் ஒசத்தி!''

''ஓ! அப்படியா?'' என்று நான் சிரித்தேன்.

''சிரிக்காதீர்கள் அக்கா! ராம்ஜி ஒண்ணு சொல்லிவிட்டா அது அவளுக்கு வேத வாக்குத்தான் போங்கள்...''

கூடத்தில் டெலிபோன் மணி அடித்தது. பவானி விரைந்து சென்று போனை எடுத்தாள். சற்று முன் கடுகடுத்த முகம், மலர்ச்சியால் விரிய, ''ஹலோ! சங்கர்தானே? நான் இன்னும் அரை மணியில் ரெடி. நீங்கள் முடிந்தால் இங்கே வாருங்கள். ஓ! முடியாதா? நானே வரேன், இடம் எங்கே? ஓட்டல் 'ஓஷியானிக்' தானே? ஆல் ரைட்.. சீரியோ'' என்று கூறி விட்டுப் போனை வைத்து விட்டாள்.

''அக்கா, நான் கொஞ்சம் வெளியில் போயிட்டு வந்துடறேன்...''

''பவானி! யார் அம்மா அந்தச் சங்கர்?''

என்னுடைய கேள்வி அவளுக்குப் பிடிக்கவில்லை. அத்துடன் நான் யார் அவளைக் கேட்பதற்கு?

பவானி அன்றிரவு வீடு திரும்பும் போது ஒன்பது அடித்து விட்டது. இவருடைய ஆயிரம் கேள்விகளுக்குப் பதினாயிரம் பொய்களை நான் தயார் செய்ய வேண்டிய தொல்லையை அனுபவித்துத் தீர்த்தேன். அடுத்த நாள் ஜி. டி. ரயிலில் அவளை ரயிலேற்றி விட்டு, புவனாவுக்கு அவள் டெல்லி போவதைப் பற்றித் தந்தி கொடுத்த பிறகுதான், எனக்கு நிம்மதி ஏற்பட்டது.

பவானி ஒரு கடிதம் கூட மரியாதைக்காகப் போடவில்லையே என்று நான் உள்ளூற வருந்திக் கொண்டிருந்த சமயம், 'புவனா'விடமிருந்து கடிதம் வந்தது. பவானிக்கும், சங்கருக்கும் திருமணம் ஆகிவிட்ட நற்செய்தியை விட, உயிருக்குயிராக வளர்த்து, பாசமும், அன்பும் சொரிந்து ஆளாக்கிய புவனாவை, பவானி ஒதுக்கியதைப் பற்றிய தகவல் தான் அதில் அதிகமாக இடம் பெற்றிருந்தது.

புவனாவைப் பற்றி நான் உள்ளூற வருந்தினேன்.

அவளுக்கும், ராம்ஜிக்கும் எத்தனையோ லட்சியங்கள், ஆசைகள் இருந்தும் அவை முடிவு பெறாத கனவுகளாகச் சிதைந்து போய் விடுகின்றன.

சேவையை லட்சியமாகக் கொண்டு வாழ்கிறவர்களின் வாழ்க்கையில் ஏமாற்றங்களேதான் தோன்றிக் கொண்டிருக்கும் போலும். அவளுக்கு ஆறுதலாக நான்கே வரிகளில் 'ரொம்பவும் கவலைப்பட வேண்டாம். வாழ்க்கை என்பது சேறும் சகதியும் நிரம்பிய குட்டைதான். ஒவ்வொரு சமயம் அது கங்கா ஜலத்தைப்போல் தெளிவாகத் தோன்றினாலும், அதை நாம் நம்பிவிடக் கூடாது' என்று எழுதினேன்.

பல பொறுப்புகளையும் கவலைகளையும் சுமக்கும் இந்தத் தேகம் ஒரு இயந்திர அமைப்பைப் போன்றது தான் என்பதை நம்மில் பலர் மறந்து விடுகிறார்கள். எனக்கு நல்ல ஓய்வு தேவைப்பட்டது. வைத்தியர், மருந்துகளைவிட வெளியூர்ப் பிரயாணம் நல்லதென்று அபிப்பிராயப்பட்டார்.

பெங்களூரே சிறந்த இடமென்று தேர்ந்தெடுத்துக் கிளம்பினேன். அதைவிடச் சிறந்த இடங்கள் பல இருக்கலாம். ஆனால், என் ஆருயிர்த் தோழி அங்குதான் இருக்கிறாள் அல்லவா?

புவனா ரயிலடிக்கு வந்திருந்தாள். ராம்ஜி வரவில்லை. மெல்லிய 'கலாக்ஷேத்ரா' நூல் புடவை கட்டியிருந்தாள் அவள். வகிடெங்கும் நரை கண்டு விட்ட கூந்தல். எடுப்பான மூக்கில் முத்து மூக்குத்தி அணிந்திருந்தாள். தேசிய ஒருமைப் பாட்டின் சின்னமாக, மராட்டியரை மணந்து கொண்டதற்கடையாளமாக அந்தப் பாணி நகைகளை அணிந்து, தமிழ் நாட்டில் பிறந்தவளாதலால் இனிய தமிழில் ''சரோ! சௌக்கியமாடி'' என்று என்னை விசாரித்தாள்.

''ஓ! கொஞ்சம் சௌக்யம். ரொம்ப சௌக்யம் அடைய வேண்டுமென்று தான் பெங்களூருக்கு வந்திருக்கிறேன்—''

புவனா என்னுடைய பெட்டியை எடுத்துப் போய் டாக்ஸியில் வைத்தாள்.

நிறையப் பூத்துக் குலுங்கும் 'போகன் வில்லா' செடிகளால் வேயப்பட்ட வேலி அமைந்த வீட்டின் எதிரே கார் வந்து நின்றது.

# ஆக்கம் அழிவிற்காக...



**மூன்று வருடங்கள் மும்முரமாகக் காகிதம் தயாரிப்பதைப் பற்றிப் படித்துப் பயிற்சி பெற்ற நார்வே வாலிபன் ஒருவனுக்குக் கடைசியில் ஒரு கம்பெனியில் நல்ல சம்பளத்தில் ஒரு வேலை கிடைத்தது. அந்த அலுவலகத்தில் அனாவசியமாக இருக்கும் கடிதங்களை அகற்றி, அந்தக் காகிதங்களை அழிப்பதற்கு அனுப்பி வைக்க வேண்டியதுதான் அந்த வேலை!**

— 'பேஜண்ட்'

---

ராம்ஜி கறுப்புக் கண்ணாடி அணிந்தவராகத் திறந்த வெளியில் தோட்டத்தில் அமர்ந்து ஏதோ பொம்மைகள் செய்து கொண்டிருந்தார். கார் வந்து நின்ற ஓசையினால் எங்கள் வரவை அவர் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். பழைய மலர்ச்சியை அந்த முகம் அறவே மறந்து விட்டிருந்தது.

''பஹன்ஜி! வர வேண்டும்..'' என்று கை கூப்பியவாறு எழுந்து நின்றார் அவர்.

''சௌக்கியமாக இருக்கிறீர்களா?'' என்று விசாரித்த என்னைப் புவனா மிகவும் மெதுவாக எச்சரித்தாள். ''சரோ! அவருடைய வலது கண் அநேகமாகப் பார்வையைஇழந்து விட்டது. இடது கண் மிக லேசான ஒளியை மட்டும் காண முடியும். அவர் இப்போது எந்த வேலையிலும் இல்லை. 'ப்ளாஸ்டர் சீன்' என்று சொல்லப் படுகிற இந்தக் களிமண் பொம்மைகளைச் செய்து, பள்ளிகளுக்கு அனுப்பி வைக்கிறார்.''

வாழ்க்கை நெடுகிலும் புதிர்களாகவே வந்து கொண்டிருந்தும், அதைக் கடந்து சமாளித்து வரும் புவனாவை என்னால் பரிதாபமாகத்தான் பார்க்க முடிந்தது.

சிறிய வீடாக இருந்தாலும், வரவேற்பறையில் மேஜை மீது டீயும், பிஸ்கோத்துகளும் வைக்கப் பட்டிருந்தன. விருந்தினரை உபசரிப்பதில் புவனாவுக்கு நிகர் அவளேதான். சேவை நிலையத்தில் தினம் விருந்தினர்கள் வந்தவாறு இருப்பார்கள். புவனாவும் ஓயாமல் வேலை செய்து கொண்டே இருப்பாள்.

**ரா**ம்ஜி நிதானமாக எழுந்து உள்ளே வந்தார்.

''பஹன்ஜி! ரொம்ப வருஷங்களுக்கப்புறம் வந்திருக்கிறீர்கள். என்னவோ சொல்வார்களே 'விதுரன் மனைக்கு வந்த பரமாத்மாவைப் போல' என்று. எங்கள் வீட்டுக் கஞ்சியும் உங்களுக்கு இனிக்க வேண்டும். வெறுமனே கூற வில்லையம்மா. இப்போது நாங்கள் கஞ்சி சாப்பிடக் கூடிய நிலைக்குத் ......'' என்று, தாம் தாழ்ந்து விட்டதாக எங்கே அவர் கூறி விடுவாரோ என்று இடையில் வெட்டிப் பேசினேன் நான்.

''தாங்கள் தாழவில்லை நண்பரே! இந் நாட்டு ஆயிரக் கணக்கான மக்கள் உண்ணும் உணவை நாமும் பகிர்ந்து சாப்பிடுவதனால் உயருவதற்குத்தான் வழி தேடியவர்கள் ஆவோம்.''

அவர் சிந்தனை வயப்பட்டு மௌனமாக நின்றிருந்தார். புவனா டீயையும், பாலையும் சேர்த்துச் சர்க்கரை போட்டுக் கலக்கி அவரிடம் ஒரு கோப்பை கொடுத்து விட்டு, ஆதரவுடன் அவரைப் பற்றி அங்கே இருந்த நாற்காலியில் உட்கார வைத்தாள்.

பிறகு இருவரும் உள்ளே சென்றோம்.

அழகிய மர வேலைப் பாடுகளால் ஆன தொட்டிலில் மதலை ஒன்று கண் வளர்ந்து கொண்டிருந்தது. புவனா கலை உள்ளம் படைத்தவள். குழந்தையின் முன்னுச்சி முடியை இழைய வாரிக் கொண்டை போட்டு, முத்துச் சரம் ஒன்றைச் சுற்றி யிருந்தாள். நெற்றியில் திலகம் மின்ன, பாதங்களில் தண்டை, கொலுசுடன் கண் வளரும் அக் குழந்தை கிருஷ்ண விக்ரகத்தை நினைவூட்டியது.

''பவானியுடைய பையன்... உனக்குத் தெரியுமா சரோ? பவானியும், அவள் வீட்டுக்காரரும் இங்கேதான்

இருக்கிறார்கள்? பத்துப் பன்னிரண்டு வருஷங்கள் போல் நாங்கள் ஒருத்தரை ஒருத்தர் பார்க்கவே இல்லை. கடிதப் போக்கு வரத்தும் இல்லை....''

''ஏனிப்படி?'' என்று ஆவலுடன் விசாரித்தேன் நான்.

''நாம் வாழ்க்கையில் எதை எதையோ உண்மை என்று நம்பிக் கொண்டு வாழ முற்படுகிறோம். நாம் நம்பும் அந்த உண்மை பொய்யாகி விடும் போது, இதயத்தில் அடித்தாற் போல் ஆறாத புண் ஏற்பட்டு விடுகிறது—''

புவனா புதிர் போட்டுப் பேசுகிறவள் இல்லை. உடன் பிறந்த தங்கையைப் பற்றி யார் தாம் வெளியில் பட்டவர்த்தனமாகப் பேசுவார்கள்?

''பவானி இங்கேதான் இருக்கிறாளா புவனா?''

''இல்லை, அவள் ஒரு நடன கோஷ்டியுடன் மேல் நாடுகளுக்குப் போயிருக்கிறாள்...இது அவளுடைய இரண்டாவது குழந்தை. முதல் குழந்தை பிறந்து சில நாட்களில் இறந்து விட்டது. அதற்கு நான்தான் காரணமாம்.—''

ராம்ஜியும் புவனாவும் இதுவரையில் மூயன்ற பணிகளில் எதுவுமே அவர்களுக்கு நற்பெயரையோ, புகழையோ தேடித் தரவில்லை.

நான் ஏக்கத்துடன் அவள் முகத்தைப் பார்த்தேன். எந்த வார்த்தைகளாலும் அவள் இதயத்தின் புண்ணை ஆற்ற முடியாது என்பதை உணர்ந்தவள் நான். ஆனால், ஏதாவது சொல்லியாக வேண்டுமே யென்று, ''பவானி எப்பொழுதுமே அப்படித்தான் புவனா. சட்டென்று அவள் முடிவுகளும், எண்ணங்களும் உருப் பெற்று விடும். பிறருடைய எண்ணங்களுக்கு அவள் மதிப்புத் தருவதில்லை'' என்றேன் நான்.

''அவளுடைய அபிப்பிராயங்கள் எல்லாவற்றையும் அப்படியே எடுத்துக் கொண்டு விட முடியாது சரோ. சிலவற்றை அவள், திட்டம் வகுத்தே செய்வதுண்டு.''

ஒரு குடும்பத்துக்குள் கோப தாபங்களும், சண்டை சச்சரவுகளும் சர்வ சகஜமாக நடை பெறும் நிகழ்ச்சிகள். அவை நாளடைவில் குடும்பத்தினரின் மனத்தில் கசப்பை வளர்க்காமல் மேலெழுந்த வாரியாக விலகி விட்டால் தேவலை. ஆனால் பவானி, புவனாவின் ஒவ்வொரு பேச்சுக்கும், செய்கைக்கும் குற்றம் கண்டு பிடித்த காலம் ஒன்று இருந்தது.

டெல்லியில் அவளுக்கும், சங்கருக்கும் திருமணம் நடந்த பிறகு தன் சகோதரியின் உள்ளத்தில் அதைப் பற்றிய எதிரொலி எவ்வாறு இருக்குமென்று பவானி சிந்தித்துப் பார்க்கவில்லை.

பெங்களூர் வந்ததும் நேராக ஓட்டலில் அறை எடுத்துக் கொண்டு கணவனும், மனைவியும் தங்கினர். யாரோ மூன்றாம் மனிதரைப் பார்க்கச் செல்வது போல் இருவரும் புவனாவின் வீட்டுக்குச் சென்றனர். இவர்களின் திடீர் வரவைச் சற்றும் எதிர்பாராத ராம்ஜியும், புவனாவும் திடுக்கிட்டு விட்டனர்.

என்ன சொல்லி வரவேற்பது என்பது புரியாமல் இருவரும் திகைத்து விட்டுப் பிறகு, ''வாருங்கள்'' என்று அழைத்தனர். மனம் குறுகி விடும் போது எண்ணங்கள் விசாலமாகப் பொங்கி வருவதில்லை. இந்த வரவேற்பைச் சங்கர் அவ்வளவாக ரசிக்கவில்லை. வேண்டா வெறுப்பாக இரண்டு நாட்கள் தங்கி விட்டு, வேறு இடம் பார்த்துக் கொண்டு கிளம்பினார்கள்.

''முதன் முதலில் குடித்தனம் நடத்தப் போகிறாய். வேண்டியதை வாங்கித் தருகிறேன்'' என்று புவனா கடைக்குக் கிளம்பியதைப் பவானி ஒரே சொல்லில் தடுத்து விட்டாள்: ''நாங்கள் இங்கே ஒன்றும் யாசகம் வாங்க வரவில்லை'' என்று.

ராம்ஜி புவனாவை அழைத்து ரகசியக் குரலில் எச்சரித்தார். ''நீ வளர்த்த பவானி இவள் இல்லை. ரொம்பவும் மாறிப் போய் விட்டாள். அவள் போகிற வழியே விட்டு விடு.''

ராம்ஜி எதையுமே சடுதியில் தாங்கிக் கொண்டு, உள்ளத்தைத் தேற்றிக் கொள்ளும் பண்பாளர். ஆனால், புவனா அப்படியில்லை.

'நான் வளர்த்த பூச்சி இது. இத்தனையூண்டு இருந்த பெண்ணுக்கு நேற்று வந்தவன் கிட்டே இருக்கிற அன்பும், பாசமும் என்கிட்டே இல்லாமல் போய் விடுகிறதா என்ன?' என்று கறுவிக் கொண்டேயிருந்தாள்.

புவனாவுக்குச் சங்கரைக் கண்டால் பிடிக்கவில்லை. தன் கணவனை மதிக்காதவளைப் பவானிக்குப்பிடிக்கவில்லை.

## 'காக்கி' பிறந்த கதை !

**போ**ர் வீரர்கள் அணியும் 'காக்கி' உடைக்கு அந்தப் பெயர் எப்படி வந்தது தெரியுமா?

சிப்பாய்க் கலகத்தின் போது, தங்களைப் புரட்சிக்காரர்களிடமிருந்து பிரித்துக் காட்ட, பிரிட்டிஷ் போலீஸார் தங்களது வெண்ணிற உடையில் 'மசாலா'ப் பொடியைத் தூவி 'காக்கி' நிறமாக்கிக் கொண்டார்களாம்? இந்தக் குழுவினருக்குக் 'காக்கிப் பட்டாளம்' எனப் பெயரிடப்பட்டது. இதிலிருந்து காக்கி உடையே போர்வீரர்களின் உடையாகி விட்டது!



தகவல் : ஸி. சம்பத் குமார்.

---

என்னதான் உடன் பிறந்தவளாக இருந்தாலும் இருவர் உள்ளத்திலும் கசப்பு நிரம்பி வழிந்தது.

இடையில் பவானி கர்ப்பமான போது புவனு மகிழ்ச்சியடைந்தாள். அவளுக்குக் கிடைக்காத அந்தத் தாய்மைப் பேற்றைத் தன் தங்கை அடைய விருக்கிருள் என்று அவளின் நல்ல இதயம் மகிழ்ச்சியடைந்தது.

''முதல் பிரசவம். பிறந்த வீட்டில் வைத்துச் செய்ய வேண்டு மென்பார்கள்'' என்று பழைய விரோதங்களை மறந்து பவானியை அனுப்பச்சொல்லி சங்கரிடம் கேட்டாள் புவனு.

அவன் குத்தலாகச் சிரித்தான். ''இந்தச் சம்பிரதாயங்களை எல்லாம் நாங்கள் மறந்து விட்டோம். எனக்கு இஷ்டமில்லை. உங்கள் தங்கை வந்தால் அழைத்துப் போங்கள்'' என்றான்.

பவானியை எப்படியோ சரிக்கட்டி புவனு அழைத்து வந்தாள். அப்பொழுதும் அவளுக்குத் தோல்வியே காத்திருந்தது. எவ்வளவோ கவனமாக இருந்தும், குழந்தை இறந்தே பிறந்தது.

கடவுள் செயல் என்று சங்கர் ஒத்துக் கொள்ளவில்லை. கர்ப்பிணியின் விருப்பத்துக்கு மாறாகச் செய்ததால் ஏற்பட்ட விளைவாகவே கருதினன். பிறகு பல வருஷங்கள் பவானிக்கும், புவனுவுக்கும் போக்கு வரவே இல்லாமல் இருந்தது. இப்பொழுது பவானி ஒரு நடன கோஷ்டியுடன் மேல் நாடுகளில் சுற்றுப் பிரயாணம் செய்யக் கிளம்பியிருந்தாள். பொறுப்பாகக் குழந்தையைப் பார்த்துக் கொள்ள யாரும் இல்லாததால், புவனுவிடம் விட்டு விட்டுப் போக வேண்டியிருந்தது.

**இ**ந்த நிகழ்ச்சிகளை யெல்லாம் புவனு விவரிக்கும்போது என் எதிரே ஒரு சோக நாடகமே நடப்பது போல் அக் காட்சிகளை என் மனத் திரையில் நன்ருகக் காண முடிந்தது.

சகோதர பாசம், அதன் விரிவான போக்கு, அதில் ஏற்படும் முறிவு இவையெல்லாம் கலந்தே வாழ்க்கை என்ருல் என் ஆருயிர்த் தோழி காலமெல்லாம் கண்டது வெறும் தோல்விதான்.

**தொ**ட்டிலில் துயிலும் குழந்தையை அப்படியே விட்டு விட்டு நாங்கள் இருவரும் வெளி வராந்தாவுக்கு வந்து அமர்ந்தோம். எங்கள் எதிரே, 'போகன் வில்லா' வளைவில் நூற்றுக் கணக்கான மலர்கள் மலர்ந்து காற்றில் ஆடிக் கொண்டிருந்தன. ஒரு நாளில் மலரும் எண்ணற்ற மலர்கள் தமக்குள் பேதம் ஏதும் பாராமல் மலர்ந்து, நறு மணம் சிந்தி, வாடி உதிர்ந்தும் விடுகின்றன.

மனிதர்கள் அப்படியில்லை. ஒரு தாய் வயிற்றில் பிறந்தாலும் வேற்றுமை எண்ணங்களால் உந்தப்பட்டே செயல் படுகின்றனர். பெங்களூரில் அப்போது வசந்த காலம். எங்கு திரும்பினுலும் இந்த மலர்க் கூட்டங்கள் என்னை இப்படிச் சிந்திக்க வைத்தன.

நீண்ட மௌனத்துக்கப்புறம் புவனு தான் முதலில் பேசினுள்.

''நீ இரவில் என்ன சாப்பிடுவாய்?''

''கோதுமைக் கஞ்சிதான் சாப்பிடுகிற வழக்கம். எனக்கென்று பிரத்யேகமாக ஏதும் செய்ய வேண்டாம்.''

''உன் அண்ணுவும் கஞ்சிதான் சாப்பிடுவார். நல்லதாகப் போயிற்று...''

''எப்படியும் உனக்காகச் சமைக்க வேண்டாமா புவனு? 'ஸ்டவ்'வைப் பற்ற வைக்கட்டுமா?'' என்று கேட்டபடி எழுந்தேன்.

அவள் கூறிய பதில் என்னைத் திகைக்க வைத்தது.

''நான் இரவில் சாப்பிடுவதை நிறுத்தி வருஷக் கணக்கில் ஆயிற்று. ஒரு தம்ளர் மோர் சாப்பிட்டு விட்டுப் படுத்து விடுவேன்... அதற்கு மேல் சாப்பிட எங்கள் வருமானத்தில் இடம் இல்லை...'' என்றாள் புவனா.

உள்ளே குழந்தை சிணுங்கும் சத்தம் கேட்டது. வெளியேயும் இருட்ட ஆரம்பித்து விடவே, நாங்கள் இருவரும் உள்ளே சென்றோம். ராம்ஜியும் தம் 'ப்ளாஸ்டர்' பொம்மைகளை ஒரு தட்டில் வைத்து உள்ளே கொண்டு வந்து வைத்தார். 'வறுமையும், செழுமையும்' என்று பெயரிட்டு ஒரு பொம்மை செய்திருந்தார் அவர். அடுக்குகள் நிறைந்த மாளிகைக்கு முன்பாக ஒரு குடிசை. அதன் வாயிலில் மெலிந்த மனிதன் ஒருவன். சொறி பிடித்த நாய் ஒன்று.

''மாளிகைக்கு முன்பாகத்தான் குடிசையின் எளிமையை நம்மால் நன்றாகப் புரிந்து கொள்ள முடிகிறது. மேல் நாடுகளுக்குச் சென்று விட்டு வரும் ஒருவனோ, ஒருத்தியோ தாயகம் திரும்பியவுடன் இங்கு நெடுகிலும் பரவியிருக்கும் இல்லாமையைத்தான் அதிகமாகக் காண்கிறார்கள். நம்மிடம் புதைந்து கிடக்கும் ஆத்மிகச் செல்வத்தை அடியோடு மறந்த நிலையில், மேல் நாட்டின் செல்வப் பெருக்கைப் பற்றிப் பேசித் தீர்க்கிறார்கள்-'' என்றார் ராம்ஜி.

''அந்த ஒருத்தி நம் பவானியாகக் கூட இருக்கலாம்..'' என்றாள் புவனா.

''கண்டிப்பாக அவள் நான் சொன்னதைத்தான் சொல்லப் போகிறாள். அவள் குழந்தையை நாம் கெடுத்து விட்டோம் என்று கூடச் சொல்லுவாள்.''

தொட்டிலில் குழந்தையின் அழுகை பலமாகக் கேட்க ஆரம்பிக்கவே நான் விரைந்து சென்று குழந்தையை எடுத்தேன். அதற்கு உடல் நலம் சரியில்லை யென்று தெரிந்தது. புவனா பதறிப் போய் விட்டாள்.

''அட ஆண்டவனே! அடுத்த வாரத்தில் பவானி வருகிறாளே! குழந்தை இளைத்துப் போயிருந்தால் அவள் வாயில் விழுந்து தீர்க்கணுமே'' என்று புவனா அங்கலாய்த்த போது, எனக்குப் புவனாவின் மீது கோபமே ஏற்பட்டது.



## வலது கை எதற்காக?

உலகெங்கும் மணம் செய்து கொள்ளும் மக்களுக்கு தலை மேல் அரிசியையோ, தானியத்தையோ தெளிக்கும் வழக்கத்துக்கு ஓர் ஆதாரம் உண்டு. உயிர்களைச் செழிக்க வைக்கும் அந்த உணவுத் தானியத்தின் வளம், அவர்களுடைய வாழ்க்கையிலும் பெருக வேண்டும் என்பதுதான் அந்த நம்பிக்கை.

மணமானதும், மணப்பெண் மணமகனின் இடது கையைச் சேர்த்துக் கோத்துக் கொள்ளும் வழக்கம் மேலை நாடுகளில் இன்றும் உண்டு. முன்பெல்லாம் இப்படி ஒரு திருமணம் முடியும்போது போட்டியிடும் பிற வாலிபர்கள், மணமகனைக் கத்திச் சண்டையிட அழைப்பது வழக்கமாம். அதற்காக, கத்தியை எடுத்துக் கொள்ளட்டும் என்று விட்டு வைப்பதே அந்த வலது கை!

---

பல படிகளில் தோல்விகளை அடுக்கடுக்காக கண்டவள், சற்றும் சளைக்காமல் அந்தப் பாதையிலேயே செல்ல விரும்புவதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. குழந்தைக்குகடுமையான ஜுரம் வந்து விடவே அன்று நாங்கள் யாருமே எங்கள் உணவைப் பற்றிக் கவலைப் படவில்லை. டாக்டர் வீட்டுக்கு அலைந்து, மருந்து வாங்கி வந்து, கண் விழித்துக் கடவுளை வேண்டி, ஒரு வழியாக மூன்று நாட்களுக்கு அப்புறம் குழந்தையின் உடம்பு குணமாகியது.

சிரித்துக் கொண்டே தளர் நடை பயின்று வரும் மதலையின் அழகில் யார் தாம் மயங்க மாட்டார்கள்? புவனா, அதன் முன்பாகக் கைகளைக்

கொட்டி அதைப் போல நடந்து விளையாடிக் கொண்டிருந்தாள்.

ராம்ஜி தோட்டத்தில் பொம்மைகள் செய்து கொண்டு இருந்தார். நான் படித்துக் கொண்டிருந்தேன்.

பீட்டர் உஸ்டினுவ் என்கிற நடிக எழுத்தாளரின் 'வாழ்க்கை _ ஒரு நாடகம்' என்கிற சிறு கதையைப் படித்துக் கொண்டிருந்தேன். நடிகை ஒருத்தியின் ஆணவம் கலந்த தன்னம்பிக்கையைப் பற்றிய கதை அது.

புவனாவின் தோல்விகளுக்குள்ளும் ஒருவித ஆணவம் இருப்பதாகவே எனக்குப் புலப்பட்டது.

பவானி அவளை எத்தனை ஒதுக்கினாலும், அவமரியாதை செய்தாலும், தான் பெரியவள், தன்னிடம்தான் அவள் ஓடி வருவாள் என்கிற ஆணவம் புவனாவின் மனத்தில் நிரம்பியிருப்பதாகத் தோன்றியது.

உள்ளேயிருந்து இனிய கீதம் ஒலிக்க ஆரம்பித்தது.

''ஆடாது அசங்காது வா, கண்ணா'' என்று பாடியபடி புவனா குழந்தையை அழைத்து, ஆனந்தப் பட்டுக் கொண்டிருந்தாள். அடுத்த நாள் பவானி பெங்களூர் வருவதாகச் சென்னையிலிருந்து காலையில் தந்தி வந்திருந்தது.

குழந்தை மூன்று நாள் ஜுரத்தில் வாடி இளைத்துப் போயிருந்தது. பவானி வீட்டுக்கு வந்ததும் சகோதரிகள் இருவரும் நடத்தப் போகும் அந்த விவாதம் என் கற்பனையில் மிதந்து கொண்டே யிருந்தது. புத்தகத்தை மூடிவைத்துக் கண்களை மூடிக் கொண்டு அதை ரசிக்க ஆரம்பித்தேன்.

உள்ளே ராம்ஜியும், புவனாவும் தர்க்கமிடும் சத்தம் கேட்டது.

''புவனா! நீ ஒரு பைத்தியம். நமக்கென்று கடவுள் ஒன்றைக் கொடுக்கவில்லை, அந்தப் பொறுப்பற்றவளின் குழந்தையைக் காலமெல்லாம் நாம் எதற்கு வளர்க்க வேண்டும்? குழந்தை யாரிடம் வளர வேண்டும் என்பதைக் கோர்ட் தீர்மானம் செய்யும்'' என்று இரைந்தார் ராம்ஜி.

''அவள்தான் சங்கரை விவாகரத்து செய்து விடப் போகிறாளாமே... அவன் வேறு கல்யாணம் பண்ணிக் கொள்வான். இவள் பெங்களூர் வரப் போவதில்லையாம். திரும்பவும் நடன கோஷ்டியுடன் ஜப்பானுக்குப் போகிறாளாம். இவர்கள் சண்டையில் இந்தக் குழந்தை கிடந்து திண்டாட வேண்டாம். இது நம் குழந்தையாக இங்கேயே இருக்கட்டும்...'' என்றாள் புவனா அழுதபடி.

விவாகரத்து, கணவன், மனைவி தகராறு பற்றிய சட்ட திட்டங்களையோ, தீர்ப்புகளையோ அறிந்து கொள்ளும் மனப் பக்குவம் அந்தக் குழந்தைக்கு வருவதற்கு இன்னும் எத்தனையோ ஆண்டுகள் ஆகும். ஆனால், அது அனுபவிக்க வேண்டிய தாயன்பை அது இழப்பது நியாயமல்ல என்று தான் எனக்குத் தோன்றியது.

'எனக்கிருக்கும் குழப்பத்தில் குழந்தையை எங்கே விடுவது என்று தவிக்கிறேன்' என்று பவானி கடிதத்தில் எழுதியிருந்தாள்.

குழப்பங்களும், தொல்லைகளும் இல்லாத ஓர் அமைதியான சூழலில் வளர வேண்டிய அந்த மதலையின் சுதந்திரத்தைப் பறிக்க, யாருக்கும் சுதந்திரமில்லை அல்லவா?

''புவனா! குழந்தை உன்னிடம்தான் இருக்கட்டும். நீ வளர்ப்பதாக உன் தங்கைக்கு எழுதி விடேன்'' என்றேன் நான்.

அவ்விதமே அவள் எழுதி, ஒப்புதலும் பெற்று விட்டாள்.

'பல தோல்விகள், வெற்றிகளின் படிகள்' என்று யாரோ சொன்னதாக ஒரு நினைவு எனக்கு.

ராம்ஜி தம்பதி தம் வாழ்க்கையில் முதன் முதலாக வெற்றிப் பாதையை நோக்கி நடக்க ஆரம்பித்திருந்தார்கள். அவர்கள் வாழ்க்கையில் முதன் முதலாக வசந்த காலம் ஆரம்பித்திருந்தது.

பெங்களூரின் இனிய வசந்தத்தை விட்டுப் பிரிந்து வர மனம் வராமல், இனிய நினைவைச் சுமந்து கொண்டு சென்னைக்குத் திரும்பினேன்.

# ருக்கு வந்தாள்!

சரோஜா ராமமூர்த்தி

விருந்துச் சாப்பாட்டின் மணம் வாசல் தாழ்வாரம் வரை வீசிக் கொண்டிருந்தது. சமையல் அறையைக் காமா சோமாவென்று போட்டு விடாமல் காமாட்சி துப்புரவாக ஒழித்து வைத்துக் கொண்டிருந்தாள்.

அவளுக்குப் பால்யத்தில் நடந்த ஒரு சம்பவம் நினைவுக்கு வரவே இலேசாகச் சிரிப்பும் வந்தது. சிரித்தவாறு குளியல் அறையிலிருந்து முகம் கழுவித் துடைத்துக்கொண்டே வெளியே வரும் மனைவியைப் பார்த்துச் சிவராமன், ''என்ன உனக்குள்ளே ஆனந்தத்தை முக்குளித்துக் கொண்டு? என்னிடமும் சொல்லேன், விஷயத்தை !'' என்று கேட்டார்.

கண்ணாடி முன்பு நின்று முகத்துக்கு இலேசாகப் பவுடர் போட்டுக் கொண்டாள். வட்ட வடிவமான குங்குமப் பொட்டை வைத்தவாறு கணவனின் பக்கம் திரும்பி, ''உங்களுக்குத் தெரியாத விஷயமா, என்ன? நீங்கவேணு மறந்து போயிருப்பேள். எனக்கு நன்னு ஞாபகம் இருக்கு'' என்று பீடிகையுடன் ஆரம்பித்தாள் அவள்.

''இன்னிக்கி நம்ம வீட்டுக்கு சாப்பிட வரா, பாருங்கோ. அதான் என் ஒண்ணுவிட்ட தங்கையும், அவள் புருஷனும், குழந்தைகளும். அவாளைப் பார்த்து ஏழெட்டு வருஷங்களாச்சு. ஆனா அவள் சுபாவம் அப்படியே இருக்கோ, இல்லே மாறியிருக்கோன்னு நெனைச்சுண்டேன். சிரிப்பு வந்தது. எந்தப் பழியையும் பிறத்தியார் மேலே போட்டுட்டுத் தூர நின்னு ரசிச்சுச் சிரிக்கிற குணம் அவளோடது. ஒரு தடவை, அன்னிக்கி வீட்டிலே என்னமோ விசேஷம். பெரியம்மா—அதுதான் அவள் அம்மா — என்னைச் சமைக்கச் சொன்னாள். சமையலை 'முடிச்சுட்டு இன்னிக்கு மாதிரியே முகம் அலம்பக் குளியலறைக்குப் போயிட்டு வந்தேன். எப்பவுமே எனக்கு வேர்த்து விறுவிறுக்க நின்னாப் பிடிக்கிறதில்லே. பளிச்சுனு இருக்கணும். அப்புறமா சாப்பாட்டு நேரத்துலே நானும் அவளுமா பரிமாற ஆரம்பிச்சோம். சாப்பிட உட்கார்ந்தவா மூஞ்சியைப் பார்க்கச் சகிக்கலே. எல்லாத்துலேயும் ஒரே உப்பு. பெரியப்பா என்னை அண்ணாந்து பார்த்து, 'ஏண்டி, பொண்ணே! உம் புக்காத்துப் பக்கத்துலே உப்பளம் இருக்கா என்ன? உப்பை அள்ளிக் கொட்டியிருக்கியே'ன்னு கேலியும், கோவமுமா கேட்டார். அப்போ எல்லாத்துலேயுமா உப்புத் தூக்கலாப் போட்டிருப்பேன்? கண்ணுலே தளும்பற ஜலத்தை மறைச்சுண்டு வெளியே பார்த்தால் இந்தப் பெண் உக்கிராண உள்ளேயிருந்து என்னைப் பார்த்துச் சிரிக்கிறது. அப்பவே புரிஞ்சு போச்சு, எல்லாம் இதன் வேலைதான்னு.''

''ருக்குவா அப்படிப் பண்ணினா ?'' என்று ஆச்சரியப்படுபவர் போல் சிவராமன் கேட்டார். வெள்ளை வெளேர் என்று மொழு மொழுப்பாய், முன் உச்சியில் படிந்த குழலுடன், பளீர் என்கிற சிரிப்புடன் நிற்கும் ருக்குவை அவர் நினைத்துக் கொண்டாரோ என்னவோ !

'' நான் எதுக்குப் பொய் சொல்லப் போறேன்? அவள் சுபாவம் அப்படி. பிறத்தியார் யாரும் அவளை விட உசத்தியாய் இருக்கப்படாது. இன்னும் கேளுங்கோ. அவள் தலை தீபாவளிக்கு என்னை வரச் சொல்லி நான் போயிருந்தேனா ?'' என்று சிவராமனுக்கு அந்த விஷயத்தை இலேசாக நினைவுபடுத்திப் பார்த்தாள் காமாட்சி.

ஆண்களின் போக்கே அலாதியானது என்பது அவளுக்கு மறந்து விட்டது. ருக்குவின் வெள்ளை வெளேர் என்ற மொழு மொழுப்பையும், சாட்டை போன்ற பின்னலையும், சுருண்டு தொங்கும் குழற் கற்றைகளையும் நினைவு வைத்திருக்கும் கணவர், ருக்குவின் தலைதீபாவளி சமயத்தில் நடந்ததை மறந்து விட்டிருப்பார் என்று பிரக்ஞையில்லாமல் 'அவள் தீபாவளிக்குப் போயிருந்தேனா?' — என்று கேட்டிருக்கக் கூடாது.

சிவராமன் சாதாரணமாக அவளைப் பார்த்து, ''இதெல்லாம் யாருக்கு நினைவு இருக்கு? அவள் தலை தீபாவளிக்கு நீ போயிருந்தியா, என்ன?'' என்று கேட்டார்.

காமாட்சி அவரை அதிசயத்துடன் பார்த்தாள். பிறகு, ''ஆமாம்! போயிருந்தேன். அப்பவும் அந்தப் பெரியம்மா பட்சணம் செய்யற பொறுப்பை என் தலையிலே போட்டுட்டா. மைசூர்பாகு கிளறி வில்லை போட்டு வைச்சதும் பெரியப்பா அந்தப் பக்கம் வந்தவர், 'ஏண்டி, பொண்ணே ! நெய் வாசனை மூக்கைத் துளைக்கிறதே ! எங்கே, ஒரு வில்லை கொடு பார்க்கலாம்னு கேட்டு வாங்கி விண்டு வாயில் போட்டுண்டார். 'கரைஞ்சு போய் விடறதே. இப்படீன்னா இருக்கணும், மைசூர் பாகு! அடியே, நீயும் பண்றயே! சுத்தியல்னா தேடணும், நீ பண்ணற மைசூர் பாகை உடைக்க' என்று அவர் பாணியிலே பேசிண்டே நாலஞ்சு வில்லைகளைத் தின்னுண்டிருந்தார். இதைக் கேட்டுண்டு நின்னுண்டிருந்த ருக்கு அப்போ ஒண்ணும் பேசலை. இருந்தாலும் அவள் கெடக்கான்னு நானே வலுவிலே, 'ஏண்டி, ருக்கு! மாடியிலே மாப்பிள்ளைக்கு ரெண்டு வில்லை எடுத்துப் போய்க் கொடேன்' னேன். அவ மூஞ்சியைத் தோளிலே இடிச்சிண்டு, 'ஆமா! இந்த மைசூர்பாகு ரொம்ப அபூர்வம் பாரு! அவர்கள் வீட்டிலே பால் கோவா போடாமெ ஒரு ஸ்வீட்டும் பண்றதில்லையாம். நான் எடுத்துண்டுபோய்க் கொடுத்தால் அவர் எம்மூஞ்சியிலே விட்டெறிவார்'னு இரைஞ்சு சொல்லிண்டிருந்தா. எனக்கு என்னவோ போல இருந்தது. 'ருக்கு! ருக்கு! இரையாதே. மாப்பிள்ளை காதுலே விழப் போறது'ன்னு நான் சொல்லிண்டிருக்கச்சே மாப்பிள்ளை கீழே இறங்கி விட்டிருந்தார். நான் தலையைக் குனிஞ்சுண்டு காரியத்தைப் பார்த்துண்டிருந்தேன். அவர் சமையலறை வாசற்படியிலே நின்று, ''நெய் வாசனை மூக்கைத் துளைச்சுது. மைசூர் பாகா?'' என்று கேட்டார். நான் பதி




★ இக்குறியிட்ட கடிதங்களுக்குப் பரிசு பகிர்ந்து அளிக்கப் படுகிறது

தணிகைப் புராணத்தில், களவுப் படலத்தில் 244-வது பாடலில் மயில் முறை குலத்துரிமை பற்றி வருகிறது. அப்பாடலில் உள்ள அவசியமான இரண்டு வரிகள்:

'' பலாவம் பொழிலுறை ஒருதாய் உயிர்த்த பலமயிற்கும்
கலாவம் புனைந்த களிமயில் மூத்தது !''

''இப்பாடலை ஒரு கம்பராமாயணச் சொற்பொழிவாளரிடம் கேட்டுத் தெரிந்தபின், 'ஸயன்டிபிக் அமெரிக்கன்' பத்திரிகையிலிருந்து மயில்முறைக் குலத்துரிமைக்கு நான் விளக்கம் கண்டு பிடித்து விட்டதாக எனக்கு இருந்த கர்வம் பங்கப்பட்டது'' என்று கவிஞர் அவர்களே கூறியிருக்கிறார்கள்.

ஆதாரம்: நாமக்கல் கவிஞர் அவர்கள் எழுதிய ''கற்றது கைம்மண் அளவு'' என்ற கட்டுரையிலிருந்து.

நங்கவரம்
21-12-70 ப. சாஸ்தான்குட்டிபிள்ளை




வால் இல்லா எலிகள் தண்ணீர் குடிக்கும். குடிக்காது என்று கூறுவது தவறு. மருந்துகளைப் பரிசோதனை செய்து பார்க்க இவ்வெலிகள் பயன்படுகின்றன. இப்பரிசோதனைச்சாலைகளில் இவற்றுக்குக் குடிக்கத் தண்ணீரும் இருக்கிறது. தண்ணீர் வேண்டும்போது ஒரு குழாயில் வாய் வைத்து உறிஞ்சி உட்கொள்கின்றன. மற்ற நேரங்களில் தண்ணீர் கீழே விழாது. தலை கீழாக, சற்றுச் சாய்ந்த நிலையில் இப்பாட்டில் இருக்கும்.

சென்னை — 5
17-12-70 வி. தாமோதரன்

★ சோஷலிஸ திட்டங்களை நிறைவேற்றுவதற்கு முட்டுக்கட்டையாக இருக்கின்ற அரசியல் சட்டத்தைத் தம் விருப்பப்படி திருத்தத் தமக்கு மக்கள் பெரும்பான்மை பலம் தர வேண்டும் என்று கருதி இந்திரா காந்தி பாராளுமன்றத்தைக் கலைத்திருக்கிறார். இப்பொழுது இந்தியாவில் ஜனநாயகத்தைக் காக்கும் பொறுப்பு மக்களிடமே விடப்பட்டுள்ளது. இந்திரா காந்தி விரும்புகின்ற பெரும்பான்மை பலத்தை நாம் அவருக்குக் கொடுத்து விடுவோமானால், நமது அரசியல் சட்டம் பாழ்பட்டுப் போகும். சர்வாதிகாரத்தனம் வேரூன்றி, அப்புறம் நாம் கம்யூனிச சாத்தானுக்கு அடிமையும் ஆவோம். யானை தன் தலையிலேயே மண்ணை வாரிப் போட்டுக் கொள்கிற மாதிரி ஆகாமல், இந்திய மக்கள் விழிப்போடு தங்கள் சுதந்திரத்தையும் ஜனநாயகத்தையும் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்.

அந்தியூர்,
30-12-70 மு. தவசியப்பன்

★ கம்யூனிஸம் என்பது செழித்த கரும்பை அடியிலிருந்து நுனியை நோக்கித் தின்று வருவதற்கு ஒப்பாகும். அதாவது கம்யூனிஸம் முதலில் இனிப்பது போல் தோன்றும். போகப் போக அது மக்களைச் சுதந்திரமற்ற விலங்குகளாக்கி விடும். எனவே, கம்யூனிஸப் பாதையை நோக்கிச் செயல்படும் இந்திரா காந்திக்கு மக்கள் ஆதரவு தரவே கூடாது.

மார்ச்சு மாதத்தில் புதிய நிதி ஆண்டு தொடங்குகிறது. இன்றைய நிலையில் ஏராளமாகத் துண்டு விழும் பட்ஜெட்டைத்தான் இந்திரா அம்மையாரால் சமர்ப்பிக்க முடியும். துண்டு விழுவதைச் சரிக்கட்ட அதிக வரி போட வேண்டி யிருக்கும். இருக்கின்ற வரிகளுக்கு மேல் இன்னும் போட்டால் மக்களுடைய மனம் மாறி, அடுத்த ஆண்டு வரவிருக்கும் தேர்தலில் அவருக்கு எதிராகச் செயல்படுவரே என்ற ஐயத்தினால் பட்ஜெட் தொடக்கத்துக்கு முன்பாகவே இன்னும் ஐந்தாண்டுக்குத் தம்மை ஸ்திரப்படுத்திக்கொள்ள நினைக்கிறார். மக்கள் ஏமாந்து விடக்கூடாது.

காஞ்சி,
30-12-70 ஆ. ஜெயசந்திரன்

★ தமிழ் நாடு அரசாங்கச் செய்தித் துறை இயக்குநரால் வெளியிடப்பட்ட புலட்டின் நெம்பர் 37 செய்திச் சுருளைச் சமீபத்தில் ஒரு தியேட்டரில் நான் காண நேர்ந்தது. அதில் வெளிநாடு சென்று திரும்பிய கல்வி அமைச்சர் நெடுஞ்செழியன் அவர்களுக்கு மாபெரும் வரவேற்பு அளிப்பதாகக் காண்பிக்கப்படுகிறது. இந்த வரவேற்புக் காட்சிமட்டும் ஏறக்குறைய ஐந்து நிமிடங்கள் காட்டப் படுகிறது. ஒருசில அமைச்சர்களும், அதிகாரிகளும் தவிர அமைச்சருக்கு மாலையிடுபவரெல்லாம் அவரின் கட்சியைச் சேர்ந்த நூற்றுக்கு மேற்பட்ட மாவட்ட, வட்டச் செயலாளர்கள், நகரசபை உறுப்பினர்கள் இத்தியாதி, இத்தியாதி. நாம் சர்க்காருக்குக் கொட்டிக் கொடுக்கும் வரிப் பணம் ஓர் அரசியல் கட்சியின் முக்கியஸ்தர்களைக் காண்பிக்கவா எனக் கேட்கத் தோன்றுகிறது. வாயளவு நேர்மையைச் செய்கையளவில் எப்போதுதான் நம் அரசியல்வாதிகள் காண்பிக்கப் போகிறார்களோ ?

சென்னை — 34
31-12-70 களம்பூர் எஸ். கோபிநாத்

யாதைக்காவது கொடுக்கணுமேன்னு அங்கிருந்த தட்டிலே ரெண்டு வில்லை வைச்சுக் கொடுத்தேன். ரசிச்சுச் சாப்பிட்டு விட்டு, ''பேஷாயிருக்கு......'' என்று பாராட்டி விட்டுப் போயிட்டார்......''

''அப்புறம்?'' என்று கதை கேட்பது போல் சிவராமன் கேட்டுக் கொண்டு நிமிர்ந்து உட்கார, ''அப்புறம் என்ன? அந்தப் பொருமை பிடிச்சவ என்னோடே பேசவே இல்லை......'' என்றாள் காமாட்சி.

இருவரும் பேசிக் கொண்டிருந்ததில் நேரம் போனது தெரியவில்லை. மணி பத்தரையைத் தாண்டியிருந்தது.

''பத்து மணிக்கே வரேன்னுள். இன்னும் காணுமே?'' என்றபடி காமாட்சி வாசலில் போய்ப் பார்த்தாள். தெரு முனை திரும்பி ருக்குவும், அவள் கணவனும், குழந்தைகள் இரண்டு பேரும் வந்து கொண்டிருந்தார்கள்.

''வாடி, ருக்கு! வாங்க, மாப்பிள்ளை!'' என்று வாய் குளிர அழைத்த காமாட்சி உட்புறம் திரும்பி, ''இங்கே பாருங்கோ! அவாள்ளாம் வரா.......'' என்று குரல் கொடுத்தாள். சிவராமன் எழுந்து வந்து சிரித்தபடி வரவேற்றார். ருக்கு அதே மாதிரி வெளுப்பாக மொழு மொழுப்பாகத்தான் இருந்தாள். முன்னைவிட நல்ல பருமன்; பணத்திலே புரளுகிற பாவம் முகத்திலே தெரிந்தது. கைகளில் புதையப் புதைய வளையல்கள். கழுத்தில் புது மாதிரியான பச்சைக் கல் 'சோக்' நெக்லெஸ். மூக்குத்தி அணியவில்லை. காதுகளில் தாடங்கம் மாதிரி பெரிய வைரத் தோடுகள். பெண்கள் இரண்டு பேரும் சல்வார், கமீஸ் போட்டுக் கொண்டிருந்தார்கள்.

''அடே, அம்மா! உன் வீட்டைக் கண்டு பிடிக்க இத்தனை நாழியாச்சு. இனிமேல் இங்கே வரதுன்னு அத்திம்பேர் கார் எடுத்துண்டு வந்து எங்களை அழைச்சுண்டு போகணும்'' என்றாள் ருக்கு. அவள் கணவன் அதை ஆமோதிப்பவன் போல் சிரித்துக் கொண்டிருந்தான்.

'' எங்கிட்டே கார் இல்லயேம்மா. வேணுமானுல் ஒண்ணு பண்றேன். நீ அடுத்த தடவை வர்றதுக்குள்ளே 'ப்ளேன்' வாங்கிடறேன். வீட்டு வைக்கப் பக்கத்திலே மீனம்பாக்கம் இருக்கு. நீயும் டில்லியிலேயிருந்து நேரா வந்துடலாம்'' என்றார் சிவராமன்.

காமாட்சிக்கு எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது. இருந்தாலும் சிரித்தபடி உள்ளே போய் எல்லாருக்கும் குளிர் பானங்கள் கொண்டு வந்து வைத்தாள். ருக்கு வீட்டை ஒரு நோட்டம் விட்டாள்.

''வீடு கொஞ்சம் கொஞ்சம் மாறித்தான் இருக்கு. ஆனு, ரொம்ப 'வில்லேஜ் டைப்' இல்லையா?'' என்று கணவனைப் பார்த்துக் கேட்டாள்.

''இப்படி இருந்தாத்தான் எனக்குப் பிடிக்கிறது. ஜன நெரிசலும், பெட்ரோல் நாற்றமும், இரைச்சலுமா என்ன நகர வாழ்க்கை வேண்டியிருக்கு? வெளிநாட்டிலே ஜனங்கள் வாரக் கடைசியிலே கிராமங்களுக்குப் போயிடுறாளாம். மலைகள், ஆறுகள், கடலோரம் என்று அமைதியா இருந்தால் மனுஷனுக்கு இத்தனை வியாதிகள் எல்லாம் வராது. நமக்கு எப்பவும் ஒரே 'டென்ஷன்' தான் பிடிக்கிறது.... இதப் பாருங்க சார்! டில்லியிலே ஒரு வருஷம் இருந்துட்டா எனக்கு எப்ப டாப்பா நம்ப மோகனூருக்குப் போய்



வாய்க்கால்லே குளிச்சிட்டுப் பழையது சாப்பிடப் போறோம்னு இருக்கு.... ஆனா இவள் தினுசு வேறே—'' காமாட்சிக்கு ஒரே வியப்பாக இருந்தது. ருக்குவின் கணவன் அவள் எதிரில் இவ்வளவு அப்பட்டமா கிராமங்களை உயர்த்திப் பேசுவதைக் கண்டதும் அவளால் அதை நம்ப முடியவில்லை.

காமாட்சி உள்ளே சென்று நுனி வாழை இலைகளைப் போட்டுத் தம்ளர்களில் ஜலம் எடுத்து வைத்தாள். பிறகு கூடத்துக்கு வந்து, ''எல்லாரும் சாப்பிட வாங்கோ. இப்பவே மணி பதினொண்ணு ஆகிறது.....'' என்றாள்.

''வரச்சே நான் ஹோட்டலிலே டிபன் சாப்பிட்டுட்டு வந்தோம்'' என்று அலட்டிக் கொண்டாள் ருக்கு.

''டிபன் சாப்பிட்டுட்டு வந்தேன்னு சொல்லு. நான் ஒரு டம்ளர் ஐஸ் வாட்டர் தான் சாப்பிட்டேன். நீ நன்னா ஒரு புடி புடிச்சே....'' என்று வெகுளியாகப் பேசினான் ருக்குவின் கணவன்.

''அப்ப நீ உன் அக்காவோட சாப்பிடேன். நாங்க மொதல்லே சாப்பிடறோம். என்னம்மா ருக்கு?'' என்று கேட்டார் சிவராமன்.

கணவனின் தாக்குதலினால் பாதிக்கப்பட்ட ருக்குவின் முகம் ஜிவு ஜிவு என்று சிவந்திருந்தது. 'எதையும் மூடி மறைச்சு நாகரிகமாகப் பழகத் தெரியாதவர்' என்று மனத்துக்குள் பொருமிக் கொண்டே ருக்கு 'உர்'ரென்று தன் கணவனைப் பார்த்தபடி, தானும் ஓர் இலையில் போய் உட்கார்ந்தாள்.

முதலில் அக்கார வடிசல் என்கிற வெல்லப் பாயசம் வைக்கப்பட்டது.

''ஐயே! இதென்ன வெல்லமும், கில்லமும். வெல்லப் பாயசம் சாப்பிட்டு ஒரு மாமாங்கம் ஆச்சுடி அக்கா. அதெல்லாம் நான் நம்ப ஊரோட விட்டாச்சு. இப்பவெல்லாம் சர்க்கரை போட்ட 'கீர்' தான் எங்க வீட்டிலே பண்ணறேன். வெல்லவாடையே எங்களுக்குக் கட்டோடு பிடிக்காது.''

அதே வெல்லப் பாயசத்தை ருக்குவின் கணவன் கோப்பை கோப்பையாக வாங்கி உறிஞ்சித் தள்ளுவதைப் பார்த்த ருக்கு முக்கால் சாப்பாட்டில் கையை உதறிக்கொண்டு எழுந்தாள். கூடத்தில் வெற்றிலை போட்டுக் கொண்டிருந்த சிவராமனிடம் சென்று, ''அத்திம்பேரே! இவர் இப்படி வெல்லத்தைக் கரைச்சுக் குடிப்பார்னு தெரிஞ்சிருந்தால் நான் ஊரிலேயிருந்து மணங்கு கணக்கிலே வெல்லம் வரவழைச்சு வைச்சிருப்பேன். ஊருக்குப் போகச்சே ஒரு மணு வெல்லம் வாங்கிக் குடுத்திடுங்கோ!'' என்று அங்கலாய்த்துக் கொண்டிருந்தாள்.

கொல்லைப்புறத்தில் கையலம்பிவிட்டுத் திரும்பிய ருக்குவின் கணவன் சமையலறையில் வேலையாக இருந்த காமாட்சியிடம் திரும்பி, ''உங்கள் தங்கை....'' என்று ஏதோ சொல்ல வாயெடுத்தாள்.

அவள் சிரித்துக் கொண்டே, ''அவள் மாறவில்லையே. உடம்போடு பிறந்தது எப்படிப் போகும்?'' என்று கூறியவளாகத் தட்டில் வெற்றிலை, பழம், தேங்காயுடன் வந்து தங்கையிடம் கொடுத்து ஆசீர்வதித்து அவர்களை வழி அனுப்பி வைத்தாள்.

''பாயசம் உனக்கு மிச்சம் இருக்கோ, காமாட்சி?'' என்று கேட்டுக் கொண்டே வந்த சிவராமனைப் பார்த்து, ''எப்படி இருக்கும், சொல்லுங்கோ? ருக்குதான் பாயசம் தான் சரியாகச் சாப்பிடல்லேன்னு தூக்குப் பாத்திரத்திலே போட்டு வாங்கிண்டு போயிட்டாளே!'' என்றாள்.

இப்போது இருவரும் சேர்ந்து பெரிதாகச் சிரித்தனர்.



# தன்னை மறந்து



ஸரோஜா ராமமூர்த்தி

மூல ஸ்தானத்தில் எழிலுருவம் காட்டிப் புன்னகை செய்தபடி நின்றிருந்த அம்பிகையின் திரு மார்பில் வைரப் பதக்கம் சுடர் விட்டது. மரகதமும், கெம்பும், புஷ்பராகமும் சேர்த்து இழைத்த நவமணிப் பதக்கம் அது. அதை இருபுறமும் தகதக வென்று மின்னும் தங்கச் சங்கிலி தாங்கியபடி மார்பில் துவண்ட கோலம் பார்ப்பவரின் கருத்தை ஈர்க்கத்தான் செய்தது.

குருக்கள் திருநாமங்களைக் கூறி அர்ச்சித்தபடி அம்பிகையின் அழகில் மூழ்கியிருந்தார். எல்லையில்லா எழிலில் தன்னை மறந்து — ஏன் 'தான்' என்பதையே மறந்து அவர் அந்தச் சக்தியுடன் ஒன்றிய மனத்தினராக ஆகிவிட்டார் என்று பெருமை கொள்ள முடியாது. அம்பிகை எழிலாக விளங்குவதற்குத் 'தான்' தான் காரணம் என்று கணபதிக் குருக்கள் கருதினார். இறுமாந்தார். அம்பிகையின் கண்டத்தில் புரளும் அந்தப் பதக்கத்தை நிர்மாணித்த பொற்கொல்லர் இடுப்பில் வரிந்து கட்டிய வேஷ்டியுடன் கண்களை மூடித் தியானிப்பது போல் நின்றிருந்தார். உண்மையிலே அவர் கண்களை மூடி அவளைத்தான் தியானிக்கிறாரா? அதோ அந்த இரு நயனங்களும் மூடி மூடித் திறக்கின்றனவே. அப்பொழுதெல்லாம், சுடர்விட்டு ஒளி வீசும் அந்தப் பதக்கம் 'என்னை உண்டாக்கியவன் நீதான், நீதான்' என்று கூறி அவரைத் 'தான்' என்கிற அகங்கார மாயையில் மாட்டி விடுவதேன்?

பொற்கொல்லர் தம் கண்களை நன்றாகத் திறந்து விட்டார்.

''ஆறுமுகம்! உன் கைத்திறமையே திறமை. பதக்கம் கன ஜோராக அமைந்து விட்டதப்பா.'' கணபதிக் குருக்கள் ஆறுமுகத்தை நோக்கிப் பேசவும், ஆறுமுகம் இறுமாப்புடன் தம்மையே தாம் நோக்கி இறும்பூது எய்தினார். கிள்ளுக் கிள்ளாகக் கொசுவம் வைத்துத் தைத்த சந்தன வண்ணப் பட்டுப் பாவாடை அம்பிகையின் பாதச் சிலம்புகளுடன் உறவாடி, உராய்ந்து மகிழ்ந்து கொண்டிருந்தது. அதை அம்பிகைக்குத் தம் காணிக்கையாகச் செலுத்திய, வேலுச் செட்டியார்தான் அந்த ஊரில் பிரபலமான ஜவுளிக் கடைக்காரர். வேலுச் செட்டியார் கடையில்தான் பிரபல சினிமா நட்சத்திரங்கள் தீபாவளி, புத்தாண்டுச் சமயங்களில் ஜவுளி எடுப்பது வழக்கம். அந்த ஆண்டும் பிரபல நடிகை ஒருத்தி அவர் கடை தேடி வந்து மூவாயிரம் ரூபாய்க்குப் புடவைகள்

எடுத்துப் போன மகிழ்ச்சியை, இந்தப் பாவாடையை அம்பாளுக்குச் சாத்தி மகிழ்வதின் மூலமாக வேலுச் செட்டியார் தம் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறார்.

''செட்டியார்வாள்! பாவாடை இருக்கு, பாருங்கோ. பார்டர் தனி ரகம். இந்த வருஷத்துப் புதுப் பாஷன் போலிருக்கு'' என்று கணபதிக் குருக்கள் மகிழ்ந்து கூற, ''ஆமாங்க, அனுசூயா தேவி இந்த மாதிரி ஒரு சேலே வாங்கிட்டுப் போனுங்க, அதிலேருந்து அம்பாளுக்கும் இது நல்ல டிசைன்னு பாவாடை போடச் சொல்லிக்கொண்டு வந்தேன். நல்லா இருந்தா சரிதான்'' என்றவாறு 'தான்' அளித்த உடையைப் பார்த்துத் தம்முடையது என்கிற நினைப்பில் மூழ்கியிருந்தார் அவர்.

இரு புறங்களிலும் தோள்களிலிருந்து வழிந்து துவண்ட பெரிய பெரிய ரோஜா மாலைகள் இரண்டும் பன்னீர் மணத்துடன் கம்மென்று மணத்தன. பூக்கார முத்து நெற்றியில் அப்பிய குங்குமத்துடன் கரங்களைக் கூப்பியவாறு நின்றிருந்தார் அங்கே. ஓர் அடுக்கு ரோஜா மலர்கள், இடையில் கதிர்ப் பச்சை, திரும்பவும் ரோஜாக்கள், அடுத்த வரிசை தவனம் என்று ரோஜாவும் பச்சையுமாக அந்த மாலைகள் அபூர்வ வேலைப்பாடுடையவை. தஞ்சையில் பூக்கட்டிப் பெயர் பெற்ற முத்து வாயிற்றே. ''மாலை யாருடைய கைங்கரியம்?'' என்று பொற்கொல்லர் ஆறுமுகம் குருக்களைக் கேட்டார்.

''ஆமாங்க. நல்ல பெயர் வாங்கிய இடந்தாங்க. தெற்கே எந்தத் தலத்திலும் உற்சவக் காலங்களில் அவர் கைங்கர்யம்தாங்க. அதோ நிற்கிறார் பாருங்க. அவர்தாங்க....'' முத்துவைச் சுட்டிக் காட்டிப் பேசினார் குருக்கள்.

பூக்காரர் முத்து மிகமிக வினயத்துடன் பொற்கொல்லரைப் பார்த்துத் தம் விரல்களில் உள்ள மோதிரங்கள் பளிச்சிடக் கையெடுத்து வணங்கினார். இந்தத் தொழிலிலே தாம் கைதேர்ந்தவர், அதற்கு அத்தாட்சியாகப் பெற்ற சம்மானங்களே இந்த மோதிரங்கள் என்று கூறுவது போல் குழல் விளக்கின் ஒளியில் தகதகவென்று மோதிரங்கள் ஒளியிட்டன.

வெளியே நாதஸ்வரத்தின் இசை ஷண்முகப்பிரியா ராகமாக உருவெடுத்துப் பெருகி வழிந்தது. பந்தல் முழுதும் மக்கள் நிரம்பி இசை அமுதத்தில் மூழ்கியிருந்தனர். வித்வான் அடிக்கடி திறந்திருந்த தம் மார்பைக் குனிந்து பார்த்துக் கொண்டார். ஆங்காங்கு வாங்கிய பொற் பதக்கங்களை மாலையாக அணிந்திருந்தார் அவர். மகாராஜாக்கள் அவர் வித்தையை மதித்துப் போற்றிக் கொடுத்த பட்டுச் சால்வை ஒன்றை வரிந்து இடுப்பில் கட்டியிருந்தார். தோற்றம் மிடுக்காக இருந்தாலும், தெய்வ சன்னிதியில் இருக்க வேண்டிய பணிவு, அடக்கம், பக்தி குறைவாகத்தான் காணப்பட்டது.

வேலுச் செட்டியார் பாட்டை ரசித்துச் சிரக்கம்பம் செய்தார். ''பையன் யாருங்க? புதுசா இருக்கே?'' என்று குருக்களிடம் விசாரித்தார் அவர்.

''புதுசா? நீங்க என்ன அப்படிக் கேட்கறீங்க? உங்க காலத்திலே சங்கரம் பிள்ளைன்னு பிரபலமா இருந்த நாகஸ்வர வித்வானைப் பத்திக் கேட்டிருப்பீங்க. அவர் மகன்தாங்க.....நம்ப ஊரிலே பிறந்த பையன்தான். பொறந்து எட்டு வருஷம் பேச்சே வராமல் கிடந்தான். அவன் அம்மா இந்தக் கோயிலைச் சுத்திச் சுத்தித் தவம் கிடந்தா. அவ என்ன வேண்டிக்கிட்டாளோ அந்த அம்பிகைக்குத்தான் தெரியும். கிடுகிடுன்னு இருபத்திரண்டு வயசுக்குள் மகா வித்வான் ஆயிட்டான். அவன் அம்மா சாகறத்துக்கு முந்தி, 'குருக்களய்யா! பையன் பேசணும்னு ஆத்தாளைக் கேட்டேன். பாடவே வச்சுட்டா. வருஷா வருஷம் நவராத்திரியிலே ஒரு நாள் அவன் எங்கேயிருந்தாலும், அவன் மறந்து போனாலும், நீங்க மறக்காமல் அவனை நம்ப ஊர்க் கோயிலுக்கு ஒரு நாள் வாசிக்கச் சொல்லுங்க'ன்னு கேட்டுட்டுப் பிராணனை விட்டாள். இந்தப் பையனைத் தேடிப் பிடிக்கிறது பெரிய பாடுங்க. இந்த வருஷம்கூட 'ஹாய், ஊய்....' எனக்கு அங்கே கச்சேரி, இங்கே கச்சேரி' என்று தபாய்ச்சான். எப்படியோ சொல்லி இழுத்து வந்தேன்.''

நாகஸ்வர வித்வான் ஒரு கணம் பாட்டை நிறுத்தி விட்டுத் தம்மைச் சூழ்ந்திருந்த திரளான மக்களைப் பார்த்தார். ''ஆஹா! இந்தச் சிறிய கோயிலுக்கு இவ்வளவு கூட்டம் கூட வருவதுண்டா? என்ன எல்லாம் என்னுடைய இசையின் மகிமை!'' என்று நினைத்தவாறு சங்கராபரணத்தில் கீர்த்தனம் ஒன்றை ஆரம்பித்தார்.

கோயிலின் பிராகாரமெங்கும் முத்து முத்தாக இழை கோலங்கள் மிளிர்ந்தன. சிக்குத் தாமரையும், தேர்க் கோலமும், மண்டபங்களும், வாழை இலைக் கொத்துக்களும், கிளிகள் தாங்கும் மணி அரங்குகளுமாகச் சுத்தமான அரிசி மாவினால் கிற்றுக் கீற்றாக அவை மின்னின. நிலவைக் குழைத்து வானத்திலிருந்து மயன்தான் பூமிக்கு இறங்கி இந்த மாயா ஜாலங்களை வாரி

வாரி இறைத்திருக்க வேண்டும் என்று நினைக்கும்படி இருந்தது.

கூட்டம் நிரம்பி வழிந்த சன்னிதியில் பொற் கொல்லர் ஆறுமுகத்துக்கு அம்பிகையின் மாலையை அணிவித்துப் பிரசாதம் கொடுத்துக் கௌரவித்தார்கள். வேலுச் செட்டியார் தம் இரண்டு கரங்களாலும் மாலையைப் பெற்றுக்கொண்டு குங்குமத்தை, ''அம்மா! தாயே. என் வியாபாரம் செழிக்க வேண்டும்'' என்று தம்மைப் பற்றி நினைத்தவாறு நெற்றியில் அப்பிக் கொண்டார். பூக்கார முத்து வாயெல்லாம் பல்லாகப் பிரசாதம் பெற்றுக் கொண்டார். நாகஸ்வர வித்வானுக்கு இன்னொரு பொற்பதக்கம் கிடைத்தது.

அதோ! தூண்களின் மறைவில் ஏகாக்ர சிந்தனையுடன் அம்பிகையின் திரு உருவில் தன்னை லயிக்க விட்டுச் சுற்றுப்புறத்தை மறந்த ஏழை பார்வதியையும், அவள் மாக்கோலங்களையும் யார் கவனிக்கிறார்கள்? பக்தர்களின் கால்களில் மிதிபட்டு அழியும் சிக்குத் தாமரை, தேர்க் கோலத்தைப் பார்த்துப் பெருமூச்செறிந்து பேசியது.

''இதோ! மௌனமாக மிதிபட்டு அழிந்து போகும் நாம் நம்மைப் பற்றியோ, நம்மைப் படைத்தவளைப் பற்றியோ ஒரு வார்த்தை பேச அருகதையற்றவர்களாகி விட்டோம்.''

தேர்க்கோலம் பெருமையுடன் அதற்குப் பதில் கூறும்: — ''உன்னையும், என்னையும் படைத்தவள் அதோ தூண் மறைவில் நிற்கிறாள். ஆனால், அவள் உன்னையும், என்னையும் படைத்த விநாடியில் அதைப்பற்றி மறந்து விட்டாள். ஏன்? அவள் தன்னையே மறந்து நிற்கிறாள். உயிரற்ற நாமும், உயிருள்ள அவளும் இப்பொழுது ஒன்றுதான்......''

தன்னை மறந்த பார்வதிக்குக் குருக்களிடமிருந்து பிரசாதம் பெற்றுக் கொள்ளக் கூடத் தெரியவில்லை. அவளுக்குத் தான் ஊரார் பிரமை பிடித்தவள், அரைப் பைத்தியம் என்ற பெயரைச் சூட்டியிருக்கிறார்களே? நாம் ஏன் அது குறித்து வருந்த வேண்டும்?

# எது பொய்?




ஆட்டுக் கல்லில் உளுந்தை இட்டுக் கடகட வென்று குழவியால் சுற்றி அரைத்துக்கொண்டிருந்தாள் ஜானவி. நெற்றியெங்கும் வியர்வைத் துளிகள் அரும்பிப் பொட்டுப் பொட்டாய்க் கசிந்தன. கூர்மையான மூக்கும், கவிந்த இமைகளையுடைய கண்களும் குவிந்த அதரங்களும் அவளை எழிலுடையவளாக்கிக் கொண்டிருந்தன.

காதில், மூக்கில், ஒன்றுமில்லை. அசப்பிலே அவள் தலையை உயர்த்தினால் நெற்றி நடுவில் செஞ்சாந்துத் திலகம் பளபளவென்று மின்னியது. காதோரத்தில் குழற்கற்றைகள் சுருண்டு சுருண்டு விளையாடின.

முதுகின் மேல் புரண்ட சாயம் போன மேலாக்கை இழுத்து இடுப்பில் செருகியிருந்தாள். அங்கும் இங்கும் கிழிந்த ரவிக்கை. இடையிலே வெளுத்துப் போன பச்சைப் பாவாடை. வைத்த கண் வாங்காமல் தன்னையே உற்றுப் பார்க்கும் அம்புஜத்தை ஏறிட்டுப் பார்த்தாள் ஜானவி.

''என்ன மாமி அப்படிப் பார்க்கிறீர்கள்?''

''ஒன்றுமில்லையம்மா! திடீரென்று இளைத்துப்போயிருக்கிறாயே. உடம்புக்கு ஏதாவது..'' அம்புஜம் எரிந்து கொண்டிருந்த 'ஸ்டவ்'வின் சுருதியைக் குறைத்தவாறு கேட்டாள்.

ஜானவி ஆட்டுக்கல்லையும், குழவியையும் மாறிமாறிப் பார்த்தாள். பிறகு ஈரம் கசிந்த தன் கண்களை மேலாக்கினால் ஒற்றி எடுத்துக் கொண்டாள்.

''ஒன்றுமில்லை மாமி, ஒன்றுமில்லை! ஏழையாகப் பிறக்கக் கூடாது.'' அம்புஜத்துக்கு நறுக்கென்று உறைக்கிறாற்போல் இருந்தது.

''ஏன் ஜானவி? பணக்காரராக இருந்து விட்டால் மட்டும் மகிழ்ச்சியோடு வாழ்ந்து விட முடியுமா, என்ன? மனித ஜன்மத்துக்கே குறையில்லாமல் இருக்க முடியாது. ஒவ்வொருத்தருக்கு ஒரு விதத்தில் குறை.''

''ஒவ்வொருத்தருக்கும் ஒருவிதத்தில் குறை இருக்கும், மாமி. என் ஜன்மத்துக்கு எப்பொழுதும் எதற்கும் குறைதான்.'' நூற்றுக் கிழவி மாதிரி ஜானவி பேசிக் கொண்டே உளுந்து விழுதை வழித்து வழித்து அடுக்கில் போட்டுக் கொண்டிருந்தாள். எத்தனையோ ஏழைப் பெண்களில் ஜானவியும் ஒருத்தி. தாய் யாருடைய வீட்டிலோ சமையல் வேலை செய்ய, தந்தை இருக்குமிடம் தெரியாமல் அவதிப்படும் நித்திய தரித்திரக் குடும்பத்தில் பிறந்தவள் ஜானவி. அருமை மகளுக்கு ஆசையாக அழகிய நாமத்தைச் சூட்டிய தாய் அன்று பலவாறாகக் கனவு கண்டிருப்பாள் எதிர் காலத்தைப் பற்றி. இன்று ஜானவி சம்பளமில்லாமல் படித்தாலும், மாதா மாதம் நடக்க வேண்டிய சில்லறைச் செலவுகளுக்கே அம்புஜத்தின் வீட்டில் இட்டிலிக்கு அரைத்துக் கொடுக்க வேண்டியிருந்தது.

அன்று பத்தாவது பாட்சைக்குப் பணம் கட்டவேண்டிய கடைசித் தினம். ரத்தம் சொட்டுவது போல் வியர்வை வழிய அடுப்படியில் நெருப்பின் முன்பாக வெந்து நீறுகி அவள் அன்னை அவளை அரும் பாடுபட்டுப் படிக்க வைத்துக்

ஸ்ரோஜா ராமமூர்த்தி

கொண்டிருந்தாள். எப்படியாவது இந்தப் பரீட்சையில் தேறி விட்டால் மகள் அறுபதோ, எழுபதோ சம்பாதித்துத் தன்னையும், நொண்டிப் பையன் ஒருவனையும் காப்பாற்றி விடுவாள் என்கிற அசையாத நம்பிக்கையின் முன்பு அடுப்பின் சூடு தெரியாமல் அந்தத் தாய் உழைத்து ஓடாகி வந்தாள்.

உடன் பிறந்த நொண்டித் தம்பியும், வாழ்க்கையில் சுகம் இன்னதென்றே அறியாத தாயின் முகமும் அவள் நினைவில் தோன்றி அவளை உருக வைத்தார்கள்.



அம்புஜம் நல்லவள் தான். ஜானவி எத்தனையோ முறைகளில் உதவி யிருக்கிறாள். நறுக்கென்று பதினைந்து ரூபாயை எப்படி அவளிடம் கேட்பது?

உளுந்தை அரைத்து எடுத்துவிட்டு உரலைத் தேய்த்துக் கழுவிய ஜானவியைச் சாப்பிட அழைத்தாள் அம்புஜம்.

''இங்கேயே சாப்பிட்டு விட்டுப் பள்ளிக்கூடத்துக்குப் போயேன். உன் முகத்தையே பார்க்கச் சகிக்க வில்லை எனக்கு. ஆயிரம் வேதனை இருந்தாலும் இப்படிக் கூம்பிப் போய் விட மாட்டாயே ஜானவி? என்ன விஷயம்? என்னிடம் சொல்லேன்.'' தாயினும் சாலப் பரிந்து பேசும் அவளிடம் காரணத்தைத் தயக்கத்துடன் வெளியிட்டாள் ஜானவி.

''பூ! இதுதானா பிரமாதம்? என்னிடம் பணமில்லை. இருந்தாலும் ஒருத்தரிடம் வாங்கித் தருகிறேன். இரு.....'' என்று சொல்லிக் கொண்டே அம்புஜம் வெளியே போய் விட்டாள். போனவள் அரை மணி ஆகியும் வரவில்லை. ஜானவிக்குப் பள்ளிக்கூடம் போவதற்கு நேரம் ஆகிக் கொண்டிருந்தது. கடைசியாக அம்புஜம் சோர்வுடன் வந்து பணம் எங்கும் கிடைக்கவில்லை என்று தெரிவித்த போது ஜானவியின் கண்களின் முன்பாக அவளுடைய எதிர்காலம் இருளாகப் பரவிக் கிடந்தது. தாயின் பல ஆண்டுக் கனவுகள் சிதைந்து விழுந்தாற் போல் இதயத்தில் வெறுமை நிழலாடியது.

ஜானவியின் சோர்ந்திருந்த முகத்தில் கவிந்த துயரச் சாயையின் முன்பாக அம்புஜத்தின் உள்ளத்தில் திடீரென்று ஓர் எண்ணம் உதித்தது. ''இரு ஜானவி இரு...இதோ

வந்து விட்டேன்'' என்று கூறிப் புடவைத் தலைப்பில் எதையோ மறைத்தவாறு தெருவில் இறங்கி வேகமாக நடந்தாள் அம்புஜம்.

மறுபடியும் அவள் திரும்பியதும் ஜானவி யிடம் பதினைந்து ரூபாயைத் திணித்தாள். ''போ....போ...மணி பத்து அடிக்கப் போகிறது. இன்றைக்குப் புதன்கிழமை இல்லையா? ஒன்றரை வரை ராகு காலம் இருக் கிறது. பிறகு பணம்கட்டு. மறந்துவிடாதே!''

''மாமி....மாமி... நீங்கள் எப்படிச் சமா ளித்தீர்கள் என்று எனக்குத் தெரியும். முரளி யின் வெள்ளிக்கின்ணியை எடுத்துப் போய் எனக்காக அடகு வைத்து வாங்கியிருக்கி றீர்கள் மாமி.....''

தேம்பியபடி நின்ற ஜானவியை, ''போ, போ'' என்று விரட்டினாள் அம்புஜம்.

ஃ ஃ ஃ

கூட்டத்தில் இடித்து மோதிக் கொண்டு மின்சார வண்டியில் ஏறி ஜானவி கோடம் பாக்கத்தை அடையும்போது மணி பத்தே கால் ஆகிவிட்டது.

''எல்லாரும் பணம் கொண்டு வந்திருக் கிறீர்களா?'' என்று ஆசிரியை கேட்டதும் கடைசிப் பெஞ்சியில் உட்கார்ந்திருந்த பெண் ணொருத்தி, ''டீச்சர்! என் பணத்தைக் காணோம் டீச்சர். இங்கேதான் வைத்து விட்டு வெளியே போய் விட்டு வந்தேன் டீச்சர்....'' என்று கூக்குரல் போடவும் சரியாக இருந்தது.

வகுப்பில் ஒரு விநாடி மௌனம் குடி கொண்டது.

அவள் பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஜானவி யின் மீது எல்லாருடைய பார்வையும் நிலைத்து நின்றது. திட்டுத்திட்டாய் வெளுத்த மேலாக் கும், கிழிந்த ரவிக்கையும், சாயம் போன பாவாடையும், சோர்ந்த முகமும், எதிலும் நம்பிக்கை பற்று இல்லாத தோற்றமும் அவளை ஏழைமை என்கிற மீளா நரகத்தில் வீழ்த்திக் காட்டின.

''எல்லோரும் அவரவர் பெட்டி, பைகளை உதறிக் காட்டுங்கள்.''

ஒரு சிலரின் பைகளில் ஒன்றுமில்லை. ஏற் கெனவே அவர்கள் பணம் கட்டியவர்கள். சிலர் அன்று பணம் கட்டுவதற்கு எடுத்து வந்திருந் தார்கள். வசதியுள்ளவர்கள், வாயுள்ள வர்கள். அவர்களில் யாரைக் குற்றம் சாட்ட முடியும்? சீறிப் பாய்ந்து அடுத்த நாளே அவர்கள் தத்தம் பெற்றோருடன் பள்ளி ஆசிரியை மீது போர் தொடுக்கவல்லவர்கள்.

ஜானவி தன்னுடைய பையை உதறினாள். பதினைந்து ரூபாய்கள் படபடவென்று பறந்து கீழே விழுந்தன.

''ஜானவி! நீ பணம் வீட்டிலிருந்து கொண்டு வந்தாயா?''

''ஆமாம், டீச்சர்!''

''அவள் எங்கேயிருந்து கொண்டு வந்திருக்கப் போகிறாள் டீச்சர்? 'எங்களிடம் சல்லிக் காசுகூட இல்லை. ஒரு வேளை சாப்பிட்டால் ஒரு வேளை பட்டினி. நாளைக்குக் கடைசியாக ஒரு ஆசை, யாரிடமாவது கேட்டுக் கிடைத்தால் உண்டு. அதுவும் இல்லையென்றால் நான் பரீட்சைக்குப் போக முடியாது' என்று என்னிடம் சொன்னாள் டீச்சர். அவள்தான் எடுத்திருப்பாள்'' என்று பணத்தை இழந்த பெண் உச்ச ஸ்தாயியில் இரைந்து பேசினாள்.

''உஸ்...இரையாதீர்கள். என்னால் இந்தத் தொல்லையெல்லாம் பட முடியாது. நடவுங்கள். தலைமை ஆசிரியையின் அறைக்கு.''

ஜானவி இதயச் சுமையுடன் தலைமை ஆசிரியையின் அறைக்குள் நுழைந்தாள். பட்டும், நைலானும் உடுத்திப் பணத்தைத் தொலைத்து விட்டு நின்ற அந்தப் பெண்ணும் ஆசிரியை முன்பாக நின்றாள்.

''இவள்சொல்கிறது உண்மையா ஜானவி?''

''இல்லை, டீச்சர்....பணம் நான் வீட்டிலிருந்து கொண்டு வந்தேன்.''

ஆசிரியைக்கு ஒரே குழப்பமாகப் போய் விட்டது. பணத்தை இழந்த பெண் தாறுமாறாகப்பேசிக்கொண்டே இருந்தாள். ''திருட்டுப் பிழைப்புப் பிழைக்கிறவர்கள் துணிந்து எதையும் செய்வார்களாம். நேற்று வரை பணத்துக்குப் பஞ்சாகப் பறந்தவளுக்கு இன்று திடீரென்று இறக்கை முளைத்துப் பணம் பறந்து வந்ததாக்கும்!''

பள்ளிக்கூட மாணவிகள் முன்பாக ஜானவி ஒரு குற்றவாளியாகவும், பரிதாபத்துக்குரிய பெண்ணாகவும் நின்றாள். திருட்டுப் பணமா, சொந்தப் பணமா என்கிற முடிவுக்கு வராமல் அவளிடமிருந்து பணத்தைப் பெற்றுக் கொண்டு விட்டார்கள்.

மாலை நைந்த உள்ளத்துடன் வீடு திரும்பிய ஜானவி தாயின் முன்பாகச் சோர்வுடன் வந்து உட்கார்ந்தாள்.

''என்னம்மா? பணம் கட்டினாயா? அம்புஜம் மாமி ஏதாவது ஏற்பாடு பண்ணியிருப்பாளே....''

கண்களிலிருந்து கண்ணீராகச் சொரிந்த மகளை ஆதரவுடன் அணைத்துக் கொண்டாள் அன்னை.

''பைத்தியம்! பைத்தியம்! இந்தப் பரீட்சை ஒன்றை நம்பியா உலகத்தில் பிறவி எடுத்திருக்கிறோம்? அதுகிடக்கிறது சனியன்.''

''அம்மா, நாம் ஏழைதானே?''

''ஆமாம், ஏழைதான். இந்தக் கையைப் பாரு, ஜானவி. உழைத்து உழைத்துக் கரடு முரடுமாய் இருப்பதை. ஏழையாக இருந்தாலும் உழைக்கிறதில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது.''

''அம்மா, நாம ஏழையாக இருந்தாலும் திருடமாட்டோமே?'' இதைக் கேட்டுவிட்டு ஓவென்று அழுதாள் ஜானவி.

''திருடுவதா? நாமா? யார் சொன்னார்கள்? அது நாம் செய்கிற வேலையில்லை. சோம்பேறிகள் செய்கிற வேலை.''

''உன் மகளை இன்று திருடி என்று பட்டம் கட்டிப் பலர் அறிய நிற்க வைத்துப் பலர் அறிய விசாரித்தார்கள் அம்மா!''

இவ்வளவு காலம் அடுப்பின் சூட்டைத் தண்மையாக நினைத்து உழைத்த அந்தத் தாய் அடுப்பில் விழுந்த மாதிரி துடி துடித்துப் போய்விட்டாள்.

''உன்னையா? ஏன் எதற்காக? நாம் ஏழையாகப் பிறந்துவிட்டோம் என்பதற்காக எதை வேண்டுமானாலும் பேசி விட்டார்களா?'' எரிமலை வெடித்துத் தீக்கங்குகளைச் சிதற விடுவது போல் அவள் நெருப்புத் துண்டங்களாக வார்த்தைகளை உதிர்த்தாள்.

''அம்மா! அம்புஜம் மாமி வீட்டில் வேலைக்குப் போய்விடுகிறேன் அம்மா. இந்தப் பரீட்சைக்காக நான் கட்டிக் கொண்ட திருட்டுப் பட்டம் போதும் அம்மா. வலுவுள்ள இரண்டு கரங்கள் இருக்கிற வரையில் நமக்கு உழைப்புக்குப் பஞ்சம் இல்லை. பரீட்சை எழுதும்படியான உற்சாகத்தை நான் இழந்து விட்டேன்.''

பள்ளிக்கூடத்தில் ஜானவியைப் பற்றியே பேச்சாக இருந்தது. அந்தப் பெண் ஏழையாயிற்றே. பத்தாவது பாஸ் செய்து விட்டால் ஒரு வேலையில் ஒண்டிக் கொண்டு குடும்பத்தைக் காப்பாற்றுமே! ஆசிரியைகள் பேசிக் கொண்டுதான் இருந்தார்கள். பரீட்சைக்கென கட்டிய பணத்தைப் பற்றி ஜானவி கவலைப்படவில்லை. அவள் பரீட்சைக்கும் போகவில்லை.

ஒரு நாள் – பரீட்சைகள் முடிந்து விடுமுறையில் ஒரு நாள் – அம்புஜம் மாமியின் மகன் முரளியை இடுப்பில் எடுத்துக் கொண்டு கோவிலுக்குப் போய் வந்தாள் ஜானவி.

எதிரே வருவது யாராக இருக்கும்? ஆம், அவளைத் திருடி என்று நாலு பேர்கள் முன்னிலையில் இழிவுபடுத்திய அதே பெண்தான்.

''ஜானவி! என் பணம் அகப்பட்டு விட்டது ஜானவி. வீட்டில் ஒரு புஸ்தகத்தில் வைத்து விட்டு வந்து விட்டேன். நீதான் அடுத்த நாளிலிருந்து பள்ளிக்கு வரவேயில்லையே. உன்னிடம் சொல்ல முடியவில்லை.''

அன்று திருடி என்று கூறிய பெண்ணுக்கு எல்லாமே எளிதாக இருந்தது. திருட்டுப் பட்டம் கட்டுவது, மறுபடியும் இல்லை என்பது.

''ஓஹோ!'' என்றாள் ஜானவி.

இதுகாறும் அவள் மனத்தை உறுத்தி வந்த அந்த வேதனை முள்ளை யாரோ பிடுங்கி எறிந்தாற் போல் இருந்தது.

''மிக்க நன்றி!'' என்று சொல்லிக் கொண்டே குழந்தையுடன் நடந்தாள் ஜானவி வீட்டை நோக்கி. மாகாணத்திலேயே முதலாவதாகத் தேறிய மாணவியைவிட அவள் முகத்தில் பெருமையும், கர்வமும் ஓங்கின.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.



# உலகம் வாழ்கிறது

ஸரோஜா ராமமூர்த்தி

விண்ணெங்கும் வெள்ளிமலர்கள் பூத்திருந்தன. தெளிந்த வானம்தான். ஒரே கருநீலம். எங்கோ பிறந்து தவழ்ந்து வந்துகொண்டிருந்த ஆறு ஒன்று அங்கே அமைதியாக நடை பயின்று கொண்டிருந்தது.

'சலசல' வென்று இனிய நாதம் கேட்கிறதே. அதுவும் ஆற்றின் ஒலிதான். உய்ய்... ய்ய்..... என்று காற்று நதியின் மேற்பரப்பில் வீசிப் பக்கத்தில் வளர்ந்திருந்த நாணற் புதர்களை உரசிச் சென்றவண்ணமாக இருந்தது. கண்ணுக்கெட்டிய தூரம் ஒரே பசுமை. ஆற்றின் இக்கரையில் பெரிய மஞ்சள் நிறக் கட்டடம் காணப்பட்டது. அக்கரையிலோ...

சிறியதும் பெரியதுமாக நெடுகிலும் காணப்பட்ட சமாதிகள்......?

வாழ்வு என்கிற தத்துவத்தின் முன்பு முரண்பட்ட இரண்டு கருத்துக்களுக்கு உவமையாக அமைந்திருந்தன.

நோயிலிருந்து மீண்டு வாழத் துடிக்கும் பல உயிர்களைத் தன்னுள்ளே வைத்துப் பாதுகாத்து வரும் ஆசுபத்திரிக் கட்டடம் அமைதியே உருவாக அந்த நட்ட நடுநிசியில் கம்பீரமாக நின்றிருந்தது.

வாழ்வு என்பது அநித்தியம் என்பதைப் பறைசாற்றுவதைப் போல் அக்கரைச் சமாதிக் கட்டடங்கள் மௌனமாக நின்றன.

பாஸ்கரன் வராந்தாக் கட்டிலில் சாய்ந்து உட்கார்ந்தவாறு ஆற்றங்கரைச் சமாதிகளைப் பார்த்துக் கொண்டிருந்தான். அமைதியும் நல்ல காற்றும் நோயாளிகளைக் குணப்படுத்திவிடும் என்கிற நம்பிக்கையில் அங்கே ஆஸ்பத்திரியைக் கட்டியிருந்தார்கள். ஆனால் ஒவ்வொரு நோயாளியும் ஆற்றின் அக்கரையைப் பார்த்துப் பெருமூச்சு விடுவது ஏனோ அவர்களுக்குப் புரியவில்லை.

மாலை மயங்கி மஞ்சள் வெயில் காயும் போது மட்டும் பாஸ்கரன் அந்தச் சமாதிக் கட்டடங்களை விட்டுத் தன் பார்வையை மறுபுறம் திருப்பினால் அங்கே அவன் நண்பன் ராஜு கையில் சாருவைப் பிடித்தவாறு நிற்பான்.

சுருள் சுருளாக நெற்றியில் தவழ்ந்து விளையாடும் கேசமும் கருவண்டு விழிகளும், குவிந்த உதடுகளுமாக அந்தக் குழந்தையின் ரோஜாக் கன்னங்களை அப்படியே வெறித்துப் பார்ப்பான் பாஸ்கரன்.

''மாமா! மாமா! நீ எப்படி இருக்கே?'' என்று ஆற்றின் ஒலி போலக் குரலை எழுப்பிச் சாரு விசாரிப்பாள்.

''எப்படி யிருக்கிறாய் பாஸ்கர்? குழந்தை கேட்கிறாள் பார்!'' என்று ராஜு நண்பனின் கவனத்தைத் தன்பால் ஈர்ப்பான்.

''இருக்கிறேன் என்னவோ?'' மறுபடியும் அவன் பார்வை அந்த வராந்தா, கட்டில், ஆற்றங்கரை எல்லாவற்றையும் தாண்டித் தொலைவில் சென்று நிலைத்துவிடும்.

பாஸ்கரனுக்கு உற்றார் உறவு என்று அதிகமாகச் சொல்லிக் கொள்ள யாரும் இல்லை. அப்படி இருந்தவர்களும் எங்கோ இருந்தார்கள். சிறு வயதில் மாமாவின் வீட்டில் வளர்ந்த காலத்தில் அவன் இளம் மனத்தில் உலகத்தில் காணும் நிறைவுகளை விடக் குறைவுகளைத்தான் அதிகமாகப் பதிய வைத்துக் கொண்டிருந்தான். 'மாமா பணக்காரர். ஏதோ புண்ணியத்துக்குக் கட்டுப்பட்டுத் தன்னைக் காப்பாற்றுகிறார்' என்று நினைத்து அவரிடமும் அவர் குடும்பத்தாரிடமும் ஒட்டவிடாமல் பிரிந்தே யிருந்தான் பாஸ்கரன். அவர் போன பிறகு அந்தக் குடும்பத்துடன் அவனுக்கு உறவு கத்திரித்து விட்டது.

மாமா பெண் சீதாவை இவனே ஒருவேளை மணந்திருக்கலாம். 'அடேயப்பா! சீதுவா என்னை மணந்து கொள்கிறவள்? அவளும் அவள் ஸ்டைலும்' என்று தன்னையே குறைப்படுத்திக் கொண்டான். கடைசியாக யாரிடமும் சொல்லாமல் கொள்ளாமல் ஊரைவிட்டு வந்தவனுக்கு எப்படியோ ராஜு நண்பனாக வந்து வாய்த்தான்.

தனியாக வாழ ஆரம்பித்த பிறகுதான் குடும்பம், நாலு பேர்களுடன் ஒட்டுறவு இவை பற்றிய அவசியம் தெரிய ஆரம்பித்தது.

காலையில் ஹோட்டலில் காப்பி, பகலில் அங்கேயே உணவு, மாலை சிற்றுண்டியும் அங்குதான். இரவு மட்டும் என்ன வாழ்ந்தது? அந்த ஹோட்டலில் சாப்பாட்டு அறையில் ஒரு மூலையில் அமர்ந்து துளிக்கூடப் பரிவோ,

அன்போ இல்லாமல் எவனோ காசுக்காக வீசிய சாப்பாட்டைச் சாப்பிட்டு வந்தான்.

உறவு என்பது இளமையிலிருந்து ஒட்டி வாழ வேண்டிய ஒன்றல்லவா? திடீரென்று மாமாவையும் மாமியையும் உறவு கொண்டாடிக் கொண்டு அவன் போக விரும்பவில்லை. இந்த நிலையில் ராஜு அவனுக்கு வேலையும் தேடித் தந்து விட்டான்.

ஹோட்டல் சாப்பாட்டினாலோ அல்லது தனிமையினாலோ உடல் நிலை கெட்டுவிட்டது. நண்பன்தான் ஆஸ்பத்திரியில் சேர்த்து விட்டுத் தினமும் மாலைவேளையில் பார்த்து விட்டுப் போவான்.

''என்ன பாஸ்கர்! குழந்தை கேட்டதற்கு நீ ஒன்றுமே பதில் கூறவில்லையே....?''

வாழ்வு என்கிற சொல்லுக்கு இலக்கணமாகச் சாரு - அந்தக் குழந்தை-அவள் எதிரே நின்றிருந்தாள். அவள் மட்டும்தானா? அவள் இடுப்பிலே அணைத்துப் பிடித்திருந்த அந்தப் பொம்மைகூட உயிர்த் துடிப்புடன் காணப்பட்டது.

குழந்தை சாரு அதைச் சாய்க்கும் போது அது கண் உறங்கியும், நிமிர்ந்த போது கண் விழித்தும் இந்த உலகத்துடன் வாழ்ந்து விளையாடிக் கொண்டிருந்தது.

அவனுக்கு எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது. 'சீ! என்ன வேண்டியிருக்கிறது இதெல்லாம்? தினம் தினம் பார்க்கையில் இந்த ஆற்றங்கரையில் கண்ணுக்கெட்டிய தூரம் மறைந்தவர்களின் நினைவுச் சின்னங்கள் முளைத்து எழுந்து கொண்டே யிருக்கும்போது?

எல்லாமே பொய் என்கிற வேதனையுடன் சாருவை அவன் திரும்பிப் பார்த்தான். சாருவுக்கு மாமாவின் கண்களில் தெறித்த வேதனை அருவை எதுவும் புரியாவிட்டாலும், மாமாவுக்குத் தன்னைப் பிடிக்கவில்லை என்பது மட்டும் நன்றாகப் புரிந்தது.

''வாப்பா போகலாம்....'' தந்தையின் கையைப் பற்றி இழுத்தாள் குழந்தை.

''பாஸ்கர்!'' என்று அழைத்தவாறு ராஜு கட்டிலின் மீது உட்கார்ந்தான்.

''இங்கே பார், பாஸ்கர்! உடல் நலம் சரியில்லாதவர்கள் மனத்தை மிகவும் உற்சாகமாக வைத்துக் கொள்ள வேண்டும். நீ எப்பொழுதும் அந்தக் கல்லறைகளையே பார்த்துப் பொழுதைப் போக்குவது எனக்குப் பிடிக்கவில்லை. வேண்டுமானால் நர்ஸிடம் சொல்லி உனக்கு இடத்தை மாற்றச் சொல்லட்டுமா...?''

ஆயாசத்துடன் தலையசைத்து விட்டான் பாஸ்கரன். நண்பனிடம் விடைபெற்றுக் கொண்ட ராஜு சாருவுடன் தொலைவில் செல்வதைப் பாஸ்கரனால் நன்றாகக் காண முடிந்தது. இடுப்பில் சாய்த்து அணைத்த குழந்தைப் பொம்மையுடன் அந்தக் குழந்தை தந்தையின் கரம் பற்றித் துள்ளித் துள்ளி வேகமாக ஓடினாள்.

'நடக்கவே தெரியாதோ இந்தக் குழந்தைகளுக்கு? எதற்கும் ஓட்டம்தான். வாழ்ந்து முன்னேற வேண்டும் என்கிற உயிர்த் துடிப்பு அவைகளுக்கு!'

பாஸ்கரன் மறுபடியும் ஆற்றங்கரையைப் பார்த்தபோது சோக மௌனத்துடன் மெதுவாக நடந்து செல்லும் சிறு கூட்டம் ஒன்றைப் பார்த்தான்.

அதோ அவர்கள் கல்லறைத் தோட்டத்துக்குள் நுழைகிறார்கள். இன்னும் என்ன என்னவோ செய்கிறார்கள். கண்ணீர் சிந்துவதினால்தான் முகத்தைத் துடைத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. திரும்பிப் போகிறார்கள். மனத்துக்கு இனியவராக, உற்றவராக — இருந்த ஓர் உறவை இழந்து ஏதும் செய்ய முடியாமல் கலங்கியவாறு போகிறார்கள்.

''ஹூம்...ராஜுவுக்குப் பைத்தியம். எதன் மீதும் பற்றோ பாசமோ வைக்காதே என்று அவனிடம் சொல்லிவிட வேண்டும்...'' என்று பாஸ்கரன் தனக்குள் முணுமுணுத்துக் கொண்டான்.

இதற்குள் மாலை மயங்கி இருள் சூழத் தொடங்கிவிட்டது. தெரு விளக்குகளெல்லாம் குபீரென்று எரிய ஆரம்பித்தன. ஆஸ்பத்திரி விளக்குகளும் கூடத்தான். படுக்கையில் கிடந்த நோயாளிகள் அந்த ஒளிப்பிழம்பைக் கை குவித்து வணங்கினார்கள்.



மாலே டியூட்டி நர்ஸ் வந்து விட்டாள்.

''மிஸ்டர் பாஸ்கரன்! சற்று முன் வந்து விட்டுப் போனுரே உங்கள் நண்பர் அவர் உங்களை இந்த இடத்தை விட்டு மாற்றி வேறு படுக்கைக்கு அனுப்பச் சொன்னுர். ஏன் அப்படி...?''

இளமையின் செழிப்பும், வனப்புமாக அந்த நர்ஸ் அவனேக் கேட்டவாறு முறுவலித்தாள். வெள்ளை வெளேர் என்கிற உடையும், முகத்தில் இலேசாக ஒற்றிய பௌடரின் நறுமணமும் அவனைச் சற்று அவள்வசம் ஈர்த்தன.

அந்த விற்புருவங்களை ஏற்றியும் இறக்கியும் அவள் முகத்தைச் சாய்த்து அவனைப் பார்த்தாள். ஒரே சீராகத் தீட்டிய செயற்கைப் புருவங்கள்தாம். இருந்தாலும் அந்தப் பெண் கலை உள்ளம் படைத்தவள் என்பதை அவள் ஒப்பனை நன்கு எடுத்துக் காட்டியது.

''என்ன மிஸ்டர்! நீங்கள் பேச மாட்டேன் என்கிறீர்கள்?''



நர்ஸ் சிரித்துக் கொண்டே படுக்கை விரிப்புக்களின் மடிப்புக்களைப் பிரித்துச் சீர் செய்த வாறு அடுத்த கட்டிலை நோக்கி நடந்தாள்.

முத்துச் சரங்களைப் போல் வரிசையாக அமைந்த அப்பற்களின் ஒளியில் அவன் மறுபடியும் தன்னை இழந்தான்.

திரும்பவும் அவன் எதிரே ஆற்றின் மெல்லிய உருவம் மங்கலாகத் தெரிந்தது. விஷமக் காரக் குழந்தை மணற்பரப்பில் கீறி விட்ட வளைந்த கோட்டைப் போல அது வளைந்தும் நெளிந்தும் சென்றது. அதற்கும் அப்பால் சமாதிகள்.

சமாதிக் கட்டடங்கள் மீது மரமல்லிகை மரங்கள் குடை போல் கவிந்து நின்றன. காற்றில் ஆடும் போது மலர்களைத் தூவின. பாஸ்கரனுக்குச் சற்று முன் பார்த்த நர்ஸின் மோகன உருவத்தில் அலுப்பேற்பட்டது.

நிலேயற்ற இந்த உலகத்தில் வாழும் உயிர்களுக்கு நிலையான எத்தனை எத்தனை ஆசைகள்! ராஜுவுக்கு அவன் மகள் மீது நிலையான அன்பு. நர்ஸுக்கு அவள் ஆடை, அலங்காரத்தின் மீது ஆசை. எல்லாமே நிலையானவை என்னும் மயக்கத்தில் இவர்கள் ஆழ்ந்திருக்கிருர்கள்.

இந்த மயக்கம் தெளிந்து விட்டால்! இது வரை உலக மக்களில் பெரும்பாலோரில்—யாருக்குத் தெளிந்திருக்கிறது? தெளியாமல் இருப்பதினுல்தான் உலகம் வாழ்ந்து கொண்டிருக்கிறது.

பாஸ்கரன் எப்பொழுது தூங்கினுனே தெரியாது. காலே வந்தது தான் தெரியும்.

''இரவு நன்ருகத் தூங்கினீர்கள், மிஸ்டர். உடல் நிலேயும் கொஞ்சம் தேவலே. இன்னும் நாலைந்து தினங்களில் உங்களை 'டிஸ்சார்ஜ்' செய்து விடுவோம்—'' மற்றெரு நர்ஸ் இவ் விதம் கூறி விட்டுப் புன்னகை பூத்தாள்.

பாஸ்கரன் மௌனமாக இருந்தான். ஒருத்தி மாற்றி ஒருத்தி இப்படித்தான் சிரித்துச் சிரித்துப் பேசுகிருர்கள். சிரிப்பதைத்தவிர இவர்களுக்குவேறெதுவும் தெரியாதுபோலும்!

திரும்பவும் ஆற்றங்கரையைப் பார்க்க ஆரம்பித்தான். காலேயின் சுறுசுறுப்போ, களிப்போ எதுவும் அங்கு தென்படவில்லை. உலகமே ஒரு மாயை என்கிற தத்துவத்தின் விளக்கம் போல் சமாதிகள் நின்றன. அவற்றின் மீது முத்தெனப் பனித்துளிகள். மரமல்லிகை மரங்கள் பூவாகச் சொரிந்து உலகத்தின் நிலேயாமைத் தத்துவத்தின் சின்னங்களுக்கு மரியாதை செய்தன. எங்கும் அமைதி. அதை அடுத்து வாழும் உலகத்தைத் துச்சமாகப் பார்க்கும் பார்வை போலச் சமாதிகள் கதிரவன் ஒளியில் உலகை வெறுத்துப் பார்த்தன.

பாஸ்கரன் இதயம் கனக்க, வேதனை பொங்கும் உள்ளத்துடன் அவைகளைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

மணிப்படி எல்லாம் நடந்தன. மருந்துகள், உணவு. எப்படியோ நடுப்பகலில் அவனைத் தூக்கம் ஆட்கொண்டது. விழித்துப் பார்த்த போது துணுக்குற்று எழுந்து உட்கார்ந்தான் பாஸ்கரன்.

ஆற்றங்கரை ஓரமாகப் பூப்பல்லக்கில் சின்னஞ்சிறு பூ உடலே ஏந்திக் கொண்டு பலர்

விரைந்து கொண்டிருந்தார்கள். அந்தச் சின்னஞ்சிறு தளிர் இருக்கவா உலக வனத்தில் இடமில்லாமல் போய் விட்டது? விளங்காத, விடை தெரியாத இந்த வினவை எழுப்பித் தனக்குள் வெந்தான் பாஸ்கரன்.

என்ன உடம்போ? ஆணோ, பெண்ணோ? பெற்றவள் பத்து மாதம் சுமந்து, ஐந்தாறு வருடங்கள் வளர்த்த கடனுடன் — எப்படி நீராகக் குமைகிறளோ? மலரைக் காட்டி— மறைத்த மாதிரி இருக்கிறதே இறைவனின் திருவிளையாடல்.

இதெல்லாம் திருவிளையாடல் என்று கூற முடியும்? 'பிறத்தல், காத்தல், அழித்தல்' செய்யும் இறைவன் இது எதிலும் ஒட்டாத வனும். அவனை எதுவுமே அண்டுவதில்லை. எல்லாவற்றையும் கடந்து நிற்பவன்.

**மா**லை மயங்கிக்கொண்டே வந்தது. கால தேவனின் தாளத்தில் ஒரு மாத்திரைகூடப் பிசகில்லாமல் பொழுதுகள் பிறந்து, வளர்ந்து தேய்ந்து வந்தன. அதில் இந்த மாலைப் பொழுது ஒன்று.

ராஜு வருவான் என்று எதிர்பார்த்தான் பாஸ்கரன். அவன் வரவில்லை. அவனுடன் அவன் மகளையும் எதிர் நோக்கியிருந்தவனுக்குப் பெருத்த ஏமாற்றம் தான்.

சின்னஞ்சிறிய உருவமாக இருந்தாலும், அன்பில் பெரிதாக இருந்தது அந்தக்குழந்தை.

ஏனோ இன்று அவனுக்கு அந்தக் குழந்தையைப் பார்த்தால் ஆறுதல் ஏற்படும் போல் இருந்தது. படுக்கையில் அந்தப்புறம் சாய்ந்து வராந்தா வழியாக மக்கள் கூட்டம் வழிந்தோடும் நெடுஞ்சாலையைப் பார்த்தான் பாஸ்கரன். எண்ணற்ற கார்கள், வண்டிகள், சினிமா விளம்பரங்கள், சாரி சாரியாக ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் ஏதோ நம்பிக்கையின் பேரில் விரைந்து சென்று கொண்டிருந்தார்கள்.

ராஜுவையும், குழந்தையையும் மட்டும் காணோம். ஆஸ்பத்திரி விளக்குகள் எரிந்தன. வழக்கம் போல மருந்து, விசாரணை, உணவு, அன்றையப் பொழுது தேய்ந்து விட்டது.

பாஸ்கரன் எப்படியோ தூங்கி விட்டான். நடு இரவில், அவன் விழித்த போது தற்செயலாக அவன் பார்வை ஆற்றின் பக்கம் சென்றது.

புதிய மண் மேட்டின் அடியில் யார் பெற்ற செல்வமோ மீளாத் தூக்கத்தில் துயின்று கொண்டிருப்பதைப் பார்த்தான். நேற்று வரை பெற்றவர்களுக்குச் செல்வமாக இருந்தது இன்று மண்ணுடன் இரண்டறக் கலந்து உலகம் பொய் என்பதற்குச் சான்று கூறியது.

'ராஜு ஏன் வரவில்லை? ஒரு தினமாவது தவற மாட்டானே!' விடை தெரியவில்லை.

காலை வந்ததையும், பகல் வளர்ந்ததையும், மாலை வரப் போவதையும் கடிகாரம் தவறாமல் காட்டிக் கொண்டு வந்தது. அன்றும் ராஜு வரவில்லை.

'ராஜு இன்னும் ஏன் வரவில்லை? வராமல் இருக்க மாட்டானே!'' அன்றும் பொழுது போய் விட்டது.

'இன்று கண்டிப்பாக ராஜு வருவான்.' நம்பிக்கை ஒளி வீசப் பாஸ்கரன் மாலைப் பொழுதை எதிர்நோக்கி யிருந்தான்.

ஆனால், அன்று ராஜு பகலிலேயே வந்தான்; வெறுங் கையோடு, அவன் கையைப் பிடித்து வந்து மழலை மிழற்றும் அந்தச் செல்வம் எங்கே? ராஜுவின் முகத்தில் வழக்கமாகக் காணப்படும் மலர்ச்சி, தெம்பு எதுவும் இல்லை.

கண்களில் வடிந்த துயரமும் முகமெங்கும் தாடியும் மீசையுமாக ராஜு ஒரு நாளும் அப்படி யிருந்ததில்லை. நடை உடை பாவனைகளில் 'டிரிம்' ஆக இருக்க விரும்புகிறவன்.

''என்ன பாஸ்கர்! எப்படி யிருக்கிறாய்?'' குரல் உடைந்து கரகரப்பாக வெளிவந்தது.

''என்னவோ இருக்கிறேன். நீ ஏன் இரண்டு நாட்களாக வரவில்லை ராஜு? குழந்தை எங்கே?''

சவுக்கின் நுனியால் குரூரமாகச் சொடுக்கி விட்டாற் போல் 'குழந்தை எங்கே?' என்கிற வினா ராஜுவின் உள்ளத்தில் சுரீர் என்று வேதனையை எழுப்பி, ''பாஸ்கர்! பாஸ்கர்! குழந்தை எங்கே? நீதான் சொல்லேன்! என் கண்மணி சாரு எங்கே? தெரியவில்லை பாஸ்கர்... அவள் போய் விட்டாள் பாஸ்கர்...'' என்று குமுறிக் கதறினன் ராஜு, கட்டில் வளைவைப் பார்த்துக் கொண்டு.

சற்றுத் தள்ளியிருந்த நோயாளிகள்கூட 'த்சொ' த்சொ' என்று அனுதாபக் குரல் எழுப்பினர்.

பாஸ்கரன் அடித்து வைத்த சிலையானன்.

சிந்தும் சிரிப்புடன் பொம்மையை அணைத்துப் பிடித்த சாரு அவனைப் பார்த்து, 'மாமா நீ எப்படி இருக்கே?' என்று கேட்பது போல் இருந்தது.

ராஜு ஒரு நிதானத்துக்கு வரச் சில நிமிஷங்கள் ஆயின.

பிறகு வக்கணையாகக் கூறினன். சாருவும் அவனும் ஆபீசுக்கும் பள்ளிக்கும் ஒன்ருகத்தான் கிளம்பினர். குழந்தை பின்னுடிதான் வருகிருளே என்று அசட்டையாக முன்னே போய்க் கொண்டிருந்தான்.

எதிரும் புதிருமாக இரண்டு லாரிகள் வந்தன. மோதிக் கொண்டன. பின்னுல்?

திரும்பிப் பார்த்த ராஜுவின் செவிகளில் 'பிரேக்'கின் கிரீச்சிட்ட ஒலிகளும் பல குரல்களின் கத்தலும் ஒரே சமயத்தில் வந்து மோதின.

மலர்ந்த மலராய்ச் சற்று முன் காற்றிலே அசைந்த அந்தப் புது மலர் ஒரு நொடியில் நடுத் தெருவில் ரத்த வெள்ளத்தில் மிதந்து கிடந்தது.

பாஸ்கரனுக்கு மூன்று நாட்களுக்கு முன்னுல் ஆற்றங் கரையில் கண்ட நிகழ்ச்சிகள் நினைவுக்கு வந்தன.

நண்பர்கள் ஒருவரை யொருவர் ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டார்கள். ராஜு தன்னை நன்ருகச் சமாளித்துக் கொண்டு குரல் அடைக்கப் பேசினன்.

''பாஸ்கர்! வீட்டிலே எனக்கு இருப்புக் கொள்ள வில்லை. எங்கு போனுலும் எதைப் பார்த்தாலும் சாருவின் நினைவு என்னை நிலை கொள்ளாமல் அடித்துக் கொண்டே இருந்தது. திடீரென்று உன் நினைவு வந்தது. நீ எப்படி இருக்கிருயோ என்று பார்த்துப் போக வந்தேன்....''

கையை விட்டு மறைந்த பொருளின் நினைவு மனத்தை அழுத்தினுலும் கண்ணெதிரே காணும் பொருளின் வாழ்வைக் கவனித்துப் போக வந்திருக்கும் ராஜுவை நன்றியுடன் பார்த்தான் பாஸ்கரன்.

ஆற்றங்கரையும் அந்தச் சமாதிகளும், அவன் மனத்தில் அருவருப்பை ஏற்படுத்தின.

தோன்றுதலும், மறைதலும் காலத்தின் செயல்களாகப் பரிணமித்தாலும் உலகம் வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறது. அந்த உலகம் நன்ருக வாழ வேண்டும்.

ராஜுவுக்கு உலக வாழ்க்கை மீது ஆசை பிறந்ததற்கு அடையாளமாக அவன் அங்கு வந்த நர்ஸை அழைத்தான்.

''மிஸ்....எனக்கு வேறு இடத்தில் படுக்கை கொடுக்க முடியுமா?'' என்று கேட்டான்.

''அதற்கு அவசியமில்லை மிஸ்டர். நாளைக் காலையில் உங்களை 'டிஸ்சார்ஜ்' செய்யும்படி டாக்டர் பணித்திருக்கிருர். உங்களுக்கு உடம்பு நன்ருகக் குணமாகி விட்டது.''

நர்ஸ் புன்சிரிப்புடன் உயிர்த் துடிப்புடன் நடந்து கொண்டிருந்தாள்.

# நிஜம்

**சரோஜா ராமமூர்த்தி**

தபால்காரர் 'போஸ்ட்' என்று குரலை உயர்த்தி அழைத்து ஓர் ஐந்து நயா பைசா கார்டை என்னிடம் கொடுத்து விட்டு நகர்ந்தார். கார்டிலே இருந்தகையெழுத்து எனக்கு மிகவும் பழக்கமான எழுத்துத்தான். பம்பாயிலிருந்து என்னுடைய பாட்டி கடிதம் போட்டிருந்தாள். வெறும் அட்டைதான் என்றாலும், விலைமதிக்க முடியாத அன்பையும், பரிவையும் தாங்கி அந்தக் கடிதம் வந்திருக்கிறது. பாட்டி என்னுடன் நேரில் உட்கார்ந்து பேசுவதைப் போன்ற பிரமையை அந்த எழுத்துக்கள் கண்டிப்பாக எழுப்பக் கூடியவை. ஆனால், தபால்காரர் கடிதத்தைக் கொடுத்தவுடன் படிக்க முடியாதபடி எனக்கு வீட்டில் ஒரே அலுவல்கள். பள்ளிக்கூட அவசரம், ஆபீஸ் அவசரம் வேறு சேர்ந்து கொண்டன.

கடிதத்தை வாங்கிச் சமையலறை மாடத்தில் வைத்து விட்டு என் அலுவல்களைக் கவனிக்கப் போய் விட்டேன். ஒன்பதரைக்கு வந்த கடிதத்தைப் படிக்க அவகாசமில்லாமல் ஒதுக்கி வைத்து விட்டு, சாப்பிட்டு முடித்தவுடன் வெற்றிலைத் தட்டுடன் கூடத்துக்கு வந்தவளை அலமேலு மாமி குசலம் விசாரிக்க வந்து விட்டாள்.

வேறொன்றுமில்லை. மாமி கதை எழுதுகிறாளாம். ஒன்று கூடப் பத்திரிகையில் இது வரையில் வெளிவரவில்லையாம். அறிந்தவர் எல்லோருமே கதைகள் நன்றாக இருப்பதாக 'சர்டிபிகேட்' கொடுத்திருக்கிறார்கள்.

ஆனால், இந்தப் பத்திரிகை ஆசிரியர்கள் மட்டும் கதைகளை வேண்டுமென்றே உடனே மறு தபாலில் திருப்பி விடுகிறார்களாம்! எப்படியும் தன்னுடைய ஒரு கதையாவது பத்திரிகையில் வரத்தான் வேண்டுமாம்.

கண்டிப்பாகவும், குழைவாகவும் அலமேலு மாமி தன்னுடைய குற்றச்சாட்டைக் கூறியவாறு நாலைந்து கதைகளை எனக்கு முன்னால் வைத்தாள்.

நோஞ்சான் குழந்தை மாதிரி ஒன்று இரண்டே பக்கத்தில் கசங்கிப் பரிதாபமாக இருந்தது. கதையைப் பிரித்துப் பார்த்தேன். நோஞ்சான் குழந்தைக்குத் தேவையான அத்தனை சத்துக்களும் இந்த நோஞ்சான் கதைக்குத் தேவையாக இருந்தன. நிதானமாகப் படித்துப் பார்த்து வைப்பதாகச் சொல்லி நோஞ்சான் கதையை வாங்கி வைத்துக் கொண்டேன். மாமியும் பரம திருப்தியுடனும், நம்பிக்கையுடனும் எழுந்து போய் விட்டாள்.



பதினோரு மணிக்கு அமைதி கண்டு விட்ட எங்கள் தெருவை எட்டிப் பார்த்து விட்டுத் தெருக் கதவைத் தாழிட்டுக்கொண்டு கடிதத்துடன் ஊஞ்



சலில் சாய்ந்து உட்கார்ந்து படிக்க ஆரம்பித்தேன். வெற்றுக் கடிதப் படிப்பல்ல. பாட்டியுடன் நேருக்கு நேர் பேசுவதாக எழுந்த கற்பனை வெள்ளத்தில் திளைத்துக் கடிதத்தை நான்கு தடவைகள் ஊன்றிப் படித்தேன்:

'சௌபாக்கியவதி லக்ஷ்மிக்கு, ஆசீர்வாதம். க்ஷேமம். க்ஷேமத்துக்கு எழுது. இப்பவும், நானும், உன் மாமா, மாமி, குழந்தையுடன் இந்தமாதம் இருபத்திரண்டாம் தேதி வாக்கில் சென்னை வந்து சேருகிறோம். கைக் குழந்தைக்குத் திருப்பதிக்கு முடி கொடுக்க வேண்டும். மற்றவை நேரில்.

இப்படிக்கு,

உன் அன்புள்ள பாட்டி

பாகீரதி அம்மாள்

பாட்டி வருகிறாள், பாட்டி வருகிறாள்! ஊஞ்சலில் சாய்ந்திருந்தவாறு என்னையே நான் மறந்திருந்தேன். அப்போது உள்ளத்தில் நினைவு மலர்களாக எத்தனை எத்தனை எண்ணங்கள் பூத்துக் குலுங்கின?

திடீரென்று நான் பத்து வயதுச் சிறுமியாக மாறி விடுகிறேன். காஞ்சிபுரத்தில் ஏகாம்பரநாதருக்குப் பிரும்ம உத்சவம் என்றும் என்னை அனுப்பும்படியும் இதே மணிமணியான கையெழுத்தில் அப்பாவுக்குப் பாட்டியிடமிருந்து கடிதம் வருகிறது. பள்ளிக்கூடம் விடுமுறை கிடையாதுதான். பங்குனியில் திருவிழா. பரீக்ஷை வந்து விடுமே என்று அம்மா வேண்டாமென்கிறாள். நானா கேட்கிறவள்? பிடித்தால் ஒரே பிடியாயிற்றே. எதிர்ப்புகளைச் சமாளித்துக் கொண்டு காஞ்சிக்குப் போய்ச் சேர்ந்து விடுகிறேன். இரட்டைச்சட்டு வீடு சன்னிதித் தெருவில் அமைந்திருக்கிறது. தெருவில் பெரிய தேர்க்கோலம் போட்டுச் செம்மண் பூசியிருக்கிறார்கள். வாசலில் இரண்டு பக்கமும் பெரிய திண்ணைகள். திண்ணைக்குக் கீழே பன்னீர் மரம். திண்ணையில் உட்கார்ந்து பார்த்தாலே விண்ணை முட்டும் கோபுரம். அதன் உச்சியில் நீல மின்விளக்கு;

எதிரே நாலு கால், மண்டபம்.

கோபுர வாயிலிலிருந்து தெருவை அடைத்து உயரமும், நீளமுமான பந்தல்கள் போட்டிருக்கிறார்கள். பந்தலுக்குள் வளையல் கடைகள், ரிப்பன் கடைகள், மாக்கல் மரச் சொப்புகள் (பிளாஸ்டிக் யுகத்துக்கு முந்தைய காலம்!) மரப்பாச்சிகள், கம்மர்கட்டு, எள்ளுருண்டை, வண்ண மிட்டாய்கள். அத்துடன் காஞ்சீபுரத்து மல்லிகைச் செண்டுகள் அடங்கிய புஷ்பக் கடைகள்.



காலையிலும், மாலையிலும் சுவாமிக்கும், அம்பிகைக்கும் அலங்காரம் செய்வதுபோல் எனக்கும் ராக்கோடி, குஞ்சலங்கள் வைத்துப் பின்னி விடுவாள் பாட்டி. தலை நிறைய மல்லிகை மணக்கும். கையிலே ஏகப்பட்ட காசு. ரிப்பன், பொம்மைகள், சொப்புகள் வாங்கிப் பைகளில் நிறைத்துக் கொள்வேன். நாள் முழுதும் பந்தலில் சுற்றி விட்டு விளக்கு வைத்ததோ இல்லையோ, தூக்கம் கண்களைச் செருக வீட்டினுள் நுழைந்தவளைத் தலையில் இரண்டு குட்டுக் குட்டித் தயிர் சாதத்தை வாயில் உருட்டி உருட்டி அடைத்து விடுவாள் என் பாட்டி.

அப்புறம் எப்பொழுது தூங்கினேன் என்பதே எனக்குத் தெரியாது. எங்கோ கனவு உலகத்தில் பாண்டும், மேளமுமாக முழக்கிக் கொண்டு, 'டுமீல் டுமீல்' என்ற சத்தத்துடன் பேரிரைச்சலாய் ஏதோ வருகிறாற்போல் தோன்றும். சில்லென்று மூடியிருக்கும் என் இமைகளைத் தண்ணீரால் தடவி, ''லக்ஷ்மி, லக்ஷ்மி..சுவாமி கிளம்பி வரார், பார். எழுந்திருடி அசடு...உத்சவம் பார்க்க வந்தாயா? தூங்க வந்தாயா?'' என்று பாட்டி உலுக்கி எழுப்பி விடுவாள்.

எதிரே ஜகஜ்ஜோதியாக ஏகாம்பரநாதரும், காமாட்சியும் மாவடி நிழலில் அமர்ந்து ஊர்வலம் வருவார்கள். இன்று நினைத்தாலும் மெய் சிலிர்க்கும் காட்சி. இந்த நினைவு என்கிற ஒன்றை மட்டும் இறைவன் ஏற்படுத்தாமல் இருந்தானாகில் மனித வாழ்க்கையின் தடமே மாறி விட்டிருக்கும். பழைய இன்ப நினைவுகளில் புதிய துன்ப நினைவுகளைக் கரைக்க முடிகிறதல்லவா?

எல்லாவற்றையும் விட இறைவியின் திருக்கல்யாண விழா மிகவும் சிறப்பாக இருக்கும். காலையில் திட வைராக்கியத்துடன் ஒற்றைப் பூச்சரத்துடன் திருவாபரணம் ஏதுமின்றி அரனை நோக்கித் தவம் செய்யச் சம்பா நதிக்கரைக்குக் கிளம்பி விடுவாள். முகத்தில் அருளும், தெய்வீகக் காதலின் ஒளியும் சுடர அன்னையின் அருந்தவக் கோலம் என் மனத்தை வெகுவாக ஈர்த்த நினைவுகளில் ஒன்று. பாட்டி அன்று என்னை அந்த வயதில் இந்த அருங்காட்சியைக் காண அழைத்திராவிடில் இன்று அதை எண்ணி இறும்பூது எய்தும் வாய்ப்பை நான் கண்டிப்பாக இழந்திருப்பேன். காதலின் பெருமையும், அதன் தெய்வீகத் தன்மையும் தேய்ந்து வெறும் சொல் அலங்காரத்திலும், குதிப்பிலும் காதல் மலிந்து கடைச்சரக்காகி விட்ட இந்தக் காலத்தில் அந்த அரிய காட்சி என் மனத்தில் எப்படிப் பதியப் போகிறது?

இளமையில் பதிவாகிற எண்ணங்களின் எதிரொலிதானே வாழ்க்கை.

மறுபடியும் திருவிழா கழிந்து நான் ஊர் திரும்பியதும் பள்ளிப் படிப்பில் கவனம் சென்றதைவிட, காஞ்சிக் கோயில்களில் என் எண்ணங்கள் தேங்கி நின்றன. அங்கேயே ஆண்டு முழுதும் இருக்க வேண்டும் என்கிற ஆசை. அதற்கு விரைவிலேயே வாய்ப்பும் கிட்டியது. தாய் என்கிற செல்வத்தை நான் தொலைத்துவிட, தாயின் இடத்தில் பாட்டி அமர்ந்து என் முகத்தை ஆதரவுடன் தடவி அணைத்துக் கொண்ட நினைவு எக்காலத்திலும் பசுமையானது.

அந்த அணைப்பிலே அன்பு, கண்டிப்பு, கடமை ஆகிய பல சட்ட திட்டங்கள் ஊடுருவிச் சென்றன. 'தாய் இல்லாத பெண் தறிதலை' என்று யாரும் என்னைக் குற்றம் சொல்லக் கூடாதாம். பாட்டியின் கண்டிப்பு அது:

வைகறைப்பொழுதில் ஒருநாள் பாட்டி என்னை அவளுடன் எழுப்பி விட்டாள். பல் தேய்த்து முகம் கழுவிப் பொட்டு வைத்து, திருவிளக்கை ஏற்றி விட்டு, சமையலறையில் முன்னாள் தோய்த்த தயிர் ஆடையைக் கடைந்து வெண்ணெய் எடுக்க வேண்டும். ஆமாம்.....உத்தரவென்றால் உத்தரவுதான்.

அந்தப் பழக்கத்தில் இன்று கூடக் காலையில் கையில் பிசிறிய வெண்ணெயின் நடுவே பாட்டியின் முகம் பளிச்செனத் தெரிந்தது. தாழம்பூ நிறம், படிப்படியான நரைத்த கூந்தல், எடுப்பான நாசி, கண்டிப்பும் குழைவும் கொண்ட கண்கள். அவளைப்போல் நான் ஒன்றும் அழகியில்லை. அவள் என்னவோ நான் அவளைப் போல இருப்பதாகச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

'எங்கள் லக்ஷ்மிக்கு முகத்தில் நல்ல களை. அவளை வலிய வந்தே எவனாவது கல்யாணம் பண்ணிக் கொள்ளப்போகிறான்.' - பாட்டியின் ஜோசியம் இது.

பிற்காலத்தில் இவர் என்னை வலியத் தேடி வந்து மணந்து கொண்டார். மாலையும் கழுத்துமாக நாங்கள் அவளை நமஸ்கரித்த போது அந்த அன்பு உள்ளம் மனங்கனிய வாழ்த்திய வாழ்த்துக்களின் பிரதிபலிப்பை நான் இன்று நிறைவோடு அனுபவித்து வருகிறேன்.

மாலை என் மகள் கிரிஜா பள்ளிக்கூடத்திலிருந்து வந்தாள். பறந்து கொண்டு சமையலறைக்குள் சிற்றுண்டிக்காக ஓடினாள். நான் அவளுக்கு முன்பாகச் சென்று, ''இதோ பார்! பம்பாய்ப் பாட்டி இந்த மாசம் இருபத்திரண்டாம் தேதி வருகிறாளாம். வெண்ணெயை ரொட்டிக்குப் போட்டுக் கொள்ளாதே. நல்ல நெய்யாக உருக்கி வைக்க வேண்டும்...நமக்குச் கடையில் வாங்கிக் கொள்ளலாம்'' என்றேன்.

அவள் உற்சாகத்துடன் வீட்டார் எல்லோரிடமும் செய்தியைச் சொல்லி விட்டாள்.

''பாட்டியா வருகிறார்? கடிதம் வந்ததா?'' என்று கணவர் கேட்டவாறு வந்தார்.

''ஆமாம்.''

''இனிமேல் இந்தத் தேவியின் தரிசனம் கிடைப்பதே அரிதாகிவிடும். பாட்டியோடு மாம்பலம், மயிலாப்பூர் என்று சுற்றிக் கொண்டே யிருப்பாய். பம்பாயில் இருப்பவர்கள் சென்னைக்கு வந்தால் சென்னையையே விலைக்கு வாங்கி விடுவார்கள். பாக்குப்பொடி, காப்பிக் கொட்டையிலிருந்து சீயக்காய்ப் பொடி வரை வாங்கி மூட்டை கட்டத்தான் அவர்களுக்கும் பொழுதிருக்கும்.''

நான் மௌனமாக இருந்தேன். பம்பாய்க்காரர்கள் வாங்கி வருகிற தூத்பேடா மட்டும் இவருக்கு அலுக்காது. தூக்கு நிறைய இருந்தாலும், போக வர ஒரு கை பார்த்து விடுவார்.

பாட்டியும் நொடிக் கொருதரம் இவருக்கு உபசாரம் செய்தவாறு இருப்பாள்.

''ஆமாம், வருகிறவர்கள் வெறுமனே சென்னையுடன் போய் விடுகிறார்களே. இந்தத் தடவை மகாபலிபுரம் அழைத்துப் போக வேண்டும்'' என்றார் இவர்.

''பார்க்கலாம். அவளுக்குத் தள்ளாமை வந்து விட்டது. நம்முடன் வர முடிகிறதோ என்னவோ?''

பாட்டி வருகிறாள் என்பதில் உள்ளூற ஏற்பட்டிருந்த மகிழ்ச்சியைப் போல் பத்து மடங்கு பயமும் ஏற்பட்டிருந்தது. காரணம், அவள் சமையலறையிலிருந்து வாசல் வரை ஒரு பார்வை பார்த்து என் குடும்ப நிர்வாகத்தை எடை போட்டு விடுவாள்.

'இதை இப்படி வைத்தால் எடுப்பாக இருக்கும்...அதை நீ சரியாகச் செய்யவில்லை.'

மாற்றங்களும், திருத்தங்களும் ஏற்றுக் கொள்ளக் கூடியவை. அவள் சொல்லித் திருத்தும் முறையிலே நான் அதை அப்படியே ஏற்றுக் கொண்டு விடுவேன். இந்தக் கடிதத்துக்கு முன்னால் வந்த கடிதத்தில் என் கதை ஒன்றைப் பற்றிச் சரியாக விமரிசனம் செய்திருந்தாள்.

'நீ நன்றாகத்தான் எழுதியிருந்தாய். இருந்தாலும், என்னுள்ளே கதையின் கருத்து நன்றாகப் பதியவில்லை. மனத்தின் நுட்பத்தைக் கதைக் கரு தொடவில்லை என்கிறேன். ஏதோ மேலெழுந்தவாரியாகப் படிப்பவர்களுக்குப் பிடிக்கும். சுமார் தான்.'

''ஊரெல்லாம் 'ஓஹோ' என்று புகழ்ந்த கதையைப் 'பூ' வென்று விட்டாரே உன்பாட்டி?''-இவர் கேட்டார்.

''சொல்லட்டும். சொல்லட்டும். அவள் சொன்னால் சரியாகத்தான் இருக்கும். எனக்கே அந்தக் கதை திருப்திகரமாக இல்லை. இப்படித் தைரியமாக அவளால் தான் சொல்ல முடியும்.''

''இல்லையென்றால் நீதான் ஒத்துக் கொள்வாயா?'' குறும்பு தவழக் கேட்டுப் புன்சிரிப்புடன் என்னைப் பார்த்தார்.

''நல்லதும் கெட்டதும் தனித்தனியாகப் புரிந்து கொள்ளவேண்டும் என்கிற வழியை அவள்தான் எனக்குக் கற்றுக் கொடுத்தவள்.''

''நான் நன்றாக இல்லை என்றால் சரி யென் றிருப்பாயா?''

நான் பதில் சொல்வதற்குள் தெருவில் புடவைக்காரர் வந்து நின்றார்.

''பம்பாய் அம்மா எப்போ வருவாங்க அம்மா! இரண்டு மூன்று புடவைகளுக்குக் கிராக்கி இருக்கும்னீக...''

''இருபத்திரண்டாம் தேதி வருகிறார்கள். அடுத்த நாள் வாருங்கள். பிடித்ததை எடுத்துக் கொள்ளட்டும்!''

அவர் போய்விட்டார்.

''அப்படியே உனக்கும் புடவை வரும் படி உண்டு. உன் பாடு தேவலே. பாட்டி ஒன்று. அத்தை ஒன்று என்று ஏகப் பட்ட வரும்படி!''

இவருக்கு ஏன் இப்படிக் குமைச்சல் பீறிக் கொண்டு வரவேண்டும்? பாட்டி வருகிருள் என்ருல் இவருக்கு வயிற் றெரிச்சல். இவரை நான் சரியாகக் கவ னிக்க மாட்டேனும். பாட்டியும் பேத்தி யும் ஓயாமல் பல விஷயங்களை அலசித் தீர்ப்போமாம்.

''இரவும் பகலும் நீங்கள் ஓயாமல் என்ன பேசுவீர்கள்?'' என்று கேட்டார்.

''இதெல்லாம் யாருக்கு நினைவிருக் கிறது? பேசி முடித்ததும் மறந்து விடுகிறது.''

''நெஞ்சழுத்தக்காரி நீ—சொல்லா விட்டால் போயேன்.''

அப்புறம் மனுஷன் நாலைந்து நாட் களுக்கு என்னுடன் பேசவில்லை.

என் எதிரே ஒவ்வொரு நாளும் விடிந்து மடிந்து வந்தன. தேதித் தாள்கள் இன்னும் வேகமாக ஓட வேண்டும் என்று ஆசைப்பட்டேன். பாட்டி வருகிருள் என்கிற செய்தி என் நினைவில் எத்தனை எத்தனை ஆண்டு களைப் பின்னேக்கி ஓட விட்டன? இத யத்தின் ஆழத்தில் புதையுண்டு கிடந்த பால்ய நினைவுகளை நிழற் படம் போல் கண்டு ஆனந்திக்கும் வாய்ப்பை ஒரு கடிதம் ஏற்படுத்திவிட்டது.

அன்று இருபத்திரண்டாம் தேதி. விடிந்து எழுந்ததும் கண்களைக் கசக்கி விட்டுக் கொண்டு தேதித்தாளைப் பார்த்தேன். அதில் இருபத்தியொன்று இருந்தது. வேண்டுமென்றே இவர் என்னைப் பார்த்துச் சிரித்தவாறு தாளைக் கிழித்தெறிந்தார். நான் எதிர்நோக் கிய இருபத்திரண்டு என் கண்கள் முன்பாக மினுக்கி நின்றது.

மாலை ஆறு மணிக்குப் பம்பாய் எக்ஸ்பிரஸ் வருகிறது. வெந்நீர் போட வேண்டும். சுடச்சுட சமைக்க வேண்டும். விருந்தாளிகளை வரவேற் கும் முறையில் எல்லாமே ஒழுங்காக இருக்க வேண்டும்.

வேலைகளை முடித்துக் கொண்டு கூடத்தில் கடிகாரத்தை எட்டிப் பார்த்தேன். ஐந்தரை ஆகியிருந்தது. இன்னும் குறைந்தது ஒன்றரை மணி நேரமாவது அவர்கள் வருவதற்கு ஆகலாம். நேரம் நெருங்க நெருங்க என்னுள்ளே ஒரு பரபரப்பு.

கணவர் 'சென்டிரலு'க்குப் போக டாக்சி அழைத்து வருவதாகச் சொல்லி யிருந்தார். தெருவில் டாக்சியும் வந்து நின்றது. நான் உடுத்துக் கொண்டு வாசலுக்கு வந்ததும், 'தெருக் கோடி யில் சைக்கிளில் தந்திக்காரர் வரு கிருரே, யார் வீட்டுக்கோ?' என்று தயங்கினேன்.

நேராக அவர் எங்கள் வீட்டுக்குத் தான் வந்தார். கணவர் கையெழுத் திட்டு வாங்கித் தந்தியைப் பிரித்துப் படிக்கும்போது அவர் முகமும், கை களும் இலேசாகச் சிவந்து நடுங்கின.

''என்ன?''

''ஒன்றுமில்லை. உள்ளே போகலாம்.''

ஒன்றுமில்லை என்கிற சொல்லி னுள்ளே விரும்பத் தகாத ரகசியம் ஒளிந்திருக்குமோ என்னவோ?

''இங்கே வா இப்படி — தைரிய மாக இரு. நேற்று பகல் உன் பாட்டி மாரடைப்பால் காலமாகி விட்டாள்!''

''என்ன? என்ன?'' தந்தியை நடுங் கும் என் விரல்களால் பிரித்தபடி கேட்டு ஊடுருவிப் பார்த்தேன். தவ ருக இருக்குமோ, வேறு யாருக்கா வது வந்த தந்தியோ என்கிற நப் பாசை எனக்கு. காகிதத்தில் இருந்த நாலு வார்த்தைகளுக்கு இடையே அதே தாழம்பூ மேனியும், படிப்படியான நரைத்த கூந்தலும், எடுப்பான நாசி யும், கண்டிப்பும் குழைவும் தோன்றும் கண்களும்—சில நாளாக நனவிலே பூத்த அந்த இன்ப நினைவுக்குள் இத்துன்ப நினைவு கரைந்து கண்கள் குளமாயின.



பூங்கா ரயில் நிலையத்தை அடுத்த சென்டிரல் ஜெயில் மதிற் சுவர் ஓரம் மங்கம்மாள் பனங்கிழங்கைக் கடித்துச் சுவைத்த வாறு உட்கார்ந்திருந்தாள். பக்கத்தில் அடுப்பு ஒரேயடியாகப் புகைந்து கொண்டிருந்தது. அதைப் பார்த்ததும் ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. வெறுப்புடன் வாயிலிருந்த சக்கையைத் துப்பிவிட்டுத் தன் பலமெல்லாவற்றையும் திரட்டி அடுப்படியில் குனிந்து 'உப்'பென்று ஊதினாள். அந்தப் பேதைக்கிணங்கி அக்கினி தேவன் குப்பென்று பற்றிக் கொண்டு திகுதிகு வென்று எரிந்தான். அடுப்பின் மேல் நொய்க்கஞ்சி தளதள வென்று கொதித்துக் கொண்டிருந்தது. பக்கத்தில் ஐந்தாறு வயதுப் பெண் குழந்தை உடம்பை நெளித்தவாறு வேதனையில் முனகிக் கொண்டிருந்தது. மேலே வளைந்து தொங்கிய மரக்கிளையில் தூளியில் சின்னஞ் சிறு சிசு ஒன்று நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தது.

சுதந்திர பாரதநாட்டிலே சகல உரிமையும்பெற்று மானத்தோடு ஒருவனுடன் வாழும் நங்கைதான் மங்கம்மாள். அவர்கள் தொழில் பிச்சை யெடுப்பது. எப்படியோ இரண்டு வேளையும் அவர்கள் வயிறு நிறைந்துதான் வந்தது. மூன்றாவது வேளையான 'டீ டைம்' மின்போது டீயும், ரொட்டியும் கிடைத்து வந்தன. ஆனால் இதெல்லாம் இந்த இரண்டு புது ஜீவன்களின் வருகைக்கு முன்பு. இப்போதெல்லாம் ஒரு வேளைக்கே லாட்டிரி

# நாளைக்கு?



சரோஜா ராமமூர்த்தி

தான. மங்கம்மாவின் கணவன் பொன்னன் போக்கே அலாதியாக மாறி விட்டது. சரிவர அவன் அவளிடம் துட்டுக் கொடுப்பதில்லை. 'நாலு இடம் சுத்தும் ஆம்பிள்ளை. அதை நாம கண்டிக்க முடியுமா? ஏதோ இந்த மட்டும் என்னை வச்சுக் காப்பத்துதே. அது போதும்' என்பாள் அவள். அவள் குரலில் நன்றி பொங்கி வழியும். கண்களில் கண்ணீரின் கரை கட்டும். இரண்டு நாட்களாக மங்கம்மாவுக்கு அரை வயிற்றுக்குக் கூடப் போதவில்லை. அத்துடன் அவள் பிரசவித்து மூன்று மாதங்கள் முழுசாக ஆகவில்லை. உடலில். உள்ளத்தில் ஒரே சோர்வு.

கஞ்சி கொதித்துக் கொதித்து அடங்கியது. அதை இறக்கி வைத்து விட்டு ஒரு மொடாவில் தண்ணீரை நிரப்பி அடுப்பின் மேல் வைத்தாள். ஆம்பிள்ளை வந்தால் உடம்புக்கு ஊற்றிக் கொள்ளச் சுடு தண்ணி கேட்பான். ஆனால் பானையை அடுப்பின் மீது ஏற்றும் போது சற்று ஆத்திரத்துடன் நக்கென்று தான் வைத்தாள். நல்ல வேளை! பானை நல்ல பழசு. விரிசல் காணவில்லை. வாழ்க்கையில் அடிபட்டுத் தேறிய திண்மையோடு பளபள வென்று கரியுடன் அடுப்பின் மீது ஒய்யாரமாக உட்கார்ந்து கொண்டது.




தூளிக் குழந்தை முனக ஆரம்பித்தது. மங்கம்மா குழந்தையை எடுத்து வந்து உட்கார்ந்து பாலூட்ட ஆரம்பித்தாள். அதற்கு நல்ல பசி. தன் வலிமையைத் திரட்டி அன்னையை வாட்டி வதைத்தது அந்தச் சிசு. மங்கம்மா உணர்ச்சியற்றவளாகக் குழந்தையின் தலைமயிரைக் கோதிக் கோதிப் பேன் பார்க்க ஆரம்பித்தாள். வாழ்க்கையின் லட்சியமெல்லாம் அந்த நிகழ்ச்சியில் அடங்கியது போல் வெகு கவனமாக எச்சிலைக் கூட விழுங்காமல் கையில் தட்டுப்பட்ட பேன்களைச் சொடுக்கிக் கொண்டே யோசனையில் ஆழ்ந்திருந்தாள் அவள். பக்கத்திலே படுத்திருந்த பெரிய பெண் தூக்கம் கலைந்து விழித்துக் கொண்டது.

''யம்மோவ்!..... தண்ணி ....'' என்று கேட்டு முனகியது. 'யம்மோவ்' அதைக் காதில் வாங்கவில்லை. 'ஆமாம்... இதுக்கென்ன வேலை' என்கிற அலட்சியம் அவள் பார்வையில் நிழலாடியது. அதுவும் அவள் பெற்ற செல்வம்தான். ஆனால், இன்று அவளுக்கே பாரமாக இருந்தது. கடந்த மூன்று நாட்களாக அதற்கு உடம்பு சரியில்லை. என்னவோ ஜுரம். அந்த ஜுரத்துக்கு அது இது என்று பெயரிட்டு அழைத்து, ஊசி போடப் பெரிய வைத்தியர்கள் யாரும் அந்தப் பெண்ணைப் பார்க்கவும் இல்லை. இவளும் அதை வைத்தியரிடம் அழைத்துப் போய்க் காட்டவில்லை. சுக்குத் தண்ணி, சுடுதண்ணி, டீ, பன் இவைதான் அந்தச் காய்ச்சலுக்கு மருந்தாகவும், 'டையட்'டாகவும் விளங்கின.

''யம்மோவ்.,....'' என்று தன் குரலை உயர்த்திக் கூப்பிட்டது மறுபடியும்.

''என்னடி கழுதை! சும்மா ஏங் கழுத்தை அறுக்கிறே?....'' என்று எரிந்து விழுந்தாள் மங்கம்மா.

''யம்மோவ்! சுடு தண்ணி....'' என்று பரிதாபமாகத் தாயைப் பார்த்தவாறு முனகியது அந்தப் பெண்.

''தரித்திரம் பிடிச்சவ....'' என்று அலுத்துக் கொண்டே அடுப்பின் மீது காய்ந்து கொண்டிருந்த பானையிலிருந்து 'சுடு தண்ணி' யைத் தகரக் குவளையில் மொண்டு வந்து நக்கென்று அதன் முன்னால் வைத்தாள் மங்கம்மாள். 'தன் தாய் ஏனிப்படி தன்னைக் கரித்துக் கொட்ட வேண்டும்?' அதற்கே எவ்வளவு யோசித்தும் புரிபடவில்லை. கைகள் நடுங்க மெல்ல எழுந்து உட்கார்ந்து சுடு தண்ணியை 'மடக் மடக்' கென்று குடித்து விட்டு அப்படியே சாய்ந்து படுத்துக் கொண்டது. அப்படியே யோசிக்கவும் ஆரம்பித்தது. சிந்திக்கத் தொடங்கியவுடன் அதன் சின்னஞ் சிறு மூளைக்கும் பல விஷயங்கள் விளங்க ஆரம்பித்தன. கடந்த நாலைந்து மாதங்களாக அந்தப் பெண் அடிக்கடி நோயில் விழுந்து, குடும்பத்துக்கு எந்தவிதமான உதவியும் செய்ய முடியாத நிலையில் இருக்கவே, தாய்க்கும் பாரமாகி விட்ட உண்மை புலப்பட்டது.

அம்மா வெட்டிச் சோறு போடுகிறாள். ஆகவே, அலுத்துக் கொள்கிறாள். குழி விழுந்த கண்களிலிருந்து பொல பொல வென்று கண்ணீர் வழிய வானத்தை அண்ணாந்து பார்த்துப் பெருமூச்செறிந்தவாறு படுத்துக் கிடந்தது அது.

சென்னை நகரின் இரவுதான் எவ்வளவு மனோகரமாக இருக்கிறது? வண்ண வண்ண விளக்குகள் எல்லாம் குபீரென்று எரிய, நெடுஞ் சாலைகளில் எத்தனை நாட்கள் கையேந்திப் பாட்டுப் பாடி நயா பைசாக்களைக் கொண்டு வந்து கொட்டியிருக்கிறது அது? கணீரென்று, 'பாலும், பழமும் கைகளில் ஏந்தி' என்று அது பாட ஆரம்பித்து விட்டால் மூர்மார்க்கெட் வாசலில் நெரியும் கூட்டத்தில் எளிதாக ஐம்பது புதுக்காசுகளை ஒரு மணி நேரத்தில் சம்பாதித்து விடும். போலீஸ்காரரின் எச்சரிக்கையைக் கூட மதியாமல் அந்தப் பக்கத்திலிருந்து எதிர்ச் சாரிக்குத் தாவி ஓடி, பூங்கா ரயில் நிலையத்தின் மாடிப் படிகளில் குதித்து ஏறி அம்மாவிடம் காசுகளைக் கொடுத்து விட்டுப் பெருமிதத்தால் பூரித்து நிமிர்ந்து நிற்குமே!

''அடியெங்கண்ணு! உங்கப்பனும் இருக்கானே, உதவாக்கரை. நாளைக்கு இரண்

டணுவுக்குக்கூட வக்கில்லையே'' என்று அத னுடைய கன்னத்தை நெரித்து, திருஷ்டி சுற்றுவாளே அவள் தாய்?

'சாமி! என்னை எப்படியாவது காப்பாத்திக் கொடு சாமி. நான் ஓடியாடி எங்கம்மாவை, தங்கச்சியைக் காப்பாத்தி விடறேன்' என்று மனத்துக்குள் சொல்லிக் கொண்டே கை யெடுத்துக் கும்பிட்டது அது.

''என்னடி செய்யறே? கும்பிடு கிம்பிடு எல்லாம் பலாமக்கிதே'' என்று எரிந்து விழுந் தாள் மங்கம்மா.

''வெளக்கேத்திப் போச்சே.... சாமி கும் பிடறேன் யம்மோவ்'' என்று தீனமாகக் கூறியது அது.

''கும்பிடுவே, கும்பிடுவே. குந்திக்கினே சோறு திங்கறே பாரு. கும்பிடமாட்டே நீ?''

மடியில் இருந்த குழந்தை கால்களையும், கைகளையும் ஆட்டி ஆட்டித் தாயைப் பார்த் துச் சிரித்தது.

''எங்கண்ணு! ராசாத்தி! நீ அந்தப் பீடை யைப் போல் சீக்காளியா இருக்க மாட்டே இல்லே? ஆத்தாளுக்குச் சம்பாறிச்சுப் போடு வியா கண்ணு?'' என்று கேட்டாள் மங்கம்மா, குனிந்து அதை முத்தமிட்டவாறு. வயிறு நிறைந்திருந்த மகிழ்ச்சியில் குழந்தை அவள் முகத்தைத் தன் சிறு கரங்களால் எட்டிப் பிடிக்க முனைந்தது. தாய் அதை அள்ளி அணைத்து முத்தமிட, அது சிரிக்க அங்கே தாயன்பின் ஒரு பகுதியை நன்றாகக் காண முடிந்தது.

வருங்காலத்தில் தன் வயிற்றுப்பாட்டை அந்தக் குழந்தையிடம் நம்பி ஒப்படைத்த குதூகலம் மங்கம்மாவின் முகத்தில் ததும்பி வழிந்தது.

வெளியே நன்றாக இருட்டி விட்டது. வழக் கம் போல் பொன்னன் அன்றும் வரவில்லை. அவன் வருவான் என்கிற நம்பிக்கையும் அவ ளுக்கு இல்லை. காய்ச்சி வைத்திருந்த கஞ்சியை உப்பிட்டுக் கலக்கிப் பருகினாள் மங்கம்மாள். மிகுதியைத் தகரக் குவளையில் ஊற்றிப்பெரிய பெண்ணிடம் நகர்த்தினாள்.

''யம்மோவ்! ஜுரம் விட்டிருச்சி. சில் லுன்னு தண்ணியா உடுது ஒடம்பெல்லாம். பசிக்குது —'' என்றது அது.

''அதான் கஞ்சி ஊத்தி வைச்சிருக்கே. குடிச் சுத் தொலையேன். ஜுரம் விட்டா பேதிவரும். போடி கழுதை—'' அலட்சியமாகக் கூறிவிட்டு வெற்றிலை போட ஆரம்பித்தாள் அவள்.

ஜெயில் சுவர் ஓரம் கூப்பிடு தூரத்தில் கிழவி ஒருத்தி இந்த நிகழ்ச்சியை இரண்டு நாட்களாக அலுக்காமல் கவனித்து வந்தாள். பம்மென்று பஞ்சு போல் வெளுத்திருந்த கூந்தலைத் தட்டி முடிந்தவாறு மங்கம்மாளை நோக்கி வந்தாள் அவள்.

''வா .... ஆயா .... சாப்பிட்டாயா?'' என்று விசாரித்தாள் மங்கம்மாள்.

''ஆச்சு .... ஆமா .... வும் புருசன் வீட்டுக்கு வரதே இல்லையா?''

''வராம என்ன? எப்பவாச்சும் வரு வானே?''

''அப்ப, நீ சாப்பாட்டுக்கு என்ன செய் யறே?''

''அதையேன் கேக்குறே போ. பாதி நாளைக் கும் பட்டினிதான் ஆயா. கைக்குழந்தை வேறு. சீக்காளிப் பொண்ணு வேறு....''

''அதுவும் ஓம் பொண்ணு தானே? நீ பெத்தது தானு?''

''ஏன் ஆயா அப்படிக் கேக்குறே? அதுவும் எம் பொண்ணு தான். அது இருந்தும் ஒண்ணு தான் ....''

ஆயா நெருங்கி வந்து உட்கார்ந்தாள். குரலை இறக்கி ரகசியம் பேச ஆரம்பித்தாள்.

''நம்ப தொழிலு முன்னைப் போல் இல்லேடி மங்கம்மா. போட்டி வலுத்துப் போச்சு. ஒவ்வொருத்தரும் நல்ல குழந்தையா மூணு நாலு வச்சுக்கிட்டுப் பொழைப்பை நடத்த றுங்க. நீயானு இந்தச் சீக்காளிப் பொண்ணை வச்சுக்கிட்டு .....''

கிழவி மங்கம்மாவின் மடியில் கிடந்த குழந் தையை உற்றுக் கவனித்தாள்.

''இது ஒண்ணை நீ நல்லா வளர்த்தாப் போதுமே. அது ஒண்ணு எதுக்குன்னு கேக்கு றேன். சும்மா அதை எங்காச்சும் தள்ளி விடேன் —''

மங்கம்மாள் ஒன்றும் புரியாமல் விழித்தாள்.

''சூளையிலே ஒரு ஆளு .... நம்பளவன் தான்னு வச்சுக்கோயேன் — இருக்கான்.



புள்ளைங்களை நல்லபடியா பழக்கி அனுப்பு வான். பாட்டா, ஆட்டமா, வலிப்பா, ஊமை போலவா. எது வேணுமானாலும் கத்துக் கொடுப்பான். நல்லா சம்பாதிக்கும். அது பாட்டுக்குப் பொழிச்சுக்கும்— ''

மங்கம்மாள் பெரிய பெண்ணைத் திரும்பிப் பார்த்தாள். ஜுரம் நன்றாக இறங்கிவிடவே, கஞ்சி குடித்து விட்டு அது நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தது.

இன்றையப் பொழுதுக்கு நொய்க்கஞ்சி அவள் பசியைத் தணித்து விட்டது. நாளைக்கு? நாளை என்கிற நினைப்பே அவளுக்கு ஒரு பிரச்னையாகவும், வேதனையாகவும் இருந்தது. வயிற்றில் வேண்டுமானால் சுமந்து விடலாம் போலிருந்தது. அது மண்ணில் விழுந்து விட் டாலோ அவளுக்குப் பாடாகத்தான் அமைந் திருந்தது. பிச்சைக்காரிக்குப் பிறந்துவிட்டு, படுக்கையில் கிடந்தால் முடியுமா?

''நீ என்ன சொல்றே ஆயா? குழந்தையை யாராச்சும் கொடுப்பாங்களா — ?''

''தே! சும்மாவா கொடுக்கச் சொல்றேன்? அஞ்சோ, பத்தோ வாங்கிக்க — ''

மங்கம்மாளின் உள்ளம் சிலிர்த்தது. பிச்சைக்கார உலகத்திலும் 'பிஸினஸ்' நடத்தும் பேர்வழிகள் இருக்கிறார்கள் என்பதை நினைத்தவுடன் உலகமே பணத்துக்குள் அடங்கி விடும் அதிசயத்தை வியந்தாள் அவள். ஒரு கணம் கணவன் அதட்டுவானோ என்று யோசித்தாள். மறுவினாடி அவள் உள்ளத்தில் துணிச்சல் பிறந்தது. 'வச்சுக் காப்பாத்த வக்கில்லாதவனுக்கு அதிகாரம் ஒரு கேடா' என்று நினைத்துக் கொண்டாள். பசியின் முன்பு பத்தும் பறந்து விடும் என்று சொல்வார்களே. அது உண்மை தான். அவளுடைய உலகமெல்லாம் வயிற்றுப் பாட்டுக்குள் அடங்கி விடுகிற ஒன்றுதான்.

கிழவி பலே கெட்டிக்காரி. மங்கம்மாளின் உள்ளத்தில் ஓடுகிற எண்ணங்களை அவளுடைய முக அசைவுகளிலிருந்து கண்டு கொண்டாள். இடுப்பில் சொருகியிருந்த கருக்குப் பையிலிருந்து ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்து, ''இந்தா பிடி! அட்வான்சு. வச்சுக்க. நாளைக்குக் காலையிலே என்னோடே அனுப்பிடு. அது உடம்பு கிடம்பு எல்லாம் சரியாயிடும். நல்லபடியா பொறைச்சுக்கும்—'' என்றவாறு அவளிடம் கொடுத்தாள் கிழவி.

ஒரு நாள் போவது ஒரு யுகமாக இருந்த நேரத்தில் புத்தம் புதிய ஐந்து ரூபாய் நோட்டைப் பார்த்தவுடன் அவளை அறியாமல் அவள் கைகள் நீண்டு அதைப் பெற்றுக் கொண்டன.

விடியற் காலத்திலேயே அது விழித்துக் கொண்டுவிட்டது. உடம்பு இலேசாக ஒரு விதச் சுறுசுறுப்புடன் இருந்தது. படுக்கையில் எழுந்து உட்கார்ந்து சுற்றுமுற்றும் பார்த்தது. அம்மாவும், குழந்தையும் ஒருவரை ஒருவர் அணைத்துப் பிடித்தவாறு நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தார்கள்.

அது நகர்ந்து நகர்ந்து குழாய் அடிக்குச் சென்று முகம் கழுவிக் கொண்டது. நெஞ்சுக்கு இதமாக ஏதாவது சாப்பிட்டால் தேவலைதான். யார் வாங்கிக் கொடுக்கப் போகிறார்கள்? விடிந்ததும் விடியாததுமாகத் தன் வயிற்றுப் பாட்டை யார் கவனிக்க அவ்வளவு அக்கறையுடன் வரப் போகிறார்கள்? குழாயிலிருந்து சற்று தள்ளி வந்து உட்கார்ந்து கொண்டது.



பரட்டைத் தலைக் கிழவி பம்மென்றிருந்த தலையைக் கோதி முடிந்து கொண்டு குழாயடிக்கு வந்து பல் தேய்த்து முகம் கழுவினாள். மாடிப்படிகளில் ஏறி வெளியே சென்றவள் தகரக் குவளையில் டீ வாங்கி வந்தாள். பரிவுடன் வந்து அதை அந்தப் பெண்ணிடம் கொடுத்தாள்.

நாலைந்து நாட்களாகப் படுத்துக் கிடந்தவளுக்கு அது எவ்வளவோ தெம்பை அளித்தது.

''ஆயா! நீ என்னை இந்த எடத்துக்குப் புச்சா?'' என்று கேட்டது அந்தப் பெண் குழந்தை.

''ஆமாடி கண்ணு! இங்கே வந்து நாலு நாளாச்சு .....''

''உன்னைப் பாத்துக்க யாருமே இல்லியா ஆயா?''

''யார் இருக்காங்கடி அம்மா...'' கிழவி கண்ணீரைப் பெருக்க விட்டவாறு மூக்கை உறிஞ்சினாள்.

''நீ எங்க வூட்டுக்கு வந்துடேன் ஆயா..!''

''அது எப்படி முடியும்? நீதான் என்னோடு வாயேன்....''

''எங்கே ஆயா? எங்கம்மாவைக்கேக்கணும்''

''இப்படி ஒரு சுத்து சுத்திக்கிட்டு வந்துடலாம் வா....''

தினம் தினம் பார்த்துப் பார்த்து அலுத்துப் போன மின் வண்டிகளும், ஜெயில் சுவர்களும், அரை வயிற்றுக் கஞ்சியும் இதற்கெல்லாம் மேலாக அன்னையின் அலட்சியமும் அதன் மனத்தில் அந்த இடத்தை உதறும்படியான வலிவை ஏற்படுத்தின.

கிழவி அதைக் கைத்தாங்கலாகப் பெஞ்சியில் உட்கார வைத்தாள்.

சென்னை கடற்கரையிலிருந்து தாம்பரம் செல்லும் மின்வண்டியில் கிழவியும், அதுவும் பிரயாணம் செய்யும் போது கிழக்கு வெளுத்து நிலம் தெளிய ஆரம்பித்து விட்டது.

தாம்பரத்தில் புகை வண்டியில் ஏறி உட்கார்ந்த பிறகுதான் அதற்குச் சந்தேகம் தோன்றியது.

''ஆயா...எங்கம்மா என்னைத் தேடுமே..'' என்று ஆரம்பித்தது.

''அவ கெடக்கறா விடு.....இனிமே நான் தான் உனக்கு அம்மா, ஆயா எல்லாம்'' வியப்புடன் அது அவளை விழித்துப் பார்த்தது.

''ஆமாண்டி, என்ன அப்படிப் பாக்குறே? சும்மா அப்படிப் பாத்து ஏதாச்சும் பேசினே, ஓடற ரயில்லேந்து கீழே பிடிச்சுத் தள்ளிடுவேன். ஆமா....பெத்தவளா அவ? ஒன்னை அஞ்சு ரூபாய்க்கு வித்தவ.''

நாணயத்துடனும், நேர்மையுடனும் வாழ வேண்டும் என்று எதிர்பார்க்கிற சமூகத்திலேயே பொய்யும், புரளியும் நிறைந்திருக்கிற இந்தக் காலத்தில், பசி ஒன்றையே தம் சொத்தாகக் கொண்டு, வறுமையின் மடியிலே வாழ்ந்து, மறைந்து வரும் பிச்சைக்கார சமூகத்தில் உயர்ந்த லட்சியங்களை எதிர்பார்க்க முடியுமா?

கிழவியும், அதுவும் புகை வண்டியில் பிரயாணத்தைத் தொடர, இனி நாம் ரயிலில் பிரயாணம் செய்யும்போதெல்லாம் அது பாடப் போகும் பாடலைக் கேட்டு, அந்தத் தொண்டு கிழவியைப் பரிதாபத்துடன் பார்த்து நயா பைசாக்களைத் தகரக் குவளையில் போட்டால், அதைத்தான் நாம் தர்மம், புண்ணியம் என்கிற பெயரில் செய்து விட்ட கடமையாக நினைத்து இறுமாந்து போவோம்.

# வாழ்க்கை ஒரு நம்பிக்கை



ஸரோஜா ராமமூர்த்தி

ஊர் விழித்துக்கொண்டு விட்டதா என்பதைப் பற்றி மீனாட்சிப் பாட்டிக்குக் கவலை இல்லை. அதுபாட்டுக்கு மெதுவாக விழித்துக் கொள்ளட்டும், நான் இனிமேல் படுக்கையில் இருக்க மாட்டேன் என்பது போல் விடியற் காலம் நாலு மணிக்கே மீனாட்சிப் பாட்டி எழுந்து விடுவாள். பல் துலக்கி முகம் கழுவிக் கொண்டு, உள்ளே நுழைந்து பூஜை மாடத்தி லிருந்து திருநீற்றை அள்ளிப் பூசிக்கொள் வாள். பிறகு அவளுடைய அலுவல்கள் ஒவ்வொன்றாக ஆரம்பமாகி விடும். வீட்டில் இரண்டு வேலைக்காரர்கள், மீனாட்சிப் பாட்டி யின் பெண், மருமகள், பேரன், அவன் மனைவி இத்தனை பேர்களும் இருக்கிறார்கள். சாகிற காலத்தில் இவள் சிவனே என்று இருந்து விட்டுப் போகலாம். அவள் இருக்க மாட் டாள். அவள் சுபாவம் அப்படி.

மீனாட்சிப் பாட்டி எழுந்து வருவது அந்தப் பசுமாடுகளுக்கு எப்படியோ தெரிந்து விடும். அவை கட்டுத் தறியில் இருந்தவாறு, தலையை ஆட்டி, உறுமி அவளை வரவேற்கும். பொட்டும், பிண்ணாக்கும் கலந்த நீரை அவை களுக்கு வைத்துக் கொல்லைக் கதவுகளை மாடு கறப்பவனுக்காகத் திறந்து வைத்து விட்டுப் போவாள் பாட்டி. இதைப் பற்றி அந்த வீட்டில் அபிப்பிராய பேதம், சர்ச்சை எல்லாமே நடந்து வந்தன.

''எவனாவது கொல்லை வழியாகப் புகுந்து அகப்பட்டதைச் சுருட்டிக் கொண்டு போகப் போகிறான், பார்'' என்பார் மருமகன் கணே சன். அதற்கு இன்றுவரை அவள் மறு மொழி கூறியதில்லை. எத்தனையோ வருஷங் களாக அப்படித்தான் பழக்கம். எந்தத் திருடனும் எதையும் சுருட்டிக் கொண்டு போக வரவில்லை என்பது போல் புன்னகை யுடன் பேசாமல் போய் விடுவாள். மாமி யாரிடம் தன் ஜம்பம் பலிக்காமல் போகவே மனைவியிடம் எரிந்து விழுவார் கணேசன்.

''எனக்கு மானம் போகிறது. உன் அம் மாவைக் கொஞ்சம் சும்மா இருக்கச் சொல் லேன். வீட்டில் வேலைக்காரர்கள் இல்லையா? இந்த வயதில் நாலு மணிக்கே குடைந்து கொண்டு எழுந்து விடுகிறாளே?'' என்பார்.

''அது அவள் சுபாவம். இங்கேதான் வேலைக்காரர்கள் இருக்கிறார்களா? என் அப்பா இருந்த காலத்தில்கூட இருந்தார்கள். எல்லோரும் தண்டச் சம்பளம் வாங்கிக் கொண்டிருந்தார்கள். அநேகமாக அவர்கள் வருவதற்குள் பாதி வேலைகளை இவள் செய்துவிடுவாள்'' என்றாள் மரகதம் சோபா வில் சாய்ந்தபடியே.

''நீ ஒன்றும் கூடமாட ஒத்தாசைக்குப் போவதில்லையாக்கும்?''

"நான் எங்கே போகிறது? நாலடி நடந்தால் மூச்சுத் திணறல். மார்பில் வலி. புதிசாகக் கேளுங்கள்—"

கீழே மாட்டுக் கொட்டிலில் பால் கறக்கும் சத்தம் கேட்டது. நிலம் இன்னும் தெளியவில்லை. கனத்த இருள் போர்வையை மெல்ல மெல்லச் சக்தி வாய்ந்த கரம் ஒன்று நீக்குவது போல் கிழக்கேயிருந்து ஒளி இலேசாக வந்து கொண்டிருந்தது. பால்காரன் கோதண்டன் மீனாட்சிப் பாட்டியிடம் பேசிக் கொண்டிருந்தான். வீட்டில் அவன் மனைவி பிரசவித்திருக்கிறாளாம். ஆறாவதோ, ஏழாவதோ!

"ஏன்டா பையா! எத்தனாவது குழந்தை?"

அவனுக்கே மறந்து விட்டது. யோசித்து விட்டுப் பதில் கூறுகிறான். "ஏழாம் பேறுங்க. பத்தியம் போட்டா துண்ணப் பிடிக்கலிங்கறு.... பெரியம்மாவைக் கேட்டு வான்னு சொல்லிச்சு...."

"சோத்துக்கென்னடா அவசரம்? பையா! புழுங்கலரிசிக் கஞ்சி வைச்சுக் கொடு... கலகலன்னு பசிக்கட்டும். அப்புறம் சோறு போடலாம்—"

"வீட்டிலே அதுக்குக்கூடத் தகராறுங்க பெரியம்மா—"

"ஏன்டா பையா! பத்து மாடு வச்சிருக்கே. வியாபாரம் பண்றே. கட்டினவளுக்குக் கஞ்சிக்குப் பஞ்சம்ங்கறயே... சம்பாதிக்கிறதை ஓட்டலிலும் சினிமாவிலும் கொண்டு தொலைச்சா கையிலே காசு மீறுமாடா?"

மாடியிலிருந்து கணேசன் ஜன்னல் வழியாகக் கீழே எட்டிப் பார்த்தார். மங்கலான ஒளியில் குறுகிய அந்த உருவம் அன்புடனும், தயையுடனும் பால்காரனிடம் ஒரு ரூபாயை எடுத்துக் கொடுப்பதைக் கண்டார்.

"மரகதம்! ஏய் மரகதம்! இங்கே வா.... உன் அம்மா தர்மம் செய்கிறதை வந்து பார். இந்தக் கோதண்டம் பயல் இப்படி மாய்மாலம் செய்து நன்றாகப் பிடுங்கித் தின்கிறான்."

மரகதம் சோபாவில் புதையப் புதையப் படுத்தவாறு சுகமாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். இந்தப் படுக்கை யறைக்கு நேர்க்கோடியில் இன்னொரு பள்ளியறை இருந்தது. இதற்கு நேர்மாறான ஜோடி ஒன்று அங்கும் ஜன்னல் வழியாக இதே காட்சியைப் பார்த்துக்கொண்டிருந்தது. மரகதத்தின் செல்வ மகன் ரவியும், அவன் மனைவி மேனகாவும் சினிமா பார்ப்பது போல் இந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

"இந்தப் பாட்டிக்கு ஆனாலும் இவ்வளவு தாராளம் வேண்டாம்...." என்று மெல்லிய குரலில் மொழிந்தவாறு ஏதோ கொள்ளை போவது போல் எட்டிப் பார்த்தாள் மேனகா.

ரவி உல்லாசமாக மனைவியைத் திரும்பிப் பார்த்தான்.

கல்யாணமாகி இரண்டு வருஷங்கள் முழுசாக ஆகவில்லை. அதற்குள் அந்த 'ஸ்டாட்டிஸ்டிக்ஸ்' பி. ஏ. வுக்கு அவ்வீட்டின் பொருளாதாரத்தில் மிகுந்த அக்கறை. எத்தனையோ வருஷங்களாக ஏழைப் பிள்ளைகள் இரண்டு பேருக்குக் கொடுத்துவரும் பொருளுதவி, வேலைக்காரர், பால்காரனுக்கு இருக்கும் சலுகை எல்லாமே தண்டம் 'வேஸ்ட்' என்று ஒரு பாட்டம் கணவனிடன் குசுகுசுவென்று முணுமுணுத்துவிட்டு ஓய்வாள் மேனகா.

"பார்த்தீர்களா! பார்த்தீர்களா! ஒரு ரூபாய் போதாதென்று கால் படி புழுங்கல் அரிசி நொய் வேறே தானம் செய்கிறதை?..." காதளவு நீண்ட தன் விழிகளைச் சுழற்றிக் கடைக்கண்ணால் கணவனைக் கடாட்சித்தவாறு நவின்றாள் அவள். ரவி மனைவியின் இடுப்பில் கையைவளைத்து அணைத்தவாறுபேசினான்.

"உனக்கு ஒன்றும் தெரியாது மேனகா. பாட்டி செய்யும் எந்தக் காரியத்திலும் ஏதாவது பொருள் பொதிந்து இருக்கும்...."

"ஆமாம்... பெரிய..." மேனகா வார்த்தையை முடிப்பதற்குள் வேலைக்காரி பச்சைக்குச் சிறிய செம்பில் சுடச்சுடக் காப்பியைக் கொண்டு வந்து வைத்தாள் மீனாட்சிப் பாட்டி.

"குடித்துவிட்டு வேலை செய்யடி. இந்தக் குளிரில் வெறும் வயிற்றுடன் வேலை செய்ய முடியாதுடி அம்மா... பல் விளக்கினாயோ இல்லையோ?"

"விளக்கிட்டேன் பெரியம்மா. நீங்க சொன்னபடி பொட்டு கூட வச்சிருக்கேன் பாருங்க..."

வேலைக்காரி பச்சையம்மா தன் முகத்தைத் திருப்பித் தெரு விளக்கு ஒளி விழும் பக்கமாக நின்று காட்டினாள்.

"அதுதான் பார்க்க லட்சணமா இருக்கு."

"மகா லட்சணத்தைக் கண்டுவிட்டாள் உங்கள் பாட்டி" என்று முனகினாள் மேனகா.

"கண்டுவிட்டார் உங்கள் பாட்டி..." என்று திருத்திவிட்டு, ரவி, "பாட்டிக்கு எப்பொழுதுமே பொட்டு பெரிதாக வைத்துக் கொள்ள வேண்டும். எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. தாத்தா இருந்தவரையில் நெற்றியில் அகலக் குங்குமமும் அதன்மீது விபூதியுமாகத்தான் பாட்டி இருப்பாள்" என்றான்.

மேனகாவுக்கு ஒன்றும் கேட்கப் பிடிக்கவில்லை. தொப்பென்று படுக்கையில் போய்ச் சாய்ந்தாள்.

"திரும்பவும் தூங்கப் போகிறாயா என்ன? மணி ஐந்தாகி விட்டது..." என்று அவள் வாயைக் கிண்டினான் ரவி.

"ஆறரை வரைக்கும் சுகமாக ஒரு தூக்கம். இந்த விடியற்காலத்தில் வரும் தூக்கம் இருக்கிறதே, இதற்கு இணை இதுவேதான். என்ன அழகழகான கனவுகள்!" என்றவாறு தன் தந்தக் கைகளைத் தலைக்கு மேல் வைத்துச் சோம்பல் முறித்தவாறு கண்களை மூடிக் கொண்டாள் மேனகா.

ஆனால் ரவிக்குத் தூக்கம் வரவில்லை. மெதுவாக ஓசைப்படாமல் கீழே இறங்கிப் போனான்.

பாட்டி இதற்குள்ளாகக் குளித்துவிட்டுப் பூஜையறைக்குப் போய்விட்டாள். பூஜையறை அழகழகாக அரிசி மாக்கோலங்களினால் எழிலாகக் காணப்பட்டது. வெண்கல விளக்கில் முத்துச் சுடர் போல் தீபம் எரிந்துகொண்டிருந்தது. விளக்கின் முகத்தில் பாட்டி சிவப்பாகக் குங்குமத் திலகம் இட்டிருந்தாள்.

காலை வேளையில் ஊதுவத்திகளின் நறுமணமும் விளக்கின் பொன்னொளியும் பரவசமூட்டுவனவாக இருந்தன. வாயிற்படியில் நிற்கும் பேரனைத் திரும்பிப் பார்த்தாள் பாட்டி.

## அங்கும் இங்கும்




''ஏண்டாப்பா! நீ எழுந்து வந்து ரொம்ப நாழிகையாச்சோ? பல் தேய்ச்சுட்டியோ?''

''ஆச்சு பாட்டி!'' என்றான் ரவி.

''போய் நெற்றிக்கு இட்டுக்கொள். நான் காப்பி கலந்து எடுத்து வரேன்.'' மீனாட்சிப் பாட்டி குறுகியபடி விசையாக அடுப்பங் கரைக்கு நடந்தாள்.

ரவி அவளை மௌனமாகப் பின்தொடர்ந் தான். பேரனின் கையில் ஆவி சிதறும் காப்பியைக் கொடுத்துக் கொண்டே ''பால் வேண்டுமா இல்லை, டிகாக்ஷன் சர்க்கரை வேண்டுமா பார். உன் அம்மாவுக்குப் பான கம் போல் சர்க்கரை போட வேண்டும். உன் தாத்தாவுக்குச் சர்க்கரையே கூடாது....'' என்று விவரித்தாள்.

ரவி சிரித்துக் கொண்டே காப்பியை உறிஞ் சிப் பருக ஆரம்பித்தான். அவன் அப்படி எச்சிற்படுத்திச் சாப்பிடுவதைப் பார்த்த பாட்டியிடமிருந்து கேவலம் ஒரு முகச் சுளிப் புக்கூட வெளிவரவில்லை. அதைக் கவனிக்காத வள்போல் போய்விட்டாள் அவள்.

**பொ**ழுது நன்றாக விடிந்து விட்டது. மாடியிலிருந்து மேனகா கீழே இறங்கி வந்தாள். அடுப்பங்கரைக்கு வந்து உட்கார்ந் தவளின் முன்பு சுடச் சுடக் காப்பி எடுத்து வைத்துவிட்டு இரண்டு புடலங்காய்களை எடுத்து வைத்தாள் பாட்டி.

''கொஞ்சம் இதைப் பொடிப் பொடியாக நறுக்கி வைத்துவிடடி அம்மா. உன் மாமி யாருக்கு அரை உப்புப் போட்டு கூட்டுச் செய்யவேண்டுமாம். என்னவோ பிரஷராமே? உப்பு சேர்க்கக் கூடாதாம்....''

''எனக்கு இந்தக் காயைப் பார்த்தாலே வயிற்றைக் குமட்டுகிறது பாட்டி. சப்பு சப்புன்னு என்ன கூட்டோ?'' என்று அலுத் துக் கொண்டே அரிவாள்மணையின் முன் உட்கார்ந்தாள் மேனகா.

பாட்டிக்குச் சட்டென்று நினைவுக்கு வந் தது; மேனகாவுக்கு மசக்கை என்று. மூன்று குறைப் பிரசவங்களுக்கு அப்புறம் நாலாவது; டாக்டர் அவளை அசங்கக் கூடக் கூடாதென் கிறாளாம். நேற்று டாக்சியில் பேரனும் அவளும் சினிமாப் பார்த்துவிட்டு வந்ததும் அவன் அவளைக் கைத்தாங்கலாக மாடிக்கு அழைத்துப் போனதும் மருமகன் கணேசன் இப்படியாவது சினிமாப் பார்க்கவில்லை என்று யார் அடித்தார்கள் என்று முணுமுணுத்த தும் பாட்டி மட்டும் பரிந்து பேசாமல் இருந்தால் அப்பாவுக்கும் பிள்ளைக்கும் சிறு பூசல் வந்திருக்கும்.

''கிடக்கிறது விடு. உனக்கு உப்பு உறைப் பாகத் துவையல் அரைத்துப் போடுகிறேன்.''

''இரண்டு மூன்று இனுசுகள் எதற்குப் பாட்டி இந்த விலைவாசியில்?'' என்றாள் புள்ளி விவரம் தெரிந்த அந்தப் பெண்.

''விலையும், வாசியும் அப்படித்தான் இருக் கும். சாப்பிடுகிற காலத்தில், உடுத்துக்கொள் கிற நாட்களில் அதது அனுபவிக்க வேண்டு மடி பெண்ணே'' என்றாள் பாட்டி.

மேனகா அன்றே கணவனிடம் பாட்டி யின் கொள்கைகளைப் பற்றிக் கேலியாகவும்,

பொருளாதார ரீதியாகவும் சொல்லிச் சொல்லிச் சிரித்தாள்.

மரகதம் இதையெல்லாம் காதில் போட்டுக் கொள்கிறதில்லை. வேளாவேளைக்குத் தன்னைக் கவனித்துச் செய்ய அந்தக் கிழமாவது இருக்கிறதே என்று ஆறுதல் அடைந்து வந்தாள். இடையிடையே, கணவரின் குத்தல் மொழிகள், கண்டனங்கள் இவைகளுக்கும் ஆளாளுள்.

பொதுவாகச் சொல்லுமிடத்து மீனாட்சிப் பாட்டியின் மனத்தை அந்த வீட்டார் புரிந்து கொள்ளவில்லை.

நாட்கள் நகர்ந்தன; இல்லை இந்த அவசர யுகத்தில் பறந்தன. மீனாட்சிப் பாட்டியின் உள்ளம் இளமையாக இருந்தாலும் உடல் மரைகள் கழன்ற யந்திரமாக ஆட்டம் காண ஆரம்பித்து விட்டது.

''பாட்டி போய்விட்டால் யார் இந்தக்குடும்பத்தைக் கட்டி மேய்ப்பார்கள் மேனகா?'' என்றான் ரவி மனைவியின் அழகைப் பருகியபடி. பாட்டியின் பராமரிப்பில் மேனகா நன்றாகச் செழுமையாகத் தாய்மையின் பூரிப்பில் ஆரோக்கியத்துடன் இருந்தாள்.

''பாட்டி குட்டை குழப்பிக் கொள்கிற மாதிரி விடிய நாலு மணிக்கே எழுந்திருந்து ஒன்றும் அவஸ்தைப்பட வேண்டாம். எல்லாம் 'மாடர்னா'கச் செய்து ஜமாய்த்துவிடுவேன்'' என்றாள் மேனகா.

மீனாட்சிப் பாட்டி அன்று விடிந்தபிறகு கூட எழுந்திருக்கவில்லை. பால்காரனுடன் பேசும் சத்தம் கேட்காமல் மேனகா கண்களை மாடியிலிருந்து கூர்மையாகச் செலுத்தியபடி ஒரு நோட்டம் விட்டாள். கொல்லைக் கதவு சாத்தியபடி இருந்தது. எல்லோரும் கீழே இறங்கி வந்து பார்த்தார்கள். பாட்டி படுக்கையில் முனகியபடி படுத்திருந்தாள். எல்லாமே போட்டது போட்டாற்போல் இருந்தன. அதைத் தேடி, இதைத் தேடி மேனகா ஓடியாடிக் காப்பி போட ஆரம்பித்தாள். மரகதம் கீழே இறங்கி வந்துதான் அன்று காப்பி சாப்பிட வேண்டியிருந்தது. பால்காரன் தன் விருப்பம் போல் வர ஆரம்பித்தான். பச்சையம்மாள் மட்டும் என்ன? இவர்களின் மனத்தைப் போலவே வேலைகளில் அலட்சியமும், பராமுகமும் மேலிட்டிருந்தது.

ரவிக்கு மட்டும் அந்தப் பூஜை அறையைப் பார்த்ததும் கண்களில் கண்ணீர் வந்து விட்டது. உஷத் காலத்தில் விளக்கின் பொன்னொளியும், நறுமணமுமாக அங்கே எத்தனை தெய்வீகம் ததும்பி வழியும்?

அப்பா என்ன செய்கிறார்? சாய்வு நாற்காலி தேயும்படி படுத்துக்கொண்டு தினசரிகளை ஆரம்ப முதல் இறுதிவரையில் புரட்டிப் புரட்டிப் பார்த்தவாறு மாமியாரை ஏதாவது சொல்வது அவர் வழக்கமாகப் போய் விட்டது என்று நினைத்தான்.

பாட்டி நாலைந்து தினங்கள் ஒன்றும் சாப்பிடாமல், அதிகம் பேசாமல் படுத்திருந்தாள். முகம் துல்லியமாக இருந்தது. நோயின் பயங்கரமோ, கொடுமையோ எதுவும் இல்லை. யாராவது ஏதாவது கேட்டால் அவசியமாக இருந்தால் பதில் கூறினாள்.

''அம்மா... அம்மா... எங்களுக்காக இத்தனை காலம் உழைத்தாய். உன்னை உட்கார வைத்து ஒரு வேளை நான் சமைத்துப் போடவில்லை. வியாதிப் பிண்டமாக மாறிவிட்டேன். உனக்கு ஏதாவது ஆசை இருந்தால் சொல்....'' என்று . மரகதம் கண்ணீர் விட்டுக் கதறினாள்.

பாட்டி அலுப்புடன் சிரித்தாள். பிறகு மெதுவாக, ''அடியம்மா! உனக்கு இனிமேல் யார் செய்வார்கள் என்று நான் கவலைப் படுகிறேன். அழாதே மரகதம். எனக்கு என்ன ஆசை இருக்கப் போகிறது? இந்த வீட்டில் என்னைப் புரிந்து கொண்டவன் ரவி ஒருத்தன்தான். அதோ பாரடி! நான் படுத்த நாளிலிருந்து அவன் தவறாமல் விடியற்காலம் எழுந்திருப்பதும், சுவாமிக்கு விளக்கேற்றுவதும் எவ்வளவு இன்பமாக இருக்கிறது. அதுதான் என் ஆசை'' என்றாள்.

அதன் பிறகு, இரண்டு நாட்களுக்கு அப்புறம் பாட்டி போய்விட்டாள்.

ஊர் விழித்துக் கொண்டாலும் இல்லாவிட்டாலும் ரவி விழித்துக் கொண்டு கீழே இறங்கி வந்து விடுவான். கொல்லைக் கதவைப் பால்காரனுக்குத் திறந்து வைப்பான். பல் துலக்கித் திருநீறு அணிந்து சுவாமிக்கு விளக்கேற்றுவான். பாட்டி விண்ணிலிருந்து அவனை வாழ்த்துவது போல் ஓர் எண்ணம்; நம்பிக்கை. நம்பிக்கைதானே மனிதனை வாழ வைக்கிறது?





## ஸரோஜா ராமமூர்த்தி

மதுரம் அம்பாள் சந்நிதியில் விளக்கேற்றி விட்டுத் தூணின் மாட்டியிருந்த எவர்ஸில்வர் கிண்ணத்திலிருந்து குங்குமம் எடுத்து நெற்றியில் இட்டுக் கொண்டாள். விளக்கேற்றிச் சிறிது நேரம் ஆகியிருந்தது. அன்று விசேஷ தினம் எதுமில்லை: கோயிலில் கூட்டமுமில்லை. அர்ச்சகர் அவசரமாக அபிஷேகம் பண்ணி, எண்ணெய்க் கறை படிந்த சிவப்புப் புடவையை அம்மனின் இடுப்பில் சுற்றி, கழுத்தில் நந்தியாவட்டை மாலையைப் போட்டுவிட்டுப் போய்விட்டார்.

இழுத்துப் பூட்டியிருந்த கதவிடுக்கின் வழியாகப் பார்வையைச் செலுத்தினாள் மதுரம். காலம் காலமாக முகத்தில் தேக்கி வைத்த புன்னகை இன்னும் எத்தனையோ காலத்துக்கு நிலைத்திருக்கும் என்பது போல் அம்பாள் சிரித்துக் கொண்டிருந்தாள். உதடுகளைச் சுழித்து, கண்கள் கருணை பெய்ய, இந்த உலகத்தில் நடக்கும் நியாய அநியாயங்களை, தர்ம அதர்மங்களைப் பார்த்து அவள் சிரித்துக் கொண்டேயிருக்கிறாள். பின்னே, வருத்தப் பட்டால், சீறி எழுந்தால், இந்த உலகம் தாங்குமா ?

''சிரிக்கிறாயேடி அம்மா. உனக்கு எப்பொழுதும் சிரிப்புத்தானா?'' மதுரம் சந்நிதியில் யாருமில்லாத தைரியத்தில் சற்று உரக்கவே இந்த வினவை எழுப்பினாள்.

''நான் சிரிக்கலையே அம்மா. இங்கே வந்து பார். பூச்சியெல்லாம் தலைகீழாகத் தொங்குறது அம்மா!'' என்று கத்தினாள் விஜி. குழந்தை அங்கிருப்பதை மறந்து பேசி விட்டதை நினைத்து வெட்கப்பட்டாள் மதுரம்.

விஜியும் கண்களை மலர்த்தி வெளவால்கள் தலை கீழாகத் தொங்குவதைப் பார்த்துக் கொண்டிருந்தாள். மதுரம் திருச் சுற்றை வலம் வந்து விட்டு, ''வாடி, போகலாம்!'' என்று அவளைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு வெளியே வந்தாள்.

ஊருக்கு மையமாக அமைந்த தாமரைக் குளமும், அதன் நடுவில் நீராழி மண்டபமுமாக ஊர் அழகாக அமைதியாக இருந்தது. மாலை நேரங்களில் ஊரின் அமைதியைக் குலைக்காமல் கோயிலிலிருந்து நாதஸ்வரத்தின் இசை காற்றில் இழைந்துவரும். அந்தக் கீதம் புண்பட்டுப் போன மதுரத்தின் நெஞ்சத்தைத் தடவி ஆறுதல் அளிக்கும். குறைந்தது அரை மணி நேரமாவது தன் துயர் மறைந்து மனச்சாந்தி பெறுவாள் அவள்.

இன்று அந்த வழக்கத்துக்கு மாறாக ஒலி பெருக்கி ஒன்று அலறிக் கொண்டிருந்தது. 'போனால் போகட்டும் போடா'விலிருந்து புதிதாக ரிலீஸ் ஆன சினிமாப் பாட்டுகள் வரை அங்கே அடிபட்டுக் கொண்டிருந்தன.

மதுரத்துக்குத் திடுமென்றுதான் அன்று மாதர் சங்கக் கூட்டத்துக்குப் போக வேண்டியது நினைவுக்கு வந்தது. கிராமங்களிலே மாதர் நலம் பேணுவதற்காக அந்த ஊரிலும் சங்கம் ஆரம்பிக்கத்தான் ஒலிபெருக்கியும்,

சங்கீதப் பேராசிரியை: சங்கீதம் ஒரு குடும்பத்தை இன்பத்தில் ஆழ்த்துகிறது. எப்படி?



மாணவி: எந்தக் காரியம் சம்பந்தமாகவும் கணவன் மனைவிக்குப் பக்கவாத்தியம் வாசிப்பதால்!

பாட்டுமாக அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது.

மதுரம் நேராகச் சங்கக் கூட்டத்துக்குப் போய் உட்கார்ந்தாள். கிராமத்தினருக்குப் பால்வாடி டீச்சரிடம் மிகவும் மதிப்பு. ஒழுகும் மூக்கும், பரட்டைத் தலையும் உள்ள குழந்தைகளைத் துப்புரவாக மாற்றி இரண்டு வேளைகள் தலைவாரவும் குளிக்கவும் பழக்கம் ஏற்படுத்திய பெருமை மதுரத்தைச் சார்ந்தது. அடிக்கடி மாதர் நல இலாகா தலைவி மதுரத்தைப் பாராட்டிப் பேசுவாள். ''ஓட்டிவாக்கம் கிராமத்திலே பால்வாடியும், தையல் சென்டரும் நன்றாக 'ஓர்க்' பண்ணுது. மதுரம் டீச்சர் மாதிரி நாலு உண்மைத் தொண்டர்கள் இருந்தால், கிராமத்தைச் சீக்கிரம் முன்னுக்குக் கொண்டு வரலாம்'' என்று அந்த அம்மாள் ஏதாவது பேசிக் கொண்டேயிருப்பாள்.

எந்தப் பெருமையையும், சிறுமையையும் மனமுவந்து ஏற்றுக் கொள்ளக் கூடிய பக்குவத்தை மதுரம் பெற்றிருந்தாள். ஓட்டிவாக்கம் கிராமம் அவள் சேவையை ஓஹோவென்று புகழ்கிற பெருமையை, அவள் சில வருஷங்களுக்கு முன்பு அனுபவித்து விட்டு வெளியே வந்த சிறுமைக்கு ஈடு கட்ட முடியவில்லை.

பெருமை பாட்டுக்குப் பெருமை. சிறுமை பாட்டுக்குச் சிறுமை! கணவன் மனைவியைத் தள்ளி வைக்க ஆயிரம் காரணங்கள் உண்டு. மனைவி கணவனைத் தள்ளி வைக்க இன்னமும் காரணங்கள் அகப்படாது. சகித்துப் போகவே பழக்கப்பட்டுவிட்ட நம் நாட்டுப் பெண்கள் எந்தச் சட்டம் வந்தாலும் அதைத் தங்களுக்குச் சாதகமாக, ஆயுதமாகப் பயன்படுத்திக்கொள்ளத் தயங்குகிறார்கள்.

அசோக வனத்தில் அன்னையின் பவித்திரமான தன்மையை நேரில் கண்டு வந்து உரைத்த அனுமான் எதிரிலேயே ஸ்ரீராமன் தீயைச் சுட்டிக் காட்டி அதில் அவளைக் குளிக்கச் செய்த நாட்டிலே பெண்களின் சகிப்புத் தன்மைக்கு நூற்றுக்கு நூறு மார்க்குகள் போட்டுத்தான் ஆக வேண்டும்.

மதுரம் ஒரு குழந்தையுடன் வெளியே துரத்தப்பட்டு வந்து விட்டாள். காரண காரியங்களை ஆராய்ந்து கொண்டிருக்க வேண்டாம். அவரிடம் ஓர் அசைக்க முடியாத நம்பிக்கை உண்டு. எங்கே, எந்தத் தொழில் செய்து வாழ்ந்தாலும் தன்னுடைய பெயருக்கு, தன்னுடையவரின் பெயருக்கு இழுக்கு இல்லாமல் வாழ வேண்டும் என்கிற உறுதியான எண்ணத்தில் மதுரம் தன்னந்தனியே உறவினர் யாருடைய தயவும் இன்றி இந்தக் கிராமத்தில் ஒதுங்கிக் கொண்டாள்.

மூன்று நான்கு வருஷங்களாக அவளை யாரும் வந்து பார்க்கவில்லை; அதைப் பற்றி அவள் கவலைப்படவும் இல்லை.

காலையிலே வீட்டுக் கூரை மீது காக்காய் வந்து உட்கார்ந்து கூவியது. வீட்டுக்காரர் மகள், ''அக்கா! அக்கா! உங்கள் வீட்டுக்கு விருந்தாளி வருவாங்க. அதுதான் காக்கா கத்துது'' என்று கூறியதும் மதுரம் சிரித்துக் கொண்டாள். 'என் வீட்டுக்கு விருந்தாளி யார் என்னைத் தேடி வரப் போகிறார்கள்?' மெல்ல முணுமுணுத்தவள் பிறகு அதை மறந்து விட்டாள்.

மாதர் சங்கக் கூட்டம் ஆரம்பமாயிற்று. பேச்சுகள், முழக்கங்கள் வழக்கம் போலப் பேசப்பட்டன; முழங்கப்பட்டன.

மதுரம் கூட்டத்தின் சுவாரசியத்தில் ஈடுபட்டிருந்தவள் திரும்பிப் பார்த்த போது விஜியைக் காணோம். பரபரப்புடன் எழுந்து தெருவுக்கு வந்ததும் அங்கே விஜியின் கையைப் பிடித்தவாறு ஓர் இளைஞன் நின்றிருந்தான்.

மதுரம் சிறிது நேரம் அவனை உற்றுப் பார்த்தாள். எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் அவனை அவளுக்கு அடையாளம் தெரிய வில்லை.

''என்னைத் தெரியவில்லையா மன்னி, உங்களுக்கு...?''

மதுரம் குழம்பித்தான் போனாள். அவளுக்கு மைத்துனனே கிடையாது. அவள் கணவனுடன் உடன் பிறந்தவர்கள் யாருமில்லையே...?

விஜி அவன் கையைப் பிடித்துச் சுழற்றியவாறு நின்றிருந்தாள். பெரிய பிஸ்கோத்துப் பொட்டலம் இடைத்த மகிழ்ச்சியில் அவள் ஒரு நாட்டியமே ஆடிக் கொண்டிருந்தாள்.

''வாருங்கள், வீட்டுக்குப் போவோம்... தெருவிலே பேச வேண்டாம்.....''

இருவரும் மௌனமாகவே நடந்தார்கள். தொலைவில் மாதர் உரிமைக் குரல் ஒலி பெருக்கியில் கேட்டுக் கொண்டிருந்தது.

''எந்த உரிமையை யார் பறித்து விட்டார்கள் மன்னி? பெண்ணுக்கு நம் புராண இதிகாசங்களில் இருக்கிற—கொடுத்திருக்கிற பெருமை வேறு எந்த நாட்டுக்கு....'' இளைஞனைப் பேச விடவில்லை மதுரம்.

''அதை யெல்லாம் பற்றி ஆராய வேண்டாம். இல்லாத உரிமைகளைத் தேடித் தரத்தான் சட்டங்கள் வந்திருக்கின்றன. இருக்கிற உரிமைகளை இழந்த பிறகுதான் இந்தச் சட்டங்கள் உதவிக்கும் வருகின்றன. உரிமைக் குரல் அதிகம் ஒலிக்க ஒலிக்க உரிமை இழப்பும்

அதிகமாகத்தான் இருக்கும்...... அது கிடக்கிறது. உங்களை யார் என்றே எனக்குத் தெரியவில்லையே?...''

* * *

இருவரும் படியேறி வீட்டுக்குச் சென்றார்கள். இளைஞன் அவள் அறையைக் கண்ணோட்டமாகத் துழாவினான். மிக மிகச் சாதாரண அறை. சமையலுக்குத் தேவையான சில உபகரணங்கள். பூஜை மாடம். ராம பட்டாபிஷேகப் படம். சிறிய விளக்கு.

''என்ன பார்க்கிறீர்கள்? ஏக பத்தினி விரதனாகிய ஸ்ரீராமனிடம் எனக்கு அளவு கடந்த ஈடுபாடு....'' என்றாள் மதுரம்.

''ராமனைவிட சீதையிடத்தில் தான் எனக்குப் பக்தி அதிகம். சீதையில்லா விட்டால் ராமனின் புகழ் ஓங்கியேயிருக்காது......''

''பார்த்தீர்களா? இந்த வாதப் பிரதிவாதங்களெல்லாம் வேண்டாம். ராமனை ராமனாகவும், சீதையைச் சீதையாகவும் அப்படி அப்படியே ஏற்றுக் கொள்வோம். நம் புதிய விமரிசனம் ஒன்றையும் ராமாயணத்தில் திணிக்க வேண்டாம். நீங்கள் எப்படி என் கணவரின் தம்பியாகிறீர்கள்? அவருக்கு.....''

''மன்னி! நான் உங்கள் ஒன்றுவிட்ட இளைய மாமனாரின் மகன். உங்கள் கலியாணத்தில் தாலி கட்டுவதற்கு முன்பே உங்கள் தலைப்பையும், அண்ணாவின் உத்தரீயத்தையும் முடித்தவன்..... அந்தச் சம்பவத்தையும், இப்பொழுது நீங்கள் இருக்கிற நிலையையும் பார்த்தால் வருத்தமாக இருக்கிறது. உங்களுக்கு நினைவு இருக்கிறதா என்னைப் பற்றி?''

* * *

மதுரம் பல வருஷங்கள் பின்னோக்கி மனத்தைச் செலுத்தினாள். அவன் கூறிய சம்பவம் நினைவுக்கு வந்தது. இன்னொரு சம்பவமும் தோன்றியது. மணமான தம்பதி சாப்பிடும்போது இரண்டு இலைகளையும் மாற்றி இழுத்து விட்ட பையன் இவனே தான். அப்பொழுது பையன்தான். பத்து வருஷங்கள் ஆகவில்லையா?

''நினைவுக்கு வந்து விட்டதா?'' என்று இளைஞன் கேட்டான்.

''ஓ! நன்றாக வந்து விட்டது. பெரியவனாக வளர்ந்து விட்டாய்'' என்றாள் மதுரம்.

பிறகு அவள் அங்கிருந்து எழுந்து சென்று எலுமிச்சம் பழத்தைப் பிழிந்து சர்க்கரை போட்டுக் கொண்டு வந்து வைத்தாள். குழந்தை விஜியும் சித்தப்பாவிடம் ஒட்டிக் கொண்டாள்.

புண்பட்ட நெஞ்சுக்கு இந்த உறவு ஆறுதலாக இருந்தது. இளைஞன் விடைபெற்றுக் கொண்டு போனான்.

கூட்டம் முடிந்து வீட்டுக்கார அம்மாளும், மற்றவர்களும் வந்தார்கள். இளைஞன் வந்தது, இருவரும் உள்ளே சென்று பேசியது அனைத்தும் கவனித்தார்கள்.

முகத்தை ஒரு மாதிரியாக வைத்துக் கொண்டு அன்று பேசாமல் இருந்து விட்டார்கள். பதினைந்து நாட்கள் கழித்து மறுபடியும் விஜி பட்டுச் சொக்காயும், பிஸ்கோத்துப் பொட்டலமுமாகப் பள்ளியிலிருந்து ஓடி வந்தாள்.

தொலைவில் அந்த இளைஞன் வந்து கொண்டிருந்தான்.

''காம்ப் போயிருந்தேன் மன்னி. அண்ணாவைப் பார்த்தேன். 'வருகிற சம்பளம் போதவில்லையடா. அவளுக்கு — அதுதான் அவர் இளையாளுக்கு வேறு மூன்று குழந்தைகள் — சரியாகக் குடித்தனம் பண்ணத் தெரியவில்லை. விலைவாசி ஏறிவிட்டது' என்றார்......''

''என்னைப் பற்றி ஏதாவது அவரிடம் பேசி வைத்தாயா என்ன?'' என்று கேட்டாள் மதுரம்.

''சே.... சே.... இதற்குள்ளாகவா? — மனுஷன் இன்னும் கொஞ்சம் திண்டாட வேண்டாமா?''

மதுரம் பேசாமல் இருந்து விட்டாள். கணவன் கஷ்டப்படுகிறானே என்று மனம் அடித்துக் கொண்டது. படட்டும், நன்றாக வேண்டும் என்றும் தோன்றியது.

இளைஞன் சென்ற பிறகு வீட்டுக்கார அம்மாள் வந்தாள்.

''இந்தாம்மா, டீச்சர்! யார் அந்தப் பையன்?'' என்று சுற்றி வளைக்காமல் நேரடியாகக் கேட்டு விட்டாள்.

### கலைவாணரின் ஹாஸ்யம்

ஒரு முறை கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் அவர்களுக்கு, திருச்சி ஜில்லா ஜட்கா வண்டிக்காரர் சங்கத்திலிருந்து, தங்கள் சங்க ஆண்டுவிழாவுக்குத் தலைமை வகிக்குமாறு அழைப்பு வந்தது. கலைவாணர் அதை ஏற்றுக் கொண்டார். ஆண்டுவிழாக் கூட்டம் தொடங்கியது. என். எஸ். கே. அவர்களும் பேச்சைத் தொடங்க எழுந்தார். அருமையான பேச்சாளரல்லவா கலைவாணர்? வந்திருந்தவர்களுக்குக் கலைவாணர் வாயின் மேலேயே கண். என். எஸ். கிருஷ்ணன் தம் பேச்சை ஆரம்பித்தார். ''உங்கள் சங்கக் கூட்டத்துக்குத் தலைமை வகிக்கும் வாய்ப்புக் கிடைத்ததில் மிக்க மகிழ்ச்சி...நானும் எங்கெல்லாமோ சுற்றியிருக்கிறேன். ஆனாலும் உங்களைப் போல் பரந்த நோக்கம் யாருக்கும் இல்லை. எங்கேயும் பொறாமையும் பூசலும் உள்ள இந்தக் காலத்தில் உங்களிடத்தில் மட்டும் எல்லாரும் முன்னுக்கு வர வேண்டும் என்ற எண்ணம் இருக்கிறது. ஏனென்றால் நீங்கள் யார் வண்டியில் ஏறினாலும் சொல்லும் முதல் வார்த்தை, 'முன்னுக்கு வாங்கோ! முன்னுக்கு வாங்கோ!' என்பதுதான். இந்தக் காலத்திலே யார் இப்படிச் சொல்கிறார்கள்?'' என்றார் கலைவாணர் என். எஸ். கே.



மதுரம் உறவு முறையை விவரித்தாள். வீட்டுக்கார அம்மாள் திருப்தியடையவில்லை. நேற்று வரையில் மதுரமாக இருந்த மதுரம் டீச்சரைப் பற்றி ஊரில் என்னென்னவோ அடிபட்டது.

மதுரத்தின் உள்ளம் எரிந்தது. கணவனால் நிராகரிக்கப்பட்டாலும் அவளுடைய பவித்திரமான திறமையைக் காத்துக் கொண்டு மறைமுகமாக அவள் அவனுக்குப் பெருமையைத் தேடித் தருவதில்தான் அவளுக்குச் சிறிதளவாவது ஆறுதல் ஏற்படக் கூடும்.

இதென்ன கிணறு வெட்டப் பூதம் கிளம்பிய மாதிரி? இவனை யார் இங்கே வரச் சொல்லி அழைத்தார்கள்?

மதுரம் துயரை விழுங்க முடியாமல் தத்தளித்த வண்ணம் கோயிலுக்குச் சென்றாள். அம்மன் சந்நிதிக்கு விளக்கேற்றி விட்டு, திருச்சுற்றை வலம் வந்த பிறகு வெளியே வந்தாள்.

கோபுர வாசலில் நிழல் தட்டியது. இளைஞன் நின்றுகொண்டிருந்தான். அவன் இருபத்திரண்டு பிராயத்தினன். மதுரம் முப்பது பிராயத்தினள்.

உலகத்தின் கண்கள் குருடாகிக் கிடந்தன. தனியொருத்தியின் வாழ்வின் எதையும் பிணைத்துப் பார்க்க முடியும் உலகத்தால். மதுரம் அவனை நிமிர்ந்து பார்த்தாள்.

''என்ன அப்பா சும்மா வந்துகொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டாள் மதுரம்.

இளைஞன் அதிர்ந்து போனான்.

''மன்னி! தாங்கள் ஏதோ தவறாக...''

''தவறுமில்லை.. மண்ணுமில்லை. இதோ பார். நான் இதன் புனிதத்துக்குக் கட்டுப்பட்டவள். இது என் கழுத்தில் துலங்கும் வரை தனியாகவே காலத்தைக் கடத்திவிட முடியும் என்கிற உறுதியுள்ளவள். என்னிடம் அன்பு — பக்தி எதுவானாலும் சரி உள்ளவனாக இருந்தால் என்றாவது ஒரு நாள் உன் அண்ணனுடன் இங்கே வா. இல்லை, நான் அவரிடம் சென்று சேர்ந்த பிறகு வந்து பார். அதுவரையில் இங்கு வராதே...'' என்று கண்டிப்பான குரலில் கூறினாள் மதுரம்.

கோபுர விளக்கின் ஒளியில் மதுரத்தின் நிழல் பூதாகாரமாகத் தெரிந்தது. ஏதோ ஒரு சக்தி ஆணையிடுவது போல் இருந்தது. செந்தழலைப் போல் அவள் கண்கள் ஒளிர்ந்தன.

அவன் அவளைத் தழலாகவே கண்டான். திரும்பி நடந்தான்.



# காமாட்சி விளக்குகள்

மின்சார விளக்குகள் வருவதற்கு முன் இலுப்ப எண்ணெய் அல்லது ஆமணக்கு எண்ணெய் (விளக்கெண்ணெய்) ஊற்றி அறைக்கு அறை குத்து விளக்குகள் ஏற்றி வைப்பது வழக்கம். முன் அறையில் மாத்திரம் பெரிய ஸ்தம்பக் குத்து விளக்கு ஏற்றி வைப்பார்கள். அதில் திரிகள் பல எரிந்து கொண்டிருக்கும். சாதாரணக் குத்து விளக்கில் ஒரே ஒரு திரிதான்.

குத்துவிளக்கில் படிப்பது கண்ணுக்குக் கெட்டது என்பது இந்தக் காலத்துக் கருத்து. ஆனால் இலுப்ப எண்ணெயில் எரியும் குத்துவிளக்கில் வாசிப்பது கண்ணுக்கு நல்லது என்பார் மூதாதையர். உண்மையிலேயே மின்சார விளக்கில் வாசிப்பது கண்ணுக்கு எரிச்சலை உண்டாக்குகிறது. அதன் பிரகாசம் எவ்வளவு அதிகமாக இருக்கிறதோ அந்த அளவுக்கு நம் கண்களுக்குக் கேடு வரும்.

இன்றைக்குக்கூடத் தமிழ் நாட்டின் அநேக வீடுகளில் குத்துவிளக்குகள் உபயோகிக்காமல் மூலையில் கிடக்கும். கார்த்திகைத் தீபத்தன்று மண்ணினால் செய்த சிறு விளக்குகளைக் கடையில் வாங்கி ஏற்றி வைக்கிறார்கள். சில குடும்பங்களில் தீபாராதனை நடத்துவது வழக்கம். அப்பொழுது குத்துவிளக்கு ஏற்றி வைக்கப்படும்.

கோவில்களில் மூலஸ்தானங்களில் தினந்தோறும் ஏற்றி வைக்கும் குத்து விளக்குகளும் உண்டு. சங்கற்பித்த விளக்குகளுக்குப் பக்தர்கள் தேவதானம் செய்து வைப்பார். பசு, எருமை தானம் செய்தால் அவை மூலம் கிடைக்கும் நெய் நித்திய தீபங்களுக்குப் பயன்படுகின்றது.

ஆசார விதிகளுக்குரிய விளக்குகள் பல வகைகளில் உள்ளன. லக்ஷ்மி, நாகம் போன்ற விளக்குகள் மிகவும் பாராட்டப்படுகின்றன. தீபங்களை ஸ்தம்பங்களில் வைப்பது சகஜம். சிலவற்றை மூலஸ்தானத்தில் தொங்கவும் விடுகின்றனர்.

காமாட்சி விளக்குகள் என்று கடலூரில் செய்கிறார்கள். (மேல் படம்) பித்தளை அச்சுக்களை வைத்துக் கொண்டு குத்து விளக்குகளின் பகுதிகளை உருவாக்கி வார்ப்படம் செய்யப்படுகிறது. இந்தக் குடிசைத் தொழிலுக்கு அரசினர் ஆதரவு தேவை.

— அன்புமணி



ஊர் பழைமையானது. ஊரில் வசிக்கும் அந்த இரண்டு கிழவிகளும் பழைமையிலும் பழைமையானவர்கள். ஊரிலிருக்கும் கோவில் பழசுதான். கடவுள்? பழைமையானவர் என்றோ புதுமையானவர் என்றோ வரையறுத்துச் சொல்ல முடியாது. பழைமையான கோயிலுக்குள் புதுமையான நைலான் (ஜரிகை போட்டது) பாவாடை அணிந்து பழைமைக்குச் சான்றாகப் புதுமைக்கு வழிகாட்டியாக அம்பிகை காட்சி தந்து கொண்டிருந்தாள்.

ஊரில் மேற்கிலிருந்து கிழக்கே ஓடும் ஆறும் பழசுதான். அதன் அணைக்கட்டும், பாலமும் புதுசு. பழைய ஆற்றங்கரையில் இருந்த அமைதி, எளிமை மறைந்து போய்ப் புதிய பாலத்தின் மீது அடிக்கடி டிரான்ஸிஸ்டரின் ஒலியும் 'நடையா இது நடையா' என்று நம் இள

# வருவான் கண்ணன்

ஸரோஜா ராமமூர்த்தி



வல்கள் இளம் பெண்களைப் பார்த்துப் பாடுவதும் முற்றிலும் புதுமை என்றுதான் ஒப்புக்கொள்ள வேண்டும்.

அந்த இரண்டு கிழவிகள் மட்டும் காலத்தால் ஏற்பட்ட மாறுதல்களில் அடித்துக்கொண்டு போகாமல், அன்றுபோல் இன்றுவரை அள்ளிச் சொருகிய முடிச்சும், தொங்கும் கம்மல்களும், காலணாக் குங்குமமும், மஞ்சள் பூச்சுமாகத் துலங்கி வருபவர்கள். கிழவிகளுக்கு என்ன புதுமை வேண்டியிருக்கிறது என்கிறீர்களா? ஏன் வேண்டியிருக்காமல்? நாற்பது வயதானவர்களைப் பார்த்தால் அவர்கள் வயதை அறிந்துகொள்ள முடிகிறதா? அஜந்தாக் கொண்டையென்ன? சந்தணப் பவுடரின் மணமும், சருகுச் சேலையும் கட்டிக் கொண்டு தங்கள் வயதில் பாதியைக் குறைத்துக் கொள்ள அவர்கள் படுகிற பாடு சொல்லத்தரமன்று.

கிழவிகள் இரண்டு பேருமே ஒரே ஊரைச் சேர்ந்தவர்கள். எதிர் எதிர் வீட்டைச் சேர்ந்தவர்கள். ஊரின் நடு மையத்தில் அமைந்திருந்த ஆலயத்தின் மகோன்னத காலத்தைப் பார்த்தவர்கள். நாலு கால பூஜை யென்ன? தைப்பூசம், மாசி மகம், திருவாதிரை உற்சவங்களின் கோலாகலங்களைக் கண்டு களித்தவர்கள். தினம் தவறாமல் மாலை நேரங்களில் அந்தக் காலத்தில் இருவரும் கைகளில் எண்ணெய்க் கிண்ணங்களுடன் கோவிலில் ஆஜராகி விடுவார்கள். பிள்ளையார் சன்னிதி தொடங்கி நவக்கிரகங்கள் வரை இருவருமே ஒன்றாகச் சென்று வணங்கி வீடு திரும்புகிற வழக்கம். இப்பொழுதும் கோவில் இருக்கிறது. அந்த நாட்களின் வழக்கங்கள் இல்லை. குருக்களுக்கு வரும்படி போதவில்லையாம். எட்டுக் கோவில்களில் பூஜையாக வேண்டும். இங்கே சிவன் தலையில் தண்ணியை ஊற்றி விட்டு, அடுத்த தெரு விநாயகருக்குச் சதுர்த்தி அபிஷேகத்துக்கு ஓடிப் போய் விடுவார். இரவிலோ அடுத்த ஊர் மாரியம்மனுக்கு அலங்காரம் செய்தாக வேண்டும். பாவம், அவர்தான் என்ன செய்ய முடியும்? குடும்பத்தைக் கட்டி மேய்த்தாக வேண்டாமா?



வழக்கம்போல் கிழவிகள் கோவிலுக்குப் புறப்பட்டார்கள். சுவாமி தரிசனம் முடிந்ததும் ஆற்றோரமாக நடந்து ஆற்றங்கரை மண்டபத்தில் போய் உட்கார்ந்தார்கள். குமரிகள்தான் உலாவப் போக வேண்டும் என்பதில்லை. கிழவிகளாகிய இந்த லக்ஷ்மியும், சீதாவும் உலாவப் போகலாம். ஆற்றில் தண்ணீர் அதிகம் இல்லை. மழையும், பனியும் போய் இளவேனில் ஆரம்பமாகி யிருந்தது. படிகளில் பொங்கி ஓடிய நீர் இப்



போது அமைதியுடன் சல சலத்துக் கொண்டிருந்தது. லக்ஷ்மியும் சீதாவும் மண்ட பத்தில் போய் உட்கார்ந் தார்கள்.

''ஐப்பசியில் காலைப் பறித்துக் கொண்டு ஓடித்தே சீதா. இப்போ பார்த்



தியா?'' என்று வியந்தாள் லக்ஷ்மி.

''கல்யாணத்துக்கு இருக் கிற இளம் பெண் மாதிரி ஒரே ஓட்டமும் பிடியுமாக ஓடித்து இந்த ஆறு. அப் புறம் கல்யாணமாகி நாலு குழந்தைகளுக்குத் தாயாகி விட்ட பெருமையில் அமைதி நடை போடுகிற மாதிரி இப்போ நடை பழகுகிறதடி லக்ஷ்மி!'' கிழவிகள் இரண்டு பேரும் இரண்டு கை நீரை அள்ளிக் குடித்தார்கள். கதிரவன் மலை வாயிலுக்குப் போக நேரம் இருந்தது. இருட்டுவதற்கு முன் கீழ் வானத்தில் நிலவும் முளைத்து விடும். ஊர்க் குழந்தைகள் மணலில் சடுகுடு விளையா டிக் கொண்டிருந்தார்கள். பாலத்தின் மீது காலத்துக் கேற்றாற்போல் பல இனி மையான காட்சிகள். அவற்றினூடே ஒன்று மட் டும் பளிச்சென்று தெரிந் தது. வாலிபன் ஒருவன் 'டிரான்ஸிஸ்டர்'ரைப் பாட விட்டபடி பாலத்தின் மீது சாய்ந்து கொண்டிருந்தான். அடிக்கடி அவன் பார்வை கரையை நோக்கியது.



தூரத்திலே பெண்ணொருத்தி துள்ளி ஓடி வந்தாள். இருவரும் பேசுகிறார்கள் போலும். ஆற்றங்கரையிலிருந்த குழந் தைகள் வீடு நோக்கிப் போன பிறகும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

''சீதா! உனக்கு அவர்களைப் பார்த்தால் என்ன தோன்றுகிறது?'' என்று கேட்டாள் லக்ஷ்மி. லக்ஷ்மிக்குச் சீதாவைவிட நாலைந்து வயது அதிகமாக இருக்கக் கூடும். கண் பார்வை மங்கலாகத் தெரியும். கண்களை இடுக்கி அவ்விருவரையும் கவனித்தாள்.

''ஒன்றும் தோன்றவில்லை'' என்று பளிச்சென்று பதிலிறுத்தாள் சீதா.

''அந்தப் பெண்ணும், பையனும் கல்யா ணம் ஆனவர்களாக இருந்தால் குற்ற மில்லை. இல்லாவிட்டால்?.....''

''இல்லா விட்டால் என்னவாம்?''

லக்ஷ்மி தலையைப் பலமாக ஆட்டினள். அவள் காதுகளில் இருந்த ஜிமிக்கிகள் அசைந்தன. தலைப் பின்னல் ஆடியது.

''சுவாமி பார்த்துப் பார்த்து அலுத்துப் போச்சு விட்டல். வருஷா வருஷம் பார்க்கிற சுவாமிதானே ?''

இருவரும் சிறு வயதினர். மிகச் சிறிய வயதினர். மனத்தில் தோன்றும் ஆசைகளுக்கு அணை போடவோ, தடுத்து நிறுத்தவோ முடியாத வயதினர்.

லக்ஷ்மியின் தாய் சுவாமி புறப்பாடு, நேரம் கழித்துத்தான் ஆகுமென்று நினைத்து ஒரு குட்டித் தூக்கம் போடப் போய் விட்டாள். அப்பா வழக்கம் போல் தம் ஜமாவுடன் சீட்டாடப் போயிருந்தார்.



''அதோ பாருடா ஹார்பர்! அங்கே பார், சென்ட்ரல்! அது தான் எல். ஐ. சி! இதோ இங்கே தான் மயிலை கபாலி கோயில்! அது மௌண்ட்... என்னடா இது? நான் பாட்டுக்குக் காட்டிண்டிருக்கேன். நீ என்ன பார்க்கிறே?''

''இதோ, சைனு பஜாரிலே எத்தனை ரெட்டைப் பின்னல், தெரியுது பாருப்பா!''

''ராயரே!'' என்று கர்ஜித்தார் லட்சுமியின் தகப்பனார்:

''எங்கேய்யா உம் பிள்ளை?''

''இங்கேதான் ஸ்வாமி இருந்தான்...''

''இங்கேதான் இல்லையே ஐயா?''

ராயர் கையைப் பிசைந்தார். பையனுக்கு நாடகப் பைத்தியம். அத்துடன் லட்சுமிக்கும் அதே பைத்தியம் பிடித்திருந்தது என்று சொல்ல அவருக்குப் பயம்.

''ராயரே! உம்மைப் பூண்டோடு ஒழித்து விடுவேன். இதென்னய்யா அவமானம்?''

''சுவாமி! சுவாமி! பெரிய பேச்செல்லாம் பேசாதீர்கள். விட்டலுக்கு நாடகப் பைத்தியம். நம்ம குழந்தையை அவன் அழைத்துப் போயிருக்கலாம்....''

விட்டலும் லக்ஷ்மியும் நாடகக் கொட்டகைக்குப் போனார்கள். தரை நாலணா என்கிற அறிவிப்பைப் பல முறைகள் தமுக்கு வாயிலாகக் கேட்ட லட்சுமி தான் கொண்டு வந்திருந்த நாலணாவை விட்டலிடம் கொடுத்தாள்.

லட்சுமி டிக்கட்டை வாங்கிக் கொண்டு பெண்கள் உட்காருமிடத்துக்குப் போய் உட்கார்ந்தாள். விட்டல் வழக்கம்போல் ஆண்கள் பகுதியில் உட்கார்ந்தான்.

இங்கே ஆற்றங்கரை மண்டபத்தில் உட்கார்ந்திருக்கும் லட்சுமிப் பாட்டிக்கு அந்தக் காலத்துச் சத்தியவான் — சாவித்திரி மனக்கண் முன்பு தோன்றினார்கள். காலம் எதுவாக இருந்தால் என்ன? அந்த ஆதர்ச தம்பதிகளுடைய நெறியும், கற்பும் எந்தக் காலத்திலும் நிலைத்து நிற்கக் கூடியதல்லவா? தற்காலத்தைப் போல மேக்கப் வசதிகளோ, லைட் வசதிகளோ இல்லாத காலத்திலும் சத்தியவான் வேடதாரி நன்றாகப் பிரகாசித்தார். சாவித்திரியும் நன்றாகத்தான் இருந்தாள். எந்த விதமான புரட்சிக் கருத்துக்களோ, பழைமையைத் தேய்த்துத் துலக்க முற்படும் புதுமைப் பிரசாரங்களோ நாடகத்தில் இல்லை. பகவான் வேத வியாசர் மகாபாரதத்தில் அருளியிருக்கிறபடி நாடகம் கிராமியத் தமிழில் நடைபெற்றுக் கொண்டிருந்தது.

இரவு மணி பன்னிரண்டு. வாசலில் லட்சுமி வீட்டு வண்டிக்காரன் வண்டி கட்டிக்கொண்டு வந்து நிறுத்தினான். லக்ஷ்மியின் தாய் மகளை வீடு முழுதும் தேடினாள். பதைத்தாள். அண்டை அயலார் என்னவோ என்று கூட்டமாகக் கூடிவிட்டனர். ராயரும் தலையில் அடித்துக்கொண்டு மகனைத் தேடினார்.

ஆற்றங்கரை மண்டபத்தில் லட்சுமிப் பாட்டி தன் உடலை ஒரு தரம் சிலிர்த்துக்கொண்டாள். அன்று தன் தாயிடம் விட்டல் பட்ட அடிகளும், குற்றத்தைத் தன்மீது சுமத்தாமல் அவனே ஏற்றுக்கொண்டதும், குற்றமே இல்லாத ஒன்றைக் குற்றமாக எண்ணிய ஊராரின் ஏச்சுக்களும் பாட்டியின் உடலில் சிலிர்ப்பை ஏற்படுத்தின.

''என்னடி லட்சுமி! குளிருகிறதா? கிளம்பு போவோம்'' என்றாள் சீதா.

லட்சுமியும் சீதாவும் புதுப் பாலத்தின் மீது நடந்து வந்து கொண்டிருந்தார்கள். யுவனிடம் யுவதி கூறுகிறாள்:

''இதோ பாருங்க, கலையார்வம் காரணமாகத்தான் நான் உங்களோடு நாடகம் போட வருகிறேன்னு சொல்றேன். அதை எங்க வீட்டார்தான் புரிஞ்சுக்கலை. நீங்களும் தட்டிக் கழிக்கப் பார்க்கிறீங்களே...''

''கலையார்வத்தின் விளிம்பில் நாம் நிற்பதை இந்த மக்களால் உணர முடியவில்லை, பிரேமா. பழங் காலத்திலேயே உன் பெற்றோர், என் பெற்றோர் இருக்கிறாங்க. நாளைக்கு ஏதாவது வம்பா முடிஞ்சா என்ன பண்றது சொல்லு...''

''லட்சுமி! அந்தப் பெண் யாரடி? உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டாள் சீதா.

''கலைக்குச் சேவை செய்யப் புறப்பட்டிருக்கும் கலாதேவியாக இருப்பாள் சீதா. இந்த வம்பெல்லாம் நமக்கு வேண்டாம்...'' என்றவாறு லட்சுமி எட்டி நடந்தாள்.

கோயில்களும் மாறிவிட்டன. பஜனை, நாதஸ்வரம், பரதம், சங்கீதம், முதலியவைகள் ஒலிக்க வேண்டிய கோயிலிலிருந்து கர்ண கடூரமான சினிமா சங்கீதம் காற்றில் தவழ்ந்து காதுகளில் மோதியது.

# வாழ்வு-ஒரு யாத்திரை

"கலியாணம் ஆகி விட்டால் பிள்ளைகள் மாறித்தான் போகிறார்கள். இதுதான் என்னுடைய அனுபவம்" என்று தேவகியம்மாள் தன் பால்ய சிநேகிதி ருக்மிணியம்மாளிடம் அங்கலாய்த்துக் கொண்டாள்.

ருக்மிணி புன்சிரிப்பாக உதட்டை மடித்துச் சுழித்து ஒரு சிரிப்புச் சிரித்து வைத்தாள். அவளுக்குத் தேவகிக்கு ஏற்பட்ட அனுபவம் இன்னும் ஏற்படவில்லை. இனிமேலும் ஏற்பட வழி இல்லை. அவளுக்கு இருப்பது ஒரே ஒரு பெண்தான். பி. ஏ. இரண்டாவது வருஷத்தில் படித்துக் கொண்டிருந்தாள். தேவகிக்கு நாலு ஆண்பிள்ளைகள். மூன்று பேர்களுக்கு நல்ல இடத்தில் பெண் பார்த்துக் கலியாணம் செய்து வைத்தாள். முதல் மருமகள் வீட்டுக்கு வந்ததும் தனக்கு ஏதோ பிரமாதமாகக் குடும்பப் பொறுப்பிலிருந்து விடுதலை கிடைத்து விட்ட மாதிரி தேவகி நினைத்துத் தன் கணவர் சாம்பசிவத்திடம் "என்னுங்க! இரண்டு பாஸ் போடுங்களேன்" என்று கேட்டாள். அவர் வியப்புடன் தன் மனைவியை ஏறிட்டுப் பார்த்து, "ஏன்?" என்று கேட்டார்.

"சும்மாத்தான். இப்படிக் கன்யாகுமரி வரைக்கும் போயிட்டு வரலாமே! எனக்கும் கொஞ்சம் ஓய்வு வேண்டாமா?"

சாம்பசிவம் தம் மீசையை முறுக்கியவாறு யோசனையில் ஆழ்ந்தார். அத்தனை பெரிய வீட்டையும், இரண்டு கறவை மாடுகளையும், மாடியிலே பாதியானைத் தோற்றம் அளிக்கும் நாலு நாய்களையும், எவன் ஒரு சாக்குப்போக்குக் கூறும் தவசிப் பிள்ளையையும், இரண்டு வேலைக்காரர்களையும் கட்டி யார் மேய்ப்பார்கள்? அப்படி மேய்த்தாலும், இன்னும் கலியாணம் ஆகாத மூன்று பிள்ளைகளின் தேவைகளைக் கவனித்துச் செய்ய யார் பொறுப்பேற்கப் போகிறார்கள்?

"என்னங்க?" என்று தன் குரலை உயர்த்தி நீட்டிக் கூப்பிட்டாள் தேவகி.

"நீ என்ன சொல்றே தேவகி? பாஸ் போட்டுக்கிட்டு ஜம்முன்னு பஸ்ட் கிளாசிலே உட்கார்ந்து ஊர் சுத்தப் போயிட்டா இந்த வீட்டை யார் கவனிப்பாங்க? ஹும்?...."

"எல்லாம் கவனிக்க ஆள் வந்தாச்சேன்னுதான் உங்க கிட்டே வந்து கேக்கறேன். காலத்துக்கும் எனக்கு உழைப்புத்தான் மிச்சம்."

தேவகியின் கண்களில் சாம்பசிவம் முப்பத்தைந்து வருடங்களில் முதன் முதலாகக் கண்ணீரைக் கண்டார். பாவம், அவள் ஆசையைக் கெடுப்பா



ஸரோஜா ராமமூர்த்தி




'' முத்துமாலே கறுத்துப் போய் விட்டால் என்ன செய்வது ?''

' கறுக்காது ! கறுத்தால் உத்தரவா தத்துக்கு நான் இருக்கிறேன் !''

''அதெப்படி உம்மை உத்தரவாதத் துக்கு எடுத்துக் கொள்ள முடியும் ? நீங்களேதான் வரவரக் கறுத்துப் போய்க் கொண்டிருக்கிறீர்களே!''

குப் பெண் பார்த்துக் கட்டி வைக்கத் தெரியாதா?'' என்ருர் சாம்பசிவம்.

தேவகி வேதனையுடன் சிரித்தாள்.

''இங்கே பாருங்க. பெற்ரேராகிய நாம் நம் ஆயுட்காலம் முழுவதும் நாம் பெற்ற குழந்தைகளின் நலனுக்காகத்தான் எல்லாமே செய்து வருகிருேம். அவனுக்கு அந்தப் பெண் மீதுதான் விருப்பம் என்ருல், அதை மீறி வேறு பெண்ணைக் கட்டி வைத்து அவன் வாழ்க்கையைக் கெடுப்பானேன்? அதில் நமக்கென்ன மகிழ்ச்சி இருக்கப் போகிறது?''

சாம்பசிவம் மனைவியை நிமிர்ந்து நேருக்கு நேர் நன்ருகக் கவனித்தார்.

தியாகத்தின், அன்பின் உருவமாக அந்த அன்னையைக் கண்டார் அவர்.

சிவாவின் மனைவி சரயூ பிறந்த வீட்டின் மஞ்சட்காணியாக அரை லட்சத்துடன் வந்தாள். சிவா பெரிய மனிதன் ஆகி விட்டான். திடும் என்று மனைவியுடன் நடன நிகழ்ச்சிகளுக்காக 'அமெரிக்கா போகிறேன், லண்டனுக்குப் போகிறேன்' என்று அம்மாவிடம் சொல்லி விட்டுப் போக வருவான். தன் மடி மீது தலை வைத்துக் கதைகள் சொல்லக்கேட்ட மகன் இவன்தானு? 'என் சிவாவா இவன்? மாறி விட்டான், மாறித்தான் போய் விட்டான்.' தாய்ப்பாசம் தியாக எண்ணத்தையும் வென்றவாறு அவளைக் குலுங்கக் குலுங்க அழவைத்து விட்டது.

ஃ ஃ ஃ

கண்கள் கண்ணீரை உமிழ, பேசாமல் உட்கார்ந்து விட்ட தேவகியை ருக்மிணி உசுப்பி ஒரு கேள்வி கேட்டாள்.

''தேவகி! என் குழந்தை பானு இருக்கிருள் பாரு....''

''ஆமாம். அவளுக்கென்ன? ராசாத்தியாட்டம் செக்கச் செவேல்னு. நல்ல இடமாகப் பார்த்துக் குடு அவளை....''

தேவகி கண்ணீரைத் துடைத்துக் கொண்டே சொன்ளுள்.

''அதுதான் சொல்ல வந்தேன். உன் மகன் பாலனுக்கும் அவளை ரொம்பப் பிடிச்சிருக்காம். இரண்டு பேரும் கல்யாணம் கட்டிக்க ஆசைப்படுகிற மாதிரி தெரியுது தேவகி....''

தேவகி எதற்குத்தான் மறுத்துப் பேசியிருக்கிருள்?

''அப்படியா? அவர்கிட்டே சொல்லி முடிச்சாப் போச்சு....எனக்கு இந்த விஷயமே தெரியாது ருக்கு....''

சாம்பசிவத்தின் மனமும் இப்பொழுது பக்குவமாகி விட்டது. வார்த்தைக்கு வார்த்தை 'தேவகிதான் எனக்குக் குரு' என்று தம் நண்பர்களிடம் சொல்லுவார். 'குழந்தைகளைப் பெறுகிருேம். வளர்க்கிருேம். கடமைகளைச் செய்து முடிக்கிருேம்' என்று வேதாந்தமாகப் பேசவும் பழகிக் கொண்டார்.

அந்தக் குடும்பத்தின் கடைசி மகன் தன் மனைவியுடன் மாலையும் கழுத்துமாக வந்து பெற்ருேரை வணங்கிஞன். மறுவீட்டுக்குப் போய் வந்த பாலன் தன் தாயிடம் புதுச் செய்தி ஒன்றைத் தெரிவித்தான்.

''அம்மா! பானுவின் அம்மா அவங்க மகளையும் இங்கே அனுப்பி விட்டு எப்படித் தனியாக இருப்பாங்க? அதனுல் என்னை அவங்க வீட்டோட வைச்சுக்க ஆசைப் படருங்க....''

நாலு பிள்ளைகளுக்குப் பெற்ருேராகிய அவர்கள் நிலைமை என்ன? ருக்மிணியம்மாள் தனியாக இருக்கிருளாமே?

''அதற்கென்ன அப்பா? போய் வா.'' இரண்டே வார்த்தைகளில் தன் ஒப்புதலைத் தெரிவித்த தேவகி துயரத்தின் வேதனை தன் நெஞ்சைப் பிழிந்தெடுப்பதைத் தாளாமல் மகன் ஊருக்குப் புறப்பட்டவுடன் சோர்ந்து உட்கார்ந்து விட்டாள்.

''தேவகி! இவ்வளவு பெரிய வீட்டில் நாம் ஏன் ஒண்டிக்கட்டைகளாகக் காலம் தள்ள வேண்டும்? காலமும், கருத்தும் மாறி வருகிறது தேவகி. நாம் உலகத்திலிருந்து எத்தனையோ நாகரிகங்களை ஏற்றுக் கொண்டிருக்கிருேம். குழந்தைகள் மணமாகும் மட்டும் தான் பெற்ருேருடன் வசிப்பார்கள். பிறகு அவர்கள் வேறு, இவர்கள் வேறுதான். இது மேல் நாட்டாரின் வழக்கம். நம் பண்பாடோ தர்மத்தை ஒட்டியும், கடமையைச் செய்ய இருப்பதால் பெற்ருேர்களுக்கு 'மக்கள் தம் கடமையைச் செய்யவில்லையே என்று வேதனைப் படுகிருேம். இனி வருங்காலத்தில் நம் சந்ததியார் அநேகமாக மாறி விடுவார்கள். அவனவன் பாட்டை அவனவன் பார்த்துக் கொள்வான். அதுதான் பெரிய நாகரிகம் என்று சரித்திரத்திலே கூட எழுதி வைத்துவிடுவார்கள். நான் பத்ரி போவதாக இருக்கிறேன். நீயும் புறப்படு. நம் கடமை முடிந்து விட்டது. பலனை எதிர்பார்க்கக் கூடாது என்பது கண்ணனின் வாக்கு — ''

தேவகி சலனமற்ற மனத்துடன் பத்ரி யாத்திரைக்கு மூட்டை முடிச்சுக்கள் கட்ட ஆரம்பித்தாள்.

னேன் என்று எண்ணியவராகச் சாம்பசிவம் அன்றே 'பாஸ்' தேவைக்காக அதிகாரிகளுக்கு எழுதி விட்டார்.

தேவகி உடனே மூட்டை முடிச்சுகள் கட்ட ஆரம்பித்தாள். எல்லாப் பெரிய மனிதர்களைப் போல் சாம்பசிவம் பகலில் அரிசிச் சாப்பாடும், இரவில் கோதுமைச் சாதமும் சாப்பிடுவார். ஆகவே, அவருக்குத் தேவையான சாமான்களை யெல்லாம் மறக்காமல் எடுத்துக் கொண்டாள்.

''நம் இரண்டு பேர்களுக்கா இவ்வளவு மூட்டைகள்? ஒய்வு வேண்டுமென்று கேட்டாய். அங்கேயும் வந்து சமைக்கப் போகிறாயா என்ன? கிளப்பிலே சாப்பிட்டுக் கொள்கிறது....'' என்றார் சாம்பசிவம்.

''அதெல்லாம் கூடாதுங்க. 'ஸ்டவ்' கொண்டு வருகிறேன். சமைக்கிறது ஒரு வேலையா? ஒரு நிமிஷத்திலே முடிச்சுட மாட்டேனா?''

தேவகி அந்தக் குடும்பத்தின் பொறுப்பைப் பெரிய மருமகள் வசந்தியிடம் ஒப்புவித்து விட்டு யாத்திரை கிளம்பினாள். வீட்டிலே எல்லா வசதிகளையும் செய்து விட்டுத்தான் புறப்பட்டாள்.

வசந்திக்கு அத்தனை பெரிய குடும்பத்தை நிர்வகித்துப் பழக்கமில்லை. கல்லூரியிலிருந்து கணவன் வீட்டுக்குள் நுழைந்தவளுக்கு எல்லாமே பிரமிப்பாக இருந்தன. மாடு கன்றுகள், பல்வேறு குணமுடைய மைத்துனர்கள், வேலைக்கொரு பொய் பித்தலாட்டம் செய்யும் வேலைக்காரர்கள் இவர்களைக் கட்டி மேய்க்கும் பொறுப்பை அவள் கல்லூரியிலே படிக்கவில்லை. படித்திருந்தால் புள்ளி விவரத்துடன் நடந்து ஒழுங்கை ஏற்படுத்தியிருப்பாள்!

அன்றலர்ந்த மலர் போல் இருந்த மனைவியின் முகம் வாடியிருப்பதைப் பார்த்த அவள் கணவனுக்கு உடனே தன் தாயின் மீது வருத்தம் ஏற்பட்டு விட்டது. வேறு ஒரு காரணமும் பிரமாதமாக இல்லை. நண்பர்கள் மூலம் வேறு வீடு பார்த்துக் கொண்டு பெற்றோர் வந்தவுடன் கிளம்பி விடுவது என்று காத்துக் கொண்டிருந்தான்.

அவர்களும் யாத்திரையை முடித்துக் கொண்டு வந்து சேர்ந்தார்கள். குடும்பத்துக்கு மூத்த மகன் இப்படித் தனியாகப் பிரிந்து போவதைத் தேவகியால் தாங்க முடியவில்லை.

''பைத்தியம்! பைத்தியம்! உன் மகன் இன்னமுமா நீ தூளியில் போட்டுத் தாலாட்டிய குழந்தை? அவனே இன்னும் இரண்டொரு ஆண்டுகளில் தகப்பன் ஆகி விடுவான். என்னவோ தனியாக இருப்பதில் அவனுக்கு ஆசையாக இருக்கிறது. போகட்டும் விடு..'' என்று சாம்பசிவம் மனைவிக்கு ஆறுதல் சொன்னார்.

ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் மகன் மனைவியுடன் வந்து பெற்றோருடன் விருந்து சாப்பிட்டு விட்டுப் போவான். இரவு சாப்பாட்டுக்கு வசந்தியிடம் தேவகி 'காரியரி'ல் சாப்பாடு கொடுத்து அனுப்புவாள். இதுவே அவளுக்கு நாளடைவில் பழக்கமாகி விட்டது.

இரண்டாவது மகனுக்குக் கல்யாணம் ஆயிற்று. பெரிய மருமகள் ரொம்பப் படித்தவள். அதனால் குடும்பத்துடன் ஒட்டாமல் போய் விட்டாள் என்கிற கருத்தில் இரண்டாவது மருமகள் நன்றாகப் பாடக் கூடிய பெண்ணாகத் தேர்ந்தெடுத்தாள் தேவகி.

அவள் திருமணமான நாளிலிருந்து வெளியூர்களில் கச்சேரி அது இது என்று போய் விட்டு வருவதற்கே சரியாக இருந்தது. மனைவி புகழில் தானும் பங்கு பெறக் கருதி அவள் கணவன் அவளுக்கு மேலும் புகழ் வளர என்னவெல்லாம் செய்ய வேண்டுமோ, அதைக் கவனித்துக் கொண்டிருந்தான்.

மருமகள் கச்சேரிக்குக் கிளம்புகிறாள் என்றால் மாமியார் முன்னதாகவே தவசுப்பிள்ளையிடம் பால் காய்ச்சச் சொல்லி ஏற்பாடு செய்ய வேண்டும்.

தேவகி கவலையுடன் சுவரில் சாய்ந்து உட்கார்ந்திருப்பதைச் சாம்பசிவம் ஒரு தடவை கவனித்து விட்டு, ''தேவகி! ஏன் ஒருமாதிரி இருக்கிறாய்?'' என்று விசாரித்தார்.

''ஒரு மாதிரியுமில்லை, இரண்டு மாதிரியுமில்லை. எப்பொழுதும் போலத்தான் இருக்கிறேன்.''—அலுப்புடன் வந்த விடை இது.

''உன் தோற்றத்திலோ, அன்பிலோ நீ மாறி விடவில்லை. என் கண்களுக்கு நீ எப்பொழுதும் போலத்தான் இருக்கிறாய். இருந்தாலும், உன் மனசில் ஏதோ குறை இருக்கிறது —'' என்றார் அவர்.

மனைவியின் கண்களில் மறுபடியும் கண்ணீரைக் கண்டார் அவர்.

''இதோ பார்! வடக்கே காசி வரையில் போகலாமென்று பாஸ் போட்டிருக்கிறேன். கிளம்பு. அவரவர் பாடென்று விட்டு விட்டு நாம் பாட்டுக்குப் போய் விடுவோம் — ''

''கிளம்புகிறதா? நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? சிவாவும், பாலனும் பரீக்ஷைக்குப் படித்துக் கொண்டிருக்கிறார்கள். இங்கே அந்தப் பிள்ளைகளைக் கவனிக்க யார் இருக்கிறார்கள்....?''



''பிள்ளைகளுக்கு ஒருத்தி வருகிற வரையில் தான் தாய் தந்தையரின் தயவு வேண்டியிருக்கிறது. பிள்ளைகளாம் பிள்ளைகள்! — '' தந்தையின் வேதனைப் பொருமல் இது.

பெற்றோர் இருவரும் காசி யாத்திரை கிளம்புவதற்கு முன்பே இரண்டாவது மகன் தன் மனைவியுடன் பம்பாய்க்குப் புறப்பட்டு விட்டான். வெளி உலகம் என்னவோ சாம்பசிவம் மருமகள் வாசுகியின் சங்கீதத்தை அபாரமாகத்தான் புகழ்ந்தது. 'அது ஒரு கலைக்குடும்பம். கலைக் கோயில். முதல் மருமகள் ரொம்பப் படித்தவள். பெரிய பெரிய ஆராய்ச்சி யெல்லாம் செய்து வருகிறாள். இரண்டாம் மருமகள் சங்கீதத்தையே கரைத்துக் குடித்தவள்.' பத்திரிகைகளின் புகழ் மாலைகள் இவை. குடும்பம் என்பது ஒரு தனி உலகம். அதனுள் இருந்து அதைத் திறம்பட நிர்வகித்துப் பணி புரியும் தேவகியின் உடல் அலுப்புப் பற்றியோ, உள்ளச் சோர்வைப் பற்றியோ வெளி உலகம் என்ன கண்டது?

மகனும், மருமகளும் பம்பாயிலிருந்து வந்தவுடன் சாம்பசிவம் அவராகவே பார்த்து அவர்களை வேறு குடித்தனம் வைத்து விட்டார். சங்கீதத்துடன் அவன் மனைவி சமையலும் செய்து கணவனுக்குச் சேவை செய்யட்டும் என்கிற கருத்தாக இருக்கலாம்.

மூன்றாவது மகன் சிவாதான் அந்த வீட்டிலே அம்மா செல்லம். இரவு படுக்கப் போகும் முன்பு அம்மாவின் மடியில் தலை வைத்துப் படுத்தபடி குட்டிக் கதைகள் சொல்லச் சொல்லிக் கேட்காமல் போக மாட்டான்.

''போடா எழுந்திருந்து! வயசாகிறது. குழந்தையாட்டம் என்னடா என் மடியில் உனக்குப் படுக்கை? — ''

''நான் உன் குழந்தைதானே அம்மா? கதை சொல்லும்மா — '' இந்தச் செல்லக் குழந்தை ஒரு நாள் திடுதிப்பென்று அம்மாவிடம் தன் கருத்தை வெளியிட்டது. அவனுக்குத் திடீரென்று காதல் முளைத்து விட்டதாம். அவன் காதலி ஒரு நல்ல 'டான்சர்!' கல்லூரியிலே நடனம் ஆடிப் பல பரிசுகளைத் தட்டியவளாம். ரொம்ப ரொம்ப அழகாம்.

''ஏண்டா அப்பா நீதான் குழந்தையா?'' என்று தேவகி மகனைக் கோபத்துடனும், அதே சமயத்தில் பரிவுடனும் கேலி செய்தாள். இந்த விஷயத்தைக் கணவரிடம் மெதுவாகப் பிரஸ்தாபித்தபோது அவர் வெகுண்டார்.

''நம் வீடு இருக்கும் லட்சணத்தில் நடனம் ஒன்றுதான் பாக்கியாக இருக்கிறது. அதெல்லாம் நமக்குச் சரிப்பட்டு வராது, தேவகி!'' என்றார் அவர் பிடிவாதமாக.

''சரிப்படுகிறதோ இல்லையோ. குழந்தைக்கு அதுதான் பிரியம் என்றால் நீங்களும், நானும் அதற்குத் தடையாக இருப்பானேன்?''

''ஓஹோ! எனக்கு நீ புத்தி சொல்ல வந்து விட்டாயோ? முதல் இரண்டு பிள்ளைளுக்குப் பெண் பார்த்தவனுக்கு மூன்றாவது மகனுக்

''வீண் அபவாதமும், பழியும் ஏற்றுக் கொள்ள வேண்டும்.''

''அபவாதமும், பழியும் வரும் என்று அவர்களுக்குத் தெரியாதா என்ன? தெரிந்திருக்கும். அதுவும் முன்னேற்றம் என்று முழங்கும் இந்தக் காலத்தில் அறிவு முன்னேறியிருக்கும் இந்த நாட்களில் இம்மாதிரி விஷயங்களை ஒரு முறைக்கு இரு முறை யோசனை செய்து தான் செய்வார்கள்.....'' என்று சற்றுக் காரமாகவே சொன்னாள் சீதா.

லக்ஷ்மி தன்னில் தான் லயித்தபடி உட்கார்ந்திருந்தாள். எத்தனையோ வருஷங்கள் ஓடி விட்டன. அந்தச் சம்பவம் ஒரு கனவைப் போல — மறந்து விட்ட எண்ணத்தைப் போல் — அவள் நினைவில் தோன்றியது. பாலத்தின் மீது நிற்கிறாளே அந்தப் பெண்ணின் வயதுகூட இருக்காது லக்ஷ்மிக்கு. இந்தக் காலத்தைப் போல் குதிரைவால் கொண்டை போடத் தெரியாது. வழுக்கும் நைலக்ஸ் சேலை உடுத்தும் பழக்கமும் இல்லை. தலையை நேர் வகிடு எடுத்து இழைய வாரி விட்டிருப்பாள். காதுகளில் பட்டைச் சிவப்புக் கம்மல்கள். ஆரணியோ, காஞ்சீபுரமோ நினைவில்லை. அந்த ஊரின் பட்டுப் பாவாடை. பாலத்தின் மீது நிற்கும் பெண்ணைவிட இரண்டு மூன்று வயசு குறைவாக இருக்கும். பெண்கள் இரண்டாவது மூன்றாவது படிப்பதே அதிகம் என்று நினைத்த காலம். லக்ஷ்மிக்கு அந்த நாட்களில் நாடகப் பைத்தியம் அதிகமாக இருந்தது. சினிமா வராத காலமாயிற்றே. இப்பொழுது சினிமா பைத்தியம் பிடித்து அலைகிற காலம். வீடு, வாசல், குடும்பம், குழந்தை எல்லாவற்றையும் விட்டு விட்டு முப்பத்தியோராம் தேதிகூட மாட்னி ஷோவில் பெண்கள் அடித்துப் பிடித்துக் கொண்டு ஆட்டம் பார்க்கச் சுதந்திரம் வழங்கப்பட்டிருக்கிறது. ஆனால், அந்த நாட்களில் கலையார்வம் ஆண்களுக்கு மட்டுமே உரிமையாக்கப்பட்டிருந்தது. பெண்கள் நினைக்க முடியாத ஒன்று. லக்ஷ்மிக்கு வெகு நாட்களாக நல்ல நாடகமாக ஒன்று பார்த்துவிட வேண்டும் என்று ஆசை. வீட்டிலிருந்து அவள் தந்தை அடிக்கடி நாடகத்துக்குப் போய் வருவார். நாடக மேடையில் தலைமை வகிப்பார். வீட்டுக்கு ரோஜா மாலைகளாகக் கொண்டு வருவார். அயன் ராஜபார்ட்டைப் புகழ்வார். ஸ்திரீபார்ட் போட்டவனின் தளுக்கு மினுக்குகளை யெல்லாம் மனத்துக்குள் ரசித்துக் கொண்டிருந்தாலும் மனைவியின் எதிரில் வெறுப்பவர்போல் பாசாங்கு செய்வார்.

லக்ஷ்மியின் வீட்டார் ஆண்டுதோறும் சித்ரா பௌர்ணமிக்குப் பாலாற்றில் நடக்கும் திருவூரல் உற்சவத்துக்குக் குதிரை வண்டியில் போய் வருவார்கள். வண்டியின் இருபுறமும் படுதாக்கள் தொங்குகிற வழக்கம். பெரிய மனிதர்கள் வீட்டுப் பெண்கள் அப்படித்தான் பத்திரமாகப் போய் வருவார்கள். பத்திரம் என்பது வெளித் தோற்றத்தில்தான் இருந்தது. மனத்துக்குக் காவல் இருந்ததா என்பதைப் பற்றி யாரும் கவலைப்படவில்லை.

லக்ஷ்மியின் வீட்டிலே ஒரு ராயர் சமைத்துக் கொண்டிருந்தார். அவர் பிள்ளையும் லக்ஷ்மியின் வயதுள்ளவன். எடுபிடி காரியங்களுக்காக லக்ஷ்மியின் தகப்பனார் அவனையும் தம்முடன் வைத்துக் கொண்டிருந்தார். பையன் விகல்பமானவன் இல்லை. அப்படியெல்லாம் எண்ணக் கூடிய வயதும் அவனுக்கு ஏற்படவில்லை.

அந்த ஆண்டு சித்ரா பௌர்ணமியின் போது ஆற்றில் திருவிழா நடந்து கொண்டிருந்தது. ஊருக்குள் சத்தியவான் சாவித்திரி பிரபல நாடக கோஷ்டியினரால் நடத்த ஏற்பாடாகி யிருந்தது. சுவரொட்டிகளுக்காகக் காசைக் கரியாக்க மாட்டார்கள். ஆகவே, ஆபாசம் இல்லாமல் தமுக்குப் போட்டு நாடகத்தைப் பற்றிக் கண்ணியமாகவே அறிவித்திருந்தார்கள். லக்ஷ்மிக்குச் சுவாமி தரிசனத்தில் மனம் செல்ல வில்லை. வருஷா வருஷம் நினைவு தெரிந்த நாட்களாகப் பார்த்த சுவாமிதானே?

ராயர் பிள்ளை விட்டல் கண்டிப்பாக நாடகத்துக்குப் போவான் என்பது லக்ஷ்மிக்குத் தெரியும். அன்று வீட்டில் சாதாரணச் சமையல். மைசூர் ரசம். சுட்ட அப்பளம். உற்சவத்தில் பிரசாதங்கள் கிடைக்கும் என்கிற எண்ணத்தில் லக்ஷ்மியின் தாய் சாதாரணமாகவே ராயரைச் சமைக்கச் சொல்லியிருந்தாள். சாப்பாடு முடிந்து விட்டது. விட்டல் பின்கட்டில் தன் அறையில் தலை சீவி, துவைத்த வேஷ்டியை உடுத்திச் சொக்காய் அணிந்து கொண்டிருந்தான். கொஞ்சம் பவுடர் போட்டுக்கொள்ள ஆசை. லக்ஷ்மியைக் கேட்டால் கொடுப்பாள். அவன் கேட்பதற்கு முன்பே லக்ஷ்மி பவுடர் டப்பியுடன் அங்கு வந்தாள். உற்சவத்துக்குக் கிளம்புவதற்காக அவளுக்கு ராக்கோடி, ஜடை பில்லை, குஞ்சலம் வைத்துப் பின்னியிருந்தார்கள். தலை நிறைய மல்லிகையும், இருவாட்சியும் மணம் வீசின. கச்சிதமான அலங்காரங்களுடன் தன் எதிரில் நிற்கும் லக்ஷ்மியை விட்டல், பார்த்தான். தெய்வத் திருவுருவம்போல் நின்று கொண்டிருந்த அவள் எழிலை அப்படியே பார்த்துக் கொண்டிருந்தான்.

''என்ன விட்டல்? நாடகத்துக்குப் போகிறாயா ? பவுடர் வேண்டுமா ?''

விட்டல் அசட்டுச் சிரிப்புச் சிரித்தான். அற்ப ஆசைதான் என்றாலும் சில சமயங்களில் அதுவே முக்கியமான ஆசையாகவும் ஆகி விடுகிறதல்லவா ?

''இந்தா ! பூசிக்கோ '' என்று மேஜை மீது பவுடர் டப்பாவை வைத்தாள். 'யார்ட்லி லாவண்டரின்' வாசனை புகைபோல் அறை முழுதும் கமழ்ந்தது.

''விட்டல் ! உன்னை ஒன்று கேட்கிறேன். உம்மென்று சொல்லணும். என்னையும் நாடகத்துக்கு அழைத்துப் போ, விட்டல்.... எனக்கு ரொம்ப நாட்களாக நாடகம் பார்க்கணும்னு ஆசை, விட்டல்....''

விட்டல் லக்ஷ்மியைப் பார்த்தான். ''உன்னையா ? நீ அப்பா, அம்மாவுடன் சுவாமி பார்க்கப் போகலே?'' என்று கேட்டான்.



# விருந்தாளிகள்!

மாலைப் பொழுது நீண்டுகொண்டே வந்தது. சுவர்க் கடிகாரம் ராகம் போட்டுப் பாடி நான்கு அடித்து ஓய்ந்தது. சமையற்கார ராமன் ஒவல் கரைத்துக் கொண்டு வைத்தவன், ''இரவுச் சாப்பாட்டுக்கு....'' என்று தலையைச் சொறிந்தவாறு கேட்டான்.

''ஒன்றும் வேண்டாம் போ. அண்ணாவோ ஊரில் இல்லை. சூடாக ஒரு டம்ளர் பால் கொடு, போதும். உனக்குத் தேவையானால் சமைத்துக் கொள்'' என்றேன்.

இதே சமயம் போன் மணி அடித்தது. யாராக இருக்கும்? கௌசல்யாவாக இருக்குமோ? இரண்டு மூன்று நாட்களாக அவள் என்னிடம் பேசவேயில்லையே! ரிசீவரை எடுத்துக் குரல் கொடுத்தேன்.

''ஹலோ...''

''ஹலோ! நான்தான் பாஸ்கர் பேசுகிறேன். நானும் கௌசல்யாவும் உங்களுடன் முக்கியமான விஷயம் பற்றிப் பேச இரவு ஏழரை மணிக்கு வருகிறோம்...''

''அவளுக்குப் பேச ஒழிவில்லையாக்கும்?''

''அதெல்லாம் இல்லை. அதுதான் நேரவே வருகிறோமே!''

'டொக்'கென்ற சத்தத்துடன் இணைப்பு துண்டிக்கப்பட்டது.

இரவு ஏழரை மணிக்கு வந்தால் கௌசல்யா சாப்பிட்டு விட்டுத்தான் போவாள். எந்த நேரத்தில் வந்தாலும் அவளுக்கு அடுப்பங்கரை ஆராய்ச்சிதான். ஆவக்காய் ஊறுகாய்ச் சாதமும், வடகமும் பொரித்துப் போட்டாக வேண்டும். பெரிய சாப்பாட்டுராமி அவள்!

வாசல் தாழ்வாரத்தில் ராமனின் தலை தெரிந்தது.

''ராமா!'' என்று அழைத்தேன்.

பவ்யமான தோற்றத்துடன் இடுப்பில் வரிந்து கட்டிய துண்டோடு ராமன் எதிரில் வந்து நின்றான்.

''ராமா! கௌசல்யாவும், பாஸ்கரும் வருகிறார்கள். உனக்கு வடித்துக் கொள்வதோடு கூடக் கொஞ்சம் சாதம் வடித்துவிடு, போதும்!''

''அதற்கென்னம்மா, சமையல் செய்வதற்கே நேரம் இருக்கிறது. ஒரு சாம்பார் வைத்து, உருளைக் கிழங்கு பொடிமாஸ் செய்தால் ஆயிற்று...'' இப்படிச் சொல்லிக் கொண்டே ராமன் உள்ளே போனான். அவன் போன சிறிது நேரத்துக்கெல்லாம் சமையலறையிலிருந்து வெங்காய மணம் வீசியது. ராமனுக்கு விருந்தினர் வருகிறார்கள் என்றால் ஓரே உற்சாகம்.

சரியாக ஏழரை மணிக்கு வாசலில் கார் வந்து நின்றது. பாஸ்கரின் பக்கத்தில் உட்கார்ந்திருந்த கௌசல்யா முன்புறம் சரிந்து விழுந்த பின்னலைப் பின்னால் தள்ளியபடி வெளியே வந்தாள். காரின் பின்புறத்திலிருந்து குழந்தைகள் இறங்கினார்கள்.

இறங்கியவர்கள் தங்கள் பெற்றோரைப் பின்தங்க வைத்துவிட்டுப் புல்தரையில் குதித்தோடி வந்து ''ஆன்ட்டி'' என்று கூவியவாறு என் அருகில் வந்து நின்றார்கள்.

கௌசல்யாவுக்கு மூத்தவன் மகன். குமார் என்று பெயர். என் கழுத்தைச் சுற்றி வளைத்தவாறு என்னை நெருக்கினான். பெண்ணின் பெயர் பத்மா. அவள் என் மடிமீது ஏறி உட்கார்ந்து கொண்டாள்.

''ஹலோ, சுமித்திரா! உன்னுடைய தனிமையை, சிந்தனைகளை யெல்லாம் கலைக்க நாங்கள் வந்துவிட்டோம். அடடா! இந்த வால்கள் என்ன இப்படித் தலைமேல் ஒன்றும் மடிமேல் ஒன்றுமாக ஏறிக் கொண்டிருக்கின்றன! ஹூம்...'' பாஸ்கர் புன்முறுவ

லுடன் என்னை வணங்கியபடி எதிரில் இருந்த நாற்காலியில் உட்கார்ந்தான். ராமன்தான் எல்லோருக்கும் தக்காளி ஜூஸ் கொண்டு வந்து வைத்தான்.

குமாரும் பத்மாவும் தக்காளி ஜூஸைக் குடித்துவிட்டுத் தோட்டத்துக்கு விளையாடப் போய் விட்டார்கள்.

குழந்தைகள் வெளியே போய்விட்டார்கள் என்று தெரிந்த தம்பதியர் அர்த்தத்துடன் என் முகத்தைக் கூர்ந்து பார்த்தனர். கௌசல்யாவின் அழகு முகத்தில் துயரத்தின் சாயை படர்ந்திருந்தது. பாஸ்கரனின் நெற்றியில் கவலைக் கோடுகள்.

எனக்கொன்றும் புரியவில்லை. கணவன் மனைவிக்குள் ஏதாவது தகராறு இருக்குமோ? அவர்கள் என் எதிரிலேயே சில்லறைச் சண்டைகள் போட்டுக் கொள்வார்கள். பழம், காய், என்று 'டூ' கூட விடுவதுண்டு. இந்த ஊடலெல்லாம் கணத்தில் மறைந்து களிப்பில் மூழ்கியதையும் பார்த்திருக்கிறேன்.

நான் ஆவலுடன் அவர்களை நோக்கினேன்.

கௌசல்யாதான் முதலில் பேச்சை ஆரம்பித்தாள்.

''சுமித்திரா! உன்னிடம் முக்கியமான ஒரு பொறுப்பை ஒப்படைக்க நினைக்கிறோம். இவருக்கு விவசாயத் துறையில் மேலும் ஆராய்ச்சி செய்யப் பண்ணை அமைப்புகளை நேரில் பார்வையிட்டுக் கற்றுக்கொள்ள, இவர் பணி புரியும் ஸ்தாபனம் இவரை அமெரிக்காவுக்கு அனுப்ப ஏற்பாடு செய்திருக்கிறது. நானும் அப்படியே இவருடன் சென்று கல்வித் துறையில் மேலும் பட்டம் பெற்று வரலாமே என்று எண்ணுகிறேன். குழந்தைகள் இருவரையும் உன் பொறுப்பில் விடலாமென்கிற எண்ணம்...''

''ஓ! விடலாமே! உன் குழந்தைகளைக் கண்ணும் கருத்துமாகப் பார்த்துக்கிறேன்.''

''அதென்ன, உன் குழந்தை என்றுவிட்டாய்? இருவரின் மனமும் இவ்வாறு ஒட்டிக் கொண்டபோது, உனது எனது என்ற பேத நிலையிலா பேசுவார்கள்? நம் குழந்தைகள் என்று சொல்'' என்றாள் கௌசல்யா உணர்ச்சிப் பெருக்கோடு.

பாஸ்கர் சிரித்தார். பிறகு கௌசல்யா கவலையுடன், ''பத்மாவை விடக் குமாரை நீ எப்படிச் சமாளிக்கப் போகிறாயோ? அவன் ரொம்பவும் விஷமக்காரன். எங்கள் காரையும் இங்கேயே விட்டு விட்டுப் போகிறோம். வேண்டுமானால் வேலைக்காரியை இங்கே வந்துவிடச் சொல்லட்டுமா?'' என்றாள்.

இதற்கு நான் பதில் கூறவில்லை. சாப்பாடு தயார் என்று அறிவிக்க வந்த ராமனே பதில் கூறினான்: ''எதற்கம்மா வேலைக்காரி? நான் பார்த்துக் கொள்ள மாட்டேனா?'' என்று!

ஏறக் குறைய ஒரு விருந்தே தயார் செய்திருந்தான் ராமன். சாப்பாட்டுக்கு அப்புறம் நேரம் கழித்தே அவர்கள் கிளம்பினார்கள்.

பத்மாவும் குமாரும் 'ஆன்ட்டி'யுடன் இரவைக் கழிப்பதாகக் குதித்தார்கள்.

''இருக்கட்டுமே, பழக வேண்டுமில்லையா?'' என்றார் பாஸ்கர்.

குழந்தைகள் இருவரும் பெற்றோருக்குக் கையசைத்து விடை கொடுத்துவிட்டு உள்ளே வந்து என்னைக் கதை சொல்லும்படி கேட்டார்கள். கதை கேட்டவர்கள், சொன்னவள் எப்போது தூங்கினோமோ தெரியாது.

**கா**லை மலர்ந்து விட்டிருந்தது. ஜன்னலின் திரைச் சீலையை ஒதுக்கிவிட்டு வெளியே பார்த்தபோது எதிரே கருவேல மரத்தில் காக்கைக் கூடு ஒன்று தெரிந்தது. கன்னங்கரிய குஞ்சுகள் நான்கு வானத்தை அண்ணாந்து பார்த்தவாறு உட்கார்ந்திருந்தன.. மேலே கரும் புள்ளியாக ஏதோ தெரிந்தது. அது சிறிது சிறிதாக உருவம் பெற்றபோது தாய்ப் பறவை என்று புரிந்தது. அது தன் அலகில் எதையோ கொண்டு வந்தது. கூட்டை நோக்கிப் பறந்து வந்து கனிவுடன் குஞ்சுகளின் வாயில் உணவூட்டியது.

உள்புறம் என் பார்வை திரும்பியபோது குழந்தைகள் இருவரும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார்கள். தாயின் அரவணைப்பில் தூங்குவதாக அவர்கள் எண்ணம். அவர்களுக்குச் செவிலித் தாயாக இருக்க வேண்டிய பொறுப்பு என்னைச் சார்ந்திருக்கிறது



இப்போது. மகத்தான பொறுப்பல்லவா அது? உள்ளங்களின் உறவாடல் மட்டும் அல்ல. சதையின் சதையாக, ரத்தத்தின் ரத்தமாக... அது எப்படி மூடியும்?

ராமன் கதவைத் திறந்துகொண்டு வெந்நீர்ச் செம்புடன் உள்ளே வந்தான். குழந்தைகளை உற்றுப் பார்த்துவிட்டு வெளியே போய் விட்டான். அதிகாலையில் வெந்நீரால் தொண்டையைச் சுத்தம் செய்தால்தான் வலி குறைவாக இருக்கிறது. கழுத்தில் சுற்றியிருந்த மப்ளரைக் கழற்றி வைத்து விட்டுப் பல் துலக்கி வாய் கொப்பளித்தேன். குழந்தைகளும் எழுந்தார்கள். அன்று ஞாயிற்றுக் கிழமை. பள்ளிக்கு விடுமுறை. ஆகவே, அவர்கள் வீடு செல்வது பற்றியோ, வேறு எதைப் பற்றியுமோ நினையாமல் விளையாட்டில் மூழ்கியிருந்தார்கள்.

கௌசல்யா போன் செய்தாள்.

''ஹலோ, சுமித்திரா! குழந்தைகள் உன்னைப் பாடாய்ப்படுத்திப் பம்பரமாய்ச் சுழல வைத்திருப்பார்களே... மச் டிரபிள்சம்... இல்லையா?''

''சே... சே...அதெல்லாம் இல்லை.... அவர்கள் 'டிரேட்' ஆட்டம் விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். உன் பிள்ளை இருக்கிறானே பெரிய பிஸினஸ் புள்ளியாக வருவாண்டி....''

கௌசல்யா கலீரென்று சிரித்தாள். ''சரி, நாங்கள் இன்று அங்கே வரவில்லை. 'ஷாப்பிங்' போகிறோம். கம்பளி உடை வேறு தைக்க வேண்டும். அடுத்த வாரம் கிளம்ப வேண்டுமே!'' என்றாள்.

கௌசல்யாவும் பாஸ்கரும் அமெரிக்காவுக்குச் சென்றுவிட்டார்கள். 'ஆன்டி'யிடம் சமர்த்தாக இருப்பதாகச் சொல்லிக் குழந்தைகள் பதவிசாக நடந்து கொண்டது எனக்கு வியப்பாக இருந்தது. விண்ணில் விமானம் பறந்து செல்லச் செல்ல மண்ணில் நின்றிருந்த நான் இதயச் சுமையால் அழுந்தி நின்றேன்.

என் அருகே என்னுடன் துளியும் சம்பந்தப்படாத — உறவற்ற இரண்டு குழந்தைகளின் நலனை ஏற்றிருப்பது முற்றிலும் சரியா தவறா என்பதுதான் அந்தச் சுமைக்குக் காரணம்.

பால் வடியும் முகத்தினளான பத்மாவும் ஆண்மைக்குரிய கம்பீரம் இன்னும் அரும்ப வயதாகாவிட்டாலும், அதற்குரிய முரட்டுத்தனம் நிரம்பிய குமாரும் என் கைகளைப் பற்றி வீட்டுக்கு வரும்படி அழைக்கும்வரை நான் கற்பனையில் மூழ்கியிருந்தேன்.

அவர்களுக்கு எல்லாமே ஓரளவு புரிந்திருந்தது. தங்கள் பெற்றோர் ஏதோ காரணமாக வெளிநாட்டுக்குப் போயிருக்கிறார்கள் என்பதை உணர்ந்திருந்தனர்.

எங்காவது ஒரு சிணுங்கல், ஓர் அழுகை, முணு முணுப்பு எதுவுமே இல்லை. குழந்தைகள் குழந்தைகளாக இல்லாமல் ஏதோ பெரியவர்களைப் போல் விட்டேற்றியாக நடந்து கொண்டார்கள்.

சமையற்கார ராமனைக் கூப்பிட்டுக் கேட்டேன். ''ராமா! உன்னிடம் அவர்கள் ஏதாவது படுத்தல் கிடுத்தல் செய்கிறார்களா?''

ராமன் வழக்கம் போல் தலையைச் சொறிந்தான். ''அதெல்லாம் ஒண்ணும் இல்லையம்மா. போட்டதைச் சாப்பிடறதுகள். நாமதான் என்ன, குறைச்சலாகக் கவனிக்கிறோமா இதுகளை? காலம்பற ஜாம், வெண்ணெய் தடவிய ரொட்டி, பால். மத்தியானம் இரண்டு தினுசு காய்கறியோட சாப்பாடு..... மாலையில் பிஸ்கட், பழம், டீ.... ராத்திரி சப்பாத்தி கூட்டு, பால்..... கௌசல்யா அம்மா இருந்தால்கூட இவ்வளவு அக்கறையா கவனிக்க மாட்டார்கள். குறைப்பட்டுக் கொள்ள என்ன இருக்கு?''

ராமனோடு பேசுவதில் அர்த்தமிருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. சாப்பாடு, தூக்கம் இவை மட்டும்தானா குழந்தைகளின் உலகம்? அவை தம் பெற்றோரிடம் நடந்து கொள்ளும் விதம் எப்படி எப்படியோ இருக்குமே !

கௌசல்யா குழந்தைகளின் நலனை விசாரித்துக் கடிதம் போட்டிருந்தாள். குழந்தைகளுக்கே கடிதம் எழுதியிருந்தாள். குழந்தைகள் ஏதாவது தங்கள் குறைகளைப் பற்றி அவளுக்கு எழுதட்டும் என்று நான் அவர்களிடம் தபால் கவரைக் கொடுத்து அவர்களே கடிதம் எழுதிப் போட்டு ஒட்டி ராமனிடம் கொடுத்து 'போஸ்ட்' செய்யும் படி கூறினேன்.

பத்மாவும், குமாரும் கடிதம் எழுதி முடித்ததும் என் அறைக்குள் ஓடி வந்தார்கள்.

''ஆன்ட்டி! கடிதாசு படிக்கட்டுமா? கேட்கிறீங்களா?'' என்று கேட்டாள் பத்மா.

''நான் படிப்பேன்....'' என்றான் குமார்.

''நான் படிப்பேன்....'' என்றவாறு பத்மா கடிதத்தைப் படிக்க ஆரம்பித்தாள்.

''அன்புள்ள அம்மா,

இங்கே ஆன்டியும், நானும், தம்பியும் சுகம்.....'' என்று ஆரம்பித்தது கடிதம். அப்புறம் 'ஆன்ட்டி' அவர்களிடம் அன்பாக இருப்பது. ராமன் அவர்களைக் கவனித்துக் கொள்வது. இவைதாம் கடிதம் முழுதும்.

இவை யெல்லாம் உண்மையா? இதற்கும் மேலாக, மன அந்தரங்கத்தில் என்னைப் பற்றி ஏதாவது குறை இருக்காதா? குழந்தைகளுக்குக்கூட ரகசியங்களை வைத்துப் பூட்டி வைக்கத் தெரியுமோ?

'குறை சொல்லும்படியாக நாம் நடந்து கொள்ளாததால் இப்படி இருக்கிறதுகள் போல இருக்கு' என்று நினைத்துச் சற்றுக் கடுமையாகவே அவர்களிடம் நடந்துகொள்ள ஆரம்பித்தேன்.

''பத்மா! குமார்!'' என்று அதட்டும் குரலில் கூப்பிட்டுப் பள்ளிப் பாடங்களைப் பற்றி விசாரித்தேன். கணக்கிலும், ஆங்கிலத்திலும் அவர்கள் தவறு செய்திருப்பதைச் சுட்டிக்காட்டிக் கோபித்துக் கொண்டேன்.



''உங்கள் நிழலில் தங்க அனுமதி கொடுத்ததற்கு என் நன்றி சார்!''

குழந்தைகள் தலை குனிந்து என் கோபத்தை வரவேற்றார்கள். 'எக்ஸ்கியூஸ் மீ ஆன்ட்டி' என்று பத்மா குழைவுடன் மன்னிப்புக் கேட்டுக் கொண்டாள். குமார் வெட்கத்தோடு பென்சிலைக் கடித்தபடி நின்றிருந்தான். அவர்களைப் படிக்கப் போகும்படி சொல்லிவிட்டு, இரவு சாப்பாட்டின் போது அவர்கள் கோபத்துடன் இருக்கிறார்களா என்று கவனித்தேன்.

வழக்கம்போல் ராமனுடன் பேசியவாறு சாப்பிட்டார்கள். படுக்கப் போகுமுன் என்னைக் கதை சொல்லச் சொல்லிக் கேட்டனர்.

இந்தக் குழந்தைகளின் மனத்தைப் பற்றி அறிய நான் என்ன முயன்றும் முடியவில்லையே! கொஞ்சமும் அவர்களின் உள் சுபாவம் வெளிப்படவில்லை. 'சமர்த்துக் குழந்தைகள்' என்று ராமனும், என் அண்ணாவும் வாயாரப் புகழ்ந்தார்கள்.

**கா**லம் விரைந்து ஓடிக் கொண்டிருந்தது. கௌசல்யாவும், பாஸ்கரும் ஊர் திரும்பினார்கள். அவர்கள் ஊர் திரும்பும் தகவலைத் தாங்கி வந்த கடிதத்தைக் குழந்தைகளுக்குப் படித்துக் காட்டினேன். வெகு சாதாரணமாக அதை அவர்கள் கேட்டுக் கொண்டு விளையாடப் போய் விட்டார்கள்!

கௌசல்யாவும் பாஸ்கரும் எனக்குத் தங்கள் நன்றியை வண்டி வண்டியாகச் சமர்ப்பித்துவிட்டுக் குழந்தைகளைத் தங்கள் வீட்டுக்கு அழைத்துப் போனார்கள்.

அங்கே அன்றிரவு எனக்கு விருந்து வேறு. இரண்டு வருஷங்களாக என்னுடன் ஒன்றிவிட்ட குழந்தைகள் இல்லாமல் அந்த வீடே என்னவோ போல் இருந்தது. ராமனுக்கும் வேலை ஓடவில்லை. சீக்கிரமே அவர்கள் வீட்டுக்குச் சென்றேன். அயல் நாடுகளிலிருந்து வாங்கி வந்த கலைப் பொருள்கள், மற்றும் சமையலறைக்கு வேண்டிய பொருள்கள் யாவற்றையும் காட்டினாள் கௌசல்யா. பிறகு என்னை ஓய்வெடுத்துக் கொள்ளச் சொல்லிவிட்டு, விருந்து தயாரிப்பைப் பார்வையிடச் சென்று விட்டாள். எனக்கு நேரம் போகவில்லை. தோட்டத்தைச் சுற்றி வரக் கிளம்பினேன். கௌசல்யாவின் வீட்டுத் தோட்டம் மிகவும் அழகானது. வகை வகையாக அங்கே செடிகள், கொடிகள் உண்டு. அவற்றைப் பராமரிக்கப் பல ஆட்களும் இருந்தார்கள்.

திராட்சைப் பந்தலின் கீழ் பத்மாவும், குமாரும் உட்கார்ந்து சுவாரசியமாக ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். நான் மறைந்திருந்து அவர்கள் பேச்சைக் கேட்டேன்.

''ஏண்டா, குமார்! அப்பா உன்னைக் கோபிச்சுண்டு அடிச்சாளேன்னு வருத்தமா இருக்கியா?'' என்றாள் பத்மா.

''சேச்சே! அதெல்லாம் ஒண்ணுமில்லை. பின்னே அடிக்க மாட்டாளா? அமெரிக்காவிலேயிருந்து வாங்கிண்டு வந்த ரயில் பொம்மையைச் சாவி கொடுக்கத் தெரியாம உடைச்சால் நன்னாத்தான் அடிப்பா..... உன்னைக்கூடத்தான் அம்மா கன்னத்தைப் பிடிச்சு நிமிண்டினாளே.....!''

''ஆமா.... 'ஆன்ட்டி' நம்மை அடிச்சதே இல்லைடா. அவா வீட்டுப் புத்தர் பொம்மையை உடைச்சப்போக்கூடப் போனாப் போறதுன்னுட்டா, இல்லையா? தப்பு செஞ்சா அம்மா அப்பாதான் கண்டிப்பா. நமக்கும் பயம் இருக்கும்......''

''உனக்கு இங்கே பிடிச்சிருக்கா.... 'ஆன்ட்டி' வீடு பிடிச்சிருக்கா, பத்மா?''

''சந்தேகமென்ன? இங்கேதான். அங்கே விருந்தாளி மாதிரிதானே நாம இருந்தோம்?''

''அம்மாகூட அப்படித்தான் சொல்றாள். அந்தத் தேசத்துலே எல்லாம் எத்தனை சௌகரியம் இருந்தாலும், இங்கே வந்தப்புறம்தான் மனசு நிம்மதியா யிருக்காம்.''

நான் இதுவரை புரிந்து கொள்ளாமல் இருந்த வினாவுக்கு விடை கிடைத்ததும் என் மனம் நிறைந்தது. குழந்தைகள் குழந்தைகளாகவே இருக்கத் தாயின் அதட்டலும், தந்தையின் கண்டிப்பும் தேவைதான்.

அவர்கள் விருந்தாளிகளாகவே என்னிடம் இருந்தார்கள்.

# வாழ்க்கை என்னும் உறவு



சரோஜா ராமமூர்த்தி

மேஜை மீது வைக்கப்பட்ட காப்பி ஆறிக் கொண்டிருந்தது. ஜக்கு என்றும் அப்படி இருந்ததில்லை. உற்சாகமாக 'அம்மா' என்று கூவி அழைத்தவாறு அலுவலகத்திலிருந்து திரும்பி வருவான். களைப்பு, சோர்வு, சிடுசிடுப்பு எதுவுமே அவனிடம் அவள் கண்டதில்லை. வாடா மலர் போல் என்றும் பிரசன்னமாக அவன் இருப்பதையே நாராயணி பெரிதும் விரும்பினாள். அப்படியே அவனை எந்தக் கஷ்டமும் தெரியாமல் ஆளாக்கியிருக்கிறாள். இன்று ஏன் அவன் முகம் வாடி வதங்கி இருக்கிறான்? தயங்கியவாறு அருகில் வந்து நின்றாள் நாராயணி. மெதுவாக மகனின் தலையை வருடிக் கொண்டே, "ஏண்டா, அப்பா! ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறாய்?" என்று கேட்டாள்.

"ஹூம்...." என்றான் ஜக்கு. "ஒரு மாதிரியுமில்லை, ஒன்றுமில்லை..." அலுப்புடன் வார்த்தைகள் வந்தன.

இப்பொழுது நாராயணி அலுத்துக் கொண்டாள். "ஏண்டாப்பா! உன்னைப் பெற்று வளர்த்து எல்லாப் பொறுப்புக்களையும் நானே சுமந்து ஆளாக்கி விட்டேனே! இனிமேல் நீ அலுத்துக் கொள்ளத்தான் செய்வாய்...." அவளும் கன்னத்தில் கையை ஊன்றியபடி கதவோரமாக மகனுக்கு எதிரில் வந்து உட்கார்ந்தாள். ஜக்கு தாயின் கவலை தேங்கிய முகத்தைப் பார்த்தான். பார்த்தவுடன் அவனுக்கு இரக்கம் மேலிட்டது.

"இதோ, பார், அம்மா! இத்தனை காலம் நீ என்னை அதட்டி உருட்டி வளர்த்து விட்டாய்; படிக்க வைத்தாய். எப்படியோ வேலையும் கிடைத்து விட்டது. இத்துடன் நீ என்னை விட்டிருக்க வேண்டும். அதுதான் இல்லை. நான் கலியாணம் செய்து கொண்டு குடியும் குடித்தனமுமாக இருக்க வேண்டும் என்று வேறு ஆசைப்பட ஆரம்பித்துவிட்டாய்."

ஜக்குவின் குரல் வேதனையுடன் ஒலிப்பதை நாராயணியால் தாங்க முடியவில்லை.

"ஜக்கு! நான் ஆசைப்பட்டது தவறாடா? ....தவறு? இல்லை, உன்னைத்தான் கேட்கிறேன். காலமெல்லாம் உனக்காகவே வாழ்ந்த நான், ஆசைகளையெல்லாம் அடியோடு குழி வெட்டிப் புதைத்தவளாக வாழ்ந்த நான் இப்படி ஆசைப்படக்கூடாது என்கிறாயா?" பதற்றத்துடன் தாயின் சொற்கள் சூடாகவே வெளி வந்தன. ஜக்கு பதறி விட்டான். வேகமாக நாற்காலியிலிருந்து எழுந்தவன் அன்னையின் அருகில் வந்து அவளுடைய எலும்புக் கரங்களைச் சேர்த்துப் பிடித்துக் கொண்டு, "அம்மா! என் பேரில் கோபித்துக் கொள்ளாதே. இது நாள் வரை உன் வார்த்தையை எதிர்த்தோ, மீறியோ நடந்திருக்கிறேனா? என்னை — ஏன் நம்மைச் சூழ்ந்துள்ள இந்த அவப்பெயர் இருக்கும் வரை எனக்கு யாரம்மா பெண் கொடுப்பார்கள்?" என்று கேட்டு விட்டுக் கண்ணீர் பெருக்கினான் அவன்.

நாராயணி கல்லாகச் சமைந்து விட்டாள். மகனின் கேள்விக்குப் பதில் கூறாமல் மலைத்து உட்கார்ந்து விட்டாள். கால வெள்ளத்தோடு எதிர்நீச்சு போட்டுக் கரையேறிவிட்டோம் என்கிற எண்ணமும் அந்த வினாடியே உடைந்து சிதறியது. பெண்ணைப் பெற்றவர்கள் வரதட்சிணை கேட்டால் கொடுத்துவிடுவார்கள். சீர் சிறப்புக்கள் வேண்டுமென்றால் சிறப்புடன் செய்வார்கள். ஆனால் பிள்ளைக்குத் தகப்பனார் கல்லைப் போல் எங்கோ இருக்கிறார் என்று கூறினால் ஏன், என்ன என்று கேட்க மாட்டார்களா? வாழாவெட்டி வளர்த்த பிள்ளை என்று ஒரு தினுசாகத்தானே அவர்கள் பார்க்கிறார்கள்?

நாராயணி தன் கணவனை விட்டுப் பிரிந்தபோது நிமிர்ந்த உள்ளத்துடன் நான்கு வயதுப் பையனின் கையை உறுதியாகப் பற்றியபடி அவளுக்கு உரித்

தாக இருந்த கணவன் வீட்டுப் படிகளில் இறங்கித் தெருவில் நடந்தாள். உலகம் பரந்து கிடக்கிறது. நேர்மையாக, மானத்துடன் வாழ இந்தப் பரந்த உலகம் இடம் கொடாமல் போய் விடப் போகிறதா என்றுதான் அன்று நினைத்தாள். அவள் அவனை விட்டுப் பிரிய பல காரணங்கள் இருந்தன. 'திருமணங்கள் சுவர்க்கத்தில் நிகழ்த்தப்படுகின்றன. நம் செயலில் இல்லை' என்கிற வாக்கை அப்படியே ஒத்துக்கொள்ள ஜக்குவின் தந்தை தயாராக இல்லை. திருமணம் பூமியில்தான் நிகழ்த்தப்படுகிறது. அதில் இப்படித் தோல்வியுறும் திருமணங்கள் பெரும்பாலும் பணத்தை முதலாக வைத்து ஆடப்படும் சூதாட்டம் போன்றது என்று அவன் கருதினன். மனைவி அழகியல்ல என்பது மட்டும் அவன் வாதமல்ல; குணப் பொருத்தமும் அமையாதவள் என்கிற முடிவுக்கும் வந்து விட்டான். நாராயணியின் திண்மையான மனம் கணவனின் போக்குக்கு நெகிழ்ந்து கொடுக்க வில்லை.

அவன் கிழக்கு என்ருல் இவள் மேற்கு என்பாள். இந்த லட்சணத்தில் மகன் பிறந்ததை அவன் மகிழ்ந்து வரவேற்கவில்லை. இந்த அழகான மனைவியிடம் குழந்தை பிறக்க வேண்டும் என்று தவமா கிடந்தான்? உலகத்தில் எத்தனையோ வேண்டாத உயிர்கள் தோன்றுவது போல் ஜக்குவும் பிறந்தான். குழந்தை பிறந்தால் கணவன் மனைவியின் உறவு பலமடைந்து விடும் என்று மற்றவர்கள் சொன்னதைப் பொய்யாக்குவது போல்அவன் ஒரு நாளாவது தன் குழந்தை, தன் உயிரின் உயிர் அது என்று எட்டிக்கூடப் பார்க்கவில்லை.

மகனுடன் தன்னை வெறுத்து ஒதுக்கியதால் நாராயணியின் திண்மை இன்னும் வலுப் பெற்றது. ஜக்குவுக்கு நான்கு வயதாகும் போது அவள் அவனிடமிருந்து வெளிஉலகில் குதித்து விட்டாள்; எப்படியோ காலம் தள்ள முடியாமலா போய் விடும் என்கிற நம்பிக்கையில்.

இருபது வருஷங்கள் ஆகி விட்டன. ஜக்கு அவன் தந்தையைப் போலவே நல்ல உயரம். அதற்கேற்ற பருமன். மூக்கு, விழிகள், பேச்சு, சிரிப்பு எல்லாம் அப்பாவை உரித்து வைத்திருந்தன. மகனைப் பார்க்கும்போதெல்லாம் நாராயணிக்கு ஒரு நிறை ஏற்பட்டது. அவரை அந்தக் காலத்தில் முதன் முதலாகப் பார்த்த நினைவு பளிச்சிடப் பெருமையோடு மகனைப் பார்த்துக் கொண்டே யிருப்பாள்.

''என்னம்மா அப்படிப் பார்க்கிருய் ?'' என்று ஜக்கு கேட்பான்.

''ஒன்றுமில்லையடா! என்னவோ பழைய ஞாபகம்....''

''என்ன ஞாபகம்? அந்த மனிதனைப் பற்றி நினைத்துக் கொண்டிருப்பாய்....''

''ஜக்கு! நீ என்ன பேசுகிருய்? அந்த மனிதன் என்ரு அவரை அழைப்பது? அவர் உன்னைப் பெற்ற தகப்பஞர்டா.... அப்படிச் சொல்லாதே அப்பா—''

''ஹூம்.... மகா தகப்பன்—'' என்று கூறிவிட்டு வெளியே போய் விடுவான் அவன்.

நாராயணி தனக்குள்ளாகவே பேசிக் கொண்டாள். 'ஐந்து வயசிலேயே அவன் தகப்பனிடம் தன் குரோதத்தைக் காட்டி விட்டான். 'அந்த மனிதன்' என்று அவன் இன்றுதாஞ புதிதாகச் சொல்கிருன். எப்பொழுதுமே அப்படித்தான் பேசுகிருன். இனி தகப்பனுக்கும், மகனுக்கும் ஒட்டு உறவு ஏற்படுமோ, ஏற்படாதோ?'

நாராயணி வீட்டை விட்டு வெளியேறிய பிறகு ஜக்குவின் தகப்பஞர் மலை போலத் தம் தாயை நம்பி வாழ்ந்தார். அவர் சம்பாதித்துக் கொடுக்க, அன்னை சமைத்துப் போட இப்படிக் காலம் ஓடிக் கொண்டிருந்தது. இதில் ஒரு விசேஷம் என்னவென்ருல் அவர் தாம் கடமை தவருமல் வாழ்பவர் என்றும், தம்மைப் பெற்றவர்களிடத்தும், உடன் பிறந்தவர்களிடத்தும் மாருத அன்பு கொண்டிருப்பவர் என்றும் அத்துடன் தம் கடமை முடிந்து விட்டதாகவும் நினைத்து அடியோடு நாராயணியை மறந்து விட்டார். சின்னஞ் சிறு பையனை வெளியேறிய ஜக்குவைப் பற்றி அவர் மனத்தில் எதுவும் இல்லை. மனைவிக்கு மாதா மாதம் சிறு தொகை ஒன்று அனுப்பி விட்டுத் தம் கடமையைக் கைகழுவி விட்டார் என்று சொல்லலாம்.

முதலில் அந்தப் பணத்தை நாராயணி ஏற்றுக் கொள்ளத் தயங்கிஞள். ஆனுல், மகனை வளர்த்து ஆளாக்க வேண்டிய பொறுப்பில் தாயாருக்கு மட்டும் பங்கு இல்லை, தந்தைக்கும் உண்டு என்பதை உணர்ந்தவுடன் அந்தப் பொறுப்பு இந்தப் பண உதவியாகத்தான் இருக்கட்டுமே என்று அதை அவள் மறுத்து விடவில்லை.

உலகில் கணவனும், மனைவியும் ஏதோ காரணங்களினுல் ஒருவரை விட்டு ஒருவர் பிரிந்து வாழ்கிருர்கள். இவர்கள் பிரியும் போது நாராயணி வாயிற்படி இறங்குமுன்பு சற்றுக் கடுமையாகப் பேசிஞள்.

''என்றைக்காவது என் தயவு உங்களுக்குத் தேவைப்படும். அப்படித் தேவைப்பட்டால் என்னைக் கூப்பிடுங்கள்... வருகிறேன். ஆமாம்....கண்டிப்பாக வருகிறேன்.''

அவள் கணவர் அவளைக் கொடூரமாகப் பார்த்தார். ''உன் தயவு என்றைக்குமே எனக்குத் தேவை இல்லை. உன்னை நாடி நான் என்றும் வரமாட்டேன். போ, வெளியே!''

பிறகுதான் நாராயணி எப்படியோ உலகில் துன்பங்கள், ஏச்சுக்களுடன் போராடித் தானும் உயிர் வாழ்ந்து, மகனையும் ஆளாக்கி விட்டுவிட்டாளே. இன்று மகனின் திருமணம் அவள் முன் மகத்தானதாக நிற்கிறது. யார் பெண் கொடுக்க வந்தாலும், நாராயணியின் மஞ்சள் பூசித் திலகமிட்ட முகத்தை வினக் குறியுடன் பார்க்கிருர்கள். கழுத்திலே மஞ்சள் குளித்துத் துவளும் திருமாங்கல்யச் சரட்டைப் பார்க்கிருர்கள். அடுத்த கேள்வி ஜக்குவின் தந்தை எங்கே என்பதுதானே? அவன் என்னவோ ஒரே வார்த்தையில், ''அம்மா! எனக்காக நீ உன் பழைய வாழ்க்கையை நினைவுபடுத்திக் கொள்ளாதே. அதை அடியோடு மறக்க முயற்சி செய்'' என்றுதான் சொல்லி வருகிருன். ஆஞல், பெற்ற தாயின் உள்ளம் அதை ஏற்றுக் கொள்ள வில்லை. இதற்கிடையில், கணவனைப் பற்றி மனைவியின் உள்ளத்தில் ஏற்பட்டிருந்த நினைவு அடியோடு போய் விட்டதா என்ருல் அதுதான் இல்லை. மகனிடம் சொல்லிக் கொள்ள முடியாத பரம இரகசியமாக அந்த நினைவு அவள்

இதயத்தில் வேரூன்றி நிலைத்து விட்டது. ஒரு தடவை அவள் ஜக்குவின் தந்தை உடல் நலம் இல்லாமல் இருக்கிறார் என்று கேள்வியுற்றுப் பசியும், பட்டினியுமாகக் கோயிலை வலம் வந்து பிரார்த்தித்திருக்கிறாள். தூங்காமல் எத்தனையோ இரவுகளைக் கண்ணீர் வடித்தே கழித்திருக்கிறாள். மனத்தளவில் கூட அவருக்கு எந்தத் தீங்கு நேர்வதையும் அவள் உள்ளம் ஒப்புக் கொள்ள வில்லை. பிறகு யாரோ சொன்னார்கள், அவர் உடல்நலம் பெற்றுவிட்டார் என்று. அன்று, அவள் ஏனோ மகிழ்ந்து உற்சாகமாக இருந்தாள்.

அந்த மனிதர்தான் என்ன? வாழ்க்கைத் துணையின் மதிப்பை உணராமல் இருந்த காலம் தேய்ந்து படிப்படியாக அதன் பெருமையை உணர்ந்த போது மிகமிக ரகசியமாக நாராயணியை நினைத்துக் கொள்வார்.



பாட்டி; ஏண்டாப்பா சிவராமா! நாலு தடவை பெயிலான உனக்குக் கூட கதிமோட்சம் ஏற்பட்டு விட்டதே! எஸ். எஸ். எல். சி. பரீட்சையை ஆயுசு பூரா எவ்வளவு தடவை வேண்டுமானாலும் எழுதலாமாமே...என்ன மோப்பா .... தீர்க்காயுசா இருந்து பரீட்சை எழுதி முடி!

யாரோ அவரிடம் வந்து சொன்னார்கள், எங்கோ அனாதை ஆசிரமத்தில் மகன் சாப்பாட்டுக்காகக் கையில் அலுமினியத் தட்டை வைத்துக் கொண்டு வரிசையில் நின்று உணவு பெறுகிறான் என்று. அவனை — ஏன் அவளை— அப்படிக் கைவிட்டது நியாயம்தானா என்று அவரிடம் அவர் உள் மனம் இடித்துக் கேட்டது. அவரா கைவிட்டார்? மனைவிக்குரிய இடத்தை அவளுக்கு அவர் அளிக்கவில்லையே தவிர, தம் நிழலிலிருந்து விலகிப்போ என்று ஒரு நாளும் அவர் சொன்னதில்லை. அவளாகத்தான் உரிமை கோரி, தன் வழியே பிரிந்து வெளியே வந்தாள். எங்கோ ஓர் அனாதை விடுதியில் மகனுடன் வாழ்ந்தாள். அவனை ஆளாக்கியும் விட்டுவிட்டாள்.

ஜக்குவுக்காகப் பெண் கொடுக்க வந்தவர்கள் ஜக்குவின் தந்தையைப் பற்றி அறிய ஆவலாக இருந்தார்கள். உயிரோடு ஒரு மனிதர் கட்டிய மனைவியையும், பெற்ற மகனையும் துறந்து விட்டார் என்றால் அதை உலகம் ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை. அப்படி அவர் துறவியாகப் போயிருந்தால் சரிதான். அவருக்கென்று மற்றவர்கள் விதம் விதமான உறவுகளில் நடமாடி வந்தார்கள். அவர்களுடன் அவரும் இணைந்து வாழ்கிறார்.

நாராயணிக்கு மகன் அவ்வாறு கூறிய பிறகு ஊண் உறக்கம் கொள்ள வில்லை, பட்ட மரம் போல் நின்று விட்ட தன் வாழ்க்கையில் பசுமை காணுவதானால் ஜக்குவின் திருமணம் தான் இனி அவள் குறிக்கோளாக இருக்க வேண்டும். அதற்கு அவரைப் போய்ப் பார்த்துப் பேச வேண்டும். அவரை எப்படிப் போய்ப் பார்ப்பது?

இந்தச் சமயத்தில்தான் அவளுக்கு ஒரு புதுச் செய்தி கிடைத்தது. நாராயணியின் மாமியார் வீட்டில் பல மாறுதல்கள் நடந்து விட்டனவாம். அவருடன் பிறந்தவர்களுக்கு எங்கெங்கோ வேலையாகி, திருமணமாகிக் குழந்தை குட்டிகளுடன் தனித்தனியாகப் பிரிந்து வாழ்கிறார்களாம். இவர் மட்டும் வேலையிலிருந்து ஓய்வு பெற்று மனச்சாந்திக்காகச் சிறு பள்ளிக்கூடம் ஒன்று நடத்துகிறாராம். பள்ளிக்கூடம் என்றதும் நாராயணி விரக்தியாகச் சிரித்துக் கொண்டாள். பள்ளிக்கூடக் 'குழந்தைகளைப் பார்த்த பிறகுகூட அவர் தம் மகனைப் பற்றி நினைக்காதது வியப்புக்குரிய விஷயமாக இருந்தது. பிறருக்கு இரங்கும் அவர் தம் சொந்த விஷயத்தில் கல்லினும் கடினமாகிவிட்ட விந்தையின் இரகசியம் நாராயணிக்குப் புரியவில்லை. ஒரு வேளை, பள்ளிக்கூடம், சேவை என்றெல்லாம் தம்மைத்தாமே ஏமாற்றிக் கொள்ளுகிறாரோ என்னமோ?

அடுத்த நாள் அலுவலகத்திலிருந்து வந்த ஜக்கு தன் தாயார் எங்கோ வெளியில் கிளம்ப ஆயத்தமாக நிற்பதைக் கண்டு, ''எங்கேயம்மா பிரயாணம்?'' என்று கூடக் கேட்டு விட்டான். நாராயணி சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டுப் பிறகு, முகத்தில் துணிவுடன், ''உன் அப்பாவை அழைத்து வரப் போகிறேனடா'' என்றாள்.

'' அவரையா? அந்த மனிதரையா?''

''டேய், மடையா! உனக்கு அவர் என்னடா தீங்கிழைத்தார்? அவரிடம் நீ பெற வேண்டிய உரிமைகளை, அன்பை நான்தான் உன்னைப் பெற விடாதபடி பிரித்து அழைத்து வந்தேன். இன்று உனக்காக அவரைத் தேடிப் போகும் நான் அன்றே உனக்காக அவர் நிழலில் அல்லல்பட்டோ, அவதிப்பட்டோ வாழ்ந்திருக்கலாம்....''

நாராயணி ஊருக்குப் பிரயாணம் ஆன அன்றே அவளைத் தேடி ஒரு கடிதம் ஊருக்குப் பிரயாணப்பட்டுக் கொண்டிருந்தது. ஜக்குவின் தகப்பனார்தான் அந்தக் கடிதத்தை எழுதியிருந்தார். கடவுளால் ஏற்படுத்தப்பட்ட உறவுகளை உதறி, தம் கடமையை மறந்து வாழும் எவனுக்கும், மற்றப் பணிகளாலோ, சேவைகளினாலோ இன்பம் கிடைப்பதில்லை. என்னதான் தன்னலம் கருதாது சேவை செய்தாலும், ஊரும் உலகமும் அவரைத் தம் கடமையிலிருந்து நழுவி விட்டவர் என்று சுட்டிக் காட்டிப் பேசுகிறது. ஆகவே, இனிமேல் அவரும் நாராயணியைத் தேடி வந்து அவளுடன் தம் சேவை வாழ்க்கையை இணைத்துக் கொள்ள விழைகிறார் என்பதுதான் கடிதத்தின் சாரமாக இருந்தது.

ஜக்கு கடிதத்தைப் பல முறைகள் பார்த்துவிட்டு, ''பாவம்! அப்பா!'' என்று அவரைப் பற்றி முதன் முறையாக அநுதாபத்துடன் நினைத்தான்!

# மாற்றங்கள்

‘‘சியாமி! நம்ப ரவியின் உபநயனத்துக்கு அருண் வருகிறானும். கடிதம் போட்டிருக்கான். படிச்சுப் பார்’’ என்றதும்தான் அவள் தன் நினைவு அலைகளிலிருந்து விடுபட்டாள். ‘அருண்! அவனைப் பார்த்து ஆறு ஏழு வருஷங்கள் ஆகியிருக்குமோ? இருக்கலாம். ஆனால், அப்படி இருக்காது என்று அவள் உள் மனம் சொல்லியது. எப்போதுமே அருணைப் பற்றி அவள் நினைத்தே வந்தாள். வளைந்து நிமிர்ந்த அந்தக் கூரிய நாசி. நெற்றிக்கு மேலே படிய வாரிவிடப்பட்ட கேசம். கன்னத்து ஓரங்களில் இறங்கி வரும் கிருதா. விஷமத்தனம் கொப்பளிக்கும் பார்வை.

அந்த அருண் சியாமியோடு பழகியபோது சியாமி இப்படி இந்த உருவத்தில் இல்லை. தளதளவென்று வளர்ந்து வரும் வாழைக் கன்றைப் போல் அப்படி ஒரு வளர்த்தி. புசுபுசுவென்று சிலிர்ப்பிக் கொண்டிருக்கும் குழலை வாரி ரிப்பன் போட்டு வெறுமனே முடிந்திருப்பாள். அழகு சொட்டும் களையான முகத்தில் அலை பாயும் விழிகள். நறுக் நறுக்கென்று பேசும் வக்கணை வேறு. எங்கோ நாகபுரியிலிருக்கும் அருணும் சியாமியும் நண்பர்கள் ஆனதே பெரிய கதை. அந்த வருஷம் பத்தாவது பரீட்சை எழுதி முடித்துவிட்டுச் சியாமி தன் அத்தையின் வீட்டுக்கு நாகபுரிக்குக் கிளம்பினாள். சென்னையை விட்டே அவள் எங்கும் போனதில்லை: அகன்ற நதிகள், உயர்ந்த மரங்கள், மலைகள் இவைகளைத் தாண்டி ரயில் விரைந்தபோது கண் இமைக்காமல் ஜன்னல் கம்பிகளின் மீது முகம் புதைத்துப் பார்த்துக் கொண்டே சென்றாள்.

அப்படியே ஜன்னல் கம்பிகளின் மீது முகம் புதைத்துத் தூங்கியும் போனாள். ரயில் நாகபுரியை அடைந்தது. ரயில் நிலையத்தில் அருண் வந்திருந்தான். மிக எளிமையாக, வனப்போடு காணப்பட்டான் அவன். அத்தையின் பெண் ராது ரயிலிலிருந்து தாவி அவன் தோள்களில் உட்கார்ந்து கொண்டுவிட்டாள்.

‘‘அருண்! வீட்டிலே எல்லா ஏற்பாடுகளும் பண்ணி விட்டாயா? இவ அப்பா ஊரில் இல்லையாமே. ‘காம்ப்’ எப்போ முடியப் போறது? இந்த வருஷம் இங்கே வெய்யில் அதிகமாமே?’’ அத்தை கேட்ட கேள்விகளுக்



கெல்லாம் அமைதியாகப் பதில் அளித்தான் அருண். இடையிடையே சியாமியை அவன் கவனித்தான். என்ன இருந்தாலும் தென்னிந்தியப் பெண்களுக்கு முகத்திலே ஓர் அலாதி வசீகரம் இருக்கத்தான் செய்கிறது என்று அவன் நினைத்திருக்க வேண்டும். அந்தப் புன்னகை அப்படி அவன் நினைப்பதை உணர்த்திக் கொண்டிருந்தது. 'டாக்கியில் வீட்டுக்குப் போகும்போது அத்தை அருணைப் பார்த்து, ''அருண்! இவள்தான் என் அண்ணா பெண் சியாமி!'' என்று அறிமுகம் செய்து வைத்து, ''ஏண்டாப்பா, உன்னை இவளுக்கு யார் என்று சொல்வது?'' என்று கேட்டாள்.

''எதை வேண்டுமானாலும் சொல்லுங்களேன். ஆண்டாள், அடிமை, சேவகன் என்று எது வேண்டுமானாலும்.'' அருண் விஷமத்தனமாகச் சிரித்தான். அத்தையும் சிரித்தாள். ''நல்ல அடிமை. நல்ல சேவகன். இவன் உன் அத்திம்பேரிடம் வேலை பார்க்கிறான். நம்ப பக்கம்தானும். ஆனால், அப்பா அம்மா உறவுமுறை யாரும் இல்லாதவன்....''

சியாமி அவனை மிகுந்த அனுதாபத்துடன் பார்த்தாள்.

''ஓ! நோ... நோ... அப்பா அம்மா இல்லையா? நீங்களும் ஸாரும் எனக்குப் பின்னே என்ன உறவாம்?'' என்று கேட்டுச் சிரித்தான் அவன்.

சியாமியும் அவனும் மனம் விட்டுப் பழகினார்கள், பேசினார்கள். அந்தத் தூய நட்பில் எவ்விதக் களங்கமும் இல்லை. சியாமி திரும்பவும் சென்னைக்குக் கிளம்பியபோது அருண் ஏக்கத்துடன் விடை கொடுத்தான் அவளுக்கு.

''சியாமி! ஊருக்குப் போனதும் என்னை மறந்துவிடாதே. ஒருவேளை உனக்குக் கல்யாணம் ஆகிக் கணவன் வீட்டுக்குப் போனாலும் என்னை மறந்து விடாதே..'' என்று கேட்டுக் கொண்டான் அருண். சியாமி நீர் நிறைந்த விழிகளுடன் தலையசைத்து அவனிடம் விடைபெற்றுக் கொண்டாள்.

நாகபுரியிலிருந்து வந்த சியாமியின் வாழ்க்கையில் திடீரென்று மாறுதல் ஏற்பட்டது. பள்ளியில் அவசரமாக மாடிப் படிகளில் ஏறியவள் தடுக்கி விழுந்து மண்டையில் பலமாக அடிபட்டு ரத்த சேதத்தினால் சியாமியின் உடல் நலம் பெரிதும் பாதிக்கப்பட்டது. வெண்டைப் பிஞ்சுகளைப் போல் நீண்டிருந்த அவள் விரல்கள் குறுகிப் போய், கால்கள் நடக்க முடியாமல் படுக்கையில் கிடந்தாள் சியாமி. பல பிரார்த்தனைகள், வைத்தியம் என்று அவள் பெற்றோர் அலைந்த அலைச்சல் கொஞ்ச நஞ்சமல்ல. இடையில் அவள் அத்தை வந்து பார்த்து விட்டுப் போனாள். அவளிடம் அருணைப் பற்றிக் கேட்டிருக்கலாம். ஏதோ ஒன்று அவளைக் கேட்க விடாமல் தடுத்தது. அந்தச் சிரித்த முகம், கள்ளமற்ற பார்வை அவள் மனக் கண் முன்பு ஆறுதலாகத் தோன்றி மறையும். அத்தையே ஒரு நாள் பேச்சு வாக்கில் சொன்னாள். 'அருண்கூட ஊரில் இல்லை. வீட்டிலே போட்டது போட்டபடி வந்து விட்டேன். சீக்கிரம் கிளம்பணும்—'' என்று. ''அருண் எங்கே போயிருக்கான் அத்தை?'' என்று அவள் தினமாக ஒரு நாள் கேட்டே விட்டாள்.

''அவனுக்கு வேலை ஒசந்து டில்லிக்கு மாத்தலாயிடுத்து. நானே அவனைப் பார்த்து வருஷத்துக்கு மேலாச்சு. ஆள் ரொம்ப மாறிப் போயிட்டானும்...''

அன்று முழுதும் அவள் அருணையே நினைத்துக்கொண்டிருந்தாள்.

''அந்தப் பெண்ணுக்குத் திடீர் திடீர்னு பிரமை வந்துடறது. யாரோடும் பேசறதேயில்லை...'' என்று அவள் அம்மா அலுத்துக்கொண்டாள். நினைவின் அலைகளில் அமுங்கிப் போகும்போது அதன் சுகம் அந்த லயிப்பில் இருப்பவர்களுக்குத்தானே புரியும்?

சியாமி சிரித்துக் கொண்டாள். எப்படியோ நவரக்கிழி அது இது என்று மலையாள வைத்தியத்துடன் ஸ்ரீ குருவாயூரப்பனுக்குத் துலாபாரம் கொடுத்து விட்டு வந்த பிறகு சியாமி மெதுவாக எழுந்து நடமாட ஆரம்பித்தாள்.

இருந்தாலும் அந்த அழகிய கைகள்? அவை பரபரவென்று கோலம் புனைந்த அழகும், மலர் தொடுத்த வக்கணையும் அவளுக்கு நினைவின் அலைகளாகப் போயின. சூம்பிப் போயிருந்த அந்தக் கரங்கள் இப்போது சிறு சிறு வேலைகளைச் செய்து கொண்டுதான் இருந்தன. ஒட்டமும், துள்ளலும் நிரம்பிய கால்கள் மெதுவாக நடந்தன. எதிலுமே ஒரு தேக்கம். கண்கள் எங்கோ, எதையோ எதிர் பார்த்துக் காத்திருந்தன.

தாயிடமும் பகிர்ந்துகொள்ள முடியாத ஓர் ஏக்கம் அவள் இதயத்தில் குடிபுகுந்தது.

ஒரு நாள் அப்பாவும் அம்மாவும் பேசிக் கொண்டிருந்தார்கள். ''சியாமி இருக்கிற இருப்பில் அவள் கல்யாணத்தைப் பற்றி யோசனையே பண்ண முடியாது. நம்ப ராஜாவுக்காவது பூணூல் போட்டுவிடலாமே? அவனும் வளர்ந்துட்டான். இப்பப் போட்டால்தான் அழகா யிருக்கும்...'' என்றாள் அம்மா.

பெற்றோருக்குத் தான் ஒரு பிரச்னையாக இருப்பதை அப்போதுதான் உணர்ந்தாள் சியாமி. அந்த நினைவில் அவள் லயித்திருந்த போதுதான் அவள் தாயார் அருண் வரப் போவதைக் குறித்து அவளிடம் தெரிவித்தாள்.

உபநயனம் சிறப்பாக நடைபெற்றது. உறவினர்கள், அவர்கள் வீட்டு வாலிபர்கள் எல்லோருமே அவளை ஏதோ ஒரு விந்தைப் பொருளைப் பார்ப்பதைப் போலப் பார்த்தார்கள். அந்தப் பார்வைகள்? அவற்றினின்று விடுபட்டுச் சியாமி தனிமையைத் தேடி அலைந்தாள்.

கொல்லைப்புறத்திலே மற்றவர்களின் பார்வையைத் தாண்டி இருந்த மாமரத்து நிழலில் அவள் சென்று அமர்ந்தபோது அங்கு ஏற்கெனவே அருண் வந்து உட்கார்ந்திருப்பதைக் கண்டாள். அவன்தான் எப்படி மாறிவிட்டான்? அவனிடம் முன்பிருந்த எளிமை, மென்மை, இரக்கம், எல்லாம்தான் மாறி விட்டன. மனிதனிடம் நிலையாக எதுவுமே இருக்காது போலும் என்று அவள் நினைத்தவுடன் ஒரு கணம் இந்த மனிதப் பிறவியையே அவள் வெறுத்தாள். ஐந்தாறு வருடங்களில் ஒருவன் இப்படி மாறி விட்டான் என்றால்? அருணின் கையில் புகைந்துகொண்டிருந்த சிகரெட்டின் நுனி சிவப்பாக மின்னியது. ''சியாமி! உன்னோடு பேச வேண்டும்.

அதுவும் தனிமையில் பேச வேண்டும் என்று இரண்டு நாட்களாகக் காத்திருக்கிறேன்.''

''பேசலாமே!'' என்றாள் சியாமி.

''நீ இப்படியேதான் இருக்கப் போகிறாயா, என்ன?''

''பின்னே நான் பழையபடி எப்படி மாற முடியும்? இந்த மட்டும் நான் இருப்பதே ஆண்டவனின் கருணை...''

''நானும் ரொம்ப மாறிவிட்டேன் சியாமி! நாகபுரியை விட்டுக் கிளம்பிய பின் எக்க சக்கமான மாறுதல். வாழ்க்கையின் ஏற்றத் தில் இருந்ததால்தான் பள்ளத்தை நோக்கி என்னால் சடுதியில் இறங்க முடிந்தது. உண் மையைச் சொல்கிறேன், கேட்டுக்கொள்... நான் குடிக்கக் கூடக் குடிப்பேன், சியாமி. ஒருவேளை எனக்கும் காலாகாலத்தில் கல் யாணமாகி என்னை நேசிக்கவும் ஒருத்தி வந்திருந்தால் இப்படி மாறியிருக்க மாட் டேனோ என்னவோ—''

''அதனால் என்ன அருண்! உலகத்தில் பரு வங்கள் மாறுவது போல் மனித வாழ்க்கை யில் மாற்றங்கள் ஏற்படுவதுண்டு. அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. முன்பு நீ பார்த்த சியாமியா நான் இப்போது? மாறி விட்டேன் இல்லையா?''

''ஆமாம்... அந்தச் சியாமி எங்கே? அவள் என் உள்ளத்திலே நின்று என்னை ஓயாமல் படுத்திய பாடெல்லாம் எங்கே? நீ மாறிவிட் டாய் சியாமி!''

''அப்படியானால் இந்த இரண்டு மாறுதல் களும் ஒரு நன்மைக்காகத்தான் ஏற்பட்டிருக்க வேண்டும்...''

அருண் சியாமியை ஆவலுடன் பார்த் தான். அவள் குறிப்பிடும் அந்த நன்மையைப் பற்றி மேலும் என்ன சொல்லப் போகிறாள்? அந்த நன்மை... அருண் அவளை ஆசை ததும்பப் பார்த்துக் கொண்டிருந்தான்.

சியாமி மௌனமாகி விட்டாள். காற்றுக் கூட அங்கே மௌனமாகச் சியாமி பேசப் போவதைக் கேட்க நின்றிருந்தது. சில மணித் துளிகள் மௌனம் நீடித்தாலும் அவர்கள் இதயங்கள் பேசிக் கொண்டன. அருண் கீழே கிடந்த மாவிலைகளைக் கிள்ளிக்கொண் டிருந்தான். பச்சைப் பசேல் என்று அவை சற்று முன் அடித்த காற்றினால் கொத்துக் கொத்தாக விழுந்திருந்தன.

''மாவிலைக்கே தனி அழகு... கல்யாண வாசலாகட்டும், வேறு எந்த வைபவமாகட் டும், மாவிலைத் தோரணம் இல்லாமல் சிறப் புப் பெறுவதில்லை...'' என்றாள் சியாமி.

''ஆமாம்... நம் கல்யாணத்துக்கு இந்த மரத்து மாவிலைகளை ஒடித்தே தோரணம் கட்டவேண்டும்...'' அருண் இவ்விதம் கூறி விட்டுத் திடுக்கிட்டு அவளை ஏறிட்டுப் பார்த்தான்.

சலனமற்றிருந்த சியாமியின் முகத்தில் விநாடியில் ஒரு மாற்றம் நிகழ்ந்தது. ஆம், அந்தி வானத்துச் செம்மை அவள் முகத்தில் இறங்கியிருந்தது!



# பிள்ளை மனம்...



சிற்றம்பலப் பண்டாரம் மண்டபத்தின் மூலையில் தூட்டுக் கம்பைச் சாத்தி வைத்து விட்டுக் குடலையில் இருந்த மலர்களைக் கீழே கொட்டினார். தங்க அரளியும், நந்தியா வட்டையும், ரோஜா அரளியுமாகப் பல வர்ணக் குவியல்களாக அவை காணப் பட்டன. அருகில் கிடந்த வாழை நாரை, செம்பில் இருந்த தண்ணீரில் நனைத்து, மலர்களைச் சேர்த்து மாலை கட்ட ஆரம்பித்தார் பண்டாரம்.

"பண்டாரத்தையா! இந்தாங்க பலகாரம்" என்று ஆப்பக்காரக் கிழவி நாலு ஆப்பங்களையும், ஒரு குவளைத் தண்ணீரையும் கொண்டு வந்து வைத்தாள் அவர் எதிரில்.

"வேண்டாம், அம்மா!" என்று சொன்னார் பண்டாரம்.

"ஏங்க ஐயா, உடம்பு ஏதாச்சும் சுகம் இல்லீங்களா?" என்று மிகுந்த அக்கறையுடன் விசாரித்தாள் கிழவி.

"உடம்புக்கு ஒன்றுமில்லை, அம்மா. மனசு தான் இன்று விடிந்ததிலிருந்து சரியாக இல்லை. ஒரே கலக்கமும் குழப்பமுமாக இருக்கிறது" என்று கூறி விட்டு அவர் மாலை கட்டுவதில் மூழ்ந்தார்.

"சாமிக்கே மனசில் கலக்கம் ஏற்பட்டால் நாங்கள் என்ன செய்யறது?" என்று சொல்லிக் கொண்டே ஆப்பக்காரக் கிழவி ஆப்பங்களை யெல்லாம் எடுத்து வைத்துக்கொண்டு தன் குடிசையை நோக்கி நடந்தாள்.



சிற்றம்பலப் பண்டாரம் மாலை கட்டுவதை நிறுத்திவிட்டுச் சிறிது நேரம் அவள் செல்வதையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார். பிறகு ஒரு பெருமூச்சுடன், "திருச்சிற்றம்பலம்" என்று சொல்லியவாறு மாலை கட்ட ஆரம்பித்தார்.

கோவிலுக்குள்ளிருந்து மேளச் சத்தம் கேட்க ஆரம்பித்தது. மாலையை எடுத்துக் கொண்டு பண்டாரம் நடராஜர் சன்னதிக்குச் சென்றார். பயபக்தியுடன் அர்ச்சகரிடம் அதைக் கொடுத்து விட்டு விபூதிப் பிரசாதம் பெற்றுக் கொள்ளும் போது அவர் கரம் இலேசாக ஒருதரம் நடுங்கியது.

"என்ன பண்டாரம்? உமக்கு உடம்பு கிடப்பு சரியில்லையா? ஒரு மாதிரியாக இருக்கிறீரே!" என்று விசாரித்தார் அர்ச்சகர்.

எதிரில் தென்படுகிறவர்கள் எல்லோரும் அவரை அந்தக் கேள்வியையே கேட்டார்கள்.

சரோஜா ராமமூர்த்தி



கணவர் :—போட்டோக்கார ஐயா! நேரம் ஆக்கிக் கொண்டிருக்கீங்களே? என் மனைவி இப்படிச் சிரிச்ச முகமா ரொம்ப நேரம் இருக்க முடியாது. மாறி விடும்...... சீக்கிரம் படம் எடுங்க ஐயா!

---

காலையில் எழுந்தவுடன் திருக்குளத்தில் குளித்தார். வழக்கம் போல் கோயில் தோட்டத்தில் மலர்களைப் பறித்து மாலை புனைந்து வந்து கொடுத்தார். தலைவலியோ, காய்ச்சலோ வேறெதுவும் இருப்பதாகஅவருக்குத் தோன்றவில்லை. ஆனால் உள்ளம் மட்டும் கவலையில் ஆழ்ந்திருந்தது. பண்டாரம் சுரத்தில்லாமல் கோயில வாகன மண்டபத்தைத் தேடிப் போனார். பெரியதும் சிறியதுமாகப் பல வாகனங்கள் அங்கே இருந்தன. யாளியும், சிம்மமும், மயிலும், ரிஷபமும் வேற்றுமை இல்லாமல் பக்கத்தில் பக்கத்தில் அமர்ந்து இருக்கும் அதிசயத்தை நினைத்துப் பார்த்தவாறு பண்டாரம் சுவர் ஓரமாகத் துணியை விரித்துப் போட்டுப் படுத்துக் கொண்டார்.

மேளச் சத்தம் கேட்டுக் கொண்டே இருந்தது. ஒவ்வொரு சன்னதியாக அர்ச்சகர் நைவேத்தியம் காட்டி, தீபாராதனை செய்து கொண்டே வந்தார். மேளத்தின் பின்னால் பண்டாரமும் சென்று தரிசனம் செய்து விட்டு வருவது வழக்கம். நடராஜரைப் பார்த்து விட்டு வந்தவர் சிவகாமியைப் பார்க்க மறந்து கவலையில் மூழ்கி மண்டபத்தில் படுத்துக் கிடந்தார். பிராகாரத்தில் இருவர் பேசிக் கொண்டே வந்தார்கள்.

"சபேசா! எங்கே உன்னை ஊரிலே நாலைந்து நாட்களாய்க் காணவில்லை? திருவாதிரை உற்சவத்துக்குக் கடைத் தெருவில் வசூல் ஆக வேண்டும. உன்னைத்தான் அனுப்பவேண்டும் என்று நினைத்திருக்கிறேன்" என்றார் ஒருவர்.

"சாமி காரியத்துக்கு என்னங்க தடை சொல்ல இருக்குது? ஆனால், ஊரிலே எங்க அத்தையம்மா காயலாவா இருக்காங்க. அவங்களைத்தான் போய்ப் பார்த்து வந்தேன். இன்னிக்கோ நாளைக்கோன்னு இருக்குதுங்க. பாவம், அந்த அம்மாவுக்கு ஒரு குறையும் இல்லீங்க. குழந்தை குட்டிகள், பேரன் பேத்திகள் எல்லாம் இருக்குது. மங்கையர்க்கரசி, காரைக்கால் அம்மையார் மாதிரி சிவ பக்தி அதிகம். மூத்த பிள்ளை ஒருவர் இருந்தார். குடும்பத்தைத் தாங்குவார் என்று அந்த அம்மா எவ்வளவோ நம்பிக்கையோடு இருந்தாங்க. எவ்வளவோ ஆசையா வளர்த்தாங்க. அந்தப் பிள்ளை காஷாயம் வாங்கிக் கொண்டு பண்டாரமா போயிட்டாரு. ஊட்டி வளர்த்த பிள்ளை மொட்டைத் தலையும், கோவணமுமாக நின்றால், பெற்ற வயிறு எப்படி இருந்து துடிச்சிருக்குமென்று பாருங்க. 'சிற்றம்பலம்! நான் இருக்கச்சே ஏண்டாப்பா இந்தக் கோலம்'னு அழுதார்களாம். 'என்னை எடுத்துப் போட்டுவிட்டு நீ எப்படி வேணுமானால் இருடா' என்று சொன்னார்களாம்..."

அந்தத் தாயின் தெய்விக அன்பின் வார்த்தைகளைச் சொல்ல முடியாமல் சிறிது நிறுத்தினான் சபேசன். சுவர் ஓரத்தில் படுத்திருந்த பண்டாரம் சோர்ந்த உள்ளத்துடன் விஷயத்தைக் கிரகிப்பதற்கு முயன்றார்.

"ஹூம்..." என்று பெருமூச்சு விட்டார் உடன் இருந்தவர். குழந்தையைப் பெற்று வளர்த்து உயிருடன் பறி கொடுப்பதை விடக் குழந்தையே இல்லாமல் இருப்பது எவ்வளவோ நல்லது என்று அவருக்குத் தோன்றியது. அவர் வருத்தத்துடன், "பெற்ற தாய் அப்படிக் கேட்டும் அந்தப் பிள்ளை சாமியார் ஆயிட்டுதா?" என்று கேட்டார்.

"ஆமாங்க. எனக்குத்தெரியாதுங்கஅவரை. நான் சின்னக் குழந்தையாம். துயரம் தாங்காமல் அழும் தாயைப் பார்த்து அவர் சொன்னாராம். 'தாயே! உனக்கு என்னைத் தவிர இரண்டு பிள்ளைகள் இருக்கிறார்கள்; இரண்டு பெண்கள் இருக்கிறார்கள். உன்னைச் சந்தோஷப்படுத்தி, உன் சொற்படி கேட்க அவர்கள் போதும். என்னை இறைவன் பணிக்காகக் கொடுத்து விடுங்கள்' என்று கூறி அந்த அம்மாளுடைய காலில் விழுந்து கும்பிட்டு விட்டுப் போய் விட்டாராம்......"

"அப்புறம்?" என்று விஷயத்தை மேலும் கேட்க ஆவலாக இருந்தார் உடன் இருந்தவர். தாம் வீட்டை விட்டுக் கிளம்பிய பிறகு அங்கே என்ன நடந்தது என்பதை அறியப் பண்டாரமும் தான் ஆவலாக இருந்தார். தம்மை அவர்களுக்குக் காட்டிக் கொள்ளாமல் யாளி வாகனத்தின் பின்னால் நகர்ந்து சென்று உட்கார்ந்துகேட்க ஆரம்பித்தார்பண்டாரம்.

"அப்புறம் என்னங்க? எங்க அத்தையம்மாள் சரிவரச் சாப்பிடாமல் பட்டினி கிடந்தாங்க. 'நடராஜா! இப்படி என் குழந்தையை ஆண்டி ஆக்கி விட்டாயே'ன்னு தெய்வத்திடம் முறையிட்டாங்க. அந்தப் பிள்ளை வீட்டை விட்டுப் போன பிறகு அந்த அம்மாவின் முகத்தில் சிரிப்பே மறைந்து போச்சாம். தெருவிலே எந்தச் சாமியார் வந்தாலும் தன் பிள்ளையின் அங்க அடையாளங்களைச் சொல்லி, 'பார்த்திருக்கிறாயா?' என்று விசாரிப்பாங்களாம். ஒரு தடவை, ஒரு கிழச்சாமியார் அந்த மாதிரி பிள்ளையைத் திருவண்ணாமலை தீபத்தில் பார்த்ததாகச் சொன்னாராம். அத்தையம்மா பிள்ளையைப் பார்க்கத் திருவண்ணாமலைக்குக் கிளம்பி விட்டாங்க..."

பண்டாரம் திருவண்ணாமலைத் தலத்தை நினைவுபடுத்திக் கொண்டார்.

வெளிப் பிராகாரத்தில் சன்னதிக்குள் போகும் வாசலில் இருந்த பெரிய விநாயகரின் முன்பு உட்கார்ந்திருந்தார் பண்டாரம். சமீபத்தில்தான் கார்த்திகை தீப உற்சவம் முடிந்திருந்தது. கோவிலுக்குள் கூட்டம் இருந்தது. பெரிய கோபுர வாசலைத் தாண்டி ஒரு பெண்மணி இடுப்பில் இடுக்கிய மூட்டையுடன் பிராகாரத்துக்குள் வந்தாள். பண்டாரம் யதேச்சையாக அந்தப் பக்கம் திரும்பினார். அந்தப் பெண்மணி வேறு யாரும் இல்லை. அவர் தாய்தான். ஐந்தாறு வருஷங்களுக்கு அப்புறம் தாய் என்றும் மகன் என்றும் விட்டுப்போன உறவை ஒட்ட வைத்துக் கொள்ள அவர் விரும்பவில்லை. உலகமெலாம் ஈன்ற உண்ணாமலை அம்மையே அவருக்குத் தாய் என்று வைராக்கியம் பேசியது அவர் உள்ளம். 'விடுவிடு' என்று எழுந்து கோயிலின் பின்புறமாகச் சென்று மறைந்து விட்டார். மகனைத் தேடி வந்த அந்தத் தாய்—அவரைப் பெற்றவள் ஏமாந்து சோர்ந்துதான் வீடு திரும்பி இருக்க வேண்டும்.

''ஐயோ பாவம்! 'பிள்ளை மனம் கல்' என்று தெரியாமலா சொன்னாங்க? அப்புறம் அந்த அம்மாள் மகனைப் பார்க்கவே இல்லையா?...''

''பார்க்கவே இல்லையே. மகளுக்குக் கல்யாணம் என்று யார் மூலமாகவோ தகவல் அனுப்பினாங்களாம். அந்தப் பெண் சிற்றம்பலம் அருமையாக வளர்த்த பெண்ணும்...'' என்றான் சபேசன்.

சிற்றம்பலப் பண்டாரம் தம் சகோதரியை நினைத்துக் கொண்டார். ஷண்முகவடிவு அழகானவள். அவர் உடன்பிறந்த அவ்வளவு பேர்களைக் காட்டிலும் அவளிடம் அவருக்கு அலாதி விசுவாசம். அவள் குழந்தையாக இருந்தபோது சிறிது அழுதாலும் பொறுக்க மாட்டார். தொட்டிலை ஆட்டுவார். அப்படியும் அழுகை ஓயவில்லை என்றால் தாய் செய்து கொண்டிருக்கும் வேலைகளைத் தாம் செய்வதாகக் கூறி, குழந்தையை அவளிடம் கொடுப்பார். தங்கச்சிக்குப் பூ வாங்கித் தருவதில் அலாதி விருப்பம் கொண்டவர். படிப்புச் சொல்லிக் கொடுத்தது அவர்தான். அவர் வீட்டை விட்டுக் கிளம்பியபோது அவளுக்குப் பத்து வயசு இருக்கும். சின்னச் சிலை ஒன்று சிங்காரித்துக் கொண்டு எதிரே வந்து நிற்பது போல் இருந்தது அவள் தோற்றம். அவரைப் பார்த்துக் கண்களில் நீர் பெருக, ''அண்ணா!'' என்று அவள் அழைத்தபோது, அவர் மனம் சற்றுப் பேதலிக்கத்தான் செய்தது. அம்மாதிரி உடன்பிறப்புக்குக் கல்யாணம் என்று கேள்விப்பட்டார். மாப்பிள்ளை சொத்துள்ள பையன் என்று சொன்னார்கள். ஆனால், அவர் போகவில்லை. தங்கச்சியின் கல்யாணத்தன்று காஞ்சியில் ஏகாம்பரநாதனுக்கும், காமாட்சிக்கும் திருமணம். உலகத்தின் அன்னைக்கும், அப்பனுக்கும் திருக்கல்யாணம். போய்ப் பார்த்து ஆனந்தம் அடைந்தார். குடும்பத்தில் பல கல்யாணங்கள் நடந்தன. பிறகு பல வருஷங்கள் கழித்து அவர் தந்தை காலமாகிவிட்டார் என்று கேள்விப்பட்டார்.......

சிற்றம்பலப் பண்டாரம் 'உஸ்' என்று மூச்சு விட்டுத் தூணில் சாய்ந்து கொண்டு மண்டபத்தின் விதானத்தை ஒரு தடவை அண்ணாந்து பார்த்தார்.

சபேசன் கூறுவதைக் கேட்டுக் கொண்டிருந்த பெரியவர், ''என்னவோ அப்பா! பெற்ற தாய்...அவள் மனசில் என்ன குறை இருக்கிறதோ?'' என்று அங்கலாய்த்தார்.

''என்ன குறை? 'சிற்றம்பலம், சிற்றம்பலம்' என்று ஓயாமல் புலம்புறாங்க. மகனைச் சாவதற்கு முன் பார்க்க வேண்டும் என்கிற ஆசைதான் அந்த அம்மாளின் மனசில் நிறைஞ்சிருக்கு. வேறே என்னங்க குறை இருக்கப் போவுது? 'நாங்க எங்கே போய் அண்ணாவைத் தேடறது அப்பா. இப்படி ஒரு ஆத்மா கிடந்து துடிக்கிறதே' என்று பிள்ளைகளும், பெண்களும் சொல்லி வருத்தப்படுறாங்க..'' என்று துயரத்துடன் கூறினான் சபேசன்.

இருவரும் பேசிக் கொண்டே பிராகாரத்தை வலம் வந்து வெளியே போய் விட்டார்கள்.

சிற்றம்பலப் பண்டாரத்தின் மனம் ஏற்கனவே கலங்கிப் போயிருந்தது. அதன் காரணம் அவருக்கு இப்பொழுது விளங்கியது: அவரைப் பெற்ற தாய் உயிருக்கு மன்றாடிக் கொண்டு, சாகும் தறுவாயில் இருக்கிறாள்: 'தான் ஆடாவிட்டாலும், தன் சதை ஆடும்' என்று கூறுவார்கள்.

'தாயைப் போய்ப் பார்த்து வருவோமா?' என்று யோசித்தார் அவர். அவர் உள்ளம் அவரைப் பார்த்துச் சிரித்தது.

'தாயாவது, தந்தையாவது? இந்தப் பந்தங்களெல்லாம் வேண்டாம் என்று விட்டு வந்து முப்பது வருஷங்களுக்குமேல் ஆகிவிட்டனவே? இனிமேலா இந்தப் பந்தங்களில் போய்ச் சிக்கிக் கொள்ள வேண்டும்? அவரவர் வந்த



குடை பிடிப்பவர்:—உஷ்......ஷ்...அதோ போகிறாரே, பேசிப் 'போர்' அடிக்கும் குப்பண்ணா. அவர் நேற்று இரவு தூங்கும்போது சொப்பனத்தில் வந்துவிட்டார், ஐயா!

மற்றவர்:—ஐயையோ! அப்புறம் நீங்கள் என்ன செய்தீர்கள்!

குடைக்காரர்:—சட்டென்று விழித்துக் கொண்டு விட்டேன்!

வழியைப் பார்த்துக் கொண்டு போய்ச் சேருகிறார்கள்! இதற்கு நாம் ஏன் கவலைப்பட வேண்டும்?' என்று உள்ளம் அவரைச் சாந்தப் படுத்தப் பார்த்தது.

சிற்றம்பலப் பண்டாரத்தின் மனக்கண் முன் அவர் தாயின் முகம் தெரிந்தது. அவர் வீட்டை விட்டுக் கிளம்புகிறபோது அந்த அம்மாள் இளமையோடுதான் இருந்தார்கள். பசும் மஞ்சளைப் பூசி நெற்றியில் வட்ட வடிவமாகக் குங்குமம் வைத்துக் கொண்டிருப்பார்கள். காதில் சிவப்புக் கல் தோடுகள். மூக்குத்திகள் பளிச்சென்று ஒளி வீசும். கழுத்தில் திருமாங்கல்யத்துடன், மூன்று வடம் பிரண்டைச் சங்கிலி பின்னிக் கொண்டு இருக்கும். சிரித்துச் சிரித்துப் பேசுவார்கள். குரல் மிகவும் மெதுவாகத்தான் இருக்கும். கிருத்திகை உபவாசமும், கார்த்திகைச் சோமவாரமும் விரதம் இருப்பார்கள்.

சிற்றம்பலப் பண்டாரத்தின் உள்ளம் அமைதி இல்லாமல் தவித்தது. என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்தார். எதிரே இருந்த நால்வரின் சிலைகளையும் பார்த்து மனத்துக்குத் தெளிவைக் கொடுக்கும்படி பிரார்த்தனை செய்தார். அப்பொழுது அருகே இருந்த கோயில் நந்தவனத்திலிருந்து தீனமான குரல் ஒன்று கேட்டது.

''அம்மாவ்......'' என்று உருக்கமாக அரற்றியது ஒரு பசு. பசுவின் குரலைக் கேட்டுச் சிற்றம்பலப் பண்டாரம் தூணில் சாத்தியிருந்த கப்பை எடுத்துக் கொண்டு மாட்டை விரட்டுவதற்காக நந்தவனத்துக்குள் சென்றார். செடிகள் எல்லாம் கப்புங் கிளைகளுமாக மலர்கள் குலுங்க நின்றிருந்தன. மாடு மேய்ந்து விட்டால், கடவுளுக்கு மலர்களே இல்லாமல் போய் விடுமே?

தோட்டத்துள் சிவலைப் பசு ஒன்று இங்கும் அங்குமாக அலைந்து கொண்டிருந்தது. கீழே மண்டிக் கிடந்த புல்லை அது மேயவில்லை. பசுவைக் கவனித்தார் பண்டாரம். தளதளவென்று வயிறு பருத்திருந்தது. மடியின் கனம் தாங்க முடியாமல் பசு தவித்தது. அது ஒரு சினைப் பசு. அது தவிக்கும் தவிப்பைப் பார்த்துக் கொண்டே நின்றார் பண்டாரம். ''அம்மாவ்'' என்று தீனமான குரலுடன் அது வானத்தை அண்ணாந்து பார்த்துக் கத்தியது. கீழே படுத்துப் புரண்டது. எழுந்தது. நடந்தது. மீண்டும் படுத்தது. மறுபடியும் கத்தியது. அவர் வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்த போது, பசுவின் கர்ப்பத்திலிருந்து கன்று வெளிப்பட்டுக் கீழே விழுந்தது. பசு கண்களில் பெருகும் நீருடன் குதித்து எழுந்தது. கீழே கிடக்கும் தன் கன்றைப் பரிவோடு நக்கிக் கொடுத்தது. ஆசையுடன் முகர்ந்து பார்த்தது. உடம்பைச் சிலிர்த்துக் கொண்டு அதற்குப் பால் ஊட்டியது. பண்டாரம் பிரமித்துப் போய் நின்றார்.

'மிருகத்தின் தாய்மை உணர்ச்சியே இவ்வாறானால்...?' பண்டாரத்தின் வாயிலிருந்து 'அம்மா' என்னும் ஒலி அவரை அறியாமல் வெளி வந்தது.

தன்னைப் பெற்ற தாயின் ஆசையை எப்படியும் நிறைவேற்றித்தான் தீர வேண்டும். அந்த மகத்தான கடமைக்குத் தாம் தலை வணங்கித்தான் ஆகவேண்டும் என்று தீர்மானித்தவர் போல் பண்டாரம் தம் தாயைப் பார்க்க அந்த ஊரை விட்டுக் கிளம்பினார்.



# சேற்றிலே செந்தாமரை

ஸரோஜா ராமமூர்த்தி

தலையில் சக்கரக் கொண்டையின் மீது கனகாம்பரத்தை வைக்கோல் பிரி மாதிரி சுற்றிக்கொண்டு முகத்தில் பவுடர் மினு மினுவென்று மின்ன, மை தீட்டி பொட்டிட்டு மயக்கியவாறு கையை வீசி ஒய்யார நடை நடந்தாள் பச்சையம்மா.

தன் கறுப்பு நிறத்துக்கு ஒத்தாற் போல் இளம் பச்சை வாயல் புடைவை அவள் கட்டி இருந்தாள். வெள்ளை ரங்கோன் வாயலில்பச்சைப் புள்ளிகள் போட்ட ரவிக்கை வேறு.

'புடைவையின் நிறத்துக்கு ஒத்தாற் போல் வெளிர் நிற ரவிக்கைதான் எடுப்பாக இருக்கும்' என்று பிரபல சினிமா நட்சத்திரம் ஒருவர் கூறும்போது அதை ஏற்றுக் கொள்ளாமல் இருக்க முடியுமா?

காதிலே கண்ணாடிக்கல் தோடுகள். கழுத்திலே அலுமினியத்தில் கில்ட் கொடுத்த பட்டை நெக்லேஸ், நாய்க்குப் பட்டை போட்டது போல!

இடுப்பிலே கூடை. அதற்குள்ளே புடைவைக் கிழிசல், கருவாடு வாங்கிவர. அந்தக் கிழிசலில் எட்டு முடிச்சுக்கள் போட்டு அதைப் பத்திரமாக எடுத்து வைத்தாலும் சோனிப் பூனை தின்றுத் தொலைத்துவிடுமே!

பச்சையம்மாவுடன் குழந்தை ஒன்று 'வேகு வேகு' என்று நடக்கிறது. மூக்கில் ஒழுக உடம்பு பூராவும் சிரங்கு அழுகிச் சொட்ட அது அவளுடன் நடைக்குப் போட்டியிடுகிறது. பாவம்! அதனால் முடியவில்லை. அடிக்கடித் தாயைப் பரிதாபத்துடன் அண்ணாந்து பார்க்கிறது.

'அம்மா தலையிலே எம்மாம் பூ?'

வியக்கிறது அந்த இளம் உள்ளம்.

'பூ வச்சுக்கிட்டா அளவா இருக்கும்'— என்று கனா காண்கிறது மனம். ஊமையன் கண்ட கனவு தான் என்று

ந்தக் குழந்தைக்குத் தெரிய நியாயமில்லே.

"தே! பச்சையம்மா! தே! உன்னேத் தானே? காலேயிலே எங்கே கிளம்பிட்டே இப்படி?..."

கறுப்புக் கைலி கட்டிய முத்து முறுவலித்த வாறு விசாரித்தான் அவளே.

"சும்மாத்தான் கடைவீதிக்கு..." என்று சிரித்துக் கண்களேச் சுழற்றிக் கடைத் தெருவிலிருந்த உள்ளங்களேத் தன் பால் சுண்டி இழுக்கிருள் அவள்.

குழந்தை கண்ணம்மாவும் தன் கண்களேச் சுழற்றிப் பார்க்கிறது அம்மாவைப் போல!

"தே! மூதேவி! வாயேன் சீக்கிரம்..." தர தர வென்று அதன் கையைப் பிடித்து இழுத்தவாறு விரைகிருள் பச்சையம்மா.

"அம்மா! முட்டாயி..." கண்ணம்மாவுக்குப் பேச வரும். ஏழு வயசு ஆகிறதே! கொஞ்சம் கொஞ்சம் உலகம் புரிகிற வயசு தான்.

"பீடை, பீடை, முட்டாய் துண்ணு துண்ணுதான் அழுகிச் சொட்டுதே. ஆசுபத்திரி டாக்டரம்மா கூட முட்டாயி அது இது கொடுக்காதேன்னுங்க... மூதேவி, முட்டாயி கேக்குறே நீ..."

'நறுக்'கென்று தலேயில் குட்டுகிருள் அம்மா. கண்ணம்மாவுக்கு அது உறைக்க வில்லே. காப்புக் காய்த்துவிட்டது குட்டுப் பட்டு. இருந்தாலும் உச்சி மண்டை ஆயிற்



றே. கண்களில் கண்ணீர் கசியத்தான் செய்கிறது. அதைக் கசக்கிக் கொண்டு பார்க்கிறதற்கு முன்பே கனகாம்பரத்துக்கு மேலே மல்லிகைச்சரத்தை வாங்கிச் சுற்றிக் கொள்கிருள் பச்சையம்மாள்.

"அம்மா! நேக்கும் பூம்மா..." இளித்துக் கொணடு கேட்கிறது குழந்தை.

"பூவா? எங்கேடி வச்சுப்பே? உன் தலையைத்தான் செரங்குன்னு மொட்டை அடிச்சு வச்சிருக்கே — வயத்தெரிச்ச பிடிச்சவ—..."

'ஆமாம் ஆமாம்... பூவை எங்கே வச்சுக் கிறது? அம்மா மாதிரி தலை நிறைய கரு கருன்னு முடி வளர்ந்தப்புறம் நெறய பூ வச்சுப்பேன்..." திரும்பவும் கனவு காண் கிருள் கண்ணம்மா.

பச்சையம்மா காய்கறிக் கடையைத் தாண்டிச் சந்துக்குள் நுழைந்து மசாலாக் கடை முன்பு வந்து நின்ருள்.

கறுப்புக் கைலி முத்துவும் பீடியைப் புகைத்துக்கொண்டே வந்து சேர்ந்தான். மசாலாக் கடைக் கிழவி கண்களை இடுக்கிக் கொண்டு கூர்ந்து கவனித்தாள் பச்சையம் மாவை.

"ஆயா! அரையணு கடுவு, காலணு பூண்டு, ஒரணு மொளக்கா, பட்டை கொடு."

கிழவியின் கை யந்திரம் போல் இயங்கச் சிறு சிறு பொட்டலங்களைக் கூடையில் போட்டாள்.

"தே... நீ பச்சையம்மாதானே?.." கிழவி கேட்டாள்.

"ஆமாம ஆயா!..."

"இந்தப் பொண்ணு உன் மகளா?..."

"ஆமா!"

"ராசப்பனேடு தானே இருக்கிறே?..." கிழவி 'வெடுக்'கென்று கேட்டாள்.

பச்சையம்மாளின் முகத்திலே 'ஜிவு ஜிவு'ன்னு கோவம் ஏறியது.

"தே... கிழட்டு முண்டம். உனக்கு என்னுத்துக்கு இந்த வம்பெல்லாம? இநதா பிடி துட்டு."

இப்பொழுது முத்துவின கை அவள் கைககு மேலாக இயங்கியது. பச்சையம்மா சிரித்துக் கொணடே சில்லறையைச் சுருக்குப் பையிலே போட்டுக்கொண்டாள். அப்புறம் அவர்கள் எட்ட நடை போட்டார்கள். வண்டிக் காரன் ஒருவன் 'ஐஸ்க்ரீம்' விற்று வந்தான்.



"இந்தா துண்ணு..." என்று வாங்கித் தந்தான் முத்து. கண்ணம்மாவுககும் ஒன்று கிடைத்தது அவன் புண்ணியததுலே.

மசாலக்கடைக் கிழவிக்குக் கிட்டத்துப் பார்வைதான் தெரியாது. தூரத்தில் நடப்பது நன்ருகத் தெரிந்தது.

"கை மாறிடிச்சி..." என்று சொல்லிக் கொண்டே புகையிலையைக் குதப்பித் துப்பிஞள் சாக்கடையில்.

இருவரும் மௌனமாகவே நடந்து அரன்மனைக்காரத் தெருவுக்கு வந்து சேர்ந்தார்கள். பச்சையம்மா நடைபாதையில் இருந்த அவள் வீடு என்கிற தகரக் குடிசையின் கீழ் சென்று உட்கார்ந்தாள். கூடையிலிருந்த சாமான்களை எடுத்துவைத்தாள். அடுப்புப் பற்ற வைத்துவிட்டுத் தண்ணீர் பிடிக்கக் குழாயடிக்குச் சென்றுவிட்டாள்.

உச்சியைப் பிளக்கும் வெயிலில், சிறிது பொறுத்துத் தண்ணீருடன் ஒய்யாரமாக நடந்துவநதாள்.

"என்னடீ... சும்மா என்னையே பாக்குறே?.."

ஏதோ திரைப்படத்தில் ஹாஸ்ய நடிகை ஒருத்தி பேசிய வசனத்தை எப்படியோ மனப்பாடம் பண்ணிவைத்தது சமயத்துக்கு உதவியது.

"பாககுறேன் பெண்ணே... கடன் வாங்கியும் படடினி'ன்னு ஒரு படம் பாத்தேன். பட்டினியா இருக்கிற கதாநாயகி உன்னைப் போலத்தான இடுப்பிலே குடத்தை வச்சுக்கிட்டு ஒய்யாரமா கை விசி நடந்துக்கிட்டு, ஒரு பாட்டுப் பாடருபாரு... நீயும் அப்படியேதான் இருக்கே. தே..."

பச்சையமமா கலகலவென்று சிரித்தாள்.

கண்ணம்மா தாயைத் திரும்பிப் பார்த்தது. 'அம்மா சிரிச்சா அன்னிக்குச் சீக்கிரம் குழம்புச் சோறு கிடைக்கும் என்று அதற்குத தெரியும். நசுங்கிய தன் அலுமினியச் சோற்றுத்தட்டை ஆவலுடன் பார்த்தவாறு அது நாக்கைக் குழைத்துககொண்டது.

அடுப்பில் சோறு கொதித்துக் கொண்டிருந்தது. தெரு விளக்குகள் பளிச்சென்று எரிந்தன. சைனபஜாரில் நடைபாதையில் பகல் ஒரு மணியிலிருந்தே பலரக வியாபாரம் ஆரம்பமாகிவிடடது. ரப்பர் பொம்மையிலிருந்து சீப்பு வரை; நைலான் துணியிலிருந்து செருப்பு வரை; விதம் விதமாக, வண்ண வண்ணமாகக் குவிந்து கிடந்தன.



முத்து வேகமாக நடந்தான் சைனு பஜாரைப் பார்த்து. ஒரு மாவு டப்பா, மைச் சிமிழ், சீப்பு, முத்து மாலை, இரண்டு முழம் கதம்பம் என்று வாங்கினான்.

முழுசாக இரண்டு ரூபாய்களுக்கு மேல ஆகி விட்டன.

அவன் திரும்பி வந்தவுடன் கண்ணம்மா ஆவலுடன் சென்று தாயின பக்கத்தில் வந்து உட்கார்ந்தது.

"அம்மா! வாசனை மாவு நல்லாக்கீது!..." என்று தன் வியபபைக் காடடியது.

"சீ...சீ... மூதேவி! மொகரக்கட்டைக்கு மாவுதான் கொரசசல்...அபபாலே போ..." என்று சொல்லிக்கொணடே முத்துவின் அருகில் நெருங்கி உடகார்ந்தாள் அவள்.

கண்ணம்மா கண்களை அகல விழித்துப் பார்த்தது. 'நம்ப நயினுவும இப்படிததான் உக்காநதாங்க... ஆனு... அவருதான் இப்பல்லாம் வர்றதே இல்லையே...' என்று என்னென்னவோ நினைத்தது அது. சிறு பெண்ணாக இருநதாலும அதற்கும உணமை புலபபட்டது.

அதன் தந்தையாகிய ராசப்பன் தாயுடன் கொஞசகாலம் இருந்துவிட்டு மறைந்து போன உணமையை அந்தக் குழநதை நெஞசம் மறக்கவில்லை. மனச்சாட்சி மறக்கவும விடவில்லை. ஒரு வேளை குழநதையாக இருப்பதால் மனச்சாட்சி மக்கபபோகாமல் இருக்கிறதோ என்னவோ!

"நயினு எங்கேம்மா?..." என்று ஒரு தினம கேட்டது அது.

"எங்கே போனுனே பாவி!... சும்மாக் கிட நீ... துரை கண்ணாலம் கட்டிக்கிட்டு வாழப போயிருக்கான."

'ஆ! கண்ணாலம் கட்டிக்கப் போயிட்டாரா நயினு? நயினு இருந்தா எனக்குக்கூட கணணாலம் கட்டி வபபாரு...'

கணணம்மா கனவுதான் கண்டது. தாயிடம் கூறவில்லை. அவள்தான் நயினு வந்ததையோ போனதையோ லட்சியம் செயயவில்லையே!

நசுங்கிய அலுமினியத்தட்டு 'நக்'கென்று ஓசைப்பட்டதும சிந்தனையிலிருநது விடுபட்டது அது. துண்டம் துண்டமாக அந்த ஆளுக்குமட்டும் உருளைக்கிழங்குத் துணடங்களைப் பொறுக்கிப் பொறுககி வைத்தாள் பச்சையம்மா.

இதற்கு வெறும் குழம்பு தானா. இருந்த பசியில் அகப்பட்ட வரையில் லாபம் தானே...? 'லபக்' கென்று சோற்றை விழுங்கிவிட்டுத் தட்டை வழித்து நக்கியது.

"அத்தனையும் முழுங்கி விட்டு இழுக்கிறதைப் பாரு... துணணுட்டியாடி மூதேவி...... சோத்துப் பானையைக் கவிழத்தாக்கூட உனக்குப் பததாது......" என்று சொலலிக் கொண்டே பானையைச் சுரண்டிச் சோறு எடுத்து வந்து அவன் கலத்தில்தான் இட்டாள் அவள். குழம்பிலே பிசிறி உருட்டி அவள் கையில் கொடுத்தான் அவன். இபபொழுது கண்ணமமாவை அவன் ஏறெடுத்தும் பார்க்கவில்லை.

'ஐஸ்க்ரீம் வாங்கிக்கொடுத்த ஆளாச்சே ஒரு கவளம் சோறு கொடுபபாரோ...' என்று அது ஏங்கியிருந்தால் பெருத்த ஏமாற்றம்தான்.

அப்புறம் மின்னல் வேகத்தில் அங்கு வேலைகள் நடந்தன. மூலையிலிருந்த கோணிப்பை ஒன்றை எடுத்து வீசி எறிந்தாள் கணணமமாவைப் பாாத்து அவள்.

'இதில் முடங்கு' என்று பொருள் அதற்கு. அப்புறம் சென்னை நகரத்தின் விளககுகள் எலலாம் குபீரென்று பற்றி எரிந்தன. பச்சையம்மாவும் முத்துவும் அந்த ஒளி வெளளத்தில் முங்கிக குளித்த வாறு சினிமாவுக்குப் போய்விட்டார்கள். கிழிந்த கோணியைத் தடவியவாறு உட்கார்ந்திருந்தாள் கண்ணம்மா. 'சிரங்கு பிடித்தவளாக இருந்தாத்தான் என்ன? நான் சினிமா பார்க்கக்கூடாதா?' என்று அது நினைத்தபோது ஈரம் கசிநதது அதன் கண்களில்.

*

மறுபடியும் கண்ணம்மா கண் விழித்த போது எங்கும் ஒரே ஒளிமயம். கதிரவனின் ஒளிக்கீற்றுக்கள் அந்த இடத்தை துப்புரவாக்குவதுபோலப் பாய்ந்து வந்து ஒளி வீசின.

முத்து தலை வாரிக்கொண்டிருந்தான். பச்சையம்மா வெளியிலிருந்து வந்தாள். கண்ணம்மாவின் சாப்பாட்டுததட்டில் இடியாப்பமும் சட்டினியும் இருநதது. கண்ணாடித் தம்ளரில் ஆவி வீசும டீ வேறே.

"நீ சாப்பிட்டியா?"

"டீ குடிச்சேன்... நீ துண்ணு..."

முத்து நின்று குடித்துவிட்டுப் போய்விட்டான்.

பச்சையம்மா அவன் போவதையே பார்த்துக்கொண்டிருந்தவள் சோம்பல் முறித்துக்கொண்டாள்.

"யம்மோவ்... இன்னிக்கி நானே ஆசுபத்திரிக்குப் போகிறேன்.." என்றது கண்ணம்மா. இரவெல்லாம் அதற்கு ஒரே நமைச்சல்.

"ஏண்டி ?.."

"நீ எம்மா வேலைதான் செய்வே ? நான் போயி மருந்து வாங்கிட்டு ஓடியாறேன்..."

தாய் ஒன்றும் பேசவில்லை. கண்ணம்மா ஆஸ்பத்திரியை நோக்கி நடக்க ஆரம்பித்தது.

"இனிமே அம்மாவை ஒண்ணும் கேக்கக் கூடாது. பாவம்.. அந்த ஆளுக்குச் சோறு ஆக்கணும். பலகாரம் வாங்கியாறணும். நம்ப கையிலே செரங்கு இல்லைன்னா நான் போயி பலகாரம் வாங்கியாறலாம். இந்தக் கையாலே வாங்கியாந்தா...சே... எனக்கே குமட்டுதே..."

எண்ணியபடி நடந்தது அது.

⁂

அந்த ஆஸ்பத்திரியில் கொடுத்த மருந்தினால் கண்ணம்மாவின் சொறி சிரங்கு குணமாகவில்லை. உடல் பூராவும் அழுகிச் சொட்டுவது போல கசகசவென்றிருந்தது. பச்சையம்மா மகளை அருவருப்புடன் பார்த்தாள். தன்னுடைய நாகரிகத் தோற்றத்துக்கு எதிரியாகவே அந்தப் பெண்ணை அவள் கருதினாள்.



"இது என்னா இப்படிக் கீது...? ஒரே வாடை வீசுதே இந்தப் பொண் மேலே ?..." என்று முகத்தைச் சுளித்தான் முத்து. மோதிரச் சுருள் கிராபபு வைத்திருந்தான் அவன். அவனுக்கேது அந்த டாம்பீகச் செலவுகளுககுப் பணம் ?

அரன்மனைக்காரத் தெருவிலிருந்து கோவிந்தராஜ முதலித் தெருவரை அப்படியே ஒரு தரம் நசுங்கும் கூட்டத்தில் புகுந்தால் கையில் கிடைத்தது வேட்டைதான ! அவன் ஏன் மல் ஜிப்பாவும், சுருள் கிராப்பும் வைத்துக்கொள்ளமாட்டான் !

பச்சையம்மா பல்லைக் கடித்தாள்.

"பீடை, பீடை, மூதேவி ! அந்த மூலையில் போய்ப் படுத்துத் தொலையேண்டி. நாத்தமா நாறுதே... தூ..."

தலையில் பூக்கடைக் கதம்பமும், முகத்தில் ரோஸ் பவுடரும் மின்ன, 'கடாவ்' வாயில் சேலை உடுத்தியிருந்தாள் அவள். பொங்கலுக்கு 'ரூபியா' வாயில் ஜாகெட் எடுக்கப் போவதாகச் சொல்லிக்கொண்டாள்.

அவளுக்கிருந்ததெல்லாம் ஒரே ஒரு குறைதான். தான் நன்றாக சிவப்பாக மொழு மொழு வென்று இருக்கவில்லையே என்பதுதான். மூக்கும் முழியும் இருந்தால் மட்டும் போதுமா ?

"சினிமாவிலே வர்ற 'ஸ்டாரு'ங்கெல்லாம் பளபளன்று மொழு மொழுன்னு வெண்ணெய்யை உருட்டி வச்சாப்பிலே இருக்காங்களே. அவுங்க என்ன பூசறுங்க ?" என்று முத்துவைக் கேட்டாள் அவள்.

"அவுங்க வெண்ணெய் பூசிக் குளிப்பாங்களாம்..."

"ஆங்..." என்று அயர்ந்தாள் அவள்.

"வெண்ணெய் பத்து ரூபாய்க்கு மேலே விக்கிதே..." என்று வியந்தாள்.

"நீ நல்லாத்தான் இருக்கே புள்ளே. கொஞ்சம் கறுப்பு அதிகம். ஆனா...அழவாத்தான் இருக்கே..." என்று மெச்சினான் அந்த ரசிகன்.

மூலையில் முடங்கிக் கிடந்த கண்ணம்மா தன் அம்மாவின் அழகைக் கண்களை இடுக்கிக்கொண்டு பார்த்தது.

'அவள் அம்மா அழகுதான். சந்தேகமில்லை. மீன் போலத் துள்ளும் விழிகளும், முத்துச் சரம் போல் பற்களும், அவள் அழகே அழகுதான். இந்த அழகியின் வயிற்றிலே இப்படி ஒரு நாற்றமெடுக்கும் ஜன்மம் வந்து பிறந்திருக்க வேண்டாம். அழகுப் பதுமையாக ஒரு குழந்தை பிறந்திருக்க வேணடும். இதெல்லாம் அந்தச் சாமிக்கு எங்கே தெரிகிறது?

சிறு பெண்ணாக இருந்தாலும் கண்ணம்மாவுக்கு இயற்கையிலே அறிவு கொஞ்சம் அதிகமாக இருந்ததனால் அதிகப்படியாக யோசனை செய்தது.

முத்துவும் பச்சையம்மாவும் சாப்பிட்டு முடித்தார்கள். ஒரு கிண்ணத்தில் சோற்றைப் போட்டுக் குழம்பை ஊற்றி மகள் முன்பாக வைத்துவிட்டு அவள் வெளியே வந்துவிட்டாள்.

"தே..! இன்னிக்குப் 'பிராட்வே'யிலே

சினிமா பாக்கலாம்''... என்று கொஞ்சினுள் அவள்.

முத்து பீடியை உறிஞ்சினுன்.

"சினிமா பாக்கணுமா கழுதைக்கு? இன்னிக்கு உனக்குன்னு இருபத்தஞ்சு ரூவா செலவு ஆச்சு புள்ளே...பேசாமெக் கிட...''

''தே! தே! இந்த ஆட்டம் மாத்திரம் இட்டுக்கினு போயேன்... 'பேயானுலும் தாயோ...' என்னவோங்கிற ஆட்டமாம்...''

"ஓஹோ! உன்னைப் பாத்துட்டுத்தான் படம் எடுத்திருப்பாங்க பச்சை... அப்ப பாக்க வேண்டியதுதான்...'' முத்து கிண்டல் செய்ய பச்சையம்மா கண்களைக் கசக்கினுள்.

அப்புறம் ஆணுக்குத் தோல்விதானே? அந்தத் தகரக் கொட்டடியின் கீழ் தன்னந் தனியாகக் முடங்கி கிடந்தது கண்ணம்மா. அதற்கும் சினிமா பார்க்க வேண்டுமென்று ஆசைதான். ஆனுல், இப்படி நாறும்போது அம்மா மட்டும் கூட்டிப்போக முடியுமா? பக்கத்திலே நாலுபேர் என்ன சொல்வார்கள்?

எங்கிருந்தோ கடியாரத்தில் மணியடிக்கும் சத்தம் கேட்டது. ஒண்ணு, ரெண்டு... என்று எண்ணியது அது. தெருவிலே சிறிது சலசலப்பு ஏற்பட்டது.

பச்சையம்மாவும், முத்துவும் வந்தார்கள். அந்தப் படத்தில் நடித்த கதாநாயகி போட்டிருந்த கொண்டைதான் அவளை வெகுவாகக் கவர்ந்தது. அந்தக் கதையில் வந்த 'வில்லன்'தான் முத்துவைக் கவர்ந்தான்.

"படா திரில்லு... அந்த ஆளு செஞ்ச வேலையெல்லாம்...'' என்றுன் முத்து.

''அது கெடக்கது... அந்தப் பொண்ணு முத்துச்சரம் தொங்க ஒரு கொண்டை போட்டுக்கிட்டு வந்தது பாரு... நல்லா இல்லே?...'' என்று கேட்டாள் அவள்.

பொழுது விடிந்த பிறகுகூட அவர்கள் தூங்கினுர்கள்.

கண்ணம்மா விழித்தெழுந்தது. என்றுமில்லாத மகிழ்ச்சியும், தெம்பும் அதன் உடலிலும் உள்ளத்திலும் ஏற்பட்டிருந்தன. தெருக் குழாயில் பல் விளக்கிவிட்டு மேலே ஒரு கந்தலைப் போர்த்திக்கொண்டு தெருவில் இறங்கி நடந்தது. இரவு அதற்கிருந்த வேதனையில் சாப்பாடு இறங்கவில்லை. பசி வயிற்றைப் பிய்த்தெடுத்தது.

குப்பைத் தொட்டிக்குப் பக்கத்தில் ஆப்பக்காரக் கிழவி ஆப்பம் சுட்டுக்கொண்டிருந்தாள்.

"ஆயா!...'' என்றது கண்ணம்மா.

"என்னடி பொண்ணே!...'' என்று கேட்டு நிமிர்ந்து பார்த்தாள் கிழவி.

"அடிப் பாவி பெத்தவளே; ஏண்டி இப்படி அழுகிச் சொட்டுறே? உங்க ஆத்தா இதையெல்லாம் ஏண்டி கவனிக்கப்போரு? பீடை பிடிச்சவ...'' என்று வசை பாட ஆரம்பித்தாள் ஆயா.

"ஆயா! எங்க அம்மா நல்லாத்தான் கவனிக்கிருங்க...'' என்று தாய்க்குப் பரிந்தது கண்ணம்மா.

"ஐயே...கவனிக்கிற பவிஷைப் பாரேன்.. வாய் ஒரு கேடாடி உனக்கு... போடி...'' என்று விறகுக் குச்சியைக் கையிலெடுப்பதற்கு முன்பே தள்ளாடிக்கொண்டு ஆஸ்பத்திரிக்குப் போய்விட்டது கண்ணம்மா.

அன்று ஆஸ்பத்திரியில் ஒரே கூட்டம். பெரியவர் ஒருவர் வந்திருந்தார். புட்டி புட்டியாக பாலும், பழங்களும் வழங்கப்பட்





# சாமியார் பரமசிவம்

**கள்ளனும் காவியுடைத் தவசியும் சந்தித்தனர். அதன் விளைவு மகத்தானதா யிருந்தது......**

★

**வா**னத்தில் உலவும் வெண் மேகங்களுடன் போட்டியிடும் மலைச் சிகரங்கள்; மலைச் சரிவிலே ஓர் அழகிய தாமரைக் குளம். கதிரவனை நோக்கி இதழ் விரித்து மலர்ந்து அழகாக ஆடிக் கொண்டிருந்தன அதிலிருந்தமலர்கள். மலையிலிருந்து வீழ்ந்த அருவியின் சலசலப்பைத் தவிர, அந்த இடத்தில் வண்டுகளின் ரீங்காரம், காற்றின் ஒலி 'எல்லாமே நிரம்பி இருந்தன. இயற்கையின் சுதந்திரத்தைக் கலைப்பது போல் சற்றைக் கெல்லாம் ஒரு பெரியவர், தாமரைத் தடாகத்தின் அருகில் வந்தார். நீண்ட வெண்ணிறத் தாடியும், தும்பைப் பூப் போன்ற நரைத்த முடியும், ஆழ்ந்து கருணையால் பிரகாசிக்கும் கண்களும் பெற்றிருந்த அவர் குளக்கரையில் உட்கார்ந்து களைப்புடன் இரண்டு மிடறு தண்ணீர் அருந்தினார். நிம்மதியாகத் தம்முடைய திட்டத்தை அவர் அலசி ஆராய்ந்து பார்க்க விரும்புகிறார் என்பது நன்றாகத் தெரிந்தது.

அடுத்த கிராமத்தில் மக்கள் மழை இன்மையால் விளைச்சல் இன்றி வாடும்போது கொள்ளையும் கொடுமையும் நடந்தால் அதை எப்படித் தாங்கிக் கொள்வார்கள்? சாவியாகிவிட்ட பயிரை மாட்டுக்குத் தீவனமாகும் என்று போர் போட்டு வைத்தால் கொள்ளைக்காரன் கறுப்புச்சாமி வைக்கோல் போருக்குத் தீ வைத்து விட்டானாம்! ஜனங்கள் வயிற்றிலும் வாயிலும் அடித்துக் கொண்டு அலறுகிறார்களாம். கொஞ்சம் நஞ்சம் வைத்திருந்த சோளத்தை எடுத்துத் தீயில் வாரி வீசினானாம்; 'சடபட' வென்று அவை பொரிந்து கருகிப் போகும்போது

அந்த உள்ளங்கள் வேதனையால் எப்படிக் கருகியிருக்காது!

'ஹூம்...! அவர்களுக்கு எப்படி ஆறுதல் கூற முடியும்?... மறுபடியும் உழைப்பில் ஈடுபடச் சொல்லி அவர்களை நான் திருப்ப முடியுமா?...'

வேதனையும் துன்பமும் கலந்த குரலில் சாமியார் பரமசிவம் தமக்குத் தாமே பேசிக் கொண்டவாறு அப்படியே யோசனையில் ஆழ்ந்து போனார். பல அருமையான திட்டங்கள் அவர் மனத்தில் உருவாகும்போது அவர் அப்படித்தான் மௌனத்தில் ஆழ்ந்து விடுவது வழக்கம். ஒவ்வொரு ஊராகச் சென்று, மக்களின் குறைகளைக் கேட்டு ஆறுதல் கூறுவதுகூட அவர் வழக்கம்.

நெடுந் தொலைவு நடந்து




களைத்துப் போய் அந்தக் குளக் கரையில் உட்கார்ந்து இளைப்பாறிக் கொண்டிருக்கும்போது வழிப்போக்கன் ஒருவனைச் சந்தித்தார் அவர். தாடிச் சாமியாரைப் பார்த்ததும் அவன் பிசாசைக் கண்டவன் போல் முகம் வெளுக்க, விழிகள் பிதுங்க அவரையே வெறித்துப் பார்த்தபடி நின்றான்.

பரமசிவம் அவனை அன்புடன் பார்த்தார். "ஏன் அப்படிப் பயந்து நடுங்குகிறாய் அப்பனே? நான் என்ன பேயா, பிசாசா? உன்னைப் போல நானும் மனிதன்தானே?"

"ம...ம... மனிதன்தான், சாமி; ஆனால் நீங்க கறுப்புச்சாமி இல்லீங்களே?" என்று கேட்டுவிட்டுப் பேந்தப் பேந்த விழித்தான் அவன்.

"அப்படி ஒரு சாமி இருக்குதா அப்பனே?"

அவனிட மிருந்து சில முக்கியமான தகவல்களைத் தெரிந்து கொள்வதற்காகவே அவர் அவனை அவ்விதம் கேட்டார். வழிப் போக்கன் தன்னுடைய பயம் தெளிந்து குளத்துப் படிகளில் உட்கார்ந்தான்.

"அதென்ன சாமி அப்படிக் கேட்டீங்க? கடந்த ஒரு வாரமா பக்கத்துக் கிராமம் படுகிற அவஸ்தை உங்களுக்குத் தெரியாதா? தகுந்த போலீஸ் பந்தோபஸ்து இல்லாமல் தங்கமேட்டில் கால் வைப்பதே தவறு என்று சொல்கிறார்கள். மக்களை வெறி பிடித்தவர்கள் மாதிரி நடந்து கொள்கிறார்களாம். தாடிச் சாமியார் என்றால் சீறிப் பாய்ந்து கொன்று போடுவார்கள் என்பது பலருடைய அபிப்பிராயம். ஏனெனில், கொள்ளைக்காரன் கறுப்புச்சாமி தாடி வைத்துக் கொண்டுதான் அங்கே வந்து அட்டூழியங்கள் நடத்தினானாம்......"

வழிப்போக்கன் பரமசிவத்தைப் பயந்த குரலில் எச்சரித்தான். சாமியார் பரமசிவம் 'உஸ்' என்று அலுத்துக் கொண்டார். பிறகு நிதானமாக "அதனால் என்னுடைய தாடியை எடுத்து விட வேண்டும் என்கிறாயா? கறுப்புச் சாமி இன்று ஒரு கிராமத்துக்குத்

தாடியுடன் வருவான்; நாளைக்கு ஒரு இடத்துக்கு மொட்டைத் தலையுடன் போவான்; அதற்கடுத்த நாள் தொப்பியும் நிஜாரும் அணிந்து வருவான். அவனைப் போல நான் உருவத்தில் மாறிக் கொண்டிருக்க முடியுமா?..."

"போலீஸ் வேண்டாம்? இரவு நேரத்தில் வந்து குத்திப் போட்டால் என்ன பண்ணுவீர்கள்?

"மனிதனுக்கு மரணம் என்பது அவன் வைக்கும் ஒவ்வோர் அடியிலும் பதுங்கிக் கொண்டுதான் இருக்கிறது. அதற்காகப் பயந்து முடியுமா அப்பா? நீ ஒன்றுக்கும் கவலைப்படாதே. இருட்டுவதற்குள் தங்க மேட்டுக்குப் போய்விடலாம். மக்களின் அன்பு உள்ளத்துக்குமேல் கனன்று கொண்டிருக்கும் பயத்தை, வெறியை, அறியாமைய என் அன்பு நீரால் அவித்துவிட முயல்கிறேன்."

"கொள்ளைக்காரன் கறுப்புச்சாமி தங்க மேட்டில் புகுந்து வீடுகளைச் சூறையாடி, வைக்கோல் போர்களுக்குத் தீ வைத்து, களஞ்சியங்களை உடைத்து... இப்படி எத்தனை அட்டூழியங்கள் சாமி? நீங்க தங்க மேட்டுக்கா போறீங்க?" என்று கேட்டான் அவன்.

"ஆமாம்; அங்கேதான் போகிறேன். பாவம், நொந்து போயிருப்பவர்களைப் பார்த்து ஆறுதல் கூறவேண்டும் என்று போகிறேன்" என்றார் பரமசிவம்.

வழிப்போக்கன் தன் வழியே சென்றான்.

* * *

அப்பொழுது வானம் பார்த்த பூமியாகிய தங்கமேட்டுக் கிராமத்தைச் சுற்றிச் சுமார் எழுபது எண்பது மைல்கள் வரையில் மழை இல்லாமல் கிணறுகள் வரண்டு கிடந்தன. ஏரிகள் காய்ந்து வெடிப்புகளுடன் காட்சி அளித்தன. மக்கள் குடி தண்ணீருக்காக ஊரிலிருந்து பதினைந்து மைல்கள் தள்ளி இருந்த மலை அடிவாரத்துத் தாமரைக் குளத்தையும், சிறு ஊற்றுப் போல் குளத்தில் வந்து விழும் அருவியையுமே நம்பி இருந்தார்கள். வானத்தை நம்பி வயலை உழுது விதைத்து, கிணற்றில் இருந்த நீரை இறைத்துவிட்டு, வானத்தை அண்ணாந்து பார்த்து மக்கள் மனம் சலித்திருந்த சமயம் கொள்ளைக்காரன் கறுப்புச்சாமி திடீரென்று தோன்றி, களஞ்சியங்களில் இருந்த தானியங்களைச் சூறையாடி, இருக்கும் ரொக்கத்தையும் கொள்ளை அடித்துக் கொண்டு போனான். அவன் கையில் மின்னிய கத்தியும், அவன் தோழர்களின் சாகசச் செயல்களும் மக்களை அலற வைத்தன.

வெண்ணிறத் தாடியும், பட்டை பட்டையாகத் திருநீறும் அணிந்து வந்து அவன் செய்த சாகசச் செயல்களால் கிராமத்து ஜனங்கள் தாடிக்காரன் என்றால் துள்ளி எழுந்தார்கள். போலீஸ்காரர்கள் தாடி வைத்திருந்தவர்களை யெல்லாம் பிடித்துப் போலீஸ் சிறையில் கொண்டு வந்து கொட்டினார்கள்! அதில் ஒருவன் கூடக் கறுப்புச்சாமி இல்லை.

இந்தச் சமயத்தில்தான் மக்களின் துன்பத்தைத் துடைக்கும் பணியைச் செய்து வந்த சாமியார் பரமசிவம் தங்கமேட்டை நோக்கிக் கிளம்பி வந்தார். அவருக்கு ஒரே ஒரு ஆசை: கறுப்புச்சாமியை எப்படியாவது சந்தித்துவிட வேண்டும். அவன் மனத்தை மாற்ற ஏதாவது உபாயம் தேடவேண்டும். 'கறுப்புச்சாமி! என்னை வந்து பார்!' என்று பத்திரிகையில் விளம்பரம் போட முடியுமா என்ன? எப்படி எங்கே அவனைப் பார்க்க முடியும்... என்று யோசித்துக் கொண்டே இருந்தார்.

தாமரைக் குளத்தின் மேற்குப் பக்கத்தில் இருந்த மலைச் சரிவில் சூரியன் இறங்கிக் கொண்டே வந்தான். சாமியார் பரமசிவம் களைப்பு நீங்கப் பெற்றவராக அந்த இடத்தை விட்டுக் கிளம்பினார்.

* * *

அஸ்தமித்து இரண்டு மணி நேரத்துக்கெல்லாம் தங்கமேட்டை அவர் அடைந்து விட்டார். சென்ற ஆண்டுகளில் 'கலகல' வென்றிருந்த அந்தக் கிராமம் தன்னுடைய களையை இழந்து, வெறிச்சென்று காணப்பட்டது. தைரியசாலிகளான சிலர் மட்டும் குடிசைகளை விட்டு வெளியே வந்து கிராமத்துள் வந்திருப்பவரைப் பயத்துடன் கவனித்தனர்.

சாமியார் பரமசிவம் அன்புடன் அவர்களை அணுகித் தாம் வந்திருக்கும் நோக்கத்தை அறிவித்தார். கூடிய விரைவில் கடவுளின் கருணையால் மழை பெய்து அவர்களுடைய மேழிச் செல்வம் தழைத்துப் பெருகும் என்று ஆறுதல் கூறினார். மக்கள் தீய்ந்த வைக்கோற் போர்களைக் காட்டினர். சூறையாடப்பட்ட நெற்களஞ்சியங்களைக் காட்டி மாய்ந்து போயினர். துடிப்பும், வலிமையும் உள்ள இளைஞர்கள் கறுப்புச்சாமி தங்கள் கைகளில் சிக்கினால் அவனை அப்படியே நசுக்கத் தயாராக இருந்தார்கள். அவனைப் போலீசிலோ, கோர்ட்டிலோ அவர்கள் ஒப்படைக்கத் தயாராக இல்லை.

அவர்களுக்கு ஆறுதல் கூறி, அவர்கள் மனத்தில் கனன்று கொண்டிருந்த கோபத்தையும், துவேஷத்தையும் அணைத்துவிட முயன்றார் பரமசிவம். ஆனால் ஊர் எல்லையிலும் ஊரைச் சுற்றியும் போலீஸ் பாரா பலமாகத்தான் இருந்தது.

"சாமி! இந்தத் தாடியை எடுத்து விடுங்கள். தாடி வைத்திருப்பவர்கள் நல்லவர்களாக இருந்தாலும், கறுப்புச்சாமியின் நினைவுதான் எங்களுக்கு வருகிறது..." என்றுன் ஒருவன்.

பரமசிவம் சிரித்துக்கொண்டு சும்மா இருந்து விட்டார்.

* * *

அது அமாவசைக்கு முந்திய இரவு. வானத்தில் சந்திரன் இல்லை. எண்ணற்ற தாரகைகள் சிதறிக் கிடந்தன. பரமசிவம் தம் பணியைச் செய்யக் கிராமத்துக்கு வந்து நான்கு தினங்கள் ஆகியிருந்தன. கறுப்புச் சாமி மறுபடியும் தீய்ந்துபோன அந்தக் கிராமத்துள் நுழைந்து கொள்ளையடிக்க அங்கு எதுவுமே இல்லை. பசியால் வாடும் மக்களும், அவனை வஞ்சம் தீர்க்க வேண்டும் என்று உறுமும் இளைஞர்களும் மட்டுமே எஞ்சி யிருந்தார்கள். பெண்கள் குடிசைக்குள் பதுங்கிக் கொண்டு நாட்கணக்கில் வெளியே வராமல் இருந்தார்கள்.

கறுப்புச்சாமியின் 'கடாட்சம்' வேறொரு கிராமத்தின் மீது விழுந்ததாகத் தங்கமேட்டுக்குச் செய்தி வந்தது. அங்கிருந்த போலீஸ் பாரா அந்தக் கிராமத்தை நோக்கிச் சென்றதும், சாமியார் பரமசிவம் ஒருவரே அவர்களுக்குக் காப்பாளராக விளங்கினர்.

மைச்சிமிழைத் திறந்து வைத்தாற்போல் எங்கும் ஒரே இருட்டு. ஊரில் முக்கியஸ்தர்கள் சிலரைப் பார்த்துப் பரமசிவம், "அன்பர்களே! நீங்கள் எல்லோரும் போய்ப் படுத்துத் தூங்குங்கள். நான் விழித்துக் கொண்டிருக்கிறேன்..." என்றார்.

"சாமி! அவன் கையில் இருக்கும் கத்தியை நினைச்சால் கதி கலங்கிப் போகுங்க...... பத்திரமா இருங்க, சாமி..." என்று எச்சரித்துவிட்டு அவர்கள் சென்றுவிட்டார்கள்.

குடிசைக்கு வெளியே திறந்த வெளித் திண்ணையில் மங்கலாக விளக்கு ஒன்றை வைத்துக் கொண்டு சாய்ந்து உட்கார்ந்திருந்தார் பரமசிவம். இரவு முதல் ஜாமம் ஆரம்பிப்பதற்கு அறிகுறியாக ஜாமக்கோழி கத்தி ஓய்ந்தது. திறந்த வெளியில் கூடக் காற்று இல்லை. பாவியின் இதயம் போல ஒருவிதப் புழுக்கம்.

* * *

பரமசிவம் கண்களை மூடி மூடித் திறந்தார். புராண காலத்து அரக்கர்களை யெல்லாம் நினைத்துப் பார்த்தார். 'அந்த அரக்கர்கள் மாய்ந்து விடவில்லை. இந்த யுகத்தில் மனிதர்களுக்குள் மறைந்து வாழ்கிறார்கள். இல்லாவிடில், கையில் கத்தி பிடித்துச் சண்டை செய்யும் திறமை படைத்த வீரன் ஒருவன், நேர்மை அற்றவனாகித் தன் இனத்தையே அழிக்கத் தொடங்குவானா?' என்று எண்ணி வருந்தினர் அவர். சுற்றிலும் தன்னைச் சூழ்ந்திருந்த அந்தகாரத்தை ஒரு முறை கூர்ந்து கவனித்தார். ஒன்றும் தெரியவில்லை. அருகில் இருந்த செம்பிலிருந்து ஒரு வாய் ஜலம் குடித்தார். செம்பைக் கீழே வைக்கும்போது பலமான முரட்டுக் கரம் ஒன்று அவர் தோளைத் தொட்டு உலுக்கியது.

பரமசிவம் அண்ணாந்து பார்த்தவர் அப்படியே பேச முடியாமல் திகைத்து விட்டார்.

"சாமி! ரொம்பத் தாகமாக இருக்குது. ஒரு வாய் தண்ணி குடுங்க......"

பரமசிவம் பேசாமல் தண்ணீர்ச் செம்பை எடுத்து அவனிடம் நீட்டினர். ஆவலுடன் செம்புத் தண்ணீரையும் குடித்துவிட்டுப் பெருமூச்சு விட்டான் அவன்.

"ஏனப்பா! ஏதாவது சாப்பிடுகிறாயா?"

"சாப்பிடுகிறேன், சாமி. நான் சரியாகச் சாப்பிட்டு இரண்டு நாள் ஆச்சுங்க......"



பரமசிவம் இரண்டு கம்பு அடைகளையும், வாழைப் பழங்களையும் கொண்டுவந்து அவன் முன் வைத்தார். அவன் சாப்பிடுவதைப் பார்த்துக் கொண்டே இருக்கும் அவன், "சாமி! நான் யார் என்று உங்களுக்குத் தெரியுங்களா?" என்றான்.

"தெரியாது அப்பா."

"தெரிஞ்சால் எனக்கு இப்படிப் பழமும் அடையும் குடுப்பீங்களா?

"தெரிந்தாலும் கொடுப்பேன். நீ யார்?"

"கறுப்புச்சாமி!

பரமசிவம் ஒரு கணம் திடுக்கிட்டாலும் தன்னைச் சமாளித்துக்கொண்டு, "அப்பனே! உன்னைப் பார்க்க வேண்டுமென்று எத்தனை நாட்களாக நினைத்துக் கொண்டிருக்கிறேன்! நீயே என்னைத் தேடிக்கொண்டு வந்திருக்கிறாயே......" என்று அதிசயித்தார்.

"ஏன் சாமி அப்படி? அளவு கடந்த பாவங்களைச் செய்தவனைப் பார்க்க யாராவது ஆசைப்படுவார்களா?"

பரமசிவத்துக்குச் சந்தேகம் வந்துவிட்டது. 'ஒரு வேளை மனுஷன் 'தண்ணி போட்டு' விட்டுத் திசை கெட்டு வந்துவிட்டானோ' என்று நினைத்தார். இருந்தாலும் தம்மைச் சமாளித்துக் கொண்டு, எங்கே இப்படி வந்தாய் அப்பா? போலீஸ் வந்து விடுமே..." என்றார் கருணை பொங்க.

"வந்துவிடும் என்ன சாமி? வந்தே விட்டார்கள்! குறுக்குப் பாதையில் புகுந்து ஓடி வந்தேன்."

"எதற்கு அப்பா? உன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளத்தானே? இந்தக் கிராமத்தில் எத்தனை உயிர்கள்—உன்னால்— துடிக்கின்றன என்பது உனக்குத் தெரியுமா?..."

"சாமீ!" என்று உறுமினான் அவன். "இப்பொழுது உங்களிடம் உபதேசம் பெற நான் வரவில்லை. இந்தக் குடிசைக்குள் ஒளிந்துகொள்ள எனக்கு இடங் கொடுங்கள்" என்று கூறியவாறு மடியில் வைத்திருந்த பொய்த் தாடியை எடுத்து அணிந்து கொண்டு, பையிலிருந்து திருநீற்றை எடுத்து நெற்றியில் அப்பிக் கொண்டான். அவன் போலிச் சாமியாராக மாறி யிருந்தாலும், அந்த வேஷம் அவனுக்கு நன்றாகத் தானிருந்தது.

கறுப்புச்சாமியின் உருவம் எப்படி இருக்கும், அவன் எப்படி இருப்பான் என்பதே போலீசாருக்குத் தெரியாது. ஓர் இடத்தில் அவன் மொட்டைத் தலையுடன் வந்தான் என்றார்கள்; மற்றோர் இடத்தில் தாடிச் சாமியாராகக் காட்சி அளித்ததாகச் சொல்லிக் கொண்டார்கள். இன்னொரு இடத்தில் கிருதாக் கிராப்பும் நறுக்கு மீசையுமாக வந்து ஜனங்களை ஏய்த்துவிட்டுப் போனதாகப் பேசிக் கொண்டார்கள். போலீசாரின் பாடு ஒரே திண்டாட்டமாக இருந்தது. அந்த மாயாவியை உயிருடனோ, செத்த பிணமாகவோ பார்த்துத்தான் ஆகவேண்டும் என்று அவர்கள் விருப்புடன் ஈடுபட்டு, அமாவாசை இரவுகளிலும் பின்னிலவுக் காலங்களிலும் கிராமம் கிராமமாகப் பீட் சுற்றி வந்தனர்.

அன்றிரவு மறுபடியும் அவன் தாடிச் சாமியாராக ஒரு கிராமத்தில் கொள்ளையடித்து விட்டு மறைந்ததும், போலீஸின் ஆத்திரம் அளவு கடந்துவிட்டது. காட்டுப் பாதைகளிலும், கல்லிலும் முள்ளிலும், மலைப் பாதைகளிலும் ஓடிக் களைத்துப் பரமசிவத்திடம் அடைக்கலம் தேடி வந்திருந்தான் கறுப்புச்சாமி. பரமசிவம் என்ன செய்வது என்பது தெரியாமல் திண்டாடினார்.

* * *

**போ**லீசின் ஊது குழல் இரவின் அமைதியைக் குலைத்தவாறு "உய்ய்...." என்று கேட்டது. மறுபடியும் சேர்ந்தாற் போலப் பல குழலொலிகள் கேட்டன. போலீஸ் வெகு அருகாமையில் இருக்கிறதென்று தெரிந்து விடவே, கறுப்புச்சாமி பரமசிவத்தின் கால்களைப் பிடித்துக் கொண்டான்.

"சாமி! எப்படியாவது காப்பாத்துங்க, சாமி......"

இரவு மூன்றாம் ஜாமம். ஜாமக்கோழி தன் வேலையை முடித்துவிட்டுக் குடிசையின் கூரை மேல் உறங்கிக் கிடந்தது. நாயும் உறங்கும் வேளை. ஆயிற்று; இன்னும் சற்றுப் பொறுத்தால் இருள் பிரிந்து கொண்டே வந்து, பொழுது விடிய வேண்டியதுதான். மரங்களிலும் ஏரிக்கரைப் புதர்களிலும் போலீசார் பதுங்கி இருக்கிறார்கள் என்பது பரமசிவத்துக்குத் தெரிந்துவிட்டது.

அந்த அந்தகாரத்தில் குடிசைக்குள்ளிருந்து ஓர் உருவம் மெல்ல மெல்ல வெளியே வந்தது. தாடியும் மீசையுமாகத் தோளில் பையுடன் அது நிதானமாக ஏரிக்கரையை நோக்கி நடப்பதைப் போலீஸ் புலிகளின் கண்கள் தீட்சண்யமாகக் கவனித்தன.

உருவம் மெதுவாக நடந்து சென்று ஏரிப் படுகை ஓரமாகத் திரும்பியது.

"டும்......டுமீல்......"

இதயத்திலிருந்து ரத்தம் 'குபு குபு' வென்று பெருக அந்த உருவம் கீழே சாய்ந்தது. போலீசார் இறுமாப்புடன் தங்கள் இலாக்காவை அலைக்கழித்து வந்த கறுப்புச் சாமியைப் பிணமாகப் பார்த்ததில் திருப்தி யடைந்தனர்.

சுற்றிலும் சூழ்ந்திருந்த கிராமத்து ஜனங்கள் வியப்பு மேலிட, "ஆங்... கறுப்புச்சாமியோடா இரவு பேசிக்கிட்டு இருந்தோம்? எவ்வளவு நல்லவன் மாதிரி நடிச்சான் ஐயா! பாவி!... செத்து ஒழிஞ்சான்..." என்றெல்லாம் பேசிக் கொண்டார்கள்.

* * *

கறுப்புச்சாமியின் சாகசச் செயல்களைப் பற்றித் தங்கமேட்டு ஜனங்கள் தங்கள் குழந்தைகளுக்குக் கதையாகக் கூறும் அளவுக்குக் காலம் ஓடிவிட்டது. தங்கமேடு ஏரிப் படுகையிலிருந்து சற்றுத் தள்ளி ஒரு குடிசை காணப்பட்டது. பரமசிவச் சாமியார் அந்த வட்டாரத்துக்கு வந்து இரண்டு மூன்று ஆண்டுகளே ஆகி இருந்தன. சாமியாரின் கையால் மந்திரித்த திருநீற்றுக்கு ஏகப்பட்ட மதிப்பு. அவர் மந்திரித்தால் குழந்தைகளுக்கு ஏற்படும் சில்லறை நோய்கள் தீர்ந்து விடுவதாகக் கிராமத்து ஜனங்கள் நம்பினார்கள். பழுத்த கிழமான அவர் வெண்ணீறு அணிந்து, மக்களிடம் இதமாகப் பேசி, அவர்கள் துயரத்தால் வாடும்போது ஆறுதல் கூறியும், அவர்கள் களித்துப் பொங்கும்போது அந்த மகிழ்ச்சியில் தாமும் பங்கு கொண்டும் வாழ்ந்து வந்தார். அவருக்குப் பணிவிடை புரிய ஓர் இளைஞன் எப்பொழுதும் அவருடன் இருந்து வந்தான்.

சாமியார் எப்பொழுதும் அதிகாலையில் எழுந்து ஏரிப்படுகை அருகில் சென்று தனியாக உட்கார்ந்து பிரார்த்தனை செய்வது வழக்கம். அன்று அவர் விடிந்தும் எழுந்திருக்கவில்லை. சிஷ்யன் சம்பந்தம் அவரை அணுகி உற்றுக் கவனித்தான்.

"சாமி! ஏன் இப்படி இருக்கிறீர்கள்? உடம்புக்கு ஏதும் இல்லையே?"

பரமசிவம் தீனமான குரலில் பேசினார்: "என்னவோ அப்பா! விடியற்காலம் படுக்கையை விட்டு எழுந்து பார்த்தேன். மண்டையில் ஒரே குடைச்சல்; உடம்பெல்லாம் 'குபு குபு' வென்று அனல் வீசிற்று. ஆயிரம் புழுக்கள் சேர்ந்து மண்டையைக் குடைவது போன்ற ஹிம்சை ஏற்பட்டது. சகிக்க முடியவில்லை அப்பா......"

சம்பந்தம் பரிதாபத்துடன் அவரைப் பார்த்தான். மறுபடியும் பரமசிவம் பேச ஆரம்பித்தார்.

"அளவற்ற பாபங்கள் செய்தவனை ஆண்டவன் சும்மா விடுவானு அப்பனே? இப்படி என் அருகில் வா...." என்று அழைத்தார்.

சம்பந்தம் தயக்கத்துடன் அவர் அருகில் சென்று நின்றுன்.

"நான் இன்னும் சில மணி நேரத்தில் இறந்து விடுவேன். அதன் பிறகு பரமசிவச் சாமியாருக்கு இந்த ஏரிப்படுகை ஓரத்தில் அழகிய சமாதி ஒன்று கட்ட வேண்டும். கிராமத்தாரிடம் தெரிவித்தாயாகில் அவர்கள் அவசியம் முன்னின்று அதை நடத்தி வைப்பார்கள்." சம்பந்தம் திகைத்துப் போனுன். 'தற்புகழ்ச்சியிலும், தன்னைப் பற்றிய விளம்பரத்திலும் நம்பிக்கை யில்லாத துறவியாகிய சாமியாரா இப்படிப் பேசுகிருர்?' அவன் தயங்குவதைப் பார்த்து, "என்ன? ஒன்றும் பேசமாட்டேன் என்கிருய்? பரமசிவச் சாமியாருக்குச் சமாதி கட்ட முயற்சி செய்வாயா, மாட்டாயா?" என்று மறுபடியும் அழுத்தமாகக் கேட்டார்.

"உம்...... உம்...... அப்படியே செய்து விட்டால் போயிற்று. நான் சொல்லித்தானு கிராமத்தார் செய்யப் போகிருர்கள்? கடந்த சில வருஷங்களாக நீங்கள் கொஞ்சமாகவா அவர்களுக்குத் தொண்டுகள் புரிந்திருக்கிறீர்கள்...? கட்டாயம் செய்வார்கள்......"

"எனக்கா சமாதி கட்டச் சொன்னேன்? பரமசிவத்துக்கல்லவா சொன்னேன்?"

'பளிச்' சென்று தேங்காய் உடைப்பது போல் வெட்டு ஒன்று துண்டு இரண்டாக அவர் பேசினர். சம்பந்தத்தின் மூளை குழம்பியது. மேலும் அவனைக் குழப்பாமல் சாமியார் திணறியவாறு பேச ஆரம்பித்தார்.

"பல வருஷங்களுக்கு முன்பு பரமசிவச் சாமியார் சமூகத்தாலும், சட்டத்தாலும் வெறுக்கப்பட்ட கேவலம் ஒரு கொள்ளைக்காரனுக்காக அந்த ஏரிப்படுகை ஓரமாக உயிர் துறந்தார். நான்தான் அந்தக் கொள்ளைக்காரக் கறுப்புச்சாமி... எனக்காக அவர் சாவதைப் பார்த்துக் கொண்டிருந்தேன். 'எப்படியாவது காப்பாத்துங்க சாமி' என்று அற்பமான என் உயிரின் மீது ஆசை வைத்து அவர் கால்களை நான் பிடித்துக் கொண்ட போது கண்களில் கருணை பொங்க அவர், 'அப்பனே! இனிமேல் கொள்ளையிடுவதில்லை என்று என்னிடம் சத்தியம் செய்து கொடு' என்று கேட்டார். பிறகு 'நீ இங்குதான் மறைந்திருந்து தப்பிச் செல். நான் வெளியே போகிறேன். போலீசாரிடம் பிடிபட்டால் நான் யாரென்று கூறி, எப்படியாவது தப்பி வந்துவிடுவேன். ஆனுல் நீ மட்டும் உன் வாக்கிலிருந்து இனி மேல் தவறக் கூடாது' என்று கூறிவிட்டுப் பரமசிவம் வெளியே சென்றுர். தாடியும், திருநீறுமாக இருந்த அவரை நான் என்று நினைத்துப் போலீசார் சுட்டுக் கொன்றனர். 'கறுப்புச்சாமி செத்து ஒழிந்தான்' என்று நிம்மதியாக இருந்து விட்டனர்......"

சம்பந்தம் திறந்த வாய் மூடாமல், ஆச்சரியத்தால் கண்கள் மலர, கறுப்புச்சாமி கூறுவதைக் கேட்டுக் கொண்டிருந்தான்.

மறுபடியும் பேசினுன் கறுப்புச்சாமி:

"கறுப்புச்சாமி அன்றே செத்துத்தான் போனுன். மனிதனுடைய துர்க்குணங்கள் செத்துப் போகும்போது அவன் மீண்டும் மறுபிறவி எடுத்த மாதிரிதானே? நான் என் உயிரின் மீது இருந்த ஆசையால் பரமசிவமாக உலவி வந்தேன். ஆனுல், நெஞ்சிலே களங்கத்துடன் உலகை விட்டுப் போக எனக்கு விருப்பமில்லை. நான் செய்த அளவற்ற பாவங்களுக்குப் பிராயசித்தமாக இந்த எண்ணத்தை உன்னிடம் தெரிவித்துவிட வேண்டும் என்று நினைத்துக் கூறிவிட்டேன்."

கறுப்புச்சாமியின் வாய் அதன்பிறகு பேசுவதை அடியோடு நிறுத்திவிட்டது. எண்ணங்களுக்கும் செயல்களுக்கும் அப்பாற்பட்ட ஓர் உலகத்துடன் அவன் தொடர்பு கொண்டவனுக இருந்தான். பெருமூச்சாக இழைந்த மூச்சு சிறு மூச்சாக மாறி, அதுவும் தேய்ந்து மறைந்தது.

* * *

ஏரிப்படுகையின் ஓரத்தில் ஒரு சிறு சமாதிக் கோவில் 'பளிச்' சென்று மின்னியது. சாமியார் கோவிலுக்கு சனங்கள் தேங்காய் உடைத்து, சூடம் காட்டி வரம் கேட்டனர். சாமியார் வேடத்தில் இருந்த கறுப்புச்சாமிக்கும், பரமசிவச் சாமியாருக்கும் அவர்களுக்குப் பேதம் தெரியா விட்டாலும், அவர்களின் மரியாதை உண்மைத் தியாகத்துக்கு உரியதல்லவா? ∴

# படைப்பு

**சரோஜா ராமமூர்த்தி**

கடல் சூழ்ந்த இவ்வையகத்தை இறைவனும் இறைவியும் அளவிலாப் பெருமையுடன் பார்த்துக் கொண்டிருந்தனர். காற்றில், நீரில், நிலத்தில் ஒவ்வொரு விநாடியும் உயிர்கள் தோன்றிப் பெருகிக் கொண்டேயிருந்தன. இறைவி தன் விழி மலர்களை மலர்த்தி, அவற்றை மகிழ்ச்சியுடன் நோக்கினாள். இறைவன் இறைவியின் மந்தகாச முகத்தைப் பார்த்துப் பார்த்து போதை தலைக்கேற, உன்மத்தம் பிடித்தவன் போல் அவளை இறுகப் பற்றி அணைத்துக் கொண்டான்.

இறைவி நாணம் கொண்டாள். இறைவன் அதை ரசித்தான், மகிழ்ந்தான். அப்பொழுது காற்றில் எங்கிருந்தோ இரு குரல்கள் வந்து அவர்கள் திருச் செவிகளில் மோதின. இறைவி கவலையுடன் நாயகனை நோக்கினாள்.

''பிரபோ! தங்கள் படைப்பின் விநோதத்தின் ரகசியம் எனக்கு விளங்கவில்லையே! அதோ அந்தப் பையன் சொல்வதைக் கேட்டீர்களா?..''

''என்ன சொல்கிறான் தேவி...?''

''அவன் கூறுரைப்பதைக் கேளுங்கள். அவனுக்குத் திருமணத்தில் ஆசையில்லையாம். உளுத்துப் போன அவனால் இந்த வையகத்துக்கு வம்ச விருத்தி வேண்டாமாம்... இப்படியே இருந்து மறைந்து விடப் போகிறானாம். இப்படி அவன் தன் அன்னையுடன் வாதாடுகிறான் சுவாமி...''

உலக நாயகி கூறுவது கேட்டு உலக நாயகன் நகைத்தவாறு இறைவியை அன்புடன் அணைத்துக் கொண்டான்...

''மாதவா! என் அப்பனே இல்லையோ? நான் சொல்கிறதைக் கேளடா. உன்னாலே இந்த வம்சம் விளங்க வேண்டுமடா... ஏழையோ, பாழையோ ஒரு பெண்ணைப் பார்த்துக் கல்யாணம் பண்ணிக் கொள் அப்பா.... உன் வயிற்றில் ஒன்று... அது ஆணோ பெண்ணோ பிறந்தால் போதும்.... பார்த்து விட்டு நான் கண்ணை மூடுகிறேனடா...''

தாயின் வற்றிச் சுருங்கிய விரல்கள் அவன் மோதிரச் சுருள் கிராப்புத் தலையுடன் விளையாடின. காய்ச்சிய பசும் பாலில் படிந்திருக்கும் லேசான பொன் நிறத்தை உடையவன் மாதவன். கூர்மையான மூக்கும், நீண்ட விழிகளும் கொண்ட அழகன் அவன். தந்தை வைத்து விட்டுப் போன சொத்து ஏராளமாக இருந்தது. ஏகப்பட்ட செல்வத்தை வைத்துப் போன தந்தை ஆரோக்கியமுள்ள மகனை வைத்து அந்த கிழத் தாயை மகிழும்படிச் செய்யவில்லை.

மாதவனுக்கு இதய பலவீனம். பார்ப்பதற்கு ஆள் வாட்ட சாட்டமாக அமைந்திருந்தாலும், அவன் எதற்கும் உபயோகமில்லாதவன். காலையில் எழுந்தவுடன் மேஜை மீது காப்பி தயாராக இருக்கும். தோட்டத்தை ஒரு சுற்றுச் சுற்றி விட்டு வந்தாலே மார்புக் கூடு பட படவென்று அடித்துக் கொள்ளும். கண்களைச் சுழற்றும்.

''மாதவா, ஏண்டா இப்படி அலையறே!..'' என்று கூறி ஆதரவுடன் அணைத்துக் கொள்வாள் அன்னை. அதெல்லாம் பதினைந்து வயதில். மகன் பெரியவனாக வளர வளர அவனுடைய அழகும் போட்டி போட்டு வளர்ந்தது.

'ராஜா மாதிரி இருக்கிறான். இந்தக் கிழவி கொடுத்து வைக்கவில்லை. ஒன்றே ஒன்று. அது நன்றாக இருக்காதோ?' ஊராரின் விமரிசனம் இது. ஊராருக்கென்ன? நல்லது கெட்டது இரண்டையுமே பல்லில் கடித்துச் சுவைப்பார்கள்.

நெடிதுயர்ந்து நிற்கும் மகனின் கழுத்தில் மாலையைப் போட்டு மணக் கோலத்தில் காண அன்னையின் மனம் துடித்தது. பால்யத்தில் கணவன் மறைந்ததும், இரண்டு வயசுப் பிள்ளையின்கையை ஊன்றுகோலாகப் பற்றிக் கொண்டு, இருண்டு விட்ட தன் வாழ்க்கையில் ஒளியைக் காண முயன்ற அந்த அன்னை, அப்படி ஆசைப்பட்டதில் தவறொன்று மில்லையே ?

''மாதூ!...'' என்று அழைத்து, ஆவலே உருவாக மகனின் முகத்தை நிமிர்த்தி, ஆசையுடன் அவன் என்ன சொல்லப் போகிறான் என்பதைக் கவனித்துக் கொண்டிருந்தாள் அவள்.

''அம்மா...அம்மா... உனக்கு ஒரு பிள்ளை பிறக்கவே இல்லை யென்று நினைத்துக் கொள் அம்மா...என்னைக்கல்யாணம் செய்து கொள்ளச் சொல்லி வற்புறுத்தாதே...'' மாதவன் அன்னையின் இரு கர மலர்களையும் பற்றிக் கொண்டு'ஓ'வென்று அழுது விட்டான்.





வநது விட்டது பாழும் படபடப்பு. அது ஓய்வதற்குள் அந்தக்கிழவிஅலங்க மலங்கப் பதறி விட்டாள். மார்பைத் தடவி விட்டாள். தன் மேல் சாய்த்துக் கொண்ட மகனின் கன்னங்களை ஆசையுடன் வருடினாள்.

''வேண்டாம் மாது.. வேண்டாம்.. நீ எனக்குப் பிள்ளையாக இரப்பா... நான் அதிகம் ஆசைப்படக் கொடுத்து வைக்காத ஜென்மம்..'' அந்த அம்மாள் தன் வேதனையை விழுங்கியவாறு மகனிடம் கூறி அவனைத் தேற்றினாள்.

மாதவனுக்குச் சிறிது நேரத்தில் படபடப்பு அடங்கி விட்டது. எப்பொழுதும் போல அவன் அறையில் நாற்காலியில் சாய்ந்தவாறு தொடு வானத்தையும், அதில் அடுக்கடுக்காய் மலைத் தொடர்களைப் போல் பரவிக் கிடக்கும் வெண் மேகங்களையும் பார்த்துக் கொண்டிருந்தான். தொடு வானத்தைத் தவிர மற்ற இடமெல்லாம் ஒரே நீலம். காயும் கதிரவனின் ஒளி, நீள் விசும்பில் சுடர்விட்டுக் கொண்டிருந்தது.

அந்த ஒளிப் பிழம்பை ஊடுருவிச் செல்கிறாப் போல் இரு பறவைகள் விண்ணில் 'விர்'ரென்று சென்றன. ஒன்று ஆண், மற்றொன்று பெண். பறந்து சென்ற அப்புட்கள் ஓங்கிப் பரந்து வளர்ந்திருந்த மாமரத்தின் உச்சியில் உட்கார்ந்தன. பெண் பறவை ஊட, ஆண் பறவை அதைச் சுற்றிச் சுற்றிப் பறக்க....

''ஆகா! எத்தகைய காட்சி இன்பம்?'' மாதவன் தனக்குள் சொல்லிக்

கொண்டான். மாமரத்துச் சிட்டுக்களின் மேல் லயித்திருந்த அவன் கவனத்தை, வாசல் கேட்டைத் திறந்து வந்து, எதிரில் நின்ற மங்கை ஒருத்தி கவர்ந்தாள்.

''யார்?'' — இது மாதவன்.

''இந்த வீட்டில் 'அவுட் ஹவுஸில்' காலி இருக்கிறதாமே... பார்க்கலாமா?''— அவள் கேட்டாள்.

''ஓ! தாராளமாக...உள்ளே அம்மா இருக்கிருள்...'' என்றவன் உள்புறம் திரும்பி, ''அம்மா...'' என்று அழைத்தான்.

அவன் தாயும், அந்தப் பெண்ணும் உள்ளே செல்வதைச் சிறிது பார்த்திருந்து விட்டு,மறுபடி மாமரத்தைக் கவனித்தபோது சிட்டுக்கள் இரண்டும் ஜோடியாக அமர்ந்து கிசுகிசுத்தன.

உள்ளேயிருந்து கணீரென்ற குரலில் அந்தப் பெண் பேசினுள்.

''எனக்கு மாதச் சம்பளம் எழுபது ரூபாய்தான். தாயார் மட்டும் தான் இருக்கிருள்.வேறு யாரும் கிடையாது. வாடகையில் ஐந்து ரூபாய் குறைத்துக் கொள்ளுங்கள்—''

''ஆகட்டும் அம்மா. ஏதோ எனக்குப் பேச்சுத் துணைக்கு என்று இருந்தால் போதும். வாடகையைப் பற்றி என்ன இப்போ? வந்து..உன் பெயர் என்ன வென்று சொன்னுய்?..''

''நீலா...''

'நீலா' என்று மாதவனின் மனமும் அந்தப் பெயரை வாங்கிப் பதிவு செய்து கொண்டது. உள்ளே யிருந்து பேச்சுக் குரல் அருகில் நெருங்கி வந்தது.

''மாது! இந்தக் குழந்தையும், இவள் அம்மாவும் நம் 'அவுட் ஹவு'ஸுக்கு நாளைக்குக் குடி வருகிருர்கள். வாடகையில் ஐந்து ரூபாய் குறைக்கச் சொன்னுள், சரியென்றுவிட்டேன்—''

''உன் இஷ்டம் அம்மா...''-மாதவன் நீலாவை ஏறிட்டுப் பார்த்தவாறு கூறினுன்.

''ரொம்ப தாங்ஸ்..''- நீலா கூறியது மாதவனுக்குத்தான். இல்லாவிடில் அந்தக் குரலில் ஒரு குழைவும் நளினமும் மிளிர்வானேன்?..

நீலாவும், அவள் தாயும் குடி வந்தார்கள். அவளுடைய சுறு சுறுப்பு, மகிழ்ச்சி, கலகலப்பு எல்லாம் அவளுடன் குடிவந்தன; சாமான்களைத் தவிர உடன் வந்தவை நாலைந்து பாத்திரங்கள், இரண்டுபெட்டிகள், படுக்கை இவ்வளவு தான். பெட்டியிலிருந்து வெகு அக்கறையாகப் பக்தியுடன் ஆறுமுகனின் திருவுருவப் படத்தை எடுத்து அறையில் மாட்டி வணங்கினுள் நீலா. அந்தப் படத்தின் சோபை அவர்கள் வீடெல்லாம் நிறைந்து விளங்கியது.

இது காறும் மாதவனின் இதயம் நோயின் கொடுமையால் படபடத்து வந்தது. இப்பொழுது நோயின் கொடுமையினூடே இன்ப வேதனையால் துடித்தது. இதயம் துள்ளியது. மகிழ்ந்து ஏங்கியது.

''பள்ளிக்கூடத்துக்குக் கிளம்பியாச்சா?.'' வெளியே கிளம்பும் நீலாவைக் கேட்டான் மாதவன்.

''கிளம்பிக் கொண்டே,....இருக்கிறேன்....'' இழுத்தவாறு வாக்கியத்தை முடிக்காமல் அவனைப்பார்த்து இள நகை சிந்தி விட்டு மறைந்து விடுவாள் அவள்.

''பள்ளிக்கூடத்திலிருந்து வந்தாச்சா?..'' கேசம் காற்றில் பறக்க சோர்வினூடே மிளிரும் அவள் அழகைக் கண்களால் விழுங்கியவாறு கேட்பான் மாதவன்.

''வந்து கொண்டேயிருக்கிறேன்..'' என்றபடி முறுவல் காட்டி உள்ளே போய் விடுவாள் அவள்.

அவர்களின் காதலின் தோற்றுவாய் இவ்வளவு தான். 'பார்க்'கைத் தேடியோ, கடற்கரையில் ஒளிந்தோ அவர்கள் காதல் வளரவில்லை. கச்சிதமாக, நேர்மையாக, புனிதமாக வளர் பிறை மதி போல் வளர்ந்தது.

மாதவன் பல மாதங்களுக்கு அப்புறம் தன் அன்னையின் முன்பாக ஒரு நாள் வந்து நின்ருன்.

''அம்மா—!''

''என்னப்பா...?''

''அம்மா'' என்று தயங்கினுன் மாதவன்.

''என்ன மாதூ...என்னிடம் எதையும் சொல்ல உனக்கு ஏன் தயக்கம்?'' அந்தத் தாய் சாலப் பரிந்து அவனைக் கேட்டுக் குழைந்தாள்.

''வந்து...அம்மா...''

''உம்...வந்து...'' என்று முறுவல் காட்டினுள் அன்னை. ஈன்றெடுத்த மகனின் போக்கை அவளால் புரிந்து கொள்ள முடியாதா என்ன? ஒன்றிலும் கவனமில்லாமல், நாட்ட மில்லாமல் இருந்தவன் அடிக்கடி நீலாவைக்

''கவனிப்பதையும், சிரிப்பதையும் அவள் எப்படியோ தெரிந்து கொண்டிருந்தாள்.

மாதவன் தாயை நிமிர்ந்து நேருக்கு நேர் பார்த்தான். பிறகு துணிவுடன் ''அம்மா! நீலாவை நான் கல்யாணம் பண்ணிக் கொள்கிறேன். அவள் தாயைப் பார்த்துப் பேசி ஏற்பாடு செய்யுங்கள்'' என்று கூறி முடித்து விட்டு, அந்த ஆனந்தத்தின் சுமை தாங்காமல் அறைக்குள் சென்று படுத்து விட்டான்.

ஒரு விநாடி தாயுள்ளம் மகிழ்ச்சிக் கடலில் முங்கி எழுந்தது. உலகத்தாரைப்போல் அவளும் மாமியாகி, அப்புறம்பாட்டியாகவும்ஆகிவிடுவாள். மாதவனின் பால்ய விளையாட்டுக்களையெல்லாம், அவன் மதலைமூலம் மறுபடியும் பார்த்து மகிழலாம். எண்ணி எண்ணி அந்தப் பேதை மனம் மகிழ்ந்தாலும், கூடவே இதயத்து மூலையிலிருந்து எச்சரிக்கை ஒன்று பலமாகக் கிளம்பியது.

மாதவன் மண வாழ்க்கைக்கு அருகதை யுள்ளவன் தானா? ஏன் இருக்கக் கூடாது? வைத்தியம், எச்சரிக்கை இவற்றை மீறிக் கடவுள் சக்தி என்று ஒன்று இருக்கிறதே? அது பலமாக இருப்பதால்தான் இத்தனை காலம் மண வாழ்க்கையில் நாட்ட மில்லாமலிருந்தவனின் மனம் புரண்டு கொடுத்திருக்கிறது.

அன்று தை வெள்ளிக்கிழமை. எல்லாம் பொருத்தமாக அமைந்திருக்கிறது என்று நினைத்து, அவள் ரோஜா கதம்பமும், வெற்றிலை பாக்கு பழத்துடனும் அவுட் ஹவுஸுக்குப் போய் விட்டாள் பெண் கேட்க!

நீலா தழையத் தழைய நெளிந்து புரளும் பின்னலும், நெற்றியில் துலங்கும் செஞ்சாந்துத் திலகமும் ஒளியிட விளக்கேற்றி வணங்கும் வேளையில், வீட்டுக்கார அம்மாளை எதிர்பார்க்கவில்லை தான்.. சாதாரணமாக அந்த அம்மாள் ஏதாவது விஷயம் இல்லாமல் எங்கும் போவதில்லை.

''வாருங்கள் அம்மா—''

மணையைப் போட்டு உபசரித்தாள் நீலா.

''அம்மா இல்லையா? இந்தா! பூ வைத்துக் கொள்..'' என்று கதம்பத்தை எடுத்துச் சூட்டினாள். அப்புறம் எல்லாமே விரைவில் நடந்தன.

அடுத்த நாளிலிருந்து மாதவன், ''பள்ளிக்கூடத்துக்குக் கிளம்பியாச்சா?..'' என்று கேட்டால், அந்தப் பொல்லாத பெண் பதிலேதும் கூறாமல் கடைக் கண்ணை அம்பு போல் பாய விட்டுத் துள்ளி ஓடி விடுவாள்.

நாணமாம் அவளுக்கு!

'அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய்' நிறைந்திருக்கும் பரம் பொருள் மாதவனையும், நீலாவையும் ஒன்று சேர்த்துக் கணவனும் மனைவியுமாகப் பிணைத்தான்.

கோயில் பிராகாரத்தை தம்பதி வலம் வரும் போது மாதவனின் தாய் சிந்தை குளிரப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்தாள். மங்கல அரிசி தூவி ஆசி கூறினாள். இறைவனின் அருள்வேண்டி மெய்யுருக மாதவனின் நலனுக்காக முறை யிட்டாள்.

கல்யாண அலுப்பு என்று கூறுகிறார்களே அது முற்றிலும் உண்மை. திருமணத்தை நடத்தி வைப்பவர்கள் மனத்திலிருந்த பாரம் குறைய சரீர அசதியினால் அயர்ந்து தூங்கி விட்டார்கள். திருமணம் புரிந்து கொண்டவர்களோ மனம் அயர்ந்து விடுவதில்லை. புதிதாக ஒன்றை, புரியாத ஒன்றை, இனம் தெரியாத உறவை நினைத்து நினைத்து அவர்கள் விழித்துக் கொண்டு



**'' என்ன காஷியர் ஸார்... நீங்கள் ரிடையர் ஆகப் போகிறீர்களாமே ?''**

**''ஆமாம் ஸார்...வருகிறவர்கள் போகிறவர்களுக்கெல்லாம் எவ்வளவு நாள் தான் பணத்தை வாரிக் கொடுத்துக் கொண்டிருப்பது ?..''**

தான் இருப்பார்கள். அவர்கள் ஆயிர மாயிரம் மைல்களுக்கப்பால் இருந்தாலும் இந்த ஏக்கம் இருந்து கொண்டு தான் இருக்கும். அருகில் இருந்துவிட்டால்?..

தை மாதமாகையால் வானத்தில் மேகங்கள் இல்லை. அது வளர் பிறை. பொட்டுப் பொட்டாய் விண்ணெங்கும் புள்ளிக் கோலங்களாகத் தாரகைகள் கொலுவிருந்தன. அவற்றின் இடையே சந்திரனின் ஆட்சி உலகை ஒளியிலே தோய்த்து எடுத்தது.

இளம் தென்றல் வீசியது. ஆனால் திருமண வீட்டார் தங்கியிருந்தது ஒரு சாதாரண சத்திரம். மிக மிகப் பழமையானது. சுண்ணாம்பு அடித்து வெகு காலம் ஆனது. ஆங்காங்கு சுவரில் அழுக்கேறியும் பழுப்புடனும் காணப் பட்டது.

சத்திரத்துத் திண்ணைகளில் சிலர் படுத்து விட்டார்கள். உள்ளே அநேகம் அறைகள் காலியாகவே இருந்தன.

மாதவன் கண்களை விழித்தவாறு தலையை உயர்த்தி ஜன்னல் வழியாக வெளியே பார்த்தான். அந்த இரவு என்று மில்லாத புதுமையாக அவனுக்குக் காட்சி தந்தது. அத்துடன் அவன் இனி 'தனியன்' அல்ல என்கிற எண்ணமும் ஊடே எழுந்தது.

'என் நீலா எங்கே?'

தனக்குள்ளாகவே கேட்டவன் திரும்பி, கூடத்தைப் பார்த்தான். தலையில் சூட்டிய மல்லிகை மலரும், மை கரைந்த நீள் விழிகள் சோர, புதுப் புடவை மெருகிட வாழைத் தண்டு போல நீண்டிருந்த கையை தலைக்குயரமாக வைத்துக் கொண்டு நீலா கண் வளர்வது நன்றாகத் தெரிந்தது.

'சே! சரியான ஜடம்! என்ன தூக்கம் வேண்டி இருக்கிறது?'

'விசுக்'கென்று எழுந்து விட்டான் மாதவன். நீலாவின் பக்கத்தில் ஒரு பத்து வயதுப் பெண் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தது.

கனவு உலகத்தில் களித்திருந்த நீலாவின் முகவாயைப் பற்றி வருடி எழுப்பிய கரங்கள் மாதவனுடையவை. அவள் கன்னங்கள் சிவந்தன.

நேரம் ஏற ஏற நிலவு அடிவானத்தை நோக்கி கனவேகமாகப் போய்க் கொண்டிருந்தது. சற்று முன்பு உலகத்துக்கு அழகு தந்த ஒளி மறைந்து இப்போது இருளாகப் பரவி வந்தது.

விடிய இன்னும் எவ்வளவோ நாழிகை இருக்கிறதே!

அந்த இருளின் ஊடே நீலா அலையக் குலைய வேகமாக சத்திரத்துத் திண்ணையை நோக்கிப் பாய்ந்து ஓடி வந்தாள்.

''அம்மா..அம்மா!..''

அவளுடைய பயங்கரமான அலறல் அந்தப் பிராந்தியத்தையே அலற வைத்தது.

''என்ன? என்ன?..''

''ஏன் ஏன்?''

ஒன்றுக் கொன்று சம்பந்த மில்லாமல் கேள்விகள் பிறந்தன.

''அம்மா உள்ளே வாருங்களேன்!.. அவரை வந்து பாருங்களேன்...—''

நீலா எல்லோரையும் கூட்டிக் கொண்டு உள்ளே ஓடினாள்.

மாதவன் திணறிக் கொண்டிருந்தான். வேதனைப் பட்டான். அணு அணுவாக அடங்கிக் கொண்டிருந்தான்.

''மாது...'' என்று அமைதியைக் கிழித்துக் கொண்டு அன்னையின் குரல் ஒலித்தது. அருகே நிற்கும் மருமகளின் தோற்றம்? கீழே சிதறிக் கிடக்கும் மலர்கள்?

''மாதூ..''— அன்னை முட்டிக் கொண்டாள். மாதவன் முகத்தில் அமைதி நிரம்பி இருந்தது. கண்கள் மூடிக் கிடந்தன. ஊரே திரண்டு விட்டது. ஆறுதலுக்கோ தேறுதலுக்கோ அவசியமில்லாத நிலையில் அங்கே ஒரு உண்மையை ஊரார் எல்லோருமே பார்த்தார்கள்.

பழுப்பேறிய சுவரில் கரித் துண்டினால் 'அவளும்.. நானும்.. மனோ வாக்கு காயத்தினால்...'

வாக்கியம் முடிவு பெறவில்லை.

ஒரு நாள் வாழ்ந்து ஓய்ந்து விட்ட அந்தப் பெண்ணை அவர்கள் எந்தக் கண் கொண்டு பார்த்தார்கள் என்பது வேறு விஷயம்.

வற்றி உலர்ந்துபோன விரல்கள் அடுத்த பத்தாவது மாதத்தில் மடியில் குழந்தையைக் கிடத்தியவாறு மாதவனின் சேயை வருடிக் கொண்டிருந்தது. குழந்தை மாதவனின் மறு அச்சு என்று பாட்டி யுள்ளம் எண்ணி மகிழ்ந்தது.

எங்கும் நிறைந்த இறைவன், இறைவிக்கு இந்தக் காட்சியைச் சுட்டிக் காட்டத் தவறவில்லை.

# மணத்திலே கரைந்து...

ஸரோஜா ராமமூர்த்தி

அவளை அந்த நிறப் புடவையில் பார்ப்பதற்குத்தான் அவனுக்குப் பிடித்திருந்தது. வெளிர் நீல நிறப் புடவை, அதே கலரில் ரவிக்கை, வளையல்கள், பொட்டு, புஷ்பம் எல்லாமே. எல்லோரையும் போல அவள் கூந்தலை இழைய வாரிக்கொள்வதில்லை; பின்னிக்கொள்வதில்லை. கழுத்துப் பிடறிக்குக் கீழ் கொஞ்சம்தான் கூந்தல் வளர்ந்திருந்தது. ஸ்பிரிங் கற்றைகள் போல் நெளி நெளியாக இருந்த அதை அவள் வெளிர் நீல ரிப்பனால் முடித்திருந்தாள்.

காலையில் 9.05 மின் வண்டியில் தவறாமல் அவளை அவன் பார்த்து வருகிறான். பெரிய இடத்துப் பெண்ணாக இருக்க வேண்டும். அளவோடு பேசி, அடக்கமாக அவள் சிரிப்பது அவனுக்குப் பிடித்திருந்தது. அவளும் அவனை ஒருவேளை கவனித்திருக்கலாம். ஒருநாளைப் போல் விரல் இடுக்கில் சிகரெட்டும் கையுமாக வெளிர் நீல ஷர்ட்டும், பேண்டும் அணிந்து கொண்டு பெண்கள் பெட்டிக்கு எதிராக நிற்பவன் அவள் பார்வையிலிருந்து தப்ப முடியாது. அவனைக் கண்டதும் அவள் ஒரு விதப் புன்னகையுடன் நெற்றியில் விழும் குழற் கற்றையை ஒதுக்கியவாறு வெளியே சாலையில் தெரியும் மரத்தைப் பார்ப்பாள்.



அதற்குள் ரயில் கிளம்பிவிடும். அவன் அவளைத் தொடர்ந்து செல்வதில்லை.

அவள் காலை நேரங்களில் சரியாக ஒன்பது மணிக்கு அவசரமாகப் பிளாட்பாரத்துக்குள் நுழைவாள். அவனைக் கடந்து அவள் போகும் போது வீசும் அந்த மணம்? சந்தன வாசனை? ஓ! அவள் சந்தனப் பவுடர்தான் பூசுவாள் போலும்! ஜாதி மல்லிகை சூடிக்கொள்வாள்.

ஒரு விநாடி அவன் உள்ளம் கிறங்கிப் போகும். இந்த வாசனையைக் காலம் காலமாக நுகர்ந்த நினைவுகள் அவன் உள்ளத்தில் கிளர்ந்தெழும். அதற்குள் 9.05 ரயில் வந்து விடும். அவள் அதில் ஏறி ஜன்னல் ஓரத்தில் உட்கார்ந்து வெளியே தெரியும் மரத்தில் தொற்றிக் கொண்டு கிசுகிசுக்கும் குருவிகளை வேடிக்கை பார்க்க ஆரம்பிப்பாள். ரயில் புறப்பட்டுப் போன பிறகு அவனுக்கு உலகமே வெறுமையாகத் தோற்றம் அளிக்கும்.

மறுபடியும் மாலை நேரத்தில் 18.22 ரயிலில் தான் அவள் திரும்புகிற வழக்கம். நாள் முழுதும் வேலை செய்து களைத்த தோற்றமே அவளிடம் இருப்பதில்லை. காலையில் சூடிக் கொண்டிருந்த மலர்கள் உலர்ந்து சருகாகத் தொங்காமல் புத்தம் புதிய மலர்கள் அவள் கூந்தலை அலங்கரிக்கும்.

திரும்பவும் அதே சந்தன வாசனை. மலர்களின் மணம். சில சமயங்களில் அவளுடன் இன்னொரு பெண்ணும் பேசிக் கொண்டு வருவாள். நல்ல கறுப்பு அவள். கண்களுக்குப் பட்டையாக மை தீட்டியிருப்பாள். பெரிய பெரிய பூப்போட்ட புடவை கட்டிக்கொண்டு கைப் பையை வீசியபடி ஒய்யாரமாக அவள் நடந்து வரும்போது இவள் குத்துவிளக்கு போல் குளுமையாக, அளவோடு சிரித்துப் பேசியபடியே வருவாள்.

'பெண்களில்தான் எத்தனை வகை?' என்று நினைத்துக் கொள்வான் அவன். ஒரு நாள் மாலை இவர்கள் அவனைக் கடந்து போகும் போது அந்தக் கறுப்புப் பெண் உரக்க இவனைப் பார்த்து, 'ரோமியோ' என்று கத்தி

விட்டுப் போனாள். அவள் இவனைப் பரிதாப மாகத் திரும்பிப் பார்த்துப் 'பேசாமல் வாயேன்' என்றபடி முன்னாடி நடந்தாள்.

பரிதாபப்படும் அந்தக் கண்களில் நீர் பள பளவென்று மின்னுவதைக் கவனித்தான். இன்னும் ஏதாவது அந்தக் கறுப்புப் பெண் சொல்லி யிருந்தால் அவள் அழுதிருப் பாளோ என்று நினைத்துப் பார்த்தான். அப் படி அழுதிருந்தால் அந்த முகம் தாமரை மலர் போல் சிவந்து வாடிக் கூம்பிப்போகுமே என்றும் நினைத்தான்.

இப்போதெல்லாம் அவனுக்குச் சிகரெட் புகைப்பது பிடிப்பதில்லை. காற்றில் வீசும் அந்தச் சந்தன மணத்தை மூழ்கடித்தபடி இந்தப் புகை புகையிலை வாடையைக் குப் பென்று வீசியது. அப்படியே அந்த மணத் தில் கரைந்து....

மனத்துக்கு ரம்மியமான, இதமான, கவிதை போன்ற வாசனையை, ஒரு பேயைப் போல் இந்த 'நிகோடின்' மணம் துரத்தி விடுவதாக நினைத்தான். ஆனால், புகைப்பவர்களால் அவ்வளவு சடுதியில் அதை விட முடிவதில்லையே. அதற்காக மிட்டாய்கள், அது இது என்று வாயில் எதையாவது குதப்பிய படி அவன் அங்கு நின்றிருப்பான்.

9.05 மின் வண்டி வந்து நின்றதும் அவன் கண்கள் பிளாட்பாரத்தைத் துழாவின. அவளைக் காணோம். கறுப்புப் பெண் மாத் திரம் வந்து கொண்டிருந்தாள். அன்று ஏதோ ஒரு துணிச்சலில் அவன் வீட்டில் மலர்ந்த நித்திய மல்லிகையைச் சரமாகக் கட்டிக் கொண்டு வந்திருந்தான். அவனுக்கு மல்லிகையைத் தொடுக்கத் தெரியாது. இதற் காகக் காலையிலிருந்து அவன் தங்கையுடன் மல்லுக்கு நின்று அவளுக்கு இரண்டு ரூபாய் இனாம் கொடுத்துப் பூத் தொடுக்க வைத் திருந்தான்.

''யாருக்கண்ணா இது?'' என்று கேட்டாள்.






''யாருக்கோ?''

''சொல்லண்ணா...''

''அம்பாளுக்கு...''

''உனக்கு எப்போ பக்தி வந்தது அண்ணா?'' என்று வியந்தாள் தங்கை.

அம்மா இவனைப் பார்த்துச் சிரித்துவிட்டுப் பூஜை உள்ளுக்குக் கோலம் போடப் போனாள்.

''சொல்லேன். நிஜத்தைச் சொல்லேன்.''

''அவன்தான் சொல்றானே. அம்பாளுக்குத்தான் இருக்கும். அவனுக்கு நல்ல புத்தி வரணும்னு, பக்திமானா ஆகணும்னு நான் தினமும் அபிராமியை வேண்டிக் கொண்டிருக்கேன்.'' அம்மா ஹிருதய கமலம் அழகாகப் போட் டுச் செம்மண் தீற்றிக் கொண் டிருந்தாள்.

''கொஞ்சம் ஓர் இணுக்குக் கிள்ளி வைச் சுட்டுப் போடா. படத்துக்குப் போடணும்.''

''நாளையிலேருந்து போடு. நான் இன்னிக்கு முழுதும் எடுத்துண்டு போறேன்—''

''சரி, எல்லாம் அம்பாள்தான்'' என்று திருப்திப்பட்டுக் கொண்டாள் அம்மா.

கறுப்புப் பெண் இவனைக் கடக்கும்போது 'மிஸ்' என்று வாய்வரையில் வந்த சொல்லை மென்று விழுங்கியபடி அவளைப் பார்த்தான். அவள் கர்வத்தோடு நடந்து சென்று வண்டியில் ஏறும்போது பிளாட்பாரத்தின் கோடியில் இவள் வந்து கொண்டிருந்தாள். வண்டி போய்விட்டது. நெற்றியில் வியர்வை பொடித்திருந்தது. இன்று சந்தன வண்ணப் புடவை கட்டியிருந்தாள். முகம் வாடிப் போயிருந்தது. வீட்டிலே ஏதாவது வேலை இருந்திருக்கும். அம்மாவுடன் வாக்குவாதம் வந்திருக்கும். தம்பி, தங்கைகள், ரிடையர்டு ஆன அப்பா இவர்களைச் சமாளித்துக் குடும்ப பாரத்தைச் சுமப்பவளாக இருக்கலாம்.

பாவிகள்! ஏன் இப்படி அனிச்ச மலரைப் போன்றவளை வேலைக்கு அனுப்புகிறார்களோ? அழகாகக் கல்யாணம் பண்ணி வைக்கக் கூடாதோ!

அவன் குறுக்கும் நெடுக்குமாக உலவினான். ஜேபியில் இருந்த மல்லிகைச் சரம் மணத்துக் கொண்டேயிருந்தது. குட்டைத் தலை முடியில் இன்று மலர் இல்லை. ''இந்தா இதை வைச்சுக்கோ!'' என்று கொடுத்துவிட முடியுமா?

கொடுத்தால்? அவள் சிரிப்பாள். உடனே வாங்கித் தலையில் சூடிக் கொள்வாள். இல்லை, இல்லை. அவனை விழித்துப் பார்த்து ''யூ! ராஸ்கல்!'' என்று சத்தம் போடுவாள்.

''அம்பிகே!'' என்று நினைவு தெரிந்த நாட்களாய் நினைக்காத ஒருத்தியைச் சலிப்புடன் அழைத்தான். ரயில் வந்தது. ஏறி அமர்ந்தான். அம்பிகையைப்பற்றி அம்மா அடிக்கடி சொல்லுவாள். ''நான் சமீபத்திலே திருக்கடையூருக்குப் போயிருந்தேன். அம்பாளைப் பார்த்தப்போ அவள் தீவிரமாகச் சிந்தனை செய்வது போல் இருந்தது. ஞானத்தின் ஒளி வீசிக் கொண்டிருந்தது.''

''போடி போ. நான் பல தடவை திருக்கடையூர் போயிருக்கேன். அபிராமி சிரித்தபடி இருக்கிறாள்...'' அப்பா எதிர்க் கணை தொடுப்பார்.

இவள் முகத்திலே வீசுவது ஞானமா? நகையா?

ரயில் கிளம்பியதும் பூச்சரத்தை வெளியே எடுத்தான். குப்பென்று மணம் வீசியது. சலிப்புடன் வீட்டுக்குத் திரும்பியவன் எதிரில் கிராம தேவதை கோயில் தென்பட்டது. சன்னிதி சாத்தியிருந்தது. நட்டிருந்த சூலத்தின் மீது சரத்தைப் போட்டுவிட்டு நடந்தான்.

**மா**லை 18.22 ரயிலில் அவளும், கறுப்புப் பெண்ணும் வந்தார்கள். இருவரும் அந்தரங்கமாக ஏதோ பேசியபடி வந்தார்கள். கறுப்புப் பெண் ஏதோ சொல்ல இவள் நாணித் தலை குனிந்து நடந்தாள்.

இடையில் இரண்டு நாட்கள் விடாமல் மழை பெய்தது. இவனுக்கு நல்ல குளிர் காய்ச்சல். 9.05 ரயில் வருவதைக் கற்பனையில் பார்த்தபடி படுக்கையில் கிடந்தான். வெளிர் நீலப் புடவையில் அவளைக் கண்டான். திடீரென்று படுக்கையிலிருந்து துள்ளி எழுந்தான்.

''எங்கேடா?'' என்று கேட்டபடி அம்மா கஞ்சியை ஆற்றிக் கொண்டே வந்தாள்.

''சும்மா இப்படி—''

''நன்னாயிருக்கு. இன்னும் ஜுரம் விடவில்லை. இந்தக் காத்துலே மழையிலே சும்மா இப்படி!''

''கஞ்சியை வைச்சுட்டுப் போ!'' என்று இரைந்தான் அவன்.

அம்மா பயந்தபடி வெளியே போய் விட்டாள்.

பதினைந்து நாட்களுக்கப்புறம் ஜுரம் விட்டது. மேஜை டிராயரைத் திறந்து சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்தான்.

ஆனால், அது சந்தன மணம் வீசியது.

இவனுக்கு ஜுரம் விட்ட பிறகு கூட மழை விடவில்லை. 'ஆகாயத்திலே இவ்வளவு ஜலத்தை எப்படி 'ஸ்டோர்' பண்ணினா?' என்று குழந்தைத்தனமாக மனம் கேட்டது.

**அ**றையைப் பெருக்க வந்த அம்மா, ''ஏண்டா இப்படிச் சிகரெட் குடிக்கறே? உடம்பு என்னத்துக்காகும்?'' என்று ஆதங்கப்பட்டாள்.

''உடம்பைப் பத்தி இப்ப யார் கவலைப் படறா?''

''அடடா! பெரிய ஞானக் கொழுந்தா மாறிண்டு வரயே...'' என்று ஆச்சரியப் பட்டாள் அம்மா. பிறகு நீளமான கவர் ஒன்றைக் கொண்டு வந்து ''உனக்கு அம்பாளிடம் பக்தி வந்தவுடனேயே வேலை கெடச்சுது பார். காசியிலே சர்வகலாசாலையிலே உன்னைப் புரபொஸரா எடுத்துண்டு இருக்காளாம். நேத்திக்கே இந்தக் கவர் வந்தது. உனக்கு நல்ல ஜுரம் இருந்தது. அதனாலே காண்பிக்கலை'' என்றபடி அவனிடம் கொடுத்தாள். அவன் அதை மேஜையின் மீது வீசி எறிந்தான். மழைக் கோட்டை மாட்டிக் கொண்டு வாசலுக்கு வந்தான்.

''ஏண்டா மழையிலே போறே? எங்கேடா?'' என்று அப்பா கேட்டார்.

அவன் அவரைத் தீர்க்கமாகத் திரும்பிப் பார்த்தான். ''சுடுகாட்டுக்கு'' என்று மழையின் இரைச்சலையும் மீறிக் கத்தியபடியே நடந்தான்.

பிளாட்பாரத்தில் 9.05 ரயில் வந்து நின்றது. அவளுடன் கறுப்புப் பெண்ணும் இன்னொருவனும் நின்றிருந்தார்கள். பெட்டிகள், படுக்கை, தகர டப்பாக்கள், எல்லாம் அவளுடன் வண்டியில் ஏற்றப்பட்டன. அவனும் அவளும் வண்டியில் ஏறினார்கள். அவள் கழுத்தில் மஞ்சள் சரடு மின்னியது. மலர் போன்ற பாதங்களின் விரல்களில் மெட்டிகள் குலுங்கின. கறுப்புப் பெண் கண்ணீர் வழிய அவளுக்கு விடை கொடுத்தாள்.

அவனுக்குச் சட்டென்று தன் வீட்டில் மேஜையின் மீது வீசியெறியப்பட்ட கவர் நினைவுக்கு வந்தது. சிகரெட் ஒன்றை எடுத்துப் பற்றவைத்துச் சுவைத்துப் புகைத்தான். அதில் சந்தன மணம் வீசவில்லை. நிகோடின் மணத்தது!

# அணையாத தீபம்

மருதாணி இட்ட விரல்களால் ஸ்நானம் செய்த கூந்தலை ஆற்றிக் கொண்டே, மைதிலி ஊஞ்சலில் உட்கார்ந்திருந்தாள். தாய்மைப் பேற்றை அடைந்திருப்பதால் அவள் முகம் பார்ப்பதற்கு வசீகரமாக இருந்தது. தந்தத்தில் கடைந்தெடுத்தமாதிரி அவள் கைகள் உருண்டு திரண்டு இருந்தன. அக் கைகளில் நிறையக் கண்ணாடி வளையல்களைப் போட்டிருந்தாள் மைதிலி. வளைகாப்புக்கென்று




அவள் கணவன் தில்லியிலிருந்து நல்ல மாதிரியான வளையல்கள் வாங்கி அனுப்பியிருந்தான். நீல நிறத்தில் மெல்லிய கைத்தறிப் புடவை ஒன்றை உடுத்தி வெள்ளை நிறத்தில் சோலி போட்டுக் கொண்டிருந்தாள் மைதிலி. புடவையின் நீல வண்ணம் அவளது சிவந்த கன்னங்களில் நிழல் அடித்தது.

சமையலறையிலிருந்து பார்வதி அம்மாள்—மைதிலியின் தாய்—ஒரு தட்டில் வெற்றிலைப் பாக்கை எடுத்துக் கொண்டு ஊஞ்சல் அருகில் வந்து நின்றாள். மைதிலியின் அழகைப் பார்த்து அவள் ஆச்சரியம் அடைந்தாள். அவள் கண்ணே பட்டுவிடும்

போல் இருந்தது. வெற்றிலைக்குச் சுண்ணும்பு தடவிக்கொண்டே பார்வதி யோசித்தாள்.

'இப்படி ஒரு அழகு வந்து உடலை மூடிக் கொண்டிருக்கிறதே! இந்தப் பெண் பெற்றுப் பிழைக்க வேண்டுமே!' என்று அவள் மிகவும் கவலைப்பட்டாள்.

'' நிற்கிறயே அம்மா! உட்காரேன்!'' என்று மைதிலி தாயைப் பார்த்துச் சொல்லி விட்டு, அவள் அமரச் சற்று நகர்ந்தும் உட் கார்ந்து கொண்டாள்.

பார்வதி அம்மாள் உட்கார்ந்து கொண் டாள். பிறகு மகளின் பக்கம் திரும்பி, ''உன் புருஷனிடமிருந்து கடிதம் ஏதாவது வந்ததா அம்மா? சீமந்தத்துக்கு நாள் பார்த்தாயிற்று என்று உன்னுடைய அப்பா சொன்னரே?'' என்று கேட்டாள்.

'' வந்தது, ஒரு வாரம் லீவில் கிளம்பி வருவ தாக எழுதி இருக்கிருர். சீமந்தச் செலவு முழுதும் அவருடையதாக இருக்க வேண்டு மாம். இது அவர்கள் வீட்டுச் செலவுதானே? எனக்கு மாமி யார், மாமனர் இல்லாத கார ணத்தால் நீங் கள் எல்லாப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டு செய்கிறீர் கள்'' என்று சொன்னுள் மைதிலி.

'' யார் செய்தால் என்ன? நல்லபடியாக முடியவேண்டியது ஒன்றுதானே முக்கியம்? உன்னைக் கையும் குழந்தையுமாக மறுபடியும் உன் புருஷனிடத்தில் சேர்த்து விட்டால் போதும்'' என்ருள் பார்வதி.

அவள் கண்களில் கண்ணீர் துளித்திருந்தது. அது ஆனந்தக் கண்ணீரா, அல்லது சோகக் கண்ணீரா என்பது பார்வதிக்கே புரியவில்லை.

மகள் சிரித்தாள்.

'' மாப்பிள்ளை கொடுக்கும் பணத்தைப் பேசாமல் வாங்கிக் கொள், அம்மா! திருப்பி நீ அதை எனக்குத்தானே தரப் போகிருய்?'' என்ருள் மைதிலி.

மைதிலி அவர்களுக்கு ஒரே மகள். சீருக்கும், சிறப்புக்கும் குறைவுண்டா?

வெளியே போயிருந்த தகப்பனர் வந்தார். மகள் அருகில் வாஞ்சையுடன் உட்கார்ந்து கொண்டார். கையிலிருந்த மிட்டாய்களை எடுத்துக் கொடுத்தார்.

'' இவ்வளவு எதற்கு அப்பா? திகட்டிப் போகிறதே! எங்கள் தில்லியில் கிடைக்கிற மாதிரிதான் இங்கே கான்பூரிலும் கிடைக் கிறது. வேறே புது மாதிரியாக ஒன்றையும்



காணுமே !'' என்று சொல்லிக் கொண்டே மிட்டாய்களைச் சாப்பிட்டாள் மைதிலி.

'' கண்டதை யெல்லாம் வாங்கிக் கொண்டு வந்து கொடுத்துப் பிள்ளைத்தாய்ச்சியின் உடம்பைக் கெடுக்கிறீர்களே !'' என்று பார்வதி கோபித்துக் கொண்டாள்.

தில்லியிலிருந்து ராமச்சந்திரன் சீமந்தத்துக்கு முன்பாகவே வந்து விட்டான். அவன் வண்டியிலிருந்து இறங்கி உள்ளே நுழைந்ததும் கூடத்தில் நின்று கொண்டிருந்த மைதிலியைப் பார்த்துப் பிரமித்துப் போனான். தில்லியில் மைதிலி இருந்தபோது மசக்கைத் தொந்தரவினால் இளைத்துப் போயிருந்தாள். அதற்கு மாறாக இப்பொழுது கொழுகொழுவென்று பருத்து, உடலில் வனப்பு மேலிட அவள் நின்றபோது அவன் மனத்தில் சந்தோஷம் பொங்கிப் பெருகியது.

சாப்பாட்டுக்கு அப்புறம் மாடியில் இருவரும் தனிமையில் பேசிக் கொண்டிருந்தார்கள். பட்டுப்போன்ற அவளது கரங்களைத் தொட்டு அதில் அணிந்திருந்த வளையல்களைப் பார்த்தான் ராமச்சந்திரன். விரல்களில் இட்டிருந்த மருதாணிச் சிவப்பும் கண்ணாடி வளையல்களின் பல வர்ணங்களும் அந்த மென் கரங்களுக்கு அப்படி ஒரு அழகை அளித்தன.

''ஹும்..அப்புறம் என்ன விஷயம் ? இது தான் வளைகாப்பு வளையல்களா ? பேஷாக இருக்கிறதே ? நான் அனுப்பிய வளையல்கள் எங்கே மைதிலி ?'' என்று கேட்டான் அவன்.

மைதிலி தன்னுடைய மற்றொரு கரத்தைத் தூக்கி அவன் ஆசையுடன் அனுப்பிய வளையல்களைக் காண்பித்தாள்.

''சரி! உனக்குச்சீமந்தத்துக்கு என்ன வாங்கி வந்திருக்கிறேன் தெரியுமா ?'' என்று கேட்டான் ராமச்சந்திரன்.

''ஆமாம்! எனக்குத் தெரியாதாக்கும்! தூத்பேடாவும் ஹல்வாவும் வாங்கி வந்திருப்பீர்கள் !'' என்றாள் மைதிலி.

அவன் எழுந்து அறைக்குள் சென்று பெட்டியைத் திறந்து ஒரு அட்டைப் பெட்டியை எடுத்து வந்தான். அதனுள் அழகிய பட்டுப் புடவை ஒன்று இருந்தது. ஆகாச வர்ணத்தில் ஜரிகையில் நக்ஷத்திரங்கள் போட்ட அந்தப் புடவை நிலவொளியில் ' தக ' ' தக ' வென்று மின்னியது.

'' அடேயப்பா ! என்ன விலை ?'' என்று கேட்டாள் மைதிலி மகிழ்ச்சி பொங்க.

'' நூற்றைம்பது ரூபாய் !...''

இப்படி, கணவனும் பெற்றோரும் அன்பைச் சொரிந்து வந்தார்கள் மைதிலியின் பேரில்.

சீமந்தம் விமரிசையாக நடந்தது. மாலையில் மைதிலியை மணையில் உட்காரவைத்துப் பாடினார்கள். அவள் கணவன் அன்புடன் வாங்கி வந்த நீலப் புடவையை உடுத்திக் கொண்டு அவள் உட்கார்ந்திருந்த காட்சி தெய்வலோக மங்கையொருத்தி அலங்கிருதையாக வீற்றிருப்பது போல இருந்தது. மஞ்சள் குங்குமத்துக்கு வந்திருந்த பெண்களே, '' அப்பா ! என்ன அழகு ! இப்படியும் ஒரு பெண்ணுக்கு அழகு வருமா ? நல்லபடியாகப் பெற்றுப் பிழைக்க வேண்டுமே !'' என்று பேசிக் கொண்டார்கள்.

மைதிலியின் தாய் பார்வதிக்கு மட்டும் மனத்துள் ' சுரீர் ' என்று ஏதோ வேதனை செய்து கொண்டிருந்தது. ராமச்சந்திரன் சீமந்தம் ஆனபிறகு இரண்டு தினங்களில் ஊருக்குப் புறப்பட்டான். மனைவிக்கு அவனை விட்டுப் பிரியவே மனமில்லை.

'' மனசிலே ஏதோ சங்கடம் செய்கிறது. லீவு போட்டு விட்டுப் பிரசவத்தின் போது என்னுடனேயே வந்து தங்கி விடுங்கள் '' என்று கேட்டுக் கொண்டாள் மைதிலி. அவளுடைய சுந்தர வதனத்தில் துக்கம் பரவியிருந்தது. கண்களிலிருந்து கண்ணீர்த்துளிகள் உருண்டு ராமச்சந்திரனின் கரங்களை நனைத்தன. அவன் கைகளை எடுத்துக் கண்களை மூடிக் கொண்டு விசித்தாள் மைதிலி.

'' பிரசவம் என்றால் பயப்பட வேண்டிய காலம் எல்லாம் போய் விட்டது. நம் பாட்டிகள் காலத்தைப் போல இந்தக் காலத்தில் பிரசவத்தில் கோளாறுகள் ஏற்பட்டு, ஆபத்தில் முடிவதில்லை. தைரியமாக இரு '' என்று தேற்றினான் ராமச்சந்திரன்.

எல்லோரும் தெய்வத்தை நம்பியிருந்தார்கள். நாள் தவறாமல் நல்ல வைத்தியரிடம் உடம்பைக் காண்பித்து ஜாக்கிரதையுடன்தான் மைதிலி இருந்து வந்தாள்.

★

தெய்வத்தின் சித்தம் வேறாக இருந்தது. அவள் வழக்கமாக உடம்பைக் காண்பித்து வரும் வைத்தியர் ஊருக்குப் போய்விட்டார். அவர் வெளியூர் சென்றிருந்த சமயம் மைதிலிக்கு உடம்பு சரியில்லை. அவசரத்துக்கென்று புது வைத்தியரைத் தேடிப் போனார்கள். அந்த வைத்திய விடுதியில் சேர்த்து, விடுதியின் லேடி டாக்டர் குலாப் வந்து பார்க்க நேரமாகி விட்டது. அதற்குள் காலன் அவசரப்பட்டு வந்து விட்டான். பிரசவித்து இரண்டு மணி நேரத்துக்கெல்லாம், உடம்பெல்லாம் நீலமாக விஷம் பரவி அண்மையில் நின்று தவிக்கும் பெற்றோரையும் தங்கச் சிலைபோல் அப்பொழுதுதான் உலகத்துக்கு வந்திருக்கும் பச்சிளங் குழந்தையையும் தவிக்க விட்டு மைதிலி கண்ணை மூடிவிட்டாள்.

அவள் தாய்மை அடைந்து பிறந்தகம் வந்ததிலிருந்து மனத்திலே வேதனையைத் தாங்கிக் கொண்டிருந்த பார்வதி அம்மாள் எரிமலை வெடிப்பது போல் துக்கத்தால் குமுறினாள். கல்லினும் கடினமாக அவள் தந்தை அசையாமல் உட்கார்ந்து விட்டார். தில்லியிலிருந்து விமானத்தில் பறந்து வந்த கணவன் தலை உடைந்து போகிற மாதிரி துக்கத்தினால் அலறினான்.

அவர்களுடைய தாம்பத்திய வாழ்க்கைக் காலம் மிகக் குறுகியதாக இருந்தாலும் அது அவ்வளவு உறுதிப்பட்டு இருந்தது என்பது அவனுடைய எல்லை கடந்த துயரைப் பார்த்தே அறிந்துகொள்ள முடிந்தது.

' எல்லாம் முடிந்து விட்டது ' என்று ஒவ்வொருவருடைய மனமும் தீர்ப்புச் சொல்லி விட்டதுபோல் அவரவர்களுடைய வேலையைப் பார்த்துக் கொண்டு பேசாமல் இருந்து விட்டார்கள்.

டாக்டர் குலாப் ஒரு ஆள் மூலம் தன்னுடைய விடுதியில் குழந்தை-அவர்களுடைய பேத்தி - இருப்பதாக அறிவித்தாள்.

"குழந்தையா அது? என் வயிற்றில் நெருப்பை அள்ளிப் போட்ட எமன்" என்ருள் பாட்டி பார்வதியம்மாள்.

"இருபது வயது வளர்த்த மகளே நொடியில் போய் விட்டாள். இதுதான் தங்கப் போகிறதாக்கும்" என்ருர் தாத்தா.

"என் மைதிலியை என்னிடமிருந்து பிரித்த சனியன். அது எக்கேடு கெட்டாவது தொலையட்டும்!" என்று கூறிவிட்டு ராமச்சந்திரன் விரக்தியுடன் தில்லிக்குப் போய் விட்டான்.

உலகத்திலே அனுப்பப்படும் ஜீவனைக் காப்பாற்ற சர்வாந்தர்யாமியாக ஒருவன் இருக்கிருன் என்பதை மனித அறிவு மறந்துவிடுகிறது. எல்லோராலும் வெறுக்கப்பட்ட அந்தச் சிசுவை வளர்க்க விஷ்ணுகரே என்கிற மராட்டியர் ஒருவரும் அவர் மனைவி கிரிஜா பாயும் முன் வந்தார்கள். முதலில் டாக்டர் குலாப் ஆட்சேபணை செய்தாள். குழந்தையின் சொந்தக்காரர்கள் வந்து கேட்டால் அவர்களிடம் குழந்தையை ஒப்புவித்துவிட வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டாள். குழந்தையின் சொந்தக்காரரின் விலாசம் வேறு கிரிஜாபாயிடம் கொடுத்தாள்.

குழந்தை வேண்டும் என்று தவமிருந்த கிரிஜாபாய்க்குக் குழந்தை கிடைக்கவே, குருடனுக்குக் கண்கிடைத்த மாதிரிஇருந்தது.

விஷ்ணுகரே கண்யமான மனிதர். குழந்தையின் தாத்தாவைத் தேடிப் போய்க் குழந்தை தம்மிடம் இருப்பதாகக் கூறினர். அளவுக்கு மீறிய துயரத்தை அளித்த ஆண்டவன் அதை மறக்க ஒரு சிசுவைக் கொடுத்திருப்பதை அறிந்து குழந்தையை ஏற்றுக் கொள்ள வேண்டினர்.

மகளின் பிரிவால் சித்தம் சரியில்லாமல் இருந்த பார்வதியம்மாள் ஒரேயடியாக மறுத்தாள். அவள் மனத்தில் சூன்யம் குடிகொண்டு விட்டது.

அது பாலைவனமாகிவிட்டது. பாலைவனத்தில் நீர் தெளித்த மாதிரி கரேயின் வார்த்தைகள் எடுபடாமல் போயின. இனி, பகவான் ஒருவனுல்தான் பாலைவனத்தைப் பசுஞ் சோலையாக மாற்ற முடியும் என்று தீர்மானித்துக் கரே வீடு திரும்பினர். குழந்தை பிறந்தவுடன் எல்லோராலும் திரஸ்கரிக்கப்பட்டு நிராதரவாக விடப்பட்டதால் அதற்குச் 'சகுந்தலா' என்று பெயர் வைத்தார்; தாமே கண்வராகவும் மாறினர் கரே.

பார்வதி தம்பதிகள் கான்பூருக்கே ஒரு முழுக்குப் போட்டுவிட்டுத் தஞ்சைக்கு வந்து சேர்ந்தார்கள். இனி யாருக்காக மைதிலியின் தகப்பனர் உத்தியோகம் பார்க்க வேண்டும்? எல்லாம்தான் முடிந்து விட்டதே!

★

காலத்துக்குத்தான் எவ்வளவு வேகம்! மைதிலியின் பெற்ருேர் கான்பூரை விட்டுக் கிளம்பும்பொழுது கார்த்திகை மாதம். அதற்குள் தைப்பொங்கல் வந்து சித்திரை வருஷப் பிறப்பும் ஆகிவிட்டது. பண்டிகைகளும் பருவங்களும் மாறி மாறி வந்து போயின. இலை உதிர்ந்து காய்ந்த கம்பாய் நின்ற மரம் தளிர் விட்டுப் பூத்துக் குலுங்கிக் காய்த்துப் பழங்களைச் சிந்தின. ஓயாமல் ஒழியாமல் இயற்கை தன் வேலையைச் செய்து கொண்டே போயிற்று. பார்வதி அம்மாளுக்கும் அவள் கணவருக்கும் உலக வாழ்க்கை முதலில் சூன்யமாகத்தான் இருந்தது. காய்ந்த மரத்தைப் போல. பிறகு படிப்படியாக மனத்தில் ஆசைகளும் விருப்பங்களும் எழ ஆரம்பித்தன. பதினைந்து வருஷங்களுக்கு மேல் ஆகிவிட்ட பிறகு மனத்தில் சுட்ட புண் ஆறித்தானே போயிருக்கும்!



ராணிப்பேட்டை கே. வி. ராகவனின் புதல்வியும், பத்தக்குடி ராமஸ்வாமியின் மாணவியுமான குமாரி ஹேமமாலினியின் நடன அரங்கேற்றம் சமீபத்தில் சென்னை, மியூஸியம் தியேட்டரில் சிறப்பாகக் கொத்தமங்கலம் சுப்பு அவர்கள் தலைமையில் நடைபெற்றது. பேராசிரியர் ஸ்ரீ பி. சாம்பமூர்த்தி அவர்கள் ஹேமமாலினியைப் பாராட்டிப் பேசினர்.

ஆம்! மைதிலி இறந்து போய்ப் பதினைந்து வருஷங்கள் ஆகிவிட்டன. இந்தப் பதினைந்து வருஷ காலத்தில் சில சமயங்களில் கான்பூரில் கரேயின் குடும்பத்தில் விட்டு வந்த தங்கள் பேத்தியை நினைத்துப் பேசிக் கொண்டார்கள். ஒரு மாதம் கூட நிரம்பாத குழந்தையை விட்டு வந்தவர்கள் சாவகாசமாகக் குழந்தைக்கு நான்கைந்து வருஷங்கள் கழித்த பிறகு மனச்சங்கடம் ஆறி அதைப்பற்றி நினைத்தார்கள். எழுதி விசாரிக்கலாமா என்றும் யோசித்தார்கள். கான்பூரிலிருந்து தஞ்சைக்கு வந்திருந்த தென்னிந்தியக் குடும்பத்தினர் ஒருவரைச் சந்தித்து விசாரித்தும் பார்த்தார்கள்.

"கரேயா! அவரை எங்கோ சிம்லாவுக்கு மாற்றி விட்டார்களாமே! அவர் ஊரை விட்டுப் போய் இரண்டு வருஷங்களுக்கு மேல் ஆகி விட்டதே!" என்று அவர்கள் தகவல் தெரிவித்த பிறகு, இருவருடைய ஆசையும் நசித்து விட்டது. "நம் வயிற்றில் பிறந்தது ஒன்றுதான், அதுதான் போய் விட்டதே!" என்ற தீர்மானத்துக்கு வந்தார்கள்.

அங்கே தில்லியில் ராமச்சந்திரன் மறுமணம் செய்து கொள்ளவேயில்லை. பெயருக்கேற்ப ஏகபத்தினி விரதனுகவே யிருந்து விட்டான்.

மைதிலியின் உருவம் அவன் மனத்தில் பதிந்து போயிருந்தது. புறத்தில் அவன் வேறொருத்தியை மணந்து போலி வாழ்க்கை வாழ ஆசைப்படவில்லை. ஆனால், அவன் மனத்துள் அவன் மைதிலிக்கு ஏதோ தீங்கு இழைத்து விட்டதாகவே கருதினான். இறந்தவளின் ஆத்மா சாந்தியடைந்திருக்குமா என்று ஏங்கினான். மனைவியின் உயிரற்ற உடலுக்கருகில் டாக்டர் குலாபின் வீட்டில் 'வீல் வீல்' என்று அழுது கொண்டிருந்த சிசுவின் முகம் அவனுக்கு இலேசாக நினைவு வரும். அந்தக் குழந்தை,—ஒரு வேளை அதுவும் போய் விட்டதோ என்னமோ என்று நினைத்துக் கொண்டான். மனைவி ஒருத்தியால்தான் கணவனின் வாழ்க்கை பூர்த்தியடைகிறது என்று நம்பி வந்த அவனுடைய உள்ளத்தில் ஆட்டம் கண்டது.

நாற்பது வயதுக்கு மேல் குழந்தைகளின் பேச்சும் இன்சொல்லும் மனைவியின் அன்பை விட ஆறுதலளிக்க முடியும் என்று நினைத்த போது, அவனுடைய உள்ளம் தன் ஒரே குழந்தைக்காக ஏங்கியது.

விஷ்ணு கரேயின் குடும்பத்தில் தான் எத்தகைய மலர்ச்சி? ஒரு மகவுக்காகத் தவமிருந்த கிரிஜாபாய்க்கு, சகுந்தலா கிடைத்த பிறகு இரண்டு ஆண் குழந்தைகள் பிறந்தார்கள்.

★

அன்று கார்த்திகைத் திருநாள். தஞ்சையில் இருந்த பார்வதி அம்மாள் இரண்டு அகல் விளக்குகளைக் கொண்டு வந்து வாசல் பிறையில் வைத்து விட்டு உள்ளே போகத் திரும்பினாள். திண்ணையில் உட்கார்ந்திருந்த அவள் கணவர் அவளை அழைத்தார்.

''இன்னும் நாலு விளக்குகள் ஏற்றி வைக்கக் கூடாதா?'' என்று கேட்டார் அவர்.

''வைக்க வேண்டியதுதான்! என் குடும்ப விளக்கை அணைத்த கடவுளுக்கு நாலு என்ன, லக்ஷதீபம் கூட ஏற்றத்தான் வேண்டும்!'' என்றாள் பார்வதி அம்மாள். சுருங்கிய அவள் கன்னங்களில் கண்ணீர் தாரை தாரையாகப் பெருகி வழிந்தது.

''பொரி உருண்டை வேண்டுமென்று அடம் பிடித்தீர்கள். பிடித்து வைத்திருக்கிறேன். தின்னுங்கள். பேரனும் பேத்தியும் குதி போட வேண்டிய வீட்டில் கிழம்தானே துள்ளி விளையாட வேண்டும்!''

கிழவர் அழவில்லை. கோபித்துக் கொள்ளவுமில்லை. சிரித்தார்.

''மூடமே! நம் குடும்ப விளக்கை பகவான் அணைக்க வில்லை. ஒரு பொறி நெருப்பிலிருந்து லக்ஷ தீபங்களை ஏற்றுவது போல, ஒரு சிறு பொறியை - குழந்தையை - நமக்குக் கொடுத்தான். நாம்தான் அதை அணையாமல் பாதுகாக்கத் தவறிவிட்டோம்!'' என்றார்.

பார்வதி அம்மாள் பிரமை பிடித்தவள் போல் நின்றாள். பிறகு, ''வருகிறீர்களா?'' என்று கேட்டாள்.

''எங்கே?'' என்று கேட்டார் கிழவர்.

''ஒவ்வொரு தலமாகச் சென்று கடவுளின் சன்னிதியில் விளக்கேற்றி வைப்போம். குழந்தை எங்கேயாவது உயிரோடு இருந்தால் பூரண ஆயுளுடன் வாழட்டும், அந்தப் புண்ணியத்தையாவது செய்வோம்'' என்றாள்.

அடுத்தநாளே இரண்டு பேருமாகத் தலயாத்திரை கிளம்பி விட்டார்கள்.

தில்லி, ஜனதா 'எக்ஸ்பிரஸில் ராமச்சந்திரன் ஒருவரிடம் சொல்லிக் கொண்டிருந்தான்: ''வாழ்க்கையே கசந்து விட்டது சார்! தலயாத்திரை போகிறேன்'' என்று.

ராமேஸ்வரத்தில் மூன்று கடல்களும் கலக்கின்றன. பார்வதி அம்மாளும், கிழவரும் தலைப்பைச் சேர்த்து முடிந்துகொண்டு கடலில் இறங்கி ஸ்நானம் செய்தார்கள்.

ராமச்சந்திரன் கடலில் குளித்துக் கரை ஏறியவன் பல வருஷங்களுக்கு அப்புறம் தன் மாமியார் மாமனாரைச் சமுத்திரக் கரையில் கண்டான். கிழவருக்கு அடையாளம் புரிந்து கொள்ளவே தாமதமாயிற்று.

''நம்ப மாப்பிள்ளை!'' என்றாள் பார்வதி.

''இன்னும் யார் வந்திருக்கிறார்கள்?'' என்று கேட்டார் அவர்.

''நான்தான் மாமா, மைதிலிக்கு அப்புறம். நான் தனிமரம்!''.....என்றான் ராமச்சந்திரன் உணர்ச்சி பொங்கும் குரலில்.

மூவரும் ஒன்றாக ராமநாதசுவாமி ஆலயத்துக்குச் சென்றார்கள். சன்னிதியில் கூட்டம் அதிகம் இல்லை. ஒருபுறம் இம்மூவரும் நின்றிருந்தார்கள். மற்றொருபுறம் ஒரு வட இந்தியக் குடும்பத்தினர் நின்றிருந்தார்கள்.



# பொருத்தம்

ஸரோஜா ராமமூர்த்தி



அவன் கோவிலுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தான். உள்ளே அம்மா அடை பண்ணிக் கொண்டிருந்தாள் — தேங்காய், முருங்கைக்கீரை நிறையப் போட்டு அடை. கமகமவென்று வாசனை வீசியது. அவள் அதைக் கல்லில் திருப்பிப் போடும்போது 'சொய்ங்' சப்தம் கேட்டது.

மாடத்துப் புரையிலிருந்த விபூதிச் சம்புடத்திலிருந்து நெற்றி நிறைய அள்ளிப் பூசிக் கொண்டான். கண்ணாடி முன்பு நின்று தலையை அழுந்த வாரியபடி 'அம்மா! கோவிலுக்குப் போயிட்டு வரேன்' என்று குரல் கொடுத்தான்.

''இதோ வந்துட்டேன். டிபன் பண்ணிட்டுப் போடா...'' என்றபடி தட்டில் அடையைப் போட்டு எடுத்து வந்தாள் அம்மா.

''இன்னிக்குப் பிரதோஷம். தீபாராதனை சுருக்க ஆயிடும். அடையெல்லாம் அப்புறமா வந்து பாத்துக்கிறேன். காப்பி மாத்திரம் கொடு'' என்று சொல்லிக் கொண்டே இரண்டு விழுங்கள் காப்பியைக் குடித்து விட்டு வாசற்படி இறங்கி நடந்தான்.

''எல்லாம் அவன் தாத்தா மாதிரிதான். இவரைத் துளிக்கூடக் கொள்ளலே'' என்று அம்மா சொல்லிக் கொண்டே சமையற்கட்டுக்குள் போனாள்.

தெரு கலகலவென்று இருந்தது. மஞ்சள் வெய்யில் இறங்கிக் கொண் களில் நீர் சுமந்து கொண்டு வந்தனர். அவன் [illegible] காண்பதற்கு எல்லாமே இனிய காட்சிகளாக இருந்தன. கொஞ்சம் தொலைவில் கோபுரம் தெரிந்தது. கைகளை உயர்த்திக் கும்பிட்டான். தினமும் காலையில் எழுந்தவுடன் மொட்டை மாடிக்குப் போய்க் கோபுர தரிசனம் செய்வான். ஆபீஸ் போகும்போது கோபுர வாசலைக் கடந்து செல்லும்போது ஒரு கணம் அதில் லயிப்பான். மாலையில் கோவிலுக்குள் சென்று தவறாமல் தரிசனம் செய்துவிட்டு வருவான். இந்தப் பழக்கம் அவன் நினைவு தெரிந்த நாட்களிலிருந்து தொடர்ந்து வந்து கொண்டேயிருந்தது.

வீட்டில் அம்மா சில நாட்களாக அவனை நச்சரித்துக் கொண்டேயிருக்கிறாள். 'சீக்கிரமா ஒரு கல்யாணத்தைப் பண்ணிக்கோடா. எனக்கு வரவர முடியலே. ஒரே தலைசுற்றல். கொஞ்ச நாள் ஹாய்யா இருக்கணும்—''

''நீ ஹாய்யா இருக்கணும்னு நான் கல்யாணம் பண்ணிக்கணும்னு என்ன சாஸ்திரம்? ஓர் ஆளைப் போட்டாப் போறது...''

'நன்னாயிருக்கு! ஆளும், தேளும்! மாட்டுப்பொண் மாதிரி ஆவாளா என்ன?'' அவன் தனக்குள் சிரித்துக் கொண்டே நடந்தான். 'உலகத்திலே பொறந்தவா எல்லாருந்தான் கல்யாணம் பண்ணிக்கறா. எல்லாரும் செய்யறதையே நாமும் செய்வானேன்?' சிந்தனை வயப்பட்டவன் தெருவைக் கடந்து கீழைத் தெருவில் இறங்கிக் கோவிலை நோக்கி நடக்க ஆரம்பித்தான். அவனைக் கடந்து இரண்டு பெண்கள் போய்க் கொண்டிருந்தார்கள். ஒருத்தி கொடி போல் உயரமாக இருந்தாள். சிவப்பாய், லட்சணமாய், பார்ப்பவர்களை மறுபடியும் பார்க்கத் தூண்டும் கவர்ச்சியோடு இருந்தாள். அவளுடன் வந்த மற்றவள் மிகச் சாதாரணமாகக் கறுப்பாய் இருந்தாள். இவன் அந்தச் சிவப்புப் பெண்ணைப் பலமுறைகள் உற்றுப் பார்த்தான். அம்மா சொல்கிற 'ஒரு கல்யாணத்தைப் பண்ணிக்கோடா'வுக்கும் அர்த்தம் இருக்கிற மாதிரி அவனுக்குப் பட்டது.

அவன் அவளை மேலும் பார்த்தான். நீண்ட தலைப் பின்னல் பிடரிவரை தொங்கியது. தலைநிறைய ஜாதிப் புஷ்பம் வைத்திருந்தாள். கறுப்புப் பெண்ணும் தலைநிறையப் புஷ்பம் சூடிக் கொண்டிருந்தாள். அது ஒன்றும் அவனுக்கு சுவாரஸ்யப்படவில்லை. அந்தப் பெண்கள் உல்லாசமாகச் சிரித்தபடி என்னவோ பேசிக் கொண்டு போனார்கள். இடையிடையே அவளின் சிரிப்பு மிகவும் மோகனமாக இருந்தது. அந்தச் சிரிப்பை அவன் சதங்கை ஒலி, குருவிகளின் சத்தம் என்று எதனுடனோ ஒப்பிட்டுப்பார்த்துக் கொண்டான். எதுவும் ஒத்து வரவில்லை. அழகான பெண்கள் சிரித்தால் அதற்கு உவமை தேட வேண்டிய அவசியமில்லை என்கிற தீர்மானத்துக்கு வந்தவனாக அவனும் அவர்களைத் தொடர்ந்தே நடந்து சென்றான்.

இரண்டு பெண்களும் கொடி மரத்தடியில் நமஸ்கரித்தார்கள். இவனும் நமஸ்காரம் பண்ணினான். சந்நிதியை இருவரும் சேர்ந்தே வலம் வந்தார்கள். சிவப்புப் பெண் இனிமையான குரலில் அபிராமி அந்தாதியைப் பாடிக் கொண்டே வந்தாள். அந்த இனிமையில் இவனுக்கு அர்ச்சகரின் கற்பூரத் தட்டு எதிரில் இருப்பது கூடத் தெரியவில்லை. பிறகு திடுக்கிட்டபடி கற்பூரத்தைக் கண்களில் ஒற்றிக் கொண்டு பிரசாதம் பெற்றுக் கொண்டான். அவள் குறும்பு தவழச் சிரித்தாள். கறுப்புப் பெண்ணின் விலாவில் இடித்து அவளுக்கும் சிரிப்பு மூட்டினாள். அந்தப் பெண் அதிகம் சிரிக்கவில்லை. ஏக்கத்துடன் மூலஸ்தானத்தில் இருந்த அம்பிகையைத் தீவிரமாகப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அன்று அவன் வீட்டுக்குள் நுழையும்போதே சீட்டியடித்துப் பாடியபடி வந்தான். அவனுக்கும் அபிராமி அந்தாதி தெரியும்.

''அம்மா.... அம்மா! அபிராமி அந்தாதியில் எத்தனையாவது பாட்டின்போது அபிராமி தன் தாடங்கத்தை வான வெளியில் வீசி எறிந்தாள்?''

''இப்ப என்னடா அதுக்கு? மொதல்லே அடை சாப்பிட வா. இல்லேன்னு சாப்பிடச்சே இலையிலே போட்டுக்கோ—''

''போம்மா... வரவர உனக்குத் தெய்வ பக்தி குறைஞ்சுண்டு வரது—''

''குடும்பத்துலே யாருக்காவது ஒருத்தருக்கு பக்தி இருக்கணும். உங்கப்பா கோவில் பக்கம் கூடத் திரும்பறதில்லே. வியாபாரம் அது இது என்று அதிலே மூழ்கிப் போயிடறார். பெரிய கனபாடிகள் வயத்துலே பொறந்தவா. அபிராமி வாசையை நான் ஞாபகப்படுத்த வேண்டியிருக்கு — நீ உன் தாத்தா மாதிரி ஸ்வாமியை வேரோடே கெல்லி எடுக்கறே—''

அவன் பதில் பேசாமல் இலை முன் உட்கார்ந்தான். எண்ணங்கள் அந்தச் சிவப்புப் பெண்ணையே வட்டமடித்தன. அவள் எந்தத் தெரு வழியே வந்தாள் என்பதைக் கவனிக்கவில்லையே என்று வருந்திக் கொண்டிருந்தான். இப்படித் திடீரென்று பார்த்த ஒரு பெண்ணின் மீது தன் மனம் அலைபாய்வது அவனுக்கு வெட்கமாகக்கூட இருந்தது.

''ஏண்டா உம்முனு இருக்கே? நீ கேட்ட கேள்விக்குப் புஸ்தகத்தைப் பார்த்துட்டுப் பதில் சொல்றேன். சரியாச் சாப்பிடு....''

குபீரென்று ஜாதிப் புஷ்பத்தின் மணம் வீசியது. அம்மாவும் தலையில் ஜாதிப் பூ வைத்திருந்தாள். இந்த மணத்துக்கே ஆண்களை வசியம் பண்ணுகிற சக்தி இருக்கும்போல இருக்கு. அந்தப் பெண் அப்படி இப்படித் திரும்பும்போது ஒரே வாசனை வீசித்தே. அதுவும் சேர்ந்துதானே அவன் மனசைப் போட்டுக் குழப்பறது? அப்பாவையும், அம்மா இப்படி ஜாதிப்பூ வைச்சண்டுதான்... சே...சே... என்று தன்னையே கடிந்து கொண்டான். பெத்தவாளைப் பத்தி அசட்டு மனம் எண்ணக் கூடாததை எண்ணறதே... என்று மனத்துக்கு ஒரு

[illegible]

''இன்னிக்கு ஏண்டா சரியாச் சாப்பிடலே? அதான் சொல்றேன். காலாகாலத்துலே ஒரு கல்யாணத்தைப் பண்ணிண்டா அவனுக்கு அடங்கி ஒடுங்கி இருப்பே. இல்லே... அவ சாதம் போட்டா ருசியா இருக்கும். எத்தனை நாளைக்கு எம் மூஞ்சியையே பார்த்துண்டு சாப்பிடுவே?'' அம்மா வேடிக்கையும், நிஷ்டூரமும் கலந்து பேசிக் கொண்டிருந்தாள்.

''ஆமாம்... சில வயசுக்கப்புறம் மாறுதலான முகத்தைப் பார்த்தா மனசுக்குத் தெம்பாகத்தான் இருக்கு. மனத்துக்குள் ஆமோதித்தபடி சிரித்துக் கொண்டே எழுந்தான்.

''பாலை வந்து சாப்பிடு... என்னாலே மாடி ஏறி வர முடியாது. மூச்சு வாங்கறது...''

''சரி...சரி... எனக்கு இன்னிக்குப் பால் வேண்டாம். உறை குத்திடு... நான் ரேடியோவிலே கச்சேரி கேட்டுட்டுத் தூங்கறேன்.''

அம்மா திரும்பவும் ஏதோ அலுத்துக் கொண்டாள். அவன் அதைக் காதில் வாங்கிக்கொள்ளவில்லை. மாடிக்குப் போனான். மணி ஒன்பதே கால் ஆகியிருந்தது. உள்ளே ரேடியோவைத் திருகிவிட்டு மொட்டை மாடிக்கு வந்து ஆகாயத்தைப் பார்த்தான். நிலா புறப்பட்டிருந்தது. தொலைவில் கோபுரம் தெரிந்தது. கூடவே அவளின் முகமும் தெரிந்தது. அந்த நிலவொளியில் அவளுடன் நெருங்கி நின்று பேசுவது போல் கற்பனை செய்து பார்த்தான். வித்வான் ரேடியோவில் ஆரபி பாடிக் கொண்டிருந்தார். அதைச் சென்று நிறுத்தினான். திரை கானம் வருகிற பக்கம் திருப்பினான். 'தங்க ரதம் வந்து வீதியிலே....' கேட்டது. அவன் மனசுக்கு அந்தப் பாட்டு அன்று மிகவும் பிடித்திருந்தது. சில காதல் பாட்டுகளுக்கு மனசைப் பிடித்து இழுக்கிற சக்தி இருக்கிறதென்று நினைத்தபடி, ஒரு தடவை நண்பர்களுடன் இதைப் பற்றிய சர்ச்சையில் 'சில வெறும் வார்த்தை ஜாலங்கள் ஆழ்ந்த சுகானுபவத்தைக் கொடுக்கக் கூடியதில்லை' என்று வாதித்தது நினைவுக்கு வரவே அவன் வெட்கினான். மனமாற்றத்தைப் போல் ருசிகளும் மாறுகின்றன என்பதைஉணர்ந்தான்.

''நீ கச்சேரி கேட்கிற லட்சணமா இது? கீழே வந்து பால் சாப்பிடக் கூட முடியாமல் என்னவோ கேட்டுண்டு...'' அம்மா உரக்கச் சொல்லிக் கொண்டிருந்தாள்.



கணவன் : ஒரு நல்ல சேதி. போன தீபாவளிக்கு வாங்கிய கடனையெல்லாம் அடைச்சுட்டு இப்போததான் வரேன்.

— சாமா

''அவன் இஷ்டப்படி விடேன். எதையோ கேட்டுட்டுப் போறான்—'' அப்பா சொன்னார்.

''ஆமாம்... அவன் இஷ்டப்படி விட்டுத்தான் முப்பது வயசுப் பிள்ளைக்கு ஒரு ஜாதகம் கூட வாங்கிப் பார்க்காம இருக்கேள்.''

''ஜாதகம் என்ன பார்க்கிறது? அவனுக்குப் பிடிச்சவளைச் சொல்லட்டும். கல்யாணத்தைப் பண்ணிப்பிடுவோம். மனப் பொருத்தம்தான் பெரிய பொருத்தம்...''

''அவனுக்குப் பூலோகத்துலே பொண்வர்க்கங்கறதையே பிடிக்கலே. எங்கேயிருந்து வரப்போறாளோ அவனுக்குன்னு—''

''வருவா...வருவா...''

அம்மா, அப்பா சண்டையை மிகவும் ரசித்தான் அவன். இப்படித்தான் அவன் பெரியவனாகி, அவளை மணந்து கொண்டு பிள்ளை குட்டி பெற்ற பிறகு ஒரு நாளைக்குச் சண்டை போட வேண்டியிருக்கும் என்கிற நினைப்பே அவனுக்குக் கிளுகிளுப்பாக இருந்தது.

மேலும் பன்னிரண்டு மணி வரைக்கும் மாறி மாறி ஒலித்த தமிழ் சினிமா காதல் பாட்டுக்களைக் கேட்டான். மொட்டை மாடியில் படுக்கையை விரித்துப் படுத்தபடி ஆகாயத்தைப் பார்த்தான். மறுபடியும் அவள் அவன் நினைவில் மிதந்தாள். அவள் பெயர் என்னவாக இருக்கும்? கீதா, சாந்தி, லதான்னு நாகரிகமா இருக்குமா, இல்லே, காமாக்ஷி, மீனாக்ஷி என்று பழமையா இருக்குமா? எந்தப் பெயருக்கும் அவள் பொருத்தமானவளாகவே தோன்றினாள்.

காலையில் அவன் ஏன் இன்னும் எழுந்திருக்கவில்லை என்று அம்மா கவலைப்பட்டு மாடி ஏறி வந்தாள்.

''என்னடா தூக்கம் இப்படி?''

அவன் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தான். தொலைவில் கோபுரக் கலசத்தில் வெயில் பதிந்திருந்தது. கீழே போய்ப் பல் தேய்த்து, காப்பி குடித்து, குளித்து, விபூதி இட்டுக் கொண்டு, இரண்டு ஸ்தோத்திரங்களைச் சொல்லிவிட்டுச் சாப்பிட்டான். பகலுக்கு டிபன் வேண்டாம் என்று சொல்லிவிட்டு ஆபீசுக்குக் கிளம்பினான். நேற்றுச் சென்ற பாதை வழியாகத் திரும்பித் திரும்பிப் பார்த்தபடி வேகமாகச் சைக்கிளில் சென்றான். யார் யாரோ பெண்கள் எதிரே வந்தார்கள்.

இவர்களிடம் ஜாதிப் பூ மணக்கவில்லை. அவன் வெறுப்புடன் ஆபீசுக்குள் நுழைந்தான். சில நுபால்களைப் பார்த்துவிட்டு, மேலதிகாரியிடம் சில பைல்களை நீட்டிக் கையெழுத்து வாங்கிய பிறகு, 'போர்' அடிக்கவே, 'பர்மிஷன்' போட்டு விட்டுப் பகல் இரண்டு மணிக்குப் பக்கத்தில் இருந்த சினிமாத் தியேட்டருக்கு வந்தான்.

பெண்கள் கௌண்டர் அருகே அவள் 'க்யூ'வில் நின்றிருந்தாள். சந்தன வண்ண காலிகோ உடுத்தியிருந்தாள். தலையில் மலர்ந்த சற்று வாடிய ஜாதிப் பூ சூடியிருந்தாள். கைகளில் போட்டிருந்த கண்ணாடி வளையல்களும் சந்தன வண்ணத்திலேயே இருந்தன.

நல்ல ரசனை உள்ளவள் என்று நினைத்தான்.

டிக்கட்டுகள் கொடுக்க ஆரம்பித்தார்கள். அவளைக் கவனித்தபடி அவனும் 'க்யூ'வில் நகர்ந்து கொண்டிருந்தான். ஓரிரு முறை அவளும் அவனைத் திரும்பிப் பார்த்துவிட்டு நகர்ந்து கொண்டிருந்தாள். கௌண்டர் அருகில் சென்றதும் அவள் கொடுத்த பத்து ரூபாய்க்குச் சில்லறை இல்லை என்பதை டிக்கட் கொடுப்பவர் தெரிவித்தார். இவன் உடனே 'எக்ஸ்க்யூஸ் மீ' என்றபடி பத்து ரூபாய்க்குச் சில்லறையை எடுத்துத் தயக்கத்துடன் நின்றவளிடம் கொடுத்தான்.

''தாங்கஸ்'' — அவள் டிக்கட் வாங்கிக் கொண்டு பெண்கள் உட்கார்ந்திருந்த பக்கம் போய் உட்கார்ந்து விட்டாள்.

* * *

படம் விட்டார்கள். அவள் விடுவிடு என்று நடந்து மறைந்து போனாள். இவன் வீட்டுக்குச் சென்று உடை மாற்றிக் கொண்டு காப்பிகூடச் சாப்பிடாமல் அவசரமாகக் கோவிலுக்குக் கிளம்பினான். அன்று அவள் கோவிலுக்கு வரவில்லை. கருப்பக்கிரகத்துக்கு முன்பாக அந்தக் கறுப்புப் பெண்ணுடன் வயதான அம்மாள் ஒருத்தி நின்று கொண்டிருந்தாள்.

அவள் ஏன் வரவில்லை? யாரைக் கேட்பது? கறுப்புப் பெண் கையில் அர்ச்சனைத் தட்டை வைத்துக் கொண்டிருந்தாள். அப்போதுதான் அம்மா இவன் வீட்டிலிருந்து கிளம்புகிறபோது ''இன்னிக்கு உனக்கு ஜன்ம நட்சத்திரம்டா. ஸ்வாமிக்கு ஓர் அர்ச்சனை பண்ணு'' என்று சொன்னது நினைவுக்கு வந்தது. முன் மண்டபத்துக்குப் போய் அர்ச்சனைத் தட்டு வாங்கி வந்தான். அர்ச்சகர் இருவரிடமிருந்தும் ஒரே சமயத்தில் தட்டுக்களை வாங்கி அடுக்கி வைத்தார். கோத்திரம், பெயர் விவரங்களைக் கேட்டார்.

கோத்திரம் வெவ்வேறாகவும் நட்சத்திரம் ஒன்றாகவும் இருந்தன. ஒரு விநாடி ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். அர்ச்சகர் கர்ப்பூரத் தட்டுடன் வெளியே வந்து பிரசாதம் வழங்கியபோது அந்த அம்மாள், ''இந்த வருஷமாவது குழந்தைக்குக் கல்யாணம் ஆகணும்—'' என்றாள்.

''அந்தக் குழந்தை வரலியா?'' என்று கேட்டார் அர்ச்சகர்.

''வருவா...''

'ஏன் அந்த அழகுக் குழந்தைக்குக் கல்யாணம் ஆகவில்லை?' என்று கேட்டுவிட அவன் மனம் துடித்தது. பிரகாரத்தை வலம் வரும் போது அவன் தயங்கியபடி ''உங்கள் பெண்ணுக்கு....'' என்றான்.

''ஆமாம்ப்பா... எந்த இடம் வந்தாலும் தகையலே, பணம்தான் காரணம். ஆயிரம் ஆயிரமா பணத்துக்கு எங்கே போறது?''

''உங்கள் பெண்தானே?''

''ஆமாம்....''

''இவ்வளவு லட்சணமா இருக்கிறவளுக்குப் பணம்தான் தடையா இருக்குன்னா நான் அந்தப் பணத்தை மதிக்கல்லே.''

அந்த அம்மாளும் கறுப்புப் பெண்ணும் திடுக்கிட்டுத் திரும்பினார்கள். அவர்கள் எதிரே சிவந்தவள் நின்றிருந்தாள். 'அப்பா! என்ன லட்சணம்?' என்று அவன் அயர்ந்து போனான்.

''இவளையா சொல்றேள்?''

''ஆமாம்—''

''இவள் என் நாட்டுப் பெண். இதுதான் என் பெண்...'' என்று கறுப்புப் பெண்ணைச் சுட்டிக் காட்டினாள் அந்த அம்மாள்.

ஒரு விநாடி அவனுக்குக் கோவில், பிராகாரம், கோபுரம் எல்லாமே சுழன்றன. கறுப்புப் பெண் அவன் கூறிய அந்த வார்த்தைகளின் அர்த்தத்தில் — சுகானுபவத்தில் — 'நான் அந்தப் பணத்தை மதிக்கலே' — லயித்தபடி அவனைக் காதல் பொங்கப் பார்த்தாள். அவள் விழிகள் தீவிரமான ஒளியை உமிழ்ந்தன. நம்பிக்கைச் சுடர் அவள் விழிகளில் தெறித்தது. சிவப்புப் பெண் அவன் சிந்தனையிலிருந்து கர்ப்பூரத்தைப் போலக் கரைந்து போனாள்.

கருவறையிலிருந்த அம்பிகை ஒரே கறுப்புத்தான். அதனால் என்ன? அவள் ஜகன்மோகினி என்ற திருநாமத்தைத் தாங்கியவள் என்கிற லயிப்பில் அம்மாவிடம் வீட்டுக்குப் போய்த் தனக்குக் கல்யாணம் பண்ணி வைக்கும்படி சொல்லிவிட வேண்டும் என்று அங்கிருந்து வேகமாக நடந்தான்.



# மலரும் மணமும்

ஸரோஜா ராமமூர்த்தி

**பார்வதி இந்த நாட்டுப் பண்பாட்டின் கொழுந்து. சாந்தா நவீன நாகரிக நாரீமணி. சாந்தாவுக்குப் பார்வதியைக் கண்டால் பிடிக்கவில்லை. ஆனால் அவள் அருமையை அறிந்தவர் இல்லாமலா போய்விடுவார்?**

மத்தியான்னம் பன்னிரண்டு மணிக்குத் தபால்காரன் கொண்டு வந்து கொடுத்துப்போன கடிதத்தைக் கௌரி அம்மாள் திரும்பவும் படிக்க ஆரம்பித்தாள். சென்னையில் பெண்கள் கல்லூரியில் படித்துக்கொண்டிருக்கும் அவள் பெண் சாந்தாவிடமிருந்து கடிதம் வந்திருந்தது. வரப் போகிற தீபாவளிக்கு அவள் தன் முக்கியமான நண்பர்களுடன் அம்மாவிடம் வரப்போவதாக எழுதியிருந்தாள். அந்தச் சமயத்தில் வீட்டை நன்றாக ஒழுங்குபடுத்தி வைக்கும்படியும், தீபாவளி விருந்துச் சாப்பாட்டிற்கு ஏற்பாடுகள் செய்து வைக்கும்படியும் உத்தரவு போட்டிருந்தாள் அவள். வயசு சென்ற தாயிடம் அன்போ, அநுதாபமோ எதுவுமின்றி அடம் பிடித்து அழும் குழந்தையைப் போல் தன்னுடைய பிடிவாத குணத்தாலும் முரட்டுத் தனத்தாலும் நினைத்ததைச் சாதித்துக்கொள்ளும் குணம் படைத்தவள் சாந்தா. ஒன்றியாக நாலைந்து தினுசுப் பட்சணங்களைச் செய்யவேண்டும். வீட்டை ஒட்டடை அடித்துச் சுத்தம் செய்ய வேண்டும். பெண்ணுக்குப் பிடித்த மாதிரியாக வீட்டை அலங்காரம் செய்தாகவேண்டும். சாந்தாவோ ஒரு நாள் முந்திகூட வரமாட்டாள். பொழுது விடிந்தால் தீபாவளி என்றால் முதல் நாள் இரவு வந்து இறங்குவாள். அவளுக்குக் கை அலம்பத் தண்ணீர் கொடுக்க வேண்டும். ஸ்நானம் செய்ய வெந்நீர் பார்த்து வைக்கவேண்டும். போதாக்குறைக்கு அவள் நண்பர்களுக்கு எல்லாவற்றையும் கவனித்துக் கொள்ள வேண்டும். என்னதான் வேலைக்காரர்கள் இருந்தாலும் பொறுப்புள்ள மனிதர்கள் யாராவது கவனித்துக்கொண்டால் தானே வேலைகள் ஒழுங்காக நடக்கும்?

கௌரி சலித்த மனத்துடன் கடிதத்தை உறையில் போட்டு மேஜைமீது வைத்துவிட்டு யோசனையில் ஆழ்ந்தாள். சாந்தா கடைசியாக ஒரு முக்கிய விஷயத்தைக் குறிப்பிட்டிருந்தாள். "என்னுடைய சிநேகிதியின் தமையனும் நம் ஊரைப் பார்க்க என்னுடன் வருகிறார். அவர் மிகவும் படித்தவர். பெரிய பதவியில் இருப்பவர். ஆகையால் எல்லாவற்றையும் ஒழுங்காகக் கவனித்துச் செய்து வைக்கவேண்டும்" என்று ஒன்றியாக இருக்கும் தன்னைப் பார்த்து இவ்வளவு வேலைகளை ஏவும் பெண்ணின் மனத்தை நினைத்து வருந்தினாள் கௌரி. ஆனால், சாந்தா ஒரே பெண். அவள் தகப்பனார் இறந்து போனதிலிருந்து

அளவுக்கு மீறிய சலுகை காண்பித்துத் தாயால் வளர்க்கப்பட்டவள். 'ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது' என்பதுபோல் சிறு வயசிலிருந்தே பிடிவாதமும் ஆடம்பரமும் நிறைந்திருந்தன சாந்தாவிடம். இனிமேல் அவளை ஒன்றும் சொல்ல முடியாது. ஹிதமாகச் சொன்னாலும் கேட்கமாட்டாள்.

கௌரி தனக்கு ஒத்தாசைக்காக அடுத்த ஊரிலிருக்கும் தன்னுடைய தமையன் பெண் பார்வதியை வரவழைக்கத் தீர்மானித்தாள். அன்றே வண்டியுடன் ஆளையும் அனுப்பி வைத்தாள். பார்வதிக்கு அத்தை என்றால் உயிர். அன்புக்கும் பொறுமைக்கும் இடமாக இருக்கும் அத்தை கௌரியின் வயிற்றில் சாந்தா பிறந்திருப்பதே ஒரு புதிர் என்று பார்வதி நினைத்துக் கொள்வாள். தீபாவளிக்கு அத்தை தன்னை அழைத்துவரச் சொல்லி இருக்கிறாள் என்பதை அறிந்தவுடன் பார்வதி தயாராகக் கிளம்பிவிட்டாள். பார்வதி வந்ததும் நாலைந்து பேர் தனக்கு உதவிக்கு வந்துவிட்டதாகக் கௌரியின் மனத்துக்கு ஆறுதலாக இருந்தது. சாந்தாவிடமிருந்து வந்த கடிதத்தைப் படிக்கச் சொல்லிவிட்டுக் கண்ணீர் ததும்ப உட்கார்ந்திருக்கும் அத்தையைப் பார்வதி, "இதற்காக இவ்வளவு கஷ்டப்படுவானேன் அத்தை? அவள் சுபாவந்தான் தெரியுமே உனக்கு. ஆனால், சாந்தாவுக்கு என்னைக் கண்டால்பிடிக்கிறதில்லை, அத்தை! தீபாவளிக்கு முன் தினம்வரை உனக்கு வேண்டிய ஒத்தாசைகளைச் செய்துவிட்டு நான் போய் வருகிறேன்" என்றாள் பார்வதி.

"நன்றாக இருக்கிறதே நீ சொல்லுகிறது! வேலையை வாங்கிக்கொண்டு உன்னை விரட்டி அடிக்க வேண்டுமா நான்? நீபாட்டுக்கு அவளுடன் பேசாமல் பண்டிகைக்கு இருந்துவிட்டுப் போ, அம்மா! அவள் வந்து இரண்டு நாள் கூத்தடித்துவிட்டுப் போகப் போகிறாள். அடிக்கொரு தரம் வந்து அத்தை, அத்தை என்று அன்புடன் என்னை நீதானே கவனித்துக்கொள்ளுகிறாய், பார்வதி?" என்று கௌரி கூறினாள்.

பார்வதி குடும்பப் பழக்க வழக்கங்களில் பழகி வளர்ந்தவள். அடக்கமும் அறிவும் நிரம்பியவள். சாதாரணக் கிராமப் பள்ளிக்கூடத்தில் எட்டாவது வகுப்பு வரையில் படித்தவள்; பட்டணத்து நாகரிகம் ஒன்றையும் அறியாதவள். அவள் தாழம்பூ மேனியில் பசு மஞ்சளைப் பூசிக் குளித்துவிட்டால் தங்க நிற மேனியளாகக் காட்சி அளிப்பாள். மேஜை அருகில் காபி சாப்பிட்டுவிட்டுக் கட்டுக் கட்டாகப் புத்தகங்களைப் படித்துக் குவிக்காமல் ஆற்றங்கரையிலிருந்து ஜலம் கொண்டு வந்து கறவை மாட்டுக்குத் தீனி வைத்துக் குளிப்பாட்டி, பால் கறந்து, மற்றக் குடும்ப வேலைகளைக் கவனிப்பதிலேயே பார்வதியின் பொழுது போய்விடும். ஒழிந்த வேளைகளில் ஏதாவது புத்தகங்கள் படிப்பாள். கிராமத்தின் சூழ்நிலையும், உடற்பயிற்சியுமாகச் சேர்ந்து பார்வதி கண்ணைக் கவரும் வனப்புடன் விளங்கினாள். கூனல் முதுகில்லாமல், குழி விழுந்த கண்கள் இல்லாமல், சாள



வீணையின் ஒலியுடன்

நீளம் கூந்தல் இல்லாமல், நிமிர்ந்த உடலும், அகன்று பேசும் கருவிழிகளும், சாட்டை போல் பின்னலும், புன்னகை தவழும் முகமும் பார்வதிக்கு அமைந்திருந்தன.

பார்வதி வந்த பிறகு கௌரியின் மனச் சோர்வு குறைந்துவிட்டது. அவளை எந்த வேலையும் செய்யவிடாமல் பார்வதியே குடும்ப வேலைகளில் ஈடுபட்டாள். ஜன்னல்களுக்கு வேறு திரைகள் போட்டாள். மேஜைகளின் மேல் விதவிதமாக ஜாடிகளில் பூங்கொத்துகளைச் செருகினாள். தீபாவளி நாள் நெருங்க நெருங்கப் பக்ஷணங்கள் செய்வதில் முனைந்தாள் பார்வதி. அலுப்புச் சலிப்பின்றி ஆடி ஓடி வேலைகள் செய்யும் பார்வதியைக் கண்டால் சாந்தாவுக்குப் பிடிக்கிறதில்லை. தன்னைப்போல் காலேஜ் படிப்புப் படிக்காத பட்டிக்காடென்றும், பட்டினத்து நாகரிகம் தெரியாத அசடு என்றும் பார்வதியை அவள் இழிவாக எண்ணினாள். பார்வதியாகவே வலுவில் சென்று அவளுடன் பேசினாலும் அலட்சியத்துடன் அவளைப் பார்த்துவிட்டுப் போய்விடுவாள் சாந்தா.

தீபாவளிக்கு முதல் நாள் மத்தியான்னம் தன்னுடைய வேலைகளை முடித்துக்கொண்டு பார்வதி அத்தையிடம் தான் ஊருக்குப் போவதற்கு அனுமதி கேட்டாள்.

"அன்றைக்கே சொன்னேனே, பார்வதி; அவளுக்காகவா நீ இங்கு வந்திருக்கிறாய்? இனிமேல்தானே வேலைகள் நிறைய இருக்கின்றன? ஒண்டியாக நான் எப்படியம்மா அவள் கோபத்துக்குச் சமாளிக்க முடியும்? எப்படியோ பொறுத்துக்கொண்டு நாளை வரையில் இருந்துவிடு" என்று கெஞ்சினாள் கௌரி.

அத்தையின் விருப்பத்துக்கு மாறாக நடக்க முடியாமல் பார்வதி இருந்துவிட்டாள். மத்தியான்னம் மூன்றுமணிக்குச் சாந்தா தன் சிநேகிதர்களுடன் வந்து சேர்ந்தாள். வந்தவர்களுக்குக் காபி, பலகாரம்கொடுத்து உபசரித்த பார்வதியை அவள் கவனிக்கவே இல்லை. பட்டண வாசத்து மனிதர்கள் எதிரில் எப்படிப்



மெல்லிய குரல் இழைந்து வந்தது.

பழகுவது என்று தெரியாமல் பயந்து பயந்து பலகாரத் தட்டுடன் வரும் பார்வதியைச் சாந்தாவுடன் வந்திருந்த சங்கரன்தான் அதிகமாகக் கவனித்தான்.

"என்ன சாந்தா, அந்தப் பெண் யார் என்றே எங்களுக்குச் சொல்லவில்லையே! நாம் வந்ததிலிருந்து சோர்வில்லாமல் நம் தேவைகளை அறிந்து உபசரிக்கிறாளே!" என்றான்.

பார்வதிக்குச் சாந்தா என்ன கூறுவாளோ என்ற பயத்தால் குப்பென்று வேர்த்தது. மேஜைமேல் தட்டை வைத்துவிட்டு அங்கே நிற்காமல் உள்ளே போய்விட்டாள்.

"ஓ, அவளா? அவள் என் மாமா பெண். அம்மாவுக்கு ஒத்தாசையாக வந்திருக்கிறாள் போல் இருக்கிறது" என்று சுருக்கமாகக் கூறிவிட்டுப் பேசாமல் இருந்தாள் சாந்தா.

பார்வதிக்கு அன்று அடுப்பங்கரையிலேயே வேலை சரியாக இருந்தது. மாலை எல்லோரும் ஊரைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பியபோது சங்கரன் பார்வதியை வரும்படி அழைத்தான். அவள் தன்னுடன் வருவது சாந்தாவுக்குப் பிடிக்கவில்லை.

"இரவு விருந்துக்கு ஏதாவது ஏற்பாடுகள் செய்ய வேண்டும். அம்மாவுக்கு ஒத்தாசையாக அவள் வீட்டில் இருந்தால்தான் முடியும்" என்றாள் சாந்தா. சங்கரனின் நோக்கமும் அநுதாபமும் பார்வதிக்குக் கிடைக்கின்றனவே என்று சாந்தாவுக்குக் கோபமாக இருந்தது. அழைத்ததற்கு என்ன பதில் கூறுவதென்று தெரியாமல் தலையைக் குனிந்து கொண்டு நிற்கும் பார்வதியை அன்புடன் கவனித்தான் அவன்.

"விருந்துச் சாப்பாடுதானே? நாம் திரும்பி வந்தபிறகு எல்லோருமாக அம்மாவுக்கு ஒத்தாசை செய்யலாம். நொடியில் முடிந்து விடும்" என்றான் சங்கரன் விடாமல்.

"இல்லை, அத்தைக்கு ஒண்டியாக ஒன்றும் முடியாது" என்று தயக்கத்துடன் கூறிவிட்டுப் பார்வதி உள்ளே போய்விட்டாள்.

பார்வதி சாந்தாவின் உதாசினத்தைப்பற்றி அதிகமாகப் பாராட்டவில்லை. இருந்தாலும், அந்நியர் முன்புகூடத் தன்னை அவள் ஒரு வேலைக்காரி மாதிரி நடத்துவது பார்வதிக்கு வருத்தமாக இருந்தது. கண்ணில் துளித்த நீரை அடக்கிக்கொண்டு பார்வதி மற்ற அலுவல்களைக் கவனிக்கச் சென்றாள். வேலையெல்லாம் ஒரு வழியாக முடிந்தபிறகு, அவள் மனம் ஏனோ சங்கடப் பட்டுக்கொண்டே இருந்தது. பொழுது போகாமல் இருக்கவே, காமிரா அறையில் கவனிப்பாரற்றுத் தூசு படிந்து கிடந்த சாந்தாவின் வீணையை எடுத்து வைத்துக்கொண்டு பாட ஆரம்பித்தாள். சாந்தாவும் அவளும் சிறுவயசில் ஒன்றாக வீணை பயின்றவர்கள். சாந்தா காலேஜ் படிப்புப் படிக்க ஆரம்பித்த பின்பு வீணை வாசிப்பதையே நிறுத்திவிட்டாள். கிராமத்தில் வசிக்கும் பார்வதிக்கு அது ஒன்றேதான் பொழுது போக்காக இருந்து வந்தது.

விளக்கு ஏற்றும் சமயம் ஆகிவிடவே, வீணையை உறையில் இட்டு வைத்துவிட்டு எழுந்தாள் பார்வதி. அப்பொழுது அந்த அறையின் வாயிற்படியில் சங்கரன் நின்று கொண்டிருந்தான்.

"இவ்வளவு சுத்தமாக உனக்கு வீணை வாசிக்கத் தெரியுமா? அரைமணியாக நின்று கொண்டே கேட்டு விட்டேன் உன் பாட்டை" என்று சந்தோஷத்துடன் கூறினான் சங்கரன். பார்வதியின் முகம் அந்தி வானம்போல் சிவந்தது. பதிலொன்றும் கூறாமல் மௌனமாக நின்றாள்.

"நாலு வார்த்தைகள் பளிச்சென்று பேச மாட்டேன் என்கிறாயே" என்றான் சங்கரன். அப்பொழுதும் தன்னைப் பதில் பேச விடாமல் சாந்தா சங்கரனைத் தேடிக் கொண்டு வருவதை அறிந்ததும் பார்வதி பின் கட்டுக்குப் போய்விட்டாள்.

அன்று இரவு உணவுக்குப் பிறகு எல்லோரும் முற்றத்தில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். பட்டணத்தில் கேட்டுக் கேட்டு அலுத்துப் போன விஷயங்களையே சாந்தா திரும்பத் திரும்பப் பேசிக்கொண்டிருந்தாள். வீட்டு வேலைகள் முடிந்து பார்வதியும் கொஞ்சம் ஒதுக்குப்புறமாக உட்கார்ந்து இவர்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தாள். அதைக் கவனித்த சங்கரன் சாந்தாவின் பேச்சுக்கு முடிவு ஏற்படுத்த நினைத்து, "பார்வதி, வீணையில் இரண்டு பாட்டுகள் வாசியேன்" என்றான்.

சாந்தா திடுக்கிட்டாள். பார்வதியின் முகம் பயத்தால் வெளுத்தது. "பூ! அவளுக்கு என்ன பாடத் தெரியும்? அவளைவிட நான் நன்றாகப் பாடிக்கொண்டிருந்தேன். பழக்கம் விட்டுப் போய்விட்டது" என்றாள்.

"சாயங்காலம் அவள் பாட்டைக் கேட்டேன். நன்றாகத்தான் இருந்தது. இரண்டே பாட்டுகள் பாடிவிடு, பார்வதி" என்றான் சங்கரன் மறுபடியும்.

பார்வதி தயக்கத்துடன் வீணையை எடுத்து வந்து வாசிக்க உட்கார்ந்தாள். முகத்தை நிமிர்த்தாமல் வீணையும் கையுமாக உட்கார்ந்திருக்கும் பார்வதி பதுமைபோல இருந்தாள். வீணையின் ஒலியுடன் அவள் மெல்லிய குரல் இழைந்து வந்தது. அதிகமாகப் பாடினால் சாந்தாவின் கோபம் அதிகமாகி



அவளுக்கு முன்பாகச் சங்கரன் நின்றிருந்தான்.

விடும் என்று நினைத்துக் கச்சிதமாக இரண்டே பாட்டுக்கள் பாடி எழுந்துவிட்டாள் அவள்.

சாந்தாவின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன. இரவு எல்லோரும் படுக்கைக்குப் போன பிறகு கௌரியின் படுக்கை அறையில் சாந்தாவுக்கும் அவளுக்கும் தகராறு ஏற்பட்டது.

"நீ ஏன் அந்த காட்டுப்புறத்தை வரவழைத்தாய்? நாகரிகமான மனிதர்களுடன் அதற்குப் பழகத் தெரிகிறதா? இந்த அழகில் இவளுக்குத் தெரிந்த அரைகுறைப் பாட்டை வேறு பாடிக் காண்பித்துவிட்டாள்!" என்று கூறினாள் சாந்தா.

"ஒண்டியாக என்றால் இவ்வளவு வேலைகளையும் சமாளிக்க முடியாதே என்றுதான் வரவழைத்தேன்." கௌரி தன் பெண்ணுக்கு எங்கே கோபம் வந்துவிடுமோ என்று பயந்தாள்.

"வேலையெல்லாம் முடிந்துவிட்டதோ இல்லையோ? காலையில் யார் கண்ணிலும் படாமல் அவளை ஊருக்குப் போகச் சொல்!" சாந்தா கோபத்துடன் கதவைப் படாரென்று மூடிக்கொண்டு வரவும், பார்வதி கண்ணில் கண்ணீர் பெருகத் தன் படுக்கை அறையை அடைந்தாள்.

விடியர்காலம் நாலு மணிக்குப் பார்வதி தன் பெட்டியுடன் வந்து அத்தையிடம்

தன்னை ஊருக்கு அனுப்பும்படி கேட்டாள்.

"பொழுது விடிந்ததும் திரும்பவும் நாலு பேர் முன்னடி ரகளை வேண்டாம், அத்தை! ஊரிலேயும் அம்மாவும் அப்பாவும் தனியாகப் பண்டிகை கொண்டாடுகிறார்கள்" என்றாள் பார்வதி.

"சாந்தாவின் குணந்தான் உனக்குத் தெரியுமே, பார்வதி" என்றாள் கௌரி, அளவுக்கு மீறிய சோகத்துடன்.

"தெரிந்துதான் கேட்கிறேன், அத்தை. ஒருவர் பிடிவாதமாக இருந்தால் மற்றொருவர் விட்டுக் கொடுத்துத்தானே ஆகவேண்டும்? வண்டிக்காரனைக் கூப்பிட்டு என்னை ரெயிலடி வரையில் விட்டுவிடச் சொல்லுங்கள், அத்தை."

வைகறையின் மங்கிய வெளிச்சத்தில் ஸ்நானம் செய்து ஈரம் உலராத கூந்தலில் அவள் சூட்டியிருந்த முல்லையின் மணம் கம்மென்று வீசியது. அத்தை தன் பெண்ணுக்குத் தெரியாமல் பார்வதிக்குப் பரிசாக அளித்திருந்த பட்டுப் புடைவை சரசரக்க வண்டியில் ஏறிக்கொண்டாள் பார்வதி.

வண்டி ஸ்டேஷனை அடைவதற்கும் பொழுது விடிவதற்கும் சரியாக இருந்தது. டிக்கட்டுடன் திரும்பிய வண்டிக்காரன், "அம்மா! இந்த வண்டி பூட்டுதுங்களாம். எட்டு மணிக்குத்தான் வண்டியாம்!" என்று கூறி அவளிடம் டிக்கட்டைக் கொடுத்தான்.

பார்வதி தன் உறுதி மாறாமல் எட்டுமணி வண்டிக்காகக் காத்திருந்தாள்.

'சாந்தா ஒருவேளை சங்கரனைக் கல்யாணம் பண்ணிக்கொள்கிறதாக இருக்கிறாளோ? அதற்குப்போட்டியாக நாம்வந்துவிட்டதாகச் சாந்தா நினைத்துவிட்டாளோ என்னவோ?' என்று நினைத்துத் தனக்குள் சிரித்துக் கொண்டாள் பார்வதி. சங்கரனுடைய பெருந்தன்மையும் இனிய சுபாவமும் தன் மனத்தைக் கவர்ந்திருப்பதும் அவளுக்குத் தெரிந்தது. பார்வதியின் சிந்தனையைக் கலைத்துக்கொண்டு ரெயில் வண்டி ஸ்டேஷனை அடைந்தது. பெண்கள் வண்டியில் ஏறி உட்கார்ந்துகொண்டாள் பார்வதி. அவள் இறங்க வேண்டிய ஊர் வந்ததும் பார்வதி வண்டியிலிருந்து இறங்கினாள். அங்கே அவளுக்கு முன்பாகச் சங்கரன் நின்றுகொண்டிருந்தான்! "என்ன அவசரம் உனக்கு? என்னிடம் சொல்லாமலே புறப்பட்டுவிட்டாயே!" என்று கேட்டான்.

பார்வதி புன்னகை பூத்தாள்.

"எல்லா விஷயங்களும் எனக்குத் தெரியும். சாந்தாவுக்கு உன்னைக் கண்டால் பிடிக்கவில்லை. என்னதான் கற்றாலும் அவளிடம் அன்பும் அடக்கமும் இல்லை. மணமில்லாத காட்டு ரோஜா மலரைப்போல!" என்றான் சங்கரன்.

"ஆமாம், அவள் சுபாவம் அப்படி. அதோடு அவள் நான் என்னவோ அவளுக்குப் போட்டியாக வந்துவிட்டதாக நினைத்துக் கொண்டிருக்கிறாள்."

"என்ன சொல்லுகிறாய்?" என்று சங்கரன் அவளை ஆச்சரியத்துடன் பார்த்தான். பார்வதி பேசாமல் இருந்துவிட்டாள்.

எதிர்பாராமல் வந்த பார்வதியை அவள் பெற்றோர்கள் ஆச்சரியத்துடன் பார்த்தார்கள்.

"அத்தை வீட்டிற்கு இவர் வந்திருந்தார். நம் ஊரையும் பார்க்க வந்திருக்கிறார்." சுருக்கமான இந்த அறிமுகம் பார்வதியின் தகப்பனாரைத் திகைக்க வைத்துவிட்டது.

"ஊரைப் பார்க்க வேண்டும் என்கிற காரணம் ஒன்று. அத்துடன் உங்கள் பெண் தனியாக வருகிறாளே என்றும் இருந்தது" என்றான் சங்கரன்.

பார்வதியின் தகப்பனார் சரளமான மனம் படைத்தவர். சங்கரனைப் பற்றிய விவரங்களை விசாரித்துக்கொண்டார். "உனக்குத் தெரிந்த இடமாகப் பார்வதிக்குப் பார்த்துச் சொல்லேன், அப்பா! அவளுக்கும் இந்த வருஷம் கல்யாணம் பண்ணியாக வேண்டும்" என்றார் அவர் கவலையுடன்.

இலையில் பார்வதி பரிமாறிய போளியைச் சுவைத்துக்கொண்டே, "அதற்கென்ன? பார்வதி ரொம்பச் சமர்த்து. பாட்டும் நன்றாகப் பாடுகிறாள். அவளுக்குக் கல்யாணம் ஆகக் கேட்க வேண்டுமோ?" என்றான் சங்கரன்.

"இதையெல்லாம் யார் அப்பா கவனிக்கிறார்கள்? பணம் ஒன்றுதானே பிரதானமாக இருக்கிறது இந்தக் காலத்தில்?" என்று கூறி வெற்றிலைத் தட்டை அவனிடம் கொடுத்தார் அவர். சங்கரன் அப்பொழுதே அவசரமாகக் கிளம்பிக்கொண்டிருந்ததால், "பார்வதி, உன் ஜாதக நகல் ஒன்று பெட்டியில் வைத்திருக்கிறேன். மஞ்சள் தடவி எடுத்து வா, அம்மா" என்று பெண்ணைக் கூப்பிட்டார்.

வெட்கத்துடன் ஜாதகத்தைத் தகப்பனாரிடம் கொடுத்த பார்வதியை அன்புடன் பார்த்துக்கொண்டே, "ஆகட்டும். என் தகப்பனாரிடம் கலந்துகொண்டு கூடிய சீக்கிரம் தகவல் தெரிவிக்கிறேன் உங்களுக்கு" என்றான் சங்கரன்.

எதிர்வீட்டில் தலை தீபாவளிக்காக நாகஸ்வரக்காரன் இன்னிசையை ஊதிக்கொண்டிருந்தான். ★

# அவருக்கு....?

ஸரோஜா ராமமூர்த்தி

அது ஒரு தேய் பிறை இரவு. சற்று முன் இருண்டு கிடந்த வானத்தில் அரை நிலா பூத்திருந்தது. ஆசிரமத்தில் எல்லோரும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார்கள். மாமரத்தின் கிளைகளினூடே நிலவொளி இறங்கி வந்து பாலா படுத்திருந்த வராந்தாவில் ஒளிக்கோலம் வரைந்தது. பாலா மட்டும் உறங்கவில்லை.

இருண்ட வானத்தையும், பூதம் பூதமாக நின்றிருந்த மரங்களையும் பார்த்துக் கொண்டிருந்தவள், நிலவு உதயமானதையும் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் அருகே ஜக்கு படுத்து அயர்ந்த தூக்கத்தில் இருந்தான். கலைந்த கேசம் நெற்றியில் புரள, மலர் விழிகள் மூடி இருக்க, உள்ளத்தில் எண்ணற்ற கேள்விகளை உள்ளடக்கிக் கொண்டு அந்தக் குழந்தை தூங்குவதைப் பாலா உற்றுக் கவனித்தாள். தன் எலும்புக் கரத்தை அவன் பஞ்சு போன்ற முகத்தில் சோரவிட்டு ஆசை தீர வருடினாள். ஜக்கு தூக்கத்தில் முனகினான்; முறுவலித்தான்.

அந்த வராந்தாவில் சுமார் முப்பது பெண்கள் படுத்திருந்தார்கள். நல்ல கோடைக் காலம் ஆதலால் ஆசிரமத்துள் யாரும் படுக்கவில்லை. இவர்களுக்குத் துணைக்கென்று காவற்காரக் கிழவனும், அவன் வளர்ப்பு நாய் ஒன்றும் மாமரத்தடியில் படுத்திருந்தனர்.

பாலா தன்னைச் சுற்றிலும் ஒரு முறை பார்த்துக் கொண்டாள். தூங்குகிற அத்தனை பேருக்கும் விழித்த நிலையில் ஒவ்வொரு கவலை இருக்கத்தான் செய்தது. கணவனை இழந்தவர்களுக்கு அதைப் பற்றிய கவலை; ஒருவனால் ஏமாற்றப்பட்டவளுக்கு அதைப் பற்றிய வேதனை; கணவனால் நிராகரிக்கப்பட்டவளுக்கு அதைப் பற்றிய குமைச்சல். ஆனால் இவர்கள் எல்லோரும் பாலாவைப் போல் அந்த இரவில் கொட்டுக் கொட்டென்று விழித்திருக்கவில்லை. தத்தம் கவலைகளை மறந்துவிட்டிருந்தார்கள்.

பாலாவும் அப்படிக் கவலைப்பட்டே ஒன்றும் உருகிப் போகிறவள் அல்லள். கடைசித் தடவையாக அவள் கணவன் பலராமன் அவளையும் குழந்தையையும் ரயிலேற்றிவிட்ட போது, கண் கலங்காமல் தைரியமாகத்தான் இருந்தாள். ரயில் பெட்டியில் அவளையும் குழந்தையையும் உட்கார வைத்துவிட்டு, பலராமன் ரயிலடியைச் சுற்றிச் சுற்றி வந்தான். பாலாவும் குழந்தையின் கையைப் பிடித்துக் கொண்டே வெளியே வந்தாள். ரயில் கிளம்பும் நேரம் வந்ததும் பலராமன் பெட்டியின் அருகில் வந்து "ஜக்கு, போய் விட்டு வருகிறாயா? எங்கே 'டாட்டா' சொல்லு பார்ப்போம்" என்று கேட்டான்.

"போய்விட்டு வருகிற தென்னடா? போகிறேன் என்று சொல்லடா, ஜக்கு..."

சொல்லம்புகளால் வீட்டில் அவனைத் துளைத்தது போதாதென்று மேலும் துளைத்தெடுத்தாள் பாலா.

"சரி, சரி. போகிற இடத்தில் இந்த



வேலையையும் மனசிலே வச்சிண்டு லீவிலே புறப்பட்டேன். ஆனால் வந்திறங்கியதுமே கேள்விப்பட்ட ஒரு சமாசாரம் என் காரியம் பழமாயிடும்னு சொல்லித்து. 'டில்லியிலே உன் பிள்ளையை அடிக்கடி பார்ப்பேன்— ஆனால் அவன் சொல்லவேயில்லையே! நீ வேலையை இங்கே விட்டுவிட்டியா?''

''ஆமாம்; விட நேர்ந்துடுத்து... அதுக்கு உனக்கென்ன லாபம்?''

''வெரிகுட்...அப்ப நீ என் கூடவே டெல்லி வர்ரே... உனக்கு அங்கே கை மேலே வேலை காத்திருக்கு..''

''என்ன, டில்லிக்கா?..'' தம்பதிகள் இருவரின் குரல்களும் சேர்ந்தொலித்தன.

''என்னப்பா, மயக்கம் போட்டுடாதே. இங்கே உனக்கு வேலை போய் நீ மனசொடிஞ்சிருக்கே! அங்கே நானே தென்னிந்தியர் பள்ளிக் கூடத்துலே கிளை ஒண்ணைத் திறந்துட்டுத் தகுந்த ஹெட்மாஸ்டர் கிடைக்காமெ திண்டாடறேன்! இந்த வேடிக்கையை என்ன சொல்ல! என்ன யோசனை, பக்கத்துலே பிள்ளை, வேலை கையிலே...ம்...சரின்னு சொல்லு..''

ருக்கு கணவனைப் பார்த்தாள். 'நான் சொன்னது சரிதானா? ஒருவழி அடைச்சா தெய்வம் ஒரு வழி திறக்கும்' என்று பேசாமல் பேசின அவள் விழிகள்.

ஐயர் பூஜை மாடத்தைப் பார்த்தார். தீப ஒளியின் பின்னால், உருவாய், அருவாய், உளதாய், இலதாய், மருவாய், மலராய், மணியாய், ஒளியாய் நின்ற முருகன் இப்போதும் தன் மாயச் சிரிப்பை உதிர்த்துக் கொண்டிருந்தான்.

''அப்படியானால் நாங்கள் உனக்கு முன்னதாகவே — புதுவருஷப் பிறப்புக்குள்ளாகவே – சென்று விடுகிறோம்...'' என்றார் ஐயர்.

* * *

'சார்வரி' வருஷம் கிருஷ்ணையர்—ருக்கு தம்பதிகளுக்குத் தலைநகரிலே விடிந்தது.

''உங்கள் விஜயத்தோடு இத்தனை சிறப்பாக இவ்வருஷம் பிறக்குமனு நாங்கள் நினைக்கவேயில்லை...''என்றான் மகன் நாத் தழுதழுக்க...

''எல்லாம் ஈசன் செயல். இறைவனைச் சரணடைந்தால் அனைத்தும் பெறலாம். நம்பினோர் கெடுவதில்லை, இது நான்கு மறைத் தீர்ப்பு'' என்று முணுமுணுத்தது தந்தையின் வாய்.

மாமியார் தேர்ந்தெடுத்த பட்டுப் புடவையை உடுத்திக்கொண்டு வந்து நமஸ்கரித்த கமலாவை வாயார வாழ்த்தினார் ஐயர். ருக்குவிற்கும் மகிழ்ச்சி பிடிபடவில்லை

இளங்கதிரவன் புதுவருடத்தின் 'நம்பிக்கை ஒளியை' உலகெலாம் பரப்பியபடி தன் பவனியைத் தொடங்கினான்.

வாயை அடக்கிக் கொண்டு இரு. உடம்பிலே சீவனைக் காணோம்: 'பூ' என்றால் காற்றில் பறக்கிற மாதிரி இருக்கிறாய்; வாய் மட்டும் நெருப்பாகச் சுடுகிறது..."

ஜக்கு, தாயையும் தந்தையையும் மாறி மாறிப் பார்த்தான். அப்பாவுக்கும் அம்மாவுக்கும் உள்ள வேற்றுமை அவனுடைய சிறிய மூளைக்குக் கூடத் தெரிந்தது. நெடிதுயர்ந்து, நல்ல சிவப்பாகக் கம்பீரமாகத் தோன்றினான் பலராமன். ஆழ்ந்து சுடர் விடும் கண்களும், சுருண்ட கேசமும் கொண்ட அவன் நல்ல அழகன். அவன் அருகில் அம்மாவை அவன் பல முறைகள் பார்த்திருக்கிறான். மூங்கிற் துண்டுகளைப் போல் நீண்ட கைகளும் கால்களும்... குழி விழுந்த கண்களுமாக அவளுடைய கோரம் அவனுக்குத் தெரிந்துதான் இருந்தது. அவளுக்கும் அவனுக்கும் எத்தனை வேற்றுமை? இயற்கையின் இந்த ஏமாற்று வித்தையை மனித அறிவால் புரிந்து கொள்ள முடியவில்லையே!

இப்படி ஓர் அபூர்வ தம்பதிக்குப் பிறந்து விட்ட தன்னையும் குனிந்து பார்த்துக் கொண்டான் ஜக்கு. தகப்பனார் வாங்கித் தந்த ஊதலை எடுத்து உதட்டில் பொருத்தி அவன் ஊதவும், ரயிலும் ஊதிக் கொண்டு கிளம்பிவிட்டது.

இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டே நின்றார்கள். இவர்களைச் சுற்றி எத்தனையோ விதமான பேச்சுக்கள், கருத்துக்கள்...

"ஊர் போய்ச் சேர்ந்து கடிதம் போடு.. ஆமாம்... திரும்பி வரும்போது உடம்பை தேற்றிக் கொண்டு வரவேண்டும்."

ஒருவன் ஒருத்தியிடம் இவ்விதம் கூறி விடைபெற்றான்; "நாலும் தான் பெண்ணைப் பெற்றாய்; இந்தத் தடவை மொக்கு மொக்கென்று ஆண் குழந்தையோடு திரும்பிவர வேண்டும். இல்லாவிட்டால்..."

"இல்லாவிட்டால் என்னவாம்? என்னைத் தள்ளி வைத்து விடுவீர்களோ?"

இப்படி ஒரு பெண் குரல் மெல்லியதாக இழைந்து உறுதிப்பட்டு நின்றது.

பாலா திடுக்கிட்டாள். இதோ தன்னைத் தன் கணவன் தள்ளி வைத்து விட்டான். அப்படிச் சாமானியமாக நடந்து விடுமா என்று அந்தப் பெண் சவால் விடுகிறாளே! இதோ நடந்து கொண்டிருக்கிறதே!

இனி அவளுக்கும் அவனுக்கும் என்ன உறவு வைத்திருக்கிறது?

ரயில் மலைகளையும், காடுகளையும், ஆறுகளையும் கடந்து முன்னேறும்போதெல்லாம் அவளுக்கு அவன் தொலைவில் தெரியும் நட்சத்திரப் புள்ளியாக மாறிவிட்டான். அதோ! அவள் கண்களை உறுத்துவதைப் போல் ஒரு வானச் சுடர். எட்டாத உயரத்தில் அது நின்று அவளை அலட்சியமாகப் பார்த்தது. அது போல் தான் அவனும்!

∴ ∴ ∴

ஜக்கு புரண்டு படுத்தான். திரும்பவும் அவர்கள் பிரிவுக்குக் காரணத்தை ஆராய்ந்தாள் அவள். பெண்மையின் முழுமையை எதிர்பார்த்துக் காலமெல்லாம் ஏங்கி இருந்தவனுக்கு, பாலா ஒரு முழுமைப் பெண்ணாக முடியாது. நீண்ட நீண்ட கை கால்களும், சதைப்பிடிப்பில்லாத கன்னங்களும், கோரைக் கூந்தலும் கொண்ட அவளுடைய கழுத்தில் அவன் முடிச்சிட்ட கதை விந்தையானது; வேடிக்கையானதும் கூட.

உற்றார் உறவினர் பெற்றவர் எல்லோருமே பலராமனைச் சந்தேகத்துடன் பார்த்தார்கள். வயது முப்பதுக்கு மேல் ஆகியும் திருமணம் செய்துகொள்ள ஆசைப்படவில்லையே என்பது தான் அவர்கள் குற்றச்சாட்டு. ஒழுங்காக இருப்பவன்தானா?

இந்தக் கசமுசப் பேச்சுக்கள் பலராமனின் தாயை வெகுவாகப் பாதித்தன; காதைத் துளைத்தன.

"பாலு! நான் சொல்வதைக் கேட்கிறாயா?" என்று மகனிடம் ஒரு தினம் ஆரம்பித்தாள் அவள்.

"என்ன அம்மா?..."

"குடும்பத்துக்குத் தகுந்த ஒரு பெண்ணைப் பார்த்துக் கல்யாணம் பண்ணிக் கொள்ளேன்..."

"நீதான் பாரேன், அம்மா..."

'அம்மா குடும்பத்துக்கு ஏற்றவளாகத் தானே கேட்கிறாள்; பார்க்கட்டும்' என்று நினைத்தான் பலராமன்.

தாய் அவ்விதமே பார்த்தாள். மகனின் கற்பனை உள்ளத்தைப் புரிந்துகொள்ளாத அவள் பாலாவின் உயரம் பருமன் இவற்றைப் பார்த்துத் திருப்தி அடைந்துவிட்டாள்.

"பெண்ணைப் பார்த்தாயாடா பலராமா?"

"நீதான் பார்த்தாயே, அம்மா. நான் சரியாகக் கவனிக்கவில்லை..."

"நல்ல உயரமும் பருமனுமாக இருக்கிறாள். குடும்ப வேலைகள் நன்றாகச் செய்வாளாம்.."

"ஓஹோ!—"

அவனுக்குப் பெண்ணைப் பார்த்து முடிவு கூற வேண்டுமென்று ஏனோ தோன்றவில்லை. தாயிடம் வைத்திருந்த அபார நம்பிக்கை காரணமாக இருக்கலாம்...

கண்கட்டு வித்தை போல் இவர்கள் திருமணம் நடத்து விட்டது. மணையில் பெண்ணையும், பிள்ளையையும பார்த்தவர்கள் அதிசயித்தார்கள். வயதுக்கு மீறிய முதிர்ச்சி நிறைந்த மணப் பெண்ணைப் பார்த்து மறுபடியும் கசமசவென்று பேசிக் கொண்டார்கள். தனித்துப் பார்க்கும்போது தெரியாத பேதங்கள் அவர்களுக்கு மணமக்களைச் சேர்த்துப் பார்க்கும்போது நன்ருகப் புலப்பட்டது. நல்லதோ கெட்டதோ, நாலு பேர்கள் பேசும் போது தானே கூர்ந்து கவனிக்கத் தோன்றுகிறது ?

பலராமன் மனைவியைக் கூர்ந்து கவனித்தான். அவன் உள்ளத்தில் ஒரு சிறு நெருடல். 'இவளையா மனைவி என்று வரித்துக் கொண்டோம்! பொன்னுலும் மணியாலும் அணி செய்து பெற முடியாத அழகியையல்லவா மணக்க நினைத்திருந்தேன்!...

'ஆம்! நினைத்திருந்தேன்—கற்பனையில்; நடைமுறையில் தவறிவிட்டேன்!'

தலையைக் குனிந்து விழிக்கடையில் கோத்து நின்ற கண்ணீரைச் சுண்டி எறிந்துவிட்டு வேறு பக்கம் திரும்பிக் கொண்டான் அவன்.

முதல் பார்வையில் ஏற்பட்ட அந்தக் கலக்கம், கல் மேல் பொறித்த சொல் போல் அவன் இதயத்தில் ஆழமாகப் பதிந்து விட்டது...

∴ ∴ ∴

மரத்தடியில் படுத்திருந்த நாய் உடலைச் சிலிர்த்துக் கொண்டது. பாலா புரண்டு படுத்து ஜக்குவின் கைகளை எடுத்துத் தன் மார்பின் மீது வைத்துக் கொண்டாள். குழந்தை எல்லாச் சாயலிலும் தகப்பனையே உரித்துக் கொண்டு வந்திருந்தான். அவன் குவிந்த உதடுகளைப பார்த்து 'அவரும் இப்படித்தான் இருப்பார்' என்று நினைத்துக் கொண்டாள் அவள்...

∴ ∴ ∴

அழிக்க முடியாத எண்ணங்கள் திரும்பவும் தொடர்ந்தன...

பாலா கணவன் வீட்டிற்கு வந்தாள். ஆனல் அவனைக் கவரவில்லை. முகத்தில் ஒற்றிய பவுடரும், கண்களில் தீட்டிய மையுமாக அவள் அவனை மாலை நேரத்தில் வரவேற்ருள். அஞ்சனமும், வாசனைப் பொடியும் பெண்ணின் வெளி அழகைச் கவர்ச்சியாக்கிக் காட்டுமே தவிர, பெண்ணின் மலர்ச்சியை அவற்ருல் அதிகப்படுத்தி விட முடியாது.

பாலா, நாடகத்தில் பெண் வேடம் தாங்கிய நடிகனைப் போலத் தோன்றிஞள். அவனுக்குக் கோபம் பற்றிக் கொண்டு வந்தது.

"இங்கே வா, பாலா! நீ இப்படி வேஷம் போட்டுக் கொண்டு நின்ருல் தான் மயங்கி விடுவேன் என்று நினைக்காதே. நீ பெண்ணுகத் தவறிப் பிறந்துவிட்டாய். உன்னிடம் பெண்ணுக்கு இருக்க வேண்டிய மென்மை இல்லை; குழைவு இல்லை; கவர்ச்சியுமில்லை! நீ எப்பொழுதும்போல் சாதாரணமாகவே இரு. அது போதும்...என்னை பயமுறுத்தாதே..."

பாலாவுக்கு அவன் கூறுவது புரியவில்லை. இந்த நிலையில்தான் ஜக்கு பிறந்தான்!

"உன் பிள்ளை உன்னைப் போலவே இருக்கிருன்டா...அவளைக் கொள்ளவில்லை..." என்ருள் தாய்.

"பிழைத்தேன் போ......உனக்குக்கூட அவள் பெண்ணுக இல்லை என்று இப்பொழுதாவது புரிந்ததே..."

"பெண் பார்க்கப் போன அன்று நீயும் தானே வந்தாய் அம்மா; என்னைப் போய்க் குற்றம் சொல்கிருயே!"

தாய் வேதனையுடன் மகனின் முகத்தைப் பார்த்தாள்.

"ஆம்..வந்தேன்; அவளைப் பார்க்கவும் பார்த்தேன். என் கண்ணுக் கெதிரே ஏதோ திரையைத் தொங்கவிட்ட மாதிரி அவளுடைய அவலட்சணம் எனக்குத் தெரியாமல் போய்விட்டது, அம்மா..."

துன்பப் பெருமூச்செறிந்தான் அவன்.

'திருமணங்கள் வானுலகிலேயே தீர்மானிக்கப் படுகின்றன' என்று அல்லவா கூறுகிருர்கள். இறைவன் இவர்கள் இரண்டு பேரையும் சேர்த்து வைத்துச் கசப்பை வளர்த்து வேடிக்கை பார்த்தான்.

"என்னவோ குடித்தனப் பாங்காக இருக்கிருளே என்று பார்த்தேன்...உயரமும பருமனுமாக எப்படி இருந்தாள்? பிரமாத அழகியில்லாவிடினும உடம்பாவது நன்ருக இருக்கக் கூடாதா?...அவலட்சணம் அதிகமாகக் கண்ணுக்குத் தெரியாது..."

தாய் அங்கலாய்த்தாள்.

கணவனின் அன்பு கிட்டாமல் போனவுடன் பாலா எலும்பும் தோலுமாக ஆகி வந்தாள். 'எக்ஸ்—ரே' கருவிகள் உடலைப் படம் பிடித்தனவே தவிர, உள்ளத்தில் பொங்கும் தணியாத ஆசையைப் படம் பிடித்துக் காட்டவில்லை.

மாமியாரும் கணவனும் அக்கறையுடன் வாங்கித் தந்த புஷ்டியான ஆகாரங்கள் அவளை வளப்படுத்தவில்லை.

அன்பு! — அன்பு! — அது ஒன்றுதான் அவள் இதய ஓலமாக இருந்தது. தாய்மைப் பேற்றை அடைந்தபோது கூட அவளிடம் மாறுதல் ஏற்படவில்லை.

பலராமன் தேர்ந்த ஞானியல்லன்; மிருக முமல்ல.

மென்மையும் நளினமும் கொண்ட ஒரு பெண்ணை எதிர்பார்த்தவனுடைய உள்ளத்திற்குப் பாலாவினுல் உவவகை யளிக்க முடியவில்லை. தன் குழந்தையின் தாய் என்கிற முறையில், அவளை வைத்துக் காத்து வந்தான் பலராமன்.

அவன் சீறவுமில்லை—தணியவுமில்லை. ஆனல் பெண் உள்ளம் வேறு விதமாக இருந்தது. பாலா சீறியெழுந்தாள்.

தான் மனைவியாக நடத்தப்பட வேண்டும் என்று அவனுடன் வாதிட்டாள்.

(வானத்து நிலா களையிழந்து காணப் பட்டது. மேற்கே நகர்ந்து நகர்ந்து அது செல்வதைப் பார்த்தவாறு பாலா சிந்தித் தாள்...)

அன்று ஒரு நாள்—

அவனும் அவளும் தனித்து நின்றபோது பாலாவின் கண்ணீர் அவனை உலுக்கியது. என்னமோ உண்மைதான். ஆனல் அது இரக்கம் தோய்ந்த கண்ணீர். பெண் என்கிற இரக்கம் ஒன்று தான் அவன் உள்ளத்தில் மேலோங்கி யிருந்தது.

"பாலா, ஏன் அழுகிருய்? உனக்கு இந்த வீட்டிலே என்ன குறை? நானும் அம்மாவும் உன்னுடன் அன்போடு தானே இருக்கிறேம்!..."

"அன்பா...?

பாலா கணவனைக் கோபத்துடன் விழித்துப் பார்த்தாள். "சோறும் துணியும் கொடுத்து நடத்தப்படும் வேலைக்காரி என்று சொல்லுங்கள்..."

அதற்குமேல் பலராமனே அவள் உள்ளத்தைப் புரிந்துகொண்டான். அவளுக்குப் பதில் கூற அவனல் முடியவில்லை.

அன்று அவள் உள்ளத்தில் பொங்கி யெழுந்த ஆத்திரம் அவள் உடலையும் மனத்தையும் தீயாகப் பொசுக்கியது. அப்புறம் தான் அவள் பிறந்த வீடு சென்ருள். அங்கு அவளுக்கு இருந்த ஒரே ஆதரவு அவளுடைய அண்ணன் ஒருவன்தான்.

கணவனுக்குத் தன் கசப்பைக் காட்டிக் கடிதங்களாக எழுதிக் குவித்தாள். அந்த வீட்டில் அவள் மனைவியாக இருக்க விரும் பினளேயன்றி, இரக்கம் காண்பிக்கப்பட வேண்டிய பெண்ணுக இருக்க விரும்ப வில்லை. முரண்பட்ட இந்த இரண்டு உள் ளங்களும் பெரும் போராட்டத்தை மாதக் கணக்கில் நிகழ்த்திக் கொண்டே இருந் தன. முடிவில் பாலா கணவனை விட்டுப் பிரிந்து, தன் வாழ்க்கையை வகுத்துக் கொள்ள ரயிலேறி விட்டாள்.

பலராமனுக்கு முதலில் இவையெல்லாம் அதிர்ச்சியாக இருந்தன. அவரவர் கட்சி யிலே நியாயம் இருந்தது. இடையிலே இருக்கும் ஜக்குவை முதலில் யாருமே கவனிக்கவில்லை. பிள்ளை இருவருக்கும் பொது தானே!

"ஜக்குவை நீ அழைத்துப் போய் என்ன செய்வாய்? அவன் வளர வளர உன்னல் அவனைக் காப்பாற்ற முடியுமா?" என்று கேட்டாள் மாமியார். அவள் கேள்வி நியா யமானது.

"முடியுமோ, முடியாதோ! அவன் என் குழந்தை......" பாலாவின் மூர்க்கத்தனம் ஓங்கியிருந்தது.

"உனக்காவது ஜக்கு இருக்கிருன், ஆறு தலுக்கு. அவன் பட்ட மரமாக நின்று விட்டானே..."

கிழவியின் கண்களில் கண்ணீர் குள மாகத் தேங்கி நின்றது.

தாயின் கண்ணீரைக் கண்ட பலராமன் வேதனை பொங்க ஜக்குவை அணைத்துக் கொண்டான்.

பாலா குழந்தையின் கைகளை 'வெடுக்' கென்று பற்றி இழுத்தாள்...

⁂ ⁂ ⁂

விடியற்காலம் வந்துவிட்டது. அது எழுப்பும் இன்ப போதையில் எல்லோருமே மயங்கிக் கிடந்தனர். பாலா முணுமுணுத்தாள்: 'ஆம், அவர் பட்ட மரமாகத்தான் நின்று விட்டார். ஜக்கு வளர்ந்த பிறகு அவரிடம் ஒட்டவா போகிறான்? பாசமென்பது ஒருவரை யொருவர் சார்ந்து நின்று உண்டாவது தானே!'

பாலா எப்பொழுது தூங்கினாளோ... விழித்துப் பார்க்கும்போது ஜக்கு ஆசிரம விதிகளின்படி குளித்துவிட்டு, வேறு உடை அணிந்து அவள் பக்கத்தில் வந்து உட்கார்ந்திருந்தான்.

"ஏண்டா, எப்பொழுது எழுந்தாய் நீ? என்னை எழுப்பக் கூடாதோ?"

அன்புடன் மகனின் கன்னத்தை வருடினாள் பாலா. குழந்தை முகத்தைச் சுணக்கிக்கொண்டு பின்னால் நகர்ந்தான்.

"அம்மா, உன் கை ஏனம்மா இப்படி 'சுள்'ளென்று குத்துகிறது? எங்க டீச்சரின் கை மெத்து மெத்தென்று.."

அவன் வார்த்தைகளை முடிக்கவில்லை.

பாலா தன்னிடமிருக்கும் குறையை உணராத நிலையில் நேற்றுவரை இருந்தாள்.. இன்று அந்த உண்மை தெளிந்த வானம் போல் அவள் உள்ளத்தில் பளிச்சிட்டது.

கணவனிடம் அன்பை எதிர்பார்த்து உரிமைப் போராட்டம் நடத்திய அவள், அவனுடைய நிலையைப் பற்றி யோசிக்கவேயில்லை. அவள் எதிரே பட்ட மரம் ஒன்று 'ஹோ' வென்று நின்று கொண்டிருந்தது..

'எனக்கு ஜக்கு இருக்கிறான் ஆறுதலுக்கு; அவருக்கு...?' பாலா விருட்டென்று எழுந்தாள்.

அன்று முதன் முதலாக—கடைசியாகவும்...கணவனுக்கு ஒரு கடிதம் எழுதினாள்.

"தாங்கள் இனிப் பட்டமரமாக இருக்க வேண்டாம். தங்களுக்குப் பிடித்தமான ஒரு மனைவியைத் தேடிக் கொள்ளுங்கள்; எனக்கென்று தாங்கள் அளித்த தளிர் ஒன்று — அதுதான் ஜக்கு—. இன்று தங்கள் பட்டுப்போன வாழ்க்கையை எனக்கு நினைவு படுத்திவிட்டான்......"

ஆசிரமத்தின் பிரார்த்தனைக் கூடத்தில் காலை மணி ஒலித்தது. ஜக்குவின் தளிர் விரல்களைப் பற்றிக்கொண்டு நடந்தாள் பாலா. ⁂

# இழந்த வாழ்க்கை



ஸரோஜா ராமமூர்த்தி

வானம் மப்பும் மந்தாரமுமாக இருந்தது. சிலுசிலுவென்று ஊதைக் காற்று வேறு அடித்தது. மத்தியானம் பன்னிரண்டு மணி வேளை என்று அப்பொழுது யாரும் சொல்ல முடியாது. வழக்கத்துக்கு விரோதமாக அன்று விடிந்ததிலிருந்து சூரிய ஸ்பரிசத்தையே பூமாதேவி அறியாமல் இருந்தாள். நீண்ட நாட்களுக்குப் பிறகு—அதாவது, இரண்டு வருஷங்களுக்குப் பிறகு—நான் என் பிறந்த வீட்டுக்கு வந்திருந்தேன். கல்கத்தாவிலிருந்து அடிக்கடி பிறந்த வீட்டுக்கு வருவதென்பது லேசான விஷயமல்ல. நகரத்து வாழ்க்கை அலுத்துச் சலித்துப் போய் இரண்டு மாதங்கள் நிம்மதியாக இருந்து விட்டு வரவேண்டும் என்ற பேராவலால் தூண்டப்பட்டு ஒருவாறு பூந்திடல் வந்து சேர்ந்தேன். நான் பிறந்த ஊரும் அது தான். என் குழந்தைப் பருவத்து நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றும் அந்த ஊர் மண்ணில் தான் நிகழ்ந்தன. கல்யாணமும் அங்குதான் நடந்தது. அழகிய ஏரிக் கரையும், அதன் கரையிலுள்ள வெற்றிலைத் தோட்டங்களும், பிஞ்சுக் கத்தரிக்காயும், கள்ளமற்ற என் பால்யத் தோழி லக்ஷ்மியும் கல்கத்தாவில் கிடைப்பார்களா, என்ன?

நீண்ட ரயில் பிரயாணத்தால் அலுத்துப் போய்க் கண்களை மூடிக் கொண்டே படுத்திருந்தேன். தூக்கமுமில்லை, விழிப்புமில்லை; ஒரு வித மயக்க நிலை அது. "ஜகதா!" என்று எனக்குப் பழக்கமான குரல் ஒன்று என்னை அழைத்தது. எந்தப் பெண்ணுடன் புழுதியில் புரண்டு விளையாடி, வாய்க்காலில் அலைந்து விஷமம் செய்தேனோ, அந்த லக்ஷ்மி என் எதிரில் நின்று கொண்டிருந்தாள். எங்கள் இருவருடைய உள்ளங்களும் ஒன்றுபட்டுப் போயிருந்தன. ஆனால், லக்ஷ்மி குடியானவப் பெண்ணாகப் பிறந்திருந்த தோஷத்தால் என்னுடன் பால்யத்தில் ஒன்றாகச் சாப்பிடவோ தூங்கவோ முடியாமல் ஒன்றுபட்ட உள்ளங்கள் வருந்தின.

பரட்டைத் தலையுடனும், அழுக்கேறிய உடையுடனும், சோகம் நிரம்பிய முகத்துடனும் அவள் என் எதிரில் நின்று கொண்டிருந்த காட்சி என் மனதை உறுத்திற்று.

"வா, வா, லக்ஷ்மி! உன்னை வீட்டில் வந்து பார்க்கவேண்டுமென்று இருந்தேன். ஒரு வேளை புருஷன் வீட்டில் இருக்கிறாயோ என்னவோ என்று பேசாமல் இருந்து விட்டேன்" என்றேன்.

ஏற்கெனவே சோகத் திரைக்குள் மறைந்திருந்த அந்த முகம் மேலும் வாட்டமடைந்தது.

"புருஷன் வீட்டிலே இல்லை, அம்மா! இங்கேதான் இருக்கேன்" என்று அவள் கூறும்போது குரல் தழதழத்துக் கண்ணில் நீர் ததும்பிற்று.

அதற்குள் உள்ளேயிருந்து என் தாயார் வந்தாள். "வந்து விட்டாயா, லக்ஷ்மி? ஜகதா வந்திருக்கிறாளே, சொல்லி அனுப்பலாம் என்று இருந்தேன். நீயே வந்து விட்டாயே?" என்றாள்.

"களத்து மேட்டுப் பக்கம் மாட்டு வண்டியிலே பார்த்தாராக அண்ணன் சொல்லிச்சு, அம்மா! வேலையைப் போட்டுட்டு ஓடியாந்தேன், ஜகதாவைப் பார்க்க!"

"என்னவோ பாவம்! அவளைப் போல நீயும் குடியும், குடித்தனமுமா இருந்தா எவ்வளவோ நன்றாயிருக்கும். அவன்தான் உன்னை வருஷக் கணக்கிலே தள்ளிவைத்து விட்டு இருக்கானே!" என்று அனுதாபப் பட்டாள் என் தாயார்.

லக்ஷ்மி மௌனமாகக் கண்ணீர் வடித்து நின்றாள். என் பால்யத் தோழியின் துயரம் கண்டு என் மனம் வருந்தியது. அம்மா ஏதாவது சொல்லுவாளோ என்பதையும் மறந்து அன்புடன் அவள் கரங்களைப் பற்றினேன்.

"வா, லக்ஷ்மி! நாம் விளையாடிய இடங்களையெல்லாம் பார்த்துவிட்டு வரலாம்" என்று அவளை அழைத்துக் கொண்டு ஏரிக் கரைக்குப் புறப்பட்டேன்.

லக்ஷ்மி வழியில் என்னுடன் அதிகமாகப் பேசவில்லை. அவள் உதிர்த்த கண்ணீரைப் போல் வானம் அவ்வப்போது சடசடவென்று தூறிக் கொண்டிருந்தது. முதலில் கூறியபடி ஊதைக் காற்றும் அடித்துக் கொண்டிருந்தது. சுற்றியிருந்த வயல் வெளிகளில் உழவர்கள் நாற்று கட்டிக் கொண்டிருந்தார்கள். உழத்திகள் சளசளவென்று குடும்ப விஷயங்களைப் பற்றிப்

பேசிக் கொண்டே சரசரவென்று காற்று நடுவதில் ஈடுபட்டிருந்தார்கள். சுற்றிலுமிருந்த கிராமிய நிகழ்ச்சிகளில் ஈடுபட்டிருந்த என் மனதை லக்ஷ்மியின் விம்மல் அவள்பால் திருப்பியது.

"என்ன, லக்ஷ்மி? ஏன் இப்படி அழுகிறாய்?" என்று அவள் கரங்களைப் பற்றிக் கொண்டு கேட்டேன். அவள் சோகம் நிரம்பிய கதை இதுதான்:

## 2

லக்ஷ்மிக்குக் கல்யாணமாகி ஆறு ஏழு வருஷங்கள் ஆகிவிட்டன. எனக்கு விவாகம் நடப்பதற்கு முன்பே அவளுக்கு நடந்துவிட்டது. லக்ஷ்மியின் கணவன் நல்ல அழகன். நிலம், நீச்சு, தோப்பு எல்லாம் இருந்தன. வருஷம் பூராவும் வயலில் பாடுபட்டுத்தான் சாப்பிட வேண்டும். தாய் தந்தையருக்கு ஒரே பிள்ளை; செல்லமாக வளர்ந்தவன். வயலிலே கூட அவன் வேலை செய்யப் போக மாட்டான். அவனுடைய தகப்பன்தான் எல்லா வேலைகளையும் ஏற்று நடத்துகிறவன். பிள்ளையின் சுகவாழ்வு ஒன்றிலேயே தாய் தந்தையருக்கு நாட்டம். பிள்ளைக்குக் கல்யாணம் பண்ண வேண்டும், குடியும் குடித்தனமும் பெருக வேண்டும் என்பதே அவர்களுடைய லட்சியம்.

லக்ஷ்மியின் கணவனை முத்து, அப்பா, அம்மாவின் வார்த்தையைத் தட்டாதவன். அவர்கள் கிழித்த கோட்டைத் தாண்ட அவனுக்குத் தைரியம் கிடையாது. ஆயிரம் சகுனம் பார்த்து, ஜோஸியம் பார்த்து லக்ஷ்மிக்கும் முத்துவுக்கும் கல்யாணம் நடந்தது. மருமகள் வந்ததில் லக்ஷ்மியின் மாமியார் சொர்ணத்துக்குக் கட்டுக்கடங்காத பெருமை.

"என்னடி சொர்ணம், மருமகள் வந்து விட்டாற்போலிருக்கிறதே!" என்று என் தாயார் அவளைக் கல்யாணம் விசாரித்தாள்.

"வந்துட்டா, அம்மா! எங்க குடி பெருகி வாழ வேண்டும், அம்மா!" என்று ஆவலுடன் அவள் பதில் கூறியது இன்று எனக்கு நினைவு வருகிறது.

லக்ஷ்மி நான் பிறந்த வீட்டில் இருக்கும்போதே புக்ககம் சென்றுவிட்டாள். அவள் ஊருக்குப் போகு முன்பு என்னிடம் வந்து, "ஜகதா! உனக்குக் கல்யாணமாகி நீயும் உன் புருஷனுடன் சந்தோஷமாக ஊருக்குப் போகிறதைப் பார்க்க எனக்கு ஆசையாயிருக்கு. சீக்கிரம் கல்யாணம் பண்ணிக் கொள், ஜகதா! படிச்சதெல்லாம் போதும்" என்றாள்.

"கூடிய சீக்கிரமே அவளுக்கும் கல்யாணம் பண்ணி விடுகிறேனடி, லக்ஷ்மி! அப்போது உனக்கும் சொல்லி அனுப்புகிறேன். நீயும் வா!" என்று என் தாயார் அவளிடம் கூறினாள்.

அன்று மகிழ்ச்சியுடன் என்னிடம் விடை பெற்ற லக்ஷ்மி இன்று கணவனால் தள்ளப்பட்டுக் கண்ணீருடன் நிற்கிறாள் என்றால் என் மனம் வேதனைப் படாமல் இருக்குமா? காரணம் இதுதான்—லக்ஷ்மி மாமியார் வீட்டுக்குச் சென்று ஏழு வருஷங்கள் ஆகியும் அவளுக்குக் குழந்தை பிறக்கவில்லை. வம்சம் பெருக வேண்டும் என்று ஆசைப்பட்ட சொர்ணத்துக்கு இது சங்கடமாக இருந்தது. முதலில் மருமகளுக்கு ஏதோ காற்று சேஷ்டை என்று மந்திரமும் மாந்திரீகமும் செய்தாள். பிறகு நாட்டு மருந்து வாங்கிக் கொடுத்தாள். குல தெய்வத்துக்குப் பூஜை போட்டாள். ஏழுமலையானை வேண்டிக் கொண்டாள். பிறகு பட்டணம் அழைத்துப் போய் ஆஸ்பத்திரியில் இங்கிலீஷ் வைத்தியமும் செய்தாள். ஆனால், அவளுக்குப் பேரனோ, பேத்தியோ பிறக்கிற வழியாக இல்லை. இதெல்லாம் நான்கு வருஷங்கள் நடந்தன. என் கல்யாணத்தின் போதே கசமசவென்று சிலர் பேசிக் கொண்டார்கள். "சொர்ணத்துக்கு மருமகளைக் கண்டால்



ஆகவில்லையாம்; கரித்துக் கொட்டுகிருளாம்!" என்று அம்மா என்னிடம் சொன்ஞள். லக்ஷ்மி என் கல்யாணத்துக்கு வரவில்லை. "ஆமாம், பிள்ளையில்லாதவளுக்குக் கல்யாணமும் கார்த்திகையும்தான் குறைச்சல்!" என்று சொல்லிவிட்டுச் சொர்ணம் என் கல்யாணத்துக்கு வந்திருந்தாள். "லக்ஷ்மியை ஏன் அழைத்து வரவில்லை?" என்று அவளிடம் கேட்டதற்கு, "அது எதுக்கம்மா இங்கே?" என்று அசிரத்தையாகப் பதிலளித்தாள்.

நானும் கல்கத்தாவுக்கு லக்ஷ்மியைப் பாராமலேயே சென்றுவிட்டேன்.

## 3

இவ்விதம் சிந்தனையில் மூழ்கியவர்களாக இருவரும் ஏரிக்கரையை அடைந்து அங்கிருந்த ஓர் அரச மரத்தடியில் உட்கார்ந்தோம். சிறிது நேரம் இருவரும் பேசவில்லை. லக்ஷ்மி வெறிச் சென்ற பார்வையுடன் ஏரியைப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

"லக்ஷ்மி!" என்று நான் மெதுவாக அவளைத் தொட்டு அழைத்தேன்.

"ஏன் ஜகதா?" என்ருள் அவள்.

"நீ பிறந்த வீட்டுக்கு வந்து எவ்வளவு நாளாச்சு?"

"இரண்டு வருஷம்."

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. "மூத்து வரவேயில்லையா? உன்னை வந்து கூப்பிடவில்லையா?" என்று கேட்டேன்.

## பெயர் என்ன?



"ஐயரே! உமதுடைய முழுப் பெயர் என்ன? ராமய்யரா? அல்லது கிருஷ்ணய்யரா?"

"இரண்டுமில்லை, ஸார்! என் பெயர் ஸப்ளையர்!"

"இல்லை, ஜகதா! அவருக்கு என்னைப் பற்றி என்ன அக்கறை? அவர்தான் இன்னும் எட்டு நாளில் வேறே கல்யாணம் பண்ணிக்கொள்ளப் போகிருரே!" என்று கூறிவிட்டு அவள் விசித்து விசித்து அழுதாள்.

எனக்குக் கோபமும், ஆத்திரமும் கலந்து வந்தன. "சரி, அவன் கல்யாணம் பண்ணிக்கொண்டு போகட்டும்; நீ என்னோடு ஊருக்கு வந்துவிடு!" என்றேன்.

லக்ஷ்மி பரிதாபமாகச் சிரித்து விட்டு, "அதெல்லாம் எதற்கு ஜகதா? இந்த அதிர்ஷ்டக்கட்டை உன் வீட்டில் காலடி எடுத்து வைக்கக்கூடாது" என்ருள்.

அவள் புருஷன் அவளை அடித்து விரட்டியதற்குக் காரணம் என்ன என்று கேட்டேன் நான்.

"ஊரிலே இருந்து என் நாத்தனர் வருவதற்கு இருந்தாள். அவள் ஐந்தாறு மாதம் கர்ப்பம். அவள் என் முகத்திலே முழிக்கக் கூடாதாம். நான் அங்கே இருந்தால் அவளுக்குப் பிறக்கும் குழந்தைகூடத் தக்காதாம். மாமியார் ஜாடை மாடையாகத் தினம் இதைப் பற்றிச் சொல்லிக்கொண்டே இருந்தாள். 'உன் பிறந்த வீட்டுக்குப் போ!' என்று கழுத்தைப் பிடித்துத் தள்ளாத குறையாகச் சொல்லி வந்தாள். எனக்கும் ஆத்திரமாக இருந்தது. 'போய் விடுகிறேன், மாமி!' என்று ஒரு நாள் சொல்லிவிட்டேன். வயலுக்குச் சென்றிருந்த என் புருஷன் வந்ததும், 'உன் பெண்டாட்டி பிறந்த வீட்டுக்குப் போகிருளாம், அப்பா! இந்த வீட்டிலே இருந்து வாழ அவளுக்கு இஷ்டமில்லையாம்!' என்று மாமியார் கூறினுள். 'போகட்டுமே, கழுதை! இப்பவே போகச் சொல்!' என்று காகரவென்று என் கையைப் பிடித்து இழுத்து வெளியே தள்ளிக் கதவைச் சாத்திவிட்டார், அவர்!"

லக்ஷ்மி கூறிய வரலாறு இதுதான். நான் சிந்தனையில் மூழ்கினேன். பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளில் 'தள்ளி வைக்கும் கொடுமை'யை நினைத்து நினைத்து என் மனம் புழுங்கியது.

"லக்ஷ்மி! இந்தக் கல்யாணத்தை நடக்கவிடாதே! கல்யாணத்தன்று பந்தலில் போய் நின்று நாலு பேரிடம் முறையிடு!" என்று அவளிடம் கூறினேன்.

"ஜகதா! நீ படிச்ச பெண். எனக்கு இதெல்லாம் புரியவில்லை. நானே மலடு. அவருக்கு என்னுலே சுகம் ஒண்ணும் கிடையாது, பார்!" என்ருள் லக்ஷ்மி.

அவளுடைய பெருந்தன்மை எனக்கு அளவில்லாத வியப்பை அளித்தது.

# யாருடைய சித்தம்?

ஸரோஜா ராமமூர்த்தி

கொல்லையில் பாத்திரம் தேய்த்துக்கொண்டிருந்த கன்னியம்மாளின் முகம் வாடிக் கிடந்தது. வாய்நிறைய வெற்றிலையையும் பாக்கையும் போட்டுக் குதப்பிக்கொண்டு முகத்தில் சிரிப்புத் தவழ அவள் வேலைக்கு வந்துவிட்டாலே எங்கள் வீட்டில் அமைதி நிலவும். அன்றும் வழக்கத்தைவிடச் சற்று முன்பாகவே அவள் வேலைக்கு வந்துவிட்டாள். நிலம் தெளியவில்லை. அப்பொழுதுதான் ஒன்றிரண்டு காக்கைகள் உதயத்தின் வரவை அறிந்து கத்த ஆரம்பித்தன. கிணற்றங் கரையில் ஜலம் இழுக்கும் சத்தமும், வாளியின் லொடலொடச் சத்தமும் என்னைத் தூக்கத்திலிருந்து எழுப்பிவிட்டன. ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்துக் கேட்டேன்: "என்ன கன்னியம்மா, சீக்கிரமே வந்துவிட்டாய்?" என்று.

"ஆமாங்க" என்று சொல்லிவிட்டு அவள் மௌனம் சாதித்தாள். நானும் அசிரத்தையாக மறுபடியும் தூக்கத்தில் ஆழ்ந்தேன். மறுபடி நான் விழித்து எழுந்தபோது நன்றாக விடிந்துவிட்டது. கொல்லையில் கன்னியம்மாள் நான் முன்பு கூறியதுபோல் முக வாட்டத்துடன் பாத்திரம் தேய்த்துக்கொண்டிருந்தாள்.

"என்ன கன்னியம்மா, காலையிலேயே வந்துவிட்டாய்? முகமும் வாடி இருக்கிறதே" என்று மறுபடி அவளைத் தூண்டிக் கேட்டேன்.

கன்னியம்மாளின் கண்களில் கண்ணீர் திரண்டது. "இன்னிக்கிச் சீக்கிரம் போவணும் அம்மா. என் தங்கச்சி பெண் விசாலம் படுத்துக் கிடக்குது. தண்ணி ஊத்தக்கூட ஆள் இல்லை அம்மா!"

"உன் தங்கை பெண்ணா? போன மாசம் நீ படுத்துக் கிடக்கும்போது இங்கே வேலை செயய வந்திருந்தாளே, அவள் தானே?" என்று கேட்டேன் நான்.

"ஆமாம் அம்மா, அந்தப் பாவிப் பெண்தான் அம்மா" என்றாள் கன்னியம்மாள்.

அந்தப் 'பாவிப் பெண்'ணைப்பற்றி நான் அப்பொழுதுதான் சாவகாசமாக நினைத்தேன். கூனி வளைந்த முதுகும், முதுகுடன் ஒட்டிய வயிறும், மெலிந்த கைகால்களுமாக அந்தப் பரிதாப உருவம் என் மனத்தைக் கலங்க அடித்தது. அவள் போன மாதம் ஒரு நாள் சோகமே உருவாக எங்கள் வீட்டுக் கொல்லையில் வந்து நின்றுகொண்டிருந்தாள். யாரோ பிச்சைக்காரி என்றே நான் நினைத்திருந்தேன். ஆனால், அவள் என்னிடம் தான் வேலை செய்ய வந்திருப்பதாக அறிவித்தபோது, நான் ஆச்சரியத்தில் ஆழ்ந்து போனேன்.

"எங்க பெரியம்மா அனுப்பிச்சுதுங்க அம்மா; அதுக்கு உடம்பு நல்லா இல்லீங்க" என்றாள் விசாலம்.

கூனிக் குறுகிக்கொண்டு வந்து நிற்கும் அவளால் இவ்வளவு வேலைகளையும் செய்ய முடியுமா என்ற வியப்பு ஒரு புறம் ஏற்பட்டது எனக்கு. ஆனால் உழைப்பதற்கென்றே பிறந்தவர்களுக்கு ஆண்டவன் அதிகமாகச் சக்தி அளித்திருக்கிறானோ என்னவோ? அவர்கள் வறுமையின் கொடுமைதான் அவர்களை அப்படி உழைக்கச் சொல்லுகிறதோ எனக்குத் தெரியவில்லை. விசாலம் கன்னியம்மாளைவிடச் சடுதியில் வேலைகளை முடித்துவிட்டாள்.

அன்றைத் தினத்துக்கு அப்புறம் நான் அவளை அடியோடு மறந்து போனேன். கன்னியம்மாள் அவளைப்பற்றித் தெரிவித்தபிறகுதான் நினைவு வந்தது.

அன்று மத்தியான்னம் கன்னியம்மாள் வேலைக்கு வந்தபோது இரண்டு குழந்

தைகளை அழைத்து வந்தாள். பிறக்கும் இடம் வித்தியாசப்பட்டதால் அவைகள் குழந்தைகளாக இல்லை. பரட்டைத் தலையும், மண் பூத்த உடம்பும், அழுக்கு நெளியும் ஆடையுமாக அந்தக் குழந்தைகள் அழகை, ஆரோக்கியத்தை இழந்து பரிதவித்தார்கள்.

"கன்னியம்மா, குழந்தைகள் யாருடையவை?" என்று கேட்டேன்.

"அந்தப் பாவிப் பொண்ணுதுங்க. அவ போற போக்கிலே இதுகளை வேறே தலையிலே கட்டிவிடுவா போல இருக்குது" என்றாள் அவள் பரிதாபத்துடன்.

"விசாலத்துக்குக் கல்யாணமாகிக் குழந்தைகள் வேறு உண்டா? புருஷன் எங்கே இருக்கிறான், கன்னியம்மா?"

"எங்கே போவான் அந்தப் பாவி? இங்கேதான், அவ கிட்டதான் இருக்கான், ஒரு காசுக்கு உபயோகமில்லாம!"

எனக்கு அதற்குமேல் அந்த வரலாற்றைக் கேட்க ஆவல் எழவில்லை. பாரதநாட்டில் லக்ஷக்கணக்கான குடும்பங்களின் கதை இதுவாக இருக்கும்போது ஒரு குடும்பத்தின் கதையைக் கேட்டுவிட்டால் போதுமா?

சாயங்காலம் காரியாலயத்திலிருந்து கணவர் வந்தார். வழக்கத்தைப் போல் அவர் முகம் மலர்ந்திருக்கவில்லை. ஒரு வேளை காரியாலயத்திலிருந்து வேலை அதிகமாக இருக்கலாம் என்று நானும் அதிகம் பேசாமல் இருந்துவிட்டேன். காபி சாப்பிட்டானதும், "என் சிநேகிதன் சுந்தரத்தை உனக்குத் தெரியுமோல்லியோ?" என்று பேச்சை அவராகவே ஆரம்பித்தார்.

"தெரியும் தெரியும். போன வருஷத்தில்தானே அவருக்குக் கல்யாணம் ஆயிற்று?" என்று கேட்டேன்.

"ஆமாம், அவன் மனைவி நிர்மலா படுத்த படுக்கையாகக் கிடக்கிறாளாம். பிரசவத்துக்கு ஊருக்குப் போய் இருந்துவிட்டு வந்தவள், குழந்தைக்கு மூன்று மாதம் ஆகின்றன. குழந்தையைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கிறது. குழந்தை தாய்ப்பாலுக்காக ஏங்கித் தவிக்கிறது" என்றார் என் கணவர்.

ஒரு கணம் என் மனம் சிந்தனையில் ஆழ்ந்தது.

விசாலத்தின் மரணப் படுக்கை. அவளுடைய இரண்டு குழந்தைகள். அன்பற்ற கணவன். எல்லாம் என் மனக்கண் முன்பு சோக உருவத்துடன் காட்சி அளித்தன. என் கணவர் மேலும் பேசிக்கொண்டே போனார்: "நிர்மலாவைத்தான் கல்யாணம் பண்ணிக் கொள்வேன் என்று சுந்தரம் ஒரே பிடிவாதமாக இருந்தான். தாயாரைக்கூட விரோதம் செய்துகொண்டான். ஜாதகப்




கொல்லையில் பாத்திரம் தேய்த்துக் கொண்டிருந்த கன்னியம்மாவின் முகம் வாடிக்கிடந்தது...

பொருத்தமே சரியில்லையாம். அந்தப் பெண்ணுக்கு ஆயுஸ் நன்றாக இல்லை என்று ஜோஸ்யர்கள் சொன்னார்களாம். இதையெல்லாம் நினைத்து இப்போது வருத்தப்படுகிறான்'' என்றார் அவர்.

''வியாதி வந்தால் என்ன? மனுஷ்யர்கள் பிழைக்கிறதில்லையா? போதாத காலத்தில்தான் கெட்டதை எல்லாம் எண்ணச் சொல்லும்'' என்றேன் நான்.

''அவன் வரைக்கும் நம்பிக்கையைக் காணோம். ஆயிரக்கணக்கில் பணத்தை வாரித்தான் இறைக்கிறான்.''

ஆயிரக்கணக்கில் வாரி இறைக்கச் சுந்தரத்துக்கு ஏராளமான செல்வம் இருக்கிறது. ஆனால், நிர்மலாவின் வயசேயுள்ள விசாலம் மரணவஸ்தையிலும் கவனிப்பாரற்று, நாதியற்றுக் கிடக்கிறாள்.

''நாளைக்கு நீ என்னோடு வருகிறாயா? நிர்மலாவைப் போய்ப் பார்த்துவிட்டு வரலாம்'' என்று கூப்பிட்டார் என் கணவர்.

''உம்'' என்று தலையை ஆட்டினேன்.

## 2

இரவெல்லாம் முடிவற்ற எண்ணங்களும் சிந்தனைத் தொடர்களும் என்னைப் பைத்தியமாக அடித்தன. மாறி மாறி விசாலம், நிர்மலா இவர்கள் இருவரையும் ஒப்பிட்டுப் பார்ப்பதிலேயே என் மனம் ஈடுபட்டிருந்தது. 'சீ! இதென்ன கவலை? மண்ணிலே பிறந்தவர்கள் மண்ணிலே மறைய வேண்டியதுதானே? நாமும் ஒரு நாள்......' என்று எண்ணியபோது என் உடல் பயத்தால் ஒரு தரம் குலுங்கியது.

''என்ன நீ தூங்கவில்லையா?'' என்று கேட்டார் என் கணவர்.

''என்னவோ தூக்கம் வரவில்லை'' என்று சொல்லிக்கொண்டே திரும்பிப் படுத்துக்கொண்டேன்.

''உனக்கு எப்பொழுதும் யோசனைதான். தூக்கத்தைக் கெடுத்துக் கொண்டு என்ன அசட்டுத்தனம் இது?'' என்று அவர் கடிந்துகொண்டார்.

என் எண்ணங்களுக்கு ஒரு தடை ஏற்பட்டதுபோல் கன்னியம்மா, ''அம்மா!'' என்று அழைத்துக்கொண்டே வந்தாள்.

பரக்கப் பரக்க எழுந்து கொல்லையில் சென்றேன். ''எப்படி இருக்கிறாள் விசாலம்?'' என்று கேட்டேன் அவளை.

''இருக்கிறாள், அம்மா. சாக மனசில்லை அவளுக்கு. இந்த அழகான புருசனிடமும், வீடு வாசலிடமும் அவளுக்கு



இருக்கிற ஆசையிலே உசிர் இழுத்துக் கிட்டுக் கிடக்கு அம்மா.''

''சாக யாருக்குத்தான் மனசு வருமடி? உனக்கு ஐம்பது வய்சாகிறதே. உனக்கும் பூமியில் இருக்கத்தானே ஆசை?'' என்றேன்.

''என்னைப் போலவா அம்மா அது? புருஷன் சொல்றான்: பாவி முண்டை! செத்தாலும் நான் சொகப்பட்டுப் போவேனு? எதுக்கு அம்மா அவ இருக்கணும்? இவன் கிட்டே அடியும் உதையும் வாங்க?'' என்று கேட்டாள் கன்னியம்மா.

சுந்தரம் தன் மனைவி பிழைக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறான். விசாலத்தின் கணவன் மனைவி இறக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறான். கடவுளின் ஆசை எப்படி இருக்குமோ? என் கண் முன் இரண்டு பிரச்னைகள். அதன் முடிவை என்னால் எப்படித் தீர்மானிக்க முடியும்?

தினத்தைவிட அன்றும் அவசரமாக வேலைகளைச் செய்து முடித்தாள் கன்னியம்மா.

''அம்மா, விசாலம் ஒன்னை ஒண்ணு கேக்கச் சொன்னா?'' என்று தயங்கினாள்.

''என்ன அது?'' என்றேன் நான்.

''அவ குழந்தைங்க குளிர்லே விறைச்சுக் கிடக்குதுங்க. ரெண்டு சொக்கா கேக்கச் சொன்னா. நான் போயி கேக்கமாட்டேன்னேன். 'நீ கேக்காட்டிப் போ பெரியம்மா. நான் பொழச்சி

எழுந்தா அம்மாளைப் போய் நானே கேட்டுக்கிட்றேன்'னு எம்மேலே கோவிச் சுக்கிச்சு'' என்றாள் கன்னியம்மாள்.

''ஆகட்டும், பார்த்துத் தருகிறேன்'' என்றேன் நான். அப்புறம் அதைப்பற்றி மறந்துவிட்டேன். முதல் நாள் என் கணவர் சொன்னபடி சுந்தரத்தின் வீட் டுக்குக் கிளம்பினோம்.

என்னைக் கண்டவுடன் நிர்மலா விசித்து விசித்து அழுதாள். ''கட வுளுக்கு எங்கள் ஒற்றுமையிலும் அன் பிலும் பொறாமை ஏற்பட்டுவிட்டது அம்மா. என் குழந்தையை யார் கவ னிக்கப் போகிறார்கள்?'' என்று வருந் தினாள் அவள். சுந்தரம் துக்கம் தாளாத வனாக வெளியே சென்று உட்கார்ந்து விட்டான். குழந்தை தொட்டிலில் தூங்கிக்கொண்டிருந்தது. ஞானிகள் முகத்தில் குடிகொண்டிருக்கும் நிச் சலனம் அதன் முகத்திலும் காணப் பட்டது. கவலையும் துன்பமும் போகப் போகத்தானே அதற்கு விளங்கப் போகின்றன?

நிர்மலா சிறிது நேரம் மூச்சு விடு வதற்குக்கூடக் கஷ்டப்பட்டாள். பிறகு திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டவள் போல், ''அவர் எங்கே?'' என்று கேட்டாள்.

சுந்தரம் அவள் பக்கத்தில் வந்து உட்கார்ந்துகொண்டான். அன்புடன் அவள் கரங்களை எடுத்து அவன் கையில் வைத்துக்கொண்டான. இருவரும் மௌனமாக ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

''என்ன பார்க்கிறீர்கள்?'' என்று புன்னகையுடன் கேட்டாள் நிர்மலா.

''ஒன்றும் இல்லை. சற்றுப் பேசாமல் தூங்கேன'' என்றான் சுந்தரம்.

''இனிமேல் எனக்குத் தூக்கந் தானே?'' என்று ஒரு சோகச் சிரிப்புச் சிரித்தாள்.

''அசடு நீ'' என்றான் சுந்தரம். அவன் கண்களில் கண்ணீர் பெருகியது.

''பகவான் கிருபையால் உனக்கு ஒன்றும் ஏற்படாது'' என்று எதிலும் நம்பிக்கை இல்லாத சுந்தரம் அவளுக்குத் தைரியம் கூறினான்.

''நீங்கள்தான் அசடு! என் குழந்தை யைக் காப்பாற்றுங்கள்'' என்று திக்கித் திணறி வேண்டிக்கொண்டாள் நிர்மலா.

அதுவே அவள் கடைசி வேண்டு கோளாக முடிந்தது. அந்தச் சோகத் தைக் காணச் சகியாமல் நாங்கள் வந்து விட்டோம். அங்கே நிர்மலாவின் மரணத் தைப் பார்த்த பிறகு எனக்கு வரும் வழியிலெல்லாம் விசாலத்தின் நினை வாகவே இருந்தது. நாம் வீடு சேர் வதற்குள் அவளும் இறந்துபோயிருப் பாள் என்றே நினைத்தேன். வீட்டை அடைந்தபோது நன்றாக இருட்டி விட்டது. கன்னியம்மாள் வந்து வேலை களைச் செய்துவிட்டுச் சாவியைத் தோட் டக்காரனிடம் கொடுத்துவிட்டுப் போயி ருந்தாள். விசாலத்தைப்பற்றி நான் ஒன்றும் அறிய முடியவில்லை.

மறுநாள் வழக்கம்போல் கன்னியம்மாள் வேலைக்கு வந்தாள். முந்திய தினங்களில் இருந்த சோகம் அவள் முகத்தில் இல்லை. முகத்தில் தெம்பு குறைந்திருந்தது.

''அம்மா, அந்தப் பாவி பொழச்சுக் கிட்டா!'' என்றாள் அவள்.

''அப்படியா?'' என்று ஒரே ஆச்சரியப் பட்டேன் நான். கடவுளின் செயலை அறியும் திறமை நமக்கு இல்லை என்கிற எண்ணமும் எனக்குத் தோன்றியது. நிர்மலா பிழைத்து எழ வேண்டுமென்று ஆயிரம் பாடு பட்டான் சுந்தரம். அங்கே தோல்வி. விசாலம் சாகவேண்டும் என்று விரும்பினான் அவள் கணவன். இங்கே வெற்றி.

''எதுக்காக அம்மா இந்தப் பாவி பொழச்சா? அவனிடம் உதையும் அடியும் வாங்கவா?'' என்றாள் கன்னி யம்மாள்.

''இதெல்லாம் நம் இஷ்டப்படியா நடக்கும்?'' என்று அவளிடம் வேதாந்தம் பேசினேன்.

இதெல்லாம் நடந்து ஐந்தாறு தினங் களுக்கு அப்புறம் விசாலம் கூனிக் குறுகிக்கொண்டு எங்கள் வீட்டுக்கு வந்திருந்தாள்.

''அம்மா! கொழந்தேங்க குளிர் லே விறைக்குதுங்க. பழைய சொக்கா இருந்தா, பார்த்துக் குடுங்க'' என்று கேட்டாள் அவள்.

யந்திரம் போல் உள்ளே சென்று இரண்டு சொக்காய்களை அவளிடத்தில் கொடுத்தேன். அதை வாங்கிக்கொண்டு கும்பிட்டுவிட்டு அவள் சென்ற திக்கையே பார்த்துக்கொண்டு நான் சிந்தனையில் மூழ்கியிருந்தேன். ★

யின் உன்னத வேலைப்பாடும் கருத்தும் நம்மைக் கவர்ந்து கலைக்கு அடிமையாகச் செய்கின்றன. பற்பல நடனத் திருவுருவங்கள் உள்ளன. இவை நடனக்கலையின் நுட்பங்களைப் பசுமரத்தாணி போல் விளக்குகின்றன. மேலும் அக்காலப் பெண்மணிகளின் வீரத்திற்குப் போதிய சான்றுகள் உள்ளன. உதாரணமாக அவர்கள் போர்வேடத்தில் உடையணிந்து அணி அணியாகக் குதிரைமேல் செல்லுவது போன்ற சித்திரங்கள் உள்ளன. அம்பு எய்வது போன்றும் வாளேந்திய கரத்துடனும் சிலைகள் உள்ளன. பெண்கள் தம் கைகளில் சங்கீத வாத்தியங்களை ஏந்தி அவற்றை வாசிக்கும் காட்சிகளும் உள்ளன. எனவே அக்காலப் பெண்கள் இயற்கை வனப்பும் திடகாத்திரமும் பெற்று அழகுக் கலைகளை வளர்த்திருக்கின்றனர். தேவையாயின் போர்க்கோலம் பூண்டு பெண்ணின் வீரத்தையும் நிலைநாட்டி யிருக்கின்றனர்.

## என்ன வேண்டும்?

இவ்வளவு பெருமைவாய்ந்த சிற்பச் செல்வமாகிய பேலூரும் ஹளேபீடும் இன்னும் பலகோயில்களும் இன்று க்ஷீணதசை அடைந்திருக்கின்றன. பல சிற்பங்கள் பின்னமுற்றிருக்கின்றன. பல திருட்டுப்போயிருக்கின்றன. இவைகளைக் கேட்பார் அற்று விட்டுவிட்டால் ஒரு நாள் இவை மண்ணோடு மண்ணாவது திண்ணம். இக்கோவில்கள் மைசூருக்கு மட்டுமல்லாமல் இந்தியாவுக்கே ஒரு தனிப் பெருஞ் செல்வமாகும். வெளிநாட்டுக் கலைஞர் பலர் இதனைக் கண்டு வியந்திருக்கின்றனர். இக்கோயில்களை உடனே செப்பனிடுதல் வேண்டும். இவைகளில் கண்ட கலையின் புகழை நம் நாட்டிலும் பிறநாட்டிலும் பறை சாற்ற வேண்டும்.

நல்ல பாட்டைகளும் வசதிகளும் அமைத்து, வருவோருக்குத் தக்க நிலையில் பண்டைப் பெருமையை விளக்கவேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக அக்கலையை நமது சமுதாயம் கல்லில் மாத்திரம் விட்டுவைப்பது வருந்தத்தக்கது. பேலூர் நம் நாட்டின் வருங்காலச் சிற்பியர்களின் கலைக்கூடமாக வேண்டும். நடனக்கலையின் தனிக்கோவிலாக வேண்டும். அழகுக் கலைகளில் நாம் நம் மூதாதையர்களை மிஞ்சாவிடினும் அவர்கள் விட்டுச் சென்று இருக்கும் கலைச் செல்வங்களை நாம் நன்குணர்ந்து அவைகளுக்குப் புத்துயிர் கொடுத்தால் நமது வாழ்வு கலை மணம் கமழ்ந்து பரிணமிக்கும். ★





தந்தி மீட்டும் கை.
பெண்ணின் வீரம்.

# முதல் கடிதம்



## சரோஜா ராமமூர்த்தி

**எவ்வளவோ ஆசையோடு அவன் அதை எழுதினான். அது அவளுக்குக் கோபத்தை மூட்டியது. காரணத்தை அவன் அறிந்தபோது—?**

நாகஸ்வரக்காரனும் ஓய்ந்து போன மாதிரியிருந்தது, அவன் ஆடிவழிந்து கொண்டு மத்தியமாவதி ராகம் வாசித்து வந்த மாதிரியிலிருந்து! ஆயிற்று, தம்பதிகள் பாலிகையைக் குளத்தில் விட்டதும் அவனும் மங்களம் பாடிவிட்டுத் தாம்பூலமும் சம்மானமும் பெற்றுக்கொண்டு போவதற்குத் தயாராக இருந்தான். கல்யாண வீட்டில் எல்லோரும் ஓய்ந்து போயிருந்தார்கள்.

"எங்களால் முடியாது அம்மா. சின்னப் பெண்களாக நாலுபேர் கூடப் போயிட்டு வாருங்கள்" என்று கூறிவிட்டுப் பெரியவர்கள் கல்யாணத்தில் பட்ட சிரமத்துக்குப் பரிகாரம் தேட முயன்றுகொண்டிருந்தார்கள்.

ஜயலக்ஷ்மிக்கும் சீனிவாசனுக்கும்—மணமகனுக்கும் மணமகளுக்கும் மட்டும் அலுப்பு இல்லை. வாழ்க்கைப் பாதையில் முதல் முதல் பிரவேசிக்கும் உற்சாகம் அல்லவா அவர்களுக்கு? நாலைந்து சிறிய பெண்கள் பின்னால் வந்துகொண்டிருந்தார்கள். நாகஸ்வரக்காரன் மத்தியமாவதி ராகத்தை வாசித்துக்கொண்டு நடந்தான். சீனிவாசன் ஜயலக்ஷ்மியைக் கடைக்கண்ணால் கவனித்தான். இதற்குள் எத்தனையோ தடவைகள் அவள் கண்களை அவன் சந்திக்க முயன்றும் அவள் இவன் பக்கமே திரும்பாமல் உறுதியுடன் இருந்தது, அவள் பிடிவாதக்காரி என்பதைச் சீனிவாசனுக்குச் சொல்லாமலே விளக்கிவிட்டது. ஜயலக்ஷ்மியும் அவனை அதே சமயத்தில் கடைக்கண்ணால் பார்த்தாள்.

"என்ன, என்னைப் பார்க்கக்கூட மாட்டாயோ?" என்று மெதுவாக, ஆனால் ஸ்பஷ்டமாகக் கேட்டான் சீனு அவளைப் பார்த்து.

அவள் பொன்னிறக் கன்னங்கள் வெட்கத்தால் சிவந்தன. அழகாக ஆனால் சுருக்கமாக அவனைப் பார்த்துப் புன்முறுவல் செய்துவிட்டு முகத்தைத் திருப்பிக்கொண்டாள் ஜயம்.

"உன்னைத்தானே?" என்று மறுபடியும் கேட்டான் சீனு.

"பேசினால் போயிற்று. கூட எல்லோரும் வருகிறார்கள்." பெண்மையின் நிதானத்தை அந்தச் சொற்கள் விளக்கின.

இதற்குள் கோவில் வந்துவிட்டது. கூட வந்த பெண்கள் குளக்கரையில் பாலிகைக் கிண்ணங்களை வைத்துவிட்டுப் பிராகாரத்தைச் சுற்றப் போய்விட்டார்கள். பாலிகைச் செடிகளைக் குளத்தில் அலம்பிக்கொண்டே தலை குனிந்துகொண்டிருந்தாள் ஜயலக்ஷ்மி. அவளுடைய நிதானம் சீனுவுக்குப் பிடிக்கவில்லை.

"என்னவோ அந்தக் காலத்துக் கல்யாணப் பெண்மாதிரி தலையைக் குனிந்து கொள்கிறாயே! இரண்டு வார்த்தை பேசினால் வாய் முத்து உதிர்ந்து போய்விடுமா?" சீனுவின் வார்த்தைகள் கடுமையாகத் தோன்றவே ஜயம் அவனை நிமிர்ந்து பார்த்தாள்.

"என்ன பேச வேண்டும்? ஏதாவது கதை கிதை சொல்ல வேண்டுமா?" இப்படிச் சொல்லிவிட்டு அவள் பரிகாசச் சிரிப்புச் சிரித்தாள்.

"இன்றைக்கு மத்தியான்னம் ஊருக்குப் போகிறேன் என்பது தெரியுமா உனக்கு?"

"வீட்டில் எல்லோரும் சொல்லிக் கொண்டார்கள்" என்றாள் ஜயலக்ஷ்மி.

"மறுபடியும் தீபாவளியின் போதுதான் நாம் சந்திக்கப் போகிறோம்" என்றான் சீனு.

அவன் வார்த்தைகளில் பிரிவின் துயர் நிரம்பி இருந்தது. ஜயலக்ஷ்மியின் முகமும் வாடியது.

"அப்பொழுது என்னைக் கட்டாயம் உங்கள் வீட்டிற்கு அழைத்துக்கொண்டு போய்விடுவீர்கள், இல்லையா?"

"இப்பொழுதேகூட அழைத்துப் போய் விடுவேன். உன் அப்பாதான் சம்பிர தாயப்படி எல்லாம் நடக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறார்."

இதற்குள் கோவிலைச் சுற்றிப் பார்க்கப் போயிருந்த பெண்கள் திரும்பி வந்து கொண்டிருந்தார்கள்.

"நான் ஊருக்குப் போனபிறகு கடிதம் போடுகிறாயா?" என்று கேட்டான் சீனு.

"ஓ" என்றாள் ஜயலக்ஷ்மி.

சீனு அவசர அவசரமாகத் தன் விலா சத்தை அவளிடம் கூறி முடிப்பதற்குள், மற்றப் பெண்கள் வந்துவிட்டார்கள்.

சீனு ஊருக்கு வந்த பிறகு இதுவரை யில் தனிமை என்றால் என்ன என்று அறியாதிருந்தவனைத் தனிமை மிகவும் வருத்தியது. ஜயலக்ஷ்மியின் பேச்சு, புன் னகை, பரிகாசம், ஒவ்வொன்றும் மாறி மாறி நினைவுக்கு வந்துகொண்டே இருந் தது. இவ்வளவு புத்திசாலியாக இருக்கும் பெண் கடிதம் எழுதினாலும் புத்திசாலித் தனமாகத்தான் எழுதுவாள் என்று நினைத் துக்கொண்டான். தேனூரும் அவள் வார்த்தைகளைப்போலவே கடிதமும்தேனில்

பாலிகைச்சேடிகளைக் குளத்தில் அலம்பிக் கொண்டே...



தோய்த்து எழுதப்பட்டிருக்கும் என்று கற்பனை செய்துகொண்டான் சீனு. ஆனல், நாட்கள் ஒவ்வொன்ருகச் சென்றுகொண்டிருந்தன. தினமும் தபால்காரன் இவன் எதிர்பார்க்கும் கடிதத்தைத் தவிர வேறு கடிதங்களைக் கொண்டு வந்து கொடுத்தான். சீனுவுக்கு மனத்தில் தெம்பு குறைந்து போயிற்று. இந்தச் சந்தர்ப்பத்தில் கல்யாணம் முடிந்து ஊருக்குக் கிளம்பும்போது ஜயலக்ஷ்மி சீனுவின் தங்கையிடம் ரகசியமாக ஏதோ கூறியது அவன் நினைவுக்கு வந்தது. அவள் பள்ளிக்கூடத்திலிருந்து வந்ததும் தங்கையிடம் அந்த ரகசியத்தைப்பற்றிக் கேட்டான் அவன்.

"மதனியைக் கடிதம் போடச் சொல்லி இருக்கிருயாம் அண்ணு. ஆனல், அவள் உனக்கு முதலில் எழுத மாட்டாளாம். நீதான் எழுத வேண்டுமாம்" என்று அந்தப் பெண் சிரித்துக் கொண்டே கூறினள்.

சீனுவுக்கு இப்பொழுதுதான் புரிந்தது, ஜயத்தினிடமிருந்து கடிதம் வராத காரணம். கடைசியில் தன்னுடைய பிடிவாதத்தையும் போக்கிரித்தனத்தையும் விடவில்லையே என்று தோன்றியது அவனுக்கு. சீனுதான் கடிதம் முதலில் எழுத வேண்டும் என்பது தெரிந்துவிட்டது. அப்பொழுதுதான் சீனுவுக்குத் தான் அவளிடம் அவள் விலாசம் கேட்டு வாங்காமல் வந்துவிட்டது நினைவுக்கு வந்தது. கடைசியில் கல்யாணம் நடந்த வீட்டு விலாசத்தைப் போட்டு அவளுக்கு ஒரு கடிதம் எழுதித் தபாலில் சேர்த்த பிறகுதான் அவன் மனம் ஆறுதல் அடைந்தது.

ஆனல் அவன் எதிர்பார்த்தபடி அதன் பிறகும் அவளிடமிருந்து அவனுக்குக் கடிதம் வரவில்லை!

கடைசியாக அவன் எதிர்பார்த்திருந்த தீபாவளிக்கு ஒரு வாரம் இருந்தது.

"ஊரிலேயிருந்து உன் வேட்டகத்தார் உன்னைத் தீபாவளிக்கு அழைப்பார்களே. நல்லதாகப் புடைவை ஒன்று ஜயலக்ஷ்மிக்கு வாங்க வேண்டும். என்னுடன் கடைக்கு வருகிருயா?" என்று அவன் தாய் அவனைக் கூப்பிட்டாள்.

"நான் எதற்கு அம்மா? நீங்களே வாங்கி வந்துவிடுங்கள்" என்ருன் சீனு.

"நான் கர்நாடக மனுஷி அப்பா. உன் மனசுக்கும் பிடிக்க வேண்டுமோ இல்லையோ?" என்று தாய் வற்புறுத்திக் கூப்பிட்ட பிறகு அவனும் கடைக்குப் புறப்பட்டான்.

தாமரை வர்ணத்தில் இருந்த புடைவை அவனுக்கு மிகவும் பிடித்திருந்தது. ஜயலக்ஷ்மியின் சிவந்த மேனிக்கு இது நன்ருக இருக்கும் என்று நினைத்துக்கொண்டான். ஆனல், அந்த ஜயலக்ஷ்மிதான் ஒரு கடிதங்கூடப் போடாமல் இருக்கிருளே என்பதை நினைத்தபோது அவளிடம் அவனுக்குக் கோபம் உண்டாயிற்று. தீபாவளிக்கு முதல் நாள் மாலை ஜயலக்ஷ்மியின் வீட்டை அடைந்தான் சீனு. மாமனர் பரிந்து பரிந்து உபசரித்தார். மாமியாருக்கு மாப்பிள்ளை வந்திருக்கும் சந்தோஷம் பிடிபடவில்லை. மைத்துனன் மைத்துனிகளுக்குப் பரிசுகள் வாங்கி வந்திருப்பவற்றை அவர்களிடம் கொடுத்தான் சீனு.

ஜயலக்ஷ்மியும் பின்னல் அசைய ஒய்யார நடை நடந்து அவன் எதிரில் போய் வந்து கொண்டிருந்தாள். ஆனல், இவன் இருக்கும் பக்கங்கூட அவள் திரும்பிப் பார்க்கவில்லை. கலகலவென்று குழந்தைகளுடன் சிரித்துப் பேசினள். அந்தச் சிரிப்பின் ஒலி கேட்டு இவன் உள்ளம் தேனைக் குடித்த வண்டுபோல் மயங்கியது.

'ஒருவேளை ரொம்பவும் கர்வம் பிடித்தவளாக இருப்பாளோ?' என்று தன் அறையில் உட்கார்ந்துகொண்டு எண்ணமிட்டான் சீனு. இரவு சாப்பிடக் கூப்பிட அவன் மாமனரே வந்தார்.

"சீக்கிரமாகச் சாப்பாட்டை முடித்துக் கொள்ளலாம். விடியற்காலம் எழுந்திருக்க வேண்டுமே" என்று கூப்பிட்டார் அவர் கனவில் நடப்பதுபோல் எழுந்து இலையின் முன்பு உட்கார்ந்து கொண்டான். ஜயலக்ஷ்மிதான் பரிமாறினள். 'வேண்டாம் வேண்டாம்' என்னும்போதே இலையில் பாயஸத்தை ஊற்றினள். பக்கத்தில் உட்கார்ந்திருந்த மாமனர் சிரித்துக்கொண்டே மாப்பிள்ளையின் அவஸ்தையை மிகவும் ரஸித்தார். அந்தச் சந்தர்ப்பத்திலும் சீனு அவள் கண்களைச் சந்திக்க முயன்ருன். அழகிய விழிகள் நிலத்தில் பதியக் குனிந்த தலை நிமிராமல் உள்ளே போய்விட்டாள் அவள்.

சாப்பிட்டு முடிந்ததும் தன் அறைக்குச் சென்று உட்கார்ந்தான் சீனு. தாம்பூலத்தை எடுத்துக்கொண்டு அவன் மைத்துனி உள்ளே வந்தாள். யாருக்காக ஆறு மாசமாகக் காத்திருந்து வந்திருக்கிருனே அவள் தன்னை லட்சியம் பண்ணுமல் இருந்தது அவனுக்கு வேதனையை அளித்தது. எதிரில் தட்டில் இருந்த தளிர் வெற்றிலையும், வாசனைப் பாக்கும் அவனுக்குப் பிடிக்கவில்லை.

"இந்தா! இந்தப் புடைவையை அம்மா ஜயத்துக்காக வாங்கி அனுப்பியிருக்கிருள்" என்று தாமரைவர்ணப் புடைவையை எடுத்து மைத்துனியிடம் கொடுத்தான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் புடைவையைப்பற்றி உள்ளே எல்லோரும் பேசுவது கேட்டது. ஜயலக்ஷ்மி ஏதாவது பேசுகிருளா என்று குறிப்பாகக் கவனித்தான் சீனு. அவளுடைய பேச்சுக் குரல் கேட்கவில்லை. கடைசியாக அவள் தாய் அந்தப் புடைவையைப் பீரோவில் வைக்கச் சொல்லி அவளிடம் கொடுத்ததும் அவள் பேசாமல் அதை வாங்கிக்கொண்டு போனதும் சீனுவின் வேதனையை அதிகரிக்கச் செய்தன.

## 3

நாகஸ்வரக்காரன் பூபாள ராகததுடன் பள்ளியெழுச்சியை ஆரம்பித்தான். இரவு முழுவதும் தூங்காமல் இருந்து அப்பொழுதுதான் கண் அயர்ந்த சீனுவை அவன் மாமனர் வந்து எழுப்பினர். வேண்டா வெறுப்பாகப் படுக்கையில் எழுந்து உட்கார்ந்தான் சீனு.

"ரெயிலில் வந்தது அலுப்பாக இருக்கிறது. வீட்டில் எல்லோரும் ஸ்நானம் செய்து ஆகட்டுமே" என்ருன் சீனு.

"மத்தியான்னம் தூங்கலாம். எழுந்திருங்கள்" என்று கண்டிப்பாக உத்தரவிட்டார் அவர்.

மங்கள ஸ்நானம் ஆயிற்று. தாமரை வர்ணப் புடைவை சலசலக்கக் கூடத்தில் தன் தகப்பனருடன் உட்கார்ந்திருந்த கணவனுக்கு நமஸ்காரம் பண்ண வந்தாள் ஜயலக்ஷ்மி. ஈரம் உலராத கூந்தலைப் பின்னிப் பாதியில் கட்டியிருந்தாள். அதன்மேல்



"வந்தவனை மதிக்காமல் இருக்கத் தெரியும். போட்ட கடிதத்துக்கு..."

சென்டாகக் கட்டி வைத்திருந்த ரோஜாவும், மைதீட்டிய விழிகளும், புன்னகை ததும்பும் முகமும் அவனைப் பரவசத்தில் ஆழ்த்தின.

"மாப்பிள்ளை! வைர ஜிமிக்கி வேண்டுமென்று குழந்தை ஆசைப்பட்டாள். செய்து போட்டிருக்கிறேன். ஜயம்! எங்கே ஜிமிக்கியைக் காட்டம்மா" என்றார் அவர். ஜயம் காதுகளில் சுடர் விட்ட ஜிமிக்கிகளைக் கழற்ற ஆரம்பித்தாள்.

"வேண்டாம். பார்த்தாகிவிட்டதே!" என்று கூறிவிட்டுச் சீனு தன் அறைக்குப் போவதற்கு எழுந்தான்.

சமையல் அறையிலிருந்து வந்த சம்பாஷணை அவன் காதில் விழுந்தது. "தீபாவளிக்கு வந்த புது மாப்பிள்ளை மாதிரி இல்லையே உன் கணவர்! அவர் வந்ததிலேயிருந்து நீ அவர் இருக்கும் பக்கமாவது போனால்தானே? சமையல் அறையையே சுற்றிச் சுற்றி வருகிறாயே!" என்றாள் ஜயலக்ஷ்மியின் தாய்.

"நீதான் பக்ஷணமும் காபியும் கொண்டு போய்க் கொடுக்க வேண்டும். வேறே யாரும் போகக்கூடாது; தெரியுமா?" என்று வேறு மற்றவர்களுக்குத் தடை உத்தரவு போட்டாள் அந்த அம்மாள்.

ஜயலக்ஷ்மி காபியையும் பக்ஷணத்தையும் கொண்டுவந்து மேஜைமேல் வைத்தாள். யாருடைய வரவை எதிர்பார்த்துக் காத்துக் கிடந்தானோ அவள் பதுமைமாதிரி அவன் எதிரில் நின்றுகொண் டிருந்தாள். சீனு மெதுவாக எழுந்து கதவை ஓசைப்படாமல் தாழிட்டான். கைதியைச் சிறைபிடித்த அதிகாரியின் உற்சாகம் அவன் முகத்தில் இருந்தது.

"இந்தா! இங்கே எதற்காக வந்திருக்கிறேன், தெரியுமா?" என்று கேட்டான் அவன்.

"தெரியும்" என்று பதில் அளித்தாள் அவள்.

"என்ன தெரியும்? வந்தவனை மதிக்காமல் இருக்கத் தெரியும். போட்ட கடிதத்துக்குப் பதில் போடாமல் இருக்கத் தெரியும்."

ஜயலக்ஷ்மியின் முகம் கடிதம் என்றவுடன் கோபமடைந்து சுருங்கியது.

"யாருக்குக் கடிதம் எழுதினீர்கள்? யார் பதில் போடவேண்டும்?"

"சாக்ஷாத் உனக்குத்தான். நீதான் எனக்குப் பதில் போடவேண்டும். போட்டாயா?"

"எனக்கு ஒன்றும் நீங்கள் கடிதம் எழுதவில்லை."

"பொய்யா சொல்லுகிறாய்?"

"ஐயோ! கடிதத்தைப் பற்றி உரக்க வெளியில் பேசாதீர்கள். எனக்கு அவமானமாக இருக்கிறது!"

சீனுவுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது.

"என் மனைவிக்குக் கடிதம் எழுதினால் அவமானப்பட என்ன இருக்கிறது ஜயம்?" ஜயலக்ஷ்மியின் கண்களில் முத்துப் போல் நீர் வழிந்தது. "நீங்கள் எனக்கு ஒன்றும் கடிதம் எழுதவில்லை. என் சிற்றப்பா பெண் ஜயத்துக்குத்தான் எழுதியிருக்கிறீர்கள். கூடப் பிறந்த சகோதரிகளைவிட நாங்கள் ஒற்றுமையாக இருப்பதால்தான் இந்த விஷயம் பெரியவர்களுக்குத் தெரியாமல் மறைக்க முடிந்தது. பாவம்! அவள் வேர்க்க விறுவிறுக்க அந்தக் கடிதாசியை என்னிடம் கொண்டுவந்து கொடுக்காமல் இருந்தால் என்ன ஆகியிருக்கும்?"

சீனு அவள் கையில் இருந்த கவரை வாங்கிப் பார்த்தான். ஒன்றும் புரியாமல் விழித்தான்.

"ஜயம்! எனக்கு ஒன்றுமே புரியவில்லையே! அந்தப் பெண்ணின் பெயரும் ஜயலக்ஷ்மிதானா?"

"நமக்குக் கல்யாணம் என் சிற்றப்பா வீட்டில்தானே நடந்தது! அந்த விலாசத்தில் என் தங்கை ஜயலக்ஷ்மி என்று ஒருத்தி தானே இருக்கிறாள்?"

"ஆமாம், என் விலாசம் மட்டும் கேட்டு வாங்கிக்கொண்டு உன் விலாசம் கொடுக்காமல் இருந்துவிட்டாயே. அத்துட முதல் கடிதம் நான்தான் போடவேண் என்று வேறு சொல்லி அனுப்பியிரு தாய்!"

ஜயலக்ஷ்மி கன்னம் குழியச் சிரித்தாள்.

"இந்தத் தடவையாவது சரியான விலாசம் கொடுக்கிறாயா ஜயம்?"

"போதும், போதும், முதல் கடிதம் போட்ட லட்சணம்! விலாசமும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். உங்களுடன் என்னை அம்மாவும் அப்பாவும் ஊருக்கு அனுப்பி வைக்கப் போகிறார்களாம்."

இப்படிக் கூறிவிட்டு ஜயலக்ஷ்மி அவனைக் கடைக்கண்ணால் பார்த்தாள். வெளியில் குழந்தைகள் கொளுத்தும் மத்தாப்பின் ஒளி பட்டு அவள் முகவதனம் சுடர்விட்டுப் பிரகாசித்தது. சீனு வைத்த கண் வாங்காமல் அவளைப் பார்த்தான். இருவரும் ஒரே சமயத்தில் மேஜைமீது கிடந்த முதல் கடிதத்தைப் பார்த்துக் கலகலவென்று சிரித்தார்கள். ★

# வாழ்க்கை என்னும் உறவு



சரோஜா ராமமூர்த்தி

மேஜை மீது வைக்கப்பட்ட காப்பி ஆறிக் கொண்டிருந்தது. ஜக்கு என்றும் அப்படி இருந்ததில்லை. உற்சாகமாக 'அம்மா' என்று கூவி அழைத்தவாறு அலுவலகத்திலிருந்து திரும்பி வருவான். களைப்பு, சோர்வு, சிடுசிடுப்பு எதுவுமே அவனிடம் அவள் கண்டதில்லை. வாடா மலர் போல் என்றும் பிரசன்னமாக அவன் இருப்பதையே நாராயணி பெரிதும் விரும்பினாள். அப்படியே அவனை எந்தக் கஷ்டமும் தெரியாமல் ஆளாக்கியிருக்கிறாள். இன்று ஏன் அவன் முகம் வாடி வதங்கி இருக்கிறான்? தயங்கியவாறு அருகில் வந்து நின்றாள் நாராயணி. மெதுவாக மகனின் தலையை வருடிக் கொண்டே, ''ஏண்டா, அப்பா! ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறாய்?'' என்று கேட்டாள்.

''ஹும்....'' என்றான் ஜக்கு. ''ஒரு மாதிரியுமில்லை, ஒன்றுமில்லை...'' அலுப்புடன் வார்த்தைகள் வந்தன.

இப்பொழுது நாராயணி அலுத்துக் கொண்டாள். ''ஏண்டாப்பா! உன்னைப் பெற்று வளர்த்து எல்லாப் பொறுப்புக்களையும் நானே சுமந்து ஆளாக்கி விட்டேனே! இனிமேல் நீ அலுத்துக் கொள்ளத்தான் செய்வாய்....'' அவளும் கன்னத்தில் கையை ஊன்றியபடி கதவோரமாக மகனுக்கு எதிரில் வந்து உட்கார்ந்தாள். ஜக்கு தாயின் கவலை தேங்கிய முகத்தைப் பார்த்தான். பார்த்தவுடன் அவனுக்கு இரக்கம் மேலிட்டது.

''இதோ, பார், அம்மா! இத்தனை காலம் நீ என்னை அதட்டி உருட்டி வளர்த்து விட்டாய்; படிக்க வைத்தாய். எப்படியோ வேலையும் கிடைத்து விட்டது. இத்துடன் நீ என்னை விட்டிருக்க வேண்டும். அதுதான் இல்லை. நான் கலியாணம் செய்து கொண்டு குடியும் குடித்தனமுமாக இருக்க வேண்டும் என்று வேறு ஆசைப்பட ஆரம்பித்துவிட்டாய்.''

ஜக்குவின் குரல் வேதனையுடன் ஒலிப்பதை நாராயணியால் தாங்க முடியவில்லை.

''ஜக்கு! நான் ஆசைப்பட்டது தவறடா? ....தவறா? இல்லை, உன்னைத்தான் கேட்கிறேன். காலமெல்லாம் உனக்காகவே வாழ்ந்த நான், ஆசைகளையெல்லாம் அடியோடு குழி வெட்டிப் புதைத்தவளாக வாழ்ந்த நான் இப்படி ஆசைப்படக்கூடாது என்கிறாயா?'' பதற்றத்துடன் தாயின் சொற்கள் சூடாகவே வெளி வந்தன. ஜக்கு பதறி விட்டான். வேகமாக நாற்காலியிலிருந்து எழுந்தவன் அன்னையின் அருகில் வந்து அவளுடைய எலும்புக் கரங்களைச் சேர்த்துப் பிடித்துக் கொண்டு, ''அம்மா! என் பேரில் கோபித்துக் கொள்ளாதே. இது நாள் வரை உன் வார்த்தையை எதிர்த்தோ, மீறியோ நடந்திருக்கிறேனா? என்னை — ஏன் நம்மைச் சூழ்ந்துள்ள இந்த அவப்பெயர் இருக்கும் வரை எனக்கு யாரம்மா பெண் கொடுப்பார்கள்?'' என்று கேட்டு விட்டுக் கண்ணீர் பெருக்கினான் அவன்.

நாராயணி கல்லாகச் சமைந்து விட்டாள். மகனின் கேள்விக்குப் பதில் கூறாமல் மலைத்து உட்கார்ந்து விட்டாள். கால வெள்ளத்தோடு எதிர்நீச்சு போட்டுக் கரையேறிவிட்டோம் என்கிற எண்ணமும் அந்த விநாடியே உடைந்து சிதறியது. பெண்ணைப் பெற்றவர்கள் வரதட்சிணை கேட்டால் கொடுத்துவிடுவார்கள். சீர் சிறப்புக்கள் வேண்டுமென்றால் சிறப்புடன் செய்வார்கள். ஆனால் பிள்ளைக்குத் தகப்பனார் கல்லைப் போல் எங்கோ இருக்கிறார் என்று கூறினால் ஏன், என்ன என்று கேட்க மாட்டார்களா? வாழாவெட்டி வளர்த்த பிள்ளை என்று ஒரு தினுசாகத்தானே அவர்கள் பார்க்கிறார்கள்?

நாராயணி தன் கணவனை விட்டுப் பிரிந்தபோது நிமிர்ந்த உள்ளத்துடன் நான்கு வயதுப் பையனின் கையை உறுதியாகப் பற்றியபடி அவளுக்கு உரித்

தாக இருந்த கணவன் வீட்டுப் படிகளில் இறங்கித் தெருவில் நடந்தாள். உலகம் பரந்து கிடக்கிறது. நேர்மையாக, மானத்துடன் வாழ இந்தப் பரந்த உலகம் இடம் கொடாமல் போய் விடப் போகிறதா என்றுதான் அன்று நினைத்தாள். அவள் அவனை விட்டுப் பிரிய பல காரணங்கள் இருந்தன. 'திருமணங்கள் சுவர்க்கத்தில் நிகழ்த்தப்படுகின்றன. நம் செயலில் இல்லை' என்கிற வாக்கை அப்படியே ஒத்துக்கொள்ள ஜக்குவின் தந்தை தயாராக இல்லை. திருமணம் பூமியில்தான் நிகழ்த்தப்படுகிறது. அதில் இப்படித் தோல்வியுறும் திருமணங்கள் பெரும்பாலும் பணத்தை முதலாக வைத்து ஆடப்படும் சூதாட்டம் போன்றது என்று அவன் கருதினான். மனைவி அழகியல்ல என்பது மட்டும் அவன் வாதமல்ல; குணப் பொருத்தமும் அமையாதவள் என்கிற முடிவுக்கும் வந்து விட்டான். நாராயணியின் திண்மையான மனம் கணவனின் போக்குக்கு நெகிழ்ந்து கொடுக்க வில்லை.

அவன் கிழக்கு என்றால் இவள் மேற்கு என்பாள். இந்த லட்சணத்தில் மகன் பிறந்ததை அவன் மகிழ்ந்து வரவேற்கவில்லை. இந்த அழகான மனைவியிடம் குழந்தை பிறக்க வேண்டும் என்று தவமா கிடந்தான்? உலகத்தில் எத்தனையோ வேண்டாத உயிர்கள் தோன்றுவது போல் ஜக்குவும் பிறந்தான். குழந்தை பிறந்தால் கணவன் மனைவியின் உறவு பலமடைந்து விடும் என்று மற்றவர்கள் சொன்னதைப் பொய்யாக்குவது போல்அவன் ஒரு நாளாவது தன் குழந்தை, தன் உயிரின் உயிர் அது என்று எட்டிக்கூடப் பார்க்கவில்லை.

மகனுடன் தன்னை வெறுத்து ஒதுக்கியதால் நாராயணியின் திண்மை இன்னும் வலுப் பெற்றது. ஜக்குவுக்கு நான்கு வயதாகும் போது அவள் அவனிடமிருந்து வெளிஉலகில் குதித்து விட்டாள்; எப்படியோ காலம் தள்ள முடியாமலா போய் விடும் என்கிற நம்பிக்கையில்.

இருபது வருஷங்கள் ஆகி விட்டன. ஜக்கு அவன் தந்தையைப் போலவே நல்ல உயரம். அதற்கேற்ற பருமன். மூக்கு, விழிகள், பேச்சு, சிரிப்பு எல்லாம் அப்பாவை உரித்து வைத்திருந்தன. மகனைப் பார்க்கும்போதெல்லாம் நாராயணிக்கு ஒரு நிறை ஏற்பட்டது. அவரை அந்தக் காலத்தில் முதன் முதலாகப் பார்த்த நினைவு பளிச்சிடப் பெருமையோடு மகனைப் பார்த்துக் கொண்டேயிருப்பாள்.

''என்னம்மா அப்படிப் பார்க்கிறாய்?'' என்று ஜக்கு கேட்பான்.

''ஒன்றுமில்லையடா! என்னவோ பழைய ஞாபகம்....''

''என்ன ஞாபகம்? அந்த மனிதனைப் பற்றி நினைத்துக் கொண்டிருப்பாய்....''

''ஜக்கு! நீ என்ன பேசுகிறாய்? அந்த மனிதன் என்று அவரை அழைப்பது? அவர் உன்னைப் பெற்ற தகப்பனார்டா.... அப்படிச் சொல்லாதே அப்பா—''

''ஹூம்.... மகா தகப்பன்—'' என்று கூறிவிட்டு வெளியே போய் விடுவான் அவன்.

நாராயணி தனக்குள்ளாகவே பேசிக் கொண்டாள். 'ஐந்து வயசிலேயே அவன் தகப்பனிடம் தன் குரோதத்தைக் காட்டி விட்டான். 'அந்த மனிதன்' என்று அவன் இன்றுதானா புதிதாகச் சொல்கிறான். எப்பொழுதுமே அப்படித்தான் பேசுகிறான். இனி தகப்பனுக்கும், மகனுக்கும் ஒட்டு உறவு ஏற்படுமோ, ஏற்படாதோ?'

நாராயணி வீட்டை விட்டு வெளியேறிய பிறகு ஜக்குவின் தகப்பனார் மலை போலத் தம் தாயை நம்பி வாழ்ந்தார். அவர் சம்பாதித்துக் கொடுக்க, அன்னை சமைத்துப் போட இப்படிக் காலம் ஓடிக் கொண்டிருந்தது. இதில் ஒரு விசேஷம் என்னவென்றால் அவர் தாம் கடமை தவறாமல் வாழ்பவர் என்றும், தம்மைப் பெற்றவர்களிடத்தும், உடன் பிறந்தவர்களிடத்தும் மாறாத அன்பு கொண்டிருப்பவர் என்றும் அத்துடன் தம் கடமை முடிந்து விட்டதாகவும் நினைத்து அடியோடு நாராயணியை மறந்து விட்டார். சின்னஞ்சிறு பையனை வெளியேறிய ஜக்குவைப் பற்றி அவர் மனத்தில் எதுவும் இல்லை. மனைவிக்கு மாதா மாதம் சிறு தொகை ஒன்று அனுப்பி விட்டுத் தம் கடமையைக் கைகழுவி விட்டார் என்று சொல்லலாம்.

முதலில் அந்தப் பணத்தை நாராயணி ஏற்றுக் கொள்ளத் தயங்கினாள். ஆனால், மகனை வளர்த்து ஆளாக்க வேண்டிய பொறுப்பில் தாயாருக்கு மட்டும் பங்கு இல்லை, தந்தைக்கும் உண்டு என்பதை உணர்ந்தவுடன் அந்தப் பொறுப்பு இந்தப் பண உதவியாகத்தான் இருக்கட்டுமே என்று அதை அவள் மறுத்து விடவில்லை.

உலகில் கணவனும், மனைவியும் ஏதோ காரணங்களினால் ஒருவரை விட்டு ஒருவர் பிரிந்து வாழ்கிறார்கள். இவர்கள் பிரியும் போது நாராயணி வாயிற்படி இறங்குமுன்பு சற்றுக் கடுமையாகப் பேசினாள்.

''என்றைக்காவது என் தயவு உங்களுக்குத் தேவைப்படும். அப்படித் தேவைப்பட்டால் என்னைக் கூப்பிடுங்கள்... வருகிறேன். ஆமாம்....கண்டிப்பாக வருகிறேன்.''

அவள் கணவர் அவளைக் கொடூரமாகப் பார்த்தார். ''உன் தயவு என்றைக்குமே எனக்குத் தேவை இல்லை. உன்னை நாடி நான் என்றும் வரமாட்டேன். போ, வெளியே!''

பிறகுதான் நாராயணி எப்படியோ உலகில் துன்பங்கள், ஏச்சுக்களுடன் போராடித் தானும் உயிர் வாழ்ந்து, மகனையும் ஆளாக்கி விட்டுவிட்டாளே. இன்று மகனின் திருமணம் அவள் முன் மகத்தானதாக நிற்கிறது. யார் பெண் கொடுக்க வந்தாலும், நாராயணியின் மஞ்சள் பூசித் திலகமிட்ட முகத்தை வினாக் குறியுடன் பார்க்கிறார்கள். கழுத்திலே மஞ்சள் குளித்துத் துவளும் திருமாங்கல்யச் சரட்டைப் பார்க்கிறார்கள். அடுத்த கேள்வி ஜக்குவின் தந்தை எங்கே என்பதுதானே? அவன் என்னவோ ஒரே வார்த்தையில், ''அம்மா! எனக்காக நீ உன் பழைய வாழ்க்கையை நினைவுபடுத்திக் கொள்ளாதே. அதை அடியோடு மறக்க முயற்சி செய்'' என்றுதான் சொல்லி வருகிறான். ஆனால், பெற்ற தாயின் உள்ளம் அதை ஏற்றுக் கொள்ள வில்லை. இதற்கிடையில், கணவனைப் பற்றி மனைவியின் உள்ளத்தில் ஏற்பட்டிருந்த நினைவு அடியோடு போய் விட்டதா என்றால் அதுதான் இல்லை. மகனிடம் சொல்லிக் கொள்ள முடியாத பரம இரகசியமாக அந்த நினைவு அவள்

இதயத்தில் வேரூன்றி நிலைத்து விட்டது. ஒரு தடவை அவள் ஜக்குவின் தந்தை உடல் நலம் இல்லாமல் இருக்கிறார் என்று கேள்வியுற்றுப் பசியும், பட்டினியுமாகக் கோயிலை வலம் வந்து பிரார்த்தித்திருக்கிறாள். தூங்காமல் எத்தனையோ இரவுகளைக் கண்ணீர் வடித்தே கழித்திருக்கிறாள். மனத்தளவில் கூட அவருக்கு எந்தத் தீங்கு நேர்வதையும் அவள் உள்ளம் ஒப்புக் கொள்ள வில்லை. பிறகு யாரோ சொன்னார்கள், அவர் உடல்நலம் பெற்றுவிட்டார் என்று. அன்று, அவள் ஏனோ மகிழ்ந்து உற்சாகமாக இருந்தாள்.

அந்த மனிதர்தான் என்ன? வாழ்க்கைத் துணையின் மதிப்பை உணராமல் இருந்த காலம் தேய்ந்து படிப்படியாக அதன் பெருமையை உணர்ந்த போது மிகமிக ரகசியமாக நாராயணியை நினைத்துக் கொள்வார்.



பாட்டி; ஏண்டாப்பா சிவராமா! நாலு தடவை பெயிலான உனக்குக் கூட கதி மோட்சம் ஏற்பட்டு விட்டதே! எஸ். எஸ். எல். சி. பரீட்சையை ஆயுசு பூரா எவ்வளவு தடவை வேண்டுமானாலும் எழுதலாமாமே...என்ன மோப்பா .... தீர்க்காயுசா இருந்து பரீட்சை எழுதி முடி!

யாரோ அவரிடம் வந்து சொன்னார்கள், எங்கோ அனாதை ஆசிரமத்தில் மகன் சாப்பாட்டுக்காகக் கையில் அலுமினியத் தட்டை வைத்துக் கொண்டு வரிசையில் நின்று உணவு பெறுகிறான் என்று. அவனை — ஏன் அவனை— அப்படிக் கைவிட்டது நியாயம்தானா என்று அவரிடம் அவர் உள் மனம் இடித்துக் கேட்டது. அவரா கைவிட்டார்? மனைவிக்குரிய இடத்தை அவளுக்கு அவர் அளிக்கவில்லையே தவிர, தம் நிழலிலிருந்து விலகிப்போ என்று ஒரு நாளும் அவர் சொன்னதில்லை. அவளாகத்தான் உரிமை கோரி, தன் வழியே பிரிந்து வெளியே வந்தாள். எங்கோ ஓர் அனாதை விடுதியில் மகனுடன் வாழ்ந்தாள். அவனை ஆளாக்கியும் விட்டுவிட்டாள்.

ஜக்குவுக்காகப் பெண் கொடுக்க வந்தவர்கள் ஜக்குவின் தந்தையைப் பற்றி அறிய ஆவலாக இருந்தார்கள். உயிரோடு ஒரு மனிதர் கட்டிய மனைவியையும், பெற்ற மகனையும் துறந்து விட்டார் என்றால் அதை உலகம் ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை. அப்படி அவர் துறவியாகப்' போயிருந்தால் சரிதான். அவருக்கென்று மற்றவர்கள் விதம் விதமான உறவுகளில் நடமாடி வந்தார்கள். அவர்களுடன் அவரும் இணைந்து வாழ்கிறார்.

நாராயணிக்கு மகன் அவ்வாறு கூறிய பிறகு ஊண் உறக்கம் கொள்ள வில்லை, பட்ட மரம் போல் நின்று விட்ட தன் வாழ்க்கையில் பசுமை காணுவதானால் ஜக்குவின் திருமணம் தான் இனி அவள் குறிக்கோளாக இருக்க வேண்டும். அதற்கு அவரைப் போய்ப் பார்த்துப் பேச வேண்டும். அவரை எப்படிப் போய்ப் பார்ப்பது?

இந்தச் சமயத்தில்தான் அவளுக்கு ஒரு புதுச் செய்தி கிடைத்தது. நாராயணியின் மாமியார் வீட்டில் பல மாறுதல்கள் நடந்து விட்டனவாம். அவருடன் பிறந்தவர்களுக்கு எங்கெங்கோ வேலையாகி, திருமணமாகிக் குழந்தை குட்டிகளுடன் தனித்தனியாகப் பிரிந்து வாழ்கிறார்களாம். இவர் மட்டும் வேலையிலிருந்து ஓய்வு பெற்று மனச்சாந்திக்காகச் சிறு பள்ளிக்கூடம் ஒன்று நடத்துகிறாராம். பள்ளிக்கூடம் என்றதும் நாராயணி விரக்தியாகச் சிரித்துக் கொண்டாள். பள்ளிக்கூடக் குழந்தைகளைப் பார்த்த பிறகுகூட அவர் தம் மகனைப் பற்றி நினைக்காதது வியப்புக்குரிய விஷயமாக இருந்தது. பிறருக்கு இரங்கும் அவர் தம் சொந்த விஷயத்தில் கல்லினும் கடினமாகிவிட்ட விந்தையின் இரகசியம் நாராயணிக்குப் புரியவில்லை. ஒரு வேளை, பள்ளிக்கூடம், சேவை என்றெல்லாம் தம்மைத்தாமே ஏமாற்றிக் கொள்ளுகிறாரோ என்னமோ?

அடுத்த நாள் அலுவலகத்திலிருந்து வந்த ஜக்கு தன் தாயார் எங்கோ வெளியில் கிளம்ப ஆயத்தமாக நிற்பதைக் கண்டு, ''எங்கேயம்மா பிரயாணம்?'' என்று கூடக் கேட்டு விட்டான். நாராயணி சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டுப் பிறகு, முகத்தில் துணிவுடன், ''உன் அப்பாவை அழைத்து வரப் போகிறேனடா'' என்றாள்.

'' அவரையா? அந்த மனிதரையா ?''

''பேய், மடையா! உனக்கு அவர் என்னடா தீங்கிழைத்தார்? அவரிடம் நீ பெற வேண்டிய உரிமைகளை, அன்பை நான்தான் உன்னைப் பெற விடாதபடி பிரித்து அழைத்து வந்தேன். இன்று உனக்காக அவரைத் தேடிப் போகும் நான் அன்றே உனக்காக அவர் நிழலில் அல்லல்பட்டோ, அவதிப்பட்டோ வாழ்ந்திருக்கலாம்....''

நாராயணி ஊருக்குப் பிரயாணம் ஆன அன்றே அவளைத் தேடி ஒரு கடிதம் ஊருக்குப் பிரயாணப்பட்டுக் கொண்டிருந்தது. ஜக்குவின் தகப்பனார்தான் அந்தக் கடிதத்தை எழுதியிருந்தார். கடவுளால் ஏற்படுத்தப்பட்ட உறவுகளை உதறி, தம் கடமையை மறந்து வாழும் எவனுக்கும், மற்றப் பணிகளாலோ, சேவைகளினாலோ இன்பம் கிடைப்பதில்லை. என்னதான் தன்னலம் கருதாது சேவை செய்தாலும், ஊரும் உலகமும் அவரைத் தம் கடமையிலிருந்து நழுவி விட்டவர் என்று சுட்டிக் காட்டிப் பேசுகிறது. ஆகவே, இனிமேல் அவரும் நாராயணியைத் தேடி வந்து அவளுடன் தம் சேவை வாழ்க்கையை இணைத்துக் கொள்ள விழைகிறார் என்பது தான் கடிதத்தின் சாரமாக இருந்தது.

ஜக்கு கடிதத்தைப் பல முறைகள் பார்த்துவிட்டு, ''பாவம்! அப்பா!'' என்று அவரைப் பற்றி முதன் முறையாக அநுதாபத்துடன் நினைத்தான்!

# படைப்பு

சரோஜா ராமமூர்த்தி

கடல் சூழ்ந்த இவ்வையகத்தை இறைவனும் இறைவியும் அளவிலாப் பெருமையுடன் பார்த்துக் கொண்டிருந்தனர். காற்றில், நீரில், நிலத்தில் ஒவ்வொரு விநாடியும் உயிர்கள் தோன்றிப் பெருகிக் கொண்டேயிருந்தன. இறைவி தன் விழி மலர்களை மலர்த்தி, அவற்றை மகிழ்ச்சியுடன் நோக்கினாள். இறைவன் இறைவியின் மந்தகாச முகத்தைப் பார்த்துப் பார்த்து போதை தலைக்கேற, உன்மத்தம் பிடித்தவன் போல் அவளை இறுகப் பற்றி அணைத்துக் கொண்டான்.

இறைவி நாணம் கொண்டாள். இறைவன் அதை ரசித்தான், மகிழ்ந்தான். அப்பொழுது காற்றில் எங்கிருந்தோ இரு குரல்கள் வந்து அவர்கள் திருச் செவிகளில் மோதின. இறைவி கவலையுடன் நாயகனை நோக்கினாள்.

“பிரபோ! தங்கள் படைப்பின் விநோதத்தின் ரகசியம் எனக்கு விளங்கவில்லையே! அதோ அந்தப் பையன் சொல்வதைக் கேட்டீர்களா?..”

“என்ன சொல்கிறான் தேவி...?”

“அவன் சூளுரைப்பதைக் கேளுங்கள். அவனுக்குத் திருமணத்தில் ஆசையில்லையாம். உளுத்துப் போன அவனால் இந்த வையகத்துக்கு வம்ச விருத்தி வேண்டாமாம்...இப்படியே இருந்து மறைந்து விடப் போகிறானாம். இப்படி அவன் தன் அன்னையுடன் வாதாடுகிறான் சுவாமி...”

உலக நாயகி கூறுவது கேட்டு உலக நாயகன் நகைத்தவாறு இறைவியை அன்புடன் அணைத்துக் கொண்டான்...

“மாதவா! என் அப்பனே இல்லையோ? நான் சொல்கிறதைக் கேளடா. உன்னாலே இந்த வம்சம் விளங்க வேண்டுமடா...ஏழையோ, பாழையோ ஒரு பெண்ணைப் பார்த்துக் கல்யாணம் பண்ணிக் கொள் அப்பா.... உன் வயிற்றில் ஒன்று...அது ஆணோ பெண்ணோ பிறந்தால் போதும்.... பார்த்து விட்டு நான் கண்ணை மூடுகிறேண்டா...”

தாயின் வற்றிச் சுருங்கிய விரல்கள் அவன் மோதிரச் சுருள் கிராப்புத் தலையுடன் விளையாடின. காய்ச்சிய பசும் பாலில் படிந்திருக்கும் லேசான பொன் நிறத்தை உடையவன் மாதவன். கூர்மையான மூக்கும், நீண்ட விழிகளும் கொண்ட அழகன் அவன். தந்தை வைத்து விட்டுப் போன சொத்து ஏராளமாக இருந்தது. ஏகப்பட்ட செல்வத்தை வைத்துப் போன தந்தை ஆரோக்கியமுள்ள மகனை வைத்து அந்த கிழத் தாயை மகிழும்படிச் செய்யவில்லை.

மாதவனுக்கு இதய பலவீனம். பார்ப்பதற்கு ஆள் வாட்ட சாட்டமாக அமைந்திருந்தாலும், அவன் எதற்கும் உபயோகமில்லாதவன். காலையில் எழுந்தவுடன் மேஜை மீது காப்பி தயாராக இருக்கும். தோட்டத்தை ஒரு சுற்றுச் சுற்றி விட்டு வந்தாலே மார்புக் கூடு பட படவென்று அடித்துக் கொள்ளும். கண்களைச் சுழற்றும்.

“மாதவா, ஏண்டா இப்படி அலையறே!..” என்று கூறி ஆதரவுடன் அணைத்துக் கொள்வாள் அன்னை. அதெல்லாம் பதினைந்து வயதில். மகன் பெரியவனாக வளர வளர அவனுடைய அழகும் போட்டி போட்டு வளர்ந்தது.

'ராஜா மாதிரி இருக்கிறன். இந்தக் கிழவி கொடுத்து வைக்கவில்லை. ஒன்றே ஒன்று. அது நன்ருக இருக்காதோ?' ஊராரின் விமரிசனம் இது. ஊராருக் கென்ன? நல்லது கெட்டது இரண்டையுமே பல்லில் கடித்துச் சுவைப்பார்கள்.

நெடிதுயர்ந்து நிற்கும் மகனின் கழுத்தில் மாலையைப் போட்டு மணக் கோலத்தில் காண அன்னையின் மனம் துடித்தது. பால்யத்தில் கணவன் மறைந்ததும், இரண்டு வயசுப் பிள்ளையின்கையை ஊன்றுகோலாகப் பற்றிக் கொண்டு,இருண்டு விட்ட தன் வாழ்க்கையில் ஒளியைக் காண முயன்ற அந்த அன்னை, அப்படி ஆசைப்பட்டதில் தவறென்று மில்லையே ?

''மாதூ!...'' என்று அழைத்து, ஆவலே உருவாக மகனின் முகத்தை நிமிர்த்தி, ஆசையுடன் அவன் என்ன சொல்லப் போகிறன் என்பதைக் கவனித்துக் கொண்டிருந்தாள் அவள்.

''அம்மா...அம்மா... உனக்கு ஒரு பிள்ளை பிறக்கவே இல்லை யென்று நினைத்துக் கொள் அம்மா...என்னைக்கல்யாணம் செய்து கொள்ளச் சொல்லி வற்புறுத்தாதே...'' மாதவன் அன்னையின் இரு கர மலர்களையும் பற்றிக் கொண்டு'ஓ'வென்று அழுது விட்டான்.





வந்து விட்டது பாழும் படபடப்பு. அது ஓய்வதற்குள் அந்தக்கிழவி அலங்க மலங்கப் பதறி விட்டாள். மார்பைத் தடவி விட்டாள். தன் மேல் சாய்த்துக் கொண்ட மகனின் கன்னங்களை ஆசையுடன் வருடினாள்.

''வேண்டாம் மாது.. வேண்டாம்.. நீ எனக்குப் பிள்ளையாக இரப்பா... நான் அதிகம் ஆசைப்படக் கொடுத்து வைக்காத ஜென்மம்..'' அந்த அம்மாள் தன் வேதனையை விழுங்கியவாறு மகனிடம் கூறி அவனைத் தேற்றினாள்.

மாதவனுக்குச் சிறிது நேரத்தில் படபடப்பு அடங்கி விட்டது. எப்பொழுதும் போல அவன் அறையில் நாற்காலியில் சாய்ந்தவாறு தொடுவானத்தையும், அதில் அடுக்கடுக்காய் மலைத் தொடர்களைப் போல் பரவிக் கிடக்கும் வெண் மேகங்களையும் பார்த்துக் கொண்டிருந்தான். தொடு வானத்தைத் தவிர மற்ற இடமெல்லாம் ஒரே நீலம். காயும் கதிரவனின் ஒளி, நீள் விசும்பில் சுடர்விட்டுக் கொண்டிருந்தது.

அந்த ஒளிப் பிழம்பை ஊடுருவிச் செல்கிறாப் போல் இரு பறவைகள் விண்ணில் 'விர்'ரென்று சென்றன. ஒன்று ஆண், மற்றொன்று பெண். பறந்து சென்ற அப்புட்கள் ஓங்கிப் பரந்து வளர்ந்திருந்த மாமரத்தின் உச்சியில் உட்கார்ந்தன. பெண் பறவை ஊட, ஆண் பறவை அதைச் சுற்றிச் சுற்றிப் பறக்க....

''ஆகா! எத்தகைய காட்சி இன்பம்?'' மாதவன் தனக்குள் சொல்லிக்

கொண்டான். மாமரத்துச் சிட்டுக்களின் மேல் லயித்திருந்த அவன் கவனத்தை, வாசல் கேட்டைத் திறந்து வந்து, எதிரில் நின்ற மங்கை ஒருத்தி கவர்ந்தாள்.

''யார்?'' — இது மாதவன்.

''இந்த வீட்டில் 'அவுட் ஹவுஸில்' காலி இருக்கிறதாமே... பார்க்கலாமா?''— அவள் கேட்டாள்.

''ஓ! தாராளமாக...உள்ளே அம்மா இருக்கிருள்...'' என்றவன் உள்புறம் திரும்பி, ''அம்மா...'' என்று அழைத்தான்.

அவன் தாயும், அந்தப் பெண்ணும் உள்ளே செல்வதைச் சிறிது பார்த்திருந்து விட்டு,மறுபடி மாமரத்தைக் கவனித்தபோது சிட்டுக்கள் இரண்டும் ஜோடியாக அமர்ந்து கிசுகிசுத்தன.

உள்ளேயிருந்து கணீரென்ற குரலில் அந்தப் பெண் பேசினுள்.

''எனக்கு மாதச் சம்பளம் எழுபது ரூபாய்தான். தாயார் மட்டும் தான் இருக்கிருள்.வேறு யாரும் கிடையாது. வாடகையில் ஐந்து ரூபாய் குறைத்துக் கொள்ளுங்கள்—''

''ஆகட்டும் அம்மா. ஏதோ எனக்குப் பேச்சுத் துணைக்கு என்று இருந்தால் போதும். வாடகையைப் பற்றி என்ன இப்போ? வந்து..உன் பெயர் என்ன வென்று சொன்னுய்?..''

''நீலா...''

'நீலா' என்று மாதவனின் மனமும் அந்தப் பெயரை வாங்கிப் பதிவு செய்து கொண்டது. உள்ளே யிருந்து பேச்சுக் குரல் அருகில் நெருங்கி வந்தது.

''மாது! இந்தக் குழந்தையும், இவள் அம்மாவும் நம் 'அவுட் ஹவு'ஸுக்கு நாளைக்குக் குடி வருகிருர்கள். வாடகையில் ஐந்து ரூபாய் குறைக்கச் சொன்னுள், சரியென்றுவிட்டேன்—''

''உன் இஷ்டம் அம்மா...''-மாதவன் நீலாவை ஏறிட்டுப் பார்த்தவாறு கூறினுன்.

''ரொம்ப தாங்ஸ்..''- நீலா கூறியது மாதவனுக்குத்தான். இல்லாவிடில் அந்தக் குரலில் ஒரு குழைவும் நளினமும் மிளிர்வானேன்?..

நீலாவும், அவள் தாயும் குடி வந்தார்கள். அவளுடைய சுறு சுறுப்பு, மகிழ்ச்சி, கலகலப்பு எல்லாம் அவளுடன் குடிவந்தன; சாமான்களைத் தவிர உடன் வந்தவை நாலைந்து பாத்திரங்கள், இரண்டுபெட்டிகள், படுக்கை இவ்வளவு தான். பெட்டியிலிருந்து வெகு அக்கறையாகப் பக்தியுடன் ஆறுமுகனின் திருவுருவப் படத்தை எடுத்து அறையில் மாட்டி வணங்கினுள் நீலா. அந்தப் படத்தின் சோபை அவர்கள் வீடெல்லாம் நிறைந்து விளங்கியது.

இது காறும் மாதவனின் இதயம் நோயின் கொடுமையால் படபடத்து வந்தது. இப்பொழுது நோயின் கொடுமையினூடே இன்ப வேதனையால் துடித்தது. இதயம் துள்ளியது. மகிழ்ந்து ஏங்கியது.

''பள்ளிக்கூடத்துக்குக் கிளம்பியாச்சா?.'' வெளியே கிளம்பும் நீலாவைக் கேட்டான் மாதவன்.

''கிளம்பிக் கொண்டே,....இருக்கிறேன்....'' இழுத்தவாறு வாக்கியத்தை முடிக்காமல் அவனைப்பார்த்து இள நகை சிந்தி விட்டு மறைந்து விடுவாள் அவள்.

''பள்ளிக்கூடத்திலிருந்து வந்தாச்சா?..'' கேசம் காற்றில் பறக்க சோர்வினூடே மிளிரும் அவள் அழகைக் கண்களால் விழுங்கியவாறு கேட்பான் மாதவன்.

''வந்து கொண்டேயிருக்கிறேன்..'' என்றபடி முறுவல் காட்டி உள்ளே போய் விடுவாள் அவள்.

அவர்களின் காதலின் தோற்றுவாய் இவ்வளவு தான். 'பார்க்'கைத் தேடியோ, கடற்கரையில் ஒளிந்தோ அவர்கள் காதல் வளரவில்லை. கச்சிதமாக, நேர்மையாக, புனிதமாக வளர்பிறை மதி போல் வளர்ந்தது.

மாதவன் பல மாதங்களுக்கு அப்புறம் தன் அன்னையின் முன்பாக ஒரு நாள் வந்து நின்ருன்.

''அம்மா—!''

''என்னப்பா...?''

'' அம்மா '' என்று தயங்கினுன் மாதவன்.

''என்ன மாது...என்னிடம் எதையும் சொல்ல உனக்கு ஏன் தயக்கம்?'' அந்தத் தாய் சாலப் பரிந்து அவனைக் கேட்டுக் குழைந்தாள்.

''வந்து...அம்மா...''

''உம்...வந்து...'' என்று முறுவல் காட்டினுள் அன்னை. ஈன்றெடுத்த மகனின் போக்கை அவளால் புரிந்து கொள்ள முடியாதா என்ன? ஒன்றிலும் கவனமில்லாமல், நாட்ட மில்லாமல் இருந்தவன் அடிக்கடி நீலாவைக்

''கவனிப்பதையும், சிரிப்பதையும் அவள் எப்படியோ தெரிந்து கொண்டிருந்தாள்.

மாதவன் தாயை நிமிர்ந்து நேருக்கு நேர் பார்த்தான். பிறகு துணிவுடன் ''அம்மா! நீலாவை நான் கல்யாணம் பண்ணிக் கொள்கிறேன். அவள் தாயைப் பார்த்துப் பேசி ஏற்பாடு செய்யுங்கள்'' என்று கூறி முடித்து விட்டு, அந்த ஆனந்தத்தின் சுமை தாங்காமல் அறைக்குள் சென்று படுத்து விட்டான்.

ஒரு விநாடி தாயுள்ளம் மகிழ்ச்சிக் கடலில் முங்கி எழுந்தது. உலகத்தாரைப்போல் அவளும் மாமியாகி, அப்புறம்பாட்டியாகவும்ஆகிவிடுவாள். மாதவனின் பால்ய விளையாட்டுக்களையெல்லாம், அவன் மதலைமூலம் மறுபடியும் பார்த்து மகிழலாம். எண்ணி எண்ணி அந்தப் பேதை மனம் மகிழ்ந்தாலும், கூடவே இதயத்து மூலையிலிருந்து எச்சரிக்கை ஒன்று பலமாகக் கிளம்பியது.

மாதவன் மண வாழ்க்கைக்கு அருகதை யுள்ளவன் தானா? ஏன் இருக்கக் கூடாது? வைத்தியம், எச்சரிக்கை இவற்றை மீறிக் கடவுள் சக்தி என்று ஒன்று இருக்கிறதே? அது பலமாக இருப்பதால்தான் இத்தனை காலம் மண வாழ்க்கையில் நாட்ட மில்லாம லிருந்தவனின் மனம் புரண்டு கொடுத்திருக்கிறது.

அன்று தை வெள்ளிக்கிழமை. எல்லாம் பொருத்தமாக அமைந்திருக்கிறது என்று நினைத்து, அவள் ரோஜா கதம்பமும், வெற்றிலை பாக்கு பழத்துடனும் அவுட் ஹவுஸுக்குப் போய் விட்டாள் பெண் கேட்க!

நீலா தழையத் தழைய நெளிந்து புரளும் பின்னலும், நெற்றியில் துலங்கும் செஞ்சாந்துத் திலகமும் ஒளியிட விளக்கேற்றி வணங்கும் வேளையில், வீட்டுக்கார அம்மாளை எதிர்பார்க்க வில்லை தான்.. சாதாரணமாக அந்த அம்மாள் ஏதாவது விஷயம் இல்லாமல் எங்கும் போவதில்லை.

''வாருங்கள் அம்மா—''

மணையைப் போட்டு உபசரித்தாள் நீலா.

''அம்மா இல்லையா? இந்தா! பூ வைத்துக் கொள்..'' என்று கதம்பத்தை எடுத்துச் சூட்டினாள். அப்புறம் எல்லாமே விரைவில் நடந்தன.

அடுத்த நாளிலிருந்து மாதவன், ''பள்ளிக்கூடத்துக்குக் கிளம்பியாச்சா?..'' என்று கேட்டால், அந்தப் பொல்லாத பெண் பதிலேதும் கூறாமல் கடைக் கண்ணை அம்பு போல் பாய விட்டுத் துள்ளி ஓடி விடுவாள்.

நாணமாம் அவளுக்கு!

'அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய்' நிறைந்திருக்கும் பரம் பொருள் மாதவனையும், நீலாவையும் ஒன்று சேர்த்துக் கணவனும் மனைவியுமாகப் பிணைத்தான்.

கோயில் பிராகாரத்தை தம்பதி வலம் வரும் போது மாதவனின் தாய் சிந்தை குளிரப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்தாள். மங்கல அரிசி தூவி ஆசி கூறினாள். இறைவனின் அருள்வேண்டி மெய்யுருக மாதவனின் நலனுக்காக முறை யிட்டாள்.

கல்யாண அலுப்பு என்று கூறுகிறார்களே அது முற்றிலும் உண்மை. திருமணத்தை நடத்தி வைப்பவர்கள் மனத்திலிருந்த பாரம் குறைய சரீர அசதியினால் அயர்ந்து தூங்கி விட்டார்கள். திருமணம் புரிந்து கொண்டவர்களோ மனம் அயர்ந்து விடுவதில்லை. புதிதாக ஒன்றை, புரியாத ஒன்றை, இனம் தெரியாத உறவை நினைத்து நினைத்து அவர்கள் விழித்துக் கொண்டு



'' என்ன காஷியர் ஸார்... நீங்கள் ரிடையர் ஆகப் போகிறீர்களாமே ?''

''ஆமாம் ஸார்...வருகிறவர்கள் போகிறவர்களுக்கெல்லாம் எவ்வளவு நாள் தான் பணத்தை வாரிக் கொடுத்துக் கொண்டிருப்பது ?..''

தான் இருப்பார்கள். அவர்கள் ஆயிர மாயிரம் மைல்களுக்கப்பால் இருந்தாலும் இந்த ஏக்கம் இருந்து கொண்டு தான் இருக்கும். அருகில் இருந்துவிட்டால்?..

தை மாதமாகையால் வானத்தில் மேகங்கள் இல்லை. அது வளர் பிறை. பொட்டுப் பொட்டாய் விண்ணெங்கும் புள்ளிக் கோலங்களாகத் தாரகைகள் கொலுவிருந்தன. அவற்றின் இடையே சந்திரனின் ஆட்சி உலகை ஒளியிலே தோய்த்து எடுத்தது.

இளம் தென்றல் வீசியது. ஆனால் திருமண வீட்டார் தங்கியிருந்தது ஒரு சாதாரண சத்திரம். மிக மிகப் பழமையானது. சுண்ணாம்பு அடித்து வெகு காலம் ஆனது. ஆங்காங்கு சுவரில் அழுக்கேறியும் பழுப்புடனும் காணப் பட்டது.

சத்திரத்துத் திண்ணைகளில் சிலர் படுத்து விட்டார்கள். உள்ளே அநேகம் அறைகள் காலியாகவே இருந்தன.

மாதவன் கண்களை விழித்தவாறு தலையை உயர்த்தி ஜன்னல் வழியாக வெளியே பார்த்தான். அந்த இரவு என்றுமில்லாத புதுமையாக அவனுக்குக் காட்சி தந்தது. அத்துடன் அவன் இனி 'தனியன்' அல்ல என்கிற எண்ணமும் ஊடே எழுந்தது.

'என் நீலா எங்கே?'

தனக்குள்ளாகவே கேட்டவன் திரும்பி, கூடத்தைப் பார்த்தான். தலையில் சூட்டிய மல்லிகை மலரும், மை கரைந்த நீள் விழிகள் சோர, புதுப் புடவை மெருகிட வாழைத் தண்டு போல நீண்டிருந்த கையை தலைக்குயரமாக வைத்துக் கொண்டு நீலா கண் வளர்வது நன்றாகத் தெரிந்தது.

'சே! சரியான ஜடம்! என்ன தூக்கம் வேண்டி இருக்கிறது?'

'விசுக்'கென்று எழுந்து விட்டான் மாதவன். நீலாவின் பக்கத்தில் ஒரு பத்து வயதுப் பெண் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தது.

கனவு உலகத்தில் களித்திருந்த நீலாவின் முகவாயைப் பற்றி வருடி எழுப்பிய கரங்கள் மாதவனுடையவை. அவள் கன்னங்கள் சிவந்தன.

நேரம் ஏற ஏற நிலவு அடிவானத்தை நோக்கி கனவேகமாகப் போய்க் கொண்டிருந்தது. சற்று முன்பு உலகத்துக்கு அழகு தந்த ஒளி மறைந்து இப்போது இருளாகப் பரவி வந்தது.

விடிய இன்னும் எவ்வளவோ நாழிகை இருக்கிறதே!

அந்த இருளின் ஊடே நீலா அலையக் குலைய வேகமாக சத்திரத்துத் திண்ணையை நோக்கிப் பாய்ந்து ஓடி வந்தாள்.

''அம்மா..அம்மா!..''

அவளுடைய பயங்கரமான அலறல் அந்தப் பிராந்தியத்தையே அலற வைத்தது.

''என்ன? என்ன?..''

''ஏன் ஏன்?''

ஒன்றுக் கொன்று சம்பந்த மில்லாமல் கேள்விகள் பிறந்தன.

''அம்மா உள்ளே வாருங்களேன்!.. அவரை வந்து பாருங்களேன்...—''

நீலா எல்லோரையும் கூட்டிக் கொண்டு உள்ளே ஓடினாள்.

மாதவன் திணறிக் கொண்டிருந்தான். வேதனைப் பட்டான். அணு அணுவாக அடங்கிக் கொண்டிருந்தான்.

''மாது...'' என்று அமைதியைக் கிழித்துக் கொண்டு அன்னையின் குரல் ஒலித்தது. அருகே நிற்கும் மருமகளின் தோற்றம்? கீழே சிதறிக் கிடக்கும் மலர்கள்?

''மாதூ..''— அன்னை முட்டிக் கொண்டாள். மாதவன் முகத்தில் அமைதி நிரம்பி இருந்தது. கண்கள் மூடிக் கிடந்தன. ஊரே திரண்டு விட்டது. ஆறுதலுக்கோ தேறுதலுக்கோ அவசியமில்லாத நிலையில் அங்கே ஒரு உண்மையை ஊரார் எல்லோருமே பார்த்தார்கள்.

பழுப்பேறிய சுவரில் கரித் துண்டினால் 'அவளும்..நானும்..மனோ வாக்கு காயத்தினால்...'

வாக்கியம் முடிவு பெறவில்லை.

ஒரு நாள் வாழ்ந்து ஓய்ந்து விட்ட அந்தப் பெண்ணை அவர்கள் எந்தக் கண் கொண்டு பார்த்தார்கள் என்பது வேறு விஷயம்.

வற்றி உலர்ந்துபோன விரல்கள் அடுத்த பத்தாவது மாதத்தில் மடியில் குழந்தையைக் கிடத்தியவாறு மாதவனின் சேயை வருடிக் கொண்டிருந்தது. குழந்தை மாதவனின் மறு அச்சு என்று பாட்டி யுள்ளம் எண்ணி மகிழ்ந்தது.

எங்கும் நிறைந்த இறைவன், இறைவிக்கு இந்தக் காட்சியைச் சுட்டிக் காட்டத் தவறவில்லை.

# மணத்திலே கரைந்து...

ஸரோஜா ராமமூர்த்தி



அவளை அந்த நிறப் புடவையில் பார்ப்பதற்குத்தான் அவனுக்குப் பிடித்திருந்தது. வெளிர் நீல நிறப் புடவை, அதே கலரில் ரவிக்கை, வளையல்கள், பொட்டு, புஷ்பம் எல்லாமே. எல்லோரையும் போல அவள் கூந்தலை இழைய வாரிக்கொள்வதில்லை; பின்னிக்கொள்வதில்லை. கழுத்துப் பிடறிக்குக் கீழ் கொஞ்சம்தான் கூந்தல் வளர்ந்திருந்தது. ஸ்பிரிங் கற்றைகள் போல் நெளி நெளியாக இருந்த அதை அவள் வெளிர் நீல ரிப்பனால் முடித்திருந்தாள்.

காலையில் 9.05 மின் வண்டியில் தவறாமல் அவளை அவன் பார்த்து வருகிறான். பெரிய இடத்துப் பெண்ணாக இருக்க வேண்டும். அளவோடு பேசி, அடக்கமாக அவள் சிரிப்பது அவனுக்குப் பிடித்திருந்தது. அவளும் அவனை ஒருவேளை கவனித்திருக்கலாம். ஒருநாளைப் போல் விரல் இடுக்கில் சிகரெட்டும் கையுமாக வெளிர் நீல ஷர்ட்டும், பேண்டும் அணிந்து கொண்டு பெண்கள் பெட்டிக்கு எதிராக நிற்பவன் அவள் பார்வையிலிருந்து தப்ப முடியாது. அவனைக் கண்டதும் அவள் ஒரு விதப் புன்னகையுடன் நெற்றியில் விழும் குழற் கற்றையை ஒதுக்கியவாறு வெளியே சாலையில் தெரியும் மரத்தைப் பார்ப்பாள்.

அதற்குள் ரயில் கிளம்பிவிடும். அவன் அவளைத் தொடர்ந்து செல்வதில்லை.

அவள் காலை நேரங்களில் சரியாக ஒன்பது மணிக்கு அவசரமாகப் பிளாட்பாரத்துக்குள் நுழைவாள். அவனைக் கடந்து அவள் போகும் போது வீசும் அந்த மணம்? சந்தன வாசனை? ஓ! அவள் சந்தனப் பவுடர்தான் பூசுவாள் போலும்! ஜாதி மல்லிகை சூடிக்கொள்வாள்.

ஒரு விநாடி அவன் உள்ளம் கிறங்கிப் போகும். இந்த வாசனையைக் காலம் காலமாக நுகர்ந்த நினைவுகள் அவன் உள்ளத்தில் கிளர்ந்தெழும். அதற்குள் 9.05 ரயில் வந்து விடும். அவள் அதில் ஏறி ஜன்னல் ஓரத்தில் உட்கார்ந்து வெளியே தெரியும் மரத்தில் தொற்றிக் கொண்டு கிசுகிசுக்கும் குருவிகளை வேடிக்கை பார்க்க ஆரம்பிப்பாள். ரயில் புறப்பட்டுப் போன பிறகு அவனுக்கு உலகமே வெறுமையாகத் தோற்றம் அளிக்கும்.

மறுபடியும் மாலை நேரத்தில் 18.22 ரயிலில் தான் அவள் திரும்புகிற வழக்கம். நாள் முழுதும் வேலை செய்து களைத்த தோற்றமே அவளிடம் இருப்பதில்லை. காலையில் சூடிக் கொண்டிருந்த மலர்கள் உலர்ந்து சருகாகத் தொங்காமல் புத்தம் புதிய மலர்கள் அவள் கூந்தலை அலங்கரிக்கும்.

திரும்பவும் அதே சந்தன வாசனை. மலர்களின் மணம். சில சமயங்களில் அவளுடன் இன்னொரு பெண்ணும் பேசிக் கொண்டு வருவாள். நல்ல கறுப்பு அவள். கண்களுக்குப் பட்டையாக மை தீட்டியிருப்பாள். பெரிய பெரிய பூப்போட்ட புடவை கட்டிக்கொண்டு கைப் பையை வீசியபடி ஒய்யாரமாக அவள் நடந்து வரும்போது இவள் குத்துவிளக்கு போல் குளுமையாக, அளவோடு சிரித்துப் பேசியபடியே வருவாள்.

'பெண்களில்தான் எத்தனை வகை?' என்று நினைத்துக் கொள்வான் அவன். ஒரு நாள் மாலை இவர்கள் அவனைக் கடந்து போகும் போது அந்தக் கறுப்புப் பெண் உரக்க இவனைப் பார்த்து, 'ரோமியோ' என்று கத்தி

விட்டுப் போனாள். அவள் இவனைப் பரிதாப மாகத் திரும்பிப் பார்த்துப் 'பேசாமல் வாயேன்' என்றபடி முன்னாடி நடந்தாள்.

பரிதாபப்படும் அந்தக் கண்களில் நீர் பளபளவென்று மின்னுவதைக் கவனித்தான். இன்னும் ஏதாவது அந்தக் கறுப்புப் பெண் சொல்லி யிருந்தால் அவள் அழுதிருப்பாளோ என்று நினைத்துப் பார்த்தான். அப்படி அழுதிருந்தால் அந்த முகம் தாமரை மலர் போல் சிவந்து வாடிக் கூம்பிப்போகுமே என்றும் நினைத்தான்.

இப்போதெல்லாம் அவனுக்குச் சிகரெட் புகைப்பது பிடிப்பதில்லை. காற்றில் வீசும் அந்தச் சந்தன மணத்தை மூழ்கடித்தபடி இந்தப் புகை புகையிலை வாடையைக் குப்பென்று வீசியது. அப்படியே அந்த மணத்தில் கரைந்து....

மனத்துக்கு ரம்மியமான, இதமான, கவிதை போன்ற வாசனையை, ஒரு பேயைப் போல் இந்த 'நிகோடின்' மணம் துரத்தி விடுவதாக நினைத்தான். ஆனால், புகைப்பவர்களால் அவ்வளவு சடுதியில் அதை விட முடிவதில்லையே. அதற்காக மிட்டாய்கள், அது இது என்று வாயில் எதையாவது குதப்பிய படி அவன் அங்கு நின்றிருப்பான்.

9.05 மின் வண்டி வந்து நின்றதும் அவன் கண்கள் பிளாட்பாரத்தைத் துழாவின. அவளைக் காணோம். கறுப்புப் பெண் மாத்திரம் வந்து கொண்டிருந்தாள். அன்று ஏதோ ஒரு துணிச்சலில் அவன் வீட்டில் மலர்ந்த நித்திய மல்லிகையைச் சரமாகக் கட்டிக் கொண்டு வந்திருந்தான். அவனுக்கு மல்லிகையைத் தொடுக்கத் தெரியாது. இதற்காகக் காலையிலிருந்து அவன் தங்கையுடன் மல்லுக்கு நின்று அவளுக்கு இரண்டு ரூபாய் இனாம் கொடுத்துப் பூத் தொடுக்க வைத்திருந்தான்.

''யாருக்கண்ணா இது?'' என்று கேட்டாள்.




''யாருக்கோ?''

''சொல்லண்ணா...''

''அம்பாளுக்கு...''

''உனக்கு எப்போ பக்தி வந்தது அண்ணா?'' என்று வியந்தாள் தங்கை.

அம்மா இவனைப் பார்த்துச் சிரித்துவிட்டுப் பூஜை உள்ளுக்குக் கோலம் போடப் போனாள்.

''சொல்லேன். நிஜத்தைச் சொல்லேன்.''

''அவன்தான் சொல்றானே. அம்பாளுக்குத்தான் இருக்கும். அவனுக்கு நல்ல புத்தி வரணும்னு, பக்திமானா ஆகணும்னு நான் தினமும் அபிராமியை வேண்டிக் கொண்டிருக்கேன்.'' அம்மா ஹிருதய கமலம் அழகாகப் போட்டுச் செம்மண் தீற்றிக் கொண்டிருந்தாள்.

''கொஞ்சம் ஓர் இணுக்குக் கிள்ளி வைச்சுட்டுப் போடா. படத்துக்குப் போடணும்.''

''நாளையிலேருந்து போடு. நான் இன்னிக்கு முழுதும் எடுத்துண்டு போறேன்—''

''சரி, எல்லாம் அம்பாள்தான்'' என்று திருப்திப்பட்டுக் கொண்டாள் அம்மா.

கறுப்புப் பெண் இவனைக் கடக்கும்போது 'மிஸ்' என்று வாய்வரையில் வந்த சொல்லை மென்று விழுங்கியபடி அவளைப் பார்த்தான். அவள் கர்வத்தோடு நடந்து சென்று வண்டியில் ஏறும்போது பிளாட்பாரத்தின் கோடியில் இவள் வந்து கொண்டிருந்தாள். வண்டி போய்விட்டது. நெற்றியில் வியர்வை பொடித்திருந்தது. இன்று சந்தண வண்ணப் புடவை கட்டியிருந்தாள். முகம் வாடிப் போயிருந்தது. வீட்டிலே ஏதாவது வேலை இருந்திருக்கும். அம்மாவுடன் வாக்குவாதம் வந்திருக்கும். தம்பி, தங்கைகள், ரிடையர்டு ஆன அப்பா இவர்களைச் சமாளித்துக் குடும்ப பாரத்தைச் சுமப்பவளாக இருக்கலாம்.

பாவிகள்! ஏன் இப்படி அனிச்ச மலரைப் போன்றவளை வேலைக்கு அனுப்புகிறார்களோ? அழகாகக் கல்யாணம் பண்ணி வைக்கக் கூடாதோ!

அவன் குறுக்கும் நெடுக்குமாக உலவினான். ஜேபியில் இருந்த மல்லிகைச் சரம் மணத்துக் கொண்டேயிருந்தது. குட்டைத் தலை முடியில் இன்று மலர் இல்லை. ''இந்தா இதை வைச்சுக்கோ!'' என்று கொடுத்துவிட முடியுமா?

கொடுத்தால்? அவள் சிரிப்பாள். உடனே வாங்கித் தலையில் சூடிக் கொள்வாள். இல்லை, இல்லை. அவனை விழித்துப் பார்த்து ''யூ! ராஸ்கல்!'' என்று சத்தம் போடுவாள்.

''அம்பிகே!'' என்று நினைவு தெரிந்த நாட்களாய் நினைக்காத ஒருத்தியைச் சலிப்புடன் அழைத்தான். ரயில் வந்தது. ஏறி அமர்ந்தாள். அம்பிகையைப்பற்றி அம்மா அடிக்கடி சொல்லுவாள். ''நான் சமீபத்திலே திருக்கடையூருக்குப் போயிருந்தேன். அம்பாளைப் பார்த்தப்போ அவள் தீவிரமாகச் சிந்தனை செய்வது போல் இருந்தது. ஞானத்தின் ஒளி வீசிக் கொண்டிருந்தது.''

''போடி போ. நான் பல தடவை திருக்கடையூர் போயிருக்கேன். அபிராமி சிரித்தபடி இருக்கிறாள்...'' அப்பா எதிர்க் கணை தொடுப்பார்.

இவள் முகத்திலே வீசுவது ஞானமா? நகையா?

ரயில் கிளம்பியதும் பூச்சரத்தை வெளியே எடுத்தான். குப்பென்று மணம் வீசியது. சலிப்புடன் வீட்டுக்குத் திரும்பியவன் எதிரில் கிராம தேவதை கோயில் தென்பட்டது. சன்னிதி சாத்தியிருந்தது. நட்டிருந்த சூலத்தின் மீது சரத்தைப் போட்டுவிட்டு நடந்தான்.

**மா**லை 18.22 ரயிலில் அவளும், கறுப்புப் பெண்ணும் வந்தார்கள். இருவரும் அந்தரங்கமாக ஏதோ பேசியபடி வந்தார்கள். கறுப்புப் பெண் ஏதோ சொல்ல இவள் நாணித் தலை குனிந்து நடந்தாள்.

இடையில் இரண்டு நாட்கள் விடாமல் மழை பெய்தது. இவனுக்கு நல்ல குளிர் காய்ச்சல். 9.05 ரயில் வருவதைக் கற்பனையில் பார்த்தபடி படுக்கையில் கிடந்தான். வெளிர் நீலப் புடவையில் அவளைக் கண்டான். திடீரென்று படுக்கையிலிருந்து துள்ளி எழுந்தான்.

''எங்கேடா?'' என்று கேட்டபடி அம்மா கஞ்சியை ஆற்றிக் கொண்டே வந்தாள்.

''சும்மா இப்படி—''

''நன்னா யிருக்கு. இன்னும் ஜுரம் விடவில்லை. இந்தக் காத்துலே மழையிலே சும்மா இப்படி!''

''கஞ்சியை வைச்சுட்டுப் போ!'' என்று இரைந்தான் அவன்.

அம்மா பயந்தபடி வெளியே போய் விட்டாள்.

பதினைந்து நாட்களுக்கப்புறம் ஜுரம் விட்டது. மேஜை டிராயரைத் திறந்து சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்தான்.

ஆனால், அது சந்தண மணம் வீசியது.

இவனுக்கு ஜுரம் விட்ட பிறகு கூட மழை விடவில்லை. 'ஆகாயத்திலே இவ்வளவு ஜலத்தை எப்படி 'ஸ்டோர்' பண்ணினா?' என்று குழந்தைத்தனமாக மனம் கேட்டது.

**அ**றையைப் பெருக்க வந்த அம்மா, ''ஏண்டா இப்படிச் சிகரெட் குடிக்கறே? உடம்பு என்னத்துக்காகும்?'' என்று ஆதங்கப்பட்டாள்.

''உடம்பைப் பத்தி இப்ப யார் கவலைப்படறா?''

''அடடா! பெரிய ஞானக் கொழுந்தா மாறிண்டு வரயே...'' என்று ஆச்சரியப்பட்டாள் அம்மா. பிறகு நீளமான கவர் ஒன்றைக் கொண்டு வந்து ''உனக்கு அம்பாளிடம் பக்தி வந்தவுடனேயே வேலை கெடச்சுது பார். காசியிலே சர்வகலாசாலையிலே உன்னைப் புரபொஸரா எடுத்துண்டு இருக்காளாம். நேத்திக்கே இந்தக் கவர் வந்தது. உனக்கு நல்ல ஜுரம் இருந்தது. அதனாலே காண்பிக்கலை'' என்றபடி அவனிடம் கொடுத்தாள். அவன் அதை மேஜையின் மீது வீசி எறிந்தான். மழைக் கோட்டை மாட்டிக் கொண்டு வாசலுக்கு வந்தான்.

''ஏண்டா மழையிலே போறே? எங்கேடா?'' என்று அப்பா கேட்டார்.

அவன் அவரைத் தீர்க்கமாகத் திரும்பிப் பார்த்தான். ''சுடுகாட்டுக்கு'' என்று மழையின் இரைச்சலையும் மீறிக் கத்தியபடியே நடந்தான்.

பிளாட்பாரத்தில் 9.05 ரயில் வந்து நின்றது. அவளுடன் கறுப்புப் பெண்ணும் இன்னொருவனும் நின்றிருந்தார்கள். பெட்டிகள், படுக்கை, தகர டப்பாக்கள், எல்லாம் அவளுடன் வண்டியில் ஏற்றப்பட்டன. அவனும் அவளும் வண்டியில் ஏறினார்கள். அவள் கழுத்தில் மஞ்சள் சரடு மின்னியது. மலர் போன்ற பாதங்களின் விரல்களில் மெட்டிகள் குலுங்கின. கறுப்புப் பெண் கண்ணீர் வழிய அவளுக்கு விடை கொடுத்தாள்.

அவனுக்குச் சட்டென்று தன் வீட்டில் மேஜையின் மீது வீசியெறியப்பட்ட கவர் நினைவுக்கு வந்தது. சிகரெட் ஒன்றை எடுத்துப் பற்றவைத்துச் சுவைத்துப் புகைத்தான். அதில் சந்தண மணம் வீசவில்லை. நிகோடின் மணத்தது!

மருதாணி இட்ட விரல்களால் ஸ்நானம் செய்த கூந்தலை ஆற்றிக் கொண்டே, மைதிலி ஊஞ்சலில் உட்கார்ந்திருந்தாள். தாய்மைப் பேற்றை அடைந்திருப்பதால் அவள் முகம் பார்ப்பதற்கு வசீகரமாக இருந்தது. தந்தத்தில் கடைந்தெடுத்தமாதிரி அவள் கைகள் உருண்டு திரண்டு இருந்தன. அக் கைகளில் நிறையக் கண்ணாடி வளையல்களைப் போட்டிருந்தாள் மைதிலி. வளைகாப்புக்கென்று




# அணையாத தீபம்

அவள் கணவன் தில்லியிலிருந்து நல்ல மாதிரியான வளையல்கள் வாங்கி அனுப்பியிருந்தான். நீல நிறத்தில் மெல்லிய கைத்தறிப் புடவை ஒன்றை உடுத்தி வெள்ளை நிறத்தில் சோலி போட்டுக் கொண்டிருந்தாள் மைதிலி. புடவையின் நீல வண்ணம் அவளது சிவந்த கன்னங்களில் நிழல் அடித்தது.

சமையலறையிலிருந்து பார்வதி அம்மாள்—மைதிலியின் தாய்—ஒரு தட்டில் வெற்றிலைப் பாக்கை எடுத்துக் கொண்டு ஊஞ்சல் அருகில் வந்து நின்றாள். மைதிலியின் அழகைப் பார்த்து அவள் ஆச்சரியம் அடைந்தாள். அவள் கண்ணே பட்டுவிடும்



போல் இருந்தது. வெற்றிலைக்குச் சுண்ணும்பு தடவிக்கொண்டே பார்வதி யோசித்தாள்.

'இப்படி ஒரு அழகு வந்து உடலை மூடிக் கொண்டிருக்கிறதே! இந்தப் பெண் பெற்றுப் பிழைக்க வேண்டுமே!' என்று அவள் மிகவும் கவலைப்பட்டாள்.

"நிற்கிறயே அம்மா! உட்காரேன்!" என்று மைதிலி தாயைப் பார்த்துச் சொல்லி விட்டு, அவள் அமரச் சற்று நகர்ந்தும் உட்கார்ந்து கொண்டாள்.

பார்வதி அம்மாள் உட்கார்ந்து கொண்டாள். பிறகு மகளின் பக்கம் திரும்பி, "உன் புருஷனிடமிருந்து கடிதம் ஏதாவது வந்ததா அம்மா? சீமந்தத்துக்கு நாள் பார்த்தாயிற்று என்று உன்னுடைய அப்பா சொன்னரே?" என்று கேட்டாள்.

"வந்தது, ஒரு வாரம் லீவில் கிளம்பி வருவதாக எழுதி இருக்கிறர். சீமந்தச் செலவு முழுதும் அவருடையதாக இருக்க வேண்டுமாம். இது அவர்கள் வீட்டுச் செலவுதானே? எனக்கு மாமியார், மாமனுர் இல்லாத காரணத்தால் நீங்கள் எல்லாப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டு செய்கிறீர்கள்" என்று சொன்னுள் மைதிலி.

"யார் செய்தால் என்ன? நல்லபடியாக முடியவேண்டியது ஒன்றுதானே முக்கியம்? உன்னைக் கையும் குழந்தையுமாக மறுபடியும் உன் புருஷனிடத்தில் சேர்த்து விட்டால் போதும்" என்றுள் பார்வதி.

அவள் கண்களில் கண்ணீர் துளித்திருந்தது. அது ஆனந்தக் கண்ணீரா, அல்லது சோகக் கண்ணீரா என்பது பார்வதிக்கே புரியவில்லை.

மகள் சிரித்தாள்.

"மாப்பிள்ளை கொடுக்கும் பணத்தைப் பேசாமல் வாங்கிக் கொள், அம்மா! திருப்பி நீ அதை எனக்குத்தானே தரப் போகிறய்?" என்றுள் மைதிலி.

மைதிலி அவர்களுக்கு ஒரே மகள். சீருக்கும், சிறப்புக்கும் குறைவுண்டா?

வெளியே போயிருந்த தகப்பனுர் வந்தார்: மகள் அருகில் வாஞ்சையுடன் உட்கார்ந்து கொண்டார். கையிலிருந்த மிட்டாய்களை எடுத்துக் கொடுத்தார்.

"இவ்வளவு எதற்கு அப்பா? திகட்டிப் போகிறதே! எங்கள் தில்லியில் கிடைக்கிற மாதிரிதான் இங்கே கான்பூரிலும் கிடைக்கிறது. வேறே புது மாதிரியாக ஒன்றையும்



காணோமே!'' என்று சொல்லிக் கொண்டே மிட்டாய்களைச் சாப்பிட்டாள் மைதிலி.

'' கண்டதை யெல்லாம் வாங்கிக் கொண்டு வந்து கொடுத்துப் பிள்ளைத்தாய்ச்சியின் உடம்பைக் கெடுக்கிறீர்களே!'' என்று பார்வதி கோபித்துக் கொண்டாள்.

தில்லியிலிருந்து ராமச்சந்திரன் சீமந்தத்துக்கு முன்பாகவே வந்து விட்டான். அவன் வண்டியிலிருந்து இறங்கி உள்ளே நுழைந்ததும் கூடத்தில் நின்று கொண்டிருந்த மைதிலியைப் பார்த்துப் பிரமித்துப் போனான். தில்லியில் மைதிலி இருந்தபோது மசக்கைத் தொந்தரவினால் இளைத்துப் போயிருந்தாள். அதற்கு மாறாக இப்பொழுது கொழுகொழுவென்று பருத்து, உடலில் வனப்பு மேலிட அவள் நின்றபோது அவன் மனத்தில் சந்தோஷம் பொங்கிப் பெருகியது.

சாப்பாட்டுக்கு அப்புறம் மாடியில் இருவரும் தனிமையில் பேசிக் கொண்டிருந்தார்கள். பட்டுப்போன்ற அவளது கரங்களைத் தொட்டு அதில் அணிந்திருந்த வளையல்களைப் பார்த்தான் ராமச்சந்திரன். விரல்களில் இட்டிருந்த மருதாணிச் சிவப்பும் கண்ணாடி வளையல்களின் பல வர்ணங்களும் அந்த மென் கரங்களுக்கு அப்படி ஒரு அழகை அளித்தன.

''ஹூம்..அப்புறம் என்ன விஷயம்? இது தான் வளைகாப்பு வளையல்களா? பேஷாக இருக்கிறதே? நான் அனுப்பிய வளையல்கள் எங்கே மைதிலி?'' என்று கேட்டான் அவன்.

மைதிலி தன்னுடைய மற்றொரு கரத்தைத் தூக்கி அவன் ஆசையுடன் அனுப்பிய வளையல்களைக் காண்பித்தாள்.

''சரி! உனக்குச்சீமந்தத்துக்கு என்ன வாங்கி வந்திருக்கிறேன் தெரியுமா?'' என்று கேட்டான் ராமச்சந்திரன்.

''ஆமாம்! எனக்குத் தெரியாதாக்கும்! தூத்பேடாவும் ஹல்வாவும் வாங்கி வந்திருப்பீர்கள்!'' என்றாள் மைதிலி.

அவன் எழுந்து அறைக்குள் சென்று பெட்டியைத் திறந்து ஒரு அட்டைப் பெட்டியை எடுத்து வந்தான். அதனுள் அழகிய பட்டுப் புடவை ஒன்று இருந்தது. ஆகாச வர்ணத்தில் ஜரிகையில் நக்ஷத்திரங்கள் போட்ட அந்தப் புடவை நிலவொளியில் 'தக' 'தக' வென்று மின்னியது.

'' அடேயப்பா! என்ன விலை?'' என்று கேட்டாள் மைதிலி மகிழ்ச்சி பொங்க.

'' நூற்றைம்பது ரூபாய்!...''

இப்படி, கணவனும் பெற்றோரும் அன்பைச் சொரிந்து வந்தார்கள் மைதிலியின் பேரில்.

சீமந்தம் விமரிசையாக நடந்தது. மாலையில் மைதிலியை மணையில் உட்காரவைத்துப் பாடினார்கள். அவள் கணவன் அன்புடன் வாங்கி வந்த நீலப் புடவையை உடுத்திக் கொண்டு அவள் உட்கார்ந்திருந்த காட்சி தெய்வலோக மங்கையொருத்தி அலங்கிருதையாக வீற்றிருப்பது போல இருந்தது. மஞ்சள் குங்குமத்துக்கு வந்திருந்த பெண்களே, '' அப்பா! என்ன அழகு! இப்படியும் ஒரு பெண்ணுக்கு அழகு வருமா? நல்லபடியாகப் பெற்றுப் பிழைக்க வேண்டுமே!'' என்று பேசிக் கொண்டார்கள்.

மைதிலியின் தாய் பார்வதிக்கு மட்டும் மனத்துள் 'சுரீர்' என்று ஏதோ வேதனை செய்து கொண்டிருந்தது. ராமச்சந்திரன் சீமந்தம் ஆனபிறகு இரண்டு தினங்களில் ஊருக்குப் புறப்பட்டான். மனைவிக்கு அவனை விட்டுப் பிரியவே மனமில்லை.

'' மனசிலே ஏதோ சங்கடம் செய்கிறது. லீவு போட்டு விட்டுப் பிரசவத்தின் போது என்னுடனேயே வந்து தங்கி விடுங்கள்'' என்று கேட்டுக் கொண்டாள் மைதிலி. அவளுடைய சுந்தர வதனத்தில் துக்கம் பரவியிருந்தது. கண்களிலிருந்து கண்ணீர்த்துளிகள் உருண்டு ராமச்சந்திரனின் கரங்களை நனைத்தன. அவன் கைகளை எடுத்துக் கண்களை மூடிக் கொண்டு விசித்தாள் மைதிலி.

'' பிரசவம் என்றால் பயப்பட வேண்டிய காலம் எல்லாம் போய் விட்டது. நம் பாட்டிகள் காலத்தைப் போல இந்தக் காலத்தில் பிரசவத்தில் கோளாறுகள் ஏற்பட்டு, ஆபத்தில் முடிவதில்லை. தைரியமாக இரு'' என்று தேற்றினான் ராமச்சந்திரன்.

எல்லோரும் தெய்வத்தை நம்பியிருந்தார்கள். நாள் தவறாமல் நல்ல வைத்தியரிடம் உடம்பைக் காண்பித்து ஜாக்கிரதையுடன்தான் மைதிலி இருந்து வந்தாள்.

★

தெய்வத்தின் சித்தம் வேறாக இருந்தது. அவள் வழக்கமாக உடம்பைக் காண்பித்து வரும் வைத்தியர் ஊருக்குப் போய்விட்டார். அவர் வெளியூர் சென்றிருந்த சமயம் மைதிலிக்கு உடம்பு சரியில்லை. அவசரத்துக்கென்று புது வைத்தியரைத் தேடிப் போனார்கள். அந்த வைத்திய விடுதியில் சேர்த்து, விடுதியின் லேடி டாக்டர் குலாப் வந்து பார்க்க நேரமாகி விட்டது. அதற்குள் காலன் அவசரப்பட்டு வந்து விட்டான். பிரசவித்து இரண்டு மணி நேரத்துக்கெல்லாம், உடம்பெல்லாம் நீலமாக விஷம் பரவி அண்மையில் நின்று தவிக்கும் பெற்றோரையும் தங்கச் சிலைபோல் அப்பொழுதுதான் உலகத்துக்கு வந்திருக்கும் பச்சிளங் குழந்தையையும் தவிக்க விட்டு மைதிலி கண்ணை மூடிவிட்டாள்.

அவள் தாய்மை அடைந்து பிறந்தகம் வந்ததிலிருந்து மனத்திலே வேதனையைத் தாங்கிக் கொண்டிருந்த பார்வதி அம்மாள் எரிமலை வெடிப்பது போல் துக்கத்தால் குமுறினாள். கல்லினும் கடினமாக அவள் தந்தை அசையாமல் உட்கார்ந்து விட்டார். தில்லியிலிருந்து விமானத்தில் பறந்து வந்த கணவன் தலை உடைந்து போகிற மாதிரி துக்கத்தினால் அலறினான்.

அவர்களுடைய தாம்பத்திய வாழ்க்கைக் காலம் மிகக் குறுகியதாக இருந்தாலும் அது அவ்வளவு உறுதிப்பட்டு இருந்தது என்பது அவனுடைய எல்லை கடந்த துயரைப் பார்த்தே அறிந்துகொள்ள முடிந்தது.

'எல்லாம் முடிந்து விட்டது' என்று ஒவ்வொருவருடைய மனமும் தீர்ப்புச் சொல்லி விட்டதுபோல் அவரவர்களுடைய வேலையைப் பார்த்துக் கொண்டு பேசாமல் இருந்து விட்டார்கள்.

டாக்டர் குலாப் ஒரு ஆள் மூலம் தன்னுடைய விடுதியில் குழந்தை-அவர்களுடைய பேத்தி - இருப்பதாக அறிவித்தாள்.

''குழந்தையா அது? என் வயிற்றில் நெருப்பை அள்ளிப் போட்ட எமன்'' என்றாள் பாட்டி பார்வதியம்மாள்.

''இருபது வயது வளர்த்த மகளே நொடியில் போய் விட்டாள். இதுதான் தங்கப் போகிறதாக்கும்'' என்றார் தாத்தா.

''என் மைதிலியை என்னிடமிருந்து பிரித்த சனியன். அது எக்கேடு கெட்டாவது தொலையட்டும்!'' என்று கூறிவிட்டு ராமச்சந்திரன் விரக்தியுடன் தில்லிக்குப் போய் விட்டான்.

உலகத்திலே அனுப்பப்படும் ஜீவனைக் காப்பாற்ற சர்வாந்தர்யாமியாக ஒருவன் இருக்கிறான் என்பதை மனித அறிவு மறந்துவிடுகிறது. எல்லோராலும் வெறுக்கப்பட்ட அந்தச் சிசுவை வளர்க்க விஷ்ணுகரே என்கிற மராட்டியர் ஒருவரும் அவர் மனைவி கிரிஜா பாயும் முன் வந்தார்கள். முதலில் டாக்டர் குலாப் ஆட்சேபணை செய்தாள். குழந்தையின் சொந்தக்காரர்கள் வந்து கேட்டால் அவர்களிடம் குழந்தையை ஒப்புவித்துவிட வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டாள். குழந்தையின் சொந்தக்காரரின் விலாசம் வேறு கிரிஜாபாயிடம் கொடுத்தாள்.

குழந்தை வேண்டும் என்று தவமிருந்த கிரிஜாபாய்க்குக் குழந்தை கிடைக்கவே, குருடனுக்குக் கண்கிடைத்த மாதிரிஇருந்தது.

விஷ்ணுகரே கண்யமான மனிதர். குழந்தையின் தாத்தாவைத் தேடிப் போய்க் குழந்தை தம்மிடம் இருப்பதாகக் கூறினார். அளவுக்கு மீறிய துயரத்தை அளித்த ஆண்டவன் அதை மறக்க ஒரு சிசுவைக் கொடுத்திருப்பதை அறிந்து குழந்தையை ஏற்றுக் கொள்ள வேண்டினார்.

மகளின் பிரிவால் சித்தம் சரியில்லாமல் இருந்த பார்வதியம்மாள் ஒரேயடியாக மறுத்தாள். அவள் மனத்தில் சூன்யம் குடி கொண்டு விட்டது.

அது பாலைவனமாகிவிட்டது. பாலைவனத்தில் நீர் தெளித்த மாதிரி கரேயின் வார்த்தைகள் எடுபடாமல் போயின. இனி, பகவான் ஒருவனால்தான் பாலைவனத்தைப் பசுஞ் சோலையாக மாற்ற முடியும் என்று தீர்மானித்துக் கரே வீடு திரும்பினார். குழந்தை பிறந்தவுடன் எல்லோராலும் திரஸ்கரிக்கப்பட்டு நிராதரவாக விடப்பட்டதால் அதற்குச் 'சகுந்தலா' என்று பெயர் வைத்தார்; தாமே கண்வராகவும் மாறினார் கரே.

பார்வதி தம்பதிகள் கான்பூருக்கே ஒரு முழுக்குப் போட்டுவிட்டுத் தஞ்சைக்கு வந்து சேர்ந்தார்கள். இனி யாருக்காக மைதிலியின் தகப்பனார் உத்தியோகம் பார்க்க வேண்டும்? எல்லாம்தான் முடிந்து விட்டதே!

★

**கா**லத்துக்குத்தான் எவ்வளவு வேகம்! மைதிலியின் பெற்றோர் கான்பூரை விட்டுக் கிளம்பும்பொழுது கார்த்திகை மாதம். அதற்குள் தைப்பொங்கல் வந்து சித்திரை வருஷப் பிறப்பும் ஆகிவிட்டது. பண்டிகைகளும் பருவங்களும் மாறி மாறி வந்து போயின. இலை உதிர்ந்து காய்ந்த கம்பாய் நின்ற மரம் தளிர் விட்டுப் பூத்துக் குலுங்கிக் காய்த்துப் பழங்களைச் சிந்தின. ஓயாமல்



**ராணிப்பேட்டை கே. வி. ராகவனின் புதல்வியும், பத்தக்குடி ராமஸ்வாமியின் மாணவியுமான குமாரி ஹேமமாலினியின் நடன அரங்கேற்றம் சமீபத்தில் சென்னை, மியூஸியம் தியேட்டரில் சிறப்பாகக் கொத்தமங்கலம் சுப்பு அவர்கள் தலைமையில் நடைபெற்றது. பேராசிரியர் ஸ்ரீ பி. சாம்பமூர்த்தி அவர்கள் ஹேமமாலினியைப் பாராட்டிப் பேசினார்.**

ஒழியாமல் இயற்கை தன் வேலையைச் செய்து கொண்டே போயிற்று. பார்வதி அம்மாளுக்கும் அவள் கணவருக்கும் உலக வாழ்க்கை முதலில் சூன்யமாகத்தான் இருந்தது, காய்ந்த மரத்தைப் போல. பிறகு படிப்படியாக மனத்தில் ஆசைகளும் விருப்பங்களும் எழ ஆரம்பித்தன. பதினைந்து வருஷங்களுக்கு மேல் ஆகிவிட்ட பிறகு மனத்தில் சுட்ட புண் ஆறித்தானே போயிருக்கும்!

ஆம்! மைதிலி இறந்து போய்ப் பதினைந்து வருஷங்கள் ஆகிவிட்டன. இந்தப் பதினைந்து வருஷ காலத்தில் சில சமயங்களில் கான்பூரில் கரேயின் குடும்பத்தில் விட்டு வந்த தங்கள் பேத்தியை நினைத்துப் பேசிக் கொண்டார்கள். ஒரு மாதம் கூட நிரம்பாத குழந்தையை விட்டு வந்தவர்கள் சாவகாசமாகக் குழந்தைக்கு நான்கைந்து வருஷங்கள் கழித்த பிறகு மனச்சங்கடம் ஆறி அதைப்பற்றி நினைத்தார்கள். எழுதி விசாரிக்கலாமா என்றும் யோசித்தார்கள். கான்பூரிலிருந்து தஞ்சைக்கு வந்திருந்த தென்னிந்தியக் குடும்பத்தினர் ஒருவரைச் சந்தித்து விசாரித்தும் பார்த்தார்கள்.

''கரேயா! அவரை எங்கோ சிம்லாவுக்கு மாற்றி விட்டார்களாமே! அவர் ஊரை விட்டுப் போய் இரண்டு வருஷங்களுக்கு மேல் ஆகி விட்டதே!'' என்று அவர்கள் தகவல் தெரிவித்த பிறகு, இருவருடைய ஆசையும் நசித்து விட்டது. ''நம் வயிற்றில் பிறந்தது ஒன்றுதான், அதுதான் போய் விட்டதே!'' என்ற தீர்மானத்துக்கு வந்தார்கள்.

அங்கே தில்லியில் ராமச்சந்திரன் மறுமணம் செய்து கொள்ளவேயில்லை. பெயருக்கேற்ப ஏகபத்தினி விரதனாகவே யிருந்து விட்டான்.

மைதிலியின் உருவம் அவன் மனத்தில் பதிந்து போயிருந்தது. புறத்தில் அவன் வேறொருத்தியை மணந்து போலி வாழ்க்கை வாழ ஆசைப்படவில்லை. ஆனால், அவன் மனத்துள் அவன் மைதிலிக்கு ஏதோ தீங்கு இழைத்து விட்டதாகவே கருதினான். இறந்தவளின் ஆத்மா சாந்தியடைந்திருக்குமா என்று ஏங்கினான். மனைவியின் உயிரற்ற உடலுக்கருகில் டாக்டர் குலாபின் வீட்டில் 'வீல் வீல்' என்று அழுது கொண்டிருந்த சிசுவின் முகம் அவனுக்கு இலேசாக நினைவு வரும். அந்தக் குழந்தை,—ஒரு வேளை அதுவும் போய் விட்டதோ என்னமோ என்று நினைத்துக் கொண்டான். மனைவி ஒருத்தியால்தான் கணவனின் வாழ்க்கை பூர்த்தியடைகிறது என்று நம்பி வந்த அவனுடைய உள்ளத்தில் ஆட்டம் கண்டது.

நாற்பது வயதுக்கு மேல் குழந்தைகளின் பேச்சும் இன்சொல்லும் மனைவியின் அன்பை விட ஆறுதலளிக்க முடியும் என்று நினைத்த போது, அவனுடைய உள்ளம் தன் ஒரே குழந்தைக்காக ஏங்கியது.

விஷ்ணு கரேயின் குடும்பத்தில் தான் எத்தகைய மலர்ச்சி? ஒரு மகவுக்காகத் தவமிருந்த கிரிஜாபாய்க்கு, சகுந்தலா கிடைத்த பிறகு இரண்டு ஆண் குழந்தைகள் பிறந்தார்கள்.

✶

அன்று கார்த்திகைத் திருநாள். தஞ்சையில் இருந்த பார்வதி அம்மாள் இரண்டு அகல் விளக்குகளைக் கொண்டு வந்து வாசல் பிறையில் வைத்து விட்டு உள்ளே போகத் திரும்பினாள். திண்ணையில் உட்கார்ந்திருந்த அவள் கணவர் அவளை அழைத்தார்.

''இன்னும் நாலு விளக்குகள் ஏற்றி வைக்கக் கூடாதா?'' என்று கேட்டார் அவர்.

''வைக்க வேண்டியதுதான்! என் குடும்ப விளக்கை அணைத்த கடவுளுக்கு நாலு என்ன, லக்ஷதீபம் கூட ஏற்றத்தான் வேண்டும்!'' என்றாள் பார்வதி அம்மாள். சுருங்கிய அவள் கன்னங்களில் கண்ணீர் தாரை தாரையாகப் பெருகி வழிந்தது.

''பொரி உருண்டை வேண்டுமென்று அடம் பிடித்தீர்கள். பிடித்து வைத்திருக்கிறேன். தின்னுங்கள். பேரனும் பேத்தியும் குதி போட வேண்டிய வீட்டில் கிழம்தானே துள்ளி விளையாட வேண்டும்!''

கிழவர் அழவில்லை. கோபித்துக் கொள்ளவுமில்லை. சிரித்தார்.

''மூடமே! நம் குடும்ப விளக்கை பகவான் அணைக்க வில்லை. ஒரு பொறி நெருப்பிலிருந்து லக்ஷ தீபங்களை ஏற்றுவது போல, ஒரு சிறு பொறியை - குழந்தையை - நமக்குக் கொடுத்தான். நாம்தான் அதை அணையாமல் பாதுகாக்கத் தவறிவிட்டோம்!'' என்றார்.

பார்வதி அம்மாள் பிரமை பிடித்தவள் போல் நின்றாள். பிறகு, ''வருகிறீர்களா?'' என்று கேட்டாள்.

''எங்கே?'' என்று கேட்டார் கிழவர்.

''ஒவ்வொரு தலமாகச் சென்று கடவுளின் சன்னிதியில் விளக்கேற்றி வைப்போம். குழந்தை எங்கேயாவது உயிரோடு இருந்தால் பூரண ஆயுளுடன் வாழட்டும், அந்தப் புண்ணியத்தையாவது செய்வோம்'' என்றாள்.

அடுத்தநாளே இரண்டு பேருமாகத் தலயாத்திரை கிளம்பி விட்டார்கள்.

தில்லி, ஜனதா 'எக்ஸ்பிரஸில் ராமச்சந்திரன் ஒருவரிடம் சொல்லிக் கொண்டிருந்தான்: ''வாழ்க்கையே கசந்து விட்டது சார்! தலயாத்திரை போகிறேன்'' என்று.

ராமேஸ்வரத்தில் மூன்று கடல்களும் கலக்கின்றன. பார்வதி அம்மாளும், கிழவரும் தலைப்பைச் சேர்த்து முடிந்துகொண்டு கடலில் இறங்கி ஸ்நானம் செய்தார்கள்.

ராமச்சந்திரன் கடலில் குளித்துக் கரை ஏறியவன் பல வருஷங்களுக்கு அப்புறம் தன் மாமியார் மாமனாரைச் சமுத்திரக் கரையில் கண்டான். கிழவருக்கு அடையாளம் புரிந்து கொள்ளவே தாமதமாயிற்று.

''நம்ப மாப்பிள்ளை!'' என்றாள் பார்வதி.

''இன்னும் யார் வந்திருக்கிறார்கள்?'' என்று கேட்டார் அவர்.

''நான்தான் மாமா, மைதிலிக்கு அப்புறம். நான் தனிமரம்!''....என்றான் ராமச்சந்திரன் உணர்ச்சி பொங்கும் குரலில்.

மூவரும் ஒன்றாக ராமநாதசுவாமி ஆலயத்துக்குச் சென்றார்கள். சன்னிதியில் கூட்டம் அதிகம் இல்லை. ஒருபுறம் இம்மூவரும் நின்றிருந்தார்கள். மற்றொருபுறம் ஒரு வட இந்தியக் குடும்பத்தினர் நின்றிருந்தார்கள்.

# பொருத்தம்

## ஸரோஜா ராமமூர்த்தி





அவன் கோவிலுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தான். உள்ளே அம்மா அடை பண்ணிக் கொண்டிருந்தாள் — தேங்காய், முருங்கைக்கீரை நிறையப் போட்டு அடை. கமகமவென்று வாசனை வீசியது. அவள் அதைக் கல்லில் திருப்பிப் போடும்போது 'சொய்ங்' சப்தம் கேட்டது.

மாடத்துப் புரையிலிருந்த விபூதிச் சம்புடத்திலிருந்து நெற்றி நிறைய அள்ளிப் பூசிக் கொண்டான். கண்ணாடி முன்பு நின்று தலையை அழுந்த வாரியபடி 'அம்மா! கோவிலுக்குப் போயிட்டு வரேன்' என்று குரல் கொடுத்தான்.

''இதோ வந்துட்டேன். டிபன் பண்ணிட்டுப் போடா...'' என்றபடி தட்டில் அடையைப் போட்டு எடுத்து வந்தாள் அம்மா.

''இன்னிக்குப் பிரதோஷம். தீபாராதனை கருக்க ஆயிடும். அடையெல்லாம் அப்புறமா வந்து பாத்துக்கிறேன். காப்பி மாத்திரம் கொடு'' என்று சொல்லிக் கொண்டே இரண்டு விழுங்கள் காப்பியைக் குடித்து விட்டு வாசற்படி இறங்கி நடந்தான்.

''எல்லாம் அவன் தாத்தா மாதிரிதான். இவரைத் துளிகூடத் தொள்ளாது'' என்று அம்மா சொல்லிக் கொண்டே சமையற்கட்டுக்குள் போனாள்.

தெரு கலகலவென்று இருந்தது. மஞ்சள் வெய்யில் இறங்கிக் கொண்களில் நீர் கமந்து கொண்டு வந்தனர். அவன் கண்ணுக்கு எதிரே காண்பதற்கு எல்லாமே இனிய காட்சிகளாக இருந்தன. கொஞ்சம் தொலைவில் கோபுரம் தெரிந்தது. கைகளை உயர்த்திக் கும்பிட்டான். தினமும் காலையில் எழுந்தவுடன் மொட்டை மாடிக்குப் போய்க் கோபுர தரிசனம் செய்வான். ஆபீஸ் போகும்போது கோபுர வாசலைக் கடந்து செல்லும்போது ஒரு கணம் அதில் லயிப்பான். மாலையில் கோயிலுக்குள் சென்று தவறாமல் தரிசனம் செய்துவிட்டு வருவான். இந்தப் பழக்கம் அவன் நினைவு தெரிந்த நாட்களிலிருந்து தொடர்ந்து வந்து கொண்டேயிருந்தது.

வீட்டில் அம்மா சில நாட்களாக அவனை நச்சரித்துக் கொண்டேயிருக்கிறாள். 'சீக்கிரமா ஒரு கல்யாணத்தைப் பண்ணிக்கோடா. எனக்கு வரவர முடியலே. ஒரே தலைசுற்றல். கொஞ்ச நாள் நறாய்யா இருக்கணும்—''

''நீ ஹாய்யா இருக்கணும்னு நான் கல்யாணம் பண்ணிக்கணும்னு என்ன சாஸ்திரம்? ஓர் ஆளைப் போட்டாப் போறது...''

'நன்னாயிருக்கு! ஆளும், தேளும்! மாட்டுப்பொண் மாதிரி ஆவாளா என்ன?'' அவன் தனக்குள் சிரித்துக் கொண்டே நடந்தான். 'உலகத்திலே பொறந்தவா எல்லாருந்தான் கல்யாணம் பண்ணிக்கறா. எல்லாரும் செய்யறதையே நாமும் செய்வானேன்?' சிந்தனை வயப்பட்டவன் தெருவைக் கடந்து ஜெமத் தெருவில் இறங்கிக் கோயிலை நோக்கி நடக்க ஆரம்பித்தான். அவனைக் கடந்து இரண்டு பெண்கள் போய்க் கொண்டிருந்தார்கள். ஒருத்தி கொடி போல் உயரமாக இருந்தாள். சிவப்பாய், லட்சணமாய், பார்ப்பவர்களை மறுபடியும் பார்க்கத் தூண்டும் கவர்ச்சியோடு இருந்தாள். அவளுடன் வந்த மற்றவள் மிகச் சாதாரணமாகக் கறுப்பாய் இருந்தாள். இவன் அந்தச் சிவப்புப் பெண்ணைப் பலமுறைகள் உற்றுப் பார்த்தான். அம்மா சொல்கிற 'ஒரு கல்யாணத்தைப் பண்ணிக்கோடா'வுக்கும் அர்த்தம் இருக்கிற மாதிரி அவனுக்குப் பட்டது.

அவன் அவளை மேலும் பார்த்தான். நீண்ட தலைப் பின்னல் பிடரிவரை தொங்கியது. தலைநிறைய ஜாதிப் புஷ்பம் வைத்திருந்தாள். கறுப்புப் பெண்ணும் தலைநிறையப் புஷ்பம் சூடிக் கொண்டிருந்தாள். அது ஒன்றும் அவனுக்கு சுவாரஸ்யப்படவில்லை. அந்தப் பெண்கள் உல்லாசமாகச் சிரித்தபடி என்னவோ பேசிக் கொண்டு போனார்கள். இடையிடையே அவளின் சிரிப்பு மிகவும் மோகனமாக இருந்தது. அந்தச் சிரிப்பை அவன் சதங்கை ஒலி, குருவிகளின் சத்தம் என்று எதனுடனோ ஒப்பிட்டுப்பார்த்துக் கொண்டான். எதுவும் ஒத்து வரவில்லை. அழகான பெண்கள் சிரித்தால் அதற்கு உவமை தேட வேண்டிய அவசியமில்லை என்கிற தீர்மானத்துக்கு வந்தவனாக அவனும் அவர்களைத் தொடர்ந்தே நடந்து சென்றான்.

இரண்டு பெண்களும் கொடி மரத்தடியில் நமஸ்கரித்தார்கள். இவனும் நமஸ்காரம் பண்ணினான். சந்நிதியை இருவரும் சேர்ந்தே வலம் வந்தார்கள். சிவப்புப் பெண் இனிமையான குரலில் அபிராமி அந்தாதியைப் பாடிக் கொண்டே வந்தாள். அந்த இனிமையில் இவனுக்கு அர்ச்சகரின் கற்பூரத் தட்டு எதிரில் இருப்பது கூடத் தெரியவில்லை. பிறகு திடுக்கிட்டபடி கற்பூரத்தைக் கண்களில் ஒற்றிக் கொண்டு பிரசாதம் பெற்றுக் கொண்டான். அவள் குறும்பு தவழச் சிரித்தாள். கறுப்புப் பெண்ணின் விலாவில் இடித்து அவளுக்கும் சிரிப்பு மூட்டினாள். அந்தப் பெண் அதிகம் சிரிக்கவில்லை. ஏக்கத்துடன் மூலஸ்தானத்தில் இருந்த அம்பிகையைத் தீவிரமாகப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அன்று அவன் வீட்டுக்குள் நுழையும்போதே சீட்டியடித்துப் பாடியபடி வந்தான். அவனுக்கும் அபிராமி அந்தாதி தெரியும்.

''அம்மா.... அம்மா! அபிராமி அந்தாதியில் எத்தனையாவது பாட்டின்போது அபிராமி தன் தாடங்கத்தை வான வெளியில் வீசி எறிந்தாள்?''

''இப்ப என்னடா அதுக்கு? மொதல்லே அடை சாப்பிட வா. இல்லேன்னு சாப்பிடச்சே இலையிலே போட்டுக்கோ—''

''போம்மா... வரவர உனக்குத் தெய்வ பக்தி குறைஞ்சுண்டு வரது—''

'குடும்பத்துலே யாருக்காவது ஒருத்தருக்கு பக்தி இருக்கணும். உங்கப்பா கோவில் பக்கம் கூடத் திரும்பறதில்லே. வியாபாரம் அது இது என்று அதிலே மூழ்கிப் போயிடறார். பெரிய கனபாடிகள் வயத்துலே பொறந்தவா. அபசாரத்தை நான் ஞாபகப்படுத்த வேண்டியிருக்கு — நீ உன் தாத்தா மாதிரி ஸ்வாமியை வேரோடே கெல்லி எடுக்கறே—''

அவன் பதில் பேசாமல் இலை முன் உட்கார்ந்தான். எண்ணங்கள் அந்தச் சிவப்புப் பெண்ணையே வட்டமடித்தன. அவள் எந்தத் தெரு வழியே வந்தாள் என்பதைக் கவனிக்கவில்லையே என்று வருந்திக் கொண்டிருந்தான். இப்படித் திடீரென்று பார்த்த ஒரு பெண்ணின் மீது தன் மனம் அலைபாய்வது அவனுக்கு வெட்கமாகக்கூட இருந்தது.

''ஏண்டா உம்முனு இருக்கே? நீ கேட்ட கேள்விக்குப் புஸ்தகத்தைப் பார்த்துட்டுப் பதில் சொல்றேன். சரியாச் சாப்பிடு....''

குபீரென்று ஜாதிப் புஷ்பத்தின் மணம் வீசியது. அம்மாவும் தலையில் ஜாதிப் பூ வைத்திருந்தாள். இந்த மணத்துக்கே ஆண்களை வசியம் பண்ணுகிற சக்தி இருக்கும்போல இருக்கு. அந்தப் பெண் அப்படி இப்படித் திரும்பும்போது ஒரே வாசனை வீசித்தே. அதுவும் சேர்ந்துதானே அவன் மனசைப் போட்டுக் குழப்பறது? அப்பாவையும், அம்மா இப்படி ஜாதிப்பூ வைச்சுண்டுதான்... சே...சே... என்று தன்னையே கடிந்து கொண்டான். பெத்தவாளைப் பத்தி அசட்டு மனம் எண்ணக் கூடாததை எண்ணறதே... என்று மனத்துக்கு ஒரு



கணவன்: ஒரு நல்ல சேதி. போன தீபாவளிக்கு வாங்கிய கடனையெல்லாம் அடைச்சுட்டு இப்போதுதான் வரேன்.

— சாமா

''அவன் இஷ்டப்படி விடேன். எதையோ கேட்டுட்டுப் போறான்—'' அப்பா சொன்னார்.

''ஆமாம்... அவன் இஷ்டப்படி விட்டுத்தான் மூப்பது வயசுப் பிள்ளைக்கு ஒரு ஜாதகம் கூட வாங்கிப் பார்க்காம இருக்கேள்.''

''ஜாதகம் என்ன பார்க்கிறது? அவனுக்குப் பிடிச்சவளைச் சொல்லட்டும். கல்யாணத்தைப் பண்ணிப்பிடுவோம். மனப் பொருத்தம்தான் பெரிய பொருத்தம்...''

''அவனுக்குப் பூலோகத்துலே பொண் வர்க்கங்கறதையே பிடிக்கலே. எங்கேயிருந்து வரப்போறாளோ அவனுக்குன்னு—''

''வருவா...வருவா...''

கைகளில் போட்டிருந்த கண்ணாடி வளையல்களும் சந்தன வண்ணத்திலேயே இருந்தன.

நல்ல ரசனை உள்ளவள் என்று நினைத்தான்.

டிக்கட்டுகள் கொடுக்க ஆரம்பித்தார்கள். அவளைக் கவனித்தபடி அவனும் 'க்யூ'வில் நகர்ந்து கொண்டிருந்தான். ஓரிரு முறை அவளும் அவனைத் திரும்பிப் பார்த்துவிட்டு நகர்ந்து கொண்டிருந்தாள். கௌண்டர் அருகில் சென்றதும் அவன் கொடுத்த பத்து ரூபாய்க்குச் சில்லறை இல்லை என்பதை டிக்கட் கொடுப்பவர் தெரிவித்தார். இவன் உடனே ''எக்ஸ்க்யூஸ் மீ'' என்றபடி பத்து ரூபாய்க்குச் சில்லறையை எடுத்துத் தயக்கத்துடன் நின்றவளிடம் கொடுத்தான்.

''தாங்கஸ்'' — அவள் டிக்கட் வாங்கிக் கொண்டு பெண்கள் உட்கார்ந்திருந்த பக்கம் போய் உட்கார்ந்து விட்டாள்.

* * *

படம் விட்டார்கள். அவள் விடுவிடு என்று நடந்து மறைந்து போனாள். இவன் வீட்டுக்குச் சென்று உடை மாற்றிக் கொண்டு காப்பிகூடச் சாப்பிடாமல் அவசரமாகக் கோவிலுக்குக் கிளம்பினான். அன்று அவள் கோவிலுக்கு வரவில்லை. கருப்பக்கிரகத்துக்கு முன்பாக அந்தக் கறுப்புப் பெண்ணுடன் வயதான அம்மாள் ஒருத்தி நின்று கொண்டிருந்தாள்.

அவள் ஏன் வரவில்லை? யாரைக் கேட்பது? கறுப்புப் பெண் கையில் அர்ச்சனைத் தட்டை வைத்துக் கொண்டிருந்தாள். அப்போதுதான் அம்மா இவன் வீட்டிலிருந்து கிளம்புகிறபோது ''இன்னிக்கு உனக்கு ஜன்ம நட்சத்திரம்டா. ஸ்வாமிக்கு ஓர் அர்ச்சனை பண்ணு'' என்று சொன்னது நினைவுக்கு வந்தது. முன் மண்டபத்துக்குப் போய் அர்ச்சனைத் தட்டு வாங்கி வந்தான். அர்ச்சகர் இருவரிடமிருந்தும் ஒரே சமயத்தில் தட்டுக்களை வாங்கி அடுக்கி வைத்தார். கோத்திரம், பெயர் விவரங்களைக் கேட்டார்.

கோத்திரம் வெவ்வேறாகவும் நட்சத்திரம் ஒன்றாகவும் இருந்தன. ஒரு விநாடி ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். அர்ச்சகர் கர்ப்பூரத் தட்டுடன் வெளியே வந்து

[illegible]

''இன்னிக்கு ஏண்டா சரியாச் சாப்பிடலே? அதுதான் சொல்றேன். காலாகாலத்துலே ஒரு கல்யாணத்தைப் பண்ணிண்டா அவனுக்கு அடங்கி - ஒடுங்கி இருப்பே. இல்லே... அவ சாதம் போட்டா ருசியா இருக்கும். எத்தனை நாளைக்கு எம் மூஞ்சியையே பார்த்துண்டு சாப்பிடறது?'' அம்மா வேடிக்கையும், நிஷ்டூரமும் கலந்து பேசிக் கொண்டிருந்தாள்.

'ஆமாம்... சில வயசுக்கப்புறம் மாறுதலான முகத்தைப் பார்த்தா மனசுக்குத் தெம்பாகத்தான் இருக்கு. மனத்துக்குள் ஆமோதித்தபடி சிரித்துக் கொண்டே எழுந்தான்.

''பாலை வந்து சாப்பிடு... என்னாலே மாடி ஏறி வர முடியாது. மூச்சு வாங்கறது...''

''சரி...சரி... எனக்கு இன்னிக்குப் பால் வேண்டாம். உறை குத்திடு... நான் ரேடியோவிலே கச்சேரி கேட்டுட்டுத் தூங்கறேன்.''

அம்மா திரும்பவும் ஏதோ அலுத்துக் கொண்டாள். அவன் அதைக் காதில் வாங்கிக்கொள்ளவில்லை. மாடிக்குப் போனான். மணி ஒன்பதே கால் ஆகியிருந்தது. உள்ளே ரேடியோவைத் திருகிவிட்டு மொட்டை மாடிக்கு வந்து ஆகாயத்தைப் பார்த்தான். நிலா புறப்பட்டிருந்தது. தொலைவில் கோபுரம் தெரிந்தது. கூடவே அவளின் முகமும் தெரிந்தது. அந்த நிலவொளியில் அவளுடன் நெருங்கி நின்று பேசுவது போல் கற்பனை செய்து பார்த்தான். வித்வான் ரேடியோவில் ஆரபி பாடிக் கொண்டிருந்தார். அதைச் சென்று நிறுத்தினான். திரை கானம் வருகிற பக்கம் திருப்பினான். 'தங்க ரதம் வந்து வீதியிலே....' கேட்டது. அவன் மனசுக்கு அந்தப் பாட்டு அன்று மிகவும் பிடித்திருந்தது. சில காதல் பாட்டுகளுக்கு மனசைப் பிடித்து இழுக்கிற சக்தி இருக்கிறதென்று நினைத்தபடி, ஒரு தடவை நண்பர்களுடன் இதைப் பற்றிய சர்ச்சையில் 'சில வெறும் வார்த்தை ஜாலங்கள் ஆழ்ந்த சுகானுபவத்தைக் கொடுக்கக் கூடியதில்லை' என்று வாதித்தது நினைவுக்கு வரவே அவன் வெட்கினான். மனமாற்றத்தைப் போல் ருசிகளும் மாறுகின்றன என்பதைஉணர்ந்தான்.

''நீ கச்சேரி கேட்கிற லட்சணமா இது? கீழே வந்து பால் சாப்பிடக் கூட முடியாமல் என்னவோ கேட்டுண்டு...'' அம்மா உரக்கச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

அம்மா, அப்பா சண்டையை மிகவும் ரசித்தான் அவன். இப்படித்தான் அவன் பெரியவனாகி, அவளை மணந்து கொண்டு பிள்ளை குட்டி பெற்ற பிறகு ஒரு நாளைக்குச் சண்டை போட வேண்டியிருக்கும் என்கிற நினைப்பே அவனுக்குக் கிளுகிளுப்பாக இருந்தது.

மேலும் பன்னிரண்டு மணி வரைக்கும் மாறி மாறி ஒலித்த தமிழ் சினிமா காதல் பாட்டுக்களைக் கேட்டான். மொட்டை மாடியில் படுக்கையை விரித்துப் படுத்தபடி ஆகாயத்தைப் பார்த்தான். மறுபடியும் அவள் அவன் நினைவில் மிதந்தாள். அவள் பெயர் என்னவாக இருக்கும்? கீதா, சாந்தி, லதான்னு நாகரிகமா இருக்குமா, இல்லே, காமாக்ஷி, மீனாக்ஷி என்று பழமையா இருக்குமா? எந்தப் பெயருக்கும் அவள் பொருத்தமானவளாகவே தோன்றினாள்.

காலையில் அவன் ஏன் இன்னும் எழுந்திருக்கவில்லை என்று அம்மா கவலைப்பட்டு மாடி ஏறி வந்தாள்.

''என்னடா தூக்கம் இப்படி?''

அவன் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தான். தொலைவில் கோபுரக் கலசத்தில் வெயில் பதிந்திருந்தது. கீழே போய்ப் பல் தேய்த்து, காப்பி குடித்து, குளித்து, விபூதி இட்டுக் கொண்டு, இரண்டு ஸ்தோத்திரங்களைச் சொல்லிவிட்டுச் சாப்பிட்டான். பகலுக்கு டிபன் வேண்டாம் என்று சொல்லிவிட்டு ஆபீசுக்குக் கிளம்பினான். நேற்றுச் சென்ற பாதை வழியாகத் திரும்பித் திரும்பிப் பார்த்தபடி வேகமாகச் சைக்கிளில் சென்றான். யார் யாரோ பெண்கள் எதிரே வந்தார்கள்.

இவர்களிடம் ஜாதிப் பூ மணக்கவில்லை. அவன் வெறுப்புடன் ஆபீசுக்குள் நுழைந்தான். சில நபால்களைப் பார்த்துவிட்டு, மேலதிகாரியிடம் சில பைல்களை நீட்டிக் கையெழுத்து வாங்கிய பிறகு, 'போர்' அடிக்கவே, 'பர்மிஷன்' போட்டு விட்டுப் பகல் இரண்டு மணிக்குப் பக்கத்தில் இருந்த சினிமாத் தியேட்டருக்கு வந்தான்.

பெண்கள் கௌண்டர் அருகே அவள் 'க்யூ'வில் நின்றிருந்தாள். சந்தன வண்ண காசிச் சிந்த் உடுத்தியிருந்தாள். தலையில் மலர்ந்த சற்று வாடிய ஜாதிப் பூ சூடியிருந்தாள்.

பிரசாதம் வழங்கியபோது அந்த அம்மாள், ''இந்த வருஷமாவது குழந்தைக்குக் கல்யாணம் ஆகணும்—'' என்றாள்.

''அந்தக் குழந்தை வரலியா?'' என்று கேட்டார் அர்ச்சகர்.

''வருவா...''

'ஏன் அந்த அழகுக் குழந்தைக்குக் கல்யாணம் ஆகவில்லே?' என்று கேட்டுவிட அவன் மனம் துடித்தது. பிரகாரத்தை வலம் வரும்போது அவன் தயங்கியபடி ''உங்கள் பெண்ணுக்கு....'' என்றான்.

''ஆமாம்ப்பா... எந்த இடம் வந்தாலும் தகையலே, பணம்தான் காரணம். ஆயிரம் ஆயிரமா பணத்துக்கு எங்கே போறது?''

''உங்கள் பெண்தானே?''

''ஆமாம்....''

''இவ்வளவு லட்சணமா இருக்கிறவளுக்குப் பணம்தான் தடையா இருக்குன்னு நான் அந்தப் பணத்தை மதிக்கல்லே.''

அந்த அம்மாளும் கறுப்புப் பெண்ணும் திடுக்கிட்டுத் திரும்பினார்கள். அவர்கள் எதிரே சிவந்தவள் நின்றிருந்தாள். 'அப்பா! என்ன லட்சணம்?' என்று அவன் அயர்ந்து போனான்.

''இவளையா சொல்றேள்?''

''ஆமாம்—''

''இவள் என் நாட்டுப் பெண். இதுதான் என் பெண்...'' என்று கறுப்புப் பெண்ணைச் சுட்டிக் காட்டினாள் அந்த அம்மாள்.

ஒரு விநாடி அவனுக்குக் கோவில், பிராகாரம், கோபுரம் எல்லாமே சுழன்றன. கறுப்புப் பெண் அவன் கூறிய அந்த வார்த்தைகளின் அர்த்தத்தில் — சுகானுபவத்தில் — 'நான் அந்தப் பணத்தை மதிக்கலே' — லயித்தபடி அவனைக் காதல் பொங்கப் பார்த்தாள். அவள் விழிகள் தீவிரமான ஒளியை உமிழ்ந்தன. நம்பிக்கைச் சுடர் அவள் விழிகளில் தெறித்தது. சிவப்புப் பெண் அவன் சிந்தனையிலிருந்து கர்ப்பூரத்தைப் போலக் கரைந்து போனாள்.

கருவறையிலிருந்த அம்பிகை ஒரே கறுப்புத்தான். அதனால் என்ன? அவள் ஜகன்மோகினி என்ற திருநாமத்தைத் தாங்கியவள் என்கிற லயிப்பில் அம்மாவிடம் வீட்டுக்குப் போய்த் தனக்குக் கல்யாணம் பண்ணி வைக்கும்படி சொல்லிவிட வேண்டும் என்று அங்கிருந்து வேகமாக நடந்தான்.




# மலரும் மணமும்

**பார்வதி இந்த நாட்டுப் பண்பாட்டின் கொழுந்து. சாந்தா நவீன நாகரிக நாரீமணி. சாந்தாவுக்குப் பார்வதியைக் கண்டால் பிடிக்கவில்லை. ஆனால் அவள் அருமையை அறிந்தவர் இல்லாமலா போய்விடுவார்?**

மத்தியான்னம் பன்னிரண்டு மணிக்குத் தபால்காரன் கொண்டு வந்து கொடுத்துப்போன கடிதத்தைக் கௌரி அம்மாள் திரும்பவும் படிக்க ஆரம்பித்தாள். சென்னையில் பெண்கள் கல்லூரியில் படித்துக்கொண்டிருக்கும் அவள் பெண் சாந்தாவிடமிருந்து கடிதம் வந்திருந்தது. வரப் போகிற தீபாவளிக்கு அவள் தன் முக்கியமான நண்பர்களுடன் அம்மாவிடம் வரப்போவதாக எழுதியிருந்தாள். அந்தச் சமயத்தில் வீட்டை நன்றாக ஒழுங்குபடுத்தி வைக்கும்படியும், தீபாவளி விருந்துச் சாப்பாட்டிற்கு ஏற்பாடுகள் செய்து வைக்கும்படியும் உத்தரவு போட்டிருந்தாள் அவள். வயசு சென்ற தாயிடம் அன்போ, அநுதாபமோ எதுவுமின்றி அடம் பிடித்து அழும் குழந்தையைப் போல் தன்னுடைய பிடிவாத குணத்தாலும் முரட்டுத் தனத்தாலும் நினைத்ததைச் சாதித்துக்கொள்ளும் குணம் படைத்தவள் சாந்தா. ஒன்றியாக நாலைந்து தினுசுப் பட்சணங்களைச் செய்யவேண்டும். வீட்டை ஒட்டடை அடித்துச் சுத்தம் செய்ய வேண்டும். பெண்ணுக்குப் பிடித்த மாதிரியாக வீட்டை அலங்காரம் செய்தாகவேண்டும். சாந்தாவோ ஒரு நாள் முந்திகூட வரமாட்டாள். பொழுது விடிந்தால் தீபாவளி என்றால் முதல் நாள் இரவு வந்து இறங்குவாள். அவளுக்குக் கை அலம்பத் தண்ணீர் கொடுக்க வேண்டும். ஸ்நானம் செய்ய வெந்நீர் பார்த்து வைக்கவேண்டும். போதாக்குறைக்கு அவள் நண்பர்களுக்கு எல்லாவற்றையும் கவனித்துக் கொள்ள வேண்டும். என்னதான் வேலைக்காரர்கள் இருந்தாலும் பொறுப்புள்ள மனிதர்கள் யாராவது கவனித்துக்கொண்டால் தானே வேலைகள் ஒழுங்காக நடக்கும்?

கௌரி சலித்த மனத்துடன் கடிதத்தை உறையில் போட்டு மேஜைமீது வைத்துவிட்டு யோசனையில் ஆழ்ந்தாள். சாந்தா கடைசியாக ஒரு முக்கிய விஷயத்தைக் குறிப்பிட்டிருந்தாள். "என்னுடைய சிநேகிதியின் தமையனாரும் நம் ஊரைப் பார்க்க என்னுடன் வருகிறார். அவர் மிகவும் படித்தவர். பெரிய பதவியில் இருப்பவர். ஆகையால் எல்லாவற்றையும் ஒழுங்காகக் கவனித்துச் செய்து வைக்கவேண்டும்" என்று ஒன்றியாக இருக்கும் தன்னைப் பார்த்து இவ்வளவு வேலைகளை ஏவும் பெண்ணின் மனத்தை நினைத்து வருந்தினாள் கௌரி. ஆனால், சாந்தா ஒரே பெண். அவள் தகப்பனார் இறந்து போனதிலிருந்து

அளவுக்கு மீறிய சலுகை காண்பித்துத் தாயால் வளர்க்கப்பட்டவள். 'ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது' என்பதுபோல் சிறு வயசிலிருந்தே பிடிவாதமும் ஆடம்பரமும் நிறைந்திருந்தன சாந்தாவிடம். இனிமேல் அவளை ஒன்றும் சொல்ல முடியாது. ஹிதமாகச் சொன்னாலும் கேட்கமாட்டாள்.

கௌரி தனக்கு ஒத்தாசைக்காக அடுத்த ஊரிலிருக்கும் தன்னுடைய தமையன் பெண் பார்வதியை வரவழைக்கத் தீர்மானித்தாள். அன்றே வண்டியுடன் ஆளையும் அனுப்பி வைத்தாள். பார்வதிக்கு அத்தை என்றால் உயிர். அன்புக்கும் பொறுமைக்கும் இடமாக இருக்கும் அத்தை கௌரியின் வயிற்றில் சாந்தா பிறந்திருப்பதே ஒரு புதிர் என்று பார்வதி நினைத்துக் கொள்வாள். தீபாவளிக்கு அத்தை தன்னை அழைத்துவரச் சொல்லி இருக்கிறாள் என்பதை அறிந்தவுடன் பார்வதி தயாராகக் கிளம்பிவிட்டாள். பார்வதி வந்ததும் நாலைந்து பேர் தனக்கு உதவிக்கு வந்துவிட்டதாகக் கௌரியின் மனத்துக்கு ஆறுதலாக இருந்தது. சாந்தாவிடமிருந்து வந்த கடிதத்தைப் படிக்கச் சொல்லிவிட்டுக் கண்ணீர் ததும்ப உட்கார்ந்திருக்கும் அத்தையைப் பார்வதி, "இதற்காக இவ்வளவு கஷ்டப்படுவானேன் அத்தை? அவள் சுபாவந்தான் தெரியுமே உனக்கு. ஆனால், சாந்தாவுக்கு என்னைக்கண்டால்பிடிக்கிறதில்லை, அத்தை! தீபாவளிக்கு முன் தினம்வரை உனக்கு வேண்டிய ஒத்தாசைகளைச் செய்துவிட்டு நான் போய் வருகிறேன்" என்றாள் பார்வதி.

"நன்றாக இருக்கிறதே நீ சொல்லுகிறது! வேலையை வாங்கிக்கொண்டு உன்னை விரட்டி அடிக்க வேண்டுமா நான்? நீபாட்டுக்கு அவளுடன் பேசாமல் பண்டிகைக்கு இருந்துவிட்டுப் போ, அம்மா! அவள் வந்து இரண்டு நாள் கூத்தடித்துவிட்டுப் போகப் போகிறாள். அடிக்கொரு தரம் வந்து அத்தை, அத்தை என்று அன்புடன் என்னை நீதானே கவனித்துக்கொள்ளுகிறாய், பார்வதி?" என்று கௌரி கூறினாள்.

பார்வதி குடும்பப் பழக்க வழக்கங்களில் பழகி வளர்ந்தவள். அடக்கமும் அறிவும் நிரம்பியவள். சாதாரணக் கிராமப் பள்ளிக்கூடத்தில் எட்டாவது வகுப்பு வரையில் படித்தவள்; பட்டணத்து நாகரிகம் ஒன்றையும் அறியாதவள். அவள் தாழம்பூ மேனியில் பசு மஞ்சளைப் பூசிக் குளித்துவிட்டால் தங்க நிற மேனியளாகக் காட்சி அளிப்பாள். மேஜை அருகில் காபி சாப்பிட்டுவிட்டுக் கட்டுக் கட்டாகப் புத்தகங்களைப் படித்துக் குவிக்காமல் ஆற்றங்கரையிலிருந்து ஜலம் கொண்டு வந்து கறவை மாட்டுக்குத் தீனி வைத்துக் குளிப்பாட்டி, பால் கறந்து, மற்றக் குடும்ப வேலைகளைக் கவனிப்பதிலேயே பார்வதியின் பொழுது போய்விடும். ஒழிந்த வேளைகளில் ஏதாவது புத்தகங்கள் படிப்பாள். கிராமத்தின் சூழ்நிலையும், உடற்பயிற்சியுமாகச் சேர்ந்து பார்வதி கண்ணைக் கவரும் வனப்புடன் விளங்கினாள். கூனல் முதுகில்லாமல், குழி விழுந்த கண்கள் இல்லாமல், சாண



வீணையின் ஒலியுடன்

நீளம் கூந்தல் இல்லாமல், நிமிர்ந்த உடலும், அகன்று பேசும் கருவிழிகளும், சாட்டை போல் பின்னலும், புன்னகை தவழும் முகமும் பார்வதிக்கு அமைந்திருந்தன.

பார்வதி வந்த பிறகு கௌரியின் மனச் சோர்வு குறைந்துவிட்டது. அவளை எந்த வேலையும் செய்யவிடாமல் பார்வதியே குடும்ப வேலைகளில் ஈடுபட்டாள். ஜன்னல்களுக்கு வேறு திரைகள் போட்டாள். மேஜைகளின் மேல் விதவிதமாக ஜாடிகளில் பூங்கொத்துகளைச் செருகினாள். தீபாவளி நாள் நெருங்க நெருங்கப் பக்ஷணங்கள் செய்வதில் முனைந்தாள் பார்வதி. அலுப்புச் சலிப்பின்றி ஆடி ஓடி வேலைகள் செய்யும் பார்வதியைக் கண்டால் சாந்தாவுக்குப் பிடிக்கிறதில்லை. தன்னைப்போல் காலேஜ் படிப்புப் படிக்காத பட்டிக்காடென்றும், பட்டினத்து நாகரிகம் தெரியாத அசடு என்றும் பார்வதியை அவள் இழிவாக எண்ணினாள். பார்வதியாகவே வலுவில் சென்று அவளுடன் பேசினாலும் அலட்சியத்துடன் அவளைப் பார்த்துவிட்டுப் போய்விடுவாள் சாந்தா.

தீபாவளிக்கு முதல் நாள் மத்தியான்னம் தன்னுடைய வேலைகளை முடித்துக்கொண்டு பார்வதி அத்தையிடம் தான் ஊருக்குப் போவதற்கு அனுமதி கேட்டாள்.

“அன்றைக்கே சொன்னேனே, பார்வதி; அவளுக்காகவா நீ இங்கு வந்திருக்கிறாய்? இனிமேல்தானே வேலைகள் நிறைய இருக்கின்றன? ஒண்டியாக நான் எப்படியம்மா அவள் கோபத்துக்குச் சமாளிக்க முடியும்? எப்படியோ பொறுத்துக்கொண்டு நாளை வரையில் இருந்துவிடு” என்று கெஞ்சினாள் கௌரி.

அத்தையின் விருப்பத்துக்கு மாறாக நடக்க முடியாமல் பார்வதி இருந்துவிட்டாள். மத்தியான்னம் மூன்றுமணிக்குச் சாந்தா தன் சிநேகிதர்களுடன் வந்து சேர்ந்தாள். வந்தவர்களுக்குக் காபி, பலகாரம்கொடுத்துஉபசரித்த பார்வதியை அவள் கவனிக்கவே இல்லை. பட்டணவாசத்து மனிதர்கள் எதிரில் எப்படிப்



மெல்லிய குரல் இழைந்து வந்தது.

பழகுவது என்று தெரியாமல் பயந்து பயந்து பலகாரத் தட்டுடன் வரும் பார்வதியைச் சாந்தாவுடன் வந்திருந்த சங்கரன்தான் அதிகமாகக் கவனித்தான்.

"என்ன சாந்தா, அந்தப் பெண் யார் என்றே எங்களுக்குச் சொல்லவில்லையே! நாம் வந்ததிலிருந்து சோர்வில்லாமல் நம் தேவைகளை அறிந்து உபசரிக்கிறாளே!" என்றான்.

பார்வதிக்குச் சாந்தா என்ன கூறுவாளோ என்ற பயத்தால் குப்பென்று வேர்த்தது. மேஜைமேல் தட்டை வைத்துவிட்டு அங்கே நிற்காமல் உள்ளே போய்விட்டாள்.

"ஓ, அவளா? அவள் என் மாமா பெண். அம்மாவுக்கு ஒத்தாசையாக வந்திருக்கிறாள் போல் இருக்கிறது" என்று சுருக்கமாகக் கூறிவிட்டுப் பேசாமல் இருந்தாள் சாந்தா.

பார்வதிக்கு அன்று அடுப்பங்கரையிலேயே வேலை சரியாக இருந்தது. மாலை எல்லோரும் ஊரைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பியபோது சங்கரன் பார்வதியை வரும்படி அழைத்தான். அவள் தன்னுடன் வருவது சாந்தாவுக்குப் பிடிக்கவில்லை.

"இரவு விருந்துக்கு ஏதாவது ஏற்பாடுகள் செய்ய வேண்டும். அம்மாவுக்கு ஒத்தாசையாக அவள் வீட்டில் இருந்தால்தான் முடியும்" என்றாள் சாந்தா. சங்கரனின் நோக்கமும் அநுதாபமும் பார்வதிக்குக் கிடைக்கின்றனவே என்று சாந்தாவுக்குக் கோபமாக இருந்தது. அழைத்ததற்கு என்ன பதில் கூறுவதென்று தெரியாமல் தலையைக் குனிந்து கொண்டு நிற்கும் பார்வதியை அன்புடன் கவனித்தான் அவன்.

"விருந்துச் சாப்பாடுதானே? நாம் திரும்பி வந்தபிறகு எல்லோருமாக அம்மாவுக்கு ஒத்தாசை செய்யலாம். நொடியில் முடிந்து விடும்" என்றான் சங்கரன் விடாமல்.

"இல்லை, அத்தைக்கு ஒண்டியாக ஒன்றும் முடியாது" என்று தயக்கத்துடன் கூறிவிட்டுப் பார்வதி உள்ளே போய்விட்டாள்.

பார்வதி சாந்தாவின் உதாசினத்தைப்பற்றி அதிகமாகப் பாராட்டவில்லை. இருந்தாலும், அந்நியர் முன்புகூடத் தன்னை அவள் ஒரு வேலைக்காரி மாதிரி நடத்துவது பார்வதிக்கு வருத்தமாக இருந்தது. கண்ணில் துளித்த நீரை அடக்கிக்கொண்டு பார்வதி மற்ற அலுவல்களைக் கவனிக்கச் சென்றாள். வேலையெல்லாம் ஒரு வழியாக முடிந்தபிறகு, அவள் மனம் ஏனோ சங்கடப் பட்டுக்கொண்டே இருந்தது. பொழுது போகாமல் இருக்கவே காமிரா அறையில் கவனிப்பாரற்றுத் தூசு படிந்து கிடந்த சாந்தாவின் வீணையை எடுத்து வைத்துக்கொண்டு பாட ஆரம்பித்தாள். சாந்தாவும் அவளும் சிறுவயதில் ஒன்றாக வீணை பயின்றவர்கள். சாந்தா காலேஜ் படிப்புப் படிக்க ஆரம்பித்த பின்பு வீணை வாசிப்பதையே நிறுத்திவிட்டாள். கிராமத்தில் வசிக்கும் பார்வதிக்கு அது ஒன்றேதான் பொழுது போக்காக இருந்து வந்தது.

விளக்கு ஏற்றும் சமயம் ஆகிவிடவே, வீணையை உறையில் இட்டு வைத்துவிட்டு எழுந்தாள் பார்வதி. அப்பொழுது அந்த அறையின் வாயிற்படியில் சங்கரன் நின்று கொண்டிருந்தான்.

"இவ்வளவு சுத்தமாக உனக்கு வீணை வாசிக்கத் தெரியுமா? அரைமணியாக நின்று கொண்டே கேட்டு விட்டேன் உன் பாட்டை" என்று சந்தோஷத்துடன் கூறினான் சங்கரன். பார்வதியின் முகம் அந்தி வானம்போல் சிவந்தது. பதிலொன்றும் கூறாமல் மௌனமாக நின்றாள்.

"நாலு வார்த்தைகள் பளிச்சென்று பேச மாட்டேன் என்கிறாயே" என்றான் சங்கரன். அப்பொழுதும் தன்னைப் பதில் பேச விடாமல் சாந்தா சங்கரனைத் தேடிக் கொண்டு வருவதை அறிந்ததும் பார்வதி பின்கட்டுக்குப் போய்விட்டாள்.

அன்று இரவு உணவுக்குப் பிறகு எல்லோரும் முற்றத்தில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். பட்டணத்தில் கேட்டுக் கேட்டு அலுத்துப் போன விஷயங்களையே சாந்தா திரும்பத் திரும்பப் பேசிக்கொண்டிருந்தாள். வீட்டு வேலைகள் முடிந்து பார்வதியும் கொஞ்சம் ஒதுக்குப்புறமாக உட்கார்ந்து இவர்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தாள். அதைக் கவனித்த சங்கரன் சாந்தாவின் பேச்சுக்கு முடிவு ஏற்படுத்த நினைத்து, "பார்வதி, வீணையில் இரண்டு பாட்டுகள் வாசியேன்" என்றான்.

சாந்தா திடுக்கிட்டாள். பார்வதியின் முகம் பயத்தால் வெளுத்தது. "பூ! அவளுக்கு என்ன பாடத் தெரியும்? அவளைவிட நான் நன்றாகப் பாடிக்கொண்டிருந்தேன். பழக்கம் விட்டுப் போய்விட்டது" என்றாள்.

"சாயங்காலம் அவள் பாட்டைக் கேட்டேன். நன்றாகத்தான் இருந்தது. இரண்டே பாட்டுகள் பாடிவிடு, பார்வதி" என்றான் சங்கரன் மறுபடியும்.

பார்வதி தயக்கத்துடன் வீணையை எடுத்து வந்து வாசிக்க உட்கார்ந்தாள். முகத்தை நிமிர்த்தாமல் வீணையும் கையுமாக உட்கார்ந்திருக்கும் பார்வதி பதுமைபோல இருந்தாள். வீணையின் ஒலியுடன் அவள் மெல்லிய குரல் இழைந்து வந்தது. அதிகமாகப் பாடினால் சாந்தாவின் கோபம் அதிகமாகி



அவளுக்கு முன்பாகச் சங்கரன் நின்றிருந்தான்.

விடும் என்று நினைத்துக் கச்சிதமாக இரண்டே பாட்டுக்கள் பாடி எழுந்துவிட்டாள் அவள்.

சாந்தாவின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன. இரவு எல்லோரும் படுக்கைக்குப் போன பிறகு கௌரியின் படுக்கை அறையில் சாந்தாவுக்கும் அவளுக்கும் தகராறு ஏற்பட்டது.

“நீ ஏன் அந்த நாட்டுப்புறத்தை வரவழைத்தாய்? நாகரிகமான மனிதர்களுடன் அதற்குப் பழகத் தெரிகிறதா? இந்த அழகில் இவளுக்குத் தெரிந்த அரைகுறைப் பாட்டை வேறு பாடிக் காண்பித்துவிட்டாள்!” என்று கூறினாள் சாந்தா.

“ஒண்டியாக என்னால் இவ்வளவு வேலைகளையும் சமாளிக்க முடியாதே என்றுதான் வரவழைத்தேன்.” கௌரி தன் பெண்ணுக்கு எங்கே கோபம் வந்துவிடுமோ என்று பயந்தாள்.

“வேலையெல்லாம் முடிந்துவிட்டதோ இல்லையோ? காலையில் யார் கண்ணிலும் படாமல் அவளை ஊருக்குப் போகச் சொல்!” சாந்தா கோபத்துடன் கதவைப் படாரென்று மூடிக்கொண்டு வரவும், பார்வதி கண்ணில் கண்ணீர் பெருகத் தன் படுக்கை அறையை அடைந்தாள்.

விடியர்காலம் நாலு மணிக்குப் பார்வதி தன் பெட்டியுடன் வந்து அத்தையிடம்

தன்னை ஊருக்கு அனுப்பும்படி கேட்டாள்.

"பொழுது விடிந்ததும் திரும்பவும் நாலு பேர் முன்னடி ரகளை வேண்டாம், அத்தை! ஊரிலேயும் அம்மாவும் அப்பாவும் தனியாகப் பண்டிகை கொண்டாடுகிறார்கள்" என்றாள் பார்வதி.

"சாந்தாவின் குணந்தான் உனக்குத் தெரியுமே, பார்வதி" என்றாள் கௌரி, அளவுக்கு மீறிய சோகத்துடன்.

"தெரிந்துதான் கேட்கிறேன், அத்தை. ஒருவர் பிடிவாதமாக இருந்தால் மற்றொருவர் விட்டுக் கொடுத்துத்தானே ஆகவேண்டும்? வண்டிக்காரனைக் கூப்பிட்டு என்னை ரெயிலடி வரையில் விட்டுவிடச் சொல்லுங்கள், அத்தை."

வைகறையின் மங்கிய வெளிச்சத்தில் ஸ்நானம் செய்து ஈரம் உலராத கூந்தலில் அவள் சூட்டியிருந்த முல்லையின் மணம் கம்மென்று வீசியது. அத்தை தன் பெண்ணுக்குத் தெரியாமல் பார்வதிக்குப் பரிசாக அளித்திருந்த பட்டுப் புடைவை சரசரக்க வண்டியில் ஏறிக்கொண்டாள் பார்வதி.

வண்டி ஸ்டேஷனை அடைவதற்கும் பொழுது விடிவதற்கும் சரியாக இருந்தது. டிக்கட்டுடன் திரும்பிய வண்டிக்காரன், "அம்மா! இந்த வண்டி பூட்டுதுங்களாம். எட்டு மணிக்குத்தான் வண்டியாம்!" என்று கூறி அவளிடம் டிக்கட்டைக் கொடுத்தான்.

பார்வதி தன் உறுதி மாறாமல் எட்டுமணி வண்டிக்காகக் காத்திருந்தாள்.

'சாந்தா ஒருவேளை சங்கரனைக் கல்யாணம் பண்ணிக்கொள்கிறதாக இருக்கிறாளோ? அதற்குப்போட்டியாக நாம்வந்துவிட்டதாகச் சாந்தா நினைத்துவிட்டாளோ என்னவோ?' என்று நினைத்துத் தனக்குள் சிரித்துக் கொண்டாள் பார்வதி. சங்கரனுடைய பெருந்தன்மையும் இனிய சுபாவமும் தன் மனத்தைக் கவர்ந்திருப்பதும் அவளுக்குத் தெரிந்தது. பார்வதியின் சிந்தனையைக் கலைத்துக்கொண்டு ரெயில் வண்டி ஸ்டேஷனை அடைந்தது. பெண்கள் வண்டியில் ஏறி உட்கார்ந்துகொண்டாள் பார்வதி. அவள் இறங்க வேண்டிய ஊர் வந்ததும் பார்வதி வண்டியிலிருந்து இறங்கினாள். அங்கே அவளுக்கு முன்பாகச் சங்கரன் நின்றுகொண்டிருந்தான்! "என்ன அவசரம் உனக்கு? என்னிடம் சொல்லாமலே புறப்பட்டுவிட்டாயே!" என்று கேட்டான்.

பார்வதி புன்னகை பூத்தாள்.

"எல்லா விஷயங்களும் எனக்குத் தெரியும். சாந்தாவுக்கு உன்னைக் கண்டால் பிடிக்கவில்லை. என்னதான் கற்றாலும் அவளிடம் அன்பும் அடக்கமும் இல்லை. மணமில்லாத காட்டு ரோஜா மலரைப்போல!" என்றான் சங்கரன்.

"ஆமாம், அவள் சுபாவம் அப்படி. அதோடு அவள் நான் என்னவோ அவளுக்குப் போட்டியாக வந்துவிட்டதாக நினைத்துக் கொண்டிருக்கிறாள்."

"என்ன சொல்லுகிறாய்?" என்று சங்கரன் அவளை ஆச்சரியத்துடன் பார்த்தான். பார்வதி பேசாமல் இருந்துவிட்டாள்.

எதிர்பாராமல் வந்த பார்வதியை அவள் பெற்றோர்கள் ஆச்சரியத்துடன் பார்த்தார்கள்.

"அத்தை வீட்டிற்கு இவர் வந்திருந்தார். நம் ஊரையும் பார்க்க வந்திருக்கிறார்." சுருக்கமான இந்த அறிமுகம் பார்வதியின் தகப்பனாரைத் திகைக்க வைத்துவிட்டது.

"ஊரைப் பார்க்க வேண்டும் என்கிற காரணம் ஒன்று. அத்துடன் உங்கள் பெண் தனியாக வருகிறாளே என்றும் இருந்தது" என்றான் சங்கரன்.

பார்வதியின் தகப்பனார் சரளமான மனம் படைத்தவர். சங்கரனைப் பற்றிய விவரங்களை விசாரித்துக்கொண்டார். "உனக்குத் தெரிந்த இடமாகப் பார்வதிக்குப் பார்த்துச் சொல்லேன், அப்பா! அவளுக்கும் இந்த வருஷம் கல்யாணம் பண்ணியாக வேண்டும்" என்றார் அவர் கவலையுடன்.

இலையில் பார்வதி பரிமாறிய போளியைச் சுவைத்துக்கொண்டே, "அதற்கென்ன? பார்வதி ரொம்பச் சமர்த்து. பாட்டும் நன்றாகப் பாடுகிறாள். அவளுக்குக் கல்யாணம் ஆகக் கேட்க வேண்டுமோ?" என்றான் சங்கரன்.

"இதையெல்லாம் யார் அப்பா கவனிக்கிறார்கள்? பணம் ஒன்றுதானே பிரதானமாக இருக்கிறது இந்தக் காலத்தில்?" என்று கூறி வெற்றிலைத் தட்டை அவனிடம் கொடுத்தார் அவர். சங்கரன் அப்பொழுதே அவசரமாகக் கிளம்பிக்கொண்டிருந்ததால், "பார்வதி, உன் ஜாதக நகல் ஒன்று பெட்டியில் வைத்திருக்கிறேன். மஞ்சள் தடவி எடுத்து வா, அம்மா" என்று பெண்ணைக் கூப்பிட்டார்.

வெட்கத்துடன் ஜாதகத்தைத் தகப்பனாரிடம் கொடுத்த பார்வதியை அன்புடன் பார்த்துக்கொண்டே, "ஆகட்டும். என் தகப்பனாரிடம் கலந்துகொண்டு கூடிய சீக்கிரம் தகவல் தெரிவிக்கிறேன் உங்களுக்கு" என்றான் சங்கரன்.

எதிர்வீட்டில் தலை தீபாவளிக்காக நாகஸ்வரக்காரன் இன்னிசையை ஊதிக்கொண்டிருந்தான். ★



# அவருக்கு....?

ஸரோஜா ராமமூர்த்தி

அது ஒரு தேய் பிறை இரவு. சற்று முன் இருண்டு கிடந்த வானத்தில் அரை நிலா பூத்திருந்தது. ஆசிரமத்தில் எல்லோரும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார்கள். மாமரத்தின் கிளைகளினூடே நிலவொளி இறங்கி வந்து பாலா படுத்திருந்த வராந்தாவில் ஒளிக்கோலம் வரைந்தது. பாலா மட்டும் உறங்கவில்லை.

இருண்ட வானத்தையும், பூதம் பூதமாக நின்றிருந்த மரங்களையும் பார்த்துக் கொண்டிருந்தவள், நிலவு உதயமானதையும் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் அருகே ஜக்கு படுத்து அயர்ந்த தூக்கத்தில் இருந்தான். கலைந்த கேசம் நெற்றியில் புரள, மலர் விழிகள் மூடி இருக்க, உள்ளத்தில் எண்ணற்ற கேள்விகளை உள்ளடக்கிக் கொண்டு அந்தக் குழந்தை தூங்குவதைப் பாலா உற்றுக் கவனித்தாள். தன் எலும்புக் கரத்தை அவன் பஞ்சு போன்ற முகத்தில் சோரவிட்டு ஆசை தீர வருடினாள். ஜக்கு தூக்கத்தில் முனகினான்; முறுவலித்தான்.

அந்த வராந்தாவில் சுமார் முப்பது பெண்கள் படுத்திருந்தார்கள். நல்ல கோடைக் காலம் ஆதலால் ஆசிரமத்துள் யாரும் படுக்கவில்லை. இவர்களுக்குத் துணைக்கென்று காவற்காரக் கிழவனும், அவன் வளர்ப்பு நாய் ஒன்றும் மாமரத்தடியில் படுத்திருந்தனர்.

பாலா தன்னைச் சுற்றிலும் ஒரு முறை பார்த்துக் கொண்டாள். தூங்குகிற அத்தனை பேருக்கும் விழித்த நிலையில் ஒவ்வொரு கவலை இருக்கத்தான் செய்தது. கணவனை இழந்தவர்களுக்கு அதைப் பற்றிய கவலை; ஒருவனால் ஏமாற்றப்பட்டவளுக்கு அதைப் பற்றிய வேதனை; கணவனால் நிராகரிக்கப்பட்டவளுக்கு அதைப் பற்றிய குமைச்சல். ஆனால் இவர்கள் எல்லோரும் பாலாவைப் போல் அந்த இரவில் கொட்டுக் கொட்டென்று விழித்திருக்கவில்லை. தத்தம் கவலைகளை மறந்துவிட்டிருந்தார்கள்.

பாலாவும் அப்படிக் கவலைப்பட்டே ஒன்றும் உருகிப் போகிறவள் அல்லள். கடைசித் தடவையாக அவள் கணவன் பலராமன் அவளையும் குழந்தையையும் ரயிலேற்றிவிட்ட போது, கண் கலங்காமல் தைரியமாகத்தான் இருந்தாள். ரயில் பெட்டியில் அவளையும் குழந்தையையும் உட்கார வைத்துவிட்டு, பலராமன் ரயிலடியைச் சுற்றிச் சுற்றி வந்தான். பாலாவும் குழந்தையின் கையைப் பிடித்துக் கொண்டே வெளியே வந்தாள். ரயில் கிளம்பும் நேரம் வந்ததும் பலராமன் பெட்டியின் அருகில் வந்து "ஜக்கு, போய் விட்டு வருகிறாயா? எங்கே 'டாட்டா' சொல்லு பார்ப்போம்" என்று கேட்டான்.

"போய்விட்டு வருகிற தென்னடா? போகிறேன் என்று சொல்லடா, ஜக்கு..."

சொல்லம்புகளால் வீட்டில் அவனைத் துளைத்தது போதாதென்று மேலும் துளைத்தெடுத்தாள் பாலா.

"சரி, சரி. போகிற இடத்தில் இந்த



வேலையையும் மனசிலே வச்சிண்டு லீவிலே புறப்பட்டேன். ஆனால் வந்திறங்கியதுமே கேள்விப்பட்ட ஒரு சமாசாரம் என் காரியம் பழமாயிடும்னு சொல்லித்து. 'டில்லியிலே உன் பிள்ளையை அடிக்கடி பார்ப்பேன்— ஆனால் அவன் சொல்லவேயில்லையே! நீ வேலையை இங்கே விட்டுவிட்டியா?''

"ஆமாம்; விட நேர்ந்துடுத்து... அதுக்கு உனக்கென்ன லாபம்?''

"வெரிகுட்...அப்ப நீ என் கூடவே டெல்லி வர்ரே... உனக்கு அங்கே கை மேலே வேலை காத்திருக்கு..''

"என்ன, டில்லிக்கா?..'' தம்பதிகள் இருவரின் குரல்களும் சேர்ந்தொலித்தன.

"என்னப்பா, மயக்கம் போட்டுடாதே. இங்கே உனக்கு வேலை போய் நீ மனசொடிஞ்சிருக்கே! அங்கே நானே தென்னிந்தியர் பள்ளிக் கூடத்துலே கிளை ஒண்ணைத் திறந்துட்டுத் தகுந்த ஹெட்மாஸ்டர் கிடைக்காமெ திண்டாடறேன்! இந்த வேடிக்கையை என்ன சொல்ல! என்ன யோசனை, பக்கத்துலே பிள்ளை, வேலை கையிலே...ம்...சரின்னு சொல்லு..''

ருக்கு கணவனைப் பார்த்தாள். 'நான் சொன்னது சரிதானா? ஒருவழி அடைச்சா தெய்வம் ஒரு வழி திறக்கும்' என்று பேசாமல் பேசின அவள் விழிகள்.

ஐயர் பூஜை மாடத்தைப் பார்த்தார். தீப ஒளியின் பின்னால், உருவாய், அருவாய், உளதாய், இலதாய், மருவாய், மலராய், மணியாய், ஒளியாய் நின்ற முருகன் இப்போதும் தன் மாயச் சிரிப்பை உதிர்த்துக் கொண்டிருந்தான்.

"அப்படியானால் நாங்கள் உனக்கு முன்னதாகவே — புதுவருஷப் பிறப்புக்குள்ளாகவே – சென்று விடுகிறோம்...'' என்றார் ஐயர்.

* * *

'சார்வரி' வருஷம் கிருஷ்ணையர்—ருக்கு தம்பதிகளுக்குத் தலைநகரிலே விடிந்தது.

"உங்கள் விஜயத்தோடு இத்தனை சிறப்பாக இவ்வருஷம் பிறக்குமனு நாங்கள் நினைக்கவேயில்லை...''என்றான் மகன் நாத் தழுதழுக்க...

"எல்லாம் ஈசன் செயல். இறைவனைச் சரணடைந்தால் அனைத்தும் பெறலாம். நம்பினோர் கெடுவதில்லை, இது நான்கு மறைத் தீர்ப்பு'' என்று முணுமுணுத்தது தந்தையின் வாய்.

மாமியார் தேர்ந்தெடுத்த பட்டுப் புடவையை உடுத்திக்கொண்டு வந்து நமஸ்கரித்த கமலாவை வாயார வாழ்த்தினார் ஐயர். ருக்குவிற்கும் மகிழ்ச்சி பிடிபடவில்லை

இளங்கதிரவன் புதுவருடத்தின் 'நம்பிக்கை ஒளியை' உலகெலாம் பரப்பியபடி தன் பவனியைத் தொடங்கினான். ∴

வாயை அடக்கிக் கொண்டு இரு. உடம்பிலே சீவனைக் காணோம்: 'பூ' என்றால் காற்றில் பறக்கிற மாதிரி இருக்கிறாய்; வாய் மட்டும் நெருப்பாகச் சுடுகிறது...''

ஜக்கு, தாயையும் தந்தையையும் மாறி மாறிப் பார்த்தான். அப்பாவுக்கும் அம்மாவுக்கும் உள்ள வேற்றுமை அவனுடைய சிறிய மூளைக்குக் கூடத் தெரிந்தது. நெடிதுயர்ந்து, நல்ல சிவப்பாகக் கம்பீரமாகத் தோன்றினான் பலராமன். ஆழ்ந்து சுடர் விடும் கண்களும், சுருண்ட கேசமும் கொண்ட அவன் நல்ல அழகன். அவன் அருகில் அம்மாவை அவன் பல முறைகள் பார்த்திருக்கிறான். மூங்கிற் துண்டுகளைப் போல் நீண்ட கைகளும் கால்களும்... குழி விழுந்த கண்களுமாக அவளுடைய கோரம் அவனுக்குத் தெரிந்துதான் இருந்தது. அவளுக்கும் அவனுக்கும் எத்தனை வேற்றுமை? இயற்கையின் இந்த ஏமாற்று வித்தையை மனித அறிவால் புரிந்து கொள்ள முடியவில்லையே!

இப்படி ஓர் அபூர்வ தம்பதிக்குப் பிறந்து விட்ட தன்னையும் குனிந்து பார்த்துக் கொண்டான் ஜக்கு. தகப்பனார் வாங்கித் தந்த ஊதலை எடுத்து உதட்டில் பொருத்தி அவன் ஊதவும், ரயிலும் ஊதிக் கொண்டு கிளம்பிவிட்டது.

இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டே நின்றார்கள். இவர்களைச் சுற்றி எத்தனையோ விதமான பேச்சுக்கள், கருத்துக்கள்...

"ஊர் போய்ச் சேர்ந்து கடிதம் போடு.. ஆமாம்... திரும்பி வரும்போது உடம்பை தேற்றிக் கொண்டு வரவேண்டும்."

ஒருவன் ஒருத்தியிடம் இவ்விதம் கூறி விடைபெற்றான்; "நாலும் தான் பெண்ணைப் பெற்றாய்; இந்தத் தடவை மொக்கு மொக்கென்று ஆண் குழந்தையோடு திரும்பிவர வேண்டும். இல்லாவிட்டால்...''

"இல்லாவிட்டால் என்னவாம்? என்னைத் தள்ளி வைத்து விடுவீர்களோ?''

இப்படி ஒரு பெண் குரல் மெல்லியதாக இழைந்து உறுதிப்பட்டு நின்றது.

பாலா திடுக்கிட்டாள். இதோ தன்னைத் தன் கணவன் தள்ளி வைத்து விட்டான். அப்படிச் சாமானியமாக நடந்து விடுமா என்று அந்தப் பெண் சவால் விடுகிறாளே! இதோ நடந்து கொண்டிருக்கிறதே!

இனி அவளுக்கும் அவனுக்கும் என்ன உறவு வைத்திருக்கிறது?

ரயில் மலைகளையும், காடுகளையும், ஆறுகளையும் கடந்து முன்னேறும்போதெல்லாம் அவளுக்கு அவன் தொலைவில் தெரியும் நட்சத்திரப் புள்ளியாக மாறிவிட்டான். அதோ! அவள் கண்களை உறுத்துவதைப் போல் ஒரு வானச் சுடர். எட்டாத உயரத்தில் அது நின்று அவளை அலட்சியமாகப் பார்த்தது. அது போல் தான் அவனும்!

∴ ∴ ∴

ஜக்கு புரண்டு படுத்தான். திரும்பவும் அவர்கள் பிரிவுக்குக் காரணத்தை ஆராய்ந்தாள் அவள். பெண்மையின் முழுமையை எதிர்பார்த்துக் காலமெல்லாம் ஏங்கி இருந்தவனுக்கு, பாலா ஒரு முழுமைப் பெண்ணாக முடியாது. நீண்ட நீண்ட கை கால்களும், சதைப்பிடிப்பில்லாத கன்னங்களும், கோரைக் கூந்தலும் கொண்ட அவளுடைய கழுத்தில் அவன் முடிச்சிட்ட கதை விந்தையானது; வேடிக்கையானதும் கூட.

உற்றார் உறவினர் பெற்றவர் எல்லோருமே பலராமனைச் சந்தேகத்துடன் பார்த்தார்கள். வயது முப்பதுக்கு மேல் ஆகியும் திருமணம் செய்துகொள்ள ஆசைப்படவில்லையே என்பது தான் அவர்கள் குற்றச்சாட்டு. ஒழுங்காக இருப்பவன்தானா?

இந்தக் கசமுசப் பேச்சுக்கள் பலராமனின் தாயை வெகுவாகப் பாதித்தன; காதைத் துளைத்தன.

"பாலு! நான் சொல்வதைக் கேட்கிறாயா?'' என்று மகனிடம் ஒரு தினம் ஆரம்பித்தாள் அவள்.

"என்ன அம்மா?...''

"குடும்பத்துக்குத் தகுந்த ஒரு பெண்ணைப் பார்த்துக் கல்யாணம் பண்ணிக் கொள்ளேன்...''

"நீதான் பாரேன், அம்மா...''

'அம்மா குடும்பத்துக்கு ஏற்றவளாகத் தானே கேட்கிறாள்; பார்க்கட்டும்' என்று நினைத்தான் பலராமன்.

தாய் அவ்விதமே பார்த்தாள். மகனின் கற்பனை உள்ளத்தைப் புரிந்துகொள்ளாத அவள் பாலாவின் உயரம் பருமன் இவற்றைப் பார்த்துத் திருப்தி அடைந்துவிட்டாள்.

"பெண்ணைப் பார்த்தாயாடா பலராமா?''

"நீதான் பார்த்தாயே, அம்மா. நான் சரியாகக் கவனிக்கவில்லை...''

"நல்ல உயரமும் பருமனுமாக இருக்கிறாள். குடும்ப வேலைகள் நன்றாகச் செய்வாளாம்..''

"ஓஹோ!—''

அவனுக்குப் பெண்ணைப் பார்த்து முடிவு கூற வேண்டுமென்று ஏனோ தோன்றவில்லை. தாயிடம் வைத்திருந்த அபார நம்பிக்கை காரணமாக இருக்கலாம்...

கண்கட்டு வித்தை போல் இவர்கள் திருமணம் நடத்து விட்டது. மணையில் பெண்ணையும், பிள்ளையையும பார்த்தவர்கள் அதிசயித்தார்கள். வயதுக்கு மீறிய முதிர்ச்சி நிறைந்த மணப் பெண்ணைப் பார்த்து மறுபடியும் கசமசவென்று பேசிக் கொண்டார்கள். தனித்துப் பார்க்கும்போது தெரியாத பேதங்கள் அவர்களுக்கு மணமக்களைச் சேர்த்துப் பார்க்கும்போது நன்ருகப் புலப்பட்டது. நல்லதோ கெட்டதோ, நாலு பேர்கள் பேசும் போது தானே கூர்ந்து கவனிக்கத் தோன்றுகிறது?

பலராமன் மனைவியைக் கூர்ந்து கவனித்தான். அவன் உள்ளத்தில் ஒரு சிறு நெருடல். 'இவளையா மனைவி என்று வரித்துக் கொண்டோம்! பொன்னுலும் மணியாலும் அணி செய்து பெற முடியாத அழகியையல்லவா மணக்க நினைத்திருந்தேன்!...

'ஆம்! நினைத்திருந்தேன்—கற்பனையில்; நடைமுறையில் தவறிவிட்டேன்!'

தலையைக் குனிந்து விழிக்கடையில் கோத்து நின்ற கண்ணீரைச் சுண்டி எறிந்துவிட்டு வேறு பக்கம் திரும்பிக் கொண்டான் அவன்.

முதல் பார்வையில் ஏற்பட்ட அந்தக் கலக்கம், கல் மேல் பொறித்த சொல் போல் அவன் இதயத்தில் ஆழமாகப் பதிந்து விட்டது...

∴ ∴ ∴

மரத்தடியில் படுத்திருந்த நாய் உடலைச் சிலிர்த்துக் கொண்டது. பாலா புரண்டு படுத்து ஜக்குவின் கைகளை எடுத்துத் தன் மார்பின் மீது வைத்துக் கொண்டாள். குழந்தை எல்லாச் சாயலிலும் தகப்பனையே உரித்துக் கொண்டு வந்திருந்தான். அவன் குவிந்த உதடுகளைப பார்த்து 'அவரும் இப்படித்தான் இருப்பார்' என்று நினைத்துக் கொண்டாள் அவள்...

∴ ∴ ∴

அழிக்க முடியாத எண்ணங்கள் திரும்பவும் தொடர்ந்தன...

பாலா கணவன் வீட்டிற்கு வந்தாள். ஆனல் அவனைக் கவரவில்லை. முகத்தில் ஒற்றிய பவுடரும், கண்களில் தீட்டிய மையுமாக அவள் அவனை மாலை நேரத்தில் வரவேற்ருள். அஞ்சனமும், வாசனைப் பொடியும் பெண்ணின் வெளி அழகைக் கவர்ச்சியாக்கிக் காட்டுமே தவிர, பெண்ணின் மலர்ச்சியை அவற்ருல் அதிகப்படுத்தி விட முடியாது.

பாலா, நாடகத்தில் பெண் வேடம் தாங்கிய நடிகனைப் போலத் தோன்றிஞள். அவனுக்குக் கோபம் பற்றிக் கொண்டு வந்தது.

"இங்கே வா, பாலா! நீ இப்படி வேஷம் போட்டுக் கொண்டு நின்ருல் தான் மயங்கி விடுவேன் என்று நினைக்காதே. நீ பெண்ணுகத் தவறிப் பிறந்துவிட்டாய். உன்னிடம் பெண்ணுக்கு இருக்க வேண்டிய மென்மை இல்லை; குழைவு இல்லை; கவர்ச்சியுமில்லை! நீ எப்பொழுதும்போல் சாதாரணமாகவே இரு. அது போதும்...என்னை பயமுறுத்தாதே..."

பாலாவுக்கு அவன் கூறுவது புரியவில்லை. இந்த நிலையில்தான் ஜக்கு பிறந்தான்!

"உன் பிள்ளை உன்னைப் போலவே இருக்கிருனடா...அவனைக் கொள்ளவில்லை..." என்ருள் தாய்.

"பிழைத்தேன் போ......உனக்குக்கூட அவள் பெண்ணுக இல்லை என்று இப்பொழுதாவது புரிந்ததே..."

"பெண் பார்க்கப் போன அன்று நீயும் தானே வந்தாய் அம்மா; என்னைப் போய்க் குற்றம் சொல்கிருயே!"

தாய் வேதனையுடன் மகனின் முகத்தைப் பார்த்தாள்.

"ஆம்..வந்தேன்; அவளைப் பார்க்கவும் பார்த்தேன். என் கண்ணுக் கெதிரே ஏதோ திரையைத் தொங்கவிட்ட மாதிரி அவளுடைய அவலட்சணம் எனக்குத் தெரியாமல் போய்விட்டது, அம்மா..."

துன்பப் பெருமூச்செறிந்தான் அவன்.

'திருமணங்கள் வானுலகிலேயே தீர்மானிக்கப் படுகின்றன' என்று அல்லவா கூறுகிருர்கள். இறைவன் இவர்கள் இரண்டு பேரையும் சேர்த்து வைத்துச் கசப்பை வளர்த்து வேடிக்கை பார்த்தான்.

"என்னவோ குடித்தனப் பாங்காக இருக்கிருளே என்று பார்த்தேன்...உயரமும பருமனுமாக எப்படி இருந்தாள்? பிரமாத அழகியில்லாவிடினும உடம்பாவது நன்ருக இருக்கக் கூடாதா?...அவலட்சணம் அதிகமாகக் கண்ணுக்குத் தெரியாது..."

தாய் அங்கலாய்த்தாள்.

கணவனின் அன்பு கிட்டாமல் போனவுடன் பாலா எலும்பும் தோலுமாக ஆகிவந்தாள். 'எக்ஸ்—ரே' கருவிகள் உடலைப் படம் பிடித்தனவே தவிர, உள்ளத்தில் பொங்கும் தணியாத ஆசையைப் படம் பிடித்துக் காட்டவில்லை.

மாமியாரும் கணவனும் அக்கறையுடன் வாங்கித் தந்த புஷ்டியான ஆகாரங்கள் அவளை வளப்படுத்தவில்லை.

அன்பு! — அன்பு! — அது ஒன்றுதான் அவள் இதய ஓலமாக இருந்தது. தாய்மைப் பேற்றை அடைந்தபோது கூட அவளிடம் மாறுதல் ஏற்படவில்லை.

பலராமன் தேர்ந்த ஞானியல்லன்; மிருக முமல்ல.

மென்மையும் நளினமும் கொண்ட ஒரு பெண்ணை எதிர்பார்த்தவனுடைய உள்ளத்திற்குப் பாலாவினல் உவவகை யளிக்க முடியவில்லை. தன் குழந்தையின் தாய் என்கிற முறையில், அவளை வைத்துக் காத்து வந்தான் பலராமன்.

அவன் சீறவுமில்லை—தணியவுமில்லை. ஆனால் பெண் உள்ளம் வேறு விதமாக இருந்தது. பாலா சீறியெழுந்தாள்.

தான் மனைவியாக நடத்தப்பட வேண்டும் என்று அவனுடன் வாதிட்டாள்.

(வானத்து நிலா கலையிழந்து காணப் பட்டது. மேற்கே நகர்ந்து நகர்ந்து அது செல்வதைப் பார்த்தவாறு பாலா சிந்தித்தாள்...)

**அ**ன்று ஒரு நாள்—

அவனும் அவளும் தனித்து நின்றபோது பாலாவின் கண்ணீர் அவனை உலுக்கியது. என்னமோ உண்மைதான். ஆனல் அது இரக்கம் தோய்ந்த கண்ணீர். பெண் என்கிற இரக்கம் ஒன்று தான் அவன் உள்ளத்தில் மேலோங்கி யிருந்தது.

"பாலா, ஏன் அழுகிருய்? உனக்கு இந்த வீட்டிலே என்ன குறை? நானும் அம்மாவும் உன்னுடன் அன்போடு தானே இருக்கிருேம்!..."

"அன்பா...?

பாலா கணவனைக் கோபத்துடன் விழித்துப் பார்த்தாள். "சோறும் துணியும் கொடுத்து நடத்தப்படும் வேலைக்காரி என்று சொல்லுங்கள்..."

அதற்குமேல் பலராமனே அவள் உள்ளத்தைப் புரிந்துகொண்டான். அவளுக்குப் பதில் கூற அவனல் முடியவில்லை.

அன்று அவள் உள்ளத்தில் பொங்கியெழுந்த ஆத்திரம் அவள் உடலையும் மனத்தையும் தீயாகப் பொசுக்கியது. அப்புறம் தான் அவள் பிறந்த வீடு சென்ருள். அங்கு அவளுக்கு இருந்த ஒரே ஆதரவு அவளுடைய அண்ணன் ஒருவன்தான்.

கணவனுக்குத் தன் கசப்பைக் காட்டிக் கடிதங்களாக எழுதிக் குவித்தாள். அந்த வீட்டில் அவள் மனைவியாக இருக்க விரும்பினளேயன்றி, இரக்கம் காண்பிக்கப்பட வேண்டிய பெண்ணுக இருக்க விரும்பவில்லை. முரண்பட்ட இந்த இரண்டு உள்ளங்களும் பெரும் போராட்டத்தை மாதக் கணக்கில் நிகழ்த்திக் கொண்டே இருந்தன. முடிவில் பாலா கணவனை விட்டுப் பிரிந்து, தன் வாழ்க்கையை வகுத்துக் கொள்ள ரயிலேறி விட்டாள்.

பலராமனுக்கு முதலில் இவையெல்லாம் அதிர்ச்சியாக இருந்தன. அவரவர் கட்சியிலே நியாயம் இருந்தது. இடையிலே இருக்கும் ஜக்குவை முதலில் யாருமே கவனிக்கவில்லை. பிள்ளை இருவருக்கும் பொது தானே!

"ஜக்குவை நீ அழைத்துப் போய் என்ன செய்வாய்? அவன் வளர வளர உன்னல் அவனைக் காப்பாற்ற முடியுமா?" என்று கேட்டாள் மாமியார். அவள் கேள்வி நியாயமானது.

"முடியுமோ, முடியாதோ! அவன் என் குழந்தை......" பாலாவின் மூர்க்கத்தனம் ஓங்கியிருந்தது.

"உனக்காவது ஜக்கு இருக்கிருன், ஆறுதலுக்கு. அவன் பட்ட மரமாக நின்று விட்டானே..."

கிழவியின் கண்களில் கண்ணீர் குளமாகத் தேங்கி நின்றது.

தாயின் கண்ணீரைக் கண்ட பலராமன் வேதனை பொங்க ஜக்குவை அணைத்துக் கொண்டான்.

பாலா குழந்தையின் கைகளை 'வெடுக்' கென்று பற்றி இழுத்தாள்...

∴ ∴ ∴

அடியற்காலம் வந்துவிட்டது. அது எழுப்பும் இன்ப போதையில் எல்லோருமே மயங்கிக் கிடந்தனர். பாலா முணுமுணுத்தாள்: 'ஆம், அவர் பட்ட மரமாகத்தான் நின்று விட்டார். ஜக்கு வளர்ந்த பிறகு அவரிடம் ஒட்டவா போகிறான்? பாசமென்பது ஒருவரை யொருவர் சார்ந்து நின்று உண்டாவது தானே!'

பாலா எப்பொழுது தூங்கினாளோ... விழித்துப் பார்க்கும்போது ஜக்கு ஆசிரம விதிகளின்படி குளித்துவிட்டு, வேறு உடை அணிந்து அவள் பக்கத்தில் வந்து உட்கார்ந்திருந்தான்.

"ஏண்டா, எப்பொழுது எழுந்தாய் நீ? என்னை எழுப்பக் கூடாதோ?"

அன்புடன் மகனின் கன்னத்தை வருடினாள் பாலா. குழந்தை முகத்தைச் சுணக்கிக்கொண்டு பின்னால் நகர்ந்தான்.

"அம்மா, உன் கை ஏனம்மா இப்படி 'சுள்'ளென்று குத்துகிறது? எங்க டீச்சரின் கை மெத்து மெத்தென்று.."

அவன் வார்த்தைகளை முடிக்கவில்லை.

பாலா தன்னிடமிருக்கும் குறையை உணராத நிலையில் நேற்றுவரை இருந்தாள்.. இன்று அந்த உண்மை தெளிந்த வானம் போல் அவள் உள்ளத்தில் பளிச்சிட்டது.

கணவனிடம் அன்பை எதிர்பார்த்து உரிமைப் போராட்டம் நடத்திய அவள், அவனுடைய நிலையைப் பற்றி யோசிக்கவேயில்லை. அவள் எதிரே பட்ட மரம் ஒன்று 'ஹோ' வென்று நின்று கொண்டிருந்தது..

'எனக்கு ஜக்கு இருக்கிறான் ஆறுதலுக்கு; அவருக்கு...?' பாலா விருட்டென்று எழுந்தாள்.

அன்று முதன் முதலாக—கடைசியாகவும்...கணவனுக்கு ஒரு கடிதம் எழுதினாள்.

"தாங்கள் இனிப் பட்டமரமாக இருக்க வேண்டாம். தங்களுக்குப் பிடித்தமான ஒரு மனைவியைத் தேடிக் கொள்ளுங்கள்; எனக்கென்று தாங்கள் அளித்த தளிர் ஒன்று — அதுதான் ஜக்கு—. இன்று தங்கள் பட்டுப்போன வாழ்க்கையை எனக்கு நினைவு படுத்திவிட்டான்......"

ஆசிரமத்தின் பிரார்த்தனைக் கூடத்தில் காலை மணி ஒலித்தது. ஜக்குவின் தளிர் விரல்களைப் பற்றிக்கொண்டு நடந்தாள் பாலா. ∴

# இழந்த வாழ்க்கை



**ஸரோஜா ராமமூர்த்தி**

**வா**னம் மப்பும் மந்தாரமுமாக இருந்தது. சிலுசிலுவென்று ஊதைக் காற்று வேறு அடித்தது. மத்தியானம் பன்னிரண்டு மணி வேளை என்று அப்பொழுது யாரும் சொல்ல முடியாது. வழக்கத்துக்கு விரோதமாக அன்று விடிந்ததிலிருந்து சூரிய ஸ்பரிசத்தையே பூமாதேவி அறியாமல் இருந்தாள். நீண்ட நாட்களுக்குப் பிறகு—அதாவது, இரண்டு வருஷங்களுக்குப் பிறகு—நான் என் பிறந்த வீட்டுக்கு வந்திருந்தேன். கல்கத்தாவிலிருந்து அடிக்கடி பிறந்த வீட்டுக்கு வருவதென்பது லேசான விஷயமல்ல. நகரத்து வாழ்க்கை அலுத்துச் சலித்துப் போய் இரண்டு மாதங்கள் நிம்மதியாக இருந்துவிட்டு வரவேண்டும் என்ற பேராவலால் தூண்டப்பட்டு ஒருவாறு பூந்திடல் வந்து சேர்ந்தேன். நான் பிறந்த ஊரும் அதுதான். என் குழந்தைப் பருவத்து நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றும் அந்த ஊர் மண்ணில்தான் நிகழ்ந்தன. கல்யாணமும் அங்குதான் நடந்தது. அழகிய ஏரிக் கரையும், அதன் கரையிலுள்ள வெற்றிலைத் தோட்டங்களும், பிஞ்சுக் கத்தரிக்காயும், கள்ளமற்ற என் பால்யத் தோழி லக்ஷ்மியும் கல்கத்தாவில் கிடைப்பார்களா, என்ன?

நீண்ட ரயில் பிரயாணத்தால் அலுத்துப் போய்க் கண்களை மூடிக் கொண்டே படுத்திருந்தேன். தூக்கமுமல்லை, விழிப்புமில்லை; ஒரு வித மயக்க நிலை அது. "ஜகதா!" என்று எனக்குப் பழக்கமான குரல் ஒன்று என்னை அழைத்தது. எந்தப் பெண்ணுடன் புழுதியில் புரண்டு விளையாடி, வாய்க்காலில் அலைந்து விஷமம் செய்தேனோ, அந்த லக்ஷ்மி என் எதிரில் நின்று கொண்டிருந்தாள். எங்கள் இருவருடைய உள்ளங்களும் ஒன்றுபட்டுப் போயிருந்தன. ஆனால், லக்ஷ்மி குடியானவப் பெண்ணாகப் பிறந்திருந்த தோஷத்தால் என்னுடன் பால்யத்தில் ஒன்றாகச் சாப்பிடவோ தூங்கவோ முடியாமல் ஒன்றுபட்ட உள்ளங்கள் வருந்தின.

பரட்டைத் தலையுடனும், அழுக்கேறிய உடையுடனும், சோகம் நிரம்பிய முகத்துடனும் அவள் என் எதிரில் நின்று கொண்டிருந்த காட்சி என் மனதை உறுத்திற்று.

"வா, வா, லக்ஷ்மி! உன்னை வீட்டில் வந்து பார்க்கவேண்டுமென்று இருந்தேன். ஒரு வேளை புருஷன் வீட்டில் இருக்கிறாயோ என்னவோ என்று பேசாமல் இருந்து விட்டேன்" என்றேன்.

ஏற்கெனவே சோகத் திரைக்குள் மறைந்திருந்த அந்த முகம் மேலும் வாட்டமடைந்தது.

"புருஷன் வீட்டிலே இல்லை, அம்மா! இங்கேதான் இருக்கேன்" என்று அவள் கூறும்போது குரல் தழதழத்துக் கண்ணில் நீர் ததும்பிற்று.

அதற்குள் உள்ளேயிருந்து என் தாயார் வந்தாள். "வந்து விட்டாயா, லக்ஷ்மி? ஜகதா வந்திருக்கிறாளே, சொல்லி அனுப்பலாம் என்று இருந்தேன். நீயே வந்து விட்டாயே?" என்றாள்.

"களத்து மேட்டுப் பக்கம் மாட்டு வண்டியிலே டார்த்ததாக அண்ணன் சொல்லிச்சு, அம்மா! வேலையைப் போட்டுட்டு ஓடியாந்தேன், ஜகதாவைப் பார்க்க!"

"என்னவோ பாவம்! அவளைப் போல நீயும் குடியும், குடித்தனமுமா இருந்தா எவ்வளவோ நன்றாயிருக்கும். அவன்தான் உன்னை வருஷக் கணக்கிலே தள்ளிவைத்து விட்டு இருக்கானே!" என்று அனுதாபப் பட்டாள் என் தாயார்.

லக்ஷ்மி மௌனமாகக் கண்ணீர் வடித்து நின்றாள். என் பால்யத் தோழியின் துயரம் கண்டு என் மனம் வருந்தியது. அம்மா ஏதாவது சொல்லுவாளோ என்பதையும் மறந்து அன்புடன் அவள் கரங்களைப் பற்றினேன்.

"வா, லக்ஷ்மி! நாம் விளையாடிய இடங்களையெல்லாம் பார்த்துவிட்டு வரலாம்" என்று அவளை அழைத்துக் கொண்டு ஏரிக் கரைக்குப் புறப்பட்டேன்.

லக்ஷ்மி வழியில் என்னுடன் அதிகமாகப் பேசவில்லை. அவள் உதிர்த்த கண்ணீரைப் போல் வானம் அவ்வப்போது சடசட வென்று தூறிக் கொண்டிருந்தது. முதலில் கூறியபடி ஊதைக் காற்றும் அடித்துக் கொண்டிருந்தது. சுற்றியிருந்த வயல் வெளிகளில் உழவர்கள் நாற்று நட்டுக் கொண்டிருந்தார்கள். உழத்திகள் சளசள வென்று குடும்ப விஷயங்களைப் பற்றிப்

பேசிக் கொண்டே சரசர வென்று காற்று கடுவதில் ஈடுபட்டிருந்தார்கள். சுற்றிலு மிருந்த கிராமிய நிகழ்ச்சிகளில் ஈடுபட்டிருந்த என் மனதை லக்ஷ்மியின் விம்மல் அவள்பால் திருப்பியது.

"என்ன, லக்ஷ்மி? ஏன் இப்படி அழுகிறாய்?" என்று அவள் கரங்களைப் பற்றிக் கொண்டு கேட்டேன். அவள் சோகம் நிரம்பிய கதை இதுதான்:

## 2

லக்ஷ்மிக்குக் கல்யாணமாகி ஆறு ஏழு வருஷங்கள் ஆகி விட்டன. எனக்கு விவாகம் நடப்பதற்கு முன்பே அவளுக்கு நடந்து விட்டது. லக்ஷ்மியின் கணவன் நல்ல அழகன். நிலம், நீச்சு, தோப்பு எல்லாம் இருந்தன. வருஷம் பூராவும் வயலில் பாடுபட்டுத்தான் சாப்பிட வேண்டும். தாய் தந்தையருக்கு ஒரே பிள்ளை; செல்லமாக வளர்ந்தவன். வயலிலே கூட அவன் வேலை செய்யப் போக மாட்டான். அவனுடைய தகப்பன்தான் எல்லா வேலைகளையும் எற்று நடத்துகிறவன். பிள்ளையின் சுகவாழ்வு ஒன்றிலேயே தாய் தந்தையருக்கு நாட்டம். பிள்ளைக்குக் கல்யாணம் பண்ண வேண்டும், குடியும் குடித்தனமும் பெருக வேண்டும் என்பதே அவர்களுடைய லட்சியம்.

லக்ஷ்மியின் கணவனை முத்து, அப்பா, அம்மாவின் வார்த்தையைத் தட்டாதவன். அவர்கள் கிழித்த கோட்டைத் தாண்ட அவனுக்குத் தைரியம் கிடையாது. ஆயிரம் சகுனம் பார்த்து, ஜோஸியம் பார்த்து லக்ஷ்மிக்கும் முத்துவுக்கும் கல்யாணம் நடந்தது. மருமகள் வந்ததில் லக்ஷ்மியின் மாமியார் சொர்ணத்துக்குக் கட்டுக்கடங்காத பெருமை.

"என்னடி சொர்ணம், மருமகள் வந்து விட்டாற்போ லிருக்கிறதே!" என்று என் தாயார் அவளைக் கல்யாணம் விசாரித்தாள்.

"வந்துட்டா, அம்மா! எங்க குடி பெருகி வாழ வேணும், அம்மா!" என்று ஆவலுடன் அவள் பதில் கூறியது இன்று எனக்கு நினைவு வருகிறது.

லக்ஷ்மி நான் பிறந்த வீட்டில் இருக்கும்போதே புக்ககம் சென்றுவிட்டாள். அவள் ஊருக்குப் போகு முன்பு என்னிடம் வந்து, "ஜகதா! உனக்குக் கல்யாணமாகி நீயும் உன் புருஷனுடன் சந்தோஷமாக ஊருக்குப் போகிறதைப் பார்க்க எனக்கு ஆசையா யிருக்கு. சீக்கிரம் கல்யாணம் பண்ணிக் கொள். ஜகதா! படிச்சதெல்லாம் போதும்" என்றாள்.

"கூடிய சீக்கிரமே அவளுக்கும் கல்யாணம் பண்ணி விடுகிறேனடி, லக்ஷ்மி! அப்போது உனக்கும் சொல்லி அனுப்புகிறேன். நீயும் வா!" என்று என் தாயார் அவளிடம் கூறினாள்.

அன்று மகிழ்ச்சியுடன் என்னிடம் விடை பெற்ற லக்ஷ்மி இன்று கணவனால் தள்ளப்பட்டுக் கண்ணீருடன் நிற்கிறாள் என்றால் என் மனம் வேதனைப் படாமல் இருக்குமா? காரணம் இதுதான்—லக்ஷ்மி மாமியார் வீட்டுக்குச் சென்று ஏழு வருஷங்கள் ஆகியும் அவளுக்குக் குழந்தை பிறக்கவில்லை. வம்சம் பெருக வேண்டும் என்று ஆசைப்பட்ட சொர்ணத்துக்கு இது சங்கடமாக இருந்தது. முதலில் மருமகளுக்கு ஏதோ காற்று சேஷ்டை என்று மந்திரமும் மாந்திரீகமும் செய்தாள். பிறகு நாட்டு மருந்து வாங்கிக் கொடுத்தாள். குல தெய்வத்துக்குப் பூஜை போட்டாள். ஏழுமலையானை வேண்டிக் கொண்டாள். பிறகு பட்டணம் அழைத்துப் போய் ஆஸ்பத்திரியில் இங்கிலீஷ் வைத்தியமும் செய்தாள். ஆனால், அவளுக்குப் பேரனோ, பேத்தியோ பிறக்கிற வழியாக இல்லை. இதெல்லாம் நான்கு வருஷங்கள் நடந்தன. என் கல்யாணத்தின் போதே கசமச வென்று சிலர் பேசிக் கொண்டார்கள். "சொர்ணத்துக்கு மருமகளைக் கண்டால்



ஆகவில்லையாம்; கரித்துக் கொட்டுகிறுளாம்!" என்று அம்மா என்னிடம் சொன்னுள். லக்ஷ்மி என் கல்யாணத்துக்கு வரவில்லை. "ஆமாம், பிள்ளையில்லாதவளுக்குக் கல்யாணமும் கார்த்திகையும்தான் குறைச்சல்!" என்று சொல்லிவிட்டுச் சொர்ணம் என் கல்யாணத்துக்கு வந்திருந்தாள். "லக்ஷ்மியை ஏன் அழைத்து வரவில்லை?" என்று அவளிடம் கேட்டதற்கு, "அது எதுக்கம்மா இங்கே?" என்று அசிரத்தையாகப் பதிலளித்தாள்.

நானும் கல்கத்தாவுக்கு லக்ஷ்மியைப் பாராமலேயே சென்றுவிட்டேன்.

## 3

இவ்விதம் சிந்தனையில் மூழ்கியவர்களாக இருவரும் ஏரிக்கரையை அடைந்து அங்கிருந்த ஓர் அரச மரத்தடியில் உட்கார்ந்தோம். சிறிது நேரம் இருவரும் பேசவில்லை. லக்ஷ்மி வெறிச் சென்ற பார்வையுடன் ஏரியைப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

"லக்ஷ்மி!" என்று நான் மெதுவாக அவளைத் தொட்டு அழைத்தேன்.

"ஏன் ஜகதா?" என்றுள் அவள்.

"நீ பிறந்த வீட்டுக்கு வந்து எவ்வளவு நாளாச்சு?"

"இரண்டு வருஷம்."

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. "மூத்து வரவேயில்லையா? உன்னை வந்து கூப்பிடவில்லையா?" என்று கேட்டேன்.

"இல்லை, ஜகதா! அவருக்கு என்னைப் பற்றி என்ன அக்கறை? அவர்தான் இன்னும் எட்டு நாளில் வேறே கல்யாணம் பண்ணிக்கொள்ளப் போகிறுரே!" என்று கூறிவிட்டு அவள் விசித்து விசித்து அழுதாள்.

எனக்குக் கோபமும், ஆத்திரமும் கலந்து வந்தன. "சரி, அவன் கல்யாணம் பண்ணிக்கொண்டு போகட்டும்; நீ என்னோடு ஊருக்கு வந்துவிடு!" என்றேன்.

லக்ஷ்மி பரிதாபமாகச் சிரித்துவிட்டு, "அதெல்லாம் எதற்கு ஜகதா? இந்த அதிர்ஷ்டக்கட்டை உன் வீட்டில் காலடி எடுத்து வைக்கக்கூடாது" என்றுள்.

அவள் புருஷன் அவளை அடித்து விரட்டியதற்குக் காரணம் என்னவென்று கேட்டேன் நான்.

"ஊரிலே இருந்து என் நாத்தனார் வருவதற்கு இருந்தாள். 'அவள் ஐந்தாறு மாதம் கர்ப்பம். அவள் என் முகத்திலே முழிக்கக் கூடாதாம். நான் அங்கே இருந்தால் அவளுக்குப் பிறக்கும் குழந்தைகூடத் தக்காதாம். மாமியார் ஜாடை மாடையாகத் தினம் இதைப் பற்றிச் சொல்லிக்கொண்டே இருந்தாள். 'உன் பிறந்த வீட்டுக்குப் போ!' என்று கழுத்தைப் பிடித்துத் தள்ளாத குறையாகச் சொல்லி வந்தாள். எனக்கும் ஆத்திரமாக இருந்தது. 'போய் விடுகிறேன், மாமி!' என்று ஒரு நாள் சொல்லிவிட்டேன். வயலுக்குச் சென்றிருந்த என் புருஷன் வந்ததும், உன் பெண்டாட்டி பிறந்த வீட்டுக்குப் போகிறுளாம், அப்பா! இந்த வீட்டிலே இருந்து வாழ அவளுக்கு இஷ்டமில்லையாம்!" என்று மாமியார் கூறினுள். 'போகட்டுமே, கழுதை! இப்பவே போகச் சொல்!' என்று கரகரவென்று என் கையைப் பிடித்து இழுத்து வெளியே தள்ளிக் கதவைச் சாத்திவிட்டார், அவர்!"

லக்ஷ்மி கூறிய வரலாறு இதுதான். நான் சிந்தனையில் மூழ்கினேன். பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளில் 'தள்ளிவைக்கும் கொடுமை'யை நினைத்து நினைத்து என் மனம் புழுங்கியது.

"லக்ஷ்மி! இந்தக் கல்யாணத்தை நடக்கவிடாதே! கல்யாணத்தன்று பந்தலில் போய் நின்று நாலு பேரிடம் முறையிடு!" என்று அவளிடம் கூறினேன்.

"ஜகதா! நீ படிச்ச பெண். எனக்கு இதெல்லாம் புரியவில்லை. நானோ மக்கு. அவருக்கு என்னுலே சுகம் ஒண்ணும் கிடையாது, பார்!" என்றுள் லக்ஷ்மி.

அவளுடைய பெருந்தன்மை எனக்கு அளவில்லாத வியப்பை அளித்தது.

## பெயர் என்ன?



"ஐயரே! உம்முடைய முழுப் பெயர் என்ன? ராமய்யரா? அல்லது கிருஷ்ணய்யரா?"

"இரண்டுமில்லை, ஸார்! என் பெயர் ஸப்ளையர்!"

# யாருடைய சித்தம்?

ஸரோஜா ராமமூர்த்தி

கொல்லையில் பாத்திரம் தேய்த்துக்கொண்டிருந்த கன்னியம்மாளின் முகம் வாடிக்கிடந்தது. வாய்நிறைய வெற்றிலையையும் பாக்கையும் போட்டுக் குதப்பிக்கொண்டு முகத்தில் சிரிப்புத் தவழ அவள் வேலைக்கு வந்துவிட்டாலே எங்கள் வீட்டில் அமைதி நிலவும். அன்றும் வழக்கத்தைவிடச் சற்று முன்பாகவே அவள் வேலைக்கு வந்துவிட்டாள். நிலம் தெளியவில்லை. அப்பொழுதுதான் ஒன்றிரண்டு காகங்கள் உதயத்தின் வரவை அறிந்து கத்த ஆரம்பித்தன. கிணற்றங் கரையில் ஜலம் இழுக்கும் சத்தமும், வாளியின் லொடலொடச் சத்தமும் என்னைத் தூக்கத்திலிருந்து எழுப்பிவிட்டன. ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்துக் கேட்டேன்: "என்ன கன்னியம்மா, சிக்கிரமே வந்துவிட்டாய்?" என்று.

"ஆமாங்க" என்று சொல்லிவிட்டு அவள் மௌனம் சாதித்தாள். நானும் அசிரத்தையாக மறுபடியும் தூக்கத்தில் ஆழ்ந்தேன். மறுபடி நான் விழித்து எழுந்தபோது நன்றாக விடிந்துவிட்டது. கொல்லையில் கன்னியம்மாள் நான் முன்பு கூறியதுபோல் முக வாட்டத்துடன் பாத்திரம் தேய்த்துக்கொண்டிருந்தாள்.

"என்ன கன்னியம்மா, காலையிலேயே வந்துவிட்டாய்? முகமும் வாடி இருக்கிறதே" என்று மறுபடி அவளைத் தூண்டிக் கேட்டேன்.

கன்னியம்மாளின் கண்களில் கண்ணீர் திரண்டது. "இன்னிக்குச் சிக்கிரம் போவணும் அம்மா. என் தங்கச்சி பெண் விசாலம் படுத்துக் கிடக்குது. தண்ணி ஊத்தக்கூட ஆள் இல்லே அம்மா!"

"உன் தங்கை பெண்ணா? போன மாசம் நீ படுத்துக் கிடக்கும்போது இங்கே வேலை செயய வந்திருந்தாளே, அவள் தானே?" என்று கேட்டேன் நான்.

"ஆமாம் அம்மா, அந்தப் பாவிப் பெண்தான் அம்மா" என்றாள் கன்னியம்மாள்.

அந்தப் 'பாவிப் பெண்'ணைப்பற்றி நான் அப்பொழுதுதான் சாவகாசமாக நினைத்தேன். கூனி வளைந்த முதுகும், முதுகுடன் ஒட்டிய வயிறும், மெலிந்த கைகால்களுமாக அந்தப் பரிதாப உருவம் என் மனத்தைக் கலங்க அடித்தது. அவள் போன மாதம் ஒரு நாள் சோகமே உருவாக எங்கள் வீட்டுக் கொல்லையில் வந்து நின்றுகொண்டிருந்தாள். யாரோ பிச்சைக்காரி என்றே நான் நினைத்திருந்தேன். ஆனால், அவள் என்னிடம் தான் வேலை செய்ய வந்திருப்பதாக அறிவித்தபோது, நான் ஆச்சரியத்தில் ஆழ்ந்து போனேன்.

"எங்க பெரியம்மா அனுப்பிச்சுதுங்க அம்மா; அதுக்கு உடம்பு நல்லா இல்லீங்க" என்றாள் விசாலம்.

கூனிக் குறுகிக்கொண்டு வந்து நிற்கும் அவளால் இவ்வளவு வேலைகளையும் செய்ய முடியுமா என்ற வியப்பு ஒருபுறம் ஏற்பட்டது எனக்கு. ஆனால் உழைப்பதற்கென்றே பிறந்தவர்களுக்கு ஆண்டவன் அதிகமாகச் சக்தி அளித்திருக்கிறானோ என்னவோ? அவர்கள் வறுமையின் கொடுமைதான் அவர்களை அப்படி உழைக்கச் சொல்லுகிறதோ எனக்குத் தெரியவில்லை. விசாலம் கன்னியம்மாளைவிடச் சடுதியில் வேலைகளை முடித்துவிட்டாள்.

அன்றைத் தினத்துக்கு அப்புறம் நான் அவளை அடியோடு மறந்து போனேன். கன்னியம்மாள் அவளைப்பற்றித் தெரிவித்தபிறகுதான் நினைவு வந்தது.

அன்று மத்தியான்னம் கன்னியம்மாள் வேலைக்கு வந்தபோது இரண்டு குழந்

தைகளை அழைத்து வந்தாள். பிறக்கும் இடம் வித்தியாசப்பட்டதால் அவைகள் குழந்தைகளாக இல்லை. பரட்டைத் தலையும், மண் பூத்த உடம்பும், அழுக்கு நெளியும் ஆடையுமாக அந்தக் குழந்தைகள் அழகை, ஆரோக்கியத்தை இழந்து பரிதவித்தார்கள.

"கன்னியம்மா, குழந்தைகள் யாருடையவை?" என்று கேட்டேன்.

"அந்தப் பாவிப் பொண்ணுதுங்க. அவ போற போக்கிலே இதுகளை வேறே தலையிலே கட்டிவிடுவா போல இருக்குது" என்றுள் அவள் பரிதாபத்துடன்.

"விசாலத்துக்குக் கல்யாணமாகிக் குழந்தைகள் வேறு உண்டா? புருஷன் எங்கே இருக்கிறுன், கன்னியம்மா?"

"எங்கே போவான் அந்தப் பாவி? இங்கேதான், அவ கிட்டதான் இருக்கான், ஒரு காசுக்கு உபயோகமில்லாம!"

எனக்கு அதற்குமேல் அந்த வரலாற்றைக் கேட்க ஆவல் எழவில்லை.

பாரதநாட்டில் லக்ஷக்கணக்கான குடும்பங்களின் கதை இதுவாக இருக்கும் போது ஒரு குடும்பத்தின் கதையைக் கேட்டுவிட்டால் போதுமா?

சாயங்காலம் காரியாலயத்திலிருந்து கணவர் வந்தார். வழக்கத்தைப் போல் அவர் முகம் மலர்ந்திருக்கவில்லை. ஒரு வேளை காரியாலயத்திலிருந்து வேலை அதிகமாக இருக்கலாம் என்று நானும் அதிகம் பேசாமல் இருந்துவிட்டேன். காபி சாப்பிட்டானதும், "என் சிநேகிதன் சுந்தரத்தை உனக்குத் தெரியுமோல்லியோ?" என்று பேச்சை அவராகவே ஆரம்பித்தார்.

"தெரியும் தெரியும். போன வருஷத்தில்தானே அவருக்குக் கல்யாணம் ஆயிற்று?" என்று கேட்டேன்.

"ஆமாம், அவன் மனைவி நிர்மலா படுத்த படுக்கையாகக் கிடக்கிறுளாம். பிரசவத்துக்கு ஊருக்குப் போய் இருந்துவிட்டு வந்தவள், குழந்தைக்கு மூன்று மாதம் ஆகின்றன. குழந்தையைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கிறது. குழந்தை தாய்ப்பாலுக்காக ஏங்கித் தவிக்கிறது" என்றுர் என் கணவர்.

ஒரு கணம் என் மனம் சிந்தனையில் ஆழ்ந்தது.

விசாலத்தின் மரணப் படுக்கை. அவளுடைய இரண்டு குழந்தைகள். அன்பற்ற கணவன். எல்லாம் என் மனக்கண் முன்பு சோக உருவத்துடன் காட்சி அளித்தன. என் கணவர் மேலும் பேசிக்கொண்டே போனுர்: "நிர்மலாவைத்தான் கல்யாணம் பண்ணிக் கொள்வேன் என்று சுந்தரம் ஒரே பிடிவாதமாக இருந்தான். தாயாரைக்கூட விரோதம் செய்துகொண்டான். ஜாதகப்




கொல்லையில் பாத்திரம் தேய்த்துக் கொண்டிருந்த கன்னியம்மாவின் முகம் வாடிக்கிடந்தது...

பொருத்தமே சரியில்லையாம். அந்தப் பெண்ணுக்கு ஆயுஸ் நன்ருக இல்லை என்று ஜோஸ்யர்கள் சொன்னர்களாம். இதையெல்லாம் நினைத்து இப்போது வருத்தப்படுகிருன்'' என்ருர் அவர்.

''வியாதி வந்தால் என்ன? மனுஷ்யர்கள் பிழைக்கிறதில்லையா? போதாத காலத்தில்தான் கெட்டதை எல்லாம் எண்ணச் சொல்லும்'' என்றேன் நான்.

''அவன் வரைக்கும் நம்பிக்கையைக் காணும். ஆயிரக்கணக்கில் பணத்தை வாரித்தான் இறைக்கிருன்.''

ஆயிரக்கணக்கில் வாரி இறைக்கச் சுந்தரத்துக்கு ஏராளமான செல்வம் இருக்கிறது. ஆனல், நிர்மலாவின் வயசேயுள்ள விசாலம் மரணவஸ்தையிலும் கவனிப்பாரற்று, நாதியற்றுக் கிடக்கிருள்.

''நாளைக்கு நீ என்னேடு வருகிருயா? நிர்மலாவைப் போய்ப் பார்த்துவிட்டு வரலாம்'' என்று கூப்பிட்டார் என் கணவர்.

''உம்'' என்று தலையை ஆட்டினேன்.

## 2

இரவெல்லாம் முடிவற்ற எண்ணங்களும் சிந்தனைத் தொடர்களும் என்னைப் பைத்தியமாக அடித்தன. மாறி மாறி விசாலம், நிர்மலா இவர்கள் இருவரையும் ஒப்பிட்டுப் பார்ப்பதிலேயே என் மனம் ஈடுபட்டிருந்தது. 'சீ! இதென்ன கவலை? மண்ணிலே பிறந்தவர்கள் மண்ணிலே மறைய வேண்டியதுதானே? நாமும் ஒரு நாள்......' என்று எண்ணியபோது என் உடல் பயத்தால் ஒரு தரம் குலுங்கியது.

''என்ன நீ தூங்கவில்லையா?'' என்று கேட்டார் என் கணவர்.

''என்னவோ தூக்கம் வரவில்லை'' என்று சொல்லிக்கொண்டே திரும்பிப் படுத்துக்கொண்டேன்.

''உனக்கு எப்பொழுதும் யோசனை தான். தூக்கத்தைக் கெடுத்துக் கொண்டு என்ன அசட்டுத்தனம் இது?'' என்று அவர் கடிந்துகொண்டார்.

என் எண்ணங்களுக்கு ஒரு தடை ஏற்பட்டதுபோல் கன்னியம்மா, ''அம்மா!'' என்று அழைத்துக்கொண்டே வந்தாள்.

பரக்கப் பரக்க எழுந்து கொல்லையில் சென்றேன். ''எப்படி இருக்கிருள் விசாலம்?'' என்று கேட்டேன் அவளை.

''இருக்கிருள், அம்மா. சாக மனசில்லை அவளுக்கு. இந்த அழகான புருசனிடமும், வீடு வாசலிடமும் அவளுக்கு



இருக்கிற ஆசையிலே உசிர் இழுத்துக் கிட்டுக் கிடக்கு அம்மா.''

''சாக யாருக்குத்தான் மனசு வருமடி? உனக்கு ஐம்பது வய்சாகிறதே. உனக்கும் பூமியில் இருக்கத்தானே ஆசை?'' என்றேன்.

''என்னைப் போலவா அம்மா அது? புருஷன் சொல்றன்: பாவி முண்டை! செத்தாலும் நான் சொகப்பட்டுப் போவேன்னு? எதுக்கு அம்மா அவ இருக்கணும்? இவன் கிட்டே அடியும் உதையும் வாங்க?'' என்று கேட்டாள் கன்னியம்மா.

சுந்தரம் தன் மனைவி பிழைக்க வேண்டும் என்று ஆசைப்படுகிருன். விசாலத்தின் கணவன் மனைவி இறக்க வேண்டும் என்று ஆசைப்படுகிருன். கடவுளின் ஆசை எப்படி இருக்குமோ? என் கண் முன் இரண்டு பிரச்னைகள். அதன் முடிவை என்னல் எப்படித் தீர்மானிக்க முடியும்?

தினத்தைவிட அன்றும் அவசரமாக வேலைகளைச் செய்து முடித்தாள் கன்னியம்மா.

''அம்மா, விசாலம் ஒன்னை ஒண்ணு கேக்கச் சொன்ன?'' என்று தயங்கினள்.

''என்ன அது?'' என்றேன் நான்.

''அவ குழந்தைங்க குளிர்லே விறைச்சுக் கிடக்குதுங்க. ரெண்டு சொக்கா கேக்கச் சொன்ன. நான் போயி கேக்கமாட்டேன்னேன். 'நீ கேக்காட்டிப் போ பெரியம்மா. நான் பொழச்சி

எழுந்தா அம்மாளைப் போய் நானே கேட்டுக்கிட்டேறேன்'னு எம்மேலே கோவிச்சுக்கிச்சு" என்ருள் கன்னியம்மாள்.

"ஆகட்டும், பார்த்துத் தருகிறேன்" என்றேன் நான். அபபுறம் அதைப்பற்றி மறந்துவிட்டேன். முதல் நாள் என் கணவர் சொன்னபடி சுந்தரத்தின் வீட்டுக்குக் கிளம்பினேம்.

என்னைக் கண்டவுடன் நிர்மலா விசித்து விசித்து அழுதாள். "கடவுளுக்கு எங்கள் ஒற்றுமையிலும் அன்பிலும் பொருமை ஏற்பட்டுவிட்டது அம்மா. என் குழந்தையை யார் கவனிக்கப் போகிருர்கள்?" என்று வருந்தினுள் அவள். சுந்தரம் துக்கம் தாளாதவனுக வெளியே சென்று உட்கார்ந்து விட்டான். குழந்தை தொட்டிலில் தூங்கிக்கொண்டிருந்தது. ஞானிகள் முகத்தில் குடிகொண்டிருக்கும் நிச்சலனம் அதன் முகத்திலும் காணப்பட்டது. கவலையும் துன்பமும் போகப் போகத்தானே அதற்கு விளங்கப் போகின்றன?

நிர்மலா சிறிது நேரம் மூச்சு விடுவதற்குக்கூடக் கஷ்டப்பட்டாள். பிறகு திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டவள் போல், "அவர் எங்கே?" என்று கேட்டாள்.

சுந்தரம் அவள் பக்கத்தில் வந்து உட்கார்ந்துகொண்டான். அன்புடன் அவள் கரங்களை எடுத்து அவன் கையில் வைத்துக்கொண்டான. இருவரும் மௌனமாக ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

"என்ன பார்க்கிறீர்கள்?" என்று புன்னகையுடன் கேட்டாள் நிர்மலா.

"ஒன்றும் இல்லை. சற்றுப் பேசாமல் தூங்கேன" என்ருன் சுந்தரம்.

"இனிமேல் எனக்குத் தூக்கந் தானே?" என்று ஒரு சோகச் சிரிப்புச் சிரித்தாள்.

"அசடு நீ" என்ருன் சுந்தரம். அவன் கண்களில் கண்ணீர் பெருகியது.

"பகவான் கிருபையால் உனக்கு ஒன்றும் ஏற்படாது" என்று எதிலும் நம்பிக்கை இல்லாத சுந்தரம் அவளுக்குத் தைரியம் கூறினன்.

"நீங்கள்தான் அசடு! என் குழந்தையைக் காப்பாற்றுங்கள்" என்று திக்கித் திணறி வேண்டிக்கொண்டாள் நிர்மலா.

அதுவே அவள் கடைசி வேண்டுகோளாக முடிந்தது. அந்தச் சோகத்தைக் காணச் சகியாமல் நாங்கள் வந்து விட்டோம். அங்கே நிர்மலாவின் மரணத்தைப் பார்த்த பிறகு எனக்கு வரும் வழியிலெல்லாம் விசாலத்தின் நினைவாகவே இருந்தது. நாம் வீடு சேர்வதற்குள் அவளும் இறந்துபோயிருப்பாள் என்றே நினைத்தேன். வீட்டை அடைந்தபோது நன்ருக இருட்டி விட்டது. கன்னியம்மாள் வந்து வேலைகளைச் செய்துவிட்டுச் சாவியைத் தோட்டக்காரனிடம் கொடுத்துவிட்டுப் போயிருந்தாள். விசாலத்தைப்பற்றி நான் ஒன்றும் அறிய முடியவில்லை.

மறுநாள் வழக்கம்போல் கன்னியம்மாள் வேலைக்கு வந்தாள். முந்திய தினங்களில் இருந்த சோகம் அவள் முகத்தில் இல்லை. முகத்தில் தெம்பு குறைந்திருந்தது.

"அம்மா, அந்தப் பாவி பொழச்சுக் கிட்டா!" என்ருள் அவள்.

"அப்படியா?" என்று ஒரே ஆச்சரியப் பட்டேன் நான். கடவுளின் செயலை அறியும் திறமை நமக்கு இல்லை என்கிற எண்ணமும் எனக்குத் தோன்றியது. நிர்மலா பிழைத்து எழ வேண்டுமென்று ஆயிரம் பாடு பட்டான் சுந்தரம். அங்கே தோல்வி. விசாலம் சாகவேண்டும் என்று விரும்பினுன் அவள் கணவன். இங்கே வெற்றி.

"எதுக்காக அம்மா இந்தப் பாவி பொழச்சா? அவலிடம் உதையும் அடியும் வாங்கவா?" என்ருள் கன்னியம்மாள்.

"இதெல்லாம் நம் இஷ்டப்படியா நடக்கும்?" என்று அவளிடம வேதாந்தம் பேசினேன்.

இதெல்லாம் நடந்து ஐந்தாறு தினங்களுக்கு அப்புறம் விசாலம் கூனிக் குறுகிக்கொண்டு எங்கள் வீட்டுக்கு வந்திருந்தாள்.

"அம்மா! கொழந்தேங்க குளிர்லே விறைக்குதுங்க. பழைய சொக்கா இருந்தா, பார்த்துக் குடுங்க" என்று கேட்டாள் அவள்.

யந்திரம் போல் உள்ளே சென்று இரண்டு சொக்காய்களை அவளிடத்தில் கொடுத்தேன். அதை வாங்கிக்கொண்டு கும்பிட்டுவிட்டு அவள் சென்ற திக்கையே பார்த்துக்கொண்டு நான் சிந்தனையில் மூழ்கியிருந்தேன். ★

யின் உன்னத வேலைப்பாடும் கருத்தும் நம்மைக் கவர்ந்து கலைக்கு அடிமையாகச் செய்கின்றன. பற்பல நடனத் திருவுருவங்கள் உள்ளன. இவை நடனக்கலையின் நுட்பங்களைப் பசுமரத்தாணி போல் விளக்குகின்றன. மேலும் அக்காலப் பெண்மணிகளின் வீரத்திற்குப் போதிய சான்றுகள் உள்ளன. உதாரணமாக அவர்கள் போர்வேடத்தில் உடையணிந்து அணி அணியாகக் குதிரைமேல் செல்லுவது போன்ற சித்திரங்கள் உள்ளன. அம்பு எய்வது போன்றும் வாளேந்திய கரத்துடனும் சிலைகள் உள்ளன. பெண்கள் தம் கைகளில் சங்கீத வாத்தியங்களை ஏந்தி அவற்றை வாசிக்கும் காட்சிகளும் உள்ளன. எனவே அக்காலப் பெண்கள் இயற்கை வனப்பும் திடகாத்திரமும் பெற்று அழகுக் கலைகளை வளர்த்திருக்கின்றனர். தேவையாயின் போர்க்கோலம் பூண்டு பெண்ணின் வீரத்தையும் நிலைநாட்டி யிருக்கின்றனர்.

## என்ன வேண்டும்?

இவ்வளவு பெருமைவாய்ந்த சிற்பச் செல்வமாகிய பேலூரும் ஹளையபீடும் இன்னும் பலகோயில்களும் இன்று க்ஷீணதசை அடைந்திருக்கின்றன. பல சிற்பங்கள் பின்னமுற்றிருக்கின்றன. பல திருட்டுப்போயிருக்கின்றன. இவைகளைக் கேட்பார் அற்று விட்டுவிட்டால் ஒரு நாள் இவை மண்ணோடு மண்ணாவது திண்ணம். இக்கோவில்கள் மைசூருக்கு மட்டுமல்லாமல் இந்தியாவுக்கே ஒரு தனிப் பெருஞ் செல்வமாகும். வெளிநாட்டுக் கலைஞர் பலர் இதனைக் கண்டு வியந்திருக்கின்றனர். இக்கோயில்களை உடனே செப்பனிடுதல் வேண்டும். இவைகளில் கண்ட கலையின் புகழை நம் நாட்டிலும் பிறநாட்டிலும் பறை சாற்ற வேண்டும்.

நல்ல பாட்டைகளும் வசதிகளும் அமைத்து, வருவோருக்குத் தக்க நிலையில் பண்டைப் பெருமையை விளக்கவேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக அக்கலையை நமது சமுதாயம் கல்லில் மாத்திரம் விட்டுவைப்பது வருந்தத் தக்கது. பேலூர் நம் நாட்டின் வருங்காலச் சிற்பியர்களின் கலைக்கூடமாக வேண்டும். நடனக்கலையின் தனிக்கோவிலாக வேண்டும். அழகுக் கலைகளில் நாம் நம் மூதாதையர்களை மிஞ்சாவிடினும் அவர்கள் விட்டுச் சென்று இருக்கும் கலைச் செல்வங்களை நாம் நன்குணர்ந்து அவைகளுக்குப் புத்துயிர் கொடுத்தால் நமது வாழ்வு கலை மணம் கமழ்ந்து பரிணமிக்கும். ★



தந்தி மீட்டும் கை.



பெண்ணின் வீரம்.

# முதல் கடிதம்



## சரோஜா ராமமூர்த்தி

**எவ்வளவோ ஆசையோடு அவன் அதை எழுதினான். அது அவளுக்குக் கோபத்தை மூட்டியது. காரணத்தை அவன் அறிந்தபோது—?**

நாகஸ்வரக்காரனும் ஓய்ந்து போன மாதிரியிருந்தது, அவன் ஆடிவழிந்து கொண்டு மத்தியமாவதி ராகம் வாசித்து வந்த மாதிரியிலிருந்து! ஆயிற்று, தம்பதிகள் பாலிகையைக் குளத்தில் விட்டதும் அவனும் மங்களம் பாடிவிட்டுத் தாம்பூலமும் சம்மானமும் பெற்றுக்கொண்டு போவதற்குத் தயாராக இருந்தான். கல்யாண வீட்டில் எல்லோரும் ஓய்ந்து போயிருந்தார்கள்.

"எங்களால் முடியாது அம்மா. சின்னப் பெண்களாக நாலுபேர் கூடப் போயிட்டு வாருங்கள்" என்று கூறிவிட்டுப் பெரியவர்கள் கல்யாணத்தில் பட்ட சிரமத்துக்குப் பரிகாரம் தேட முயன்றுகொண்டிருந்தார்கள்.

ஜயலக்ஷ்மிக்கும் சீனிவாசனுக்கும்—மணமகனுக்கும் மணமகளுக்கும் மட்டும் அலுப்பு இல்லை. வாழ்க்கைப் பாதையில் முதல் முதல் பிரவேசிக்கும் உற்சாகம் அல்லவா அவர்களுக்கு? நாலைந்து சிறிய பெண்கள் பின்னால் வந்துகொண்டிருந்தார்கள். நாகஸ்வரக்காரன் மத்தியமாவதி ராகத்தை வாசித்துக்கொண்டு நடந்தான். சீனிவாசன் ஜயலக்ஷ்மியைக் கடைக்கண்ணால் கவனித்தான். இதற்குள் எத்தனையோ தடவைகள் அவள் கண்களை அவன் சந்திக்க முயன்றும் அவள் இவன் பக்கமே திரும்பாமல் உறுதியுடன் இருந்தது, அவள் பிடிவாதக்காரி என்பதைச் சீனிவாசனுக்குச் சொல்லாமலே விளக்கிவிட்டது. ஜயலக்ஷ்மியும் அவனை அதே சமயத்தில் கடைக்கண்ணால் பார்த்தாள்.

"என்ன, என்னைப் பார்க்கக்கூட மாட்டாயோ?" என்று மெதுவாக, ஆனால் ஸ்பஷ்டமாகக் கேட்டான் சீனு அவளைப் பார்த்து.

அவள் பொன்னிறக் கன்னங்கள் வெட்கத்தால் சிவந்தன. அழகாக ஆனால் சுருக்கமாக அவனைப் பார்த்துப் புன்முறுவல் செய்துவிட்டு முகத்தைத் திருப்பிக்கொண்டாள் ஜயம்.

"உன்னைத்தானே?" என்று மறுபடியும் கேட்டான் சீனு.

"பேசினால் போயிற்று. கூட எல்லோரும் வருகிறார்கள்." பெண்மையின் நிதானத்தை அந்தச் சொற்கள் விளக்கின.

இதற்குள் கோவில் வந்துவிட்டது. கூட வந்த பெண்கள் குளக்கரையில் பாலிகைக் கிண்ணங்களை வைத்துவிட்டுப் பிராகாரத்தைச் சுற்றப் போய்விட்டார்கள். பாலிகைச் செடிகளைக் குளத்தில் அலம்பிக்கொண்டே தலை குனிந்துகொண்டிருந்தாள் ஜயலக்ஷ்மி. அவளுடைய நிதானம் சீனுவுக்குப் பிடிக்கவில்லை.

"என்னவோ அந்தக் காலத்துக் கல்யாணப் பெண்மாதிரி தலையைக் குனிந்து கொள்கிறாயே! இரண்டு வார்த்தை பேசினால் வாய் முத்து உதிர்ந்து போய்விடுமா?" சீனுவின் வார்த்தைகள் கடுமையாகத் தோன்றவே ஜயம் அவனை நிமிர்ந்து பார்த்தாள்.

"என்ன பேச வேண்டும்? ஏதாவது கதை கிதை சொல்ல வேண்டுமா?" இப்படிச் சொல்லிவிட்டு அவள் பரிகாசச் சிரிப்புச் சிரித்தாள்.

"இன்றைக்கு மத்தியான்னம் ஊருக்குப் போகிறேன் என்பது தெரியுமா உனக்கு?"

"வீட்டில் எல்லோரும் சொல்லிக் கொண்டார்கள்" என்றாள் ஜயலக்ஷ்மி.

"மறுபடியும் தீபாவளியின் போதுதான் நாம் சந்திக்கப் போகிறோம்" என்றான் சீனு.

அவன் வார்த்தைகளில் பிரிவின் துயர் நிரம்பி இருந்தது. ஜயலக்ஷ்மியின் முகமும் வாடியது.

"அப்பொழுது என்னைக் கட்டாயம் உங்கள் வீட்டிற்கு அழைத்துக்கொண்டு போய்விடுவீர்கள், இல்லையா?"

"இப்பொழுதேகூட அழைத்துப் போய் விடுவேன். உன் அப்பாதான் சம்பிர தாயப்படி எல்லாம் நடக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறார்."

இதற்குள் கோவிலைச் சுற்றிப் பார்க்கப் போயிருந்த பெண்கள் திரும்பி வந்து கொண்டிருந்தார்கள்.

"நான் ஊருக்குப் போனபிறகு கடிதம் போடுகிறாயா?" என்று கேட்டான் சீனு.

"ஓ" என்றாள் ஜயலக்ஷ்மி.

சீனு அவசர அவசரமாகத் தன் விலா சத்தை அவளிடம் கூறி முடிப்பதற்குள், மற்றப் பெண்கள் வந்துவிட்டார்கள்.

சீனு ஊருக்கு வந்த பிறகு இதுவரை யில் தனிமை என்றால் என்ன என்று அறியாதிருந்தவனைத் தனிமை மிகவும் வருத்தியது. ஜயலக்ஷ்மியின் பேச்சு, புன் னகை, பரிகாசம், ஒவ்வொன்றும் மாறி மாறி நினைவுக்கு வந்துகொண்டே இருந் தது. இவ்வளவு புத்திசாலியாக இருக்கும் பெண் கடிதம் எழுதினாலும் புத்திசாலித் தனமாகத்தான் எழுதுவாள் என்று நினைத் துக்கொண்டான். தேனூரும் அவள் வார்த்தைகளைப்போலவே கடிதமும்தேனில்

பாலிகைச்சேடிகளைக் குளத்தில் அலம்பிக் கொண்டே...



தோய்த்து எழுதப்பட்டிருக்கும் என்று கற்பனை செய்துகொண்டான் சீனு. ஆனல், நாட்கள் ஒவ்வொன்ருகச் சென்றுகொண்டிருந்தன. தினமும் தபால்காரன் இவன் எதிர்பார்க்கும் கடிதத்தைத் தவிர வேறு கடிதங்களைக் கொண்டு வந்து கொடுத்தான். சீனுவுக்கு மனத்தில் தெம்பு குறைந்து போயிற்று. இந்தச் சந்தர்ப்பத்தில் கல்யாணம் முடிந்து ஊருக்குக் கிளம்பும்போது ஜயலக்ஷ்மி சீனுவின் தங்கையிடம் ரகசியமாக ஏதோ கூறியது அவன் நினைவுக்கு வந்தது. அவள் பள்ளிக்கூடத்திலிருந்து வந்ததும் தங்கையிடம் அந்த ரகசியத்தைப்பற்றிக் கேட்டான் அவன்.

"மதனியைக் கடிதம் போடச் சொல்லி இருக்கிருயாம் அண்ணா. ஆனல், அவள் உனக்கு முதலில் எழுத மாட்டாளாம். நீதான் எழுத வேண்டுமாம்" என்று அந்தப் பெண் சிரித்துக் கொண்டே கூறினள்.

சீனுவுக்கு இப்பொழுதுதான் புரிந்தது, ஜயத்தினிடமிருந்து கடிதம் வராத காரணம். கடைசியில் தன்னுடைய பிடிவாதத்தையும் போக்கிரித்தனத்தையும் விடவில்லையே என்று தோன்றியது அவனுக்கு. சீனுதான் கடிதம் முதலில் எழுத வேண்டும் என்பது தெரிந்துவிட்டது. அப்பொழுதுதான் சீனுவுக்குத் தான் அவளிடம் அவள் விலாசம் கேட்டு வாங்காமல் வந்துவிட்டது நினைவுக்கு வந்தது. கடைசியில் கல்யாணம் நடந்த வீட்டு விலாசத்தைப் போட்டு அவளுக்கு ஒரு கடிதம் எழுதித் தபாலில் சேர்த்த பிறகுதான் அவன் மனம் ஆறுதல் அடைந்தது.

ஆனல் அவன் எதிர்பார்த்தபடி அதன் பிறகும் அவளிடமிருந்து அவனுக்குக் கடிதம் வரவில்லை!

கடைசியாக அவன் எதிர்பார்த்திருந்த தீபாவளிக்கு ஒரு வாரம் இருந்தது.

"ஊரிலேயிருந்து உன் வேட்டகத்தார் உன்னைத் தீபாவளிக்கு அழைப்பார்களே. நல்லதாகப் புடைவை ஒன்று ஜயலக்ஷ்மிக்கு வாங்க வேண்டும். என்னுடன் கடைக்கு வருகிருயா?" என்று அவன் தாய் அவனைக் கூப்பிட்டாள்.

"நான் எதற்கு அம்மா? நீங்களே வாங்கி வந்துவிடுங்கள்" என்றுன் சீனு.

"நான் கர்நாடக மனுஷி அப்பா. உன் மனசுக்கும் பிடிக்க வேண்டுமோ இல்லையோ?" என்று தாய் வற்புறுத்திக் கூப்பிட்ட பிறகு அவனும் கடைக்குப் புறப்பட்டான்.

தாமரை வர்ணத்தில் இருந்த புடைவை அவனுக்கு மிகவும் பிடித்திருந்தது. ஜயலக்ஷ்மியின் சிவந்த மேனிக்கு இது நன்ருக இருக்கும் என்று நினைத்துக்கொண்டான். ஆனல், அந்த ஜயலக்ஷ்மிதான் ஒரு கடிதங்கூடப் போடாமல் இருக்கிருளே என்பதை நினைத்தபோது அவளிடம் அவனுக்குக் கோபம் உண்டாயிற்று. தீபாவளிக்கு முதல் நாள் மாலை ஜயலக்ஷ்மியின் வீட்டை அடைந்தான் சீனு. மாமனர் பரிந்து பரிந்து உபசரித்தார். மாமியாருக்கு மாப்பிள்ளை வந்திருக்கும் சந்தோஷம் பிடிபடவில்லை. மைத்துனன் மைத்துனிகளுக்குப் பரிசுகள் வாங்கி வந்திருப்பவற்றை அவர்களிடம் கொடுத்தான் சீனு.

ஜயலக்ஷ்மியும் பின்னல் அசைய ஒய்யார நடை நடந்து அவன் எதிரில் போய் வந்து கொண்டிருந்தாள். ஆனல், இவன் இருக்கும் பக்கங்கூட அவள் திரும்பிப் பார்க்கவில்லை. கலகலவென்று குழந்தைகளுடன் சிரித்துப் பேசினள். அந்தச் சிரிப்பின் ஒலி கேட்டு இவன் உள்ளம் தேனைக் குடித்த வண்டுபோல் மயங்கியது.

'ஒருவேளை ரொம்பவும் கர்வம் பிடித்தவளாக இருப்பாளோ?' என்று தன் அறையில் உட்கார்ந்துகொண்டு எண்ணமிட்டான் சீனு. இரவு சாப்பிடக் கூப்பிட அவன் மாமனரே வந்தார்.

"சீக்கிரமாகச் சாப்பாட்டை முடித்துக் கொள்ளலாம். விடியற்காலம் எழுந்திருக்க வேண்டுமே" என்று கூப்பிட்டார் அவர். கனவில் நடப்பதுபோல் எழுந்து இலையின் முன்பு உட்கார்ந்து கொண்டான். ஜயலக்ஷ்மிதான் பரிமாறினள். 'வேண்டாம் வேண்டாம்' என்னும்போதே இலையில் பாயஸத்தை ஊற்றினள். பக்கத்தில் உட்கார்ந்திருந்த மாமனர் சிரித்துக்கொண்டே மாப்பிள்ளையின் அவஸ்தையை மிகவும் ரஸித்தார். அந்தச் சந்தர்ப்பத்திலும் சீனு அவள் கண்களைச் சந்திக்க முயன்ருன். அழகிய விழிகள் நிலத்தில் பதியக் குனிந்த தலை நிமிராமல் உள்ளே போய்விட்டாள் அவள்.

சாப்பிட்டு முடிந்ததும் தன் அறைக்குச் சென்று உட்கார்ந்தான் சீனு. தாம்பூலத்தை எடுத்துக்கொண்டு அவன் மைத்துனி உள்ளே வந்தாள். யாருக்காக ஆறு மாசமாகக் காத்திருந்து வந்திருக்கிருனே அவள் தன்னை லட்சியம் பண்ணுமல் இருந்தது அவனுக்கு வேதனையை அளித்தது. எதிரில் தட்டில் இருந்த தளிர் வெற்றிலையும், வாசனைப் பாக்கும் அவனுக்குப் பிடிக்கவில்லை.

"இந்தா! இந்தப் புடைவையை அம்மா ஜயத்துக்காக வாங்கி அனுப்பியிருக்கிருள்" என்று தாமரைவர்ணப் புடைவையை எடுத்து மைத்துனியிடம் கொடுத்தான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் புடைவையைப்பற்றி உள்ளே எல்லோரும் பேசுவது கேட்டது. ஜயலக்ஷ்மி ஏதாவது பேசுகிருளா என்று குறிப்பாகக் கவனித்தான் சீனு. அவளுடைய பேச்சுக் குரல் கேட்கவில்லை. கடைசியாக அவள் தாய் அந்தப் புடைவையைப் பீரோவில் வைக்கச் சொல்லி அவளிடம் கொடுத்ததும் அவள் பேசாமல் அதை வாங்கிக்கொண்டு போனதும் சீனுவின் வேதனையை அதிகரிக்கச் செய்தன.

## 3

நாகஸ்வரக்காரன் பூபாள ராகததுடன் பள்ளியெழுச்சியை ஆரம்பித்தான். இரவு முழுவதும் தூங்காமல் இருந்து அப்பொழுதுதான் கண் அயர்ந்த சீனுவை அவன் மாமனர் வந்து எழுப்பினர். வேண்டா வெறுப்பாகப் படுக்கையில் எழுந்து உட்கார்ந்தான் சீனு.

"ரெயிலில் வந்தது அலுப்பாக இருக்கிறது. வீட்டில் எல்லோரும் ஸ்நானம் செய்து ஆகட்டுமே" என்ருன் சீனு.

"மத்தியான்னம் தூங்கலாம். எழுந்திருங்கள்" என்று கண்டிப்பாக உத்தரவிட்டார் அவர்.

மங்கள ஸ்நானம் ஆயிற்று. தாமரைவர்ணப் புடைவை சலசலக்கக் கூடத்தில் தன் தகப்பனருடன் உட்கார்ந்திருந்த கணவனுக்கு நமஸ்காரம் பண்ண வந்தாள் ஜயலக்ஷ்மி. ஈரம் உலராத கூந்தலைப் பின்னிப் பாதியில் கட்டியிருந்தாள். அதன்மேல்



"வந்தவனை மதிக்காமல் இருக்கத் தெரியும். போட்ட கடிதத்துக்கு..."

செண்டாகக் கட்டி வைத்திருந்த ரோஜாவும், மைதீட்டிய விழிகளும், புன்னகை ததும்பும் முகமும் அவனைப் பரவசத்தில் ஆழ்த்தின.

"மாப்பிள்ளை! வைர ஜிமிக்கி வேண்டுமென்று குழந்தை ஆசைப்பட்டாள். செய்து போட்டிருக்கிறேன். ஜயம்! எங்கே ஜிமிக்கியைக் காட்டம்மா" என்றார் அவர். ஜயம் காதுகளில் சுடர் விட்ட ஜிமிக்கிகளைக் கழற்ற ஆரம்பித்தாள்.

"வேண்டாம். பார்த்தாகிவிட்டதே!" என்று கூறிவிட்டுச் சீனு தன் அறைக்குப் போவதற்கு எழுந்தான்.

சமையல் அறையிலிருந்து வந்த சம்பாஷணை அவன் காதில் விழுந்தது. "தீபாவளிக்கு வந்த புது மாப்பிள்ளை மாதிரி இல்லையே உன் கணவர்! அவர் வந்ததிலேயிருந்து நீ அவர் இருக்கும் பக்கமாவது போனால்தானே? சமையல் அறையையே சுற்றிச் சுற்றி வருகிறாயே!" என்றாள் ஜயலக்ஷ்மியின் தாய்.

"நீதான் பக்ஷணமும் காபியும் கொண்டு போய்க் கொடுக்க வேண்டும். வேறே யாரும் போகக்கூடாது; தெரியுமா?" என்று வேறு மற்றவர்களுக்குத் தடை உத்தரவு போட்டாள் அந்த அம்மாள்.

ஜயலக்ஷ்மி காபியையும் பக்ஷணத்தையும் கொண்டுவந்து மேஜைமேல் வைத்தாள். யாருடைய வரவை எதிர்பார்த்துக் காத்துக் கிடந்தாளோ அவள் பதுமைமாதிரி அவன் எதிரில் நின்றுகொண்டிருந்தாள். சீனு மெதுவாக எழுந்து கதவை ஓசைப்படாமல் தாழிட்டான். கைதியைச் சிறைபிடித்த அதிகாரியின் உற்சாகம் அவன் முகத்தில் இருந்தது.

"இந்தா! இங்கே எதற்காக வந்திருக்கிறேன், தெரியுமா?" என்று கேட்டான் அவன்.

"தெரியும்" என்று பதில் அளித்தாள் அவள்.

"என்ன தெரியும்? வந்தவனை மதிக்காமல் இருக்கத் தெரியும். போட்ட கடிதத்துக்குப் பதில் போடாமல் இருக்கத் தெரியும்."

ஜயலக்ஷ்மியின் முகம் கடிதம் என்றவுடன் கோபமடைந்து சுருங்கியது.

"யாருக்குக் கடிதம் எழுதினீர்கள்? யார் பதில் போடவேண்டும்?"

"சாக்ஷாத் உனக்குத்தான். நீதான் எனக்குப் பதில் போடவேண்டும். போட்டாயா?"

"எனக்கு ஒன்றும் நீங்கள் கடிதம் எழுதவில்லை."

"பொய்யா சொல்லுகிறாய்?"

"ஐயோ! கடிதத்தைப் பற்றி உரக்க வெளியில் பேசாதீர்கள். எனக்கு அவமானமாக இருக்கிறது!"

சீனுவுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது.

"என் மனைவிக்குக் கடிதம் எழுதினால் அவமானப்பட என்ன இருக்கிறது ஜயம்?" ஜயலக்ஷ்மியின் கண்களில் முத்துப் போல் நீர் வழிந்தது. "நீங்கள் எனக்கு ஒன்றும் கடிதம் எழுதவில்லை. என் சிற்றப்பா பெண் ஜயத்துக்குத்தான் எழுதியிருக்கிறீர்கள். கூடப் பிறந்த சகோதரிகளைவிட நாங்கள் ஒற்றுமையாக இருப்பதால்தான் இந்த விஷயம் பெரியவர்களுக்குத் தெரியாமல் மறைக்க முடிந்தது. பாவம்! அவள் வேர்க்க விறுவிறுக்க அந்தக் கடிதாசியை என்னிடம் கொண்டுவந்து கொடுக்காமல் இருந்தால் என்ன ஆகியிருக்கும்?"

சீனு அவள் கையில் இருந்த கவரை வாங்கிப் பார்த்தான். ஒன்றும் புரியாமல் விழித்தான்.

"ஜயம்! எனக்கு ஒன்றுமே புரியவில்லையே! அந்தப் பெண்ணின் பெயரும் ஜயலக்ஷ்மிதானா?"

"நமக்குக் கல்யாணம் என் சிற்றப்பா வீட்டில்தானே நடந்தது! அந்த விலாசத்தில் என் தங்கை ஜயலக்ஷ்மி என்று ஒருத்திதானே இருக்கிறாள்?"

"ஆமாம், என் விலாசம் மட்டும் கேட்டு வாங்கிக்கொண்டு உன் விலாசம் கொடுக்காமல் இருந்துவிட்டாயே. அத்துடன் முதல் கடிதம் நான்தான் போடவேண்டும் என்று வேறு சொல்லி அனுப்பியிருந்தாய்!"

ஜயலக்ஷ்மி கன்னம் குழியச் சிரித்தாள்.

"இந்தத் தடவையாவது சரியான விலாசம் கொடுக்கிறாயா ஜயம்?"

"போதும், போதும், முதல் கடிதம் போட்ட லட்சணம்! விலாசமும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். உங்களுடன் என்னை அம்மாவும் அப்பாவும் ஊருக்கு அனுப்பி வைக்கப் போகிறார்களாம்."

இப்படிக் கூறிவிட்டு ஜயலக்ஷ்மி அவனைக் கடைக்கண்ணால் பார்த்தாள். வெளியில் குழந்தைகள் கொளுத்தும் மத்தாப்பின் ஒளி பட்டு அவள் மதிவதனம் சுடர்விட்டுப் பிரகாசித்தது. சீனு வைத்த கண் வாங்காமல் அவளைப் பார்த்தான். இருவரும் ஒரே சமயத்தில் மேஜைமீது கிடந்த முதல் கடிதத்தைப் பார்த்துக் கலகலவென்று சிரித்தார்கள். ★

# வாழ்க்கை என்னும் உறவு

சரோஜா ராமமூர்த்தி

மேஜை மீது வைக்கப்பட்ட காப்பி ஆறிக் கொண்டிருந்தது. ஜக்கு என்றும் அப்படி இருந்ததில்லை. உற்சாகமாக 'அம்மா' என்று கூவி அழைத்தவாறு அலுவலகத்திலிருந்து திரும்பி வருவான். களைப்பு, சோர்வு, சிடுசிடுப்பு எதுவுமே அவனிடம் அவள் கண்டதில்லை. வாடா மலர் போல் என்றும் பிரசன்னமாக அவன் இருப்பதையே நாராயணி பெரிதும் விரும்பினாள். அப்படியே அவனை எந்தக் கஷ்டமும் தெரியாமல் ஆளாக்கியிருக்கிறாள். இன்று ஏன் அவன் முகம் வாடி வதங்கி இருக்கிறான்? தயங்கியவாறு அருகில் வந்து நின்றாள் நாராயணி. மெதுவாக மகனின் தலையை வருடிக் கொண்டே, ''ஏண்டா, அப்பா! ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறாய்?'' என்று கேட்டாள்.

''ஹூம்....'' என்றான் ஜக்கு. ''ஒரு மாதிரியுமில்லை, ஒன்றுமில்லை...'' அலுப்புடன் வார்த்தைகள் வந்தன.

இப்பொழுது நாராயணி அலுத்துக் கொண்டாள். ''ஏண்டாப்பா! உன்னைப் பெற்று வளர்த்து எல்லாப் பொறுப்புக்களையும் நானே சுமந்து ஆளாக்கி விட்டேனே! இனிமேல் நீ அலுத்துக் கொள்ளத்தான் செய்வாய்....'' அவளும் கன்னத்தில் கையை ஊன்றியபடி கதவோரமாக மகனுக்கு எதிரில் வந்து உட்கார்ந்தாள். ஜக்கு தாயின் கவலை தேங்கிய முகத்தைப் பார்த்தான். பார்த்தவுடன் அவனுக்கு இரக்கம் மேலிட்டது.

''இதோ, பார், அம்மா! இத்தனை காலம் நீ என்னை அதட்டி உருட்டி வளர்த்து விட்டாய்; படிக்க வைத்தாய். எப்படியோ வேலையும் கிடைத்து விட்டது. இத்துடன் நீ என்னை விட்டிருக்க வேண்டும். அதுதான் இல்லை. நான் கலியாணம் செய்து கொண்டு குடியும் குடித்தனமுமாக இருக்க வேண்டும் என்று வேறு ஆசைப்பட ஆரம்பித்துவிட்டாய்.''

ஜக்குவின் குரல் வேதனையுடன் ஒலிப்பதை நாராயணியால் தாங்க முடியவில்லை.

''ஜக்கு! நான் ஆசைப்பட்டது தவறடா? ....தவறா? இல்லை, உன்னைத்தான் கேட்கிறேன். காலமெல்லாம் உனக்காகவே வாழ்ந்த நான், ஆசைகளையெல்லாம் அடியோடு குழி வெட்டிப் புதைத்தவளாக வாழ்ந்த நான் இப்படி ஆசைப்படக்கூடாது என்கிறாயா?'' பதற்றத்துடன் தாயின் சொற்கள் சூடாகவே வெளி வந்தன. ஜக்கு பதறி விட்டான். வேகமாக நாற்காலியிலிருந்து எழுந்தவன் அன்னையின் அருகில் வந்து அவளுடைய எலும்புக் கரங்களைச் சேர்த்துப் பிடித்துக் கொண்டு, ''அம்மா! என் பேரில் கோபித்துக் கொள்ளாதே. இது நாள் வரை உன் வார்த்தையை எதிர்த்தோ, மீறியோ நடந்திருக்கிறேனா? என்னை — ஏன் நம்மைச் சூழ்ந்துள்ள இந்த அவப்பெயர் இருக்கும் வரை எனக்கு யாரம்மா பெண் கொடுப்பார்கள்?'' என்று கேட்டு விட்டுக் கண்ணீர் பெருக்கினான் அவன்.

நாராயணி கல்லாகச் சமைந்து விட்டாள். மகனின் கேள்விக்குப் பதில் கூறாமல் மலைத்து உட்கார்ந்து விட்டாள். கால வெள்ளத்தோடு எதிர்நீச்சு போட்டுக் கரையேறிவிட்டோம் என்கிற எண்ணமும் அந்த விநாடியே உடைந்து சிதறியது. பெண்ணைப் பெற்றவர்கள் வரதட்சிணை கேட்டால் கொடுத்துவிடுவார்கள். சீர் சிறப்புக்கள் வேண்டுமென்றால் சிறப்புடன் செய்வார்கள். ஆனால்



பிள்ளைக்குத் தகப்பனார் கல்லைப் போல் எங்கோ இருக்கிறார் என்று கூறினால் ஏன், என்ன என்று கேட்க மாட்டார்களா? வாழாவெட்டி வளர்த்த பிள்ளை என்று ஒரு இளக்காரத்தானே அவர்கள் பார்க்கிறார்கள்?

நாராயணி தன் கணவனை விட்டுப் பிரிந்தபோது நிமிர்ந்த உள்ளத்துடன் நான்கு வயதுப் பையனின் கையை உறுதியாகப் பற்றியபடி அவளுக்கு உரித்

தாக இருந்த கணவன் வீட்டுப் படிகளில் இறங்கித் தெருவில் நடந்தாள். உலகம் பரந்து கிடக்கிறது. நேர்மையாக, மானத்துடன் வாழ இந்தப் பரந்த உலகம் இடம் கொடாமல் போய் விடப் போகிறதா என்றுதான் அன்று நினைத்தாள். அவள் அவனை விட்டுப் பிரிய பல காரணங்கள் இருந்தன. 'திருமணங்கள் சுவர்க்கத்தில் நிகழ்த்தப்படுகின்றன. நம் செயலில் இல்லை' என்கிற வாக்கை அப்படியே ஒத்துக்கொள்ள ஜக்குவின் தந்தை தயாராக இல்லை. திருமணம் பூமியில்தான் நிகழ்த்தப்படுகிறது. அதில் இப்படித் தோல்வியுறும் திருமணங்கள் பெரும்பாலும் பணத்தை முதலாக வைத்து ஆடப்படும் சூதாட்டம் போன்றது என்று அவன் கருதினான். மனைவி அழகியல்ல என்பது மட்டும் அவன் வாதமல்ல; குணப் பொருத்தமும் அமையாதவள் என்கிற முடிவுக்கும் வந்து விட்டான். நாராயணியின் திண்மையான மனம் கணவனின் போக்குக்கு நெகிழ்ந்து கொடுக்க வில்லை.

அவன் கிழக்கு என்றால் இவள் மேற்கு என்பாள். இந்த லட்சணத்தில் மகன் பிறந்ததை அவன் மகிழ்ந்து வரவேற்கவில்லை. இந்த அழகான மனைவியிடம் குழந்தை பிறக்க வேண்டும் என்று தவமா கிடந்தான்? உலகத்தில் எத்தனையோ வேண்டாத உயிர்கள் தோன்றுவது போல் ஜக்குவும் பிறந்தான். குழந்தை பிறந்தால் கணவன் மனைவியின் உறவு பலமடைந்து விடும் என்று மற்றவர்கள் சொன்னதைப் பொய்யாக்குவது போல்அவன் ஒரு நாளாவது தன் குழந்தை, தன் உயிரின் உயிர் அது என்று எட்டிக்கூடப் பார்க்கவில்லை.

மகனுடன் தன்னை வெறுத்து ஒதுக்கியதால் நாராயணியின் திண்மை இன்னும் வலுப் பெற்றது. ஜக்குவுக்கு நான்கு வயதாகும் போது அவள் அவனிடமிருந்து வெளிஉலகில் குதித்து விட்டாள்; எப்படியோ காலம் தள்ள முடியாமலா போய் விடும் என்கிற நம்பிக்கையில்.

இருபது வருஷங்கள் ஆகி விட்டன. ஜக்கு அவன் தந்தையைப் போலவே நல்ல உயரம். அதற்கேற்ற பருமன். மூக்கு, விழிகள், பேச்சு, சிரிப்பு எல்லாம் அப்பாவை உரித்து வைத்திருந்தன. மகனைப் பார்க்கும்போதெல்லாம் நாராயணிக்கு ஒரு நிறை ஏற்பட்டது. அவரை அந்தக் காலத்தில் முதன் முதலாகப் பார்த்த நினைவு பளிச்சிடப் பெருமையோடு மகனைப் பார்த்துக் கொண்டே யிருப்பாள்.

''என்னம்மா அப்படிப் பார்க்கிறாய் ?'' என்று ஜக்கு கேட்பான்.

''ஒன்றுமில்லையடா! என்னவோ பழைய ஞாபகம்....''

''என்ன ஞாபகம்? அந்த மனிதனைப் பற்றி நினைத்துக் கொண்டிருப்பாய்....''

''ஜக்கு! நீ என்ன பேசுகிறாய்? அந்த மனிதன் என்றா அவரை அழைப்பது? அவர் உன்னைப் பெற்ற தகப்பனார்டா.... அப்படிச் சொல்லாதே அப்பா—''

''ஹூம்.... மகா தகப்பன்—'' என்று கூறிவிட்டு வெளியே போய் விடுவான் அவன்.

நாராயணி தனக்குள்ளாகவே பேசிக் கொண்டாள். 'ஐந்து வயசிலேயே அவன் தகப்பனிடம் தன் குரோதத்தைக் காட்டி விட்டான். 'அந்த மனிதன்' என்று அவன் இன்றுதானா புதிதாகச் சொல்கிறான். எப்பொழுதுமே அப்படித்தான் பேசுகிறான். இனி தகப்பனுக்கும், மகனுக்கும் ஒட்டு உறவு ஏற்படுமோ, ஏற்படாதோ?'

நாராயணி வீட்டை விட்டு வெளியேறிய பிறகு ஜக்குவின் தகப்பனார் மலை போலத் தம் தாயை நம்பி வாழ்ந்தார். அவர் சம்பாதித்துக் கொடுக்க, அன்னை சமைத்துப் போட இப்படிக் காலம் ஓடிக் கொண்டிருந்தது. இதில் ஒரு விசேஷம் என்னவென்றால் அவர் தாம் கடமை தவறாமல் வாழ்பவர் என்றும், தம்மைப் பெற்றவர்களிடத்தும், உடன் பிறந்தவர்களிடத்தும் மாறாத அன்பு கொண்டிருப்பவர் என்றும் அத்துடன் தம் கடமை முடிந்து விட்டதாகவும் நினைத்து அடியோடு நாராயணியை மறந்து விட்டார். சின்னஞ் சிறு பையனாக வெளியேறிய ஜக்குவைப் பற்றி அவர் மனத்தில் எதுவும் இல்லை. மனைவிக்கு மாதா மாதம் சிறு தொகை ஒன்று அனுப்பி விட்டுத் தம் கடமையைக் கைகழுவி விட்டார் என்று சொல்லலாம்.

முதலில் அந்தப் பணத்தை நாராயணி ஏற்றுக் கொள்ளத் தயங்கினாள். ஆனால், மகனை வளர்த்து ஆளாக்க வேண்டிய பொறுப்பில் தாயாருக்கு மட்டும் பங்கு இல்லை, தந்தைக்கும் உண்டு என்பதை உணர்ந்தவுடன் அந்தப் பொறுப்பு இந்தப் பண உதவியாகத்தான் இருக்கட்டுமே என்று அதை அவள் மறுத்து விடவில்லை.

உலகில் கணவனும், மனைவியும் ஏதோ காரணங்களினால் ஒருவரை விட்டு ஒருவர் பிரிந்து வாழ்கிறார்கள். இவர்கள் பிரியும் போது நாராயணி வாயிற்படி இறங்குமுன்பு சற்றுக் கடுமையாகப் பேசினாள்.

''என்றைக்காவது என் தயவு உங்களுக்குத் தேவைப்படும். அப்படித் தேவைப்பட்டால் என்னைக் கூப்பிடுங்கள்... வருகிறேன். ஆமாம்....கண்டிப்பாக வருகிறேன்.''

அவள் கணவர் அவளைக் கொடூரமாகப் பார்த்தார். ''உன் தயவு என்றைக்குமே எனக்குத் தேவை இல்லை. உன்னை நாடி நான் என்றும் வரமாட்டேன். போ, வெளியே!''

பிறகுதான் நாராயணி எப்படியோ உலகில் துன்பங்கள், ஏச்சுக்களுடன் போராடித் தானும் உயிர் வாழ்ந்து, மகனையும் ஆளாக்கி விட்டுவிட்டாளே. இன்று மகனின் திருமணம் அவள் முன் மகத்தானதாக நிற்கிறது. யார் பெண் கொடுக்க வந்தாலும், நாராயணியின் மஞ்சள் பூசித் திலகமிட்ட முகத்தை வினாக் குறியுடன் பார்க்கிறார்கள். கழுத்திலே மஞ்சள் குளித்துத் துவளும் திருமாங்கல்யச் சரட்டைப் பார்க்கிறார்கள். அடுத்த கேள்வி ஜக்குவின் தந்தை எங்கே என்பதுதானே? அவன் என்னவோ ஒரே வார்த்தையில், ''அம்மா! எனக்காக நீ உன் பழைய வாழ்க்கையை நினைவுபடுத்திக் கொள்ளாதே. அதை அடியோடு மறக்க முயற்சி செய்'' என்றுதான் சொல்லி வருகிறான். ஆனால், பெற்ற தாயின் உள்ளம் அதை ஏற்றுக் கொள்ள வில்லை. இதற்கிடையில், கணவனைப் பற்றி மனைவியின் உள்ளத்தில் ஏற்பட்டிருந்த நினைவு அடியோடு போய் விட்டதா என்றால் அதுதான் இல்லை. மகனிடம் சொல்லிக் கொள்ள முடியாத பரம இரகசியமாக அந்த நினைவு அவள்

இதயத்தில் வேரூன்றி நிலைத்து விட்டது. ஒரு தடவை அவள் ஜக்குவின் தந்தை உடல் நலம் இல்லாமல் இருக்கிறார் என்று கேள்வியுற்றுப் பசியும், பட்டினியுமாகக் கோயிலை வலம் வந்து பிரார்த்தித்திருக்கிறாள். தூங்காமல் எத்தனையோ இரவுகளைக் கண்ணீர் வடித்தே கழித்திருக்கிறாள். மனத்தளவில் கூட அவருக்கு எந்தத் தீங்கு நேர்வதையும் அவள் உள்ளம் ஒப்புக் கொள்ளவில்லை. பிறகு யாரோ சொன்னார்கள், அவர் உடல்நலம் பெற்றுவிட்டார் என்று. அன்று, அவள் ஏனோ மகிழ்ந்து உற்சாகமாக இருந்தாள்.

அந்த மனிதர்தான் என்ன? வாழ்க்கைத் துணையின் மதிப்பை உணராமல் இருந்த காலம் தேய்ந்து படிப்படியாக அதன் பெருமையை உணர்ந்த போது மிகமிக ரகசியமாக நாராயணியை நினைத்துக் கொள்வார்.

யாரோ அவரிடம் வந்து சொன்னார்கள், எங்கோ அனாதை ஆசிரமத்தில் மகன் சாப்பாட்டுக்காகக் கையில் அலுமினியத் தட்டை வைத்துக் கொண்டு வரிசையில் நின்று உணவு பெறுகிறான் என்று. அவனை — ஏன் அவனை— அப்படிக் கைவிட்டது நியாயம்தானா என்று அவரிடம் அவர் உள் மனம் இடித்துக் கேட்டது. அவரா கைவிட்டார்? மனைவிக்குரிய இடத்தை அவளுக்கு அவர் அளிக்கவில்லையே தவிர, தம் நிழலிலிருந்து விலகிப்போ என்று ஒரு நாளும் அவர் சொன்னதில்லை. அவளாகத்தான் உரிமை கோரி, தன் வழியே பிரிந்து வெளியே வந்தாள். எங்கோ ஓர் அனாதை விடுதியில் மகனுடன் வாழ்ந்தாள். அவனை ஆளாக்கியும் விட்டுவிட்டாள்.

ஜக்குவுக்காகப் பெண் கொடுக்க வந்தவர்கள் ஜக்குவின் தந்தையைப் பற்றி அறிய ஆவலாக இருந்தார்கள். உயிரோடு ஒரு மனிதர் கட்டிய மனைவியையும், பெற்ற மகனையும் துறந்து விட்டார் என்றால் அதை உலகம் ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை. அப்படி அவர் துறவியாகப்' போயிருந்தால் சரிதான். அவருக்கென்று மற்றவர்கள் விதம் விதமான உறவுகளில் நடமாடி வந்தார்கள். அவர்களுடன் அவரும் இணைந்து வாழ்கிறார்.

நாராயணிக்கு மகன் அவ்வாறு கூறிய பிறகு ஊண் உறக்கம் கொள்ளவில்லை, பட்ட மரம் போல் நின்று விட்ட தன் வாழ்க்கையில் பசுமை காணுவதானால் ஜக்குவின் திருமணம் தான் இனி அவள் குறிக்கோளாக இருக்க வேண்டும். அதற்கு அவரைப் போய்ப் பார்த்துப் பேச வேண்டும். அவரை எப்படிப் போய்ப் பார்ப்பது?

இந்தச் சமயத்தில்தான் அவளுக்கு ஒரு புதுச் செய்தி கிடைத்தது. நாராயணியின் மாமியார் வீட்டில் பல மாறுதல்கள் நடந்து



பாட்டி; ஏண்டாப்பா சிவராமா! நாலு தடவை பெயிலான உனக்குக் கூட கதி மோட்சம் ஏற்பட்டு விட்டதே! எஸ். எஸ். எல். சி. பரீட்சையை ஆயுசு பூரா எவ்வளவு தடவை வேண்டுமானாலும் எழுதலாமாமே...என்னமோப்பா .... தீர்க்காயுசா இருந்து பரீட்சை எழுதி முடி!

விட்டனவாம். அவருடன் பிறந்தவர்களுக்கு எங்கெங்கோ வேலையாகி, திருமணமாகிக் குழந்தை குட்டிகளுடன் தனித்தனியாகப் பிரிந்து வாழ்கிறார்களாம். இவர் மட்டும் வேலையிலிருந்து ஓய்வு பெற்று மனச்சாந்திக்காகச் சிறு பள்ளிக்கூடம் ஒன்று நடத்துகிறாராம். பள்ளிக்கூடம் என்றதும் நாராயணி விரக்தியாகச் சிரித்துக் கொண்டாள். பள்ளிக்கூடக் குழந்தைகளைப் பார்த்த பிறகுகூட அவர் தம் மகனைப் பற்றி நினைக்காதது வியப்புக்குரிய விஷயமாக இருந்தது. பிறருக்கு இரங்கும் அவர் தம் சொந்த விஷயத்தில் கல்லினும் கடினமாகிவிட்ட விந்தையின் இரகசியம் நாராயணிக்குப் புரியவில்லை. ஒரு வேளை, பள்ளிக்கூடம், சேவை என்றெல்லாம் தம்மைத்தாமே ஏமாற்றிக் கொள்ளுகிறாரோ என்னமோ?

அடுத்த நாள் அலுவலகத்திலிருந்து வந்த ஜக்கு தன் தாயார் எங்கோ வெளியில் கிளம்ப ஆயத்தமாக நிற்பதைக் கண்டு, ''எங்கேயம்மா பிரயாணம்?'' என்று கூடக் கேட்டு விட்டான். நாராயணி சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டுப் பிறகு, முகத்தில் துணிவுடன், ''உன் அப்பாவை அழைத்து வரப் போகிறேனடா'' என்றாள்.

'' அவரையா? அந்த மனிதரையா?''

''டேய், மடையா! உனக்கு அவர் என்னடா தீங்கிழைத்தார்? அவரிடம் நீ பெற வேண்டிய உரிமைகளை, அன்பை நான்தான் உன்னைப் பெற விடாதபடி பிரித்து அழைத்து வந்தேன். இன்று உனக்காக அவரைத் தேடிப் போகும் நான் அன்றே உனக்காக அவர் நிழலில் அல்லல்பட்டோ, அவதிப்பட்டோ வாழ்ந்திருக்கலாம்....''

நாராயணி ஊருக்குப் பிரயாணம் ஆன அன்றே அவளைத் தேடி ஒரு கடிதம் ஊருக்குப் பிரயாணப்பட்டுக் கொண்டிருந்தது. ஜக்குவின் தகப்பனார்தான் அந்தக் கடிதத்தை எழுதியிருந்தார். கடவுளால் ஏற்படுத்தப்பட்ட உறவுகளை உதறி, தம் கடமையை மறந்து வாழும் எவனுக்கும், மற்றப் பணிகளாலோ, சேவைகளினாலோ இன்பம் கிடைப்பதில்லை. என்னதான் தன்னலம் கருதாது சேவை செய்தாலும், ஊரும் உலகமும் அவரைத் தம் கடமையிலிருந்து நழுவி விட்டவர் என்று சுட்டிக் காட்டிப் பேசுகிறது. ஆகவே, இனிமேல் அவரும் நாராயணியைத் தேடி வந்து அவளுடன் தம் சேவை வாழ்க்கையை இணைத்துக் கொள்ள விழைகிறார் என்பது தான் கடிதத்தின் சாரமாக இருந்தது.

ஜக்கு கடிதத்தைப் பல முறைகள் பார்த்து விட்டு, ''பாவம்! அப்பா!'' என்று அவரைப் பற்றி முதன் முறையாக அநுதாபத்துடன் நினைத்தான்!

நெடுங்கதை:

# நினைவிலே நடந்து...



என் எதிரே அண்ணல் காந்தி அடிகளின் படம் பெரிதாக மாட்டப்பட்டிருந்தது. சற்றே தலையைச் சாய்த்த திருக்கோலத்தில், பொக்கை வாயைத் திறந்து கள்ளமற்ற சிரிப்புடன் பாரதத்தின் நாற்பது கோடி மக்களையும்

ஸரோஜா ராமமூர்த்தி

கவர்ந்த தோற்றத்துடன் அமர்ந்திருந்தார் மகாத்மா.

படத்தைவிட்டு விழிகளைத் திருப்பாமல் பார்த்துக்கொண்டேயிருந்தேன். அந்த அறையில் மாட்டியிருந்த பல படங்களுக்கும் நடுநாயகமாக அமைந்திருந்தது அந்தச் சித்திரம்.

உள்ளே 'ஹோ'வென்று ஸ்டவ்வை எரியவிட்டவாறு புதிதாக ஏதோ தின்பண்டம் தயாரிப்பதில் முனைந்திருந்தாள் என் தங்கை சுந்தரி. அவளுடைய பொழுது போக்கு விதவிதமான ஊறுகாய்கள் போடுவது, வற்றல் அப்பளம் செய்வது, புதுப் புது தின்பண்டங்கள் தயாரிப்பது போன்றவை. எவர்சில்வர் பாத்திரங்களைத் துலக்கி வரிசையாக அடுக்கி வைத்து அழகு பார்ப்பதிலும் ஆர்வம் கொண்டவள். பொதுவாகச் சொல்லுமிடத்து நல்ல குடித்தனப் பாங்கு உள்ளவள்.

என்னுடைய சுபாவமே தனி. இதிலெல்லாம் எனக்கு எந்தவித ஆசைகளும் கிடையாது. பாரதத்தில் இமயத்திலிருந்து குமரி முனைவரை யாத்திரை போக வேண்டும். புனிதக் கங்கையிலும், யமுனையிலும் துளைந்து ஸ்நானம் செய்ய வேண்டும். தென்னாடுடைய சிவனை நம் திருத்தலங்களில் தொழுதேத்த வேண்டும். ஆங்காங்கு பள்ளிகொண்டும், நின்ற திருக்கோலத்தில் காட்சி தரும் மாலவனைக் காண வேண்டும். இப்படியெல்லாம் நான் விருப்பப்படுவேன். கணவரும், மற்றவர்களும் என்னை 'ஒரு மாதிரி' என்று சொல்வார்கள். சொல்லிவிட்டுப் போகட்டும். 'இந்த அசடைக் கட்டி வைத்தேனே. தியாகு கல்யாணமில்லாமலேயே இருந்திருப்பானே' என்று என்னுடைய மாமியாரும் சொல்லுவார்.

என் எதிரே இருந்த அண்ணலின் படம் மனத்திலே பரவசத்தையும், பக்தியையும் கனலாகப் பொங்கச் செய்தது. அதைப் பார்த்து நான் என்னைக் கொஞ்சம் மறந்திருந்தபோது தொலைபேசியின் மணி கணகணவென்று ஒலித்தது. உள்ளேயிருந்து சுந்தரி பரபரவென்று ஓடிவந்து ரிஸீவரைக் கையிலெடுத்துக்கொண்டே, 'தந்தோலி மாமிதான் கூப்பிடுவார்' என்றவாறு, 'ஹலோ! மாமி! அக்காதானே? இன்று ஜி. டி.யில் இப்பொழுதுதான் வந்து சேர்ந்தாள். வழக்கம்போல இரண்டு மணி 'லேட்'தான். அதுதான் தெரிஞ்ச விஷயமாயிற்றே. உங்களுக்குச் சென்னையிலிருந்து பாக்குப் பொடி, மாமாவுக்குச் சிவபுரி புகையிலை எல்லாம் வந்திருக்கிறது. குளியல், சாப்பாடு ஆகி ஊர்க் கதைகளைப் பேசி முடித்தாகிவிட்டது. நீங்கள் எப்போது எங்கள் வீட்டுப் பக்கம் வருவதாக உத்தேசம்? மாமாகூட ஊரில் இல்லையே. வீட்டுக்குள்ளேயே சுற்றிக்கொண்டு என்ன செய்கிறீர்கள்?' அந்த முனையிலிருந்து வந்த ஒரு கேள்விக்குப் பதிலாக நூறு கேள்விகளாகக் கேட்டுக்கொண்டிருந்தாள்.

வழக்கம்போல ஊர்சுற்றும் ஆவலில் நாகபுரியையும் விட்டு வைப்பதில்லை என்கிற எண்ணத்துடன் அங்கு சென்றிருந்தேன். தந்தோலி என்கிற பேட்டை ஒன்றில் வசிப்பதால் அந்தப் பெயரை ஊர்ப்பெயராக அமைத்து அவளுடைய தோழிகள் அழைத்து வருவதைச் சுந்தரியைக் கேட்டுப் புரிந்துகொண்டேன். சுந்தரி நெடிய மூச்சு ஒன்றைத் தாராளமாக இழுத்தபடி, 'அக்கா! நாளைக்கு ஜனவரி முதல் தேதியாயிற்றே. முதல்தரமான வேலையாக நான் ஒன்று சொல்லப் போகிறேன். நாமெல்லாம் நாளை வார்தா போகிறோம். தந்தோலி மாமி நாளைக்கு உன்னை வார்தாவில் சேவாகிராமத்தைப் பார்க்க அழைப்பு விடுத்திருக்கிறார். அவர்கள் காரிலேயே போகலாமாம்.'

'போகத்தான் வேண்டும். அதற்காகத்தான் நான் நாகபுரிக்கே வந்தேன்—'

நான் பேசி முடிப்பதற்குள் அவள் அந்தச் செய்தியை மாமிக்கு அறிவித்துவிட்டு வார்தா செல்வதற்கு வேண்டிய திட்டங்கள் (தின்பண்டங்கள்!) போடுவதற்காக அடுக்களைக்குப் போய்விட்டாள். சிறிது நேரத்தில்

உள்ளேயிருந்து இட்டிலிக்கு அரைப்பது கடபுடாவென்று கேட்க ஆரம்பித்தது.

இடையிடையே தந்தோலி மாமியும், இவளும் டிபன் பேச்சைத் தொடர்ந்து 'போனில்' பேசி என் அரைத் தூக்கத்தைக் கெடுத்து வைத்தார்கள்.

மறுநாள் அதிகாலையில் உடலை ஊசியாகத் துளைக்கும் குளிரில் நெடுஞ்சாலை ஒன்றின் வழியாகக் கதிரவனின் எழுச்சிக்காக வானமெங்கும் வண்ணங்களால் மெழுகப்பட்டிருந்த காட்சியைப் பார்த்தவாறு நாங்கள் காரில் பயணமாகிவிட்டோம். அடுக்கடுக்காகப் பரவி நின்ற மத்தியப் பிரதேசத்தின் அடர்ந்த தேக்குமரக் காடுகளில் தவழ்ந்து, சோளக் கொல்லைகளில் நீந்திப் பனிக்காற்று எங்கள் முகங்களில் பன்னீர் தெளிப்பதுபோல் சிறு தூறல்களை வாரி வீசியது. சோளக்கொல்லைகளில் மணிமணியாகக் கொண்டைகள் காற்றில் அசைந்தாடின. கோதுமை வயல்களில் தேங்கி நின்ற நீரில் துளையும் மீன்களைப் பிடிக்க நாரைக் கூட்டம் ஒன்று எழும்பிவரும் கதிரவனின் ஒளியில் குளித்தவாறு விண்ணில் பறந்து வந்தது.

காரோட்டியை மெதுவாகப் போகுமாறு பணித்திருந்தாள் தந்தோலி மாமி என்கிற ராஜம். என் அருகில் அமர்ந்திருந்த அவளை நான் நாகபுரியை விட்டுக் கிளம்பி கொஞ்சதூரம் போவதற்குள் பலமுறைகள் பார்த்துவிட்டேன். பார்ப்பவரை மறுமுறை பார்க்கச் சொல்லி தூண்டும்களை பொருந்திய முகம். இதைவிட ஒரு குடும்பப் பெண்ணைப்பற்றிப் பாதாதி கேசம் என்ன வர்ணனை வேண்டிக் கிடக்கிறது? அள்ளி முடித்திருந்த கொண்டையில் ஒரே ஒரு ரோஜா மலர். வகிட்டிலும், உச்சியிலும் இழையோடிய நரையிலிருந்து அவள் முப்பது வயதைத் தாண்டியவள் என்று ஊகித்துக்கொண்டேன். தன்னந்தனியளாக, புன்னகை நிரம்பி வழிய ஒரு கூடையுடன் அவள் காரில் வந்து உட்கார்ந்தவுடன், 'குழந்தைகள்?' என்கிற கேள்வியுடன் என் தங்கையை பொருள் ததும்பப் பார்த்தேன். கேட்கவில்லை.

'பேசாமல் இரு...மாமிக்குக் குழந்தைகள் இல்லை. எதையாவது கேட்டு வைக்காதே' என்று ரகசியம் பேசினாள் சுந்தரி. இதற்குள் ராஜம் கம்பீரமான நகைப்பை அள்ளி வீசியபடி, 'வாருங்கள். உங்களைப்பற்றியும், உங்கள் தெய்வ பக்தியைப் பற்றியும் சுந்தரி ரொம்ப சொல்லியிருக்கிறாள். புறப்படுவோமா?' என்றவாறு காரின் கதவைத் திறந்து வழிவிட்டாள் எனக்கு.

'இந்த ஊர்க்குளிர் எப்படி? பல்லைக் கிட்டுகிறதாக்கும்!'

'சென்னையைவிடக் குளிர் அதிகம் தான். இருந்தாலும் உடலுக்கும் மனத்துக்கும் ஒருவிதத் தெம்பை அளிக்கும் சக்தி இந்தக் குளிருக்கு இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது.'

'ஆமாம். நாகபுரியிலேயே எல்லோரும் விரும்பி வரவேற்கும் காலம் இந்தப் பனிக்காலம்தான். எங்கு பார்த்தாலும் பசுமை கொழிக்கும் வயல்களும், பச்சைக் காய்கறிகளுமாக ஒரே அழகுதான் போங்கள். அதோ பாருங்கள்' என்று சுட்டிக் காட்டினாள் ராஜம்.

ஏதோ ஒரு கிராமத்தின் ஊடே கார் சென்று கொண்டிருந்தது. வழியெங்கும் அடர்ந்து வளர்ந்திருக்கும் ரோஜாத் தோட்டங்கள். அடுக்கடுக்காய், வண்ணவண்ணமாய் இதழ்கள் விரித்து, காற்றில் ஆடும் ரோஜாமலர்கள் பனியில் நனைந்து பனித்துளிகளை இதழ்களில் தாங்கி நின்றன.

'இந்த மலர்களைப் பார்த்தால் உங்களுக்கு என்ன தோன்றுகிறது?' என்று கேட்டாள் ராஜம்.

'கடவுளின் படைப்பில் பக்தி ஏற்படுகிறது. அன்பு நிறைகிறது. உடல் புல்லரிக்கிறது. மலர்களே அவனாகவும், அவனே மலர்களாகவும் நினைக்கத் தோன்றுகிறது.'

'வேறே ஒன்றும் தோன்றவில்லையா?' ராஜம் தன் நீர் நிரம்பிய விழிகளை என்பால் திருப்பி உதடுகள் துடிக்கக் கேட்டாள். நான் பேசாமல் இருந்தேன்.

'ஓர் அழகிய குழந்தையின் மலர் முகம்போல் இல்லையா அவை?' கார் மெதுவாகச் சென்று கொண்டிருந்தது. வழியில் ஒரு ரோஜாத் தோட்



டத்து வேலி அருகே இருந்த செடியிலிருந்து பெரிய சிவப்பு ரோஜா ஒன்று வெளியே எட்டிப் பார்த்தது. அதைப் பார்த்துவிட்டு, 'ஆமாம்... அவரவர் நினைப்பின்படி அதது தோன்றுவது இயற்கைதான். கடவுள் உங்களுக்கு மக்கட் செல்வத்தை அருள வேண்டும்.'

ராஜம் நான் கூறியதைக் கவனித்ததாகத் தெரியவில்லை. தன்னைத் தானே தேற்றிக் கொண்டு, 'நான் ஒரு கதை சொல்லட்டுமா உங்களுக்கு?' என்று கேட்டாள்.

கதை கேட்க நானும் ஆவலாகத்தான் இருந்தேன்.

ஃ ஃ ஃ

ராஜம் மணம்புரிந்து கொண்டு வந்தபோது நண்டும், சிண்டுமாக மூன்று மைத்துனர்கள், இரண்டு நாத்திகள் அடங்கிய குடும்பத்தை நிர்வகிக்க வேண்டிய பொறுப்பை ஏற்க வேண்டியிருந்தது. தாயை இழந்துவிட்ட அந்தக் குழந்தைகளுக்குத் தாயாக இருந்தாள். பொறுப்புடன் அவர்களை வளர்த்தாள். முதல் நாத்தனாருக்குத் திருமணமாகிக் கணவன் வீட்டுக்குச் சென்றதும் மைத்துனன்கள் இருவரும் வேலையாக வெளியூர் போய்விட்டார்கள்.

அவரவர் குடும்பம் என்று ஆன பிறகு மன்னியிடம் அவ்வளவாக அவர்கள் ஒட்டுதலுடன் நடந்து கொள்ளவில்லை. அவளைப் பொறுத்தவரை இது பெருத்த ஏமாற்றமாகத்தான் இருந்தது. அவளுடைய கணவன் ராமதுரை இதையெல்லாம் கவனிக்கிறவர் அல்ல. 'நம்மைச் சார்ந்த கடமைகள் சில இருந்தன. அவைகளை முடித்துவிட்டோம். பறவைக் குஞ்சுகள் இறக்கை முளைத்தபிறகு கூட்டில் தங்குவதில்லை.' தம்பிகளும், தங்கைகளும் அவர்களை விட்டு விலகியபோது மேற்கூறிய விதத்தில் தன்னைத் தேற்றிக்கொண்டு விட்டார்.

ராஜம் வேதனை பொங்கும் மனத்துடன் யந்திரமாகிவிட்டாள். உள்ளக் குமுறல் முகமெங்கும் பரவியிருக்க அவளைப் பார்க்கவே ராமதுரைக்கு வேதனையாக இருந்தது. தனிமைத் துயரில் தானாகக் கரைந்து நாட்கணக்கில் எதுவும் செய்யத் தோன்றாமல் இருந்த ராஜத்தின் உள்ளத்துக்கு ஒரு வித மாற்றம் தேவையாக இருந்தது. எப்பொழுதுமே தனக்கென்று அவள் எந்த ஆசையையும் வைத்துக் கொண்டதில்லை. நகை நட்டுகள், புடவைகள் என்று எதிலும் அவள் மனம் செல்லுவதில்லை. பெரிய ஆசையாக அவள் உள்ளத்தில் வேரூன்றியிருந்த குழந்தைச் செல்வத்துக்காக ஏங்கினாள்.

ராமதுரை தீவிரமாகச் சிந்தித்தார். உற்றார், உறவினர் அருகில் இருந்தால் அவர்கள் அடிக்கடி வந்து அவளுடைய பிள்ளையில்லாக் குறையைப்பற்றி, இரவல் பிள்ளை வாங்கி வளர்க்க வேண்டிய அவசியத்தைப்பற்றி, வம்சம் வளராமல் போவதைப்பற்றி எதையாவது பேசிக்கொண்டேயிருந்தார்கள். சிலர் பணத்துக்காகத் தங்கள் பிள்ளைகளைப் பற்றிப் பேசிப் பார்த்தார்கள். அவளுடைய ஆற்றாமையைத் தீர்ப்பதைவிட, அவளுக்கு ரொக்கமாகப் பணம் எவ்வளவு உண்டு என்பதுதான் அவர்களுடைய கவலை.

'எங்கேயாவது மாற்றிக்கொண்டு விடுங்கள். இவர்கள் பிடுங்கல் எனக்குச் சகிக்கவில்லை' என்றாள் ராஜம் கணவரிடம். பிரபல இன்ஜினீயராகிய ராமதுரையின் பணியும் அப்பொழுது வார்தாவில் கட்டிவந்த தொழிற்கூடம் ஒன்றுக்குத் தேவையாக இருந்தது.

நாலைந்து ஆண்டுகளுக்கு முன்பு ஒரு தை மாதத்தில் ராஜமும், அவள் கணவரும் வார்தாவுக்கு வந்து சேர்ந்தார்கள். பெரிய தோட்டத்தின் நடுவே இருந்த அந்த வீடு அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது. எங்கு பார்த்தாலும் மரங்கள், செடிகள், ரோஜாச் செடிகளில் பனித்துளிகளைத் தாங்கிய வண்ண வண்ண மலர்கள்.

ஒருபுறம் கரும்பு மதர்த்து அடர்ந்து சோலையாக வளர்ந்திருந்தது. பருத்திச் செடிகளில் வெள்ளை வெளேர் என்று காய்கள் வெடித்துப் பஞ்சு காற்றில் பறந்து வந்தது. வேதனையால் பொங்கும் உள்ளத்துக்கு மருந்து மனிதர்களின் சொற்களில் இல்லை. தெளிந்த வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்தால் மனத்தில் சாந்தி பிறக்கிறது. நெடிதுயர்ந்த மலை முகட்டைப் பார்த்தால் களிப்பு ஏற்படுகிறது. அடர்ந்து செறிந்த காடுகளைக் கண்டால் இன்பம் பிறக்கிறது. புத்தம் புதிய மலர்களைக் கண்ணுறும்போது இறைவனின் படைப்பில் பக்தி ஏற்படுகிறது.

ராஜம் இந்த இயற்கைச் சூழ்நிலைகளுடன் ஒன்றியிருந்தாள். அந்த வீட்டுத் தோட்டத்தில் அமர்ந்து பார்த்தால் நீலமலைத் தொடர் ஆங்காங்கு தொடர்ந்தும், விட்டுவிட்டும் காணப்பட்டன. அவை நிலைவானை நிமிர்ந்து பார்த்து வந்தது, வந்துகொண்டிருப்பது, வரப்போவது என்கிற முக்காலங்களைப் பற்றியும் வார்த்தையாடுவது போல் இருந்தது. மத்தியப் பிரதேசத்தின் அடர்ந்த தேக்கு, கருங்காலிக் காடுகள் மலைகளைச் சார்ந்த சமவெளியெங்கும் கூட்டங் கூட்டமாய்ப் பரவி நின்றிருந்தன. அவைகளும் தொலை தூரத்தில் தெரிந்தன. பிறகு சமவெளியெங்கும் சோளம், கோதுமை, நெல் கொழித்து வளர்ந்திருந்தன.

ஊரில் உற்றார், உறவினரிடம் ஏற்படாத நெருக்கம் அங்கிருந்த இரண்டு பேர்களிடம் ராஜத்துக்கு ஏற்பட்டது.

தோட்டக்காரன் பண்டுவும், அவன் மனைவி மங்களாவும் மாஜீயிடம் அளவு கடந்த அன்பு காட்டினார்கள். மங்களாவுக்கு ஆறேழு வயதில் பெண் ஒருத்தி இருந்தாள். பாபுஜியும், மாஜீயும் வந்து சேர்ந்தவுடனேயே மங்களாவின் பார்வை அவர்களின் காருக்குள் சென்று திரும்பியது. இரண்டு, மூன்று பெட்டிகள், படுக்கைகள், கூடைகள் இவற்றைமட்டும் கொண்டு வந்து உள்ளே வைத்தான் வேலையாள். ஒருவேளை குழந்தைகள் பெரியவர்களாகிப் படித்துக்கொண்டிருப்பார்கள். ஊரிலேயே விட்டு வந்திருப்பார்கள். 'அம்மாவை இதையெல்லாம் போய எப்படிக் கேட்பது?'

மங்களாவின் பெண்ணிடம், ராஜம் காட்டிய அன்பைச் சாக்காக வைத்து ஒரு தினம் அவளே அம்மாவிடம் கேட்டுவிட்டாள்.

'குழந்தைகள் ஊரிலே படிக்கிறார்களா பாயீ?'

'இல்லை...எனக்குக் குழந்தைகளே இல்லை...' ராஜத்தின் இந்தச் சொற்களும், அவை துயரத்துடன் வெளிவந்ததும் மங்களாவைப் பெரிதும் வருத்தின. மெதுவாக மங்களா தன் இடுப்பில் கை வைத்துத் தன் வயிற்றைத் தடவிக் கொண்டாள்.

'உனக்கு இது எத்தனை மாசம்?' என்று கேட்டாள் ராஜம்.

வெட்கம் கலந்த சிரிப்புடன், 'ஏழோ, எட்டோ? யாரம்மா இதெல்லாம் கணக்கு வைத்திருக்கிறார்கள்? ஒரு குழந்தைக்கே சோற்றுக்கும், துணிக்கும் வழி இல்லை...' என்று அலுத்துக் கொண்டாள் மங்களா.

மனைவிக்கு ஏற்பட்டிருந்த மகிழ்ச்சியில், தெளிவில் ராமதுரை நிம்மதி அடைந்தார்.

'ராஜு! எத்தனை வருஷங்களுக்குப் பிறகு நீ இப்படி மனம்விட்டுப் பேசிச் சிரிக்கிறாய் தெரியுமா?'

கணவரின் இந்தப் பேச்சுக்கு ஒரு சிரிப்புடன் மௌனமாக இருந்தாள் ராஜம்.

ராஜம் அங்கு வந்தபோது சிறிதும், பெரிதுமாக இருந்த வாழை மரங்கள் இப்பொழுது உயர்ந்து வளர்ந்துவிட்டன. ஐந்தாறு மரங்களின் குலைகள் செம்பழமாக மஞ்சளும், பசுமையுமாக இருந்தன. இன்னும் இரண்டொரு தினங்களில் பழங்கள் நன்றாகப் பழுத்துவிடுமாம். பாண்டு, இரண்டு வாழைத் தார்களை வெட்டியெடுத்து வந்து உள்ளே வைத்தான்.

பொழுது விடிந்ததிலிருந்து அன்று மங்களா வீட்டுப் பக்கமே வரவில்லை. பண்டு மிகவும் சங்கோசக்காரன். வெட்கம் பிடுங்கித் தின்கிறாற்போல் அவன் முகத்தையும், உடம்பையும் வளைத்துக் கொண்டு தரையைப் பார்த்தவாறு, 'அவளுக்கு உடம்பு சுகமில்லை' என்று மாஜீயிடம் கூறினான்.

'உடம்பு சரியில்லை என்று மெதுவாகக் கேட்ட பிறகு சொல்கிறாயே...' ராஜம் அவனைக் கடிந்தவாறு தோட்டத்



துக் குடிசைக்கு ஓடினாள். தாய்மையின் வேதனை ஒலியில் தன்னை மறந்து நின்றிருந்தாள் சிறிது நேரம். உள்ளேயிருந்து கிராமத்துப் பெண்கள் வெளியே வருவதும், மறுபடி உள்ளே போவதுமாக இருந்தார்கள். சிறிது நேரத்தில் குழந்தையின் அழுகுரல் கேட்டது.

மறுபடியும் பண்டு கூனிக் குறுகிக் கொண்டு வெட்கத்துடன் அவள் எதிரில் வந்து நின்று, 'அம்மா! ஆண் குழந்தை பிறந்திருக்கிறது' என்றான். ராஜம் ஏதும் பேசுவதற்குள் அவன் அங்கு இருந்தால்தானே? அத்தனை வெட்கம் அவனுக்கு.

ராஜத்தின் உள்ளம் அன்று நிறைந்து பூரித்து இருந்தது. 'என்ன? ஒரே ஆனந்தத்தில் ஆழ்ந்துவிட்டாய் ராஜ?' என்று கேட்டார் ராமதுரை, மனைவி பரிமாறிய உணவை ருசித்துச் சாப்பிட்டபடி.

'மங்களா பிரசவித்துவிட்டாள். பிள்ளை பிறந்திருக்கிறது. ஏழையானாலும் அவர்கள் பாக்கியசாலிகள்' என்று மூச்சுவிடாமல் பேசி வந்தவள் மெதுவாக அவர் அருகில் குனிந்து, 'குழந்தை இருக்கிறது பாருங்கள். அவர்கள் வயிற்றில் பிறக்கக்கூடியது இல்லை. அவ்வளவு அழகு' என்று சொல்லிப் பரவசப்பட்டாள்.

'அப்படியா? பண்டுவுக்குக் கைச் செலவுக்கு ஏதாவது பணம் கொடுத்தாயா?'

'அப்பொழுதே கொடுத்தாகிவிட்டது. அவன்தான் ஒரே சங்கோசியாக இருக்கிறான்...'

'நம் ஊரைப்போல பாட்டாளிகளும், தொழிலாளிகளும் இங்கு பல விஷயங்களில் முன்னேறவில்லை ராஜம்! கண்ணை மூடிக்கொண்டு ஒரே மாதிரியாக அன்பும், பக்தியும் தம் எஜமானர்களிடம் வைத்திருக்கிறார்கள். ஒரு விதத்தில் அதுவும் நல்லதுதான். ஒன்று அன்பினாலாவது அவரவர் கடமையை உணர்ந்து செய்ய வேண்டும். மற்றது பண்பினாலாவது செய்ய வேண்டும். இரண்டும் இல்லாமல் ஜாதி, மதங்களைப் போட்டுக் குழப்பிக்கொண்டு தேசத்தின் ஆக்க வேலைகளை ஏன் தடை செய்ய வேண்டும் சொல்? தேசத்தின் வளர்ச்சி ஒன்றுதானே நமக்கு முக்கியமாக இருக்க வேண்டும்?'

ராஜத்துக்குக் கணவரின் இந்தப் பேச்சு சுவாரஸ்யப்படவில்லை. அவளுடைய எண்ணமெல்லாம் வேறெதிலோ இருந்தது. சாப்பிட்டு முடித்து ராமதுரை திரும்பவும் அலுவலகம் கிளம்பும்போது ராஜத்தை அழைத்து அன்று மாலை தாம் சேவா கிராமம் செல்வதாகவும், தன்னுடன் அவளைப் புறப்பட ஆயத்தமாக இருக்கும்படியும் சொல்லிவிட்டுப் போனார்.

மாலை நான்கு மணிக்கு இருவரும் சேவாகிராமத்துக்குப் போய்ச் சேர்ந்தார்கள். ஆச்ரமத்தைச் சுற்றிப் பார்த்தார்கள். பாரத நாட்டில் ஒவ்வொரு நல்லிதயத்திலும் கோயில் கொண்டுள்ள பாபுவையும், 'பா'வையும் அங்கு நேரில் கண் குளிரத் தரிசிப்பதுபோல் அகமகிழ்ந்தாள் ராஜம்.

பாபுவின் குடிலில் அவள் மெய் மறந்து நின்றபோது தற்செயலாக ஓர் எண்ணம் அவள் மனத்தில் எழுந்தது. வார்தா திரும்பும்போது ராஜம் கணவரிடம் கேட்டாள்: 'பண்டுவின் குழந்தையை நாம் வளர்த்தால் என்ன? அந்த ஏழை மக்கள் எதற்கும் வசதியற்றவர்களாக இருக்கிறார்களே. குழந்தை நல்லபடியாக வளர்ந்து பெரியவனாகிவிட்டால் அவர்களுக்கும் நல்லதுதானே?'

அவர் யோசனையில் ஆழ்ந்து மௌனமாக இருந்தார்.

'என்ன பேசமாட்டேன் என்கிறீர்கள்?'

'பண்டுவின் குழந்தை என்று சுலபமாகச் சொல்லிவிட்டாயே. மங்களாவைப்பற்றி நீ யோசிக்கவே இல்லையே...'

'மங்களாவைப்பற்றி எனக்குத் தெரியாதா என்ன? கள்ளம் கபடற்ற பெண். பணிவான குணம். என் சொல்லுக்கு மறு சொல் பேசமாட்டாள். பண்டுதான் ஒரு மாதிரி. அவனை நீங்கள்தான் சரிக்கட்ட வேண்டும். குழந்தையை நமக்கென்று எடுத்துக்கொள்ளப் போகிறோமா என்ன? இல்லை, அவர்களை வீட்டைவிட்டு விரட்டிவிடப் போகிறோமா?'

குழந்தை வளர வளர அது ராஜத்தின் வீட்டிலேயே தங்க ஆரம்பித்துவிட்டது. அவளும் வேற்றுமையின்றி அதற்கு எல்லா வசதிகளையும் தன் வீட்டில் செய்து கொடுத்தாள். காலையில் மங்களா வேலைக்கு வரும்போது பங்களாவுக்குள் மது வந்துவிடுவான். மறுபடியும் இரவாகும்வரை ராஜத்தின் அன்பில், அரவணைப்பில் வளர்ந்து வந்தான். இப்படிச் சில மாதங்கள் சென்றன. ராஜத்திடம் பெற்ற அன்னையை விடப் பிடிப்புடன் ஒட்டிக்கொள்ளவே, இரவு நேரங்களில் அவளை நினைத்து அழ ஆரம்பித்துவிடுவான்.

மங்களா அவனைத் தூக்கிக்கொண்டு பங்களாவுக்கு ஓடுவாள்.

'உங்களிடம் வர வேண்டுமாம் பாயி. பிடிவாதம் பிடிக்கிறான்' என்றவாறு குழந்தையை அவளிடம் விட்டுச் சென்றுவிடுவாள்.



பெற்றோரின் மன வருத்தத்துக்கு ஆளாகாமல் ஒரு குழந்தையை நல்ல முறையில் வளர்த்த பெருமையைத் தான் அடையப் போவதாக நினைத்து மகிழ்ந்தாள் ராஜம்.

மங்களாவின் மகன் தங்கள் குழந்தைகளைப்போலில்லாமல் பட்டுச் சொக்காயும், உயர்ரக உணவுகளையும் உடுத்தி, உண்டு மகிழ்வதை அண்டை அயலார் வம்பளந்தார்கள். அவன் காரில் ராஜத்தின் மடியில் அமர்ந்து வெளியே செல்வதை ஒருத்தி கீச்சுக் குரலில் விமரிசனம் செய்தபடி தண்ணீர் குடத்தை எடுத்துத் தலைமீது வைத்துக்கொண்டு நடந்தாள்.

மங்களாவின் பெண் மஞ்சு தார் பாய்ச்சிக் கட்டிய முரட்டுப் புடைவையும், வயிறு தெரியும்படியாக சோளியும் அணிந்துகொண்டு தாய்க்கு உதவியாகத் தண்ணீர் இறைப்பதும், பாத்திரங்கள் துலக்குவதும் அவர்களுக்குத் தெரியாதா?

மஞ்சுவுக்கு ஏனோ அந்த 'பாயி'யைப் பிடிக்கவில்லை. தன் தம்பியை அவள் எப்படியும் ஒரு நாள் திருடிக்கொண்டு காரில் போய்விடப் போகிறாள் என்றே நினைத்துக்கொண்டாள். இதை அவள் எப்படித் தன் பெற்றோரிடம் சொல்ல முடியும்? அவர்கள்தான் பக்கத்துக் குடிசையில் வசிக்கும் ஸோனு பாயி சொல்கிறபடி பணத்தாசையில் மூழ்கிவிட்டார்களே.

வயலுக்குப் போய்க் குப்பை கூளங்களையும், சுள்ளிகளையும் பொறுக்கி வரும்போது மஞ்சு தன் தோழிகளிடம் மதுவைப்பற்றிக் கதை அளந்து கொண்டு வருவாள். 'எத்தனையோ புண்ணியம் செய்ததால் அந்தமாதிரி அழகுப் பையன் அவர்கள் வீட்டில் பிறந்தானாம். அவள் எஜமானரும், எஜமானியும் புண்ணியம் பண்ணவில்லையாம். அவர்கள் எப்படி அவள் தம்பியை இரவலாகக் கேட்டு வளர்ப்பது? அக்கிரமமில்லையா?'

அப்பொழுது பார்க்க வேண்டுமே அவள் முகத்தை? உலகத்துத் துயர் அனைத்தும் அங்குக் குடியேறிவிடும் விந்தையை?

ராமதுரைமட்டும் தானாக நினைத்துப் பார்த்துக்கொண்டார். 'ஊரார் குழந்தை மீது இப்படி ஒரு பாசம் வைத்திருக்கிறாளே ராஜம் என்னதான் ஊட்டி வளர்த்தாலும் அந்தக் குழந்தை இவளிடம் ஒட்டத்தான் போகிறதா?'

ஒரு நாள் தம் மனைவியை அழைத்து, 'ராஜம்! நாம் ஊர்ப்பக்கம் போய் எத்தனை வருஷங்கள் ஆயின? போய் வருவோமா?' என்று கேட்டார்.

ராஜம் முகத்தைச் சுளித்தாள்.

'ஊருக்கா? அங்கே என்ன வேலை இப்போது?'

அவள் மதுவை முத்தமிட்டவாறு கூறியதைக் கேட்ட அவர் மிகுந்த வேதனையுடன், 'ராஜம்! இப்படி இந்தக் குழந்தைமீது பாசம் வைத்திருக்கிறாயே. இவன் நம்முடைய பொருள் அல்ல தெரியுமா? சாதுவான பண்டுவும், அடக்கமான மங்களாவும் என்ன இருந்தாலும் தங்கள் குழந்தையை பணத்துக்கு விற்கத் தயாராக இருக்கமாட்டார்கள்.'

ராஜம் மதுவை அணைத்துப் பிடித்தவாறு கணவரை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். ராமதுரை அறையில் குறுக்கும் நெடுக்குமாக உலவியவாறு, 'ராஜம்! நான் சமீபத்தில் ஒரு புத்தகம் படித்தேன். பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் பொன் மொழிகள் என்று நினைக்கிறேன். அதைச் சொல்கிறேன் கேள்: 'ஒரு பணக்கார மாதின் வீட்டில் உள்ள வேலைக்காரி, வீட்டு வேலைகள் எல்லாவற்றையும் செய்கிறாள். ஆனால், அவளுடைய எண்ணங்கள் யாவும் அவளுடைய சொந்த வீட்டின்மேல்தான் நிலைத்திருக்கும்...' என்ன அழகான கருத்து பார்த்தாயா ராஜம்? மது உன்னிடம் வளரட்டுமே என்று அக்கறையுடன் அவள் அவனை உனக்குக் கொடுத்திருப்பதுபோல் தோன்றினாலும் அவள் எண்ணம், அன்பு பூராவும் அவனிடம் தான் இருக்கும்...'

ராஜம் மௌனமாகவே இருந்தாள். மதுவைப்பற்றி எந்தவிதமான கருத்து வேற்றுமையும் அவள் உள்ளத்தில் எழுவதை விரும்பாதவள்போல் வாயை இறுக மூடிக்கொண்டு குழந்தைக்கு விளையாட்டு மோட்டாருக்குச் சாவிக் கொடுத்து அதைச் சுற்ற வைத்து வேடிக்கை காட்டிக்கொண்டிருந்தாள்.

மது தன் குட்டி கைகளைக் கொட்டி ஆனந்தித்தான்.

இப்படியே வருஷங்கள் ஓடின. சின்னஞ்சிறு மதுவுக்கு வயது ஐந்தாகிவிட்டது. அவன் தாய் மொழியாகிய மராட்டியுடன் தமிழும் நன்றாகப் பேச வந்தது.

மனிதர்களின் செயல்கள், எண்ணங்கள் ஒரே கதியில் சுழல்வதில்லை. அப்படிச் சுழன்றாலும் மனித வாழ்க்கை சாரமற்ற சக்கையாகத் தோன்றுகிறது. அவ்வப்போது ஒருவித மாற்றம் தேவையாக இருந்தது. ராமதுரைக்கு அலுவலகத்தில் ஓயாமல் வேலைகள் இருந்ததால், பொறுமையின் இருப்பிடமான அவர் நரம்புத் தளர்ச்சிக்கு ஆளாகியிருந்தார். அலுப்புத்தட்டும் வகையில் அவர் உழைத்துவிடவே ஒரு வாரத்துக்கோ, பத்து நாட்களுக்கோ வேறு அமைதியான இடம் ஒன்றை நாடிச் சென்று ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று வைத்தியர் சொல்லி விட்டார்.

'எங்கே போகிறது? நம் ஊர்ப் பக்கம் ஒன்றும் போக வேண்டாம். அது என்ன, இது யார் என்று ஆயிரம் கேள்விகள் கேட்டுத் துளைத்துவிடுவார்கள்...'

'பின்னே! இங்கு முப்பது மைலில் ஒரு கிராமம் இருக்கிறது. நீகூடப் பார்த்திருக்கிறாயே ராஜம். சேனு

என்று பெயர். சோணார் நதியும், வயல்களும் ஒரு குளுமையாக இருக்கும். சின்ன வீடு ஒன்று பார்த்தாகிவிட்டது.'

'சரிதான். எல்லா ஏற்பாடுகளையும் முடித்த பிறகுதான் விஷயம் என் வரைக்கும் வந்ததா? மதுவையும் அழைத்து வருவேன். கூடாது என்று சொல்லக் கூடாது...'

'அவன் எதற்கு ராஜம்? வீட்டை ஒட்டி சோணார் நதி ஓடுகிறது. ஒரே துருதுருத்த பயல். இங்கே வீட்டிலேயே விஷமம் சகிக்கவில்லை. ஒரு வாரத்தில் வந்துவிடலாம்.'



ராஜம் முகத்தை ஒரு திருப்புத் திருப்பிக்கொண்டு உள்ளே போய்விட்டாள். அன்று பூராவும் முகத்திலே ஒரு சிரிப்பு, வாய்ப்பேச்சு என்பதே இல்லை. ராமதுரைக்கு மனைவியின் போக்கிலேயே அலுப்பு ஏற்பட்டது. 'சீ! என்ன சுபாவம் இவளுக்கு?' என்று அலுத்துக்கொண்டார் தமக்குள்ளாக. ஆனால் ராஜத்தின் களங்கமற்ற மனமும், பிறருக்காக இரங்கும் பெருங்குணமும் அவருடைய அந்த எண்ணத்தை உடனடியாக மாற்றிவிட்டது. தன் அறையில் தனியாக அமர்ந்திருந்த மனைவியை நெருங்கி, 'ராஜம்! நாளைக்குப் புறப்பட வேண்டாமா? ஏதாவது வாய்க்கு வேண்டியதாக சீடை, முறுக்கென்று செய்யமாட்டாயோ? மூஞ்சியைப் பார், ஒரு புட்டி விளக்கெண்ணெயை வழியவிட்டுக்கொண்டு...' என்று அவளைச் சீண்டினார். பேசாமல் இருந்த மனைவியிடம் தாமாகவே, 'மதுப் பயலுக்குச் சட்டை, துணிமணிகளைப் 'பாக்' பண்ணிவிட்டாயோ? அவன் அம்மாவையும் ஒரு வார்த்தை கேட்டுவிடு' என்றதும் ராஜம் உற்சாகத்துடன் மங்களாவைக் கூவி அழைத்தாள். கொல்லைப்புறத்தில் கோதுமை மாவு சலித்துக்கொண்டிருந்த மஞ்சு கையை உதறிக்கொண்டே எழுந்து வந்தாள்.

'உன் அம்மா எங்கே மஞ்சு? ஓடிப் போய்ச் சீக்கிரம் அழைத்து வா...'

மஞ்சுவின் மனத்தில் பல எண்ணங்கள் சுழல குடிசைக்கு ஓடி பரபரப்புடன் தாயை அழைத்து வந்தாள்.

'இதோ பார் மங்களா! நாளைக்கு நானும், பாபுஜியும் சேலூவுக்குப் போகிறோம். பாபுஜிக்கு உடம்பு சரியில்லை. ஒரு வாரம் கழித்துத் திரும்பிவிடுவோம். கூட மதுவை அழைத்துப் போகிறோம், என்ன?'

'சேலூ கிராமத்துக்கா மாஜீ?...' மஞ்சு தாய்க்குப் பதிலாகக் கேட்டுவிட்டு நின்றாள்.

மங்களா கேட்டிருந்தால் ராஜம் பொறுத்துக்கொண்டிருந்திருப்பாளோ என்னவோ. அவளுக்குக் கோபம் பொத்துக்கொண்டு வந்தது.

'ஆமாண்டி! சேலூ கிராமத்துக்குத்தான். நான் என்ன மனுஷியில்லையா? உன் பிள்ளையை இத்தனை வருஷங்களாகக் கவனமாகப் பார்த்துக்கொள்ளவில்லையா? அவன் என்னுடன் நாகபுரிக்கு வரவில்லையா? அதிசயமாகத்தான் உன் பெண் கேட்கிறது போ...'

மங்களா அரண்டு போய் நின்றாள். பிறகு சமாளித்துக்கொண்டு, 'நஹீ... நஹீ...மா...ஜீ...சோனா நதி பொல்லாத ஆறு மா...ஜீ...அது ஒரே வெறி பிடித்த ஆறு. எத்தனையோ குழந்தைகளை விழுங்கிய ஆறு. மதுவும் முன்னைப் போல இல்லை. ஒரே விஷமக்காரனாகிவிட்டான்.'

ராஜத்துக்கு அவள் வார்த்தைகள் சுருக்கென்று தைத்தன. 'நீயும்தான் வாயேன், உன் பிள்ளையைக் கட்டிக் காத்துக்கொண்டு. இல்லை, அதோ நிற்கிறாளே உன் பெண். அவளை அனுப்பு'.

மஞ்சுவுக்குத்தான் அந்த 'பாயி'யைப் பிடிப்பதில்லையே.

'நான் ஒண்ணும் அங்கே போகலை...' என்றவாறு அவள் வெளியில் போய்விட்டாள்.

பண்டுவுக்கு இரண்டு நாட்களாகக் காய்ச்சல். ஆகவே, மங்களாவும் வருவதற்கு இல்லை. ராஜத்தின் வார்த்தைக்கு மறுபேச்சு பேசாமல் மௌனமாகவே அவளை ஏறிட்டுப் பார்த்துவிட்டு மங்களா தலையைத் தாழ்த்திக்கொண்டாள். இத்தனை காலமாக இல்லாத ஓர் உணர்ச்சி அவள் முகத்திலும், விழிகளிலும் தேங்கி இருந்ததை ராஜத்தைவிட அவள் கணவர் அதிகமாகக் கவனித்தார்.

அடுத்த நாள் அதிகாலையில் கிராமத்துக்குப் புறப்பட்டார்கள். பனி கொட்டிக்கொண்டிருந்தது. எதிரே இருந்த பாதைகூடச் சரியாகத் தெரியவில்லை. இருந்தாலும் சீக்கிரம் கிளம்பி சீக்கிரமே ஊர் போய்ச் சேர்ந்துவிடலாம் என்கிற எண்ணத்தில் புறப்பட்டுவிட்டார்கள்.

மது கம்பளிச் சட்டை, குல்லாய் போட்டிருந்தான். அவனுக்காக விதவிதமான தின்பண்டங்கள், பழங்கள் நிரம்பிய கூடையை எடுத்துக் காரில் வைத்தாள் ராஜம்.

மங்களாவும், மஞ்சுவும் ஒருபுறமாக நின்றிருந்தார்கள்.

'மது! அம்மாவுக்கு டாடா சொல்லு' என்றாள் ராஜம்.

'டா...டா...மா...டா...டா...மஞ்சு...' என்றான் கீச்சுக் குரலில் மது.

மங்களா சிரிக்க முயன்றாள். மஞ்சு கண்களைத் துடைத்துக்கொண்டாள் முகத்தைத் திருப்பிக்கொண்டு. கார் கிளம்புவதற்கு முன்பு பண்டு தள்ளாடியவாறு வெளியே வந்து நின்றான். கார் எப்பொழுதோ கிளம்பிச் சென்றுவிட்டது. ஆனால், மங்களா பனிப் படலத்தையே வெறிக்கப் பார்த்தவாறு நின்றிருந்தாள். யுகம் யுகமாக மதுவைப் பிரிந்துவிட்டாற்போல் ஏக்கம் ஒன்று அவள் மனத்தை இருள்போல் கவிந்துகொண்டது. மஞ்சு தன் தாயை உலுக்கி அவள் சிந்தனையைக் கலைத்தாள்.

'மா... மதுவை நீ அனுப்பியிருக்கக் கூடாது மா...போன வருஷம் ஜோதி பாயியின் மகன் சோனாரிலேதானே முழுகிப் போய்விட்டான்?'

மகளின் வாயைச் சட்டென்று தன் கைகளால் பொத்தினாள்.

'அப்படிச் சொல்லாதே மஞ்சு. குழந்தை நல்லபடியாக வந்தால், நான் மகேஸ்வர் கோயிலுக்கு நெய் விளக்குப் போடுகிறேன். இந்த ஏழையின் மகனை அவர்கள் ராஜா வீட்டுப் பையனைப் போல வளர்க்கிறார்கள். அதையும் நாம்

நினைத்துப் பார்க்க வேண்டாமா மஞ்சு?'

குடிசைக்குள் நுழைந்தவர்களை உற்றுப் பார்த்துவிட்டு பண்டு முகத்தைத் திருப்பிக்கொண்டான்.

கிழக்கே எழுந்து வரும் கதிரவனின் சூற்றத்துக்கு முன்பு பனி கரைந்து போய்க்கொண்டிருந்தது. கார் சோளக் கொல்லைகளை, கரும்புச் சோலைகளை, பருத்தி வயல்களை, ரோஜாத் தோட்டங்களை பின்னுக்கு நிறுத்தியவாறு முன்னால் போய்க்கொண்டிருந்தது. விடியற் காலை எழுந்துவிட்டதால் மது ராஜத்தின் மடியில் தலை வைத்துச் சுகமாக உறங்கிக்கொண்டிருந்தான். கடைவாயிலிருந்து சாக்லேட் கரை படிந்து வரியாக இருந்தது. முகத்திலிருந்து உயர்தர குழந்தைப் பவுடரின் மணம் லேசாக வீசியது.

மதுவின் தளிர்க் கரங்களைச் சேர்த்துப் பிடித்தவாறு ராஜம் உட்கார்ந்திருந்தாள்.

கார் சேரூர் கிராமத்தை நெருங்குவதற்கு அடையாளமாகக் குடிசைகள் அடுக்கடுக்காகத் தெரிந்தன. இருபுறங்களிலும் குன்றுகளைப்போல் அமைந்த பாறைகளின் விசாலமான சரிவுகளில் ஏழை மக்கள் குடிசை கட்டிக்கொண்டு வாழ்ந்து வந்தார்கள். அவர்களில் பெரும்பான்மையோர் விவசாயிகள். தாங்கள் உண்டு, தங்கள் மண் உண்டு என்று அத்துடன் உறவாடித் தங்கள் உழைப்பால் உலகூட்டும் உத்தமர்கள். அவர்களுக்கு இன்றைய அரசியலில் உள்ள குழப்பங்கள், வேற்றுமைகள் எதுவும் தெரியாது. காந்திஜியின் படத்தைப் பார்த்தால் மனம் உருகிப் போவார்கள்.

பாதைக்கு இருபுறமும் பசுமையும், செழிப்பும் ஆற்றுப் பாய்ச்சலால் கொஞ்சி விளையாடின. வானளாவிய பெரிய மரங்கள் கூடாரம்போல் கவிந்து சூரிய ஒளி பாதையில் விழாதபடி தடுத்தன. ராஜம் வெளியே பார்த்துக் கொண்டே வந்தாள்.

பொழுது நன்றாகப் புலர்ந்துவிட்டது. இருள் விலகி ஒளி பிறக்கும் நேரத்தில் காற்றில் மிதந்து வந்த அந்தப் பாடல்கள் உழவர்களுடையது. ஏற்றச்சால்



களிலிருந்து நீர் குபுகுபுவென்று வழிந்து சிறு வாய்க்கால்கள் வழியாகத் தோட்டங்களில் பாய்ந்தது.

கண்ணுக்கெட்டிய தொலைவில் சோனார் நதி பொங்கிப் பெருகிக் குதித்தபடி தன் இரு கரைகளையும் சாடிக்கொண்டு விரையும் காட்சியைப் பார்த்தாள் ராஜம். ஒரு இடத்தில் சிறிய பாறை ஒன்றின்மீது ஏறி அடுத்த இடத்தில் மடுவில் வேகமாக இறங்கிச் சுழன்று சென்றது. இளஞ் சூரியனின் தங்க ஒளி ஆற்று நீருக்குத் தங்க முலாமிட்டது.

ஆற்றின் எழிலார்ந்த தோற்றத்தைப் பார்த்து ராஜம் தன்னையே மறந்திருந்தாள். கரையெங்கும் பூத்துக் குலுங்கும் சரக் கொன்றை மரங்களிலிருந்து மலர்கள் ஆற்றில் சிந்தி வேகமாகத் தண்ணீருடன் ஓடின.

காரில் மது தூங்கிக்கொண்டிருந்தான். ராமதுரை காரை காந்தி நினைவு மண்டபத்தின்



அருகில் நிறுத்திவிட்டு வெளியே வந்தார். பிளாஸ்க்கில் கொண்டு வந்திருந்த டீ தீர்ந்துவிடவே அவர் சற்றுத் தள்ளியிருந்த டீக்கடைக்குச் சென்றார். ஒரு நாளைக்குக் கணக்கில்லாமல் டீ சாப்பிடுகிறவர் அவர்.

டீ குடித்துவிட்டு, 'பான்' (வெற்றிலை) மென்றவாறு அவர் திரும்பவும் காருக்கு வந்து சேர்ந்தார். இதற்குள் சுள்ளென்று வெய்யில் அடித்து ராஜத்தின் மேனியெங்கும் முத்து முத்தாக வியர்வை அரும்பியது. இந்தப் புழுக்கம் தீர அப்படியே ஆற்று நீரில் இறங்கித் திளைந்து விளையாடினால் தண்மையாக இருக்குமே என்று யோசித்தாள் ராஜம்.

'கிளம்பலாமா? வீட்டுக்குப் போய் ஓய்வு எடுத்துக்கொண்டு சாயங்காலம் திரும்பவும் வரலாம்...'

'ஓ! கிளம்பலாமே. சாயங்காலம் ஆற்றங்கரையோரமாக நடந்து போக வேண்டும்...'

சற்றைக்கெல்லாம் எளிமையான வீட்டின் முன்பு கார் சென்று நின்றது. ஏழ்மையும், எளிமையும், வறுமையும் நிரம்பிய கிராமத்து மக்கள் தங்கள் முன்பு வந்து நின்ற இந்தக் குடும்பத்தை ஆவலுடன் கவனித்தார்கள். முரட்டுத் துணியில் பலவித கட்டங்கள் போட்ட கைத்தறிப் புடவையும், முழங்கைவரை நீண்டிருந்த ரவிக்கையும் அணிந்திருந்த கிராமத்துப் பெண்கள் தங்கள் மூக்கில் மின்னும் நத்துகளைத் துடைத்துவிட்டவாறு மெல்லிய குரலில் கசமசவென்று கிராமிய மராட்டியில் ரகசியம் பேசினார்கள்.

அப்படி என்ன பேசியிருக்கப் போகிறார்கள்?

ராஜத்தின் காஞ்சீபுரம் பட்டுப் புடவையைப் பற்றி, அவள் காதுகளில் சுடர்விடும் வைரக் கம்மல்கள் பற்றி, கைகளில் குலுங்கும் தங்க வளையல்கள்பற்றிப் பேசியிருப்பார்கள். அவளைப்போல் அந்தப் பெண்களுக்கும் அவைகளில் விருப்பம் எழுந்ததால் ஆவலை அடக்க முடியாமல் எட்டி எட்டிப் பார்த்தார்கள்.

ராஜத்துக்கு சேலூ கிராமம் மிகவும் பிடித்திருந்தது. ஆனால், அங்கு வீதிகளில் மின்சாரம் இல்லை. வசதிகள் மிகவும் குறைவு. குழாய் இல்லை. கிணற்றிலிருந்து தண்ணீர் இறைத்தாக வேண்டும். நாள் முழுவதும் கிராமத்தினருக்கு ஒழிவு ஓய்ச்சல் கிடையாது.

அதிகாலையில் விழித்துக்கொள்கின்றனர். ராஜம் சென்றிருந்தபோது தை மாதமாதலால் அவர்களுக்கு வயல்களில் வேலைகள் காத்துக் கிடந்தன. சோளக் கொண்டைகள் பால் பிடித்து, மணி மணியாகச் சோள மணிகள் உருவாகிக்கொண்டிருந்தன. மனிதன் பணமாகவும், பண்டமாகவும் உழைத்துக் குவிப்பதில் இல்லாத ஜீவ களை இந்த ஒவ்வொரு கதிரிலும் காணப்பட்டது. உலகை வாழ்விக்க மண்ணிலிருந்து தோன்றிய ஆயிரமாயிரம் அன்புக் கரங்கள்போல் அவை காலை நேரத்தில் கடவுளின் அருளை நமக்குக் காட்டியது.

குடிசைகளின் மேலே புகை சூழ்ந்து சென்றது. உள்ளே குடும்பத் தலைவி சோள ரொட்டி சுடும் வாசனை வீசியது. 'கிளிங், கிளிங்' என்று அவள் மாவைப் பிசைந்து உருட்டும்போதெல்லாம் முரட்டுக் கண்ணாடி வளையல்கள் சத்தமிட்டன. அவள் கணவன் மாடுகளுடன், ஏர் நீர்ச்சாலுடன் கிழக்கே பார்த்துக் கும்பிட்டுவிட்டு வெளியே புறப்படுகிறான். தெருவரை வந்து வழியனுப்ப வந்த மனைவி, அவள் புடவைத் தலைப்பைப் பற்றி நடந்து வரும் மழலைச் செல்வம் யாவும் இன்பந்தரும் காட்சிகள்.

இந்த எழிலார்ந்த குடும்பப் பாங்கு நிறைந்த காட்சிகள் மாற வேண்டும் என்று பாபு விரும்பியிருக்கமாட்டார். எல்லோருமே யந்திரங்களைத் தேடி ஓட வேண்டும் என்றோ, ஏரையும், கலப்பையையும் எறிந்துவிட வேண்டும் என்றோ நினைத்திருக்கமாட்டார். கிராம மக்களின் பொருளாதாரம், கல்வியறிவு, வாழ்க்கைத்தரம் உயர வேண்டும் என்று விரும்பினார்.

நாடெங்கும் திட்ட வேலைகள் நடந்து வந்தாலும், இந்த ஏழை மக்களின் வீட்டில் அன்றாடத் தேவைகளுக்கே பற்றாக் குறை இருந்து வந்தது. பரந்து கிடக்கும் வயல்வெளிக்கு அடுத்தாற்போல்

நாற்பது, ஐம்பது குடிசைகள் வேய்ந்து கொண்டு அவர்களாகவே கிணறு எடுத்து, ஆடு மாடுகளை வைத்து ஜீவனம் நடத்தி வந்தார்கள். நோய் நொடி என்றால் அருகிலே வைத்திய வசதி இல்லை. ஒவ்வொருவனும் கல்வியறிவு பெற வேண்டும் என்பது பாபுவின் விருப்பமாக இருந்தாலும், எளிய மக்களின் குழந்தைகள் கோவணாண்டிகளாக மாடுகள் மேய்த்துக்கொண்டு திரிந்தார்கள். அப்படி அவர்கள் சர்க்கார் உதவி பெற்று இலவசமாகக் கல்வியறிவு பெற அடுத்த நகரத்துக்குச் சென்றாலும், அதை ஒரு நஷ்டமாகவே அவர்களின் பெற்றோர் கருதினர். என்ன அறியாமை என்று வியக்கத் தோன்றுகிறதல்லவா? 'அவர்கள் படித்துக் குப்பை கொட்டுகிற நேரத்திலே வயலிலும், வீட்டிலும் பெற்றவர்களுக்கு உதவியாக இருப்பார்களே' என்று பெற்றோர் கருதினர். இலவசமாகப் போடப்படும் மதிய உணவுக்கு அப்புறம் பள்ளியிலிருந்து அறுத்துக்கொண்டு வீட்டுக்குக் குழந்தைகள் ஓடி வந்து விடுவார்கள். சில பள்ளிகளில் மதிய உணவுக்கென்று அரசாங்கம் கொடுக்கும் மான்யம், கிராம மக்களின் சம உதவி இரண்டையும் பயன்படுத்தாமலேயே சர்க்காருக்குக் கணக்கு காட்டும் மாயா ஜாலம் நிகழ்ந்துகொண்டிருக்கிறது.



ராஜம், வைகறையிலேயே எழுந்து இக்காட்சிகளைப் பார்த்து மேற்கூறிய விதம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். வீட்டு வாயிலை ஒட்டி சோனார் நதி வேகமாக ஓடிக் கொண்டிருந்தது. அதன் வேகத்தைப் பார்த்ததும் அவள் உடல் ஒரு தரம் சிலிர்த்தது.

'மதுவைக் கவனமாகப் பார்த்துக் கொள்ள வேண்டும்' என்று தனக்குள்ளாக எண்ணமிட்டபடி உட்கார்ந்திருந்தாள். அவள் கணவரும், மதுவும் இன்னும் தூக்கம் கலைந்து எழுந்திருக்கவில்லை. கனமான போர்வைக்குள் ராமதுரை உடலைச் சுருட்டிக்கொண்டு படுத்திருந்ததை நினைத்து ராஜம் முறுவலித்தாள். அவர் எப்பொழுதுமே அப்படித்தான் வெயிலைக் கண்டால் 'அப்பா! என்ன வெய்யில்' என்பார். மழையைக் கண்டால் 'பீடை மழை' என்று கரித்துக் கொட்டுவார். பனி ஆரம்பித்துவிட்டால், கம்பளி உடைகளைக் கழற்றுவதேயில்லை. வேலை காரணமாக ஒரு தரம் ஊதகை சென்ற போது ஒரு வாரத்துக்கென்று நூறு ரூபாய்க்கு உடைகள் (கம்பளி) வாங்கினார். ராஜம் நாலைந்து பட்டுப்

புடைவைகள், கெட்டியான ரவிக்கைகள் இவைகளுடன் போய்விட்டுக் குஷியாகத்தான் இருந்தாள்.

'உனக்குக் குளிரவில்லை...' இது ராமதுரை.

'நன்றாக இருக்கிறது. கடல் மட்டத்திலிருந்து ஏறக்குறைய எட்டாயிரம் அடி உயரத்தில் இருக்கிறோம். குளிராவது? பல்லைக் கிட்டுகிறது. இருந்தாலும், அதைப் பற்றி அதிகமாக நினைத்தால்தான் அதற்கு வேண்டிய சௌகரியங்கள் அதிகமாகத் தேவைப்படுகின்றன. நீங்கள் இந்த ரஜாய், கம்பளியைப் போத்திக் கொள்ளுங்கள். எனக்குக் காஷ்மீர் சால்வை, பெட்ஷீட் போதும்' என்றாள் ராஜம்.

சேலூரவில் உதகைபோல் குளிராது. அந்தக் குளிருக்கும், இதற்கும் வேற்றுமை உண்டு. முன்னது உடலை உறைய வைக்கும்! பிந்தியது உடலை ஊசி போல் துளைக்கும்.

கதர் புடவை உறுதியாக இருந்ததால் தலைப்பை இழுத்துப் போர்த்தியபடி இருந்த ராஜத்திடம் கிராமத்துப் பெண் எருமைப் பால் கொண்டு வந்து கொடுத்தாள்.

ராஜம் காப்பி போடுவதற்கு உள்ளே சென்றாள்.

சிறிது நேரத்திற்குள் மதுவும், ராஜத்தின் கணவரும் எழுந்துவிட்டார்கள். எல்லோரும் காப்பி சாப்பிட்ட பிறகு வெளியே உலவுவதற்காகக் கிளம்பினார்கள். ஆற்றங்கரை ஓரமாக நடந்து சென்று காந்திஜீயின் ஞாபகார்த்த மண்டபத்தில் வந்து அமர்ந்தார்கள். காலை நேரத்தின் குளிர் காற்றும், ஆற்று நீர் வேகமாகப் பாய்வதால் ஏற்படும் இரைச்சலும், எங்கிருந்தோ இரைந்து மாடு மேய்க்கும் பையனைக் கூப்பிடும் ஒரு தாயின் குரலும் அந்த இடத்தின் மோன நிலையைச் சற்றே குலைத்தன.

ராமதுரை தம் கண்களை மூடியவாறு ஓய்வு பெற்றுக்கொண்டிருந்தார். வெகுவாக உழைத்து அலுத்துப்போன அவர் உடலுக்கும், மூளைக்கும் அந்தச் சூழ்நிலை ஹிதமாக இருந்தது. ராஜம் மண்டபத்தைச் சுற்றி வந்தாள். கரையில் உதிர்ந்து கிடந்த கொன்றை மலர்களை கைநிறைய அள்ளி அங்கு அரசடியில் வீற்றிருந்த விநாயகப் பெருமானின் பாதமலர்களில் தூவினாள். கணவரின் அமைதியை அவள் கலைக்க விரும்பாததால் அவளும் ஒருபுறமாக அமர்ந்து எதிரே ஓடும் ஆற்றைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

மதுவால் இப்படியெல்லாம் அமைதி பெற முடியவில்லை. எதிரே பொங்கி ஓடும் ஆறு, காலை வெயில் ஓடியாட மணல் நிறைந்த இடம், கரையெங்கும் செழித்து நிற்கும் சரக்கொன்றை மரங்கள், அவைகள் சிந்தும் மலர்கள் நீரில் நீந்தியபடி ஓடுவது எல்லாமே அவனுடைய விருப்பத்துக்குரிய பொருள்களாகத் திகழ்ந்தன.

மது கொஞ்சம் கொஞ்சமாக ஆற்றை நோக்கி முன்னேறினான். சில்லென்ற நீரில் முதலில் கைகளைவிட்டுத் துழாவினான். பிறகு கால்களைவிட்டு அளைந்தான்.

பெருகி ஓடிவரும் நீரின் வேகத்தை அந்தச்சின்னஞ்சிறு கால்களினால் தாங்க முடியவில்லை, மதுவின் கால்கள் தடம் புரண்டன அவனை ஆற்று நீர் வேகமாக இழுத்துச் செல்ல ஆரம்பித்தது. எல்லாம் ஒரு விநாடி காலம்தான். மண்டபத்தில் சற்றே அயர்ந்திருந்த ராஜம் திடுக்குற்று இக்காட்சியைப் பார்த்து, 'ஐயோ! மதூ!' என்று அலறிவிட்டாள். பிறகு யாவும் ஒரு நாடகக் காட்சிபோல் இருந்தது. ராமதுரை வேகமாக ஆற்றில் குதித்ததும் மதுவைக் கரைக்குத் தூக்கி வந்து கிடத்தியதும், விநாடியும் தாமதிக்காது நாகபுரி ஆஸ்பத்திரியில் குழந்தையைச் சேர்த்ததும் ராஜத்தால் வாழ்க்கை பூராவும் மறக்க முடியாத சம்பவங்கள்.

இதுவரையும் கதைபோல் சொல்லி வந்த ராஜம், கன்னங்களில் முத்துப் போல் உருண்ட நீரைச் சுண்டியெறிந்துவிட்டுத் தன்னைத் தான் தேற்றிக்கொண்டாள்.

கொஞ்சம் மௌனமாகவே அனைவரும் உட்கார்ந்திருந்தோம். 'அப்புறம் குழந்தை?' என்று நான் கேட்டேன். என் நினைவு பூராவும் மதுவின்பேரில் இருந்தது. அவரவர் வகிக்க வேண்டிய பொறுப்புகளை, இன்னொருவர் சுமக்கும்

போது அதனால் ஏற்படும் லாப நஷ்டங்களுக்கு, அபவாதங்களுக்கு, புகழுக்குத் தயாராக இருக்க வேண்டிய நிர்ப்பந்தமும் ஏற்படுகிறது என்று நினைத்தேன்.

'பிழைத்துவிட்டான்' என்று இரத்தினச் சுருக்கமாகக் கூறினாள் ராஜம். மேலும், அவளாகவே மதுவின் நினைவிலே நடந்து எங்களுக்குக் கதை சொல்ல ஆரம்பித்தாள்.



'அவனை ஆஸ்பத்திரியில் சேர்த்தவுடன் பண்டுவும், மங்களாவும், மஞ்சுவும் ஓடோடி வந்தார்கள். மரியாதை, பண்பு, அன்பு, சினம் எல்லாமே ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் உலவ வேண்டிய உணர்ச்சிகள். அவை ஓர் எல்லையைத் தாண்டும்போது பரஸ்பரம் உறவு முறைகளையோ, மேலோர் கீழோர் என்பதையோ கவனிப்பதில்லை.

மங்களாவும், மஞ்சுவும் எப்படியிருந்தார்கள் தெரியுமா? வெறுப்புடன் முகத்தை வலித்தவாறு ராஜத்தைப் பார்த்தும், பார்க்காதவாறு சென்று மதுவின் அருகில் உட்கார்ந்தார்கள். 'மாஜி' என்றும், 'பாஜி' என்றும் ராஜத்திடம் குழந்தை மங்களாவின் முகத்திலே அளவற்ற சினமும், துக்கமும் கொப்பளித்தன. அவளிடம் ராஜம் மன்னிப்புக் கேட்கத் தயாராக இருந்தாள். தவறுதலாக ஏற்பட்ட விபத்தானாலும், தவறைத் தன்மீது ஏற்றுக் கொண்டு அவர்கள் முன்பு குற்றவாளியாகத் தாழ்ந்து நின்ற ராஜத்தை அவர்கள் ஏறிட்டுப் பார்க்கவில்லை. ராஜம் துயரத்தால் வெந்து தலைகுனிந்தபோது, ராமதுரை ஒன்றுமே நடவாது போல் இருந்தார். அமைதியாக நல்ல வைத்தியர்களைப் பார்த்துப் பேசி, அவர்கள் பொறுப்பில் மதுவை ஒப்படைத்தார். மதுவின் உடல்நிலை சரியாக நான்கு நாட்கள் ஆயின. அந்த நான்கு நாட்களும் ராஜமும், ராமதுரையும் நாகபுரியிலேயே தங்கியிருந்தார்கள்.

குழந்தை பிழைத்துவிட்டான் என்கிற நம்பிக்கையில் மறுபடியும் ராஜத்தின் மனத்தில் எண்ணங்கள் தளிர்த்தன. அவனுடன் ஒட்டி வாழ வேண்டும் என்று ஆசை மேலிட்டது.

ஆஸ்பத்திரியிலிருந்து வார்தாவைத் திரும்பவும் அடையும்போது நன்றாக இருட்டிவிட்டது. அமாவாசை நெருங்கிக் கொண்டிருந்ததால் வானத்தில் புள்ளிகளாக தாரைகள் மினுக்கின. பனிப்படலத்தின் மூட்டத்தில் அவற்றின் ஒளியும் மிக மிக லேசாகத்தான் இருந்தது.

அன்று, எல்லோரும் வீட்டை அடைந்ததும் சீக்கிரமே படுக்கைக்குச் சென்றுவிட்டனர். காரிலிருந்து இறங்கியவுடன் மங்களா தன்பக்கமாக மதுவை இழுத்தவாறு, வேகமாகத்தான் வீட்டுக்கு நடக்க ஆரம்பித்தாள்.

நெடிய பெருமூச்சு காற்றில் கலக்க ராஜம் மெதுவாகப் பங்களாவுக்குள் நுழைந்தாள். உலகமே ஒரு துன்பச் சுமைபோல் இருந்தது.

உள்ளே விடிவிளக்கின் மிதமான ஒளியில் ராமதுரை தூங்கிக்கொண்டிருந்

**வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்!**




''என்னய்யா! சுதந்திர தினமும் அதுவுமா கன்னத்திலே கையை வெச்சுண்டு..?''

''பின்'ன என்ன?...சுதந்திர தினம்னு நான் சாப்பாடு ஸ்பெஷலாத் தயார்பண்ணியிருக்கேன்... இந்த ஜனங்க என்னடான்னா சுதந்திர தினத்தன்னிக்கு ஒருவேளை உணவு தியாகம்னு சாப்பாட்டுக்கே ஒத்தரும் வரல்லே. எவ்வளவு நஷ்டம் பாரும்! ..ஓய், சரக்கு மாஸ்டர்! சாதத்தையெல்லாம் நாளைக்கு 'பகாளாபாத்' பண்ணிவிடும்!''

---

தார். அவர் என்றுமே எதைப்பற்றியும் தன்னை அலட்டிக் கொள்வதில்லை. பெரிய பொறுப்புகளை நிறைவேற்றும் போதும் சரி, சிறிய விஷயமாயிருந்தாலும் சரி ஒரே கதியில் செல்பவர். காலத்துடன் மனிதன் அறிந்தோ, அறியாமலோ செயல்களைச் செய்து கொண்டே போகிறான். அவன் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் எதிரே வருவதை அவன் ஏற்றுக்கொண்டுதான் ஆக வேண்டும் என்பதுபோல் அவர் மனம் ஒரே நிலையில் பண்பட்டுவிட்டது.

ராஜம் பால்கனியில் சாய்வு நாற்காலியில் சாய்ந்தவாறு அவன் எதிரே கவிந்திருந்த இருளைப் பார்த்துக்கொண்டேயிருந்தாள். அப்படியே அயர்ந்தும் தூங்கிவிட்டாள்.

பொழுது நன்றாக விடிந்துவிட்டது. அதற்கடையாளமாகப் பக்கத்து ஜோதிபாயியின் வீட்டிலிருந்து மாவரைக்கும் திரிகை 'ஙொய்'யென்று சத்தமிட்டது. ஜோதிபாயி மிகவும் சிக்கனமானவள். அவளுடைய மாமியார் வைத்துவிட்டுப் போன திரிகையில் தான் கோதுமை அரைப்பாள்.

ராமதுரை இன்னும் எழுந்திருக்கவில்லை. ராஜம் மாடியிலிருந்து கீழே இறங்கி வந்தாள். சமையலறைப் பக்கம் ஒரு சிறு சத்தம் கேட்கவில்லை. தோட்டத்தில் இந்நேரம் ஏற்றச்சாலை மிதித்து நீர்பாய்ச்சும் பண்டுவைக் காணோம். கத்தரிச் செடிகளும், வெண்டெய்ச் செடிகளும்கூடப் பண்டுவை எதிர்நோக்கிக் காத்திருந்தன.

பாய்லரிலிருந்து புகை கிளம்பி ஓடுகளின் வழியாக வென்னீர் அறைக்கு மேல் பறந்து செல்லுமே. மங்களா எங்கே போய்விட்டாள்? எல்லாமே போட்டது போட்டாற்போல் இருக்கிறதே. மஞ்சு இந்நேரம் பூக்கொய்து வந்து தட்டுகளில் நிரப்பி இருப்பாளே. பூவும், குடலையுமாக அந்தப் பெண் நன்றாக வளர்ந்து நின்ற தோற்றம் ஏதோ ஒரு சித்திரத்தை ராஜத்துக்கு நினைவூட்டியது. 'சே! அதுதானா இப்பொழுது முக்கியம்?'

'பண்டு' என்று குரல் கொடுத்தாள் ராஜம்.

ஒரே அமைதி.

'மங்களா...ஏய்! மங்களா...'

ராஜத்தின் சத்தத்தைக் கேட்டு மாத்தில் அமர்ந்திருந்த காகம் ஒன்று ஜிவ்வென்று வெளியில் பறந்தது. அடுத்த வீட்டில் திரிகை சுழற்றுவதை ஜோதிபாயி நிறுத்தி கவனித்தாள். அங்கே கசமசவென்று ரகசியம் பேசப்பட்டது. மறுபடியும் 'ஙொய்'யென்று திரிகை ராகமிசைத்தது.

ராஜம் பண்டுவின் வீட்டை நோக்கி நடந்தாள். திறந்திருந்த வாயிற் கதவைத் தாண்டி உள்ளே நுழைந்தாள்.